உ

கணபதி துணை

கொங்குவேளிர் இயற்றிய

# பெருங்கதை

இது

மகாமஹோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி

டாக்டர் உ. வே. சாமிநாதையரால்

பரிசோதித்து

நூதனமாக எழுதிய குறிப்புரை முதலியவற்றோடும்
கதைச்சுருக்கத்தோடும்

சென்னை:

கேசரி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

இரண்டாம் பதிப்பு

யுவ௵ மார்கழிமீ

1935

 [விலை ரூ. 7—0—0

# உரிமையுரை.

(எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.)

உரமலி திரிசி ராமலே யுதித்த
 ஒருமணி ஆவடு துறையாம்
புரமலி மடத்தி லியற்றமிழ்க் குரவு
 புனேமணி பலதமிழ் நூல்செய்
வரமலி புகழ்மீ னுட்சிசுந் தரநா
 வலர்மணிக் கென்குரு மணிக்குத்
திரமலி சுவைசால் பெருங்கதைப் பதிப்பைத்
 திகழ்வுற உரிமையாக் குவனே.

# இப்புத்தகத்தில் அடங்கியவை.

1. இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி .... xxi
2. முகவுரை .... .... .... xxiii
3. நூலாசிரியர் வரலாறு .... .... xlv
4. நூலைப்பற்றிய குறிப்புக்கள் .... .... xlix
5. பிழையும் திருத்தமும் .... .... lvi
6. **உதயணன் சரித்திரச் சுருக்கம் 1—160**

[உஞ்சைக்காண்டம்—இலாவாணகாண்டம் — மகதகாண்டம் — வத்தவகாண்டம் — நரவாணகாண்டம்—துறவுக்காண்டம்.]

7. **பெருங்கதை மூலமும் குறிப்புரையும் க-கூ௩௪**

க. **உஞ்சைக் காண்டம் க-௩௩௯**

* * * * *

(௩உ) கரடு பெயர்த்தது .... .... .... க - க0

[பிரச்சோதனனை நோக்கி உதயணன் கூறல்—பிரச்சோதனன் உட்கோள்—அவன் விளம்பல்—உதயணனும் வாசவதத்தையும் ஒருவரையொருவர் நோக்குதல்—பிரச்சோதனன் கூற்று—உதயணன் வாசவதத்தை ஆகிய இருவர் செய்திகள்—யானையைப்பற்றி உதயணன் கூறல்—பிரச்சோதனன் நாளோலக்கம்—கணக்கர் முதலியோர் உதயணனுக்காகக் குஞ்சரச்சேரி மாளிகையில் பல பொருள்களைத் தொகுத்தல்—பிரச்சோதனன் உதயணனுக்கு விடை தருதல்—உதயணன் செல்லல்.]

(௩௩) மாலைப் புலம்பல் .... .... கக - உகூ

[மாளிகையைக்கண்டு உதயணன் ஐயமுற்றுத் தெளிதல்—உதயணன் காணுங் காட்சி——மாலைக்கால வருணனை—பிறைமதியின் தோற்றம்—உதயணன் வருந்தல்—வாசவதத்தை வருந்தல்—நீங்கிய தோழிமார்வாசவதத்தையைக் காண்டல்.]

(௩௪) யாழ் கைவைத்தது .... .... உகூ - ௪கூ

[பிரச்சோதனன் உதயணனை வருவித்து உபசரித்தல்—தன் கருத்தை அவன் சிவேதனிடம் கூறல்—சிவேதன் உதயணனுக்குக் கூறல்—பிரச்சோதனன் கருத்துக்கு உதயணன் உடன்படல்—புலர்

கூற்று—வாசவதத்தை கீதசாலைக்குச் சென்று உதயணனிடம் யாழ் பயிலத் தொடங்கல்.]

(௩௫) நருமதை சம்பந்தம் .... .... ௫௭ - ௬௪

[அயலார் கூற்றுக்கள்—வயந்தகன் செயல்—உதயணனுக்கு வாசவதத்தைமீது வேட்கை மிகுதல்—உதயணனும் வயந்தகனும் ஆலோசித்தல்—நருமதை வீட்டுக்கு வயந்தகன் சென்று அவளை வலிதிற் கொண்டு செல்லுதல்—நருமதையின் கூற்று—கண்டோர்கூற்று—கணிகையர் ஊடலும் நம்பியர் உணர்த்தலும் விடர் முதலியோர் கூற்றும்.]

(௩௬) சாங்கியத் தாயுரை .... .... ௬௫ - ௮௭

[பிரச்சோதனன் நருமதைக்குச் சிறப்புச் செய்தல்—வாசவதத்தையை விரும்பிப் பிறவரசர் மணத்தூது விடுத்தல்—பிரச்சோதனன் நிலை—சாங்கியத்தாய் வாசவதத்தையிடம் கூறல்—வாசவதத்தை வருந்தல்—சாங்கியத்தாய் தேற்றல்—வாசவதத்தை கூற்று—சாங்கியத்தாய் எண்ணிக் கூறுதல் - அவள் உதயணனைக் கண்டு தன் வரலாறு கூறுதல்—உதயணன் அவளைத் தேறுதல்—சாங்கியத்தாய் உதயணனை நீங்கிக் காஞ்சனமாலையிடம் கூறல்—உதயணன் தனது இடம் செல்லல்.]

(௩௭) விழாக் கொண்டது .... .... ௮௮ - ௧0௬

[அரசகுமாருடைய படையரங்கேற்றம்—படைப்பயிற்சியின்வகை—குதிரையேற்றம் முதலியன—பிரச்சோதனன் கூற்று—அவன் அந்தப்புரஞ் சென்று கூறல்—உதயணன் சொல்லியனுப்பல்—அரசன் வாசவதத்தையின் யாழரங்கேற்றத்திற்கு ஆவனசெய்தல்—வாசவதத்தையின் யாழரங்கேற்றம்—சபையோர் புகழ்தல்—வாசவதத்தை தந்தையை வணங்கல்—அவளைக்கண்ட இராசமாதேவி மகிழ்தல்—தாயர் மகிழ்ந்து கூறல்—பிரச்சோதனன் மகிழ்ந்து உதயணனை அவனது நகருக்கு அனுப்ப எண்ணுதல்—பாகீரதி யென்பவள் நீர்விழாச் செய்யும்படி சொல்லுதல்—பெரியவர்கள் அரசனுக்கறிவித்தல்—சேனாதிபதி நீர்விழவை அறிவித்தல்—நகர்விழாக் கொள்ளல்.]

(௩௮) விழாவாத்திரை .... .... ௧0௭—௧௨௮

[நீர் விழாவிற்கு நகரமாந்தர் புறப்படல்—நீரங்காடியின் வருணனை—தங்குமிடங்கள்—பிரச்சோதனன் பொய்கைக்கரைக்கு வருதல்—அவன் மனைவியர் புறப்படல்—நீர்விழாவிற்காகக் கொண்டு செல்லும் பண்டங்கள்—வாசவதத்தை புறப்படல்—வையத்தின் சிறப்பு—மாடச்சிவிகையின் சிறப்பு—காவலர் முரசறைதல்—மகளிர் பொய்கைத் துறையைச் சேர்தல்—பிரச்சோதனன் உதயணனை வருவித்தல்—குதிரைகள்—தேர்கள்.]

(௩௯) புனற்பாற்பட்டது .... .... ௧உ௮ - ௧௩௩

[பிரச்சோதனன் நீராடல்—நகரமாந்தர் நீராடல்.]

(௪0) உவந்தவை காட்டல் .... .... ௧௩௩ - ௧௫௯

[நீர்மாடத்தின் சிறப்பு—ஒரு நாரையின் செலவு—ஒரு பிடி குளித்தல்—ஒருபெண்ணின் செயல்—ஒருகுரங்கின் தோற்றம்—ஒரு களிமகன் செயல்—சில மகளிர் செயல்—ஒரு மயில் ஆடல்—அந்தணர் செயல்—மகளிர் குரவை—சில மகளிர் செயல்—கட்குடிமகளும் அவள் காதலனும்—ஒரு பெண்ணின் ஊடல்—நீராடுதலினின்றும் விலக்கப்பட்ட ஒரு பெண்ணின் செயல்—அரசனுடைய ஏவலாளர்களின் செயல்—ஓர் அன்னச்சேவலின் செயல்—ஓர் அந்தணன் செயல்—சில பெண்களின் செயல்—ஊடலைத் தீர்த்துத் தலைவன் தலைவியோடு நீராடல்—சேனை வாணிகன்மகள் நீராடல் - துறைகாக்கும் காவலர் செயல்.]

(௪௧) நீராட்டரவம் .... .... .... ௧௩0 - ௧௬௯

[நீர் விளையாட்டுக்குரிய கருவிகள்—அரசகுமரர் ஒலி—பறவைக் கூட்டத்தின் ஒலி—மரங்களைக் கரையேற்றுவோர் ஒலி—பெண்மான்களை இனத்தோடு கூட்டும் இளைஞர் ஒலி—தோணியிற் செல்லும் மகளிர் ஒலி—பேதை முதலிய ஏழுபருவமகளிர் ஒலி—வேறு பலவகை ஒலிகள்—ஆடவும் உண்ணவும் அமைந்தவை.]

(௪உ) நங்கை நீராடியது .... .... ௧௬௯ - ௧௮௫

[வாசவதத்தைத்நீராடவருதல்—அவளை மணையிற் சேர்த்துத் திருமஞ்சனம் ஆட்டல்—அவளை அலங்கரித்தல்—அந்தணமகளிர் முதலியோர்—நீர்விளையாட்டு—உதயணன் யானையின் மேலேறி வருதல்—அவன் கருதுதல்.]

(௪௩) ஊர்தீயிட்டது .... .... .... ௧௮௫ - ௧௯௬

[யூகி சொல்லியதை உதயணனுக்கு வயந்தகன் கூறல்—உதயணன் வாசவதத்தையின் அருகே வருதல்—யூகி முரசறைவித்தல்—யூகியின் வீரர் பூசல்விளைத்தல்—கள்ளமங்கையர் தீயிடுதல்—தீப்பட்ட ஊரில் நிகழும் நிகழ்ச்சிகள்.]

(௪௪) பிடியேற்றியது .... .... .... ௧௯௭ - உ0௫

[மங்கையர் கலக்கம்—அறிஞர் கூற்று—யானைகள் வருந்தல்—நளகிரி நகரத்தை உழக்கல்—பிரச்சோதனன் உதயணனுக்குச் சொல்லி விடுத்தல்—காவலர் உதயணனிடம் கூறல்—உதயணன் வாசவதத்தையைப் பிடிமேல் ஏற்றல்.]

(௪௫) படைதலைக் கொண்டது .... .... ௨௦௬ - ௨௧௧

[காஞ்சனமாலை பிடிமேல் ஏறுதல்—சாங்கியத்தாய் வருதலும் வயந்தகன் செயலும்—உதயணன் செல்லுதல்—பிரச்சோதனனுடைய வீரர் தொடர்தல்—உதயணனுடைய வீரர்செயல்.]

(௪௬) உழைச்சன விலாவணை .... .... ௨௧௧ - ௨௨௬

[போர் நிகழ்ச்சி—யூகி உதயணனைக் கண்டு கூறல்—உதயணன் மகிழ்ந்து செல்லுதல்—வராகன் தொடர்தல்—வாசவதத்தை வருந்தல்—காஞ்சனை உதயணனை வினவுதல்—உதயணன் தேற்றல்—காஞ்சனமாலை வாசவதத்தையைத் தேற்றல்—கொட்டந் தாங்கிய பணிப்பெண்கள் வருந்தல்—அடைப்பை தாங்கியவர் வருந்தல்—கவரியேந்தியவர் வருந்தல்—பணிசெய்யும் கூனரும் குறளரும் வருந்தல்—தோழியர் புலம்பல்—செவிலித்தாயர் புலம்பல்—காஞ்சுகிமுதியர் வருந்தல்—சாங்கியத்தாய் யூகியைக் கண்டு கூறுதல்.]

(௪௭) உரிமை விலாவணை .... .... ௨௨௬ - ௨௪௪

[உதயணன் செயலை வராகன் பிரச்சோதனனிடம் அறிவித்தல்—அவன் கோபங்கொள்ளல்—சாலங்காயன் கூற்று—பிரச்சோதனன் பள்ளியறை புகுதல்—திருமாதேவியின் உட்கோள்—பிரச்சோதனன் அவளை வினவல்—அவள் கூற்று—பிரச்சோதனன் கூற்று—திருமாதேவி வருந்தல்—பிரச்சோதனன் தேற்றல்.]

(௪௮) மருதநிலங் கடந்தது .... .... ௨௪௫ - ௨௫௬

[பிரச்சோதனன் படைவீரர்செயல்—குதிரைகள்—தேர்கள்—யானைகள்—மாலைவருணனை—பிடியின் நிலை—காஞ்சனையின் கூற்று—யானையின் வேகத்தால் தோன்றும் விம்பிதத்தைத் தெரிவித்தல்—காஞ்சனை செயல்—மருதநிலவருணனை—உதயணன் அருட்டநகரத்தை அணுகுதல்.]

(௪௯) முல்லை நிலங் கடந்தது .... .... ௨௫௬ - ௨௬௩

[வயந்தகன் வழியைப்பற்றிக் கூறல்—உதயணன் செல்லுதல்—வயந்தகன் மீண்டும் கூறல்—முல்லைநில வருணனை.]

(௫௦) குறிஞ்சி நிலங் கடந்தது .... .... ௨௬௩ - ௨௬௭

[உதயணன் குறிஞ்சி நிலமடைதல்—குறிஞ்சிநில வருணனை.]

(௫௧) நருமதை கடந்தது .... .... ௨௬௭ - ௨௭௨

[நருமதை வருணனை—மரங்கள்—விலங்கு முதலியன—வயந்தகன் வழிகாட்டல்—உதயணன் நருமதையைக் கடத்தல்.]

(௫௨) பாலை நிலங் கடந்தது .... .... ௨௭௨ - ௨௮௧

[உதயணன் பாலைநிலத்தை யடைதல்—துர்க்கையின்கோயில்—வழியிலுள்ளவை—மரங்கள்—புருவின் செயல்—விலங்கு முதலியவற்றின் செயல்—யாழ் விழுதல்—பிடிமெலிவடைதல்.]

(௫௩) பிடி வீழ்ந்தது .... .... .... ௨௮௨ - ௨௯௨

[உதயணன் பிடியினின்றும் இறங்குதல்—பிடி வீழ்தல்—உதயணன் வருந்திப் பிடிக்குக் கடன்கழித்தல்—வயந்தகன் கூற்று—உதயணன் காஞ்சனையிடம் கூறல்—வாசவதத்தையின் நிலை—உதயணன் கூற்று - யாவரும் ஓரிடத்து ஒடுங்குதல்.]

(௫௪) வயந்தகன் அகன்றது .... .... ௨௯௨ - ௩௦௦

[அந்தி வருதல்—வயந்தகன் கூற்று—உதயணன் கூற்று—வயந்தகன் போதல்.]

(௫௫) சவரர் புளிஞர் வளைந்தது .... .... ௩௦௦ - ௩௦௮

[உதயணன் பறவைநிமித்தம் பார்த்தல்—வேடர் இயல்பு—அவர் செயல்—நிமித்திகன் கூற்று—வேடர் சென்று உதயணனைத் தாக்கல்—அவர் உதயணனை நோக்கிக் கூறுதல்—உதயணன் அவரை நலிதல்—வேடர் கலங்கிக் கூறல்.]

(௫௬) வென்றி யெய்தியது .... .... ௩௦௯ - ௩௨௪

[வேடர் எண்ணுதல்—நிமித்திகன்கூற்று—வேடர் தீமூட்டல்—வாசவதத்தை ஏங்கல்—உதயணன் வெளிவருதல்—வேடர் அவனது வில் நாணை அறுத்தல்—உதயணன் நிலை—வாசவதத்தை வருந்தல்—உதயணன் கூற்று—வேடர் தலைவன் உதயணனை வினவுதல்—உதயணன் விடை—வேடர் உதயணன் கையைக்கட்டுதல்— உதயணன் கூற்று—வேடர் கூற்று—வாசவதத்தை வருந்தல்—காஞ்சனை வருந்தல்—உதயணன் கூற்று—வேடர் காத்து நிற்றல் - வயந்தகன் இடபகன்பாற் செல்லுதல்—அவன் உதயணன் கூறியவற்றை இடபகனுக்குக் கூறுதல்—இடபகன் படையோடு உதயணனை நாடிவருதல்—வயந்தகன் உதயணனைக் காணமல் வருந்தல்—படையாளர் அவனைத் தேற்றல்—அவர் உதயணனைக் கண்டு வேடர்களைச் சூழ்தல்—நிமித்திகன் கூறல்—உதயணன் கூற்று—வேடர் உதயணனை நோக்கிக் கூறல்—வேடர் தோல்வி—உதயணன் மகிழ்ச்சி.]

(௫௭) படைவீடு .... .... ௩௨௪ - ௩௩௦

[இடபகன் ஏவலாளர் உதயணனுக்குப் படைவீடு அமைத்தல்—வாசவதத்தைக்குரிய இடங்களும் பண்டங்களும் அமைத்தல்—உதயண

னுக்குரியன அமைத்தல்—சிலதர் முதலியோர் செயல்—உதயணன் நீராடி உண்ணல்—வாசவதத்தை நீராடல்முதலியன.]

(ருஅ) சயந்தி புக்கது .... .... ருரு௦ - ருருசு

[உதயணன் யானைமீதூர்ந்து செல்லல்—காவலர் முதலியோர் உடன் செல்லுதல் — அரும்பொருள்கள் — பலநாட்டுக் கைத்தொழிலாளர் — வாசவதத்தைக்குரிய வண்டியின் உறுப்புக்கள்—அவள் வையமேறல்—குடிகள் பாராட்டல்—உதயணனும் பிறரும் சயந்தியை அடைதல்.]

உ. இலாவாண காண்டம் ... ருருஎ - ருகசு

(க) நகர் கண்டது .... .... ருருஎ - ருசக

[நகரமாந்தர் உதயணனுக்கு உபசாரங்கூறி வரவேற்றல்—அவர் வாசவதத்தையைக்கண்டுகூறல் — யூகியைவாழ்த்துபவர் — உதயணனைப் புகழ்வோர்.]

(உ) கடிக்கம்பலை .... .... .... ருசக - ருருரு

[கணியின் சிறப்பு—வள்ளுவன் மணநாளை அறிவித்தல்—வீட்டை அலங்கரிப்பவர்—அறச்சாலை—சிறூர் ஏவன்மகளிர் முதலியோர் செயல்—சிறுலயமும் அங்கே நடைபெறுவனவும்—வீதிகளை அலங்கரிப்பவர்—முதியர்கூற்று—மகளிர் தம் புதல்வரை அலங்கரித்து விடுத்தல்—கள்ளுண்பார்—யானைப்பாகர்—மஞ்சனநீர் கொணர்தற்குரிய மகளிர்.]

(ரு) கட்டிலேற்றியது .... .... ருருரு - ருகூஉ

[சோதிடர் நல்லமுகூர்த்தம் அறிந்து கூறல்—மணப்பந்தர்—தெய்வ நிவேதன வகை—தேவரை வழிபடுதல்—கன்னிமகளிர் செயல்—காஞ்சனை வாசவதத்தையை உதயணனுக்கருகில் இருக்கச் செய்தல்—உதயணன் திருமணச் சடங்குகளைச்செய்தல்—மணவறைக் கட்டிலின் சிறப்பு - உதயணனையும் வாசவதத்தையையும் பள்ளிக்கட்டிலின்மேலேற்றுதல்.]

(ச) ஆறுந்திங்கள் உடல்மயிர் களைந்தது .... ருகூஉ - ருஎக

[பிரச்சோதனன் சிறப்பு—அவனுடைய தேவியர்—வாசவதத்தை தாயின் சிறப்பு—மணக்காற் பந்தர் அமைத்தல்—இடம் திருத்தல்—உதயணன் வருதல்—வாசவதத்தை வந்து அமர்தல்—அந்தணர் முதலியோர் ஆவன செய்தல்—நாவிதன் மயிர் களைதல்.]

(ரு) மண்ணு நீராட்டியது .... .... ருஎஉ - ருஅ௦

[உதயணன் கூற்று—நீர்க்குடம் செல்லுஞ்சிறப்பு—மங்கலங்கள் பதினாறு—மஞ்சனநீர் எடுத்தற்குரிய குளம்—மஞ்சன நீரெடுத்து வருதல்—உதயணனுக்கு நெய்யணிதல்—மகளிர் வாசவதத்தைக்கு நெய்யணிதல்—உதயணனை அலங்கரித்தல்—வாசவதத்தையை அலங்கரித்தல்.]

(௬) தெய்வச் சிறப்பு .... .... ௩௮௧ - ௩௮௮

[நல்லோர் கூற்று—உதயணன் ஆலயத்திற்குச் செல்லல்—சினாலயம்—சிங்காதனம் — சினதேவனும் வழிபடுவோரும் — உதயணன் வழிபடல்.]

(௭) நகர்வலங் கொண்டது .... .... ௩௮௯ - ௩௯௭

[உதயணன் நகர்வலங் கொள்ளல்—மகளிர் மைந்தராகியவர் மலர் மழை பொழிதல்—நகரத்திலுள்ளார் புகழ்தல்—உதயணனும் வாசவதத்தையும் நீராடல்.]

(௮) யூகி போதரவு .... .... .... ௩௯௭ - ௪௦௮

[யூகியின் குணவிசேடங்கள் — அவன் உச்சயினியிற் செய்தவை—அவன் தன்படைவீரர்க்குக் கூறியவை—உதயணன்பால் மெய்யன்புள்ள ஒரு குயவனியல்பு—எந்திரத்தேர்—யூகி புறப்பாடு.]

(௯) யூகி சாக்காடு .... .... .... ௪௦௮ - ௪௨௨

[வழியின் இயல்பு—யூகி புட்பகநகரை அடைதல்—அவன் இடபகனைக்காணலும் உதயணன் செய்தியை வினவலும்—முன்பு நிகழ்ந்தவற்றை இடபகனுக்கு யூகி கூறல்—இடபகன் யூகியைப் பாராட்டல்—யூகி உதயணன் செய்தியை வினவுதல்—இடபகன் நிகழ்ந்தவற்றைக் கூறல்—யூகி மூர்ச்சித்தலும் பின்பு தெளிந்து கேட்கத் தொடங்கலும்—பின்பு நிகழ்ந்தவற்றையும் உதயணனது இயல்பையும் இடபகன் கூறல்—சாங்கியத்தாயைக் கண்டு யூகி பின் நிகழ்த்தவேண்டியவற்றைக் கூறல்—இனியவர் கடமைகள் இன்னவென்பது—தான் இறந்துவிட்டதாக நடித்து அஃது உண்மையென்றே அயலாரை யூகி நம்பச் செய்தல்.]

(௰) யூகிக்கு விலாவித்தது .... .... ௪௨௩ - ௪௩௩

[சாங்கியத்தாய் உதயணனிடம் சென்று படத்தைக் காட்டுதல்—யூகி இறந்தானாக நினைந்த உதயணனது வருத்தம்—யூகி தனது சிறைத் துயரம் நீக்கியது முதலியவற்றையும் இளமைப்பருவத்தில் தன்பால் வைத்திருந்த அன்பின் மிகுதியையும் சொல்லி உதயணன் புலம்பல்—உருமண்ணுவா உதயணனைத் தேற்றல்.]

(௧௧) அவலந் தீர்ந்தது .... .... .... ௪௩௩ - ௪௪௪

[உதயணனது கவலையைத் தீர்த்தற்குரிய பரிகார வகைகள்—புணை வகைகள்—உதயணனுடைய பிறப்பு வரலாறு முதலியன—தேவியைப் பிரிந்த சதானிகன் செயல்—முனிவன் கூற்று.]

(௧௨) மாசன் மகிழ்ந்தது .... .... ௪௪௫ - ௪௫௪

[இலாவாணத்தின் அயலிலுள்ள மலையின் இயற்கையழகும் செயற்கையழகும்—மரங்கள் முதலியன—மாசனம் மலைச்சாரலையடைதல்—பாடி

யின் இயல்பு—மகளிரும் மைந்தரும் பலவகைக் காட்சிகளைக்கண்டு மகிழ்தல்.]

(கங) குறிக்கோட்கேட்டது .... .... சருச - சருகூ

[சோலைவளம்—உதயணன் முனிவரைக் காணுதல்—முனிவர் கூறல்—உதயணன் உவத்தல்.]

(கச) உண்டாட்டு .... .... .... சருகூ - சகூச

(கரு) விரிசிகை மாலை சூட்டு .... .... சகூச - சஎங

[முனிவராச்சிரமம்—விரிசிகையின் பாதாதிகேச வருணனை—விரிசிகை உதயணனிடம் கேட்டல்—உதயணன் மாலைதொடுத்து விரிசிகைக்கு ஈதல்.]

(கசா) ஊடலுணர்த்தியது .... .... சஎங - சஅக

[உதயணன் விரிசிகையை விடுத்தல்—வாசவதத்தை காணுதலும் ஊடுதலும்—உதயணன் தேற்றல்—வாசவதத்தை உரைத்தல்—ஒரு முசுக்கலையின் செயல்—வாசவதத்தை நடுங்கி ஊடல் தீர்தல்—உதயணன் மகிழ்தல்.]

(கஎ) தேவியைப் பிரித்தது .... .... சஅக - சகூக

[யூகியின் மறைவு—சாங்கியத்தாய் உதயணனிடம் வந்து கூறல்—உதயணன் இலாவாணம் சென்று இருத்தல்—தோழர் உதயணனிடம் கூறுதல்—உதயணன் மறுத்தலும் வாசவதத்தையின் கூற்றும்—உதயணன் வேட்டைக்குச் செல்லல்—அமைச்சர் ஏவலாளர் வாசவதத்தையின் மாடத்திற்குத் தீமூட்டல்—உருமண்ணுவா முதலியோர் செயல்—சாங்கியத்தாய் வாசவதத்தையைக் கொண்டு யூகிபாற்செல்லல்—யூகி கூறல்—வாசவதத்தை தன்னுட்கருதுதல்—சாங்கியத்தாய் கூறல்—வாசவதத்தை தேறுதல்.]

(கஅ) கோயில்வேவு .... .... சகூஉ - சகூஅ

[உதயணன் மீண்டு வருதல்—குதிரையைப் பாகன் கொடுப்ப உதயணன் அதன் மீதூர்ந்து வருதல்—தீயநிமித்தம்—உதயணன் புகைத் தோற்றத்தைக் காணுதல்—உதயணனும் வயந்தகனும் நிற்றல்—காஞ்சனமாலையின் கலக்கம்—உதயணன் கண்டு மூர்ச்சித்தல்—தோழர் உபசரித்தலும் அவன் தெளிந்து எழுதலும்.]

(ககூ) தேவிக்கு விலாவித்தது .... .... சகூஅ - ரு0கூ

[உதயணன் தீயில் விழச்செல்லல்—தோழர் விலக்கல்—உதயணன் வாசவதத்தையின் உடம்பைக் காணவிரும்பல்—உருமண்ணுவா சில ஆபரணங்களைக் காட்டுதல்—உதயணன் வாசவதத்தையின் பொன்னணி

மாலை முதலியவற்றை நோக்கிப்புலம்பல்—அவன் முன்னிகழ்ச்சிகளை நினைத்துப் புலம்பல்—தோழர் தேற்றல்.]

(௨௦) சண்பையுள் ஒடுங்கியது .... .... ௫௦௯ - ௫௧௬

[காதலின் குற்றத்தை உதயணனுக்குத் துணிவுடையோர் உணர்த்தி விலக்கல்—யூகி முதலியோர் ஒரு மலைச்சாரலுக்குச் செல்லுதல்—ஓர் ஆச்சிரமத்தின் வருணனை—யூகி முதலிய மூவரும் முனிவனாச்சிரமத்தில் இருத்தல்—காஞ்சனமாலையின் வரவு—யூகிமுதலிய நால்வரும் சண்பை நகருக்குச் செல்லுதல்—சண்பை நகரின்சிறப்பு—யூகி முதலியோர் மித்திரகாமன் வீட்டில் மறைந்திருத்தல்.]

௩. மகதகாண்டம் .... ... ௫௧௭-௭௩௮

(௧) யாத்திரை போகியது .... .... ௫௧௭ - ௫௨௮

[உதயணன் உட்கோள்—பாஞ்சாலராசன் உட்கோள்—அமைச்சர் உதயணனுக்குக் கூறல்—உதயணன் இரங்கல்—தோழர் தேற்றல்—இசைச்சன் கூற்று—உதயணன் கூற்றும் தோழர் செயலும்—வேற்று வேடவகை—உதயணன் மான்முதலியவற்றை நோக்கிப் புலம்பல்—உதயணன் முதலியோர் மகதநாட்டின் எல்லையை அடைதல்.]

(௨) மகதநாடு புக்கது .... .... ௫௨௮ - ௫௩௧

[தோழர் உதயணனைத் தேற்றல்—மகதநாட்டின் சிறப்பு.]

(௩) இராசகிரியம் புக்கது .... .... ௫௩௧ - ௫௩௯

[ஊர்களின் சிறப்பு—இராசகிரியத்தின் சிறப்பு—மதில்—படைச்சேரி—பரத்தையர்தெரு—வேளாளர்தெரு—வாணிகர் தெரு—அந்தணர் தெரு—அமைச்சர் தெரு—அரண்மனை-உதயணன் இராசகிரியம்புகுதல்.]

(௪) புறத்தோடுங்கியது .... .... ௫௪௦ - ௫௪௬

[யவனச்சேரி முதலிய சேரிகள்—சித்திரசாலை—பொய்கை—தாபதப்பள்ளி அமைந்துள்ள இடம்—அமைச்சர் செயல்—காகதுண்டக முனிவன் கூற்று—உருமண்ணுவா முதலியோர் கூற்று.]

(௫) பதுமாபதி போந்தது .... .... ௫௪௬ - ௫௫௩

[மகதமன்னவன்—பதுமாபதியின் பாதாதிகேச வருணனை—முரசறைதல்—நகரமாந்தர் விழாத் தொடங்கல்—பதுமாபதி புறப்படல்—வண்டி யெருதுகள்—மகளிர் ஏந்திய பொருள்கள்—பதுமாபதி வையமேற வருதல்—அவள் வையமேறிக் காமன் கோயில் செல்லல்.]

(௬) பதுமாபதியைக் கண்டது .... .... ௫௫௩ - ௫௬௫

[உதயணன்நிலை—அவன் பதுமாபதியைக் காணல்—உதயணனும் பதுமாபதியும் தம்முள் மயங்கல்—பதுமாபதி நினைத்தல்—அவள் கண்

ணின்செயல்—அவள் கோயிலை வலஞ்செய்தல்—அவள் தானம் செய்தல்—ஒரு மங்கை பாடுதல்—பதுமாபதி அரண்மனையை அடைதல்—அவள் கட்டளை—உதயணன் துன்புறுதல்—அவன் கூனியை வினவுதல்—கூனியின் விடை—அவள் உதயணனை வினவுதல்—அவன் விடை.]

(எ) கண்ணுறு கலக்கம் .... .... ருகூரு - ருஎஉ

[சூரியன் அத்தமித்தல்—மாலைக்காலம்—உதயணன் வருந்துதல்—பதுமாபதி வருந்துதல்—சந்திரன் அத்தமித்தல்—விடியற்காலம்.]

(அ) பாங்கர்க்குரைத்தது .... .... ருஎஉ - ருஎகூ

[பதுமாபதியின்நிலை—செவிலி முதலியோர் பதுமாபதியிடங் கூறல்—பதுமாபதி கூற்று—அவள் பந்தாடுதல்—உதயணன் அப்பந்தைக் கைக்கொள்ளுதல்—பதுமாபதி அயிராபதியை வினவல்—அயிராபதியின் விடை—பதுமாபதி அயிராபதியிடம் கூறல்—அயிராபதி உதயணனிடம் குறிப்பித்தல்—உதயணன் கூற்று—இசைச்சன் மறுத்தல்—மற்றத் தோழரும் மறுத்துக்கூறல்—உதயணன் வற்புறுத்தல்.]

(கூ) கண்ணி தடுமாறியது .... .... ருஅ0 - ருகூ0

[தோழர் கண்ணிகட்டி வைத்தல்—உதயணன் தான் சித்திரித்த வாழைக் குருத்தையும் கட்டிய கண்ணியையும் வைத்தல்—பதுமாபதி அவற்றைக் கைக்கொள்ளுதல்—யாப்பியாயினி ஐயுற்று வினவுதல்—உருமண்ணுவா மற்றைத்தோழர்க்குக் கூறல்—பதுமாபதிவைத்த பிணையல் முதலியவற்றை வயந்தகன் எடுத்துவந்து கொடுத்தல்—உதயணன் அவற்றை அணிந்து கொள்ளுதல்—பதுமாபதி உதயணனைக்கண்டு தன்னிடம்செல்லல்—உதயணன் கனுக்காண்டல்.]

(க0) புணர்வு வலித்தது .... .... ருகூ0 - ருகூச

[உதயணன் கனவைத் தோழர்க்குக் கூறுதல்—தோழர் கூறுதல்—உதயணன் பதுமையை அடைய விரும்புதல்—மந்திரிகள் உடன்படல்—உதயணன் குறை இரத்தல்—தோழர் கருதுதலும் சொல்லுதலும்—உதயணனது விடை—பதுமாபதியின் சிறப்பு.]

* * * *

(கக) அமாத்தியர் ஒடுங்கியது .... .... ருகூரு-ருகூகூ

[* * * வாயிலோன்விடை—உதயணன் கூறல்—உதயணன் தருசகனைக்காணல்—தருசகனுக்கு உதயணன் நிதியைக்காட்டல்—உதயணன் நீருற்றுள்ள இடத்தைக் காட்டல்—தருசகன் நிதியை எடுத்தல்—உருமண்ணுவா முதலியோர் உத்தியோகம் பெறல்.]

(கஉ) கோயில் ஒடுங்கியது .... .... கூ00 - கூ0ரு

[பதுமாபதி மன்மதன் கோயிலையடைந்து உதயணனைக்காண்டல்—அவள் தானம் செய்தல்—அவள் உதயணனுடன் செல்லுதல்.]

(கச) நலனாராய்ச்சி .... .... ௩௦௩ - ௩௨௧

[உதயணன்நிலை—தோழி எழுதித்தந்த அரண்மனைவடிவம் முதலிய வற்றைக்கண்டு அவன் நினைத்தல்—பதுமாபதி செவ்வி அரியளாதல்—கட்டில்—பாக்குவகை முதலியன—உதயணன் சித்திரத்தைக் கண்டு வியத்தல்—பதுமாபதி ஊடல்—உதயணன் பதுமாபதியின் ஊடலைத் தீர்த்தல்—அவள் ஊடல்தீர்தல்—அவள் தோழிக்குச் சொல்லல்—தோழி வினாக்களும் உதயணன் விடைகளும்—பதுமாபதி யாப்பியாயினியை ஏவுதல்—உதயணனும் யாப்பியாயினியும் உரையாடல்—மாலைக் காலம்—உதயணன் பாடிக்கொண்டு யாழ் வாசித்தல்—அவனுடைய இசையின் சிறப்பு—பதுமாபதி வியத்தல் முதலியன.]

(கரு) யாழ்நலந் தெரிந்தது .... .... ௩௨௨ - ௩௨௩

[யாப்பியாயினி உதயணனிடம் யாழைக்கொடுத்தல்—அவன் யாழ் நரம்பின் குற்றங்களைத் தெரிவித்தல்—உதயணன் பதுமாபதியாகிய இருவர்நிலை.]

(கசு) பதுமாபதியைப் பிரிந்தது .... .... ௩௨௩ - ௩௨அ

[அச்சுவப் பெருமகன் வரவு— * * * ]

(கஎ) இரவெழுந்தது .... .... .... ௩௨அ - ௩௪௧

[ * * * தருசகனுடைய பகைமன்னர்—அவர் ஆராய்தலும் போருக் கெழுதலும்—தருசகன் மாணகனுக்குச் சொல்லிவிடுத்தல்—அயிராபதி உதயணனிடம் கூறல்—உருமண்ணுவா தோழருக்குக் குறிப்பித்தல்—தோழர் வணிகராக வேடம் பூணல்—வாசனைப் பொருள்கள்—உண் பொருள்கள்—மருந்திற் குரியவை—மகளிர்க் குரியவை—உதயண னுடைய வீரர் இரவிற் போர்புரிதல்.]

(கஅ) தருசகனோடு கூடியது .... .... ௩௪௧ - ௩௪எ

[உதயணன் வயந்தகன்வாயிலாகத் தருசகனை அடைதல்—தருசகன் உதயணனை எதிர்கொள்ளச் செல்லுதல்—சிலர் தருசகனைத் தடுத்தல்—தருசகன் உதயணனை எதிர்கொள்ளல்—தருசகன் உதயணனை உபசரித்து இருக்கச் செய்தல்.]

கக - படைதலைக் கொண்டது .... .... ௩௪எ - ௩௫எ

[ஓடிய பகைமன்னர் மீட்டும் போர்செய்தற்கு வருதல்—பகைவர் மகதநாட்டுச் சோலை முதலியவற்றை அழித்தல்—பகைவர் செயலைத் தருசகன் அறிந்து படை திரட்டல்—தான் போர்செய்யச் செல்வதாகச் சொல்லி உதயணன் வயந்தகனைத் தருசகன்பால் விடுத்தல்—வயந்தகன் கூற்று—தருசகன் உடன்படல்—கேகயத்தரசன் எண்ணுதலும் தெரிவித் தலும்—தருசகன் எண்ணல்—தருசகன் கேகய அரசனைப் போருக்கு

விடுத்தல்—தருசகன் வயந்தகனுக்குக் கூறலும் அவனை விடுத்தலும்—யானைகள்—குதிரை முதலின—படைகளின் புறப்பாடு—உதயணன் புறப்பாடு—பகைவர் எதிர்த்தல்.]

(உ0) சங்கமன்னர் உடைந்தது .... .... ௬௫அ - ௬௬அ

[காலாட்படைகள்—குதிரைவீரர்—யானைவீரர்—போர் நிகழ்ச்சி—கேகய அரசன் இறத்தல்—உதயணன் கூறுதல்—தருசகன் கூறுதல்—தருசகனும் உதயணனும் நகர்புகுதல்—நகரமாந்தர் செயல்—உதயணனைப் புகழ்வோர்—வாசவதத்தையை இகழ்வோர்—வாசவதத்தையைப் புகழ்வோர்—பிறவாறு கூறுவோர்.]

(உக) மகட்கோடை வலித்தது .... .... ௬௬அ - ௬எச

[உதயணன் சூழ்தல்—தருசகன் கருதுதல்—தருசகன் அமைச்சனை உதயணன்பால் விடுத்தல்—ஒரு முதுமகள் பதுமாபதிக்கு அறிவித்தல்—பதுமாபதி எண்ணுதல்—அமைச்சன் உதயணனை அடைந்து தருசகன் கருத்தைத் தெரிவித்தல்—உதயணன் எண்ணுதல்—அவன் தன் விருப்பத்தை வெளிப்படுத்தாமல் கபடமாக மறுத்துரைத்தல்—அமைச்சன் கூறுதல்—உதயணன் உடன்படல்—அமைச்சன் தருசகன்பால்மீளல்.]

(உஉ) பதுமாபதி வதுவை .... .... ௬எரு - ௬அக

[அமைச்சன் தருசகனுக்குக் கூறல்—தருசகன் மகிழ்தல்—உதயணன் எண்ணுதல்—அவன் வயந்தகனைத் தருசகன்பால் அனுப்பல்—வயந்தகன் தருசகன்பாற் சென்று கூறல்—தருசகன் யாப்பியாயினியை இசைச்சனுக்கு மணம்புரிவிப்பதாகச் சொல்லி விடுத்தல்—உதயணன் முதலியோர் உடன்படல்—தருசகன் தன் தாயின் உடன்பாட்டை அறிதல்—பதுமாபதியின்செயல்-யாப்பியாயினி உதயணனே மாணகனென்று உணர்தல்—அவள் பதுமாபதியைக் காணல்—பதுமாபதி கூறல்—யாப்பியாயினி கூறுதல்—பதுமாபதி கூறுதல்—யாப்பியாயினியின் செயல்—உதயணன் பதுமாபதிக்குச்சொல்லிவிடுத்தல்—பதுமாபதியின்மகிழ்ச்சி—மணத்துக்குரியன செய்யப்படுதல்—பதுமாபதியைக் கோலஞ் செய்தல்—உதயணனைக் கோலஞ் செய்தல்—உதயணன் மணமண்டபம் புகுதல்—பதுமாபதி வருகை—உதயணன் பதுமாபதியை மணம்புரிதல்.]

(உ௩) படை யெழுச்சி .... .... ௬அக - ௬௯ச

தருசகன் எண்ணுதல்—அவன் உதயணனுடன் அமைச்சர் முதலியோரை விடுத்தல்—தருசகன் கூற்று—படை எழுதல்.]

(உச) மேல்வீழ் வலித்தது .... .... ௬௯ச - எ0௭

[உதயணனுக்குத் தருசகன் விடைகொடுத்தல்—உதயணன் தருசகன்பாற் கூறுதல்—தம்பியருடைய வரவை வயந்தகன் கூறல்—உதயணன்

மகிழ்தல்—படைகள் ஈண்டுதல்—தம்பியர் உதயணனை இறைஞ்சிப் புலம்பிக் கூறுதல்—உதயணன் தம்பியரைத் தழுவிக் கூறுதல்—உதயணன் அமைச்சர்களுடன் ஆராய்தல்—வருடகாரன் கூற்று—பட்டத் தேவியின் கலக்கம்—குற்றேவல் மகளிரின் துயரம்—நகரத்தார் மகிழ்ச்சி.]

(உரு) அரசமைச்சு .... .... ௭௦௮ - ௭௧௮

[பகைப்புலன் அறிந்து வந்த ஒற்றர் கூற்று—உதயணன் வருடகாரனுக்குக் கூறுதல்—வருடகாரன் செயல்—சேனாபதி மகன் கூறுதல்—வருடகாரன் கூற்று—சேனாபதிமகன் ஆருணியிடம் சென்று அறிவித்தல்—ஆருணியின் செயல்.]

(உகூ) பாஞ்சாலராயன் போதரவு .... .... ௭௧௯ - ௭௨௫

[வருடகாரன் தாரகாரியை உதயணனிடம் அனுப்புதல்—உதயணன் தூதுவர் நால்வரையும் வருவித்துத் தீயிடுதல்—வருடகாரனது நடிப்பு—பிழைத்தோர் ஆருணியரசன்பாற் சென்று கூறுதல்—ஆருணியரசன் வருடகாரனுக்குச் சிறப்புச்செய்தல்.]

(உஎ) பறைவிட்டது .... .... ௭௨௫ - ௭௩௮

[கால்வலிளைஞர் ஆருணிக்குக் கூறுதல்—வருடகாரன்செயல்—ஆருணியின் உட்கோள்—வருடகாரன் உதயணனுக்கு உணர்த்திவிடுதல்—உதயணன் கருதல்—ஆருணியின் மனநிலை—தீயநிமித்தங்கள்—பூரணகுண்டலன் கூற்று—வருடகாரன் கூற்று—ஆருணி போருக்கு எழுதல்—போர்நிகழ்ச்சி—உதயணன் போருக்கு எழுதல்—கடகபிங்கலர் செயல்—ஆருணியின் கூற்று—உதயணன் மேற்செல்லுதல்—தருமதத்தன் ஆருணியரசனைக் கொல்லல்—உதயணன் அவனுக்குச் சிறப்புச் செய்தல்—வருடகாரன்செயல்—நகரமாந்தர் கூறுதல்—யாவரும் நகர்புகுதல்.]

## ச. வத்தவ காண்டம். ... ௭௩௯ - அ௯௮

(க) கொற்றங் கொண்டது .... .... ௭௩௯ - ௭௪௧

[உதயணன் வருடகாரன் முதலியோர்க்குச் சிறப்புச் செய்தல்—அவன் சிங்காதனமேறி வீற்றிருத்தல்.]

(உ) நாடு பாயிற்று .... .... .... ௭௪௨ - ௭௪௭

[உதயணன் செங்கோற் சிறப்பு—அவன் தன் நாட்டைப் பரப்புதல்.]

(ந) யாழ் பெற்றது .... .... .... ௭௪௮ - ௭௫௭

[பத்திராபதியின் என்பு முதலியவற்றைக் கொணரும்படி உதயணன் சிலரை அனுப்பல்—பத்திராபதி வீழ்ந்த இடத்தில் அதன் வடிவமெடுப்பித்துப் பூசை முதலியவற்றை நிகழ்த்துவித்தற்கு அவன் முயலுதல்—பத்திராபதியின் என்பு முதலியன கொணர்ந்தார்க்கு அவன் பொரு

ளித்தல் முதலியன—அவன் இழந்த யாழைப் பெறுதல்—அருஞ்சுகன் வேங்கைமரத்திலேறி நோக்குதல்—உதயணனது யாழின்நிலை—உதயணன் ஆராய்ந்துதுணிதல்—அவன் அருஞ்சுகனை வருவித்தல்—வயந்தகன்கூறுதல்—உதயணன் வாசவதத்தையை நினைந்துவருந்தல்.]

(சு) உருமண்ணுவா வந்தது .... .... எருஎ - எசுஈ
[உதயணன்நிலை—தருசகன் ஏவல்—சங்கமன்னர் உருமண்ணுவாவைச் சிறைவிடுத்தல்—உருமண்ணுவாவின் மகிழ்ச்சி—யூகி சாதகனை உருமண்ணுவாவிடம் விடுத்தல்—உருமண்ணுவா சாதகனை வினவல்—சாதகன் கூற்று—உருமண்ணுவா நகரை அடைதல்.]

(ரு) கனாவிறுத்தது .... .... .... எசுச - எஎக
[உதயணன் நிலை—பதுமாபதியின் கூற்று—வாசவதத்தையை நினைந்து உதயணன் கலங்கல்—உதயணனுடைய குறிப்பறிந்து பதுமாபதி தன்னிடஞ் செல்லுதல்—வயந்தகன் உதயணனிடம் கூறுதல்—உதயணன் வாசவதத்தையை நினைந்து வருந்தித் துயிலல்—அவன் கனவு காண்டல்—அவன் எழுதல்—முனிவரைக் கண்டு அவன் வினுதல்—முனிவர் கனாப்பயன் உரைத்தல்.]

(கூ) பதுமாபதியை வஞ்சித்தது .... .... எஎஉ - எஎஎ
[உதயணன் உருமண்ணுவாவை வினவல்—உருமண்ணுவா நிகழ்ந்தவற்றை உதயணனுக்குக்கூறல்—உருமண்ணுவா வயந்தகனிடம் கூறல்—உதயணன் அரற்றல்—வயந்தகன் உதயணனைக் கேட்டல்—உதயணன் விடைகூறுதல்—வயந்தகன் கூற்று—உதயணன் கூற்று—வயந்தகன் கூற்று—உதயணன் பதுமாபதி முதலியோரை வஞ்சித்து அகற்றிச் சென்று துயிலல்.]

(எ) வாசவதத்தை வந்தது .... .... எஎஎ - எகூக
[அமைச்சர் வாசவதத்தையை உதயணன்பால் விடுத்தல்—உதயணனுடையநிலை—வாசவதத்தை யாழ்வாசித்தல்—உதயணனுடையகூற்று—வாசவதத்தை வாளாவிருத்தல்—மீட்டும் உதயணன் அரற்றல்—அமைச்சர் வாசவதத்தையை உதயணனிடமிருந்துபிரித்தல்—உதயணன்விழித்து அரற்றல்—வயந்தகன் உதயணனிடம் கூறல்—உதயணன் கூற்று—வயந்தகன் கூற்று—உதயணன் நினைத்தல்—வயந்தகன் உதயணனிடம் கூறுதல்—யூகியினிலைமை—வாசவதத்தையின் நிலைமை—உதயணன் யூகியை அறிந்துகொண்டு தழுவல்—வாசவதத்தையின் வருகை—உதயணன் சாங்கியத்தாயைநோக்கிக் கூறல்—யாவரும் நகர்செல்லல்.]

(அ) தேவியைத் தெருட்டியது .... .... எகூக - எகூஎ
[பதுமாபதி வாசவதத்தையைக் காணல்—உதயணன் யூகியை வினவுதல்—யூகிகூற்று—உதயணன் கூற்று—வாசவதத்தை பதுமாபதியாகிய

இருவர் செயல்—உதயணன் கூறுதல்—வாசவதத்தை சினத்தல்—உதயணன் வாசவதத்தையைத் தெருட்டி மகிழ்தல்.]
(௯) விருத்தி வகுத்தது .... .... ௪௯௭ - ௫௦௧
[உதயணன் உருமண்ணுவாவுக்கு விருத்தி யளித்தல்—யூகியின் பேறு—இடவகன் பெற்றவை—வயந்தகன் பெற்றவை—இசைச்சன் முதலாயினோர் பெற்றவை—உதயணன் தேவிமார் விருத்தி பெறல்.]
(௧௦) பிரச்சோதனன் தூதுவிட்டது .... .... ௫௦௧ - ௫௧௦
[வாயில்காவலன் தூதர் வந்தமையை அறிவித்தல்—பதுமையென்னுந்தூதி—வாசவதத்தைக்குப் பிரச்சோதனன் அளித்தவை—பதுமை அளித்த ஓலையை உதயணன் வாங்குதல்—ஓலையிலெழுதிய செய்தி—உதயணன் பதுமையை வினவுதல்—பதுமை விடையளித்தல்—உதயணன் கூறுதல்—அவன் பண்ணிகாரங்களைக் காணுதல்—வந்தோரை உபசரித்தல்—யூகிக்குக் கூறுதல்.]
(௧௧) பிரச்சோதனற்குப் பண்ணிகாரம் விட்டது .... ௫௧௧ - ௫௧௬
[உதயணன் பிரச்சோதனனுக்கு ஓலை அனுப்புதல்—யூகிக்குக் கூறியன—பிரச்சோதனனுக்கு அனுப்பியவை—வாசவதத்தையின் தாய்க்கும் கோபாலகன் தாய்க்கும் கோபாலகற்கும் பாலகுமாரற்கும் அனுப்பிய மகளிர்—பரதகற்கும் மற்றத் தம்பியர்க்கும் அளித்தன—சிவேதனுக்கு அளித்தன—யூகியின் புறப்பாடு—யூகிமுதலியோரை விடுத்தல்—உதயணன் வாசவதத்தையோடும் பதுமாபதியோடும் பொழுதுபோக்கல்.]
(௧௨) பந்தடி கண்டது .... .... ௫௧௭ - ௫௨௮
[வாசவதத்தையும் பதுமாபதியும் பந்தடி காணுதல்—வயந்தகன் கூற உதயணன் மறைந்துசென்று பந்தடி காணல்—இராசனை—பந்துகள்—இராசனை காஞ்சனமாலை அயிராபதி விச்சுவலேகை ஆரியை ஆகிய இவர்கள் பந்தடி—வாசவதத்தை தோழியரை நோக்கல்—கோசலத்தரசன் மகளின் பந்தடி—வாசவதத்தையின் எண்ணம்—உதயணன் கோசலத்தரசன் மகளை விரும்பல்.]
(௧௩) முகவெழுத்துக் காதை .... .... ௫௨௮ - ௫௩௨
[உதயணன் தேவியரை வருவித்தல்—தோழியரை உதயணன் வினுதல்—அவன் வாசவதத்தையை வினுதல்—வாசவதத்தை சினத்தல்—உதயணன் கூறுதல்—அவன் மானனீகையை வினுதல்—அவள் கூறல்—உதயணன் அவளிடம் கூறுதல் - மானனீகை வாசவதத்தையைப் புனைதல்—உதயணன் முகவெழுத்து எழுதி வாசவதத்தையை அனுப்புதல்—அதனை மானனீகை காணல்—மானனீகை எழுதி விடுத்தல்—அதனைக் கண்டு உதயணன் மீட்டும் எழுதிவிடல்—அதனை மானனீகை உணர்ந்து மறுமொழியெழுதி விடுத்தல்—உதயணன் உவத்தல்—மானனீகை மறைந்திருத்தல்—உதயணன் செயல்—வாசவதத்தை அவன் செயலை அறி

யும்படி காஞ்சனமாலையை விடுத்தல்—உதயணன் மானனீகையுடன் அளவளாவல்—காஞ்சனமாலை தான் அறிந்ததை வாசவதத்தைக்கு உணர்த்தல்—வாசவதத்தை உதயணனைக்கண்டு கூறல்—உதயணன் விஞுதல்—வாசவதத்தை கூறல்—உதயணன்கூற்று—வாசவதத்தை கூற்று—வாசவதத்தை மறைந்திருத்தல்—உதயணன் அவளை மானனீகையென்று நினைத்தல்—வாசவதத்தை தன்னை உணர்த்தல்—உதயணன் நீங்குதல்—வாசவதத்தை சினத்தல்.]

(கச) மணம்படு காதை .... .... அசஙு - அருஉ

[வாசவதத்தை மானனீகையின் மயிரைக்குறைக்கப் புகுதல்—வயந்தகன் உதயணனைத் தேடுதல்—உதயணன் நிகழ்ந்ததை வயந்தகனுக்குக் கூறல்—வயந்தகன் சென்று வாசவதத்தையைக் காணல்—வாசவதத்தை கூற்று—வயந்தகன் கூறல்—உதயணன் யூகியை வருவித்துக் கூறல்—யூகியின் விடை—யூகி பித்தர் வேடந்தரித்தல்—தோழியர் யூகியின் வேடத்தைக்கண்டு ஓடல்—வயந்தகன் சிலதியை அனுப்புதல்—உதயணன் பதுமாபதியை வருவித்தல்—பதுமாபதி உதயணனை வினவுதல்—உதயணன் பதுமாபதியை அனுப்புதல்—பதுமாபதி வேண்டிக்கொள்ளல்—கோசலத்தரசன் தூதுவர் வரவைக் காவலர் உரைத்தல்—அவரை உதயணன் வருவித்தல்—தூதுவர் ஓலையை அளித்தல்—ஓலையை வாசவதத்தைக்கு உதயணன் அனுப்பல்—அவளுக்கு ஓலையைப் பதுமாபதி படித்துக்காட்டல்—ஓலையின் செய்தி—பதுமாபதி ஓலையை வாசவதத்தையிடம் கொடுத்தல்—வாசவதத்தை ஓலையைப் படித்து வருந்துதல்—வாசவதத்தை மானனீகையின் கட்டை அவிழ்த்து இரங்கல்—மானனீகையை வாசவதத்தை அலங்கரித்தல்—வயந்தகன் உதயணனுக்குத் தெரிவித்தல்—உதயணன் மகிழ்தல்—மானனீகையை மணஞ்செய்துகொள்ளல்.]

(கரு) விரிசிகை வரவு குறித்தது .... .... அருஉ - அருஎ

[விரிசிகையின் இயல்பு—அவள் தந்தை உதயணனை அடைதல்—முனிவன் கூற்று—உதயணன் விரிசிகைக்கு மாலை சூட்டியது—விரிசிகையின் முதுக்குறைவு—அவள் தந்தை தன்மகளை மணஞ்செய்து கொள்ளும்படி உதயணனுக்குக் கூறல்—விரிசிகையின் வதுவையை வாசவதத்தைக்கு உணர்த்தல்—வாசவதத்தை உடன்படல்— உதயணன் விரிசிகையை மணஞ்செய்துகொள்ள விரும்பல்—நகரமாந்தர் விரிசிகை வரவு காண விரும்பல்.]

(கசு) விரிசிகை போத்தரவு .... .... அருகூ - அகூக

[விரிசிகையின் தமர் அவளைக் கொணர்தல்—விரிசிகையைப் புனைதல்—அவளை விடுத்தல்.]

(கஎ) விரிசிகை வதுவை .... .... அகூஉ - அகூஅ

[விரிசிகையின் தந்தை தவம்புரியச் செல்லல்—அவள் தமர் அவள் விளையாடிய பொருள்களைக் கொண்டு உடன்செல்லல்—கண்டோர் கூற்று—விரிசிகை அரண்மனையை அடைதல்—உதயணன் அவளை மணந்து இன்புறல்.]

## ரு. நரவாண காண்டம் ... அகூகூ - கூ௩ச

(க) வயாக் கேட்டது .... .... அகூகூ - அஅ0

[உதயணன் வணிகருடைய வழக்கைத் தீர்த்தல்—அவன் மகப்பேறு விரும்பல்—அவன் கனவு கண்டு அதன் பயனறிதல்—வாசவதத்தையின் கருப்பம்—வாசவதத்தை ஒரு கனவு கண்டு உதயணனுக்கு உரைத்தல்—கனவின் பயனை உதயணன் கூறல்—வாசவதத்தையின் கருப்பம் முதிர்தல்—வாசவதத்தைக்கு உண்டான விருப்பம்—உதயணன் வாசவதத்தையின் விருப்பத்தை வினவல்—வாசவதத்தை தன் விருப்பத்தைக் கூறல்—உதயணன் அமைச்சரோடு ஆராய்தல்.]

(உ) இயக்கன் வந்தது .... .... அஅக - அஅச

[உருமண்ணுவா வருதல்—உதயணன் அவனுக்கு உரைத்தல்—உருமண்ணுவா இயக்கனைப்பற்றிக் கூறுதல்—உதயணன் இயக்கனை நினைந்தது—இயக்கன் வந்தது.]

(௩) இயக்கன் போனது .... .... அஅரு - அகூகூ

[இயக்கன் கூற்று—உதயணன் கூற்று—நஞ்சுகன் கூற்று—பிடியின் பண்டை வரலாறு—பத்திராபதி யானைப் பிறப்பை விரும்பல்—பத்திராபதி குபேரன் முன் செல்லுதல்—குபேரன் அவளைச் சபித்தல்—அவள் வினுதல்—சாப விடை—பத்திராபதி பழைய உருப்பெற்றுக் குபேரனை அடைந்து வணங்கல்—அவள் குபேரனை வரம் வேண்டல்—உதயணனுக்காக மகப்பேறு வேண்டல்—குபேரன் சௌதர்மேந்திரனை ஏத்தல்—சௌதர்மேந்திரன் சோதவனை விடுத்தல்—சோதவன் பத்திரையை உதயணன்பால் அனுப்பல்—பத்திராபதியின் நன்றியறிவு—இயக்கன் பத்திராபதியைத் தியானிக்கும்படி கூறல்—அவன் ஒரு மந்திரத்தை உபதேசித்தல்—அவன் செல்லுதல்.]

(ச) வயாத்தீர்ந்தது .... .... .... அகூகூ - கூ0௩

[உதயணன் வாசவதத்தையின் விருப்பத்தைக் கூறுதல்—அமைச்சர் தச்சரிடம் கூறுதல்—தச்சர் மறுத்தல்—பத்திராபதி தச்சவுருவங்கொண்டு வருதல்—உதயணனுக்கு உருமண்ணுவா அறிவித்தல்—உதயணன் உடன்படல்—உருமண்ணுவாவின் செயல்—பத்திராபதி எந்திரம் அமைத்துத் தருதல்—உதயணன் முதலியோர் அதிலேறிச் செல்லல்.]

(௫) பத்திராபதி உருவு காட்டியது .... ௯௦௪ - ௯௦௬

[உதயணன் பத்திராபதியை அழைத்துக் கூறல்—தச்சனுக்குச் சிறப்புச் செய்தல்—பத்திராபதி தன் வரலாறு கூறுதல்—உதயணன் எண்ணுதல்—பத்திராபதி தன் உருவத்தைக் காட்டி மீளல்.]

(௬) நரவாணதத்தன் பிறந்தது .... .... ௯௦௬ - ௯௧௩

[நரவாணதத்தன் பிறத்தல்—பிறந்தநாட் சிறப்புக்கள்—சாத கர்மம்—யாவருக்கும் பரிசளித்தல்—உதயணன் தன் தம்பி முதலியோர்க்குச் செய்தி கூறி விடுத்தல்—பெயரிடல்—உருமண்ணுவா முதலியவரின் புதல்வர்களுக்குப் பெயரிடல்—நகரமாந்தர் மகிழ்ந்து கூறல்.]

(௭) யூகி பிரச்சோதனனைக் கண்டு வந்தது .... ௯௧௩ - ௯௨௦

[பிரச்சோதனன் நரவாணதத்தன் பிறந்ததை அறிதல்-முரசறைதல்-நகரை அலங்கரித்தல்—பிரச்சோதனன் விழாக்கொண்டாடல்—யூகியைப் பிரச்சோதனன் வருவித்தல்—யூகியும் சாலங்காயனும் தர்க்கஞ் செய்தல்—பிரச்சோதனன் யூகியின் விசேடகுணங்களை வியத்தல்—யூகிக்குச் சிறப்புச் செய்தல்—யூகிக்கு இருவரை மணம்புரிவித்தல்—யூகியைப் பாராட்டல்—யூகியை விடுத்தல்.]

(௮) மதனமஞ்சிகை வதுவை .... .... ௯௨௦ - ௯௨௯

[யூகி உதயணனுக்குக் கூறல்—உதயணனது செங்கோன்மை—நரவாணதத்தனுடைய இளமைப் பருவம்—அவனது கௌமாரப் பருவம்—கணிகையர் இயல்பு—கலிங்கசேனை—மதனமஞ்சிகை பந்தாடுகையில் பந்து கீழே விழுதல்—நரவாணதத்தன் உலாவரல்—அவன் மதனமஞ்சிகையைக் கண்டு விரும்பல்—அவன் கோமுகனை வினுதல்—கோமுகன் மதனமஞ்சிகையின் உருவத்தை எழுதுதல்—அவன் அவள் வீடுசென்று பரிசங்காட்டல்—பரத்தையர் செயல்—கோமுகன் கூறல்—உதயணன் மதனமஞ்சிகைக்குப் பொன்விடுத்தல்—நரவாணதத்தன் மணம்.]

(௯) மதனமஞ்சிகை பிரிவு .... .... ௯௩௦ - ௯௩௪

[திருவிழா—மானசவேகன் வருதல்—அவன் கண்ட காட்சி—அவன் மதனமஞ்சிகையைக் காணல்—அவள் பூதவடிவமொன்றைக் கண்டு அஞ்சுதல்—மானசவேகன் எண்ணுதல்—நரவாணதத்தனும் மதனமஞ்சிகையும் இன்புறுதல்—மானசவேகன் எடுத்துச் செல்லல். * * *]

* * * * *

8. செய்யுட்களின் முதற்குறிப்பகராதி .... ௯௩௫ - ௬

9. அரும்பத முதலியவற்றின் அகராதி .... ௯௩௭ - ௧௧௭௬

# இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி.

அகநா - அகநானூறு.
அடிக் - அடிக்குறிப்பு.
அடியார், அடியார்க்கு - அடியார்க்கு நல்லாருரை.
அரிச்சந்திர - அரிச்சந்திர புரா
அரும்பத - அரும்பதவுரை. [ணம்.
அவை - அவையடக்கம்.
அறநெறி - அறநெறிச்சாரம்.
ஆசார - ஆசாரக்கோவை.
ஆத்திரையன் பொதுப் - ஆத்திரையன் பேராசிரியன் பொதுப்பாயி
ஆதி - ஆதியுலா. [ரம்.
இராமா - இராமாயணம்.
இ. வி - இலக்கண விளக்கவுரை.
இளம் - இளம்பூரணருரை.
இறை - இறையனாரகப் பொரு
இன்னா - இன்னாநாற்பது. [ளுரை.
உதயண, உதயணகுமார - உதயணகுமார காவியம்.
உதிதோதய-உதிதோதய காவியம்.
ஐங், ஐங்குறு - ஐங்குறுநூறு.
ஐந். ஐம் - ஐந்திணையைம்பது.
ஒ - ஒப்பு.
கடவுள் - கடவுள் வாழ்த்து.
கந்த - கந்தபுராணம்.
கந்தர் கலி - கந்தர் கலிவெண்பா.
கம்ப - கம்பராமாயணம்.
கல் - கல்லாடம்.
கலி, கலித் - கலித்தொகை.
கலிங்க, கலிங்கத் - கலிங்கத்துப்
களவழி - களவழிநாற்பது.[பரணி.
காஞ்சிப் - காஞ்சிப்புராணம்.
கார் - கார்நாற்பது.
குறிஞ்சிப் - குறிஞ்சிப் பாட்டு.
குறுந் - குறுந்தொகை.
கூர்ம - கூர்மபுராணம்.
கொங்குமண்டல - கொங்கு மண்டல சதகம்.
சங்கர - சங்கர நமச்சிவாயருரை.
சிலப் - சிலப்பதிகாரம். [யார்.
சிற் - திருச்சிற்றம்பலக் கோவை
சிறுபஞ்ச - சிறுபஞ்சமூலம்.
சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை.
சீகாளத்திப் - சீகாளத்திப்புராணம்.
சீவக - சீவகசிந்தாமணி.
சுந்தர - சுந்தரமூர்த்தி நாயனார்.
சுலோ - சுலோகம்.
சூ - சூத்திரம்.
சூளா - சூளாமணி.
சே - சேனாவரையருரை.
சேது - சேதுபுராணம்.
தக்க - தக்கயாகப்பரணி.
தஞ்சை - தஞ்சைவாணன்கோவை.
தண்டி - தண்டியலங்காரம்.
தமிழ்நா - தமிழ்நாவலர் சரிதை.
தனிப் - தனிப்பாடற்றிரட்டு.
திணைமா, திணைமாலை, திணைமாலை நூற் - திணைமாலை நூற்றைம்பது.
திருச்சந்த - திருச்சந்த விருத்தம்.
திருச்சிற் - திருச்சிற்றம்பலக் கோவையார்.
திருஞா - திருஞானசம்பந்தர்.
திருநா - திருநாவுக்கரசர்.
திருவா - திருவாசகம்.
திருவாய் - திருவாய்மொழி.
திருவால - திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம்.
திருவிளை-திருவிளையாடற்புராணம்.
திவ் - திவ்யப்ரபந்தம்.
திவா - திவாகர நிகண்டு.
தே - தேவாரம்.

தொல் - தொல்காப்பியம்.
ந - நச்சினார்க்கினியர்.
நம்பி - நாற்கவிராச நம்பி அகப் பொருள் விளக்கம்.
நள - நளவெண்பா.
நற் - நற்றிணை.
நன் - நன்னூல்.
நாய்ச்சியார் - நாய்ச்சியார் திரு
நாலடி - நாலடியார். [மொழி.
நான்மணி - நான்மணிக்கடிகை.
நீதிநெறி - நீதிநெறிவிளக்கம்.
நீல - நீலகேசி.
நெடுநல் - நெடுநல்வாடை.
நேமி - நேமிநாதம்.
ப - பக்கம்.
பட், பட்டின, பட்டினப் } - பட்டினப்பாலை.
பதிற், பதிற்றுப் - பதிற்றுப்பத்து.
பரி - பரிபாடல், பரிமேலழகருரை.
பரிமேல் - பரிமேலழகருரை.
பழ - பழமொழி.
பழமலைக் - பழமலைக்கோவை.
பி-ம் - பிரதிபேதம்.
பிரபு, பிரபுலிங்க - பிரபுலிங்கலீலை.
பிரமோத்தர - பிரமோத்தர காண்டம்.
பு-வெ - புறப்பொருள் வெண்பா
புறநா - புறநானூறு. [மாலை.
பெரிய - பெரிய புராணம்.
பெரியதிரு - பெரிய திருமொழி.
பெரியதிருவந் - பெரிய திருவந்தாதி.
பெரியாழ், பெரியாழ்வார் - பெரியாழ்வார் திருமொழி.
பெருங் - பெருங்கதை.
பெரும்பாண் - பெரும்பாணாற்றுப்
பேர் - பேராசிரியருரை. [படை.
பொருந - பொருநராற்றுப்படை.
மணி - மணிமேகலை.
மதுரை, மதுரைக் - மதுரைக்
மயிலை - மயிலைநாதருரை. [காஞ்சி.
மலை, மலைபடு - மலைபடுகடாம்.
மீனாட்சியம்மை - மீனாட்சி யம்மை
மு - முற்றும். [பிள்ளைத் தமிழ்.
முத் - முத்தொள்ளாயிரம்.
முருகு - திருமுருகாற்றுப்படை.
முல்லை, முல்லைப் - முல்லைப்பாட்டு.
மேருமந்தர - மேருமந்தரபுராணம்.
மேற் - மேற்கோள்.
யா-கா - யாப்பருங்கலக்காரிகை.
யா-வி - யாப்பருங்கலவிருத்தி.
வலிவலமும் - வலிவல மும்மணிக்
வி - விருத்தியுரை. [கோவை.
விக்கிர. உலா - விக்கிரம சோழ
விசேடக் - விசேடக்குறிப்பு. [னுலா.
வி-பா, வில்லிபாரதம் - வில்லிபுத்தூரார் பாரதம்.
வீர - வீரசோழியம்.
ஸ்ரீவர. மஹாபாகவதம் - ஸ்ரீவரத ராஜகவி மஹாபாகவதம்.

உ

கணபதி துணை.

# முகவுரை.

---

திருச்சிற்றம்பலம்.

**திருவாசகம்.**

நரியைக் குதிரைப் பரியாக்கி ஞால மெல்லா நிகழ்வித்துப்
பெரிய தென்னன் மதுரையெலாம் பிச்ச தேற்றும் பெருந்துறையாய்
அரிய பொருளே யவிநாசி யப்பா பாண்டி வெள்ளமே
தெரிய வரிய பரஞ்சோதீ செய்வ தொன்று மறியேனே.

**(நிலைமண்டில ஆசிரியப்பா)**

தேமலி கயிலைச் சிலம்பில்வீற் றிருக்கும்
பாமலி யுமையோர் பாகத் தண்ணலும்
குருகு பெயர்க்கிரி கொன்றே தன்னினைந்
துருகு பவர்க்கருண் முருக வேளும்
சகத்தியன் முனைஇத் தலைவனை யறிந்துயர்
அகத்தியன் முதலா மருந்தவப் பெரியரும்
நன்றி யறிவொடு துன்றுபு பல்குணம்
மேவுமுச் சங்க நாவலப் பெரியரும்
விரசு பெருங்கொடை யரசர் பலரும்
அப்பால் விளங்கிய வெப்பா லவரும்
வாய்ந்த வன்புட னுய்ந்த *செழுந்தமிழ்
பொங்குமண் டலத்துட் கொங்குமண் டலத்தில்
உறும்பல வளமார் குறும்புநன் னாட்டில்
எப்பனு வலையுந் தப்புத லின்றி
அங்கையா மலகமா வறிபெரி யோர்செறி
†மங்கைமா நகரின் மஞ்ஞையம் பரிமீத்
தங்குவே ளெனவாழ் ‡கொங்கு வேளிர்

---

* செழுந்தமிழ் பொங்குமண்டலம் - தமிழகம்.

† மங்கைமாநகர் - விசயமங்கலம். ‡ கொங்குவேளிர் : எழுவாய்.

மலர்தொறுஞ் சென்று நிலவிய மதுவின்
துளிக்கணந் தொகுக்கு மளிக்கணம் பொருவ
நூல்பல வற்றிற் சால்புறக் குழுமிய
சொன்னயம் பொருணயந் தொடைநய மாதி
எந்நயங் களுமமைந் தினிமை தோன்ற
அற்றைக் காலத் தமைதியைப் பிற்றைக்
காலத் தவர்தாங் கண்கூ டாக
நாடி யுணருமோ ராடி பொருவவும்
காப்பிய வியலெலாம் யாப்புற வமையவும்
பாவிக வணிசுவை மேவிநன் கிலகவும்
புலவர் கூட்டுணும் புத்தமு தாக
உதயணன் சரிதை யோதின ரதுபெருங்
கதைகதை யுதயணன் கதைப்பெயர் பெறீஇத் * தான்
பிறந்தமண் டலத்தின் பெயர்ப்பொருட் கேற்பச்
சிறந்தவின் சுவைத்தாய்த் திகழ்ந்தில குறுமே.

பெருங்கதையென்பது கவிஞர் பெருமானாகிய கொங்குவேளிரென்பவரால் இயற்றப்பெற்ற ஒரு தொடர்நிலைச் செய்யுள். இவர் கொங்குவேளெனவும் கொங்கவேளெனவும் வழங்கப்பெறுவர். இந்நூல் சொற்சுவை பொருட்சுவைகளிற் சிறந்தது; தெள்ளிய இனிய நன்னடை வாய்ந்தது; குருகுலத்திற் பிறந்தவனும் கௌசாம்பி நகரத்தரசனுமான † சதானிகனுடைய புதல்வன் உதயணனது சரித்திரத்தை விரித்துக்கூறுவது.

---

* தான் பிறந்த மண்டலத்தின் பெயர்-கொங்கு; அதன் பொருள் தேன்.

† குருகுலத்திற் பாண்டவர்களது காலத்தின் பின்பு சதானிகனென்னும் பெயர் வாய்ந்தவர் இருவர்; அவர்களுட் சனமேசயன் புதல்வன் ஒருவன். அவனுடைய பேரன் குமாரனான நிசக்குனு என்பவன் காலத்தில் அத்தினபுரம் சிதைவுற்றுப் போனமையால், அவன் வத்தநாட்டிலுள்ளதாகிய கௌசாம்பி நகரத்தை இராசதானியாகக் கொண்டு அரசாட்சி செய்துவந்தான். அந்த நிசக்குனுவுக்கு 16 - ஆம் பிற்றோன்றலாக உதித்தவன் வேறொரு சதானிகன்; அவனுடைய புதல்வனே உதயணன். இவ்வரலாறு ஸ்ரீ விஷ்ணு புராணம் ௪-ஆம் அம்சம், உக-ஆம் அத்தியாயத்தால் தெரியவருகிறது.

தெய்வ வழிபாடு சிறந்ததென்பதும், பெரியோர் வணக்கம் பேணற்பாலதென்பதும், ஊழ்வினை உருத்துவந்தூட்டுமென்பதும், சிறந்த கல்விமான் தன் பகைவராலும் நன்கு மதித்து உபசரிக்கப் படுவானென்பதும், எந்தக் காலத்தும் கல்வியைக் கைவிடலாகாதென் பதும், ஒருகாரியத்தை நிறைவேற்றக் கருதினோன் அதனை முடித்தற் குரிய அன்புடைத் துணைவர்களையும் தக்க கருவிகளையும் அடைய முயலவேண்டுமென்பதும், அன்புள்ள நல்ல துணைவர்களைப் பெற்றாற் சிறிதும் கவலையின்றி வாழலாமென்பதும், எந்தக் காரியத்தையும் மந் தணமாகவே நிறைவேற்ற வேண்டுமென்பதும், ஒவ்வொன்றையும் காலமும்இடமுமறிந்து செய்யவேண்டுமென்பதும், இன்னசெயலால் இன்னபயன் விளையுமென்பதும், சிறந்தகுணங்கள் பகைவர்பாலிருப் பினும் அவற்றைக் கண்டவிடத்து மகிழ்ந்து அவரை ஆதரிக்க வேண்டு மென்பதும், பெண்பாலார் தம்முடைய தேசபாஷையிலும் வேறு தேசபாஷையிலும் முற்காலத்தில் நல்ல பயிற்சியுற்றிருந்தா ரென்பதும், தம்முட் பகைமைகொண்ட அரசர்க்கு இடையேநின்று உசிதமாகப்பேசிச் சந்திசெய்விக்கவல்லார் பெண்பாலாரிலும் இருந்தா ரென்பதும், தன்குடி தளர்வுற்றவிடத்து அதனைப் போக்க முயல வேண்டுமென்பதும், ஒருவர் தினைத்துணை நன்றி செயினும் பனைத் துணையாக அறிந்து அவரைப் பாராட்டவேண்டுமென்பதும், காலத் தைக் கண்ணாக மதித்து நியமத்துடன் அதனை ஒழுங்காகப் போக் கல்வேண்டுமென்பதும், ஒருவரையும் இகழலாகாதென்பதும், யாரிடத் தும் பகை கொள்ளலாகாதென்பதும், அருளுடைமை சிறந்ததென்ப தும், தருமத்தையே உயிர்த்துணையாகக்கொண்டு ஒழுகல்வேண்டு மென்பதும், துன்பம் வந்தவிடத்து அதனைத் தன் தீவினைப்பயனே யென்றெண்ணி நுகரவேண்டுமென்பதும், பெருஞ்செல்வமுடையோர் தமக்கு முதுமைப்பருவம் வந்தவிடத்துத் தாங்குதற்குரிய புதல்வர் முதலியோர்பால் அதனை ஒப்பித்துவிட்டுப் பற்றற்றுத் துறவுபூண்டு வீடு பெறுதற்கு முயலவேண்டுமென்பதும், மகளிர் விருப்பம் ஆட வர்க்கு யாதொன்றையும் அறிய வொண்ணாதபடி மிக்க மயக்கத்தைச் செய்யுமென்பதும், தம்பதிகளின் இயல்பும், இல்வாழ்க்கை முறையும், புதல்வர்களின் கடமையும், ஆசிரியர் மாணாக்கர்களின் இலக்கணங் களும், அரசாட்சிமுறையும், குடிகளின்கடமையும், வேட்டமுதலியன அரசர்க்குப் பெருந்துயர் விளைவிக்குமென்பதும், மந்திரிகளின் இயல் பும், நட்பின் பெருமையும், தரம் அறிந்து ஒழுகவேண்டுமென்பதும், துறந்தோர் பெருமையும், பிறவும் இந்நூலால் நன்கு அறியலாகும்;

பின்னும், பண்டைக்காலத்துள்ள அம்பலங்கள், அமளிகள், அரண்மனையினமைப்பு, அரண்கள், ஆடல்கள், ஆபரணங்கள், ஆயுதங்கள், இசைகள், உடைகள், உணவுகள், உலகங்கள், ஊசல்கள், ஊர்திகள், எந்திரக்கிணறு, * எந்திரப்பொறிகள், ஐந்திணை வளங்கள், ஒற்றின்வகை, கட்டில்கள், கடைகள், கணிகையரியல்பு, கணிதப் பயிற்சி, கத்தரிக்கோலின் இலக்கணம், கல்விவகை, கற்பிக்குமுறை, கைத்தொழில்கள், கொடிகள், கோயில்கள், சாதிகள் அவற்றிற்குரிய இயல்பு, சிற்பங்கள், சேனைகள், தருமங்கள், தானங்கள், தானியங்கள், திரைகள், துவசங்கள், தெப்பங்கள், தெய்வங்கள், தேயங்களினியற்கை, நகர்கள், நகர்காணணி, நகர அமைப்பு, நாடுகள், நாணயங்கள், நீர்நிலைகள், நீர்ப்பூக்கள், நீர்விளையாட்டு, நீர்வீசுகருவிகள், நுகர்பொருள்கள், நூல்கள், பகைவரை வெல்லுதற்கேற்ற உபாயங்கள், பந்தர்கள், பந்துவிளையாட்டு, பரிசங்கள், பருத்திநூல்கள், பலவகை வழக்கங்கள், பறவைகள், பாத்திரங்கள், பானங்கள், பூமாலைகள், பொறியொற்றிய திருமுகங்கள், போர்செய்யுமுறை, மகளிர்க்குரிய கலைகள், அவருக்குரிய விளையாட்டுப் பொருள்கள், அவர்களின் பருவத்திற்கேற்ற வருணனை, மண்ணாற் புணர்க்கும் எந்திரம், மணத்தின்முறை, மதங்கள் (சமயங்கள்), மரங்கள் செடிகள் கொடிகள் முதலியன, மரத்தாற் புணர்க்கும் எந்திரம், மரியாதை, மலைகள், முகவாசங்கள், முற்றங்கள், யவனமுதலிய வேறு தேயத்தோர் இந்நாட்டில்வந்து தொழில்செய்துவந்தமை, யாழ்வகை, யானைக்குரிய அணிகள், வாச்சியபேதங்கள், விசிறிகள், விலங்குகள், விழாக்கள், விளையாட்டுக்கள், வீடுகளினமைப்பு, வேலை பார்ப்போர்வகை, வேறு புலகதைகள், வையமீர்க்கும் பாண்டிற்குரிய அணிகள் ஆகிய இவற்றை

---

* அவையாவன:—காளைகளின்றி விரைந்துசெல்லும் எந்திரவண்டியும், பலவீரர்களை ஆயுதங்களுடன் தன்னுள் அடக்கிக்கொண்டு உயிருள்ளதுபோல் நடந்துசென்று மயக்கும் யானைப்பொறியும், ஏற விரும்பியவர்களைத் தன்னுள் ஏற்றிக்கொண்டு பார்க்கவேண்டிய இடங்களை அவர்கள் பார்க்கும்படி ஆகாயவழியே செல்லும் விமானமும், காலத்தைக்காட்டும் எந்திரமும், கடிகையாரமும், நாண்மீன் முதலியவற்றின் தோற்றத்தையும் அத்தமித்தலையும் புலப்படுத்தும் பொறிமண்டலத்தை உள்ளேபெற்று அரசமங்கையர் ஏறுதற்குரித்தாயிருந்த வண்டியும், இன்னும் பலவகையான விசித்திரப்பொருள்களுமாம்.

யும் பிறவற்றையும் அறிந்துகொள்ளுதற்கு இந்நூல் தக்க கருவி யாகும்.

சிவகணத்தைச்சார்ந்த மாலியவானென்பவருடைய அம்சமான **குணாட்டியரால்** பைசாச பாஷையில் இயற்றப்பட்டதும், உதயணனு டைய புதல்வனும் வித்தியாதர அரசனுமாகிய நரவாணதத்தனுடைய சரித்திரமாகவுள்ளதும், வேறுகதைகள் பல இடையிடையே விரவப் பெற்றதுமான * '**பிருகத்கதா**' என்னும் நூலை ஆதாரமாகக்கொண்டு அதிலுள்ள வேறு கதைகளையெல்லாம் நீக்கி நரவாணதத்தனுடைய தந்தையாகிய உதயணனுடைய சரித்திரத்தையே முதன்மையாகக் கொண்டு இயற்றப்பட்டதும், சைனசமயக் கோட்பாட்டை யுடையது மான †ஒரு வடநூலே இதற்கு முதனூலென்று தெரியவருதலின் பெருங்கதையென்பது இந்நூலுக்கு முதனூலால்வந்த பெயராகும்; மாக்கதையென்பதும் அதுவே; இப்பெயர், பெருந்தேவனார் பாரதம் கம்பராமாயணமென்பனபோல ஆக்கியோர் பெயருடன் சார்ந்து **கொங்குவேண்மாக்கதை** எனவும் அடைமொழியின்றிக் கதை யெனவும் கதாநாயகன் பெயருடன் சார்ந்து **உதயணன்கதை**யென வும் பழைய உரைகளில் வழங்கும்.

கொங்குவேளிர் சைனராதலின், இந்நூலின்பாலுள்ள சமயக் கொள்கைகள் சைனமாகவே காணப்படும்.

குணாட்டியர் இயற்றிய பிருகத்கதை நரவாணதத்தனுடைய வர லாற்றினைக்கூறும் நோக்கத்தோடே இயற்றப்பெற்றதென்பதும் இதன் முதனூலும் இதுவும் அவன்தந்தை உதயணனது வரலாற் றைக் கூறும் நோக்கத்தோடே இயற்றப்பட்டனவென்பதும் தெரிய வருகின்றன.

---

* கதைகள் பலவற்றிற்கு இடமாக இருப்பதுபற்றி இஃது இப் பெயர் பெற்றது; "கதையுரைக் கெல்லாங் காரணன்" உ. 11 : 80.

† கி.பி. 5 அல்லது 6-ஆம் நூற்றுண்டிற் கங்கநாட்டின் இராச தானியாகிய தழைக்காட்டிலிருந்து அரசுபுரிந்தவனும் கங்கவம்சத்தின னும் பெருவிறல் வாய்ந்தவனும் சைன மதத்தினனும், சப்தாவதாரமுதலிய வடநூல்களை இயற்றியவனுமான **துர்விநீத**னென்னும் அரசன் குணாட் டியர் செய்த பிருகத்கதையை ஸம்ஸ்கிருதபாஷையிற் செய்தானென்று மைஸூர் ராஜ்யத்து 1916-ஆம் வருடத்துச் சிலாசாஸன அறிக்கையினல் தெரியவருதலின், இந்நூலுக்கு முதல் நூல் அந்நூலாகவே இருக்க வேண்டுமென்று தோற்றுகிறது.

* 'உதிதோதய காவ்யம்' என ஒருவடநூலும், † 'உதயணகுமார காவியம்' என ஒரு தமிழ்நூலும் சைனமதச் சார்பினவாய்ப் பிற்காலத்தே செய்யப்பட்டு இரண்டு சிறு காப்பியங்களாகச் சைனர்களுள் வழங்குகின்றன; அவற்றுள் உதிதோதய காவ்யம் ஆறு பரிச்சேதங்களையும் உதயணகுமார காவியம் உஞ்சைக்காண்டம் முதல் துறவுக் காண்டம் ஈறுகவுள்ள ஆறுகாண்டங்களையும் உடையன; பின்னது திருத்தமான நடையையுடையதன்று. இவ்விரண்டும் சீவகசரித்திரம் போலவே சைனசமயத்தாராற் பாராட்டப்பெற்று வருகின்றன.

உதயணனுக்கு ‡ வத்தன், வத்தவன், வச்சனென்ற பெயர்கள் வழங்குவதுண்டு. வச்சத்தோள்ளாயிர மென்பதொருநூல், தொள்ளாயிரம் வெண்பாக்களையுடையதாய் முன்பிருந்ததாகத் தெரியவருகின்றது; இதனை,

'வேட்டொழிவ தல்லால் வினைஞர் விளைவயலுட்
டோட்ட கடைஞர் சுரிநந்து - மோட்டாமை
வன்புறத்து மீதுடைக்கும் வச்சத் திளங்கோவை
இன்புறுத்த வல்லமோ யாம் :

இதனுட் சிறப்புடையளாகிய தலைமகளையிகழ்ந்து, தலைமகன் சிறப்பில்லாத பரத்தையர்மாட்டு நிகழாநின்றமையை அவன் நாட்டுக்கடைஞருள்ளார் சிறப்பில்லாத நந்தை ஊன் துப்புடைய ஆமையின் புறத்து உடைத்துத் தின்பரென்னுமிதனால் தொகுத்து விளங்கச்சொன்னமையால், தொகைமொழியாயிற்று. வச்சத்தோள்ளாயிரமுழுவதும் தொகைமொழியெனக் கொள்க; தொகைமொழியெனினும் சுருக்கமெனினுமொக்கும். இதனைத் தண்டியார் 'சமாசமென்பர்' (வீர. அலங்கார. 11, உரை) என்பதனால் அறிக.

¶ "வாடை குளிர மருந்தறிவா ரில்லையோ
கூட லினியொருகாற் கூடாதோ - ஓடை
மதவா ரணத்துதயன் வத்தவர்கோ னட்டிற்
கதவான தோதமியேன் கண்" எனவும்,

* இந்நூலைத் தமிழில் மொழிபெயர்த்து எனக்கு உதவியவர் தியாகராஜபுரம் ஸ்ரீ நரஸிம்ஹாசாரியர்.

† இந்நூல் கலைமகள் வெளியீடாக என்னால் அச்சிடப்பெற்றுள்ளது.

‡ கொங்குமண்டலத்தின் பலபாகங்களில் வத்தவன், வத்தராயன், வச்சராயன் முதலியபெயர்கள் இக்காலத்தும் வழங்கப்படுகின்றன.

¶ இச்செய்யுளை உதவியவர், ஸ்ரீஸேது ஸம்ஸ்தான மகாவித்துவானும் அண்ணாமலைப் பல்கலைக் கழக ஆசிரியருமாகிய பாஷாகவிசேகர ஸ்ரீமத் ரா. ராகவையங்காரவர்கள்.

"உன்னுயிரு மென்னுயிரு மொன்றென்ப தின்றறிந்தேன்
மன்னுபுகழ் வச்சத்தார் மன்னவா - உன்னுடைய
பொன்னாகத் தெங்கையர்தம் பொற்கைநகச் சின்னங்கண்
டென்னாகத் தேயெரிகை யால்"

எனவும் வழங்கும் வெண்பாக்களும் அந்நூலைச் சார்ந்தவையென்று தெரியவருகின்றன. அந்நூல் இந்த உதயணன் திறத்ததோ வேறோ தெரியவில்லை.

பேராசிரியர், நச்சினார்க்கினியர், அடியார்க்குநல்லார், மயிலைநாதர், நேமிநாதவுரையாசிரியர், யாப்பருங்கலவிருத்தி யுரையாசிரியர், வீரசோழிய வுரையாசிரியர், தக்கயாகப்பரணி யுரையாசிரியர், இலக்கணவிளக்க வுரையாசிரியர் முதலியோர்களுடைய உரைகளில் இந்நூல் எடுத்தாளப்பட்டுள்ளது.

இதன்பாலுள்ள பாக்கள்யாவும் நிலைமண்டில ஆசிரியப்பாவே. வீர. யாப்பு. 9, உரையைப்பார்க்க. இதில் எங்கும் அமைந்துள்ளவை தன்மை நவிற்சி, உவமை, உருவகமென்பனவும் இவைபோன்றனவுமாகிய பொருளணிகளே.

னகரவொற்றை இறுதியாகப்பெற்ற ஆசிரியப்பாக்கள் சொற்றொடராகவும் பொருட்டொடராகவும் அமைந்திருத்தலின், இந்நூல் தொடர்நிலைச்செய்யுளின் இலக்கணமாகிய அம்மைமுதலிய வெட்டுவனப்பினுள் இயைபு என்பதன்பாற்படும். சொற்றொடர் - அந்தாதித் தொடை; பொருட்டொடர் - கதையின் தொடர்ச்சி. இறுதியை னகரவொற்றென்னாமல் 'என்' என்னும் அசைநிலையாகக் கூறுவாருமுளர். இந்நூலில் ஒரு சிற்றுறுப்பின் இறுதி அடுத்த சிற்றுறுப்பின் முதலாக வருவதல்லாமல், ஒருகாண்டத்தின் இறுதி அடுத்த காண்டத்தின் முதலாக வருதலும் ஈண்டு அறிதற்பாலது. "ஞகாரை முதலா னகாரை யீற்றுப், புள்ளி யிறுதி யியைபெனப் படுமே" (தொல். செய். சூ. 240) என்பதும், 'ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள வென்னும் பதினொருபுள்ளியுள் ஒன்றனை ஈறாக அமைத்துச் செய்யுளைப் பொருட்டொடராகவுஞ் சொற்றொடராகவுஞ் செய்வது இயைபெனப்படும்; னகரவீற்றானிற்றுப் பொருளுமியைந்து சொல்லுமியைந்து வந்தன........கோங்குவேளிராற் செய்யப்பட்ட உதயணன் கதையும் போல்வன' (டெி.டெி.டெி.பேர்.) என்னும் அதனுரையும், "அகவ லிசையன வகவன் மற்றவை, ஏ ஓ ஈ ஆ யென்னை யென் றிறுமே" (யா. வி. சூ. 69) என்பதும், 'அகவலோசையைத் தமக்கு ஓசையாகவுடைய நான்கு ஆசிரியப்பாவும் ஏ யென்றும், ஓ

வென்றும், ஈயென்றும், ஆயென்றும், என்னென்றும், ஐயென்றும் இறும்; *அலந்த மஞ்ஞை யாமங் கூவப், புலர்ந்தது மாதோ புர வலற் கிரவென் :........ என் என்றிற்ற ஆசிரியமெனக் கொள்க' என்னும் அதன் உரைமுதலியனவும், "தொடைபல தொடுப்பினுந் தளைபல விரவினும், முதல்வந் ததனுன் மொழிந்திசிற் பெயரே" (யா. வி. சூ. 53) என்பதும், 'இறுதியெழுத்தும் சொல்லும் இடை யிட்டுத் தொடுத்த செய்யுளந்தாதிவிகற்பம் உதயணன்கதையும் கலியாணன்கதையும் பன்மணிமாலையும் மும்மணிக்கோவையு மென் னும் அவற்றுட் கண்டு கொள்க' என்னும் அதன் விசேடவுரையும் இங்கே அறியற்பாலன.

இதன்பாலுள்ள சிற்றுறுப்புக்கள் †காதை யென்று வழங்கப் பட்டனவென்று தெரிகிறது; இது, 'முகவெழுத்துக் காதை' 'மணம்படுகாதை' என் இந்நூலிலுள்ள இரண்டு சிற்றுறுப்புகளின் பெயரினுலும், இலாவாண காண்டம் முதலியவற்றின் இறுதியில் ஆகக்காண்டம் இத்தனைக்குக் கூடிய காதை இத்தனையெனக் காணப் படுவதனுலும் துணியப்படும். சிலப்பதிகாரம் மணிமேகலை யென்ப வற்றிலுள்ள சிற்றுறுப்புக்களின் பெயர்களைக் காதையென்று வழங்கு தலும் இங்கே கருதத்தக்கது.

தமிழில் முதனூலாக இது கருதப்படினும் வடநூன்மொழி பெயர்ப்பாகத் தெரியவருதலின் வழிநூலின் பாற்பட்டு, சங்ககாலத்து வழங்கிய இராமாயணம் பாரதமென்பனபோல வழிநூல் வகை நான்கனுள் மொழிபெயர்ப்பாகவும் முதனூலில் மிகவிரிந்த பகுதி களைத் தொகுத்தும் அங்கே சுருக்கமாக உள்ளவற்றிற் பண்டைத் தமிழ்நூல்களிலும் வடநூல்களிலும் காணப்படும் சொன்னயம் பொருணயங்களைக் கூட்டிவிரித்தும் இயற்றப் பெற்றிருத்தலின், தொகைவிரியாகவும் கருதப்படுகின்றது; "தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்த், ததர்ப்பட யாத்தலோ டனைமர பினவே" (தொல். மரபு. சூ. 97) என்பதனுல் உணர்க.

பெருங்காப்பியங்களுக்குரிய கடவுள்வாழ்த்து, பதிகமுதலியன மற்றை நூல்களிற்போலவே இந்நூலில் முன்பு இருந்திருக்கக்கூடு

---

* பெருங். க. 54 : 144-5. இதேபகுதி இந்த இலக்கணத்திற்கே இலக்கண விளக்கம், 732-ஆம் சூத்திரவுரையில் மேற்கோளாகக் காட் டப்பட்டுள்ளது.

† காதையென்பதன் பொருள் விளக்கத்தை மணிமேகலை முக வுரையால் அறியலாம்.

மாயினும் கிடைத்த கையெழுத்துப் பிரதியில் முதலிறுதிகள் காணப் படாமையால் அவற்றைப்பற்றித் தெரிந்துகொள்ளவும் எழுதவும் முடியவில்லை. இதன்பாலுள்ள ஒவ்வொரு சிற்றுறுப்பும் ஒவ்வோர் அகவற்பாவாலும் பேருறுப்பாகிய காண்டங்கள் பல சிற்றுறுப்புக் களாலும் அமைக்கப்பெற்றுள்ளன. இப்போதுள்ளனவாகத் தெரிய வரும் காண்டங்கள் ஐந்தே. அவற்றுள் முதலாவது உஞ்சைக் காண்டம் ருஅ-காதையினையும், இரண்டாவது இலாவாணகாண்டம் உ0-காதையினையும், மூன்றாவது மகதகாண்டம் உஎ-காதையினையும், நான்காவது வத்தவகாண்டம் கஎ-காதையினையும், ஐந்தாவது நரவாண காண்டம் கூ-காதையினையும் உடையன; உஞ்சைக்காண்டத்தின் முத லில் ருக-காதைகளும் ருஉ-ஆவதன் முதற்பகுதியும், மகதகாண்டத் தில் கக-ஆவது காதையும், கஉ, கஎ-இவற்றின் முற்பகுதிகளும், க0, கரு-இவற்றின் பிற்பகுதிகளும், நரவாணகாண்டத்தில் கூ-ஆவது காதையின் பிற்பகுதி முதலியனவும் காணப்படவில்லை. அதனால், உத யணன் நளகிரியை அடக்கியபின் பிரச்சோதனனுக்குமுன் நின்றதற்கு முந்திய வரலாறுகளும், மானசவேகன் மதனமஞ்சிகையைக்கொண்டு சென்றபின் நிகழ்ந்த வரலாறுகளும் இந்த நூலால் அறியக்கூடவில்லை.

இப்போது இப்புத்தகத்திலுள்ள காதைகளின் மொத்தத்தொகை கூகூ. கிடைத்த காதைகளிலும் இடையிடையே ஒருமொழிகளும் தொடர்மொழிகளும் குறைந்த பகுதிகள் பல; உள்ள அகவல்கள் 35-அடிச் சிற்றெல்லையையும், 390 - அடிப் பேரெல்லையையும் உடையன.

மேலே கூறப்பட்ட உதிதோதய காவ்யத்தின் பகுப்பையும் உத யணகுமார காவியத்தின் பகுப்பையும் நோக்குங்கால், நரவாணகாண் டத்தின் பின்பு ஆறாவதாகத் துறவுக்காண்டமென்று ஒருகாண்டம் இந்நூலில் இருந்திருக்கவேண்டுமென்று தோற்றுகிறது.

பழைய உரைகளில் எடுத்தாளப்பட்ட மேற்கோள்களுள் இந் நூலைச் சார்ந்தனவாகத் தெரியவந்தும் இப்போது இதன்கண் அகப் படாத வாக்கியங்களும் உள்ளன; அவை வருமாறு:—

க. "உயிர்புரை யூகியோ டெண்ணி" (நன். சூ. 366, மயிலை. மேற்)

உ. 'மரகத மணிக்கயத் தங்க ணுறிய, வழனிறப் பொன்னித ழாயிரம் விரித்தெனக் கதையினுங் கூறினாராகலின்' (சிலப். ௬-72-6, அடியார்க்கு.)

௩. 'பொதியிலு மிமயமும் புணர்முலையாக வென்றார் கதையிலும்' (தொ. சூ: 1-6, தொ.)

ச. 'சேனையுள் படுநரை யானையி னேவி யென்றார் கதையிலும்' (ஷை. அ: 8-13, ஷை.)

ரு. 'நீர்வார் நிகர்மலர் கடுப்ப வென்றார் கதையிலும்' (ஷை. கூ:1-4, ஷை.)

சு. 'சீப்புப் படியுறி னென்றார் கதையிலும்' (ஷை. கரு : 215, ஷை.)

எ. 'கொங்கை யிணையெழில் கோங்கரும் பாக
அங்கை யணியிதட் டாமரை யாக
மணிநிறக் கண்ணிணை குவளை யாக
எண்ணிய நுண்ணிடை வல்லி யாக
நண்ணிய முறுவன் முல்லை யாக
வீறுமச் செவ்வாய் கொவ்வை யாகச்
சீறடி தளிர்க ளாகச் சிறியேம்
ஆகங் கரந்தவிம் மங்கை தன்னைக்
கரத்து மென்றெனக் கிரக்க மின்றி
ஓடரிக் கண்ணியை யொளித்தீ ராயினும்
காட்டுமி னென்று கைதொழு திறைஞ்சினன்
வாட்டிறற் றடக்கை வத்தவர் கோவென் : இஃது எல்லா அடியும் நாற்சீரடியான் வந்தமையான் நிலைமண்டில ஆசிரியப்பாவாம். அன்றியும் உதயணன் கதை முதலாயினவெல்லாம் நிலைமண்டில ஆசிரியப்பாவெனக் கொள்க' (வீர. யாப்பு. 9, உரை.)

அ. '..............இவ்வயிற் கெட்டதோர்
பசுங்கதிர்த் திங்க ளுடைய செல்வன்
என்றி யென்குறை யின்றி யிரங்கென
மருளுந் தெருளும் வரம்பில பயிற்றி : என இதனுள் வத்தவனைக் காணலுற்றார் அவன் மதிக்குலத்தவனாதலிற் சந்திரனைத் தேடிப் போகின்றேமென்று வேறொரு பரியாயத்தாற் சொன்னமையாற் பரியாய மொழியாயிற்று" (வீர. அலங்கார. 12, உரை.)

கூ. 'கிழவோன், சென்னி மிதித்த பஞ்சி மெல்லடிப், பொன்செய் கிண்கிணி யின்னரி யொடுக்கிப், புலவி பெயர்த்த : இஃது உதயணன் கதை' (தக்க. தாழிசை. 33, உரை.)

க0. 'பள்ளி - கோயில்; பள்ளி மாட்டும் பற்பல பிறண்டுமென்பது உதயணன் கதை' (ஷை. 54, 371, உரை.)

கக. 'கழுது - பேய்; கழுதுகள் காணக் கருமைத் தாகி : இஃது உதயணன் கதை. உடு - நட்சத்திரம். ஊர்கோண் மதியை யுடுச்சூழ்ந் தாங்கு : இதுவும் உதயணன் கதை.' (ஷை. 55, உரை.)

கஉ. 'கோயிற்குக் கிடங்குண்மை உதயணன் கதையிற் கண்டு கொள்க' (ஷை. 137, உரை.)

கரு. 'ஏகம் - ஒன்று; ஏகச் செல்வத் தின்ப மெய்தியது : என்பது **உதயணன் கதை**' (ஷை. 167, உரை.)

கச. 'பெருநம்பிப் பட்டம்பெறுதல் **சீந்தாமணியிலும், உதயணன் கதையிலுமுள்ளது**' (ஷை. 179, உரை.)

கரு. 'தேவலோகம் பலவென்க; இப்பொருளை வேதத்திலும் **உதயணன் கதையிலும்** கண்டுகொள்க' (ஷை. 258, உரை.)

கசு. 'ஏவ லிளிவெனக் கண்ணிப் பாகன், மனக்க ணியக்கம் பூண்டமா னத்து : இஃது **உதயணன் கதை**' (ஷை. 263, உரை.)

கஎ. 'மட்கலத் துண்ணு மக்கட் பாக்கியம் : இஃது **உதயணன் கதை**' (ஷை. 395, உரை.)

கஅ. 'மானம் - கெறுவம்; அளவுமாம்; தத்த மானந் தரத் துறை போகிய, விச்சைக் கொற்ற வினைய ராகி : இஃது **உதயணன் கதை**' (ஷை. 537, உரை.)

ககூ. 'பாழி - பெருமையும் வட்டமும் யுத்தமும்; பாழியற்றுச் சாரியை யோட்டி யெனவும், பரந்த பாழி மற்றவன் காட்ட வெனவும் வருவன **உதயணன்கதை**' (ஷை. 688, உரை.)

இவை, கிடைத்த பகுதிக்கு முன்னுள்ளனவோ பின்னுள்ளனவோ இடையே உள்ளனவோ தெரியவில்லை. இவற்றால், மயிலைநாதர் முதலியோர்களுடைய காலங்களிற் சிதைவில்லாமல் இந்நூல் முழுவதும் இருந்து வந்ததென்றே தெரிய வருகின்றது. இப்படியே இதன் வேறு பகுதிகளும் பழையவுரைகளில் வந்திருத்தல் கூடும்; அவற்றைக் காணும்பொழுது இந்நூலும், இதைப்படிக்கும்பொழுது அவைகளும் சில சமயங்களில் ஞாபகத்திற்கு வருவதில்லை.

விளங்காத சொற்களும் பொருள்களும் இந்நூலில் ஆங்காங்குக் காணப்படுகின்றன; "ஆக்குதல் கேட்டவர்க்கு" (அலங்கார. 4) என்பதனுரையில், 'குண்டலகேசியும் உதயணன் கதையு முதலாகவுடைய வற்றில் தெரியாத சொல்லும் பொருளும் வந்தனவெனின், அகலக்கவி செய்வானுக்கு அப்படியல்லது ஆகாதென்பது; அன்றியும் அவை செய்த காலத்து அச்சொற்களும் பொருள்களும் விளங்கியிருக்குமென்றாலும் அமையுமெனக் கொள்க' என்னும் வீரசோழிய உரையாசிரியருடைய கூற்றாலும் இஃது உணரலாகும்.

வடமொழியில் ஸ்ரீ காளிதாஸ மகாகவியாலும், தென்மொழியில் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனாராலும், திருமங்கை யாழ்வாராலும் இந்நூற்கதை எடுத்தாளப்பட்டுள்ளது. அவை முறையே வருமாறு:-

"மேகமே! உதயணனது சரிதையைக் கூறுவதில் ஆற்றல் வாய்ந்த முதியோர்களையுடையதான அவந்திதேயத்தை அடைவாய்" (மேகசந்தேசம், சுலோ. 30.)

"கொடிக் கோசம்பிக் கோமக னாகிய, வடித்தேர்த் தானை வத்தவன் றன்னை, வஞ்சஞ் செய்துழி வான்றளை விடீஇய, உஞ்சையிற் றோன்றிய யூகி யந்தணன், உருவுக் கொவ்வா வுறுநோய் கண்டு, பரிவுறு மாக்களின்" (மணி. கரு: 61-6.)

"வாரார் வனமுலை வாசவ தத்தையென், றாரானுஞ் சொல்லப் படுவா ளவளுந்தன், பேராய மெல்லா மொழியப் பெருந்தெருவே, தாரார் தடந்தோட் டளைக்காலன் பின்போனாள், ஊரா ரிகழ்ந்திடப் பட்டாளே" (இயற்பா, சிறிய திருமடல், கண்ணி, 66 - 8.)

இன்னும் வடநூல்களிலும் தமிழ்நூல்களிலும் இக்கதையை எடுத்தாண்டோர் மிகப்பலர்.

இற்றைக்கு நாற்பத்தெட்டு வருடங்களுக்குமுன் பத்துப்பாட்டுச் சுவடிகளை யான் தேடிக்கொண்டு சஞ்சரித்தபொழுது, திருவாவடுதுறை யாதீனத்து அடியவர்களுள் முதல்வர்களும் ஸ்ரீ அம்பலவாண கவிராயரவர்களுடைய வழித்தோன்றல்களுமாகிய திருநெல்வேலி, ஸ்ரீ கவிராஜ நெல்லையப்ப பிள்ளையவர்கள், ஸ்ரீ கவிராஜ ஈசுவரமூர்த்திப்பிள்ளையவர்கள் ஆகிய இந்த உபகாரிகளுடைய வீட்டிலிருந்த ஏட்டுப் பிரதிகளை முறையே பார்த்துக்கொண்டுவந்தகாலத்திற் பத்துப்பாட்டுட் சில பாட்டின் உரைகள் மட்டுங் கிடைத்தன; மற்றைப் பகுதிகளையும் அங்கே பெறலாமென்றெண்ணிப் பின்பு தேடிய பொழுது கொங்குவேண்மாக்கதை யென்று வரைந்திருந்த ஒரு சீட்டை மேலே பெற்றுள்ள பழஞ்சுவடி யொன்று கிடைத்தது; அதைக்கண்டதும் இலக்கணக்கோத்துப் பாயிரம் எ-ஆம் சூத்திரத்தில், "தொல்காப் பியந்திரு வள்ளுவர் கோவையார், மூன்றினு முழங்கும்" என்பதன் உரையில், 'திருவைக் கோவைக்குங் கூட்டுக; மாணிக்கவாசகர் அறிவாற் சிவனே யென்பது திண்ணம். அன்றியும், அழகிய திருச்சிற்றம்பலமுடையார் அவர் வாக்கிற்கு அலந்து இரந்து அருமைத் திருக்கையால் எழுதினர். அப்பெருமையை நோக்காது சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, சங்கப்பாட்டு, கொங்குவேண்மாக்கதை முதலியவற்றோடு சேர்ந்து அச்செய்யுட்களோடு ஒன்றாக்குவர்;........பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு, இராமன்கதை, நளன்கதை, அரிச்சந்திரன் கதை முதலிய இலக்கியங்களையும் ஒருபொருளாக எண்ணி வாளா

வினாள் கழிப்பர்' என்று ஸ்ரீ சாமிநாததேசிகர் எழுதியுள்ள பகுதியிற் காணப்படும் 'கோங்குவேண்மாக்கதை' என்பது ஞாபகத்திற்கு வந்தது. உடனே இராமாயண கதை முதலியவற்றைப் போலவே இது கொங்குவேளென்னுமொருவனுடைய கதையாக இருத்தல் வேண்டுமென்று எண்ணி மேற்கூறிய உபகாரிகளைக் கேட்டு அப்புத்தகத்தை வாங்கி வைத்துக்கொண்டேன்.

ஸ்ரீசாமிநாத தேசிகர் வெறுத்துக்கூறிய வாக்கியப்பகுதி அப்பொழுது ஞாபகத்திற்கு வரவில்லையேல் இந்நூலை வாங்கிவைத்துக் கொள்ளுதற்கு இடமில்லை. அவர் வைதது இந்நூலுக்கு வாழ்த்தாக முடிந்தது. பெரியோர்களாற் செய்யப்படும் அவமதிப்பும் கௌரவமுடையதாகுமென்பது திண்ணம்.

பின்பு ஓய்வுள்ள ஒரு சமயத்தில் அதனைப் பிரித்துப்பார்த்த பொழுது முதலில் ௮௦-ஏடுகள் காணப்படவில்லை; இறுதியிலும் ௩௩௬-ஆம் ஏட்டிற்கு மேலேயுள்ள ஏடுகளில்லை. இறுதியேட்டில் முன்புறம் எழுதப்பட்டும் பின்புறம் எழுதப்படாமலும் இருந்தன; மேலே எத்தனையேடுகளிருந்தனவோ தெரியவில்லை. கிடைத்த பகுதியுள்ளும் இடையிடையேயுள்ள நிலைகுலைவிற்கும் எழுத்துக்களை விழுங்கிய இராமபாணத் துளைகளுக்கும் பின்னுமுள்ள புரட்சிக்கும் அளவில்லை; அப்பால் ஒரு சமயம் படித்தபொழுது இந்நூல் அகவற்பாவாலாகியதென்றும் இனிமையான நடையை உடையதென்றும் அறிந்து சிறந்ததொரு நூலாக இருத்தல் வேண்டுமென மதித்துச் சாக்கிரதையாக வைத்துவிட்டு அப்போது செய்துவந்த வேறு நூல்களின் ஆராய்ச்சியிற் பொழுதுபோக்கிக் கொண்டே வந்தேன்.

சிலவருடங்களுக்குப்பின், சிலப்பதிகாரத்தைப் பதிப்பித்தற்கு ஆராய்ச்சிசெய்கையில், அதன் உரைகளிலுள்ள மேற்கோள்களுக்குரிய இடங்களைத் தேடிவந்தபொழுது அடியார்க்குநல்லாரெழுதிய அதன் உரைப்பாயிரத்தில், "முந்து நூல்களிற் காப்பிய மென்னும் வடமொழிப் பெயரின்றேனும்........* 'கூத்திய ரிருக்கையுஞ் சுற்றிய தாகக், காப்பிய வாசனை கலந்தவை சொல்லி' என இரண்டாம் ஊழியதாகிய கபாடபுரத்தின் இடைச்சங்கத்துத் தொல்காப்பியம் புலப்படுத்திய மாகீர்த்தியாகிய நிலந்தரு திருவிற் பாண்டியனவைக்களத்து அகத்தியனாரும், தொல்காப்பியனாரும், இருந்தையூர்க் கருங்கோழி மோசியாரும், வெள்ளூர்க் காப்பியனாரும், சிறுபாண்டரங்கனாரும்,

* பெருங். ௧. 3 : 41-2.

மதுரையாசிரியன் மாறனாரும், துவரைக் கோமகனும், கீரந்தையாரு மென்று இத்தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மருள்ளிட்ட மூவாயிரத்து எழுநூற்றுவர் தம்மாற் பாடப்பட்ட கலியும் குருகும் வெண்டாளியுமுதலிய செய்யுளிலக்கியம் ஆராய்ந்துசெய்த உதயணன் கதையுள்ளும், 'கருதுவ தங்கோன் றுண்டோ காப்பியக் கவிகள் காம, வெரியெழ விகற்பித் திட்டார்' எனச் சிந்தாமணியுள்ளும், 'நாடகக் காப்பிய நன்னூ னுனிப்போர்' என மணிமேகலையுள்ளும் பிறவற்றுள்ளுங் கூறினமையானும், சொற்றொடர்நிலை, பொருட்டொடர்நிலையென்னுந் தொடர்நிலைச் செய்யுட்கும் காப்பியமென்று பெயர்கூறுதலும் ஆசிரியர் கருத்தெனவுணர்க" என்ற பகுதியிலுள்ள 'கூத்தியர் ..........சொல்லி' என்னும் மேற்கோள் அப்புத்தகத்திலிருக்கக் கண்டு அஃது உதயணன் கதையென்று தெரியவந்ததில் மிக்க ஆனந்த முண்டாயிற்று; பின்பு அவ்வுரையிற் காட்டப்பட்டிருந்த மேற்கோள்களுட் பெருங்கதையென்றும் கதையென்றும் வந்தவற்றிற்பல அப்புத்தகத்தின்பாலிருக்கக் கண்டு அந்நூலுக்கு அப்பெயர்களெல்லாம் உரியனவென்று அறிந்துகொண்டதன்றி ஓய்ந்த நேரங்களிற் படித்தும் வந்தேன். தாம் எடுத்துக்காட்டும் மேற்கோள்களை நூற்பெயரோடாவது ஆசிரியர் பெயரோடாவது சார்த்தியெழுதும் அடியார்க்குநல்லார் முதலியோருடைய பேருதவி இங்கே மிகப் பாராட்டற்பாலது.

அப்பால் திருநெல்வேலியைச் சார்ந்த வண்ணார் பேட்டையிலுள்ள ஸ்ரீ திருப்பாற்கடனாதகவிராயரவர்களுடைய வீட்டிற் பத்துப் பாட்டுப் பிரதிகளைத் தேடிப்பார்த்தபொழுது பெருங்கதைப் பிரதியொன்று அவருடைய பேரராகிய ஸ்ரீ திருப்பாற்கடனாதகவிராயரென்பவராற் கிடைத்தது. அதனைப் பார்த்தபொழுது எல்லா வகையிலும் முன்னதைப்போலவே அது காணப்பட்டது. ஊன்றிப் பார்த்தகாலத்தில் முதற்பிரதியில் இராமபாணம் விழுந்த இடங்களுக்குச் சரியான இடங்களிற் சிலவிடத்து இடம்விட்டும் ஒடிந்தவிடங்களுக்குச் சரியான இடங்களுட் சிலவற்றில் இடம் விட்டும் எழுதப்பட்டிருந்தமையின், அது முதற்பிரதியைப் பார்த்தே எழுதப்பட்டதாகத் தெரியவந்தது. முதற் பிரதியிற் சிதைந்த பாகங்களிற் சில பகுதி அதில் எழுதப்பட்டிருந்தமையின், முதற்பிரதி அதிகமாகப் பழுதுபடுவதற்கு முன்பே பார்த்து அது பிரதிசெய்யப்பட்டதென்றும் தெரியவந்தது; அதனால், சில பாடல்களின் உண்மை வடிவமும், சில அடிகளும் கிடைத்தன. முதற்பிரதியிற்போலவே

கொங்குவேண்மாக்கதை யென்றெழுதிய சீட்டொன்று அதன் முதலிலும் கோக்கப்பட்டிருந்தது.

முதற்காண்டத்தின் இறுதியில், 'இந்தக்காவ்ய மெழுதினது அன்பூர்நயினுன் அமுதகவியெழுத்து ; நெல்வேலி நாதர், வடிவம்மை, அழகிய மன்னுர் முன்னிற்க' என்பவை ஒரு பிரதியிலும், 'நெல்லைக் காந்திமதியம்மன் துணை' என்பது மற்ருெருபிரதியிலும், மூன்ருங் காண்டத்தினிறுதியில், 'இந்தக்காவியம் நயினுன் அமுதகவி எழுத்து' என்பதும்,

"முன்னுளின் *மூவ ருரைகண்ட சோழன் முறைமையைப்போல்
இந்நாளி லேகொங்க வேண்மாக் கதைகண் டெழுதுவித்தான்
பன்னுளுங் கீர்த்திப் பழைசை யடைஞ்சான்மெய்ப் பாலனியல்
நன்ளு வலர்புகழ் சின்னடைஞ் சான்ருெண்டை நாட்டவனே"

என்னும் கட்டளைக்கலித்துறையும், நான்காவது காண்டத்தின் இறுதியில், 'நெல்வேலி நாதஸ்வாமி முன்னிற்க; வடிவம்மை முன்னிற்க; அழகியமன்னுர் முன்னிற்க' என்பவையும் எழுதப்பெற்றிருந்தன; இப்புத்தகத்தின் ௩௩௬, ௭௩அ, அ௬அ-ஆம்பக்கங்களின் அடிக்குறிப்புக்களைப் பார்க்க. இவற்ருல் மூவராருளிச்செய்த திருமுறைகளைப் போலவே இந்நூல் பண்டைக்காலத்திலேயே படிப்பாரும் ஆதரிப்பாரும் இன்றி அருகிவழங்குவதாய் முன்பின்கெட்டு இடையிடையே சிதைந்து போயிற்றென்பதும் அத்திருமுறைகளின் அருமையை அறிந்து முயன்றுபெற்றுக் கிடைத்தஅளவில் எழுதுவித்த திருமுறை கண்ட ராஜராஜ அபயகுலசேகர சோழமகாராஜாவைப்போலவே இதன் அருமையையறிந்து முயன்று பெற்றுக் கிடைத்த அளவில் எழுதுவித்த உபகாரி பழைசையென்னுமூரிலுள்ள †'அடைஞ்சான்' என்பவருடைய புதல்வராகிய 'சின்னடைஞ்சான்' என்னும் பெயரினரென்பதும், அவர் தொண்டை நாட்டினர், மெய்ம்மையையுடையவர், நாவலர்புகழும் பெருமைவாய்ந்தவரென்பதும் அவர் விருப்பத்தின்படி பிரதிசெய்தவர் 'நயினுன் அமுதகவி' என்னும் பெயரினரென்பதும், அவரது ஊர் அன்பூரென்பதும் வெளியாகின்றன. அமுதகவியாக இருந்தமையாலேதான் அமுதம்போன்ற கவிகளையுடைய இந்நூல் அறிந்து அவரால் வரையப்பெற்றது போலும்.

---

* மூவர் - திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுர் முதலியோர்.

† தொண்டைநாட்டிலுள்ள ஆரணிமாகாணத்தில் வடுகச்சாத்தென்னு மூரில் 'அடைஞ்சான்' என்ற தலைப்பெயருள்ள பழைய குடும்பமொன்றும், மயிலாப்பூரில் அடைஞ்சான்முதலித் தெருவென்ற ஒருதெருவும் இருக்கின்றன.

அப்பால் இரண்டு ஏட்டுப்பிரதிகளையும் வைத்துக்கொண்டு சில முறை படித்துவந்தபோது சிலப்பதிகாரப்பதிப்பிற்கும் மணிமேகலைக் கெழுதிய அரும்பதவுரைக்கும் பிற நூலாராய்ச்சிக்கும் இந்நூல் பெரிய உதவியாக இருந்தது. இதனை முதலில் அன்புடன் கடிதத்தில் எழுதி உபகரித்தவர் தஞ்சாவூரைச்சார்ந்த அவளிவணல்லூர்க் கர்ணம் பிரஹ்மஸ்ரீ ஏ. ஐயாசாமிஐயரென்பவர். அப்போது இந்தப் பிரதிகளை ஒப்புநோக்குதற்கு உதவிசெய்தவர்கள், சிந்தாமணியின் முதற்பதிப்புக் காலந்தொடங்கி இன்றுகாறும் ஓய்வுள்ள நேரத்தில் வந்து உதவிபுரிந்து வருபவராகிய என்னுடைய தம்பி சிரஞ்சீவி வே. சுந்தரேசையரும், திருப்பெருந்துறையைச்சார்ந்த ஏம்பலில் இருந்த அன்பர் ஸ்ரீ பொன்னுசாமிப் பிள்ளையும்.

பத்துப்பாட்டுச்சுவடி தேடப்போனபொழுது அதிற் சிலபகுதிகளும் எதிர்பாராத இந்நூலுங் கிடைத்ததை நினைக்கையில்,

"ஒன்றை நினைக்கி னதுவொழிந் திட்டொன் றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும் - ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினு நிற்கும்
எனையாளு மீசன் செயல்"

என்னும் அருமைத் திருவாக்கு ஞாபகத்திற்கு வந்து இன்பமளிக்கின்றது.

பின்பு இதன் சொல்லினிமை பொருளினிமைகளை உணர்ந்து இதிலுள்ள பிழைகளைக் களைந்துகொள்ளுதற்கும், குறைவான பாகங்களை நிறைவுறுத்திக் கொள்ளுதற்குமெண்ணி அநேக இடங்களுக்குச்சென்றுசென்று தேடியும் பல அன்பர்களுக்கு எழுதியெழுதித் தேடச்செய்தும் பார்த்ததில் எங்கும் பிரதி கிடைக்கவில்லை. அடிக்கடி படித்து அடையாளங்கள் செய்து வந்தமையால், மேற்கூறிய கடிதப் பிரதி பலவகையிலும் மிக மெலிவடைந்துபோயிற்று. அதுபற்றி வேறுபிரதி எழுதுவிக்க எண்ணியபோது, கும்பகோணத்திற்குவந்து உடனிருந்து நூலாராய்ச்சி முதலியவற்றில் எனக்கு உதவிபுரிந்து வந்த பின்னத்தூர் ஸ்ரீ. அ. நாராயணசாமி ஐயர் வற்புறுத்தித் தாமே வலிந்துபெற்று இதற்கு வேறு பிரதியை எழுதித்தந்தார்.

சிலப்பதிகாரம், மணிமேகலைப் பதிப்புக்களில் இந்நூற்பெயரைப் பார்த்தவர்களிற் சிலர், பெருங்கதையென்ற பெயரைக்கொண்டே நூற்றுக்கணக்கான கதைகள் வசனநடையாக இதில் அமைந்திருக்கலாமென்று தாமே நிச்சயித்துக்கொண்டும், கலாசாலைகளிற் பாடமாக வைப்பதற்குச் சிலகதைகளைப் பதிப்பிக்கலாமென்று எண்ணி

யும், பெருங்கதையிலிருந்து நாற்பதுகதைகளை எழுதியனுப்பவேண்டு மென்றும் ஐம்பதுகதைகளை எழுதியனுப்பவேண்டுமென்றும் நேரிற் சொன்னதன்றிக் கடிதமுகமாகவும் எனக்குத் தெரிவித்தார்கள்; சிலர் பெரிய அதிகாரிகளைக் கொண்டும் எழுதுவித்தார்கள். அவர்களுக்கு விடையெழுதுவதிலும் சந்தித்தபோதெல்லாம் சமாதானங்கூறுவதி லும் எனக்குண்டான துன்பமும் காலப்போக்கும் இதில் எழுதி யடங்குவனவல்ல. இதில் ஒரே கதையுள்ளதென்றும், இது வசன மன்று அகவற்பாவேயென்றும் பலமுறை எழுதியும் சொல்லியும் அவர்கள் நம்பவில்லை.

மதுரைத் தமிழ்ச்சங்கத்து நான்காம்வருட பூர்த்திவிழாக் காலத் தில் அவைத்தலைமை வகித்த நண்பர் ஸ்ரீ ராவ்பகதூர். ம. வி. கனக சபைப்பிள்ளையவர்கள் பி.ஏ., பி.எல்., தாம் அவ்வருஷம் அங்கே ஏதே னும் நூதனமான விஷயமொன்றைப் பேச எண்ணியிருப்பதாகவும், பெருங்கதைப்பிரதியைக் கொடுத்தாற் பார்த்து வேண்டியவற்றைக் குறித்துக்கொண்டு கொடுப்பதாகவும் சொல்லிக்கேட்டார்கள். மறுக்க முடியாமையாற் கடிதப்பிரதிகளுள் முதற்பிரதியைக்கொடுத்தேன். அங்ஙனமே அவர்கள்* உபயோகித்துக் கொண்டார்கள். மதுரையி லிருந்துஅவர்கள் திரும்பிவந்தபின் பிரதியைக்கேட்டபோது, அவர் கள் தாம் வேறொரு பிரதிசெய்துகொண்டு விரைவிற் கொடுத்துவிடுவ தாகச்சொன்னார்கள். அவ்வாறே அவர்கள் பிரதி செய்தும் வந்தார்கள். இடையிடையே சென்றுசென்று கேட்டபோது எழுதி முடியவில்லை யென்றும் முடிந்தவுடன் தந்துவிடுவதாகவும் விடைபகர்ந்துகொண்டே வந்தார்கள். பின்பு அவர்கள் திடீரென்று காலஞ்சென்றுவிட்டமையால் சில தினங்கள் பொறுத்து அவர்கள் வீட்டிற்குச்சென்று முயன்று பார்த்ததில் அவர்களுடைய புத்தகங்களுள் நான் கொடுத்த பிரதியும் அவர்கள் எழுதிய பிரதியும் காணப்படவில்லை. எந்தவகையாலும் அதனைப்பெறுவதற்கு என்னால் முடியவில்லை. நான் அதிற் செய்து வைத்திருந்த குறிப்புகள் எனக்குச் சிறிதும் பின்பு பயன்படா வாயின. அது முதல் நான் சோதித்துவைத்த கையெழுத்துப் பிரதிகளைப் பிறருக்குக் கொடுப்பதில் எனக்கு அச்சமுண்டாயிற்று.

அப்பால் எனக்குப் பழக்கமான ஒருவர் ஒருதினம் காலைநேரத் தில் என்னிடம்வந்து நெடுநேரம் பேசிக்கொண்டேயிருந்து, தமக்குச் சிலகாலமாகத் தமிழ்ப்பாஷையில் விசேஷ ருசி ஏற்பட்டிருப்பதாக வும், தம்முடைய தேக அஸௌக்கியத்தைப் போக்குவதற்குத் தமிழ்

* அவர்கள் இதன் சம்பந்தமாகப்பேசிய விஷயத்தைச் செந்தமிழ் ௩-ஆம் தொகுதி, 249 - ஆம் பக்கம் முதலியவற்றிற் காணலாகும்.

நூல்களைப் படித்தலே சிறந்த ஔஷதமாகவுள்ளதென்றும், தாம் பல அரிய தமிழ்நூல்களைச் சேகரித்து வைத்திருப்பதாகவும், என்னிடமுள்ள அகநானூற்றுப் பிரதியையும் பெருங்கதைப் பிரதியையும் கொடுத்தால் தம்மிடமுள்ள பிரதிகளோடு ஒப்பிட்டுப்பார்த்துப் படித்துவிட்டுச் சிலதினங்களில் திரும்பக்கொடுத்து விடுவதாகவும் மிகவும் நயமாகக் கூறினர். இப்புத்தகங்களைப் படித்தற்குரிய ஆற்றல் அவருக்கு இல்லையென்பதை யறிந்த யான், "இவற்றைப் படிப்பதென்றால், தமிழில் நல்ல பயிற்சியிருக்கவேண்டுமே; சாதாரணமான பழக்கங்கூட உங்களுக்கிருப்பதாக நான் இதுவரையில் தெரிந்துகொள்ளவில்லையே. ஏதேனும் உங்களுக்குத்தெரிந்த ஒரு செய்யுளைச் சொல்லுங்கள்" என்று கேட்டேன். அதற்கு அவர் விடை பகராமல் உடனே எழுந்து கடிகாரத்தைப்பார்த்துவிட்டு மறுநாட் காலை வருவதாக விடைபெற்றுச்சென்றனர்; அப்பால் வரவேயில்லை. அவர் வேறொருவரால் தூண்டப்பட்டு வந்தவரென்று பின்பு தெரிய வந்தது. அவ்விருவரும் இப்பொழுது காலஞ்சென்றுவிட்டனர்.

'பெருங்கதைப் பிரதிகள் பல அங்குள்ளன; இங்குள்ளன. பெருங்கதை முழுதுமுள்ள பிரதி இங்குள்ளது; மூலமும் உரையும் உள்ள பிரதி இங்கிருக்கிறது' என்று சிலர் எழுப்பிவிட்ட செய்திகளைக்கேட்டு அலைந்து முயன்று பார்த்ததுமுண்டு; பயன்படவில்லை. இப்படியே இன்னும் இந்நூலின் சம்பந்தமாக நிகழ்ந்த செய்திகளை எடுத்து எழுதுவதென்றால் அதுவே ஒரு பெருங்கதையாகும்.

பிறகு பிரதிகள் எங்கும் அகப்படாதென்று நிச்சயித்துக் கொண்டு, "தொழுதே னும்மை யெனத்துறந்து" (சீவக. 351) என்றபடி அவற்றைத் தேடும்முயற்சியை நிறுத்திவிட்டு இந்நூற் பதிப்பு வேலையைக் கவனித்து வந்தும்,

'பெருங்கதையெங் கேயுன்றன் பேதையறி வெங்கே
ஒருங்கதை யாராய்ந் துதவ - அருங்கல்வி
வல்லையோ வென்றுன் மறுமொழிகூ றற்கொன்றும்
இல்லையே யென்செய்கேன் யான்'

என்றெண்ணிக் கவலைக்கடலில் அழுந்தி அலமந்தபொழுது,

"மூவுலகு மீரடியா லொருங்களந்த நாரணனு முன்னிக் காணாத்
தேவனெனத் திருவானைக் காவானை யிறைஞ்சாமற் றீர்த லாமோ
ஓவின்மறை தமக்குமரி தேனுமவன் பெரும்புகழை யுரைத்தி டாமை
மேவுவது முளதாமோ திறனிலரா யினும்பயனை விரும்பி னோர்க்கே"

(திருவானைக்காப்புராணம், அவையடக்கம்)

என்னும் அருமைத்திருவாக்கு ஞாபகத்திற்கு வந்தமையின், ஊக்க முடையேனாகி இயன்றவரையில் முயன்று ஆராய்ந்து ஒருவாறு பதிப்பிக்கலானேன்.

தொல்காப்பிய முதலிய இலக்கண நூல்கள், அவற்றின் உரைகள், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு, ஐம்பெருங்காப்பியங்களுள் முதல்மூன்று, பின்னிரண்டன் செய்யுட்கள், சூளாமணி, நீலகேசி, மேருமந்தரபுராணம், சீவசம்போதனை முதலிய சைனநூல்கள், முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் முதலியனவும் பிற தமிழ்நூல்களும் இந்நூற்பரிசோதனைக்குத் துணையாக இருந்தன.

பழையநூல்கள் பழையவடிவத்தினின்றும் வேறுபடாமலிருக்க வேண்டுமென்பதே எனது முழுநோக்கமாதலால் உழைக்க வேண்டும் அளவு உழைத்து இப்பதிப்பு நிறைவேற்றப்பெற்றது; என்னையறியாமற் பிழைகள் நேர்ந்திருக்கலாம். இவை நாளடைவில் திருத்தமடைதல் கூடும். இதன் முதற்பதிப்பு 1924-ஆம் வருஷத்தில் வெளிவந்தது.

முதற்பதிப்பில் மூலத்துக்குப் பின் தனியே பதிப்பிக்கப்பட்டிருந்த குறிப்புரை இப்பதிப்பில் அவ்வப்பக்கத்தின் அடிக்குறிப்பாகச் சேர்க்கப்பட்டுள்ளது. அதில், தெரிந்தவற்றுள் இன்றியமையாத இடங்களிற் சொற்களுக்குப் பொருளும் வாக்கியங்களுக்கும் கருத்துக்களுக்கும் இந்தநூலிலிருந்தும் பழைய நூல்களிலிருந்தும் பிற்காலத்து நூல்களிலிருந்தும் ஒத்த பகுதிகளும் பிரயோகங்களும் எழுதப்பட்டுள்ளன. இந்நூலிலிருந்து பழைய உரைகளில் மேற்கோளாக எடுத்துக்காட்டப்பட்டுள்ள பகுதிகளும் இடங்களும் அவ்வப்பக்கத்தில் அடிக்குறிப்பாக அமைக்கப்பெற்றுள்ளன.

கையெழுத்துப்பிரதியிற் சில இடத்தில், 'க, ச, த' - 'ப, ம, ய, ழ' - 'வ, ல' - 'ள, ன' என்பவை தம்முள் வேற்றுமைதோன்றாதபடி இருந்தன; சொற்றொடர்ச்சியையும் பொருட்டொடர்ச்சியையும் கொண்டு இவற்றின் உண்மைவடிவம் ஒருவாறு ஊகித்தறியப்பட்டது. எதுகைகளாலும் மோனைகளாலும் பிறநூல்களிற் காணப்படும் ஒப்புமைப்பகுதிகளாலும் இதன்பாலுள்ள அடிகள் வரையறை செய்யப்பட்டன.

பொருள் வரையறைசெய்து பார்க்கும்போது, பிரதியில் தொடர்ந்து எழுதப்பட்டிருந்த இடங்களிலேகூடச் சில அடிகளும் சில தொடர்மொழிகளும் சிலசொற்களும் விட்டுப்போயிருக்க வேண்டுமென்று தோற்றியது; சிலவிடத்துப் பொருத்தமேயில்லாத அடிகள்

காணப்பட்டன. இப்போது கவனிக்கையில் இந்நூலின் இறுதியிலுள்ள அகவல்களும் அடிகளும் முன்பின்னாக மாறியிருக்கலாமோவென்றும் நினைக்க இடமுண்டாகிறது. மூலப்பிரதியின் இறுதியேடுகள் சிலவற்றிற்குப் பக்கவெண்ணுள்ள இடம் ஒடிந்தும் மழுங்கியும் போனமையே இதற்கு ஒரு காரணமாகும்.

அடியாவது சீராவது மூலத்தில் விட்டுப் போயிருப்பதாகத் தெரிந்தால் அவ்விடத்தில் (.........) இவ்வொற்றைப் புள்ளி நிரைகளும், பல அடிகளாவது ஒரு பகுதியாவது விட்டுப் போயிருந்தால் அவ்விடங்களில் (* * *) இவ்வுடுக்குறி நிரைகளும் அமைக்கப்பெற்றுள்ளன; மொழிகளேயின்றி ஒற்றைப்புள்ளி நிரையாவது உடுக்குறி நிரையாவதுள்ள அடிகள் அடியெண்களிற் சேர்க்கப்படுவனவல்ல.

தன்மையொருமை வினைமுற்றுக்கள் 'அன்' ஈறாகவே பிரதியிற் பெரும்பாலும் காணப்பட்டமையின், அவை அந்த உருவமாகவும், முதற்பதிப்பின் மூலத்தில், 'உதயனன்' என்றிருந்தது இப்போது 'உதயணன்' என்றும் அமைக்கப்பட்டன.

இதிலுள்ள வாக்கியங்கள் சில பழைய நூல்களில் தோன்றிய ஐயங்களைப் போக்கின. இதன்கண் எடுத்தாளப்பட்டுள்ள பழையநூற் கருத்துக்களுள் சிலவற்றிற்குஇடமும் குறிப்பிட்டகதைகளும் விளங்கவில்லை; அவை வருமாறு:— க. 34: 88-91, 35: 12-3, 156-8; உ. 1: 24-6, 58-66, 8: 137-40, 9: 193-5, 219-25, 10: 100-103, 162-5, 19: 10-14, 20: 6-18; ங. 1: 51-60, 2: 7-12, 14: 31-2, 141-3, 252-4; ரு. 1: 220-23.

ஆய்தவெழுத்தை யகரமெய் எதுகையில் ஒத்துவருதலுண்டென்பது, "எஃகொழி களிற்றின் வெய்துயிர்த் துயங்கி" (க. 33: 109) என்பதனால்தெரியவந்தது. செய்தெனெச்சம் செயவெனெச்சப் பொருளிற் பெரும்பாலும் இதன்கண் வருகின்றது. 'வயின்' என்பது மிகுதியாகப் பெயர் வினைகளுடனும் 'முதல்' என்பது பெயர்களுடனும் சார்ந்து வருதலையும் செல்லென்னும் துணைவினையையும் இதன்பாற் பரக்கக் காணலாகும்.

கதைப்போக்கை நன்கு தெரிந்து கொள்வதற்குக் கருவியாகவிருக்குமென்று எண்ணி உதயணனுடைய சரித்திரச் சுருக்கம் வசனநடையில் எழுதப்பெற்று இந்நூலுக்கு அங்கமாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது; சிதைந்துபோன இந்நூற் பகுதிகளில் இருந்தற்குரிய வரலாறுகளை ஒருவாறு ஒத்த வேறு நூல்களிலிருந்து அறிந்து எடுத்தெழுதி இதன்பாலுள்ள சரித்திரத்தைப் பூர்த்திசெய்து இடை

யிடையே செய்யுட்பகுதிகளையமைத்து விரிவாகப் பதிப்பிக்க லாயிற்று.

இந்நூலின்கணுள்ள அரும்பதம், பொருள்வகை, தொகைப் பெயர், உவமை, இனிய வாக்கிய முதலியவை அரும்பத முதலியவற் றின் அகராதி யென்னும் பகுதியில் அடங்கியிருக்கின்றன; உயிர் முதலோ மெய்ம்முதலோவென்று துணியக்கூடாதபடி இருந்தசொற் களின் இரண்டுருவமும், ஊகித்தறிந்த பாடபேதங்களும், எச்சவகை, முற்றுவகை, வினையாலணையும் பெயர் முதலியனவும் சில பயன்கருதி இதன்கண் சேர்க்கப்பட்டுள்ளன. இவ்வகராதி இந்நூலிலுள்ள அரிய விஷயங்களை எளிதில் தெரிந்துகொள்ளுதற்கு ஏற்ற கருவியாகும். குறிப்புரையில் சொற்களும் தொடர்களும் விளக்கப்பட்டிருத்தலின் இவ்வகராதியிற் பெரும்பாலனவற்றிற்குப் பொருளெழுதவில்லை. முதற்பதிப்பில் தனியேயிருந்த அபிதான விளக்கமென்னும் பகுதியி லுள்ள செய்திகள் இப்பதிப்பில் அரும்பத முதலியவற்றின் அக ராதியிற் சேர்க்கப்பட்டுள்ளன.

ஆரியச்சிதைவும் பைசாசமுதலியனவும் அவற்றின் சிதைவு மாகிய மொழிகள் பல இந்நூலில் வந்துள்ளனவென்று தெரிய வந்தும் நேரக்குறைவால் நன்கு விசாரித்துத் தெரிந்து அவற்றை விளக்கமுடியவில்லை.

ஒரு பழையநூலைப் பதிப்பிக்குங் காலத்துள்ள உடற்றுன்பம், மனக்கவலை, பொருட்செலவு, காலப்போக்கு முதலியவற்றைக் காட் டிலும் அதனை முதலில் ஆராய்ச்சிசெய்யுங்காலத்தில் உண்டாவன மிக அதிகமென்று முன்பு அறிந்ததைவிட இந்நூற்பதிப்பால் மிகத் தெரிந்துகொள்ளலானேன்.

வேண்டிய காலங்களில் இதிலுள்ள வடநூற்கருத்துக்களைத் தெரிவித்தும் வேறுள்ள வடமொழி நூல்களைப் படித்துப் பொருள் கூறியும் உபகரித்த ஸ்ரீநிவாஸநல்லூர் - பிரஹ்மஸ்ரீ. எஸ். ராமச் சந்திர சாஸ்திரிகள் முதலியோருக்கும், பலவிடத்துஞ்சென்று முயன்று உதிதோதய காவ்யத்தைப்பெற்று உதவிய செஞ்சியைச் சார்ந்த விளாத்தியென்னுங் கிராமத்திலுள்ள கணிதம் ஸ்ரீ. சின்னத் தம்பி சாஸ்திரியாருக்கும் நன்றி செலுத்துகிறேன். இன்னும், இந்நூல் சம்பந்தமான சில சரித்திர புஸ்தகங்களை எனக்குக் கொடுத்தும், கேட்ட விஷயங்களை அவ்வப்போது சொல்லியும் உதவிய அன்பர்களை யெல்லாம் நான் எக்காலத்தும் மறவேன்.

இந்நூலின் சம்பந்தமான வேறு சில செய்திகளை முதற்பதிப்பின் முகவுரையாலறியலாகும்.

முதற்பதிப்பின் பின்பு செய்துவந்த ஆராய்ச்சியினால் இந்நூல் மூலமும் குறிப்புரையும் அடைந்த திருத்தங்கள் சில. குறிப்புரையில் முன்பு விளக்கப்படாமலிருந்த பல பகுதிகள் இதில் விளக்கப்பட்டிருக்கின்றன. மூலத்தைப் படிக்கும்போது படிப்பவர்களுக்குப் பயன்படும் வண்ணம் தலைப்புக்கள் அமைக்கப்பட்டுள்ளன. அரும்பத அகராதி இப்பதிப்பில் முன்னையினும் விரிவடைந்துள்ளது.

பலவகையிலாராய்ந்து கண்ட மூலபாடத்தை அமைத்த இடங்களில் பிரதியிற் கண்ட பாடங்களும், வேறு வகையாக ஊகித்தறிந்த சில பாடங்களும் பாட பேதங்களாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

பெருங்கதை மூலத்தை மட்டும் படிக்க விரும்புவோர்களுக்குப் பயன்படும் வண்ணம் சில அன்பர்கள் விரும்பியபடி இதன் மூல மட்டும் அதற்குரிய அங்கங்களுடன் தனியே பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

இதனைப் பதிப்பிக்கும் காலத்து உடனிருந்து ஒப்புநோக்குதல் முதலிய உதவிகள் புரிந்துவந்த சென்னை, கிறிஸ்டியன் காலேஜ் தமிழ்ப்பண்டிதர் வித்வான் சிரஞ்சீவி, வி. மு. சுப்பிரமணிய ஐயர், வித்வான் கி. வா. ஜகந்நாதையர் முதலியவர்களுக்கெல்லாம் எல்லா நன்மைகளும் உண்டாகும்படி செய்வித்தருளும்வண்ணம் ஸர்வேசுவரனைப் பிரார்த்திக்கின்றேன்.

தியாகராஜ விலாஸம்,
திருவேட்டீசுவரன்பேட்டை,
24—12—1935.

இங்ஙனம்,
**வே. சாமிநாதையர்.**



# நூலாசிரியர் வரலாறு.



இந்நூலாசிரியராகிய கொங்குவேளிரென்பார், கொங்குநாட்டு வேளாள வகுப்பினரைச்சார்ந்த சிற்றரசர்களுள் ஒருவர். இவருக்குரிய வேளிரென்னும் பட்டப்பெயரும் இக்கருத்தை வலியுறுத்தும். அழுந்தூர்வேள், இருங்கோவேள், நாங்கூர்வேளென்பாரைப்போல முடிமன்னர்பால் மகட்கொடை நேர்தற்குரிய பெருமை வாய்ந்தவரென்று இவர் கருதப்படுகிறார். இவரிருந்த ஊர், கொங்குநாட்டிலுள்ள ஸ்ரீ சந்திரப்பிரப தீர்த்தங்கரருடைய ஆலயத்தையுடையதும் தமிழ்ப் புலவர்கள் சிலர் வாழ்ந்துவந்ததுமான விசயமங்கலமென்று தெரிகின்றது.

இவர் பலதமிழ்ப்புலவர்களை ஒருங்குசேர்த்துக் கவலையின்றியிருக்கும்படி அவர்களுக்கு வேண்டியவற்றைக் குறிப்பறிந்தளித்துப் பரிபாலித்து அவர்களோடு தாம் இடைவிடாமற் பழைய நூல்களை ஆராய்ச்சிசெய்து வந்தவர். பின்னும் அவர்கள் கூறுவனவற்றைத் தாம்கேட்டு இன்புற்றும் தாம் இனியவற்றைக் கூறி அவர்களை மகிழ்வித்தும் காலங்கழித்துவந்த அருங்கலை விநோதர். இங்ஙனமிருப்பதே தம்கடமையென்று பண்டைக்காலத்துச் செல்வர்கள் எண்ணி நடந்துவந்தமை முன்னம் தமிழ்நாட்டிலிருந்த முடிமன்னர்கள், பல சிற்றரசர்கள், வேறுள்ள பல உபகாரிகளுடைய சரித்திரங்களால் நன்கு தெரிகின்றது; *'இரண்டாம் ஊழியதாகிய கபாடபுரத்தின்.... உதயணன் கதை' என்று அடியார்க்குநல்லார் இந்நூலைப் பாராட்டியெழுதியிருப்பதை உற்றுநோக்குகையில், இவர்காலத்தில் இடைச்சங்கநூல்கள் இருந்தனவென்பதும் அவற்றிலுங்கூட இவரும் இவர் காலத்தவர்களும் பயிற்சிபெற்றிருந்தார்களென்பதும் தெரிகின்றன.

அடியார்க்கு நல்லார்க்கு நிரம்பையர்காவலரென்னும் பெயர் ஊரால்வந்ததென்றும், † நிரம்பையென்னுமூர் விசயமங்கலத்தின்

---

* இதன் முழுப்பாகத்தை முகவுரையின் XXXV-ஆம் பக்கத்திற் காண்க.

† "குருவை யுணர்ந்த விளங்கோ வடிகளுட் கொண்டுசொன்ன
தருவை நிகருஞ் சிலப்பதி காரத் தனித்தமிழுக்
கருமை யுரைசெ யடியார்க்கு நல்லா ரவதரித்து
வருமைப் பொழினிரம் பைப்பதி யுங்கொங்கு மண்டலமே"
(கொங்குமண்டல. 95)

பக்கத்திலுள்ளதென்றும் இவ்விரண்டூர்களும் * குறும்பு நாட்டைச் சார்ந்தவையென்றும் கோங்குமண்டல சதகம் விளக்குகின்றது; அணித்தான இடத்தில் இருந்தமையாலேதான் அடியார்க்குநல்லார் கொங்குவேளிருடைய ஆற்றலையும் இந்நூலையும் பரம்பரைக்கேள்வியால் நன்கறிந்தவராயினர்போலும்.

> " நீதப் புகழுத யேந்திரன் காதை நிகழ்த்துதற்குக்
> கோதற்ற மங்கையின் மூன்று பிறப்புற்ற கொள்கையன்றி
> மேதக்க சொற்சங்கத் தார்வெள்க வேகொங்கு வேளடிமை
> மாதைக்கொ டுத்தரஞ் சொன்னது வுங்கொங்கு மண்டலமே "
>
> (கோங்குமண்டல. 99)

என்பதனால், கோங்குவேளிர் பிறந்த ஊர் மங்கையென்பதும் இவர் இந்நூலை இயற்றுதற்கு மூன்றுசனன மெடுத்தாரென்பதும் சங்கத்தார் கேட்டகேள்விகளுக்குத் தம்முடைய வேலைக்காரி ஒருத்தியைக் கொண்டு விடைபகருவித்தாரென்பதும் வெளியாகின்றன; இச்செய்யுளில் உதயேந்திரன்காதையென்றது உதயணன் கதையை; மங்கையென்றது விசயமங்கலமென்னும் ஊரை; கொங்குமண்டலத்தில் மங்கலம் அல்லது மங்கையென்ற ஊர்கள் பல காணப்படினும் இங்கே குறித்த மங்கை யென்னுமூர் அதுதானென்று தக்க ஆதாரங்களால் தெரியவருகின்றது.

'மூன்று பிறப்புற்ற கொள்கை' என்பதைக் குறித்து நன்கு அறிந்து எழுதமுடியவில்லை; ஆனாலும் ஆச்சிரம வேறுபாடும் பிறப்புவேறுபாடாகக் கருதப்படுமென்றும் அதனால் நீட்டித்த ஆயுளைப்பெறலாமென்றும் ஸ்ரீ ஆதிசங்கராசாரியருடைய சரித்திர முதலியவற்றால் இவ்வழக்கம் விளங்குகின்றதென்றும் பண்டிதர்கள் சொல்லுகிறார்கள்.

ஒருபிறப்பில் தொடங்கிய பிராரத்தவினை மூன்றுபிறப்புவரையில் தொடருமென்பதும் வாமதேவர் சடபரதரென்பவர்களுடைய சரித்திரங்கள் இதற்கு இலக்கியமாகுமென்பதும் ஒருசாரார் கொள்கை.

கொங்குவேளிர் இந்நூல் செய்துவருகையில் தம் அகாலமரணத்தைச்சோதிடரால் அறிந்து எப்படியேனும் அதனை மாற்றிக்கொண்டு இந்நூலைப் பூர்த்திசெய்யவேண்டுமென்று கவலையுற்று இல்லறத்தினின்றும்நீங்கி வானப்பிரத்தமும் பின் அதனினின்றும் நீங்கித் துறவறமும்பூண்டு இந்நூலைப்பூர்த்திசெய்திருக்கலாமென்றும் தெரிய

* கோங்குமண்டல. ஊர்த்தொகை, 36-ம் செய்யுளைப்பார்க்க.

வருகின்றது ; 'மூன்றுபிறப்புற்ற' என்பதன் பின்னுள்ள 'கொள்கை' என்பது இக்கருத்தை வலியுறுத்தும். தம்முடைய செயல்களெல்லாம் ஒடுங்கி மிகமெலிந்து தமக்கு மரணகாலம் வந்துவிட்டதென் பதை அனுபவத்தால் நன்கு அறிந்த ஒருவர் நற்கதியடைய வெண் ணிப் பின் துறவுபூண்டு பிழைத்து அப்பால் பல ஆண்டுகளிருந்து விளங்குவதை இக்காலத்திலும் பல இடங்களிற் கண்கூடாக அறிய லாகும். சந்நியாசம் அளித்த பெரியோரை ஞானபிதாவென்றும் அதுபெற்றவரை ஞானபுத்திரரென்றுங் கூறுதல் மரபு.

இந்த நூலை முதலிற் பைசாச பாஷையில் இயற்றிய குணாட்டிய ரும், வடமொழியில் இயற்றிய துர்விநீதனென்னும் அரசனும், தமி ழில் இயற்றிய கொங்குவேளிரும் ஒருவரே யென்னும் உபசார வழக் குப்பற்றி இங்ஙனம் கூறப்பட்டதென்பாரும் உளர்.

மேற்காட்டிய கொங்குமண்டல சதகச்செய்யுளில், 'சங்கம்' என்று கூறியது மதுரையிலிருந்த கடைச்சங்கத்தையன்று; அதன் பிற்காலத்திருந்த உபகாரிகளால் தத்தம்காலங்களில் அங்கங்கே அமைக்கப்பட்டிருந்த சங்கங்களுள் ஒன்றாக இருத்தல்வேண்டும் என்று தெரிகிறது. சைனர்களிலும் மற்றைச் சமயத்தோர்களிலும் சிறந்துவிளங்கிய இருவகைச்செல்வர்கள் பண்டைக்காலத்தில் அங் கங்கே பாஷையின் வளர்ச்சியையும் மதத்தின் பெருக்கத்தை யும் கருதிச் சங்கங்களை நிறுவி ஆதரித்து வந்தார்களென்பது மைசூர் ஸம்ஸ்தான முதலிய இடங்களிற்கிடைக்கும் சாசனங் களாலும், 'இந்நூல் கேட்பித்தது யாரவைக்களத்தெனின், கடவுள் முதலிய நற்சங்கத்தா ரவைக்களத்தென்றுணர்க' என் னும் வச்சணந்திமாலையின் பாயிரவுரையாலும், "எங்குமிவ னிசை பரப்பி வருநாளில் யாமுரைத்த விந்த நாட்டிற், கொங்கர்குல வரபதியாட் கொண்டானென் றொருவண்மைக் குரிசி றோன்றி, வெங்கலியின் மூழ்காமற் கருநடப்பேர் வெள்ளத்து விழாம னன்காம், சங்கமென முச்சங்கத் தண்டமிழ்நூல் கலங்காமற் றலைகண் டானே" (வி. பா. பாயிரம், 19) என்னும் செய்யுளாலும், கொங்குமண்டல சதகத்தாலும் வெளியாகின்றன.

மேற்கூறிய சங்கத்தார் கேட்ட வினா இன்னதென்பதும் அதற் குத் தம்முடைய வேலைக்காரியைக்கொண்டு இவர் சொல்லுவித்த விடை இன்னதென்பதும் விளங்கவில்லை. சிறந்த கல்விமான்களது வீட்டில் இடைவிடாமற் பயிலும் வேலைக்காரர்களாகிய இருபாலாரும் கல்விப்பயிற்சியில் சிறந்தவர்களாக இருப்பார்களென்பது பண்டைக்

காலத்தில் வடமொழி தென்மொழிகளிற் சிறந்துவிளங்கிய பண்டிதர்கள் சிலருடைய சரித்திரத்தால் விளங்கும். 'கம்பர்வீட்டுக் கட்டுத்தறியுங் கவிசொல்லும்' என்னும் பழமொழியும், ஒருவரெடுத்துக்கொடுத்த கருத்துக்களைக் கம்பர் வீட்டு வெள்ளாட்டி பாடிமுடித்ததாக வழங்கும் 'நெற்பாடி விளைகழனி' என்னுஞ் செய்யுளும் இங்கே யறியற்பாலன. மேலும் என்னுடைய தமிழாசிரியராகிய மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களுடைய தவசிப்பிள்ளைகளிற் சிலருக்குக் கேள்வி மிகுதியாற் சிறந்த தமிழ்ப்பயிற்சி காலக்கிரமத்தில் உண்டானதையும், அரிய விஷயங்களில் ஐயந்தோன்றிய பொழுது மாணாக்கர்களுக்கு அவர்கள் அவற்றைத் தீர்த்ததையும் நான் நேரில் அறிந்திருக்கிறேன்.

அடியார்க்குநல்லார் தாமெழுதிய சிலப்பதிகாரவுரைப்பாயிரத்தில், சிந்தாமணிப்பெயர்க்கு முதலில் இந்நூற்பெயரை வைத்திருத்தலால் திருத்தக்கதேவருக்கும், பேராசிரியர் முதலியோர்களுடைய உரைகளில் இந்நூற் பகுதிகள் எடுத்தாளப்பட்டிருத்தலால் அவர்களுக்கும் இந்நூலாசிரியர் காலத்தால் முற்பட்டவரென்று தெரியவருகின்றது.

இவரது சமயம் சைனமென்பது அச்சமயக் கொள்கைகளையும் அவற்றைப் புலப்படுத்தும் வரலாற்றுமொழிகளையும் இந்நூலுள் அங்கங்கே இவர் அமைத்துக்கொண்டே செல்லுதலால் விளங்கும்; அவற்றுட் சில வருமாறு:—

(க) காதிகர்மம் - ஆன்மாவின் அறிவை மறைக்குந்தீவினை; 'வெந்துய ரருவினை வீட்டிய வண்ணல்' (உ. 1 : 15), 'காதி வெவ்வினை கடையறு காலை' (ந. 27 : 149); (உ) கருமந்தீர்ந்த உயிர் மேலே செல்லல்: 'வினைதீ ருயிரின் மிதந்தது' (க. 40 : 186); (ந) அல்லூண் நீத்தல்: 'அல்லூ ணீத்தலி னஃகிய வுடம்பினன்' (ச. 7 : 159); (ச) பஞ்சமந்திரம்: 'அஞ்சா தைம்பதம் நினைமதி நீ' (ரு. 3 : 134); (ரு) ஓதி-முற்பிறப்பை யறியும் அறிவு: 'ஓதியி னோக்கி' (ரு. 3 : 92); (சு) பிரதிமாயோகம் - பிரதிமைபோல அசைவற்றிருந்து செய்யும் யோகம்: 'படிவக்குழு' (க. 39 : 14), 'ஓங்கிய படிவத் துறம்புரிந்தை' (உ. 11 : 63-4); (எ) ஸித்தர்: 'முகடுய ருலக முன்னிய முனிவர்' (க. 38 : 219), 'திருப்பே ருலகம் பெற்றோன் போல' (ந. 12 : 77), 'பெயர்ச்சியி லுலகம் பெற்றான் போல' (க. 56 : 172); (அ) அருகத்தானம், அராந்தாணம், சேதியம் - சினாலயம்: 'அருந்தவர் பள்ளியு மருகத் தானமும்' (ச. 2 : 12), 'அராஅந் தாணத்

தருச்சனைக் கம்பலும்' (உ. 2 : 138), 'அருமணி சுடரு மராஅந் தாணம்' (உ. 6 : 161), 'காண்டகப் பொலிந்த வராஅந் தாணம்' (ரு. 4 : 150-51), 'துகடீர் பெருமைச் சேதியந் தொழுது' (ரு. 4 : 112); (க) ஆதிவேதம் - வேதங்களுள் மூன்றுவது: 'ஆதி வேதத் தகவயின்' (ந. 1 : 86); (கo) அசோகமரம்: 'அணித்தகு பள்ளி யசோகத் தணிநிழல்' (உ. 13 : 38); (கக) முக்குடை: 'தாம முக்குடை தாமுறை கவிப்ப' (உ. 6 : 154); (கஉ) பவண லோகம் - நாகருலகம்: 'பைந்தலை நாகர் பவணம்' (ந. 3 : 103); (கந) பள்ளி - நீத்தோருறைவிடம்: 'அருந்தவர் பள்ளி' (க. 43 : 175), 'படிவப் பள்ளி' (க. 51 : 64), 'மூதறி முனிவன் பள்ளி' (உ. 13 : 8); (கச) இருவகை இமயம்: 'இருவகை யிமயமும் பெருகு புனல் யாறும்' (ரு. 1 : 180); (கரு) சோதிடர் (சந்திரர் முதலிய ஐவர்) விமானம்: 'மாதிரத் தியங்குஞ் சோதிடர் விமானமும்' (உ. 18 : 50); (கசு) வெள்ளிமலை - வித்தியாதரர்க்குரியதொருமலை: 'விச்சா தரருறை வெள்ளியம் பெருமலை' (ந. 3 : 118-9), 'விளங் கொளி விஞ்சையர் வெள்ளியம் பெருமலை' (ரு. 1 : 115); (கஎ) ஐம்பெருங்குலம் - இக்ஷ்வாகுகுலம் முதலியன: 'அலகை யாகிய வைம்பெருங் குலத்து' (ரு. 3 : 111); (கஅ) இயக்கி-யக்ஷிதேவதை: 'இயக்கி யுண்டு' (ச. 7 : 116), 'இயக்கி யிவளே' (ச. 17 : 54).



# நூலைப்பற்றிய குறிப்புக்கள்.



## குணாட்டியர் பிருகத்கதையை இயற்றிய வரலாறு.

ஸுப்பிரதிஷ்டா நகரத்தில் முன்பு அரசனாக விளங்கிய *சாதவாகன னென்பவன்பால் மந்திரியாக இருந்தவர் குணாட்டிய ரென்னும் மகாபண்டிதர். ஒருகாலத்தில் அவ்வரசனை, "கல்வியறி வில்லாதவனே" என்று அவன் மனைவி அவமதிக்க அவன் மனம்வருந்தி, "நான் பூர்ண பாண்டித்தியமடைதற்கு எவ்வளவுகாலம் பிடிக்கும்?"

* சாதவாகனமெனப் பெயரியதொரு தமிழ்நூல் பண்டைக்காலத் திருந்ததென்றும் அதனைச் செய்வித்தோன் சாதவாகனனென்றும் தெரிகின்றது; அவன் இவனோ வேறு யாரோ தெரியவில்லை; 'செய்வித் தோனாற் பெயர் பெற்றவை சாதவாகனம், இளந்திரைய மென்னுமிவை' இறை. சூ. 1, உரை; நன். சூ. 48, மயிலை.

என்று வினவியபொழுது குணாட்டியர், "வியாகரணஞான முண்டா வதற்குப் பன்னிரண்டு வருடம் பிடிக்குமென்று பெரியோர் கூறுவர்; ஆறுவருடத்தில் அதனை நீர் கற்றுக்கொள்ளும்படி யான் செய்வேன்" என்றனர். அதுகேட்ட மற்றொரு மந்திரியாகிய சர்வவர்மா வென்பவர், "ஆறுமாதத்தில் உம்மை எல்லாக்கலைகளிலும் பூர்ண பண்டிதராக்குவேன்" என்றார்; அவ்வாறு செய்வித்தல் யாராலும் இயலுவதன்றென்றெண்ணிய குணாட்டியர், "நீர் அவ்வாறு செய்யின், ஸம்ஸ்கிருதம், பிராகிருதம், தேசபாஷையென்ற மூன்றையும் அறவே துறப்பேன்" என்று சூளுற்றனர்; "கூறியவண்ணம் யான்செய்யேனேல் உம்முடைய பாதுகைகளைப் பன்னிரண்டு வருடம் தலைமேற் சுமந்து திரிவேன்" என்று சர்வவர்மா மாற்றுச்சூள் பகர்ந்தனர். அப்போது, "இந்தப் போராட்டத்தில் எப்படியும் நாம் நல்ல பாண்டித்தியத்தை யடைந்து விடலாம்" என்று அரசன் தன்னுள் மகிழ்ச்சியுற்றிருந்தனன். பிறகு சர்வவர்மா முருகக்கடவுளை வழிபட்டு அவருடைய திருவருளைப்பெற்று அரசனைப் படிப்பித்துத் தாம் கூறியபடி ஆறுமாதத்துக்குள் அவனை எல்லாக்கலைகளிலும் பூர்ணபாண்டித்தியமுள்ளவனாகச் செய்தனர். மிக்க மகிழ்ச்சியுற்ற அரசன் சர்வவர்மாவிற்குச் சிறந்த உபசாரங்களைச் செய்ததன்றி ஒரு தேசத்திற்கும் அவரை அரசராக்கினன்.

குணாட்டியரோ தம்முடைய சபதத்தின்படியே மும்மொழிகளையும் அறவேதுறந்து அரசனை நீங்கி விந்தமலையையடைந்து அங்கேயுள்ள பிசாசங்கள் தம்முட் பேசிக்கொள்ளும் மொழிகளைக்கேட்டுப் பைசாசபாஷையிற் பயிற்சியடைந்து பிறகு விந்தியவாசினியாகிய துர்க்காதேவியை வழிபட்டு, அங்கே ஒரு சாபத்தால் பிசாசவடிவந்தோடிருந்த காணபூதி யென்பவரை அத்தேவியின் கட்டளைப்படியே கண்டனர்; உடனே குணாட்டியருக்குத் தம் பழம்பிறப்புணர்ச்சி உண்டாயிற்று. பின்பு பைசாச பாஷையால் அவர்கூறிய வித்தியாதரர் *எழுவருடைய சரித்திரங்களை அவரேவலின்படி அதே பாஷையில் ஏழிலக்கக் கிரந்தங்களாக ஏழுவருடங்களிற் குணாட்டியர் இயற்றி முடித்தனர். அந்நூல் 'பிருஹத்கதா' என்னும் பெயரால் வழங்க

* எழுவர் பெயர்களாவன: (க) ரிஷபன், (உ) ஸர்வதமனன், (௩) பர்துஜீவகன், (௪) ஜீமூதவாகனன், (ரு) விசுவாந்தரன், (௬) தாராவலோகன், (எ) நரவாணதத்தன் என்பன; இவை பிருகத்கதாஸரித்ஸாகரம், கசு-ஆவது சுரதமஞ்சரீலம்பகத்தின் இறுதித்தரங்கத்திற் காணப்படுகின்றன.

லாயிற்று. சித்தர், வித்தியாதரர் முதலியோர் வந்துகேட்டு அதன் சொல்லினிமை பொருளினிமை முதலியவற்றை நுகர்ந்து இன்புற்றுச் செல்வாராயினர். பின்பு அந்நூலை உலகத்திற் பரவச்செய்யவேண்டுமென்ற எண்ணம் அவருக்கு உண்டாயிற்று. அதனை அவர் மாணாக்கர்களாகிய குணதேவர், நந்திதேவரென்பவர்கள் அறிந்து, "அதனைப் பெற்று உலகிற் பரவச்செய்வதற்கு உரியவன் சாதவாகனனே" என்று விண்ணப்பஞ்செய்தனர். அவனுக்குக் காட்டும்படி அந்நூலை அவர்கள்வசம் குணாட்டியர் அனுப்ப அரசன் சிறிதும் பாராட்டாமல் வித்தியாகர்வத்தால் அவமதித்தனன். அந்நூலுடன் மீண்ட அம்மாணாக்கர்கள் நிகழ்ந்ததைத் தெரிவிக்க, குணாட்டியர் அம்மலையில் மனிதர் சஞ்சரியாத இடமொன்றில் ஒரு குண்டத்தை உண்டாக்கித் தீயை வளர்த்து அந்நூல் வரையப்பட்டிருந்த ஏடுகளை முறையே உருவியுருவிப் படித்துப்படித்துக் காட்டி, கேட்டுக்கேட்டு மனமுருகிய பிசாசங்களும் விலங்குகளும் பறவைகளும் கண்ணீர்வீழ்க்கும்படி அக்குண்டத்தில் ஓமஞ்செய்தனர்; இப்படி ஆறு வித்தியாதரர்களுடைய சரிதங்கள் சாம்பரானபின் தடுக்கும் வலியின்றிக் கண்ணீர்ப் பெருக்கத்துடன் எதிரே நின்ற அம்மாணாக்கர்கள் இருவருடைய வேண்டுகோளால் ஏழாவதான நரவாணதத்தனுடைய சரித்திரத்தை மட்டும் அவர்களுடைய கையில் அளித்தனர். இச்செய்தியை ஒருவகையாகக் கேள்வியுற்று வியப்படைந்த சாதவாகனன் உடனே சென்று குணாட்டியரைக்கண்டு பணிந்து நிகழ்ந்ததையறிந்து, "அடியேன் அறியாமையாற் செய்த பிழையைப் பொறுத்து இந்நூலை எனக்களித்து இதன் பொருளையும் தெரிவித்தருள்க" என்று வேண்டினன். அவர், "என் மாணாக்கர்கள் இதனை உமக்குத் தெரிவிப்பார்கள்" என்றுசொல்லி அதனை அவனிடம் கொடுத்துவிட்டு யோகமகிமையால் தம்முடைய உடலைத்துறந்து பரலோகத்தை அடைந்தனர். அப்பால், அரசன் அம்மாணாக்கரிருவருடன் தன் இடமடைந்து அவர்களை உபசரித்து அதன் பொருளைக் கேட்டு அவர்களைக்கொண்டே பைசாசபாஷையிற் கதாபீடிகையை அந்நூலுக்கு இயற்றுவித்து உலகிற் பரவச்செய்தனன்; அரசனே கதாபீடிகையை இயற்றினனென்று சொல்லுவதுமுண்டு.

குபேரனது சாபத்தாற் சுப்பிரதீகனென்னும் இயக்கன் காணபூதியாகவும், உமாதேவியின் சாபத்தால் மாலியவானும் புட்பதந்தனும் முறையே குணாட்டியராகவும் வரருசியாகவும் பிறந்தனரென்றும், இவ்விருவரும் சிவகணத்தைச் சார்ந்தவர்களென்றும், இம்மூவருள்

வரருசியென்பவர் இக்கதையைக் காணபூதிக்குச் சொன்னமையாலும் காணபூதி இதனைக் குணாட்டியருக்குச் சொல்லி நூலாகச்செய்வித்து எழுதுவித்தமையாலும் குணாட்டியர் இதனை இயற்றினமையாலும் இம்மூவரும் முறையே தங்கள்சாபம் நீங்கப்பெற்றுப் பழைய பதவியை யடைந்தனரென்றும் தெரிகின்றது. * பிருஹத்கதா ஸரித்ஸாகரத்துள்ள கதாபீடலம்பகத்தில் இவ்வரலாறு விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

ஏழு வித்தியாதரர்களுடைய சரித்திரங்களின் பொதுப்பெயராகிய 'பிருஹத்கதா' என்பது, அவற்றுள் முதலறுவர் சரித்திரங்களும் தீக்கிரையானதுபற்றி ஏழாவதாகிய † நரவாணதத்தனுடைய சரித்திரத்திற்குமட்டும் உரிய பெயராக வழங்குவதாயிற்று; சனற்குமார சங்கிதை முதலிய ஆறு சங்கிதைகளையுடைய நூலின் பெயராகிய காந்தமென்பது, அவ்வாறனுள் ஒன்றாகிய சங்கரசங்கிதைக்கு மட்டும் இக்காலத்தில் வழங்குமாறறிக.

குணாட்டியரது பெருமை.

குவலயானந்தத்திற் பரிகராலங்காரத்திற்கு உதாரணமாக ஸ்ரீமத் அப்பையதீக்ஷிதரவர்கள் எடுத்துக்காட்டிய, "வ்யாஸ,தங்கைகதயாஸ்திதம் ச்ருதிகணம்" எனவரும் சுலோகத்தால் குணாட்டியருடைய பெருமையும் பெருங்கதை மிகவிசித்திரமான பொருள்களையுடையதென்பதும் விளங்கும்.

ஷை சுலோகத்தின் மொழிபெயர்ப்புச்செய்யுள் வருமாறு:—

(கட்டளைக்கலித்துறை)

ஒன்றா மறைக்கணம் பாத்திலன் புற்றி லுதித்திலன்மா
லின்றா தவிழுந்தி வந்திலன் மாபா டியஞ்செய்திலேன்
நன்றார் பொருள்கொள் பெருங்கதை சொற்றில ஞனிந்திரன்
என்றார் குருவலன் றேவாநின் சீர்சொல்வ தெப்படியே.

[பாத்திலன் - பகுத்திலன். மாலின் தாது அவிழ் உந்தி - திருமாலின் உந்தித்தாமரைப்பூ. என்று ஆர் - சூரியனை யொத்த.]

'அடியேன் வியாஸமுனியல்லேன்; வான்மீகியல்லேன்; பிரமனல்லேன்; பதஞ்சலியல்லேன்; குணாட்டியரல்லேன்; தேவகுரு

* இந்நூலிலுள்ள உதயண சரித்திரத்தைத் தமிழில் வசனநடையாக எழுதி எனக்கு உதவியவர் தியாகசமுத்திரம், ஸ்ரீ சக்கரபாணியையரென்பவர்; இவர் திருக்குறள் மூலமுழுவதையும் வடமொழியில் சுலோகரூபமாக இயற்றியிருக்கிறார்.

† நரவாணதத்தன் - உதயணனுடைய புதல்வன்.

அல்லேன்; ஈசா! தேவரீருடைய புகழை எங்ஙனங் கூறுவேன்' என்பது இச்செய்யுளின் பொருள்.

குணாட்டியரியற்றிய பிருகத்கதை இப்போது கிடைக்கவில்லை.

## பெருங்கதையின் சம்பந்தமான வடமொழி நூல்கள்.

இக்கதையின்சம்பந்தமாக வடமொழியிற் பலநூல்கள் உள்ளனவென்று கேள்வியுற்று * (க) பிருகத்கதா சுலோகஸங்கிரகம், (உ) பிருகத்கதா மஞ்சரி, (ங) பிருகத்கதா ஸரித்ஸாகரம், (ச) உதிதோதய காவ்யம், (ரு) ரத்நாவளி, (சு) பிரியதர்சிகா, (எ) சொப்பன வாஸவதத்தம், (அ) பிரதிஞ்ஞா யௌகந்தராயணம், (கூ) வாஸவதத்தா, (க0) மிருச்சகடிகை, (கக) கற்பூரமஞ்சரி, (கஉ) காதம்பரி என்பவற்றுட் சிலவற்றைத் தமிழில் மொழிபெயர்ப்பித்துப் படித்தும் ஏனையவற்றைப் பண்டிதர்கள்முகமாகக் கேட்டும் வந்ததில் இந்நூற் கதைப்போக்கைப் பெரும்பாலும் ஒத்திருந்தது உதிதோதய காவ்யமொன்றே. ஏனையவை ஒருவாறு ஒத்தனவும், சிலபகுதி ஒத்தனவும், சில பகுதியை இதன்சாயையாகப் பெற்றனவும், இதிலுள்ள பெயர்களைமட்டும் எடுத்தாண்டனவுமாகவே தெரியவந்தன. 'ஸஹ்ருதயா' என்னும் வடமொழிப்பத்திரிகையிற் பதிப்பிக்கப் பெற்றுள்ள 'உதயணகதா', 'உதயண சரித்திரம்' என்பவற்றைப் படிப்பித்துக் கேட்டதில் இந்நூலின் கதைப்போக்கிற்கு அவை வேறுபட்டே யிருந்தன. ஆனாலும் இந்நூலின் ஒவ்வொரு பகுதியிலுள்ள ஐயங்களைப் போக்கினமையின் அவைகளெல்லாம் இதன் பரிசோதனைக்கு உதவியாக இருந்தன.

## இதன் முதல்நூல்.

ஆக்கியோன்பெயர் முதலியவற்றைப் புலப்படுத்தும் சிறப்புப்பாயிரமும் பதிகமும் அமைந்திருத்தற்குரிய முதற்பகுதி எனக்குக் கிடைத்த இந்நூற் கையெழுத்துப் பிரதியில் இல்லாமையால் இதன் முதல்நூல் முதலியவற்றைப்பற்றி யாதொன்றையும் துணிந்துஎழுதக் கூடவில்லை. குணாட்டியரியற்றிய நூலையே இதன் முதனூலாகச் சொல்லலாமென்றால் அது தோற்றமுதற் சைவசமயக்கோட்பாடுகளை அங்கங்கே கொண்டிருப்பதாகத் தெரிதலாலும் இது தன்னுள்ளே

* இவற்றின் ஆசிரியர் முறையே (க) புதஸ்வாமி, (உ) க்ஷேமேந்திரர், (ங) ஸோமதேவபட்டர், (ச) சாருகீர்த்திபண்டிதருடையசிஷ்யர் சிகாமணியென்பவர், (ரு,சு) ஸ்ரீஹர்ஷகவி, (எ, அ) பாஸகவி, (கூ) ஸுபந்து, (க0) சூத்திரகர், (கக) பில்ஹணகவி, (கஉ) பட்டபாணர் என்பார். முதலாவது நூல் கி. பி. 1090-ஆம் வருஷத்துக்கு முந்தியதென்பர்.

சைனமதக் கோட்பாட்டையே கொண்டு செல்லுதலாலும் இதற்கு அது முதனூலன்றென்றும் அதன் வழித்தானதும் சைனமதக் கோட்பாடுடையதுமான ஒரு வடநூல் இருத்தல்வேண்டுமென்றுந் தோற்றின. அப்பால் விசாரித்து ஆராய்ந்தபொழுது சில ஆதாரங்களால் குணாட்டியர் இயற்றிய நூலின் வழித்தாக ஒரு வடநூலுண்டென்று தெரியவந்தது.

கி. பி. 5 அல்லது 6 - ஆம் நூற்றாண்டிலிருந்த **துர்விநீத**னென்னும் அரசன் பைசாசபாஷையிற் குணாட்டியர்செய்த பிருகத் **கதை**யை ஸம்ஸ்கிருதபாஷையிற் செய்தானென்று மைஸூர் ஸம்ஸ்தான சிலாசாஸன ஆராய்ச்சிவகைத்தலைவராக இருந்த ஸ்ரீமத் மகாமகோபாத்தியாய ஆர். **நரஸிம்ஹமாசாரியா**ரவர்கள் 1916--ஆம் வருஷத்துச் சிலாசாஸன அறிக்கையில் எழுதியிருக்கிறார்கள். ஷை அறிக்கையின் 45 - ஆம் பக்க முதலியவற்றைப் பார்க்க.

இதன் சம்பந்தமாக அறிந்தவற்றைத் தெரிவிக்க வேண்டுமென்று சில அன்பர்களைக் கேட்டுக்கொண்டபொழுது பிரஹ்மஸ்ரீ எம். **இராமகிருஷ்ணகவி**யவர்கள், எம். ஏ., ஆராய்ந்து எழுதியனுப்பியது வருமாறு :—

"ப்ருஹத்கதை :—முதலில் ஸுபந்து என்னும் கவியால் வாஸவதத்தையென்னும் பெயரால் எழுதப்பட்டதென்று வேறு நூல்களிலுள்ள உதாரணங்களால் தெரியவருகிறது (கி. பி. 300); ஸுபந்து சந்திரகுப்தன்மகனான பிந்துஸாரனுக்கு மந்திரி. இப்பொழுது வழக்கிலுள்ள வாசவதத்தையென்பது அஃதன்று. சூத்திரகன் வீணாவாஸவதத்தமென்று ஒரு நாடகஞ்செய்திருக்கிறான். இதிற் கிடைத்த பாகம் முதல் மூன்றங்கமே. இந்தச் சூத்திரகன் உச்சைனியை ஆண்ட ஓரரசன்; மிருச்சகடிக நாடக நூலாசிரியன்; பத்மப் பிராப்ருதகமும் இவன் செய்த நாடகமே (கி. மு. 56); சாலிவாஹனன் அல்லது சாதவாஹனனுடைய ஸபையிலிருந்த குணாட்டியரென்பவர் பைசாசபாஷையில் 'பிருகத்கதா' என்னும் பெயரால் ஒருநூல் எழுதினர் (கி.பி. 78); இந்நூற்பகுதிகள் காவ்யாதர்ச வ்யாக்கியானத்தில் மேற்கோள்களாக வந்துள்ளன. பாஸனென்னுங்கவி ஸ்வப்நவாஸவதத்தமென்றும் பிரதிஞ்ஞா யௌகந்தராயணமென்றுங் கூறப்படும் நாடகங்களில் உதயணனுடைய சரிதத்தைச் சொல்லியிருக்கிறார் (கி. பி. 100 -150); பிறகு கி. பி. 570-80-இல் **கங்கராச**னான **துர்விநீத**னென்பவன் பிருஹத்கதையை முற்றும் ஸம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்த்தான்; பின்பு உந்மாதவாஸவதத்தமென்னும் பெயராற்

சத்திபத்திரரென்னும் கவி ஸம்ஸ்கிருத பாஷையில் நாடகமாக எழுதியிருக்கிறார். இதன்பின், 'உதயநோதயகதா' என்னும் பெயரால் ஒரு வசனநூல் ஸம்ஸ்கிருதத்திலிருந்ததென்று தெரிகிறது. கி. பி. 1030-ஆம் வருஷத்தில் க்ஷேமேந்திரர் பிருகத்கதையைச் சுருக்கி, 'பிருகத்கதாமஞ்சரி' என்னும் பெயரால் எழுதினார். கி. பி. 1120-ஆம் வருஷத்தில் ஸோமதேவபட்டர் கதாஸரித்ஸாகர மென்றபெயரால் பிருகத்கதை முழுவதையும் ஸம்ஸ்கிருதத்தில் எழுதியிருக்கிறார். கி. பி. 1400-ஆம் வருஷத்தில் வாமன பட்டபாணர் பிருகத்கதாமஞ்சரி யென்ற பெயரால் எழுதியிருக்கிறார். இவைகளெல்லாம் ஸம்ஸ்கிருதமே. கி. பி. 1300-இல் 'ஸூரந்ந' என்னும் கவியால் தெலுங்கு பாஷையில் உதயநோதயமென்னும் பெயரால் பிருகத்கதை பத்ய காவ்யமாக மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது; அது முற்றுங்கிடைக்க வில்லை; வாஸவதத்தை விவாஹ பரியந்தமே கிடைத்திருக்கிறது. ஸ்ரீஹர்ஷர்செய்த ரத்நாவளீ, பிரியதர்சிகா என்ற இரண்டு நாடகங்களும் வத்ஸராஜசரிதமே. இவர் காலம் சற்றேறக்குறைய கி.பி. 450; சிலர் 620 என்பார்."

மேலே காட்டியவற்றைப் பார்க்கையில், துர்விநீதனென்னுங் கங்கராசன் இயற்றிய வடநூலே இதற்கு முதனூலாக இருத்தல்வேண்டு மென்று தோற்றுகிறது.

துர்விநீதனுடைய பெருமை சென்னை இராசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலையிலுள்ள 'கொங்கதேசராஜாக்களுடைய சரித்திரம்' என்பதிற் பின்வருமாறு காணப்படுகின்றது:—

"கசு-துர்விநீதன் பட்டம்:—மேற்கூறிய அரசன் புத்திரனாகிய துர்விநீதராயன் தழைவனபுரத்திலே பட்டாபிஷேகம்பண்ணி அரசாண்டனன். இவன் மந்திரசாஸ்திரங்களைக் கற்று மந்திரசித்தியடையப்பெற்று அம்மந்திரபலத்தாற் பகையரசர்களையும் அவர்கள் சேனைகளையும் வென்று ஜயமடைந்தனன். இவனைப் பகையரசர்கள் பிரளயகாலத்து ருத்திரனென்றே எண்ணிப் பயப்படுவார்கள்; கிராதார்ச்சுனீயமென்னும் நூலிற் பதினைந்து சருக்கங்களுக்கு டீகா பண்ணினவன். இவன் சேர, சோழ, பாண்டிய, ஆந்திர, கலிங்கமுதலாகிய தேசங்களைவென்று கப்பம் வாங்கிவந்தவன். இவன்பக்கத்தில் பகைவர்கள் வருவதற்குப் பயப்படுகிறபடியினாலே துர்விநீதராயனென்று பெயர்பெற்றனன்."

# பிழையுந் திருத்தமும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௩௮ | 8 | கக்சினர் | கச்சினர் |
| ௫௧ | 20 | உயலரு | உயலரும் |
| ௭௨ | 9 | கொற்றொடி | கோற்றொடி |
| ௯௯ | 13 | தயார் | தாயர் |
| ௧௭௪ | 9 | கொடுத்த | தொடுத்த |
| ௨௪௦ | 31 | தொள். | தொல். |
| ௨௫௨ | 26 | ஒளியைப் | ஒலியைப் |
| ௨௫௬ | 6 | ௮௪ | ௪௮-௫ |
| ,, | 21 | வளி செலவிற் | வளிச் செலவிற் |
| ௨௭௦ | 2 | வேறரப் | வேரறப் |
| ௨௯௯ | 5 | இறற | இற்ற |
| ௩௩௦ | 33 | விளையாளர் | வினையாளர் |
| ௩௩௦ | 36 | வம்மைய | வெம்மைய |
| ௩௩௪ | 11 | வசித்திர | விசித்திர |
| ௩௭௪ | 21 | இட்டனர் கொள்ளு முட்டின | இட்டன கொள்ளு முட்டில |
| ௩௭௯ | 3 | நாமரவளி | நாமாவளி |
| ௩௮௫ | 15 | உருக்குரு | உருக்குறு |
| ௪௩௩ | 32 | அமைச்சரோடு தொழர் | அமைச்சரொடு தோழர் |
| ௪௭௧ | 14 | உதயண | உதயணன் |
| ௪௯௦ | 14 | யாக்கி | யரக்கி |
| ௪௯௬ | 5 | புதையெரிபுற்ற | புதையெரிபற்ற |
| ௫௧௦ | 20 | முதற் புகுத்தலிற் | முதற புத்தலிற் |
| ௫௫௫ | 6 | யுரூஅத் | யரூஅத் |
| ௫௭௫ | 1 | பாங்கற் குரைத்தது | பாங்கர்க் குரைத்தது |
| ௫௮௯ | 12 | புண்கண் | புன்கண் |
| ௬௦௯ | 8 | யகற்குரல் | கயிற்குரல் |
| ௬௨௫ | 2 | மாமழை | மாழை |
| ௬௨௮ | 16 | டலருந் | டடலருந் |
| ௬௩௨ | 12 | உருமண்ணுளா | உருமண்ணுவா |
| ௬௩௮ | 29 | விரிசிகள் | விரிசிகன் |
| ௭௩௧ | 5 | நிசழ்ச்சி | நிகழ்ச்சி |
| ௭௫௪ | 12 | குறுகி | குறுகிக் |
| ௭௮௩ | 14 | யாக்கையேனுகி | வாக்கையேனுகி |
| ௮௩௯ | 9 | உதயணனன் | உதயணன் |
| ௮௮௫ | 7 | கிளையின் மன்னர் | கிளையன் மன்னர் |
| ,, | 27 | கிளைஇல் மன்னர் | கிளைஅல் மன்னர் |
| ௮௮௭ | 26 | மெய்ச்சார் | மெச்சார் |
| ௯௧௮ | 20 | பறந்தரி | பரந்தரி |
| ௯௫௮ | 44 | அதி ஆற்றல் | அதிக ஆற்றல் |

# உதயணன் சரித்திரச் சுருக்கம்.



## முதலாவது உஞ்சைக் காண்டம்.

சம்புத்தீவிலே சுதர்சனமென்னும் மலையின் தெற்கேயுள்ளதான [1] பாரதவருடத்திலுள்ள தரும கண்டத்தில் [2] வத்தவநாட்டின் தலைநகரான [3] கௌசாம்பி நகரத்தில், குருகுலத்திற் பிறந்த சதானிகனென்பான் அந்நாட்டுக்கு அரசனாகி விளங்கினான். அவன் சேதிநாட்டிலுள்ள வைசாலிநகரத்தரசனும் [4] ஏயர்குலத்தவனுமாகிய [5] சேடகனென்பவனுடைய புதல்வி மிருகாபதியென்பவளை மணஞ்செய்து இல்லறத்தை இனிது நடத்தி அரசாட்சி செய்துவந்தான். அவன் அரசர்க்குரிய குணவிசேடங்களை யுடையவனாதலின், மந்திரச்சுற்றத்தாரும் தந்திரச்சுற்றத்தாரும் ஏனையோரும் மிக்க இன்பமுற்று அவன் குடைநிழலில் வாழ்வாராயினர். இங்ஙனம் சில ஆண்டுகள் சென்றன.

கார்காலத்தில் ஒருநாள் மேகந்தோன்றுவதையும் அழிவதையுங் கண்டபொழுது வைராக்கியம்பிறந்தமையால் மேற்கூறிய சேடகராசன் ஞாலங்காவலை நஞ்செனவெறுத்துத் தன்புதல்வர் பதின்மர்களுள் மூத்தவனான தனமித்திரனை யழைத்து, "இனி நான் தவஞ் செய்யச் செல்வேன்; நீ இந்த இராச்சியபாரத்தை ஒப்புக்கொள்ள வேண்டும்" என்று கட்டளையிட்டான். அவன், "யானும் தவஞ் செய்தற்கு வருவேன்" என்று கூறி மறுப்ப, சேடகன் அவன் தம்பிகள் எண்மரைத் தனித்தனியே அழைத்துச் சொல்லச்சொல்ல அவர்களும் மூத்தவன் கூறியதையே கூறி மறுத்துவிட்டனர். அப்பால் அவன் தன் பத்தாம் குமாரனாகிய விக்கிரனை அருகே அழைத்து மிகவும் வற்புறுத்திக்கூறித் தன் அரசாட்சியை அவனிடம் ஒப்பித்துவிட்டு விபுலமென்னும் மலையொன்றின் சாரலிலே ஆலங்கானத்தில் தவஞ் செய்துகொண்டிருந்த ஸ்ரீதரரென்னும் முனிவரைச் சரணமடைந்து உபதேசம்பெற்றுத் தவஞ்செய்வானாயினன்.

1 பாரதவருடம் - பாரததேசம்; பரதனால் ஆளப்பட்டமையின் இப்பெயர் பெற்றது; தருமகண்டம், ஆரியகண்டமெனவும் வழங்கப்படும்.
2 வத்ஸதேசம்.
3 கோசம்பியென இந்நூலுள் வழங்கப்படும். 4 ஹேஹயர்.
5 உதிதோதய காவியத்தில் இப்பெயர் காணப்படுகின்றது.

தந்தை முதலியவர்களுடைய பிரிவாற்றுமல் வருத்தமுற்ற விக்கிரன், நிகழ்ந்தவற்றைச் சதானிகனுக்கும் தன் தங்கை மிருகாபதிக்கும் தூதுவர்மூலமாகத் தெரிவித்துவிட்டுத் தந்தையின் கட்டளையின்படி அரசாட்சிசெய்துகொண்டிருந்தான். இச்செய்தியை அறிந்த சதானிகன் வியந்தான். மிருகாபதி மிக்க வருத்தத்தையடைந்து மூர்ச்சையுற்றுள்; பின்பு கணவன் பலவாறு தேற்றத்தேறி ஒருவாறு ஆறுதலுற்றிருந்தாள். சிலகாலம் சென்றபின் மிருகாபதி கருப்பமுற்றுள். அக்கருப்பத்திலே புண்ணிய புருடனுகிய தேவனொருவன் வந்து தங்கினுன். வேண்டிய பொருள்களை வருவித்து அளித்தும் விரும்பிய இடங்களுக்கு அழைத்துச்சென்றும் மிருகாபதியினது மயற்கை (மசக்கை)யைப்போக்கி அரசன் அவளைப் பாது காத்து வந்தான். கருப்பம் நிரம்பியது. அக்காலத்தில் ஒருநாளிரவில் மேல்மாடத்துள்ள நிலாமுற்றத்தில் தானிருந்த இடங்களையெல்லாம் சாதிலிங்க முதலியவற்றுற் சிவந்த நிறமுள்ளனவாகச் செய்வித்துச் சிவந்த மலர்மாலைகளையும் சிவந்த அணிகலங்களையும் அணிந்துகொண்டு தன்னைச் சூழ்ந்துள்ள தோழியர்களையும் அங்ஙனம் அணிந்துகொள்ளச் செய்வித்துவிட்டு அவர்களின் இடையே ஒரு மஞ்சத்தின் மேல் சிவந்த பட்டாடையொன்றைப் போர்த்திக்கொண்டு அவள் அயர்ந்து உறங்கினுள். அப்பொழுது ஆகாய வழியே சென்றதும் பல்வன்மையுடையதுமான [1] சரபப்பறவையொன்று ஈரம்புலராத தசைத்தொகுதியென்று நினைத்து அவளை மஞ்சத்துடன் தூக்கிக்கொண்டு பறந்து சென்று விபுலகிரியென்னும் மலையிற் சேடக முனிவருடைய பள்ளியினருகே மெல்ல வைத்து உண்ணத் தொடங்குகையில், அவள் விழித்துக்கொண்டாள். அதனைக் கண்ட அப்பறவை, "இது தசைத்தொகுதி யன்று; உயிரோடுகூடிய ஒரு பெண்வடிவம்" என்று நினைத்து உண்ணுமல் திடீரென்றெழுந்து சென்றுவிட்டது. அப்பால் அவள் நாற்புறமும் பார்த்துத் தான் வேறிடம் வந்திருத்தலை அறிந்து திகைத்து அஞ்சி வருந்துவாளாயினள். பின்பு அச்சத்தாலும் ஆகாய வழியே வந்த வருத்தத்தாலும் கருப்ப வேதனை அதிகரிக்கப் பெற்றுச் சூரியோதய காலத்தில் எல்லாக் கோள்களும் நல்வழி நோக்க, திருமணி விளக்கம் திசைநின்றழல ஓர் ஆண்குழந்தையை ஈன்றனள்.

---

1 கண்டப்புள்ளென்றும் கண்டபேரண்டமென்றும் கருடப்பறவையென்றும் வேறு நூல்கள் கூறும்.

"பொருகடற் பருதி போலப் பொன்னனுன் பிறந்த போழ்தே
மருளுடை மாத ருற்ற மம்மர்நோய் மறைந்தது" (சீவக. 304.)

பின்பு அவள் மிக்க அன்போடு அக்குழந்தையைத் தழுவி யெடுத்து அந்தச் சமயத்துள்ள தன் நிலைமையை நினைந்து பல வாறு புலம்பினள். அப்பொழுது நீராடுதற்பொருட்டு இயல்பாக அந்த வழியே வந்த சேடக முனிவருடைய காதிற்கு அவளுடைய புலம்பலொலி எட்டியது. உடனே அவர் வந்து கண்டு அவளைத் தம்முடைய மகளென்றறிந்ததன்றி நிகழ்ந்தவற்றையும் தம்முடைய ஞானத்தால் அறிந்தார்; பிறகு, "நீ அஞ்சாதே" என்று அபயமளித்துக் குழந்தையுடன் அவளை அழைத்துச் சென்று தம்முடைய பள்ளியின் ஒருபால் இருக்கச் செய்து ஆதரித்து வருவாராயினர். அவரைத் தன் தந்தையென்றறிந்த மிருகாபதி ஒருவகையாக ஆறுதலுற்றிருந்தாள். அங்கே தவஞ்செய்துகொண்டிருந்த மகாமுனிவர் பல்லோர்க்குத் தலைவரும் தருமத்தையும் விரதத்தையும் தாங்கியவருமாகிய பிரமசுந்தர முனிவரும் அவர் மனைவி பழிப்பில் கற்பினையுடைய பரமசுந்தரியும் சேடக முனிவரது விருப்பத்தின்படி மிருகாபதியைக் குழந்தையுடன் பாதுகாத்து வந்தமையால் அவள் சிறிதும் கவலையின்றியிருந்தனள்.

சூரியோதய காலத்திற் பிறந்தமையின் அப்புதல்வன் உதயணனென்னும் பெயர் பெறுதற்கு உரியனென்று சேடக முனிவர் நாமகரணஞ்செய்ததன்றி அவனுடைய வரலாறு அநேகருடைய வரலாறுகளுக்கு இடமாக விளங்குமென்றுங் கூறினர்.

"அதிரா ஞாலத் தரசுவீற் றிருந்த
கதையுரைக் கெல்லாங் காரண ஞதலிற்
புதையிரு ளகற்றும் பொங்கொளி மண்டிலம்
உதய மிவர்தர வுதித்தோன் மற்றிவன்
உதயண னெனப்பெயர்முதற் கொளீஇ" 1 (உ. 11: 79-83.)

உதயணன், பிறைபோல் வளர்ந்து மேற்கூறிய பிரமசுந்தர முனிவர்க்குப் பரமசுந்தரிபாற்றோன்றிய யூகியென்பானுடன் நட்புற்றுவிரும்பி விளையாடிப் பின் அம்முனிவரிடத்தும் சேடக முனிவரிடத்தும் அரசர்க்குரிய பலவகைக் கலைகளையும் வேறு கலைகளையும் அவனுடன் கசடறக்கற்று இயற்கையறிவாலும் செயற்கையறிவாலும் மேம்

1 இவ்வெண்கள் முறையே பெருங்கதையின் காண்டம், பிரிவு, அகவலின் அடிகளென்பவற்றைக் குறிப்பன.

பட்டு விளங்கினான். அவர்களுடைய ஆக்கத்தைக்கண்ட முனிவர்கள் பாராட்டி அவ்விருவருக்கும் ஆசிகூறினார்கள்.

அப்பால் ஒருநாள், பிரமசுந்தரமுனிவர் யானையின் கோபத்தை அடக்கி வயப்படுத்தி ஆளுதற்குரிய மந்திரமொன்றை உதயணனுக்கு உபதேசித்ததன்றி இசைப்பயிற்சியும் பண்ணுவித்து, முன்பு இந்திரனால் தமக்குக் கிடைத்திருந்ததும் யானை முதலியவற்றை வயமாக்குதற்குரியதுமாகிய கோடபதியென்னும் யாழை அவனுக்குக் கற்பித்தனர். அதனை அவன் வாசித்துவருகையிற் கேட்ட காட்டுயானைகள் முதலியனவும் பறவைகளும் பிறவுயிர்களும் பேருவகையுடன்வந்து அவனுக்கு வேண்டிய ஏவல்கள் செய்தன. அதனைக்கண்டு வியந்த அம் முனிவர் அந்த யாழை அவனுக்கே கொடுத்து, "நீ இந்த வித்தையிற் சிறந்த ஆற்றலை அடைவாயாக" என்று ஆசி கூறி, "இவன் உனக்கு அடைக்கலம்" என்று தன் புதல்வனாகிய யூகியையும் அவன்பால் ஒப்பித்தனர்; "கடந்து ளோர்களுங் கடப்பரோ மக்கண்மேற் காதல்?" பின்பு உதயணன் யூகியை உயிர்த்துணையாகக்கொண்டு எல்லா வகையிலும் சிறப்புற்று விளங்கினான்.

ஒருநாள், அவன்சென்ற காட்டில் பலபிடிகள் சூழப்பெற்றதும் பதினாயிரம் யானைகளின் பலமுள்ளதுமான ஒரு தெய்வயானை நின்றது. அதனைக்கண்ட உதயணன் மந்திரத்தியானத்தோடு கோடபதியை வாசித்தான். அப்போது அவனருகே அது வந்து அன்பு பாராட்டி அவன் ஏவிய தொழில்களைச் செய்தது. அதன் நிலையைக் கண்ட உதயணன் அதன்மேலேறித் தன்னிடம் அடைந்தான். அவனை விட்டுப்பிரியாமல் அவனுக்குரிய பணிகளையெல்லாம் அது செய்துவந்தது. சில நாட்கள் சென்றபின்பு ஒருநாளிரவில் அந்த யானை அவன் கனவில் தோன்றி, "என்மேற் பாகரையேற்றினாலும் தோற்கயிற்றால் என்னைக் கட்டினாலும் யான் உண்ணுதற்கு முன்னமே நீ உண்டாலும் உன்னைவிட்டு நீங்கிவிடுவேன்" என்றது. கேட்ட உதயணன் உடனே விழித்தெழுந்து அதுமுதல் மேற்கூறிய மூன்று தவறுகளும் நேராதபடி நடந்துவந்தான். தெய்வயானையும் அவனை விட்டு நீங்காமற் பணிபுரிந்து ஒழுகியது.

இப்படியிருக்குங்காலத்தில் விக்கிரன் அரசாட்சியில் வெறுப்புற்றுத் துறவறம் பூணுதற்கு விரும்பினான்; தனக்குச் சந்ததியில்லாமையால் தன் இராச்சியத்தைப் பாதுகாத்தற்கு யாருமில்லையேயென்று துன்பமுற்ற அவன் தன் தந்தையாகிய சேடகமுனிவர்பாற் சென்று வணங்கி முதலில் தன் கருத்தைத்தெரிவித்து அப்பால் அவரு

டைய உபதேசமொழிகளை விருப்பத்துடன்கேட்டுக்கொண்டிருந்தான். அப்பொழுது, இயல்பாகவே அவ்விடம் வந்த உதயணனை அவன்கண்டு ஒளியாலும் தோற்றப்பொலிவாலும் சிறப்புற்று விளங்கிய அவனை நன்கு மதித்து, "இவன்யார்?" என்று கேட்டனன். கேட்கவே முனிவர், "குருகுலத்தரசனாகிய சதானிகன் தேவியும் உன் தங்கையுமாகிய மிருகாபதியின் புதல்வன் இவன்; ஊழ்வினைவயத்தால் அவள் இங்கேவந்து இவனைப் பெற்றனள். கல்விகேள்விகளில் இவன் சிறந்தவனாயினன். உரியபிராயம் வந்துவிட்டமையால் இவனுக்கு இனி அறிவிக்கவேண்டியவற்றை அறிவித்துக் கௌசாம்பிநகருக்கு அனுப்ப எண்ணியிருக்கிறேன்" என்றனர். உடனே விக்கிரன் மிக உவந்து, "இவனை அடியேனுக்கு அளித்தால் ஏயர் குலத்துக்கு உரிய உரிமையை இவன்பால் ஒப்பித்து இவனை அரசனாக்கிவிட்டுத் துறவு பூண்டு தவஞ்செய்து உய்வேன்" என்று முதலில் அவரையும் அப்பால் மிருகாபதியையும் இரந்து அவர்களுடைய அனுமதிபெற்றான்; பிறகு யூகியோடு உதயணனையும் மிருகாபதியையும் வைசாலிநகருக்கு அழைத்துச்சென்று அங்கேயுள்ள மந்திரிகளுக்கும் சேனைத்தலைவர்களுக்கும் மற்றவர்களுக்கும் தெரிவித்துத் தன் அரசாட்சியை உதயணன்பால் ஒப்பித்துவிட்டுத் தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளுதற்குத் தவவனஞ் சென்றான்.

மேற்கூறிய தெய்வயானை உதயணனுடனே வைசாலிக்கு வந்து வழக்கப்படியே அவனுக்குச் செய்தற்குரிய ஏவல்களைச்செய்து கொண்டு அவனுடைய யாழிசையை நுகர்ந்து அந்நகரில் இருந்தது.

அப்பால் உதயணன் யூகியைத் தன்னுடைய முதல்மந்திரியாக்கி அரசாட்சிசெய்துகொண்டு வைசாலி நகரத்தில் இருந்தான். அப்போது அவன் தன்னுடைய வீரத்தாலும் யூகியின் உதவியாலும் தெய்வயானையின் துணையாலும் பல பகைவர்களை வென்று அடக்கி அவர்களுடைய நாடுகளைத் தன்வயமாக்கி வாழ்ந்துவந்தான்.

நிலாமுற்றத்தில் உறங்கிய தன் தேவியைக் காணாத சதானிகன் திடுக்கிட்டு நிகழ்ந்ததையறியாமல், பல இடங்களுக்கும் தன் பரிவாரங்களை அனுப்பித் தேடுவித்துக்கொண்டே காலங்கழித்துவந்தான். அப்போது ஒருநாள் அவன் முக்கால உணர்ச்சியுள்ள ஸுவ்ருதரென்னும் முனிவரையடைந்து தன் குறையைத் தெரிவித்து வருந்தினன். அவர் மிருகாபதியைச் சரபப்பறவை எடுத்துச்சென்று விபுலகிரியில் வைத்ததுமுதல் உதயணன் வைசாலியில் அரசாட்சி செய்து கொண்டிருத்தல் இறுதியாகவுள்ள செய்திகளையெல்லாம் விளங்கக்

கூறியதன்றிச் சதானிகனுடைய பிற்காலச்செய்திகளையும் தெரிவித்தனர். உடனே சதானிகன் வைசாலி நகரத்தையடைந்து மிருகாபதியைக் கண்டு அவளுடைய குணவிசேடங்களைப் பாராட்டிப் புகழ்ந்தனன். பின்பு அவள்வாயிலாக உதயணனைக் கண்டு அவனால் உபசரிக்கப்பெற்றுச் சிலநாள் அங்கேயிருந்து, அப்பால் அவனை அந்நகரிலேயே அரசாட்சி செய்துகொண்டிருக்கும்படி சொல்லிவிட்டுத் தன்தேவியுடன் கௌசாம்பியையடைந்து முன்போலே அரசுபுரிந்துவந்தான். அப்போது மிருகாபதி இரண்டு புதல்வர்களைப் பெற்றாள். அவர்கள் முறையே பிங்கலன், கடகன் என வழங்கப் பெற்றனர். அவர்கள் கல்விகேள்விகளிற் சிறந்து விளங்கினார்கள். உதயணன் இடையிடையே கௌசாம்பிக்கு வந்து தன் தந்தையுடன் சிலகாலம் இருந்துவிட்டுச் செல்வதுண்டு. இங்ஙனம் சில ஆண்டுகள் சென்றபின்பு, சதானிகனுக்குத் தன் அரசாட்சியில் வெறுப்பும் துறவில் விருப்புமுண்டாயின; அதனால் உதயணனை வருவித்து அவன்பால் அரசாட்சியை ஒப்பித்துவிட்டுத் தான் எண்ணியவாறே தவஞ்செய்தற்கு வனஞ்சென்றான்.

கௌசாம்பி வைசாலியென்னும் இரண்டு இராச்சியங்களையும் உதயணன் கௌசாம்பியிலேயேயிருந்துகொண்டு செவ்வனே சிலநாள் ஆண்டு பின் வைசாலியிலேயிருந்து அரசுபுரியும்படி யூகியை நியமித்துவிட்டுத் தான் கௌசாம்பியைமட்டும் ஆளுவானாயினன். யூகியையல்லாமற் கல்வியறிவிற் சிறந்தவர்களும் புறத்தே சென்று உலாவிவரும் உயிர்போன்றவர்களுமான வயந்தகன், உருமண்ணுவா, இடவகனென்ற வேறு மூன்று மந்திரிகள் உதயணனுக்கு உண்டு. அவர்களும் வேறு சில தோழரும் அவனுக்கு அங்கே உதவிபுரிந்து வந்தார்கள். தெய்வயானையும் அவனுக்கு வேண்டிய பணிகள் புரிந்து வந்தது. அப்போது உதயணன் பல பகைவர்களை வென்று அவர்களுடைய இடங்களைக் கைக்கொண்டு மேம்பாடுற்று விளங்கினன். கல்வியாலும் வீரத்தாலும் ஆட்சிமுறையாலும் உதயணன் சிறந்தவனென்ற புகழ் எங்கும் பரவியது.

இங்ஙனமிருக்கையில் ஒருநாள் உதயணன் தன் சேனையையும் தெய்வயானையையும் ஊரில் நிறுத்திவிட்டு உருமண்ணுவா முதலிய சில தோழரோடும் சில வீரரோடும் சென்று ஒரு காட்டில் வேட்டையாடினன்; அதனாற் களைத்து மயங்கி நீர் வேட்கையுற்று வருந்தினன். மற்றவர்களும் அப்படியே வருத்தமடைந்தார்கள். பின் எல்லோரும், " இந்தக் காட்டில் ஏதேனும் தெய்வமிருக்குமாயின் இரங்கி நம்

முடைய தாகத்தை அது போக்கியருளும்" என்று நிச்சயித்துக் கொண்டவர்களாகி அங்கே ஒரு புரசமரத்தின் நிழலிலே சோர்ந்து கிடந்தார்கள்; கிடக்கையில், வெண்டுகில் உடுத்தியவனும் மெல்லிய மேற்போர்வையையுடையவனும் அரையிற் கச்சணிந்தவனும் சந்தனம் பூசிய மார்பை யுடையவனும் ஒளிவிட்டு வீசுகின்ற மேனியை யுடையவனும் பிறைவடம் விளங்குகின்ற கழுத்தை யுடையவனும் செங்கழுநீர் மாலையைச் சூடிய குஞ்சியையுடையவனும் ஆயிரம் இதழையுடைய செந்தாமரை மலர்போன்ற கண்களையுடையவனுமாகிய அழகிய ஓரிளைஞன் அங்கே வந்து அவர்களைநோக்கி, "நீர் யாவிர்? மிகுந்த இளைப்பையடைந்திருக்கிறீர்களே; நேர்ந்த துன்பம் யாது?" என்று வினவினன். அவர்கள் தமக்கு அப்போதுள்ள நீர் வேட்கைத் துன்பத்தைக் கூறினர். அவன் உடனே இனிய நன்னீரைக் கொணர்ந்து அளித்து அவர்களுடைய தாகத்தை நீக்கினன். நீக்கியபின், வேறொன்றையும் எதிர்பாராமல் அவன் செல்லத் தொடங்கிய பொழுது, அவர்கள் அவனுடைய பேருதவியை மிகவும் பாராட்டி அவனை நோக்கி, "இதுபோன்ற துன்பம் இனி எங்களுக்கு ஏதேனும் உண்டாகுமாயின், உம்மை நினைத்துப் போக்கிக்கொள்ளக் கருதுகின்றேம்; நீர் இன்னொன்று எமக்குத் தெரிவிக்க வேண்டும்" என்று கேட்டனர். அவன், "நான் குபேரனுக்குத் தொண்டு செய்யும் இயக்கர்களில் ஒருவன்; என் பெயர் நஞ்சுகனென்பது; உங்களுடைய இனிய நட்பினனாக என்னைக் கருதுக; நீங்கள் எந்தச் சமயத்தில் நினைத்தாலும் உடனே நான் வந்து நும் குறையைத் தீர்த்தற்குரிய கடப்பாடுடையேன்; என்னை நினைத்தற்குரிய மந்திரம் இஃது" என்று சொல்லி அம்மந்திரத்தை உருமண்ணுவாவுக்கு உபதேசித்துவிட்டுத் தன்னிடஞ் சென்றனன். அவர்கள் அவனுடைய பேருதவியை மறவாதவர்களாகி அவனை வாழ்த்திக் கொண்டு நகரம் வந்து சேர்ந்தார்கள்.

ஒருநாள் நாடகவரங்கில் ஆடிய ஆடன்மகளிருடைய கூத்திலும் இசையிலும் மனத்தைச்செலுத்தி மயங்கிப்போய்ப் பசியின் மிகுதியால் உதயணன் தெய்வயானைக்கு வழக்கம்போல் உணவளித்தலை மறந்து தான்மட்டும் முந்தியுண்டான். அதனை யறிந்து அந்த யானை, "உதயணன் எனக்கு வாக்களித்ததை மறந்து உண்டது தன் புண்ணியக் குறைவாலேதான்" என்றெண்ணி உடனே தன்னிடம் சென்றுவிட்டது. பின்பு கோடபதியை வாசிக்கும்போது கேட்பதற்கு வழக்கப்படியே தெய்வயானை வாராமையை உதயணன்

அறிந்து தான் செய்த பிழையை நினைத்துப் பெரிதும் வருந்தினன்; அதனை அறிந்த மந்திரிமார், "அந்த யானையை எப்படியாவது தேடித் தருவேம்" என்று வாக்களித்தனர். அங்ஙனம் வாக்களித்தும் வருத்தந் தணியாதவனாகிக் கவலைக் கடலிலழுந்திய உதயணன் பல இடங்களுக்கும் தன் பரிசனங்கள் பலரை அனுப்பி அதனைத் தேடச்செய்தனன். செய்தும் அஃது அகப்படாமையால் யாழுங் கையுமாகத் தானே காடுகளுக்கு நாள்தோறுஞ் சென்று சென்று தேடித் திரிவானாயினன்.

அவந்திநாட்டில் உச்சைனிநகரத்தில் [1]பிரச்சோதனனென்னுஞ் சக்கரவர்த்தி, வீரம் முதலியவற்றாற் சிறந்த பல அரசர்களும் திறை கொடுக்க அரசாட்சிசெய்து செங்கோல் செலுத்திவந்தான். அவனுடைய பதினாயிரந் தேவிமார்களில் முதன்மைவாய்ந்த பதுமகாரிகையென்பவள்பால் அவனுக்கு இந்திரனுடைய அருளினாற் பெண் ஒருத்தி உதித்தனள். அதனால், அவளுக்கு [2] வாசவதத்தை யென்ற பெயரிடப்பட்டது. அவள் இணையற்ற அழகுடையவள்:

"யாற்றற லன்ன கூந்தல் யாற்றுச்
சுழியெனக் கிடந்த குழிநவில் கொப்பூழ்;
வில்லெனக் கிடந்த புருவம் வில்லின்
அம்பெனக் கிடந்த செங்கடை மழைக்கண்;
பிறையெனச் சுடருஞ் சிறுநுதல் பிறையின்
நிறையெனத் தோன்றுங் கறையில் வாண்முகம்;
கிளியென மிழற்றுங் கிளவி கிளியின்
ஒளிபெறு வாயி னன்ன வொள்ளுகிர்;
வேயெனத் திரண்ட மென்றோள் வேயின்
விளங்குமுத் தன்ன துளங்கொளி முறுவல்;
காந்தண்முகி ழன்ன மெல்விரல் காந்தட்
பூந்துடுப் பன்ன புனைவளை முன்கை" (சு. 11: 64 - 79)

யையும் உடைய அவள் மற்ற எல்லாவகையிலும் சிறந்தவள். வேறுள்ள பட்டத்தேவியர்களிடம் பிரச்சோதனனுக்கு உதித்த பிள்ளைகளும் பெண்களும் மிகப்பலர்; பிள்ளைகளுள்ளே சிறந்தவர்கள் பாலகன், பாலகுமரன், கோபாலகனென்பார். அஞ்சத்தக்க வீரியமுடையதும் மிகப் பெரியதுமான ஒரு பட்டத்து யானை அவனுக்குண்டு; அதன்பெயர் நளகிரியென்பது. அவனுக்கு மந்திரிகள் பதினாயிரவர்.

---

[1] பிரத்தியோதனன். [2] வாசவன் - இந்திரன்.

ஒருநாள் அந்தச்சக்கரவர்த்தி, "எல்லா அரசர்களும் கப்பம் செலுத்திவருகிறார்களா?" என்று விசாரித்தபொழுது கணக்கர், "வத்தவ நாட்டரசனும் வைசாலிநகரத்தரசனும் வழக்கப்படி செலுத்தவில்லை" என்று தெரிவித்தனர். அதற்குரிய காரணத்தை வினவியதோடு அவர்களை உடனே பிடித்து வரும்படி செய்து விசாரிக்கவேண்டுமென்று அரசன் மந்திரிகளை நோக்கிக் கூறினன். அவர்களுள்ளே முதன்மை வாய்ந்தவனும் நீதிநூற் பயிற்சியிலும் தந்திரத்திலும் மிக்கவனுமாகிய சாலங்காயனென்பான், "உதயணனுக்குத் தெய்வயானையொன்றும் பராக்கிரமசாலிகளான மந்திரிகளும் துணையாக இருத்தலின், அவன் வெல்லப்படான். இப்போது வைசாலிநகரத்தரசனாக இருப்பவனும் உதயணனுடைய நண்பனுமாகிய யூகியும் வெல்லுதற்கரியன். அவனும் உதயணனும் ஒன்று சேராமல் இருக்கும்படி முதலிற் செய்யவேண்டும். யூகியை எதிர்த்துப் போர் செய்தற்காகச் சதுரங்கசேனைகளையும், தக்கவீரர்களையும் நாம் வைசாலிக்கு அனுப்பினால் தன் சேனைகளோடு யூகி வந்து நம்முடைய சேனைகளை எதிர்ப்பான்; அதனால் அவன் வந்து உதயணனுக்கு உதவிசெய்ய இடமிராது. இயல்பாகவே எல்லாநலமும் வாய்ந்த உதயணன் தனக்குப்பணிபுரிந்துவந்த தெய்வயானையை இப்போது பிரிந்தமையால் அதனைத் தேடிக்கொண்டு யாழுங்கையுமாகக் காடுகளில் அலைந்து திரிகிறான். அதனாலும், யூகிவந்துஉதவுவதற்கு இயலாதாதலாலும் உதயணனை நாம் பிடித்துக்கொண்டு வருவதற்குத் தக்க சமயம் இது; யாம் மாய யானையொன்றை நிருமித்து அனுப்பி மயக்கி உதயணனைப் பிடித்து வரச்செய்வதே ஏற்ற உபாயமாகும்" என்றான். கேட்ட பிரச்சோதனன் உடனே யூகியுடன் போர்செய்தற்காகச் சில வீரர்களையும் சேனைகளையும் வைசாலிக்கு அனுப்பினன். சிறந்த சிற்பிகளைக் கொண்டு அரக்கு முதலியவற்றாலும் மரங்களாலும் மிகவும்பெரியதாக எந்திரயானை யொன்றைச் செய்வித்தான்; ஆயுதபாணிகளாகிய தொண்ணூற்றாறுபோர்வீரர்களை அதன் வயிற்றில் இருக்கும்படி செய்து அதன் துதிக்கையுள்ளும் நான்கு கால்களுள்ளும் பலவகையான ஆயுதங்களை வைப்பித்து அனுப்பியதோடு பதினறுயிரஞ் சதுரங்க சேனைகளுடன் மேற்கூறிய சாலங்காயனையும் ஒரு சேனைத்தலைவனையும் அதன்பின் கௌசாம்பிக்கு விடுத்தனன்.

பிரச்சோதனன் கட்டளைப்படியே சென்று சேனைகளுடன் வைசாலி நகரத்தைச் சூழ்ந்துகொண்ட வீரர் முதலியவர்களுக்கும் யூகிக்கும் பெரும்போர் நிகழ்ந்தது.

உதயணன் தேடிக்கொண்டிருந்த காட்டின் நடுவிலே நீலமலை போன்ற அந்த எந்திர யானையானது மேகம்போற் பிளிறிக்கொண்டு சென்று உலாவியது. சாலங்காயன் பிறர் அறியாதபடி பெரும்படை யோடு சென்று அதன்பின்னே வேறிடத்து ஒளித்திருந்தான். அந்த வஞ்சயானை தன்னை உயிருள்ள யானைபோற் காட்டிப் பல பிடிகள் சூழ, அக்காட்டில் உலாவிற்று. அதனைக் கண்ட காட்டு வேடர்கள் முன்னம் காணாமற்போன தெய்வயானையென்று நினைத்து மகிழ்ந்து உடனேசென்று உதயணனிடம் தெரிவித்தார்கள். அப்போது உதயணன் மகிழ்வுற்று அவர்களுக்கு வேண்டிய சம்மானங்களைச்செய்து விட்டு யாழுடன் புறப்பட்டான். பகைப்படை வருமென்று வயவ னென்னும் பறவையின் ஒலியால் தெரியவந்தது. பின்னும் பல தீயநிமித்தங்கள் காணப்பட்டன; உடன்வந்த வயந்தகன் தடுத்தான்; ஆனாலும் உதயணன் அவற்றைச் சிறிதும் உட்கொள்ளாமல் விரைந்து காடுசென்று அந்த யானையைக் கண்டு தனக்குப் பழக்கமுள்ள தெய்வயானையாகவே நினைந்து முழுமதியைக் கண்ட சகோரம் போல் மகிழ்ந்து தன்னுடன் வந்த சேனைகளை வெகு தூரத் திற்கப்பால் நிறுத்திவிட்டுத் தான்மட்டும் அதனருகிற் சென்று [1] இனியராகமொன்றை யாழில்வாசித்தான். அப்போது அது யாழி சையில் மிக்க விருப்பமுள்ளதுபோல் வந்து அவன் எதிரே நின்றது. அவன் மகிழ்வடைந்து மெய்ம்மறந்து நின்றான்; உடனே உள்ளி ருந்த போர்வீரர்கள் விரைவாக அதன் பொறிகளையெல்லாம் கழற்றித் திடீரென்று வெளியேவந்து கொடிய சொற்களைச் சொல்லிக்கொண்டு போர்செய்யத் தொடங்கினார்கள். 'இது மிகச் சிறியவர்களுடைய செயல்' என்று எண்ணிப் புன்முறுவல் செய்துகொண்டு உதயணன் கம்பீரமாக நின்றான்; அப்போது, ஐந்நூறு போர்வீரர்களோடு பின்னே நின்ற வயந்தகனால் அந்தத் தொண்ணூற்றுறுவீரரும் கொல்லப்பட்டார்கள். மறைந்து சேனையுடன் பின்னே ஒருபால் இருந்த சாலங்காயன் மிகவும் கோபங்கொண்டு பல வீரர்களோடு வந்து எதிர்த்துப் போர்செய்து உதயணனால் தோல்வியுற்றான்; சேனாதிபதியும் மாண்டான்; சாலங்காயனை வெட்டுதற்குத் தன் வாளை உயர்த்திய உதயணன் மந்திரியைக் கொல்லலாகாதென்ற நூல் விதியை உட்கொண்டு அவனைக் கொல்லாமல் விட்டுவிட்டான்; அவ் வாளாற் பல யானைகளை வெட்டிவீழ்த்திப் பின்பு ஒரு யானையை வெட் டத் தொடங்கியபொழுது அதன் கொம்பிற்பட்டு அவ்வாள் ஒடிந்து

[1] மாளவராகமென்றும் தக்கராகமென்றும் வேறு நூல்கள் கூறும்.

போயிற்று. ஆயுதமின்றித் தனியே நின்று உதயணனைப் பிடித்துக் கொள்ளுதற்குச் சாலங்காயன் முதலியோர் சூழ்ந்துகொண்டார்கள். அப்பொழுது உதயணன் நிகழ்ந்தவற்றை ஓர் ஓலையிலெழுதி அதனை யூகியிடம் சேர்ப்பிக்கும்படி வயந்தகனிடம் கொடுத்தனுப்பிவிட்டுத் தான்மட்டும் அவர்கள் வசமாயினன்.

அப்போது ஒருமதயானையைத் தாமரைத்தண்டின் நூலாற் கட்டுவதுபோலத் தன்மேலாடையாற் சாலங்காயன் உதயணனைக் கட்டி ஒரு தேரின்மேலேற்றிக் கொண்டு உச்சைனிசென்றான்; அப்பால் பிரச்சோதனனிடம் தெரிவித்து அவன் கட்டளைப்படியே [1] இருண் மயமாகிய ஒரு பெருஞ்சிறையில் உதயணன் கால்களில் விலங்கிட்டுத் துன்பமுறும்படி அவனை வைத்துவிட்டான். இஃதிவ்வாறாக;

வயந்தகன் விரைந்துசென்று வைசாலியின்புறத்தே பெரும் போர் நிகழ்த்திக்கொண்டு நின்ற யூகியைக்கண்டு நடந்தவற்றைக் கூறி உதயணனது திருமுகத்தை அவனிடம் கொடுத்தான். அதனைப் பிரித்துப் படித்தறிந்த யூகி முதலில் அளவற்ற துன்பமுற்றுத் தன்தலைவனது நிலைமைக்கு வருந்தினான். அப்பால் பெருஞ்சினங்கொண்டு [2]"இரும்பை எலி விழுங்கிற்று" என்றதற்கு, "குழந்தையைப் பருந்துகொண்டுபோயிற்று" என்று பதில் உரைத்ததுபோல உலகில் வஞ்சச்செயல் செய்தவனை வஞ்சச்செயல் செய்தே வெல்ல வேண்டுமென்று நிச்சயித்தான்; பிறகு அங்கே சூழ்ந்துநின்ற நண்பர்களை நோக்கி, "கள்ள யானையால் மயக்கி எம்மரசனைப் பிடிப்பித்துத் தன்னகர்க்கு வருவித்த பிரச்சோதனனுடைய நகரத்தை யான் ஒரு யானையாலேயே அழிப்பித்து உதயணனை மீட்பதல்லாமல் உஞ்சை நகரத்தைத் திக்கிரையாக்கியும் அவனைக்கொண்டு வாசவதத்தையைப் பிரித்துப் பிரச்சோதனன் அறியாமல் வலிந்து கொண்டுவரச்செய்தும்

---

1 "வேழ வேட்டத்து வீழ நூறி, அருஞ்சிறைப் பள்ளி யாப்பொடு புக்க, பெருஞ்சிறைப் பள்ளிப் பேரிருள்" (க. 54 : 132-4), எனப் பெருங்கதையுள்ளும், "வான்றளை விடீஇய" (கூ : 63) என மணிமேகலையுள்ளும், "வாரார் வனமுலை வாசவ தத்தையென், றாரானுஞ் சொல்லப் படுவா ளவளுந்தன், பேராய மெல்லா மொழியப் பெருந்தெருவே, காரார் தடந்தோட் டளைக்காலன் பின்போனாள், ஊரா ரிகழ்ந்திடப் பட்டாளே" (சிறியதிருமடல், 66-8) எனத் திருமங்கையாழ்வார் வாக்கிலும் காணப்படுதலால், உதயணனிருந்த சிறைச்சாலை மிக்க இருண்மயமாக இருந்ததென்பதும் அவன் காலில் விலங்கு இடப்பட்டிருந்ததென்பதும் தெரிகின்றன. 2 உதிதோதய காவியம்.

அவனுக்கு அவளை மணஞ் செய்விப்பேன்" என்று சபதஞ் செய்து விட்டு வைசாலி நகரத்தைப் பாதுகாத்துவரும்படி தன்சுற்றத்தார் களை நியமித்தான்; கௌசாம்பி நகரத்தைப் பாதுகாக்கும்வண்ணம் பிங்கலகடகருக்குச் சொல்லியனுப்பினன்; அவந்திநாட்டின் எல்லைப் புறத்ததாகிய புட்பகநகரத்தில் உதயணனுடைய சுற்றத்தார்களை இருக்கச்செய்து சேனைகளோடே அங்கிருந்து அவர்களைப் பாது காப்பதுடன் பின்பு செய்யவேண்டுவனவற்றை அப்பொழுதப் பொழுது ஆலோசித்துச் செய்துவரும்படி சொல்லி இடவகனை அந் நகருக்கு அனுப்பினன்; சயந்திநகரத்தில் உருமண்ணுவாவை இருக் கச் செய்தான். பின்னும் செய்யவேண்டியவற்றை யெல்லாம் செய்து முடித்து யூகி, "உதயணனுடைய பிரிவினுக்கு ஆற்றுமல் வருந்திய யூகி இறந்துபோய்விட்டான்" என்றொரு செய்தியை எல்லா நாடு களிலும் நகரங்களிலும் பரவச்செய்தனன்; பின்பு ஒருவருக்குந் தெரியாதபடி தான் மறைந்து நின்று ஒரு பிணத்தைத் தன்னுடைய பிணமாகப் பிறர்நினைக்கும்படி செய்து அதனைத் தன்னுடைய அணி கலமுதலியவற்முற் புனைந்து அதைச் சுடுவிக்கும்படி செய்தான்; செய்தபின் தான் மாறுவேடம் பூண்டு அப்படியே வேறுவேடம் பூண்ட பல வீரர்களோடும் வயந்தகன் முதலிய தோழர்களோடும் கூனர் குறளர் சிந்தர் முதலியவர்களோடும் உஞ்சையை யடைந்தான்; அதன்புறத்தேயுள்ள தனியிடமொன்றில் இருந்து மேல் நிகழ்த்த வேண்டியவற்றை எல்லோருக்கும் தெரிவித்துவிட்டுப் பிரச்சோதன னது அரண்மனையிலும் அகநகரத்திலும் புறநகரத்திலும் அயலூர்களி லும் பிறர் அறியாதபடி அவ்வவ்விடத்திற்கேற்ற வேலைகளைப்பெற்று இருந்துவரும் வண்ணம் சொல்லி அவர்களை அனுப்பிவிட்டுச்சென்று தான் அந்நகர்ப்புறத்தேயுள்ள மாகளவனத்தேயிருக்கும் காளிகோயி லில் இருந்து மேல் ஆகவேண்டியவற்றை முதலில் ஆராய்ந்தான்.

யூகி இறந்துவிட்டானென்பதைக் கேட்ட பிரச்சோதனன் மிக்க மகிழ்ச்சியுற்றுப் போருக்குச்சென்ற சேனைகளை வைசாலியினின்றும் வருவித்துக் கவலைநீங்கி, உதயணனுடைய நாடுகளிற் சில பகுதி களையும் வலிந்து கைப்பற்றினன்.

பிங்கலகடகர், யூகி இறந்தானென்ற செய்தியைக் கேள்வியுற்று வருந்திப் புலம்பி மயானமடைந்து அங்கேயுள்ள சாம்பலில் அவனு டைய அணிகலன்கள் முதலியவற்றைக் கண்டு ஆருத் துயரத்தை யடைந்து கௌசாம்பி நகர்க்கு மீண்டனர்.

யூகியோ உச்சைனியின் புறத்தேயுள்ள [1] ஓர் ஊரையடைந்து அங்கே ஒருவருமில்லாத பாழ்வீடொன்றில் வயந்தகன் முதலிய சில அன்பர்களுடன் இருந்து ஆலோசித்து வேறு பாஷைகளை அவர்களுக்குக் கற்பித்துக் கடைவீதி முதலிய இடங்களில் வியாபாரம் முதலியவற்றைச் செய்யும்படி அவர்களை அனுப்பினுன். வயந்தகன் பிரச்சோதனனுடைய குமாரர்களோடு சேர்ந்து கல்வி கற்பானுகி அவர்களுக்கு ஏவல் செய்துகொண்டும் இருந்தான்.

யூகியால் அனுப்பப்பட்ட வீரர்களிற் சிலர் ஊமைவேடமும் சிலர் செவிடர்வேடமும் தரித்துக்கொண்டு அரண்மனை முதலிய இடங்களில் தாம்தாம் செய்தற்குரிய வேலைகளைப்பெற்று அவற்றை நன்கு செய்பவர்களாகி அப்பொழுதப்பொழுது அங்கங்கே நிகழும் செய்திகளையும் ஆண்டுள்ளார் செய்யும் ஆலோசனைகளையும் மெல்ல மெல்ல அறிந்து வந்து யூகிக்குச் சொல்வாராயினர். மற்றையோரிற் பலர் பிறரறியாமல் அங்கங்கே சென்று தாங்கள் அவ்வவ்விடங்களில் அறிவனவற்றை யூகிக்கு அறிவித்தும் அவன் கூறுவனவற்றைத் தாம்அறிந்துகொண்டும் தத்தம் இடம்சென்றுர்கள். பிரிந்தவர்கள் ஒருங்குசேர்வதற்கும் சேர்ந்தவர்கள் பிரிந்துசெல்வதற்கும் சில குறிப் பொலிகளும் குறிப்புக்களும் யூகியினுல் அறிவிக்கப்பட்டிருந்தன.

அவர்கள் அப்படியிருக்கையில், சேதிநாட்டிற்கு அயல்நாடான பாஞ்சாலதேசத்து அரசனுகிய ஆருணியென்பவன், ஏயர் குலத்தவர்க்கும் தன் குலத்தவர்க்குமுள்ள பரம்பரை வைரத்தால் அக்குல வுரிமைபூண்ட உதயணன்பாற் பகைமைகொண்டவனுதலின், அவன் சிறைப்பட்டதையறிந்து உடனே சேனைகளுடன் புறப்பட்டுப் போய்க் கௌசாம்பிநகரத்தைக் கைப்பற்றி அதையே தன்னுடைய இராசதானியாகக்கொண்டு ஆளத்தொடங்கிவிட்டான். அவனுக்கு அஞ்சிய பிங்கலனும் கடகனும் சில சேனைகளோடு அயலிடஞ்சென்று மறைந்திருப்பாராயினர்.

உச்சைனிநகரில் இங்ஙனம் சங்கேதமான சில ஏற்பாடுகளைச் செய்துகொண்டு புறத்தேயிருந்த யூகி, ஒருநாள் மிகுந்தநோயுடையவன் போலவும் தெய்வாவேசங்கொண்டவன் போலவும் தன்னைக் காட்டி நீர்க்கரகமொன்றைத் தலையிலேந்திக்கொண்டும் கையைத் தட்டிக்கொண்டும் பாடிக்கொண்டும் நகரவீதியிற் சென்று, "தேவலோகத்திலிருந்து ஒருதேவன் இந்நகரில் வந்திருக்கிறுன். அவன் என்னு

[1] அவ்வூரின்பெயர் பாகமென்று தெரிகிறது; உதி. தோதய; உதயண.

டைய தலைவன்; யான் அவனைப்பின்தொடர்ந்துவந்தேன். [1] ஐந்தலை நாகமொன்றை இவ்வூரரசன் சிறைச்சாலையில்வைத்திருக்கின்றான். அச்சிறை எவ்விடத்தேயுள்ளது?" என்று மயக்கமும் தெளிவுமுள்ள பலவகையான வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டே [2] பல சனங்கள் வியந்தும் பயந்தும் இரங்கியும் தன்னைச் சூழ்ந்துவர நடித்துக்கொண்டும் பாடிக்கொண்டும் உதயணனிருக்கும் சிறைச்சாலையின் பக்கத்தை யடைந்தான்; அடைந்தவன் உதயணனும் தானுமே கற்றதும் பிறர் அறியாததுமான ஒரு பாட்டைப் பாடினன்; கேட்ட உதயணன் யூகி வந்திருக்கிறானென்று தெரிந்து மகிழ்ந்து கவலைதீர்ந்து தான் அங்கிருந்தலை வேய்ங்குழலை ஊதி அவனுக்குத் தெரிவித்துவிட்டுச் சிறை காப்பாளரிடஞ் சொல்லிக்கொண்டு வேடிக்கை பார்ப்பவன்போலப் புறத்தே வந்தான். யூகியும் அவனுடன் வந்த வீரர்களும் உதயணனைக்கண்டு ஆறுதலுற்றார்கள். பின்பு யூகி பிறர் தன்னைப் பேயென்று நினைக்கும்படி நடித்துக்கொண்டு தானிருக்குமிடஞ் சென்றான்.

மேற்கூறியவாறு யூகி வேடம்பூண்டு சனங்கள் ஐயுறுதற்கிடமான சில வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு பின்னும் சிலநாள் வீதிகளில் உலாவிவந்தான்; அதுகண்டு சிறைச்சாலை வேலைக்காரர்களிற் கூர்ந்த புத்தியையுடைய ஒருவன் பிரச்சோதனனிடஞ்சென்று வணங்கி, "அரசர்க்கரசே! சில தினங்களாகப் பல சனங்கள் தன்னைச் சூழ்ந்துவர நோயாளி ஒருவன் விநோத வேடம்பூண்டும் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் சிலவற்றைச் சொல்லிக்கொண்டும் வீதியில் வருகின்றான். அவன்பாட்டைக் கேட்குஞ்சமயங்களில் உதயணன் வேய்ங்குழல் ஊதுகின்றான்; இவற்றைத் தெரிவிக்கவந்தேன்; பாதுகாத்தருள்க" என்றான். அப்பொழுது, அரசன் அருகில் இருந்த மந்திரிகளைநோக்க, அவர்களிற் சாலங்காயன், "அரசே! அவன் யூகியாக

---

1 'ஐந்தலை நாகம்' என்றது, தோழர் நால்வர்க்கும் உதயணனுக்கும் உயிரொன்றாக இருத்தல்பற்றி; "ஐந்தலை யரவின் சீற்றத் தாரழல் குளிக்கலுற்றார்" (சீவக. 746), "புற்றினி லுறையும் பொறிவரி யைந்தலைப், பற்றரு நாகம் பற்றிவந் தினிதா, உற்றவிந் நகரத் துட்சிறை வைத்தார்" (உதயண. க: 76), "உடம்பா ரிரண்டிற் குயிரொன் றென" (திருவிளை. சங: 13) என்பவை இங்கே அறியற்பாலன.

2 "கொடிக்கோ சம்பிக் கோமக னாகிய, வடித்தேர்த் தானை வத்தவன் றன்னை, வஞ்சஞ் செய்துழி வான்றளை விடூஉய, உஞ்சையிற் றோன்றிய யூகி யந்தணன், உருவுக் கொவ்வா வுறுநோய் கண்டு, பரிவுறு மாக்களிற் றும்பரி வெய்தி" மணி. கஉ: 61-6.

இருக்கலாமென்று நான் ஐயுறுகின்றேன்; அவன் இறந்திருக்கமாட்டான். அவன் மார்பில் [1] யானைக்கொம்பு குத்தியதாலுண்டாகிய தழும்பு ஒன்று உண்டு. அதனை எப்படியேனும் அறிந்துவரும்படி செய்தல் நன்று" என்று தெரிவித்தான். அதனைக்கேட்ட அரசன் அதைப் பற்றி நன்கு ஆராய்ந்து அதை அறிந்துகொள்ளுவதற்குவேண்டிய முயற்சியைச் செய்விப்பானாயினன். தான் கேளாதவன்போல அவற்றையெல்லாம் அறிந்துகொண்டிருந்தவனும் செவிடன்வேடம் பூண்டவனுமாகிய யூகியின் ஒற்றன் ஒருவன் உடனே வந்து நிகழ்ந்தவற்றை யூகியினிடம் தெரிவித்தான். அதன் பின்பு யூகி தன்மார்பிலுள்ள தழும்பை அயலாரொருவரும் தெரிந்துகொள்ளாதபடி கந்தைகளால் மறைத்துக்கொண்டு வழக்கம்போலவே வீதியிற்போய் வருவானாயினன்.

இப்படிச் சிலதினங்கள் சென்றன. பின்பு ஒருநாள் யூகி, "இனி உதயணனைச் சிறையினின்றும் விடுவித்தற்கு உரிய உபாயம் யாது?" என்று தன்னுள் ஆராய்ந்தான்; அப்பால் நள்ளிரவிலே அவன் பேய் வடிவங்கொண்டு பிறரறியாமல் நகரத்துள்ளேசென்று, குணஞ்சிதைந்து கெட்டு மயங்கித்திரிந்து பிறரை வருத்தும்படி நளகிரிக்கு அகிற் புகையை யூட்டியும் ஒருவகை மருந்தைக்கொடுத்தும் மதவெறியையும் கோபத்தையும் பலத்தையும் உண்டாக்கி அதனருகிற் சென்று, "இந்நகரத்தை அழித்து அரசன்முதலியோர்களுக்குக் கவலையுண்டாகும்படி செய்து உதயணனைச் சிறையினின்றும் நீக்கல் உன்னுடைய கடன்" என்று சொல்லி உச்சாடனமந்திரம் ஒன்றை அதன் செவியில் ஓதினான். ஓதியவுடன் அது மிகுந்த கோபமுற்று மதவெறிகொண்டு கட்டுத்தறியை முறித்துத் தன்னைக்கட்டிய சங்கிலியையும் அறுத்து விட்டுப் பெருமுழக்கம் செய்துகொண்டு சுழன்று சுழன்று ஓடி ஓடி ஊரை அழிக்கத்தொடங்கிற்று. அதுகண்ட யூகி உடனே தானிருந்த ஊரையடைந்தான்.

பழகிய பாகர்கள் அதனை அடக்குவதற்குரிய சிறந்த முயற்சிகளைப் பண்ணியும் அந்தயானை அடங்காமல் அவர்களெல்லோரையும் கொன்றுவிட்டது. நகரத்தார் யாவரும் நடுங்குவாராயினர்; இச்செய்தியைக் கேள்வியுற்று,

---

1 "வலிந்து மேற்சென்ற கலிங்கத் தரசன், குஞ்சர மருப்பிற் குறியிடப் புட்டுச், செஞ்சாந்து மெழுகிய சேடுபடு செல்வத்து, மார்பினது வனப்புந் தோளினது திரட்சியும்" பெருங். க. 45 : 2023.

"நாவாய் கவிழ்த்த நாய்கன் போல
ஓவா வவலமொடு காவலன் கலங்கி" (உ. 9 : 46-7)

மிக்க கவலையையடைந்து, அரண்மனையின் சூளிகையில் ஏறிநின்று பார்த்தான். அந்தயானை மாளிகைகள் பலவற்றையும் கோபுரமுதலியவற்றையும் தன்கொம்புகளாற் குத்தி யழித்தலையும், சனங்கள் கொல்லப்படுதலையுங் கவனித்தான். அதனை அடக்குதற்குப் பலவீரர்களை அனுப்பினான். அந்தயானை ஐந்நூறு வீரர்களைக் கொன்றுவிட்டு மதிற்புறம் போந்து அறுநூற்றைம்பது சேரிகளையும் இரண்டாயிரத்தெண்ணூறு பாடிகளையும் பல உய்யானங்களையும் அழித்தது; நகரம் நிலைகுலைந்தது. அதனால் கவலைக்கடலில் அழுந்திய பிரச்சோதனன், "இத்துன்பத்தை நீக்குவதற்குரிய உபாயம் யாது?" என்றுகேட்டபொழுது, "இந்த யானையின் கோபத்தை அடக்குதற்குரிய கருவி சிறைச்சாலையிலிருக்கும் உதயணனும் அவன் கையிலுள்ள யாழுமே; ஆதலால் அவனை யாழுடன் இவ்விடம் அனுப்பின் இந்தயானையை அடக்கிவிடுவான்" என்று சாலங்காயன் கூறினன். பிரச்சோதனன், 'வெல்லமுடியாமல் வஞ்சனையால் மாய யானையைக் காட்டிப் பிடிப்பித்து வருவித்துச் சிறையில் வைத்ததன்றி உதயணனை மதங்கொண்ட யானையின் முன்பும் அனுப்பினேமென்றபழி நமக்கு வருமே' என்று தன்னுள் எண்ணி, "அது செய்தற்கு என் மனம் துணிந்திலது" என்று மறுத்தான்; சாலங்காயன், "இந்திரனுடைய யானையாக இருந்தாலும் அவனுடைய யாழிசைக்கு வசமாகி அடங்கி நடக்குமேயன்றி யாதும் செய்யாது; ஆதலால் அவனை நளகிரியின் முன்பு அனுப்பலாம்; அடங்கிவிடும்; இல்லையாயின் இனி என்ன என்ன தீங்குவிளையுமோ!" என்று வற்புறுத்திக் கூறவே அரசன், "இச்செய்தியை உதயணனிடம் தெரிவித்து நீயே அவனை அழைத்துவருக" என்று சொன்னான். அவன், "வஞ்சனையாற் பிடித்து வந்தேனாதலின், அவனிடம் செல்லுதற்கு அச்சமும் நாணமுமுடையேன்" என்று மறுத்தான். பின்பு சிவேதனென்னும் மந்திரியை விடுப்ப அவன் சென்று உதயணனைக் கண்டு பலபடப் பாராட்டி, "அரசர் கட்டளைப்படி இங்கே வந்தேன்; இப்போது இவ்வூருக்கு நளகிரியென்னும் யானையால் நேர்ந்திருக்கிற பெருந்துன்பத்தை நீக்குதல் உம்முடைய கடமை; சிறையினின்றும் நீக்கி உம்மைக் கௌசாம்பிநகருக்கு அனுப்புதல் தம்முடைய கடமையென்று அவர் தெரிவிக்கச்சொன்னார்; ஆதலால், அருள் செய்யவேண்டும்; மனத்தில் யாதொன்றையும் வைத்துக்

கொள்ளவேண்டாம்" என்று பலமுறை வணக்கத்துடன் சொல்லி உடன்படுவித்தான்; பின்பு மரியாதையோடு மெல்ல அழைத்துக் கொண்டு வெளியே வந்து அவனைச் சிவிகையில் ஏற்றுவித்துக் கண்டோர் இன்புறும்படி அழைத்துச்சென்று, பல பருந்துகளும் கழுகுகளும் மேலே வட்டமிடக் கீழே அளவற்ற கோபாவேசத்தோடு உலாவித் திரியும் அந்த நளகிரியின் முன்பு இறக்குவித்து நிறுத்தினான். மந்திரத்தின் மகிமையால் முதலில் உதயணன் அதனை அசைவறச் செய்துவிட்டு அங்கே நின்றுமிருந்த கருணையுடன் பாடி யாழையும் வாசித்து அருகிற் சென்றான்; அவனது யாழிசையைக் கேட்டயானை உடனே சினந்தணிந்து [1] ஆணையாசாற்கடியுறை செய்யும் மாணிபோல மிகவும் அடங்கி அவனருகில் வந்து அன்புடன் அவனை வணங்கி அவனுடைய ஏவல்கேட்டு நின்றது. கண்டோர் யாவரும் மிக வியந்தார்கள். வணங்கி நிற்கும் அதன் மருப்பின்மீது அடிவைத்து ஏறி உதயணன் அதன் பிடரியிலிருந்துகொண்டு செலுத்த யாதோர் இடையூறுஞ்செய்யாமலே அது வீதிகளிலெல்லாம் உலாவியது. கண்டவர்கள்,

"மன்னவன் வாழ்க வத்தவன் வாழ்க
ஒலிகெழு நகரத் துறுபிணி நீக்கிய
வலிகெழு தடக்கை வயவன் வாழ்கெனப்
பூத்தூய் வீதிதோ றேத்தின ரெதிர்கொள" (உ. 9 : 62-5.)

பிரச்சோதனன் இதனைக்கேட்டு மகிழ்ந்து தேவிமாரோடும் புதல்வியரோடும் புலிமுகமாடத்துவந்து உதயணனைக் காணுதற்கு விரும்ப, உதயணன் அதனையறிந்து யானையைச் செலுத்திக்கொண்டு சென்று அவன் முன்னே நிறுத்தினன். அந்நிகழ்ச்சியைக்கண்ட பிரச்சோதனன் மிகுந்த மகிழ்ச்சியடைந்து உதயணனை நோக்கி, "நீ புண்ணியவான்; தூய்மையமைந்த குலத்திற்பிறந்தவன்; குணக்கடல்; மிக்க பராக்கிரமசாலி; மந்திரநூலில் வலியை; உன் நிலையையறியாமல் யான் உனக்கு மிக்க தவறுசெய்துவிட்டேன்; பொறுத்திடுக" என்றுசொல்லி விலைவரம்பில்லாத ஆரமொன்றை அணிந்து கொள்ளும்படி அவன்பால் அனுப்பினான். உதயணன் அதனை

---

1 "பிரிந்தநற் புதல்வர் வந்து பெற்றதந் தந்தை பாதம், பரிந்தநற் காதலாலே பணிந்திடு மாறு போல, இருந்துதற் பணிந்த யானை யெழின் மருப் படிவைத் தேறிப், பெருந்தகை யேவிக் கேட்டு பெருங்கையாற் றோட்டி கொண்டான்" (உதயண. 98) என் இந்நிகழ்ச்சிக்கு வேறு உவமை கூறப்பட்டுள்ளது.

ஏற்றுக்கொண்டு அவன் விரும்பியபடி எதிரேவந்தான். உதயணனையும் யானை அவனுக்கு அடங்கி அவன் ஏவிய தொழில்களைச்செய்து கொண்டு நிற்றலையும் கண்டு பிரச்சோதனன் மகிழ்ந்து, "உன்னுடைய அருமைச்செயல்களைக்கண்டு மகிழ்ந்தேன். நீ கற்ற வித்தைகள் யாவை? அவற்றை அறிந்துகொள்ள என்மனம் அவாவுகின்றது" என்றுசொல்ல, [1] உதயணன் தான்கற்ற கலைகள் இன்னவையென்று விரித்து விளங்க உரைத்தான்; கேட்ட பிரச்சோதனன், 'இந்த இளமையில் இவ்வளவு வித்தைகள் இவன்பால் நிறைந்திருப்பதற்குக் காரணம் இவன் பழம்பிறப்பிற்செய்த பெருந்தவமேயாகும்' என்று மனத்துள்ளே வியந்து அன்புற்று, "இங்கே எம்மாலியன்ற அளவு உனக்கு வேண்டுவனவற்றைச் செய்வோம்; கௌசாம்பி நகர்க்கு உன்னை அனுப்பும்வரையில் உன் தம்பிமாராகிய இவர்கள் நின்னை வழிபடுவார்களாகுக" என்றுசொல்லித் தன் குமாரர்களை அவன் புடையேநின்று குற்றேவல் செய்யும்படி நியமித்துவிட்டு மனங் கலந்து பேசி மகிழ்வித்தான். பின்னும் அவன் உதயணனை நோக்கி, "இந்தயானை தன் நிலைமை திரிந்ததற்குக்காரணம் என்ன?" என்று கேட்ப, உதயணன் அதனைக் கூறுதற்குத் தலையெடுத்துப் பிரச்சோதனனைப் பார்க்கையில், அவன் பின்னே தாய்மார்களின் இடையேநின்ற வாசவதத்தையைக் கண்டான்; அவ்விருவரும் ஒருவர்முகத்தை ஒருவர்நோக்கி, மதங்கொண்டகளிறும் பிடியும் பாகர்களுக்கு அடங்காமல் ஒன்றையொன்று உற்று நோக்கி இன்புற்றாற்போல இன்புற்று வேறொன்றையும் அறியாராகி ஒருவருள்ளத்தில் ஒருவர் மாறிப்புகுந்து நின்றனர். அப்பால், இடம் அரசன் முன்னிலையாதலால், உதயணன் தன்மனத்தை ஒருவாறு தேற்றிக்கொண்டு, நளகிரி தன்மை திரிந்ததற்குரிய காரணத்தைத் தக்க ஆதாரங்களுடன் விளங்க விரித்துக் கூறினன். அப்போது யானைப் பாகர்களும் சபையிலுள்ளவர்களும் அவன் தேர்ச்சியை அறிந்து கைவிதிர்த்துப் புகழ்ந்தார்கள். அரசன் அயலில்நின்ற பரிசனங்களை அனுப்பிவிட்டுக் கணக்கர் முதலியவர்களை யழைத்துத் தான் எண்ணியவற்றைத் தன் கையிலிருந்த ஏட்டில் வரைந்து அதனை அவர்களுக்குக்காட்டிக் குறிப்பித்து, "இவற்றை யானைச்சேரியிலுள்ள அரண்மனையில் விரைவில் ஆயத்தஞ்செய்துவிட்டு வந்து தெரிவித்திடுக" என்று கட்டளையிட்டனன். அவர்களும் அப்படியே சென்று,

1 கிடைத்த பெருங்கதை யேட்டுப் பிரதியில் இதுவரையிலுள்ள கதையின் மூலப்பகுதியில்லை.

பன்மணி விளக்கும் பள்ளிக் கட்டிலும்
பொன்னி னடைப்பையும் பூரண கலசமும்
கவரியுங் கடகமுங் கதிர்முத் தாரமும்
நிகரின் மாண்கல நிதியொடு நிறைந்த
ஆரியச் செப்பும் யவனமஞ் சிகையும்
பொன்செய் பேழையொடு பொறித்தாழ் நீக்கி
நன்கனம் படுத்து நகுமலர் பரப்பி
விரைவிரி யாளர் புரைவுறப் புணர்த்த
பண்டம் புதைத்த வண்டுபடு வளநகர்
மடையரு மகளிரு மல்லரு மமைச்சரும்
கடையருங் கணக்கருங் காப்பரு முளப்பட
இறைவினை திரியாப் பழவினை யாளரை
வழிமுறை மரபிற் றங் தொழின்முறை நிறீஇ (க. 32: 72-84)

"எல்லாம் நிறைவேறின" என்று பணிந்து விண்ணப்பஞ் செய்தார்கள். அரசன் உதயணனை நோக்கி, "இந்நகர் உன்னுடையது; யாங்கள் யாவரும் உனக்கு உரியவர்களே; எம்முடைய பொருள்களெல்லாம் உன்னுடையனவே; ஆதலால் இனி உன்னுடைய மாளிகை சென்று இளைப்பாறுக" என்று முகமலர்ந்து அனுப்பி அவன் பின்னர்ச்செல்லும்படி ஊர்தியையும் செலுத்திவிட்டுத் தான் அரண்மனையை அடைந்தான். கண்டோர் யாவரும் எழுந்து எழுந்து தன்னைக் கைதொழுது புகழ்ந்து மிகப்பாராட்ட, உதயணன் வீதி வழியே சென்று குஞ்சரச்சேரியை அடைந்து நளகிரியினின்றும் இறங்கித் தனக்கு அமைத்திருந்த மாளிகையை அடைந்தான்.

பின்னர் அவன் அம்மாளிகையிலுள்ள பலவாயில்களையும் கடந்து சென்று அங்கங்கே அமைந்துள்ள,

அந்தக் கேணியு மெந்திரக் கிணறும்
தண்பூங் காவுந் தலைத்தோன் றருவிய
வெண்சுதைக் குன்றொடு வேண்டுவ பிறவும்
இளையோர்க் கியற்றிய விளையாட் டிடத்த
சித்திரப் பூமி வித்தக நோக்கி (க. 33 : 2-7)

வியந்தான்; பிறகு, 'துரியோதனனுதியர் பாண்டவர்களை அகப்படுத்தற்குச் செய்த அரக்குமாளிகையைப்போலப் பிரச்சோதனன் நம்மை அகப்படுத்தற்கு வஞ்சனையாக அமைத்த இடத்தைப் போலவும் இவ்விடம் இருத்தல் கூடும்; இதன் உண்மையை ஆராய்ந்தே தெளிய வேண்டும்' என்று எண்ணி உடனிருக்கும் வேலைக்காரர்களுடன் ஒவ்வோரிடத்

தும் சென்று சென்று அம்மாளிகையிலும் அதன் சுற்றுப்புறத்திலு முள்ள

முட்டு முடுக்கு மிட்டிடை கழியும்
கரப்பறை வீதியுங் கள்ளப் பூமியும்
மரத்தினு மண்ணினு மதியோர் புணர்க்கும்
எந்திர மருங்கி னிழுக்க மின்மையை (க. 33 : 16-9)

ஆராய்ந்து ஆராய்ந்து பார்த்துப் பார்த்து, அங்கே சிறிதும் தீங்கில்லையென்றறிந்து தேறினன்; அதன்பாலுள்ள சோலையின் வளத்தைக் கண்டு அங்குள்ள ஆணும் பெண்ணுமாகிய பறவைகளும் மான்முதலிய மிருகங்களும் தம்முள் ஒன்றையொன்று அன்புடன் பாராட்டுதலைக்கண்டு, 'மதரரி நெடுங்கண் வேற்கடை கான்ற, புள்ளி வெம்பனி கரந்த கள்விதன், காரிகை யுண்டவென் பேரிசை யாண்மை, செறுநர் முன்னர்ச் சிறுமை யின்றிப், பெறுவேன் கொல்' என்று வாசவதத்தையை நினைந்து நினைந்து காமபரவசனாகிக் கவலையுற்றான். அப்போது, [1]உலகையெல்லாம் ஆண்ட சக்கரவர்த்தி தன்னிலைமை வேறுபட்டுக் குறைந்ததுபோலச் சூரியன் அத்தமித்தான்; உடுக்கள் விளங்கின;

மூலப்பாற் காலத்து முடிமுறை யெய்திக்
குடைவீற் றிருந்த குழவி போலப் (க. 33 : 52-3)

பிறை உதித்தது. உதயணன் வாசவதத்தையின் நினைவால் வருந்தி மயங்குவானாயினன். இஃது இவ்வாறாக;

புலிமுகமாடத்திலிருந்து தாய்மாருடன் சென்ற வாசவதத்தை தோழிமார்களுடன் கன்னி மாடத்தைச் சார்ந்த பூஞ்சோலையின் ஒருபக்கத்தையடைந்து உதயணனை நினைந்து நினைந்து மயங்கி, "அரசிளங்குமரனைச் சுற்றத்தினின்றும் பிரித்து வருவித்துச் சிறைப்படுத்தியதோடுநில்லாமல் தனியனென்று நினையாது மதங்கொண்ட நளகிரியை அடக்குவதற்கு யாழொடு செல்கவென்றுங் கூறி அவன் அதனை அடக்குஞ் செயலை உற்றுநோக்கிக்கொண்டே நின்ற அரசனுடைய கண்கள் மரத்தால் இயன்றனவோ!" என்று தந்தையைவெறுத்துப் பொறியற்ற பாவைபோலச் செயலற்று நிறையழிந்து, "காமனென்னும் நாமத்தைமறைத்து வத்தவனென்னு நற்பெயர்கொண்டு யானையைப் பிணித்ததன்றி என் உள்ளத்தையும் பிணித்த கள்வனை இன்னும் காணவும் பெறுவேனோ" என்று புலம்பி அவனைப்போலவே

---

[1] பிரச்சோதனனுடைய பெருமையின்குறைவு இங்கேகூறிய சூரியாஸ்தமயவருணனையாற் குறிப்பிக்கப்படுகின்றது.

காமபரவசையாகி உருவம் வேறுபட்டனள். அவளைப் பிரிந்து தனித் தனியே பூக்கொய்தல் முதலியவற்றிற்கு வேறு வேறிடங்களுக்குச் சென்ற தோழிமார்களெல்லோரும் வந்து அவளுடைய வேறு பாட்டை அறிந்து, "தத்தையே! இந்த நிலைமை உனக்கு வந்ததற்குக் காரணம் என்ன?" என்று வினவி வினவி ஒன்றும் அறியாதவர்களாகி அவளை மெல்ல அழைத்துச் சென்று மலரணையிற் படுக்கச்செய்தனர். அவள் அதிற் கிடந்து இமை பொருந்தாளாய் மிகவும் துன்புற்றனள்.

இங்ஙனம் இருவர் நெஞ்சமும் அந்த இராமுற்றும் இப்படியே நிலைகுலைந்து வருந்தின; அப்போது [1] 'எல்லாம், விடிந்தது விடிந்ததென்ன விடிந்தது கங்குற் காலம்.'

உதயணனையே நினைத்துக்கொண்டிருந்த பிரச்சோதனன் துயிலுணர்ந்தெழுந்து கண்களுக்கு மையெழுதிப் பசுவைத் தரிசித்துக் காலைக்கடனை முடித்துக்கொண்டு மகுடஉத்துறந்த மாசறு படிவத்தையுடைய துறவிகளை வணங்கிப் பெரியோர் மந்திரித்து அளித்த தீர்த்தத்தை உட்கொண்டு பேரத்தாணியில் மாலைதொடர்ந்த மங்கலப்பந்தரின்கீழே விரிநூலந்தணர் இருக்கும் வெண்மணை சூழ்ந்த ஆசனத்தேயிருந்து கேட்கவேண்டிய தருமங்களையும் பிறவற்றையும் அறிஞர்பாற் கேட்டான். அப்பால், அங்கே வந்தவர்களை அனுப்பி விட்டு அரண்மனை சென்று உதயணனோடு தனியே பேச விரும்பி அவனை விரைந்து அழைத்து வருகவென்று உழையர்களை அனுப்பினான். அவர்கள் ஓடிச்சென்று தெரிவிக்கவே உதயணன் இழையணி இரும்பிடி யெருத்தமேறிக் கடையுணிஆவணம் கைதொழும்படி அரண்மனை வாயிலில் வந்து நின்றான்; அதனையறிந்த அரசன், தருமணல்முற்றத்துத் தான் எதிர்சென்று மிக்க உபசாரத்துடன் அழைத்துக்கொண்டு உள்ளே சென்று மணியம்பலமொன்றில் இரட்டைத் தவிசில் அவனை முதலில் இருக்கச்செய்து தானும் அதில் உடனிருந்து, "இதனை உன்னுடைய இடமென்று இனி நான் சொல்லுவது மிகை" என்பது போன்ற உபசாரவார்த்தைகள் பலவற்றைச் சொல்லி முகவாச முதலியவற்றையளித்து, "இனி உரிமை பூண்டு எண்ணியவாறு நீ நடப்பாயாக" என்று சொன்னான்; பிறகு அவனை அங்கே இருக்கச் செய்துவிட்டு, "உதயணனை எந்தவகையாலாவது சிலகாலம் இவ்விடத்திலேயே இருக்கும்படி செய்யவேண்டும்" என்கிற எண்ணத்தோடு, தான் அரண்மனைக்குள்ளே சென்று சிவே

1 திருக்குற்றாலப்புராணம், கஉ: 72.

தனை வருவித்து அவனை நோக்கி, "நீ உதயணனிடஞ் சென்று, 'இராசகுமாரர்க்கு ஆயுதவித்தைமுதலிய பலவகைக் கலைகளையும் வாசவதத்தைக்கு வீணையையும் பயிற்றுவிக்கவேண்டும்; எம்முடைய குறை இது' என்று யான் விரும்புவதாகச் சொல்லி எப்படியேனும் அவனை உடன்படுவித்து வருக" என்று கூறினன். அவனும் அப்படியே சென்று அரசன் சொல்லியவற்றை யெல்லாம் உதயணனுக்கு வணக்கத்துடன் தெரிவித்தனன். அப்பொழுது உதயணன் நெடுநேரம் யோசித்து, "அரசன் கூறியவண்ணம் இத்தொழிலைச் செய்தல் நமக்குச் சிறுமையென்று நாணினால், விரும்பிய கன்னியைப் பெறுதற்கு வேறு வழியில்லாமையின் யாம் பிழைத்தற்கு இடமில்லை ; அங்ஙனம் கற்பிக்குமிடத்துப் பலர் நம்பாற் கற்றுக்கொள்ள வருவார்கள்; அவருள்ளே புலிமுகமாடத்தில் அன்றுகண்ட கன்னியரசை யாம் காணுதல் கூடும் ; காணின் நாம் உய்தற்கு வழியுளதாம் ;

உயிர்கெட வருவழி யொழுக்கங் கொள்ளார்
செயிரறு கேள்வி தேர்ந்துணர்ந் தோர் (க. 34: 88-9) ;

நமக்கு என்ன சிறுமைவரினும் இனி அரசன் கூறுவனவற்றைச் செய்வதே நன்று" என்று தெளிந்தான் ; பின்பு, "விரும்பியவண்ணஞ் செய்வேனென்பதைச் சொல்லுக" என்று உரைக்க 'சிவேதன் சென்று அரசனுக்கு உதயணன் உடன்பட்டதைத் தெரிவித்தனன். அப்பால் அரசன் தன் தேவியர் பலர்பெற்ற மகளிருள் பெதும்பைப் பருவத்து மகளிர்கள் யாவரும் வருவார்களாக என்று சொல்லி விடுப்ப, செவிலித்தாயர் முதலியோர்,

பளிக்கறைப் பூமியும் பங்தெறி களத்தும்
மணிக்கயிற் றூசன் மறலிய விடத்தும்
கொய்ம்மலர்க் காவும் பொய்கைக் கரையும்
அந்தக் கேணியும் வந்துபெயர் கூவி (க. 34: 115-8)

முத்தினரும உத்தியரும் மும்மணிக் காசினரும் கச்சினரும் கண்ணியரும் வெள்வளையினரும் சில்கலத்தியன்ற அணியினரல்லது பல்கலஞ் சேரா மெல்லென் யாக்கையருமாகிய அவர்களை அழைத்துக் கொண்டுவந்தனர். அவர்கள் பால்பரந்தன்ன பஞ்சி மெல்லணையிற் சேக்கைமெலியச் செம்மாந்திருந்த முடிகெழுதந்தை முன்னர்த் தோன்றி வணங்கி நின்றனர். நின்றவர்களையெல்லாம் அரசன் முறையே நோக்கி அவர்களுள்ளே,

'ஒண்மையும் நிறையும் ஓங்கிய ஒளியும்
பெண்மையும் பெருமையும் பிறவும் உடைமையிற்

பாசிழை யாயத்துப் பையென நின்ற
வாசவ தத்தைவல்லளாகென ' (க. 34 : 151-4)

எண்ணி, பந்தும் கிளியும் பசும்பொற் றூதையும் கந்தியன் மயிலும் கரந்துறைபூவையும் கண்ணியும் கழங்கும் கச்சும் முற்றிலும் பவழப் பாவையும் பளிக்குக் கிளிக்கூடு மாகிய இவற்றில் விரும்பியவற்றை அவர்களுக்கு அளித்து, " நீங்கள் இதுவரையிற் கற்ற

அடிசில் வினையும் யாழின் றுறையும்
கடிமலர்ச் சிப்பமுங் கரந்துறை கணக்கும்
வட்டிகைவரைப்பும் வாக்கின் விகற்பமும்
கற்றவை யெல்லாங் காட்டுமி னெமக்கு " (க. 34 : 166-9)

என உரைத்து ஒருவகையாக மகிழ்வித்து அவர்களையெல்லாம் அனுப்பினன். அவர்கள் சென்ற பின்பு அயலில் நின்றவர்களை நோக்கி, '' இனி வாசவதத்தை உதயணகுமாரன்பால் யாழ் கற்றுக் கொள்ளத் தொடங்குவாள் ; அதற்கு வேண்டியவற்றை விரைவில் அமையுமின் " என்றனன். அதனைக் கேட்ட முதற் பெருந்தேவி தன்மகளுக்கு இப்பயிற்சி மிக்க மாட்சிமையைத் தருதற்குரியது என்றெண்ணித் தன்னுள் மகிழ்ந்தாள். மற்றத் தேவியரும் மிகப் புகழ்ந்தார்கள். சக்கரவர்த்தியின் மகளுக்கு யாழ் கற்பித்தற்குரிய ஆசானாக வருபவன் பெரும்புண்ணியமுடையோன் என்று அடிய வரும் ஆயத்தாரும் வியந்தார்கள். வத்தவர்பெருமான் கைவரப் பெற்ற வீணைவிச்சை வாசவதத்தைக்கே உரியதென்று முற்றத்தே நின்றவர்கள் தம்முள் மெல்லப் பேசிக்கொண்டார்கள்.

அப்பொழுது செவிலியர்கள் பூக்கள் முதலியவை வைக்கப்பட்டுள்ள பொன்னகல்களை அங்கே அலங்காரமாக வைத்து இசைக்குரிய தெய்வங்களை அழைத்துத் துதித்தனர் ; பிறகு வாசவதத்தையைச் சந்தன நறுநீரால் ஆட்டி அலங்கரிக்கத் தொடங்கினர் ; யானைத் தந்தத்தாற் செய்த மங்கலச்சீப்பால் அவளது கூந்தலை வாரிப் பொன்ஞாற்கட்டி முடித்துப் பொற்சின்னங்களை அதன்மேலே சிதறி, நெற்றியிற் சுட்டியையும் முத்தணிகலன்களையுஞ் சேர்த்தி, முன்ன மிருந்த ஓலையையும் குழையையும் நீக்கிக் காதுகளிற் கடிப்பிணைகளை யணிந்து, சந்தனக் குழம்பால் தோள்களில் பூங்கொடியொன்றை யெழுதி, மார்பில்முத்தவள்ளியையும் மும்மணியையும் பொற்றோரை யையும் பூட்டி, இடையிற்கட்டிய மட்டஞ்செய்த பட்டுடையின்மீது மேகலையைச் சேர்த்தி, பின்னும் அணியவேண்டிய மெல்லிய ஆபரணங்களையணிந்து, நடைப்பெருந்தவிசின்மீது அவளை மெல்லநடத்தி

வருவாராயினர். அப்போது மிகவும் அழகிய நான்கு ஆலவட்டங்களைப் பக்கத்தே கன்னியர்கள் அசைத்தனர். அவள் தன் தாய்மாரோடு மெல்லென வந்து பொற்றகடுபோதிந்த சுவர்களையுடையதும் யானைக்கொம்பாலாகிய தூண்களையுடையதும் மேற்கட்டி கட்டியதுமாகிய கீதசாலையிலுள்ள வேதியின்மீது செவ்வரக்குவழித்த பூமியின்மேலே சுற்றத்தோடு புகுந்து மெல்லிய பலவகையான மலர்பரப்பிய தனியிடமொன்றில் திரைமறைவில் நின்றனள். அப்போது தாய்மார்கள், "யாழைப்பூசித்தற்கும் அதனைக்கற்பிக்கத் தொடங்குவதற்கும் உரிய நல்லவேளை வந்துவிட்டது. இதனை உதயணனுக்குத் தெரிவிக்க வேண்டும்" என்று சொன்னார்கள். உடனே சிலமகளிர் ஓடிச்சென்று தெரிவிக்கவே அவன்வந்து அங்கே அமைக்கப்பட்டுள்ள மெல்லியஆசனத்தின்மேல் வீற்றிருந்தனன். தாயர் வாசவதத்தையை அழைத்துவந்து மேற்கூறிய திரைமறைவிலேயே வேறொரு தவிசில் இருக்கச் செய்தனர். அப்போது, "யாழ் கற்றுக்கொள்ள இங்கே வந்திருப்பவள் நம்மனத்தை முன்பு கவர்ந்த பெண்மணியோ, அல்லளோ?" என்று உதயணன் எண்ணிக்கொண்டிருந்தான். 'நமக்கு யாழைக் கற்பித்தற்கு இங்கே வந்திருப்பவன் அன்று நளகிரியையடக்கி அதனையூர்ந்து வந்து புலிமுகமாடத்தின் எதிரே நின்று நம்மனத்தைக் கவர்ந்து சென்ற ஆடவர் சிங்கமோ, வேறு யாரோ?' என்று வாசவதத்தையும் எண்ணிக்கொண்டிருந்தாள். அந்தச்சமயத்தில் தோழிமார், "ஆசிரியனுக்குச் செய்யவேண்டிய வழிபாடு இதுவாகும்" என்று சொல்லி, வாசவதத்தையின் கையைக் குவிக்கச்செய்து திரையைத் திறந்தனர். திறந்தபொழுது, ஒருவரையொருவர் கண்டு இருவரும் களித்து ஐயம் நீங்கி இன்புற்றனர்; [1] 'செம்புலப் பெய்நீர்போல அன்புடை நெஞ்சம் தாம் கலந்தன'; அப்பால், தாய்மாரும் கைக்கோற் சிலதரும் கன்னியரும் புறத்தே பாதுகாத்து நின்றனர். அப்போது அவன் யாழையளித்துக் கற்பியா நிற்க, அவள் அதனையேந்திக் கற்பாளாயினள்.

இங்ஙனம் அவன் நாடோறும்வந்து வாசவதத்தைக்கு யாழைப் பயிற்றுவிக்கையில் அந்நகரத்துள்ள வம்பமாக்களில் ஒருசாரார், "பகைவர் குறுகவொண்ணாத அந்தப்புரத்தில் இருத்தற்குரிய தன்மகளொருத்திக்கு யாழ்கற்பிக்கும்படி அயலானாகிய அரசிளங்குமரனொருவனை ஆராயாமல் தெளிந்து ஆசானாக நியமித்த நம் பேதைமன்னன் அதனால் விளையுந் தீங்கைச் சிலகாலஞ்சென்றபின்னராவது நன்றாகத்

1 குறுந்தொகை, 40.

தெரிந்துகொள்வான்" என்றனர். இப்படியே மற்றையோரும் தத்தமக்குத் தோற்றிய கருத்துக்களைத் தோற்றியவாறு விரைவாகச் சொல்லிவிட்டு அப்பால் அச்சமுற்று அயலிடங்களைப் பார்த்துக் கொண்டே "இச்செய்தி அரசன்பால் நிகழ்வதாதலின், யாம் யாதொன்றையும் சொல்லலாகாது" என்று வாயடங்கினர்.

தம் தந்தையின் கட்டளைப்படி அரசகுமாரர்கள் உதயணன்பால் வில்வித்தை முதலியவற்றையும் யானையேற்றம் குதிரையேற்றம் முதலியவற்றையும் யுத்த முறைகள் பலவற்றையும் பிறவற்றையும் நாடோறும் கற்றுவருவாராயினர். இங்ஙனம் சிலநாட்கள் சென்றன.

உடுப்பன பூசுவன அணிவன உண்பன முதலியவற்றை உரிய காலத்தில் தக்கவர்கள் முகமாக அரசனது கட்டளையால் பாலகுமாரன் உதயணகுமரனுக்கு ஒவ்வொரு நாளும் தவறின்றி அனுப்பிக்கொண்டே வந்தான்; ஒருநாள் தன்னுடன் கல்விபயிலும் வயந்தகனிடமாக அவற்றை அனுப்பினன். அங்ஙனம் அனுப்பப்பட்டுவந்த வயந்தகனைக்கண்டு உதயணன், "இவர் எனக்கு முன்பு பழக்கமுள்ளவர்போல்கின்றார்" என்று அயலில் நின்றவர்களை நோக்கிக் கூற, வயந்தகன் மறுத்தனன். "இவர் செப்பமுடையவராக இருத்தலின், எனக்கு அனுப்பவேண்டியவற்றை இவர்பாலே அனுப்பிவருக" என்று உதயணன் சொல்லி விடுத்தமையால், அன்றுமுதல் அனுப்ப வேண்டியவற்றைப் பாலகுமரன் வயந்தகனிடமாகவே அனுப்புவானாயினன். அதனால், தன்னுடைய தோழர், வீரர் முதலியோர் வேறு வடிவமும் வேறு பெயருங்கொண்டு ஒவ்வொரு வேலையைப்பெற்று அந்நகரத்தின் அகத்தும் புறத்தும் இருத்தலையும் அவர்கள் செய்து வரும் அரியசெயல்களையும் அவற்றிற்கெல்லாம் காரணமான யூகியின் இடைவிடாத முயற்சியையும் வயந்தகன் முகமாக உதயணன் அறிந்துகொண்டான்; புறத்தேயுள்ள அவனுடைய தோழர் முதலியோர்களும் உதயணனுடைய நிலைமையை ஒவ்வொரு நாளும் வயந்தகனாலறிந்து, 'எண்ணியவற்றை எப்படியும் நிறைவேற்றுவோம்' என்று ஆறுதலுற்று மிக்க ஊக்கமுடையவராய் இருந்து வருவாராயினர்.

இப்படியிருக்கையில், வாசவதத்தையின் பார்வையால் உதயணன் விருப்பம் மிகவே அதனால் துன்பமுற்று மனவேறுபாட்டையும் உடல் வேறுபாட்டையுமடைந்தான்; நனவிலுங் கனவிலும் அவளையே நினைந்து நினைந்து அராற்றும்படியான காமநோய் அவனுக்கு அதிகரித்தது.

தீமுகத் திட்ட மெழுகிற் றேம்பியும்
தாய்முகத் தியாத்த கன்றிற் புலம்பியும் (க. 35 : 52-3)

அவன்வருந்துவானாகி ஒருநாள், 'இவள் காரணமாக உண்டான நமது வேறுபாட்டைப் பழகியவர்கள் காணின் ஐயுறுதல் கூடும்; பின்பு இதனை மறைப்பதற்கும் வழியிராது; ஆதலால், இதனை வேறுவகையால் மறைத்தல்வேண்டும்' என எண்ணி வயந்தகனோடு ஆராய்ந்து, "அயலானொருவனிடம் ஆசைகொண்டு அவனிடஞ்சென்றுவரும் இயல்புள்ள பரத்தையொருத்தியை எப்படியேனும் அழைத்துவா" என்று சொன்னான். அவன் கட்டளையின்படி வயந்தகன் புறத்தே சென்றுநகரத்தார் அறியுமாறு, "முன்னம் வெறிகொண்ட நளகிரியின் மீது உதயணன் உலாவியபொழுது அவனைவிரும்பி அவன் மனத்தைக் கவர்ந்து அவனை அரற்றிக்கொண்டிருக்கும்படிசெய்த நருமதையென்பவள் எங்கேயுள்ளாள்?" என்று கேட்ப ஊரார், "அத்தன்மையையுடையாள் பரத்தையர் சேரியில் அரங்கியல் மகளிர்க்கு ஆடலைக்கற்பிக்கும் தலைக்கோற்பெண்டிருள் முதியவளாகிய ஒருத்தியின் மகள் நருமதையென்பாள்" என்று கூறினர். வயந்தகன் கைந்நிறைய நூற்றொருகழஞ்சு மாற்றுயர்ந்த பொன்னை ஏந்திக்கொண்டு மன்றங்களிலும் மறுகுகளிலும் தான்செல்லும் செய்திபரவும்படி செய்தான்; தேர்மீதுசென்று, தமக்குரிய யாழ்முதலிய அறுபத்துநான்கு கலைகளில் நன்கு பயின்றவர்களும் ஒன்றுமுதல் ஆயிரத்தெட்டு இறுதியாகிய பொற்பரிசங்களைப்பெறுபவர்களும் பள்ளிமருங்கிற் படிறின்றி ஒழுகுபவர்களுமாகிய செல்வப்பரத்தையருடைய சேரியையடைந்து விசாரித்துக்கொண்டே நருமதையின்வீட்டை அடைந்தனன்; அப்பொழுது அவன்வரவையறிந்த தாய்க்கிழவி மிக்க மரியாதையோடு வரவேற்று அவனை ஓர் ஆதனத்தில் இருத்தி அவன்வந்த செய்தியை அறிந்து, "என்மகள் உதயணன் மனத்தில் உள்ளாளென்றால் அவள் எல்லாரினும் மிக்கபெருமை பெற்றவளே; அவளைப்பெற்ற நானும் பாக்கியசாலியே; அவளைப் பொருளாக நினைந்து இப்போது பொன்னையனுப்பியவன். தானேவந்து பாதுகாக்கவில்லையே" என்று சொல்லிவிட்டு அவன் வந்த நோக்கத்தை நருமதைக்குச் சொல்லியனுப்பினாள். அவள், [1] "என்ன கொடுத்தாலும் நான் அயலான் வீட்டுக்குச்செல்லேன்" என்று மறுத்தனள். அருகிலிருந்த உறவினர், "இவளை வலிந்து பிடித்துச் செல்வாயாக" என்று கூறவே, வயந்தகன் அவளை அப்படியே செய்து தேரிலேற்றி

[1] இஃது ஒருசாரார் கொள்கை.

வீதிவழியேசென்றான். செல்லும்பொழுது அவள், "கூட்டத்தாரே! என்னைக் கொல்லுதற்கு வத்தவன்பால் இவன் கொண்டுசெல்வதைக் காண்பீராக" என்று அரற்றினாள். அவர்கள், "தக்க தலைவன்பால் அழைத்துச் செல்லுகையில் இங்ஙனம் அரற்றுகின்ற இவள் அறியாமையையுடையவளோ? பேடியோ?" என்றும், "உடன்பாடில்லாதவளைத் தன்னுடைய அதிகாரத்தால் வலிந்து அழைத்துவரச் செய்தமையால் வத்தவன் காமவிருந்தினன்; அவன் பெண்டிர்கள்பால் தவறு செய்தலுங் கூடும்" என்றும், "நடநவில் மங்கையருடைய நலத்திற்கு அவன் விருந்தினன்போலும்!" என்றும் சொல்வாராயினர். வயந்தகன், உதயணனது காமவேறுபாட்டினை இவ்வாறு நகரத்தார் யாவரும் அறியும்படி செய்தவனாகி அவளை அழைத்துச்சென்று உதயணன்பால் அன்றிரவுமுற்றும் இருத்தி மறுநாட்காலையில் அனுப்பிவிட்டனன். உதயணனும் நருமதையும் ஒருவரை ஒருவர் விரும்பினாரல்லர்; வாசவதத்தைபால் தனக்குள்ள விருப்பத்தையும் அதனாலுண்டாகிய தன் வேறுபாட்டையும் மறைத்தற்கு உதயணன் செய்வித்த இச்செயல் நருமதையின்பாலுள்ள விருப்பத்தால் அவன் நிகழ்த்தியதாகவே நகர் முழுவதும் பரவியது.

இதனையறிந்த ஒற்றர்கள் விரைந்தோடிச்சென்று செவ்வியறிந்து பிரச்சோதனனுக்கு உணர்த்தினர்; கேட்ட அரசன் இச்செயலில் வெறுப்புற்றாலும் பிறரைப் பழியாத இயல்பினனாதலால், "உதயணன் இங்ஙனம் ஒழுகுதல் அரசகுமாரனாகிய அவனது இளமைக்கு இயல்பே" என்று புன்னகையுடன் சொல்லிவிட்டு,

"சாமரை யிரட்டையுந் தமனியக் குடையும்
மாமணி யடைப்பையு மருப்பிய வூர்தியும்
பைந்தொடி யாயமும் பட்டமு முடையோர்
ஐம்பதி ஞயிர ரரங்கியன் மகளிருள் (க. 36 : 21-4)

உதயணன் தன்னை விரும்பும்படி நல்வினைப்பயன் வாய்க்கப்பெற்ற நருமதைக்கு இவை உரியன" என்று பல ஆபரணப் பேழைகளையும், மரத்தாற் செய்விக்கப்படாமல் யானைத்தந்தத்தாலும் பொன்னாலும் மணியாலுஞ் செய்விக்கப்பட்டதும், முகத்தில் முத்துமாலைகளையும் கழுத்திற் பொன்னாலாகிய கிண்கிணிமாலைகளையுமணிந்த உயர்ந்த பாண்டிலெருதுகள் பூட்டியதுமாகிய ஒருவண்டியையும் நருமதைக்கு அனுப்பச்செய்தான்; அன்றி, "இன்றுமுதல் அவள் நீர்விளையாட்டு, திருவிழா முதலியவற்றிற்காக நகர்ப்புறத்தே செல்லுதலையும், அரண்மனையில்வந்து ஆடுதலையும் தவிர்வாளாக" என்றும் கட்டளையிட்டான்.

வாசவதத்தை உதயணன்பாற் கற்று யாழ்வித்தையிற்சிறந்த தேர்ச்சியடைந்து விளங்கிவருதலைக் கேள்வியுற்ற ஏனை அரசர்கள், அவளை மணஞ்செய்துகொள்ள விரும்பி ஒருவருக்குத் தெரியாமல் ஒருவர் மிகவும் உயர்வுள்ள பொன்னுபரணங்களை யானைகளின் மேலேற்றி வணக்கத்துடன் அனுப்பியதோடு பிரச்சோதனனுக்குத் தத்தம் கருத்தையும் சொல்லிவிடுத்தார்கள். அவனும் அவற்றை அங்கீகரித்து அவர்கள் குறிப்பையறிந்தும் தன்கருத்தை வெளியிடாதவனாகி யிருந்தான். பிற அரசர் மணம் பேசவந்த செய்தியைத் தன்செவிலிகளுள் ஒருத்தியாகிய சாங்கியத்தாயாலறிந்தவாசவதத்தை பொறியற்ற புதுமரப் பாவைபோல விழுந்து நடுங்கி விம்மி, "அரசர்கள் எனக்காகப் பொற்பரிசமனுப்பியதும் அவற்றை என் தந்தை அங்கீகரித்ததும் உண்மையாயின் உயிரைவிடுவேன்; அதன்பின் எப்படியாவது எந்தை தன் கருத்தை முற்றுவித்துக் கொண்டு வாழ்க" என்று உதயணன்பாலுள்ள அன்பின் மிகுதியாற் பலவாறு அரற்றிக் கண்ணீர்த் துளிகளை வீழ்த்தி மயங்கிக் கலங்கிப் புலம்புவாளாயினள். அந்நிகழ்ச்சியைக்கண்ட சாங்கியத்தாய், தன்மடிமீது அவளை வைத்துக்கொண்டு கண்ணீரைத் துடைத்து அவள் துன்பத்தைமாற்றி, "என் பாவையே! பிறஅரசனுக்கு உன்னை மணஞ்செய்விக்க அரசன் துணிவானோ? அங்ஙனம் துணிவானாயின் நாமெல்லாம் அரசனை விட்டுப் பிரிந்துசென்று தவஞ்செய்வோம்; உன்னுடையஎண்ணத்தை அறிந்துகொள்ளுதற்காகவே நான் இப்பொய்ச்செய்தியைச் சொன்னேன்" என்று அவளுடைய கூந்தலையும் நெற்றியையும் கையால் தைவந்து, "உன்தந்தையின்கருத்தை யான் அறிவேன்; கேட்பாயாக:

இளமையும் வனப்பு மில்லொடு வரவும்
வளமையுந் தறுகணும் வரம்பில் கல்வியும்
தேசத் தமைதியு மாசில் சூழ்ச்சியோ
டெண்வகை நிறைந்த நன்மகற் கல்லது
மகட்கொடை நேரார் மதியோ ராதலின் (க. 36 : 89-93)

இக்குணங்கள் நிறைந்த உதயணனுக்கே உன்னை மணஞ்செய்விக்க எண்ணியிருக்கின்றனன்; இதனைத் தெளிவாயாக" என்றுதேற்றினாள்; வாசவதத்தை தலையெடுத்துக் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு வருத்தம் நீங்கினள்; செவிலி, "தத்தையே! ஆயத்தாரோடு நொடிகளைப் பேசிக்கொண்டே இருந்தமையின் நேற்றிரவுமுழுவதும் நீ தூங்கவில்லை; உதயணன் வரும்வரையில் நீ தூங்குவாயாக" என்று சொல்லி அவளைப்படுக்கச்செய்து காஞ்சனமாலையை யழைத்து,

"காஞ்சனமாலாய்! யான் வரும்வரையில் யாரையும் இங்கே புக விடாதே" என்று கூறிவிட்டுக் கீதசாலை சென்றாள்; இயல்பாகவே யாழ் கற்பித்தற்கு அங்கேவந்த உதயணனை அவள் தனியிடத்திற்கு அழைத்துச்சென்று இருக்கச்செய்தாள்; நிகழுஞ் செய்திகளைக் கண்ணாலும் செவியாலும் அறிந்து உடனே சென்றுவெளிப்படுத்துவோர் அவ்விடத்திலில்லையென்பதையறிந்து அவனை நோக்கி,

> "மண்ணகங் காவலன் மாபெருந் தேவி
> திருவயிற் றியன்ற பெருவிறற் பொலிவே
> இனையை யாவது மெம்மனோர் வினை" (க. 36 : 144-6)

என்று பாராட்டித் தன்அன்பைப் புலப்படுத்தினாள்; பிறகு, "அரசிளஞ் சிங்கமே! என்வரலாற்றை அறிவாயாக; நான் கௌசாம்பி நகரிலுள்ள ஒரு பார்ப்பனி; கணவன் இளமையில் என்னைப் பிரிந்து உன் தந்தையின் அவைக்களத்தைச் சார்ந்து அங்கே சில தினங்கள் தங்கி அப்படியே வேறிடஞ்சென்று திரும்பிவாராமையால், கற்பின் வரம்பைக்கடந்து ஒழுகினேன்; என் செய்கேன்! அதனையறிந்த அறங்கூறவையத்தார் அக்குற்றத்திற்காக மணற்குடத் தோடு கட்டி யமுனையாற்றினிடையே என்னை வீழ்த்திவிடும்படி விதித்தனர். ஒரு புலையன் அவர் கூறியவாறு கட்டிச் செங்கற்பொடியை என்மேலே தூவிப் பம்பைப்பறையை அறைந்து நகரத்தார்க்கு என் குற்றத்தைத் தெரிவித்துக்கொண்டே சென்று தோணியொன்றிலேற்றி யமுனையாற்றினிடையே சென்றான். அப்பொழுது, யானையின்மேல் ஏறிச் சென்று அந்த ஆற்றில் தோழர்களுடன் விளையாடிக்கொண்டிருந்த நீ என்செய்தியைக் கேள்வியுற்று என்னை அழைத்துவரும்படி ஏவலாளரை அனுப்பினை. அப்புலையன் கரைக்கு அருகேயுள்ள இடத்திற் கொணர்ந்து மிக விரைவாகத் தோணியினின்றும் என்னை இறக்கியபொழுது துடுப்பு என்னுடைய நெற்றியிற்பட்டது; அதனாலுண்டாகிய தழும்பு இதுவாகும்; காண்பாயாக; பிற்பாடு நிகழ்ந்ததை விசாரித்து நீ தெரிந்துகொண்டு, 'இக்குற்றத்திற்காக இவளுக்கு விதித்த இத்தண்டம் மிக அதிகமே. இதற்குத் தக்க சிக்ஷையைச்சொல்லுக' என்று அயல்நின்ற அறிஞர்களைக் கேட்டாய். ஒரு குறிகோளாளன், 'தாம் மேற்கொண்ட தவத்தை இடையே கைவிட்டவர்கள் செய்தற்குரிய விரதத்தை இவள் கைப்பற்றுவாளாக' என்றனன். நீ அவன் கூற்றை அங்கீகரியாமற் பின்னும் வினவியபோது அங்கேநின்ற கோசிகனென்ற பெயருள்ள சேனைக்கணிமகனொருவன், 'மணம்புரிந்தவன் முற்றுங் கைவிட்டுத்

புறத்தே சென்றமையால் வரம்பைக் கடந்த இவளுக்குத் தவமே உரியது; கொல்லுவித்தல் தவறாகும்; இன்னுங்கூறுவேன்: யானை யின்கிழல் தன்மேற்படும்படி நின்றமையால் இவ்வந்தணி தான் மேற் கொண்ட தவத்துறையில் சில்காலம் ஒழுகி அப்பால் அதினின்றும் நீங்கி ஓரரசனுடைய பாதுகாப்பில் இருந்து அவனுடைய அந்தப்புர மகளிர்க்கு அறம் செவியறிவுறுத்தும் தலைவியாக விளங்குவாள்' என்று கூறினன்" என்றனள்.

இவற்றையெல்லாங் கேட்ட உதயணன் தான் அவளை விடுவித்த பின் நிகழ்ந்ததையுங் கேட்க விரும்பினன். விரும்பவே அவள், "நீ விடையளித்தபின் அவ்விடத்தை நீங்கிச்சென்று கங்கைக்கரையை யடைந்து வியாபாரஞ்செய்யுங் கூட்டத்தாருடன் அதற்கும் வடக்கே யுள்ள தேயத்திற் சென்று பெருவழியொன்றற்கு அயலதாகிய ஓரரச மரத்தின்கீழே யிருந்தேன். இருந்த காலத்தில்,

பூதியு மண்ணும் பொத்தகக் கட்டும்
மானுரி மடியு மந்திரக் கலப்பையும்
கானெடு மணையுங் கட்டுறுத் தியாத்த
கூறை வெள்ளுறிக் குண்டிகைக் காவினர்
தரும தருக்கர் தற்புறஞ் சூழப்
பரிபு மெலிந்த படிவப் பண்டிதன்
சாங்கிய நுனித்தவோர் சாறயர் முனிவனை
ஆங்கெதிர்ப் பட்டாங் கவனொடும் போகி (க. 36 : 225-32)

அவனிடம் கல்வி பயில்வோருடனிருந்து சாங்கிய மதக்கொள்கையை அறிந்து அதனையே மேற்கொண்டு மற்றச் சமய நூலுணர்ச்சிகளையும் நன்குபெற்று அவற்றைப் பிறர்க்கு விளங்கச்சொல்லும் வன்மையையு முடையேனுகி இமயமலையில் இரண்டுவருடம் அவனுடன் தங்கி னேன். அவ்வாசிரியன், கன்னியாகுமரியில் நீராடநினைந்து மாணக் கர்களுடன் யாத்திரையாகப் புறப்பட்டுத் தெற்கேவந்து இந்நகரத் தைச்சார்ந்த காளவனத்தில் ஓராச்சிரமத்தில் தங்கி இளைப்பாறினன். யானும் உடன்வந்து அங்கே தங்கினேன். பிரச்சோதனனுடைய அவைக்களத்தில் அறுவகைச் சமயத்தோரும் அவனுடைய வேண்டு கோளால் தம்முள் வாதஞ்செய்கின்றார்களென்ற செய்தியைக்கேட்டு மேற்கூறிய ஆசிரியன் அங்கேசென்று வாதம் நிகழ்த்தி மற்றச் சம யத்தவரை வென்று சாங்கிய சமயமே சிறந்ததென்று தாபித்தான். கேட்ட ஆண்டுள்ளோர் அச்சமயத்தை மேற்கொண்டார்கள். அரசன் அவ்வாசிரியனை நன்குமதித்துத் தன்னுடன் இருக்கும்படி விரும்பின

மையால் அவன் மாணாக்கருடன் இங்கே இருந்தனன்; யானும் இருந்தேன். இருக்கையில், அரசன்தேவி என்பால் அறங்கேட்டலைவிரும்பி என்னைத் தன்பாங்கியாகக்கொண்டு பாதுகாத்து வந்தாள்; அக்காலத்தில் இளங்குழந்தையாக இருந்த வாசவதத்தை அடிக்கடி என்னிடம் வந்து விளையாடுவள்; அதுகண்ட நற்றாய் அவளுக்குச் செவிலித்தாயாக இருக்கும்படி என்னைக் கேட்டுக்கொண்டமையால் அப்படியேயிருந்து வருகின்றேன். இது நிற்க; தகாத இடத்தில் மனத்தைச் செலுத்தாத நீ நருமதையென்னுங் கணிகையொருத்தியை விரும்பி அவளை வருவித்தாயென்று ஊரார்கூறும் பழிமொழி மிக்க துன்பத்தை உண்டுபண்ணுகின்றது. அதற்குக் காரணம் யாது?'' என்று வினவினள்.

உதயணன், 'பழமையாளரென்று நினைந்து, பகைவர்பாலுள்ளவரை நம்பி உண்மைக்கருத்தை வெளியிடுதல் தவறேயாயினும் இவளையன்றி இப்போது இங்கே நம்முடைய குறையை நீக்குவோரில்லை' என்று துணிந்து, நருமதையைத் தன்பால் வருவித்ததற்குரிய காரணத்தைத் தெரிவித்தனன். அவள்கேட்டு மகிழ்ந்து அவன்பால் வாசவதத்தைக்குள்ள வேணவாவையும் உறுதியாகிய அன்பையும் விளங்க விரித்து அவனுக்குக் கூறினாள்; பிறகு, "வாசவதத்தையை மணஞ்செய்தற்குரிய நன்முயற்சிகளை மேற்கொள்வாயாக; நின்னுடைய மணம் தனக்கு நேராதாயின் வாசவதத்தையானவள் தனக்கு நேர்ந்த பழிக்குஅஞ்சி, 'மண்கெழு மடந்தாய் மறைவிடந்தா' என்றுவேண்டிப் பூமிக்குள்ளே ஒளித்துத் தன்புகழை எங்கும் விளங்கச்செய்த சீதாதேவிபோல எந்த வகையாலாவது தன்உயிரை விட்டுவிடுவாளென்று அஞ்சுகின்றேன்; நான் அவளிடம் போய்ச் சொல்லிவிடுக்குமளவும் இங்கே இருப்பாயாக'' என்று அவனிடம் சொல்லி விடைபெற்று வாசவதத்தையையடைந்து உதயணன்பால் நிகழ்ந்தவற்றை அவளுக்குக் கூறி அவள் மயக்கத்தைத் தீர்த்தனள்; பின்பு காஞ்சனமாலையை நோக்கி, "தத்தை கற்றற்குரிய நேரம் கடந்துவிட்டமையால், தன்னுடைய அரண்மனைக்குச் செல்லலாமென்று நீ உதயணனிடஞ் சொல்லிவருக'' என்று கூறினள். அவள் அங்ஙனமே சென்று தெரிவிக்க உதயணன், "வாசவதத்தை யாழ்வித்தையை முற்றக் கற்றனள். அரசகுமாரர்களும் யானையேற்றம் முதலியவற்றையும் வில்வித்தை முதலியவற்றையும் நீதிநூல்களையுங்கற்றுக் கரைகண்டனர். விரைவில் அரங்கேற்றுவிக்க அரசர்பிரான் எண்ணியிருக்கின்றனன்; ஆதலால், வீணைவாசித்தலை நன்றாகப்பயின்று வைத்துக்

கொள்ளும்படி வாசவதத்தைக்குச் சொல்லுவாயாக" என்று காஞ்சனமாலையிடம் சொல்லிவிட்டு, கோலவர் சூழ்ந்து பாதுகாத்து வரக் குறும்புழைவழியேபோய்த் தன்னிடத்தைச் சார்ந்தான்.

முதலில் மைந்தர்களை அரங்கேற்றுவிக்க எண்ணிய அரசன், மறுநாட் காலையில் ஐயாயிரம் அரசகுமார் முதலியவர்கள் தன்னைச் சூழ்ந்துவர அவைக்களத்தை அடைந்து சந்தனப்பீடிகையிலுள்ள சார்வணையின்கண் வீற்றிருந்தான். அப்பொழுது, நகரத்திலுள்ள அறிஞர் முதலியோர் வந்து தத்தமக்கு அமைக்கப்பட்டுள்ள ஆசனத்தில் இருந்தனர். அரசன் கட்டளைப்படி அரச குமரர்கள் வந்து தாம் கற்றுக்கொண்ட பலவகைப் படைக்கலக்கல்விகளையும் பிறவற்றையும் தனித்தனியே காட்டி நன்கு அரங்கேற்றினர். கண்டு சபையோர் மிகவும் வியந்தார்கள். அப்படியே வியந்த அரசன், "தனக்கும் எமக்குமுள்ள விரோதத்தைப் பாராட்டாமலும் கபடமில்லாமலும் நம்மக்களைக் கற்பித்த உதயணனுக்கு யாம் செய்தற்குரிய கைம்மாறு யாதுளது?

ஒன்பதின் கோடி யொண்பொருள் கொடுப்பினும்
பண்பெனக் கொண்டவன் பண்டஞ் செய்யான்
நங்குடித் தலைமை இங்கிவற் கியற்றி
நாமிவன் குடைக்கீழ்க் காமுறக் கலந்திவன்
வேண்டியது செய்யு மாண்பல திலம்" (க. 37: 64-8)

என்று மிகப்பாராட்டி, "கௌசாம்பிநகர்க்கு விரைவில் இவனை அனுப்பி மணம் புரிந்துகொண்டு கவலையின்றி வாழும்படி செய்வது தான் நமது கடன்" என்று பிறரொடு பேசிக்கொண்டேயிருந்து முகமன்களைக் கூறி அவனை இருக்கைக்கு அனுப்பினான்; பிறகு அந்தப்புரம் சென்று மைந்தர்கள் கல்வியால் நிரம்பியதையும் அரங்கேற்றியதையும் தேவிக்குக் கூறினன். அவள் கேட்டு, "தத்தையின் கல்வியையும் நல்லதினமொன்றில் அவையார் அறியும்படி செய்விக்க வேண்டும்" என்று தெரிவித்தாள். அதனை உதயணனுக்கு அறிவிக்க அவனும் உடன்பட்டான்.

அரசன் சொல்லிவிடுப்பவே, கேட்டு அறியும் வன்மையுள்ள பலவகை இசைப்பயிற்சியாளரும் வந்து அவைக்களத்தில் நாற்புறத்தும் நிரம்பினர். தோழிமாருடன் வாசவதத்தை அவைக்கண்வந்து விதிப்படி யாழ்வாசித்தனள்; பின்பு பாடினள். கேட்டவர், முதலில் வத்தவனைப் புகழ்ந்து பின்பு பிரச்சோதனனை நோக்கி,

"வத்தவ நாடன் வாய்மையிற் றருக்கும்
கொற்ற வீணையுங் கொடுங்குழை கொண்டனள்
இறைகெழு குமரரு மேனை விச்சைத்
துறைநெறி போகிய துணிவின ராயினர்
தேயாத் திருவ நீயுந் தேரின்
நிலங்கொடை முனியாய் கலங்கொடை கடவாய்
வேள்வியிற் றிரியாய் கேள்வியிற் பிரியாய்
இனையோர் தாணிழற் றங்கிய நாடே
வயிர வெல்படை வானவ ரிறைவன்
ஆயிரங் குஞ்சரத் தண்ணல் காக்கும்
மீமிசை யுலகினுந் தீதிகந் தன்று" (க. 37 : 137-47)

என்று கொண்டாடினார்கள். வாசவதத்தை வந்து தந்தையை வணங்கினாள். அவன் மிகவும் மெச்சி அவளை நற்றாய்பால் அனுப்பினான். நற்றாயும் மற்றைத்தாயரும் அவளைத் தழுவிப் பாராட்டினர்.

பிரச்சோதனன் கற்றறிவாளர் சுற்றிய ஆசனத்தேயிருந்து உதயணனை அழைத்து, "தாம் பிழைத்திருத்தற்கு விரும்பிய உலகத்தார்,

மரமுதல் சாய மருந்துகொண் டாஅங்கு
நங்குடி வலித்தல் வேண்டி நம்பி
தன்குடி கெடுத்த தகவி லாளனேன் (க. 37 : 188-90)

நான்" என்று சொல்லி வருந்தினான்; பிறகு ஆருணியைவென்று உதயணனைக் கௌசாம்பி நகரத்திற்கு அனுப்பி முடிசூட்ட எண்ணி மந்திரிகளுடன் ஆலோசித்தனன். அங்ஙனம் செய்வித்தல் நன்றென்று அவர்கள் சொன்னார்கள். பின்பு, "கோசம்பியும் உஞ்சேனையும் முன்புள்ள பகைமையொழிந்து பொன்னும் நெல்லும் வழங்குவனவாகுக" என்று பலரும் அறியும்படி முரசறைவித்து,

"முன்யா னிவனை முருக்கலும் வேண்டினேன்
பின்யா னிவனைப் பெருக்கலு முற்றனென்
எமர னுயி னிறைகொடுத் தகல்க
அமர னுயி னமைவொடு நிற்க (க. 37 : 199-202);

உதயணனுக்குப் போர்த்துணையாக என்னுடைய குமாரன் பாலகனும் வருவான்" என்ற கடுஞ்சொற்களை அமைத்தெழுதிய ஓலையொன்றை ஒரு தூதன் மூலமாக ஆருணியரசனுக்கு அனுப்பிவிட்டு உதயணனுக்கு வரிசைகள் பலவற்றையளித்து, "சேனைகளும் சேனைத்தலைவர்களும் பாலகனும் நாளை உதயணனுடன் புறப்படுக" என்று கட்டளையிட்டுப் போயினன்.

அதனைக் கேள்விற்ற யூகி, 'உதயணகுமரன், பாலகன் முத லியவர்களோடு கௌசாம்பிக்கு இப்போது செல்வானாயின் முன்னமே நாம்செய்த சபதம் நிறைவேறாமற் போம். ஆதலால், இதனை இப் பொழுது நடைபெறாமற் செய்வித்து நம்முடைய சபதத்தை நிறை வேற்றவேண்டுவது இன்றியமையாதது' என்று தன்னுள் நிச்ச யித்துக்கொண்டு, குறிசொல்லுபவளாகிய பாகீரதியென்பவளை வரு வித்து, "நீ ஆவேசமுற்றவள்போல நகரத்துள்ளேசென்று அரண் மனையிலுள்ளாரும் புறத்துள்ளாரும் அறியும்படி குறிசொல்லி எல் லோருக்கும் மிக்க கவலையையுண்டாக்கி விரைவில் நீர்விழா நடத்தும் படி செய்க" என்றதோடு சொல்லவேண்டிய பிறவற்றையும் அறி வுறுத்தி அவளை யனுப்பினன். அங்ஙனமே அவள் தெய்வாவேச முடையவள்போலக் கையைவீசி ஆடிக்கொண்டு சென்று நகரிலுள்ள இருபாலாரும் கேட்கும்படி, "சென்ற ஆண்டில் நீர்விழாவை இந்நக ரத்தார் செய்யாமல் நிறுத்திவிட்டமையாலே கோபமுற்று முன்பு நளகிரியை வெறிகொள்வித்து ஊரையழிக்கும்படிசெய்த தெய்வம் யான்; இப்பொழுதும் அவ்விழாவை நீங்கள் செய்யீராயின்,

பிணக்குறை படுத்துப் பிளிறுபு சீறிய
இன்றுஞ் சென்றியான் குஞ்சரம் புகுவல்" (க. 37 : 249-50)

என்று சொல்ல, பன்றியால் மிகவுந் துன்புற்ற நாய் சோற்றுப்பானை யைக் கண்டபொழுதும் அதனைப் பன்றியென்று நினைந்து மிக அஞ்சு வதுபோல ஊரார் பொய்பாவேசங் கொண்டவளது கூற்றிற்கும் அஞ்சினவராகி அரசனுக்கு அதனைச் சொல்லி விடுத்தனர். கேட்ட அவன் நீர்விழாவை நடத்தும்படி கட்டளையிட்டான். சேனைத் தலை வன் 'நாளை நீராட்டணி' என்று முரசறைவித்து ஊராரெல்லார்க் கும் அறிவித்தான். உடனே இயல்பாகவே நீர்விழாவில் விருப்ப முள்ள நகரத்தார்,

தோணியு மரமுந் துறைநா வாயும்
நீரியன் மாடமு நீந்தியற் புணையும்
சுண்ணமுஞ் சூட்டுஞ் சுவைநறுந் தேறலும்
சென்னச் சிவிகையுந் தேரும் வையமும்
கண்ணார் பிடிகையுங் கட்டமை யூர்தியும்
பண்ணிரும் பிடியும் பண்ணுவனர் மறலிப் (க. 37 : 266-71)

புறப்படுவாராயினர். இச்செய்தியை உதயணனுக்குத் தெரிவிக்கும் படி அரசன் நூலறிவாளர் நால்வரை அனுப்பினன். எல்லாச்சேரியி லும் சங்கங்களும் கொம்பு முதலியவைகளும் முழங்கின ; முரசுகள்

அதிர்ந்தன ; யாழும் குழல்களும் இயம்பின ; பலவகைக் கொடிகளும் அசைந்தன ;

ஆர்வ மகளிரு மாய்கழன் மைந்தரும்
வீர குமரரும் விரும்புவன ரேறிய
மாவுங் களிறு மருப்பிய லூர்தியும்
காலிரும் பிடியுங் கடுங்காற் பிடிகையும்
தேரு மாக்களுந் தெருவகத் தெடுத்த
எழுதுகள் சூழ்ந்து (க. 38 : 9-14)

எழும்பிச் சூரியனுடைய கிரணங்களை மறைத்தன. யானைகளில் வரும் நகரநம்பியரும் அரசகுமரரும், "செல்லுதற்கு வழியில்லை ; யானைகள் வருகின்றன ; வழிவிலகுமின் ; அரசனது ஆணை இது" என்று சொல்லவும் இளைஞர், "அரசன் ஆணைக்கு யாம் அஞ்சோம் ; இப்புதுநீராட்டு எமக்கே யுரியது" என்று கூறி நெருங்கினார்கள்.

வைய நிரையும் வயப்பிடி யொழுக்கும்
கைபுனை சிவிகையுங் கச்சணி மாடமும்
செற்றுபு செறிந்தவை மொக்கு ளாக
மக்கட் பெருங்கடன் மடைதிறந் ததுபோல்
எத்திசை மருங்கினு மிவர்ந்து (க. 38 : 42-6)

எல்லோரும் பலவகைச்சிறப்புக்களுடன் நகரத்தின் வாயிலைக்கடந்து [1] ஆற்றி னிருகரையையும் ஒருயோசனையளவுள்ளதாகிய பொய்கையின் நாற்கரையையும் அடைந்தனர் ; அங்கங்கேயுள்ள அசோகம் பொழில்முதலிய தோட்டங்களில் மரங்களின் அடிகள்தோறும் படமாடங்களை அமைத்துப்பலவகைப்பட்ட நுகர்பொருள்களுடன் தனித் தனியே தங்கினர். பலபண்டங்கள் விற்கப்படுங் கடைகள் அங்கங்கே அமைக்கப்பெற்றன. அரசன் வாராமையால் யாரும் விழாச்செய்யத் தொடங்கவில்லை. அச்செய்தியைத் தூதர்கள் பிரச்சோதனனுக்கு அறிவித்தனர். அவன் உரிமைமகளிரோடு புறப்பட நினைந்து, "மதம் பட்ட களிறுகளை நகர்ப்புறத்தேயுள்ள சேனைகளின்பாற் சேர்த்திடுக ;

வேந்துபிழைத் தகன்ற வினைவ ராயினும்
சேர்ந்தோர்த் தப்பிய செறுந ராயினும்
கலங்கவர்ந் தகன்ற கள்வ ராயினும்
நிலம்பெயர்ந் துறைத னெடுந்தகை வேண்டான்
தொகுதந் தீண்டிக் கிளைஞ ராகிப்
புகுதந் தீகவிப் புனலாட் டகத்து" (க. 38 : 94-9)

1 ஆறு - சிப்பிராநதி (க்ஷிப்ராநதி) ; உதிதோதய காவியம்.

என்று முரசறைவித்து யாவர்க்கும் தெரிவிக்கச்செய்து, தன் மெய்காப்பாளரையன்றி மற்றவீரர் யாவரும் அந்தவிழா நடைபெறும் இருபத்தொரு நாட்களிலும் ஆயுதங்களைக் கைக்கொள்ளாதொழிக வென்றும் கட்டளையிட்டான் ;

தாழ்புனற் றுரையுந் தமரொடு தருக்கும்
நாழிகைத் தூம்பு நறுமலர்ப் பந்தும்
சுண்ண வட்டுஞ் சுழிநீர்க் கோடுமென்
றெண்ணிய பிறவும் (க. 38 : 105-8)

ஆகிய தேவியர்க்குரிய நீர்விளையாட்டுக் கருவிகள் யானைகளின்மீது சென்றன. பிரச்சோதனன், அரசர்கள் கைகொடுப்பக் கடிகையாரங் கழுத்திற்மின்ன அண்ணாந்துசென்று ஆயிரம்பிடிகளினிடையே அலங்கரிக்கப்பட்டுநின்ற நளகிரியின்மீது ஏறிச்சென்றனன். மந்திரிகள் முதலியோர் தத்தம் ஊர்திகளிமேலேறி அவனைச்சூழ்ந்து சென்றனர். உரிமை மகளிரும் தத்தமக்கமைந்த ஊர்திகளிற் சென்றார்கள்.

கடைப்பகச் செப்பே கவரி குஞ்சம்
அடைப்பைச் சுற்றமோ டன்னவை பிறவும்
அணிகலப் பேழையு மாடை வட்டியும்
மணிசெய் வள்ளமு மதுமகிழ் குடமும்
பூப்பெய் செப்பும் புகையகி லறையும்
சீப்பிடு சிக்கமுஞ் செம்பொற் கலசமும்
காப்பியக் கோசமுங் கட்டிலும் பள்ளியும்
சுட்டிக் கலனுஞ் சுண்ணகக் குற்றியும்
வட்டிகைப் பலகையும் வருமுலைக் கச்சும்
முட்டிணை வட்டு முகக்கண் ணடியும்
நக்கிரப் பலகையு நறுஞ்சாந் தம்மியும்
கழுத்திடு கழங்குங் கவறுங் கண்ணியும்
பந்தும் பாவையும் பைங்கிளிக் கூடும்
யாழுங் குழலு மரிச்சிறு பறையும்
தாழ முழவமுந் தண்ணுமைக் கருவியும் (க. 38: 161-75)

ஆகிய பொருள்கள் அவர்கள் புடையே கூனர் முதலியோர்களாற் கொண்டு செல்லப்பட்டன. தேவியர்கள் வாசவதத்தை வாராதது கண்டு ஏவன்மகளிரிடமாகச் சொல்லியனுப்பிவிட்டு அவளுடைய வரவைக் கதிர்விரற்கவியலுட் கண்ணிணைபிறழ நோக்கிக்கொண்டு வழியிற்காத்திருந்தனர். சென்றவர்கள், சேனாபதிமகளை அலங்கரித்துக் கொண்டிருந்த வாசவதத்தையிடஞ் சொல்ல, அவள் தோழியர்க்கு

வேண்டுவனவற்றை யளித்து அவர்களுடன் சென்றனள். அவளைக் கண்ட நற்றாய், "முற்றத்துறந்த முனிவர்களையும் நிலைகுலையச்செய் யும் இவள் கண்கள்" என்றுகூறி இன்புற்று அவளுடைய பாங்கி மாரையும் உயிர்த்தோழியாகிய காஞ்சனமாலையையும் பார்த்து, "இவள் உமதடைக்கலம்" என்றுகூறி ஒப்பித்துவிட்டுச் சென்றனர். வாசவதத்தை ஒருவையத்திலேறினள். அதிற்பூட்டிய காளைகளின் குளம்புகள் வழுக்கக்கண்ட பாகன் அவற்றை அனுப்பிவிட்டு மல்லர் பலர்தாங்கும் ஒரு மாடச்சிவிகையின்மீது அவளை ஏற்றினன்; அவள் பொய்கைக்கரையை யடைந்தாள்.

பிடிகளுட் சிறந்ததும் இலக்கணமிக்கதும் மங்கலகரமான யாக்கையையுடையதும் வீரியமுடையதும் நெடுந்தூரஞ் செல்லும் வன்மையையுடையதும் மத்தகமாலையையணிந்து மணமகள்போல விளங்குவதும் நிகரில்லாததுமான பத்திராபதி யென்னும்பெண் யானையை அரசன் சிவேதன்முகமாக உதயணனுக்குஅனுப்பி அதனை ஊர்ந்து வரும்படி செய்துவிட்டுத் தான் மேற்கூறிய பொய்கைக் கரையிற் சென்று தங்கினன். உதயணனும் அரசனுடைய விருப்பத் தின்படி அந்த யானையை ஊர்ந்து வயந்தகனோடு அங்கே சென்றனன். நால்வகைப் படைகளும் தம்மைச் சூழ அரசகுமாரர்கள் வந்து தமக்கு அமைந்த இடங்களில் தங்கினார்கள்; சிவப்புக் கொடிகளை எங்கும் பிடிக்கச்செய்து பரிவாரங்களுடன் நகரநம்பியர்கள் தமக் குரிய இடங்களில் வந்து அமர்ந்தார்கள்.

நீராடுதற்குரிய நற்காலத்தை மங்கலக்கணிகள் கூறினர். அர சன் இருபது யானைகளையும் எண்பது புரவிகளையும் ஐம்பதுதேர்களை யும் நூறாயிரத்தொருகழஞ்சு மாசையையும் தானம் செய்தான்; தக்கணையளித்தான்; பெரியோர்களை வணங்கினன்; இரணிய கர்ப் பம் நடத்தினன்; ஸ்ரீ கோயிலுக்குப் பொற்பூ ஆயிரம் சேர்ப்பித் தான்; பின்னும் செய்யவேண்டியவற்றைச் செய்தான்; நெற்கதிர் சூட்டி வெண்டுகிலிட்ட விசய முரசத்தை முன்னே யனுப்பினன்; நீராடப் புறப்படும்படி ஏனையோர்க்குக் கூறியதன்றி விரும்பிய இடங் களிற் சென்று ஆடுமினென்று அரசகுமரர்களுக்கும் நீர்விழவின் காட்சிகளை அங்கங்கே சென்று கண்டு நீராடிவருகவென்று உதயண னுக்கும் சொல்லியனுப்பிவிட்டுப் பின்னும் பலவகைப்பட்ட தானங் கள் புரிந்து நீராடினன். உடன்வந்தோர்,

துறைதுறை தோறு முறைவிட் டெரு அர்
தண்புன லாட்டின் றக்கணை யேற்கும்

அந்த ணாள ரடைக விரைந்தெனப்
பயினூ லாளரைப் பயிர்வனர் கூஉய்க்
கவர்வனர் போலக் காதலி னுய்த்து
நன்கல மேற்றி நாளணி யணிந்து
மங்கல வேள்வியுண் மகளீ வோரும்
செம்பொற் புரிசை வெண்சுதை மாடத்
துழைக்கலம் பரப்பி யுருவிய மகளிரோ
டிழைக்கல நிறீஇ யில்லீ வோரும்
ஆலைக் கரும்பு மரியுறு செந்நெலும்
பாளைக் கமுகின் படவுஞ் சுட்டிப்
புயல்சே ணீங்கினும் பூவளங் குன்றா
வயலுந் தோட்டமும் வழங்கு வோரும்
நாகுசூ னீங்கிய சேதாத் தொகுத்துக்
குளம்புங் கோடும் விளங்குபொன் னுறீஇத்
தளையுந் தாம்பு மளைகடை மத்தும்
கழுவுங் கலனும் வழுவில பிறவும்
பைம்பொனி னியன்றவை பாற்பட வகுத்துக்
குன்றாக் கோடி கொடுத்துவப் போரும்
இன்னவை பிறவு மென்னோர்க் காயினும்
உடையவை தவாஅக் கொடைபுரி படிவமோ
டிலமென் மாக்களை யிரவொழிப் பவர்போற்
கலங்கொடை பூண்ட கைய ராகி
வெண்டுகில் பூட்டிய வேழக் குழவியும்
ஒண்படை யணிந்த வண்பரிப் புரவியும்
உண்டியு முடையுங் கொண்டகஞ் செறித்த
பண்டியு மூர்தியுங் கொண்டனா ருழிதந்
தந்தணர் சாலையு மருந்தவர் பள்ளியும்
தந்தற மருங்கிற் றலைவைப் போரும்
நிலம்பெய் வோரு நிதிபெய் வோரும்
களிறுபெய் வோரும் பரிபெய் வோரும் (க. 39 : 50-81)

ஆகித் தத்தமக்கியன்ற தானங்களைச் செய்தனர். நீராட்டு விழவு இங்ஙனம் பெருஞ்சிறப்புடன் நடைபெறுவதாயிற்று.

நகரமாந்தர் அங்கங்கேயுள்ள [1] பலவகையான காட்சிகளை யெல்லாம் தாம் கண்டு பிறர்க்குங் காட்டி இன்புற்று,

---

[1] இந்தப்பகுதி விரிவாகவும் அழகாகவும் இதன் முதனூலிற் காணப் படுகின்றது ; க. 40.

"பணிவி னல்வினைப் பயனுண் டாயின்
மணிமுடி மன்ன னணியுஞ் சேனையுள்
எழுமைப் பிறப்பு மெய்துகம் யாம்" (க. 40: 386-8)

என்று இன்புற்றுக்கூறினர்.

பொய்கையும் பொய்கைக்கரையும் பலவகைச் சிறப்புக்களாலும் பலவகை ஓசைகளாலும் விளங்குதலுற்றன. அரசகுமாரரும் பேதை மகளிர் முதலிய [1]ஏழு பருவமகளிரும் நீராடி மகிழ்ந்தனர். அப்பால் காஞ்சனமாலையும் மற்றத்தோழிமாரும் வாசவதத்தையை,

வெயிலழல் கவியாது வியலக வரைப்பின்
உயிரழல் கவிக்கு முயர்ச்சித் தாகிப்
பூந்தா ரணிந்த வேந்தல் வெண்குடை
வேந்தன் மகளே விரையா தென்மரும்
பண்டை மகளிர் படிமையிற் பிழையாது
தண்டந் தூக்கித் தலைப்புனல் விழவினைக்
கொண்டுவந் தாடுங் கொழுமலர்த் தடங்கட்
பொங்குமலர்க் கோதாய் போற்றென் போரும்
நின்னை யுவக்குநின் பெருமா னேந்திய
வென்வேல் கடுக்கும் வெம்மை நோக்கத்துப்
பொன்னே போற்றி பொலிகென் போரும் (க. 42: 44-54)

ஆகி உபசாரத்துடன் அழைத்துச் சென்று விதிப்படி நீராட்டி அலங்கரிப்பாராயினர்.

அந்தணமகளிரும் அரசமகளிரும் சேனாபதிமகளும் பெருந் திணைமகளிரும் காவிதிமகளிரும் வாணிகமகளிரும் பெருங்குடி மகளிரும்,

நீர்தலைக் கொண்ட நெடும்பெருந் துறைவயிற்
போர்தலைக் கொண்டு பொங்குபு மறலிக்
கொங்கலர் கோதை கொண்டுபுறத் தோச்சியும்
அஞ்செஞ் சாந்த மாகத் தெறிந்தும்
நறுநீர்ச் சிவிறிப் பொறிநீ ரெக்கியும்
முகிழ்விரற் றுரை முகநேர் விட்டும்
மதிமரு டிருமுகத் தெதிர்நீர் தூவியும்
பொதிபூம் பந்தி னெதிர்நீ ரெறிந்தும்
சிவந்த கண்ணினர் வியர்ந்த நுதலினர்
அவிழ்ந்த கூந்தலர் நெகிழ்ந்த வாடையர்

1 இந்தப் பகுதி மற்ற எந்த நூலிலுங் காணப்படாத இன்பமுடைய தாய் இதன் முதனூலிற் காணப்படுகின்றது ; க. 41.

ஒசிந்த மருங்குல ரசைந்த தோளினர்
நல்கூர் பெரும்புனல் கொள்க வென்றுதம்
செல்வ மெல்லாஞ் சேர்த்திறைத் தருளி
இளையா விருப்பிற்றம் விளையாட்டு முனைஇக்
கயம்பா டவியப் புறங்கரை போந்து (க. 42 : 184-98).

கூந்தலை உலர்த்திப் பூமாலைகளை முடித்து,

பைங்கூற் பாதிரிப் போதுபிரித் தன்ன
அங்கோ சிகமும் வங்கச் சாதரும்
கொங்கார் கோங்கின் கொய்ம்மல ரன்ன
பைங்கேழ்க் கலிங்கமும் பட்டுத் தூசும்
நீலமு மரத்தமும் வாலிழை வட்டமும்
கோலமொடு புணர்ந்த வேறுவே றியற்கை
நூலினு முலண்டினு நாரினு மியன்றன
யாவை யாவை யவையவை மற்றவை
மேவன மேவன காமுற வணிந்து (க. 42 : 204-12)

பின் ஏற்ற ஆபரணங்களையும் அணிந்து கொண்டனர்.

அந்தச்சமயத்தில், உதயணன் தன்னைச் சிறைப்படுத்திய பிரச்சோதனனுடைய செல்வமிகுதியும் அங்கே நீராடுவோருடைய இன்ப விசேடமும் தன்மனத்தை வருத்த, "பத்திராபதியின் மேலே ஏறிய இந்தப் பகலிலாவது நம்மெண்ணத்தை முடிக்கவேண்டும்" என்று கருத்துள்ளவனாகிப் பிரச்சோதனனை வஞ்சித்து வருத்துவதற்குரிய உபாயம் யாதென்னும் யோசனையோடே அந்தப் பிடியின்மேல் இருந்தனன்.

இருந்தபொழுது, அவனுடைய குறிப்பையறிந்த வயந்தகன், பிரயாணத்திற்குச் சாதனமானவற்றைச் சேகரித்து வைத்துக்கொண்டு அவனை நோக்கி, "உனக்குத் தெரிவிக்கும்படி யூகி சொல்லிவிடுத்ததவற்றை விண்ணப்பஞ் செய்வேன்; கேட்டுக்கைக்கொள்ளவேண்டும்: 'உதயணன் இப்போது பிரச்சோதனனுடைய பாதுகாப்பில் உள்ளானாயினும் பாம்பைப்போலச் சமயம்பார்த்துப் பகையை வெல்லுதல் அரசர்க்குக் கடமையாதலாலும் தான் பத்திராபதியின்மேல் ஏறியிருத்தலாலும் வாசவதத்தை தனியே நீராடுதலாலும் அவளைக் கைப்பற்றி அந்த யானையின்மேலேற்றிச் செல்லுதற்குரிய சமயம் இதுவேயாம்; முன்னமே என்னால் நியமிக்கப்பட்டுள்ள சில கள்ள மகளிர் விரைவில் அகநகரத்தைத் தீக்கு இரையாக்குதல் கூடும்; அங்கே புகைதோன்றியவுடன் சிறிதும் பாணித்தலின்றி வாசவதத்தையைப் பிடியின்மீது ஏற்றிச் செல்வானாக; ஏற்றியவுடன் தடுக்கவந்த பிரச்

சோதனனுடைய வீரர்களை, நாற்றிசைகளிலும் மறைந்து திரிதரும் நம்வீரர், வாழ்க உதயணன் என்று கூறிக்கொண்டும் அங்கங்கே மரப் பொந்து முதலியவற்றில் ஒளித்துவைத்திருக்கும் ஆயுதங்களை வெளிப்படையாகத் தாங்கிக்கொண்டும் போர்செய்து தொலைத்துவிடுவார்கள். அதுபற்றிய கவலை தனக்குச் சிறிதும் வேண்டாம்; பகையரசனுடைய நாட்டின் அகஎல்லையின் அளவாகிய [1] ஐந்நூறையும் கடந்து செல்லுதற்கு இப்பிடிக்கு வன்மையில்லையாயினும் நானூறெல்லையளவு சென்று வீழ்ந்தாலும் வீழ்க; அதனால் நமக்குத் துன்பமில்லை. அப்பாலுள்ள நாட்டின் பகுதி வேடர்முதலியோரையுடையதாதலாற் செல்லுதற்குஅரியது; ஆனாலும் தான் வாசவதத்தை முதலியவர்களுடன் அங்கே வந்தாற் பாதுகாத்துக்கொள்ளும்படி அவ்விடமுள்ள வேடர்களின் தலைவனும் என்னுடைய நண்பனுமாகிய ஒருவனிடம் முன்னமே சொல்லிவைத்திருக்கிறேன்; ஆதலால், அவன் பாதுகாப்பான். அவ்விடத்திற் சிறிதுதுன்பம் நேரினும் அதனை நீக்கிக்கொண்டு அப்பாலுள்ள எல்லைநூறையும் கடந்துவிடுக; பகைவரை வெல்லும் ஆற்றலையுடைய நம்மவர் அங்கேயுள்ளார்; அங்கே தங்குக. யான் எண்ணித் துணிவது எந்தக் காரியமாயினும் தீதின்றி நிறைவேறுமென்பதை இதன் முகமாகத் தெளிக. யூகியென்னும்பெயர் எங்கும் பரவும்படி மான்கூட்டத்திற் புலி புகுந்தாற்போலப் பகைவருடைய வீரரை வாளால் வீழ்த்திவிட்டு விரைவில் தன்னிடம்வந்து சேருவேன். யான் சொல்லியவண்ணம் செய்யாவிட்டால் அரசாட்சியைத் தான் இழந்துவிடுதல் நிச்சயம்' என்பவையே" என்று சொன்னான்; கேட்ட உதயணன், "அவனும் யானும் உயிரோடிருப்பின் வானுலகத்தையும் வணங்கச் செய்வோம்; மற்றவை மிக எளியன" என்று சொல்லிப் புன்முறுவலுடன் அங்கங்கே நிகழும் காட்சிகளைப் பார்ப்பதற்குச் செல்பவன் போலே பத்திராபதியை நடத்திக்கொண்டு சென்று வாசவதத்தை ஆடும் பெருந்துறையை அடைவானாயினன்.

அப்பொழுது நீருடை மேகமும் காற்றும் கலந்து மிகக்கடுமையாகத் தோன்றின. அதனைக்கண்ட யூகி கனவிற்கண்ட பொருளைக் கையிற்பெற்ற வறியவன்போல மகிழ்ந்து அங்கே மறைந்துதிரியும் வீரர்கள் தன்கருத்தை அறிந்துகொள்ளும்படி முரசமொன்றைக்

[1] இங்கே ஐந்நூறென்றது காதம், யோசனை, கவ்வியூதி, அம்பு வீழெல்லை, குரோசம், விற்கிடைமுதலிய நீட்டலளவைகளுள் இன்னதென்று விளங்கவில்லை.

கொட்டினன். இடியைப்போல் அது முழங்கிற்று. அதனைக்கேட்ட அவன் வீரர்கள் ஊக்கமுடையவர்களாகித் தத்தம் வாட்படைகளைத் தாங்கி, "உதயணகுமாரனும் யூகியும் வாழ்க" என்று முழக்கஞ் செய்பவர்களாய் உறையினின்றும் வாளையுருவியெடுத்துக் கொண்டு ஆண்டுள்ளாரோடு போர்செய்யத் தொடங்கினர்.

உள்நகரத்தில் யூகியினால் வைக்கப்பட்டிருந்த கள்ளமகளிர் தங்கள் இருப்பிடங்களைவிட்டுப் புறப்பட்டு வீடுதோறும் நெருப்பு வைப்பாராயினர்.

ஐந்தலை யுத்தி யரவுநா ணாக
மந்தர வில்லி னந்தணன் விட்ட
தீவா யம்பு திரிதரு நகரின்
ஓவா தெழுமடங் குட்குவர (க. 43 : 119-22)

எங்கும் தீக்கொழுந்து நெடுந்தூரத்திலுள்ளவர்களும் அறிந்துகொள்ளும்படி ஓங்கித்தோன்றியது. ஆற்றங்கரையிலும் பொய்கைக்கரையிலுமுள்ள மகளிர்கள் அதனைக்கண்டு, "சக்கரவர்த்தி இல்லாத சமயம்பார்த்துப் பகைவர்கள் நகரத்திற்புகுந்து துன்பம் விளைக்கின்றார்களோ? நளகிரியென்னும் யானை முன்போலக் குணஞ்சிதைந்து மதவெறியால் வீதிதோறுஞ் சென்றுசென்று துன்புறுத்துகின்றதோ? யாதுந் தெரியவில்லையே!" என்று சொல்லிக்கொண்டு நிலைகுலைந்து தத்தம் குழந்தைகளையும் பிறரையும் தம்மையும் பாதுகாத்தற்கு அறியாராய்ப் பரவசமுற்று ஓடிஓடிப் பலவாறு திரிவாராயினர். உச்சைனியில்,

நறுநெய் பயந்த நன்னகர் முத்தீ
மறுமைக் கெண்ணிய மயலறு கிரிசை
அந்தணர் சேரியு மருந்தவர் பள்ளியும்
வெண்சுதை மாடமும் வேந்தன் கோயிலும்
தெய்வத் தானமோ டவ்வழி யொழிய (க. 43 : 173-7)

ஏனைய இடங்கள் தீக்கிரையாயின. பின்னும்,

படலணி வாயின் மடலணி வேயுள்
இடையற வில்லா விருக்கையிற் பொலிந்த
பன்னா றாயிரம் பாடிக் கொட்டிலும்
மூந்நூ றாயிர முட்டிகைச் சேரியும்
ஐந்நூ றாயிரங் கம்மவா லயமும்
சேனை வேந்தன் சிறப்பினோ டிருந்த
தானைச் சேரியுந் தலைக்கொண் டோடிக்
கானத் தீயிற் கடுகுபு திசைப்ப (க: 43 : 197-204)

மற்ற மாடங்களும் எரிந்துபோயின. அதனைக்கண்ட அரசமங்கையர்கள் பலரும் பலவகையாக அலைந்து துன்புற்றனர்.

அப்போது பிரச்சோதனன் வேறொன்றும் செய்ய அறியாதவனாகி, "யானைகளை நாற்புறத்தும் அரணாகநிறுத்தி அதன் இடையே நம்முடைய உரிமைமகளிரை இருக்கும்படி செய்க" என்று கட்டளையிட்டான். அங்கேநின்ற யானைகளுட்சில மேகமுழக்கத்தைப் பகைமையையுடைய யானைமுழக்கமென்று கருதி வரம்புகடந்து ஓடிச் சென்று கூட்டங்களை மிதிக்கத்தொடங்கின.

நகரி முழக்கினு மிகையெழு தீயினும்
அளவி லார்ப்பினு மருந்தளை பரிந்து
கடலென வதிர்ந்து காரெனத் தோன்றி
விடலருஞ் சீற்றமொடு வேறுபட நோக்கிக்
களமெனக் கருதிக் கனன்ற வுள்ளமொடு
நளகிரிக் கூற்ற நகர முழக்க
எதிரெழு வோரை யதிர நூறி
வத்தவர் கோமான் வயவர் திரிதர (க. 44 : 86-93)

அங்கிருந்த பிரச்சோதனன் தன் ஏவலிளையரை நோக்கி, "தன் மாணாக்கியாகிய வாசவதத்தையை எப்படியேனும் பாதுகாத்தல் தன் கடனென்று யான் கூறியதாக உதயணனுக்கு விரைந்துசென்று சொல்லுமின்" என்று கூறினன். அதனை அவர்கள் உதயணனிடம் தெரிவிக்கவே அவன், "வாசவதத்தையைப் பாதுகாத்தல் என்னுடைய கடமை. இதுபற்றிச் சிறிதும் கவலையடையாதொழிக" என்று அரசனுக்குச் சொல்லியனுப்பிவிட்டுப் பத்திராபதியைச் செலுத்திக்கொண்டு வாசவதத்தையிருந்த துறையையடைந்தான். அடைந்தவனை அங்கேயிருந்த காவலாளர் முதலியோர் கண்டு விரைந்து சென்று, "நெருப்புப்பற்றி எரிகின்றமையால், இப்பொழுது நகரத்தினுள்ளே செல்லல் எம்மால் இயலுவதன்று; பெருங்காற்றாற் பொறிகள் சிதைந்துபோனமையின், ஊர்திவகைகளும் இப்போது உதவா; ஆதலால், உம்மாணாக்கியாகிய வாசவதத்தையை இப்பிடியின்மீது ஏற்றிக்கொண்டு பாதுகாத்தருளல் வேண்டும்" என்று பணிந்துரைத்தனர். மற்றையோரும் அங்ஙனமே வேண்டிக்கூறினர். கேட்ட உதயணன் தன் மனத்திலுள்ள பேருவகையைச் சிறிதும் வெளியிடாது அடக்கிக்கொண்டு, அவர்கள் கூறுவதைக்கேட்டுத் தன்னை அடைவதில் மிக்க ஆவலோடு நிற்கும் வாசவதத்தையைக் காஞ்சனமாலை ஏற்ற அவன் தன்குடங்கையால் தழுவிப் பிடிமீதேற்றி, "முடியா ஆள்வினை முடித்தன மின்று" என்று மகிழ்வுற்றான்.

அப்பிடியின்மேல் அவளுடன் காஞ்சனமாலையும் ஏறித் தன்னுடைய கையிலிருந்த கோடபதியை வயந்தகனிடங் கொடுத்துவிட்டுப் பிடியின் வேகத்தால் நடுங்கும் வாசவதத்தையைப் பாதுகாத்துக்கொண்டிருந்தாள். அப்பொழுது வாசவதத்தையைப் பார்த்தற்கு வருபவள்போலவே சாங்கியத்தாய் அங்கே வந்தனள், யூகியின் அடையாளங்களை அவள் தெரிந்துகொண்டு அவனை அடைந்து யோசித்து மேல் நிகழ்த்தவேண்டியவற்றைச் செய்வித்தற்கு எண்ணிய உதயணன் முன்னமே தானெழுதி வைத்திருந்த ஓலையை அவளிடம் பிறரறியாமற் கொடுப்பித்து அவளை மந்தணமாக அவன்பாற் செல்லும்படி குறிப்பித்தனன். அவளும் அக்குறிப்பறிந்து வாசவதத்தையின் பிரிவாற்றுமற் சென்றனள்.

உதயணன் பிடியை நோக்கி, "உங்கள் சாதியிடத்துள்ள அன்பால் யான் அடைந்த சிறைத்துன்பத்தை முன்பு நளகிரி தீர்த்தளித்தது; இப்பொழுது இவள் கண்ணால் உண்டாகிய துன்பத்தை இவ்விருளில் விரைந்துசென்று தீர்த்தளிப்பது உன்னுடைய கடனாகும்" என்று அதன்செவியிற்கூறி அதனைச்செலுத்தினன். செலுத்துகையில், அம்பையும் வில்லையுந்தாங்கிய கையனாகி அங்கேவராகனென்னும் வீரன் வந்தனன். அவனைக்கண்டு, "வராக! நீ அஞ்சாதே; இங்கே சூழ்ந்து நிற்போர் கள்வர்களாகவும் இருத்தல்கூடும். ஆதலால் உன்கையிலுள்ள வில்லையும் அம்பையும் என்னிடங்கொடுத்துவிட்டு என்கையிலுள்ள வாளை நீ தாங்கிக்கொண்டு இப்பிடியின்மீது ஏறிக் கவலையின்றி உடன்வருவாயாக" என்று கபடமாகச் சொல்ல, வராகன் தன்கையிலுள்ள வில்லையும் அம்பையும் உதயணன்கையிற் கொடுத்துவிட்டுப் பிடியின்மீதேறுதற்கு அதனருகிற் சென்றனன். அவன் ஏறுதற்கு இடங்கொடாமற் பத்திராபதியை உதயணன் அதிவேகமாகச் செலுத்திக்கொண்டு சென்றான். அங்கேநின்ற காவலர்கள் பெரிதும் மனங்கலங்கி, "வத்தவனுடைய கருத்தை நாமறிந்துகொள்ளாமல் இரந்து வாசவதத்தையை இவன் பிடியின்மேல் ஏற்றிவிட்டோமே! இவன் தன்நாட்டை நோக்கிச் செல்லுகின்றனனே! இனிக் கூற்ற வாணையெங் கொற்றவன் திருமுன் யாது சொல்லிச் செல்வேம்?" என்று எண்ணி அச்சமும் நாணமுமுற்றார்.

உதயணன்வீரர்களில் ஒருசாரார், அம்புகளையும் விற்களையும் கையிலேந்தி எதிர்ப்போரைப் பெறுதவர்களாகித் தம்அரசனுடைய வெற்றியைப் பாராட்டிக்கொண்டு, "எம் தலைவனுக்குப் பிழைசெய்தோர் விண்ணுலகத்தை அடைவதன்றி மண்ணுலகில் இருத்தற்கு

உரியரல்லர்'' என்று சொல்லிக்கொண்டே பிடியின்பின் சென்றனர். வேறொருசாரார், போர்செய்தற்கு வருபவர் யாரேனும் உளரோ வென்று, இரையைவிரும்பிக் கடலில் உலாவித்திரியும் சுறுக்களைப் போன்று அங்கங்கே தேடித்திரிந்து சுழன்றுகொண்டு திட்டிவிட மென்னும் பாம்பைப்போலவே நெருப்பை உமிழுங்கண்களை உடைய வர்களாகி, எதிர்ப்போர்களை வெட்டிவீழ்த்துபவர்களாய்ப் பிடித்த வாளர் மடித்தவாயராய் நடுங்குவித்துத் திரிவாராயினர்.

பின்னும் யூகியால் அங்கங்கே இருத்தப்பட்ட ஐந்நூற்றைம் பத்தைந்து வீரர்கள் வெளிப்பட்டுக் கேடகத்தையும் வாளையுமுடைய வர்களாகி, பிடியைத் தடுத்தற்கு அதன்பின் செல்லும்வீரர்களை முன் சென்று வெட்டி வீழ்த்திக்கொண்டும், 'கூற்றுறையுலகினுள் உறைகுநி ராயின் விரைந்து குறுகுமின்' என்று சொல்லிக்கொண்டும் திரிந் தனர்.

அந்தச்சமயத்தில் யூகி, இயல்பான உருவமுடையவனாகி மயா னத்திலிருந்து பெருந்தவஞ்செய்து தான்பெற்றதும் கருங்கல்லைப் பிளந்தாலும் வடுப்படாத வாயையுடையதுமாகிய வாளைக்கையிலேந்தி அதனை நோக்கி, "வாட்படையே! அருச்சுனன் செந்தீக்கடவுளுக் குக் காண்டவ வனத்தை முற்காலத்தில் உணவாக அருத்தி அதன் பசியைத்தீர்த்ததுபோல, உன்பசியை இன்று தீர்த்துவிடுவேன்; பாதுகாக்கவேண்டும்" என்றுசொல்லி எதிர்த்தவர்களை எளிதிற் கொன்றுகொண்டு அதிவேகமாக உதயணனை அடைந்தான்; பத்திரா பதியை வலம்வந்து பலமுறை துதித்து, "பத்திராபதீ! உன்சாதியி லுள்ள பிரியத்தால் எம் தலைமகன் அடைந்த வருத்தத்தைத் தீர்த் தற்கு நீ விரைந்து சென்று இடையேயுள்ள காட்டில் தங்கிவிடாமல் எம்முடைய நாட்டையடைக; உனக்கு இது பெருங்கடனாகும்" என்று ஓம்படை சொல்லி அதன்காதில் மந்திரமொன்றை உபதேசித்து அர சனை நோக்கி, "விரைந்து செல்க; வெற்றி உண்டாகுக" என்றனன்.

உதயணன் சாங்கியத்தாயினுடைய இலக்கணங்களையும் இயல் பையும் உதவியையும் அவள் கைவிடுதற்கரியளென்பதையும் விளங் கப்பொறித்த ஓலையொன்றை யூகியினிடம் கொடுப்பித்து விட்டு, தன்னுடைய வீரர்களின்வெற்றியும் யூகியினுடைய ஆலோசனை யின் மேம்பாடும் அவற்றாலுண்டாகிய இன்பமும் தன்னுள்ளத்தை நிரப்பத் தனக்காகவே இமையவர் நிருமித்துத்தந்தாற்போன்ற அந் தப்பிடியை வடகீழ்த்திசையின்வழியே செலுத்தத் தொடங்கினான்; அப்போது மேற்கூறிய வராகனென்பவன் உஞ்சைவீரர்களின் உயி

ளைப் பாதுகாப்பவனுகிப் பின்தொடர்ந்து அங்கேவந்தான். அவனை நோக்கி உதயணன், "நீ அவந்தியர்பெருமானுடைய தாணிழலை யடைந்து பாதுகாத்திடுக வென்று வாசவதத்தையை என்பால் அன்புடன் ஒப்பித்தமையால் யான் இவளைக்கொண்டு என்னுடுசெல்லுதற்குத் துணிந்தேன்; இதனை அவருக்குக் கூறுவதுடன் என்வணக்கத்தையும் தெரிவிக்கவேண்டும்" என்று பாலொடு தேன்கலந்தாற்போன்ற சொல்லைச் சொல்ல, வராகன் அதனைக்கேட்டு மயங்கிப் பிடியின் பின்னே மீட்டும் சென்றுநின்றனன். உடனழைத்துச் செல்லாமற் செய்திசொல்லி வராகனைமட்டும் தந்தைபால் விடுத்தமைதெரிந்த வாசவதத்தை மயங்கி வெய்துயிர்த்துத் துன்புற்றுக் காஞ்சன மாலையை நோக்கி, "காஞ்சன மாலாய், என்னைக் கைப்பற்றிக்கொண்டு கீழேயிறங்குக" என்று சொல்லுவாளாய்த் தந்தைமுதலியோரின் பிரிவாற்ருதவள்போலவும் அச்சமுற்றவள்போலவும் புலம்புவாளாயினள்; அதனைக் கண்ட காஞ்சனமாலை கைகுவித்துக்கொண்டு தான் எண்ணியதை முடித்து விளங்கும் உதயணனை நோக்கி, "அரசே! தான் ஊசலாடினும் பாங்கியர் குரவையாடினும் மிக அஞ்சுகின்ற எங்கோமகள் நடுங்கும்படி,

> எறிவளி புரையு மிரும்பிடி கடைஇப்
> பின்வழிப் படருமெம் பெரும்படை பேணுய்
> என்வலித் தனையோ இறைவ" (க. 46: 185-7)

என்று சொல்லி வருந்தினள். உடனே உதயணன், "நீவிர் இருவரும் மயங்காதொழிக. அரசன் இவளை என்னேடுசேர்த்து அனுப்பியதை அறியாத வீரர்கள் போர்செய்தற்குத் துணிந்து வருகின்றார்கள். யான் இவர்களை ஒருபொருளாக எண்ணேன். இவர்களை வெல்லுதல் எனக்கு மிக எளிய காரியமாகும்; அஞ்சற்க" என்றனன். காஞ்சனமாலை வாசவதத்தையைத் தெருட்டி அவள் நடுக்கத்தைத் தீர்த்தனள். அவளும் நடுக்கொழிந்திருந்தாள். அப்பால் உதயணன் தன் நாட்டை நோக்கிப் பிடியைச்செலுத்தினன். அதுகண்டோர் யாவரும், "உதயணன் வாசவதத்தையை அரசனிடத்தாவது இராசமாதேவியிடத்தாவது கொண்டுசெல்லாமல் தன் நாடுநோக்கிச் செல்லுகின்றனனே! இனி என்ன நேருமோ!" என்று பகற்காலத்திற் சூரியனை இழந்தவர்கள் போலவே மிகவும் அஞ்சினர். செவிலித்தாயரும் பாங்கிமாரும் மற்றையோரும் அவளுடைய செயல்களை நினைந்து நினைந்து சொல்லிச் சொல்லி அங்கங்கே பலவகையாகப் புலம்புவாராயினர்.

சாங்கியத்தாய், எதிர்த்தோரை வென்றுகொண்டு திரிகின்ற யூகியை ஒற்றியடைந்தனள். அப்போது உதயணன் கொடுத்த ஓலையால் அவ்விருவரும் ஒருவரையொருவர் நன்கறிந்துகொண்டு மேல் ஆகவேண்டியவற்றை யுணர்ந்து சாதகனென்னும் குயவனுடைய மனையில் மறைந்திருந்தனர்.

நிகழ்ந்த நிகழ்ச்சிகளை அரசனுக்கு அறிவித்தற்கு அஞ்சி நகரத்தார் இன்னது செய்வதென்றறியாமல் தங்கள் கையைப்பிசைந்துகொண்டு அங்கும் இங்கும் திரிவாராயினர்.

உதயணனால் விடுக்கப்பட்ட வராகன் மீண்டுவந்து அரசனுடைய படமாடக்கோயிலின் முதல்வாயிலிலுள்ள தோரணக் கம்பத்தின் அடியையடைந்து வாயில்காவலனைக் கண்டு, "அரசர் பெருமானுக்குச் சில செய்திகள் அடியேன் வணங்கித் தெரிவிக்கவேண்டுவதுண்டு; அதற்குச் சமயம்அறிந்து விரைந்து வருக" என்று சொல்லி நின்றான்.

நிற்கையில், உள்ளே சோதிடனொருவன் அரசனைநோக்கி, "காற்றும் மேகமுங் கலந்த இந்நிமித்தமானது ஊருக்கு முதலில் துன்பத்தைத்தந்து பின்பு உமக்கு இன்பத்தைத் தரும்" என்று சொல்லவே அரசன், "அதுயாது?" என்று வினவியபொழுது வாயில்காவலன் வந்து இறைஞ்சினன். அரசன், "வந்த காரியத்தைச்சொல்" என்று கட்டளையிட அவன் மீட்டும் வணங்கி, "வாசவதத்தைக்கு அடித்தொண்டு செய்பவர்களுள் ஒருவனும் வல்வில் விளைஞனுமாகிய வராகனென்பவன் தான்வந்து இங்கே சிலவற்றைத் தெரிவித்துக்கொள்வதற்குச் சமயம் பெறவேண்டிப் புறத்தே நிற்கின்றான்; பல்லாண்டு வாழ்க" என்று இறைஞ்சினன். அரசன், "அவனை விரைவில் வரவிடுக" என்று சொல்ல, அவன் வராகனுக்கு அதனை அறிவித்தனன்; உடனே வராகன் உள்ளேவந்து, உலாவுமண்டபத்தில் உலாவாமல் முளைக்கோற் பெருந்திரைசூழ்ந்த வட்டத்தினிடையே சிங்காதனத்திற் சிவந்த மேலாடையால் தாண் முதலைக் கட்டிக்கொண்டு ஒரு தாமரைப்பூவைக் கையிலேந்திக் கதிரவன்போலவே வீற்றிருந்த அரசர்பிரானை எழுகோல் எல்லைக்கு அப்பால்நின்று நடுக்கத்துடன் வணங்கினான். அரசன் அவனது அச்சத்தோற்றத்தைக் கண்டு அவன் கருதி வந்த காரியம் மிகவும் கடுமையாக இருத்தல் வேண்டுமென்றெண்ணி அவனை இருகோலெல்லையுள் வரும்படி கட்டளையிட்டு, "வாசவதத்தைபால் நிகழ்ந்த புதிய நிகழ்ச்சி ஏதேனுமுண்டோ?" என்று வினவி

னன்; அப்போது அவன் யாதொன்றையுஞ் சொல்ல இயலாதவனாகி மீட்டும் இறைஞ்சினன். தான் மீட்டுமீட்டுங் கேட்கவும் அவன் விடைகூறாமற் பின்னும்பின்னும் மயங்குதலைக்கண்டு, "நிகழ்ந்ததை அஞ்சாமற்சொல்" என்று அரசன் அவனுயிர்க்கு அபயங் கொடுத்தனன். அப்போது வராகன் தீயிற்பட்ட மெழுகுபோல் உருகிய முகத்தனாகி, "அரசர் பிரானுடைய ஆணையாலோ வேறொன்றாலோ விளங்கவில்லை; காற்றாலும் மழையாலும் தீயாலும் புறநகரும் அகநகரும் அணுகுதற்கு அரியனவாயின; அங்கங்கே பலர் போர்செய்தற்குப் புறப்பட்டனர். அந்நிகழ்ச்சிகளைக் கண்டு மிகவும் அஞ்சி வாசவதத்தையை இங்கே அழைத்துவருதற்கு ஏற்ற அரண் காணப்படாமையின், நின் ஆற்றலாணை, யாங்கள் செயலற்றோமாகி, இனிச் செய்யவேண்டுவது யாதென்று கருதி முன்னம் நளகிரியை அடக்கிய உதயணகுமாரனைக் குறையிரந்து அவனுடன் பத்திராபதியின்மேலே ஏற்றினம்; ஏற்றியவுடன் அவன் பத்திராபதியைக் காற்றைப் போலவே செலுத்திக்கொண்டு, எம்மைப் பாராமலும் இந்நகரத்தை அடையாமலும் தன் நகரஞ் செல்லத் தொடங்கினன்; மாயிரு ஞாலத்து மன்னுயிருண்ணுங் கூற்றைப் போன்றவராகிய நம்முடைய வீரர் ஆயிரத்தைஞ்ஞூற்றுவர் அஞ்சாமற்சென்று தடுத்தனர்; தடுக்கவும் அவனுடைய வீரர்வந்து போர்செய்து நம்மவர்களைக் கொன்று வீழ்த்தி வெற்றிபெற்றுத் திரியலாயினர். அப்பொழுதும் நான் அஞ்சி நில்லாமல் பத்திராபதியின் பின்னே விரைந்து சென்ற பொழுது உதயணன் என்னைநோக்கி, 'நம்மரசர்பிரான் வாசவதத்தையை என்னிடம் ஒப்பித்து அனுப்பினமையால் நான் இவளுடன் என்னிடஞ் செல்கின்றேன்; என் வணக்கத்தை அவருக்குச் சொல்ல வேண்டும்' என்று திசைநோக்கி இறைஞ்சிக்கூறிப் பிடியை நடத்திக் கொண்டு செல்வானாயினன்; தெரிவித்தற்கு வந்தேன்; இச்செயல் மாயம்போலும்! காவல! அருள்புரிக" என்று கூறினன்.

கேட்டவுடன் பிரச்சோதனனுக்குக் கண்கள் தீயைப்போலச் சிவந்தன. சூழ்ந்துநின்ற உறுதிச்சுற்றத்தார்களைச் சுடுபவன் போல அவன் பார்த்து, அருகேயுள்ள தூணைப்புடைத்து, பகைச்சிங்கத்தின் கொடுங்குரலைக்கேட்ட சிங்கவேற்றைப் போலப் பெருமுழக்கஞ் செய்து, "கொடியணி தேரும் குதிரையும் யானையும் வடிவேலிளையரும் வல்விரைந்தோடி, இப்புண்ணியவிழவிற் சமயம் பார்த்து ஒற்றி நம்முடைய சோர்வையறிந்து வாசவதத்தையைக் கைப்பற்றிக் கொண்டு நம்மை இகழ்ந்துசென்ற பகைவனைப் பிடித்துக்கொண்டு

விரைவில் வருக" என்று வீரர்களுக்குக் கட்டளையிட்டனன்; அவர்களும் அப்படியே சென்றனர். அப்போது அங்கே பல மந்திரிமாருடனிருந்த சாலங்காயன், "உதயணன் வாசவதத்தையைப் பிடித்துச்சென்றது குற்றமாகாது; ஆலோசித்துப் பார்க்குமிடத்து,

குலத்தினுங் குணத்தினு நலத்தகு நண்பினும்
நிலத்தினி னின்னொடு நிகர்க்குந னாதலின்
மேல்வகை விதியின் விழுமியோர் வகுத்த
பால்வகை யல்லது பழிக்குந ரில்லை. (க. 47: 137-40)

ஆதலால், இப்போது சினந்தணிதல் நலமாகும்" என்று சொல்லக் கோபந்தணிந்த பிரச்சோதனன், "இச்செய்தியை மற்றையோர் தெரிவித்தற்கு முன்னதாக நாமே பட்டத்தேவிக்குத் தெரிவிக்கவேண்டும்" என்றெண்ணி முரசறைகின்ற வள்ளுவமுதுமகனை வருவித்து, "இப்புனலாடு விழவின்கண், மாலையில் மழைத்துளியில் நகரத்துக்குச் செல்லுதல் நன்றன்று; ஆதலால் இப்போது செல்லவேண்டாம்; காலையிற் செல்லுக; இஃது அரசன் கட்டளையென்று நீர்த்துறைநகரத்தார் அறியும்படி முரசறைவித்துத் தெரிவித்திடுக" என்று கட்டளையிட்டான். அவனும் அவ்வண்ணஞ் செய்தனன்; அப்பால் அரசன் முதற்பெருந்தேவியையடைந்து அங்கே பள்ளிகொள்ளாநுகி அவளை நோக்கி, "வாசவதத்தையை உதயணனுக்கு மணஞ்செய்வித்து அவனுடைய நாட்டிற்கு அனுப்ப என்மனம் விரும்பியது; உனக்கு உடன்பாடுதானோ இது?" என்று கேட்டனன். அவள், "நளகிரியையடக்கி உமக்குமுன் கொணர்ந்து நிறுத்திய அன்றே அவனுடைய இளமைக்கோலமும் பிறவும் அவன் வாசவதத்தைக்குரியவனென்று நினைக்கும்படிசெய்தன; எனக்கு அச்செயலில் யாதொரு வெறுப்புமில்லை; விருப்பமே" என்று உவந்து கூறினள். அதனைக் கேட்டு உட்கொண்ட அரசன், நெருப்பிற்காய்ந்த நாராசத்தைக் காதிற் செறித்ததுபோல வாசவதத்தையின் பிரிவுச்செய்தியைப் பின்பு கூறினன்; கூறியவுடன் அவள்,

இசைகொள் சீறியா ழின்னிசை கேட்ட
அசுண நன்மா வந்நிலைக் கண்ணே
பறையொலி கேட்டுத்தன் படிமறந் ததுபோல் (க. 47:241-3)

மூர்ச்சித்துப் பின்பு புலம்புவாளாயினள்; அரசன், தக்க காரணங்களைக்கூறித் தேற்றினன். அவள் சிறிது தெளிந்திருந்தாள்; மற்றை அந்தப்புரமகளிர் வாசவதத்தையின் பிரிவாற்றாமல் பலவாறு புலம்பு

வாராயினர். பொய்கைக்கரைக்கண் விழாவிற்காக அமைக்கப்பட்ட அப்புதிய நகரத்துள்ள மகளிர் பலரும் வாசவதத்தையைப் பிரிந்தமையால் திங்களையிழந்த விண்மீன்களைப்போலப் பொலிவில்லாதவர்களாய் விலாவித்துக்கொண்டிருந்தனர்.

முன்னம் உதயணனைப் பிடித்துவரும்படி பிரச்சோதனனால் அனுப்பப்பட்ட போர்வீரர்பலர் நால்வகைப்படைகளுடன் சென்று கடல் புடைபெயர்ந்தாற்போலவே முன்பும் பின்பும் பக்கங்களிலும் வந்து தடுக்கையில் அங்கங்கே யூகியால் வைக்கப்பட்டுப் பதுங்கியிருந்த வீரர்கள் அவர்களைவென்று மீளச்செய்தார்கள். பத்திராபதி உஞ்சேனைக்கு அப்பால் இரண்டுகாததூரஞ் செல்லுதற்குமுன், சூரியன் அத்தமித்தான்; மதி தோன்றியது; பிடி விரைந்துசென்றது; அதன் அடியோசைக்கும் வேகத்திற்கும் வாசவதத்தை அஞ்சினள்; அவளை நோக்கிக் காஞ்சனை, “ விதிப்படி உன் தந்தை மணஞ்செய்துகொடுக்கவில்லையென்கிற குறையையன்றி வேறுகுறையாதும் இலது; நீ விரும்பிய அணிமுடியண்ணல் வலியவந்து உன்னை அடுத்தான்; ஆதலால், நீ கவலையடையாதே; பிடியின் வேகத்தால் சந்திரமண்டிலமும் நக்ஷத்திரங்களும் விண்ணில் ஒருநிலையாக இராமற் சுழலுவனபோலத் தோன்றுகின்றன; மலைகளும் மரங்களும் பிறவும் முகத்தைத் தாக்குதற்கு விரைந்து வருவனபோலவே மண்ணிற் காணப்படுகின்றன; நீ ஒன்றையும் பாராமலிருப்பாயாக ” என்று அவளது நுதல்வேர்வையைத் துடைத்துக் கூட்டமாகச்செல்லுங் கருடப் பறவைகளுடைய சிறகுகளின் ஒலியைப்போலவே திம்மெனவொலிக்கும் பிடியின் அடியோசை கேளாதபடி அவள் காதிற் பஞ்சியைச் செறித்து அவளைத் தழுவிக்கொண்டனள். அப்போது பிடியானது,

பாளைக் கமுகும் பணையும் பழுக்கிய
வாழைக் கானமும் வார்குலைத் தெங்கும்
பலவும் பயினு மிலைவளர் மாவும்
புன்னையுஞ் செருந்தியும் பொன்னிணர் ஞாழலும்
இன்னவை பிறவு மிடையற வின்றி
இயற்றப் பட்டவை யெரிகதிர் விலக்கிப்
பகலிருள் பயக்கும் படிமத் தாகி
அகல மமைந்த வயிர்மண லடுக்கத்துக்
காறேய் கணைக்கதிர்ச் சாறேய் சாலி
வரம்பணி கொண்ட நிரம்பணி நெடுவிடை
உழவ ரொலியங் களமர் கம்பலும்

வளவய லிடையிடைக் களைகளை கடைசியர்
பதலை யரியல் பாசிலைப் பருகிய
மதலைக் கிளியின் மழலைப் பாட்டும்
தண்ணுமை யொலியுந் தடாரிக் கம்பலும்
மண்ணமை முழவின் வயவ ரார்ப்பும்
மடைவாய் திருத்து மள்ளர் சும்மையும்
இடையற வின்றி யிரையாறு தழீஇ
வயற்புலச் சீறூ ரயற்புலத் தணுகி
மருதந் தழீஇய (க. 48 : 151 - 70)

அம்மருதத்திணையைக்கடந்து விரைந்து சென்றது. செல்லுகையில் வயந்தகன், "இங்கே தோன்றும் அருட்டநகரத்தார் இதன் ஓசையைக் கேளாதபடி இந்நகரத்தின் வலப்பக்கமாகவுள்ள பெருவழியில் இதனைச் செலுத்துதல் நன்று" என்று உதயணனிடம் தெரிவிக்கவே அவன் அவ்வாறு செலுத்தினன்; அப்போது அப்பிடி,

இறங்குகுர லிறடி யிறுங்குகடை நீடிக்
கவைக்கதிர் வரகுங் கார்பயி லெள்ளும்
புகர்ப்பூ வவரையும் பொங்குகுலைப் பயறும்
உழுந்துங் கொள்ளுங் கொழுந்துபடு சணையும்
தோரையுந் துவரையு மாயவும் பிறவும்
அடக்க லாகா விடற்கரு விளையுட்
கொல்லை பயின்று வல்லை யோங்கிய
வரையி னருகா மரையா மடப்பிணை
செருத்தற் றீம்பால் செதும்புபடப் பிலிற்றி
வெண்பூ முசுண்டைப் பைங்குழை மேயச்
சிறுபிணை தழீஇய திரிமருப் பிரலை
செறியிலைக் காயா சிறுபுறத் துறைப்பத்
தடவுநிலைக் கொன்றையொடு பிடவுதலைப் பிணங்கிய
(க. 49 : 104 - 16)

முல்லைத்திணையையும்,

ஈரமில் குறவ ரிதண்மிசைப் பொத்திய
ஆரத் துணியொடு காரகில் கழுமிய
கொள்ளிக் கூரெரி வெள்ளி விளக்கிற்
கவரிமா னேறு கண்படை கொள்ளும்
தகரங் கவினிய தண்வரைச் சாரல்
நறையு நாகமு முறையிரு வேரியும்
வருக்கையு மாவும் வழையும் வாழையும்

மருப்பிடை நிவந்த வாசினி மரமும்
பெருஞ்செண் பகமும் பிண்டியும் பிரம்பும்
கருங்காற் குறிஞ்சியுங் கடிநாள் வேங்கையும்
சுள்ளியுஞ் சூரலும் வள்ளியு மரலும்
வால்வெள் வசம்பும் வள்ளிதழ்க் காந்தளும்
பால்வெண் கோட்டமும் பனிச்சையுந் திலகமும்
வேயும் வெதிரமும் வெட்சியுங் குளவியும்
ஆய்பூந் தில்லையு மணிமா ரோடமும்
ஆரமுஞ் சந்து மகிலுந் தமாலமும்
ஏரில வங்கமு மேலமு மிருப்பையும் (க. 50 : 17 - 33)

செறிந்த குறிஞ்சித்திணையையும்,

விஞ்சையம் பெருமலை நெஞ்சகம் பிளந்து
கல்லுட் பிறந்த கழுவாக் கதிர்மணி
மண்ணுட் பிறந்த மாசறு பசும்பொன்
வேயுட் பிறந்த வாய்கதிர் முத்தம்
வெதிரிற் பிறந்த பொதியவி ழருநெல்
மருப்பினுட் பிறந்த மண்ணு முத்தம்
வரையிற் பிறந்த வயிரமொடு வரன்றி
...... ... ...... ... ... ... ... ... ... ... ... ... ...
முடந்தாட் பலவின் குடம்புரை யமிழ்தமும்
நெடுந்தாண் மாவி னெய்படு கனியும்
கருந்தாள் வாழைப் பருங்குலைப் பழனும்
பெருந்தேன் றொடையலும் விரைந்துகொண் டளைஇ
நறவஞ் சாரற் குறவர் பரீஇய
ஐவன நெல்லுங் கைவளர் கரும்பும்
கருந்தினைக் குரலும் பெருந்தினைப் பிறங்கலும்
பாவை யிஞ்சியுங் கூவைச் சுண்ணமும்
நாகத் தல்லியு மேலத் திணரும்
கட்சா லேகமு முட்கா ழகிலும்
குங்குமத் தாதும் பைங்கறிப் பழனும்
கிழங்கு மஞ்சளுங் கொழுங்காற் றகரமும்
கடுப்படு கனியுங் காழ்த்திப் பிலியும்
சிற்றிலை நெல்லிச் சிறுகாய்த் துணரும்
அரக்கின் கோலோ டன்னவை பிறவும்
ஒருப்படுத் தொழியாது விருப்பி னேந்தி
மலைவயிற் பிறந்த மாண்புறு பெருங்கலம்
நிலைவயின் வாழ்நர்க்குத் தலைவயி னுய்க்கும்

பகர்விலை மாந்தரி னுகர்பொரு ளடக்கி
பன்மலைப் பிறந்த தண்ணிற வருவிய
அமலை யருங்கல மடக்குபு தழீஇத்
தன்னிற் கூட்டிய தானைச் செல்வமோ
டிருகரை மருங்கினும் பெருகுபு தழீஇ
அணிக்குருக் கத்தியு மதிரலு மனுக்கி
மணிச்சையு மயிலையு மௌவலு மயக்கி
ஞாழலும் புன்னையும் வீழ நூக்கிக்
குருந்துங் கொன்றையும் வருந்த வணக்கித்
தடவும் பிடவுந் தாழச் சாய்த்து
முளவு முருக்கு முருங்க வொற்றி
மாவு மருதும் வேரறப் புய்த்துச்
சேவுங் குரவுஞ் சினைபிளந் தளைந்து
நறையு நாகமு முறைநடு முருக்கி
வழையும் வாழையுங் கழையுங் கால்கீண்
டாலு மரசுங் காலொடு துளக்கிப்
புன்கு நாவலும் புரள வெற்றிக்
கொங்கார் கோடலோடு கொய்யல் குழைஇ
அனிச்சமு மசோகமு மடர வலைத்துப்
பனிச்சையும் பயினும் பறியப் பாய்ந்து
வள்ளியு மரலுந் தன்வழி வணக்கிப்
புள்ளி மானும் புல்வாய்த் தொகுதியும்
ஆமா வினமுந் தாமா றோடி (க. 51 : 8-56)

வரும் நருமதையாற்றையுங் கடந்து செல்லும்பொழுது, வயந்தகன் விண்மீன்களைப் பார்த்துக் காலவெல்லையை அளந்து கூறினன். உதயணன் விரைவாகப் பிடியை நடத்தியபொழுது, அரத்தின் நுதி போன்ற பருக்கைக் கற்களாலாகிய முரம்புகளையுடைய பாலைநிலம் காணப்பட்டது; "எயினர் இதிலுள்ள துர்க்காதேவியின் கற்சிறைக் கோட்டத்தின் ஒருசார் ஒடுங்கி மறைந்திருந்துகொண்டு, இவ்வழியே செல்லும் வணிகர் திரளையும் மற்றவர்களையும் வருத்திப் பொருள்களைப் பறித்துக்கொள்ளும் நடுகல்லுமலையும் இறந்தவர்களின் உடம்புகளை அவர்கள் தழைகளால்மூடி அவற்றின்மேற் குவிக்கப்பட்டிருக்கும் கற்குவியல்களையுடைய இடங்களும் சிறுதூறுகள் பிணங்கியிருக்குமிடங்களும் கொல்லப்பட்ட ஆட்களைச் சும்மாபோகட்டுவிடும் குழிகளும் இவைபோன்ற பிறவும் மிக்கதாய்த் தட்பக்காலத்தும் வெப்பம் நீங்காததாய்,

ஓமையு முழிஞ்சிலு முலவையு முகாயும்
கடுவுந் தான்றியுங் கொடுமுட் டொடரியும்
அரவு மரசு மாரு மாத்தியும்
இரவு மிண்டுங் குரவுங் கோங்கும்
கள்ளியுங் கடம்பு முள்ளியு முருக்கும்
தணக்கும் பலாசுங் கணைக்கான் ஞெமையும்
ஈங்கையு மிலவுந் தேங்காய் நெல்லியும்
வாகையும் பிறவும் (க. 52: 37-44)

ஆகிய மரங்களையுடையதாய்த் தோன்றும் இப்பாலைத்திணைப் பெரு வழியிற் பகலிற்செல்லுதல் இயலுவதன்று; இரவிலேயே செல்ல வேண்டும்'' என்று வயந்தகன் கூறினன்; உதயணன் பிடியை விரைவாக நடத்தினன்; அப்பொழுது அவனுடைய யாழ் கட்ட விழ்ந்து வீழ்ந்து[1] மூங்கிற்காட்டில் ஒருமூங்கிலிற் சிக்கிக்கொண்டது.

அதனையறிந்த வயந்தகன், "நின்யாழ் கீழே விழுந்தது; பிடியை நிறுத்துக'' எனவே உதயணன், "பிடி எண்ணூறு விற்கிடைத்தூரம் வந்துவிட்டது; இனி நம்மாற் செய்யற்பாலது யாதொன்றுமில்லை; தந்தெய்வம் தானே தரும்'' என்று சொல்லிப் பறந்து செல்வது போலத் தோற்றும்படி பிடியை விரைவாக நடத்தினன்; உடனே காலவேகமென்னும் நோய் கனற்ற அப்பிடி மெல்லச் சென்று பிரச்சோதனனுடைய நாட்டின் எல்லையாகிய ஐந்நூற்றினுள் மெலிவுறுவதாயிற்று. அதனையறிந்த உதயணன் வயந்தகனிடம், "இப்பிடி நோயால் மெலிவுற்றது; இனி வீழ்ந்துவிடும்; காஞ்சனையுடன் நீ பின்பக்கத்து வழியே இறங்குவாயாக'' என்று கூறித் தான் வாசவதத்தையைத் தழுவிக்கொண்டு,

உமையொடு புணர்ந்த விமையா நாட்டத்துக்
கண்ணணங் கவிரொளிக் கடவுள் போல (க. 53: 15-6)

அதன் தலைப்பக்கத்துவழியே மெல்ல இறங்குகையில், அப்பிடி சாயாமற் காலைப் பரப்பிக்கொண்டு, "நான் செய்த குற்றத்தைப் பொறுத்தருள்க'' என்று உதயணனை வணங்குவதுபோலத் தன்தலை அவன் காலிற்படும்படி வீழ்ந்தது; உதயணன் அதுவீழ்ந்த இயல்பையும் அதுநோக்கிய திசையையும் நிமித்தநூல்வழியே ஆராய்ந்துபார்த்து, முதலில் தனக்குத் துன்பமுண்டாகுமென்றும் அப்பால் அத்துன்பம் நீங்கப்பெற்றுத் தன்இடத்தைத் தான்அடைதல் கூடுமென்றும் தெரிந்துகொண்டான். பின்பு அதனுடைய மணிகள், புரோசைக்கயிறு,

---

[1] இக்காட்டின்பெயர் பஞ்சவனமென்பது; உதிதோதய. உதயண.

தவிசு, கடித்தகமென்பவற்றைக் களைந்து வேறிடத்தே வைத்தான்; வைத்தபின், "இதனுயிர் விரைவில் நீங்கும்" என்று வயந்தகனுக்குச் சொல்லிவிட்டுத் தான் அதன் மத்தகத்தைச் சார்ந்து உடம்பு குளிரும் படி அதனைத் தைவந்தான்; இறுதிக்காலத்திற் சொல்லுதற்குரிய உறுதியாகிய ஓம்படை மொழிகளைக் கூறி, நற்கதியை யடைவிக்கவெண்ணிப் [1] பஞ்சமந்திரத்தை அதன்செவியில் உபதேசித்துவிட்டு, "இப்பிறப்பில் என்னுடைய துயரத்தைத் தீர்த்த பிடியே! வருபிறப்பில் என்னோடு உடன்வாழ்வாயாக" என்று கண்ணீர்த்துளியுடன் சொல்லித் தாங்கமுடியாத மனக்கவலையுடையவனாகி, வயந்தகனை நோக்கி, "இவ்விருவரையும் துயிலச்செய்து பாதுகாத்திடுக" என்றுசொல்லி வில்லையும் அம்பையும் அவன்கையிற் கொடுத்துவிட்டுக் கேடகத்தையும் வாளையும் தான் கைக்கொண்டு யானைக்கு நீர்க்கடன் கழித்தற் பொருட்டு அங்கே நீர்நிலையுளதோவென்று தேடித்திரிபவன் ஓர் அம்புவீழ் தூரத்தில் ஒரு புட்கரணியைக் கண்டனன்.

அப்பொழுது வெள்ளிமுளைத்துத் தோன்றியது; தோன்றவே உதயணன் வாள்முதலியவற்றை அப்புட்கரணியின்கரையில் வைத்துவிட்டு அதில் ஆடித் தன் நியமங்களை நிறைவேற்றிப் பிடி நல்ல கதியை அடையக் கடவதென்று அதற்கு நீர்க்கடனாற்றி வயந்தகனை அடைந்து, "இனிப் பகற்காலத்தில் யாம் மறைந்திருக்க வேண்டிய இடத்தை அறியவேண்டுவது இன்றியமையாதது" என்று சொல்லி ஆலோசிக்கையில் வயந்தகன், "இவ்விடம் நாட்டுச்சந்தி; அன்றியும் காட்டகத்துறையுங் கடுவினை வாழ்க்கை வேட்டுவர் பயிலுமிடம்; ஆதலால், இந்த இடம் இருத்தற்குத் தகுதியுள்ளதன்று; இனி இரண்டுகாத வழித்தூரம் சென்றால் நம்மவர் இருக்கும் நகரத்திற்குச் செல்லும் வழியை நாம் அறிந்து செல்லலாம்" என்று சொன்னான். கேட்ட உதயணன் தன்கையிலிருந்த வாளையும் கேடகத்தையும் அவன்கையிற் கொடுத்துவிட்டு அவன் கையிலிருந்த வில்லையும் அம்பையும் தான் வாங்கிக்கொண்டு காஞ்சனமாலையை நோக்கி, "இனி வாசவதத்தையை எழுப்பிக்கொண்டு நடந்துசென்று துன்பமில்லாத இடத்தை யாம் அடையவேண்டும்" என்றனன். காஞ்சனமாலை அவளை எழுப்பி நடந்துவரும்படி வேண்டினள். அப்போது பூமாலையையும் பாரமாக நினைத்து மெலிபவளாகிய வாசவதத்தை உதயணன்பாலுள்ள காதன்மிகுதியால், தன் மென்மையை அறியாமல் ஊக்கத்தோடு நடந்து வருகையில், அவனுடைய முன்

[1] பஞ்சநமஸ்காரமென வழங்கும்.

இனையவை பிறவு மனையவ ருள்வழிச்
செருக்கய லுண்கட் சீதையைத் தேர்வுழிக்
குரக்கினத் தன்ன பரப்பின ராகி (க. 55 : 104-10)

ஊன்றி ஊன்றிப் பார்த்துக்கொண்டே செல்லுகையில், உதயணனைக் கண்டனர்; பலவகைப்பட்ட ஒலிகளையும் எழுப்பினர்; நாற்புறமுஞ் சூழ்ந்து தாக்கினர். அதனைக்கண்டு நடுங்கும் வாசவதத்தையைப் பாதுகாக்கும் வண்ணம் காஞ்சனமாலையிடஞ் சொல்லிவிட்டு, உதயணன் புறத்தே வந்து ஒருகோங்கமரத்தின் அடியையடைந்துநின்று வில்லை வளைத்து அவர்கள்மீது அம்புகளைத் தொடுத்துத் தொடுத்து வருத்துவானாயினன்; அதனைக்கண்டும் அவர்கள் சிறிதும் அஞ்சாமல் அவனை நெருங்கி, "பிடி வீழ்ந்தவுடன் யாம் பிழைக்கலாமென்று நீ ஒளித்துவந்தவனல்லையோ? உன்னுயிரை உண்பேம்; எங்கே செல்லுகின்றாய்? நீ யாவன்? உண்மையைச் சொல்வாயாக" என்று கொடிய மொழிகளைக் கூறி அவன்மீது அம்புகளைத் தூவினர். அவன் சிறிதும் அஞ்சானாகி அவற்றை விலக்கி, அவர்கள் மெய்யைத்துளைத்துக் கொண்டு பூமியிற் புதையும்படி அம்புகளை யெய்தனன்; நாற்பத்தொன்பது மறவர்கள் இறந்தனர்; இறக்கவே அச்சமுற்று எஞ்சியவர்கள் ஆற்றாராகி, "அழகிய வடிவத்தோடு நம்மைக் கொல்வதற்கு இம்மலையிடத்தே வந்த காலனோ இவன்?" என்று சொல்லி அவனுடைய வில்லுக்கு எதிரே நிற்றற்கும் ஆற்றலில்லாதவராகி நிமித்தங்கூறிய முதியவனைப் பலவாறு பழித்துக்கொண்டே மீட்டும் உதயணனை வளைத்து நின்றார்கள்.

பின்பு அவர்கள், மேலே செய்வது இன்னதென்பதை அறியாதவர்களாகி, "இவன் ஒருவன்; யாம் பலராயிருந்தும் இவனால் அழிக்கப்பட்டேம்; மேலே யாம் செய்யவேண்டியவற்றை அறிந்து கூறுமின்" என்று பறவைநிமித்தங்கூறுவோனைக் கேட்ப, "இலவம் பொதும்பரைச் சூழ்ந்த இடங்களை நீங்கள் தீக்கு இரையாக்கிவிட்டு உள்ளே யிருப்பவர்களைப் புறப்படச்செய்து துன்புறுத்துங்கோள்" என்று கூறினன். உடனே எல்லாப் பக்கங்களிலும் தீயை மூட்டிவிட்டு ஒரு சிங்கத்தைப் பல நரிகள் சூழ்ந்ததுபோல அவர்கள் உதயணனைச் சூழ்ந்துநின்று துன்புறுத்தினார்கள். அதனைக்கண்ட வாசவதத்தை துயரமடைந்தாள். அப்போது உதயணன், "காஞ்சனமாலாய், இவளை அழைத்துக்கொண்டு வேறொருபக்கத்தின்வழியே செல்வாயாக; யான் இவ்வழியே சென்று அவர்களை வென்று மீள்வேன்" என்று சொல்லி அனுப்பிவிட்டுத் தான் குகையினின்றும் வெளிப்படும்

புலிபோல் முள்ளிலவமரப்பொதும்பரினின்றும் புறப்பட்டனன். வேடர்கள், அத்தியாளியைக்கண்ட யானைகள்போலவே அஞ்சி நீங்கினர். அப்பொழுது வாசவதத்தையை மெல்ல நடத்திக்கொண்டு உதயணன் புறப்படுவானாயினன். அவ்வேடர்கள் திரும்பவும் நாற்புறமும் வந்துநெருங்கி அவனது விற்போர் அடங்கும்படி பொருது வில்நாணை அறுத்தனர் ; அறுக்கவே யாதொன்றையும் செய்வதற்கு இயலாமையால் வலையிற் சிக்குண்டு அகப்பட்ட சிங்கம்போன்று செய்தற்குரியது இன்னதென்பதை அறியாதவனாகிப் பாரதப்போரிற் பல வீரர்க்கு இடையில் கர்ணனால் நாணற்றுப்போன வில்லோடு தனியே நின்று போர்செய்த அபிமன்னுவைப்போலவே உதயணன் அவர்களெய்யும் அம்புகளை வில்லாலே விலக்கிக்கொண்டு நின்றனன் ; அதனைக்கண்டு ஆற்றாதவளாகிய வாசவதத்தை நடுநடுங்கித் தான் அணிந்திருந்த ஆபரணங்களைக் களைந்து, "இவற்றை வேட்டுவர் கையிற்கொடு" என்று காஞ்சனமாலையின்கையிற் கொடுத்துவிட்டு வேடரைநோக்கி, "நீங்கள் வருத்தாதீர்கள்" என்று கூறியழுதனள். காஞ்சனமாலை, "இவற்றை வேடர்கள் கையிற் கொடேமாயின் கொடுந்துன்பம் விளையும்" என்று கூறி ஆபரணங்களை உதயணன் கையிற்கொடுத்தனள்.

அதுகண்ட வேடர், "நீங்கள் யார்?" என்று கேட்ப உதயணன், "வேடர்களே! உதயணனுடைய வாணிகர் யாங்கள் ; வத்தவநாட்டினின்றும் பிரச்சோதனனது நாடுசென்று பொருள்களையீட்டி அவற்றைப் பிடிமீது ஏற்றிக்கொண்டு வந்தோம் ; வழியில் அப்பிடி வீழ்ந்துவிடவே அப்பொருள்களை இருளில் ஒரு சோலையிடத்திற் புதைத்து அடையாளமிட்டிருக்கின்றேம். அவற்றைப் பெற்றுக்கொள்ளுதலில் உங்களுக்கு மனமிருப்பின் இக்கொலைத்தொழிலை ஒழிமின் ; எம்முடன்வரின் அப்பொருளைக் காட்டுவோம்" என்று கூறினன்.

"உதயணனுடைய வாணிகர் யாங்கள்" என்ற சொல்லைக்கேட்ட வேடர்களின் தலைவன் சினம்தணிந்து தன்வில்லை மடக்கிக்கொண்டு போர்செய்யும் ஏனையோர்களையும் அடக்கினன் ; ஆயுதங்களைத் தூரத்திற்போடும்படிசெய்து மேலாடையால் உதயணனது முன்கையைக் கட்டி, "அப்பொருளைக் காட்டுதற்கு எழுவாயாக" என்று கூற, உதயணன் அந்த இடத்தைப் பார்ப்பவன்போலவே விரைந்து சிறிதுதூரஞ் சென்றுபார்த்து, "நாம் பாலைநிலத்து வழியே வந்தமையால் மெலிவுற்றுத் தங்கிய சோலையொன்றில் அவற்றைப் புதைத்தோம்; நீங்கள் மூட்டிய நெருப்பாலும் புகையாலும் புதைத்த இடத்தைக்காணமுடிய

வில்லை; இவ்வழல் ஆறும் அளவும் நீங்கள் சும்மா நில்லுங்கள்" என்று கூறினன்; அவர்கள் மனந்தெளிந்து, "அழலவிந்தபின்பு நீ காட்டா யாயின் உன்னைக் கொன்றுவிடுவோம்" என்றனர்.

அதனையறிந்து வாசவதத்தை மிகவும் நடுங்கி அழுதனள். உதயணன், "யாம் புதைத்த ஆபரணங்களைப் பெறுதற்கு விருப்பமிருப்பின், எமது கைக்கட்டை அவிழ்த்து விடுங்கள்; இவளுடைய துயரத்தை நீக்கிப் புகைதீர்ந்தவுடன் ஆபரணங்களைக் காட்டுவோம்" என்றுகூற, அவர்கள், "சொல்லியவண்ணஞ் செய்யாதாயின் இவன் பிழைத்தற்கு வழியில்லை" என்று சொல்லிக்கொண்டு மையணியானையைத் தடுத்துத் தழும்பிய அவன் கைகளின் கட்டை அவிழ்த்து விட்டு அவனைச் சூழ்ந்து நின்றார்கள். உதயணன் இனிய மொழிகளால் வாசவதத்தையைத் தேற்றித் தன் மெல்லிய கரத்தால் தைவர அவள் கண்களினின்றும் நீர்த்துளிகள் சிந்தின. ஒருவரையொருவர் நோக்கி அவலங்கொண்டு நிற்பாராயினர்.

இவர்கள் இப்படியிருக்க, கன்றைப்பிரிந்த கறவையைப்போல உதயணனைப் பிரிவாற்றாமல் அவன் கட்டளையால் இருளிற்சென்ற வயந்தகன் புட்பகநகரத்தை அடைந்தனன்.

அங்கே இடவகன், "உதயணனுடைய குணமிகுதிகளையெல்லாம் அறிந்த பிரச்சோதனனுடைய தமர் உதயணன் மல்லாற்றிலும் சிறந்து மிக்க செருக்குடையவனாக இருத்தலால் அவனை எப்படியேனும் அடக்கிவிட வேண்டுமென்றெண்ணி உள்ளே ஆயுதங்களைப் பரப்பிய பொய்ந்நிலமொன்றைக் காட்டி அதில் அவனை வீழச் செய்தனர்" என்னும் பொய்ம்மொழியைச் சிலர் கூறக்கேட்டு மிகுந்த கவலையையுடையவனாகி, "இச்செய்தி உண்மையாயின் யாம் உயிர் துறப்பேம்" என்று எண்ணி, உச்சைனி நகர்சென்று நிகழ்ந்ததை அறிந்துவரும் ஆற்றலையுடைய ஒற்றனொருவனை வருவித்து அவனிடம் அச்செய்தியைக்கூறி அந்நகருக்கு அனுப்புதற்கு வந்து நின்றனன். அந்தச் சமயத்தில், அங்கு எதிரே வந்த வயந்தகனை அவன் கண்டு, தோழனாகிய உதயணன் உயிரோடிருத்தலை முதலில் அறிந்து மனமுவந்து, முத்தியுலகத்தைப் பெற்றவன்போல இன்புற்று உதயணனுடைய சௌக்கியம் முதலியவற்றை விசாரித்துத் தெரிந்து கொண்டு அவன் வந்த காரியத்தை அறிந்து ஆராய்தற்கு அவனோடு தனியே சென்றனன். உச்சைனிநகரத்தே நிகழ்ந்த நீர்விழவிற் பிரச்சோதனனுடைய சோர்வையறிந்து வாசவதத்தையைப் பிடிமீ தேற்றிக்கொண்டு இருளிற் போந்தது முதலிய செய்திகளையும் உதய

ணன் கூறிய அடையாளச்செய்தியையும் வயந்தகன் கூறினன். அவற்றைக்கேட்ட இடவகன், "சேனைகளை அமைத்து யாம் விரைந்துசெல்ல வேண்டும்" என்று எழுந்து, உதயணனுக்கும் வாசவதத்தைக்கும் வேண்டிய ஊர்திகள் முதலியவற்றுடன் பின்னே வரும்படி வேலைக்காரர்களுக்குக் கட்டளையிட்டு வயந்தகனுடன் புறப்பட்டுச் சேனைகளோடு சென்று உதயணன் இருந்த முள்ளிலவம்பொதும்பரையடைந்தனன்.

அங்கே உதயணனுடைய அம்புகளால் வீழ்ந்த வேடர்களின் இரத்தத்தையுண்டு மாங்களின்மீது அங்கங்கே யிருந்த காக்கைக் கூட்டங்களையும் கழுகின்கூட்டங்களையும் புகைப்படலத்தையுங் கண்டு, "இது நம் இறைவன் இருந்த இடம்; அவனுக்கு ஏதோ ஒருதுன்பம் நேர்ந்ததுபோலும்; யாம் உயிரை விடுதலே நலம்" என்று வயந்தகன் புலம்பினன். இடவகனும் வருந்துவானாயினன். அப்போது உடன்வந்த படைவீரர், அங்ஙனம் நடந்திருக்கமாட்டாதென்பதைத் தக்க காரணத்துடன் சொல்லி அவர்களுடைய வருத்தத்தைப் போக்கி அப்பாற் சிறிது தூரம் அழைத்துச் செல்லுகையில், வாசவதத்தையுடன் உதயணன் நிற்றலையும் வேடர்கள் சூழ்ந்து நெருக்குதலையுங் கண்டு சிறிது ஆறுதலுற்றனர். குதிரைவீரரும் யானைவீரரும் விரைந்துவந்து வேடர்களை வருத்தத் தொடங்கினர். அப்போது, "நீங்கள் விரைவில் ஓடிப்போமின்; போகீராயின் உங்களுயிர் இப்போதே கெடுமென்று ஒருபறவை தெரிவிக்கின்றது" என்று முன்பு நிமித்தங்கூறிய முதுமகன் வேடர்க்குக் கூறினன். கூறியும் அவர் அதனைமதியாமல் துத்தரிக்கொம்புகளை ஊதி முழக்கினர். உதயணன் அங்கேவந்தோர் தம்மவரென்பதையறிந்தும் அதனை வெளிப்படுத்தாமல் மனத்தில் அடக்கிக்கொண்டு அவ்வேடர்களை நோக்கி, "இங்கே வந்தபடை நும்முடையதோ பிறருடையதோ?" என்று வினவினன்; வினவவே, "இப்படை உதயணன் மந்திரியாகிய இடவகன் படை; நீ எம்மோடு வா; வாராயாயின் இப்படையால் துன்புறுவை" என்று தம் உருவை மறைத்துக்கொண்டு சிலர் போன இடந் தெரியாதபடி ஓடியேபோயினர்; சிலர் புல்லினும் புதரினும் மறைந்து தம்மைப் பாதுகாத்துக்கொண்டனர்; சிலர்மட்டும் எதிர்த்துப் போர்செய்து நின்றனர். அங்ஙனம் நின்றவர்களை இடவகன்வீரர் ஆயுதங்களாற் பலவாறு வருத்தினர். வருத்தவே, அவர்களும் ஓடிவிட்டனர். தம்மவர் வழங்கும் படைகளும் வேடர்கள் வழங்கும் படைகளும் தங்கள் மேலே படாதபடி உதயணன் பாது

காத்துக்கொண்டே அங்கு நின்றனன். இங்ஙனம் குறவர்களை வென்ற படைவீரர், திங்களைச் சூழ்ந்த விண்மீனைப்போல உதயணனைச்சூழ்ந்து பாதுகாத்து நின்றார். உதயணன் முகமலர்ச்சியுடன் வாசவதத்தையோடு அப்படையினிடையே விளங்கி நின்றான்.

அப்போது, வயந்தகனும் இடவகனும் அருகே வந்து உதயணனைப் பாராட்டினார்கள். அவர்கள் பணித்த ஏவல்களைக்கேட்டு இயற்றிக்கொண்டே படைவீரர் சூழ்ந்து நின்றனர். அவ்விருவரையும் நோக்கி உதயணன், " துன்பமாகிய பெருங்கடலைக் கடத்தற்கு நீவிர் பெரும் புணையாயினீர் " என்று அன்புடன் பாராட்டினன். அப்பொழுது சயந்திநகரத்தைச் சார்ந்த மலைச்சாரலிற் பலவகையினரும் தனித் தனியே தங்குதற்கேற்ற கொட்டில்கள் அமைந்த விசாலமான பாடி நகரமொன்று அமைக்கப்பெற்றது. உதயணனுக்கும் வாசவதத்தைக்கும் உரிய படமாடங்கள் அதில் இயற்றப்பெற்றன. அவற்றிற் பலவகைப் பொருள்களும் ஆயத்தஞ்செய்து நிறைத்துவைக்கப்பட்டன. உதயணன் வாசவதத்தையுடன் வந்து அப்படை வீட்டில் தங்கி இன்புற்றிருந்தனன்.

வாசவதத்தைக்கு அமைந்தனவாகிய பாவை, முற்றில், வேய்ங் குழல், பொற்கவறு, பளிக்குநாய், சந்தனப்பலகை, சந்தனப்பேழை, சாந்தரையம்மி, அகிற்புகைத்தூளையகல், சிக்கம், கோதைச்செப்பு, கிளி, மயில், பூவை, பொற்கரண்டம், அணிகலப்பேழை, மணிக் கண்ணாடி, மணிவிளக்கு, மயிர்வினைத்தவிசு, இருக்கைக்கட்டில், அடைப்பை, கோடிகம், முட்டிணைவட்டு, பட்டமளி, ஆலவட்டம், சாந்தாற்றி, மாலைப்பந்து முதலியவற்றை ஏந்திய மங்கையர் ஒருபால் நின்றனர். உதயணனுக்கு அமைந்தனவாகிய பரிமா, யானை, தேர், கொற்றக்குடை, வேல், கொடி, கவரி, முரசு, சங்கம், படவம், விதானம், சிங்காதனம், பொங்குபூந்தவிசு முதலியவற்றையுடையவர்களாய்ச் சிலதரும் இயவரும் சிந்துதேசத்துள்ள பலவகைப் பாஷைமாக்களும் ஒருபால் நின்றனர். கைக்கோலினரும் கணக்கரும் மெய்காப்பாளரும் வீரரும் பிறரும் புற்றிலிருந்து புறப்படும் ஈசற்கணம்போல் வந்து கூடிச் சூழ்ந்து நின்றனர்.

நாழிகைக் கணக்கர்வந்து உண்ணுதற்குரிய காலத்தைத் தெரிவிக்க, இருளிற் பிடியை ஊர்ந்துவந்த நலிவாலும் துயில்கொள்ளாத மெலிவாலும் வேடர்களோடு போர்செய்த துன்பத்தாலும் பல பொழுது உண்ணாத பசிமிகுதியாலும் வருத்தமுற்றிருந்த உதயணன், வல்லவன் வகுத்த வாசஎண்ணெய்பூசிக் காப்புடை நறு

நீராடி, மருத்துவர்வகுத்த அரும்பெறலடிசிலைத் தோழரோடு உண்டு மகிழ்ந்தான்.

வண்ணமகளிர் முதலியோர் வந்து உபசரித்து நீராட்டி அலங்கரித்து வாசவதத்தையை உண்பித்தார்கள். அவளும் ஆறுதலையடைந்து மகிழ்ந்தாள்.

படமாடங்களின் வரிசைகளாலும் யானைகளின் பெருமுழக்கத்தாலும் அலைகளையுடைய பாற்கடலையும், பலவகையான இன்பநுகர்ச்சிகளால் உத்தரகுருவையும் போன்று அப்புதுநகர் சிறந்து விளங்கிற்று.

அப்பொழுது சயந்திநகரஞ்செல்லுவதற்கு யானையொன்று அலங்கரித்துக் கொணர்ந்து நிறுத்தப்பட்டது. உதயணன் மேகத்தின் மேலே தோன்றும் பருதியஞ் செல்வன்போல அதனை ஊர்ந்து விளங்கினன். பூர்ண சந்திரனைப்போலே வெண்கொற்றக்குடை நிழற்றியது; தோழர் களிறுகளிலேறி அவனுக்கு இருபுறத்துஞ் சென்றனர். கடுங்கட்காவலர் சட்டையிட்டு வாளையேந்திப் பாதுகாத்துக்கொண்டு வந்தனர். யானைகளும் குதிரைகளும் காலாட்படைகளும் சூழ்ந்து சென்றன. பொதியிற்சந்தனம், விந்தமலையிலுள்ள யானைத்தந்தம், வடமலைப்பொன், மேல்கடற் கொடிப்பவழம், கொற்கைத்துறைமுத்தம், விஞ்சையம்பெருமலை வெள்ளி, இலங்கையீழத்துச்செப்பு, இமயத்துவயிரம், கடாரத்திரும்பு ஆகிய இவற்றைக்கொண்டு

யவனத் தச்சரு மவந்திக் கொல்லரும்
மகதத்துப் பிறந்த மணிவினைக் காரரும்
பாடலிப் பிறந்த பசும்பொன் வினைஞரும்
கோசலத் தியன்ற வோவியத் தொழிலரும்
வத்த நாட்டு வண்ணக் கம்மரும் (க. 58 : 40-44)

தத்தம் கைத்தொழிற்றிறமை புலப்படும்படியியற்றிய ஆரமுதலிய உறுப்புக்களையும், நாண்மீன் கோண்மீன் முதலியவற்றின் எழுச்சி அத்தமயங்களைப்புலப்படுத்தும் பொறிமண்டலமமைந்த உள்ளிடத்தையும், சாமரையிரட்டல் முதலியவற்றைச்செய்யும் எந்திரப் பாவைகள்பல நிற்கும் பக்கங்களையும், பின்னும் பற்பல விசித்திர வேலைப்பாடுகளையுமுடையதாய் விளங்கும் ஒரு தேரின்மீது காஞ்சனமாலையின்தோளைப்பற்றிக்கொண்டு வாசவதத்தை ஏறி இந்திரனுடைய செல்வக்குமாரிபோல விளங்கிப் பின்னே வருவாளாயினள்; புதுத்துணைமகளிர் அவளுடைய அடியீடுகளை ஏத்தினர்; கோற்கைக் காவலாளர் பக்கத்தே பாதுகாத்துவந்தனர். பலவகைக்கொடிகள்

அசைந்துதோன்றின. மலையில் எதிரொலியுண்டாகும்படி முரசங்கள் முழங்கின.

அப்போது மலையைச்சார்ந்த சிற்றூர்களில்வாழுங் குறும்பர்கள் யானைக்கொம்பு, மலைத்தேன், பலாக்கனி முதலிய கனிகள், வீணைத்தண்டு, மூங்கில்முத்து, அகில், பன்றியின்எறி, புலித்தோல், ஊகம், பிணை முதலிய காணிக்கைப்பொருள்களை ஏந்திக்கொண்டு வந்து அரசன் முன்னே வைத்து வணங்கி, " அரசே!

> அற்ற காலத்தும் முற்ற நோக்கி
> அடியுறை செய்தொழிற் குடிமுதல் பிழைத்தல்
> இருநிலம் பெயரினு மெம்மாட்டில (க. 58 : 90-92)

என்று பணிவுடன்மொழிந்து படைகளோடு கூடித் தாமும் பாதுகாத்து வந்தனர். மிலேச்சமன்னர் முற்படையிலும், வீரர் பிற்படையிலும் காவல்செய்துகொண்டு வந்தார்கள். பலரும் இங்ஙனமே பணிசெய்துவர இடையிலேயுள்ள சிற்றரண்களையுடைய ஊர்கள் பலவற்றைக்கடந்து உதயணன் சயந்தியம்பதியை அடைந்தனன்.



இரண்டாவது

# இலாவாணகாண்டம்.



உதயணன் வாசவதத்தையுடன் வருதலைக்கேட்ட சயந்தி நகரத்தார் மிகுந்தமகிழ்ச்சியடைந்து எல்லாவீதிகளிலும் நடைக்காவணமிட்டுக் கீழே பூக்களைப்பரப்பிப் பழுக்குலைக்கமுகு, குலைவாழை, கரும்பு முதலியவற்றை இரண்டுபக்கங்களிலும் முறையேகட்டி முத்தமாலைகளையும் பவழமாலைகளையும் அங்கங்கே நாற்றி வாயில்தோறும் தோரணகம்பங்களை நாட்டிப் பெருங்கொடிகளையும் சிறுகொடிகளையுங்கட்டிப் பின்னும் பலவகையான அலங்காரங்களையும் செய்தனர்; அப்போது வெந்துய [1] ரருவினை வீட்டிய [2] அண்ணலை இந்திரவுலகமெதிர்கொண்டாற்போல, அவர்கள் உதயணனை எதிர்கொண்டார்கள். முரசங்கள் முழங்கின; பலவகையான வாத்தியங்கள் ஒலித்தன. மகளிரும் மைந்தரும் வாயில்களில் வந்துநின்று அவனையும் வாசவதத்தையையுங்கண்டு கண்குளிர்ந்து மனங்களித்து, "எங்களுடைய துன்பமாகிய இருளைப் போக்குதற்குச் சூரியன்போலவே தோன்றிய பொங்குமலர்த் தாரோய்! புகுக" என்போரும், "தெய்வயானையைப் பெறவேண்டிச் சேனையின்றித் தனியேபோய்ப் பகைவனாற்பற்றப்பட்டு உச்சைனிசென்று வென்று அப்பகைவனுடைய செல்வப் புதல்வியைக் கைப்பற்றி அழைத்துக்கொண்டு வந்த ஆண்சிங்கமே! வருக" என்போரும், "நீ இல்லாத சமயம்பார்த்துக் கௌசாம்பி நகரத்தைக் கைப்பற்றிய ஆருணி யரசனைவென்று புதல்வர்களாகிய எங்களைப் பாதுகாத்துச் செங்கோல் செலுத்திக் கொண்டு நெடுங்காலம் வாழ்வாயாக" என்போரும், "திருமால்மார்பைச்சார்ந்து இன்புற்றிருக்கும் திருமகள்போல எங்களரசனைச் சார்ந்து இன்புறுதற்கு முற்பிறப்பில் தவஞ்செய்த புண்ணியப் பாவையே! எங்களைப் பாதுகாத்தருள்வாயாக" என்போரும், "செந்தாமரைக் கண்ணனாகிய நம்மரசனுடன் பிரச்சோதன சக்கரவர்த்தியின் அருமைப் புதல்வியாகிய வாசவத்தை மகிழ்ந்துவருதலைக் கண்டோம்; யாமே மிக்க புண்ணியமுடையோம்; இப்பிறப்பில் இனி யாம் அடையவேண்டிய பயன் யாதுளது?" என்போரும், "பிரச்சோதனனுடைய பெண்கள் பலருள் வாசவதத்தையென்பவள்

1 அருவினை - காதிகர்மம். 2 அண்ணல் - அருகன்.

பேரழகினளென்றும் காணுதற்கரியளென்றும் சொல்லக் கேட்டிருந்த துண்டு; கண்டதில்லை; அந்தக் கட்டழகியை நாம் எளிதிற்கண்டு கண்கள்பெற்ற பயனையடையும்படி அழைத்துவந்து நமக்குக் காட்டிய மன்னர்மன்னன் மன்னுக" என்போரும், "பிரச்சோதனன் காட்டில் மாயயானையைக்காட்டி வஞ்சித்து நம்பெருமானைப் பிடிப்பித்துத் தன்நகர்க்குவருவித்துச் சிறைப்படுத்திய செய்தியைக்கேட்டுத் தான் இறந்துவிட்டதாக யாவரையும் நினைக்கச்செய்துவிட்டு மாறுவேடம் பூண்டு உச்சைனியிற்புகுந்து செய்தற்கரியவற்றைச் செய்து தன் தலைவனைச் சிறைமீட்டுப் பகைமன்னனுடைய நங்கையைக் கைக்கொண்டு செல்கவென்று சொல்லிப் போய்வருகவென்று அனுப்பிய பேராற்றலுடைய யூகி இவ்வுலகில் நீடூழி வாழ்வானாக" என்போரும், "நம் அரசனுக்குவந்த பெருந்துன்பம் முடிவில் வாசவதத்தையை அவன் அடையும்படி செய்ததன்றி நம்முடைய துன்பத்தையும் தீர்த்துவிட்டது; ஆதலால், இது மிகவும் வியப்பைத் தருகின்றது" என்று அவனது புண்ணியத்தைப் புகழ்வோரும், "யாழில் மிக்க தேர்ச்சியுற்றுத் தருக்கி இணையற்று விளங்கும் உதயணனுக்கு வாசவதத்தையை மணஞ்செய்துகொடுக்க எண்ணிய பிரச்சோதனன், 'நம்மகளை மணஞ்செய்துகொள்ளும்படி இரப்போமாயின் அவன் செய்துகொள்ளமாட்டான்; இவளை அவன்பால் அனுப்பி அவனுக்கு மணஞ்செய்விப்போமாயின், குலத்திற் சிறியவனென்று நம்மை உலகமிகழும்' என்று நாணி யானைமாயத்தால் நம் சேனைக்கிழவனைப் பிடிப்பித்துச் சிறைப்படுத்தி வாசவதத்தைக்கு யாழ் கற்பிக்கும்வண்ணஞ்செய்து அவளுடைய அழகில் ஈடுபடும்படி பண்ணி அவனுடன் அவளை யனுப்பினன்; மகளிரைக் கொடுப்போருடைய குறிப்பு இதுவாகும்" என்போரும், தத்தமக்குத் தோற்றியவாறே இன்னும் இவைபோன்ற பலவற்றைச் சொல்லுபவர்களுமாய் அங்கங்கே நிற்க, உதயணன் அமராபதியிற்புகும் இந்திரன் போலவே சயந்திநகரத்திற்புகுந்து தன்னுடைய அரண்மனையை அடைந்து வீற்றிருந்து விளங்குவானாயினன்.

அங்ஙனம் விளங்கும் நாட்களிலே ஒருநாள், குடையை மேற்கொண்டு செல்லல், ஆசனத்திருத்தல், செருப்பொடுபுகுதல், சேனையெழுச்சி, யானை, தானைமுதலிய மரியாதைகளைத் தன்னுடைய கல்விப்பெருமையாற் பெற்றவனாகிய பெருங்கணியானவன் வந்து மணஞ்செய்தற்குரிய நல்லநாளைத்தெரிவித்தனன். தெரிவிக்கவே திருநாள், படைநாள், மணநாளென்னும் நாட்களிலன்றி மற்றைநாட்களில் முரசறை

யாத வள்ளுவமுதுமகன், வெண்சாந்துபூசி வெண்மலர்மாலையணிந்து வெண்டுகிலுடுத்திச்சென்று, பொன்வார்விசித்து முத்தமாலை மலர் மாலைகளையணிந்து ஏற்றரி போர்த்தப்பெற்றதாகிய அரசனுடைய கொற்றமுரசத்தைப் பெரும்பணைக்கொட்டிலிற்பூசித்துக் கொற்றவையைத்துதித்து அதனை யானையினது பணையெருத்தத்திலேற்றிப் பலர் தன்னைச் சூழ்ந்துவரத் தான் அந்தயானையின் முதுகிலுள்ள அணையிலிருந்துகொண்டு, தேரோடும் வீதிகளெல்லாஞ்சென்று நகரத்தாரெல்லாரும் அறியும்படி "அரசன்வேல் வெற்றிபெற்று விளங்குக; பூமகள் புணர்க; மண்மகள் மலிக ; நகரத்தீர்! நான் கூறுவனவற்றைக் கேளுங்கள் ; பாவச்செயல்களை நீக்கித் திருவையுடையீராய்ப் புகழ்பெற்று விளங்குங்கள் ; பிரச்சோதனசக்கரவர்த்தியின் குலமகளாகிய வாசவதத்தையை நம்முடைய அரசர்பிரான் மணஞ்செய்யும்நாள் இன்னதாகும்" என்று குறுந்தடியால் அம்முரசையறைந்து தெரிவித்தனன் ; கேட்ட நகரத்தார்கள் மகிழ்ந்து அதிக விருப்பத்துடன் தத்தம் வாயில்களில் தோரணங்களை நாட்டி மிகவும் விசாலமான பந்தர்களைப்போடுவித்து அவற்றின் அகத்தும் புறத்தும் விசித்திரமாகிய அலங்காரங்களைச் செய்வித்தனர்.

பலவகையானபழங்களும் வெற்றிலையும் பலவகைப்பாக்குக்களும் நிரம்பிய பெட்டிகளையும் சுண்ணப்பெருங்குடங்களையும் தம் பக்கத்தில் வைத்துக்கொண்டு வந்தோர்க்கு வரைவின்றி அவற்றைக்கொடுப்போர் முழக்கமும், முரட்கோலிளையர்களின் காவல் சூழப்பெற்றுக் கீழே வெண்மணல்பரப்பிய தண்ணிழற்பந்தரைச் சுற்றுப்பக்கத்திலுடையனவும் மடைத்தொழில் வழுவாத வாழ்க்கையர் பயின்றனவுமாகிய அறச்சோற்றட்டில்களின் அகத்தும் புறத்தும் அந்தணாளர்க்கும் அல்லாதபிறர்க்கும் அமுதினன்ன அடிசில்களையும் நெய்யாலாக்கிய சிற்றுண்டிகளையும் எப்போது விரும்பினாலும் அப்போதே அளித்தலைத் தவறின்றிச் செய்வோர் முழக்கமும், கொடுப்பவர்கள் வீழ்த்திய குங்குமக்களியும் மலர்களும் வேதியர்களின் வீட்டு வாயில்களிற் சிந்திய சமிதைகளும் வாசனைப்பொருள்களைத் தொகுப்போர்களின் வீட்டுவாயில்களிற் சிந்திய வாசச்சுண்ணமும் புலந்தமகளிரெறிந்த மலர்மாலைகளும் சிறார்வீழ்த்திய செம்பொற்கண்ணிகளும் வீதிகளில் தெய்வங்களுக்குக் கொடுக்கப்படும் பலிகளும் தம்பலமுமாகிய குப்பைகளைத் தூத்துச் சந்தனக்குழம்பால் துகளையவித்துப் போது பல பரப்பிய வாயில்களிற் செய்யப்பட்டுள்ள அலங்காரங்களை அழித்துவிட்ட சிறுபிள்ளைகளைப் பிடித்துக்கொண்டுசென்று அவர்க

ளுடைய குற்றச்செயல்களைத் தாய்மார்களுக்கு அறிவுறுத்தும் ஏவன் மகளிருடைய முழக்கமும், சக்கரவடிவத்தினவாகிய ஆறு எந்திரங்கள் ஒன்றற்கொன்று மாறுய்நின்று நீரைச்சொரியாநிற்கச் சந்திராதித்த முதலிய முக்குடைகள் எந்திரத்தாற் புடைபெயர்ந்து அசையாநிற்க விளங்கும் சினுலயங்களில் தீர்த்தங்கரர்களுடைய சரித்திரங்களை விளங்க எடுத்துரைத்துப் பெரியோர்கள் அருகனைப் பூசிக்கும் முழக்கமும், கண்ணுற்கண்டவற்றைக் கையாற் செய்யும் நூல்வினைக் கம்மியர் பணியோலை நெட்டி துகில் முதலியவற்ருல் நாற்றம்தோற்றங்களிற் சிறிதும் வேற்றுமையில்லாதபடி இயற்றிய இலை கொழுந்து முகிழ் போது மலரென்பவற்றையுடைய பலவகைமரங்களை அங்கங்கே பந்தர்க்கால்களிலெல்லாம்கட்டி, அப்படியே முன்சுவர்களில் ஓவியங்களைத்தீட்டிக் [1] காலத்தைப் புலப்படுத்தும் எந்திரங்களை உரியஇடங்களில் அமைத்துப் பார்த்தவர்கண்களை மீளவிடாதபடி பின்னும் செய்யவேண்டிய அலங்காரங்களையெல்லாம் அங்கங்கே செய்பவர்களிடத்துண்டாகிய முழக்கமும், அரசனுடைய வேலைக்காரர்களில் முதியவர்கள்பலர் நாற்புறத்துமுள்ள கடைவீதிதோறும் வந்து, "கிரீடமல்லாத பெருங்கலங்களுள் எவற்றை யாவர்வேண்டினும் உடனே அன்புடன் அவற்றைக்கொடுத்துவிடலாம்; கொடுத்த வற்றிற்கு இரண்டுமடங்கு அரசன் பின்பு மகிழ்ந்து அளிப்பது திண்ணம்" என்று வாணிகர்களுக்குச் சொல்லும் பெருமுழக்கமும், அலங்காரமின்றிச் சும்மா ஓடி விளையாடுகின்ற தம்முடையபிள்ளைகளை அழைத்து, "எந்தையர்! இங்கேவருக; புதியவற்றை அணிந்து நும் தந்தைமார்களோடு நம் அரசர்பிரானுடைய கலியாணமண்டபத்திற்குச் செல்லுங்கள்" என்று சொல்லி நல்ல உடைகளையுடுத்தி அவர்களுடைய உச்சிமுதல் பாதம்வரையில் அணியவேண்டியவற்றை அணிந்து தழுவி முத்தமளித்து அவர்களையனுப்பும் அரிவைமார்களின் முழக்கமும், உண்டவர் கைவிடமுடியாத பலவகைப்பட்ட பானவகைகளைத் தம் இல்லங்களில் தொகுத்துவைத்து, "வள்ளத்திற் பெய்யுங்கள்; பிறர்க்குக்கொடுங்கள்; தாருங்கள்" என்று மிக்க ஊக்கத்தோடுகூறுங் கள்ளுண்ணுளருடைய பெருமுழக்கமும், பகைவரைவென்று அவர்களுடைய குடரை மாலையாகச் சூடுவனவும், மூத்தோர் பெண்டிர் துறவியர் பாலரென்பவர்களுக்கு ஒருபொழுதும் துன்பஞ்செய்யாதனவும் உத்தமவிலக்கணங்களையுடையனவுமாகிய ஆயிரத்தெட்டு யானைகளை அலங்கரித்து அரசன் ஆடு

1 காலேந்திரம்.

தற்குரிய மண்ணுநீர் கொணர்தற்காக அவற்றைச் செலுத்துகின்ற பாகர்களுடைய பெருமுழக்கமும், மிக்க அழகையுடையவர்களும் ஈன்றோரையும் எதிர்நோக்காதவர்களுமாகிய கன்னிமகளிருள், "மண்ணு நீர் சுமத்தற்குரிய புண்ணியமுடையவர்களே! வாருங்கள்" என்று எதிர்கொள்ளும் கோயின்மகளிர்களின் பாடலோசையும், இவை போன்ற பல்லாயிரவோசைகளும் தம்முட்கலக்கப்பட்டு நகர் கடிமணச் செல்வத்தால் விளங்கியது; கலியாணத்திற்கு வேண்டிய எல்லாம் அமைக்கப்பெற்றன.

அப்பொழுது, சோதிடர் வந்து முகூர்த்தவேளையைத் தெரிவித்தனர்; அறுதொழின் முத்தீ அருந்துறைபோகிய மறைநவிலுவினையுடைய புரோகிதன் வந்து மணப்பந்தரில் உதயணனையும் வாசவதத்தையையும் ஆசனத்திலிருக்கச்செய்து எதிரில் அக்கினியை வளர்த்து உரியபொருள்களைக்கொண்டு ஆகுதிபண்ணித் திசைகளிலெல்லாம் உரிய தெய்வங்களைப் பிரதிட்டைசெய்து பூசித்து நிவேதித்து, அம்மியேற்றுதல் முதலிய விசேடங்களை நிகழ்த்தி, "நன்னிலையுலகினுவல் போலவும் பொன்னணி நெடுமலைபோலவும் மன்னுக விவர்" என வாழ்த்தினன்; பின்னர் வாசவதத்தையின் முன்கையைப்பற்றிக் கொண்டு உதயணன் தீயை வலம் வந்தனன். அருந்ததிகாட்டல் முதலாகிய மற்றச் சடங்குகளும் விதிப்படி நிறைவேறியபின் இருவரையும் கட்டிலேற்றினர்.

அப்பால், ஆருந்திங்களிற் பெருங்கணிச் சங்கத்தாரும் திணைகளும் கணக்கரும் பிறரும்வந்து உடல்மயிர்களைதலாகிய விசேடத்தையும் விதிப்படி நிகழ்த்தினர்.

பின்பு, உதயணனுக்கு மண்ணுநீராட்டுதற்பொருட்டு ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் உறுதிச்சுற்றத்தாரும் பிறரும் பக்கங்களில் நெருங்கி வாராநிற்க, ஆயிரத்தெட்டு யானைகளின்மேல் குடைகள்கவிப்ப ஆயிரத்தெட்டுப் பொற்குடங்கள் சென்றன; அக்குடங்களை இறுகப்பிடித்துக்கொண்டு அவற்றின் இருபுறத்தும் கன்னிமகளிர் இருந்தார்கள். முழவும் பிறவாத்தியங்களும் முழங்கின; முரசங்கள் சிலைத்தன; சங்கங்கள் ஒலித்தன; சிறுகொடிகளும் பெருங்கொடிகளும் உயர்ந்து அசைந்து விளங்கின; மேற்கட்டிகளின் கீழே பதினாறு மங்கலப்பொருள்களை ஏந்திக்கொண்டு மங்கலமகளிர் முன்னே சென்றனர்; வேல் வாள் கோல் இவற்றைக்கையிற்கொண்ட காவலிளையர் பாதுகாத்துச் சென்றனர்; இந்தச் சிறப்புடன் சென்று ஒருவாவியில் நீரைமுகந்து கொணர்ந்து, உதயணனுடைய இடப்பக்

கத்தில் வாசவதத்தையைவைத்து இருவருக்கும் விதிப்படி நீராட்டி அலங்கரித்தனர். பின் நிகழ்த்தவேண்டியவை முறைப்படி நடைபெற்றன. அப்பால், இருவரும் இனிய உணவுகளை உண்டு அன்புமிக்கவர்களாகி இன்புறுவாராயினர்.

அக்காலத்தில் அறிஞர் சிலர் உதயணனை யடைந்து, "தேவாலயத்தையும் நகரத்தையும் வலஞ்செய்தல் விவாகத்திற்குரிய விதியாகும்" என்று கூற, உதயணன் அதனை அங்கீகரித்து முறைப்படி வாசவதத்தையோடு கோயிலையடைந்து முக்குடைக்கீழ் விளங்கும் அருந்தவக்கிழவனாகிய அருகதேவனைத் தரிசித்துத் தன்னுடைய பிரார்த்தனையை நிறைவேற்றிக்கொண்டு புறத்தேபோந்து மிக்க வைபவத்துடன் நகர்வலஞ் செய்தனன்; அப்பொழுது, அவனுடைய புதுமணக் கோலத்தையும் வாசவதத்தையையும் உலாச்சிறப்பையும் பார்த்தற்கு நகரத்துள்ள இருபாலாரும் வாயில்மாடங்களின்மீதும் கட்டுமலைகளின்மீதும் நகர்காண் ஏணியின்மீதும் ஏறிக் கண்டுகளித்தார்கள். அதன்பின் அவ்விருவரும் அரண்மனையையடைந்து ஒருவரையொருவர் விட்டுப்பிரியாமல் மிக்க காதலையுடையவர்களாகி ஒப்பற்ற இன்பமடைந்து வாழ்வாராயினர்.

அவ்விருவரும் இங்ஙனம் வாழ்ந்துவருகையில், புகழின் பெருமையையும் வேறுவேறிடத்துப் பிறந்த ஆன்பாலும் தேனும் கலந்தாற்போலத் தோழர் வேறுபட்டேயினும் கூறுபட்டியலாத அன்புமிக்க நண்பின் அமைதியையும் இராசகாரியங்களில் தழும்புபட்ட அமைச்சினாற்றலையும் இவைபோன்ற பிறகுணங்களையும் தன்பால் தாங்கி உச்சைனியில் எல்லாவற்றிலும் வெற்றிபெற்று விளங்கியயூகி, உதயணன் சிறைப்பட்டுச் செல்வத்தை நீத்தனனென்று நினையாமல், பிரச்சோதனன் தன்மகள் வாசவதத்தையை அவனுக்கு அன்பொடு கொடுத்தமையாலேதான் அவன் பிடிமேலேற்றிக்கொண்டு தன் நகர் சென்றனனென்பதையும் பிறவற்றையும்,

'கோயின் முற்றத்தும் வாயின் மருங்கினும்
வம்பலர் மொய்த்த வம்பலத் தகத்தும்
யானைத் தானத்து மருந்தவப் பள்ளியும்
தானைச் சேரியுந் தானெடுத் துரைக்கும்
பாடை யறியாத் தேசிகச் சேரியும்
ஓதுநர் சாலை யகத்து மோவாச்
சூதுபொரு கழகத் தருகலுந் தோமில்
நல்லதுந் தீயது மறிந்தகத் தடக்கா

மட்டுமகிழ் மகளிர் துட்டச் சேரியும்
காரிகை பகருங் கருங்கடை மழைக்கண்
வார்கொடி மகளிர் வளநகர் வரைப்பினும்
குதிரைப் பந்தியுங் கோடிகர் வரைப்பினும்
மதிமயக் குறாஉ மறுகணி கடையினும்
நீர்த்துறைக் கரையினுங் கூத்துறை சேரியும்
மன்றுஞ் சந்தியும்' (உ. 8 : 56-70)

ஆகிய இடங்களிற் பேசுவித்து நகரத்தாரெல்லோரும் அறியும்படி பண்ணி, அங்கங்கேயுள்ளவர்கள் பேசுவனவற்றையெல்லாங்கேட்டு, மாகளவனத்திற் காளிகோயிலிலிருந்த தன் தோழர்களையும் வீரர்களையும் பிறரையும் ஓரிடத்திற்கூட்டி முகமன்கூறி, "இந்நகர் வறுமையடையும்படி இனி நீங்கள் பெருவழியேசெல்லாமல் வேறு வேறு வழியே தனித்தனியாகச் சென்று விரைவில் நம் மன்னனை அடையுமின்" என்றுசொல்லி அவர்களைப் புறப்படச்செய்தான்.

அப்பால் அவன் ஆகவேண்டியவற்றை நாடினனாகித் துறந்தோர்களின் வேடம்பூண்டு நகரத்தாருடைய மனங்களைக்கவர்ந்து காரியங்களை முடிப்பவர்களாய்ச்சென்று முனிவராச்சிரமங்களிலிருக்கும் தன் தோழர்களைக்கண்டு அங்குள்ளமுனிவர் தெரிந்துகொள்ளாதபடி வேற்றோன்போலத் தன்னைக்காட்டிச்சொல்லவேண்டியவற்றைச் சொல்லி அவர்களை உதயணன்பாற் செல்லும்படி அனுப்பினான். பின் ஆண்டுள்ள முனிவர்களுடன் சமயவிகற்பங்களையும் நீதிகளையும் பகற்காலமுழுவதும் பேசிக்கொண்டேயிருந்துவிட்டு இராவிற் புறப்பட்டுத் தன்னுடன் முன்னமேவந்து ஆகவேண்டியவற்றைப் பிறரறியாமற் செய்துகொண்டிருந்த சாதகனென்னும் குயமகனது இல்லத்தையடைந்து அங்கேயிருந்த சாங்கியத்தாயைக் கண்டு நிகழ்ந்தவற்றையும் நிகழ்த்தவேண்டுவனவற்றையும் அவளுக்குக்கூறிப் பசியையும் வெப்பத்தையும் போக்கும் மருந்தொடுகலந்த அவல்வைத்துள்ள கிழியையும் தண்ணீர்க்கரகத்தையும் கைக்கொண்டு புறப்படுதற்கு ஆயத்தமாக இருக்கும்படி அவளுக்குச் சொன்னான்.

பின்னர் யூகி, உதயணனுடைய நண்பனான யவனப்பாடித் தலைவனையடைந்து சொல்லவேண்டுவனவற்றையும் தன்புறப்பாட்டையும் அவனுக்குச்சொல்லி அவன்கொடுத்த யந்திரவண்டியாகிய பூணியின்றியும் பொறியினியங்கும் வையத்தைக்கைக்கொண்டு, "ஈண்டு எஞ்சியுள்ள தோழர்களையெல்லாம் புறப்படச்செய்துவிட்டே நீ புறப்படவேண்டும்" என்பதை அவனுக்குச்சொல்லித் தனக்கு வேண்டுவன

வற்றையெல்லாம் அவ்வண்டியில் வைத்துக்கொண்டு சாங்கியத்தாயை யும் அதில்ஏற்றி அதைஊர்ந்து புறப்பட்டுப் புறநகர்கடந்து பூமியில் விமானமேறிச்செல்லும் இந்திரகுமாரன்போலப் புட்பக நகரத்தை நோக்கிச் சென்றான் ; அப்போது பிறரறியாமல் தங்கவேண்டிய இடங் களில் தங்கிச் சென்று நானூற்று நாற்பதெல்லையில் அந்தவண்டியை நிறுத்தவேண்டிய முறைப்படியே நிறுத்திச் சாங்கியத்தாயை ஒரு பாதுகாப்பான இடத்தில் இறக்கிப் பின்னேவரும்படி சொல்லிவிட் டுத் தான் மாத்திரம் புட்பகநகரத்தை இரவில் அடைந்து ஒருவரும் தெரிந்துகொள்ளாதபடி தன்வண்டியைப்பிரித்து ஒருபால் வைத்து விட்டு இடவகனைக்கண்டு மன்னவனுடைய சௌக்கியத்தைக் கேட் டுத் தன்னுடைய இளைப்புக்களையெல்லாம் அங்கே இருளிற் போக்கி விட்டு மேலே ஆகவேண்டியவற்றை யோசித்தற்கு எண்ணி வெந் திறன்மிலேச்சர் வந்தோரை விலக்கிக்கொண்டு பாதுகாத்திருக்கும் மந்திரமாடத்தில் அவனுடன் மறைந்திருந்து, யானைமாயத்தாற் பிடி யுண்டு சிறையில் அகப்பட்ட உதயணனை விடுத்தல்வேண்டித் தான் இறந்துவிட்டதாகப் பெயர்பண்ணி உச்சைனியையடைந்ததுமுதலிய செய்திகளையெல்லாம் அவனுக்குக் கூறினன் ; கேட்ட இடவகன்,

> "கெட்ட காலை விட்டன ரென்னாது
> நட்டோ ரென்பது நாட்டினை நன்று" (உ. 9 : 118-9)

எனப் பாராட்டினன்.

பின்னர், "உதயணன் நீர்விழாவின்கண்ணே வாசவதத்தை யைப் பிடிமீதேற்றிவந்த பின்பு நிகழ்ந்தசெய்திகளைச்சொல்" என்று யூகி கேட்ப இடவகன், "பத்திராபதி ஐந்நூறெல்லை யளவுஓடிப்பாலை நிலத்தினிடையே உயிர்துறந்தது ; உதயணன்முதலியோர் நடந்து வந்து பகற்காலம் நீங்கும்வரையில் ஒரு முள்ளிலவமரப்பொதும்பரில் மறைந்து தங்கினர். இரவிற் படைகளைத் தொகுத்துச்செல்லுவதற்கு வயந்தகன் என்பால் வந்தனன். உதயணன் வாசவதத்தையைப் பாது காத்துக்கொண்டு தனியே அங்கிருந்தனன். இருக்கையில், சூரியன் உதித்தபின்பு அக்காட்டிலுள்ள சவரர் புளிஞர்கள் இவர்களுடைய அடிச்சுவடுகளையும் பிடியின் அடிச்சுவடுகளையும் பார்த்துக்கொண்டே வந்து உதயணனைக்கண்டுசூழ்ந்து போர்செய்யத்தொடங்கினர். அவர் களைக்கண்டு வருந்திய வாசவதத்தையை உதயணன், 'அஞ்சற்க' என்று சொல்லிக் காஞ்சனையோடு அவளைத் தனியே நிறுத்திவிட்டுப் போந்து வில்லைவளைத்து அம்புகளையெய்து நாற்பத்தொன்பது மற வர்களை வீழ்த்தினன். வீழ்த்தவே இறந்தவருடைய தமர் அச்சமுற்

றுப் போர்செய்தலை நிறுத்தி அந்தப் பொதும்பரின் நாற்புறத்தும் நெருப்பைவைத்து மூட்டிவிட்டு ஓடினர்" என்று சொன்னவுடனே யூகி மூர்ச்சித்துத் திடீரென்று கீழேவிழுந்தனன். இடவகன் அவனை யெடுத்துத் தழுவி அச்செய்தியைத்தான் சொல்லவேண்டிய முறைப் படியே மெல்லச்சொல்லாமைக்கு மிகவும் வருந்திச் சைத்தியோப சாரஞ்செய்து உணர்ச்சியை யுண்டாக்கி, "உதயணன் உயிருடனிருக் கின்றனன்" என்று கூறினன்; உடனே யூகி எழுந்திருந்து, "அதன் மேல் நிகழ்ந்தவற்றைக் கூறு" என்று கேட்டனன்.

அப்போது இடவகன், "ஆடுகளின் இடையே பாயும் சிங்கம் போலவே அவ்வேடர்கூட்டத்தினிடையே உதயணன்பாய்ந்து போர் செய்யத் தொடங்குதலைக்கண்ட வாசவதத்தை மிகவும் அஞ்சி நடுங்கி னள்; அவளை மெல்ல நடத்திக்கொண்டு ஓரிடத்தில் அவன்நிற் கையில், உரோகிணியோடுநின்ற திங்களைச்சூழ்ந்த ஊர்கோளைப் போல வேடர்கள் அவர்களை வளைந்துகொண்டு துன்புறுத்த ஆரம்பித்தனர்; உதயணன், 'யாம் புதைத்திருக்கும் திரவியங்களை உமக்குக் காட்டுவோம்; துன்புறுத்தாமல் இரும்' என்றனன்; அதனைக் கேட்டு அவர்கள் சும்மாநின்றனர். அப்பால் நாங்கள்சேனைக ளோடு சென்றோம். உதயணன் எங்களை அறியாதவன் போலவே அவர்களோடுசேர்ந்து முதலில் இருந்துவிட்டு அப்பால் வாசவ தத்தையோடு ஒருபக்கத்தில் நின்றனன். சேனையின் பெருக்கத்தைக் கண்டு அவ்வேடர்கள் ஓடிவிட்டார்கள். பின்பு, அவ்விருவரையும் முறைப்படி அழைத்துக்கொண்டு சயந்திநகரம் அடைந்து மணஞ் செய்வித்தோம்; உதயணன் வாசவதத்தையோடு இன்புற்று வாழ் வானாயினன்; சூரியசந்திரர் உதித்தலும் அத்தமித்தலும் அவனுக் குத் தெரியா; தன்னுடைய இராசதானியாகிய கௌசாம்பியைக் கைப்பற்றிக்கொண்டு ஆருணியென்னும் அரசன் ஆண்டு வருதலையும் அறிந்திலன்; உயிர்போன்ற தன் தம்பியர்களாகிய பிங்கலகடகரை யும் நினைக்கின்றானில்லை; நகுடராசன்போலவே காமவின்பமொன் றையே நினைந்து அதனையே பாராட்டிக்கொண்டு பிறர்க்குச் சமயங் கொடானாயினன்; நாம் என்செய்வோம்!" என்று வருத்தமுற்றுக் கூறினன்; கேட்ட யூகி புன்முறுவல்செய்து, "அன்ப! இதுகாறும் துன்புற்றிருந்த அரசன் இடைவிடாமல் இன்பத்தை நுகர்வது இயல்பே" என்று முதலிற் கூறிவிட்டு, அப்பால் அங்கே வந்திருந்த சாங்கியத்தாயை வருவித்து அவளிடம் தரும இயல்பைக்கேட்பவன் போலவே சிலநேரம் பேசிக்கொண்டிருந்து, நீங்காமல் அயலினிற்கும்

ஒற்றர் போன்றவர்களுக்கு ஒவ்வொரு காரியத்தைக்கூறி அனுப்பி விட்டு அவனைநோக்கி, "உதயணனை இனிமேலும் பாதுகாத்தல் உம்முடைய கடமையாகும்;

அற்றங் காத்தலி னன்மை போலவும்
குற்றங் காத்தலிற் குரவர் போலவும்
ஒன்றி யொழுகலி னுயிரே போலவும்
நன்றி யன்றிக் கன்றியது கடிதற்குத்
தகவில செய்தலிற் பகைவர் போலவும் (உ. 9 : 219-23)

ஒழுகுதல் அன்பரது செயலென்பது நீரறிந்ததே. உதயணன் இன்பச்சேற்றுள் இறங்கினன்; ஆதலால் இனி இலாவாண நகரத்தின் பக்கத்தேயுள்ள மலையைச்சார்ந்த சோலையொன்றில் அவனை உண்டாடும்படி செய்வித்து அவன் அங்ஙனம் செய்யும் நாட்களுள் ஒருநாள் வாசவதத்தையை அவனிடமிருந்து பிரித்து அங்ஙனம் பிரிந்து செல்லுகையில் அவளிருந்த வீட்டைத் தீக்கிரையாக்கி அவளைச் சுருங்கைவழியே அழைத்துவந்து நீர் என்னிடம் சேர்ப்பிக்கவேண்டும். நெடுந்தூர வழிப்பிரயாணத்திற்காக வைத்திருந்த அவலையுண்டு விக்கி நான் இறந்துவிட்டேனென்பதையும் அவனுக்குச் சொல்லி அவனை அரசாட்சிக்கு உரியவனாகச்செய்தல் உம்முடைய கடமை; இது நாங்கள் எல்லோரும் ஆலோசித்த செய்தியாகும்" என்று சொல்லி, இன்னஇடத்தில் தன்னைவந்து பார்க்கவேண்டும் என்று அவளுக்கும் தோழர்க்கும் தெரிவித்துவிட்டு அவலையுண்டு விக்கி இறந்தவன்போலவே தன்னைப் புலப்படுத்தினன்; உடனே இடவகனும் ஏனையோரும், "எம்முடைய உயிர்த்தோழனாகிய யூகி இறந்த பின்பு யாம் இனி உயிரோடு வாழேம்" என்று அழுது தம்முடைய துக்கத்தைப் பிறர்க்குப் புலப்படுத்தினர். பின்பு அவர்கள், "சிறந்த அறிவுடையோனாகிய இவனைச் சுடுதல் முறையன்று; இவனது உடலைக் கங்காதீரத்தில் இடுவதுதான் முறை" என்று சொல்லிப் பிறரறியாமல் அவனுடம்பை மறைத்து வைத்தார்; சாங்கியத்தாயை நோக்கி, "நீர் சென்று அரசனிடத்தும் அரசியிடத்தும் முன்போலவே அன்போடு பழகவேண்டும்; யூகி கூறியவற்றை உரிய காலத்தில் நிறைவேற்றவேண்டும்" என்று அவளை உதயணன்பால் அனுப்பினர். அங்ஙனமே அவள் புறப்பட்டு மருதநிலத்தையுடைய சயந்தியம் பெரும்பதியை அடைந்தாள்.

உண்ட அவல் விக்கியதால் யூகி இறந்தானென்ற செய்தி எங்கும் பரவியது.

சயந்திநகரை அடைந்த சாங்கியத்தாய் உதயணகுமாரனைக் கண்டாள். தாயைக்கண்ட கன்றைப்போல அவன் விருப்பங்கொண்டு உபசரித்துப் பீடமொன்றில் அவளை இருக்கச்செய்தான். அவள் உதயணனுக்கு உபசாரமொழிகளைக்கூறி, "வாசவதத்தையை அழைத்துவந்தபின்பு உச்சைனி நகரத்தில் நிகழ்ந்தவை இவை" என்று சில செய்திகளை உரைத்தனள். அப்போது அவன், "இனிய நண்பர்களுடைய கடமையைத் தீர்த்த யூகி நும்முடன் வந்திலனோ?" என்று வினவ, அவள் உடனே விடைகூறாமற் சற்றுநேரம் ஆராய்ந்து பின், "நீ வாசவதத்தையைப் பிடியின்மேல் ஏற்றிக்கொண்டுவந்த இரவில் அங்கே போர் செய்தற்குவந்த வீரர்களையெல்லாம் வென்று அந்நகரின் அகத்தும் புறத்துமுள்ளார் தத்தமக்குத் தோற்றியவாறே கூறுவனவற்றையெல்லாம் கேட்டு அவன் பின்னர்ச் செய்விக்க வேண்டியவற்றையெல்லாம் அங்கே செய்தான். அப்பால் இருட்பொழுதில் மறைந்து எந்திரவையமொன்றில் என்னையும் ஏற்றிக்கொண்டு இப்பால்வந்து பாதுகாப்புள்ள இடமொன்றில் என்னை இருக்கச்செய்து, 'வேடர்களுடைய உறைவிடமாகிய இவ்விடத்திற் செய்தற்குரிய காரியங்களைச் செய்து வருவேன்; நீர் அரசனை அடையும்' என்று சொல்லி என்னை அனுப்பி அவன் பின்னே தங்கிவிட்டான்" என்றனள்; உதயணன் அவளை நோக்கி, "வாசவதத்தையைப் பார்த்துவிட்டு வருக" என்றனன்.

சாங்கியத்தாய் கன்றைக்காணும் கறவையைப்போல ஆவலுடன் சென்று வாசவதத்தையைக் கண்டனள். இளமை தொடங்கித் தன்னைப் பாதுகாத்துவந்த செவிலியாதலின் அவளைக் கண்டவுடன் எழுந்து உவகைக் கண்ணீர் பெருக அவளை வாசவதத்தை தழுவி மிகவும் பாராட்டினள். உடனே சாங்கியத்தாய், "தாய்மார் பதினறுயிரவரும் தோழிமார்களும் பிறரும் உன்னுடைய பிரிவாற்றாமற் புலம்புகையில், பிரச்சோதனன் 'யானே வாசவதத்தையை உதயணனுடனனுப்பினேன்' என்று சொல்லக்கேட்டு அவர்கள் வருத்தந்தணிந்து உய்ந்தனர்" என்று கூறவே, வாசவதத்தை பின்னும் தம்மவரை நினைந்து வருந்துவாளாயினள். சாங்கியத்தாய் அவளுடைய கண்ணீரைத் தன் விரலால் துடைத்து, "பாவையே! பிறந்த வீட்டினரையே நினைந்து நீ இங்ஙனம் அவலங்கொள்ளாதே; அவ்வாறு செய்தல் மங்கல மகளிர்க்கு மரபன்று" என்று கூறி அவளை உடனழைத்துச்சென்று அங்கே மிக உயர்ந்ததாகவுள்ள கட்டுமலையொன்றின்மேல் ஏற்றி அதன் உச்சியில் அவளை நிறுத்தி, "நங்கையே! பார்ப்பாயாக; அதோ தோன்று

கிறதே அதுதான் அரசர் பெருமானாகிய உன் தந்தையின் நகரம்; ஏன் கவலையடைகிறாய்?" என்று அவளுவப்பக் கூறிப் பின்பு காம இன்பத்தில் அழுந்தித் தன் அரசவுரிமையையும் பகைவன் நகரைக் கைக்கொண்டிருத்தலையும் நினையாமலிருக்கும் உதயணனுக்கு நல்ல அறிவை உண்டாக்குவதற்பொருட்டு யூகி கூறிய அழற் கருமத்தை மந்தணமாகச் சொன்னாள்; அதனால், நன்னெறி நூல்வழித் திண்ணறிவாளன் வருந்தி நோற்ற அருந்தவம் போலப் பிறப்பயமுடைமையை வாசவதத்தை தெளிந்து சமாதானமுற்றாள்.

அப்பால் சாங்கியத்தாய் மறைந்திருந்த யூகியையடைந்து நிகழ்ந்தவற்றைச் சொல்லவே, அவன் உதயணனுடைய வடிவம்போன்ற ஓவியமொன்றைப் படத்திலெழுதி அவ்வுருவத்தில் நான்கு கண்களைப் பொறித்து அவற்றுள் மேலேயுள்ள கண்ணை மழுங்கியதாக அமைப்பித்து அப்படத்தை அவளிடங்கொடுத்து, "இதனை உதயணனுக்குக் காட்டும்" என்றனன். அவள் சென்று வாசவதத்தையோடு அவன் இருந்த சமயம் பார்த்து அப்படத்தைக் காட்டினள். அவன் அதனைப் பார்த்து அதிலமைந்த நுட்ப வேலைகளைக் கண்டு வியந்து மனிதருடைய உறுப்புக்களுள், 'அடிகளே ஆட்கள்; தோள் மனைவி; பல் மக்கள்; கண் தோழர்; தலை இருமுது குரவர்' என்னும் நூற்கருத்தை அறிந்தவனாதலின், கண்கள் நான்கனுள் மேலாயகண் மழுங்கியிருத்தலையறிந்து, "நம்முடைய தோழர்கள் நால்வருள் மேம்பட்டவனான யூகிக்கு ஏதோ துன்பம் உளது" என்று கவலையுற்று நோக்கியபொழுது சாங்கியத்தாய், "உச்சைனியிலிருந்து வருகையில் அவலையுண்டு விக்கி இறந்துபோயினன் அவன்" என்றனள்; உடனே உதயணன் பொறிகெட்ட எந்திரம்போலக் கண்சோர்ந்து கீழே வீழ்ந்து தன்னை மறந்துகிடந்தனன். அதனைக்கண்ட வாசவதத்தையும் இடியேறுண்ட நாகம்போலத் துயருற்று அவன்மார்பில் வீழ்ந்தாள். அதுதெரிந்து அரண்மனையிலுள்ளோரெல்லாரும் துன்புற்றனர். அப்பொழுது அருகிலிருந்தோர் சைத்தியோபசாரத்தால் உதயணனுடைய மூர்ச்சையைப் போக்கவே அவன் எழுந்து கண்களினின்றும் அவலக்கண்ணீர் பெருக,

"விண்டோய் கானத்து வேழ வேட்டத்துச்
சிறைகொளப் பட்டியான் செல்சார் வறுத்தபின்
மறைகொண் மாயமொடு துறைநகர் விழவினுள்
எதின் மன்னன் காதலி பயந்த
மாதரைத் தழீஇப் போதரப் புணர்த்துப்
போதுவ லென்றோய் பொய்த் தனையோ? (உ. 10 : 125-30)

இனி வாழ்தலாற்றேன்; இளமைதொடங்கித் தாயினும் என்பால் அன்புடையாய்! என்னையும் உடனழைத்துச் செல்லவேண்டு மன்றோ? நீ மட்டும் முன்னே தனித்துச்சென்றது முறையோ!'' என்று பலவாறு விலாவித்தனன்.

அங்கிருந்த அறிஞர், "விரோதிகளுக்குமுன் இங்ஙனம் நீ வருந்துதல் இறைமையன்று; தளர்ச்சியின்றி இருத்தல்வேண்டும்; நல்வினை துணைசெய்யுமாயின் யூகியை நீ பெறலாம்'' என்று தேற்ற அவன் மேல் ஆகவேண்டியவற்றை நினைந்து சிறிது வருத்தந்தணிந் திருந்தான். ஆனாலும் யூகியின் நினைவால், அவரபக்கத்துத் திங்கள் ஒளிகுன்றுவதுபோல் அவன் எல்லாவகையிலும் குறைவுறுவதை யறிந்த தோழர், அரசனுக்குரிய எல்லாக் காரியங்களையும் யூகியைப் போலவே செய்தற்குரியவன் உருமண்ணுவாவேயென்றறிந்து அக்காரியங்களையெல்லாம் அவனிடமாகச் சார்த்தினர்; அவன் அங்ஙனமே அரசனுக்குரிய எல்லாவற்றையும் அறிந்து செய்பவனாயினன்.

அப்படி நிகழுங்காலத்தில் ஒருநாள் உருமண்ணுவா தோழரை நோக்கி, "அரசனுடைய துன்பத்தை நீக்குதற்குரிய பரிகாரவழிகள் பலவுள; அவை பகைவரைவென்று அவர் கொடுக்கும் கப்பங்களைக் கொணர்ந்து முன்னிடுதல், மகளிருடன் தெப்பத்திலேற்றி நீர்விளையாடச் செய்தல், உண்டாட்டயர்வித்தல் முதலியனவாம்; அவற்றுள் ஏதேனுமொன்றால் அரசன் கவலையைப் போக்குவதுடன் மலைச்சாரலிலுள்ள முனிவரையடைந்து வினாவின், நிகழ்ந்தவற்றையும் நிகழ்வனவற்றையும் கூறுவாரென்பதைச்சொல்லி அங்ஙனமே கேட்பித்தும், அவனது துக்கத்தைப் போக்கவேண்டும்'' என்றனன். அதனைச் சொல்லவேண்டிய முறைப்படியே மற்றத்தோழர் உதயணனுக்குக் கூறினர்.

கேட்ட உதயணன், "அங்ஙனங்கூறும் முனிவரும் உளரோ?'' என்று வினவியபொழுது அருகிலிருந்த உருமண்ணுவா, "அரசே! நின்னைக்கருவுற்றுப் பூர்ணகர்ப்பிணியாக இருந்த மிருகாவதி நிலாமுற்றத்திற் சிவந்த ஆடையைப் போர்த்திக்கொண்டு துயிலும்பொழுது அவளைத் தசைத்திரளென்று சிம்புட்பறவையொன்று எடுத்துச் சென்று விபுலகிரியில் வைக்க, நீ அங்கே உதித்து வளர்ந்து கற்றுத் தேர்ந்து உன் மாமன் விக்கிரனால் ஏயர்குலத்திற்குரிய இறைமை பெற்று அரசாட்சி செய்துகொண்டிருந்தாய்; அப்போது, இந்நிகழ்ச்சியைச் சிறிதும் அறியாதஉன் தந்தை கௌசாம்பிநகரத்தின் அயலதாகிய வனத்திலுள்ள ஒருமுனிவரை யடைந்து வணங்கித் தன்

குறையை விண்ணப்பஞ்செய்தனன்; அம்முனிவர் நிகழ்ந்தவற்றை யும் நிகழ்வனவற்றையும் தம்முடைய ஞானத்தால் அறிந்துகூறினர். அதனைக்கேட்ட சதானிகன் உன்னையும் உன் தாயையும் கௌசாம்பிக்கு அழைத்துச்சென்று தன்னுடைய அரசாட்சியை உன்னிடம் ஒப் பித்துத் துறந்தனன்; அப்படியே இப்பொழுதும் ஒருமுனிவரை யடைந்து கேட்பின் எல்லாம் தெரிந்துகொள்ளலாம்; யூகி முன் போலவே இறந்து முடிக்குங்காரியம் யாதேனும் இருத்தலுங்கூடும்; அது விளங்கவில்லை'' என்றனன்; கேட்ட உதயணன் உண்டாட்டயர் தலுக்கு உடன்பட்டான். தோழரும் அஃது உறுதியுடைத்தென்ற னர். அச்செய்தியை வள்ளுவமுதுமகன் முரசறைந்து நகரத்தார்க்குத் தெரிவித்தனன்.

உடனே மடமொழிமகளிரும் மைந்தரும் வான்பூத்தன்ன அந் நகரம் வறுவிதாகும்படி வேண்டியவற்றைக் கைக்கொண்டு நல்ல நாளிற் புறப்பட்டுத் தேர் முதலியவற்றை ஊர்ந்து ஒருகாலத்தில் மலையைச்சூழ்வதற்குக் கடல்புடைபெயர்வதுபோலவே போய் இலா வாண நகரின் அயலிலுள்ளதும் தக்கோருறையும் தாபதப்பள்ளிகளை யும் கற்றோருறையும் கடவுட்டானங்களையும் ஆடப்புகுந்தவர் மீளு வதற்குத் துணியாத சுனைகளையும் ஆறுகளையும் கோயில்களையும் குரம்பைகளையும் தன்பாலுடையதும், பலாமுதலிய பலவகை மரங் கள் கொடிப்பந்தர் முதலியவற்றோடு செறிந்ததுமாகிய மலைச்சாரலை யடைந்தனர்; உதயணன் வாசவதத்தை முதலியவர்களோடும் மற் றப் பரிசனங்களோடும் வந்து அங்கே தங்கினன். தூசக்குடிஞை துலாமண்டபம் பல்காழ்த்திரை படாகைக்கொட்டில் கூடம் முதலிய வற்றை இருபுறத்தும்பெற்ற வீதிகளாலும் அங்கங்கேயுள்ள மன்று களாலும் வீறெய்தி, இந்திரன் தன்னுடைய நந்தனவனத்தோடும் உரிமையோடும் வந்து தங்கினாற்போன்ற அழகுபெற்று விளங்கியது அப்பாடி. மைந்தரும் மகளிரும் சுனைப்பூக்குற்றும் சுள்ளிசூடியும் சினைப்பூ அணிந்தும் கொடிப்பூக்கொய்தும் மகிழின் வட்டமலர்களைத் தொகுத்தும் அசோகின் செந்தளிர்களாற் கண்ணிகட்டியும் மாலை தொடுத்தும் மலைவளம் புகழ்ந்தும் குரவையாடியும் மயில்களின் ஆடல்களைக்கண்டு உவந்தும் கிளிகளின் மழலைச் சொற்களைக்கேட்டு இன்புற்றும் பலமகளிரின் இடையே களிப்புற்று விளங்கும் அர சர்களைப்போலவே பல பிடிகளினிடையே விளையாடிக்கொண்டு இறு மாந்துநிற்குங் களிற்றினங்களை நோக்கியும் நீர்விளையாடியும் நினைக்கொல்லைகளிலும் சுனையைச்சூழ்ந்த பாறைகளிலும் மிகவுயர்ந்த

மரங்கள்செறிந்த காடுகளிலும் பூஞ்சோலைகளிலும் கொடிவீடுகளிலும் மாருத்தானை மன்னனை வழுத்தி ஆருக்காதலொடு திளைத்தும் அமையாதவர்களாகி ஆடியும் பாடியும் கூடியும் பிரிந்தும் ஊடியும் உணர்ந்தும் ஓடியும் ஒளித்தும் நாடியும் நயந்தும் நலம்பாராட்டியும் விளையாடி இன்புறுவாராயினர்.

இங்ஙனம் இருபாலார்களும் அன்புற்று அம்மலைச்சாரலில் விளையாடிக்கொண்டிருக்கையில், ஐம்பெருங்குழுவினரும் எண்பேராயத்தாரும் உதயணனுக்கு அங்கங்கேயுள்ள இனிய காட்சிகளைக் காட்டிக்கொண்டு சென்று, அவனைத் தொடர்ந்துவரும் உரிமைச் சுற்றத்தாரைப் பின்னே வரும்படி செய்து அவர்களுக்குத்தக்க பாதுகாப்பை அமைத்துவிட்டுப் பண்டைநூற்பொருள்களை அறிந்து பிறர்க்கும் அறிவித்துத் தவம்செய்துவிளங்கும் ஒரு முனிவருடைய தவப்பள்ளியாகிய சோலையொன்றை அடைந்தார்கள். முக்குற்றங்களையும் நீக்கிய பெரியோர் தங்கியிருத்தலின் கொடிய விலங்குகள் முதலியவற்றால் உண்டாகும் அச்சத்திற்கு அதிற் சிறிதும் இடமில்லை; காவலையே வேண்டாதது அது. மேலும் மிகுந்த வளத்தையுடையதாகி ஐந்திணை மரங்களும் பைந்தளிர்க்கொடிகளும் நெருங்கப்பெற்று வெப்பம் நீங்கி, நீருட்புகுந்தாற்போன்ற தண்மையுற்று, ஊரின் உள்ளிடத்தைப் போன்ற விரிந்த இடங்களையுடையதாய் மலர்த்தவிசடுத்துத் தளிர்க்குடையோங்கிப் பூங்குலைக்கவரி புடைபுடைவீசி மிஞிறும் சுரும்பும் வண்டும் தும்பியும் குயிலும் பாடும் மழலையம்பாடலாற் கேட்போருடைய மனத்தை வயப்படுத்துவதாகிப் பிறர்க்குக்கொடுக்கக் கருதித் தாங்கிவைத்திருந்தாற்போலே தோற்றும்படி அமுதமயமான கனிகளையேந்திப் பயனுள்ளமரங்களையே முற்றும்பெற்று விளங்குவது அச்சோலை.

அவர்கள் அதன்புறத்தையடைந்து, "உதயணன் ஒரு காரியத்தைக்கருதித் தரிசிக்க வந்திருக்கின்றனன்" என்பதை அம்முனிவருக்கு முறைப்படியே சொல்லிவிடுத்தனர். முனிவர் அவனுடைய பெருங்குலப்பிறப்பையும் அரும்பொருள்வகையையும் மன்னுயிரைத் தன்னுயிர்போலவே எண்ணிப்பாதுகாக்கும் கடப்பாட்டையும் மதித்து அவனைக் காணுதற்கு விரும்பி, இந்திரனை எதிர்கொள்ளும் தெய்வ முனிவரைப்போலவே முறைப்படி வரவேற்று, அசோகமரத்தின் அணிநிழலில் மணன்மீது கிடந்துள்ள பலவகைப்பட்ட மலர்த்தொகுதியாகிய இயற்றுத்தவிசில் இருக்கும்படி கையாற் குறிப்பித்த

னர்; அவன் அந்தமுனிவரைவணங்கி அவர் காட்டிய இடத்திலிருந்தனன்; சிறிது நேரத்திற்குப்பின் அம்மரத்தின் அடியைச்சார்ந்து யூகியையே நினைந்து கவலைகொண்டிருந்தான்; இருக்கையில், அவன் பிடித்திருந்த வெள்ளைப்பூ ஒன்று கையினின்றும் நழுவிக் காலின்கீழே வீழ்ந்தது; அவற்றையெல்லாம் அறிந்த முனிவர், நிமித்தப்பயனையறிந்து சொல்லுவதில் மிக்க வல்லுநராதலின் அவனைநோக்கி, "அரச! நீ பசுமரத்தைச் சார்ந்திருந்தமையால், அது நின் உயிர்த்தோழன் உயிரோடிருத்தலையும் அவன் பின்புவந்து உன்னை அடைதலையும் நன்கு புலப்படுத்தும்; இது தவறாது; தெளிவாயாக; பிடித்த வெண்பூவின் வீழ்ச்சி நீ இப்போது அனுபவிக்கும் போகத்திற்கு இடையூறு உண்டென்பதை அறிவியாநிற்கும்; அந்தப்பூ வேறிடம் செல்லாமல் உன்காலின் கீழிடத்தை அடைந்தமையால் அந்தப்போகத்தை மீட்டும் அடைவை; நீ பூமியின்மேல் இருந்தமையால் நின் தலைநகரத்தையும் நாட்டையும்பெற்று அரச உரிமையையும் அடைவை; சிறிதும் ஐயமில்லை; பிற்காலத்தில் உனக்குச்சாரணருடைய உபதேசமுமுண்டு; உன்னுடைய ஆயுள்நாளின் அளவு இத்துணையாகும்" என்று கூறினர். உதயணன், "இவருடைய அருண்மொழி நிச்சயமாகவே இருத்தல் கூடும்" என்று எண்ணி, யூகியை அடைந்தவன் போன்றவனாகி வணங்கி அவரிடம் விடைபெற்றுப் புறம்போந்து வாசவதத்தையை யடைந்து அவளுடன் அங்கே தனக்கு அமைக்கப்பட்டிருக்கும் படமாடத்தில் உறைபவனாயினன்.

அங்ஙனமுறைந்த உதயணன் ஒருவாறு கவலைதீர்ந்து வாசவதத்தையுடன்சென்று கான்யாற்றுக் கடும்புனலாடியும், பலநிறமலர்கள் பூத்து, மேல்மூடியைத் திறந்த ஆபரணப்பெட்டிபோலத்தோன்றும் குறுவாய்ச்சுனைநீரில் முழவொலியைப்பிறப்பித்து அந்தத்தாளத்திற் கேற்பப்பாடியும், காட்டிலுள்ள அரமகளிர்போன்றவரும் குழையர் கோதையர் இழையர் இணர்த்தழையர் தாரினர்களுமாகிய பலவகை மகளிர்களினிடையேநின்று அவர்களுடைய ஆடலைக்கண்டு பாடல்களைக்கேட்டு இன்புற்றும், பாறையாகிய உரலில் ஐவனநெல்லைச் சொரிந்து யானைக்கொம்பாகிய உலக்கையால் தம் ஐயருடைய இயல்புகளைப் புகழ்ந்துகொண்டு பாசவலிடிக்கும் வேடமகளிருடைய அம்மனைவள்ளைப்பாட்டைக் கேட்டும், அருவியாடியும், சுனைவிளையாடியும், பூங்குழைமகளிர் பொன்வள்ளத்தேந்திய தேறலையும் மதுவையுமுண்டும், ஒருயிரையுடைய இருதலைப்புள்ளைப்போல் ஒட்டி இன்புற்றும் அம்மலைச்சாரலில் உண்டாட்டயர்ந்தனன்.

உடன்வந்த மகளிர் வெண்முத்தங்களாற் சிற்றிலிழைத்தும் கோங்கம்பூக்களைப் பறித்து இவை பொற்பணியென்று பாவைகளின் தலையில்வைத்தும் அசோகஞ்சினைகளிற் கட்டப்பட்டிருக்கும் தழைக் கயிற்று ஊசல்களில் இருந்து ஆடியும் முல்லைப்போதுகளைப் பறித் துக் கத்திகைதொடுத்தும் பித்திகைபிணைத்தும் தளிர்களைக் கையிற் கொண்டு பல விசித்திரவடிவங்கள்தோன்றும்படி கிள்ளியும் சண்ப கச்சோலையையடைந்து தழையுடைகளைஅமைத்தும் வாசவதத் தையின் செல்வத்தையும் சிறப்பையும் பாடிக்கொண்டே குராமரத் தின்நிழலில் வளைகளொலிப்ப மறலிக் குரவையாடியும் பந்தாடியும் பாவைபுனைந்தும் தளிர்ப்படுக்கையின்மேலே கண்படைகொண்டும் பானவகைகளை உண்டும் விளையாடினர். மற்றையோர்களும் தத்தமக்கு இயன்றவண்ணம் இப்படியே விளையாடிக் களித்து இன்புற்றனர்.

இங்ஙனம் உண்டாட்டயரும் நாட்களில் ஒருநாள், யாத்திரை செய்பவர்கள் வந்து தங்கும் கொட்டில்களையும் கொடிப்பந்தர்களையும் பின்னும் இவைபோன்ற இனிய பல இடங்களையுமுடையதாய்க் காண் பானுயின் இந்திரனும் வேறிடஞ்செல்லத் துணியாத மிக்க அழகைப் பெற்று, இனிய பழமரங்களையும் நறுவிய பூமரங்களையுந் தன்பாற் கொண்டு மயில் முதலிய பறவைகளின் செறிவையுடையதாய் என் றும் நலிவோர் இல்லாமையால் உயிர்த்தொகுதிகள் கவலையின்றிவாழும் பொலிவையுடையதாய் விளங்கும் பொழிலொன்றில் மரவுரியுடுக் கையையும் சிவந்த சடையையும் உண்மை ஞானத்தையும் விரதத் தையுமுடைய முனிவரொருவர் தவஞ்செய்யும் ஆச்சிரமத்தை யடைந்து அசோகமரத்தினிழலில் மணற்பரப்பில் உதயணன் வயந் தகனுடன் இருந்தான்.

அப்பொழுது அவனிடம் விடைபெற்று வாசவதத்தை காஞ்சனையோடு சோலைவளங்காணுதற்குச் சென்றாள். ஏவலாளர் களும் ஒவ்வொரு காரியத்தை முன்னிட்டு வேறு வேறிடங்கள் சென்றனர். அரசாட்சியைத்துறந்து மனைவியுடன் வந்து அங்கே தவஞ்செய்துகொண்டிருக்கும் ஓர் அரசமுனிவருடைய புத்திரியும் பேரழகினளுமாகிய விரிசிகையென்னும் பெயரையுடைய சிறுபிரா யத்தாளொருத்தி அங்கேயிருந்தனள்; அவள் முனிவர்களையன்றி வேறு ஆடவர்கள் யாரையும் கண்டறியாதவள். அவள் உதயணனைக் கண்டு, "இவன் காமன்" என்று எண்ணிக் காதல்கொண்டு தான் வைத்திருந்த பாவைபந்துகளை ஓரிடத்தே வைத்துவிட்டு மெல்லச் சென்று நந்தியாவர்த்தம், நாகம், சிந்துவாரம், சேபாலிகை,

குருக்கத்தி, சுள்ளி, சிறுசேடம், சண்பகம் ஆகிய இவற்றின் பூக்களைப் பறித்துத் தன் குடங்கையில் அடக்கிக்கொண்டுவந்து உதயணனை யடைந்து, "ஐயா! இம்மலர்களைப் பிணையல்களாகத் தொடுத்து ஈமின்; ஈந்தாற் பாவையும் யானும் அணிந்துகொள்வேம்" என்று சொல்லி இரந்து அம்மலர்களை நீட்டினள். அவன் அவளைப் பார்த்து, "இத்தவ வனத்திலுறையும் திருமகளோ இவள்" என்று முதலில் எண்ணி அவளுடையகண்களின் இமைகள் ஆடுதலையும் அணிந்த மாலைகள் வாடுதலையுங்கண்டு, "இவள் முனிவர்மகளே" என்று தெளிந்து தெய்வத்திகிரியையுடைய அரசர்மகளிர்க்குரிய சிறந்த இலக்கணங்களை அவள்பாற்கண்டு யாழ்நரம்பை வருடுதலானும் படைக் கலங்களைப் பகைவர்மேற் செலுத்தலானுந் தழும்புபட்டுத்திருந்திய அங்கையால் தன்மேலாடையை விரித்து அதில் அம்மலர்களைவாங்கிப் பலநிறமுள்ள மணிகள் நிறம்மாறுபட அழுத்தப்பெற்ற இரத்தின மாலைபோலத் தோற்றும்படி பலவகைநிறமுள்ள அம்மலர்களை உரிய இடங்களில் வைத்துப் பலவகைமாலைகள் கட்டி அவளுக்குக்கொடுக்க, அவள் அம்மாலையைத்தக்கவாறு அணிந்துகொள்ளுதற்கு அறியாதவளாகி வருந்தி அலமந்தனள். அதனையறிந்த அவன், "இங்கேவா" என்று அழைத்து அவளைத் தன்மடிமேல்வைத்து அவற்றை அவள் உச்சியிலும் தலைப்பக்கத்திலும் மயிர்முடியிலும் அலங்காரமாகப் புனைந்து பாராட்டி, "மெல்லச்செல்" என்று விடுக்க விரிசிகை சென்றாள்.

உதயணனைவிட்டுப்பிரிந்த சிலநேரத்தை ஒருவருடமாக நினைந்து அவன் பிரிவாற்றாமல் வருந்தித் தழைகளையும் கண்ணிகளையும் ஏந்திக் கொண்டு நற்பூங்கொம்பர் நடைபெற்றாங்கு நடந்து விரைந்துவரும் வாசவதத்தை, தன்முன்வரும் விரிசிகையையும் அவள்கூந்தலில் அணியப்பட்டிருக்கும் மாலைகளையுங்கண்டு அம்மாலைகள் உதயணனால் தொடுத்துச் சூட்டப்பட்டனவென்பதை அறிந்து சினந்து கண்களினின்றும் வெய்ய நீர்த்துளிகளைச்சிந்திக் கையிலிருந்த கண்ணிகளையும் தழைகளையும் எறிந்துவிட்டு, "கிடைத்த தாமரைப்பூவிலுள்ள தேனை உண்ணாமல் நெடுந்தூரத்திலிருக்கும் நெய்தற்பூவிலுள்ள தேனை உண்பதற்குச்செல்லும் வண்டைப்போல்வார் ஆடவரென்பதை இன்று நேரிற்கண்டோம்" என்று கடுஞ்சினங்கொண்டு உடன்வரும் சாங்கியத்தாயையும் காஞ்சனையையும்நோக்கி, "என்தந்தையின் அணிநகரத்திற்கு என்னை அனுப்பிவிடுங்கள்" என்றுசொல்லித் தன்னுடைய கோலங்களைச் சிதைத்துக்கொண்டே அச்சோலையின் ஒருபக்கத்தே

செல்வாளாயினள்; அதனைக்காஞ்சனையாலறிந்த உதயணன் அச்ச முற்றுச்சென்று அவளைத்தழுவி அவளுடைய முடியணிகளைத் திருத் தியும் பாதகிண்கிணியைத் துடைத்துத் துகள்போக்கியும் கூந்தலணி களைப்புனைந்தும் வளைகளைக் கையிலேற்றியும் கண்ணீர்த்துளிகளைத் துடைத்தும் காதணிகளைச் சரியாக அணிந்தும் புதுத்தளிர்களைக் கையிற்கொடுத்தும் புறத்தைத் தைவந்தும், 'நீ இங்ஙனம் கோபிப்பா யாயின் என்னுயிருக்குப் பெருந்தீங்கு விளைத்தாயாவாய்' என்றுகூறி யும் பலவாறு தேற்றினன்; தேற்றவும் அவள் சிறிதும் ஊடல்தணி யாமற் கடுஞ்சினத்தோடே யிருந்தனள்; அப்போது அம்மலைச்சாரலி லுள்ள ஒரு பலாமரத்திலிருந்து ஆண்குரங்கொன்று திடீரென்று குதித்து வந்தது. அதனைக்கண்ட வாசவதத்தை அஞ்சி நடுநடுங்கி விரைந்து அவனைத்தழுவிக்கொண்டனள். அவன் மனமுவந்து வேறு யாதொரு கவலையுமில்லாதவனாகி அக்கானத்தில் அவளுடன் காலத்தை இனிது கழிப்பானாயினன்.

இலாவாணநகரினதுபுறத்தே ஒடுங்கியிருந்த யூகி அந்நகரத்தி லுள்ள அரண்மனைக்கும் தானிருக்குமிடத்திற்கும் பிறரறியாமல் ஒரு சுருங்கைவழியை இயற்றுவித்துப் பின் செய்யவேண்டுவனவற்றை உருமண்ணுவாவிற்கும் வயந்தகனுக்கும் உணர்த்தினன். அவன் கூறி யதை அவர்கள் சாங்கியத்தாய்க்குத் தெரிவித்தனர். சாங்கியத்தாய் உதயணனையடைந்து, "அரசே, கொடியவிலங்குகள் உலாவும் மலைச் சாரலில் இருந்தால் ஒருசமயம் யாதேனுமொன்றால் வாசவதத்தை அச்சம் அடையக்கூடும்; ஆதலால் இனிமேல் இலாவாண நகரத் துள்ள அரண்மனையைச் சார்ந்திருத்தல் நலமாகும்" என்றனள்; உதயணன் அதனை அங்கீகரித்து வாசவதத்தையோடும் புறப்பட்டு அந் நகரத்தையடைந்து அரண்மனையில் வாழ்வானாயினன். இங்ஙனம் சிலநாட்கள் சென்றன.

இப்படியிருக்கையில் தோழர்கள் உதயணனைநோக்கி, "ஒருகாரிய முமில்லாமற் சும்மாவிருந்தால் திருமகள் நம்மை வெறுப்பாள்; ஆத லால் எங்கேனும் சென்று வரவேண்டும்" என்றுகூறினர். கேட்ட உத யணன் வாசவதத்தையின் பிரிவிற்கு அஞ்சி அதற்கு உடன்படவில்லை. சிலதினம் சென்றபின் பிரிதற்குரிய ஊழ்வினை வந்தமையால், அர சனை நோக்கி வாசவதத்தை, "அடிகளே! வேட்டஞ்சென்று அரும்பு மலர் தளிர் என்பவற்றாற் கண்ணிகட்டி எனக்குத்தந்தருளுக" என்று வேண்டினள். அது செய்தற்குவிரும்பிய உதயணன் மறு நாட்காலையிற் பரிமாவூர்ந்து காட்டிற்குச்சென்றனன்; மந்திரிகள்

தாம் எண்ணியதை நிறைவேற்றுதற்கு அதுவே நல்லசமயமென்று நினைத்து, "அரசன் காமவின்பத்தையே விரும்பி ஊக்கமிலனாயினா னென்று வேடர்கள் ஊரைச் சுடுதற்குவந்து சூழ்ந்துகொண்டனர்" என்னும் பேச்சை எங்கும்பரவச்செய்து ஏவலாளர்களைக்கொண்டு அரண்மனையின் நாற்புறத்தையும் தீக்கு இரையாக்கி, அந்தப்புரத்திற் சென்று, வெளியே புறப்பட்டுச் செல்லுதற்கு முடியாமல் தவித்து அலமந்து நிற்கும் வாசவதத்தையையும் சாங்கியத்தாயையுங்கண்டு, "இந்தச் சுருங்கைவழியாகச் செல்லுங்கள்" என்று அவர்களை அனுப்பிவிட்டு அவர்களிருந்தவிடத்திற் கொலைச்சிறையாளர் இருவரை வலிந்து புகுத்தி, வாசவதத்தையின் அடிக்கலமுதல் தலைக்கலம் இறுதியாகவுள்ள ஆபரணங்களையெல்லாம் ஓரிடத்திற் சிதறிவைத்தார்கள்; அரண்மனையின் நாற்புறத்தையும் தீக்கிரையாக்கிய கருமக் கள்வரைத் தாக்கிக்கொண்டே உருமண்ணுவா ஒருபாற் செல்வானாயினன்.

அப்போது சாங்கியத்தாய் வெய்துயிர்த்து நடுங்கும் வாசவதத்தையைச் சுருங்கை வழியே அழைத்துக்கொண்டு யூகியிருக்குமிடஞ் சென்றாள்; செல்லுகையில் வாசவதத்தையை நோக்கி அவள், "நீ சிறிதும் அஞ்சாதே; உன்னுடைய உயிர்த்துணைவனுக்கு ஆக்கமளிக்க விரும்பி அவனுடைய உயிர்நண்பனாகிய யூகிசெய்த மாயச்சூழ்ச்சியாகுமிது" என்று கூறினள். அந்தச்சமயத்தில் யூகி தானெண்ணியது முடிந்ததென்று புன்முறுவல் கொண்டு அங்கேவந்து வணங்கி, "தாயே! மறமாச்சேனன் காதல் மகளே! கேட்டருள்க; உன்னுடைய தந்தை சேனைகளின் இடையே உதயணனைச் சிறைப்படுத்தித் தளையிட்டமையால், பாஞ்சாலராயன் கௌசாம்பி நகரத்தைக் கைப்பற்றிக்கொண்டான். பிங்கலகடகர் அஞ்சியோடினர்; அவற்றை அறியாத உன்தலைவன் யாதொன்றையும் நினைத்தலின்றிக் கவலையற்று உன்னுடன் இடைவிடாமல் உறைவானாயினன்; பகைவனைக் கொன்று அவனை நல்ல பதவியில் நிறுத்தவேண்டுமாயின் நீ சிலநாள் பிரிந்திருக்கவேண்டுவதே. ஆதலால், உங்கள் குடிக்கு வந்த சிறுசொல் நீங்கும்படி ஆவதைச்சொல்லும் உயிர்போன்ற என்னைநோக்கியும் நின்குலத்தைநோக்கியும் தலைவன் தன் தலைமையினின்றும் வழுவிய நிலைமையைநோக்கியும் நிலம்புடைபெயரினும் விசும்பு வந்திழியினும் சிறிதும் கலங்காத நின்கடவுட்கற்பை நோக்கியும் இந்த வரத்தை அருளிச்செய்யவேண்டும்" என்று மிகவும் இரந்துவேண்டினன்.

வாசவதத்தை, "நம்முடைய அரசர்பிரானுக்கு இயைந்த நூல் வல்லாளர்களாகிய மந்திரிகள் நால்வருள் யூகி இறந்தனன்; இங்கே

இரப்பவன் இடவகன்முதலிய மூவருள் ஒருவனுமல்லன்; இவன் யாரோ?" என்று எண்ணிக்கவலையுற்று விரைந்து விடைகொடாமல் ஆராய்வாளாயினள். அவளுடைய நிலைமையை அறிந்த சாங்கியத்தாய், "இவன் யூகியே. அரசன் கவலையற்றிருப்பதை மாற்றுவதற்கே தான் இறந்துவிட்டதாகப் பெயர்பண்ணிவிட்டு இவன் இங்கேவந்திருக்கின்றான்; நீ கவலையைவிட்டுவிடு" என்று தெரிவிக்கவே அவள் தேறினள். யூகி கூறிய நியாயங்களையெல்லாம் உட்கொண்டவளாயினும் அவள் உதயணன்பிரிவை நினைந்து வருந்திப் பின்பு, "இவன் எண்ணியது உறுதி பயப்பதாகும்" என்று துணிந்து, "என்னிறைவன் முன்பு மாயயானையாற் சிறைப்பட்டபொழுது அவனைமீட்பதற்கு மாய விறுதி வல்லையாகிய நீதியாள! நீ வேண்டியதைச் செய்வாயாக" என்று அவனுக்கு உபசாரமொழிகளைக்கூறி ஒருவாறு கவலையொழிந்திருந்தனள்.

வாசவதத்தையின்பிரிவால் அரசன் தீங்கில்லாமலிருத்தலை அறிந்துகொள்ளும்வரையில் அவ்விடத்திலேயேயிருத்தற்கு நிச்சயித்துக்கொண்டு யூகி மேலே ஆகவேண்டிய காரியங்களைப்பற்றி ஆராய்பவனாகி அவ்விருவரோடும் அங்கேயிருந்தான். இதுநிற்க;

உதயணகுமரன் வாசவதத்தை விரும்பியபடியே தழையும் தாரும் கண்ணியும் பிணையலும் கைக்கொண்டு குதிரையை யூர்ந்து அவளைக்காண விரைந்துவருகையில் இடக்கண் ஆடியது; இடத்தோள் அசைந்தது; பின்னும் சில துர்நிமித்தங்களும் தீயசகுனங்களும் தோன்றின; அவற்றின்பயனை ஆராய்ந்து பார்க்கையில், "உயிர்க்கிழத்தி நீங்கினள்; இங்கேஇலள்; அவளைக் காணாதவருத்தத்தால் தோழர்களோடு தான்சிலகாலம் புறத்தே இயங்குதல்கூடும்" என்பது தெரியவந்தது. அதனால் மிக்க கவலையுற்றிருந்த அவன் எதிரே பெரும்புகையின் எழுச்சியைக்கண்டு மிகவும் விரைந்துவருகையில், வாசவதத்தையிருந்த இடத்திலும் நெருப்புப் பரவித் தோன்றக் கண்டான். கண்டு ஊக்கங்குன்றியவனாகிச் செல்லும்பொழுது, தனக்கு ஒருசோர்வும் நேராதபடி உருமண்ணுவாவும் வயந்தகனும் மாயமள்ளரைக் கூட்டத்தோடு துரத்தியடிப்பவர்களாகித் தன்வரவு பார்த்துக்கொண்டு எதிரே நிற்பதைக்கண்டனன்; அப்போது காஞ்சனமாலை,

"நாவலந் தண்பொழி னண்ணுரோட்டிய
காவலன் மகளே! கணங்குழை மடவோய்!
மண்விளக் காகி வரத்தின் வந்தோய்!
பெண்விளக் காகிய பெறலரும் பேதாய்!

பொன்னே ! திருவே ! அன்னே ! அரிவாய் !
நங்காய் ! நல்லாய் ! கொங்கார் கோதாய் !
வீணைக் கிழத்தீ ! வித்தக வுருவீ !
தேனேர் கிளவீ ! சிறுமுதுக் குறைவீ !
உதையண குமர னுயிர்த்துணைத் தேவீ !
புதையழ லகவயிற் புக்கனையோ" (உ. 18 : 76-85)

என்று காட்டுத்தீயின் இடையே அகப்பட்டுவருந்தும் மயிலைப்போல இடைவிடாமற் புலம்பி அலமந்து வீழ்ந்து புரண்டுபுரண்டு அழுதலை உதயணன் பார்த்தனன்; வாசவதத்தைக்கு ஏதோ ஒருதுன்பம் வந்து விட்டதென்று நிச்சயித்து அறிவுமயங்கிச் சோர்ந்து பொறியற்ற பாவைபோலக் குதிரையினின்றும் திடீரென்று நிலத்தில் வீழ்ந்தனன். அங்ஙனம் அறிவற்றுக்கிடக்கும் அரசனைத் தோழராணுகி மூர்ச்சையை மாற்றுதற்குரிய பொருள்களைக்கொண்டு மாற்ற, எழுமையுந் தொடர்ந்த அன்புடைய அவளைநினைந்து அரற்றிக்கொண்டே அவன் எழுந்தான்; அவனை அவர்கள்சூழ்ந்து பலவகையான சமாதானங்களைச்சொல்லித் தேற்றவும் அவன் தேருமல், "என்உயிர்த்துணைவி மூழ்கிய தீயில் யானும் புகுவேன்" என்று அத்தீயிற் புகுவானுயினன்; அப்போது தோழர், "உன்னுடைய பகைவர் மகிழும்படி நீ இங்ஙனம் எண்ணுதல் பெரிய தவருகும்; 'யூகி இல்லாவிடின் உதயணனுக்கு யாதும் செயலில்லை' என்று அறிவிலார் சொல்லுஞ்சொல் எங்கள் மனத்தைச் சுடாநிற்கும்; அதனை நீ அறிந்து உன் குலத்தைத் தாங்குதல் நன்று" என்று விலக்க, கடல் கரையைக் கடவாததுபோல அவன் தோழர்வார்த்தையைக் கடவானுகி, "என்னுயிர்த்துணைவியின் உடம்பைப் பார்க்கவேண்டும்; ஆதலால், விரைந்து நெருப்பையவித்து அதனைக்காட்டுமின்" என்றனன்.

அவர்கள், "அரசர் கரிப்பிணத்தைக் காண்பது மரபன்று" என்று வற்புறுத்தவும் அவன் தடைப்படாமற் காண்பதையே விரும்பித் துன்புற்றனன்; "நம்முடைய பெருந்தேவி உயிர்நீங்கும்படி இவர் பார்த்திராரென்று அரசன் எண்ணுவானுயின், அது நாம் எண்ணிய காரியத்திற்கு மிக்க இடையூருகும்" என்று தோழர் அவனை அழைத்துக்கொண்டு ஒருவகையாகப் பள்ளிப் பேரறைசென்று அங்கே அமைக்கப்பட்டுள்ள சுருங்கை அவனுக்குத் தோன்ருதபடி அதன்வாயிலை நன்ருக முதலில் மறைத்துவிட்டு அங்கே கரிந்துகிடந்த இரண்டு குறைப்பிணங்களைக்காட்டி, "சாங்கியத்தாயும் தத்தையும் இறந்தமை பொய்யன்று; உண்மையே" என்று

அவன் மனங்கொள்ளச்செய்து அங்கங்கே சிதறுண்டு கிடந்தனவும் தீயில் மூழ்கினமையால் ஒளிவிட்டு விளங்குவனவுமாகிய அவளுடைய ஆபரணங்களைப்பொறுக்கிவந்து அவனுக்குமுன்னே இட்டனர்; பொன்னரிமாலை, நெற்றிப்பட்டம், திலகம், செவியணி, பொற்கொடி, இலைப்பெரும்பூண், இதயவாசனை, களிகை, முத்தாரம், பன்மணிப்பூண், சின்மணித்தாலி, முத்தணிவடம், சித்திரவுத்தி, நாண், தொடர், தோளணி, இடையணி, விரலணிமுதலிய அணிகலங்களுள் ஒவ்வொன்றையும் அவன் தனித்தனியே எடுத்தெடுத்துப் பார்த்துப்பார்த்து விளித்துவிளித்துப் பலவாறு புலம்பிஅரற்றினன்.

பின்பு அவனுடைய மெலிவையும் கவலையையும் அறிந்த மந்திரிமார், "இவன் சோர்வையறிந்து பாஞ்சாலராயன் போர்செய்தற்கு வருவானாயின் இந்நகரத்துள்ளே வரவிடாமல் தடுத்துவிடுக" என்று சொல்லிச் சதுரங்கப்படைகளுடன் வீரர்களை அந்நகரத்தைச் சூழ அமைத்து அவர்களுக்கும் சேனைகளுக்கும் வேண்டிய போர்க்கருவிகளையும்அளித்து உணவுப்பொருள்களையும் அங்கங்கே நிரம்பவைத்ததோடு பெரும்படைகளைத் திசைகள்தோறும் அனுப்பிப்பாதுகாக்கும்படி செய்வித்து உதயணனுக்கும் அதனைத்தெரிவித்து அவனது துன்பத்தை ஒருவாறு தீர்த்து வருவாராயிருந்தனர். பின்னும் அவர்கள் காமத்தாலுண்டாகுந் தீங்குகளைப் பலவாறு எடுத்தெடுத்துரைத்து அவனுடைய வருத்தத்தைப் போக்க, அவன் ஆறுதலுற்றிருந்தனன்;

அதனையறிந்த தோழர், "அரசனுக்கு யாதொரு தீங்கும் இல்லை. இனி வேறிடத்திற்குச் செல்லுதல் நலம்" என்று யூகிக்குத் தெரிவிக்க அவன் வாசவதத்தைக்குஅச்செய்தியைத் தெரிவித்தனன்; அவள் மந்திரத்தாற் பிணிப்புண்ட நாககன்னிகைபோல யூகியினுடைய நீதிமொழியாற் பிணிப்புண்டவளாகித் தன்னுடைய குறையை வெளிப்படுத்தாமல் தலைவன் ஆக்கமடைதலையே பெரும்பயனாக நினைந்து ஆறுதலுற்றனள். பின்பு அம்மூவரும் உடம்பை வேறுபடுத்துவதாகிய மருந்தொன்றால் வேறுநிறம்பெற்று அந்தணவடிவங்கொண்டு மெல்லப்புறப்பட்டு ஒருமலையைச்சார்ந்து அங்கே தவஞ்செய்துகொண்டிருந்த உருமண்ணுவாவின் தந்தையாகிய முனிவனையடைந்து தாம் இன்னாரென்பதை அவனுக்குப் புலப்படுத்தாமல் ஆகவேண்டியவற்றை அவனிடஞ்சொல்லி மிக அணுகாமலும் மிக அகலாமலும் அவனது தவப்பள்ளியில் தங்கியிருந்தனர்.

வாசவதத்தையின் பிரிவாற்றாமல் மிக வருந்திய காஞ்சனைக்குத் தாம் எண்ணிய காரியத்தை உருமண்ணுவா மந்தணமாகத் தெரிவித்

துத் தேற்றி அவளையழைத்துவந்து வாசவதத்தையிடம் சேர்ப்பித்து விட்டுச்சென்றனன். அவள் வாசவதத்தையைத் தேற்றுவித்து அவளுடன் இருந்தனள். அந்நாட்களில் ஒருநாள் அந்நால்வரும், "நாம் இங்கே இருத்தலை அயலார் அறியின், நம்முடைய காரியம் பழுதுபடும்" என்று எண்ணி, "இனி யாம் இருத்தற்குரிய இடம் யாது?" என்று ஆலோசித்து ஒருவருக்குந் தெரியாமற்புறப்பட்டு உருமண்ணுவாவினுடைய தந்தையின்தோழனும் உக்கிரகுலத்திற் பிறந்தவனுமாகிய விசயவரனென்னும்அரசனுடைய இராசதானியும் அங்கநாட்டிலுள்ளதுமான சண்பையென்னும் பெருநகரத்தில் வாழும் பெருஞ்செல்வவானாகிய மித்திரகாமனென்னும் வணிகர் பெருமானுடைய வீட்டில் தங்கிக் காலங்கழிப்பாராயினர்.



மூன்றாவது

# மகதகாண்டம்.



ஏயர்குலத்திற்குப் பழம்பகைவனும் அதுபற்றியே கௌசாம்பி நகரத்தைக் கைப்பற்றியவனுமாகிய பாஞ்சால அரசன் யூகி இறந்த செய்தியையும் வாசவதத்தையை இழந்தமையால் உதயணன் மெலிவுற்றிருத்தலையும் அறிந்து அப்பால் தனக்கு யாதொரு தீங்கும் உண்டாகமாட்டாதென்றெண்ணிக் கௌசாம்பிநகரத்தைப் பாதுகாவாமற் செல்வக்களிப்பால் மிகுந்த மகிழ்ச்சியடைந்திருந்தனன். அதனையறிந்த உருமண்ணுவா முதலியோர், "இனி மகதமன்னனோடு நட்புப்பூண்டு அவனுடைய படைகளையுஞ்சேர்த்துக்கொண்டு பகைவனை வெல்ல வேண்டும்" என்று உதயணனுக்குக்கூறினர். அவன், "யூகி முதலியவரை இழந்தபின்பு எனக்கு வேண்டுவது யாது?" என்று மறுத்தனன். நாளுக்குநாள் உதயணனுடைய உடம்பு மெலிவுற்றது. அப்பொழுது தோழர், "சிறந்த வித்தையில் வல்லவனாகிய இலாமயனென்னும் ஒருமுனிவன் இருந்த வனங்கூடத் தீயால் வெந்துவிட்டது" என்று எடுத்துக்கூறி, "தீயால் துன்பமுறுதல் யாவராலும் விலக்கற்பாலதன்று" என்றும் வேறு செய்திகள் சிலவற்றைக்கூறியும் அவனைத் தேற்றிக்கொண்டிருந்தனர்.

அங்ஙனமிருக்கையில் பார்ப்பனத்தோழனாகிய இசைச்சனென்பவன், "யான் கூறுவதைக் கேட்டிடுக! மந்திரத்தால் முடியாத காரியம் யாதுமில்லை; வாசவதத்தை இறந்து வேறுபிறப்பை அடைந்திருப்பினும் பழைய உருவத்தோடு அவளைத் தருவதற்கு உரித்தான மந்திரமொன்று உண்டு; அதனைக்கற்று வல்லோனாகிய அந்தணனொருவன் இராசகிரியமென்னும் நகரத்தின்பால் உள்ளான். அவனையடைந்து வழிபாடாற்றி வேண்டினால், வாசவதத்தையை யாம் பெறுதல் எளிதாகும்" என்று இயம்பினன்; கேட்ட உதயணன், "அங்ஙனம் செய்யும் மந்திரமும் உண்டோ?" என்றுவியந்து தலையெடுப்ப இசைச்சன் அந்தவழியே பின் முயலவேண்டுமென்று நிச்சயித்து, "இங்ஙனம் பெரியோர் சொல்லக்கேட்டிருக்கிறேன்" என்று பின்னும் கூறினன். அப்போது உதயணன், "இப்பொழுதே அவ்விடத்திற்கு யாம் விரைந்து செல்லவேண்டும்" என்றுசொல்லத் தோழர்

கள் அவனைக்கூட்டத்தினின்றும் தனியே பிரித்து அழைத்துக் கொண்டு வந்து மிக்க ஆற்றலையும் கல்வியையும் உடையவர்களாகிய நூறுவீரர்களை வருவித்து வேறு வடிவங்கொள்ளும்படி சொல்ல, அவர்கள் அங்ஙனங்கொண்டனர்; அரசனும் தாமும் யாத்திரைக்கு ஏற்ற பார்ப்பன வடிவங்கொண்டவர்களாகிப் புறப்பட்டுப் புன்றுளக மென்னும் நாட்டையும் காளவனத்தையும் கடந்து கருப்பாசமென்னும் காட்டாறொன்றைத் தாண்டி அப்பாலுள்ள காட்டின்வழியே சென்றனர்.

அப்போது உதயணன் அங்கே திரியும் கலைமான் பாதுகாப்பப் பெண்மான் மருண்டுநோக்கி நிற்றலைக்கண்டு, வாசவதத்தையின் பார்வையை நினைந்து மனம்புழுங்கி, "பிணையே! என் உயிர்த்துணைவி சென்ற இடத்தை நீ கூறுவாயாயின் யான் அவ்விடம்சென்று உய்வேன்; நீ கூறுக" என்று புலம்பியும், அப்படியே மயில் புறவு வண்டு தென்றல் முதலியவற்றைத் தனித்தனியே விளித்து அரற்றிக்கொண்டும் செல்லுதலை அறிந்த தோழர் இரங்கி அவனுடன்,

துறக்கம் புரியுந் தொல்லையி னியன்றது
பிறப்பற முயலும் பெரியோர் பிறந்தது
சிறப்பிடை யறாத தேசிக முடையது
மறப்பெருந் தகையது மாற்றோ ரில்லது
விறற்புக ழுடையது வீரிய மமைந்தது
உலகிற் கெல்லாந் திலகம் போல்வது
அலகை வேந்த ஞணை கேட்பது
அரம்பு மல்லலுங் கரம்பு மில்லது
செல்வப் பெருங்குடி சிறந்தணி பெற்றது
நல்குர வாளரை நாடினு மில்லது
நன்பெரும் புலவர் பண்புளிப் பன்னிய
புகழ்ச்சி முற்று மகிழ்ச்சியின் மலிந்தது
இன்னவை பிறவு மெண்ணுவரம் பிகந்த
மன்பெருஞ் சிறப்பின் மகதநன் ஞடு (௩. 2 : 41 - 54)

சென்று சார்ந்தனர்.

அவர்கள் அவனுக்கு மிக்க ஆறுதல்சொல்பவர்களாகி அந்நாட்டின் ஐந்திணைவளங்களையும் நோக்கிக்கொண்டே அதன் தலைநகராகிய இராசகிரியத்தை அடைந்து, அதன் அகழி மதில் பலவகைச் சாதியாருடைய சேரிகள் நால்வகை வருணத்தாருடைய தெருக்கள் முதலியவற்றை யெல்லாங்கண்டு மிகவும் உவகையுற்று உள்நகர்

சென்றனர். உதயணன் அதன்வளங்களையெல்லாங்கண்டு வாசவதத்தையின் பிரிவு மனத்தை வருத்த மிகுந்த வாட்டமுற்று அவர்களுடன் தங்கினன்; அங்கே அவன்,

விழுப்பெருஞ் செல்வமொடு வென்றி தாங்கிய
ஐம்பதி னிரட்டி யவனச் சேரியும்
எண்பதி னிரட்டி யெறிபடைப் பாடியும்
அளப்பருஞ் சிறப்பி னாயிர மாகிய
தலைப்பெருஞ் சேனைத் தமிழச் சேரியும்
கொலைப்பெருங் கடுந்திறற் கொல்லர் சேரியும்
மிலைச்சச் சேரியுந் தலைத்தலை சிறந்து
வித்தக வினைஞர் பத்தியிற் குயிற்றிய
சித்திர சாலையு மொத்தியைந் தோங்கிய
ஒட்டுவினை மாடமுங் கொட்டுவினைக் கொட்டிலும்
தண்ணீர்ப் பந்தருந் தகையமை சாலையும்
அறத்தியல் கொட்டிலு மம்பலக் கூடமும்
மறப்போர்க் கோழி மரபிற் பொருத்தும்
விறற்போ ராடவர் விரும்பிய கண்ணும்
மறக்களி யானை வடிக்கும் வட்டமும்
கடிசெல் புரவி முடுகும் வீதியும்
அடுத்தொலி யருஅ வரங்கமுங் கழகமும் 7-29)
அறச்சோற் றட்டிலு மம்பலச் சாலையும்...நெருங்கி (ந. 4:

விளங்குவதும் அதன் அயலில் உள்ளதுமான புறநகரத்தில் காமன் கோயிலின் பக்கத்தேயுள்ள பொய்கைக்கரையில் விளங்கும் இளமரக் காவில் இருக்கும் தாபதப்பள்ளியொன்றில் அவர்களுடன் தங்கி வாசவதத்தையின் பிரிவாற்றாமல் மிகவும் வருந்துவானாயினன்.

அவனுயிரைக் காப்பாற்ற நினைந்த தோழர் அங்கேயுள்ள கண்கவர் பேரொளிக் காகதுண்டகரென்னும் ஒரு பெரியவரையடைந்து தம்முடைய குறைகளையெல்லாம் அவரிடம் விளங்கக்கூறி, உதயணனுக்குத் தைரியமுண்டாகவேண்டிய வழிகளை இன்ன இன்னவகையாகச் சொல்லவேண்டுமென்று சொல்லி உடன்படுவித்து அவரை அழைத்துவந்து அவனுக்குக்காட்டி, "முன்னம் யாம் கூறிய பெரியோர் இவரே" என்றனர். உதயணன் மிகுந்த ஆவலோடு அவர் கூறுவதைக் கேட்பதற்கு விரும்பி அவரை வணங்கினன். அவர் அவனை நோக்கி, "இரண்டுமாதம் விரதத்தோடே நீர் இங்கே இருத்தல்வேண்டும்; அப்பால் ஈமத்தில் யாம்செய்யவேண்டிய சாதனை

ஒன்றுண்டு; அதுமுடிந்தபின் வாசவதத்தை பழைய உருவத்தோடு வருதல் ஒருதலை; உம்முடைய இராச்சியமும் உமக்குக்கிடைக்கும்; இதனை நீர் நம்பும்" என்றுசொல்லிக் கைக்கொள்ளவேண்டிய விரதத்தையும் அதன் விதியையும் தெரிவித்துத் தம்மிடஞ்சென்றனர்.

கேட்ட உருமண்ணுவாமுதலியோர், "நிலத்திற்புகுதலும் விசும்பிற்செல்லுதலும் கடனீரைவாய்க்கொண்டு உமிழ்தலும் மலையைஏந்துதலும் ஆகிய இவைபோன்ற விச்சையின்றவர்களைக் கண்கூடாகவே கண்டிருக்கின்றோம்; செத்தோரைமீட்கும் விச்சையையுடையோரை இதுவரையிற் கேட்டும் அறிந்திலம்; பெரும்புண்ணியமுடையோமாதலின் இவரைக்கண்டோம்; இவர் வாசவதத்தையை வருவித்தளித்தல் ஒருதலை" என்று வியப்புற்றுக்கூறியவராகி அரசனைத்தேற்றிப் புறநகரத்தே முன்பு கூறிய இடத்தில் அவனுடன் தங்கினர்; "நம்மரசனை மகதமன்னனுக்கு நண்பனாக எப்படியேனும் செய்துவிடவேண்டும்" என்ற ஆலோசனை அவர்களுக்கு மிகுதியாக இருந்தது.

அப்போது அந்நகரில் காமதேவனுக்கு விழா நடந்தது; நடக்கையில் அரசன் கட்டளைப்படி, "பதுமாபதி காமனை வழிபடுதற்கு இன்றுசெல்வாள்; நகரத்தை அலங்கரித்திடுமின்" என்று வள்ளுவ முதுமகன் முரசறைந்துதெரிவித்தனன்; கேட்டவர்கள் அங்கங்கே அலங்காரஞ்செய்வித்தார்கள். திருமகளாயினும் உருவிலும் உணர்விலும் ஒப்புமையாற்றாப் பதுமாபதி நீராடி அலங்காரஞ்செய்துகொண்டு யாப்பியாயினிமுதலிய தோழியரும் காஞ்சுகியர்முதலியோரும் சூழ ஒரு வையத்தை ஊர்ந்துசெல்லுகையில், அது புறநகரத்தேயுள்ள காமன்கோட்டத்து வாயிலில் வந்துநின்றது.

வையம் நின்றபொழுது அதனை மூடிய திரை காற்றால் விலகியது; அப்போது அதனுள்ளேயிருந்த பதுமாபதியை எதிரிற்புன்னைமரத்தின் கீழே வாசவதத்தையின் நினைவுடனிருந்த உதயணன் கண்டான்; பதுமாபதியும் அவனைக்கண்டாள்; ஒருவரைஒருவர் விரும்பி மனங்குழைந்தார்கள். வாசவதத்தைக்கும் அவளுக்கும் வேற்றுமைதோன்றாமையால், "நாம் கருதிவந்த பெரியோர் வாசவதத்தையை மீட்டு அளித்தனரோ?" என்று உதயணன் எண்ணினான்; "இவன், தன்னை வழிபடவந்த எனதுநிறையை அளத்தற்கு என்முன்னர்த் தோன்றிய காமதேவனோ? அன்றி அந்தண வடிவத்தோடு தோன்றிய வேறுதேவகுமாரனோ?" என்று பதுமை எண்ணினள்; அப்பொழுது தோழிவந்து வணங்கினள்; அவளுடைய தோளைப்பற்றிக்கொண்டு வண்டியிலிருந்து இறங்கிய பதுமாபதி, கோயிலினுள்ளேசென்று காமதேவனுடைய

மாடத்தை வலம்வந்து,விதிப்படி தானங்களைச்செய்துநோன்பை இயற்றத்தொடங்கினள். தொடங்கியவள், தன்முன்னேநின்ற முதிய காவலாளர்களைநோக்கி, "இங்கேதானம் பெறவரும் அந்தணர்களைத் தடைசெய்யாமல் உள்ளே வரச்செய்மின்" என்று கட்டளையிட்டனள்.

"எல்லா நலமும் அமைந்த உதயணனைப்போன்ற தலைவனை இவள் அடைதற்குரியள்" என்று அங்கே நின்ற முதியவளொருத்தி ஒருபாட்டைப் பாடினள்; அதனைக்கேட்ட பதுமை, "இப்போது புன்னையின் கீழேநின்றோன் அவனைப்போன்றவனே" என்று கருதினள். விழாவினது முதனாளிற் செய்யவேண்டிய தானங்கள் விதிப்படி செய்யப்பட்டன. அப்பொழுது முதுமகளிர், "சூரியன் அத்தமித்தற்கு முன்பே நாம் கன்னிமாடம் செல்வது நலம்" என்று கூறினர். கூறவே செல்லுதற்கு அவளுடைய மனம் தடுமாறியது. தோழிமார் வந்து ஏற்றப் பதுமாபதி வையத்தில் ஏறிக் கன்னிமாடம் சென்றனள். சென்றபின், "இவளுடைய நோன்பு இந்தவிழாவில் முடிவுபெறும்; அந்தக்காலத்தில் இவள் தானம்செய்வாள்; வாங்க வருபவர்களை நீவிர் விலக்கவேண்டாம்" என்று சிலதியர் சொற்றனர்; அதைக்கேட்ட உதயணன், "மீட்டும் இவளை நாம் பார்த்தல்கூடும்" என்று தன்னுடையமனத்திற்கு ஆறுதல்செய்து கொண்டிருந்தனன்.

அப்பொழுது பின்னே மெல்லச்செல்லும் ஐராவதியென்னும் அவள்தோழியைக்கண்டு, "இவள் யார்? இவள் பெயரென்ன? இச்சோலையின்கண் இவள் வந்த காரியம் யாது?" என்று உதயணன் வினவினன்; "இந்த அந்தணாளன் பொருள்நசையால் வந்தவன்" என்று நினைத்து ஐராவதி, "இவள் இந்நகரத்தரசன் பட்டத்துத்தேவியாகிய சிவமதியென்பவளுடைய சகோதரியும் காசிராசன் மனைவியுமான உதயையோடையென்பவளுடைய மகள்; பதுமாபதியென்னும் பெயருடையாள்; கலியாணமாகாதவள்; மன்மதனுக்கு நகரம் செய்யும் விழாவின்முடிவில் வேதியர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுக்க எண்ணியிருக்கின்றாள். பொருளில் விருப்பம் இருப்பின் நீர் இங்கே இரும்" என்று சொன்னதன்றி, "உம்முடைய நாடு எது? ஊர் எது? கோத்திரம் யாது?" என்றும் கேட்டனள். உதயணன் கேட்டதைக்குறித்து உள்ளே மகிழ்ந்து, "என்னுடைய நாடு காந்தாரம்; ஊர் இரத்தினபுரம்; என்னுடைய தந்தை சாண்டியனென்னும் அந்தணன்; என்பெயரை மாணகனென்று சொல்லுவர்" என்று கூறினன். கேட்ட ஐராவதி மகிழ்ந்து விரைந்து கன்னிமாடஞ் சென்றாள்.

அப்பால் உதயணன் தோழரையடைந்தான். சூரியன் அத்தமித்தது; முல்லை மலர்ந்தது; தாமரைகள் குவிந்தன; பின்னும் உள்ள மாலைக்கால நிகழ்ச்சிகளைக்கண்டு காமவேகம் அதிகரிக்கப்பெற்ற உதயணன் வாசவதத்தையை மறந்து பதுமாபதியின் அழகையே நினைந்து,

"வனப்பமை வையந் தனக்குமறை யாகிய
கஞ்சிகை கடிவளி யெடுப்ப மஞ்சிடை
வானர மகளிரிற் றோனணி சுடர
முகைநலக் காந்தண் முகிழ்விர லேவத்
தகைமலர்ப் பொய்கைத் தண்செங் கழுநீர்
சில்லெனப் பிடித்து மெல்லென விழிந்து
நண்ண வருவோள் போலு மென்கண்
ஆற்றேன்; (ந. 7 : 47 - 54)

தவஞ்செய்தேனும் யான் இவளை அடைவேன்" என்று துணிந்து தன் கருத்தைத் தோழர்களுக்குக் கூறி வருந்தினன்.

சென்ற பதுமாபதியும் அவனையே நினைந்து வருந்திப் பின்பு அமளியில் ஏறி,

நறுமலர்க் காவினுட் டுறுமிய பூந்துணர்க்
கொடிக்குருக் கத்திக் கொழுந்தளிர் பிடித்து
நாண்மலர்ப் புன்னைத் தாண்முத லணைந்து
பருகு வன்ன நோக்கமொடு பையாந்து
உருகு முள்ளமோ டொருமா ஞெடுங்கி
நின்றோன் போலவு மென்றோள் பற்றி
அகலத் தொடுக்கி நுகர்வோன் போலவும்
அரிமலர் நெடுங்க ணகவயிற் போகாப்
புரிநூன் மார்பன் புண்ணிய நறுந்தோள்
தீண்டும் வாயில் யாதுகா லென்றுதன்
மாண்ட சூழ்ச்சி மனத்தே மறுகி
ஆசி லணியிழை தீயயல் வைத்த
மெழுகுசெய் பாவையி னுருகு நெஞ்சினள்
பள்ளி கொள்ளா ளுள்ளுபு வதிய (ந. 7 : 77-90)

இவ்வண்ணம் இருவரும் இருவயினொத்த இயற்கை நோக்கமொடு ஒருவயினொத்த உள்ளநோயையுடையவர்களாய்த் துன்புற்றனர்; அந்த இராத்திரியானது கொல்லவந்ததுபோலவே அவர்களுக்குத் தோற்றி [1] ஏழிருள்போலச் சென்றது.

---

1 "நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமும், எழுநாளே மேனி பசந்து" திருக்குறள், 1288.

மறுநாட்காலையில் மீட்டும் அவனைக் காணவேண்டுமென்னும் விருப்பத்தை மனத்திலேயே அடக்கிக்கொண்டு பதுமாபதி கண்களைக் கழுவித் தெய்வத்தை வழிபட்டுக் கவலையுடனிருக்கையில் அவளுடைய வேறுபாட்டைக்கண்ட செவிலித்தாய் முதலியோர்கள் பல்வாறு கவலையுற்றுச் சமயம்பார்த்து, "வையமேறிச் சோலைக்குச் செல்வோமா?" என்று அவளை வினவினர். அவள், "நோன்பு முற்றும்வரையில் என்னைக் கேட்கவேண்டுவதில்லை; அரசனுடைய கட்டளை இல்லையாயினும் செல்லவேண்டுவதே முறை" என்றனள். உடனே அவர்கள் அவளை வையத்திலேற்றிச் சோலைக்கு அனுப்பினர். அனுப்பியபொழுது முதல்நாளிற்போலவே புன்னைமரத்தின் கீழ்நின்ற உதயணனும் அவளும் ஒருவரையொருவர் நோக்கித் தம் விழைவைப் புலப்படுத்திக்கொண்டு மயங்கினர். இப்படியே சில தினங்கள் சென்றன.

ஒருநாள் அங்கேவந்த பதுமாபதி தன்காமநோயை வெளிப்படுத்தும் ஊக்கமுடையவளாகி ஐராவதியின் கழுத்தில் தன் கையைச் சேர்த்துத் தழுவிக்கொண்டு ஒரு மண்டபத்தின்மேல் ஏறி நின்றாள்; அப்படியே உதயணன் தன்விருப்பத்தை வெளிப்படுத்தும் குறிப்போடு வயந்தகன்தோளை ஒருகையாற்றழுவி மற்றொரு கையால் மிக அழகியதாகிய பூப்பந்தொன்றை உருட்டிக்கொண்டு புன்னையின் கீழே நின்றான். அங்ஙனம் நின்றவனைக்கண்ட பதுமாபதி ஐராவதியை நோக்கி, "அந்தணஉருவத்தோடு அங்கே நிற்பவன் யாவன்? நீ அவனை அறிவாயோ?" என்று வினவினள். ஐராவதி, "முன்னொரு நாள் நீ கன்னிமாடம் சென்றபின்பு நான் அன்பின்மிகுதியால் அவன் வரலாற்றைக்கேட்டு அறிந்துகொண்டேன். மாணகனென்பது அவன் பெயர்; அவன் அந்தணன்; இந்நாடு பார்த்தற்குவந்தான். அவனும் அவனுடைய தோழரும் உன்னுடைய தானத்தை விரும்பியே இங்கே தாமதித்தனர் போலும்; விரைவில் திரும்பிச் செல்வாரல்லர்" என்றனள்.

கேட்ட பதுமை, "பிறரறியாமற் குறிப்பித்து அவன்கையிலுள்ள பந்தை வாங்கித்தருதல் கூடுமோ?" என்ன, ஐராவதி கையைத்தட்டி அவனை நோக்கி, "உன்கைப்பந்தை இவளுக்குத் தர வேண்டும்" என்று கண்ணாலும் கையாலும் அவனுக்குத் தெரிவித்தனள். அதனையறிந்து மனத்தில் அடக்கிக்கொண்ட அவன், "தத்தையை நினைந்து உழலும் என்மனத்தைத் தன்பால் இவள் இழுத்துக்கொண்டு தன்மனத்தை என்னிடத்தே நிறுத்திக் கலந்த நேயமுள்ள

வளாயிருக்கின்றனள்" என்று தோழர்க்கு உணர்த்தினன். கேட்ட தோழருள் இசைச்சனென்பவன், "இந்த நாட்டுமகளிர் நிறையை யுடையார்; மனத்தைப்பிறர்பாற் செலுத்தார்; அரசனுடைய கட்டளையும் அதுவே; பதுமாபதியும் அத்தன்மையளே; அஃதன்றாயின் தன்மனைவி தீப்பட்டாளென்பது தெரிந்து வருந்தி உதயணன் பார்ப்பனவேடங்கொண்டு வந்துளானென்பதை அறிந்தோர் சொல்லக் கேட்டு அவனிடம் நம்முடைய கருத்தைத்தெரிவித்தல் குணமென்று தன்னுடைய கருத்தை வெளியிட்டிருத்தல் கூடும். அன்றாயின், தோற்றப்பொலிவால் மிக்க இவர்கள் வந்து தானமேற்றல் தகுதியன் றென்று நன்மதிப்போடும் நம்மை நோக்கியிருத்தல்கூடும். ஆதலால், அவளிடத்தில் விருப்பத்தைச் செலுத்துதல் முறையன்று" என்று தடுத்தனன். மற்றத்தோழர்களும் அக்கருத்தையே தழுவிக்கூறினர்.

அவளுக்கும் தனக்குமுள்ள அன்பை அறியாத மற்றத் தோழர்களைத் தேற்றவேண்டி உதயணன், "மலர் முதலியவற்றாற் செய்த கண்ணியை இப்பொய்கையின் பக்கத்துள்ள மரக்கிளை யொன்றில் அவள்காணக் கட்டிவிட்டு நான் மறைந்திருப்பேன்; அவள் அக்கண்ணியைக் கைக்கொள்வாளாயின் யான் கூறியதை உண்மையென்று கொள்க" என்று அவர்களுக்குக் கூறினன். பின்பு அவன் அப்படியே கண்ணியொன்று கட்டித் தான் கருதிய சோலையிற் புன்னை, ஞாழல், மகிழ்ஆகிய மரங்களின் செறிவிற் கிளையொன்றில் அவள் காணும்படி அதனைக்கட்டிவிட்டுப் பின்னும் தான் அவளை முதலிற்கண்ட காமன் கோட்ட முதலியவற்றையும் தம்முள் நிகழ்ந்த செய்திகளைப் புலப்படுத்துஞ் சித்திரங்களையும் வாழைக்குருத்தில் நகத்தாற்பொறித்து அவற்றை ஆண்டுள்ள ஞாழல்மரத்தின் கிளையில் தொங்கச்செய்து விட்டுத் தான் அயலிடஞ்சென்றனன்.

பதுமாபதி, யாப்பியாயினியோடுசென்று அப்பொய்கையில் நீராடித் தன்னை அலங்கரித்துக்கொண்டு கரையில் தனியேசென்று சோலையைப் பார்த்தபொழுது அங்கே உதயணன் கட்டி நாற்றிய கண்ணி முதலியவற்றைக் கண்டாள். கண்டு புன்முறுவல்கொண்டு ஒரு கழுநீர்ப்பூவைக் கையிற்பற்றி அதன் தண்டில் தன் பெயர் பொறிக்கப்பட்டுள்ள மோதிரத்தைச்செறித்து அதனையும் பிணையலையும் சந்தனத்தையும் அவன் வைத்த கண்ணியைச்சார ஒருபால் வைத்தனள்; பின்பு அவன் வைத்த கண்ணிமுதலியவற்றை எடுத்துவந்து அக்கண்ணியைத் தன் சென்னியிலணிந்து பிறவற்றை மார்பில் அப்பிக்கொண்டு மிக அழகுபெற்று விளங்கிநின்றாள். நின்றவளை அங்குவந்த யாப்பியா

யினிகண்டு, "நீ யார்? உன்னைப்போன்றவளும் என்னுயிர்த்தோழி யும் தருசகன் தங்கையுமாகிய பதுமாபதியை யான் பிரிந்தேன்" என் றனள். தன் வேறுபாட்டையறிந்து அவள் கேட்டதாகப் பதுமாபதி நாணி முகங்கவிழ்ந்தனள். பின்பு அவ்விருவரும் தம்மிடஞ் சென் றார்கள்.

அங்கே நிகழ்ந்தவற்றை மறைந்திருந்த உருமண்ணுவாகண்டு மற்றைத்தோழர்க்குக்கூறினன். எல்லோரும் ஒத்தமனமுடையவர்க ளாயினர். வயந்தகன் சென்று ஆராய்ந்து பதுமை உதயணனுக்காக அங்கே வைத்திருந்த பிணையல், சாந்தம், கழுநீர்ப்பூ, மணியாழி இவற் றைக்கண்டெடுத்துவந்து உதயணனுக்குக் கொடுத்தனன். அவன் யூகி முதலியவர்களைப் பெற்றவன்போல மகிழ்வுற்றுப் பதுமாபதி ஆடிய பொய்கையில் நீராடி அவள்வைத்த சந்தனத்தை மார்பிலும் தோளி லும்பூசி அப்பிணையலைச்சூடி மோதிரத்தைப் பிறர்அறிந்துகொள்ளாத படி தன்விரலிற்சேர்த்திக் கழுநீர்மலரைக் கையிற்பிடித்துக்கொண்டு சிறிதும் கவலையேயில்லாமல் முகமலர்ச்சியோடும் போந்தபொழுது மாடத்தின்மேலே நின்ற பதுமாபதி கண்டு, "யாம் கண்ணுற் கூடிய கூட்டமன்றிக் கண்ணிமுதலியவற்றாலும் கலப்புடையேமாயினேம்; நெஞ்சே! கவலைப்படாமலிரு" என்று தன்னுட் சிலவார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு தன்னிடம் சென்றனள். தனக்கு அவள் உரிமைபூண்டனளென்று தோழர்க்கு உதயணன் தெரிவித்துவிட்டுச் சென்று கவலையில்லாமல் துயின்றான்.

அப்பொழுது அவனுடைய கனவில் வாசவதத்தை மாசுபடிந்து மெலிந்து வாடிய உடம்போடு தோன்றினள். உடனே உதயணன்,

"மாசில் கற்பின் வாசவ தத்தாய்
வன்க ணாளனேன் புன்கண் தீர
வந்தனையோ" (ட. 1 : 158-60)

என வாய்திறந்து அரற்றவே வாசவதத்தை, "அயல்நாட்டிற்கு என்னைத் துறந்துசென்றாய்; அன்புடையாரைப்போலக் கூறும் கட்டு ரையை ஒழிவாயாக" என்றுசொல்லி அகன்றனள்; அவன் குறுகி, "உன்னைப்பிழைப்பித்துத் தருபவன் இவ்வூரிலுள்ளானென்பதைக் கேட்டே பலமலைகளையும் காடுகளையுங்கடந்து இங்கேவந்தேன்; நீ வெகுளாதே" என்று இரந்தனன்; அவள், "நீ பதுமாபதியினிடத்தே அன்புற்று அவள்வைத்த மாலையையும் சந்தனத்தையும் இப்பொழுது அணிந்தாயன்றோ" என்று சொல்லிவிட்டுப் பின்னும் நீங்க அவன் "பதுமாபதியென்கின்ற பெயரை இன்றுதான் நின் வாயாற்கேட்

டேன்; வேறு அறியேன்" என்று பின்னும் இரக்கும்பொழுது அவள் மறைந்தனள். சூரியன் உதித்தனன்.

விழித்தெழுந்த உதயணன் தான்கண்ட கனவைத் தோழர்க்குக் கூறினன்; அவர்கள், "வாசவதத்தை சினங்கொண்டாளாதலால், பதுமையின் மாலைமுதலியவற்றை நீ அணிந்தது பிழையாகும்; இவள்பால் வைத்த காமத்தை விட்டொழிவாயாக" என்று மிக வற்புறுத்தவும் அவன் தன் கொள்கையைவிடானாகிப் பதுமையை யடைவதற்கு முயற்சி செய்வானாயினன். அதனைக்கண்ணுற்ற தோழர், "இவனைத் தருசகனுக்கு நண்பனாகச்செய்தற்குவந்த நமக்கு இங்ஙனம் நேர்ந்ததற்குக் காரணம் ஊழ்வினையின் வலி" என்று மனமுவந்து ஆலோசிப்பாராயினர். அப்பொழுது உதயணன், "பதுமையோடு மாடத்திற்புகுந்து அவளுடன் இரேனாயின் என்னுள்ளம் கலங்கா நிற்கும்" என்று தன் குறையைத்தெரிவித்தனன். தோழர், "அவளுடைய மாடத்தில் நீ புகுவாயாயின் உண்டாகுந்தீங்குகள் இன்னவை" என்பதைக் கூறித்தடுப்ப, உதயணன் உடன்படானாகி ஒருநாள் 1 தோழர்களைப்பிரிந்து முதுமைவேடம்பூண்டு தானம்வாங்கச் செல்பவர்களுடன்சென்று காமன்கோட்டத்தின் உள்ளேயிருக்கும் மணவறையில் ஒருவரும் அறியாதபடி ஒளித்திருந்தான்.

இருக்கையில் பதுமாபதி தனியே அவ்வறையின் உள்ளிடத்தை அடைந்தாள்; அடைந்தபொழுது உதயணன் தன் இளமைக்கோலத்தோடு எதிரே நின்றான். நின்றவனை அவள் மனந்துட்கெனக் கண்டு நாணிக் கொடிபோல அசைந்து ஒதுங்கிநின்றாள்; அவன் பாராட்டி, "தீண்டிலேனாயின் உய்யேன்; அருள்" என்று வேண்டினன். அப்போது அவ்விருவருக்கும் காந்தருவமணம் நடைபெற்றது. பின்பு அவள் புறம்போந்து தோழிமாரோடு வையமூர்ந்து தன்மாடஞ்சென்றாள். அவள் சென்றபின், பிறரறியாமற் புறம்போந்த உதயணன், ஒருநாள் வேற்றுவடிவத்தோடு தருசகனது அரண்மனைவாயிலையடைந்து அங்கேநின்ற பேரறிவாளனொருவனைக்கண்டு, "தருசகராசனுக்கு எந்த வித்தையில் விருப்பமுண்டு?" என்று வினவ அவன், "தன்னுடைய தகப்பன் ஈட்டிய பெரும்பொருள் வைக்கப்பட்ட இடந்தெரியாமையால் தருசகன் கவலையுற்று வருந்துகின்றான்; அதனையறிந்து

1 இதன்மேலுள்ள மூலப்பகுதி கையெழுத்துப்பிரதியிற் சிதைந்துபோய்விட்டமையால், அதற்குப் பின்னும் முன்னுமுள்ள ஆதாரங்களைக்கொண்டும் வேறு நூல்களைக்கொண்டும் ஆராய்ந்து கதை இங்கே எழுதலாயிற்று.

சொல்வோருக்கு அவன் தன்னுடைய உயிரையும் அளிப்பான்'' என்று கூறினன். கூறவே, ''புதையலெடுக்கும் வித்தையிலும் கீழ் நீர்களையறியும் நூல்களிலும் மற்றநூல்களிலும் நான் நல்ல பயிற்சியுடையேன்; அரசனைப்பார்த்தலில் எனக்கு விருப்பம் மிகுதியாகவுண்டு'' என்று உதயணன் சொல்ல, அம்முதியோன் சென்று, ''புதையலெடுத்தல் முதலிய வித்தைகளில் சிறந்தபயிற்சியுள்ள ஒருவர் நும்மைக்காணுதற்கு விருப்பங்கொண்டு வாயிலில்வந்து காத்திருக்கின்றனர்'' என்று தருசகனிடம் தெரிவித்தான். உடனே தருசகன், ''கற்றவர்களைக்காண்பது அரசாட்சியாலாகிய பயனாகும்'' என்று சொல்லி அவனை அழைத்துவரச்செய்து தனியேசென்று ஓராசனத்திலிருத்திக் கற்றவித்தைகளையெல்லாம் வினவியறிந்து, ''என்னுடைய தந்தை புதைத்த பொருள்களை யான்அறியும்படி செய்யவேண்டும்'' என்று தெரிவிக்க, உதயணன் தான் புதைத்துவைத்த பொருள்களுள்ள இடத்தைக் காட்டுபவன் போலவே அவனுக்கு அவ்விடத்தைக் காட்டினன்.

அவற்றைக்கண்டு அரசன் மிகவும் வியப்புற்று, ''இவன் பெறுதற்கரியன். எதனை விரும்பினாலும் அதனை இவனுக்குக் கொடுத்தற்குக் கடப்பாடுடையேன்'' என்று சொல்லிப் பின்பு, ''இவ்வரண்மனையிலும் இதனைச்சார்ந்த இடங்களிலும் நல்ல நீர் இருக்குமாயின் அதனையும் காட்டவேண்டும்'' என்றுகூற, உதயணன் அப்படியே நீர்நிலைகளையறிதற்குரிய இலக்கணங்களை முறையே தெரிவித்ததன்றி நல்லநீருள்ள இடத்தை அகழ்வித்துக்காட்டி மகிழ்விப்ப, தருசகன் மகிழ்ந்து அவனை அரண்மனையின் அகத்தே இருக்கும்படி சொல்லிப் பொன்னறைப் பாதுகாவலராகிய கணக்குவினையாளரை அவனுடனிருந்து பாதுகாக்கும்படி கட்டளையிட்டனன்.

உதயணன் அங்கிருப்பவன்போலவே தன்னைக்காட்டிக்கொண்டு பிறரறியாமல் உரியகாலத்திற் சென்று காமன்கோட்டத்துள்ள மணவறையில் இருந்துவருவானாயினன். அதனையறிந்த உருமண்ணுவா வேற்றுவடிவங்கொண்டு சென்று அரசன்பால் ஒரு வேலையைப்பெற்று அதனை நன்குசெய்பவனாகி அரண்மனையிலேயேயிருந்து அவனைப் பாதுகாத்து வருபவனாயினன். அங்ஙனமே இசைச்சனும் வயந்தகனும் அவனைப் பாதுகாத்தற்பொருட்டு வேற்றுவடிவங்கொண்டு தருமநூல் முதலியவற்றைப் பதுமையின் தாய்க்குச் சொல்லுபவர்களாகியும் கண்டோர் வியக்கும்படி மலர்களைப் பலவகைப் பிணையல்களாகக்கட்டியும் கட்டுவித்தும் பதுமைக்கு அனுப்புபவர்களாகியும் அங்கேயிருந்

தனர். உடன்வந்த ஏனைவீரர்களும் வேறு வடிவங்கொண்டு தத்தமக் கேற்ற தொழில்களைச்செய்பவர்களாகிச் சமீபமான வேறு வேறிடங் களில் தங்கினர்.

இப்படியிருக்கையில், பதுமை உதயணனைத் தன்னுடன் கன்னி மாடத்திற்குப் பிறரறியாமல் அழைத்துக்கொண்டு செல்ல நினைந்து அதற்குரிய உபாயமொன்றை ஆராய்ந்து, "பலவகையான தானங் களைச் செய்தற்கு நிச்சயித்திருக்கிறேன்" என்று சொல்லி அதனைப் பலரும் அறியச்செய்தனள். செய்தபின் சிவிகையை வருவித்து அதி லேறிச்சென்று காமன்கோட்டத்தின்வாயிலில் இறங்கித் தானிருக் கும் அறையின்வாயிலிற் சிவிகையை வைக்கும்படி கட்டளையிட்டு விட்டுத் தனியே அறையுட்சென்று அங்கே ஒதுங்கியிருந்த உத யணனைக்கண்டு உவந்து அவனுடன் அங்கே காலத்தைப் போக்கி னள்; பின்பு தனது நோன்பிற்குரிய நாட்களின் இறுதித்தினம் அன் றாதலால் வந்த யாவர்க்கும் மணியும் முத்தும் பவழமும் மாசையும் அணியும் ஆடையும் ஆசில்உண்டியும் பூவும் நானமும் பூசுஞ்சாந்த மும் யாவையாவை அவையவை அவரவர் வேண்டாராயினும் ஈண்ட வீசி அவர்களுடைய ஆசிகளைப்பெற்று அவர்களை அவள் அனுப்பி னள்; அப்பால், காமன்கோயிலில் மணிவிளக்கேற்றி மகளிர்பாடினர். அப்பொழுது உயிர்த்தோழியாகிய யாப்பியாயினி அவளது குறிப் பறிந்துவந்து ஆங்கு நின்றாரைநோக்கி, "எம்மிறைவி இன்று பட்டினியுற்றாள்; சனநெருக்கத்தால் வெப்பமடைந்து வருந்துகின் றாள். நீவிர் எல்லோரும் புறத்தேசெல்லுமின்" என்று சொல்ல, எல் லோரும் உடனே புறத்தேபோயினர்.

மறைந்துவந்து கஞ்சிகைச்சிவிகையில் உதயணன் தங்கினன்; பதுமையும்சென்று அதில் தங்கினள். அப்பொழுது சுருக்குத் திரையைவிரித்து அச்சிவிகையை மறைத்தனர். காவலாளர்கள், "இச் சிவிகையைக் கன்னிமாடத்துள்ள பள்ளியறையினுள்ளேசென்று வைத்திடுக" என்றுசொல்லிக்கொண்டு பின்சென்றனர். யாரும் அணு காதபடி கடுங்காவலராகிய சிலதமாக்கள் உசும்பிக்கொண்டு அயலிடஞ் சென்றார்கள். புறநகரத்துள்ள காவும் வாவியும் காமன்கோட்டமும் பூவீழ்கொடியிற் பொலிவிலவாக அகநகரஞ்சென்று பல வீதிகளையுங் கடந்து அரண்மனையுட்சென்று கன்னிமாடம்புகுந்து மல்லர் உள்ளே சென்று சிவிகையை வைத்தனர்.

அப்பொழுது பதுமை, "எனக்கு மிகவும் வெப்பமுண்டாகின் றது; எல்லோரும் போமின்" என்று கட்டளையிடவே, ஆங்குச்

செறிந்துநின்ற யாவரும் புறத்தே சென்றனர். உடனே திரையை யகற்றிப் பதுமை தன்னுடைய பள்ளியறையிற் சென்றிருந்தனள். யாப்பியாயினி பள்ளியறையின் நாற்புறத்துஞ்சென்று ஆராய்ந்து யாருமில்லையென்பதைச் சொன்னபின்பு, உதயணன் பிறரறியாமற் சென்று அங்கேதங்கி மிக்க மகிழ்ச்சியுடையவனாயினன். "யாவரா யிருப்பினும் சமயம் அறியாமல் இங்கே வாரற்க" என்பதைப் பதுமை தோழிமார்க்குத் தெரிவித்ததன்றி, "யாழும் பாட்டும் இனி நன்றாகப் பயிலுமெண்ணமுடையேனாதலின் எனக்குரிய உணவுவகைகள் இங்கேயே வருவனவாக" என்றும் கட்டளையிட்டனள். அங்ஙனமே அவை வருவனவாயின; பின் அவள் எழுநிலைமாடத்தில் உயர்நிலையறையிற்சென்று ஆண்டுள்ள அணையின்மிசை உதயணனோடிருந்து அளவளாவி மகிழ்ச்சியடைந்திருந்தனள்.

இருந்தபொழுது உதயணன் ஒருநாள், நாற்புறத்துமுள்ள நுட்பமான சிற்பவேலைகளைப் பார்த்துப்பார்த்து வியப்புற்றான்; பதுமாபதி, அவன் தன்னைப்பாராமல் வேறிடத்திற் கருத்தைச் செலுத்திக்கொண்டே யிருத்தலைஅறிந்து புலந்து கடியசொற்களைச் சொல்லி உடல்வியர்த்துக் கண்ணீர்பெருகத் தன்னுடைய அணிகலங்களையும் மாலைகளையும் எடுத்தெறிந்துவிட்டுக் கலங்குவாளாயினள். அதனை யறிந்த உதயணன், "நங்காய்! யான் யாதொரு குற்றமும் செய்திலேன்; நினைத்துமிலேன்; வருந்தல்வேண்டா; பொறுத்திடுக" என்று பலமுறை குறையிரந்து அவளுடைய புறத்தைத் தைவந்து தோட்டைக் காதிலணிந்து மற்ற ஆபரணங்களையுந்திருத்தி நலம்பாராட்டிச் சந்தனத்தைப் பூசித் தழுவுவதற்கு நெருங்குகையில் அவள், "என்னைத் தீண்டாதீர்" என்று சினந்துரைத்து வேறிடஞ்செல்லப் புடைபெயர்ந்தனள்; அப்பொழுது, பக்கத்திலுள்ள பூஞ்சோலையின் கிளையிலிருந்த கோட்டானொன்றுவந்து அம்மாடத்தின்மேலுள்ள சூலத்திலேறி யிருந்து கேட்போர் அஞ்சும்படி ஒலித்தது; உடனே பதுமை நடுக்கமுற்று ஓடிவந்து உதயணனைத் தழுவிக்கொண்டாள். உதயணன் அவளுடைய அச்சமுயக்கத்தை மிகவிரும்பி, "அஞ்சற்க" என்று கூறிக் கூகையினுதவியை நெஞ்சத்துள்ளே பாராட்டி அவளைப்புல்லியும் திளைத்தும், "அமரராக்கிய அமிழ்தே!" எனப் புகழ்ந்தும் ஒழுகுவானாயினன்.

இங்ஙனம் ஒழுகும் நாட்களில் ஒருநாள் பதுமை தோழியை யழைத்து, "இவன் கற்றவித்தைகளை நாம் ஆராய்ந்தறியவேண்டும்" என்று சொல்ல, தோழி அவனை வினவினள். வினவவே அவன்

"வேள்விக்குரிய வித்தைகளெல்லாவற்றிலும் வல்லேன்; என்னுடைய மனைவி விரும்பியபொழுது குடமுழவென்னும் வாத்தியத்தை அவளுக்குப் பயிற்றினேன்" என்றனன்; "அதில்வல்ல இவ்வந்தணன் இசையிலும் வல்லவனாக இருத்தல் கூடும்; இவன் சுவைத்தொழில் மகன்" என்று சொல்லிப் பதுமை நகைத்துத் தன் யாழை வருவித்துத் தான் வாசித்தற்கு ஆற்றாதவளாகி, "இதனை இவனிடம்கொடு" என்று தோழிக்குக் குறிப்பால் உணர்த்தினள். அவள் அப்படியே சென்று அதனை அவனிடங் கொடுத்து, "இதனைச் செப்பஞ்செய்து தருக" என்றனள். அவன், "எம்முடைய குலத்திற்கு ஒவ்வாத இதனை வாசிக்கும்படி என்னை வருத்தாதொழிக; யாழ் வித்தையை இனிக் கற்றற்கு விரும்பினேன்" என்றான். அவள், "நரம்புகளை வலித்து இறுக்கித் தானத்திலிருத்தலையே யாம் விரும்பினேம்" என்றாள். அவன், "அப்படியானால் ஒருவாறு பார்ப்பேன்; அதனைக் கொடு" என்று சொல்லி வாங்கித் திவவை இறுக்கிப்பார்த்து, அது பட்டமரத்தாற் செய்யப்பட்டதென்பதையும் பிற இலக்கணங்களையுங் கூறினன். கேட்ட பதுமை, "இவன் யாழறிவித்தகன்போலும்; அதனை நன்கறிந்துகொண்டு வாசிக்கச் செய்வாயாக" என்று தோழிக்குக் கூறினள்; அவள்வந்து குறையிரப்பதை அறிந்த உதயணன், "இவளுக்கு அறிவுபெரிது" என்று எண்ணி, "யான் இதில் வல்லுநன் அல்லேன்" என்றான்; பதுமை, "ஒருமனமுடையவர்க்குத் தெரியாத காரியம் ஒன்றுமில்லை; இன்பமயக்கமடைந்த எம்மை வஞ்சித்தல் அறனன்று; மறாதருள்க" என்றனள். அப்போது சூரியன் அத்தமித்தனன்; மலர்ந்த முல்லைப்பூவின்மணத்துடன் தென்றல் சாளரத்துள்ளே வந்து தவழ்ந்தது.

உதயணன் தனது யாழாகிய கோடபதியினை நினைந்து வருந்திப் பின்பு அவ்வியாழைத்தீண்டி வாசித்தனன்; அவனுடைய குரலிசைக்கும் யாழொலிக்கும் வேற்றுமை தோற்றவில்லை;

"செவிச்சுவை யமிர்த மிசைத்தலின் மயங்கி
மாடக் கொடிமுடி மழலையம் புறவும்
ஆடமை பயிரு மன்னமுங் கிளியும்
பிறவு மின்னன பறவையும் பறவா
ஆடுசிற கொடுக்கி மாடஞ் சோரக்
கொய்மலர்க் காவிற் குறிஞ்சி முதலாப்
பன்மர மெல்லாம் பணிந்தன குரங்க
மைம்மலர்க் கண்ணியு மகிழ்ந்து மெய்ம்மறப்ப
ஏனோர்க் கிசைப்பி னேதந் தரும்" (ந. 4: 277-85).

என்று எண்ணிப் பதுமை, "யாழ் வித்தையிற் சிறந்தவன் காமன்; அவனுக்குப்பின் தும்புரு; அவனுக்குப்பின் உதயணன் சிறந்தவனென்றுசொல்லுவர்; அவனிலும் இவ்வந்தணன் சிறந்தோனாவான்" என்று நினைந்து உள்ளங்கொள்ளா உவகையளாகி அவனைப் பெரிதும் பேணுவாளாய்க் கழிபெருங்காமம் களவினிற்கழித்து ஒழுகுவாளாயினள்.

அந்நாட்களில் ஒருநாள், பதுமையின்தோழி உதயணனைநோக்கி, "மறையோம்பாள! கேட்பாயாக; பிரமதேவன் கொன்றைக்காயைப் பெருக்கியும் பயற்றுநெற்றைச் சிறுக்கியும் கரும்பைச் சுருக்கியும் மூங்கிலை மிகநீட்டியும் இசைவிலவாகப் படைத்தான்; அதுபோல யானையை வணக்கும் யாழில்வல்ல உதயணனிலும் மிக்க உன்னுடைய இயல்பை முன்னம் உணரேமாயினேம்; இனி உன்மாணுக்கியராவேம்" என்றுசொல்லி, "இதைச் செவ்விதாக்கித் தரவேண்டும்" என்று யாழொன்றை அவன்கையிற்கொடுத்தனள். அவன், "இது கெட்டுப்போன மரத்தாற் செய்யப்பட்டது; வாசித்தற்கு உதவாதது" என்று அதைக் கீழேவைத்துவிட்டனன்; பின்பு தருசகன் பதுமைக்கு அன்புடன் அளித்த யாழை அவள்தரவே, அவன், "இந்த யாழ் சிறிதும் குற்றமில்லாததே; ஆனாலும் இதிலுள்ள நரம்புகள் மட்டும் மிகவும் குற்றமுடையன; வேறு நரம்புகளிருந்தால் அவற்றைத்தருக" என்றனன்; அவள் அப்படியே வேறு நரம்புகளை வருவித்தளிப்ப, அவன், "இன்னஇன்ன காரணத்தால் இவைகளும் குற்றமுடையன" என்றுமறுத்தனன்; பின்னும் அவள்புதிய வேறு நரம்புகளை வருவித்தளிப்ப, அவன், "இவைகளும் குற்றமுடையனவே" என்றனன்; அவள், "குற்றங்களை விளங்கச்சொல்லவேண்டும்" என்றுவேண்ட, அவன் அவற்றை ஆதாரத்துடன் விளங்கக் காட்டினன். அவள், "யாழும் பாட்டும் யாவரும் அறிவர்; இவனைப்போல அவற்றின் குணகுற்றங்களை அறிந்து விரித்துரைப்பவர்களைக் கண்டதில்லை" என்று சொல்லிவிட்டு உள்ளேசென்று பொன்னைத் திரித்தாற்போன்ற நரம்புகளைக்கொணர்ந்து கொடுப்ப, அவன் அவற்றைவாங்கி யாழிலமைத்துச் செவ்வைசெய்து கொடுத்தனன். அதனைப் பதுமைபெற்று மகிழ்ந்தாள். பின்பு,

குறிவயிற் புணர்ந்து நெறிவயிற் றிரியார்
வாயினுஞ் செவியினுங் கண்ணினு மூக்கினும்
மேதகு மெய்யினு மோத லின்றி
உண்டுங் கேட்டுங் கண்டு நாறியும்

உற்று மற்றிவை யற்ற மின்றி
ஐம்புல வாயிலுந் தம்புலம் பெருக
வைக றேறு மெய்வகை தெரிவார்
செய்வளைத் தோளியைச் சேர்ந்துநல னுகர்வதோர்
தெய்வங் கொல்லெனத் தெளித லாற்றார்
உருவினு முணர்வினு மொப்போ ரில்லென
வரிவளைத் தோளியொடு வத்தவர் பெருமகன்
ஒழுகினன் (ந.15 : 63-74) ;

இவ்வாறு ஒரு திங்கள் சென்றது.

இப்படியிருக்கையில், பதுமாபதியின் மணத்தை விரும்பி அதற்குரிய பரிசங்களை முன்னேசெல்லவிட்டுக்கொண்டு கேகயதேசத்தரசனாகிய அச்சுவப் பெருமகனென்பவன் ஒருநாள்வந்து தருசகனுக்குத் தன் வரவைத் தெரிவித்தனன். தருசகன் நகரை அலங்கரிப்பித்துத் தன்பரிவாரங்களோடு எதிர்கொண்டு சென்று அளவளாவி அவனை அழைத்து வந்து தன் அரண்மனைசென்று விருந்தளித்து மகிழ்ந்திருந்தனன்.

அப்போது, தருசகனுடைய [1] மேம்பாட்டைப் பொறாதவர்களாகி மிகுந்த பகைமை கொண்டொழுகுபவர்களாகிய விரிசிகன், அரிமான், எலிச்செவி, அடவி, அயோத்தியாசன், மிலேச்சன், சங்கரன், மல்லன், வேசாலியென்னும் அரசர்கள் ஒருங்குகூடிச் சதுரங்கசேனைகளுடன் புறப்பட்டுப் பலபுரிகளாலாகிய ஒருபெருங்கயிற்றால் யானையைப் பிணிப்பதுபோல இராசகிரியநகரத்தைச் சூழ்ந்துகொண்டு பெருமுழக்கத்தைச் செய்தனர். அதனையறிந்த தருசகன் மிகுந்த கவலையுற்றுத் தெருமரலெய்தினன். அதனைக்கேட்ட பதுமை, "இச்செய்தியை மாணகனுக்குச்சொல்" என்று ஐராபதியைவிடுத்தனள். அவள் காமன்கோட்டத்திற்குவந்து நிகழ்ந்தவற்றையும் பதுமையின் கருத்தையும் உதயணனுக்குச்சொல்ல, அவன், "இங்ஙனம் பகைவர் வந்து போர்செய்தற்குச் சூழ்ந்தமை நமக்கு அநுகூலமான காரியம்" என்று எண்ணி ஐராபதியைநோக்கி, "இரண்டுமாதத்திற் பதுமையைவந்து பார்ப்பேன்; இதனை அவளுக்கு நீ சென்றுகூறி அவளைப் பாதுகாத்துக்கொள்" என்று அனுப்பிவிட்டுப் பின், "வாணிகவுருவத்தோடு பகைவருடைய படையுட்சென்று அவரை யழிப்பேம்"

[1] பதுமையைக் கேகயத்தரசனுக்குக் கொடுக்கக் கருதியதுதெரிந்து தருசகன்பால் வேற்றரசர் பகைமைகொண்டார்களென்று வேறு நூல்கள் கூறும்.

என்று நிச்சயித்துக்கொண்டு சின்னச்சோலையென்னும் மலைமேலே றிச் சங்கேதமாகிய ஒரு பண்ணைப்பாடினன்.

கேட்ட அவனுடைய வீரரெல்லோரும் அங்கேவந்து கூடினர்; அவர்களைநோக்கி உதயணன், "இனி எமக்கு யாதொருதீங்குமிலது" என்றெண்ணி, மேலே செய்யவேண்டுவனவற்றை அவர்களுக்குக் கூறி விட்டு, தானுந்தோழர்களும் வாணிகவேடம்பூண்டு வாணிகத்திற் குரிய பலபொருள்களையுஞ்சேகரித்துக் கைக்கொண்டு பகைவருடைய பாடிகளைச் சார்ந்தபொழுது, முன்பு இடபகனால் அனுப்பப்பட்ட இசைச்சன் பல குதிரைகளோடு அங்கே தோன்றினன். தோன்றிய பொழுது வயந்தகனைக் குதிரை வியாபாரிகளுக்குத் தலைவனாக நியமி த்து,அவனுடன் பகைவருடைய பாடிகளிற் புகுந்து அவர்களை நோக்கி உதயணன், "யாம் குதிரைவியாபாரிகள்; பலவருடங்களாக மகதராச னோடு பழக்கமுடையோம்; இப்பொழுது அவன் எம்மிடம் மனவேறு பாடுடையனாதலின், வென்று அவன் நகரத்தை எம்முடைய நகர மாகச் செய்துகொள்ள எண்ணினேம்; நீவிரும் எமக்கு நட்புடை யவர்களாக இருத்தல்வேண்டும்" என்றுசொல்ல, அவர்கள் அங்கீக ரித்து அவனை உடனிருக்கச் செய்தனர்; அப்பால் தோழர்கள் தமக் குரிய இடங்களை யமைத்து அவற்றிலிருப்பவர்களாய்ப் பகைவர்பா லுள்ள எல்லா இரகசியச் செய்திகளையும் கால அடைவில் அறிந்து அப்பகைவர்களை இன்னவகையாக வெல்ல வேண்டுமென்பதைத் தம்முள் நிச்சயித்துக்கொண்டு தாங்கள் யுத்தசன்னத்தர்களாகி வேறுவேறாக விரைவிற்சென்று, "விரிசிகன்வாழ்க" என்று கூறி மல்லன்பாடிகாத்த வீரர்களைக்கொன்று, பகைவர்கள் தம்முள் விரோதங்கொண்டு ஒருவரோடொருவர் போர்செய்வது போலவே தோற்றும்படி அப்படியே போர்செய்து முடிவில் "வத்தவன் வாழ்க" என்றுகூறிப் போர்செய்தார்கள்; அதனைக்கண்ட பகைவர்கள், "நமக்குள் யாரோ விரோதத்தை உண்டாக்குதற்கு இங்ஙனம் போர் செய்கின்றார்கள்; இனி இங்கிருத்தலாகாது; பொழுது விடிவதற்குள் எப்படியேனும் நாம் புறத்தேசென்று விடவேண்டும்" என்று நிச்ச யித்துத் தத்தம் பொருள்கள் பாடிகளில் அங்கங்கே கிடப்ப ஓடிப் போய்த் தமக்கு அரணாகவுள்ள ஒருமலையையடைந்து அங்கே தங்கினர்.

உருமண்ணுவாமுதலியோர் தம்முட்கூடி மகிழ்வுற்று, "பகை வரை வென்றோமாதலால், பதுமையை விரும்பிய உதயணனுக்கு இனி ஆக்கமுண்டு" என்று எண்ணிக்கொண்டு, "தன்றேவி வாசவ

தந்தையையிழந்து தன்வருத்தத்தைத் தீர்த்துக்கொள்ளுதற்கு இந் நாட்டிற்குவந்த உதயணன் தருசகனுடைய பகைவர்போர்செய்தற்கு நகரத்தைச்சூழ்ந்தது தெரிந்து தன் தந்தைக்கும் மகததராசனுக்கும் மிகுந்த நட்புண்டென்பதை அறிந்தோனாதலின், அவனுக்குவந்த துன் பத்தைப் போக்கவேண்டுவது தன்கடமையென்று நினைத்து வலிந்து சென்று போர்செய்து பகைவரைவென்று ஓடச்செய்துவிட்டு அத னையே கையுறையாகக்கொண்டு காணவந்தானென்பதை நீ சென்று சொல்லுக" என்று வயந்தகனை அனுப்பினர். அவன் அச்செய்தியை வீதிதோறும் சொல்லிக்கொண்டே அரசன் மாளிகைக்குச் செல்வா னாயினன். இஃது இவ்வாறாக,

"இந்நகரத்தைச்சூழ்ந்த பகைவரைவெல்லுதற்கு வழி யாது?" என்று கவலையுற்று அத்தாணியிலிருந்த தருசகனுக்கு, உதயணன் பழமையைப் பாராட்டிவந்து துணைவருடன்சென்று போர்செய்து வென்று பகைவரை ஓட்டிவிட்டானென்ற செய்தி எட்டியது. உடனே அவன் எழுந்து வெளியேவந்து, "இச்செய்தியை அறிந்து வந்தோர்களை எனக்கு நேரிற்காட்டவேண்டும்" என்றனன்; எனவே ஏவலாளர் போந்து வயந்தகனை அழைத்துவந்து காட்டினர்; நிகழ்ந்த வற்றை அவன் கூறக்கேட்ட தருசகன், "விறல்வேலுதயணன் இவண் வரப்பெற்றேன்; தவமிகவுடையேன்" என்றும், "கெட்ட காலையும் கேட்டோருவப்ப நட்டோர்க்கு ஆற்றும் நன்னராளனுடைய வரவை எதிர்கொள்ளக்கடவேன்" என்றும் சொல்லி நகரை அலங் கரிப்பித்து எதிர்கொண்டு செல்லும்பொழுது, "உதயணனைத் தெளிந்து அழைத்தல் தீது" என்று சிலர் தடுத்தனர்; தடுக்கவும் அதனை மதியாது தருசகன் அவனைத்தழுவி யழைத்துவந்து மிகவும் பாராட்டித் தனியே வசதி யமைத்து அதில் இருக்கச்செய்து அவ னுக்குப்போர் செய்ததாலுண்டான வருத்தத்தைப் போக்குவானாயி னன்.

இவர்கள் இங்கே இப்படியிருக்கையில், தோற்று ஓடிய அப்பகை யரசர் தம்முள்ளேகூடி ஆராய்ந்து தங்களுள் யாரிடத்தும் பிழைப் பில்லையென்று தெளிந்து, "இனியாரையும் நம்பித்தெளிதலாகாது" என்று நிச்சயித்துக்கொண்டு சூளுறவுசெய்து எல்லோரும் ஒன்று சேர்ந்து பெரும்படைகளோடு வந்து மரங்களை வெட்டிவீழ்த்தியும் விளைந்த நெற்கதிர்களைக் கொளுத்தியும் பிறதீங்குகளைச்செய்தும் நாட் டிற்குப் பெருந்துன்பத்தை விளைவித்தனர். அதனையறிந்த படை யொற்றுளார் விரைந்துவந்து தருசகனுக்குத்தெரிவித்தனர். அவன்

மிக்ககோபங்கொண்டு போர்செய்தற்குத் தானே புறப்பட நிச்சயித்தனன். அதுதெரிந்த உதயணன், "யானே சென்று போர்புரிந்து வென்றுவருவேன்; தன்னுடைய நால்வகைப்படைகளையும் அவற்றிற்குத்தலைவனாக ஒரு வீரனையும் எனக்குத்துணையாக அனுப்புமாறு தருசகனிடம் சொல்லிவா" என்று வயந்தகனை அனுப்பினான். அவன் வந்து சொல்லக்கேட்ட தருசகன், மந்திரிகளுடன் யோசித்துத் தன்னுடைய படைகளையும் வீரர்களையும் அவன்பால் அனுப்பினன்; அதையறிந்த கேகயத்தரசன், "என்னை யனுப்பின் நான் விரைவிற் பகைவரைவென்று வருவேன்" என்று தெரிவிக்க, அவன், "என்னுடைய படைகளுக்குத் தலைவனாகச்சென்று உதயணனுடன்கூடிப் பகைவரோடு போர்செய்துவருக" என்று கேகயத்தரசனை அனுப்பிவிட்டு, "என் தங்கையை விரும்பிவந்த கேகயவரசனும் வருகின்றான்; அவனுக்கு யாதொருதீங்கும் நேராதபடி பாதுகாத்துக்கொள்ளவேண்டுமென்று உதயணனுக்குச்சொல்" என்று வயந்தகனை அனுப்பினன். அவனும் அப்படியேவந்து அதனை உதயணனுக்குக் கூறினன். உதயணன் யானைமீதேறிப் போருக்குப்புறப்பட்டனன். உருமண்ணுவா முதலிய முந்நூற்றுறு வீரர்கள் தமக்குரிய ஊர்திகளில் ஏறி உதயணனைப் புறங்காத்துச் சென்றனர். அக்காலத்தில் தருசகன் வந்து, "கேகயத்தரசனைப் பாதுகாத்துக்கொள்க" என்று மீட்டும் உதயணனுக்கு நேரிற் சொல்லிவிட்டு மீண்டு தன்னிடம் சென்றனன். உதயணன், "சேனையின்நடுவே, கேகயத்தரசனும் உருமண்ணுவாவும் எனக்கு முன்னேசெல்லுக; இன்னார் இன்னார் எனக்குப்பின்னே வருக" என்று கூறுபடுத்தி அமைத்துக்கொண்டு பகைவர் பாசறையை அடைந்தனன். உடனே பகைவரெல்லோரும் தங்களுக்குரிய பெரும்படையோடுவந்து எதிர்த்தார்கள்.

அப்பொழுது இருவகைப்படைகளுக்கும் பெரும்போர் நிகழ்ந்தது. உதயணன் எலிச்செவியரசனுடைய தம்பியேறிய யானையின் மேற்பாய்ந்து அதனைப்பிடித்துக் கச்சால் அவன்தேரிற்கட்டினன். அதனைக்கண்ட உருமண்ணுவா, "நம்முடைய கருத்தை முடித்தற்கு உரிய காலம் இதுதான்" என்று எண்ணிக் கேகயத்தரசனோடு சேர்ந்து எலிச்செவியரசன்படையோடு போர்செய்தற்கு எழுந்தான். உடனே எலிச்செவியரசன் விரைந்துவந்து கேகயத்தரசனுடைய தலையைவெட்டி வீழ்த்திவிட்டுத் தன்தம்பி உதயணனாற் சிறைப்பட்டிருத்தலையறிந்து உருமண்ணுவாவின் யானைமேற் குதித்து, "என்தம்பியை விட்டுவிடும்படி செய்வாயாயின் நீ பிழைப்பாய்" என்று

சொல்ல, அதனைக்கண்ட உதயணன், " தருசகனுக்கும் இவனுக்கும் வேறுபாடில்லை. இவனைப்போற்றுவாயாயின் உன் தம்பியை நீ பெறுவாய்" என்று சொல்லிப் போர்செய்தனன்; அப்பொழுது, வெள்ளத்தால் உப்பணை கரைவதுபோலப் பகைவர்படை உடைந்துபோயிற்று; போகியும் பகைவர் உருமண்ணுவாவைப் பிடித்துக்கொண்டு தம்மிடஞ்சென்று அவனைச் சிறைப்படுத்திவிட்டனர்.

உதயணன், விசயமுரசத்தோடு தோழர்கள் சூழச்சென்று வெற்றிச் செய்தியைத் தருசகனுக்குத் தூதர் மூலமாக அறிவித்தான். தருசகன் புறம்போந்து உதயணனைப் பலமுறை புல்லி, "நிகழ்ந்ததைச் சொல்லவேண்டும்" என்று கேட்க, "கேகயத்தரசன் பகைப்படையின் எழுச்சியையும் அதனால் உண்டாகும் தீங்கையும் நினையாதவனாகி யாம் விலக்கவும் அடங்கிநில்லாமல் விரைந்தோடித் தமரையும் எமரையும் நீங்கிப் போர்செய்து எலிச்செவியரசனுடைய வாளால் வெட்டுண்டு வீரசுவர்க்கமடைந்தான்" என்று கூறினன்; அதுகேட்ட தருசகன்.

"என்கடன் றீரே னாயி னேனவன்
தன்கடன் றீர்ந்து தக்க தாற்றினன்" (ந. 20: 141-2)

என்பதைக்கூறி உள்ளம் நெகிழ்ந்துருகிப் போர்க்களத்தில் ஆராய்ந்தெடுத்து அவனுடம்பைத் தகனஞ்செய்வித்து மற்றக்காரியங்களையும் முடித்துவிட்டு உதயணனுடன் அகநகர்புகுந்தான். புகுந்தபொழுது கண்டோர் மகிழ்ந்து உதயணனைப் பலவாறு வாழ்த்தினார்கள். அங்ஙனம் வாழ்த்திக்கொண்டிருக்கத் தருசகனோடுசேர்ந்து உதயணன் அரண்மனைக்குட் புகுந்தான்.

அப்பொழுது தருசகன், "துரியோதனாதியர் நூற்றுவரைத் தனியேவென்ற பெருவிறல்வாய்ந்த வீமனைப்போலத் தனியேசென்று பகைவரைவென்ற உதயணனுடைய சுற்றத்தாரென்று சொல்லப்படும் அரசர் பழம்பிறப்பில் தவமுடையோர்" என்றெண்ணித் தன் தங்கையாகிய பதுமாபதியை அவனுக்கு மணம்செய்விக்க நினைந்து அச்செய்தியை அவளிடத்தும் உதயணனிடத்தும் சொல்லிவரும்படி முதுமகனாகிய அமைச்சனொருவனை அனுப்ப, அவன்சென்று தனியேயிருக்கும் பதுமையைக்கண்டு, "நம்முடைய பகைவரைவென்றவனும் யானையை வணக்கும் வீணைவித்தகனுமாகிய உதயணனுக்கு உன்னை மணஞ்செய்விக்கத் தானெண்ணியிருப்பதாக அரசன் உனக்குத் தெரிவிக்கச்சொன்னான்" என்றுசொல்ல, அவள் புன்முறுவலையுடையவளாகி, "மந்திரநாவின் அந்தணன்கேண்மை இருநிலம்பெறீ

னும் தீர்தலின்று ; ஆதலால், இங்ஙனம்நேரின் யான் உயிருடன் வாழேன்" என்ற உறுதியுடன் பேசாமலிருந்தாள்.

அப்பால், அவ்வமைச்சன் உதயணனையடைந்து அரசன் கருதியதைச்சொல்ல, உதயணன் நெடுநேரம் யோசித்துக்கொண்டிருந்து பின்பு, "யான் குறைகொள்ளுங் காரியத்தை அவனே குறைகோடல் என் தவத்தின் விளைவு" என உவந்தவுள்ளமொடு தன் மகிழ்வை வெளிப்படுத்தாதவனாகி, "வாசவதத்தை தீப்பட்டமையால் மிக்க கவலையுடன் என்னுடைய அரசாட்சியைத் துறந்துவிட்டு அவளையும் யூகியையும் இழந்தபின் வாழ்வதனால் உளதாகும் பயன் யாதென்று எண்ணினேன் ; எனக்கு நீ சொல்லிய காரியத்தைச் செய்தலில் விருப்பமில்லை" என்று மறுத்தான். கேட்ட அவன், "நீ கூறுஞ் சொல் குடிப்பிறந்தோர்க்கு ஒத்ததன்று" என்று வணங்கிநின்று, "மத்தயானையை வணக்கும் நல்யாழ் வித்தகவீர ! இவ்வேண்டுகோளை நிறைவேற்றவேண்டும்" என்று மீட்டும் இரப்ப, உதயணன், "தருசகனும் நீயும் மிக வற்புறுத்துதலால் நான் செய்வதற்கு யாது தடை உளது ?" என்று கூறினன் ; அவ்வமைச்சன் மகிழ்ந்து மீண்டு சென்றான்.

சென்ற அமைச்சன், நிகழ்ந்தவற்றைத் தருசகனுக்குச் சொல்ல அவன் கேட்டு மகிழ்ந்தனன். இஃது இவ்வாறாக,

"மாடத்திலொடுங்கியிருக்கும் மாணகனே நாமென்பதைப் பதுமாபதி அறியாளாதலின், நம்மை மணத்தற்கு உடன்படாள் ; ஆதலால், அவனே நாமென்பதை முதலில் அவளுக்கு ஏதேனும் ஒருவாற்றால் தெரிவிக்கவேண்டும் ; அதற்கு உபாயம் யாது ?" என்பதை நினைந்த உதயணன் வயந்தகனை அழைத்து, "என்னுடைய உயிர்த்தோழனாகிய இசைச்சனென்பவன் இருமுதுகுரவரையும்இழந்தோன். அவனுக்கு ஓரந்தணக்கன்னியை மணம்புரிவித்த பின்பே என்னுடைய மணத்தைக்குறித்து நினைத்தல்வேண்டு மென்பதை என் வார்த்தையாகத் தருசகனிடஞ்சொல்லி அதனை முடித்துக் கொண்டுவருதல் உனது கடமையாகும்" என்று சொல்லியனுப்ப, வயந்தகன் சென்று தருசகனுக்கு உதயணனுடைய கருத்தை முறையாகத்தெரிவித்தனன்.

தருசகன், "பதுமையின் பார்ப்பனத்தோழியாகிய யாப்பியாயினியென்னும் கன்னி, ஒழுக்கத்தினும் குலத்தினும் விழுப்பமிக்கவளாதலால், அவளை இசைச்சனுக்கு மணஞ்செய்வித்தல் நலமென்பதை உதயணனுக்குத் தெரிவித்திடுக" என்று சொல்லியனுப்பினன்.

அதனை வயந்தகன்வந்து உதயணனுக்குத் தெரிவித்தான். தோழர்கள் கேட்டு மகிழ்ந்தார்கள். பின்பு அம்மணத்திற்குரிய நாள் குறிப்பிடப் பட்டது. அதனையறிந்த தருசகன், "பதுமையை உதயணனுக்கும் யாப்பியாயினியை அவன் தோழன் இசைச்சனுக்கும் மணஞ்செய் விக்க நிச்சயித்திருத்தலையும் யாப்பியாயினியின் மணத்தை முன்ன தாகவே நிகழ்த்தவேண்டுமென்பதையும் தன்னுடைய தாய்க்குத்தெரி வித்துத் தாயின் அருள்வகையறிந்து வம்மின்" என்று தம்மியல் வழாப் பெருமூதாளரை விடுத்தனன். அவர்கள் சென்று சொல்லக் கேட்ட தாய் உண்மலி உவகையளாய் யாப்பியாயினி அணிந்து கொள்ளுதற்கேற்ற ஆபரணங்களைக் கொடுத்தனுப்பினள்.

அச்செய்தியைக்கேட்ட பதுமை, "மாணகனைப் பிரிந்த என்னு டைய பெருந்துயரத்தை நீக்கிக்கொள்ளுதற்குப் பெருந்துணையாக இருந்த யாப்பியாயினிக்கு நீங்குதிறனுண்டெனின் என் உயிரைத் தாங்கும் வழியையறியேன்; விலக்குதலும் இயல்பன்று; என்செய் கேன்" என்று நினைத்து ஆடை அணிகலம் மாலை முதலியவற்றை யாப்பியாயினிக்கு அன்புடன் அளித்து, "வதுவை விசேடத்தால் என்னை மறந்தொழியாமல் விரைந்துவா" என்று சொல்லி அவளைத் தழுவித் தன்னுடைய கவலையைப் புலப்படுத்தாமல் நற்றாய் செய்தற் குரிய பரிசுகளையெல்லாம் அவளுக்குச்செய்து தன்னுடைய உழைக் கலங்களையும் சிறந்த சிவிகையொன்றனையும் அளித்தனள்.

தருசகன், பதுமையின் பெருந்தகைமையை நினைந்து மகிழ்ந்த தன்றி யாப்பியாயினியின் வதுவைச்செய்தியை நகரத்தாரெல்லா ரும் அறியும்படி செய்வித்து மணத்திற்கு வேண்டியவற்றை மிகச் செவ்வையாக அமைப்பித்தனன். உரியநாளில் வதுவைமண்ட பத்தில் இசைச்சனும் யாப்பியாயினியும் ஆசனத்திலிருந்தனர். வதுவைச்சடங்கு நடைபெற்றது. அச்சமயத்தில் உதயணன், அரு கேயிருந்து இசைச்சனைநோக்கி, "நாம் மகதத்திற்கு வந்தது, முதன் மையான கோசம்பிநகரத்தையும் யமுனையாற்றையும் பிறவளங்களை யும் யாப்பியாயினி கண்டு மகிழ்ந்து உறைவதற்கு ஏதுவாயிற்று" என்று அவள் காதிற்படுப்படி கூறினன். கேட்ட அவள், "இக்குரல் மாணகன்குரலாக இருக்கின்றதே" என்று கடைக்கண்ணால் அவ னைப்பார்த்து ஐயம்ஒழிந்தும், "உதயணனே பார்ப்பனவுருவொடு பது மாபதியின் யாப்புடைநெஞ்சம் அழித்தனன்; ஒத்தவிடத்தன்றி ஒவ் வாத இடத்தில் மனஞ்செல்லாதென்பது உண்மையே" என்று நினை ந்து, "இச்செய்தியை விரைவில் அவளுக்குத்தெரிவிக்கவேண்

டும்" என்னும் எண்ணத்தோடு சமயம் நோக்கிக்கொண்டே யிருந்தனள்; வதுவைக்குரிய ஏழுநாட்களும் சென்றன. செல்லவே மணக்கோலத்தோடு தன்னைக்காணவரும்படி பதுமை சொல்லிவிடுத்தபடியே சிவிகையில் யாப்பியாயினிசென்று அவளைக்கண்டு அளவளாவிய பின், "மாணகனாகவந்து உன்னுடைய உள்ளத்தைக் கவர்ந்தவன் உதயணனே; இனி வருந்துதலையொழிக" என்று துணிந்துகூறினள்.

பதுமை, "உன்னைமணந்த அந்தணன் உதயணனுடைய தோழனென்பதை முன்னமே நான் கேட்டறிந்திருப்பதுண்டு; மாணகனுக்கு உரிமைபூண்ட என்நிறை வடுப்படாதிருத்தல் வேண்டுமன்றோ? ஆராய்ந்து பார்" என்று சொற்றனள். யாப்பியாயினி பதுமையின் கருத்தை உதயணனுக்குத்தெரிவிக்க, அவன் தன்வடிவை ஒரு படத்திலெழுதி, "ஓரிரவிற் கன்னிமாடத்தில் என்னுடனிருக்கும்பொழுது கோட்டானது குரலைக்கேட்டு மிகவும் அஞ்சினள்; அந்த அடையாளத்தையுஞ்சொல்" என்று சொல்லித் தன்படத்தைக் கொடுத்தனுப்பினன்; படத்தில் உதயணன் வடிவைக்கண்ட பதுமை, "மாணகன் வடிவத்திற்கும் இதற்கும் சிறிதும் வேற்றுமையில்லையாயினும் இதனை நன்கு ஆராய்ந்தே தெளியவேண்டும்; இதனைத் தொடுதலும் தவறு" என்று சொல்லி அதனைக் கையில்வாங்காளாயினள்; உடனே நள்ளிரவிற் கோட்டானுடைய ஒலிக்கு அஞ்சிய அடையாளத்தை அவள் சொற்றனள்; சொல்லவே பதுமை, தன் கணவனுயிரைக் கூற்றுவன்கையினின்றும் மீட்ட சாவித்திரியைப்போல மிக்க இன்பமடைந்து தோழியைக் கையால்தட்டி அப்படத்தைத் தாங்கமுடியாதவிருப்பத்தோடு மார்பில் ஒடுக்கி அதன்தோளைத் தீண்டிப் புன்முறுவல்செய்துகொண்டு, "நெஞ்சங்கொண்ட நெடுமொழியாள! வஞ்சவுருவொடு வலைப்படுத்தனை" என்று பாராட்டுவாளாய்க் கவலையொழிந்திருந்தனள்.

சிலநாள்சென்றபின், அரசன் கட்டளைப்படி சேனைக்கணியால் வதுவைக்குரிய நல்லமுகூர்த்தம் வைக்கப்பெற்றது; நகரம் அலங்கரிக்கப்பட்டது. பதுமைக்கும் உதயணனுக்கும் விதிப்படி மணம் நடைபெற்றது. உதயணன், "மிகவிரைந்து உருமண்ணுவாவைச் சிறையினின்றும் மீட்டுவரச் செய்யவேண்டும்" என்று தருசகனுக்குத் தெரிவித்தனன்; அவன் அதனை அங்கீகரித்ததன்றி, "உதயணன், வலிந்துவந்து நம்முடைய பகைவரைவென்ற நட்பாளனாக இருப்பதல்லாமற் சுற்றமாகவுமிருத்தலின், அவன் பகைவனாகிய ஆருணியைவென்று வத்தநாட்டையும் கௌசாம்பிநகரையும், அவனுக்-

குரியனவாகச் செய்யவேண்டுவது நம்முடைய கடப்பாடு" என்று எண்ணினன்; எண்ணி, தாமே சென்று தம்வினைமுடிக்கும் மந்திரிகளுட் சிறந்த வருடகாரன், தாரகாரி, தருமதத்தன், சத்தியகாயன் முதலிய மந்திரிகளையும்,

இருநா றானையு மிராயிரங் குதிரையும்
அறுநூற் றிரட்டி யடன்மணித் தேரும்
அறுபதி னாயிர மெறிபடை மள்ளரும்
திருமணிச் சிவிகையும் பொருவினைப் படாகையும்
செங்காற் பாண்டிய நன்று பூண்ட
பைம்பொ னூதிர்யும் பவழக் கட்டிலும்
படாஅக் கொட்டிலும் பண்டிபண் டாரமும்
கடாஅக் களியானைக் காவலற் கியைந்த
பணைத்தோட் சிலசொற் பதுமா நங்கைக்கு
அமைக்கப் பட்ட வகன்பரி யாளமும்
அன்னவை யெல்லா மந்நிலை நல்கி (ந. 23: 30- 40)

"பின்னும் வேண்டுவனவற்றை அப்பொழுது அப்பொழுது வரவிடுவேன்" என்று மந்திரிகளிடஞ் சொன்னதன்றி, "உதயணனுக்கு ஆவனவற்றை அறிந்து அவ்வப்பொழுதே செய்துவரவேண்டுவது உம்முடைய கடமை" என்று ஒவ்வொரு மந்திரிக்கும் தனித்தனியே கூறினன்;

"வடுத்தொழி லகன்ற வருட கார!
உடற்றுநர்க் கடந்த வுதயண குமரன்
அடைக்கல நினக்கு" (ந. 23: 47-9)

என்று ஓம்படுத்து மந்திரிமாரைநோக்கி, "ஒற்றினும் உபாயத்தானும் ஆருணியைத் தொலைத்துவிட்டே நீர்பெயர்ந்துவரல்வேண்டும்" என்றுசொல்ல, எல்லோரும் கோசம்பி நகரத்தை நோக்கிப் படையுடன் புறப்பட்டார்கள்.

புறப்படவே தருசகன் பின்னும்தொடர்ந்துவந்து உதயணனைக் கண்டு அன்புமிக்கசொற்கள் பலவற்றைச் சொன்னதன்றி, "வந்து உதவிசெய்ய வேண்டுமென்பதைப் பிரச்சோதனனுக்குத் தெரிவித்தால் அவனும் நமக்கு அநுகூலஞ் செய்பவனாவான்; வேண்டுமாயின் யானும் வருவேன்; தெரிவித்தால் அன்புடைய பிறஅரசர்களும் வருவார்கள். எல்லாவற்றையும் ஆராய்ந்துசெய்க; உனக்கு வெற்றியுண்டாகுக" என்று கூறினன். உதயணன் தருசகனைநோக்கி, "அடையக்கூடிய இன்பங்களை இன்பமாக யான் எண்ணுவது உருமண்ணுவாவை

அடைந்த பின்புதான்; ஆதலால், அவனைப் பதினைந்து தினங்களில் சிறையினின்றும் விடுவித்து அனுப்புவது உனக்குக் கடனாகும்'' என்பதைத் தெரிவித்தனன். தருசகன், உருமண்ணுவாவின் பெருமையையும் அவனிடத்து உதயணனுக்குள்ள பேரன்பையும்அறிந்து மனமுவந்து, "அப்படியே செய்வேன்" என்று சொல்லி விடைபெற்றுத் தன்னகர்க்குச் சென்றான். சென்றபின்பு,

அடற்பே ரியானையு மலங்குமயிர்ப் புரவியும்
படைக்கூழ்ப் பண்டியும் பள்ளி வையமும்
நடைத்தே ரொழுக்கு நற்கோட் டேர்தியும்
இடைப்படப் பிறவு மியைந்தகம் பெய்து
கொடிப்படை போக்கிப் படிப்படை நிறீஇப்
புடைப்படை புணர்த்து (௩. 24: 35-40)

உதயணன் செல்லுதலையறிந்த மன்னர்கள், "உதயணன் போரை மேற்கொண்டு செல்லுகின்றான்; இச்செலவு யார்மேலதோ? அஞ்சற்பாலது இது" என்று தம்முட் கவலையுற்றார்கள்.

அவன் அங்ஙனஞ்சென்று ஓரிடத்தில் தங்கியிருந்தபொழுது, "பாஞ்சாலனோடு போர்செய்தற்கு விரைவில் எழவேண்டும்" என்று யூகி தனக்கு இரகசியமாக எழுதிய ஓலையைப் பிரித்துப் படித்துப் பார்த்து அச்செய்தியை உட்கொண்டு அதனை மறைத்துவைத்து விட்டு வயந்தகன் அங்கேவந்த பிங்கலகடகரைக்கண்டு அவர்கள் கூறியவற்றை அறிந்து உதயணனை அடைந்து, "உன்னுடைய தம்பிகளாகிய பிங்கலகடகர் முன்னம் கோசம்பிநகரத்தைப் பாதுகாத்துக் கொண்டிருந்தனர்; பின்பு, அந்நகரத்தைச் சூழ்ந்துவந்து முற்றிய பாஞ்சாலராசனுடைய போருக்கு ஆற்றாராகித் தோல்வியுற்று யமுனையாற்றில் வீழ்தற்குக் குதிரையூர்ந்து விரைந்து செல்லுகையில் இடையே அரணுள்ளதும் பெண்கள்மட்டும் உறைவதுமாகிய நகரமொன்றைக் கண்ணுற்று அதிற் பன்னிரண்டு திங்கள் தங்கியிருந்து பாஞ்சாலராசனுடைய ஆட்சியைப் பொறாதவர்களாகித் தங்குறையை உனக்குத்தெரிவித்தற்கு இங்கே வந்திருக்கின்றனர்'' என்றுசொல்ல, அவன் மிகுந்த விருப்பமுற்று அவர்களைப்பார்க்க விரும்பிய காலத்தில், பிங்கலகடகர் பன்னீராயிரம் வீரர்களோடு அறக்காலைக்கு அமைக்கப்பட்ட ஏனைக்கொற்றத்தானையோடு வந்து பணிந்தனர். பணியவே உதயணன் அவர்களைப்புல்லிப் பாராட்டினன். அவர்கள்,"உனக்கு வழிபாடுசெய்தலைத் தவிர்ந்ததன்றிப் பெற்றதாய்க்குப் பணி செய்துகொண்டிருத்தலையுமொழிந்தேம்; நல்வினையில்லேம்"

என்று கலங்கிக் கண்ணீர் ஆறுகப்பெருகப் பூமியில் தலைபடும்படி வணங்கினர்.

உதயணன் அவர்களை எடுத்துத்தழுவி, "மந்திரிகளுடைய எண்ணத்தின் வழியே நடவாத புல்லறிவினையுடையேன் செய்த குற்றத்தின் பயன்இது; நீங்கள் இனி வருந்தவேண்டாம்" என்று இனிய மொழிகளைக்கூறி, "உங்களை அடைந்தமையால் இனிப்பகைவர் எரிவாய்ப்பட்ட பஞ்சி போல்வார். யான் யாதொருகுறையுமில்லேன்" என்றும், "இனி யூகியையும் வாசவதத்தையையும் யான் எளிதில் அடைவேன்; என்னுடைய தவம் உம்மைத்தந்து எல்லாத் துயரையும் நீக்கியது" என்றும் சொல்லி இன்புற்று அவர்களுடைய கண்ணீரைத் துடைத்துவிட்டு மந்திரிகளை நோக்கி, "பாஞ்சாலராசனை வெல்லுதற்குரிய ஆலோசனையைச் செய்யவேண்டும்" என்றனன். உடனே வருடகாரன், "நாம் மேல் நடத்தவேண்டுவது இன்னது" என்பதை விளங்கக்கூறிப் பாஞ்சாலராசனிடத்துள்ள நிகழ்ச்சிகளை அறிந்துவரும்படி ஒற்றர்களைக் கோசம்பிநகருக்கனுப்பினன். சென்ற ஒற்றர் அங்கே நிகழ்ந்தவற்றை அறிந்துவந்து விளங்கக்கூறினர்.

அப்பால், வருடகாரனும் பிறரும் இடையிடையே செய்த முயற்சிகள் பல; இருதிறத்தாரும் போர்செய்யத்தொடங்கினர்; பெரும் போர் நிகழ்ந்தது; இறந்தோர் பலர். பின்பு பாஞ்சாலராசன் சேனைகளுடன் போர்செய்யப்புறப்பட்டனன்; தீயநிமித்தங்கள் பல நிகழ்ந்தன; பூரணகுண்டலனென்னும் மந்திரி, "இப்பொழுது யாம் போருக்குச் செல்லுதல் முறையன்று; திரும்பிவிடுதலே நலம்" என்று தடுப்ப, ஆருணி கேளானாகிச் சென்று போர்செய்யத்தொடங்கினன். அப்பொழுது,

> சிலைத்தன தூசி; மலைத்தன யானை;
> ஆர்த்தனர் மறவர்; தூர்த்தனர் பல்கணை;
> விலங்கின வொள்வாள்; இலங்கின குந்தம்;
> விட்டன தோமரம்; பட்டன பாய்மா;
> துணிந்தன தடக்கை; குனிந்தன குஞ்சரம்;
> அற்றன பைந்தலை; இற்றன பல்கொடி;
> சோர்ந்தன பல்குடர்; வார்ந்தன குருதி;
> குழிந்தது போர்க்களம்; எழுந்தது செந்துகள்;
> அழிந்தன பூழி; விழுந்தனர் மேலோர்;
> இப்படி நிகழ்ந்த காலை (௩. 27 : 107 - 16)

ஆருணியைச்சார்ந்த வீரர்கள்பலர் உதயணனுடைய வீரர்களாற் கொல்லப் பட்டனர். கார்த்தவீரியார்ச்சுனனைக்கொன்ற பரசுராம

னைப்போலவே பாஞ்சாலராசனை உதயணன் வெட்டிவீழ்த்தினன். அப்பால், "அரச உரிமையை உதயணன் பெற்றான்" என்று நாட்டினரும் நகரத்தினரும் அறிந்து கொள்ளும்படி யானையின்மேல் வெற்றிமுரசத்தை ஏற்றி அறையச் செய்தனர். உதயணன் பின்பு உரியவர்களைக்கொண்டு பாஞ்சாலராசனுக்கு ஈமக்கடனைக் கழிப்பித்தனன். கோட்டைவாயிலையடைந்து கதவையடைத்துக்கொண்டு உள்ளேயிருக்கும் நகரத்தார்களை வருடகாரன், நோக்கி, "நீங்கள் சிறிதும் இனி அஞ்சவேண்டாம்; உங்கள் தலைவனாகிய உதயணன் பாஞ்சாலராசனைக் கொன்றுவிட்டான்; ஆதலால், கதவைத்திறந்திடுமின்" என்று கூறினன். கேட்ட நகரத்தார், "எம்முடைய பழைய அரசனாகிய உதயணனுடைய முத்திரையமைந்த ஓலையைக்கண்டாலன்றி யாம் கதவைத்திறவேம்" என்று மறுத்தனர்; உடனே அவர்களுடைய சந்தேகம் நீங்கும்படி, "உதயணனுடைய மந்திரியாகிய இடவகன் வந்திருக்கின்றான்" என்பதைக்கூறினன்; கூறவே அவர்கள் மிகுந்த மகிழ்ச்சியுற்றுக் கதவைத்திறந்து கொடிமுதலியவற்றை உயர்த்திக்கொண்டு எதிர்கொண்டார்கள். அங்கேநின்ற பாஞ்சாலராசனுடைய நண்பனாகிய கும்பனென்பவனைக்கண்டு அவனைக் கொன்று பின்னும், "பகைவனுடைய தமர் இங்கு உளராயின், அவர்களையும் கொல்வேம்" என்று சொல்லிக்கொண்டு ஆயுதபாணிகளாகப் பலவீரர்கள் பாதுகாக்கச் சென்று வீதிதோறும், "உதயணன் வாழ்க" என்று சொல்லுவாராகி யாவரும் அறியும்படி யானையின் மேற் பறையையேற்றிவிடுத்தனர்.

---

நான்காவது

# வத்தவ காண்டம்.



அப்பால், உதயணன் வருடகாரனைத்தழுவி மிகவும் பாராட்டித் தன்னுடைய யானையையும் ஆபரணங்களையும் அவனுக்குக் கொடுத்தனன்; பின்பு தருமதத்தனைநோக்கி, "பாஞ்சாலராசனை வென்றது உன்னால்தான்" என்று முகமன்கூறி, "அவனைவென்றதற்கு இவை அறிகுறிகள்" என்று நெய்த்தோர்ப்பட்டிகையையும் பத்து ஊர்களையும் அவனுக்கு அளித்தனன். நல்லவேளையிற் புறப்பட்டு யானையின்மேல் ஏறிக்கொண்டு தோழர்கள்சூழ வெண்கொற்றக் குடை கவிப்பக் கவரிகள் இரட்டச் சங்கமும் முரசமும் இயம்ப மாசனங்களின் வாழ்த்தொலிமிக, "நெடுந்தகாய்! நெடுங்காலம் உலகத்தைப் பாதுகாத்து வாழ்வாயாக" என்று பலர் கோபுரந்தோறும் நின்று பூமழை பொழியாநிற்ப உதயணன் அரண்மனையை யடைந்தான். பின்னர், ஆருணியோடு அழற்பள்ளியையடையாத அவன் மனைவியர்களுக்கு வேண்டும்பொன்னையளித்து வேறிடஞ்சென்றிருக்கும்படி செய்வித்தான்; "இறந்தோர்களுக்குரிய கடன்களைக் கழிப்பீர்களாக" என்று மற்றவர்களுக்கு வேண்டியவற்றை யளித்தான். இப்படியே செய்யவேண்டிய பலவற்றையும் செய்துமுடித்து முதன்மையான வேறோர் அரண்மனையைத் தனக்கு இயற்றுவித்துத் தனக்குரியவர்களான அமைச்சர்கள் நண்பர்கள் முதலியவர்களை முறையே உடன் அமைத்துக்கொண்டு எல்லா அங்கங்களையும் நிரப்பி அரண்மனையிலுள்ள பேரத்தாணியினிடையே பகைவனை வென்ற மகிழ்ச்சியுடன் வீற்றிருந்தான்.

ஆருணியரசனால் இடையே அமைக்கப்பட்ட புதிய கொடுங்கோல்முறைகளையெல்லாம் பின்பு அவன் அடியோடே அகற்றிவிட்டுச் செங்கோற்செல்வம் சிறப்பச்செய்து பழமையாகவுள்ள குடிகளை நகரிலும் நாட்டிலும் எடுப்பித்தான்; தேவாலயங்கள், அருந்தவர்பள்ளி, அந்தணரிருக்கை, தோட்டம், வாவி, ஆவணக்கடை, நாற்சந்தி, முச்சந்தி, தெரு முதலியவற்றைப் புதுப்பித்து, "தமக்குரியவற்றை இடையேயிழந்த மாந்தர் அவற்றை அடைவாராக" என்று கட்டளையிட்டான். "வறுமையையுடையீரும் ஊக்கமுதலியவற்றை யிழந்து மூப்பால் முடங்கினீரும் கணவர்கள் கைவிடுதலால் வாழ்வையிழந்து

வருந்தும் பெண்டிரும் உறுப்புக்குறைந்தீரும் பிறரும் வந்து வேண்டியவற்றை வேண்டியவாறே பெற்று வாழக்கடவீர்'' என்று மன்றந்தோறும் வீதிதோறும் முரசறைவித்துச்சாற்றி அவரவர்களுக்கு வேண்டியவற்றை உபகரிக்கச்செய்தான்.

போரின் வாழ்நரும் புலத்தின் வாழ்நரும்
தாரின் வாழ்நருந் தவாஅப் பண்டத்துப்
பயத்தின் வாழ்நரும் படியிற் றிரியா
ஓத்தின் வாழ்நரு மொழுக்கின் வாழ்நரும்
யாத்த சிற்பக் கயிற்றின் வாழ்நரும்
உயர்ந்தோர் தலையா விழிந்தோ ரீறு (சு. 2 : 47-52)

யாவர்க்கும் சிறிதேனும் துன்பம் உண்டாகாதபடி செய்வித்தான். அறம் ஓங்கிற்று; பாவம் நீங்கிற்று. கூற்று அகாலத்தில் வந்து உயிர்களைக் கவர்ந்து செல்லுதலைத் தவிர்ந்தது. நானிலங்களும் செழித்தன. தம்பியர், பகைவருடைய ஊர்தோறுஞ்சென்று அவர்களை அடக்கி வருவாராயினர். தருசகனுடைய சேனையோடுவந்து உதவிபுரிந்த வீரர்களுக்கு வேண்டியவற்றை உதயணன் அளித்து அனுப்பினன். அருவிலைநன்கலம் முதலியவற்றைத் தமர்முகமாக அவனுக்கு விடுத்தனன்.

பட்டமெய்திய பதுமாபதியுடன் இவ்வாறு உதயணன் இன்புறுவானுகிச் செங்கதிர்ச்செல்வனுடைய எழுச்சியும் பாடும் திங்களும் நாளும் தெளிதலின்றி மகிழ்வெய்திச் செங்கோலோச்சித் தன்னுடைய நாட்டை வளமுறச்செய்தனன்.

உதயணன் தன்நாட்டிலுள்ளாருடைய துன்பத்தை இங்ஙனம் தீர்த்தபின், "செய்யவேண்டுவது யாது?" என்று ஆராய்ந்து உஞ்சையிலிருந்து தன்னை ஏற்றிவந்த பிடிவீழ்ந்த இடத்தை விளங்கச்சொல்லி, "அதன் என்பு தோல் முதலியவைகளை விரைவிற் கொண்டுவாருங்கள்'' என்று சிலரை அனுப்பிவிட்டு அந்தப்பக்கத்துள்ள வேட்டுவத் தலைவர்களையும் குறும்பர்களையும் அழைத்து, "எம்மைச் சுமந்து வந்து காட்டில்விழுந்த பிடிசெய்த பேருதவிக்கு யாம்செய்யும் கைம்மாறு யாதுமில்லை. ஆனாலும் அதனை மறவாமலிருத்தல் மாட்சிமையுடையதாதலால், அது வீழ்ந்த இடத்தில் ஒருமாடமெடுப்பித்து அதில் அதன் உருவத்தை அமைப்பித்துக் காலைமாலைகளில் அதனை வழிபடல்வேண்டும்; அவ்வழியே செல்லுபவர்களுக்குப் பசிதீரும்படி அடிசிற்சாலையமைத்து உணவளித்தல்வேண்டும்; தாகத்தைத் தீர்ப்பதற்குத் தண்ணீர்ப்பந்தர்கள் வைத்து உண்ணீரளித்தல் வேண்

டும்; யாராயிருப்பினும் துன்பமுற்றவர்களுக்கு உரிய நுகர்பொருள்களைக் கொடுத்தல்வேண்டும்" என்றுசொல்லி அவற்றிற்கு வேண்டிய திரவியங்களை அவர்களுக்கு அளித்து, அவர்களுடன் அம்மாடம் எடுப்பித்தற்குரிய தச்சர் முதலியோர்களையும் அதன்வடிவம் அமைப்போர்களையும் அனுப்பினன்.

அதன்பின், முற்கூறியவாறு அப்பிடியின் என்பு முதலியவற்றைக் கொணர்ந்தவர்களுக்கு வேண்டியவற்றை அளித்து அனுப்பிவிட்டு, அவற்றைக் கௌசாம்பியினிடையே ஓரிடத்திற் சேமித்து வைத்து அங்கே ஒரு கொற்றவாயிலையும் அதன் முன்னே மிகவுயர்ந்த மாடமொன்றையும் இயற்றுவித்து அவ்வாயிலுக்கு அப்பிடியின் பெயரை வைத்து அம்மாடத்தில் அப்பிடியின் உருவத்தை அமைப்பித்து அவ்வடிவத்தை வழிபடுதற்குரியவர்களையும் பிறரையும் நியமித்து அடிசிற்சாலைகளையும் தண்ணீர்ப்பந்தர்களையும் அம்மாடத்தின்பக்கத்தே அமைத்து அதனைச்சூழக் கூத்தியரிருக்கையையும் தருமசரிதங்களைப் படிப்போர்களுடைய இருப்பிடங்களையும் கட்டி மாதந்தோறும் விழாக்கொள்ளவேண்டுமென்று கட்டளையிட்டு வேண்டிய பொருள்களையும் கொடுத்தனன்.

இங்ஙனம் உதயணன் தன்னுடைய கடப்பாடுகளை நிறைவேற்றி மகிழ்வுற்றிருக்கும்பொழுது, உஞ்சைநகரத்திலுள்ள பிரமசாரியும் வேதமுதலியவற்றை நன்கு ஓதியுணர்ந்தவனும் பேரியாழ் முதலிய யாழ்வகையையும் பிறநூல்களையும் நன்றாக அறிந்தவனுமாகிய [1] அருஞ்சுகனென்னும் அந்தணனொருவன் கௌசாம்பியிலுள்ள தன் உறவினரைக் காணுதற்பொருட்டுப் புறப்பட்டுவந்தான்; இடைவழியில் நீருண்ணுதற்கெழுந்த யானைக்கூட்டத்தினிடையே அவன் அகப்பட்டு அச்சமுற்று, அங்கேநின்ற மிகவுயர்ந்த வேங்கைமரமொன்றின் கிளைமீதேறி நின்று நாற்புறத்தையும் நோக்கினன். அப்பொழுது, கோடபதியென்னும் யாழ் தலைவனைப்பிரிந்த கற்புடையாள்போல அழகுகெட்டு நரம்புகளை மூங்கில் வருடும்பொழுது 'தாம் தீம்' என்னும் முழக்கமுடையதாகி அங்கே மாட்டிக்கொண்டு கிடப்பதைக் கண்டான். அதன் இனிய ஓசையைக்கேட்டு யானைகள்கோபம் நீங்கிச் சாந்தமுற்றுச் சென்றதையறிந்து அவன் அதன் சமீபத்திற் சென்று, "இது கின்னரரால் இடப்பட்டதாயினும் இயக்கர்கள் மெய்ம்மறந்து போகட்டதாயினும் தேவருலகத்தினின்றும் வீழ்ந்ததாயினும் வேறு யாதாயினு மாகுக" என்று நினைத்துப் பல மலர்

1 அரிஞ்சயனென்று இப்பெயர் வேறுநூல்களிற் காணப்படுகின்றது.

களால் அருச்சித்து அதனைக் கையில் எடுத்துக்கொண்டு கௌசாம்பி யையடைந்து உதயணனுடைய அரண்மனையின் அயலிடத்தேயுள்ள தன்சுற்றத்தாரைச்சார்ந்து அவர்களோடு மகிழ்வுற்றிருக்கையில் மாலைக்காலம் வந்தது ; அக்காலத்தில் அவன் அதனை வாசித்தான்.

வாசிக்கையில், மேல்மாடத்திற் சாளரத்தைத் திறந்துவைத் துக்கொண்டு பதுமாபதியோடு அளவளாவி மகிழ்வுற்றிருந்த உதய ணன் அந்த யாழொலியைக் கேட்டு விம்மிதமுற்று ஆராய்ந்து பார்த்து, "இவ்வொலி நம்முடைய யாழின் ஒலியாகும்" என்று தெளிந்து உடனே அதனை வருவிக்க நினைந்து புறத்தே வந்து தன் மெய்காப்பாளரைத் தேடியபொழுது அங்கே விழிப்புடன் படுத்தி ருந்த வயந்தகன் எழுந்து விரைந்துசென்று, "யாது நிகழ்ந்தது?" என்று கேட்டனன். உதயணன், "கோடபதியின்குரல் இங்கே கேட் கப்படுகின்றது ; நீயும் கேட்பாயாக ; விரைந்துசென்று அது வாசிப் பவனை இங்கே அழைத்துவா" என்றனன். உடனே வயந்தகன் மாடத்தினின்றும் கீழேயிறங்கி அவ்வொலிதோன்றிய எதிர்வீட்டை யடைந்து உள்ளேபுகுந்து யாழ் வாசிப்பவனை நோக்கி, "இந்த யாழ் உனக்கு எவ்வாறு கிடைத்தது?" என்றுகேட்க அவன், "உஞ்சையிலிருந்து நான் நருமதையாற்றைக் கடந்துவரும்பொழுது ஒருமலைச்சாரலில் இதனைப் பெற்றேன்" என்று கூறினன். கூறவே வயந்தகன் அந்த யாழுடன் அவனை அழைத்துக் கொண்டுவந்து காட்டி, "நாம் உஞ்சையம்பதியினின்று வருநாளில் நள்ளிருளிற் பத்திராபதி மிசைந்த வேகமாக வருகையில் விந்தமலையின் தென்றிசைச்சாரலில் விழுந்த கோடபதியாகும் இது" என்று கூறினன்.

உடனே உதயணன் தாங்கா உவகையனாகி, "வருக என்னல்லி யாழ் வத்தவனமுதம்" என்று அதனை வாங்கி, "என் உயிர்த்துணை யாகிய இந்த யாழைத் தந்த நீ வேண்டுவனவற்றைக் கூறுவாயாக" என்றுசொல்லி வேண்டிய அருங்கலங்களையும் பெரும்பொருளையும் ஓர் ஊரையும் அருஞ்சுகனுக்குக் கொடுத்து, "நீ இந்நகரத்தே இருக்கவேண்டும்" என்று சொல்லிப் பின்னும் விரும்புவனவற்றை அளித்து அவனை யனுப்பிவிட்டு, உலவாவிருப்பொடு புலர்தலைகாறும் உள்ளியும் உருகியும் அதனைப் புல்லியும் பாராட்டி வாசவதத்தையை நினைந்தே இராப்பொழுதைக் கழித்தனன்.

விடிந்தவுடன் அந்த யாழைப் புதுப்பித்து வாசவதத்தையை நினைந்து, "வாசவதத்தாய்! நீ கற்ற யாழ் இதோ வந்துவிட்டது ; நீ வந்து இதனை வாசித்து மகிழ்வாயாக ; என்னை மறந்தாய்" என்று

அவளை நினைந்து நினைந்து புலம்புவானாகி இழந்த தம்பிகளைப்பெற்றும் கோடபதியையடைந்தும் சிறிதும் மகிழ்வின்றிக் காலங்கழிப்பானாயினன்.

அவன் இங்ஙனம் இருக்கையில் இராசகிரிய நகரத்தில் தருசகன் தான் பாதுகாத்துவைத்திருந்த சங்கமன்னருடைய உரிமைப் பொருள்களை அவர்களிடம் அனுப்பிவிட்டு, "இங்கே யுள்ள அரசர்களைச் சிறையினின்றும் நீக்கிப் பின்பு அனுப்புவேன்; உருமண்ணுவாவைச் சிறையினின்றும் நீக்கி இங்கே விரைவில் அனுப்புக" என்பதைச் சொல்லும்படி தன்னுடைய கருமமாக்களை அப்பகைவர்பால் விடுத்தனன். கேட்ட அவர்கள் மிகமகிழ்ந்து,

"இழிந்த மாக்களொ டின்ப மார்தலின்
உயர்ந்த மாக்களொ டுறுபகை யினிது" (சு. 4 : 21-2)

என்று கூறி மகிழ்ந்து தருசகனைப் புகழ்ந்து உருமண்ணுவாவைச் சிறையினின்றும் நீக்கி அவன்பாலனுப்பினர். உருமண்ணுவா வந்து தருசகனைக்கண்டு எலிச்செவியரசன் தம்பியாகிய சித்திராங்கதனையும் மற்ற அரசர்களையும் சிறையினின்று நீக்கி அவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுத்தனுப்பும்படி செய்தபின்பு, உதயணன்பால் நிகழ்ந்த செய்திகளையெல்லாங்கேட்டு எல்லையற்ற மகிழ்ச்சியோடு அங்கேயிருந்தான்.

யூகிகொடுத்த ஓலையைச் சாதகன் அப்பொழுது கொணர்ந்து உருமண்ணுவாவிடங்கொடுத்தான். அவ்வோலையில், "யாம் எண்ணிய காரியம் இனிது நிறைவேறினமையின், இனி வாசவதத்தையை உதயணன்பால் ஒப்பித்தல் நலம்" என்று எழுதப்பட்டிருந்தது. அதனையறிந்த உருமண்ணுவா சாதகனைநோக்கி, "எம்மைவிட்டுப் பிரிந்தபின்பு நிகழ்ந்தவற்றைச் சொல்லவேண்டும்" என்ன, அவன் அவற்றையெல்லாங்கூறினன். உடனே உருமண்ணுவா அவனுடன் புறப்பட்டு இடையே தங்கவேண்டிய இடங்களில் தங்கி, புண்டரமென்னும் நகரத்தையடைந்து அங்கேயிருந்த யூகியையும் வாசவதத்தைமுதலியவர்களையும் பார்த்து, மிகுந்த உவகையுற்று அவர்களுடன் கௌசாம்பியைச்சார்ந்து அதன்புறத்தேயுள்ள மதுகாம்பீரமென்னும் சோலையிற் புதியராய்வரும் அரசர்களுக்காக அமைக்கப்பட்டுள்ள மாடமொன்றில் வாசவதத்தை முதலியவர்களை இருக்கும்படி செய்து தான்மட்டும் உதயணன்பாற் செல்வானாயினன்.

உருமண்ணுவா செல்லுவதற்கு முன்பு ஒருநாள் உதயணன் கோடபதியை வாசித்துக்கொண்டு மகிழ்ந்திருக்கும்பொழுது பதுமை,

"அரச, நின்னை வழிபட்டு வாசவதத்தை கற்றுவல்லளாதற்குக் காரணமான இந்தயாழை அடிச்சியும் வழிபட்டுக் கற்றற்கு விருப்பமுடையேன்; தெரிவித்தருளவேண்டும்" என்றுமெல்லச்சொல்லி அஞ்சலி செய்தனள். செய்யவே, வாசவதத்தையின்நினைவினால் மனநெகிழ்ந்து உருகி விம்முதலுற்றுப் பதுமைக்கு யாதொரு விடையும் கொடானாயினன்.

அதனையறிந்த பதுமை, "இப்பொழுது யாம் புலத்தல் பொருந்துவதன்று" என்றும், "வாசவதத்தையை இவர் நினைந்துவருந்துதல் முறையே; உயர்ந்தோர் ஒழுக்கம் இதுதான்" என்றும் எண்ணி யாதொன்றையும் அறியாதவள்போல இருந்து வேறொரு காரியத்தை முன்னிட்டு எழுபவள்போலவே எழுந்து தோழியர்கள்சூழத் தன் மாடத்தை யடைந்தாள்.

அப்பொழுது வயந்தகன் உதயணனை நோக்கி, "இதுகாறும் இரண்டு மனைவியரையும் சமமாக நினைந்து ஒழுகிய நீ வாசவதத்தையைநினைந்து இன்று இவள்பால் அன்பு குறைந்ததற்குக் காரணம் என்னை?" என்றுவினவ, அவன் அதனையும் கேளானாயினன்; பதுமாபதியையும் நினைந்திலன். பின்பு, நளகிரியை அடக்கி அதன்பிடரில் ஏறியபொழுது வாசவதத்தையைக் கண்டதுமுதல் அவள் அழல் வாய்ப்பட்டு இறந்தனளென்பது இறுதியாகவுள்ள செய்திகளை இடைவிடாது சொல்லி ஆற்றிக்கொண்டு படுக்கையிற் சாய்ந்தனன். சாயவே சிறிது துயில்வந்தது; அப்பொழுது, பாற்கடலினிடையேயுள்ள வெள்ளேறொன்று வந்து தங்கப்பெற்ற வெண்டாமரைப்பூவொன்றை ஒரு தெய்வமங்கை தனக்குக் கொடுத்ததாக ஒருகனாக் கண்டனன். உடனே எழுந்து அருகனைத்தொழுது ஒரு முனிவரைக் கண்டு வணங்கித் தான் முதனாளிரவிற்கண்ட கனாவைத் தெரிவித்து அதன்பயனைச் சொல்லவேண்டுமென்று வேண்டினன்.

அம்முனிவர், "வாசவதத்தை தீயில் மூழ்கி இறந்தாளென்று எண்ணியிருக்கின்றனை; அதுபொய்; அவளை விரைவில் அடைவாய்; அடைந்தபின்பு அவளிடமாக வித்தியாதரருலகை ஆளும் சக்கரவர்த்தியாதற்குரிய ஒரு மகனைப் பெறுவை" என்று சொல்லி அதற்குரிய காரணத்தையும் கூறினர். கேட்ட உதயணன், "முனிவருடைய வாக்கு என்றும் வீண்போவதில்லை; வாசவதத்தையை நாம் எதிர்ப்படுவதும் உளதாகும்" என்று எண்ணிக்கொண்டிருந்தனன். இருக்கையில், உருமண்ணுவாவின் வரவை வாயில்காவலர் உணர்த்தினர். உடனே உதயணன், "வருக" என்று சொல்லிக்கொண்டு தானே

எழுந்து விரைந்துசென்று தன்னடியில் வீழ்ந்த உருமண்ணுவாவின் கையைப் பற்றிக்கொண்டு யூகியையடைந்த மகிழ்ச்சியைப்பெற்றுத் தன்னுடைய உரிமைப்பள்ளியை யடைந்தான்.

அப்பால் உதயணன் அவனுடன் தனியே ஓரிடத்திலிருந்து, "நிகழ்ந்தவற்றைக்கூறு" என்றுகேட்க,உருமண்ணுவா தான் சிறைப் பட்டது முதலிய செய்திகளை விளங்கச் சொல்லிவிட்டு, "இங்கே நிகழ்ந்த செய்திகளைக் கூறு" என்று அங்கு வந்த வயந்தகனைக் கேட்ப, அவன் உதயணன் கோடபதியைப் பெற்றதைச் சொற்றனன்; அப்போது உதயணன் அது கற்ற வாசவதத்தையை நினைந்து மீட்டும் அரற்றுவானாயினன். அவனுடைய மனவருத்தத்தை ஒருவகையாக மாற்ற விரும்பிய வயந்தகன், "மனைவியரிருவருள் அறிவிலும் ஒழுக் கத்திலுஞ் சிறந்தவள் யார்? யாரிடத்தில் உனக்கு விருப்பம் அதி கம்?" என்று கேட்ப; "எனக்குச் சிறந்தவள் வாசவதத்தையே; யான் தவமில்லேனாதலின் அவள் தீயில் ஒளித்தனள்" என்று சொல்லி உதயணன் பின்னும் மனம் மறுகுவானாயினன்.

கண்ட வயந்தகன், "வாசவதத்தையை மீட்டுத்தரும் பெரி யோரைத் தரிசித்து வழிபாடாற்றுதற்கு யாம் மகதம்சென்ற பொழுது பதுமையைக்கண்டு அவளை விரும்பி அவள் மயமாக இருந்தனை; அங்ஙனம் இருந்தது உனக்கு நலமோ? உன்னுடைய மனம் ஒருவழிப்பட்டதன்று" என்றுசொல்ல உதயணன், "வாசவ தத்தைக்கும் பதுமைக்கும் உருவத்திலும் குணங்களிலும் சிறி தேனும் வேறுபாடின்மையின் யான் விரும்பலாயினேன்; அன்றி யும் பதுமையை யான் விரும்பியதற்குக் காரணம் ஊழ்வினையு மாகும்; அதனை மறுத்தற்கு யாராலே முடியும்?" என்று கூறினன். கேட்ட வயந்தகன், "அறியாதவனென்று என்னை இகழற்க; யான் சொல்லுதலை ஊன்றிக்கேட்டிடுக; முன்பு இராசகிரியத்தின் புறத்தே யுள்ள சோலையில் யாம் கண்ட பெறுதற்கரிய பெரியோர் இன்று வந்திருக்கின்றனர்; வாசவதத்தையை வருவித்துத் தருவதாக வும் வலிந்து கூறினர். ஆதலால், நீ சிலதினம் பதுமையை நீங் கித் தனியே தூயையாகியிருத்தல் நன்று" என்று சொன்னான். சொன்னவுடன் உதயணன் வியந்து சென்று பதுமாபதியை நோக்கி, "எஞ்சியுள்ள பகைவரைக்கெடுத்தற்குரிய சிறந்த ஆலோசனை யொன் றுண்டு; அதனை யாம் தனித்துச்செய்யவேண்டும்; ஆதலால், தோழி மாரோடு நீ வேறிடத்திற்குச் செல்லுக" என்றுசொல்லி அனுப்பி விட்டு, அவளுடைய அந்தப்புரத்தைத் தூய்மைசெய்து விளக்கேற்று

வித்துத் தானும் தூயனுகி வெள்ளுடையுடுத்து, "தெய்வமே! வாசவதத்தையை எனக்குத் தரவேண்டும்" என்று சொல்லிக்கொண்டும் வீணையைக் கையால் அணைத்துக்கொண்டும் துயில்வானுயினன்.

அவன் அங்ஙனந்துயில்கையில், வேறுமகளிரிடத்து அவனுக்கு விருப்பம் இல்லாமையையும் பகைவனை வெல்லுதற்குத் தருசகனுடைய நட்பைப் பெறவேண்டியே அவன் தங்கையாகிய பதுமாபதியை அவன் மணந்தனனென்பதையும் இரவும்பகலும் வாசவதத்தையையே நினைந்து துயிலுங்காலத்தும் அரற்றிப் பலவாறு புலம்பிக்கொண்டேயிருத்தலையும் காட்டி வாசவதத்தையைத் தேறச்செய்ய விரும்பி மந்திரிகள் அவளைச் சிவிகையிலேற்றிக் கொணர்ந்து, "உன்னுடைய தலைவனியல்பை நீ பார்ப்பாயாக" என்று அவ்வந்தப்புரத்தினுள்ளே அனுப்பினர்; அச்சமயத்தில் உதயணன், "வாசவதத்தாய்! உனக்கு வீணையைப் பயிற்றுவிக்கும்பொழுது உன்னுடைய பார்வையால் வருந்திய யான் உன்னைப்பிரிந்து ஆற்றேனுயினேன்; என்னை மறந்தாயோ" என்று அரற்றிக்கொண்டும் அங்கேயுள்ள பூமாலைகளை வாடச்செய்யும் வெவ்விய உயிர்ப்பினனுகியும் கனவில் அவன்வருந்துதலை வாசவதத்தை கண்டாள். கண்டு, "நனவிலும் என்னுயிர்த் துணைவனிருத்தல் இவ்வண்ணந்தானே? தம்மையன்றி வேறுதெய்வமில்லாத மகளிருடைய பிரிவின்கண் அவர்களை நினைந்து வருந்துதல் உயர்ந்த கணவர்களது இயல்பென்று நூல்கள் கூறுவதை இன்று நேரே கண்டேன்" என்னும் தணியாத உவகையளாகி, "இங்ஙனம் நல்லவொழுக்கத்தையுடைய இவருக்கு மறுமையின்பமும் இயைவதாக" என்றுசொல்லி அவனுக்கு அஞ்சலிசெய்து மெல்ல அருகிற்சென்று கோடபதியைக்கண்டு பிரிந்தகுழந்தையைக் காணுந்தாயைப்போலவே ஆறுதலுற்று அதனை மெல்ல எடுத்து வாசிக்கத்தொடங்கினள். அவ்வொலி அவன் காதிற்படவே, "வாசவதத்தாய்! வந்தனையோ" என்று கூந்தன்முதலாப் பூம்புறம் நீவி, "என்னை நெடுநாட்பிரிந்து நீ எங்ஙனம் ஆற்றினை? அதனைச் சொல்லவேண்டும்" என்றுகேட்ப, அவள் வியந்து ஒன்றற்கும் விடை கூறுளாகி வணங்கிச் சும்மா இருந்தனள். அவன் மீட்டும், "பொழில்விளையாட்டைக்கருதி யாம் இலாவாணக மலைச்சாரலில் தங்கியபொழுது ஒரு நாள், 'தழைமுதலியவற்றைக் கொணர்ந்து தரவேண்டும்' என்று நீ சொல்லக்கேட்டு யான் கொண்டு வருதற்குக் காட்டிற்குச்சென்ற இடத்து வீட்டில் நெருப்புப்பற்ற இன்னுயிர் நீத்த இலங்கிழை மடவோய்! உரிய அணிகளையெல்லாம் நீக்கி

மெலிந்து பிறள்போலே தோற்றுகின்றாய்; நெருப்பில் வெந்தோர் இயல்பு இப்படியோ? இதனைச்சொல்லவேண்டும்'' என்று அவள் மெய்யைத் தீண்டிவிட்டுத் துயிலத்தொடங்கினன்.

அப்பொழுது வயந்தகன் வந்து அவளைநோக்கி, "நீர் இங்கே வர வேண்டுவது நாளைத்தினம் யூகியோடேதான்; தலைவன் எப்பொழுதும் உம்மிடத்து அன்போடிருப்பதைக் காட்டுதற்கே இப்பொழுது அழைத்துவந்தேம்'' என்று சொல்ல, அவள் பிரிவிற்கு அஞ்சி நடுங்கும் மனத்தோடு தன்மேலே கிடந்த உதயணன்கையை மெல்ல எடுத்து அணையில் வைத்துவிட்டு அவனை வணங்கி உடம்பினின்றும் நீங்கும் உயிர்போல வெளிப்போந்து சாங்கியத்தாயையும் யூகியையும் அடைந்தனள். உதயணன் புடைபெயர்ந்து எழுந்து, "எனக்கு ஏன் விடைதரவில்லை?'' என்று அவளைத் தழுவுவதற்குச்சென்று அவளை அங்கே காணாகிச் செயலற்றுத் துயில்மயக்கமொழிந்து, உயர்ந்த மாணிக்கத்தைப்பெற்ற வறியவனொருவன் அதனை ஆழமான நீர்நிலையிற் போகட்டுவிட்டுத் தளர்வதுபோலத் துயிலிற்கண்ட தன்னுயிர்த் துணைவியை விழித்தபின் காணாமையால் அரற்றுவானாயினன்.

அதனையறிந்த வயந்தகன் மிகவிரைந்துசென்று, "இங்ஙனம் இரவும்பகலும் துன்பத்தோடு அரற்றுதல் அரசர்க்கு இயல்பன்று'' என்று தக்க காரணங்களைக்காட்டிக் கூறினன். உதயணன், "வாசவதத்தை நேற்றிரவில் என்பள்ளியறையில் மெல்லவந்து கோடபதியை எடுத்து வாசித்துக்கொண்டிருந்தனள்; அப்போது அவளுடைய எண்ணெயின்றி அழுக்கடைந்து பிணங்கிய கூந்தற்பின்னலையுடைய புறத்தையும் நெற்றியையும் தைவந்து மெலிவொழிந்து கண்படைகொண்டேன்; கொண்டபொழுது அவள் என்னைவிட்டு நீங்கினள்; என்னுடைய நெஞ்சம் எனக்கு வயமாகின்றதில்லை; யான் என்செய்வேன்?'' என்றுசொல்ல வயந்தகன், "கனவிற்கண்ட பொருளை நனவிலடைதல் தேவர்க்கும் இசைவதன்று; இக்கூற்றைக் கேட்பின் பிறர் நகைப்பர்; வாசவதத்தையின் வடிவங்கொண்ட இயக்கியென்னுந்தெய்வம் இங்கே உண்டு; அதனைத் தடுத்தற்கு ஏற்ற மந்திரத்தை யானறிவேன்'' என்று இன்னோரன்ன பொருளில்லாத வார்த்தைகள் பலவற்றைச்சொல்லி மிக்க துணிவோடு இருந்தனன். சிறிது நேரத்தில் பொழுது விடிந்தது.

உடனே உதயணன் கண்கழுவி நியமங்களை முடித்துக்கொண்டு குளம்பும் கோடும் பொன்னழுத்தியனவும் புதியஆடைகள் அணியப்பெற்றனவுமாகிய பசுக்கள் பலவற்றை வாசவதத்தையை நினைந்து

அருமறையாளர்க்கு எழுமுறைவீசித் தன் கனவை வேறு பிறர்க்குச் சொல்லாமல், " விரகமுடையவர்களுக்கு உளதாகுங்காரியமிதுவோ!" என்று எண்ணிக்கொண்டிருந்தனன். அப்பொழுது வயந்தகன் வந்து, "யாம் முன்பு மகதத்திற்கண்ட பெரியோர் இந்நகரத்தைச்சார்ந்த மது காம்பீரவனமென்னுஞ் சோலையில்வந்து தங்கியிருக்கின்றனர். அங்கே செல்வோமாக" என்று சொல்லவே உதயணன் மகிழ்ந்து தேரேறி அவனுடன் அச்சோலையை அடைந்தனன்.

அங்கேயுள்ள மாடத்தின் ஓரறையில் தவக்கோலத்தோடு யூகி இருந்தனன். மற்றோரறையிற் சாங்கியத்தாயோடு வாசவதத்தை இருந்தனள்; வயந்தகன் முதலில் இவன் வரவை யூகிக்கு உணர்த்தி உதயணனோடு சென்று அவனைக்காட்ட, உதயணன், " இவன் யாம் மகதத்திற்கண்ட முனிவன் அல்லன் ; யூகியே ; இவனைத் தழுவுதற்கு மனம் விரைகின்றது ; இதனை நன்குக அறியவேண்டும்" என்று ஆராய் கையில், அவன் மார்பிலுள்ள யானைக்கொம்பாலுண்டான தழும்பு காணப்பட்டது. உடனே ஐயந்தீர்ந்து வெய்துயிர்த்தெழுந்துநின்று,

" ஊறில் சூழ்ச்சி யூகந்த ராய !
நாறிருங் கூந்தலை மாறிப் பிறந்துழிக்
காணத் தருகுறு முனிவனை நீயினி
யாணர்ச் செய்கை யுடைத்தது தெளிந்தேன் ;
வந்தனை யென்றுதன் சந்தன மார்பிற்
பூந்தார் குழையப் புல்லினன் பொருக்கெனத்
தீந்தேன் கலந்த தேம்பால் போல
நகையுருத் தெழுதரு முகத்த ஞகித்
துறந்தோர்க் கொத்த தன்றுநின் சிறந்த
அருள்வகை "(ச. 7 : 186-95)

என்றுகூறி, " இனி எதைக்கருதியாவது நீங்குவாயாயின், என் உயிர் நீங்கிவிடும் " என்று சொன்னபொழுது யூகி, " வாசவதத்தையை விரைந்து இவனுக்குக் காட்டவேண்டும் " என்று கூறினன். உடனே தோழர், வாசவதத்தை செவிலித்தாயோடிருந்த அறையில் அவனை அழைத்துச் சென்றனர். அப்போது வாசவதத்தை, " நுமக்குப் பெரிய அநுகூலம் பிறக்குமென்பதை உணர்த்தி நும்மன்பர் சொல் லியதை மேற்கொண்டு நுங்கட்டளை பெறுமையாகிய அபசாரத்தை மேற்கொண்ட கல்லாக்கற்பிற் கயத்தியேன் யான் " என்று நாணங்கொண்டு நடுங்கி எழுந்து கைகுவித்துத் தன்கூந்தல் அவன் காலிற்புரளவும் கண்ணீர் அவன்புறவடியை நனைப்பவும் வணங்கிக்

கிடந்தனள்; உதயணன் அவளையெடுத்துப் பலமுறைதழுவி, அகல நின்ற சாங்கியத்தாயை நோக்கி,

"துன்பக் காலத்துத் துணையெமக் காகி
இன்ப மீதற் கியைந்துகை விடாது
பெருமுது தலைமையி னொருமீக் கூறிய
உயர்தவக் கிழமை நும் முடம்பி னாகிய
சிற்றுப காரம் வற்றல்செல் லாது
ஆல வித்திற் பெருகி ஞாலத்து
நன்றி யீன்றது" (ச. 7 : 219-25)

என்று அன்புமயமாகிய மொழிகளை அவளுக்குச் சாலக்கூறினன்.

பின்பு வாசவதத்தையின் தோற்றத்தை யறிந்து உதயணன் மனம்வருந்தினான்; அவளைத் தானடைந்த நற்செய்தியை நகரத்தார்க்கு முரசறைவித்துத் தெரிவித்தான். அறிந்த நகரத்தார் தத்தம் மாடங்களின் மீது கொடியெடுத்து விழவயர்ந்தனர்; யூகியின் ஆற்றலையும் அவனது நண்பின் மேம்பாட்டையும் வாசவதத்தையின் நிறையையும் வியந்து மதித்துப் பலபடப் பாராட்டினார்கள். அப்பால் உதயணனும் வாசவதத்தையும் யூகியும் பஞ்சவண்ணத்துப் படாகைகள் பல அசையும்படி யானையின் பிடரியிற் கொண்டுவரப்பட்ட புண்ணிய தீர்த்தநீராடி விலைவரம்பற்ற சிறந்த ஆபரணங்களை அணிந்துகொண்டு மிக்க இன்பத்தோடு வீறுபெற்று விளங்கினார்கள்.

அப்பால் உதயணன் யூகிக்குச்சொல்லவேண்டிய முகமன்களைச் சொல்லுதல் [1]வேறுபாட்டைப் புலப்படுத்துமென்றெண்ணி ஒன்றும் சொல்லானாகிச் சாங்கியத்தாயின் அருள்மிகுதியை மீட்டும் பாராட்டினன். "உன்தவ்வையை வந்து பார்த்துச் செல்ல வேண்டும்" என்று பதுமாபதிக்கு அவன் சொல்லியனுப்ப உடனே அவள், தலைவனுக்கு வாசவதத்தை உயிர்த்துணைவியென்பதை நன்கறிந்தவளாதலால், அம்மொழியை விருப்பத்தோடு ஏற்றுக்கொண்டு சிறந்த அணிகலங்களைக் காணிக்கையாக ஏந்தித் தோழிமார் பலர் சூழ்ந்துவர அரசனைநீங்கித் தனியேயிருந்த சமயம் அறிந்து தன்வரவை அவளுக்கு முன்னதாகவே தெரிவித்துக் கொண்டு சென்று வாசவதத்தையை வணங்கினள். வணங்கவே அவள் பதுமையைத் தழுவியெடுத்து, "கற்பில் இன்னும் மேம்படுவாயாக" என்று ஆசிகூறி மிகுந்த இன்பமடைந்தாள். அப்பால்,

---

1 "இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று, புனையினும் புல்லென்னு நட்பு" திருக்குறள், 790.

இருவரும் யானைத்தந்தத்தாற் செய்யப்பட்ட கால்களையுடைய கட்டில் மேலுள்ள மெல்லணையொன்றில் ஏறியிருந்து ஒருதாமரைமலரிற் சேர்ந்து தங்கிய இரண்டு திருமகளிர்போல விளங்கினர்.

உதயணன் பேரத்தாணியிற் பல பெரியோர்சூழ இருந்து யூகியை நோக்கி, "உஞ்சைநகரத்தில் நானடைந்த சிறைத்துன்பத்தை நீக்கியபின்பு மீட்டும் உனக்குநேர்ந்த மாயச்சாக்காட்டிற்கும் வாசவதத்தை தீயில் மாய்ந்தனளென்ற மாயச்செய்திக்கும் உரிய காரணங்களை விளங்கச்சொல்லவேண்டும்" என்று கேட்க யூகி, "பாஞ்சாலராசன், கௌசாம்பியைத் தன்னதாக ஆக்கிக்கொண்டிருந்ததையும் பிரச்சோதனனோடு நட்புக்கொள்ளுதற்கு முயன்று அதற்குரிய காலத்தை அவன் பார்த்துக்கொண்டிருந்தது முதலியவற்றையும் அகத்தொற்றாளரால் நன்கறிந்து அவனுடைய மாறுபாட்டையும் பெருமுயற்சியையும் குறைக்கவேண்டுமென்று துணிந்தும் அவனை வென்று பழைய அரசாட்சியைப் பெறுதலிற் சிறிதும் கவலையின்றி வாசவதத்தையை ஒருபொழுதும் பிரியாமல் இன்புற்றிருந்த உனதியல்பை வேறுபடுத்தவெண்ணியும் தருசகனை உனக்குப் படைத்துணையாக்க நிச்சயித்தும் பிங்கலகடகரை உன்னுடன் சேர்க்க நினைந்தும் இங்ஙனம் செய்தேன். எண்ணியவெல்லாம் தெய்வத்தாற் செவ்வனே நிறைவேறின. உன் திறத்தும் வாசவதத்தை திறத்தும் யாங்கள் எண்ணியவெல்லாம் திண்ணியவாய் நிறைவேறியதற்குக் காரணம் இந்தச்சாங்கியத்தாயின் பேருதவியே. உன்னுடைய கட்டளையின்றி [1] உரிமையால் யான் செய்தனவற்றைப் பொறுத்தருளவேண்டும்" என்று கூறினன்; கேட்ட உதயணன், "என்னுடைய தலைமையை நானடையும்படி செய்தாயென்பதை அயலாரிருக்கும் பொழுது சொல்லுவேனாயின் அது வேற்றுமை பயக்கும்; யாம் இருவரும் ஓருயிரே" என்று முகமன்கூறி அவனை அழைத்துக்கொண்டு அரண்மனை சென்றனன்.

சென்றபின் அவன் பதுமையை நோக்கி, "வாசவதத்தையோடு நீ ஒரு கலத்திலேயே உண்ணவேண்டும்" என்று சொல்லிய பொழுது அவள் வணங்கி,

> 'பெருந்தகு கற்பினெம் பெருமக டன்னொடு
> பிரிந்த திங்க ளெல்லாம் பிரியாது
> ஒருங்கவ ணுறைதல் வேண்டுவெ லடிகள் !
> அவ்வர மருளித் தருத லென்குறை" (ரு. 8 : 92-5)

---

1 "விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற் கேளாது நட்டார் செயின்" **திருக்குறள்**, 804.

என்று வேண்டினள்; உதயணன், அவளை அன்புடன் மிகப்பாராட்டி அனுப்பினன். அதுதெரிந்த வாசவதத்தை, பதுமாபதியிடம் அவன் வைத்துள்ள அன்பை நினைந்து மிக ஊடினள். அதுகண்ட உதயணன் அவளை நோக்கி, "அறிவினும் தோற்றப்பொலிவினும் உன்னை ஒத்திருந்தமைபற்றியே பதுமையை மணஞ்செய்தேன்" என்று தெளிவிக்கவே, பதுமை தன்னைப்போன்றவள் அவளென்ற சொல் மனத்தைவருத்த வாசவதத்தை கடைக்கண் சிவந்து அப்பாற் சென்றனள்; அப்போது அவன் அவளைப் பலமுறை நயந்து பாராட்டி, "உருவத்தாலல்லது பெண்மையில் நின்னை அவள் ஒவ்வாள்" என்று அவள் மகிழ்தற்குரிய இனிய மொழிகள் பலவற்றைச் சொல்லித் தெருட்டியும் தெளித்தும் மருட்டியும் மகிழ்ந்தும் அவளது துனியைத் தீர்த்தனன். அப்பாற் கண்டோர் வியக்கும்படி ஒருவரை ஒருவர் பிரியாமல் உறைவாராயினர்.

அங்ஙனம் உறைகையில், உதயணன் தன்னுடைய பரிசனத்தார் யாவரையும் வைத்துக்கொண்டு, உருமண்ணுவாவிற்குச் சேனாபதிப் பட்டத்தை யளித்து ஏனாதிமோதிரத்தைத் தானே அவன் விரலிற் செறித்ததன்றி, பல இலக்கம்பொன் வருவாயுள்ள பல ஊர்களையும் நால்வகைப் படைகளையும் கொடுத்துப் பதுமையின் தோழியாகிய இராசனையென்பவளை அவனுக்குப் பெருஞ்சிறப்புடன் மணஞ்செய்வித்துச் சயந்தி நகரத்தையும் இலாவாணக நகரத்தையும் அளித்து, 1 "குரவரைக்கண்டு வழிபாடு செய்துகொண்டு அவ்விடத்திலேயே இருந்து யாம் விரும்பிய காலத்தில் இங்கே வந்து செல்வாயாக" என்று சொல்லி அவனை அனுப்பினன்; பின்பு சேதிநாட்டையும் வைசாலி நகரத்தையும் யூகிக்கு அளித்து அச்செய்தியை அந்நாட்டாரும் நகரத்தாரும் அறிந்துகொள்ளும்படி திருமுகமனுப்பித் தெரிவித்தனன்; இடபகனுக்கு முனையூரென்று பெயருள்ள ஒருதலை நகரும் காட்டு நாடு ஐம்பதும் கொடுத்துப் பின்னும் சில வருவாய்களை யளித்து, "புட்பக நகரத்தையடைந்து நட்பாளரோடு மகிழ்ந்திருந்து அழைத்த பின் வருக" என்று அவனைப் போக்கினன். வயந்தகனுக்குப் பதினொரு நகரங்களை யளித்ததுடன் ஒவ்வொரு நாளைக்கும் ஆயிரம் பொன் வேதனமளித்து, "எப்பொழுதும் என்னுடனுறைக" என்று கட்டளையிட்டனன்; இசைச்சன் முதலிய தோழர்க்குப் பல ஊர்களை அளித்து, விரும்பிய இடங்களிற் சென்றிருக்கும்படி செய்வித்தான்; தான் உஞ்சையம்பதியிற் சிறையிலிருந்தபொழுது பல

1 குரவர் - இங்கே தந்தையார்.

இடங்களில் மறைந்திருந்து பாதுகாத்து வந்த வீரர்களை முரசறை வித்து வருவித்து வேண்டியவற்றையளித்து அனுப்பிவிட்டுப் போரில் இறந்தவர்களுடைய சந்ததியாளர்களைத் தெரிந்தழைத்து அவர் களுக்கு விரும்பியவற்றை ஈந்தனன். சாதகனென்னும் குலாலனை அழைப்பித்து அவனுக்குப் பெருந்துயப்பட்டமளித்து, "நீ கவலை யின்றி இலாவாணக நகரில் இரு" என்றுசொல்லி அவனுக்கு இரண் டூர்களைக் கொடுத்தனன். தனக்காக வந்து மகதநாட்டில் உழந்து உதவிய மாந்தர்களுக்கு விரும்பிய பொருள்களை அளித்துத் தத்தம் ஊர்களிற்சென்று இருக்கும்படி அனுப்பினன். ஆதித்திய தருமனென் னும் வீரனுக்கு ஓரூர் நல்கினன்; போரில் உயிர்விட்ட சத்தியகாய னென்னும் வீரனுடைய மக்களை வருவித்து அவர்களுடைய கூட் டத்தாருள் தலைமையை மேற்கொண்டிருக்கும் பதவியை அவர் களுக்கு அளித்தனன். யூகியைமட்டும் தன்னுடனிருக்கும்படி செய்து விட்டு அவனுடனிருந்த படையாளிகள் பலரையும் உரிய இடங்களில் தங்கும்படி வேண்டியவற்றையளித்து அனுப்பினன். தன்னுடைய தாயை அடைந்து பணிந்து, "வேண்டிய தானங்களைச்செய்வாயாக" என்று மிக்க வருவாயையுடையதொரு நாட்டைச் சேர்ப்பித்தான். வாசவதத்தைக்கும் பதுமைக்கும் தேவிகளுக்குக் கொடுத்தற்குரிய விருத்தியைக் கொடுத்தான். ஆடல் பாடல் அழகு என்பவற்றில் மிக்க சேடிமார்களை இருகூறுக்கிப் பின்னும் அவர்களுக்கு அளித்து அவர்களுடன் மிகமகிழ்ந்து உறைவானாயினன்.

இப்படியிருக்கையில், ஒருநாள் வாயில்காவலன் வந்து வணங்கி, "பிரச்சோதனன் தூதுவர் கடைத்தலையில் வந்து நிற்கின்றனர்" என்றனன்; உதயணன், "அவர்களை வரவிடுக" எனவே,

"மண்ணியன் மன்னர்க்குக் கண்ணென வகுத்த
நீதி நன்னூ லோதிய நாவினள்
கற்றுநன் கடங்கிச் செற்றமு மார்வமும்
முற்ற நீக்கித் தத்துவ வகையினும்......
குறிப்பி னெச்ச நெறிப்பட நாடித்
தேன்றேய்த் தன்ன கிளவியிற் றெளிபடத்
தான்றெரிந் துணருந் தன்மை யறிவினள்
உறுப்புப்பல வறுப்பினு முயிர்முத றிருக்கினும்
நிறுத்துப்பல வூசி நெருங்க வூன்றினும்
கறுத்துப்பல கடியக் காட்டினுங் காட்டாது
சிறப்புப்பல செயினுந் திரிந்துபிறி துரையாள்;
பிறைப்பூ ணகலத்துப் பெருமக னவன்மாட்டுக்

குறித்தது கூறுதல் செல்லாக் கொள்கையள் ;
இன்னது செய்கென வேவ லின்றியும்
மன்னிய கோமான் மனத்ததை யுணர்ந்து
முன்னியது முடிக்கு முயற்சிய ளொன்றோர்
சிறந்தன பின்னுஞ் செயினு மறியினும்
புறஞ்சொ றாற்றாது புகழுந் தன்மையள் ;
புல்லோர் வாய்மொழி யொரீஇ நல்லோர்
துணிந்த நூற்பொருள் செவியுளங் கெழீஇப்
பணிந்த தீஞ்சொற் பதுமை யென்னுங்
கட்டுரை மகளொடு " (சு. 10 : 19-35)

மேம்பாடுற்ற காரியக்காரரும் கணக்கரும் திணைகளும் காவலாளருமா கிய இவர்கள், ஐம்பது யவனவையம் முதலிய பொருள்கள் பலவற்றைக் கொணர்ந்துவைத்து ஆயிரந்தோழிமார்களையும் *மேற்கூறிய நருமதை முதலிய நாடகமகளிர்களையும் பிறரையும் உள்ளே அழைத்து வந்து நிறுத்தி உதயணனுக்குக் காட்டி, "இவற்றையும் இவர்களையும் உம்மிடம் சேர்ப்பிக்கவேண்டுமென்பது எங்கள் அரசனது கட்டளை" என்று தெரிவித்தனர். அப்பொழுது பதுமையென்னுங் கட்டுரைமகள் வணங்கி அருகிற்சென்று பிரச்சோதனன் கொடுத்த திருமுகத்தை வணக்கத்துடன் உதயணன்முன்பு நீட்டினள். உடனே அவன் ஆசனத்தினின்றுமிறங்கி மிகுந்தவணக்கத்துடன் கைகளாலேற்று அதனைப் படித்துப் பார்த்தனன் ; அதில், "பிரச்சோதனனென்னும் அரசனுடைய ஓலையை உதயணன் காண்க ; தன்னுடைய உறவைக்கொள்ள விரும்பிய யான் போர்செய்து தன்னைவெல்லுதல் அருமையென்று நினைந்து மாயயானையைக் காட்டித் தன்னைப் பிடித்துவரும்படி முன்னம் என்னுடைய மந்திரிமுதலியோரை அனுப்பினேன் ; இப்பொழுது அந்த நினைவை விட்டுவிட்டேன் ; தன்னுடைய தந்தையாகவே என்னைக்கொள்ள விரும்பினேன் ; யானும் பட்டத்தேவியும் உவக்கும்படி வாசவதத்தையோடு தான் இங்கேவந்து மகிழ்ச்சியை விளைவித்திடுக. பாஞ்சாலனைவென்று தான் கொற்றங் கொண்டதைக் கேள்வியுற்றேன். யான்செய்யவேண்டுவதைத் தான் செய்தனன். தன்னுடைய குடைநிழலில் தங்கி உலகு இன்புறும்படி குழவிகொள்பவரின் இகழாதோம்பிப் புகழ்படவாழ்க ; யூகியை விரைவில் இவ்விடத்திற்கனுப்புக ; அவனைப் பார்க்கவேண்டுமென்னும் விருப்பம் எனக்கு மிகுதியாக உண்டு. இதில் எழுதியவற்றை

* 26-ஆம் பக்க முதலியவற்றைப் பார்க்க.

யெல்லாம் யான் விருப்பத்தோடு எழுதினேனென்று எண்ணிக் கொள்க" என்பது எழுதப்பட்டிருந்தது.

உதயணன் எல்லாவற்றையும்பார்த்து அவற்றை மனத்திலடக்கிக் கொண்டு பதுமையைநோக்கி, "வாசவதத்தை தீயிற்பட்டது பொய்ச் செய்தியாயினும் அச்செய்தியை இவ்வோலையில் ஏன் எழுதவில்லை?" என்று கேட்கவே அவள் கைகுவித்து, "எங்கள் சக்கரவர்த்தி இச் செய்தியைக் கேள்வியுற்று அதிகவாட்டமடைந்து அறிவிற்சிறந்த ஒருமுனிவர்பாற்சென்று ஒன்றுஞ் சொல்லாமல் முகவாட்டத்தோடும் அவர் முன்னே நின்றார். உடனே அவர், உம்முடைய மந்திரிகளோடு ஆராய்ந்து தெளிந்தவர்போல, 'வாசவதத்தை மறைந்திருக்கும் நாட்கள் இத்துணை; அவள் உம்மை அடையுங்காலம் இன்னது' என்று தொடுத்தமாலையை எடுத்தது போலச் சொல்லியதன்றி இன்றுவரை யில் உள்ள நிகழ்ச்சிகளையெல்லாம் விளங்கக்கூறினர். அம்முனிவர் அன்புடையவராதலின் அதை அரசன் தெளிந்து அடங்கினன். அரசர் தலைவ! யான் சொல்லியவை ஒத்துள்ளனவா?" என்று கூறினள்; அதற்கு உதயணன், "எல்லாம் சரியாகவே இருக்கின் றன" என்றுசொல்லி அம்முனிவரைப்புகழ்ந்து இனிய தோழர் களோடுசென்று அங்கே வைக்கப்பட்டுள்ளனவாகிய பல பொருள் களையும் பார்த்து மகிழ்ந்து வந்தவர்களுக்கு இனிய வார்த்தைகளைக் கூறி அச்செய்திகளையெல்லாம் வாசவதத்தைக்கு அவர்களைக் கொண்டு சொல்லும்படிசெய்வித்து அவர்களுக்குத் தனியிடங்களை வேறேயமைப்பித்து உபசரித்து வேண்டியவற்றை அளித்தனன்; யூகியைநோக்கி, "நீ பிரச்சோதனனிடஞ்சென்று இங்கே நிகழ்ந்த வற்றையெல்லாஞ்சொல்லி உன்னுடைய நீதிநூற்பயிற்சியையும் நன்குவிளக்கித் தாமதியாமல் விரைவில் வருக" என்று சொற்றனன்.

அங்ஙனம் சொன்னபின்பு உதயணன், "தம்முடைய நாட்டிற் கும் எங்கள் நாட்டிற்கும் இடையேயுள்ள காடுகெழுகுறும்பும் கன மலைவட்டமும் நான் இங்கில்லாதபொழுது எல்லையற்றுப் பிறர்வச மாகி அழிந்துபோயின; அவை எங்கள் ஆட்சிக்குட்பட்டாலன்றி எம்மவர் புகுதற்கு இடங்கொடா" என்று மிக்க வணக்கத்துடன் எழுதிய ஓலையொன்றைப் பிரச்சோதனனுக்குத் தூதர்வசம் அனுப் பியதன்றி, 'எந்தக்காலத்தும் இருகுலத்தவரும் இனி மனமொத்தே நடக்கும்படிசெய்வித்திடுக' என்பதையும் தெரிவிக்குமாறு சொல்லி யனுப்பினன்; பிரச்சோதனனுக்குக் கொடுக்கும்படி பலபொன்னணி களையும் இலக்கணத்திற் சிறந்த நாலாயிரங் குதிரைகளையும் ஐந்நூறு

தேர்களையும் நூறு யானைகளையும் பதினாயிரம் பசுக்களையும், வாசவதத்தையின் நற்றாய்க்குப் பணிபுரியும்படி பாஞ்சாலனுடைய உரிமைப் பள்ளியினின்றுங்கொணர்ந்த பலமகளிரையும் அனுப்பினன்; அப்படியே கோபாலகனுடைய நற்றாய், கோபாலகன், பாலகுமரன், பரதகன், சிவேதனென்பவர்களுக்குக் கொடுக்கும்படி தக்கபொருள்கள் பலவற்றை வகைவகையாக அனுப்பி மிகவும் அழகிதாகிய வையாக்கிரமென்னுந்தேரை யூகிக்களித்து, விண்ணுத்தராயனென்பவனை மெய்காவலனாக அவனுடன் செல்லும்படி கட்டளையிட்டு நல்ல தினத்தில் எல்லோரையும் பிரச்சோதனன்பால் விடுத்தனன்; பின்னர் இரண்டு தேவியர்களும் தனக்கு வழிபாடுசெய்ய அவர்களோடு பல இடங்களுக்குஞ்சென்று உண்டாடி மிகவும் மகிழ்ச்சியுற்றிருந்தனன்.

பாஞ்சாலராசனுடைய உரிமைப்பள்ளியினின்றும் பற்றிக்கொண்டு வந்த அரங்கியன் மகளிர் ஆயிரத்தெண்மர்களைப் பங்கிட்டு இரண்டு தேவியர்களுக்கும் உதயணன் அளித்தனன். தேவியரிருவரும், அரசன் புறத்தேசென்று உலாவிவருஞ் சமயம் பார்த்து முற்றவெளியின்கண் பந்தடித்தற்கு எண்ணி நின்றார்கள். அச்செய்தியையறிந்த வயந்தகன், "தேவியரிருவரும் தோழியருடன் பந்தாடுதற்கு நிச்சயித்திருக்கின்றார்கள்; அது காணத்தக்கது; ஆதலால், நீ புறத்தேசெல்லாமற் பெண்வடிவங்கொண்டு பிடியின்மீதேறி அவர்கள் அறிந்துகொள்ளாதபடி பார்த்தருளவேண்டும்" என்று தெரிவித்தனன்; உதயணன் அதற்கு உடன்பட்டுத் தான் புறத்தே செல்வதாகப் பிறர் நினைக்கும்படிசெய்து சேனைகளைமட்டும் வெளியே அனுப்பிவிட்டுத் தான் ஒரு பெண்வடிவங்கொண்டு வந்து பல மகளிர்களினிடையே பெண்யானை யொன்றன்மேலிருந்து காண்பானாயினன்.

அங்கே தேவியரிருவரும் தத்தம் தோழிமார்களுடன் அந்த முற்ற வெளியில் ஒருவர்க்கொருவர் எதிரெதிர் நின்றார்கள். அப்பொழுது பதுமையின் தோழியாகிய இராசனையென்பவள் ஏழு பந்தையெடுத்து ஆயிரங்கை அடித்துவிட்டுச்சென்றனள்; அப்பால், காஞ்சனமாலை பந்துகளைக் கைக்கொண்டு, ஆயிரத்தைந்நூறு கை அடித்துவிட்டுச்சென்றாள்; பின்னர், பதுமையின் மற்றொரு தோழியாகிய ஐராபதி யென்னுங்கூனி ஈராயிரங்கை அடித்துச்சென்றாள்; வாசவதத்தையின் தோழியாகிய விச்சுவலேகை யென்னுங்குறளி அடித்தற்குரிய கோலைக் கைக்கொண்டு பந்துகளையெடுத்து ஈராயிரத்தைந்நூறு கை அடித்துவிட்டுச் சென்றனள்; பதுமையின் உயிர்த்

தோழியாகிய ஆரியை யென்பவள் அதிவிசித்திரமாக மூவாயிரங்கை அடித்துப் பந்தைப் போகட்டுவிட்டுச் சென்றாள்; அப்பாற் பந்துகள் அடித்தற்கு யாராலும் எடுக்கப்படாமற் கிடந்தன.

அப்பொழுது வாசவதத்தை தலைசாய்த்து, "அடித்தற்குரியார் யாவர்?" என்று கடைக்கண்ணாற் பார்த்துக்கொண்டு சிறிது மன வருத்தத்துடன் நின்றாள். அக்குறிப்பறிந்து, அவளிடம் பணிபுரிந்து கொண்டிருப்பவளும் பேரழகியும் **மானனீகை**யென்னும் பெயருடைய வளுமான மங்கையொருத்தி வந்து அங்கே நின்று, தனக்கு முன்பு ஆடியவர்களுடைய ஆட்டத்தை இகழ்ந்துகூறிச் சிரித்துப் பந்தாட்டத்தின் இலக்கணங்கள் பலவற்றை அங்கே நின்ற யாவரும் அறியும் படி சொல்லிவிட்டு ஆடத்தொடங்கி இருபத்தொரு பந்துகளையெடுத்துப் பிறர் வியக்குமாறு ஆடினள். ஆடுகையில்,

"சுழன்றன தாமம்; குழன்றது கூந்தல்;
அழன்றது மேனி; அவிழ்ந்தது மேகலை;
எழுந்தது குறுவியர்; இழிந்தது சாந்தம்;
ஓடின தடங்கண்; கூடின புருவம்;
அங்கையி னேற்றும் புறங்கையி னோட்டியும்
தங்குற வளைத்துத் தான்புரிந் தடித்தும்
இடையிடை யிருகா றெரிதர மடித்தும்...
நித்திலக் குறுவியர் பத்தியிற் றுடைத்தும்
பற்றிய கந்துகஞ் சுற்றுமுறை யுரைத்தும்
தொடையுங் கண்ணியு முறைமுறை யியற்றியும்
அடிமுதன் முடிவரை யிழைபல திருத்தியும்
படிந்தவண் டெழுப்பியுங் கிடந்தபந் தெண்ணியும்
தேமலர்த் தொடைய றிறத்திறம் பிணைத்தும்
பந்துவர னேக்கியும் பாணிவர நொடித்துஞ்
சிம்புளித் தடித்துங் கம்பிதம் பாடியும்
ஆழியென வுருட்டியுந் தோழியொடு பேசியும்
சாரிபல வோட்டியும் வாழியென வாழ்த்தியும்
அந்தளிர்க் கண்ணி யவந்திகை வெல்கெனப்
பைந்தொடி மாதர் பற்பல வகையால்
எண்ணு யிரங்கை யேற்றின ளேற்றலும்" (உ. 12: 225-45)

வாசவதத்தை வியந்து, "அரசன் இவளைக்காணின் அவனது மனம் வேறுபடும்" என்று எண்ணி நின்றனள்.

அப்போது மானனீகையின் சிறந்த தோற்றத்தைக்கண்டு மயங்கி அவள்பால் சென்ற தன்மனத்தை ஒருவாறு மீட்பதற்குச்

சிறிதும் ஆற்றலில்லாதவனாகி உதயணன் உரியவடிவத்தோடு அங்கே தோன்றினன். அவனைக்கண்ட தேவியரிருவரும் தோழிமார்களோடு தத்தம் இடஞ் சென்றனர்.

அவர்கள் அங்ஙனஞ்செல்ல, காமமிகுதியால் நொந்துதளர்ந்த உதயணன் பள்ளியம்பலத்துள்ளே தான் இருந்து தேவியரிருவரையும் அழைத்துவரும்படி சொல்லிவிடுத்தனன். தோழியர்கள் சென்று சொன்னவுடன் அவ்விருவரும், அரசன் அழைத்ததற்குக்காரணம் இன்னதென்பதை அறியாதவர்களாகி ஐயமுற்று மானனீகையைமட்டும் ஓரிடத்தில் மறைத்துவைத்துவிட்டு மற்றத் தோழிமார்களுடன் சென்று அவர்களைப்புறத்தேநிறுத்தித் தாம்மட்டும் அரசனிடம்வந்து வணங்கினர். பார்த்த உதயணன், "இவர்களுடைய தோழியர் களையும் இங்கே வரவிடுக" என்றனன். அவர்களும் வந்துவணங்கி நின்றபொழுது அவர்களை யெல்லாம் முறையேநோக்கி, "உங்களுடைய சுற்றத்தாரையும் உங்கள் பெயரையும் சொல்லுக" என்றனன். அவர்கள் அவற்றைச் சொன்னபோது, உதயணன் பாராதவன் போலவே அவர்களை முறையே பார்த்து வாசவதத்தையை நோக்கி, "உன்னுடைய தோழிமார்களுள் ஒருத்திமட்டும் இங்கே வாராமைக் குக் காரணம் என்ன?" என்று வினவ வாசவதத்தை, "அவளுக்குச் சொல்லவேண்டியது ஏதேனுமிருப்பின், அதனைத் தனியே பார்த்துக் கொள்க; இக்கூட்டத்தில் ஆகவேண்டுவது யாது?" என்று சொல்லி மிக்க கோபங்கொண்டனள்; அவளுடைய கண்கள் மிகச்சிவந்தன. அவளது சீற்றத்தைக் கண்சிவப்பாலறிந்த அரசன், "பாஞ்சாலராசன் பெற்ற செல்வத்தையும் அவனுக்குள்ள பிறவற்றையும் அவள் நன் கறிவாளென்று மந்திரிகளால் அறிந்துள்ளேன்; அவற்றைத் தெரிந்து கொள்ளுதற்பொருட்டே அவளைக்குறித்து இப்பொழுது யான் வினவினேன்; காரணம் வேறே ஒன்றுமில்லை" என்றனன்.

அப்பால், வாசவதத்தை மானனீகையை அங்கே வருவித்தனள்; அவள்வந்து அடிவணங்கினள்; உதயணன் அவளைநோக்கி "பாஞ்சால ராசனுக்குரிய பல பணிகளிலும் அவனுடைய அந்தப்புரத்தார்க்கு அலங்காரஞ்செய்தலிலும் நீவல்லாயென்று சொல்லக்கேட்டுளேன். உன் பெயரையும் உன்சுற்றத்தார் பெயர்களையும் சொல்" என்று கேட்க அவள் மீட்டும் வணங்கி அஞ்சலிசெய்துகொண்டு அரசனை நோக்கி, "அடியேன் கோசலதேசத்து அரசனுடைய பெருந்தேவியா கிய வசுந்தரியென்பவளுடைய சேடியாவேன்; என்பெயர் மானனீகை; பாஞ்சாலராசன் படையெடுத்துவந்து எம் அரசனுடைய படை

களை வென்று அவனுடைய அந்தப்புரத்திலிருந்த சிலதியரோடு என்னையும் பற்றிக்கொண்டு சென்று தன் தேவிக்கு அளித்தனன். அப்போது, அடிச்சி அத்தேவிக்கு வண்ணமகளாயிருந்தேன்; இதனையன்றித் தேவரீர் அருளிச்செய்த வேறொரு செயலையும் அறியேன்'' என்று சொல்லி அழுதுகொண்டு நின்றாள்; அப்போது உதயணன் அவளைநோக்கி, "நீ வாசவதத்தைக்கு இன்றுமுதல் வண்ணமகளாக இருந்து அவளை நாள்தோறும் அலங்கரிப்பாயாக" என்று கட்டளையிட, அவள் அப்படியேசென்று கண்டோர் வியக்கும்படி அடிமுதல் முடியளவாக அவளைப் புனைந்தனள்; பின்பு வாசவதத்தைவந்து உதயணனுக்கு அவ்வணியைக்காட்டினள். அப்போது உதயணன்,"மானனீகை அலங்காரம் செய்வதில் வல்லுநள் அல்லள்; யான் அலங்கரிக்கின்றேன் பார்'' என்று அவள்செய்த அலங்காரத்தைச் சிதைத்துவிட்டு யவனபாஷைக்குரிய எழுத்துக்களை மானனீகை நன்கு கற்றவளென்பதை முன்பு கேட்டிருந்தவனாதலின், பூந்தாதினையும் சந்தனக்குழம்பையும் கூட்டி வாசவதத்தையின் நெற்றியில், "உதயணன் ஓலையை மானனீகை காண்க; நீ ஆடிய பந்தாட்டத்தில் உன்னுடைய கண்கள் என் நெஞ்சத்தைப் பிளக்க அதனாற் புண்ணுற்றேன். அப்புண்ணைத் தீர்க்கும் மருந்தினை நீ அறிவாய்; என்னுடைய துயரம் ஆற்றுதற்கரியது. இரப்போர்க்கு அவர் விரும்பியதை அளித்தல் நன்று; இங்கே எழுதுவதற்கு இடம் இன்மையின் நான் சுருக்கமாக எழுதினேன்; நீ என்கருத்தை நன்றாக அறிந்துகொள்ளவேண்டும்'' என்று எழுதிவிட்டு வாசவதத்தையை நோக்கி, "உனக்குயான்செய்த அலங்காரம் இப்பொழுது ஒத்திருக்கின்றது'' என்று சொல்லிஅவளை அனுப்பினன். உடனே வாசவதத்தை தன்னுடைய அந்தப்புரத்தையடைந்து அங்கேவந்த மானனீகைக்கு, "இந்த அலங்காரத்தை நீ பார்'' என்று காட்டினள். அவள் அதனைப் படித்தறிந்து கூசி, "அரசர் செய்துள்ள அலங்காரம் மிகவும் அழகுடையது'' என்று வாசவதத்தையை மருட்டினள். அந்நாள் நீங்கியது.

மறுநாட்காலையில் வழக்கம்போலவே வாசவதத்தையை மானனீகை அலங்கரித்துவிட்டு அவன் எழுதிய பாஷையாலேயே அவனுக்குத் தன்கருத்தைத் தெரிவிக்க நினைந்து, "அடியேனைப் பொருளாக எண்ணித் தேவரீரெழுதிய திருமுகம் முழுவதையும் தவறின்றியறிந்தேன்; அடியேனிடத்து அருள்இருந்தாலும் அதனை இப்பொழுது தவிர்த்தல்வேண்டும்; தேவியர்க்கு மிக்கவருத்தத்தை உண்டுபண்ணுஞ் செயலைச் செய்தற்கு என் மனம் துணிந்திலது; காவலில் இருக்கும்

அடியேன் பிறர் காணுறென்று தகாததைச் செய்தல் இயல்பன்று; செய்தாற் பழிப்புண்டாகும்; தருமமும் நீங்கும்; சிறியேனிடத்தே வைத்த விருப்பத்தை மறப்பது நன்று" என்று அவளுடைய நெற்றியில் எழுதி, "என்னுற் செய்யக்கூடிய அலங்காரம் இதுவே" என்று சொல்லி அனுப்பினள்.

வாசவதத்தைசென்று அரசனைவணங்கினள். வணங்கவேஅவன் மானனீகை எழுதியதைக்கண்டு அவளுடையகருத்தையறிந்து அழலாணுண்டாகிய புண்ணின்மேற் கோலிட்டாற்போலக் கலங்கி அவ்வணியை அழித்து, "உன்னை இன்றைக்குள் அடையேனுயின், என் உயிரைச் சென்றதாகவே எண்ணிக்கொள்க" என்று அவள் நெற்றியில் எழுதி, "இந்தப் புதியதோர் அலங்காரத்தை அவளுக்குக் காட்டுவாயாக" என்றுகூறி மீளவிடுத்தனன். அதனைக்கண்டு தன் மனத்தைத் திண்ணிதாக்கி மறுநாட் காலையில் மானனீகை, "இற்றை இரவின் கண்ணே கூத்தப்பள்ளியினிடத்தே குச்சரக்குடிகை வேதிகையின் பால் வந்தருள்க" என்று அந்த இடமும் புலம்படும்படி சங்கேதமாக ஒருவகைக் கோலத்தையெழுதி அனுப்பினள்; வாசவதத்தைவந்து வணங்கி நின்றுள். அதனைக்கண்ட உதயணன் அவள் எழுதிய குறிப்பை அறிந்து மகிழ்ந்து, "மானனீகை இன்றைக்குப்பயந்து செய்த அலங்காரம் மிகவும் அழகுடையது" என்று சொல்லி வாசவதத்தையோடு அளவளாவிக்கொண்டிருந்தனன். பகற்காலம்நீங்கியது.

இரவில் வாசவதத்தைக்குத்தெரியாமல் மானனீகை தான்குறிப்பிட்ட இடத்தில் சென்றிருந்தனள்; உதயணன், "வாசவதத்தைபால் துயிலச்செல்வேன்" என்று பதுமையிடத்தும், "பதுமைபால் துயிலச் செல்வேன்" என்று வாசவதத்தையிடத்தும் விருப்பக்குறிப்பின்றிக் கூறினன். கூறவே வாசவதத்தை ஐயமுற்று ஓரிடத்திற் சென்றிருந்தனள்; அப்பொழுது உதயணன் எழுந்து ஒதுங்கி வேறிடம் செல்வானுயினன். அதனைக்கண்ட வாசவதத்தை காஞ்சனமாலையைக் கைகொட்டி அழைத்து, "அரசன்செல்லுமிடத்தை நீ அறிந்துவருக" என்று கட்டளையிடவே அவள் அவனறிந்துகொள்ளாதபடி பின்னர்ச் சென்று, அரசன் ஆடற்பேரறையைச் சார்ந்தபின் அவளும் பின் சென்று அங்கே ஒரு பக்கத்தில் மறைந்திருந்தனள்.

சென்ற உதயணனும் முன்னமே அங்குவந்திருந்த மானனீகையும் ஒருவரையொருவர் கண்டு அளவளாவி நெடுநேரம் விளையாடிக் கொண்டிருந்த பின்பு, வாசவதத்தையின் முகத்தே காதலோடு எழுதிவிடுத்த வாசகங்களையெல்லாம் இருவரும் சொல்லிக்கொண்டிருந்

தனர்; பின்பு உதயணன், "நாள்தோறும் தவறின்றி இங்கே வர வேண்டும்" என்று சொல்லித் தன்னுடைய சிறுவிரல் மோதிரத்தை அவளுக்குக் கொடுத்துவிட்டு நீங்கினன்.

எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டேயிருந்த காஞ்சனமாலை மிக்க மனப்பொருமலோடு சென்று நிகழ்ந்தவற்றையெல்லாம் வாசவதத்தையினிடம் சொன்னாள். கேட்ட வாசவதத்தை கோபத்தை மனத்தில் அடக்கிக்கொண்டிருந்துவிட்டுக் காலையில் அரசனையடைந்து வணங்கி அவனைநோக்கி, "நேற்றிரவில் யான் ஒரு கனாக்கண்டேன்; அது குற்றமற்றது" என்றுசொல்ல அவன், "என்ன அது?" என்று வினவினன்; உடனே அவள், "நீர் எனக்குத் தெரியாமல் தனித்துச்சென்று ஒரு மடந்தையோடு ஆடரங்கொன்றிலேறி நெடுநேரம் விளையாடிக்கொண்டு தங்கி என்நெற்றியில் மாறுமாறு எழுதிய வாசகங்களை யெல்லாஞ்சொல்லிக்காட்டி உமது அன்பைப் புலப்படுத்திக்கொண்டேயிருந்து புறப்படும்பொழுது அவளுக்கு மோதிரத்தை அளித்து வந்துவிட்டீர். அப்பால் என் கண்கள் விழித்தன" என்றுசொன்னாள். உதயணன், "என் மனத்திலும் இல்லாததை நீ கண்டாயாதலாற் கலக்கமடைந்தாய் போலும்" என்பது முதலியவற்றைச் சொல்ல, அவள், "கனவிற் கண்டதைப் பிறரோடுசொன்னால் அதனாலுண்டாகுந்தீது நீங்குமென்று நூல்கள் கூறுதலின் நான் இப்போது தெரிவித்தேன்; அன்றியும் எவற்றைக்கண்டாலும் அவற்றை அரசனிடத்தன்றி வேறு யாரிடத்துப் பேசுவது?" என்று சொல்லிவிட்டு மனத்துள்ளே நகைத்துக்கொண்டு சென்றனள். உதயணன், "தேவிக்கு உண்டான கவலையை ஒருவழியாகப் போக்கிவிட்டோம்" என்று உவந்திருந்தான். இப்படி யிருக்கையில் பகற்காலம் நீங்கிற்று; இரவு வந்தது.

வாசவதத்தையோ மானனீகையைப் பிடித்துக்கொண்டுவரச்செய்து காவலில்வைத்துவிட்டுப் பிறர் அறிந்துகொள்ளாதபடி காஞ்சனமாலையோடு சென்று ஆடரங்கிலேறி மானனீகை இருந்த விடத்திலேயிருந்தாள்; உதயணன் நிகழ்ந்ததையறியாமல் முதல் நாளைப் போலவே மெல்லச்சென்று அவள் சமீபத்தையடைந்தான். அப்போது வாசவதத்தை, 'அரசன் இங்கே என்ன செய்கின்றான்? இனி அவன் செய்வதை அறிவோம்' என்று எண்ணிக் கையால் நீக்க, உதயணன், "மானனீகை ஊடியிருக்கின்றனள்" என்று நினைந்து,

"முரசுமுழங்கு தானை யரசொடு வேண்டினும்
தருகுவ லின்னே பருவர லொழியினி
மானே! தேனே! மான னீகாய்!" (உ. 13 : 227–9)

என்று அவள்காலைக் கையாற்பற்றினன். காலைக்கொடாதவளாகி வாசவதத்தை அப்பாற்சென்றனள். அதனைப்பொறாத உதயணன், "ஏதேனும் புதிய செய்தி ஒன்றைச்சொல்லி இவளுடைய ஊடலைத் தீர்த்து முன்னிலைப்படுத்திக்கொள்வோம்" என்று நினைந்து அவளை நோக்கி, "நேற்றிரவில் நம் இருவர்க்கும் இங்கே நிகழ்ந்தவற்றையெல்லாம் கனவிற்கண்டதாக வாசவதத்தை சிறிதும் தவறின்றிச் சொல்லிச்சினப்ப நான், 'என்நெஞ்சிற் சிறிதும் அந்த எண்ணமில்லை' என்றுசொல்லி அவ்வருத்தத்தை நீக்கினேன்; அதனையும் நீ அறிந்தாயில்லையே. மானனீகாய்! அருள்செய்யவேண்டும்" என்று அடுத்தடுத்துரைப்பவும் ஆற்றுகவும் இதச்சொற்சொல்லவும் வணக்கம் செய்யவும் ஒன்றையும் மதியாதவளாகி வாசவதத்தை சிரித்துக்கொண்டு, "நீ கூறிய மானும் தேனும் மானனீகையும் யானல்லேன்; என்பெயர் வாசவதத்தை" என்றனள்; உடனே உதயணன் திடுக்கிட்டு விரைந்து ஓடிச்சென்று வேறொரு மண்டபத்தில் தனித்து ஒளித்துக்கொண்டிருந்தான். வாசவதத்தையும் சினங்கொண்டு அவனைப் பாராமற் சென்றாள். கங்குலும் புலர்ந்தது.

காலையில் வாசவதத்தை மானனீகையை வருவித்து மிகவும் கோபித்துக்கொண்டு ஒருதூணோடு சேர்த்துக்கட்டி அவளைநோக்கி, "கூத்தப்பள்ளியில் நீ அரசனோடு பேசிய வார்த்தைகளையெல்லாம் சொல்" என்றுகூறி அருகேநின்ற ஒருத்தியைப்பார்த்து, "இவள் கூந்தலை அரிதற்கு ஒரு கத்தரிகை கொண்டுவருவாயாக" என்று சொன்னாள்; அதனை அயலிடத்தேயிருந்த வயந்தகனறிந்து விரைந்து சென்று உதயணனுக்குக் கூற அவன், "மானனீகையின் ஒருமயிரைக் கத்தரிகை தீண்டுமாயின், என்னுடைய உயிர் நீங்கும்; இக்கொடுஞ்செயலை விலக்குவாயாக" என்றனன்; வயந்தகன், "நிகழ்ந்தது யாது?" என்றான். உதயணன், "எல்லாம் உன்னாலே முடிந்தது தான்" என்ன வயந்தகன், "பந்துவிளையாட்டை யான் பார்க்கச் சொன்னதுண்டேயன்றி வேறு எதையேனும் செய்யச் சொன்னதுண்டோ? இராசமாதேவியினுடைய தணியாக்கோபத்தைத் தீர்க்கும் வன்மை யாவர்க்குண்டு? ஆனாலும் ஆறேழு நாழிகையளவு அக்கோபத்தைத் தணிப்பேன்? அதற்குள் வேறு யாரையேனும் அங்கே விடுத்தருளவேண்டும்" என்று சொல்லிவிட்டு விரைந்து சென்று தேவியையடைந்து, "அரசன் எங்கேயுள்ளான்?" என்று தேட, அங்கேயுள்ள காவன்மகளொருத்தி, "இது தலைவிக்குக் கோபமுள்ள சமயம்". என்று அருகில்வந்து மெல்லச் சொல்லி,

"சும்மா இரும்" என்று கையை அமைத்தனள். உடனே வயந்தகன் நடுங்கி, "தலைவிக்குள்ள குறை யாது?" என்று கேட்டனன். அதனை வாசவதத்தை யறிந்து அவனை நோக்கி, "அரச வடிவங் கொண்டிருக்கும் தூர்த்தக்கள்வனைக் கேட்பீராயின் என்னுடைய கோபத்தின் காரணத்தை நீர் எளிதில் அறிந்துகொள்ளுதல் கூடும்" என்று சொல்லி ஆண்டுள்ளாளொருத்தியை நோக்கி, "இக்கத்தரிகையால் இவள் கூந்தலைக்குறை" என்று மிகவும் சினந்து மொழிந்தனள். வயந்தகன், "அப்படியானுற் கேசங்குறைத்தலில் எனக்கு மிக்க பயிற்சியுண்டு" என்றனன். எனவே அவள் குறைக்கும்படி கூற, அவன் வாசவதத்தையை நோக்கி, "கத்தரிகையின் இலக்கணங்கள் பலவுள்ளன; நின் கைம்மலர் மயிரைத் தீண்டுதல்தகாது; கருவியைத்தருக" என்றுசொல்லி வாங்கி அதன் இலக்கணத்தை விளங்கக் கூறுபவன்போலக் கத்தரிகையின் வேறுபாட்டிலக்கணம் பலவற்றைக்கூறி, "இக்கத்தரிகையால் இவள் மயிரைத் தீண்டின் இவளுக்கு மிகவும் நன்மையுண்டாகும்; ஆதலால் இது வேண்டாம்" என்று அதனைத் தூரத்தில் எறிந்தனன். பின்பு அவளாற் கொடுக்கப்பட்ட கத்தரிகை ஒவ்வொன்றற்கும் ஒவ்வொரு குற்றங் கூறிக் கூறி எறிவானுயினன்.

அவற்றையெல்லாம் உடனுடன் ஒற்றரால் அறிந்துகொண்டேயிருந்த உதயணன் [1] யூகியை வருவித்து நிகழ்ந்தவற்றைச் சுருக்கிக் கூறினன்; கேட்ட யூகி, "யானும் ஆறேழு நாழிகையளவு அவள் கூந்தலைப் பாதுகாப்பேன்; அதற்குமேலே யாதொன்றும் செய்ய அறிந்திலேன்" என்று இழிந்த பலவகைப்பட்ட பொருள்களையும் தன் உறுப்புக்களின்மேல் தாங்கி நீற்றை உடம்பெங்கும் பூசிக்கொண்டு பித்தர்வடிவம்பூண்டு, கண்டோர் துட்கென்று அஞ்சும்படி அங்கே சென்றனன்.

வாசவதத்தையைச் சூழ்ந்துநின்ற மகளிர்கள் அவனைக்கண்டு அச்சமுற்றுப் பலவிடத்தும் ஓடுவாராய் விழுநரும் எழுநரும் மேல் வரநடுங்கி அழுநரும் தேவியின்பின்னே அணைநருமாயினர்; வாசவதத்தை அதனைக்கண்டு சிரித்துக்கொண்டு அக்காட்சியையே விரும்பி

---

1 உதயணனல் அனுப்பப்பெற்றுப் பிரச்சோதனன்பாற்சென்ற யூகி அவனைக்கண்டு உடனே கௌசாம்பிக்கு வந்துவிட்டானென்பதைக் கூறும் பகுதி இதன் முதனூலில் சிதைந்துபோயிருக்கவேண்டுமென்று தெரிகின்றது; '**உதிதோதயகாவ்யம்**' முதலியன இக்கருத்தை வலியுறுத்தும்.

நின்றனள். அச்செய்தியைச் சொல்லும்படி வயந்தகன் ஒருதூதியை மந்தணமாக அரசன்பால் அனுப்பினன். அப்போது அரசன் பதுமையை வருவித்து ஏதோ சொல்லத்தொடங்கித் திகைத்தனன்; அத்திகைப்பையறிந்த பதுமை, "எனக்கு உரையாததான செயல் யாதுளது? சொல்லியருளவேண்டும்" என்று வணங்கிக்கேட்ப அவன், "யான் சொல்லுதற்குக் கூசுகின்றேன்; உன் தமக்கையை அடைவாயாயின் அவள் சொல்லுவாள்; நீ என் செயிர்காணுத தெய்வமாதலின் அவள் கோபத்தைத் தணித்து என்னுயிரைத்தர வேண்டும்" என்று அவளை அனுப்பினன்.

பதுமை வாசவதத்தையையடைந்து வணங்கினள். அப்போது அவள் நிகழ்ந்தவற்றைக் கூறவே பதுமை, "நீர் பொறுத்திடுக; இவ்வரத்தை எனக்குக் கொடுத்தருள வேண்டும்" என்று சொல்லித் தான்வந்த காரியத்தைத் தெரிவித்துப் பின்னும் வணங்கி அவள் முகத்தைப்பார்த்துக்கொண்டே நிற்பாளாயினள்.

அப்பொழுது வாயில்காவலன்வந்து உதயணனைவணங்கி, "கோசலத்தரசன்தூதுவர் வாயிலின்கண் வந்து நிற்கின்றனர்" என்று சொல்லக்கேட்டு உதயணன் அவரை வருவித்து வந்தசெய்தியைக் கூறும்படி சொன்னபொழுது அவர், "கோசலத்தரசர் உம்முடைய மாபெருந் தேவியார்க்கு ஒருதிருமுகங் கொடுத்தனுப்பினர். அதனை அங்கே அனுப்பவேண்டும்" என்று கொடுத்தனர்; அப்போது உதயணன், "இச்சமயத்தில் இது வந்ததும் நலமே" என்று எண்ணி அதனை வாசவதத்தைபால் அனுப்பினன்; அவள் அதனைவாங்கி, "இதனைப் படித்துச் சொல்" என்று பதுமையின்கையிற் கொடுத்தனள். பதுமை எழுந்து அதனை வாங்கிப் பிரித்து, "கோசலத்தரசன் ஓலையை வாசவதத்தை காண்பாளாக; சோர்விடம்பார்த்துஎன் ஊரையெறிந்த பாஞ்சாலராசனால் [1] தன் தங்கை வாசவதத்தை ஆயத்துடன் கைக்கொள்ளப்பட்டுப் போயினள்; பாஞ்சாலராசனை வென்ற உதயணனாற் பலமங்கையருடன் அவள்கவரப்பட்டுப் பின்பு தன்பால் பணிப்பெண்ணாக இருப்பதைக்கேட்டேன்; அவள் தன்னை இன்னாளென்றும் தன்பெயர் இன்னதென்றும் உணர்த்தாமல் மானனீகையென்று பெயர்வைத்துக்கொண்டிருப்பதையுமறிந்தேன். விரைவில் அங்குவருவேன். யான் வருமளவும் துயரத்தைத்தீர்த்து அவளைப்

1 வாசவதத்தைக்குத் தாய்வருக்கத்தைச் சேர்ந்தவளுடைய மகளாகிப் பிராயத்தாற் சிறியவளாகவும் இருந்ததுபற்றி, அவள் 'தங்கை' எனப்பட்டாள்.

பாதுகாக்கவேண்டுவது தன்கடமை; இதுவே என்னுடைய குறையாகும்'' என்று அதில் எழுதிய வாசகங்களைப் படித்தறிந்து வாசவதத்தையைப் பார்த்து, "இதனிலுள்ள வாசகம் எனக்கு விளங்கவில்லை; நீரே பார்த்தருள்க'' என்று அவளிடம் கொடுத்தனள்.

வாசவதத்தை அதனைவாங்கிப் படித்து இடையிடையே ஏங்கி ஏங்கிக் கண்ணீருகுத்துக்கொண்டு, "பெண்ணீர்மைக்கு இயல் பிழையே போலும்'' என்று சொல்லி மானனீகை பட்ட துன்பத்திற்கு ஆற்றுதவளாகி எழுந்து பதுமையுடன்சென்று மானனீகையின் கட்டை அவிழ்த்துவிட்டு அவளை அணைத்துக்கொண்டு, "குழூஉக்களியானைக் கோசலன் மகளே! அழேற்க என்பாவாய்! அரும்பெறற் றவ்வை! செய்தது பொறு'' என்று சொல்லி அவள் கண்ணீரைத் துடைத்துச் சூழ்ந்திருந்தவர்களைப் புறத்தே போகும்படி செய்துவிட்டு அவளை உடன் இருக்கச்செய்து அவள் கூந்தலைத் தன்கையால்வகிர்ந்து ஆற்றி எண்ணெய் தேய்த்து நீராட்டித் துகிலுடுத்திப் பதுமையும்தானும் நின்று அவளுக்கு இனியவார்த்தைகள் பலவற்றைச்சொல்லிச் சிறந்த இடத்திலிருந்து மூவரும் ஒருகலத்தில் உண்பாராயினர். அதனைக் கண்ட வயந்தகன் விரைந்துசென்று உதயணனுக்குக் கூற, அவன் கேட்டு மிகமகிழ்ந்து அவனைத் தழுவிக்கொண்டனன்.

அப்பொழுது வாசவதத்தை, "கோசலதேசத்தரசன்மகளை மணக்கோலஞ் செய்'' என்று பதுமைக்குக் கூறிவிட்டு அரசனுக்கு மணச்செய்தியைச் சொல்லிவிடுத்தனள். உடனே மணக்கோலத்துடன் அவன்வந்து மணப்பந்தரில் ஆசனத்தின்மீதிருந்தனன். அப்பொழுது வாசவதத்தையும் பதுமையும் விரும்பி அளிக்க அவன் கோசலவரசன் மகளைமணஞ்செய்து கொண்டனன்: அதன்பின்,

> "முற்றிழை மகளிர் மூவரும் வழிபடக்
> கொற்ற வேந்தர் நற்றிறை யளப்ப
> நல்வளந் தரூஉம் பல்குடி தழைப்பச்
> செல்வ வேந்தன் செங்கோ லோச்சி'' (ஃ. 14 : 182-5)

மகிழ்ந்திருந்தான்.

உதயணன் இப்படி யிருக்குங்காலத்தில், இலாவாணநகரத்தின் அயலிலுள்ள சோலையில் முன்பு உண்டாட்டு நிகழ்ந்தபோது இளமைப்பருவத்தில் அவனாற் கண்ணிமுதலியவை சூட்டப்பெற்ற விரிசிகை யென்பவள் அவன் சூட்டியமாலையையன்றி வேறொன்றையும் அறியாதவளாகி விரதத்துடனிருந்து பருவமுதிர்ச்சியடைந்து விளங்கினள். அதனையறிந்த அவள்தந்தையாகிய ஒரு முனிவர்

விரிசிகையின் தந்தைக்கு நிகழ்ந்தவற்றை அவர்கள் சொல்ல, அம்முனிவர் தம் மனைவியை யழைத்து, "விரிசிகையை மணஞ் செய்து கொள்ளும்படி உதயணனிடஞ்சொல்லிச் சேர்ப்பித்து விட்டேன்; இனி உன்னையுந்துறந்து யான் தவஞ்செய்யச் செல்வேன்" என்று கூறினர். கேட்ட அவள் வருந்திப் புலம்பினள். அதனை அம்முனிவர் ஏற்றுக்கொள்ளாதவராகிக் கடிய தவவொழுக்கத்தை மேற்கொண்டு வேறிடஞ் சென்றார்.

பின்னர் அவ்வனத்திலுள்ள மங்கையரில் ஒருசாரார் விரிசிகையால் வளர்க்கப்பட்டு அவளோடு பழகிய குயில்முதலியவற்றையும் தவச்சாலையிலுள்ள அரியபொருள்களையும் அருங்கலன்களையும் கைக்கொண்டு உடன்வர வீதியில் விரிசிகை நடந்து செல்வாளாயினள். கண்டோர், "இவள் முனிவருடைய வேள்வியிற்றோன்றிய தெய்வ மங்கை; இவளை மானிடமங்கை யென்றல் மெய்ம்மையன்று" என்றும், "சூடிய தளிர்க்கோதை வாடுதல்முதலிய நிகழ்ச்சிகள் இவள் தெய்வமங்கையல்லளென்பதைத் தெரிவிக்கின்றன" என்றும், "இவள், கயத்தினின்றும் நீங்கிக் குவளைமலர் பிடித்துப்போந்த நீரர மகள்" என்றும், "நீரரமகளாக இருப்பின் இவளுடைய கண்கள் இமைக்குமோ? உதயணனை மணமகனாகப் பெறுதற்குப் பழம்பிறப்பில் தவஞ்செய்த ஒருத்தி இவள்" என்றும், "உதயணனைச் சார்ந்து போகநுகர்தற்கு வந்த இயக்கி" என்றும், "உதயணன் இவளைவிட்டு நெடுங்காலம் பிரிந்திருந்தது தவறு" என்றும், "இவளுக்கு உறுப்புக்களே அணிகலன்கள்; ஆபரணங்களை அணிவோர் அறிவில்லாதவர்களே" என்றும், "அழகில் தம்மை ஒப்போர் இல்லையென்று எண்ணியிருக்கும் மகளிர் இவளைக் காண்பார்களாக" என்றும், "உதயணனுக்கு இவளே ஏற்றவள்" என்றும் சொல்லாநிற்ப, விரிசிகை தன் அடிகள் சின்மலர் மிதித்துச் சிவந்து சலிப்புறும்படி மெல்ல மெல்ல வீதியில் நடந்துசென்று கோயில்வாயிலை யடைந்தாள். அப்பொழுது அரண்மனையிலிருந்து மங்கலப்பொருள்களை ஏந்திக்கொண்டு சிலர் எதிர்கொண்டனர்; விரிசிகை கோயிலினுள்ளே சென்றனள். தேவியர் மூவரும் செய்யவேண்டியவற்றைச்செய்து அவளுடைய குரவர்போலக் கொடுப்ப உதயணன் அவளை மணஞ்செய்து கொண்டனன்.

அப்பால், தேவியர் நால்வரும் வழிபட மிக்க செல்வத்தோடு கூடிப் பல்லுயிர்களையும் உதயணன் பாதுகாத்து வருபவனாயினன்.

---

ஐந்தாவது

# நரவாண காண்டம்.

பின்பு ஒருநாள் மந்திரிமார்களோடு உதயணன் பேரத்தாணியிற் சென்று வீற்றிருந்தனன். அப்பொழுது ஒழுக்கமுடைய வணிகர்சிலர் நெருங்கிவந்து முறைப்படியே சென்று தமக்குள்ள வழக்கொன்றை உதயணனுக்குத் தெரிவித்தனர். அதனைத் தீர்க்கும்படி உருமண்ணுவாவுக்கு அவன் கட்டளையிட, அவன் அதை நன்கு விசாரித்துத் தீர்ப்புச்சொல்லிவிட்டு மீண்டுவந்து அந்த விவரத்தை உதயணனிடம் கூறினன்; [1] அந்தவழக்கு சந்ததியின்மையால் உண்டாகும் குறையையும் அஃது இருத்தலினால் உண்டாகும் பெருமையையும் புலப்படுத்தியதாதலின் உதயணன், "நமக்குச் சந்ததியில்லையே; மக்களில்லையெனின் மிக்குயர் சிறப்பின் நம்குலம் இடையறுமே" என்ற வருத்தத்தை அடைந்து வாசவதத்தைபாற் சென்றான்.

அப்பொழுது அவள் நோன்பிகளுக்கெல்லாம் உணவளித்து அவர்களுடைய ஆசியைப்பெற்று மங்கலக்கோலத்தோடு மாடத்தின் ஓரிடத்தில் இருந்தனள்; இருக்கையில் ஒருபுறவு தான் வாய்க்கொண்டிருந்த அரிய இரையைத் தன்னுடைய குஞ்சின்வாயிற் சொரிந்ததைக்கண்டு குஞ்சின் பசிவருத்தத்தையும் தாய்ப்புறவினது அன்பின் பெருமையையும் நோக்கி, அதன் அன்பைப் பாராட்டிக்கொண்டிருந்ததை அரசன் வினவியறிந்துகொண்டு, தாகித்தவர்களுக்குத் தண்ணீர்போன்ற அவளுடன் துயின்றான். அப்பொழுது, இடையாமத்தில் ஒருதெய்வமங்கை வந்து, "எம்மிறைவனுகிய குபேரன் உம்மையழைக்கின்றான்; வருக" என்றனள்.

உதயணன், "வாசவதத்தையையும் உடனழைத்துவர என் மனம் விரும்புகின்றது; அதனை நீ அங்கீகரிக்கவேண்டும்" என்றனன். உடனே அவள் இருவரையும் கையில் தாங்கிக்கொண்டு பறந்து

---

1 ஒரு வழக்கைத் தீர்த்ததிலிருந்து தனக்குச் சந்ததியில்லையேயென்ற கவலை துஷ்யந்தனுக்கு உண்டானதாக சாகுந்தலத்தின் 6-ஆம் அங்கத்தால் தெரிகின்றது.

சென்று குபேரனையடைய, அவன் சிங்காசனமொன்றைக்காட்டி அதிலிருக்கும்படிசொல்ல, உதயணன் தேவியோடு அதிலிருந்த பொழுது, குபேரன்கட்டளைப்படி ஒரு மணிமுடியை அத்தெய்வப் பெண் கொணர்ந்து உதயணனுக்குக் கொடுப்ப, அவன்பெற்று வாசவதத்தையுடன் நகர்வந்து அதை அவளுக்களிக்க, அவள் அதைத் தன் மார்பினிற் சேர்த்தினள். உடனே அது சூரியன் போறதோன்றி அவள் வயிற்றிற் புகுந்துவிடவே அவள் அஞ்சித் திடீரென்று எழுந்தாள்; தானும் உடனே எழுந்துவிட்டதாக அவன் கனவொன்றைக்கண்டு ஒரு முனிவரையடைந்து தான் கண்ட கனவைக்கூறி அதன்பயனைச் சொல்லவேண்டுமென்று கேட்ப அவர், "வெள்ளிமலையையாளும் சக்கரவர்த்தியாகிய ஒருபுதல்வனை நீ பெறுவாய்; அவன் வெற்றிபெற்று விளங்குவன்; சிறிதும் ஐயமில்லை" என்றனர். உதயணன் கேட்டு அதனை வாசவதத்தைக்குச் சொல்லி மகிழ்வுற்றிருந்தனன்.

இப்படியிருக்கையில் வாசவதத்தை கருவுற்றாள். அதற்குரிய அடையாளங்கள் அவள்து தேகத்திற்காணப்பட்டன; மயற்கையடைந்து வருந்தினாள்; ஒருநாள் வருந்தித் துயிலுகையில், விடியற்காலத்தில் ஆகாயத்திற்செல்லும் வெள்ளானையொன்று வந்து துதிக்கையைச் சுருட்டிக்கொண்டு தன்வயிற்றிற் புகுந்ததாகவும் அப்பொழுது ஆகாயத்தில் துந்துபிகள் முழங்கப் பலர் துதித்ததாகவும் பின்பு அதனை உமிழ்ந்துவிடவே இறகுகளைப்பெற்று அது பறந்து சென்று ஒரு வெள்ளிமலையின் மேலேறி அதில் விளங்கிய ஒரு சூரியனை விழுங்கியதாகவும் அவள் கனவொன்று கண்டு திடீரென்றஞ்சி எழுந்தாள்.

பின்பு அவள் அதை உதயணனுக்குக்கூறவே அவன், "வித்தியாதரருலகிற் சென்று பெரும்பகைவனொருவனை வென்று அங்கே சக்கரம் செலுத்தும் ஒரு புதல்வனை நீ பெறுவாய்" என்று மொழிந்தனன்.

வாசவதத்தையின் கருப்பத்திலிருந்த குழந்தையினிடம் சிறந்த வித்தை யொன்று இருந்தமையின், மேலே பறந்துசென்று மலைகளையும் பிறவற்றையும் பார்க்க வேண்டுமென்ற எண்ணம் அதற்கு உண்டாயிற்று; அந்த விருப்பத்தை வாசவதத்தையும் அடைந்தனள்; அப்பொழுது கருப்பத்தின் வளர்ச்சியால் அவளுடைய தேகம் மெலிவுற்றது; அதனைக் கண்ணுற்ற உதயணன், "உனக்கு வேண்டுவது யாது?" என்று வினவினன். தான் விரும்பியது கிடைத்

தற்கரியதாதலின், தன்னுடைய எண்ணத்தை வெளிப்படுத்தாமல் இருந்தனள். அவன், "நீ எதை விரும்பினாலும் அதை அளித் தற்குரியேன்; ஐயமுறாதே" என்று சூளுறைந்து வற்புறுத்திக் கேட்க அவள், "வித்தியாதரர்களைப்போல ஆகாயத்திற் பறந்து சென்று பல இடங்களையும் பார்ப்பதற்கு எனது உள்ளம் விரும்பு கின்றது" என்பதை அஞ்சித் தெரிவித்தனள். அவள் விருப்பத்தை முடித்தற்குரிய ஆலோசனைகளை மந்திரிகளுடன் அவன் செய்வா னாயினன்.

அங்ஙனம் ஆராய்ந்துகொண்டிருக்கையில், இலாவாணக நகரத்தி லிருந்துவந்த உருமண்ணுவாவுக்கு வாசவதத்தையின் கருத்து இன்னதென்பதையும் அதை அடைதற்குச்செய்யும் உபாயத்தைத் தான் நாடியிருத்தலையும் உதயணன் தெரிவிக்க அவன், "முன்னொரு காலத்தில்வந்து நம்முடைய [1] தாகத்தைப்போக்கிய இயக்கனை நினைப் போமாயின் அவன்வந்து நம்முடைய கருத்தை முடிப்பான்" என்று அவனைத் தியானித்தற்குரிய மந்திரத்தை எழுதிக்கொடுத்தான்.

உதயணன் அதனையறிந்து தூய்மையோடும் விரதத்தோடு மிருந்து மனத்தை ஒன்றுபடுத்தி அம்மந்திரத்தை ஓதிக்கொண்டி ருந்த காலத்தில் அந்த இயக்கன் விண்ணிலிருந்து இறங்கி அங்கே வந்து அவனது முன்னே நின்றான்.

அவ்வியக்கன் உதயணனைநோக்கி, "மாயயானையைப் பிடிக்கச் சென்று சிறைப்பட்டபொழுதும், வேடர்களின் இடையே அகப்பட்ட பொழுதும், மகதநாட்டில் துயரமுற்றபொழுதும், ஆருணியோடு போர்செய்தபொழுதும் என்னை நினையாமல் மிக்க செல்வத்தால் இன்ப முற்றிருந்த நீ இக்காலத்தில் நினைத்தற்குக்காரணம் யாது?" என்று கேட்டனன்.

உதயணன், "அத்துன்பங்களெல்லாம் யாமே தீர்த்தற்குரியன வாக இருந்தமையின் நினைக்கவில்லை; எங்களால் இயலாதவற்றை விரும்பிய வாசவதத்தையின் விருப்பத்தைப் பூர்த்திசெய்விக்கவேண் டியிருந்தமையின் இப்போது நினைத்தேன்" என்றனன். எனவே அந்த இயக்கன், "உன் தேவியின் வயிற்றில் உறைபவன் வித்தியாதர சக் கரவர்த்தியாதற்கு உரியவன்; அதற்குரிய காரணத்தைக் கேட்பாயாக; விந்தமலையைச்சார்ந்த நருமதையாற்றின் ஒருகரையிலுள்ள பருப்பத

1 நஞ்சுகனென்னும் ஒரு தேவன் வந்து தாகத்தைத் தீர்த்த செய்தியை 7-ஆம் பக்கமுதலியவற்றிற் காண்க.

மென்னும் மலையின்மேற் குபேரன் தன் உரிமைமகளிருடன் இருந்த பொழுது, பத்திரைமுதலாகிய தெய்வமகளிர்எண்பதின்மருள் ஒருத்தியாகிய பத்திராபதி யென்பவளைத் தளிர்முதலியவற்றைக் கொய்து வரும்படி அவன் வெளியே அனுப்பினன்; சென்ற பத்திராபதி அங்ஙனம் கொய்த தளிர்முதலியவற்றைக் கையிலேந்திக்கொண்டு நின்று ஓர் ஆண்யானையால் தழுவப்பட்டுநின்ற பெண்யானையைநோக்கி, 'யானைப் பிறப்பும் விரும்பற்பாலது' என்று எண்ணிக்கொண்டு குபேரனை யடைந்தாள். அவளுடைய எண்ணத்தையறிந்த குபேரன் அவளைநோக்கி, 'தெய்வ இன்பத்தை விரும்பாமல் யானையின் இன்பத்தையே பெரிதாக நினைத்தமையின், மண்ணுலகத்திற் சென்று பெண்யானையாகப் பிறந்து நீ விரும்பியபடி ஆண்யானையுடன் விளையாடிப் போகம் நுகர்க' என்று சாபமிட்டனன். உடனே அவள் நடுநடுங்கி, 'அப்பிறப்பினின்றும் நான் நீங்குதல் எப்பொழுது?' என்றுகேட்டனள். அவளுக்கு, 'நீ பிரச்சோதனனுடைய நகரில் ஒரு பெண்யானையாகப் பிறந்து இந்தப் பெயரையே பெற்று வளர்ந்து வாழுங்காலத்தில் அவ்வரசனால் உதயணனுக்குக் கொடுக்கப்படுவாய். அவன் வாசவதத்தையை உன்மீது ஏற்றி இருளிற் செலுத்தும் பொழுது நீ நெடுந்தூரம் சென்று காலகூடமென்னும் நோயாலும் பெரும்பசியாலும் வீழ்வாய். வீழ்ந்தவுடன் உதயணன் பஞ்சமந்திரத்தை உன்காதில் உபதேசிப்பான். அவ்வுபதேசத்தைப்பெற்று நீ பிறப்பொழிந்து தெய்வவடிவங்கொண்டு இங்கே வருவாய்' என்று குபேரன் கூறினன். அப்படியே நிகழ்ந்தமையின் அவள், உனக்கு ஒரு மாற்றுபகாரம் செய்ய நினைந்து அதற்குரிய உபாயத்தை நாடிக் குபேரனை யடைந்து வணங்கி, 'எனக்கு ஒரு சிறு வரம் தந்தருளல்வேண்டும்' என்று கேட்டனள். கேட்கவே குபேரன், 'நீ விரும்பியதை மறையாமற் சொல்' என்று கட்டளையிட்டனன். அப்போது அவள், 'யான் பிரச்சோதனனது நாட்டின் எல்லை வரையிற் சுமந்துசென்று விழுந்தவுடன் தன்காரியம் முடிந்துவிட்டதென்று நினையாமல் என்பால்வந்து நான்செய்த உதவியை மிகவும் பாராட்டிக் கண்ணீர்விடுத்து என் உடம்பைத் தைவந்து நான் தெய்வப்பிறப்பை யடைந்து இன்புற்று வாழும்வண்ணம் பஞ்சமந்திரத்தை என்காதில் உபதேசித்து உதயணன் தன் கடனைக் கழித்தனன். அவனுக்கு ஒரு மகன் உண்டாகும்படி அருள் செய்யுமாறு வேண்டுகின்றேன்' என்று கேட்கவே குபேரன், அந்த வரத்தை அவளுக்குக் கொடுத்துவிட்டு விண்ணுலகத்துள்ள செளதர்மேந்தி

ரனை அடைந்து உன் பெருமை முதலியவற்றை அவனுக்குச் சொல்லி, 'உதயணனுக்கு மகிழ்வளிக்கத்தக்க ஒரு புதல்வன் பிறக்கவேண்டும்' என்று கூறினன்; செளதர்மேந்திரன், 'வெள்ளியம் பெருமலையிற் சக்கரவர்த்தியாக இருக்கவேண்டுமென்ற விருப்பத்தோடு சோதவனென்னும் முனிவனொருவன் தவஞ்செய்து கொண்டிருக்கின்றனன். அவன் உதயணனுக்குப் புத்திரனாகப் பிறந்து வித்தியாதர சக்கரவர்த்தியாகி அரசாட்சி செய்துவிட்டு என்பால்வருவான்' என்று விடையளித்து அவனை வருவித்து, 'நீ வாசவதத்தையின் வயிற்றில் தங்கிப் பிறப்பாயாக' என்று கட்டளையிட்டனன். ஆதலால், உனக்குச் சிறந்த குமாரன் உண்டாதல் தப்பாது. அந்தப் பத்திராபதி, உனக்கு இன்னும் ஏதேனும் ஓர் உதவி செய்ய வேண்டுமென்ற விருப்பத்துடன் இருக்கின்றனள். அவளை நினைத்தால் வந்து உன் குறையை அவள் தீர்ப்பாள். அங்ஙனந் தீராளாயின், யான் திரும்பவும் வந்து தீர்ப்பேன்" என்று சொல்லிப் பத்திராபதியை அழைத்தற்குரிய மந்திரமொன்றை உபதேசித்து விட்டுப் பல உபசாரமொழிகளால் உதயணனைப் பாராட்டித் தழுவி விடைபெற்றுத் தன்னிடஞ் சென்றனன். அப்பால் உதயணன் அம்மந்திரத்தை ஓதி உருவேற்றிக்கொண்டிருந்தான்.

பின்பு, "வாசவதத்தையின் விருப்பத்தைத் தீர்த்தற்கு உபாயம் யாது?" என்று நாடி அவன் பல இடங்களிலிருந்தும் தச்சர்களை வருவித்து, "வாசவதத்தை ஊர்ந்து ஆகாயவழியே சென்று பல இடங்களையும் பார்த்து வருதற்குரிய எந்திர விமானமொன்றைச் செய்வித்திடுக" என்று சொன்னபொழுது அவர்கள், "எம்மால் அவ்விமானம் செய்தற்கரியது" என்றனர்.

இதனை அறிந்த பத்திராபதி, "நாமே தச்சவடிவங்கொண்டு சென்று இக்காரியத்தை முடிப்போம்" என்று நினைந்து ஒரு தச்சு வினையிளைஞன்போலவே அங்கே வந்து உருமண்ணுவாவால் அரசனையடைந்து, "இத்தச்சர்கள் அதைச்செய்ய அறியார்; யான் அதை எளிதிற் செய்வேன்" என்று தெரிவித்தனள்.

அரசன் உடன்பட்டு அதற்குவேண்டியவற்றைக் கொடுக்க, அவற்றைக்கொண்டு சென்று சில தினத்தில் பத்திராபதி எந்திரவிமானமொன்றைச் செய்து முடித்து வந்து அரசனிடம் தெரிவித்தனள்.

உதயணன் சென்று அதனைக்கண்டு உமையொடு புணர்ந்த இமையா நாட்டத்துக் கண்ணணங்கவிரொளிக் கடவுளைப்போல வாச

வதத்தையோடு அதில் ஏறியிருந்து விளங்கினன். [1] உருமண்ணுவா முதலிய தோழர் நால்வரும், "எங்கள் மனைவியர்களும் கருப்பமுற்றவர்களாதலின், இதில் ஏறிச் செல்லும் விருப்பமுடையார்" என்று சொல்ல உதயணன் பத்திராபதியினுடைய அநுமதியைப்பெற்று யூகி முதலிய தோழர் நால்வரையும் அவர்களுடைய மனைவியர்களையும் அதில் ஏற்றினன். பத்திராபதி, அதனை ஆகாய வழியே செலுத்திக்கொண்டு பொன்மலைமுதற் பொதியில்மலை இறுதியாகிய பல மலைகளையும் பல காடுகளையும் பல தேயங்களையும் பல நகரங்களையும் பின்னுங் காட்டவேண்டிய இடங்கள் பலவற்றையுங் காட்டிவிட்டு மீட்டும் கௌசாம்பி நகரம் வந்து சேர்ந்தனள்.

சேர்ந்தபின் உதயணன் விமானஞ்செய்த தச்சுவினை யிளைஞன் போல உதவிய பத்திராபதியை யழைத்து மிக்க உபசாரமொழிகளைக் கூறி, "எங்களுடைய பெருந்துயரத்தைத் தீர்த்த உனக்கு எம்மாற் செய்தற்குரிய கைம்மாறு யாது?" என்று சொல்லித் தன்னுடைய அணிகலங்களை யெல்லாம் கழற்றிக் கொடுக்கத் தொடங்கிய பொழுது பத்திராபதி அவற்றைக்கொள்ளாமல் தன் பழைய வரலாறு முழுவதையுஞ் சொல்லி, "நான் பத்திராபதியென்னும் பெண்யானையாக இருந்தபொழுது, என்னுடைய மரணகாலத்தில் நீர் செய்த உதவிக்கு மாறாக என்னாற் செய்தற்குரியது ஒன்றுமில்லை. நீரும் நானும் வேறலம்" என்று சொல்லி விடைபெற்றுத் தன்னுடைய பண்டைத்தெய்வப் பெண்வடிவத்தைக் கொண்டனள்.

பின்னர் அவள் ஆகாயவழியே செல்லுதற்குரிய மந்திரமொன்றை அவனுக்கு உபதேசித்துவிட்டுத் தன்னிடஞ்செல்ல, உதயணன் முதலியோர் அவளை நோக்கிப் புகழ்ந்து வழிபட்டனர்.

உதயணன் வாசவதத்தையை மிகவும் பாதுகாத்து அவளுக்கு வேண்டியவற்றைச் செய்து வந்தபொழுது அவள் நல்ல நாளில் ஆண் குழந்தை யொன்றைப் பெற்றாள். பின்னர் யூகி முதலிய நால்வர்களுடைய மனைவியரும் ஆண்குழந்தைகளைப் பெற்றார்கள். அப்போது உதயணனும் தோழர்களும் மற்றையோரும் மிக்க தான தருமங்களைச் செய்தனர்; முரசறைவித்து நாட்டினர்க்கும் நகரத்தினர்க்கும் சிறப்பயருமாறும் தெரிவித்தனர்.

---

1 உருமண்ணுவா முதலிய மூவருக்கும் விவாகமானபொழுதே யூகிக்கும் முதன்முறை விவாகமாகி யிருக்கவேண்டுமென்பது இதனால் அறியப்படுகின்றது.

அச்செய்தியை உதயணன் தருசகனுக்கும் பிரச்சோதனனுக்கும் மற்றையோருக்கும் சொல்லிவிடுத்தான். பன்னிரண்டு தினங்கள் சென்றன. பின்பு நாமகரணஞ் செய்யத் தொடங்கினர். உதயணன் புதல்வன் குபேரனாற் கொடுக்கப்பட்டவனாதலின், அவனுக்கு நரவாணதத்தனென்னும் பெயர் இடப்பட்டது. யூகியின் புதல்வனுக்கு மருபூதியென்றும் உருமண்ணுவாவின் புதல்வனுக்கு அரிசிகனென்றும் வயந்தகன் புதல்வனுக்குத் தவந்தகனென்றும் இடவகன் புதல்வனுக்குக் கோமுகனென்றும் பெயர்கள் இடப்பட்டன. நகரத்தார் பலவாறு புகழ்ந்து பாராட்டினர். பிள்ளைகள் நாளுக்குநாள் பிறைபோல வளர்ச்சியடைந்தார்கள்.

அப்பால், [1] பதுமாபதி கருவுற்று ஒரு புதல்வனைப்பெற்றாள்; அவனுக்குக் கோமுகனென்னும் பெயர் இடப்பட்டது.

உதயணனால் அனுப்பப்பட்ட தூதர்கள் யூகியுடன் உச்சையினியை அடைந்து பிரச்சோதனனுக்கு அச்செய்தியைத் தெரிவித்தனர். அவர்களுக்குப் பிரச்சோதனன் மிக்க சம்மானமளித்தான். தன்னுடைய ஆட்சிக்குட்பட்ட பதினாறாயிரம் நகரங்களில் உள்ளவர்களையெல்லாம் வருவித்து அவர்களுக்கு நன்கொடையளித்தனன்; விழாவெடுப்பித்தனன்.

அப்பால் அவன் ஒருநாள் பேரத்தாணியிலிருந்து யூகியைக் கௌசாம்பிக்கு அனுப்பவெண்ணித் தன்னுடைய மந்திரிகளுள் மேம்பட்ட சாலங்காயனையும் யூகியையும் வருவித்து எதிரே இருக்கச்செய்து அவர்களுடைய கல்வியை அளத்தற்கு எண்ணி நீதிநூல்வாதம் செய்வித்தனன்; அவ்விருவர்க்கும் வாதப்போர் நடந்தது. அப்போரில் யூகி வென்றனன். அப்பொழுது,

> "ஏற்ற முகத்தி னிறைவனும் விரும்பி
> நண்பின் மாட்சியுங் கல்விய தகலமும்
> பண்பின் றொழிலும் படைத்தொழின் மாண்பும்
> காயு மாந்த ராயினும் யாதும்
> தீயவை கூறப் படாத திண்மையும்
> இவற்கல தில்லை யிவனாற் பெற்ற
> அவற்கல தில்லை யரசின் மாட்சி" (பெ. 7 : 106-12)

என்று யூகியைப் பலபடப் பாராட்டிப் பரதகனென்னும் மந்திரியின் தங்கையாகிய திலகசேனையையும் சாலங்காயன் தங்கை யாப்பியையும் அவனுக்கு மணஞ்செய்வித்து,

---

1 இச்செய்தி வேறுநூல்களிலிருந்து அறிந்து எழுதப்பட்டது.

"நவில்தொறு மினிய ஞானம் போலப்
பயில்தொறு மினியநின் பண்புடைக் கிழமை
உள்ளுதொ றுள்ளுதொ றுள்ள மின்புறப்
பிரிவுறு துன்ப மெம்மாட் டெய்த (ஞ. 7 : 148-51),

கௌசாம்பி நகரஞ் செல்வாயாக; உதயணன் உன்னை அனுப்பும்படி தெரிவித்தமையாலேயே இப்பொழுது அனுப்பத் துணிந்தேன்; உன்னைப்போன்ற நல்லொழுக்கமுடையவர் உலகத்தில் உளரோ?" என்றுகூறி உபசரித்து அனுப்பினன்.

அவன்கொடுத்த அருங்கல முதலியவற்றை முன்னரனுப்பி விட்டு அவன் அளித்த பெருஞ்செல்வத்தோடு யூகி பின்பு புறப்பட்டுக் கௌசாம்பிக்குச் சென்றனன்.

கௌசாம்பி நகரத்தில் யூகி உதயணனைக்கண்டு பிரச்சோதனன் செய்த முகமன்களையும் பிறவற்றையும் கூற, உதயணன் மகிழ்வுற்றுத் தோழர்களோடு அளவளாவி அரசாட்சி செய்துகொண்டிருந்தனன்.

நரவாணதத்தன் நாள்தோறும் பெருகுதலுற்று மருபூதிமுதலிய நான்கு தோழர்களோடும் கூடித் தருமநூல் முதலியவற்றிலும் தனுர்வேதத்திலும் மிக்க பயிற்சியையுடையவனாகிக் காளைப்பருவமுற்றுக் கொடைக்கடம்பூண்டு மேம்பாட்டுடன் விளங்குவானாயினன்.

அப்பொழுது அந்நகரத்திற் கல்வி கேள்விகளிற் சிறந்தவர்களாகிய இரண்டாயிரத்தைந்நூறு கணிகையர்களுட்சிறந்தவளான கலிங்கசேனையென்பவளுடைய மகள் [1] மதனமஞ்சிகையென்பவள் தன்னுடைய மாடத்தின் மேலுள்ள நிலாமுற்றத்தில் தோழிமாரோடு ஆடிய பந்துகளில் ஒன்று சாளரத்தின் வழியே வந்து, வீதியில் தோழர்கள் சூழ யானையின்மேற்செல்லும் நரவாணதத்தனுடைய மெல்லிய துகிலின்மேல் விழுந்தது. அதனை அவன் எடுத்துப்பார்த்து, "இதனைஇட்டவள் யார்?" என்று யானையிலிருந்தபடியே எட்டிப் பார்த்தனன். அப்பொழுது அங்கே காணப்பட்ட மதனமஞ்சிகையின் அழகிய வடிவம் அவன் மனத்தைக்கவர்ந்தது. அதனால் மயங்கி அவன் செயலற்றிருந்து பின்பு அப்பந்தையே தனக்குத்துணையாகக் கொண்டு சென்று ஒரு சோலையிலிருந்து உடன்வந்த தன் தோழனாகிய கோமுகனையழைத்து, "இப்பந்தை எறிந்த மங்கையை நீ அறிவாயாயிற் சொல்லவேண்டும்" என்று வினவினன்.

1 மதனமஞ்சிகையென்பவள், கௌசாம்பியிலிருந்த தனமித்திரனென்னும் வணிகனுக்குக் கலிங்கசேனையென்பவள்பால் தோன்றியவளென்று உதிதோதயகாவ்யத்தால் தெரிகின்றது.

சித்திரவித்தையிற் சிறந்த கோமுகன் அப்பந்தைக் கைக்கொண்டு சந்தனம் பூசிய கையால் அம்மங்கை அழுந்தப் பிடித்திருந்தமையின் விரல் நிரைகளின் சுவடுகள் அதில் அழுந்தியிருந்ததையறிந்து அவளுடைய வடிவ முழுவதையும் மனத்தாலுணர்ந்து,

"விரலும் விரலிற் கேற்ற வங்கையும்
அங்கைக் கேற்ற பைந்தொடி முன்கையும்
முன்கைக் கேற்ற நன்கமை தோளும்
தோளிற் கேற்ற வாளொளி முகமும்
மாம்படு வடுவுறழ் மலர்நெடுங் கண்ணும்
துப்பன வாயு முத்தொளி முறுவலும்
ஒழுகுகொடி மூக்கு மெழுதுநுண் புருவமும்
சேடமை செவியுஞ் சில்லிருங் கூந்தலும்" (ூ. 8 : 100-107)

ஆகியவற்றையுடைய ஒரு பெண்வடிவத்தைப் படத்திலெழுதிக் கொணர்ந்து அப்படத்தை நரவாணதத்தனுக்குக்காட்டி, "இவ்வடிவத்தைப் போன்ற வடிவமுடையாள் இந்நகரத்தில் மதனமஞ்சிகையென்பவள் தான்" என்று சொல்லிவிட்டுப் பொற்பரிசங்களோடு அவள் வீட்டிற்குச்சென்று அவளுடைய நற்றாயைக்கண்டு நிகழ்ந்ததைக் கூறினன்.

கூறவே அவள், "வழிபடுதெய்வம் வரந்தருகின்றது" என்று சொல்லி விரும்பி உடன்பட்டனள். அவளுடைய சுற்றத்தார், "உதயணனுடைய அநுமதியைப்பெறுமல் அரசகுமாரனுக்கு இவளைக்கொடுத்தல் மிக்க தவருகும்" என்று மறுத்தனர். கோமுகன் அதனை உதயணனுக்குத்தெரிவிக்க, அவன் பெரிதும் உவந்து வாசவதத்தையின் அநுமதிபெற்று நரவாணதத்தனுக்கு மதனமஞ்சிகையை நல்ல நாளில் மணம் புரிவித்தனன்.

அப்பால் கௌசாம்பிநகரத்தில் மிக்க சிறப்புடன் விழாவொன்று நடைபெற்றது. அக்காட்சியைப் பார்க்க விரும்பி வித்தியாதர நகரத்துள்ள நூற்றுப்பத்து அரசர்களுட் சிறந்தவனாகிய மானசவேகனென்பவன் அங்கே வந்து அந்நகரத்துச் சிறப்புக்களையெல்லாம் பார்த்துக்கொண்டு சென்றனன். அப்போது அரண்மனையினுள்ளே செயற்கையாகிய நால்வகை நிலங்களும் சூழ்ந்த ஒரு சோலையினிடையேயுள்ள கட்டுமலை யொன்றன் சிகரத்தில் நின்றுகொண்டு நகரில் நிகழும் விழாவணியைப் பார்ப்பவளாகிய மதனமஞ்சிகையை அவன் கண்டு வியந்து அவளை எடுத்துக்கொண்டு தன் நகரஞ் செல்லுதற்குச் சமயம் பார்த்துக்கொண்டேயிருந்தான்.

அவன் அப்படியிருக்கையில், நரவாணதத்தனும் மதனமஞ்சிகையும் ஒரு பூஞ்சோலையையடைந்து அங்கேயுள்ள கொடிவீடொன்றைச் சார்ந்து மெல்லிய மலர்கள் பரப்பிய அணையில் அயர்ந்து நித்திரைசெய்தனர். அதனைக்கண்ட மானசவேகன் தன் மாயையால் நரவாணனை மிகவும் நன்றாகத் துயிலும்படிசெய்துவிட்டு மதனமஞ்சிகையைமட்டும் மெல்லத் தூக்கியெடுத்துக்கொண்டு ஆகாயத்திலெழுந்து, "இன்று மிகச்சிறந்த அருமையான பொருளொன்றைப் பெற்றோம்" என்று [1]மகிழ்வுற்றுச்சென்று தன்னகரையடைந்து அவளை ஒரு சிறந்த இடத்தில் மெல்ல வைத்தனன்.

மதனமஞ்சிகை துயிலுணர்ந் தெழுந்து நாற்புறத்தையும் பார்த்து, "இந்த இடம் மிகவும் புதிதாக இருக்கிறதே; இங்கே நாம் வந்ததற்குக் காரணம் யாது?" என்று கவலையுற்று மயங்கி வருந்துவாளாயினள். அப்போது மானசவேகன் அவளையடைந்து தன் விருப்பத்தைத் தெரிவித்தனன். அவள் உடன்படாமல் மறுக்கவே அவன் ஏங்கி, "மதனமஞ்சிகையின் மனத்தை எப்படியாவது வேறுபடுத்திவிட்டு வா" என்று தன் தங்கையாகிய வேகவதியென்பவளை அவள்பால் அனுப்பினன். அவள் வந்து மானசவேகனது உயர்வை எடுத்துக்கூறி, "நீ என் தமையனுக்கு உரியவளாக இருப்பாயாயின், மிக்க இன்பத்தை அடைவாய்" என்று காரணங் காட்டிப் பலவாறு வற்புறுத்திக்கூறியபொழுது மதனமஞ்சிகை, "அழகு, கல்வி, வீரமுதலிய எல்லாவற்றிலும் மேம்பட்டுச் சிறந்து விளங்கும் என்னுடைய தலைவன் நரவாணதத்தனை இனி அடையேனாயின் யான் உயிரைநீத்தல் ஒருதலை" என்று மறுத்துக் கூறினள்.

அப்பால் தன் தமையனது கட்டளையை வேகவதி மறந்து நரவாணதத்தன்பால் வேட்கை மிகுந்து, "எப்படியும் அவனைக் கணவனாக விரைவில் அடைந்துவிடவேண்டும்" என்ற வேகமுடையவளாய் உடனே விமானமூர்ந்து புறப்பட்டுவந்து கௌசாம்பிநகரையடைந்தனள்; அப்போது நரவாணன் மதனமஞ்சிகையின் பிரிவாற்றாமல் வருந்தி மயங்கிச் சோலையெங்கும் அவளைத்தேடி அலமந்து உழன்று கொண்டிருந்தான். அவன் வடிவை வேகவதி பார்த்து

---

1 இதன் பின்னுள்ள கதைக்குரிய மூலப்பகுதி ஏட்டுப்புத்தகத்திற் காணப்படாமையின், **உதீதோதயகாவ்யமுதலிய** வேறுநூல்களிலிருந்து படித்தறிந்து எழுதலாயிற்று.

மிக வியந்து விருப்பம் மிகப்பெற்று ஒரு விச்சைவலியால் மதனமஞ்சிகையின் வடிவத்தைத் தானெடுத்துக்கொண்டு ஒரு கொடிவீட்டில் இருந்தனள்; அங்கே மதனமஞ்சிகையைத் தேடித் திரிந்துகொண்டிருந்த நரவாணன் வந்துகண்டு கவலையொழிந்து மிக்க பரபரப்புடன் அவளைத் தழுவியின்புற்றான்; பின்னர் அவன் ஐயுற்று, "நீ யார்?" என்ன, அவள் தான் இன்னாளென்பதையும் தன் தமையனாகிய மானசவேகன் மதனமஞ்சிகையை விரும்பிக் கைப்பற்றிச் சென்றதையும் அவள் அவனுக்கு இணங்காமல் ஊணுறக்கமின்றி வருத்தமுற்றிருத்தலையும் தான் வந்ததற்குக் காரணத்தையுங்கூறிப் பின்பு தனது உண்மை உருவத்தைக் காட்டினள். கண்ட நரவாணன் மகிழ்ந்து மதனமஞ்சிகையை மறந்து வேகவதிபால் அன்புற்றுக் காமபரவசனாகி அவளுடன் எப்பொழுதும் இருப்பானாயினன்.

இவர்கள் இப்படியிருக்க, மானசவேகன் தன் தங்கையைக் காணாகிப் பல இடங்களிலும் தேடிக்கொண்டு வந்து கௌசாம்பியைச் சார்ந்த சோலையிலிருந்த அவ்விருவரையுங் கண்டு சினமுற்று அவர்களைப்பற்றிக்கொண்டு ஆகாய மார்க்கமாகச் சென்றனன்; அப்பொழுது இடைவழியில் நரவாணனைத் திடீரென்று கீழே தள்ளிவிட்டான்; வேகவதி தன் விச்சைவலியால் அவனுக்கு யாதொரு துன்பமும் தோன்றாதபடி செய்வித்தனள். நரவாணன் வீழ்ந்த இடம் [1] சதானிகமுனிவருடைய தவப்பள்ளியாதலின், அம்முனிவருடைய மகிமையைக் கேட்டறிந்த அவன் தன் துன்பத்தை அவர் எப்படியும் தீர்த்துவிடுவாரென்று நிச்சயித்துச்சென்று அவரை அன்புடன் வணங்கினான்.

சதானிகர் ஞானத்தால் அவனை இன்னானென்று அறிந்து, "உதயணனுடைய புதல்வனே! உனக்கு மங்களமும் அறிவுமுண்டாகுக" என்றனர்; "நம் தந்தையின் பெயரை இவர் எப்படி யறிந்தனர்?" என்று வியப்புற்று அவன், "தேவரீர் யாவர்?" என்று கேட்டபொழுது அவர், "யான் உன்னுடைய தந்தையின் தந்தை" என்றதன்றித் தன் வரலாறு முழுவதையும் கூறினர். அவன், "வித்தியாதரருலக ஆட்சியை நான் பெறுதல்கூடுமென்று முன்னம் கேட்டுளேன். அதனைப் பெறுதற்கு உபாயம் யாது" என்றுகேட்ப அவர், "உன்னுடைய நகரமடைந்து உதயணன்பால் ஆகாயமார்க்க

1. இவர் உதயணன் தந்தை.

மாகச்செல்லுதற்குரிய விச்சையைப்பெற்று அதன்மகிமையால் அந்த ஆட்சியைப் பெறுவை" என்றனர்.

பின்பு நரவாணன் அவரை வணங்கி அவர் சொல்லியபடி கௌசாம்பியைச் சார்ந்து தன்னைக் காணுமல் தேடித்தேடி வருத்த முற்றிருக்கும் தாய்தந்தையரை யடைந்து வணங்கி நிகழ்ந்தவற்றைக் கூறினன். உதயணன் அவனுக்கு மேற்கூறிய மந்திரத்தை உபதேசிக்கவே நரவாணன் விமானமூர்ந்து சென்று [1] விசயார்த்தமென்னு மலையின் தென்பாகத்திலுள்ள ஸ்ரீதரமென்னும் நகரத்தை யடைந்து அதன் கோட்டை வாயிலில் தங்கியிருந்தனன்.

அப்பொழுது ஒருவன்வந்து வணங்கி, "கந்தருவபுரத்தின் அரசனுகிய நீலவேகனுக்கு நாகதத்தையென்பவளிடம் தோன்றிய அநங்கவிலாசனியென்பவள், முன்னொருநாள் துயிலும்பொழுது ஒரு சிங்கக்குட்டி பூமியிலிருந்து வந்து தனக்கு மாலைசூட்டியதாகக் கனவொன்றைக்கண்டு அதனைத் தந்தைக்குத் தெரிவித்தனள். அவன் சுமித்திரரென்னும் முனிவரையடைந்து வணங்கி அக்கனவைத் தெரிவித்து அதன்பயனை வினவினன். அவர், 'பூமியிலிருந்து தீரனை ஒரிளைஞன் வந்து உன்மகளுக்கு மாலைசூட்டுவான்; சூட்டியபின் அவன் இங்கே சக்கரவர்த்தியுமாகி எல்லா அரசர்களையும் அடக்கி ஆட்சிபுரிந்து விளங்குவான்' என்று விடையளித்தனர். அளிக்கவே உம்முடைய நல்வரவை நாடோறும் நோக்கிக்கொண்டேயிருக்கும் அவன் நீர் இங்கே வந்தமையறிந்து தன்பால் உம்மை அழைத்துவரும்படி கட்டளையிட்டனன்" என்று தெரிவிக்க, நரவாணன் மகிழ்ந்து அவனுடன் அவ்வரசனையடைந்து அவன்வேண்டுகோளின்படி அநங்கவிலாசனியை மணந்தான்; பின்பு அங்கேயே தங்கியிருந்தனன்.

அப்பொழுது பழம்பிறப்பிற்செய்த புண்ணியத்தின் பயன்கள் முறையே அவனை அடைவனவாயின; இந்திரன் கட்டளையால் தேவர்கள்வந்து அவனுக்கு நவநிதிகளையும் அளித்துச்சென்றனர். அவனது விறலை அறிந்த அவ்வுலகத்து அரசர்களெல்லோரும் வந்து வணங்கிப் பணிந்து திறைகொடுத்து அவன்கட்டளைப்படி ஒழுகுவாராயினர். அச்செய்திகளையறிந்த மானசவேகன் மிகவுமஞ்சித் தன்னிடமிருந்த மதனமஞ்சிகையை அழைத்துவந்து நரவாணன்பாற் சேர்ப்பித்துவிட்டு, "என் குற்றத்தைப் பொறுத்தருளவேண்டும்" என்று

[1] இது வித்தியாதரர்களுக்கு உறைவிடமாகிய ஒரு வெள்ளிமலையென்பர்

வேண்டினன்; பின்பு அவன் தன் தங்கை வேகவதியையும் அன்புடன் நரவாணனுக்கு மணஞ்செய்வித்தனன்.

தன் பிரிவால் வாட்டமுற்றிருந்த மதனமஞ்சிகையை நரவாணன் தழுவி இனிய மொழிகளால் மகிழ்வித்து அவளோடும் வேகவதி அநங்கவிலாசனியென்பவர்களோடும் பின்பு அங்கே மணஞ்செய்த எண்ணூயிரந் தேவிமாரோடும் இன்புறுபவனாகி ஒற்றைச் செங்கோல் செலுத்திச் சக்கரவர்த்தியாகி அவ்வுலகை ஆண்டுவந்தான்.

அக்காலத்தில் தன்னுடைய இருமுதுகுரவர்களைத் தரிசிக்க வேண்டுமென்ற விருப்பம் அவனுக்கு உண்டாயிற்று. அதனால் அவன் பரிசனங்களோடும் மனைவிமாரோடும் புறப்பட்டுக் கௌசாம்பி நகரமடைந்து தாய்தந்தையரை வணங்கினன். அவனுடைய பெருமையைக்கேட்டு அவர்கள் மகிழ்ந்தார்கள்.

அப்பால் நரவாணதத்தன் பதுமையின் புதல்வனை கோமுகனை இளவரசாக நியமிக்கும்படி தந்தையை வேண்டி அவ்வண்ணஞ்செய்வித்துவிட்டு விடைபெற்றுக்கொண்டு மனைவிமார்முதலியவர்களோடு வித்தியாதர உலகத்தை அடைந்து அரசாட்சிசெய்துகொண்டு வாழ்வானுயினன்.

மனிதனுகப்பிறந்து வித்தியாதர சக்கரவர்த்தியாக விளங்கிய அவனுடைய புண்ணியமிகுதியை யாவரும் அறிந்து பாராட்டுவாராயினர்.

---

ஆறுவது

# துறவுக் காண்டம்.



உதயணன், தனக்கு ஒப்பற்ற யூகி மந்திரியானதும் வாசவதத்தை மனைவியானதும் வித்தியாதர சக்கரவர்த்தியாக விளங்கும் நரவாணதத்தன் புதல்வனானதும் பிறநலங்களும் தவத்தின் பயனேயாதலால், பின் தான் மேற்கொள்ளற்பாலது தவமே யென்று துணிந்து செல்வத்தை வெறுத்தனன். அதனையறிந்த தேவிமார் நீர்விளையாட்டு முதலியவற்றால் அவன்மனத்தை வேறுபடுத்தித் தம்மையே கருதி யொழுகச்செய்ய, அவன்மனம் அந்தவழியிற் சிலநாட்கள் சென்றது.

பின்பு ஒருநாள் உதயணனுடைய பட்டத்து யானை மதங்கொண்டு புறப்பட்டு நகரை அழிக்கத்தொடங்கி யாருக்கும் அடங்காமற் பாகர்களையும் குத்துக்கோற்காரரையும் பிளந்தெறிந்தது; அதனால் நகரம் நடுங்கியது.

அக்காலத்தில் அந்நகரத்தை அடுத்த சோலையொன்றில் தவத்தாற் சித்திபெற்ற சாரணர் பலர்வந்து தங்கினார்கள். அவர்களுக்குத் தலைவரான தருமவீரரென்பவர் தம்மை அடைந்தவர்களுக்கு வழக்கப்படி அங்கே தருமோபதேசஞ்செய்து வருவாராயினர். அவ்வுபதேசமொழிகளை விலங்குகளும் பறவைகளும் கேட்பனவாய்த் தத்தஞ்செயல்களை மறந்து உணவொழிந்து தாம்செய்த பாவங்களை நினைந்து துன்புற்றவண்ணமாய் அடங்கிநின்றன; மேற்கூறிய பட்டத்து யானையும் இயல்பாகவே அங்கேவந்து அந்த அறவுரையைக் கேட்டுக் கோபம் நீங்கித் தன் பாவச்செயல்களுக்கு அஞ்சிக் கண்ணீரை உகுத்துக்கொண்டு யாதொரு கொடுஞ்செயலுமின்றி அரண்மனைவாயிலில்வந்து நின்றது.

யானைவந்து அடங்கிநிற்பதை வாயில்காவலர் அரசனுக்குத்தெரிவிக்க, அவன்வந்து பார்த்து வியப்புற்று நின்றனன்; அப்போது யூகி, "ஏதோ அறவுரையைக்கேட்டு இது பக்குவமுற்று அடங்கி நிற்கின்றது போலும்; இனி ஊர்ந்து செல்லுதற்கு இது தகுதியுள்ளது"

என்றனன். உதயணன் அதன்பிடரியில் ஏறியபொழுது யானை அவனை மிக்க விருப்பத்துடன் தாங்கிக்கொண்டு சென்று மேற்கூறிய வனத்தை யடைந்து நின்றது. அரசன் அவ்வனத்திற் பெரியோர் பலர் வந்திருத்தலை யறிந்து இறங்கி வழிபாட்டுடன்சென்று தரும வீர முனிவரை வணங்க, அவர் அவனுக்கு ஓர்இருக்கையையளித்துத் தருமோபதேசஞ் செய்தனர். அதனைக்கேட்ட அரசன் இன்புற்று, "இந்த யானையின் பண்டை வரலாறு என்ன?" என்றுகேட்ப அவர், "சாலியென்பதொரு நாட்டில் கடகமென்பதோரூரிலுள்ள இடபகனென்பவனும் அவன்மனைவி சாலியென்பவளும் இல்லறம் நடத்திக்கொண்டு வருகையில், அவன் பண்டைப் பாவவசத்தால் அமரிகையென்னும் ஒரு கணிகைவயத்தனாய்க் குலவொழுக்கத்தை விட்டுவிட்டு மிக்க பாவத்தொழில்களைச் செய்வானாயினன். இறந்த பின்புஅவனே இந்த யானைப்பிறப்பை யடைந்தனன்; அதனால் இந்த யானை தருமங்களைக் கேட்டவுடன் கொடுஞ்செய்கைகளைத் துறந்து அடங்கிநின்றது" என்றனர்.

கேட்ட உதயணன் அதை நன்கு பாதுகாக்கும்படி பாகர்களுக்குக் கட்டளையிட்டு அதன்பக்கத்தை யடைந்து, "யானையரசே! உனக்கு யான்செய்வித்த துன்பங்களைப்பொறுத்துக்கொள்" என்று சொல்லி அதனை அன்புடன் தைவந்து தன்னிடம்அடைந்தனன். அதன் வரலாற்றைக்கேட்ட யாவரும் வியப்புற்றுத் தருமோபதேசத்தின் பெருமையைப் பாராட்டினர்.

அப்பால் அரசனுக்கு வைராக்கிய முண்டாக, அவன் நரவாணதத்தனை வருவித்து, "நீ இந்த அரசாட்சியை ஒப்புக்கொள்; துறந்து தவஞ்செய்தற்கு என்மனம் விரைகின்றது" என்று சொல்ல, அவன் வணங்கி, "அடியேனுக்கும் அரசாட்சியிற் சிறிதும் விருப்பமில்லை; துறத்தற்கே என்மனம் விரைகின்றது" என்று தன்கருத்தைத் தெரிவித்தான்; பின்பு உதயணன் பதுமையின் புதல்வனாகிய கோமுகனை யழைத்து அவனுக்கு முடிசூட்டிவிட்டுச் சென்று தேவியருக்குத் தன்கருத்தைத் தெரிவித்தனன். அவர்களும் உடன்வந்து தவஞ் செய்வதாகக் கூறினர். யூகிமுதலிய மந்திரிகள் நால்வரும் வாசவதத்தைமுதலிய தேவிமாரும் பிறரும் புடைசூழ்ந்து வர உதயணன் தவவனஞ்சென்று அங்கே தவஞ்செய்துகொண்டிருந்த தருமச்சுருதியென்னும் முனிவரைச் சரணமடைந்து துதித்து, "அடிகேள்! தவவழிகளை உபதேசித்து அடியேங்களை உய்வித்தருளவேண்டும்"

என்று பிரார்த்தித்தனன். அவர் சினதருமங்களை விரிவாக உபதேசித்தனர். உபதேசித்தபின்பு அவன் அப்பொழுது செய்ய வேண்டிய நியமங்களை முடித்துக்கொண்டு தியானாதிகளைச் செய்வானாயினன். தவவொழுக்கமும் ஒளியும் அவன்பாற் சிறந்துவிளங்கின.

பின்பு உதயணமுனிவன் யோகசமாதியைச் செய்துமுடித்துச் சித்தபதத்தை யடைந்தான். தேவியரும் மந்திரிகளும் தவஞ்செய்து கற்பலோகத்தையடைந்து இன்புற்று வாழ்ந்தார்கள்.

---

உ

கணபதி துணை.

# பெருங்கதை

## முதலாவது உஞ்சைக் காண்டம்.

### ௩௨—கரடு பெயர்த்தது.

(பிரச்சோதனனை நோக்கி உதயணன் கூறல்)

..............*பொருள்புரி நூலும்
அலகை சான்ற வுலக புராணமும்
பலவகை மரபிற் பாசண் டியர்கள்

---

## குறிப்புரை

### ௩௨—கரடு பெயர்த்தது.

*கரடு - யானையின் மதச்செருக்கு.*

[உதயணன் பிரச்சோதனனுடைய விருப்பத்தின்படி அவனது பட்டத்து யானையின் மதச்செருக்கை அடக்கியூர்ந்ததும், அப்பொழுது அவன் அன்பு பாராட்டியதும், உதயணனும் வாசவதத்தையும் ஒருவரை யொருவர் நோக்கிக் காமுற்றதும், பிறவும் இப்பகுதியால் அறியலாகும்.]

1. *பொருள்புரிநூல் - அர்த்த சாத்திரம்.*

2. *அலகை - அளவு, உரையாணி; உலகபுராணம் - உலகத்தின் பழைய வரலாற்றைக் கூறும் நூல்; உலோக விலாசனியெனவும் வழங்கப்பெறும்.*

3. *பாசண்டியர்கள் - பாஷண்டியர்கள்; இவர்கள் தொண்ணூற்றாறு சமய சாத்திரத் தருக்கக் கோவையையுடையராதலின், 'பலவகை மரபிற் பாசண்டியர்கள்' என்றார்; சிலப். ௧0 : 14 - 5-ஆம் அடிகளுக்கு அடியார்க்குநல்லாரெழுதிய விசேடவுரையையும் அவற்றின் கீழ்க்குறிப்பையும் பார்க்க.*

* இதற்கு முன்னுள்ள பகுதிகள் கிடைக்கவில்லை.

சலசல மிழற்றுஞ் சமய விகற்பமும்
இசையொடு சிவணிய யாழி னூலும்
நாடகப் பொருளும்................
உப்பாற் பொருளு முட்கொண் டடக்கி
உளப்பா டுடைமை [1]புதயண் னுரைத்தலும்

(பிரச்சோதனன் உட்கோள்)

இனைத்தோ ரிளமையொ டெனைப்பல கேள்வியும்
தவத்தது பெருமையிற் றங்கின விவற்கென்
மருட்கை யுற்றதன் மனம்புரிந் தருளி

(வியந்த அரசன் விளம்பல்)

எம்முடை யளவையிற் பண்புறப் பேணி
நும்பதிப் பெயர்க்கு மளவையி னும்பியர்
நின்வழிப் படுகென [2]மன்னவ னுரைப்பக்.............

---

3-4. பாசண்டியர்கள் சலசலவென்று ஆரவாரிக்கின்ற பலவகைப்பட்ட சமய விகற்ப நூல்களென்க.

2-4. "உலோக விலாசனியும் பெருவளநல்லூர்ப் பாசண்டமும்" (யா-வி. ஒழிபு. சூ. 2, உரை) என வருதலால், இந்த இரண்டு நூல்கள் தமிழ்மொழியிற் பண்டைக்காலத்தில் இருந்தனவென்று தெரிகின்றது.

7. உப்பாற்பொருளும் - மேற்கூறியவற்றில் அடங்காத நூற்பொருள்களையும்; உப்பால் - அப்பால்; "அந்தணன் பங்குவி னில்லத் துணைக்குப் பாலெய்த" பரி. கக.

8. உளப்பாடுடைமை - எண்ணமுடைமை.

9. இளமையொடு - இளமையில்; உருபுமயக்கம்; ஒடு: எண்ணொடுவுமாம்.

11. மருட்கை - வியப்பு; இது பிறன்கட் டோன்றிய பெருமை பற்றிய மெய்ப்பாடு. புரிந்தருளி - விரும்பி.

12. எம்முடை அளவையில் - எம்மாலியன்ற அளவு. பேணி - பாதுகாத்து.

13. நும்பதிப் பெயர்க்கும் அளவையின் - உனது நகராகிய கோசம்பிக்கு உன்னையனுப்பும் வரையில்; நும்: திசைச்சொல்; சீவக். 324.

14. மன்னவன் - பிரச்சோதனன்.

13-4. நும்பியர் நின்வழிப்படுகென - உன் தம்பியராகிய இவர் உனக்கு அடங்கி ஏவல் கேட்டு நடப்பாராக; அரசன் தன் குமாரரை உதயணன் தம்பியராக உபசரித்துக் கூறினன்.

பிரதிபேதம். 1 உதயனன், 2 மன்னவற்குரையா, மன்னவற்குரைப்ப.

குலங்கெழு குமரரைக் குற்றே லருளிக்
கலந்தவ ணின்ற கட்டுரைக் காலத்துத்

(உதயணனும் வாசவதத்தையும் தம்முள் ஒருவரையொருவர் நோக்குதல்)

தென்கட லிட்டதோர் திருமணி வான்கழி
வடகட னுகத்துளை வந்துபட் டாஅங்கு
நனிசே ணிட்ட நாட்டின ராயினும்
[1]பொறைபடு கருமம் பொய்யா தாகலிற்
சிறைபடு விதியிற் சென்றவட் குறுகி
மதியமு ஞாயிறுங் [2]கதிதிரிந் தோடிக்

15. குலங்கெழு குமரரை - தன் குமாரர்களை. குற்றேலருளி - உதயணனுக்குக் குற்றேவல் செய்யும்படி கட்டளையிட்டு; குற்றேல் : விகாரம்; "குற்றேல் செய்துங் காளையும் யானும்" (சீவக. 1057.) பிரச்சோதனனுடைய குமாரர் உதயணனிடம் வில்வித்தை முதலியவற்றைக் கற்றனரென்று தெரியவருதலால், 'குமரர்' என்பதற்கு இங்ஙனம் பொருள் கொள்ளலாயிற்று.

16. கலந்து - அரசனும் உதயணனும் மனங்கலந்து. கட்டுரைக் காலத்து - பொருள் பொதிந்த சொற்களைச் சொல்லிக்கொண்டு அளவளாவும் பொழுதின்கண்.

17. கழி - முளை; கயிறென்பாருமுளர்; தக்க. 132, உரையைப் பார்க்க. 18. நுகம் - நுகத்தடி.

17-8. "வடகடலிட்ட ஒரு நுகத்தின் ஒரு துளையில் தென்கடலிட்ட ஒரு கழிசென்று கோத்தாற் போல" (இறை. சூ. 2, உரை); "பரவை வெண்டிரை வடகடற் படுநுகத் துளையுட், டிரைசெய் தென்கட லிட்டதோர் நோன்கழி சிவணி, அரைச வத்துளை யகவயிற் செறிந்தென" (சீவக. 2749); "வளைபயில் கீழ்கட னின்றிட மேல்கடல் வானுகத்தின், துளைவழி நேர்கழி கோத்தென" (திருச்சிற். 6); "திண்பெற்ற தென்பால் வீரைச் செறிநுகத் துளையி னூடே, வண்பெற்ற வடபால் வீரைக் கழிசெல மருவு மாபோல்" மேய்ம்மொழி.

19. நனி சேண் இட்ட - மிக்க தூரம் இடையிட்ட.

20. பொறை - பொறுத்தல். கருமம் - வினை; ஊழ்.

21. அவண் - அவ்விடம்; உச்சயினி நகரம். குறுகி - குறுக.

22. வாசவதத்தைக்கு மதியமும் உதயணனுக்கு ஞாயிறும் உவமை.

பி - ம். 1 முறைபடு. 2 கதிர் திரிந்து

கடனிற விசும்பி னுடனின் றாங்குப்
பைந்தொடிச் சுற்றமொடு தந்தை தலைத்தாள்
ஆயத் திடையோள் பாசிழைப் பாவை
யானை மிசையோன் மாமுடிக் குருசில்
இருவரு மவ்வழிப் பருகுவனர் நிகழ

(அரசன் கூற்று)

யாதனிற் [1]சிதைந்ததிவ் வடற்பெருங் களிறெனை
வேழ வேட்டம் விதியின் [2]வினைய
கதிர்முடி வேந்தன் கண்ணிய நுண்பொருட்
கெதிர்மொழி கொடாஇய வெடுத்த சென்னியன்
மன்னவன் முகத்தே மாதரு நோக்கி
உள்ளமு நிறையுந் தள்ளிடக் கலங்கி

23. நின்றாங்கு - நின்றாற்போல.

22-3. "வெங்கதிர்க் கனலியுந் தண்கதிர் மதியமும் தங்கதி வழு வித் தலைப்பெய்தாற் போலவுந் தலைப்பெய்து" (இறை. சூ. 2, உரை); "கதிரொருங் கிருந்த காட்சி போல" (சிலப். உ : 31); "அஞ்சுடர் நீள் வாண்முகத் தாயிழையு மாறிலா, வெஞ்சுடர்நீள் வேலானும் போதரக்கண் - டஞ்சி, யொருசுடரு மின்றி யுலகுபா ழாக, இருசுடரும் போந்தனவென் றார்" திணைமாலை. எக.

24. தந்தை தலைத்தாள் - தந்தையின் முன்னே; "தாரணி வேந் தன் றலைத்தா ணிகழ்ந்தது" (50) என்பர் பின்னும்; "அன்னவர் தலைத்தா ளணுகவு மஞ்சி" வலிவல மும்மணிக் கோவை, கo.

25. பாவை - வாசவதத்தை. 26. குருசில் - உதயணன்.

27. பருகுவனர் நிகழ - ஒருவரையொருவர் கடைக்கண்ணால் நோக்கி நுகராநிற்க; இஃது உள்ளப்புணர்ச்சி யெனப்படும்.

28. யாதனின் - என்ன காரணத்தால். களிறு - யானை.

29. அந்த யானையின் கொலைத் தொழிற்குரிய காரணத்தை முறையே கேட்ட.

31. உதயணன், விடைகொடுத்தற்கு எடுத்த சென்னியனாக.

31-2. 'எடுத்த சென்னியன்' 'நோக்கி' என்றதனால்; முன்பு 'பருகுவனர்' (27) என்றதற்குக் கடைக்கண்ணால் ஒருவரையொருவர் நுகர்ந்து இன்புற்றனரென்றது வலியுறுகின்றது.

பி - ம். 1 சிதைந்ததிவ்விடர்ப். 2 வினைஅய்க்.

(இருவர் செய்திகள்)

வண்டுபடு [1]கடாஅத்த வலிமுறை யொப்பன
பண்டு கடம் [2]படாஅ பறையினுங் கனல்வன
விடற்கருந் தெருவினுள் விட்ட செவ்வியுட்
டுடக்குவரை நில்லாது தோட்டி நிமிர்ந்து
[3] மதக்களி றிரண்டுடன் மண்டி யாஅங்
கில்வழி வந்ததம் பெருமை பீடுறத்
தொல்வழி [4]வயத்துத் தொடர்வினை தொடர
வழுவில் போகமொடு வரம்பின்று நுகரும்
உழுவ லன்பி னுள்ளந் தாங்கி
இழையினுங் கொடியினு மிடியினும் பிணங்கித்
தேனினும் பாலினுந் தீஞ்சுவைத் தாகிக்

---

34. கடாஅத்த - மதத்தை யுடையன. வலிமுறை - வலியிலும் பிறப்பு முறையிலும்.

35. பண்டு கடம் படா - முன்பு மதம் படாதன; பறையினும் - தம்மைத் தொழிற்படுத்தும் பேச்சைப் பாகன் சொன்னாலும்; அப்பேச்சுக்கள், அப்புது அப்புது ஆது ஆது ஐ ஐ என்பன; சீவக. 1834.

36. செவ்வி - சமயம்.

37. துடக்கு - கட்டு. தோட்டி நிமிர்ந்து - அங்குசம் நிமிர; "மனமெனு மத்த யானையின், நிறையெனு மங்குச நிமிர்ந்து போயதே" கம்ப. மிதிலைக். 40.

38. களிறென்பது இங்கே இருபாற்கும் பொதுப்பெயர்; "தெய்வக் களிற்றைமணஞ் செய்தோனே" (கந்தர்கலி. 105.) சிறுபான்மை பெண் யானைக்கும் மதம்படுதல் கூறப்படும்; "இளம்பிடி கடச்செருக் கெய்தி" (பெருங். க. 40: 31) என்பர். மண்டுதல் - மிக்குச் செல்லுதல்.

35 - 8. யானைகள் இரண்டும் இருவர்க்கும் உவமை.

39. இல் - உயர்குடி.

40. தொல் வழிவயத்துத் தொடர்வினை - ஊழ்; இதனால் இவர் பண்டைப் பிறப்புக்களிற் கணவனும் மனைவியுமாக இருந்தமை பெறப்படும்.

42. உழுவலன்பின் - எழுபிறப்புத் தொடர்ந்து வந்த அன்பினை யுடைய; பெருங். உ. 11 : 39. தாங்கி - தடுத்து.

43. இழை - நூலிழை. கொடி - இங்கே நூழிற் கொடி; "புணர்ந்தவர் முயக்கம்போற் புரிவுற்ற கொடியொடு" (கலி. ௯௨ : 12.) இடி - மா. "இடியினுங் கொடியினு மயங்கி" சீவக. 196.

பி - ம். [1]கடாத்து. [2]படா அப்பறையினுங் [3]இவையிரண்டு களிறும் [4]விசத்து.

குலத்தினுங் குணத்தினுங் கூடிய வன்பினும்
இனத்தினும் பிறவினு மிவ்வகை யிசைந்த
அமைப்பருங் காதலு மிமைப்பினு ளடக்கி
ஒருவயிற் போல வுள்ளழி நோக்கமொ
டிருவயி னொத்தஃ திறந்த பின்னர்த்

(உதயணன் செயல்)

தாரணி வேந்தன் றலைத்தா ணிகழ்ந்தது
காரண மாகக் காத றேறி
ஓர்ப்புறு நெஞ்சந் தேர்ச்சியிற் றிருத்திப்
பேர்த்தவன் வினவிய பெருங்களிற் றிலக்கணம்
போர்த்தொழில் வேந்தன்முன் பொருந்தக் காட்டி
நீல யானை நெஞ்சுபுக் கனன்போற்
சீல விகற்பந் தெரிந்தன னுரைக்கலும்
அதுமுன் னடக்கிய [1]மதியறி பாகரொ
டங்கை விதிர்த்தாங் கரசவை புகழப்

---

47. காதல் - பெருந்தன்மேற் செல்வது. இமைப்பினுள் - நொடிப்பொழுதில். காதலை அடக்கி: "காமநீ ராழி, அடக்குமா றுள்ளத் தவன்" நள. க : 78.

ஆகி (44) இசைந்த (46) காதலை (47.)

49. இருவயின் ஒத்து - இருவரிடத்தும் அன்பு ஒத்து; இருவயி னொத்தலென்னும் அகப்பொருட்டுறை ஈண்டு அறிதற்பாலது. அஃது - அந்நிகழ்ச்சி.

48 - 9. "இருவயி னொத்த வியற்கை நோக்கமொ, டொருவயி னொத்த வுள்ள நோயர்" பெருங். ௩. 7 : 90 - 91.

52. ஓர்ப்பு - ஒன்றையே கருதுதல்.

52 - 3. பேர்த்து - பெயர்த்து; திருப்பி. நெஞ்சத்தைத் திருத்திப் பேர்த்தென்க. அவன் - பிரச்சோதனன்.

55. நீலயானை - கரியயானை; சீவக. 148, 2195.

56. சீலவிகற்பம் - பாகன் பயிற்றும் நிலைவேறுபாடுகள்; "சீலக் கஞ்சிறப் போதகஞ் செல்வன", "சீல மில்லன சினக்களி றகற்றுக" சீவக. 862, 2392.

57 - 8. பாகரும் அரசவையும் கையை அசைத்துப் புகழாநிற்க; கைவிதிர்த்தல், ஆச்சரியக் குறிப்பு; "வெருவி மாக்கள் மாந்தர்கள் வியந்துகை விதிர்ப்ப" சீவக. 2366.

பி - ம். 1 மதியண்ணி பாகர்.

(பிரச்சோதனன் செயல்)

பைந்தொடிச் சுற்றமொடு பரிசனம் போக்கி
விழுநிதி படுத்த கொழுமென் செல்வத்துக்
[1] கணக்கரை வியன்கரக் கலவறை காக்கும்
திணைத்தொழி லாளரைப் புகுத்துமி னீங்கெனப்
புறங்காற் றாழ்ந்து போர்வை முற்றி
நிலந்தோய் புடுத்த நெடுநுண் ணுடையர்
தானை மடக்கா மான மாந்தர்
அண்ணாந் தியலா வான்றுபுரி யடக்கத்துக்
கண்ணி நெற்றியர் கைதொழூஉப் புகுதரக்
களிறுவழங்கு தடக்கையிற் காண்வரக் கொண்ட
[2] வெள்ளேட் டங்கண் வித்தக மெழுதிய

---

60. நிதி - பொன்னின் திரள்; "நிலம் பொறுக் கலாத செம்பொ னீணிதி" சீவக. 402.

61 - 2. நகர் - அரண்மனை. கரக் கலவறை - வரிப் பொருள்களையும் ஆபரணங்களையும் வைக்கும் அறை. திணைத் தொழிலாளர் - பரம்பரையர்க் காரியம் பார்ப்பவர்; திணை - குலம். 'கணக்கருங் காப்பரும்', 'வழி முறை மரபு' (82, 84.) என்பர் பின்னும். என - என்று பிரச்சோதனன் சொல்ல.

63. தாழ்ந்து - தாழ.

64. "மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்" (முருகு. 214.) தோய்பு - தோய.

63 - 7. மேற்கூறிய கணக்கரும் திணைத்தொழிலாளரும் இத்தகையராய்த் தொழுது அரசன்பால் வர.

67. கண்ணி - ஒருவகை மாலை; நெற்றிமாலை யென்பர்; சீவக. 979, ந. நெற்றி - உச்சி, முன்றலை; பெருங். க. 39 : 20; "கண்ணி நெற்றிக் காவிதி மகளிர்" (பெருங். க. 42 : 176); "மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந்தர்" புறநா. உ௪.

68. வழங்குதல் - கொடுத்தல்.

69. வெள்ளேடு, எழுதாத ஓலை; "வெள்ளோலை - கண்பாரீக் கக் கையா லெழுதானை" (தனிப்.) எழுதாத பனையேட்டின்கண் எழுத்துக்களின் உறுப்பு விளங்க எழுதிய. வித்தகம் - எழுதும் வன்மை; "வித்தக ரியற்றிய கண்கவ ரோவியம்" மணி. க. 130 - 31.

பி - ம். 1 கணக்குரைவியனகர்க் கல்லறை. 2 வெள்ளேட்டங்கண்.

கடையெழுத் தோலைக் கணக்குவரி காட்டி
முன்னூறு [1]கிளவியிற் பண்ணுறப் பணிக்கலும்

(கணக்கர் முதலியோர் உதயணனுக்காகக் குஞ்சரச்சேரி மாளிகையில் பலபொருள்களைத் தொகுத்தல்.)

பன்மணி விளக்கும் பள்ளிக் கட்டிலும்
பொன்னி னடைப்பையும் பூரண கலசமும்
கவரியுங் கடகமுங் கதிர்முத் தாரமும்
நிகரின் மாண்கல நிதியொடு நிறைந்த
ஆரியச் செப்பும் யவனமஞ் சிகையும்
பொன்செய் பேழையொடு பொறித்தாழ் நீக்கி
[2] நன்கனம் படுத்து நகுமலர் பரப்பி

---

70. கடை யெழுத்து - கையொப்பம்.

69 - 70. “ நூல்புடைத்தாற் போற் கிடந்த வித்தகஞ்சேர் நுண்வரிகள் ” சீவக. 1044.

71. முன்னூறு கிளவியின் - குறிப்பு மொழியால். பண்ணுற - ஆயத்தஞ் செய்யும்படி. பணிக்கலும் - அரசன் கட்டளையிட்டவுடன்.

68 - 71. உதயணனுக்குச் செய்ய வேண்டுவனவற்றை யெல்லாம் எழுதுவித்து இறுதியிற் கையொப்பமிட்ட பனையோலையிலுள்ளவற்றைக் குறிப்பாலுணர்த்தி, அப்பொருள்களை ஆயத்தஞ் செய்யும்படி கணக்கர் முதலியோருக்கு அரசன் கட்டளை யிட்டவுடனே.

72. மணிவிளக்கு : பெருங். க. 34 : 2.

73. அடைப்பை - வெற்றிலைப்பை.

74. கடகம் - கையணி. 75. கலம் - ஆபரணங்கள்.

76. ஆரியம் - ஒரு தேயம். யவன மஞ்சிகை - யவனதேசத்துத் தச்சர் செய்த ஒருவகைப் பெட்டி ; “ கூழுடைக் கொழுமஞ்சிகை ” பட். 163.

77. பொறித்தாழ் - ஆரியச் செப்பு முதலியவற்றிலுள்ள யந்திரத் தாழக்கோல்.

78. நன்கனம் - நன்றாக ; “நன்கன மறிந்தபின்” (மணி. கரு. 26.) படுத்து - தளவரிசை செய்து. நன்கலமென்ற பாடத்திற்கு நல்ல ஆபரணம், நல்ல பாத்திரமென்க.

பி - ம். 1 கிளவியுட். 2 நன்கலம்.

விரைவிரி யாளர் புரைவுறப் [1]புணர்த்த
பண்டம் புதைத்த வண்டுபடு வளநகர்
மடையரு மகளிரு மல்லரு மமைச்சரும்
கடையருங் கணக்கருங் காப்பரு முளப்பட
இறைவினை திரியாப் பழவினை யாளரை
வழிமுறை மரபிற்றந் தொழின்முறை நிறீஇ
வாய்மொழி விதியின் மேவன வெல்லாம்
நோக்கி மன்ன நுவலருங் காப்பின்
அணிந்தது நகரெனப் பணிந்தவ ருரைக்கலும்

(பிரச்சோதனன் செயல்)

குஞ்சரச் சேரிக் குமரற் கியற்றிய
வெண்சுதை நல்வி னுறையு ளாக
இடம்புகு தக்கன் றிருத்த னெடிதெனப்

---

79. விரைவிரியாளர் - பலவகை நறுநாற்றத்தை எங்கும் பரவச் செய்யும் வேலைக்காரர்; கந்தப்பொடிக்காரரென்று இவர் வழங்கப் பெறுவர். புரைவு - உயர்வு.

80. நகர் - உதயணனுக்காக அமைத்த மாளிகையில். நறுமணங் கமழ்தலின் 'வண்டுபடு வளநகர்' என்றார்.

81. மடையர் - உணவமைப்போர். மல்லர் - உடம்பு தடவி நீராட்டுதல் முதலியவற்றிற்குரியோர்; "மல்லர் புல்லிக் கமழுநீ ராட்டி னாரே" சீவக. 2733.

82. கடையர் - வாயில் காப்போர். காப்பர் - காவலாளர்; 61-2.

83. இறைவினை திரியா - அரச காரியத்தில் வேறுபடாத; சிறிதும் காரியத்திற் றப்பாத வென்றுமாம். 84. நிறீஇ - நிறுத்தி.

85. வாய் மொழி விதியின் - அரசனுடைய கட்டளைப்படியே. மேவன வெல்லாம் - விரும்பிய எல்லாவற்றையும்.

86. நோக்கி - பார்த்து; செய்தென்றுமாம். மன்ன: விளி.

87. அணிந்தது - அணியப்பெற்றது. நகரென்றது உதயணனுக்கு அமைத்த குஞ்சரச்சேரி மாளிகையை. அவரென்றது கணக்கர் முதலியோரை.

88. குஞ்சரச்சேரியில் நினக்கு இயற்றப்பட்ட.

90. புகுதக்கன்று - அடையத்தக்கது. நெடிதிருத்தல் - நெடுநேரம் இங்கே இருத்தலைத் தவிர்க.

88 - 90. உதயணனுக்குக் குஞ்சரச்சேரியில் இருப்பிடமமைந்ததை,

பி - ம். 1 புணர்ந்த.

பேரியல் வையம் பின்செல வருளி
வீரிய வேந்தன் விடுத்தகம் [1] புக்கபின்

(உதயணன் செயல்)

விட்டுழல் யானை யச்ச நீக்கி
வெறிகோள் பண்ணியுந் தொழிறலைப் பெயர்த்தவன்
கலிகொ ளாவணங் கைதொழப் போகி
அரைமதி யிரும்பொடு கவைமுட் [2] கரீஇ
பீலி சுற்றிய வேணு வெண்காழ்
யானை யிளையரைத் தானத்துப் பிணிக்கெனத்
தகைமலி வேழந் தலைக்கடை யிழிதந்
தகம்புக் கனனு லரசவை விடுத்தென்.

௩௨—கரடு பெயர்த்தது முற்றிற்று.

---

"குஞ்சரச் சேரித் தன்னக ரெய்தி" (பெருங். க. 37 : 3) என்பதனாலும் அறிக.

91. வையம் - தேர் ; வண்டியுமாம்.

92. வீரிய வேந்தன் - மறமாச்சேனன் ; பிரச்சோதனன் பெயர்களுள் ஒன்று.

94. வெறிகோள் பண்ணல் - மதம்கொண்டு கொலை செய்தல். பெயர்த்தவன் - உதயணன்.

95. ஆவணம் - கடைவீதி ; பெருங். க. 34 : 38.

96. அரைமதியிரும்பு - ஒருவகை அங்குசம். கரீஇ - கருவி ; குரீஇ குருவி யென்பதுபோலக் கொள்க.

97. வேணுவெண்காழ் - மூங்கிலால் ஆகிய குத்துக்கோலையுடைய ; பெருங். க. 38 : 27 ; "காழோர் கையற" மணி. ௪ : 34.

98. தானம் - யானை கட்டுமிடம். பிணிக்கென - கட்டுகவென்று உதயணன் சொல்லி.

96 - 7. அரைமதியிரும்பு முதலியவை யானையை யடக்கும் கருவிகள் ; "குவிமுட் கருவியுங் கோணமுங் கூர்நுனைக், கவைமுட் கருவியும்" மணி. ௧௮ : 163 - 4.

98. இளையர் - மேற்கூறிய கருவிகளையுடையோர்.

99. இழிதந்து - இறங்கி.

பி - ம் 1 புக்கனன். 2 செரீஇப்.

## ௫௫—மாலைப் புலம்பல்.

(உதயணன் செயல்)

அரசவை விடுத்தபி னணிநகர் முன்னித்
தொடர்பூ மாலைக் கடைபல போகி
அந்தக் கேணியு மெந்திரக் கிணறும்
தண்பூங் காவுந் தலைத்தோன் றருவிய
வெண்சுதைக் குன்றொடு வேண்டுவ பிறவும்
இளையோர்க் கியற்றிய விளையாட் டிடத்த
சித்திரப் பூமி வித்தக நோக்கி

(உதயணன் ஐயமுறல்)

ஒட்டாக் கிளைஞரை நட்பினுட் கெழீஇய
ஐயிரு பதின்ம ரரக்கி னியற்றிய

---

### ௫௫—மாலைப் புலம்பல்.

[மாலைக்கால வருணனையும் அக்காலத்தில் உதயணனும் வாசவதத்தையும் தம்முள் ஒருவரையொருவர் நினைந்து வருந்துதலும் இதனால் அறியலாகும்.]

1. *அரசவை விடுத்தபின்* - அரசவையைவிட்டு நீங்கியபின். *முன்னி* - கருதி. 2. *கடை பல* - பலவாகிய வாயில்.

3. *அந்தக்கேணி* - உள்ளே மறைந்த கிணறுகள்; பெருங். ௧. 34 : 118; இது, கரப்பு நீர்க்கேணி யென்றும் வழங்கும். *எந்திரக் கிணறு* - நீரையிறைக்கும் பொறிகளையுடைய கிணறு.

4. *அருவிய*- அருவிகளையுடைய.

5. *வெண்சுதைக்குன்று* - செய்குன்று; கட்டுமலை.

3 - 6. "எந்திரக் கிணறு மிடங்கற் குன்றமும், வந்துவீ ழருவியு மலர்ப்பூம் பந்தரும், பரப்புநீர்ப் பொய்கையுங் கரப்புநீர்க் கேணியும் ஒளித்துறை யிடங்களும் பளிக்கறைப் பள்ளியும், யாங்கணுந் திரிந்து தாழ்ந்துவிளை யாடி" மணி. ௧௯ : 102 - 6.

7. *சித்திரம்* - ஆச்சரியம். *வித்தகம்* - சிறந்த சிற்ப வேலை.

8. *ஒட்டா* - தம்மொடு மனம் பொருந்தாத. *கிளைஞர்* : இங்கே பஞ்சபாண்டவர். *கெழீஇய* - பொருத்த வேண்டி.

9. *ஐயிருபதின்மர்* - துரியோதனன் முதலிய நூற்றுவர்.

பொய்யி லன்ன பொறியிவன் புணர்க்கும்
கையுங் கூடுங் கால மிதுவென
ஐய முற்று மெய்வகை நோக்கிச்
சிறப்புடை மாநகர்ச் செல்வங் காண்கம்
உழைச்சுற் றுளரைப் [1]புகுத்துமின் விரைந்தெனத்

(உதயணன் தெளிதல்)

தலைக்கூட் டுபாயமொடு தக்கோன் றெரிந்து
முட்டு முடுக்கு மிட்டிடை கழியும்
கரப்பறை வீதியுங் கள்ளப் பூமியும்
மரத்தினு மண்ணினு மதியோர் புணர்க்கும்
எந்திர மருங்கி னிழுக்க மின்மை
அந்நிலை மருங்கி னாசற நாடி
வஞ்ச மின்மை நெஞ்சிற் றேறிச்

---

9 - 10. அரக்கின் இயற்றிய பொய் இல் - அரக்காலாக்கிய பொய் வீடு; அரக்குமாளிகை. அன்ன - போன்ற. பொறி - நம்மை அகப்படுத்தும் எந்திரங்களை. இவன் - பிரச்சோதனன். புணர்க்கும் - செய்விப்பான்.

8 - 10. ஐவரைக் கொல்லுதற்கு நூற்றுவர் அரக்குமாளிகை கட்டுவித்த வரலாறு ஈண்டு அறிதற்பாலது.

10 - 11. கையும் : உம்மை, இசை நிறை. கைகூடும் காலம் இது வென்று இவன் புணர்க்குமென இயைக்க; எனவென ஒருசொல் வருவிக்க. 13. காண்கம் - காண்பேம்.

14. உழைச்சுற்றுளரை - பக்கத்தில் தன்னைச் சூழ்ந்துநின்று ஏவல் கேட்கும் இளைஞரை; 'உழைச்சிற்றுளர்' என்பதும் பாடம்.

15. தலைக்கூட்டு - சேர்தல்; "தலைக்கூட்டமைத்து" (பெருங். ௩. 19 : 12) என்பர். தக்கோன் - உதயணன்.

16. முட்டும் - வழி சென்று பின்பு இல்லையான இடங்களிலும். முடுக்கும் - வளைந்த இடங்களையுடைய சந்துகளிலும். இட்டிடை கழியும் - சிறிய இடைகழியிலும்; இடைகழி - வழிக்கு இடையே கழிந்துள்ள இடங்கள்; ரேழியென வழங்கும்.

17. கரப்பு அறை - ஒளிந்திருத்தற்குரிய அறைகள். கள்ளப்பூமி - உள் பொய்யாகிய பூமி. வீதியிலும் பூமியிலுமென உருபு விரிக்க.

18. மதியோர் - அறிவையுடைய சிற்பியர்.

19. எந்திரங்களில் குற்றமின்மையை. 20. ஆசு - குற்றம்.

19 - 21. இன்மையை நாடித் தேறி.

பி - ம். 1 புகுத்துமினீங்கெனத் தலைக்கட்டுபாயமொடு.

(உதயணன் காணுங் காட்சி)

சந்தன வேலிச் சண்பகத் திடையதோர்
வேங்கையொடு தொடுத்த விளையாட் டூசற்
றூங்குபு மறலு முழைச்சிறு சிலதியர்
பாடற் பாணியொ டளைஇப் பல்பொறி
ஆடியன் மஞ்ஞை யகவ வயலதோர்
வெயில்கண் போழாப் பயில்பூம் பொதும்பிற்
சிதர்தொழிற் றும்பியொடு மதர்வண்டு மருட்ட
மாத ரிருங்குயின் மணிநிறப் பேடை
காதற் சேவலைக் கண்டுகண் களித்துத்
தளிப்பூங் கொம்பர் விளிப்பது நோக்கியும்

---

22. சந்தன மரங்களை வேலியாகக் கொண்ட சண்பகச் சோலையி னிடையே யுள்ளதாகிய.

23. வேங்கை - வேங்கைமரம். வேங்கையூசல் : “கருங்கால் வேங்கை யூச றூங்கி” நற். ௩௯௮.

24. தூங்குபு - அசைந்து. மறலும் - மாறுபடுகின்ற. சிறு சிலதியர் - குறுந்தொழில் மகளிருடைய.

25. பாணி - தாளம். அளைஇ - கலந்து. பொறி - பீலிக்கண்.

26. அகவ - ஆட.

27. பொதும்பு - பொதும்பர் ; இள மரச்சோலை ; பெரும்பாண். 374, அடிக்குறிப்பைப் பார்க்க.

28. பூந்துகளைச் சிந்துந்தொழிலையுடைய தும்பிகளும், செருக்கிய வண்டுகளும் ; தும்பி - ஒருவகை வண்டு. சிதர்தொழில் : “சிதர்சிதர்ந் துகுத்த செவ்வி வேனில்”, “மலருண் வேட்கையிற் சிதர்சிதர்ந் துகுப்ப” அகநா. ௨௭௭: 18, ௩௧௭ : 7.

29. காதலையுடைய நீலமணிபோன்ற நிறத்தையுடைய குயிற் பேடை ; “மணிநிற விருங்குயில்” அகநா. ௨௫.

31. விளிப்பது - பாடுதலை ; அழைத்தலை யென்றுமாம்.

26 - 31. “குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட, மழலை வண்டின நல்லியாழ் செய்ய, வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர், மயிலா டரங்கின்............கொம்ப ரிருங்குயில் விளிப்பது காணாய்” மணி. ௪ : 3 - 13.

தக்கோன் தெரிந்து (15) நாடித் (20) தேறி (21) நோக்கியு (31) மென்க.

பானிறச் சேவல் பாளையிற் பொதிந்தெனக்
கோண்மடற் கமுகின் குறிவயிற் காணாது
பவழச் செங்காற் பன்மயி ரெருத்திற்
கவர்குர லன்னங் கலங்கல் கண்டும்
தனித்துளங் கவல்வோன் றான்வீழ் மாதர்
மணிக்கேழ் மாமை மனத்தின் [1] றலைஇப்
புள்ளுறுப்புலம் புறுக்க வுள்ளுபு நினைஇ
மன்றல் றொருசிறை நின்ற பாணியுட்

(சூரியன் அத்தமித்தல்)

சென்றுசென் றிறைஞ்சிய சினந்தீர் மண்டிலம்

---

32. பால் நிறம் - வெண்ணிறம்; பால்போன்ற நிறமுமாம்; “பாற்கே ழன்னம்” (211) என்பர் பின். சேவல் - ஆணன்னம். பாளை - கமுகம்பாளை. பொதிந்தென - மறைந்ததாக.

33. கோள் - குலை; “வண்கோட் பெண்ணை” (சிறுபாண். 27.) காணாது - காணாமையால். 34. எருத்து - பிடர்.

35. கவர்குரல் - முயங்குதற்குக் காரணமான குரலையுடைய; “கவர்கணை” கலி. கச.

32 - 5. இப்பகுதி, “அன்னச் சேவ லயர்ந்துவிளை யாடிய, தன்னுறு பெடையைத் தாமரை யடக்கப், பூம்பொதி சிதையக் கிழித்துப் பெடைகொண், டோங்கிருந் தெங்கி னுயர்மட லேற” (மணி. ரு :123-6) என்னும் மாலை வருணனையை நினைப்பிக்கின்றது.

36. கவல்வோன் - உதயணன். தான்வீழ் மாதர் - தன்னாற் காதலிக்கப்பட்ட வாசவதத்தையின்; “தாம் வீழ்வார்” குறள். 1103, 1191.

நோக்கியும் (31) கண்டும் (35) தனித்து உளங்கவல்வோன் (36.)

37. மாமை - ஒளியையுடைய நல்ல நிறம். மணிக்கேழ் மாமை: “மணியிடை பொன்னின் மாமை சாயவென், அணிநலஞ் சிதைக்குமார் பசலை” (நற். ஙoச : 6 - 7); “பொன்னுரை மணியன்ன மாமை” (கலி. சஅ : 17.) தலைஇ - கலந்து.

38. புள் - மேற்கூறிய பறவைகளின்செயல்கள்; ஆகுபெயர். புலம்பு உறுக்க - தனிமை வருத்தத்தை மிகுதிப்படுத்த. நினைஇ - நினைந்து.

39. பாணியுள் - காலத்தில்.

40. வெம்மை தீர்ந்த சூரிய மண்டிலம்.

பி - ம். 1 தலையும்.

சூடுறு பாண்டிலிற் சுருங்கிய கதிர்த்தாய்க்
கோடுய ருச்சிக் குடமலைக் குளிப்ப
விலங்கும் பறவையும் [1] வீழ்துணைப் படரப்

(மாலைக்கால வருணனை)

புலம்புமுத் துகுத்த புன்மைத் தாகி
நிறைகடன் மண்டில நேமி யுருட்டிய
இறைகெழு பெருவிற லெஞ்சிய பின்றைக்
கடங்கண் ணரிந்த கைய ராகி
இடந்தொறும் பல்கிய மன்னர் போல
வரம்பில் பன்மீன் வயின்வயின் விலங்கிப்
பரந்துமீ தரும்பிய பசலைவா னத்துத்

---

41. சூடுறு பாண்டிலின் - பழுக்கக் காய்ச்சிய வட்டத் தகட்டைப் போல. கதிர்த்தாய் - கதிரையுடையதாய்.

42. கோடு - சிகரம். குடமலை - அத்தகிரியில். குளிப்ப - மறைய. மண்டிலம் (40) குளிப்ப (42.)

43. வீழ்துணை - விரும்பிய துணைகளை. படர - நினைந்து செல்ல.

44. புலம்பு முத்து - தனிமையாலுளவாகிய கண்ணீர்த்துளிகளை; "பூப்போ லுண்கண் புலம்புமுத் துறைப்ப" (முல்லைப். 23.) ஆகி - ஆக. புன்மைத்தாகி யென்றது நிறைகடன் மண்டிலத்தின் செயல்.

45. மண்டிலம் - பூமியிலுள்ளோர். நேமி - ஆக்கினைசக்கரத்தை.

46. இறை - கப்பம்; தலைமையுமாம். பெருவிறல் - பெரியவெற்றியையுடையவன்; சக்கரவர்த்தி; குறிஞ்சிப். 199; தொல். கிளவி. சூ. 56, சே. ந. மேற். எஞ்சிய - உயிர் நீத்த.

47. கடம் - தமதுகடமையை; பாதுகாத்தலாகிய உரிமையை. கண்ணரிந்த - நீக்கிய. கையராகி - சிறுமையை யுடையராகி.

48. பல்கிய - பெருகிய. மன்னர் - குறுநில வேந்தர்.

49. பல்மீன் - பலவிண்மீன்கள். விலங்கி - விளங்கி; "விலங்கிவில் லுமிழும் பூணான்" சீவக. 1167.

45 - 9 = கந்த. குமாரபுரி. 2.

50. அரும்பிய - தோன்றிய. பசலை வானத்து - பொன்னிறத்தையுடைய செவ்வானத்தில்.

45 - 50. சக்கரவர்த்தி சூரியனுக்கும் குறுநிலவேந்தர் விண்மீன்களுக்கும் உவமை; சக்கரவர்த்தி உள்ள பொழுது தோன்றாமலிருந்து அவன் நீங்கியபொழுது தம்மைப் புலப்படுத்திக்கொண்டு வெளிப்படும்.

பி - ம். [1] வீழ்ப்திப்படர.

(பிறை மதியின் தோற்றம்)

தலைத்தேர்த் தானைக்குத் தலைவ னாகி
முலைப்பாற் காலத்து முடிமுறை யெய்திக்
குடைவீற் றிருந்த குழவி போலப்
பொழில்கண் விளக்குந் தொழினுகம் பூண்டு
பயன்மாசு கழீஇப் புனிற்றுநா ளுலவாது
வியன்கண் மாநிலந் தாங்கவிசும் பூர்ந்து
பைந்தொடி மகளிர் பரவினர் கைதொழச்
செங்கோட் டிளம்பிறை செக்கர்த் தோன்றித்

---

சிற்றரசரைச் சூரியனுள்ள பொழுது புலப்படாமலிருந்து அவன் நீங்கிய பொழுது வெளிப்படும் உடுக்களுக்கு உவமை கூறியிருத்தல் அறிந்து இன்புறற்பாலது ; சீவக. 974, பார்க்க.

51. தலைத் தேர்த்தானை - முதன்மையையுடைய தேர்ப்படை.

52. தாய்முலைப்பாலை உண்ணும் காலத்தில் முடியை முறைப்படி பெற்று.

53. குடை வீற்றிருந்த - வெண்கொற்றக் குடையின் கீழே செம் மாந்திருந்த. குழவி - பாலனாகிய இராசகுமாரனை. மிக்க இளமையில் அரசாட்சியைப் பெற்றசோழன் கரிகாற் பெருவளத்தானும், தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனும் இங்கே கருதற்பாலர்.

54. பொழில் - பூமியை. கண் - இடம் ; அசைநிலையுமாம். தொழில் நுகம் பூண்டு - தொழிலாகிய பாரத்தை மேற்கொண்டு.

55. கழீஇ - கழித்து. புனிற்று நாள் - ஈன்ற அணிமைக்காலம்.

56. நிலம் தாங்க - நிலத்திலுள்ளாரைப் பாதுகாத்தற்கு.

57. கன்னிமகளிர் பிறையைத் தொழுதல் இயல்பு ; இதனைப்பிறை தொழுகென்றலென்னும் அகப்பொருட்டுறையானுமுணர்க; "ஒள்ளிழை மகளி ருயர்பிறை தொழூஉம் புல்லென் மாலை" (அகநா. உ௩௯.) பிறை தொழப்படும்; முழுமதி தொழப்படா தென்பர் ; புறநா. ௬0-ஆம் பாடலையும் அதனுரையையும் பார்க்க.

58. கோடு - பிறையின் இருபக்கத்து நுனி ; இது சிருங்கமென்று வழங்கப்படும் ; "கோட்டிளந்திங்கள்" (சீவக. 404) ; "இருகோட் டொருமதி யெழில்பெற மிலைச்சினை" (நக்கீரர் திருவெழுகூற்றிருக்கை.) செக்கர் - செவ்வானில். தோன்றி - தோன்ற.

57 - 8 = பெருங். க. 33 : 165 - 7.

தூய்மை காட்டும் [1]வாய்மைமுற் றுது
மதர்வை யோர்கதிர் மாடத்துப் பரத்தரச்
சுடர்வெண் ணிலவின் றெழிற்பயன் கொண்ட
மிசைநீண் முற்றத் தசைவளி போழ
[2] விதானித்துப் படுத்த வெண்கா லமளிச்
சேக்கை மகளிர் செஞ்சாந்து புலர்த்தும்
தேக்க ணகிற்புகை திசைதொறுங் கமழக்
கன்றுகண் காணு முன்றிற் போகாப்
பூத்தின் யாக்கை மோ....................
...............குரால் வேண்டக் கொண்ட
சுரைபொழி தீம்பா லுரைதெளித் தாற்றிச்
சுடர்பொன் வள்ளத்து மடல்விரற் றுங்கி
மதலை மாடத்து மாண்குழை மகளிர்

---

59. தூய்மை - வெண்மை. வாய்மை - உண்மை. முற்றுது - முதிராது.

60. மதர்வை - மயக்கம். ஓரென்பது சிறிதென்னும் பொருளது; அசையுமாம். பரத்தர - பரத்தலைச் செய்ய.

61. "வெண்ணிலவின் பயன்றுய்த்தும்" (பட். 114); "நிலவுப் பயன் கொள்ளு நெடுநிலா முற்றம்." சிலப். ௪ : 31.

63. விதானித்து - மேற்கட்டி கட்டி. வெண்கால் - யானைக் கொம்பாற்செய்த கால்கள்; "வெண்கா லமளியும் விதானவே திகை களும்" சிலப். ௨௮ : 45.

63-4. அமளிச்சேக்கை - அணையையுடைய படுக்கை. செஞ்சாந்து - செஞ்சந்தனக்குழம்பு; இஃது அரிசந்தனமெனவும் வழங்கும். புலர்த்தும் - உலர்த்தும்.

65. தேக்கணகில் - தேனைத் தன்னிடத்தேயுடைய அகில்; தேன் - நெய்; "தேக்கணின் னகிலி னாவி" சீவக. 2495.

68. குரால் - குராற்பசு; "குராலான் படுதுயர்" நறுந். ௨௨௪.

69. மு. பெருங். ௪. 10 : 49. சுரை - பசுவின்மடி; ஆகுபெயர்; "கடுஞ்சுரையான்" பு. வெ. ௧ : 18.

67-9. "பூத்தின்று புகன்று சேதாப் புணர்முலை பொழிந்த தீம்பால்" சீவக. 398.

70. வள்ளம் - கிண்ணம். மடல் விரல் - காந்தட்பூவிதழ் போன்ற கையில். 71. மதலை - கொடுங்கை.

பி - ம். 1 வான்மை. 2 விதனித்து.

புதல்வரை மருட்டும் பொய்ந்நொடி பகரவும்
இல்லெழு முல்லையொடு மல்லிகை மயங்கிப்
பெருமணங் கமழவும் பிடகைப் பெய்த
வதுவைச் சூட்டணி வண்டுவாய் திறப்பவும்
பித்திகக் கோதை செப்புவாய் மலரவும்
அறவோர் பள்ளி யந்திச் சங்கமும்
மறவோன் சேனை வேழச் சங்கமும்
புதுக்கோள் யானை பிணிப்போர் கதமும்
மதுக்கோண் மாந்த ரெடுத்த வார்ப்பும்

---

72. மருட்டும் - மயங்கச் செய்யும். நொடி - நொடிப்பேச்சு (பெருங். க. 33 : 175); "துணங்கையஞ் செல்விக் கணங்குநொடித் தாங்கு" (பெரும்பாண். 459); கலி. அக: 8, ந. பார்க்க.

73. இல் எழு முல்லை - வீட்டின் தோட்டத்தில் எழுந்த முல்லை; "மனைமரத், தெல்லுறு மௌவ னாறும்" (குறுந். கக); "மாதவி மல் லிகை மனைவளர் முல்லை" சிலப். கந : 120.

74. பிடகை - பூந்தட்டு.

75. வதுவைச்சூட்டணி - வதுவைச் சூட்டாகிய அணி; மண மாலை. வாய்திறப்ப - வாயின் கட்டவிழ்க்க; "வண்டுவாய் திறப்ப நெடு நிலா விரிந்த, வெண்டோட்டு மல்லிகை" சிலப். உ : 32 - 3.

76. பித்திகக்கோதை - பிச்சிப் பூமாலை. செப்பு - பூஞ்செப்பு; மலர்களையும் மாலைகளையும் செப்பில் வைத்தல் மரபு; "செப்பிடந் தன்ன நாற்றம்" (நற்.௩௩௭), "மடைமாண் செப்பிற் றமிய வைகிய, பெய்யாப் பூவின்" (குறுந். ௬), "வகைவரிச் செப்பினுள் வைகிய கோதையேம்" (கலி. ௬அ : 15), "செப்புவா யவிழ்ந்த தேம்பொதி நறுவிரை, நறுமலர்" (சிலப். உஉ: 121 - 2), "வகைவரிச் செப்பினுள் வைகிய மலர்போல்" (மணி. ௪: 65), "சேம மணிநகைச் செப்பினு ளேந்துபு" (சூளா. மந்திர. 56), "வேயாது செப்பி னடைத்துத் தமிவைகும் வீயினன்ன" (சிற். 374) என்பவற்றாலுணர்க.

77. அறவோர் சங்கம் - முனிவர் கூட்டம்.

78. மறவோன் சேனை - பிரச்சோதனனுடைய படை. வேழச்சங் கம் - யானைக்காக ஊதப்படும் சங்கு; "இருதலைப் பணில மார்ப்ப" (மதுரை. 380) என்பதனுரையைப் பார்க்க; யானைக்கூட்ட ஒலியுமாம்.

79. புதுக்கோள்யானை - புதிதாகப் பிடித்துக் கொணர்ந்த யானை; "புதுக்கோள் யானையிற் பிணித்தற்று லெம்மே" (குறுந். கஉக); மணி. கஉ: 45, கஅ : 168, உஅ : 60. கதம் - கோபம்; (இங்கே) ஒலி; ஆகுபெயர்.

80. மதுக்கோள் மாந்தர் - கள்ளுண்போர்.

மழைக்கட லொலியின் மயங்கிய மறுகின்
விளக்கொளி பரந்த வெறிகமழ் கூலத்துக்
கலக்கத வடைத்து மலர்க்கடை திறப்பவும்
ஒளிறுவே லிளையர் தேர்நீ றளைஇக்
களிறுகா லுதைத்த புஞ்சப் பூழியொடு
மான்றுக ளவிய மதுப்பலி தூவவும்
தெற்றி முதுமரத் துச்சிச் சேக்கும்
து.........க............ரக் குரலளைஇச்
சேக்கை நல்லியாழ் செவ்வழி பண்ணிச்
செறிவிரற் பாணியி னறிவரப் பாடவும்
அகிலு றங்கை சிவப்ப நல்லோர்
துகிலின் வெண்கிழித் துய்க்கடை நிமிடி

81. மழைக்கடலொலியின் - மழையையுடைய கடலொலியைப் போல.

82. விளக்கின் ஒளிகள். வெறி - நறுமணம். கூலம் - கடைவீதி.

83. கலக் கதவு - ஆபரணங்கள் விற்கப்படும் கடைகளின் கதவுகளை. மலர்க்கடை - பூக்கடை.

84. ஒளிறுதல் - விளங்குதல். இளையருடைய தேர். நீறு - புழுதி; "நீறடங்கு தெருவினவன் சாறயர் மூதூர்," சிறுபாண். 201.

85. புஞ்சப் பூழி - திரளான புழுதி.

86. மான் துகள் - குதிரைக் காற்குளம்புகளாலெழுந்த புழுதி. மதுப்பலி - தெய்வங்களுக்காக வார்க்கும் கள்ளாகிய பலி; "இன்மதுப் பலியும் பூவும்" சீவக. 471.

84 - 6. தேர் நீற்றுடன் களிற்றுப் பூழியும் மான்துகளும் அவியும்படி மதுப்பலியைத் தூவ.

87. தெற்றி முதுமரம் - திண்ணையாற் சூழப்பெற்ற பழையமரம்; தெற்றியம்பலம். சேக்கும் - தங்கும்.

89. யாழிசை காமத்தை விளைவிப்பதாதலின், 'சேக்கை நல்லியாழ்' என்றார்; சீவக. 28, 411-ஆம் கவிகளினுரைகளைப் பார்க்க. செவ்வழி - மாலைப்பண்; மதுரை. 604; புறநா. ௧௪௧; நள. ௧: 115.

90. விரற்பாணி - விரல்களால் அளக்கப்படும் தாளங்கள்.

91. அகில் - அகிற்சாந்து. நல்லோர் - மகளிர்.

92. வெண்துகிற் கிழியாலாகிய திரியினது பஞ்சியின் நுனியை நெருடி.

உள்ளிழு துறீஇய [1]வொள்ளடர்ப் பாண்டிற்
றிரிதலைக் கொளீஇ யெரிதரு மாலை

(உதயணன் வருந்தல்)

வெந்துயர்க் கண்ணின் வேலிட் டதுபோல்
வந்திறுத் தன்றால் வலியெனக் கில்லெனக்
கையறு குருசிலை வைகிய தெழுவென
[2] இலங்குசுடர் விளக்கோ டெதிர்வந் தேத்திப்
புறங்காப் பிளையர் புரிந்தகம் படுப்ப
எண்ணு விலக்கணத் துண்ணூல் வாங்கித்
திணைவிதி யாள ரிணையற வகுத்த
தமனியக் கூடத்துத் தலையள வியன்ற

---

93. இழுது - நெய். அடர் - தகடு. பாண்டில் - கால்விளக்கு; "பாண்டில் விளக்கிற் பரூஉச்சுட ரழல" நெடுநல். 175; பதிற்றுப். சஎ.

94. கொளீஇ - பொருத்தப் பெற்று.

95. துயர்க்கண் - துன்பத்தைச் செய்யும் புண்ணினிடத்து; "தழலுறு புண்மேற் கருவி பாய்ந்தென" (பெருங் ௪. 13 : 130); "வெந்தபுண் வேலெறிந் தற்றால்", "வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பான்போல்" கலி. அங, கஉ0.

96. இறுத்தன்று - தங்கியது. எனக்குப் பற்றுக்கோடு இல்லையென்று சொல்லி; வலி : ஆகுபெயர்.

97. கையறு குருசிலை - செயலற்று வருந்தும் உதயணனை. வைகியது - பொழுது போயிற்று.

98. இலங்குசுடர் - விளங்குகின்ற ஒளி.

99. புறங்காப்பு - புறத்தே நின்று காத்தலையுடைய.

100. எண்ணுலிலக்கணம் - முப்பத்திரண்டு இலக்கணம்; வீடு புருட வடிவமாகக் கூறப்படுமாதலின், ஒரு புருடனுக்குரிய முப்பத்திரண்டிலக்கணமும் அதில் அமைந்திருக்கவேண்டுமென்பர். நூல் வாங்குதல்: "நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டு......மனைவகுத்து" நெடுநல். 76 - 8.

101. திணைவிதியாளர் - வீடு முதலிய இடங்களை விதிப்படி இயற்றுபவர்; திணை - வீடு; "திணைபிரி புதல்வர்" பரி. கரு.

102. தமனியக் கூடம் - பொன்னாலாகிய கூடம்; "கண்ணிலாக் கவர்வன கனக கூடமும்" சூளா. நகர. 7.

100 - 102. எண்ணுலிலக்கணத்தை யுடைய தமனியக் கூடம்.

பி - ம். 1 ஒள்ளழற். 2 இறங்குசுடர்.

மயன்விதி யன்ன மணிக்காழ் மல்லத்துச்
சித்திர வம்பலஞ் சேர்ந்துகுடக் கோங்கிய
அத்தம் பேரிய வணிநிலை மாடத்து
மடையமைத் தியற்றிய மணிக்கா லமளிப்
படையகத் தோங்கிய பல்பூஞ் சேக்கைப்
பைதனெஞ் சத்து மையல் கொள்ளா
எஃகொழி களிற்றின் வெய்துயிர்த் துயங்கி
உண்டெனக் கேட்டோர் கண்டினித் தெளிகெனத்
திருவின் செய்யோ ளுருவமெய்த் தோன்றத்
தீட்டிரும் பலகையிற் றிருத்தித் தேவர்
காட்டி வைத்ததோர் கட்டளை போலக்

---

103. மயன் - அசுரத்தச்சன். காழ் - தூண். மல்லம் - பள்ளியறை; "மயன்விதித் தன்ன மணிக்கா லமளி" சிலப். ௨ : 12.

104. சித்திர அம்பலம் - சித்திர மெழுதிய அம்பலம்; "வித்தக வினைஞர் பத்தியிற் குயிற்றிய, சித்திர சாலையும்" (பெருங். ௩. 4. 14-5); இதனை, "எழுதெழிலம்பலம்" (பரி. ௧௮ : 28) என்பர். குடக்கு - மேற்கு. 105. அத்தகிரி யென்ற பெயரையுடைய மாடத்தில்.

106. மடை - மூட்டுவாய். அமளி - கட்டில்.

107. படை - ஐந்துவகையாகப் படுத்த மெத்தை. சேக்கை - படுக்கை.

108. பைதல் - துன்பம். கொள்ளா - கொண்டு.

109. எஃகு ஒழி களிற்றின் - வேல் தைத்து உள்ளே முறியப் பெற்ற ஆண் யானையைப்போல; "வெஃகொழிகளிற்றின்" என்று பாடங்கொண்டால், விருப்பம் நிறைவேறாத ஆண் யானையைப்போல வெனப் பொருள் கொள்க.

110. "உண்டென வுரையிற் கேட்பார்...கண்டினித் தெளிக வென்று" சீவக. 303.

தெளிகென (110) உயங்கி (109) யென்க.

111. திருவின் செய்யோள் உருவம் - வாசவதத்தையின் வடிவு; திருவின் செய் யோள் : மணி. ௫ : 4, ௧௬ : 34. வடிவானது மெய்ம்மை போலத் தோன்ற; இஃது உருவெளித் தோற்றம்.

112. தீட்டுதல் - எழுதுதல்.

113. கட்டளை - உவமையாகச் செய்யப்பெற்ற ஓருருவம்; "தெரிவை மார்க்கொரு கட்டளை யெனச்செய்த திருவே" கம்ப. சித்திரகூடப். 33.

கலன்பிற வணிந்து காண்போர் தண்டா
நலந்துறை போகிய நனிநா ணொடுக்கத்து
மணிமுகிழ்த் தன்ன மாதர் மென்முலைத்
தணிமுத் தொருகாழ் தாழ்ந்த வாகத்
திலமலர்ச் செவ்வா யெயிறு [1]விளக் குறுக்க
அலமரு திருமுகத் தளகத் தப்பிய
செம்பொற் சுண்ணஞ் சிதர்ந்த திருநுதல்
பண்பிற் காட்டிப் பருகுவனள் போலச்
சிதர்மலர்த் தாமரைச் செந்தோடு கடுப்ப
மதரரி நெடுங்கண் வேற்கடை கான்ற
புள்ளி வெம்பனி கரந்த கள்விதன்

---

114. கலன்பிற - பிற ஆபரணங்களை; பிற : அசையுமாம். தண்டா- அமையாத.

115. நாண் ஒடுக்கத்து - நாணால் ஒடுங்கியிருக்கும் ஒடுக்கத்தை யுடைய; "வதுவைநா ணொடுக்கமும்" கலி. ௯௨ : 25.

116. முகிழ்த்தால் அன்ன.

117. தணிமுத்து ஒருகாழ் - தண்மையையுடைய முத்தாலாகிய ஒரு வடம்; தணி - தண்மை; "தணிபுன லாடும்" (பரி. ௬); ஒருகாழ்: "அந்தொடை யொருகாழ் வளைஇச்" (குறிஞ்சிப். 118); "ஒருகாழ் மாலை தான்மலைந் தனனே" (புறநா. ௨௯௧ : 8); "முல்லை யொருகாழும்" கலி. ௧௧௫ : 5 - 6.

118. இலமலர் - இலவம்பூ: "இலமல ரன்ன வஞ்செந்நா" அகநா. ௧௪௨.

119 - 20. அளகம் - முன் உச்சிமயிர்; திருமுகத் தளகம்: "நுதல வளகபாரம்" (தக்க. 25); "அளக வாணுதல்" (கம்ப. கைகேசி சூழ். 86.) அப்பியசுண்ண மென்க. "அளிநீ டளகத்தி னட்டிய தாதும்" சிந். 122.

120 - 21. நுதலைக் காட்டி.

122. சிதர்மலர் - தேனைச் சிந்திய மலர்; வண்டையுடைய மலருமாம். 123. கண்ணாகிய வேலின்.

124. புள்ளிவெம்பனி - கண்ணீர்த்துளி. வெம்பனி: "தண்டா மரைக்கண் வெம்பனி வீழ" (பெருங்: ௨. 10 : 124.) கரந்த - மறைத்த. கள்விதன் - வாசவதத்தையினது; 'கள்வி' என்றான் தன் உள்ளத்தைக் கவர்ந்தமையின்.

121 - 4. பருகுவனள்போல நோக்கிக் கண்ணின் கடைகான்ற பனியை; 'நோக்கி' என ஒருசொல் வருவிக்க.

பி - ம். 1 விளக்குறுத்த.

காரிகை யுண்டவென் பேரிசை யாண்மை
செறுநர் முன்னர்ச் சிறுமை யின்றிப்
பெறுவென் கொல்லென மறுவந்து மயங்கி
எவ்வமிக் கவனும் புலம்ப வவ்வழிக்

(வாசவதத்தை வருந்தல்)

குழவி ஞாயிறு குன்றிவர் வதுபோல்
மழகளிற் றெருத்தின் மைந்துகொண் டிருந்த
மன்ன குமரன் றன்னெதிர் நோக்கி
ஒழுகுபு சோர்ந்தாங் குக்கதென் னெஞ்சென
மழுகிய திருமுக மம்மரோ டிறைஞ்சித்
தருமணற் பேரிற் றமரொடு புக்குத்
திருமணி மாடத் தொருசிறை நீங்கிப்

---

125. காரிகை - பேரழகு.

127. ஷ. 152. மறுவந்து - சுழன்று ; "இதுவென லறியாண் மறுவரற் பொழுதில்" அகநா. ௨௨.

125 - 7. ஆண்மையைப் பெறுவேனோவென்று மயங்கி.

124 - 7 = 146 - 52. இவ்வடிகளால் இருவருடைய எண்ணங்களும் ஒத்திருத்தல் வெளியாகின்றது.

128. எவ்வம் மிக்கு - துன்பம் மிகுந்து.

129. குழவிஞாயிறு - இளஞ்சூரியன் ; உதயணனுக்குக் குழவி ஞாயிறு உவமை; "மழகதிர் நின்ற தொத்தான்" (சீவக. 2324.) குன்று - (இங்கே) உதயகிரி ; அஃது அவன் ஏறிய யானைக்கு உவமை.

131. மன்னகுமரன் : மணி. ௪ : 63, ௨௪ : 1.

133. மழுகிய - ஒளிமழுங்கிய ; "செல்சுடர் மழுகிய புலம்புகொண் மாலை" (அகநா. ௧௪௧.) மம்மர் - மயக்கம்.

134. தருமணற் பேரில் - புதிதாகக் கொண்டுவந்திட்ட மணலையுடைய பெரிய மாளிகையில் (பெருங். ௧. 36: 41, 47: 197, ௪. 6 : 12) ; "தருமணன் முற்றம்" (மதுரை. 684) ; "தருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து" (நெடுநல். 60 ; நற். ௧௪௩ : 2) ; "தருமணற் றாழப்பெய் தில்பூவ லூட்டி" (கலி. ௧௧௪ : 12) ; "தருமணன் ஞெமிரிய திருநா றொருசிறை" மணி. ௧அ : 44.

135. ஒருசிறை - ஒரு பக்கம்.

பெருமதர் மழைக்கண் வருபனி யரக்கிக்
கிளையினும் பிரித்தவன் கேடுதலை யெய்தித்
தளையினும் பட்டவன் றனிய னென்னான்
வேழம் விலக்கிய யாழொடுஞ் செல்கெனச்
சொன்னோ னாணை முன்னர்த் தோன்றி
உரக்களி றடக்குவ தோர்த்து நின்ற
மரத்தி னியன்றகொல் மன்னவன் கண்ணெனப்
பைந்தார்த் தந்தையை நொந்த நோயள்
உள்ளகத் தெழுதரு மருளின ளாகித்
தெளிதல் செல்லா டிண்ணிறை யழிந்து
பொறியறு பாவையி னறிவறக் கலங்கிக்
காம னென்னு நாமத்தை மறைத்து
வத்தவ னென்னு நற்பெயர் கொளீஇப்
பிறைக்கோட் டியானை பிணிப்பது மன்றி
நிறைத்தாழ் பறித்தென் னெஞ்சகம் புகுந்து

---

136. அரக்கி - துடைத்து; "உண்கண் வருபனி யரக்கி" (பெருங். க. 36 : 99) என்பர் பின்னும்; "அரக்க நில்லாக் கண்ண நீர்க ளலமரு கின்றன பாராய்" திவ். நாய்ச்சியார். ௩ : 4.

137. பிரித்தவன் : செயப்பாட்டு வினை.

138. தளை - விலங்கு. என்னான் - என்று எண்ணாமல்.

139. விலக்கிய - விலக்குவதற்கு.

140. ஆணை சொன்னோன் - ஆணையிட்டான்; கட்டளையிட்டான்.

141. நின்ற - நின்றன; ஆதலால்.

142. மன்னவன் கண்கள் மரத்தின் இயன்றன கொல்லோ; "மரக்கண்ணோ மண்ணாள்வார்கண்" (முத்தொள்ளாயிரம்); "கண்ணிணையு மரமாந்தீ வினையி னேற்கே" திருவா. திருச்சதகம்.

145. தெளிதல் செல்லாள் - தெளியாள். நிறை - நிறுத்தல்; "நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை" கலி. க௩௩.

146. பொறி - எந்திரம்; "பொறியறு பாவையிற் பொம்மென விம்மி" (சீவக. 333.) 148. கொளீஇ - கொண்டு.

149. யானை - பிரச்சோதனனுடைய பட்டத்து யானை.

150. நிறைத்தாழ் - நிறையாகிய தாழக்கோல்; தாழையுடைய கதவுமாம்; "நெஞ்சிறை கொளீஇய நிறையமை நெடுந்தாழ், வெந்தொழிற் காம வேட்கை திறப்ப" பெருங். ௩. 6 : 56 - 7.

கள்வன் கொண்ட வுள்ள மின்னும்
பெறுவென் கொல்லென மறுவந்து மயங்கித்
தீயுறு வெண்ணெயி னுருகு நெஞ்சமொடு
மறைந்தவ ணின்ற மாதரை யிறைஞ்சிய

**(நீங்கிய தோழிமார் வந்து வாசவதத்தையைக் காண்டல்)**

வல்லிருள் புதைப்பச் செல்சுடர் சுருக்கி
வெய்யோ னீங்கிய வெறுமைத் தாகிக்
கையற வந்த பைதன் மாலைத்
தீர்ந்தவ ணொழிந்த திருநல் லாயம்
தேர்ந்தனர் குழீஇப் பேர்ந்தனர் வருவோர்
இணையி லொருசிறைக் கணையுளங் கிழிப்பத்
தனித்தொழி பிணையி னினைப்பன [1]ணின்ற
எல்லொளிப் பாவையைக் கல்லெனச் சுற்றி
அளகமும் பூணு நீவிச் சிறிதுநின்
திலக வாணுதற் றிருவடி வொக்கும்
பிறையது காணு யிறைவளை முன்கை

---

151. கள்வனென்றது உதயணனை; உள்ளம் - உள்ளத்தை; "என்னுள்ளங்கவர் கள்வன்" திருஞா. தே.

150 - 51. "அருநிறைக் கதவ நீக்கிக், காவலென் னெஞ்ச மென்னுங் கன்னிமா டம்புகுந்து, நோவவென் னுள்ளம் யாத்தாய்" (சீவக. 714) என்பது இவ்வடிகளுடன் ஒப்பிடற்பாலது.

153. "வெண்ணெய் வெங்கனன் மீமிசை வைத்ததொத், துண்ணையாவுரு காவுள ளாயினுள்" சீவக. 1309.

154. அவண் - அவ்விடத்தே. இறைஞ்சிய - வணங்குதற்கு.

155. சுடர் - வெயில். 156. வெய்யோன் - சூரியன்.

157. கையற - செயலற. பைதல் - துன்பம்.

158. ஆயம் - கூட்டமாகிய மகளிர். "நகைநல் லாயம்" (176) என்பர் பின். 159. வருவோர் - வருபவராகிய தோழியர்.

154 - 9. வாசவதத்தையை இறைஞ்சுதற்கு வருவோர்.

160. ஒருசிறை - ஒருபக்கத்தில்.

161. பிணையின் - பெண்மானைப் போல. நினைப்பனள் - உதயணனை நினைவாளாகி. 162. எல்லொளி - மிக்க ஒளி.

165. இறை - கையின்சந்து. இறை வளை - விளி.

163 - 5. நுதல்வடிவைச் சிறிது ஒக்கும் பிறையைக் காண்;

பி - ம். [1] நிற்ப.

[1] திருமுகை மெல்விரல் கூப்பி நுந்தை
பெரும்பெயர் வாழ்த்தாய் பிணையென் போரும்
செம்பொன் வள்ளத்துத் தீம்பா லூட்டும்
எம்மனை வாரா ளென்செய் தனளெனப்
பைங்கிளி காணாது பயிர்ந்துநிற் கூஉம்
அஞ்சொற் பேதா யருளென் போரும்
மதியங் கெடுத்து மாவிசும் புழிதரும்
தெறுதரு நாகநின் றிருமுகங் காணிற்
செறுதலு முண்டினி யெழுகென் போரும்
பிசியு நொடியும் பிறவும் பயிற்றி
நகைவல் லாய நண்ணினர் மருட்டி
முள்ளெயி றிலங்கு முறுவ லடக்கிச்
சொல்லெதிர் கொள்ளாண் மெல்லிய விறைஞ்சிப்
பந்தெறி பூமியுட் பாணி பெயர்ப்புழி

---

பிறை சிறிது ஒக்குமென்றார், நுதலை ஒப்பது எண்ணாட்டிங்க ளென்றல் மரபாதலால்; "மாக்கட னடுவ ணெண்ணாட் பக்கத்துப், பசுவெண் டிங்க டோன்றி யாங்குக், கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல்" (குறுந். ௱உகூ); சிலப். உ : 38 - 41 ஆம் அடிகளின் உரையைப் பார்க்க.

167. பிணை - பெண்மான் போல்வாய்.

164 - 7. இவ்வடிகளிலுள்ள செய்தி பிறைதொழுகென்றலென்னும் அகப்பொருட்டுறையை நினைவுறுத்துகின்றது.

169. எம்மனை - என்தாய்.

170. கிளி: எழுவாய். பயிர்ந்து - அழைத்து. கூஉம் - கூவும்.

168 - 70. "கொன்னூனை வேல்" (திருச்சிற். 231) என்னுஞ் செய்யுளைப் பார்க்க. 173. நாகம் - இராகு.

175. பிசியாவது, யானை செல்லுமென்பதற்குப் பிறைகவ்வியமலை நடக்குமென்பது போல்வது (தொல். செய். சூ. 177, உரை); இக்காலத்து விடுகதை, பிதிர், புதிரென வழங்குவதும் இதுவே.

176. மருட்டி - மருட்ட; மயங்கச்செய்ய.

175 - 6. "செம்முது செவிலியர் கைம்மிகக் குழீஇக், குறியவு நெடியவு முரைபல பயிற்றி" (நெடுநல். 153 - 4) என்பதனோடும் அதன் பொருளோடும் இவ்வடிகள் ஒப்பிடற்பாலன.

178. இறைஞ்சி - இறைஞ்ச; வாசவதத்தை தலைகவிழ்ந்து நிற்ப.

179. பாணி - கையை.

[1] பி - ம். திருமுக.

அஞ்செங் கிண்கிணி யடியலைத் தனகொல்
திருக்கிளர் வேங்கையும் பொன்னும் பிதிர்ந்து
மருப்பியல் செப்புங் குரும்பையு மிகவி
உருத்தெழு மென்முலை முத்தலைத் தனகொல்
பிணைய லலைப்ப நுதலொந் ததுகொல்
இனையவை யிவற்றுள் யாதுகொ லிந்நோய்
பெருங்கசி வுடையளிப் பெருந்தகை மகளெனத்
தவ்வையுந் தாயுந் தழீஇயினர் கெழீஇச்
செவ்வி யிலளெனச் சேர்ந்தகம் படுப்பச்
செம்பொன் விளக்கொடு சேடியர் முந்துறத்
திண்ணிலைப் படுகாற் றிருந்தடிக் கேற்ற
மணிக்கல மொலிப்ப மாட மேறி
அணிக்காற் பவழத் தியவன ரியற்றிய

181. வேங்கை - வேங்கைப்பூ ; ஆகுபெயர். வேங்கையும் பொன்னும் பிதிர்ந்தென்றது பசலைபாய்தலை ; "முலைமுதல் முற்ற மெல்லாம், வித்திய வேங்கை வீயும் விழுப்பொனும் விளங்க" சீவக. 2539.

182. மருப்பியல் செப்பு - யானைத் தந்தத்தினால் செய்யப்பட்ட செப்பு.

183. உருத்து - கோபித்து ; தோற்றங் கொண்டென்றுமாம்.

184. பிணையல் - நெற்றிச் சூட்டாகிய மாலை. நுதல் - நெற்றி.

186. பெருங்கசிவு - மிக்க துன்பத்தை ; "கசிவெனுங் கடலை நீந்தி" சீவக. 1132.

187. தவ்வை - தமக்கை ; செவிலித்தாயின் மகளாய்த் தனக்கு மூத்தவள். தாய் - செவிலி. தழீஇயினர் - தழுவி. "தாயர் தவ்வையர், சிலம்புரி திருந்தடி பரவச் செல்பவள்" சீவக. 184.

188. செவ்வி - பிறர் தம் குறை கூறுதற்கேற்ற மனமொழி மெய்கள் தூயளாம் காலம் ; திருச்சிற்றம்பலக் கோவையாரிலுள்ள செவ்வி யிலளென்னுந் துறையும், "கற்றில" (97) என்னும் செய்யுளும் இங்கே அறிதற்பாலன. அகம் படுப்ப - உள்ளிடத்தே சேர்ப்ப.

189. சேடியர் - ஏவல்செய்யும் மகளிர்.

190 - 91. படுகால் - மேகலைகள் ; "ஏணிப் படுகால்" (பரி. ௧0 : 11) என்பதும் அதனுரையும் இதனை விளக்கும். படுகாலும் கலமும் ஒலிப்ப என்க. படுகால் - படியுமாம்.

192. யவனர் - யவனதேசத்துத் தச்சர் ; "யவனத் தச்சர்" மணி. ௧௯ : 108.

மணிக்காழ் விதானத்து மாலை தொடர்ந்த
தமனியத் தியன்ற தாமரைப் பள்ளிக்
கலனணி யாயங் கைதொழ வேறிப்
புலம்புகொண் மஞ்ஞையிற் புல்லெனச் சாம்பிப்
புனல்கொல் கரையி னினைவனள் [1]விம்மிப்
பாவையும் படரொடு பருவரல் கொள்ள
இருவர் நெஞ்சமு மிடைவிட லின்றித்
திரிதர லோயாது திகிரியிற் சுழல
ஊழ்வினை வலிப்பி னல்ல தியாவதும்
சூழ்வினை யறுத்த சொல்லருங் கடுநோய்க்
காமக் கனலெரி கொளீஇ யாமம்
தீர்வது போலா தாகித் திசைதிரிந்
தீர்வது போல விருளொடு நிற்பச்

---

192 - 3. பவழத்தாலாகிய தூணில் : "கணிபுனை பவழத் திண்காழ்" (சீவக. 113.) காழ் - காம்பு ; தூணுமாம்.

194. தமனியம் - பொன். தாமரைப்பள்ளி - தாமரைப்பூ வடிவமாகச் செய்த படுக்கை ; தாமரை வளையங்களையுடைய படுக்கையுமாம். தமனியத் தியன்ற பள்ளி யென்க.

196. புலம்பு - வருத்தம். சாம்பி - வாடி.

197. புனல் கொல் கரை - நீராற் குத்தியிடிக்கப்பெற்ற கரை ; "மூரநீருடன்றுகரை கொல்வது" (சீவக. 280.) விம்மி - பொருமி.

198. பாவை - வாசவதத்தை. படர் - மனத்துன்பம். பருவரல் - உடற்றுன்பம். 199. இருவர் - உதயணனும் வாசவதத்தையும்.

200. திகிரியின் - சக்கரம்போல.

201. வலிப்பின் அல்லது - துணிந்து நீக்கினாலன்றி. யாவதும் - சிறிதும்.

202. சூழ்வினை - ஆலோசனையை. சொல் அரு - சொல்லுதற்கு அரிய ; "உட்கரந் துறையு முய்யா வரும்படர், செப்பல் வன்மையின்" குறிஞ்சிப். 11-2.

203. காமக் கனலெரி : "கண்டர வந்த காம வொள்ளெரி" (குறுந். ௩0௫.) கொளீஇ - கொளுவப்பெற்று.

202 - 3. கடுநோய்க் காம எரி.

203 - 5. யாமம் நிற்ப ; "செல்லா விரவே சிறுகா விருளே" கம்ப. உருக்காட்டுப்.

பி - ம். [1] விம்மா.

சேர்ந்த பள்ளி சேர்புணை யாகி
நீந்தி யன்ன நினைப்பின ராகி
முழுங்குகடற் பட்டோ ருழந்துபின் கண்ட
கரையெனக் காலை தோன்றலின் முகையின
பூக்கண் மலரப் புலம்பிய பொய்கைப்
பாற்கே ழன்னமொடு பல்புள் ளொலிப்பப்
பரந்துகண் புதைஇய பாயிரு ணீங்கிப்
புலர்ந்தது மாதோ பொழிறலைப் பெயர்ந்தென்.

௩௩—மாலைப்புலம்பல் முற்றிற்று.

---

206. புணை - தெப்பம்.

209. காலை - நாட்காலை. முகைத்தல் - தோன்றுதல்.

208 - 9. " நெஞ்சிற், கசிவெனுங் கடலை நீந்திக் கரையெனுங் காலை கண்டார் " சீவக. 1132.

210. புலம்பிய - தனித்த ; ஒலியின்றி யிருந்த.

211. பாற்கேழ் - வெண்ணிறம் ; பால்போன்ற நிறமுமாம் ; "பானிறச் சேவல் " (32) என்றார் முன்னும்.

212. கண்புதைஇய - கண்களைப் புதைத்த ; கண் - இடமுமாம்.

213. பொழில் - பூமி.

---

## ௩௪—யாழ் கைவைத்தது.

(பிரச்சோதனன் செயல்)

பொழிறலைப் பெயர்ந்த [1]புலம்புகொல் காலை
எழின்மணி விளக்கி னேமம் போகிக்

---

௩௪—யாழ் கைவைத்தது.

[பிரச்சோதனன், மந்திரியாகிய சிவேதன் மூகமாக உதயணனை இணங்குவித்து அவனைக்கொண்டு வாசவதத்தைக்கு யாழ் கற்பிக்கச் செய்தது இதனால் அறியலாகும்.]

1. பொழில் - பூமி. தலைப்பெயர்ந்த - (இரவு) நீங்கிய. புலம்பு - தனிமை வருத்தம்.

2. மணிவிளக்கு - மாணிக்கத் தீபம். ஏமம் - பாதுகாப்பையுடைய பள்ளியறை.

பி - ம். 1 புலம்பு கொள்.

கலையினுங் களியினுங் காமுறக் கவைஇய
மழலைக் கிண்கிணி மடவோர் மருட்டப்
புரிதார் நெடுந்தகை பூவணை வைகிய
திருவீழ் கட்டிற் றிறத்துளி காத்த
வல்வேற் சுற்றத்து மெய்ம்முறை கொண்ட
பெயர்வரி வாசனை கேட்டபி னுயர்திறல்
ஊழி னல்லது தப்புத லறியார்
காலனுங் கடியு நூலொண் காட்சியர்
யாக்கை மருங்கிற் காப்புக் கடம் [1]பூண்
டருந்துறை போகிய பெருந்தகை யாளர்
உணர்வு மொளியு மூக்கமு முணர்ச்சியும்
புணர்வின் செல்வமும் போகமுஞ் சிறப்ப
அமிழ்தியல் யோகத் தஞ்சனம் வருத்துக்

---

3 - 4. கலை - புணர்ச்சிக்குரிய கரணங்கள்; (சீவக. 1625). கவைஇய - சூழ்ந்த. மழலைக்கிண்கிணி : 175; "மழலைப்பொற்சிலம்பு" (சீவக. 638.) கவைஇயகிண்கிணி : "கிண்கிணி கவைஇய வொண்செஞ் சீறடி" (முருகு.) 5. நெடுந்தகை - பிரச்சோதனன்.

6. வீழ்தல் - விரும்புதல். திறத்துளி - வகைவகையாக; உளி : பகுதிப்பொருள்விகுதி.

7. வேற்சுற்றத்து - வேற்படையையுடைய வீரர்களின்.

8. பெயர்வரி வாசனை - பெயர்கள் எழுதப்பெற்ற வரிகளை வாசித்தல்; "ஏடுகோ ளாள ரெனையரென் றெண்ணிப், பேரெழுத் தோலை பெறுமுறை நோக்கி" பெருங். க. 37 : 153-4.

10. காலனும் - யமனையும். காட்சி - அறிவு.

11. காப்புக் கடம் பூண்டு - காத்தலாகிய உரிமையை மேற் கொண்டு.

12. அருந்துறை போகிய - அரிய நூற்றுறைகளில் வல்ல. 'மருந்து துறைபோகிய' என்னும்பாடத்திற்கு மருந்தினைப்பற்றிய ஆராய்ச்சி களில் வல்லவென்று பொருள் கொள்க.

13. உணர்வு - இயற்கையறிவு. உணர்ச்சி - செயற்கையறிவு.

15. யோகத்து அஞ்சனம் - மருந்தாகிய மையை; பலபொருள்கள் சேர்த்து ஆக்கப்படுதலின் மருந்திற்கு யோகமென்பது பெயராயிற்று; அரசர்கள் காலையில் அஞ்சனம் அணிந்து கொள்ளுதல் மரபு.

பி - ம். [1] பூண்டு மருந்து துறைபோகிய.

[1] கமழ்கொள் பூமியிற் கபிலை முன்னிறீஇ
மகடூஉத் துறந்த மாசறு படிவத்துத்
துகடீ ராளர்க்குத் துளக்கிய முடியன்
[2] மலர்கண் ணளைஇய மந்திர நறுநீர்
பலருடன் வாழ்த்தப் பண்புளி யெய்திப்
பால்பரந் தன்ன வால்வெள் விதானத்து
மாலை தொடர்ந்த மங்கலப் பந்தர்
[3] விரிநூ லந்தணர் வெண்மணை சூழ்ந்த
திருமணிக் கட்டிற் றிறத்துளி யெய்தி
அறநிலை பெற்ற வருள்கொ ளவையத்து
நிறைநூற் பொத்தக நெடு [4] மணை யேற்றி
வல்லோர் வகுத்த வாசனை [5] வாக்கியம்
பல்லோர் பகரப் பயம்பல பருகித்
தரும விகற்பமொடு தானை யேற்பும்

16. கபிலை முன்னிறீஇ - பசுவை முன்னே நிறுத்தி; என்றது பசுவைத் தரிசித்தென்றபடி. இதனை விசுவரூப தரிசனமென்பர்.

17. படிவம் - தவக்கோலம். 18. துளக்கிய - வணங்கிய.

14 - 8. "முனைவற் றொழுது முடிதுளக்கி முகந்து செம்பொன் கொளவீசி, நினைய லாகா நெடுவாழ்க்கை வென்றிக் கோலம் விளக்காகப், புனையப் பட்ட வஞ்சனத்தைப் புகழ வெழுதிப் புனைபூணான், கனைவண் டார்க்கு மலங்கலுங் கலனு மேற்பத் தாங்கினான்" சீவக. 2357.

19. தன்னிடத்தே மலர் கலக்கப்பெற்ற மந்திர நீரை.

20. உடன் - ஒருங்கு. 21. வால் வெள் - மிகவெள்ளிய.

22. மங்கலப் பந்தரில்.

23. நூலை விரித்துக் கூறும் அந்தணர்கள் தங்கிய வெள்ளிய ஆசனப்பலகை சூழ்ந்த. 24. கட்டில் - சிங்காதனத்தில்.

25. அவையத்து - சபையில்; "சிறந்த கொள்கை யறங்கூ றவையம்" மதுரை. 492. 26. பொத்தகம் - புத்தகம்.

27 - 8. வாக்கியங்களைப் பகர அவற்றின் பொருள்கள் பலவற்றையுங் கேட்டு.

29. தானையேற்பு, பொருளீட்டும் வழியைச் சார்ந்தது.

பி - ம். 1 கடல்கொள். 2 மலர்க்கண். 3 விதிநூல். 4 மனையேற்றி 5 வாய்க்கியம்.

கரும விகற்பமொடு காமமுங் கெழீஇய
இன்பக் கேள்வி யினிதுகொண் டெழீஇத்
துன்ப நீங்குந் தொழின்முறை போக்கி
முடிகெழு மன்னரொடு முற்றவை நீங்கிக்
கடிபெருங் கோயிலுட் காட்சி விரும்பி
உதயண குமரனை யுழைத்தரல் விரைந்தென
உழைநிலை யாள ரோடின ரிசைப்ப

(உதயணன் செயல்)

இழையணி யிரும்பிடி யெருத்த மேறிக்
கடையணி யாவணங் கைதொழப் போதந்
தெறிவேற் பெருங்கடை யியைந்தன னிற்பத்

(பிரச்சோதனன் உதயணனை உபசரித்தல்)

தருமணன் முற்றத்துத் தானெதிர் சென்று
திருமணி யம்பலங் கொண்டொருங் கேறி

---

29-31. தருமம் அருத்தம் காமமென்னும் முத்திறத்து நூற் கேள்விகளை அரசன் கேட்டல் மரபாதலின், தருமவிகற்பமுதலியவற்றைக் கேட்டு இவன் உட்கொண்டனன்.

32. தொழில்களை முறையேசெய்து முடித்து.

33. முற்றவை - முதிர்ந்த சபையை; "கற்றோர் மொய்த்த முற்றவை நடுவண்" பெருங். க. 33 : 245.

34. காட்சி விரும்பி - உதயணனைக் காணுதலை விரும்பி.

35. உழைத்தரல் - என்பக்கத்தே அழைத்து வருக. என - என்று பிரச்சோதனன் சொல்ல.

36. இசைப்ப - உதயணனுக்குச் சொல்ல.

38. "கலிகொ ளாவணங் கைத்தொழப் போகி" (க. 32 : 95) என்றார் முன்னும்.

39. எறிவேற் பெருங்கடை - எறியும் வேற்படையையுடைய வீரர்கள்காக்கும் பெரியவாயில்; "பல்வேன் முற்றம்" என்பர்; பெருங். க. 35 : 66. நிற்ப - உதயணன் நிற்க.

40. தருமணன் முற்றம் : பெருங். க. 33 : 134, குறிப்பைப்பார்க்க. தான் - பிரச்சோதனன்.

41. அம்பலம் - சபை; 'நல்வினை யம்பலம்', 'திருமணியம்பலம்' (பெருங். க. 34 : 58, 140) என்பர் பின்னும்.

இரட்டைத் தவிசி னிருக்கை காட்டி
இசைக்க வேண்டா விதையுன தில்லெனச்
சிறப்புடைக் கிளவி செவ்விதிற் பயிற்றித்
தளரிய லாயமொடு தன்புடை நின்ற
பணியோள் பற்றிய பவழச் செப்பின்
வாச நறுந்திரை வகுத்துமுன் னீட்டித்
தாமரை யங்கையிற் றான்பின் கொண்டு
குறிப்பி னிருக்க குமர னீங்கென
[1] மடக்கிடன் மனமொடு மாணகர் புக்குத்

(பிரச்சோதனன் சிவேதனிடம் கூறல்)

தான்பயில் வீணை தங்கையு மொருத்தி
காண்குறை யுடைமையிற் கவலு மாதலின்
வல்லோர்ப் பொருது தொல்குறை [2] யுழத்தும்
தாயும் யானு மெந்தை யாதலிற்
றீதொடு வரினுந் தீர்த்தறன் கடனென

42. இரட்டைத் தவிசு - இருவர் இருத்தற்குரியதோராசனம். காட்டி - உதயணனுக்குக் காட்டி.

43. இதை உனது வீடென்று யான் சொல்ல வேண்டுவதில்லை; உன்னதே; "ஈங்கிது நின்னு டிப்பதி நின்னா ரிதுநின்னில்,வீங்கிய திண்டோள் வெல்புக ழாய்நின் கிளையென்றாற், காங்கது வெல்லா மண்ணனு நேர்ந்தாங் கமைகென்றான்" (சீவக. 1639) என்பது இங்கே அறியற்பாலது. 'என' என்று ஒருசொல் வருவிக்க.

46. பணியோள் - பணிப்பெண். 47. திரை - வெற்றிலை.

46 - 7. "கைப்பொடி சாந்த மேந்திக் காகநீர் விதியிற் பூசி, மைப்படு மழைக்க ணல்லார் மணிச்செப்பின் வாச நீட்டச், செப்படு பஞ்ச வாசந் திசையெலாங் கமழ வாய்க்கொண், டொப்புடை யுறுவர் கோயில் வழுங்குது மெழுக வென்றான்." சீவக. 2736.

50. மடக்கிடல் மனமொடு - நகரத்துக்குச் செல்லாமல் உதயணனைத் தடுத்துத் தன்பால் இருக்கச் செய்ய வேண்டுமென்ற மனத்துடன்; "அவனையா னிகளம் பெய்து காவல் செய் திடுவல்" (சீவக.1682) என்பது இங்கே அறியத்தக்கது. நகர் - அரண்மனையில்.

55. தீது - பழிமொழி முதலியன. ஒடு : அசைநிலை.

பி - ம். [1] மக்கடன். [2] உழக்கும்.

மதியொண் காட்சி மாமுது சிவேதனை
இதுநங் குறையா விசைத்தி சென்றென

(சிவேதன் உதயணனுக்குக் கூறல்)

நல்வினை யம்பலத் திருந்த நம்பிக்கு
வல்விதி னக்குறை யுரைத்த பின்னர்

(உதயணன் செயல்)

அதற்கோ ருபாய மறியா திருந்தோன்
மகட்குறை யுணர்ந்து மன்னவன் விடுத்த
திருமணி வீணை யிசைத்தலுந் தெருமந்
தொருநிலை காறு முள்ளே [1] யொடுக்கி
விழுப்பமொடு பிறந்த வீறுயர் தொல்குடி
ஒழுக்கங் காணிய வுரைத்ததை யொன்றுகொல்
ஒளிமேம் பட்டன னொன்னா னென்றெனை

---

51 - 7. தான் பயில் - நீ கற்று அடிப்பட்ட; தானென்றது உதயணனை. தங்கையென்றது வாசவதத்தையை. காண் குறை - அறிந்து கொள்ளுங் குறையை. கவலும் - கவலையடைகின்றாள். வல்லோர் - யாழில் வல்லோரை. தாயும் யானுமுழத்து மென்க. எந்தை என்றது, இங்கே முறைப்பெயரன்று; முகமன்மொழி. தன்கடன் - உனது கடமையாகும். காட்சி - அறிவு. சிவேதன் - பிரச்சோதனனுடைய மந்திரி; இங்கே 'மாமுது சிவேதன்' என்றதற்கேற்ப, 'பெருமூதாளன்' (110) என்பர் பின். சென்று - உதயணன்பாற் போய். என - என்று அரசன் சொல்ல.

58. வினை - சிற்பத்தொழில். நம்பிக்கு - உதயணனுக்கு.

59. உரைத்தபின்னர் - சிவேதன் சொல்லிய பின்பு.

60. அதற்கு - வாசவதத்தையைப் பெறுதற்கு; நெஞ்சறி சுட்டு. இருந்தோன் - உதயணன்.

63. ஒரு நிலை காறும்-ஒரு முகூர்த்த காலம் வரையில்; கலி. ௩௯:23.

64. பிறந்த - யான் பிறந்த.

65. காணிய - காணுதற்பொருட்டு. உரைத்ததை யொன்றுகொல் - (பிரச்சோதனன்) சொல்லியதொன்றாகுமோ? ஐ: சாரியை.

66. ஒளி - ஒளியில்; ஒளியாவது அரசர்பாலுள்ள கடவுட்டன்மை; "மன்னவன் தன்னொளி" (சீவக. 248.) ஒன்னான் - பகைவன்.

பி - ம். 1 ஒடுக்கிய.

அளிமேம் படீஇய வெண்ணிய தொன்றுகொல்
உள்ள [1]மருங்கி னுவத்தது செய்தல்
செல்வ மன்னவன் சீலங் கொல்லோ
யாதுகொன் மற்றிவ் வேந்தல் பணியென
நீதி மருங்கி னினைவ வவன்சூழ்ந்
[2] தியாதெனப் படினும் படுக விவன்பணி
மாதரைக் காட்டுதன் மங்கல மெனக்கென
நெஞ்சு..............................தங்கூறி
அஞ்சொ லாயத் தன்றியான் கண்ட
தாமரை முகத்தி தலைக்கை யாகப்
பல்பெருந் தேவியர் பயந்த மகளிருள்
நல்லிசை யார்கொ னயக்கின் றோளெனச்
சொல்லினன் வினவுஞ் சுவடுதனக் கின்மையின்
யாரே யாயினு மிவன்மக ளொருத்தியைச்
சீர்கெழு வீணை சிறப்பொடு காட்டிப்
[3] பயிற்சி யுள்வழிப் பல்லோர் வருதலின்

---

67. மேம்படீஇய - மேம்படுதற்கு. 69. சீலம் - இயல்பு.

70. இவ்வேந்தல் பணி - இந்த அரசனுடைய கட்டளை.

62 - 70. இப்பகுதியோடு, ௩. 21 : 68 முதலிய அடிகளை ஒப்பிடுக.

71. நினைவ - நினைத்தற்குரியனவற்றை.

72. இவன் பணித்த. 73. காட்டுதல் - அறிவித்தல்.

75. அன்று - யானையை யடக்கிய அந்நாளில்; 83.

76. தலைக்கையாக - முதல்வியாக; தலைக்கை - முதலிடம்; "சாலங் காயனைத் தலைக்கை யாக", "இலக்கணச் செந்தீத் தலைக்கையி னிரீஇ" "தலைக்கை யாகிய..........சாலங்காயன்" பெருங். ௧. 47 : 123, ௩. 22 : 74; ௫. 7 : 83 - 4.

75 - 6. = 83 - 4.

77 பிரச்சோதனனுக்குத் தேவியர் பதினாறுயிரவராதலின், "பல் பெருந்தேவியர்" என்றான். 78. நல்ல இசையை.

79. சுவடு - உபாயம்; "அருகுஞ் சுவடுந் தெளிவுணரோம்" (திவ். பெரியதிருவந். 8); பழக்கமுமாம்.

80 - 81. ஒருத்திக்கு வீணையை அறிவித்து; ஒருத்தியை: உருபு மயக்கம்; "அறிவுடை யந்தண னவளைக்காட் டென்றானே" கலி. ௭௨.

82. உள்வழி - உள்ள இடத்து.

பி - ம். 1 மறுகின். 2 யாதெனிற். 3 பயிர்ச்சி.

அழித்து மொருநா ளன்றியான் கண்ட
கதிர்மதி முகத்தியைக் காண்டலு முண்டென
முதிர்மதிச் சூழ்ச்சியின் முற்ற நாடிச்
செய்யே னாகிச் சிறுமை நாணின்
உய்யே னாத லொருதலை யதனால்
உயிர்கெட வருவழி யொழுக்கங் கொள்ளார்
செயிரறு கேள்வி தேர்ந்துணர்ந் தோரென
வெல்லினுந் தோற்பினும் விதியென வகுத்தல்
பொருணூ லாயும் புலவோர் துணிவென
மதிவழி வலித்த மனத்த னாகி
என்னிதற் படுத்த நன்னுதன் மாதரைப்
பேரும் பெற்றியுந் தேரு மாத்திரம்
நேர்வது பொருளென நெஞ்சு வலியுறீஇச்
செறுநரைப் போலச் சிறையிற் றந்துதன்
சிறுவரைப் போலச் செய்தோன் முன்னர்த்
தவன்முறை யாயினுந் தன்மன முவப்பன
இயன்முறை யாற்றி யென்கடன் றீர்ந்த
பின்ன ராகுமென் பெயர்முறை யென்ன

---

83. அழித்தும் - மீட்டும்; "அழித்துப்பிறந் தாயினு மெய்துதல் வலித்தனென்" பெருங். க. 36 : 114 - 5.

பயிற்சியுள்வழிக் (82) காண்டலுமுண்டு (84)

86. சிறுமை - அரசனேவலால் யாழ்கற்பித்தல்; "பண்பில் சிறு தொழில்" (35 : 167) என்பர் பின்னும்.

87. ஒருதலை - துணிவு.

91. பொருணூல் - அறிவு நூல்; அருத்தசாத்திரமுமாம்.

காண்டலுமுண்டெனவும் (84), தேர்ந்துணர்ந்தோரெனவும் (89), புலவோர் துணிவெனவும் (91), வலித்த மனத்தனாகி (92).

93. என் இதற்படுத்த - என்னை இம்மயக்கத்திற் சேர்த்திய; "என்னிதற்படுத்த வேந்தல்" சீவக. 713.

94. தேருமாத்திரம் - அறியுமளவு.

95. நேர்வது பொருள் - உடன்படுவது காரியமாகும்.

96 - 7. தன் பிள்ளைகளை ஆதரிப்பது போல் என்னை ஆதரித்த பிரச்சோதனனுடைய முன்பு. 98. தவல் - விட்டு நீங்கல்.

100. பெயர் முறை - பெயர்ந்து செல்லுமுறை.

ஆன்பாற் றெண்கட லமுதுற [1]வளைஇய
தேன்பெய் மாரியிற் றிறவ தாகப்
பருகு வன்ன பயத்தொடு கெழீஇ
உருகு வன்ன வுவகைய னாகி
இறந்தன னிவனென [2] விளிப்பரந் துருது
சிறந்தன னிவனெனச் செவ்வ னோக்கிக்
கடந்தலை வைக்குங் காலமி துவென
அவன்றலை வைக்கு மாணை யேவலும்
உவந்ததை யெல்லா முறைமி னீரெனப்
[3] பேர்ந்தனன் விடுப்பப் பெருமூ தாளன்
நேர்ந்ததை யெல்லா நெடுந்தகைக் குரைப்பத்

(பிரச்சோதனன் செயல்)

திருமலி யாகத்துத் தேவியர் பயந்த
நங்கைய ருள்ளு மங்கை முற்றாப்
பெதும்பை யாயத்துப் பேதையர் வருகெனப்
பளிக்கறைப் பூமியும் பந்தெறி களத்தும்

---

102. திறவதாக - நன்றாக.

101 - 2. "திருவிளை தேம்பெய் மாரி பாற்கடற் பெய்த தென்றான்" சீவக. 2077.

103. பருகுவன்ன பயம் - பருகுதலை யொத்த பிரயோசனம்.

105. இளி - இழிவு.

105 - 7. 'இறந்தவனிவனென' என்பது முதலியன பிரச்சோதனனுடைய கருத்து. கடம் தலைவைக்கும் - கடமையை ஏற்பிக்கும்.

109. உவந்ததை - யான் மகிழ்ந்து செய்தற்கு உடன்பட்டதை.

110. பேர்ந்தனன் விடுப்ப - புடைபெயர்ந்து சென்று அனுப்ப; "இருக்கை யெழலு மெதிர்செலவு மேனை விடுப்ப வொழிதல்" (நாலடி; 143.) பெருமூதாளன் - சிவேதன்; "பெருமூதாளரேம்" (பொருந.243); "பெருமூதாளர்" முல்லைப். 110.

111. நேர்ந்ததை - உதயணன் உடன்பட்டதை.

113. முற்றா - முதிராத; அடையாத.

114. பேதையரென்றது மகளிரென்னுந் துணையாக நின்றது. வருகவென்று அரசன் கட்டளையிட.

115. பளிக்கறை - பளிங்காலாகிய அறை; "விளிப்பறை போகாது

பி - ம். 1 அளைஇத். 2 இனிப்பரந் துருது. 3 பெயர்ந்தனன்.

மணிக்கயிற் றூசன் மறலிய விடத்தும்
கொய்ம்மலர்க் காவும் பொய்கைக் கரையும்
அந்தக் கேணியும் வந்துபெயர் கூவித்
தவ்வை மகளிருந் தாய்கெழு பெண்டிரும்
அவ்வழி யாயமு நொய்தகப் படுப்ப
முத்தின ருத்தியர் மும்மணிக் காசினர்
கச்சினர் கண்ணியர் கதிர்வெள் வளையினர்
சில்கலத் தியன்ற வணியின ரல்லது
பல்கலஞ் சேரா மெல்லென் யாக்கையர்
அசைவில் குமரரை யாடிடத் தணங்கு
நசையுட் கொண்ட நன்மை யியன்று
விழுத்தகைத் தெய்வம் வழுத்தா மரபிற்
றூர்ப்பொலி மேனிக் கூர்ப்பணங் கொடுக்கிய
மண்டு [1]தணிதோண் மாசின் மகளிர்

---

மெய்புறத் திடூஉம், பளிக்கறை மண்டபம்" (மணி. ௩ : 63 - 4) ; பளிங்குப் பாறையுமாம் ; "பண்ணை நண்ணும் பளிக்கறைக்கே" திருச்சிற். 30.

116. மணிக்கயிறு - முத்துவடமாகிய கயிறு ; "முத்தங் கயிறாக, ஏராரும் பொற்பலகை யேறி" திருவாசகம், பொன்னூசல் 1.

117 - 8. = பெருங். க. 33 : 3.

119. பெருங். க. 33 : 187 - ம் அடியின் குறிப்புரையைப் பார்க்க.

120. நொய்து - விரைவில்.

121. உத்தி - சீதேவியென்னுந் தலைக்கோலம் ; "தெய்வ வுத்தியொடு" (முருகு. 23.) மும்மணிக்காசினர் - மூன்றுவகை மணிகள் பதித்த பொற்காசாலாகிய ஆபரணத்தை யுடையவர் ; "முத்த வள்ளியொடு மும்மணி சுடர" (203) என்பர் பின் ; மும்மணியாவன : புருடராகம், வைடூரியம், கோமேதகமென்பன ; "மும்மணியா வனசொன்ன புருடராக, முறுவயிடூ ரியங்கோமே தகமேயென்றுங் கோதுவர்" திருவால. ௨௯ : 22. 123. சில்கலம் - சிலவாகிய ஆபரணங்கள்.

125. அணங்கும் - வருத்தும். 127. மரபின் - முறைமையையுடைய.

125 - 7. நசை உட்கொண்டவர்களாதலின் தெய்வம் வழுத்தாதவர்களாயினர்.

128. கூர்ப்பு - மிகுதி ; அணங்கு - தெய்வப்பெண்ணை. ஒடுக்கிய - ஒடுக்குதற்கு.

129. தணி - தண்மை ; "தணிபுன லாடுந் தகைமிகுபோர்" பரி. க.

பி - ம். 1 திணிதோள்.

பெண்டுணை சார்வாக் கண்டுழிக் கலங்கிக்
கடைக்கண் சிவப்புங் கதிர்முலை யுருப்பும்
மடக்காக் கூழையு மருங்குலும் பற்றிப்
புதையிருந் தன்ன இளரொளி வனப்பினர்
அரங்கொல் கிண்கிணி யிரங்க வொல்கிப்
பொற்கிடுகு செறிந்து போர்வை முற்றி
முத்துக்காழ் தொடர்ந்த சித்திரக் கூடத்துப்
பவழக் கொடுங்காழ் பத்திமுகத் [1]தழுத்தித்
திகழ்கோட் டியன்ற திமிசுகுடப் பொற்கால்
உரிமைச் சுற்றத் துரியோர்க்குத் திறந்த
திருமணி யம்பலத் திமிழ்முழாத் ததும்பும்
அரங்க நண்ணி [2]யரிமா சுமந்த
மரகதத் தியன்ற மணிக்காற் கட்டில்
நூல்வினை நுனித்த நுண்டொழி லாளர்
வாலரக் கூட்டிய வானூ னிணைவைப்
பால்பரந் தன்ன பஞ்சி மெல்லணைச்

---

131. உருப்பு - தோற்றம்.

133. புதையிருந்தன்ன - மறைவிடம் பார்த்து ஒளித்திருந்தாற் போன்ற. புதையிருத்தல் வனப்பின் தொழில்.

121 - 33. இவ்வடிகளாற் கூறப்பட்டவர், அரசனால் அழைக்கப் பட்ட அவன் மகளிர். 134. ஒல்கி - ஒதுங்கிநடந்து.

135. பொற்கிடுகு - பொன்னாலாகிய மேற்றட்டி. போர்வை - சுற்றுப்பலகை. 136. காழ் - வடம்.

137. காழ் - காம்பு; காழை அழுத்தி.

138. கோடு - யானைக் கொம்பு. திமிசு - ஒருவகை வேங்கைமரம். குடம் - தூணின் ஓர் உறுப்பு. பொற்கால் - பொற்பட்டம் கட்டிய கால்.

139. உரிமைச் சுற்றமாகிய மகளிர்க்கே திறந்த.

140. திருமணியம்பலம் : 41; அம்பலத்தில். ததும்பும் - ஒலிக்கும்; "முழவொடு பல்லிய முன்றிற் றதும்ப" பெருங். ௫. 9 : 4.

141 - 2. அரிமா சுமந்த கட்டில் - சிங்காதனம்.

144. இணைவை - பிணிப்பு; பின்னலுமாம்; பெருங். க. 42: 28; "கட்டி னிணக்கும்" (புறநா. அஉ); "இணைந்தவை கோத்தவை" பரி. கக : 80.

145. "பாலன்ன மென்மயிர்ப் பஞ்சி மெல்லணை" சீவக. 2896.

பி - ம். [1] அழுத்திய. [2] அரிமாச்சுமந்த.

சேக்கை மெலியச் செம்மாந் திருந்த
முடிகெழு தந்தை முன்னர்த் தோன்றி
அடிதொழு திறைஞ்சிய வவரிடை யெல்லாம்
தெய்வத் தாமரைத் திருமகட் கெடுத்தோர்
ஐயப் படூஉ மணியிற் கேற்ப
ஒண்மையு நிறையு மோங்கிய வொளியும்
பெண்மையும் பெருமையும் பிறவு முடைமையிற்
பாசிழை யாயத்துப் பையென நின்ற
வாசவ தத்தை வல்ல ளாகென
ஊழ்முறை [1] பொய்யாது கரும மாதலின்
யாழ்முறைக் கரும மிவளதென் றருளி
மற்றவ ணின்ற பொற்றொடி மகளிரைக்

146. செம்மாந்திருந்த - வீற்றிருந்த; "அண்ணல் செம்மாந் திருந்தானே" சீவக. 2358.

144 - 6. "சென்னூ ளிணைந்த சித்திரக் கம்மத்து, வெண்கா லமளி" (பெருங். க. 35 : 98 - 9.) 148. இறைஞ்சிய - இறைஞ்ச.

வணப்பினர் (133) ஒல்கித் (134) தோன்றி (147) அடிதொழு (148) தென்க.

149. தெய்வத்தாமரைத் திருமகள் - இமயமலையில், பதுமையென்னும் கயத்தில் வாடாத தாமரைப்பூவிலுள்ள திருமகள்; "அருமணி மரகதத் தங்க ணுறிய, எரிநிறப் பொன்னித ழேந்து தாமரைத், திருமகள்", "தெளிகயம்மலர் மேலுறை தேவி", "வடமலைப் பொன்" (சீவக. 183, 1001, 2363) என்னும் பாடல்களையும், அவற்றின் உரைகளையும், 183-ஆம் பாடலின் விசேடக் குறிப்பையும் பார்க்க.

149 - 50. திருமகளைத் தம்மிடத்தினின்றும் காணாமற் போக்கியவர்கள், 'இவள்தானோ நாம் போக்கிய திருமகள்' என ஐயப்படுதற்குக் காரணமான அழகு.

151. ஒண்மை - இயற்கையழகு. ஒளி - செயற்கையழகு.

153. பையென - மெல்ல; "பையெனக் கவிழ்ந்து நிற்ப" சீவக. 512.

149 - 54. வாசவதத்தை அழகிற்கேற்ற குணவிசேடங்களையுடைமையின், இவள் யாழில் வல்லவளாகக் கடவளென்று அரசன் நினைந்து.

156. யாழைக் கற்குந்தொழில் இவளுடையதென்று அரசன் கூறி.

157. அவண் - அவ்விடத்தே. மகளிரை - மற்ற மகளிரை.

பி - ம். 1 பொய்யாக்கருமம்.

குற்றமில் குறங்கிற் கோ...வல மேற்றிக்
கோதை மார்பிற் காதலி னெடுக்கிப்
பந்துங் கிளியும் பசும்பொற் றூதையும்
கந்தியன் மயிலுங் [1]கரந்துறை பூவையும்
கண்ணியுங் கழங்குங் கதிர்முலைக் கச்சும்
வண்ண முற்றிலும் பவழப் பாவையும்
தெளித்தொளி பெறீஇய பளிக்குக்கிளிக் கூடும்
அவரவர் மேயின வவ்வயி னருளி
அடிசில் வினையும் யாழின் றுறையும்
கடிமலர்ச் சிப்பமுங் [2] கரந்துறை கணக்கும்
வட்டிகை வரைப்பும் வாக்கின் விகற்பமும்
கற்றவை யெல்லாங் காட்டுமி னெமக்கென

---

157 - 8. அரசன் வலத்துடையின் மீது அந்த மகளிர்களை முறையே இருக்கச்செய்து ; தந்தை மகளிரை வலத்துடையின்மீதே வைத்தல் மரபென்பர் ; " மங்கையை வலப்புடைக் குறங்கின் மேலிரீஇ " சூளா. சுயம். 206.

159. "கோதை மார்பிற் கோதை யானும்" புறநா. சஅ.

160. பொன் தூதை - பொன்னாலாகிய சிறுபாத்திரம்.

161. கந்து - தூண். கரந்துறை - மறைந்து தங்குகின்ற ; " பூவையுங் கிளியு மன்ன ரொற்றெனப் புணர்க்குஞ் சாதி, யாவையும் " (சீவக. 384) என்பராதலின் 'கரந்துறைபூவை' யென்றார்.

163. முற்றில் - சிறுசுளகு.

160 - 63. " முற்றிலுந் தூதையு முன்கைம்மேற் பூவையும், சிற்றிலிழைத்துத் திரிதரு வோர்களை " பெரியாழ். க. 2 : 19.

165. மேயின - விரும்பினவற்றை.

166. அடிசில்வினை : " மடைநூற் செய்தி " மணி. உ ; 22.

167. சிப்பம் - சிற்பம். கரந்துறை கணக்கு - மறைந்துறையும் வகை ; 'கரந்துரைகணக்கு' என்னும் பாடத்திற்கு மறைத்துக் கூறும் கணக்குக்களென்று கொள்க ; 'கடபயாதி சங்க்யை' முதலிய கணித முறைகள் அவ்வகையிற் சேர்ந்தனவாகும்.

168. வட்டிகை - எழுதுகோல்; வட்டிகைப் பலகையுமாம். வரைப்பு - எழுதுதல்.

166 - 8 : மணி. உ : 19 - 32, பார்க்க.

பி - ம். 1, 2 கரந்துரை.

மருளி யாயம் மருளொடும் போக்கி
நங்கை கற்கு மங்கலக் கருவிக்கு
நியம விஞ்சன மமைமின் விரைந்தென
ஈன்ற தாயு மென்மகட் கித்தொழில்
மாண்ட தென்று மனத்திற் புகல

(பலர் கூற்று)

மழலைக் கிண்கிணிக் கழலோன் பெருமகள்
அரும்பெறற் றத்தைக் காசா னாகிப்
போக வீணை புணர்க்கப் பெற்ற
தேசிக குமரன் றிருவுடை யன்னென
அடியரு மாயமு நொடிவனர் வியப்ப
ஏனைத் தாயரு மானா தேத்த
வத்தவர் பெருமகன் வல்ல வீணை
தத்தை தனக்கே தக்க தாலென
வேட்டது பகருங் கோட்டி யாகிக்
கோட்டமின் முற்றங் குமிழ்குமிழ்த் துரைப்பப்

---

170. மருளியாயம் - மயக்கத்தையுடைய மகளிர் திரள்; மருளி: இ, பகுதிப்பொருள் விகுதி; "மருளி மாவும் வெருளிப் பிணையும்" (பெருங். உ. 15 : 31); "மருளிகொண் மடநோக்கம்," "மருளி நெஞ்சம்"(கலி. கச: 11, கஉஉ:15.); "மருளி மற்றவை வாழ்த்தினும்"(சீவக. 247); மருடல் மருளியென நின்றதென்பர்; திருச்சிற். 151, பேர்.

171. மங்கலக்கருவி - யாழ்.

172. விஞ்சனம் - உபகரணங்கள். என - என்று அரசன் கூற.

173. தாய் - வாசவதத்தையின் தாய். 174. புகல - விரும்ப.

175. மழலைக் கிண்கிணி: சீவக. 293.

176. தத்தைக்கு - வாசவதத்தைக்கு.

178. தேசிககுமரன் - ஆசிரியனாகிய அரசகுமரன்.

179. நொடிவனர் - சொல்லுபவராய்.

180. ஈன்ற தாயை (173) முற்கூறினமையின் இங்கே ஏனைத் தாயரு மென்றார். ஆனாது - அமையாமல்.

183. கோட்டியாகி - கலப்புடையவர்களாகி.

184. முற்றம்-முற்றத்திலுள்ளவர்கள்;ஆகுபெயர். குமிழ்குமிழ்த்து =முகிழ் முகிழ்த்து - பிறருக்குத் தோன்றாமல் மறைத்து; "குமிண் சிரிப்பும்" திருநா. தே. கோயில்.

(வாசவதத்தைக்கு அலங்காரம் செய்தல்)

பொன்னகற் கொண்ட பூவும் புகையும்
[1] அவ்வகற் கொண்ட வவியும் பிரப்பும்
செம்முது செவிலியர் கைபுனைந் தேத்திச்
சந்தன நறுநீர் மண்ணுறுத் தாட்டி
மறுவில் வெண்கோட்டு மங்கலம் பொறித்த
பெருவெண் சிப்பிற் றிருவுற வாரிச்
சுருண்முறை வகுத்துச் சூட்டுப் புரியுறீஇக்
கருங்குழல் கட்டிக் கன்னிக் கூழை
பொன்னி னணிற் புடையெடுத் தியாத்துப்
பதரில் செம்பொன் காயழ லுறுத்த
கதழ்வுறு சின்னஞ் சிதறிய மருங்கிற்
றிருநுதற் சுட்டி திகழச் சூட்டி
முத்தக் கலனணி மொய்ப்புறச் சேர்த்துப்
பொன்செ யோலையொடு பூங்குழை நீக்கி
மணிச்செய் கடிப்பிணை மட்டஞ் செய்து
தேய்வுற் றமைந்த திருவெள் ளாரத்
தேக விடுகொடி யெழிற்றோ ளெழுதிக்

---

185. பொன்னாற்செய்யப்பட்ட அகலின் கண்.

186. பிரப்பு - குறுணியளவான பொருளைக்கொள்ளும் பாத்திரம்: "பல்பிரப் பிரீஇ" (முருகு. 234); "அரும்பொனு மணியு முத்துங் காணமுங் குறுணி யாகப், பரந்தெலாப் பிரப்பும் வைத்து" சீவக. 369.

188. நறுநீர் - மணமுள்ள பனி நீர்; "சந்தனங் கலந்த வந்தணறுநீர்" (பெருங். உ: 18 : 109.) நீரை ஆட்டி.

189-90. யானைத்தந்தத்தாலாகிய சிப்பால் வாரி.

192-3. சுருளை வகுத்து. சூட்டு - உச்சிக்கொண்டை. குழலைக் கட்டி; கூழையை யாத்து. 190 - 93 : சீவக. 2437, ந.

194. பதரில் செம்பொன் - ஓட்டமில்லாத செவ்விய பொன்; "போக்கில் பொலங்கலம்" பொருந. 86.

195. சின்னம் - பொற்பொடி.

199. கடிப்பிணை-ஒருவகைக்காதணி; "கடிப்பிணை காது சேர்த்தி" (சீவக. 2091). மட்டஞ் செய்து - செவ்வை செய்து; 206.

200. ஆரம் - சந்தனம்.

201. ஏகவிடுகொடி - ஒற்றைக்கொடி; ஏகாவலி.

பி - ம். [1] அகவற்.

கச்சியாப் புறுத்த கால்வீங் கிளமுலை
முத்த வள்ளியொடு மும்மணி சுடர
மணிக்காற் பா..................கவைஇத்
[1]தணிப்பொற் றேரைத் தகையொளி சுடர
மட்டங் குயின்ற மங்கல வல்குற்
பட்டுடைத் தானைப் பைம்பூண் சுடரத்
திருமுகை முருக்கின் விரிமலர் கடுப்பச்
செறிமலர் பதினுஞ் சீறடி நோமென
நெறியெனப் படுத்த நிலப்பெருந் தவிசின்

(வாசவதத்தை கீதசாலைக்குச் செல்லுதல்)

உள்ளகத் தொடு..................மெல்லடி
அரிப்பொற் கிண்கிணி யார்ப்ப வரங்கின்
உழைச்சென் மகளி ருக்க மேற்றிச்
சித்திரம் பயின்ற செம்பொ னோலை
முத்துவாய் சூழ்ந்த பத்திக் கோடசைஇச்
சிரற்சிற கேய்ப்பச் சிப்பம் விரித்த
கவற்றுவினைப் பவழங் கடைந்துசெய் மணிக்கை

---

203. முத்தவள்ளி - முத்துக்கோத்த கொடிபோல்வதோர் அணி. மும்மணி: 121 - ஆம் அடியின் குறிப்பைப் பார்க்க.

205. பொற்றேரை - பொன் வடம்; "பொற்றேரை மின்ன" சீவக. 2132.

206--7. மட்டங்குயின்ற - நேர்மை செய்த. பைம்பூண் - மேகலை. குயின்ற தானையென்க.

208. முருக்கின் மலர்-முள்ளு முருங்கைப்பூ. கடுப்பச் சிவந்தென ஒரு சொல்வருவிக்க. 209. நோமென - நோமென்று சொல்ல.

212. அரி - உள்மணி; தவளையுமாகும்; "அரிக்குரற் கிண்கிணி யாற்றுஞ் சீறடி" (யா - வி. தொடை. சூ. 3; யா - கா. 20, மேற்.) "தவளை வாய பொலன்செய் கிண்கிணி" நற்றி. கசஅ.

213. உக்கம் - சிற்றுலை வட்டத்தை. ஏற்றி - ஏற்ற; உயர்த்தி யசைப்ப. 216. சிரல் - மீன்கொத்திக் குருவி.

217. கவற்றுவினைப்பவழம் - சூதாடு தொழிலுக்குதவும் பவழம்; "குலவும் பவழவுழக்கில்" (சீவக. 927); "கவள யானை பணையின் யாளி கால்வகுத்த பலகையிற், பவள மான நீல மான கருவி முன் பரப்பினர்" (வி. பா. சூது போர்ச். 174.) கை - காம்பு.

பி - ம். 1 திணிப்பொற்.

ஆல வட்ட நாலொருங் காடப்
பொன்னிய லாய்வளைக் [1]கன்னிய ரசைப்பப்
பொத்தின் றமைந்த புனைவிற் றாகிச்
சொத்துற் றமைந்த சுதையில் செஞ்சுவர்
வெண்கோட்டு நெடுந்தூண் விதானந் தூக்கித்
தேவின் றோங்கிய திருநா ளொருசிறைக்
கீத சாலை வேதி நிறைய
மல்லற் சுற்றமொடு கல்லெனப் புகுதந்
தரக்குப் பூமி யாயமொ டேறிப்
பரப்புமல ரொருசிறைப் பாவையை நிறீஇப்
பண்ணமை நல்லியாழ்ப் பலிக்கடன் வகீஇய

(உதயணன் வருகை)

அண்ணல் வருகென வவ்வயி னோடி
ஒண்டொடி மகளிர் கொண்டகம் புகுதரத்

---

218. ஆலவட்டம் - இங்கே பேராலவட்டம்; பெரியவிசிறி; இதனைத் தாலவிருத்த மென்பதன் சிதைவென்பர்.

217 - 8. "பவழப் பிடிகை பக்கங் கோத்த, திகழ்பொன் னலகிற் செஞ்சாந் தாற்றி" பெருங். உ. 18 : 113-4.

214 - 8. "அணித்தகு பவள மேற்பக் கடைந்துமுத் தழுத்தி யம்பொன், துணித்தடி விளிம்பு சேர்த்தித் தொழுதகச் செய்த வண்கை, மணிச்சிரற் சிறகு நாண வகுத்தசாந் தாலவட்டம், பணித்தகு மகளிர் வீசிப் பாவையைக் குளிர்வித் தாரே" சீவக. 2478.

218 - 9. ஆடும்படி அசைப்ப.

220. பொத்து - குற்றம்; "போற்றினும் பொத்துப் படும்" குறள். 468.

221. சொத்து - பொன். 222. வெண்கோடு - யானைத்தந்தம்.

223. தே - தெய்வம்.

224. வேதி - மேடை; வேதிகையென்றும் வழங்கும்.

226. அரக்குப் பூமி - சாதிலிங்கம் வழித்த பூமியில்.

227. பாவையை நிறீஇ - வாசவதத்தையை நிறுத்தி.

228. "பலி கெழுநல்யாழ்" (37 : 107.) வகீஇய - வகுத்தற்கு.

229. அண்ணல் - உதயணகுமரன். என - என்று ஆண்டுள்ளார் சொல்ல. 230. கொண்டு - அவனை அழைத்துக்கொண்டு.

பி - ம். 1 கன்னியர்கவிப்ப.

தானைத் தவிசிற் றகையோ னேற
ஏனைத் தவிசி னங்கையை யிருத்தினர்
இன்று ளென்ப திவனு மறியான்
.......................................

(வாசவதத்தை யாழ்பயிலத் தொடங்கல்)

நன்னர்க் கிளவி நயவரப் பயிற்றி
ஆசான் கொடுக்கு மருப்பெறல் விச்சை
காண்போர் செய்யுங் கடப்பா டிதுவென
வெள்வளை முன்கை தோழியர் பற்றி
ஒள்ளிழை மாத ரொழுக்கஞ் செய்கெனக்
காந்த ளழித்த கைம்முகிழ் கூப்பிக்
கஞ்சிகை திறந்த பொழுதி னன்றுதன்
காட்சிக் கொத்த கள்வ னுதலின்
மேற்படு நோக்கமொ டிருவரு மெய்தி
ஏப்பெறு துயரமொ டிலங்கிழை யிறைஞ்சிப்
பொற்காற் படுத்துப் பூந்துகில் வளைஇக்
கைக்கோற் சிலதரொடு கன்னியர் காப்பத்
தெய்வத் தன்ன திறலோன் காட்டக்
கைவைத் தனளாற் கனங்குழை யாழென்.

௩௪.—யாழ் கைவைத்தது முற்றிற்று.

---

231. தானைத்தவிசில் - துகிலை மேலேவிரித்த ஆசனத்தில்.

236. கடப்பாடு - கடமை. 238. ஒழுக்கம் - ஆசாரத்தை.

240. கஞ்சிகை - உருவுதிரை. அன்று - யானையை அடக்கிய அந் நாளில்.

241. கள்வன்; "கள்வன் கொண்ட வுள்ளம்" (33 : 151) என்றார் முன்னும்; "கண்வழி நுழையுமோர் கள்வ னேகொலாம்." கம்ப. மிதிலைக். 55.

242. நோக்கமொடு: ஒடு, அசை. எய்தி - எய்த.

243. ஏ - மிகுதி; மன்மதனுடைய அம்புமாம்.

245. சிலதர் - ஏவலாளர்.

247. யாழைக் கைவைத்தனள்.

## ௫௫—நருமதை சம்பந்தம்.

### (அயலார் கூற்றுக்கள்)

கைவைத் தமைந்த கனங்குழைக் கவ்வியாழ்
வைக றோறும் வத்தவன் காட்ட
நிகழ்வதை யுரைக்கும் [1] புகர்ச்சொன் மாக்கள்
ஒன்னலர் நுழையா வுரிமை மாணகர்த்
தன்மக ளொருத்தியைத் தானயாழ் கற்கென
ஏதின் மன்னனை யெண்ணான் றெளிந்த
பேதை மன்னன் பின்னுங் காண்பான்
சென்றே யாயினுஞ் சிதையி னல்லது
நன்றொடு வாரா தொன்றறிந் தோர்க்கென
அரச னாசா னரும்பெறற் றந்தையெனக்
கல்லாச் சனத்தொடு பல்லோர் சொல்ல

---

௫௫—நருமதை சம்பந்தம்.

[யாழ்கற்பித்து வருகையில்,அயலார் கூறிய கூற்றுக்களும்,வாசவதத்தையின்பாலுள்ள விருப்பமிகுதியால் தனக்குண்டான வேறுபாட்டை மறைத்தற்பொருட்டு உதயணன் நருமதை யென்னும் நாடகக் கணிகையை வயந்தகனைக்கொண்டு வலிதிற் கொணர்வித்து அவளைப் பாராட்டி யொழுகியதும் இதனால் அறியலாகும்.]

1. கனங்குழைக்கு - வாசவதத்தைக்கு.

3. மாக்கள் : எழுவாய்.

4. ஒன்னலர் - மனம் பொருந்தாதவர்கள். உரிமைமாணகர் - அந்தப்புரத்தில்.

5. தன்னென்றது பிரச்சோதனனை. தானயாழ் - சுரத்தானங்களையுடைய யாழ். 6. ஏதில் மன்னனை - அயலரசனை.

7. பேதை மன்னன் - பிரச்சோதனன்.

6 - 7. "சம்பலைப் பெரும்பழி யெய்திய காவலன், வம்ப மன்னனை வழிதெளிந் தனனென." பெருங். க. 46 : 315 - 6.

9. நன்றொடுவாராது - இச்செயல் நன்மையுடன் நிகழாது.

10. ஆசானும் அரசன், தந்தையும் அரசனென இயைக்க ; உதயணனும் வாசவதத்தையும் தம்முள் விருப்பங்கொள்வரென்பது இதன்கருத்து.

என (9) எனச் (10) சொல்ல (11).

பி. ம். 1 புகழ்சொன்.

........ப்புகாஅ ரியல்புணர்ந் தோரென
மதியோர் மொழிந்த திதுவென் றெண்ணி
இன்னவை பிறவுந் துன்னினர் கிளந்து
வேந்திடை யிட்ட வெஞ்சொ லாதலிற்
சேர்ந்தோர் மாட்டுஞ் செப்ப றீதென
உரைப்போர் நாவிற் குறுதி யின்மையின்
நினைத்தது மிகையென நெஞ்சு வலியுறீஇ
மனத்ததை யாக மாந்த ரடங்கலின்
வம்ப மாக்கள் வாயெடுத் துரைக்கும்
கம்பலை யின்மையிற் கடிநகர் தேறி
ஆங்கன மொழுகுங் காலை யோங்கிய

(வயந்தகன் செயல்)

மாணிப் படிவமொடு மதிலுஞ் சேனையுள்
ஓதிய காலத் துடன்விளை யாடித்
தோழ மாக்க டொழுதியிற் கூடிப்
பால குமரன் பணியி னொருநாள்
மாலையுஞ் சாந்து மடியும் பெய்த

---

15. வேந்து இடையிட்ட - அரசனிடத்தே கலப்புற்ற.

15 - 6. "வெங்கண் வேந்தர் தங்கட் குற்ற, தங்கண் ஞாலத் தாரே யாயினும், அகலிடத் துரைப்பி னற்றம் பயத்தலின்" பெருங். ௪. 6 : 32 - 4.

17. நாக்கு அறுபடுமென்பது குறிப்பு ; "ஆக்கரிய மூக்குங்கை யரி யுண்டா ளென்றாரை, நாக்கரியுந் தயமுகனார்" (கம்ப. சூர்ப்பநகைப். 125) என்பது இங்கே கருதற்குரியது.

18. நினைத்ததும் தவறாகும் ; "காவன் மன்னவர் காய்வன சிந்தி யார், நாவினு முரையார் நவையஞ்சுவார்" சீவக. 249.

19. மனத்ததை : ஐ, சாரியை. மாந்தர் - மற்றை மனிதர்.

20. வம்பமாக்கள் - பரதேசிகள் ; சிலப். ௫ : 111.

21. கம்பலை - முழக்கம். 22. ஆங்கனம் - அப்படி.

23. மாணிப்படிவமொடு - பிரமசாரி வடிவத்தோடு. உஞ்சேனை - உச்சயினிநகர்.

24. ஓதிய காலத்து - அரசனுடைய மக்கள் கற்றகாலத்தில்.

25. தொழுதியில் - கூட்டத்தில்.

26. பாலகுமரன் - பிரச்சோதனனுடைய புதல்வருள் ஒருவன். பணியின் - அவனது கட்டளையினாலே. 27. மடி - ஆடை.

கையுறைச் செப்பொடு கடிநகர்ச் சென்ற
வயந்தக குமரனை நயந்துமுக நோக்கிப்
பண்டியா னிவரைப் பயின்றுழி யுண்டெனக்
கண்டறி விலீரெனக் கரந்தவன் மறுப்பக்
.........போல.................................
இசையா மாக்கண்மு னியல்பில சொல்லி
அன்றுதலைப் பட்ட வார்வலர் போல
இன்றுதலை யாக வென்று மெம்வயின்
இவரே வருகென வேயின னருளி
மன்ன குமரன் றன்வயிற் கோடலின்
அரும்பெறற் றோழ னுங்குவந் தொழுகிப்
பெரும்பெற் றறையும் பேச்சின னாகி
மாய யாக்கையொடு மதிலகத் தொடுங்கிய
ஆய மாக்க ளவன்வயி னறிந்து
காவ லாள ரற்ற நோக்கி
மேவன மென்னுஞ் சூழ்ச்சிய ராகிப்
பன்னாள் [1] கழித்த பின்னர் முன்னாள்

**(உதயணனுக்கு வாசவதத்தைமீது வேட்கை மிகுதல்)**

எண்மெய்ப் பாட்டினு ளிரக்க மெய்ந்நிறீஇ

---

28. கடிநகர் - உதயணனிருக்கும் அரண்மனை.

30. என - என்று உதயணன் சொல்ல.

31. அறிவிலீர் - நீர் என்னை அறியாதவர். அவன் - வயந்தகன்.

33. இசையா மாக்கள் - மனம்பொருந்தாத மனிதர்.

35. இன்று தலையாக - இன்று முதலாக.

36. ஏயினனருளி - சொல்லி; "சுண்ணம் விளக்கிவற்றாற் புனைதனை மேவா" சீவக. 1547.

36 - 7. வயந்தகனையே தன்பாலனுப்பும்படி பாலகுமரனுக்குத் தெரிவித்து உதயணன் அங்ஙனம் பெற்றுக்கொண்டமையின்.

38. தோழன் - வயந்தகன்.

39. பெற்று - பெருக்கம். ஆகி - ஆதலால். 41. ஆயம் - கூட்டம்.

40 - 41. வேற்று வடிவங்கொண்டு அங்கே தங்கிய யூகியின் மனிதர்கள் அவனிடம் அறியவேண்டுவனவற்றை யறிந்து.

42. அற்றம் - சோர்ந்த சமயம். 43. மேவனம் - அடைவோம்.

45. எண்மெய்ப்பாடு - நகை முதலியன. இரக்கம் - இரக்கத்தை;

பி - ம். [1] கழிந்த.

ஒண்வினை யோவியர் கண்ணிய விருத்தியுட்
டலையத னும்பர்த் தான்குறிக் கொண்ட
பாவை நோக்கத் தாரணங் கெய்தி
முற்றான் கண்ட முகஞ்செய் காரிகை
உட்கொண் டரற்று முறு 1 பிணி தலைஇக்
கட்கொண் டாங்குக் களிநோய் கனற்றத்
தீமுகத் திட்ட மெழுகிற் றேம்பியும்

---

என்றது கருணையை; அஃது அழுகை யல்லது அவலமெனப்படும்; இங்கே சொன்னது தன்கட் டோன்றிய இழவுபற்றிய அழுகையாம்; 'இழவென்பது தந்தையுந்தாயு முதலாகிய சுற்றத்தாரையும், இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலியவற்றையும் இழத்தல்' (தொல். மெய்ப். சூ, 3, பேர்.) என்ற உரையினால் இது தெளியப்படும்.

46. ஓவியர் - சித்திர இலக்கணங் கூறும் நூலுடையார். விருத்தி - இருப்பு; ஆசனம்; "ஒன்பது விருத்தி நன்பத நுனித்த, ஓவவினையாளர்" பெருங். உ. 7 : 40 - 41.

47. தலையதனும்பர் - முதலாவதாகிய பதுமாசனத்தின்கண்; ஆசனம் ஒன்பது வகைப்படும்; சிலப். அ : 23-ஆம் அடி முதலியவற்றின் உரையைப் பார்க்க.

46 - 8. வாசவதத்தை நாடோறும் பதுமாசனமிட்டு இருந்து யாழ் கற்றாளென்பது இதனால் உணரப்படும்.

44 - 8. விருத்தி யென்பதற்கு இருப்பென்று பொருளெழுதி, "பன்னாள் கழிந்த...எய்தி" என்னும் இந்தப் பகுதியை அதற்கு மேற்கோள் காட்டினர் அடியார்க்கு நல்லார்; சிலப். அ : 23 - 6.

49. முகஞ்செய்தல் - தோன்றுதல்; புகுமுகம் புரிதலென்னும் மெய்ப்பாடு. காரிகை - வாசவதத்தையின் அழகினை.

50. உறுபிணி தலைஇ - காமநோய் அதிகரிக்கப்பெற்று.

51. கட்கொண்டாங்கு - கள்ளை உட்கொண்டால் அக்கள் கனற்றுவதுபோல்; கள் கனற்றல், "களிப்பர் குளிப்பர்" (பரி. ௬) என்பதனால் விளங்கும். கனற்ற - வெதுப்புதலால்.

52. மெழுகின் - மெழுகைப்போல.

50 - 52. "ஒள்ளிழை தந்த, பரிசழி பைதனோய் மூழ்கி யெரிபரந்த, நெய்யுண் மெழுகி னிலையாது பையப், தேயு மளித்தென் னுயிர்" கலி. ௧௩௮ : 20 - 23.

பி - ம். 1 பிணித்தலைஇ.

தாய்முகத் தியாத்த கன்றிற் புலம்பியும்
உயலருந் துன்பமொ டொருவழிப் பழகிப்

(உதயணன் எண்ணுதல்)

பயலை கொண்டவென் பையு ளாக்கை
பண்டென் வண்ணம் பயின்றறி மாக்கள்
இன்றென் வண்ண மிடைதெரிந் தெண்ணி
நுண்ணிதி னோக்கி நோய்முத னாடிற்
பின்னிது கரக்கும் பெற்றி யரிதென
மலரே ருண்கண் மாதர்க் [1]கமைந்த
அலரவண் புதைக்கு மருமறை நாடித்

(உதயணனும் வயந்தகனும் ஆலோசித்தல்)

தெரிவுறு சூழ்ச்சியு ளிருவரு மெண்ணிப்
பிறன்பாற் பட்ட பெண்பா னாடி
அவள்பாற் பட்ட வார்வஞ் செய்கம்
அன்னா ளொருத்தியை யறிந்தனை வம்மெனப்

53. கன்றின் - பசுக் கன்றைப்போல; "தாய்காண் கன்றிற் காவலன் விரும்பி" (பெருங். உ. 10 : 7); "தாவா விருப்பொடு கன்றியாத் துழிச்செல்லும் ஆ" கலி. ௮௧ : 36 - 7.

54. உயலரு - பிழைத்தற்கு அரிய; "உய்யா வரும்படர்" குறிஞ்சிப். 11.

55. பயலை - பசலை. பையுளாக்கை - துன்பத்தால் வேறுபட்ட உடம்பை.

58. நோய்முதல் - நோயின் காரணத்தை; "நோய்முதனாடி" திருக்குறள், 948. 59. கரக்கும் - மறைக்கும்.

60. மாதர்க்கு - வாசவதத்தையின் பொருட்டு.

61. அலர் - பலரறியும் பழிமொழி. மறை - இரகசியம்.

60 - 61 = 250 - 51. 62. இருவரும் - உதயணனும் வயந்தகனும்.

64. செய்கம் - செய்வேம்; செய்து மறைப்பேமென்பது கருத்து.

65. அன்னாள் - அத்தன்மையை யுடையாள். வம்மென-வாவென்று உதயணன் சொல்ல; வம், வாவென்பதன் திரிபென்பர் (நன்னூல், சூ. ௧௪௪, மயிலை.); "வம்மெனக் கொம்மெனக் கூவிடப் பெற்றாய்" மீனாட்சியம்மை. அம்புலி. 1.

பி - ம். [1] அமைத்த.

(வயந்தகன் செயல்)

பல்வேன் முற்றம் பணியிற் போகி
நகர்முழு தறிய நாணிகந் தொரீஇ
ஒருவன் பாங்க ருளம்வைத் தொழுகும்
அதன்மி யாரென வாங்கவன் வினவ
இரங்குபொற் கிண்கிணி யிளையோர் நடுவண்
அரங்கியன் மகளிர்க் காடல் வகுக்கும்
தலைக்கோற் பெண்டிருட் டவ்வை யொருமகள்
நாடகக் கணிகை நருமதை யென்னும்
பாவை யாகுமிப் பழிபடு துணையென
ஒருநூற் றொருகழஞ் சுரைகண் டெண்ணிய
கனபொன் மாசை காண வேந்தி
மன்றமு மறுகுங் கம்பலை கழும
வனப்புமுத லாக வழிவர வமைந்து
குணத்துமுறை வகையிற் கோல மெய்தி
வீழ்ந்தோர் நல்கும் வெறுக்கை யன்றிக்
காணி கொண்டுங் கடனறிந் தெண்ணிய

---

66. பல்வேன் முற்றம் : பெருங். க. 34 : 39; 37 : 2, 98; "நெடுநுதி வயக்கழு நிரைத்த வாயில்" பெரும்பாண். 128.

68 - 9. அதன்மி - குலவொழுக்கத்துக்கு மாறாக நடப்பவள்; "அன்றை வைகல் சென்றோர்ப் பேணிப், பள்ளி மருங்கிற் படிறின் றொழுகும், செல்வ மகளிர்" (35 : 89-91) எனப் பின்னர்க் கூறுதலின் ஒருவன் பாங்கர் உளம் வைத்தொழுகுதல் அதன்மமாயிற்று. அவன் - வயந்தகன். 70. இளையோர் - இளமகளிர்.

72. தலைக்கோற் பெண்டிருள் - தலைக்கோலென்னும் பட்டம்பெற்ற கணிகையருள். தவ்வை யொருமகள் - பெரியவளாகிய ஒருத்தி; எழுவாய்.

73. "நருமதை முதலா நாடகமகளிர்" பெருங். ௪. 10 : 72.

74. என - என்று சொல்ல.

76. மாசை - ஒருவகை நாணயம்; "பன்னீ ராயிரம் பசும்பொன் மாசையும்", "தமனிய மாசையொடு" பெருங். க. 38: 283, 39: 11.

75 - 6. உரைகண்டெண்ணிய நூற்றொருகழஞ்சு பொன்மாசையைப் பலரும் காணும்படி அவன் கையில் ஏந்திக்கொண்டு.

78. வனப்பு முதலியன - அழகு ஆடல் பாடலென்பன.

80. வீழ்ந்தோர் - விரும்பினோர். வெறுக்கை - திரவியம்.

81. காணி - உரியநிலத்தை.

ஒன்றுமுத லாக வோரெட் டிறுத்த
ஆயிரங் காறு மாத்த பரிசத்
தியாழ்முத லாக வறுபத் தொருநான்
கேரிள மகளிர்க் கியற்கையென் றெண்ணிக்
கலையுற வகுத்த காமக் கேள்வித்
துறைநெறி போகிய தோழித் தூதினர்
அரசர்க் காயினு மடியர்க் காயினும்
அன்றை வைகல் சென்றோர்ப் பேணிப்
பள்ளி மருங்கிற் படிறின் றொழுகும்
செல்வ மகளிர் சேரி நண்ணி
வயக்களி றடக்கிய வத்தவர் பெருமகன்
இயக்கரும் வீதியி னெதிர்ப்பட வொருநாள்
நயப்புற் றரற்று நருமதை யென்னும்

---

82 - 3. பரத்தையர் ஒருகழஞ்சுப் பொன்முதல் ஆயிரத்தெட்டுக் கழஞ்சுப்பொன் வரையிற் பரிசம் பெறுதற்குரியரென்பதை, "ஒப்ப வொன் றாதி யாக வாயிரத் தோரெட் டூறாச், செப்பி" (சீவக. 107), "நூறுபத் தடுக்கி யெட்டுக்கடை நிறுத்த, வீறுயர் பசும்பொன் பெறுவது", "எட்டுக்கடை நிறுத்த வாயிரத் தெண்கழஞ்சு, முட்டா வைகல் முறைமையின் வழாஅத், தாக்கணங் கனையார்" (சிலப். ௩ : 164-5, ௧௪ : 158-60) என்பனவற்றாலுணர்க. ஆயிரத்தெண் கழஞ்சில் பரியத்திற்கு ஆயிரம் கழஞ்சும் அழிவுக்கு எட்டுக்கழஞ்சு மென்பர் அரும்பதவுரை யாசிரியர்; சிலப். அ : 164. "மாணிழைக்கொரு கங்குலின் மருவுவா ரளிக்கு, மாணி தீர்ந்தபொ னயிரங் கழஞ்சென வறைவார்" பிரமோத்தா. உருத்திராக்க. 26.

84 - 6. பரத்தையர்க்குரிய கலைகள் அறுபத்துநான்கென்பது, "எண்ணெண் கலையோ ரிருபெரு வீதியும்", "எண்ணான் கிரட்டி யிருங்கலை பயின்ற, பண்ணியன் மடந்தையர்" (சிலப். ௧௪ : 167; ௨௨ : 138-9) என்பவற்றாலும், "கூத்தும் பாட்டும்" (மணி. ௨ : 19) என்பது முதலியவற்றாலும் விளங்கும்.

87. தோழித் தூதினர் - தோழியாகிய தூதையுடையவர்.

91. பரத்தையர் சேரியை வயந்தகனடைந்து.

90 - 91. இராமாயணம், திக்குவிசய. 161-ஆம் கவியைப் பார்க்க.

93. எதிர்ப்படுதலை நருமதையின் தொழிலாகக் கொள்க.

94. அரற்றும் நருமதை - அரற்றுதற்குக் காரணமாகிய நருமதை.

நாடகக் கணிகை மாடம் யாதெனத்
தாயுறை வியனகர்த் தன்குறை யுரைத்து
வாயி லாகிய வயந்தகன் புகலும்
சென்றா னிணந்த சித்திரக் கம்மத்து
வெண்கா லமளி விருப்பி னேற்றி
அணியிழை மகளிரும் யானையும் வணக்கும்
மணியொலி வீணையுஞ் சாபமு மரீஇக்
கழறொடி கவைஇய கலம்பொழி தடக்கை
உதயண குமர னுள்ளத் துளனெனின்

97. வாயில் - தூது. புகலும் - புகுந்தவுடன்.

92 - 7. நருமதை முன்பு ஒருநாள் வீதியில் எதிர்ப்பட்டமையின் உதயணன் அவள்பால் விருப்பங்கொண்டு அாற்றுதலால், அவள் வீடு யாதென்று வினவிக்கொண்டு சென்று அவளுடைய தாயின் மாடத்தை வயந்தகன் அடைந்தான்; அடைந்தவுடன்.

98. இணந்த - கட்டிய, பின்னிய. சித்திரக் கம்மம் - சித்திரத் தொழில்; கம்மம் - கருமம்; "சேடுபடப் புனைந்த சித்திரக் கம்மத்து" பெருங். உ. 10 : 9.

99. நருமதையின் தாய் வயந்தகனை அமளியில் ஏற்றி.

98 - 9. நானிணந்த அமளி : பெருங். க. 34 : 144-6.

100 - 101. மகளிரையும் யானையையும் வணங்கச் செய்கின்ற வீணை; "மதக்களிறு வலியா.........சாம கீத வோசையிற் றணிக்கும்" (பெருங். க. 44 : 61-3), "காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல், யாழ்வரைத் தங்கியாங்கு" (கலி. உ) என்பவையும், "இசையினி லிவட்குத் தோற்றும் யானையால் வேறு மென்னின், இசைவதொன் றன்று கண்டீர்" (சீவக. 748) என்பதும், 'யானை நாதத்திற் றோற்றுதலின், அதற்கு வணங்குதலியல்பு' என்னும் அதனுரையும், "ஐம்புல வேழத்தின் வெந் தொழில் வீயக், கருணை வீணை காமுறத் தழீஇ" (ஞானமிர்தம், 4), "மகரயாழ் வல்ல மைந்த னொருவனைக் கண்ட மத்தப், புகர்முகக் களிற் றின்" (மேருமந்தா. வச்சிராயுத. 31) என்பனவும் ஈண்டறியற்பாலன. சாபமும் - வில்லும்; விற்றழும்புமாம்.

102. கழல் தொடி - உழலுந் தொடி (சிறுபாண். 95); தொடி - வீரவளை. கலம் - ஆபரணங்களை; "கலம்பெயக் கவிழ்ந்த கழறொடித் தடக்கை" (அகநா. உகங); "கலம் பொழியுங் கடகத் தடக்கைக் கழ லோன்" (சீவக. 2359.) 103. உளனெனின் - உள்ளானாயின்.

100 - 103. "வார்கவுள் யானை வணங்குதற் கமைந்த, வீணை விச்சையொடு விழுக்குடிப் பிறவரிது, விழுக்குடிப் பிறந்திவ் வீறொடு

ஒண்டொடி மாதரு மொருதுணை யோருட்
பெண்டுணை சான்ற பெருமைபெற் றனளென்
மருமகற் புகலு மனம்புரி கொள்கை
இருமூ தாட்டி யெனக்கு முண்டெனத்
தூண்டி விரையிற் றுடக்குள் ளுறுத்துத்
தேன்றோய்த் தன்ன தீஞ்சொ லிளைஇப்
பொருளெனக் கருதிப் பொன்னிவண் விடுத்தோன்
அருளியு மருளா னடித்தி மாட்டெனக்
காரணக் கிளவி நீர கூறித்
தற்பெயர் பெயர்ப்ப மனத்தகை கரந்து
பிற்பயங் கருதும் பெருநசைக் கிளவி
இன்னகைத் தோழற் கினிய பயிற்றி
ஆங்கினி திருந்த போழ்திற் பூங்குழை

---

விளங்கிய, வழுக்கா மரபின் வத்தவர் பெருமகன், உதயண குமரன்" பெருங். ௩. 6 : 114-8.

104. மாதரும் - நருமதையும். ஒருதுணையோருள் - ஒப்பற்ற தலைவர்களைப்பெற்ற மகளிர்களுள்.

105. பெண்துணை சான்ற - பெண்மையின் அளவில் மிக்க.

106. புகலும்-விரும்பிப் பேசும். 107. இருமூதாட்டியாகிய எனக்கும்.

106 - 7. கொள்கையுண்டெனவும்.

108. தூண்டில்முள்ளிற் கோக்கப்படும் இரையைப் போல. துடக்கு - உதயணனைப் பிணித்தற்குரிய கருத்தை; அஃது இரைக்குள் இருக்கும் முள்ளுக்கு உவமை; பெருங். ௨. 7 : 73-9, பார்க்க.

110. விடுத்தோன் - உதயணன்.

111. அருளியும் அருளானென்றது அன்புடையனாயினும் தன் வீட்டிற்கு வரவில்லையென்னும் குறிப்புடையது. அடித்தி - அடியவள் (பெருங். ௧. 47 : 29, 226); "அடித்தியாரு முன்பட்டதொழிந்து" (சீவக. 2045); இப்பெயர் அடிச்சியெனவும் வழங்கும்; "போதார் புனை கோதை சூட்டுன் னடிச்சியை" (சீவக. 481.) என - எனவும் தாய் சொல்ல.

எனவும் (107) எனவும் (111) என்று முடிக்க.

112. "காரணக் கிளவி நீர காட்டி" பெருங். ௧. 36 : 96.

113. தற்பெயர் பெயர்ப்ப - தன் கையிலுள்ள பொருளை வயந்தகன் எடுத்துவைக்க; பெயர் - பொருள்; பதிற். ௩௦ : 23. மனத்தகை - மனத்திலுள்ள பெருவிருப்பத்தை. 116. பூங்குழை - விளி.

(தாய் உதயணனது இயல்பை உரைத்தல்)

காமுறப் பட்ட சேணிகச் சிறுதொழில்
கற்றது மில்லாச் சிற்றறி வாளன்
பொய்யொடு மிடைந்த பொருணசைக் கடுஞ்சொல்
மையுண்டு கழுமிய மாசுபடு கலிங்கத்
[1] திளையோர் வைகா விழுக்கரு வாழ்க்கையன்
கவறா டாளர்க்குக் கலந்தொலை வெய்திக்
[2] கொடையகத் தோனெனக் கடைகழிந் தோடிக்
கவலையிற் செலலுங் கவ்வையின் விலக்கி
ஐயன் வந்த வாசறு கருமம்
கைவளை மாதர் களைந்து [3]சென் றீயென

(நருமதை மறுத்தல்)

நிதியங் காட்டப் பொதியொடு சிதறிக்
குறையொடு வந்தவக் குமரன் கேட்க
சிறியனேன் வந்தவச் சிறுநில மன்னற்
கம்மனை நயந்தியா னவ்வயிற் சேறல்
என்மனை மருங்கி னில்லெனச் சீறித்
தன்றுறைக் கொவ்வாத் தகையில் கிளவி

---

119 - 21. பரத்தையரோடு கலந்து தங்காத வாழ்வையுடையவன்.

122 கவறாடாளர்க்கு - சூதாடுபவர்களால். கலம் - ஆபரணம்.

123. கொடையகத்தோன் - பொருளை வழங்கும் உள்ளத்தவன். என - என்று தாய்சொல்ல.

124. செலலும் - நருமதை செல்லவும். கௌவையின் - முழக்கத் தோடு. 125. ஐயன் - வயந்தகன். கருமம் - காரியத்தை.

126. களைந்து சென்றீயென - சென்று களைவாயென்று.

127. நிதியம் - வயந்தகன் கொணர்ந்த பொன்னின் தொகுதியை. பொதியொடு சிதறி - முடிச்சுடன் எறிந்துவிட்டு.

128. குறை - காரியம். கேட்க - கேட்பானாக.

129. அச் சிறுநில மன்னனென்றது உதயணனை.

130. அம்மனை - உதயணன் வீடு.

131. இல்லென - இல்லையென்று.

132. தன் துறைக்கு - தன்குல ஒழுக்கத்திற்கு. ஒவ்வாக்கிளவி, தகையில் கிளவியெனக் கூட்டுக.

பி - ம். 1 திணையோர். 2 தொடை. 3 சென்றீமெனை.

பைந்தொடி மாதர் பண்பில பயிற்றத்
தாயப் பெண்டிருந் தந்துணை யோருமென்
றோரி னெழுகிளை யுடன்றொக் கீண்டிப்
[1] பழமையிற் பசையாது கிழமையிற் கெழுவாது
தவந்தீர் மருங்கிற் றிருமகள் போலப்
பயந்தீர் மருங்கிற் பற்றுவிட் டொரீஇ
இட்டதை யுண்ணு நீலம் போல
ஒட்டிடத் தொட்டு முறுதி வாழ்க்கையுட்
பத்திமை கொள்ளார் பைந்தொடி கேளென
எடுத்தியல் கிளவியோ டேதுக் காட்டித்
தொடிக்கேழ் முன்கைத் தொகுவிரன் மடக்கி
மாநிதி வழங்கு மன்னரிற் பிறந்து

133. மாதர் - நருமதை. பண்பு இலவாக.

134 - 5. பெண்டிரும் துணையோருமென்ற ஒரேகுலத்திற் பிறந்த ஏழு வகையினரும்; எழுகிளை - வளர்கின்ற கிளையுமாம்; சீவக. 330.

136. பசையாது - பற்றுறாமல்; கிழமை - நட்பு; "பழமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார், கிழமை பிறிதொன்றுங் கொள்ளார்" நீதிநெறி. 47.

137. தவந்தீர் மருங்கின் - முற்பிறப்பிற் செய்த தவம் தீர்ந்தவிடத்தில்; "தவந்தீர் மருங்கிற் றனித்துய ருழந்தோய்" (சிலப். கச: 26); "நற்றவஞ் செய்த வீர ருளவழி நயந்து நாடும், பொற்றதா மரையினாள்" (சீவக. 2738.) 138. பயம் - பிரயோசனம்.

137 - 8. "விழைமொழி காலைத் திருவின் செல்வி, அனையே மாகி யாடவர்த் துறப்பேம்" (மணி. கஅ. 21 - 2); "புண்ணிய மூலந்தபின் பொருளி லார்களைக், கண்ணிலர் துறந்திடுங் கணிகை மார்கள்போல், எண்ணில னிகந்திடு மியாவர் தம்மையும், நண்ணிய நண்பில ணங்கை வண்ணமே" சூளா. முத்தி. 15.

139. வேறு நிறங்களை நீலநிறம் தன்மயமாகச் செய்தல் இயல்பு; "நீலமுண்டதும் வெள்ளை நிறமாமே" (தே. சிராப்பள்ளி); "ஆகாதே, உண்டது நீலம் பிறிது" பழ. 168.

140. "பட்டுழிப் படும்" (157) என்பர் பின்னும்.

141. பத்திமைகொள்ளார் நம்மவரென ஒருசொல் வருவிக்க.

143 - 4. உதயணனுடைய விசேடகுணங்களை முறையேகூற எண்ணிய சுற்றத்தவர், அவற்றை எண்ணுதற்காக ஒருவிரலை மடக்கி மன்னரிற் பிறந்தென்றாரென்க. மன்னரிற் பிறந்து: "அரசுவழி வந்த" 165.

பி - ம். 1 பழைமை.

................... வேண்டியது முடிக்கும்
கால மிதுவெனக் காரணங் காட்டும்
ஆர்வச் சுற்றத் தவர்வரை நில்லாள்
தாய்கை விதிர்ப்பத் தலைபுடைத் திரங்கி
ஏயது மறுக்கலு மிருந்தோற் கூய்நின்
அடியரிற் பற்றி யாணையிற் கொள்கெனக்
கடிதியல் வையங் கவ்வையி னேற்றிக்
கொடியணி கூலங் கொண்டனன் போவுழி

(நருமதையின் கூற்று)

வலிதி னென்னை வத்தவர் பெருமகன்
கொலிய செய்வது குழுக்கள் காண்கெனப்
பூசற் கிளவி சேயிழை பயிற்ற

(கண்டோர் கூற்று)

மாரியுந் திருவு மகளிர் மனமும்
தக்குழி நில்லாது பட்டுழிப் படுமெனும்
கட்டுரை யன்றியுங் கண்டனம் யாமென

---

147. நருமதை சுற்றத்தவருடைய எல்லையில் நில்லாளாய்.

148. கைவிதிர்த்தல் ஆச்சரியக் குறிப்பு ; பெருங். க. 32 : 58.

149. இருந்தோற் கூய் - இருந்தவனை அழைத்து; கூவுதல் தாயின்றொழில். 150. ஆணையிற் கொள்கென : 220.

151. கடிது இயல் வையம் - விரைவாகச் செல்லுந் தேரில்; வையம் - வண்டியுமாம்.

152. கொடியணி கூலம் - திருவிழாவிற்காக எடுத்த கொடிகளை யணிந்த கடைவீதி ; "கொடிநிழற் பட்ட பொன்னுடை நியமம்" (பதிற். கரு) ; "பசுங்கொடிப் படாகைப் பந்தர் நீழல்" (சிலப். கச : 216); மதுரை. 365-74, பட்டின. 158-68, பார்க்க.

154. கொலிய - வருத்துதற்கு ; கொல்லுதற்கென்றுமாம்.

155. பூசற்கிளவி - ஆரவாரச் சொற்களை. பயிற்ற - பலமுறை சொல்ல.

156. மாரி - மழை. திரு - திருமகள். "வெள்ளமும்............ வேசையர், உள்ளமு மொருவழிப் படா" என்பதில் இக்கருத்து ஒரு வகையாகப் புலப்படுகின்றது. 157. தக்க உழி - தக்க இடத்தில்.

158. கட்டுரையைக் கேட்டலன்றியுமென ஒருசொல் வருவிக்க.

156-8. மாரி முதலியவை தக்குழி நில்லாமல் வேறிடஞ் செல்லு

விச்சையும் வனப்பும் விழுக்குடிப் பிறப்பும்
ஒத்தொருங் கமைந்த வுதயண குமரனைப்
பெற்றன ளாயினும் பிறர்க்குறைந் தழுவோள்
[1] பெண்ணிலி கொல்லோ பெரியோர்ப் பிழைப்பதோர்
கண்ணிலி யாகுமிக் கணிகை மகளெனக்
கூத்தி மருங்கிற் குணம்பழிப் போரும்
ஆற்றற் கொற்றமொ டரசுவழி வந்ததன்
காத்துயர் தொல்குடிக் கதுவா யாகப்
பண்பில் சிறுதொழில் பயின்றதை யன்றியும்
தன்னொடு படாளைத் தானயந் தாற்றிக்
கண்ணற் றனனாற் காவலன் மகனென
அண்ணன் மருங்கி னறிவிழிப் போரும்
எள்ளியு மிழித்து மின்னவை பயிற்றி
முள்ளெயி றிலங்கு மொள்ளமர் முறுவலர்
பட்டி மாக்கள் கட்டுரை பகரும்

---

மென்பதனை, "பொன்னிறச் செந்நெல்", "நாருத் தகடேபோல்" (நாலடி. 269, 266), "அன்பு நூலாக" (சீவக. 1596) என்னுஞ்செய்யுட்களாலும் முறையே உணர்க. 159. விச்சை - கல்வி.

159-60. "வனப்பு மிளமையும் வரம்பில் கல்வியும், தனக்குநிக ரில்லாத் தன்மையன்" (230-31) என்பர் பின்னும்.

162. பெண்ணிலிகொல்லோ - பெண்தன்மையில்லாதவளோ.

163. கண்ணிலி - அறிவில்லாதவள், கண்ணோட்ட மில்லாதவள்.

165. கொற்றம் - அரசுரிமை; "தென்னவன் கொற்றஞ் சிதைந்தது" சிலப். கக: 20.

166. குடிக்கதுவாயாக - குடிக்குற்றமாக (பெருங். க. 46: 87; ௩. 22: 136, 24: 149); "கதுவாய்த் தலையிற் பலிநீ கொள்ள" (சுந்தர. தே.); "கடல்வாய்ச் சென்று மேகங் கவிழ்ந்திறங்கிக்கதுவாய்ப் பட நீர்முகந்தேறி" பெரியாழ்வார். ௩. 5: 4.

167. பண்பில் சிறுதொழிலென்றது யாழ் கற்பித்தலை; அஃது அரசன் ஏவலாதலின் முன்பும் சிறுமை யென்றார்; 34: 86.

168. படாளை - இணங்காதவளை. அரற்றல் - தன் குறையை வாய்விட்டுக்கூறல்; (பெருங். க. 36: 304.) 169. கண் - அறிவு.

173. பட்டி மாக்கள் - வாயடக்கமில்லாத மாந்தர்.

பி - ம். [1] பெண்ணலி.

பெருங்கலி யாவணம் பிற்படப் போலும்
வையத் தவளொடும் வயந்தகன் கேட்பத்

(கணிகையருடலும் நம்பியர் உணர்த்தலும்
விடர் முதலியோர் கூற்றும்)

தேன்கவர் வோப்பித் திருநுதல் சுருக்கிப்
பூநறுந் தேறல் பொலன்வள்ளத் தேந்தி
ஒழுகி நிலம்பெறாஅ தொசிந்து கடைபுடைத்
தெழுதுநுண் புருவ மேற்றி யிமைவித்
திலமலர்ச் செவ்வா யொப்ப விதழ்விடுத்து
நாம்பிசை தள்ளி வறிதினிற் சுவைத்து
மகிழின் மம்ம ரெய்தி முகிழின்
கால மன்றியுங் கையி [1] னெரித்த
கழுநீர்க் குவளைப் பெரும்பொதி யவிழ்ந்த
வள்ளிதழ் வகைய வாகி யொள்ளிதழ்
செஞ்சிவப் புறுத்த சிதரரி மழைக்கண்

174. பெருங்கலி - பெருமுழக்கம்.

175. கேட்பவென்பது உரைப்ப (226) என்பதனோடு முடியும்.

176. 'தேன்கவர் வோப்பி' என்பது முதலியன மறுகிற்கு (219) அடை. தேன் - வண்டு. ஓப்பி - ஓட்டி.

177. பொன்னென்பது பொலனென்று வழங்குமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தக்க. ௨ - உரை.

178. ஒழுகி - சென்று. புடைத்து - பருத்து.

179. ஏற்றி - நெற்றியில் ஏற்றி.

180. இலமலர் - இலவம்பூ; "இலமலரன்னவஞ் செந்நா" (அகநா. கசஉ.) செவ்வாய் - செவ்விய பூவிதழை. இதழ் - உதடு.

181. தள்ளி - வெளிப்படுத்தி. வறிதினிற் சுவைத்து - சிறிது சுவைத்து; "வறிதுவடக் கிறைஞ்சிய" பதிற். உச.

182. மகிழின் - கள்ளையுண்ட களிப்பால்.

183. நெரித்த - வலிய அலர்த்திய; "விரலுளர்ப் பவிழ்ந்த......... கண்ணி" (முருகு. 198-9) என்பதையும் அதன் உரையையும் அடிக் குறிப்புக்களையும் பார்க்க.

184. கழுநீராகிய குவளை. பெரும்பொதி - பேரரும்பு.

185. இதழ் - பூவிதழ், இமை.

185 - 6. வகையவாகி உறுத்த கண்கள்.

பி - ம். [1] எடுத்த.

கொழுங்கடை யிடுக நோக்கி மணிபிறழ
விருப்புள் கூர விம்மி வெய்துயிர்த்
தெருத்தஞ் சிறிய கோட்டி யெம்மினும்
திருத்தஞ் சான்றநுந் துணைவியில் செல்கெனப்
புலவித் தண்டந் தமர்வயி னேற்றி
இல்லை யாயினும் சொல்வகை செருக்கித்
தண்டிக் கொண்டு பெண்டிரைப் பொருது
செயிர்வுள் ளுறுத்த நோக்கமொடு நறவின்
வாசங் கமழு மோசைய வாகிக்
கிளிப்பயி ரன்ன களிப்பயின் மழலை
எய்தா வொழுக்கமொ டைதவட் பயிற்றி
எயிறு வெளிப்படா திறைஞ்சி ஞிமிறினம்
மூசின கரிய கோதையிற் புடைத்துப்
பூங்குழை மகளிர் புலவிகொ டிருமுகம்
தேர்ந்துணர் காட்சியிற் [1] றிரிந்துநலங் கரியப்
பூந்துகிற் றலை பற்றிக் காய்ந்தது
காட்டினை சென்மோ [2] மீட்டின தெளிகெனப்
படிற்றியல் களைஇப் பணிமொழிக் கிளவி

---

187. இடுக நோக்கி - சுருங்கப் பார்த்து; "கண்களை யிடுகக் கோட்டி" (சீவக. 2086.) மணி - கருவிழி.

189. கோட்டி - வளைத்து. 191. புலவியாகிய தண்டத்தை.

192. குற்றமில்லையாயினும். செருக்கி - மயங்கி; "செருக்கிய மஞ்ஞை" சீவக. 2052.

193. தண்டி - அலைத்து. 194. செயிர்வு - குற்றம்.

196. பயிர் - அழைக்கும் ஒலி. 196 - 7. மழலையைப் பயிற்றி.

198. இறைஞ்சி - குனிந்து. 199. கோதையின் - மாலையாலே.

201. காட்சியின் - அறிவினால். நலம் கரிய - அழகு கெடுதலால்.

202. துகிற்றலை - ஆடையின் தலைப்பு. பற்றல் முதலியன தலைவர் தொழில்.

203. காட்டினை சென்மோவென்றது ஒருத்தியை நோக்கி ஒரு தலைவன் கூறியதாகக் கொள்க. மீட்டு இன்ன தெளிக என.

204. படிறு இயல் களைஇ - வஞ்சனையாகிய இயல்பைக் களைந்து.

பி - ம். 1 தெரிந்து. 2 மீட்டினித்.

நடுக்குறு துயரமொடு நயவரப் [1]பயிற்றிக்
குவிப்பூங் கையிணை கூப்பித் திருக்குழல்
நானப் பங்கி கரமிசைத் திவளப்
பரட்டசைக் கிண்கிணிப் பக்கம் புல்லி
அரத்தகத் தீரத் தைதுகொண் டெழுதிய
சீறடிச் சுவட்டெழுத் தேறிய சென்னியர்
நாட்போது நயந்த வேட்கைய வாயினும்
முகைப்பதம் பார்க்கும் வண்டினம் போலத்
தகைப்பருங் காமத்துத் தாம்வீழ் மகளிர்
நகைப்பதம் பார்க்கு நனிநா கரிகத்துச்
சொல்லி னுண்பொருள் காட்டி யில்லின்
படுகாழ்ப் படுத்துத் தேய்வை யுரீஇக்
கலுழி நீக்குங் கம்மியர் போல
மகர வீணையின் மனமாசு கழீஇ

---

207. நானம் - பலவகை நறுமணம், வாச எண்ணெய். திவள - அசைய.

206 - 7. குழற் பங்கி - குழற்சியையுடைய குடுமி; "குழலுடைச் சிகழிகைக் குமரன்" சீவக. 1092.

208. பரடு அசை - பரட்டின்மீது கட்டிய; "புடைச்சிறு பரடு புல்லிக் கிண்கிணி சிலம்போ டார்ப்ப" சீவக. 2445.

209. அரத்தகத்து ஈரத்து - செம்பஞ்சுக் குழம்பால். ஐது - மெல்லிது. 211. நாட்போது - காலையில் மலரும் மலர்.

213. தகைப்பு அரு - தடுத்தற்கரிய.

212 - 4. "தகைமலர் வண்டின், நகைப்பதம் பார்க்கு மிளையோர்" சிலப். கச : 162-3.

215 - 6. இல்லின் படுகாழ் - தேற்றாங் கொட்டை; இல் : இல்லமென்பதன் கடைக்குறை. தேய்வை உரீஇ - தேய்த்தலைச் செய்து.

217. கம்மியர் - தொழிலையுடையார்.

218. மகர வீணையை வாசித்தலால்.

215 - 8. "கலஞ்சிதை யில்லத்துக் காழ்கொண்டு தேற்றக், கலங்கிய நீர்போற் றெளிந்து நலம்பெற்றாள், நல்லெழின் மார்பனைச் சார்ந்து" (கலி. கசஉ); "தேறுபடு சின்னீர் போலத் தெளிந்து" (மணி. உங: 142-3); "நின்றா னுள்ளந் தேறுரைக்க நீத்தந் தெளிவதெனத்தெளிந்து" (பிரமோத்தர. வஞ்சுளைமுத்தி. 99); "தேறாத

பி - ம். 1 பற்றி.

நகர நம்பியர் திரிதரு மறுகின்
ஆணையிற் கொண்டுதன் னரசியல் செய்தோன்
காம விருந்தினன் கலையிற் கிகந்தனன்
பிழைக்கவும் பெறாஉம் பெண்டிர் மாட்டென
உரைத்தகு கிளவி யோம்பார் பயிற்றி
நடநவின் மகளிர் நலத்திடை நம்பி
விருந்தினன் போன்மெனப் புரிந்தலர் தூற்றி
விடரும் தூர்த்தரும் விட்டே றுரைப்பத்
தரும நுவலாது தத்துவ மொரீஇக்
கரும நுதலிய கள்ளக் காமம்
எத்துறை மாக்களு மெய்க்கொளப் பரப்பி
வனப்பு மிளமையும் வரம்பில் கல்வியும்
தனக்குநிக ரில்லாத் தன்மைய னுதலிற்
பொருந்தாப் புறஞ்சொ னிறம்பார்த் தெறிய
வான்மயிர் துடக்கிற் றானுயிர் வாழாப்
பெருந்தகைக் கவரி யன்ன பீடழிந்து

---

யாவுந் தெளிவிக்குந் தேறென" (வலிவலமும். 8); "மண்மயக்கந் தேற்றுவித்தான் மாற்றுதல்பேர் ளாரியனால், உண்மயக்கந் தேற்றுவித்தான்" (திருவேங்கட மாலை.) 219. மு. சிலப். ௫ : 168.

நாகரிகத்தையுடைய (214) நம்பிய (219) ரென்க.

220. ஆணை - ஆக்கினை. செய்தோன் - உதயணன்.

221. காமவிருந்தினன் : சிலப். ௧௪ : 164. இகந்தனன் - கடந்தான். விரும்பாதவளை விரும்பி வலிந்து கொண்டுவரச் செய்தானென்பார், 'கலையிற் கிகந்தனன்' என்றார். 223. ஓம்பார் - பாதுகாவாராய்.

225. விருந்தினன்போலும் - புதியவன்போலும். புரிந்து-மிகுந்து.

226. விட்டேறு - இகழ்ந்து கூறும் கடுஞ்சொல்; இங்ஙனங் கூறித் திரிவோர் பெயர் விட்டேற்றிகளென வழக்கில் உள்ளது; "தூர்த்தரும் விட்டேற் றாளரும்" (மணி. ௧௪: 61) என்பதையும் அதன் குறிப்பு முதலியவற்றையும் பார்க்க. 227. தத்துவம் ஒரீஇ - உண்மையை நீக்கி.

228. கருமம் நுதலிய - காரியத்தைக் கருதிய.

231. தன்மையனென்றது உதயணனை.

232. நிறம் - மார்பு. புறஞ்சொல்லாகிய கல்லை எறிய; நாலடி. 66.

233 - 4. "மயிர் நீப்பின் வாழாக் கவரிமா" (திருக்குறள், 969) என்பதும், "மான நோக்கிற் கவரிமா வனைய நீரார்" (கம்ப. மந்திர. 7) என்பதும் இங்கே அறியத்தக்கன.

நெடுவெண் ணிலவி னீர்மைக் கிரங்கி
முறுவன் மகளிர் முற்ற நிற்பப்
பசுங்கதிர் சுருங்கிய பசலைத் தாகி
விசும்பெழுத் தேயும் வெண்மதி போல
வலியிற் றீரா தொளியிற் குன்றிப்
பெருநல் கூர்ந்த பெருவரை யகலத்
தெவ்வ மறைத்தல் வேண்டி வையத்து
வலிதிற் றந்த வால்வளைப் பணைத்தோள்
[1] ஒருமனம் புரிந்த நருமதை கேட்ப
வேட்கைக் கிளவி வெளிப்படப் பயிற்றிச்
சேட்படு குருசில் சேர்தொறும் பொறாஅள்
நச்சுயிர்ப் பளைஇய நாகம் போல
அச்சுயிர்ப் பளைஇ யமரா நோக்கமொடு
சில்லைச் சிறுசொன் மெல்லியன் மிழற்ற
அவ்விரு ளடக்கி வைகிருட் போக்கிப்
போற்று மாக்க ளுற்றும் பெரும்பழி
மேற்கொண் டனனென் மின்னிழை பொருட்டென்.

ருடு—நருமதை சம்பந்தம் முற்றிற்று.

---

235. நெடுவெண்ணிலவு - காலத்தால் நெடிய வெள்ளிய நிலவு; “களவிற்கு, நல்லை யல்லை நெடுவெண் ணிலவே” (குறுந். சஎ.) நிலவின் நெடுமைக்குக் காரணம் விரகம். 235 - 6. இரங்கி நிற்பவும்.

237. பசுங்கதிர் - பாலசூரியன். பசலைத்தாகி - பொன்னிறமுடையதாகி. 238. விசும்பு எழ - ஆகாயத்தில் உதயமாக.

241. எவ்வம் - இளிவரவு. 242. தந்த - கொண்டுவரப்பட்ட.

245. சேட்படுகுரிசில் : சேண் - நெடுந்தூரம்; நருமதைக்கு அரியவனென்றபடி. 246. நச்சுயிர்ப்பு - விடத்தையுடைய மூச்சு.

247. அச்சு - அச்சம். அமரா நோக்கம் - விரும்பிப் பொருந்தாத பார்வை.

248. சில்லைச் சிறுசொல் - இழிவான சிறிய சொற்களை; “சில்லைக் கண்ணன்பினை” நாலடி. 377.

249. வைகிருள் - விடியற்காலத்து இருளிலே.

251. மின்னிழை - வாசவதத்தை. 250 - 51 = 60 - 61.

பி - ம். 1 ஒருமணம்.

## ருகூ—[1] சாங்கியத்தாயுரை.

(ஒற்றர் பிரச்சோதனனுக்கு உணர்த்தல்)

மின்னிழை பொருட்டா மேலவன் கொண்ட
துன்னரும் பெரும்பழி நன்னகர் [2] கழுமக்
கம்பலை மூதூர் வம்பல ரெடுத்த
படுசொ லொற்றர் கடிதவ ணோடி
வானுற நிவந்த வசையின் மாணகர்த்
தாம்பெறு செவ்வியுட் டலைமகற் குணர்த்தக்

(பிரச்சோதனன் செயல்)

காமத் தியற்கை காழ்ப்பட லுணர்ந்து
நகையு நாணுந் தொகவொருங் கெய்தி
இழிப்புறு நெஞ்சின னாயினும் யார்கணும்
பழிப்புறஞ் சொல்லாப் பண்பின னாதலின்
உருவுவழி நில்லா தாயினு [3] மொருவர்க்குத்
திருவுவழி நிற்குந் திட்ப மாதலிற்

---

ருகூ—சாங்கியத் தாயுரை.

[உதயணன் வாசவதத்தைக்கு யாழ் கற்பித்து வருகையில் அயலரசர் அவளை மணஞ்செய்ய விரும்பி அரசன்பால் தூதுவிடுத்ததும் அது தெரிந்து வருந்திய அவளைச் சாங்கியத்தாய் தேற்றி உதயணனைச் சார்ந்து அவனுக்குத் தன் வரலாறு கூறித் தன்னை நம்பும்படி செய்ததும் பிறவும் இதனால் அறியலாதும்.]

1. மேலவன் - உதயணன். 2. கழும - மயங்க.

4. படுசொல் - பழிமொழிகளை. 5. நிவந்த - உயர்ந்த.

6. செவ்வி - சமயம். தலைமகற்கு - பிரச்சோதனனுக்கு.

7. காழ்ப்படல் - உறுதியாதல்; "காமங் காழ்க்கொளின்" குறுந். கஎ; மணி. டு : 20.

9. இழிப்பு உறு - உதயணனை இழிவுபடுத்திய.

9 - 10. "அறங்கூறான் ...... என்ற லினிது" குறள், 181.

11. உரு - பிறரை அஞ்சுவித்தல்.

12. திட்பம் திருவின்வழி நிற்கும்; திட்பம் - நெஞ்சத்திண்மை.

11 - 2. உருவு, திருவு : உ, சாரியை. "எண்ணிப்பத் தங்கையிட்டா லிந்திரன் மகளு மாங்கே, வெண்ணெய்க்குன் றெரியுற் றாற்போன் மெலிந்துபின் னிற்கு மன்றே" சீவக. 1597.

பி - ம். [1] சாங்கியன்றாயுரை. [2] கெழும. [3] ஒருவற்குத்.

கேட்டது கரந்து வேட்டது பெருக்கிப்
பட்டது நாணுது பெட்டது மலேயும்
கால மன்மை யல்லது காணிற்
கோல மன்ருே குமரற் கிதுவென
எள்ளியு முரையா னிளமைய தியல்பென
முள்ளெயி றிலங்கு முறுவல னுகித்

(அரசன் நருமதைக்குச் சிறப்புச் செய்தல்)

தண்கய மருங்கிற் ருமரை போல
அண்ணன் மூதூர்க் கணியெனத் தோன்றிச்
சாமரை யிரட்டையுந் தமனியக் குடையும்
மாமணி யடைப்பையு மருப்பிய லூர்தியும்
பைந்தொடி யாயமும் பட்டமு முடையோர்
ஐம்பதி னுயிர ரரங்கியன் மகளிருள்
மன்னருட் பிறந்த மக்களு ளருங்கலம்
தன்னயந் தாற்றத் தன்கடன் றீர்த்த
தகைசா லரிவைக்குத் தக்கன விவையென
இசைசால் சிறப்பி னிருங்கலப் பேழையொடு
மணியினும் பொன்னினு மருப்பினு மல்லது
மரத்தி னியலாத் திருத்தகு வையம்
முத்த மாலே முகமிசை யணிந்து
பொற்ருர் புனைந்த புள்ளியற் பாண்டில்

---

13. ‘வேட்டது பெருக்கி’ என்பது முதலியன பிரச்சோதன னுடைய உட்கோள்.

14. பட்டது - உண்டான பழி. மலேயும் - மேற்கொள்ளும்.

15. காலமன்மை யென்றது உதயணன் தன்வயம் நீங்கிப் பிறன் வயத்தனுகியிருத்தலைக் குறிப்பித்தபடி.

17. உம் : அசை.

19. மலர் நாப்பண் ஓங்கிய தாமரை : மணி. ச. 7 - 9; கு. 75 - 6.

23. பட்டம் - தலேக்கோற் பட்டம்; எட்டி காவிதி யென்னும் ‘பட்டங்களுமாம் ; பெருங். உ. 3 : 144 - 5.

25. அருங்கலமென்றது உதயணனே.

26. தன்னென்றது நருமதையை. கடன் - உதயணன் வேட் கையை நீக்குதல்.

32. பாண்டில் - நாரையெருது ; சிறுபாண். 260.

[1] கடைமணி பூட்டிக் கணிகையில் விட்டுப்
பொய்தன் மகளிரொடு புனலாட் டயரினும்
தெய்வ விழவொடு தேர்ப்பி னியலினும்
நகர்கடந் திறத்த னருமதை பெறுகென
எயின்மூ தாளரை வயின்வயி னேஎய்
வாயில் சுட்டி வளநக ரறியக்
கோயிற் கூத்துங் கொடுங்குழை யொழிகெனத்
தோன்றிய லவையத்து நன்றவட் கருளித்
தருமணற் பந்தர்த் தான்செயற் கொத்த
கரும மறுத்த கைதூ [2]வமையத்

**(வாசவதத்தையை விரும்பிப் பிறவாசர் மணத்தூது விடுத்தல்)**

திருநிலத் திறைமை யேயர் பெருமகன்
பெருங்களி றடக்கிய பெறற்கரும் பேரியாழ்
கல்லா நின்றனள் கனங்குழை யோளென
எல்லா வேந்தரு மிசையின் விரும்பி
வழிமொழிக் கிளவியொடு வணக்கஞ் சொல்லிக்

---

33. கடைமணி - வண்டியின் முன்னுறுப்பு; வழக்கு (பெருங். ௧: 56: 195.) கணிகையில் - நருமதையின் வீட்டிற்கு. விட்டு - அனுப்பி.

34. பொய்தல் - விளையாட்டு. 35. இயலினும் - செல்லினும்.

36. கடந்து இறத்தல் - கடந்து செல்லுதல்.

37. எயில் மூதாளர் - மதிலைப் பாதுகாத்துக் கொண்டிருக்கும் முதியவர். எஎய் - ஏவி.

38. வாயில் சுட்டி - நகரத்தார் அறிந்துகொள்ளும்படி ஒவ்வொரு வீட்டு வாயிலையும் குறிப்பிட்டு; "முற்றந் தோறு மூதூ ரறிய" (157) என்பர் பின்னும். 39. கோயிற்கூத்து - அரண்மனையிலாடுங் கூத்து.

41. தருமணற் பந்தர்: பெருங். ௧. 33: 134, அடிக்.

42. கைதூவமையத்து - கையொழிந்திருக்கும் சமயத்தில்; "கைதூவே னென்னும் பெருமை" குறள், 1021.

43. ஏயர்பெருமகன் - உதயணன்; "ஏயர்மகன்" (104) என்பர்.

46. இசையின் - சங்கீதமுடைமையால்.

47. வழிமொழி (வழிபாடுகூறுஞ் சொல்) யாகிய கிளவியென விரிக்க; "வலியரென வழிமொழியலன்" புறநா. ௨௩௯.

பி - ம். 1 கடிமணி, கடைமணி. 2 அவ்வயத்து.

கழிபெரு நன்கலங் களிற்றின்மிசை யுயரித்
துன்னருங் கோயிலுட் டூதரை விடுத்தர

(பிரச்சோதனன் நிலை)

ஓலையுட் பொருளு முரைத்த மாற்றமும்
நூலிய லாளரொடு நுண்ணிதிற் கேட்டு
நன்று மென்றா னன்றென மருஅன்
மானிவர் குரங்கின் மகக்கோட் போல
நிலைமையொடு [1]தெரிதரு நீதிய னாகி
ஆவது துணிதுணை யாசையி னிறீஇத்
தார்கெழு வேந்தன் றமர்களை விடுத்தபின்

(சாங்கியத்தாயின் செயல்)

கோமகன் குறித்தது கொண்டுகை புனைந்து
தாய்மகட் டேரிய தன்வயி னுரைக்க

(வாசவதத்தை வருந்தல்)

நொதுமற் கிளவி கதுமென வெரீஇப்
புதுமரப் பாவை பொறியற் றாங்கு
விதுப்புறு நடுக்கமொடு [2]விம்முவன ளாகி
இதுமெய் யாயி னின்னுயிர் வேண்டி

---

49. விடுத்தர - அனுப்ப.

53. மகக்கோள் - மகவைக்கொள்ளுந்தன்மை; அரசனது நொதுமற்றன்மைக்கு இஃது உவமை; சீவக. 2571.

55. ஆவது - செய்யத்தக்கதை. துணிதுணை - நிச்சயிக்குமளவும்.

57. குறித்தது: உதயணனை மருமகனாக்கிக் கொள்ளுதல். கைபுனைந்து - பொய்யாகக் கற்பித்து. கொண்டு - உணர்ந்துகொண்டு.

58. தாய்: இங்கே சாங்கியத்தாய். மகள் தேரிய - மகளின் கருத்தை அறியும் பொருட்டு; மகள் - வாசவதத்தை.

59. நொதுமற் கிளவி - அயலரசனுக்குத் தன்னைக் கொடுப்பதாகச் சொல்லிய வார்த்தைகளை; நொதுமல் - அயல். வெரீஇ - அஞ்சி.

60. பொறி - எந்திரம்.

61. விதுப்புறுநடுக்கம் - பரபரப்புற்ற நடுக்கம்; மிகுந்த நடுக்கமுமாம். விம்முதல் - பொருமுதல்.

60-61. "பொறியறு பாவையிற் பொம்மென விம்மி" சீவக. 333.

62. இது - அயலானுக்கு என்னைக்கொடுக்க வெண்ணிய இச்செய்தி.

பி - ம். 1 திரிதரு. 2 விழுவனளாகி.

வாழ்வோ ருளரெனிற் சூழ்கதன் வினையென
ஆவி நுண்டுகில் யாப்புறுத் தாயினும்
சாவ துறுதியான் றப்பிய பின்றை
என்பிற் றீர்க வெந்தைதன் குறையென
அன்பிற் கொண்ட வாற்றுறு கிளவி
விளைக்கை நெருக்கி வாய்மிக் கெழுதரக்
கதிர்முத் தாரங் கழிவன போலச்
சிதர்முத் தாலி சிதறிய கண்ணள்

(சாங்கியத்தாய் அவளைத் தேற்றல்)

மாழ்குபு கலிழு மகள்வயிற் றழீஇ
வீழ்தரு கண்ணீர் விரலி னீக்கிக்
கவாஅற் கொண்டு காரணங் காட்டி
அழேற்கென் பாவா யதுவு முண்டோ
யாயு நீயும் யானு மெல்லாம்
இதுமுத லாக விவ்வகை நிகழிற்
றலைமகற் றுறந்து தவம்புரி வேமெனா
அஞ்சி லோதியை நெஞ்சு வலிபுறீஇச்
சேயுய ருலகஞ் செம்மையிற் கூறும்

63. வாழ்வோருளரெனினென்றதனால், யான் வாழேனென்றாளெனக் கொள்க; "வாழ்வார்க் குரை" (குறள், 1151) என்றது போன்றது.

64. ஆவி நுண்டுகில் - பாலாவி போன்ற வெள்ளிய நுண்ணிய ஆடை; பெருங். க. 36 : 165, 40 : 228; "ஆவியன்ன பூந்துகில்" (சீவக. 67.) யாப்புறுத்து - சுருக்கிட்டுக் கட்டி.

66. என் பிற்றீர்கவென்று மீட்டுங் கூறியது மயக்கத்தால்; என்பின் - என்பினாலே; உயிரில்லாத உடம்பினாலேயெனலுமாம்.

67 - 8. கிளவி எழுதர. 70. ஆலி - நீர்த்துளி.

69 - 70. "கண்பனி, நெகிழ்நூன் முத்தின் முகிழ்முலைத் தெறிப்ப" (அகநா. உ௬௯.) 71. கலிழும் - கலங்கும். வயின் - வயிறு.

73. கவான் - துடை. கொண்டவள், சாங்கியத்தாய்.

74. அழேற்க என் பாவாய். அதுவும் - உதயணனுக்கன்றி வேறொருவர்க்கு உன்னைக் கொடுத்தலும். 77. தலைமகன் - அரசனை.

78. அம் சில் ஓதியை - அழகிய சிலவான கூந்தலையுடைய வாசவதத்தையை; குறிஞ்சிப். 180.

தீதறு நோன்பிற் றெய்வந் தேற்றிய
தீம்பாற் காட்சித் [1] தெரிவுபல காட்டி
மாற்றுக் கவலையின் மனங்கொண் டாங்கு
நிறைமை சான்றநின் னெஞ்சங் கொண்ட
பொறைமை காணிய பொய்யுரைத் தேனென
ஓதியு நுதலு மாதரை நீவித்
தக்கது நோக்கான் பெற்றது விரும்பி
நுந்தை நேரா னெஞ்சுகொள் காரணம்
பைந்தொடித் தோளி யறிவுறக் கேளென
இளமையும் வனப்பு மில்லொடு வரவும்
வளமையுந் தறுகணும் வரம்பில் கல்வியும்
தேசத் தமைதியு மாசில் சூழ்ச்சியொ
டெண்வகை நிறைந்த நன்மகற் கல்லது
[2] மகட்கொடை நேரார் மதியோ ராதலின்
அவையொருங் குடைமை யவர்வயி னின்மையின்
அதுபொய் யாத லதனினுந் தேறெனக்
காரணக் கிளவி நீர காட்டிச்
செவிலி தெளிப்பக் கவிழ்முக மெடுத்து

---

80. நோன்பு - பிரச்சோதனன் தெய்வங்களைக் குறித்துச் செய்த தவம்; தெய்வம் - இந்திரனும் சண்டிதேவியும்.

81. தெரிவுபல - வாசவதத்தையை உதயணனே மணஞ்செய்து கொள்வானென்பது முதலியன. 84. காணிய - காணும் பொருட்டு.

85. "நன்னுதனீவி" (316) என்பர் பின்னும்; "விரைக்குழ றுழுது நீவி .........சொன்னாள்" சீவக. 618.

86. பெற்றது - தூதுவர் கொணர்ந்ததை.

87. நேரான் - உடன்படானாயினன்.

87 - 8. காரணத்தைக் கேளென்று.

89 - 91. "அருமை சான்ற நாலிருவகை" என்பதன் உரையில், 'இளமையும்......சூழ்ச்சி' என்னும் இப்பகுதி எடுத்தாளப் பெற்றுள்ளது; தொல். களவு. சூ. ௨0, ந.

89 - 92. = பெருங். ௧. 35 : 159 - 60; 230 - 31.

94. அவை - இளமை முதலிய எட்டும் (89 - 91.) அவர் - நொதுமலர்.

96. காரணக்கிளவி - காரணமான சொற்கள்; பெருங். ௧. 35 : 112; "காரண நீர சொன்னாள்." சீவக. 1386.

97. செவிலி - சாங்கியத்தாய். முகமெடுத்தவள், வாசவதத்தை.

பி - ம். 1 திரிவுபல, 2 மகளிடை.

(வாசவதத்தை கூற்று)

நெடுவெண் டானை வாங்கிக் கொண்டுதன்
வடிவே லுண்கண் வருபனி யாக்கித்
தோற்ற நிகர்ப்போ ரின்றி யாற்றல்
காலனொ டொக்கு ஞாலப் பெரும்புகழ்
புகரின் றோங்கிய நிகரில் கேள்வியன்
காம நுகர்வோர்க் காரணங் காகிய
ஏம வெண்குடை யேயர் மகனொடு
வையக மறியக் கையகம் புக்குத்
தானறி வீணை தனியிடத் தெழீஇக்
காணு மென்னுங் கட்டுரை [1] யன்றியும்
உலக மாந்த ருள்ளங் கொண்ட
ஐயக் கிளவி தெய்வந் தேற்றினும்
தூய னென்றுத் தீதுரை யெய்தி
வாசவ தத்தையும் வாழ்ந்தன ளென்னும்
ஓசை நிற்ற வுலகத் தஞ்சுவன்
எமர்தர வாரா தாயினு மிவனோற்

99. அரக்கி - துடைத்து ; பெருங். க. 33 : 136-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

100. தோற்றம்-தோற்றத்தில். 102. கேள்வியன் - உதயணன்.

100 - 102. ஆற்றலிற் காலனை ஒக்கும் கேள்வியன்: "மீளி மொய்ம்பின் மிகுவலி" (பொருந. 140) ; "கால முன்ப" (புறநா. ௨௩ : 17); "எண்மரில் வலிய ஞய யமன்" கம்ப. மிதிலை. 107.

104. ஏமவெண்குடை - குடிகளுக்குப் பாதுகாப்பாகிய வெள்ளைக் குடை ; "வியன்குடை, வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய, குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ" புறநா. ௩௫.

103 - 4. அணங்காகிய - வருத்துவோனாகிய ; ஆகியமகனென்க ; ஐங். ௨௩; "கச்சுலாமுலை யார்க்கணங் காகிய சச்சந்தன்" சீவக. 157.

106. எழீஇ - எழுப்பி.

107. காணும் - காண்பாள். கட்டுரையன்றியும் - கட்டுரைக்கு அஞ்சுவதல்லாமலும்.

109. ஐயக்கிளவி - ஒருவர்பால் ஒருவர் அன்புடையரென்பது.

112. ஓசை - சொல் ; இங்கே வடசொல்; "கற்றேயுந் தேயாது சொல்" பழ. 394.

பி - ம். 1 இன்றியும்.

றவனுறை யுலகத் தழித்துப்பிறந் தாயினும்
எய்துதல் வலித்தனென் செய்வது கேளெனத்
தெய்வ மாதர் திட்பங் கூற

(சாங்கியத்தாய் எண்ணுதல்)

அண்ணன் மருங்கி னாவது வேண்டும்
தன்மன முவந்தது தலைவர நோக்கி
ஏற்ற முன்கைத் தொடிவீழ்ந் தற்றாற்
கொற்றொடி கொண்ட கொள்கையென் றேத்தி
மிகுதியின் மிக்கதன் மேற்றிணைக் கேற்பத்
தகுவன கூறுந் தலைமகன் மகளென

(சாங்கியத்தாய் கூற்று)

உவகை நெஞ்சமொ டுவப்பன கூறிப்
பைந்தொடி யாயமொடு பன்னொடி பகர்ந்து
கங்குல் யாமத்துங் கண்படுத் திலையாற்
கல்விச் சேவகங் கடவோன் வருந்துணைப்

---

114. அழித்துப் பிறந்தாயினும் - மீட்டும் பிறந்தாவது ; "அழித்து மொருநாள்" பெருங். க. 34 : 83.

113 - 5. வேண்டிய வேண்டியாங் செய்துதற்குத் தவம் காரணமாதலின், 'இவணுறைற்று ...... வலித்தனன்' என்றாள் (குறள், 265); "இம்மை மாறி மறுமை யாயினும், நீயா கியரெங் கணவனை" (குறுந். ௪௯); "மன்னவனே" (நைடதம், பிரிவுறு. 17) என்னும் செய்யுள் இவ்வடிகளின் கருத்தை ஒருவாறு தழுவியிருத்தல் காண்க.

116. தெய்வமாதர் - வாசவதத்தை; தெய்வத்தினருளாற் பிறந்தவளாதலின் இங்ஙனம் கூறப்பட்டாள். திட்பம் - மனவுறுதி.

118. தலைவர - முற்ற.

119 - 20. கொள்கை தொடிவீழ்ந்தற்றென இயைக்க ; "ஏற்ற கைத்தொடி வீழ்ந்தென வேந்தலைத், தேற்றினான்" சீவக. 1979.

121. மேல்திணை - மேலாகிய குலம்.

122. தலைவன்மகள் தகுவனவற்றைக் கூறுகின்றாளென்று சாங்கியத்தாய் நினைந்து.

123. உவப்பன - மகிழ்தற்குக் காரணமாகிய வார்த்தைகளை.

124. நொடி - நொடிச்சொற்களை. 125. யாமம் - நள்ளிரவு.

124 - 5. பகர்தலால் துயின்றாயில்லை.

126. கல்விச்சேவகம் கடவோன்-கல்விவீரத்தைச்செலுத்துவோன் ;

பல்பூங் கோதாய் பள்ளிகொண் டருளெனப்
பூமென் சேக்கையுட் [1] புனையிழைப் புகீஇ
யான்வரு மாத்திரை யாரையும் விலக்கிக்
காஞ்சன மாலாய் காவல் போற்றெனத்

(சாங்கியத்தாய் உதயணனைக் காணுதல்)

தொகுவேன் முற்றஞ் சிவிகையிற் போந்து
மயிலா டிடைகழி மாடத் தொருசிறைப்
பயில்பூங் கொம்பர்ப் பந்தர்மு னிழிந்து
கிளரிழை கற்குங் கேள்விப் பொழுதெனத்
தளரிய லாயமொடு தாய்முத லிசைப்பக்
கீத சாலை வேதிகை காக்கும்
கோல்கொள் சுற்றமொடு குமரன் புகுதர
இடுமணன் முற்றத் திவ்வழி வருகெனக்
கொடிமுதிர் குருகின் கொம்புதலைக் கொண்ட
உதிர்பூம் புன்கி னொரு சிறை யிரீஇ
இனைத்திறம் பகருறு மெந்தையொ டென்னிடைக்

---

உதயணன்; வீரமாகிய பெருமிதத்துக்குரிய காரணம் நான்கனுள் கல்வியும் ஒன்றாகும்; தொல். மெய். சூ. 9.

128. புனையிழைப் புகீஇ - வாசவதத்தையைப் புகுத்தி.

130. காஞ்சனமாலை : வாசவதத்தையின் தோழி.

131. தொகு வேல் முற்றம் - வேற்படை நெருங்கியுள்ள முற்றம்.

132. இடைகழி - இடையே ஒதுங்கியிருக்கு மிடத்தையுடைய.

133. பூகொம்பர்ப் பந்தர் - பூங்கொம்பாலாகிய பந்தர்; "நிறை மாண் குருகி னேர்கொடிப் பந்தர்" பெருங். க. 41 : 121.

134. கற்கும் பொழுதெனவும் கேள்விப்பொழுதெனவும் கூட்டுக.

135. ஆயத்தோடு சாங்கியத்தாய் முதலிற் சொல்ல.

136. வேதிகை - வாயிற்றிண்ணை.

137. "கோலவர்தொழு" (37 : 1) என்பர் பின்னும்.

139. குருகு - குருக்கத்தி.

140. புன்கு - புன்கமரம். இரீஇ - உதயணனை இருக்கச் செய்து.

141. இனைத்திறம் - இத்திறங்களை. எந்தையென்றது உதயணனை; முறைப்பெயரன்று.

பி - ம். [1] புனையிழை புகீஇ.

கிளைத்திறம் பகருநர் தலைப்பெய லரிதெனக்
கண்ணினுஞ் செவியினு நண்ணுநர்ப் போற்றி

(சாங்கியத்தாய் கூற்று)

மண்ணகங் காவலன் மாபெருந் தேவி
திருவயிற் றியன்ற பெருவிறற் பொலிவே
இனையை யாவது மெம்மனோர் வினையென
யாக்கைய தியல்பினு மன்பினுங் [1] கொண்டதன்
காட்சிக் கண்ணீர் கரந்தகத் தடக்கி

(சாங்கியத்தாய் தன் வரலாறு கூறுதல்)

இன்ன ளென்றியா னென்முத லுரைப்பேன்
மன்னவன் மகனே மனத்திற் கொள்ளெனச்
செம்மற் செங்கோ [2] னுந்தை யவையத்
தென்னிகந் தொரீஇயின னிளமையிற் கணவன்
தன்னிகந் தொரீஇயான் றகேள னாகக்
கொண்டோற் பிழைத்த தண்டந் தூக்கி
வடிக்க ணிட்டிகைப் பொடித்துக ளட்டிக்

142. எங்களுடைய உறவென்று சொல்லிவருபவரும் இப்பொழுது வருதல் அரிதென்றெண்ணி.

143. தன் கண்ணாலும் செவியாலும் பாதுகாத்து.

144. காவலன் - சதாநீகன். மாபெருந்தேவி-மிருகாவதியினுடைய.

146. இத்தன்மையை யுடையாயாக நீ இருத்தலும் எம்மனோர் செய்த தீவினையாகுமென்று சொல்லி; "இனையைநீ யாய வெல்லா மெம்மனோர் செய்த பாவம்" (சீவக. 391.) 148. சிலப். ௧௧ : 98.

147 - 8. "அன்பிற்கு முண்டோ......தரும்" குறள், 71.

149. என் முதல் - என் வரலாறு.

150. மனத்திற் கொள்ளென்றது, வெளிப்படுத்த வேண்டாவென்றபடி. 151. செம்மல் - தலைமை.

152. இகந்து ஒரீஇயினன் - விட்டு நீங்கினன்.

153. தகேளனாக - தகுதியில்லாதேனாக.

154. கணவனுக்குப் பிழைசெய்தமையாலுண்டாகும் தண்டனையை ஆராய்ந்து; "கொண்டோற் பிழைத்த தண்ட மஞ்சி" மணி. ௧௩: 6.

155. இட்டிகைப்பொடி - செங்கற்பொடி; கணவனைப் பிழைத்தோர்மீது செங்கற்பொடியைத் தூவி நீராட்டுதல் சிலநாடுகளில் வழக்க

பி - ம். 1 கொண்டதென். 2 நுந்தையவையத்.

குற்றங் கொல்லுமெங் கோப்பிழைப் பிலனென
முற்றந் தோறு மூதூ ரறிய
நெய்தற் புலைய னெறியிற் சாற்றிப்
பைதற் பம்பை யிடங்க ணெருக்கி
மணற்குடம் பூட்டி மாநீர் யமுனை
இடைக்கயத் தழுந்த விடூஇய செல்வுழிப்
புனற்கரைப் படீஇயர் புதல்வரொ டார்க்கும்
தோணி யரவஞ் சேணேய்க் கிசைப்பத்
தழூஉப்புணை யாயமொடு குழூஉத்திரை மண்டி
ஆவி நுண்டுகில் யாப்புறுத் [1] தசைத்துப்
பாகவெண் மதியிற் பதித்த குடுமிக்
களிற்றொடு புக்குக் கயங்கண் போழ்வோய்
அவ்வயி னெழுந்த கவ்வை யென்னென
முந்தை யுணர்ந்தோர் வந்துநினக் குரைப்ப
யாமுங் காண்கங் கூடின் சென்றெனக்

மாகவுள்ளதென்பர்; "சுடும ணேரு" (சிலப். ௧௪: 146) என்பதும் அதன் உரையும், "சுடும ணேற்றி" (மணி. ௧௮ : 33) என்பது முதலியனவும் இங்கே அறியற்பாலன.

157. மூதூரிலுள்ள முற்றங்கடோறும்; இப்பகுதியின் 38 - ஆம் அடியைப் பார்க்க.

158. நெய்தற் புலையன் - சாப்பறையை அடிக்கும் புலைமகன்.

159. பைதற் பம்பை - துன்பத்தைப் புலப்படுத்தும் பம்பையென்னும் பறை. எருக்கி - அடித்து.

160. மாநீர் - கரிய நீர்; யமுனை கருநிறமுடையது.

161. அழுந்த இடூஇய - அழுந்தும்படி இடுதற்கு.

162. புனற்கரை படீஇயர் - நீர்க்கரையிலுள்ளவர்கள்.

163. சேணேய்க்கு - தூரத்திலிருந்த நினக்கு. நீர்க்கரையிலுள்ளவர்கள் இசைப்ப.

164. தழூஉ - தழுவுதல். 165. ஆவிநுண்டுகில் : 64, அடிக்.

166. பாகவெண்மதி - அங்குசம்; "அரைமதி யிரும்பு" (பெருங். ௧. 32: 96.) குடுமி - உச்சி. 167. கயம் - பள்ளம்.

168. கவ்வை - துன்பமுழக்கம். 169. முந்தை - முன்பு.

170. கூடின் - அழையும்.

பி - ம். [1] அசைத்த.

கோல்கொண் மள்ளர் காலி னோடி
நம்பி வேஎண் மம்பி வருகென
ஆணையிற் றிரீஇய ரஞ்சன்மி னீரெனத்
தோணி யிழிப்புழித் துடுப்புநனி தீண்டி
நெற்றி யுற்ற குற்ற மிதுவென
இதுமுத லாக வின்னே யிம்மகள்
அழிதவப் படுத லாற்றுமென் றுரைத்த
குறிகோ ளாள னறிவிகழ்ந் தெள்ளி
எல்லை ஞாயி றிரவெழு மெனினும்
பல்கதிர்த் திங்கள் [1] பகல்படு மெனினுநின்
சொல்வரைத் தாயிற் சொல்லுவை நீயென
இன்னகை முறுவலை யாகி யிருங்களிற்
றொண்ணுதன் மத்தகத் தூன்றிய கையை
கொண்டோன் கரப்பவுங் கொள்கையி னிகப்போள்
தன்குறிப் பாயுழித் தவமிவட் கெளிதென
வம்ப மாக்கள் வாயெடுத் துரைத்த

---

171. "கோல்கொள் சுற்றம்" (137) என்றார் முன்னும். காலின் - காற்றைப்போல.

172. நம்பி வேஎண்ம் - உதயணன் விரும்புவான். அம்பி - தோணி.

173. திரீஇயர் - மாறுதற்பொருட்டு.

174. துடுப்பு - தோணியைச் செலுத்தும் கருவி.

175. இது - இவ்வடு. என - என்று கூறி. இதனால், சாங்கியத் தாயின் நெற்றியில் வடுவுண்டென்று தெரிகின்றது.

177. அழிதவப் படுதல் - தவஞ் சிதைந்தோர் செய்தற்குரிய விரதத்தை; "அழிதவப் படிவத்து" (பரி. ௫.) ஆற்றும். - செய்வாள்.

178. குறிகோளாளன் - நிமித்திகன்.

179. எல்லை ஞாயிறு - பகற்பொழுதிற்குரிய சூரியன்.

180. பல்கதிர்த்திங்கள் - பூரண சந்திரன். பகல்படும் எனினும் - பகற் பொழுதில் உதிக்குமாயினும்.

181. சொல்வரைத்தாயின் - சொல்லின் அளவில் அடங்குவதாயின். 179 - 81. நிமித்திகனை உதயணன் செய்த இகழ்ச்சி.

183. மத்தகத்தில் ஊன்றிய கையை உடையையாய்.

185. ஆயுழி - ஆராய்ச்சி செய்யுமிடத்து.

பி - ம். 1 பகல்விடு.

வெஞ்சொற் கிளவிநின் னங்கையி னவித்து
வேண்டிய துரைமி னீண்டியான் றருகெனப்
புலைமக னறையப் பூசலிற் போந்தேன்
நிலைமை வேண்டியா னின்னகர் வாழ்வேன்
தலைமகன் மகனே தவமென் றுணிவென
நிகழ்வதை யுரைக்கு நிமித்திக் [1]கருளறப்
புகழ்வினை யாகிப் பூக்கொண் டெறிந்தபின்
மற்று மவனே கற்றது நோக்கி
யானை யணிநிழற் படுதவி னந்தணி
தான்கொண் டெழுந்த தவத்துறை நீங்கித்
தானை வேந்தன் றுணிமுற் றங்கி
முற்றிழை மகளிர்க்கு முதுக ணுமெனச்
செவ்வகை யுணர்ந்தோன் சேனைக் கணிமகன்
கோசிக னென்றவன் குறிப்பெயர் கூறி
அடையாண் கிளவியொ டறியக் கூறலும்

**(உதயணன் கூற்று)**

கடிதார் மார்பனுங் கலிழ்ச்சி நோக்கிப்

---

183 - 7. மத்தகத்தில் ஊன்றிய ஒரு கையை யுடையையாய்க் கிளவியை மற்றோரங்கையின் அடக்கி.

188. வேண்டியதுரைமின் - நீர் விரும்பியதைச் சொல்லும். தருகு- தருவேன். என - என்று உதயணன் சொல்ல.

192. நிமித்திக்கு - நிமித்திகனுக்கு.

193. புகழ்வினை ஆகி - புகழும் தொழிலை யுடையாயாய். பூ - நிமித்திகனுக்குரிய பரிசிற் பொற்பூவை.

195. அந்தணி - சாங்கியத்தாய்; "மறைமுதாட்டி" (209) என்பர் பின்.

198. முதுகண் - பாதுகாப்பாக விருக்கும் முதியவர்; இச்சொல் இப்பொருளிற் சிலாசாசனங்களிற் காணப்படுகின்றது.

199. சேனைக்கணிமகன் - சேனையில் உள்ள நிமித்திகன்; பெருங். ௩. 22 : 185.

200. கோசிகனென்பது அக்கணியின் இயற்பெயர்.

201. அடையாண்கிளவி - அடையாளச் சொல்; "அறியக் கூறிய வடையாண் கிளவியும்" (56 : 184) என்பர் பின்னும்; இச்சொல் அடையாளெனவும் வழங்கும். 202. கலிழ்ச்சி - கலங்கியழுதலை.

பி - ம். 1 அருளாப்.

பிறப்பிடை யிட்டே னாயினு மெனக்கோர்
சிறப்பின ராத றேற்றுமென் மனமெனக்
கண்டதற் கொண்டு தண்டா தூறுமென்
அன்புகரி யாக வறிபுதுணி கல்லேன்
இன்றிவை கரியா வினித்தெளிந் தனனென
உதயண குமர னுணர்ந்தமை தேற்றலும்

(சாங்கியத்தாயின் கூற்று)

மறைமூ தாட்டி மற்றுங் கூறும்
கதிர்வினை நுனித்தநின் கணியெனைக் கூறிய
எதிர்வினை யெல்லா மெஞ்சா தெய்தி
இந்நகர்ப் பயின்றியா னிந்நிலை யெய்திற்
றென்னி னாயிற் றென்குவை யாயின்
என்முதல் கேளெனத் தொன்முத றொடங்கி
ஆக்கையி னிழிந்துநின் னருளிற் பிறந்தவென்
நோக்கரு நல்வினை நுகரிய செல்கெனக்
கொற்றவன் மகனே பற்றாது விடுவேன்
நீராட் டியலணி நின்வயி னீங்கியப்
பேர்யாற் றொருகரைப் பெயர்ந்தனென் போகிக்
கெங்கா தீரத்துத் தேசங் கெழீஇ
[1] அங்காங் கொல்வனென் றாத்திரை முன்னி
வம்பலர் மொய்த்ததோர் வழிதலைப் பட்டு

---

203. பிறப்பில் யான் வேறுபாடு உடையேனாயினும்.
204. நீர் சிறப்பினராதலை.
205. தண்டாது - தணியாமல்; "தண்டா வீகை" புறநா. ௬.
206. அன்புகரியாக அறிபு - அன்பு சாட்சியாக அறிதல்; "அன்பு சான்றென வுரைத்தன னனையவென் யாக்கை, என்பு தோன்றல வுருகின வெனிற்பிறி தெவனோ" கம்ப. மாராமர. 120.
210. கதிர்வினை நுனித்த - சூரியன் செயலைக் கூர்த்து அறிந்த; சூரிய சித்தாந்த நூலை உணர்ந்த.
211. எதிர்வினை-எதிர்காலத்துக் காரியம். 213. என்னின்-எதனால்.
216. நல்வினை செல்க என. 217. பற்றாது - உன்னைப் பற்றாமல்.
221. ஒல்வன் - பொருந்துவேன். ஆத்திரை - யாத்திரை.
222. வம்பலர் - புதியவர்.

பி - ம். 1 அங்காங்கொள்வன்.

வயிரச் சாத்தொடு வடதிசைப் போகி
அயிரிடு நெடுவழி யரசிடை யிருந்துழிப்
பூதியு மண்ணும் பொத்தகக் கட்டும்
மானுரி [1] மடியு மந்திரக் கலப்பையும்
காலெடு மணையுங் கட்டுறுத் தியாத்த
கூறை வெள்ளுறிக் குண்டிகைக் காவினர்
தரும தருக்கர் தற்புறஞ் சூழப்
பரிபு மெலிந்த படிவப் பண்டிதன்
சாங்கிய நுனித்தவோர் சாறயர் முனிவனை
ஆங்கெதிர்ப் பட்டாங் கவனொடும் போகி
அத்தவப் பட்டாங் கறுவகைச் சமயமும்
கட்டுரை நுனித்த காட்சியே னாகி
இமயப் பொருப்பகத் திராண் டுறைந்தபின்
குமரித் தீர்த்த மரீஇய வேட்கையின்

---

223. வயிரச் சாத்து - வயிர வியாபாரஞ்செய்யும் வணிகர்திரள்.

224. அயிர் - நுண்மணல். அரசிடை - அரசமரத்தின் நிழலில்.

225. பூதி - விபூதி. பூதியும் மண்ணும் நெற்றி முதலியவற்றில் அணியப்படுவன. பொத்தகக் கட்டு - புத்தகங்களின் தொகுதி; பொத்தகம் : நேமி. சூ. 7. உரை, மேற்.

226. மானுரி மடி - மான்றோலாகிய ஆடை. கலப்பை - நியமஞ் செய்தல் முதலியவற்றிற்குரிய கலங்களை வைத்திருக்கும் பை; "காய கலப்பையிர்" மலைபடு. 13.

227. காலையுடைய நீண்ட ஆதனப் பலகை.

228. கூறை - ஆடை. குண்டிகை - கமண்டலம். காவினர் - தோட்சுமையை யுடையவர்.

227 - 8. "நூலே கரக முக்கோன் மணையே, ஆயுங் காலை யந்தணர்க் குரிய" தொல். மரபு. சூ. 70.

230. பரிபு - வருந்தி. படிவம் - விரதம்; "தண்டொடு பிடித்த தாழ்கமண் டலத்துப், படிவ வுண்டிப் பார்ப்பன மகனே" குறுந். கஙசு.

231. சாங்கியம் நுனித்த - சாங்கிய நூலைக் கூர்த்தறிந்த. சாறு - விழா. 233. அத்தவப்பட்டு - யான் அந்தத் தவவழியிற் பொருந்தி.

234. கட்டுரை நுனித்த - அம்முனிவன் கூறிய கட்டுரையால் கூர்த்து உணர்ந்த.

236. கன்னியாகுமரித் தீர்த்தத்தில் நீராட வேண்டுமென்னும் விருப்பத்தால்.

பி - ம். 1 முடியும்.

அருந்தவ நுனித்த [1] வறவா சிரியன்
[2] தருமவாத் திரையெனத் தக்கணம் போந்துழி
மாவுஞ் சேனை மதிற்புறங் கவைஇய
காள வனத்தோர் கபாலப் பள்ளியுட்
செலவயா வுயிர்த்த காலை நூற்றுறை
யாற்றுளிக் கிளந்த வறுவகைச் சமயமும்
ஏற்றல் காணுமெம் மிறைவன் ருனென
மாற்றக் கோட்டீ மணிமுர சறைதலிற்
கற்ருேர் மொய்த்த முற்றவை நடுவண்
தாழாப் பெரும்புகழ்க் காளக் கடவுண்முன்
பாலக னென்னும் பண்ணவர் படிவத்துக்
[3] காள சமணன் காட்சி நிறுப்ப
ஐம்பெருஞ் சமயமு மறந்தோற் றனவென

---

237. அறவாசிரியன் - தருமங்களைப் போதிக்கும் ஆசிரியன்; இப் பெயர் அறவணவடிகளென்பது போல்வது.

238. ஆத்திரை - யாத்திரை. தக்கணம் - தெற்கு; சிலப். கச : 81.

240. காளவனம் : உச்சைனிமாகாளமென்று நூல்களிற் கூறப்படும் சிவதலத்தைச் சார்ந்த இடமோவென்று இது கருதப்படுகின்றது. பள்ளி - முனிவராச்சிரமம்.

239 - 41. உச்சைனியின் மதிலைச் சூழ்ந்த காளவனத்தில் கபாலப் பள்ளியில் இளைப்பாறியபொழுது. 242. ஆற்றுளி - விதிப்படி.

244. மாற்றக்கோட்டீ - தருக்கச் செய்தியைப்பற்றிய முழக்கு; மாற்றம் - தருக்கம்; கோட்டீ - முழக்கம்.

242 - 4. அறுவகைச் சமயப் புலவர்கள் தம்முள் எதிர்த்து வாதஞ் செய்தலை எம்மிறைவன் (பிரச்சோதனன்) காணவிரும்பினுனென்று சொல்லி வள்ளுவன் முரசறைதலால்.

245. முற்றவை - அறிவால் முதிர்ந்தோர் கூடிய சபை (பெருங். க. 34 : 33.) 246. காளக் கடவுள் - காள முனிவன்.

248. காட்சி - சமயக் கொள்கையை. நிறுப்ப - சித்தாந்தம் செய்ய.

247 - 8. பாலகனென்னும் பெயரையுடைய காளசமணன்.

249. ஐம்பெருஞ் சமயமும் - சைன சமயமொழிந்த ஐந்தையும்; "ஐவகைச் சமயமும்" (மணி. உஎ : 289) என்றதற்குப் பௌத்த சமய மொழிந்த ஐந்து சமயமென்று அங்கே கொள்ள வேண்டுவதுபோலக் கொள்க.

பி - ம். 1 அறவாசிரியத். 2 தருமயாத்திரை. 3 கானசமணன்.

[1] வேந்தவ ணுதலிய வேதா சிரியரும்
[2] தாந்தம் மருங்கிற் ருழங் காட்டிச்
சாங்கிய சமயந் தாங்கிய பின்னர்
நல்வினை நுனித்தோ னம்மொடு வாழ்கெனப்
பல்வேல் வேந்தன் பரிவுசெய் தொழுகலின்
எழுந்த [3]வாத்திரை யொழிந்தீண் டுறைவுழிக்
கையது வீழினுங் கணவ னல்லது
தெய்வ மறியாத் தேர்ந்துணர் காட்சிப்
படிவக் [4] கற்பிற் பலகோ மகளிருட்
டொடியோ டம்மனை தோழி யெனத்தன்
குடிவழி யாகக் கொண்ட கொள்கையின்
இத்தவ முவக்கும் பத்தினி யாதலிற்
றவஞ்சார் வாகத் தலைப்பெயல் விரும்பி
அறஞ்சார் வாக வன்புசெய் தருளி
இறைமக னறிய வின்றுணை யாகிப்
பிறைநுதன் மாதர் பிறந்த யாண்டினுள்
நாவொடு நவிலா நகைபடு மழலையள்
தாய்கைப் பிரிந்துதன் றமர்வயி னீங்கி
என்கைக் கிவரு மன்பின ளாதலிற்
றாயென் றறிந்தன [5] ணீயினி வளர்க்கெனக்
காதல் வலையாக் கைத்தரக் கொண்டவள்

---

250. நுதலிய - கருதிய; நன்கு மதித்த.
251. தாழம் - தாழ்தல்; இங்கே தோல்வி.
253. நல்வினை நுனித்தோன் : பாலகனென்னும் முனிவன்.
255. உறைவுழி - இந்நகரில் யான் தங்கும்பொழுது.
256. கையது வீழினுமென்றது உறங்கும்பொழுதினுமென்றபடி.
256 - 8. "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்" (குறள், 55.) 259. தொடியோள் தம்மனை - வாசவதத்தையின் தாய்.
261. இத்தவமென்றது தன் தவநிலையை.
265. மாதர் - வாசவதத்தை.
266. "நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்" அகநா. ௧௬ : 4.
268. வாசவதத்தை என்கைமீது ஏறியிருக்கும் அன்புடையளாக இருந்தமையின். 269. என - என்று நற்றாய் சொல்லி.

பி - ம். [1] வேந்தவனுதலிய. [2] தாந்தவமருகிற்றருழங்காட்டி. [3] யாத்திரை. [4] காவிற். [5] நீயிவளர்க்கென.

பால்வகை யறிந்தபின் படர்வேன் றவமென
மைத்துன மங்கை மரூஉமா கண்டு
நட்புவலை யாக நங்கையொ டுறைவேன்
ஒன்பதிற் றியாட்டை யுதயண கேளெனத்
தன்வயிற் பட்ட தவ்வயிற் கிளரி
அகம்புரி செம்மை யன்பிற் காட்டி
மனமுணக் கிளந்த மந்திரக் கோட்டியுட்
புள்ளு மாவு முள்ளுறுத் தியன்ற
ஆண்பெயர்க் கிளவி நாண்மகிழ் [1] கடவ
வழுக்கிக் கூறினும் வடுவென நாணி
ஒழுக்க நுனித்த வூராண் மகளிர்
தாநயந் தரற்றினுந் தக்குழி யல்லது
[2] காமுறற் கொவ்வாக் கயக்கமி லாளநீ

---

271. பால்வகை யறிந்தபின் - நல்லூழின் திறத்தையறிந்தபின்பு. என - என்று எண்ணி.

272. மைத்துன மங்கை - நீ மணஞ் செய்துகொள்ளுதற்குரியவளாகிய வாசவதத்தை; "மைத்துனன் வனப்பின் மிக்கான்" (சீவக. 1048) என்பதனுரையைப் பார்க்க.

273 - 4. ஒன்பது வருடங்களாக நங்கையொடுறைவேன்; "பதினோராண்டினுட் பாற்படக் கிளந்த" (பெருங். க. 42 : 151) என்பது இங்கே அறியற்பாலது.

275. தன்வயிற்பட்டது - தனது பண்டைவரலாற்றை. கிளரி - மிகுத்துச்சொல்லி.

277. மனம் உண - மனம்பொருந்தும்படி. மந்திரக்கோட்டியுள் - ஆலோசனை செய்துகொண்டிருந்த இடத்தில்.

279. நாண்மகிழ் - காலையில் உண்ணும் காமபானம். கடவ - செலுத்த.

278 - 80. சேவல், களிறுபோல்வனவாகிய கிளவிகளை வழுக்கிக் கூறினும் வடு; சீவக. 906 - 7, பார்க்க.

281. ஊராண்மை - ஒப்புரவு; "ஊரா ணியல்பினான்" (நாலடி. 384); 'ஊராண்மை: இது சுற்றமோம்பல்' என்பர் (தொல். கற்பு. சூ. 12, ந.) 282. நயந்து - உன்னை விரும்பி. தக்குழி - தக்க இடம்.

283. கயக்கம்-கலக்கம்; "கயக்கறத் தேர்ந்தபின்" (அறநெறி. 33.) ஒவ்வா நீ யென்க.

பி - ம். 1 தடவ. 2 காமுகற்.

ஒட்டாக் கணிகையைப் பெட்டனை யென்பது
புலவோர் தெரியிற் பொருத்தமின் றாகி
அலவலை நீர்த்தா லத்தைநின் னலரென

(உதயணன் செயல்)

மற்றவள் வினவவும் பற்றிய தவிழான்
பண்டறி வுண்டெனப் பகைநிலத் துறைந்த
பெண்டிரைத் தெளிந்து பெருமறை யுரைத்தல்
நுண்டுறை யாளர் நூலொழுக் கன்றெனத்
தேறாத் தெளிவொடு கூறா தடக்கி
மாயமென் றஞ்சின் மற்றிது முடிக்கும்
[1] வாயி லில்லென வலித்தனன் றுணிந்து
தாய்முத லிருந்துதன் னோய்முத லுரைப்ப

(சாங்கியத்தாய் கூற்று)

ஒள்ளிழை கணவனு முரிமையுட் டெளிந்த
கொள்கை யறிந்தியான் கூறவும் [2] வேண்டா
அருமறை யன்மையி னன்பிற் காட்டி
ஒருவயி னொண்டொடிக் குற்றது கேளென

---

284. ஒட்டாக் கணிகையை - மனம் பொருந்தாத நருமதை யென்னும் பரத்தையை.

286. அலவலை நீர்த்து - அலமருந் தன்மையை யுடையது (கலி. ௧௨௨; பழ. ௩௨௬; மணி. ௧௭: 51.) அத்தை: அசை.

287. பற்றியது அவிழான் - தான் உட்கொண்டதை வெளியிடானாகி. 289. மறை - இரகசியம்.

289 - 90. உரைத்தல் நூலொழுக்கன்று.

291. தேறாத் தெளிவொடு - ஒருவாறு தெளிந்தும் ஒருவாறு தெளியாதும் உள்ள நிலையோடு. 293. வாயில் - தூது.

294. தாய் முதல் - சாங்கியத்தாயின் முன்னே. நோய்முதல் - நோய்க்குக் காரணத்தை; குறள், 948.

295. கணவன் - பிரச்சோதனன். உரிமையுள் - அந்தப்புரத் தேவியர்களின் இடையே. 297. அன்மையின் - அல்லாமையின்.

298. ஒண்டொடிக்கு - வாசவதத்தைக்கு.

பி - ம். 1 வாயிலரில்லென். 2 வேண்டான்.

ஏதின் மன்னர் தூதுவ மாக்கள்
வந்தது வடுவெனத் தந்தையொ டூடி
அறத்தா றன்றியு மாகுவ தாயின்
துறத்தல் வேண்டுந் தூய்மை யோற்கெனத்
துணிவுள் ளுறுத்த முனிவின ளாகி
நன்மணி யைம்பா னருமதைக் கரற்றிய
மன்ன குமரன் மனம்பிறி தாயினும்
எந்தையும் யாயு மின்னகை யாயத்துப்
பைந்தொடிச் சுற்றமும் பலபா ராட்ட
மாசில் வீணை மடமொழிக் கீந்தோன்
ஆசா னென்னுஞ் சொற்பிறி தாமோ
அண்ணற் குமரற் கடிச்செருப் பாகெனத்
தன்மனங் [1] கொண்டவ் டாவ முற்றிச்
சாவினை துணியு மாத்திரை யாவதும்
மறுவொடு மிடைந்து மாண்பில வாகிய
[2] சிறுசொற் கிளவி கேளல செவியென

299 - 300. அயலரசர்களின் தூதுவர்கள் தன்னை மணஞ் செய்வித்தற்கு வந்தது குற்றமென்று.

301. அறத்தாறு: உள்ளப் புணர்ச்சியால் கணவனாகக் கொண்ட உதயணனையே மணத்தல்; 'அறத்தொடு நிற்றல்' என்னும் அகப்பொருட் கிளவிப் பெயரும், "பெண்டிர்க்கு அறமென்பது கற்பு; கற்பின் றலைநிற்றல்" என்ற இறையனாரகப் பொருளுரைப் பகுதியும் இங்கே பயன்படுவன.

302. உதயணன் பொருட்டு உயிரை நீத்தல் வேண்டும்.

304. நன்மணி - நீலமணி. நருமதைக்கு அரற்றியது, "தன்னொடு படாளைத் தானயந் தரற்றி" (பெருங். க. 35 : 168) என்பதனாலும் விளங்கும்.

308. ஈந்தோன் - உதயணன். 309 = பெருங். க. 48 : 106.

310. ஆகு - ஆவேன்; இவ்வடியின் கருத்து, "அணிமதக் களிறனுக் கடிச்செருப் பாவ தல்லால்" (சீவக. 1049, பி - ம்.) என்பதிலுமுள்ளது. 311. தாவம் - வெப்பம்.

312. சாவினை - இறத்தற்றொழில். யாவதும் - சிறிதும்.

314. சிறுசொற் கிளவியென்றது நொதுமலர் மணத்தலைக் குறித்த செய்தியை.

பி - ம். [1] கொண்டவடிவும், [2] சிறுகொற்.

அங்கையிற் புதைஇ யணிநிற மழுகிய
நங்கையைத் தழீஇ நன்னுத னீவி
மனங்கொள் காரண மருளக் காட்டி
இனமி லொருசிறை யின்னினி தாகப்
பூமலி சேக்கையுட் புகுத்தினென் போந்தேன்
பாயலு ளாயினும் பரிவவ டீர்கென
இஃதவ ணிலைமை யின்னினிக் கொண்டு
பரிவுமெய்ந் நீங்கிப் பசலையுந் தீர்கென
ஒண்ணுதன் மாதர் கண்ணிணைப் பெற்ற
புண்ணுறு நெஞ்சிற் புலம்புகை யகல
மாதர் நுதலிய மருந்தியற் கிளவி
ஆருமி லொருசிறை யன்புறப் பயிற்றி
நிலைமைக் கொத்த நீதியை யாகித்
தலைமைக் கொத்த வதுவை யெண்ணென
இழுக்க மில்லா வியல்பொடு புணர்ந்த
ஒழுக்க மெல்லா மோம்படுத் துரைஇப்
பூட்டுறு பகழி வாங்கிய வேட்டுவன்
வில்விசை கேட்ட வெரூஉப்பிணை போலக்
காவ லாட்டியர் நாமிசை யெடுத்த
சொல்லிசை வெரீஇய [1] மெல்லென் பாவை
என்முகத் தேயு மிறைஞ்சிய தலையள்
நின்முகத் தாயி னிகழ்ந்ததை நாணி
நிலம்புகு வன்ன புலம்பின ளாகிச்

315. புதைஇ - புதைத்து. மழுகிய - மழுங்கிய ; " மழுகுசுடர் மண்டிலம் " (அகநா. ௩௬௩.) 316. நன்னுதனீவி : 85.

318. இன்னினிதாக - மிகவும் இனிதாக.

319 - 20. தீர்கெனப் புகுத்தினென் போந்தேனென இயைக்க.

321. இன்னினி - இப்பொழுதே ; " இன்னினியே செய்க வறவினை " (நாலடி. 29.) 322. என - என்று சாங்கியத்தாய் கூறி.

325. மாதர் - வாசவதத்தை. 324-6. அகலும்படி பயிற்றி.

327. நீதியை ஆகி - நீதியை உடையாயாய்.

328. வதுவை - கலியாணம். 330. உரைஇ - உரைத்து.

333. காவலாட்டியர் - காவல் செய்யும் மகளிர்.

334. வெரீஇய - அஞ்சிய. பாவை - வாசவதத்தை.

பி - ம். 1 வெல்லென்பாவை.

சிறுமையி னுணர்ந்த பெருமக னிரங்க
மண்கெழு மடந்தாய் மறைவிடந் தாவென
ஒன்றுபுரி கற்பொ டுலகுவிளக் குறீஇப்
பொன்ற லாற்றிய புகழாள் போல
கொண்ட கொள்கையி னொண்டொடி யோளும்
துளிப்பெயன் மொக்குளி னொளித்த லஞ்சுவென்
இன்றைக் கேள்வி யிடையிடு மெனினும்
[1] சென்றயா நங்கையைச் செவ்வி நோக்கி
இன்றுணை மகளிரொ டொன்றியான் விடுத்தரும்
சொல்லொடு படுத்துச் செல்கவென் களிறெனச்

(சாங்கியத்தாய் உதயணனை நீங்கிக் காஞ்சனமாலையிடம் கூறல்)

அவன்வயி னீங்கி யாயங் கூஉய்
மகள்வயிற் புக்கு மம்மர்நோய் நீக்கி
நல்லோள் கற்கு நாழிகை யிறந்தன
வல்லோன் செல்கதன் வளநக ரத்தெனக்
காஞ்சன மாலாய் காவலற் குரையென

---

338. சிறுமையின் - சிறுமையைப் போல. பெருமகன் - இராமன்.

340. விளக்குறீஇ - விளங்கச் செய்து.

341. பொன்றல் - இறத்தல். புகழாள் - சீதை.

342. கொள்கை - விரதம். ஒண்டொடியோள் - வாசவதத்தை.

343. மொக்குளின் - நீர்க்கொப்புளம் போல. ஒளித்தல் - இறந்து போதற்கு. 344. இடையிடுமெனினும் - இடையில் நீங்குமாயினும்.

345. அயா - வருத்தத்தையுடைய.

346. மகளிரொடு - மகளிரிடமாக. ஒன்றி - பொருந்தி. விடுத்தரும் - சொல்லியனுப்பும்.

347. சொல்லொடு படுத்து - சொல்லுக்கு உடம்பட்டு; சொல்லென்றது, 351-2-ஆம் அடிகளிலுள்ளவற்றை. என்களிறு செல்க - என் ஐய செல்வாயாக; "போர்யானை வந்தீக வீங்கு" (கலி. அசு); "வருக வென் களிறென் றேத்தி வாங்குபு தழுவிக் கொண்டாள்" சீவக.1911.

350. இறந்தன - கழிந்தன.

351. தன் வளநகரத்திற்கு வல்லோன் (உதயணன்) செல்க வென்று; நகரம் - அரண்மனை. [சொல்ல.

352. காஞ்சனமாலை - வாசவதத்தையின் தோழி. என - என்று

பி - ம். 1 சென்றியான்.

மணிப்படு மாடத்து வாயில் போந்தவன்
பணித்த மாற்ற மணித்தகைக் குரைப்ப

(உதயணன் செயல்)

ஆர மார்பனும் போவன னெழுந்து
கற்றில ளென்னுங் கவற்சி வேண்டா
பற்றிய கேள்வியு முற்றிழை முற்றினள்
குஞ்சர வேற்றுங் கொடித்தேர் வீதியும்
பொங்குமயிர்ப் புரவியும் போர்ப்படைப் புணர்ப்பும்
நீதியும் பிறவு மோதிய வெல்லாம்
நம்பி குமரருந் தந்துறை முற்றினர்
வல்லவை யெல்லாம் வில்லோன் மக்களை
நல்லவைப் படுப்பது நாளை யாதலின்
என்னறி யளவையி னொண்ணுதல் கொண்ட
தைவரற் கியைந்த தான்பயில் வீணையைக்
கையினுஞ் செவியினுஞ் செவ்விதிற் போற்றி
ஆராய் கென்பது நேரிழைக் குரையென
விசும்பா டூசல் வெள்வளைக் கியற்றிய
பசும்பொ னாகத்துப் பக்கம் பரந்த
நறும்புகை முற்றத்து நம்பி நடக்கெனக்
குறும்புழை போயினன் கோலவர் தொழுவென்.

௩௬.—சாங்கியத்தாயுரை முற்றிற்று.

---

354. அணித்தகை : உதயணன்.

358. குஞ்சர ஏற்று - யானையேற்றம். தேர்வீதி - தேரின்செலவு; "வினைதகு வட்டமும் வீதியும் பத்தியும்" சீவக. 1839.

359. படைப்புணர்ப்பு - அணிவகுப்பு.

361. குமரர் - இராசகுமாரர். 362. வில்லோன் - பிரச்சோதனன்.

363. நல்லவைப்படுப்பது - அரங்கேற்றுந் தினம்.

364. என் அறிஅளவையின் - யான் அறிந்த அளவினால்; (பொருந. 128.) 365. தைவரற்கு - தடவுதற்கு.

367. ஆராய்க - ஆராய்ந்திடுக. என - என்று உதயணன் சொல்ல.

369. நாகம் - ஒருவகை மரம்; சுரபுன்னையுமாம்.

370. முற்றத்து - முற்றத்துவழியே; என - என்று காஞ்சனமாலை சொல்ல. 371. குறும்புழை - சிறிய வாயில்; "குடபாற் சிறுபுழை போகி" (மணி. ௬: 22.) கோலவர் - கோலையுடைய வீரர்.

## ௩௭.—விழாக்கொண்டது.

(அரச குமரருடைய படையரங்கேற்றம்)

கோலவர் கைதொழக் கோயில் போகி
வேல்கெழு முற்றமொடு வீதியி னீங்கிக்
குஞ்சரச் சேரித் தன்னக ரெய்தி
அன்றை வைகல் சென்ற பின்னர்
முரசுகடிப் பிகுத்த மூரி முற்றத்
தரசிறை கொண்ட வகன்கண் வாரியுட்
கையார் கடகத்துக் கதிர்வாட் கச்சையர்
ஐயா யிரவ ரரச குமரரொடு
பொன்றலை யாத்த பொதியிற் பிரம்பின்
வண்ணச் செங்கோல் வலவயிற் பிடித்த

௩௭.—விழாக்கொண்டது.

[பிரச்சோதனன் தன் மக்கள் உதயணன்பாற் கல்வி பயின்று வல்லவர்களாயிருத்தலைத் தெரிந்து அரங்கேற்றுவித்து அவனுக்குச் சிறப்புச் செய்து மறுநாட் கோசம்பி நகருக்கு அவனை அனுப்ப எண்ணியிருக்கையில், யூகியின் சூழ்ச்சியால் தெய்வமேறியவள் போல நடித்த பாகீரதியென்பவள் அச்சுறுத்திக்கூறிய கூற்றுக்களைக் கேள்வியுற்று நீர்விழாச் செய்யத் தொடங்கியது முதலியன இதனால் அறியலாகும்.]

2. வேல்கெழு முற்றம்: பெருங். ௧. 34 : 39, 35 : 66, 37 : 98.

3. உதயணன் குஞ்சரச் சேரியிலுள்ள தன் மாளிகையையடைந்து; பெருங். ௧. 32 : 88-ஆம் அடி முதலியவற்றைப் பார்க்க.

5. இகுத்த - அறைந்த; "முரசுகடிப் பிகுப்பவும்" (புறநா. ௧௫௮); "கடிப்பிகு கண்முரசம்" நாலடி. 100.

6. வாரியுள் - வாயிற் பக்கமாகிய செண்டு வெளியின்கண்; சீவக. 275, 277.

7-8. பரிசையையும், வாளைக் கோத்துவாங்கிப் பிணித்த கச்சையையும் உடைய அரசகுமரர்; "சுரிகையம்பூங் கச்சிடைக் கோத்து வாங்கி.........வீக்கி" (சீவக. 698); கடகம் - தோள்வளையுமாம்.

9. பொதியில் - பொதிய மலை.

10. செங்கோல் - சிவப்பாகிய கோல்; "ஊட்டரக் குண்டகோல்" சூளா. சீய. 78.

9-10. "தென்மலைப் பிறந்த பொன்மருள் சூரற், கருங்கண் டோறும் பசும்பொன் னேற்றித், தொடித்தலைப் படுகோல் பிடித்த கையர்";

எண்ணூற் றறுவ ரிளங்கிடை காப்பொடு
புறஞ்சுற் றமைத்த பிறங்குகடைப் படுகால்
நித்திலந் தொடரிய நிகரில்கம் மத்துச்
சித்திரம் பயின்ற செம்பொன் விதானத்துச்
சந்தனப் பீடிகைச் சார்வணை யேறிப்
பன்மயிர்க் கவரியொடு பரிசனஞ் சுற்றப்
பெருமக னிருந்த [1]திருமலி யவையத்துக்
கொற்ற வேந்தன் குடிகெழு குமரரைக்
கற்றவை காட்டும் வத்தவர் கோவெனப்
பல்பெருங் கேள்வி படைத்தோ ரன்ன
கல்வி மாந்தர் கலித்த கௌவையில்
ஆப்புறு பாடமொ டருத்தங் கூறி
நாக்கொள் கேள்வி நவிற்றிக் காட்டி
[2] மண்டல மருங்கிற் கொண்டகம் புகுந்து
படைகெழு தெய்வம் புகலப் பலிவகுத்

(படைப்பயிற்சியின் வகை)

[3] திடைநாட் பிறையி னேற்றிய திருவிற்
கண்ணு றுறுத்துக் கடவதிற் றூங்கி
எண்ணு லரணமு மீரெண் கரணமும்

"பொதியிற் சோலையுட் கதிரெனக் கவினிய, கருங்கட் சூரற் செங்கோல் பிடித்த" பெருங். க. 40 : 375-7; ௩. 5 : 98-9.

11. கிடை - கல்விச்சாலை; இங்கே ஆயுதம் பயிலுமிடம்.

12. படுகால் - படி; பெருங். உ. 5 : 41.

13. தொடரிய - தொடர்ந்து கோத்த. கம்மம் - தொழில்.

15. சார்வு அணை - சார்ந்திருத்தற்குரிய அணை; "சார்வுந் திண்ணையுங் குயிற்றி" (சீவக. 108.) 17. பெருமகன் - பிரச்சோதனன்.

19. உதயணன் காட்டுவானென்று. 20. ஓரன்ன - ஒருநிகர்த்த.

22. ஆப்புறுபாடம் - தளையையுடைய மூலபாடம்; ஆப்பு - யாப்பு; "அங்காத் திருந்தானை" சீவக. 1882.

25. புகல - விரும்ப.

26. இடைநாட்பிறை - அஷ்டமிசந்திரன்; நாணேற்றிய வில்லிற்குப் பிறை உவமை: "பிறைபோற் குலாய செய்பூண்சிலை" சீவக. 2198.

27. கண்ணுறுத்து - பார்த்து.

பி - ம். 1 திருமதி. 2 மண்டில. 3 இடைநாட்.

துன்னரும் பாசமொடு தொடங்குபு தோன்றி
அரிதியல் சாரியை யந்தரத் தியக்கமும்
பொருவின் ஞாழிகை பூணு மாறும்
செருவா ளாட்டுஞ் சேடகப் பிண்டியும்
சாரியை விலக்கும் வேறிரி வகையும்
இடுக்கட் போதி [1] னேமப் பூமியுள்
வகுத்த வாயில் வகைவகை யிவையென
ஒட்டும் பாய்த்துளுங் காந்தொருங் கிருக்கையும்
செருக்கொள் யானை மருப்பிடைத் திரிவும்
தாழாச் சிறப்பிற் பாழியிற் பயின்ற
காலாட் கரும விகற்பமுங் காட்டிக்
கருவித் தாக்கினுங் காலாட் சுற்றினும்
தனியி னாயினுந் தானையொ டாயினும்
புகவும் போக்கும் பொச்சாப் பின்றிப்
பகைவெல் சித்திரம் பலதிறம் பயிற்றி

**(குதிரையேற்றம் முதலியன)**

வண்பரிப் புரவியும் வானெடுந் தேரும்
அண்ணல் யானையும் பண்ணுறுத் தேறி

---

29. பாசம் - ஒருவகைப் போர்க்கருவி; "தளையிடு பாசமும்" பெருங். க. 46: 59.

30. அந்தரத்துச் சாரியை இயக்கம் - வேறுவேறான கதியிற் சேறல்; "சாரியை வயத்த ரானார்" சீவக. 1680.

31. வில்லும் நாழிகையும்; நாழிகை - அம்பறாத் தூணி.

32. சேடகப் பிண்டி - கேடகம் பிடித்தல்.

33. சாரியை விலக்கு - பகைவருடைய கதியை விலக்குதல். திரித்தல் - சுழற்றுதல். 34. ஏமப் பூமி - பாதுகாப்புக்கு உரிய இடம்.

36. பாய்த்துள் - பாய்தல். ஒருங்கு காந்து இருக்கை - கருவியாலே தங்களை ஒருங்குமறைத்துச் சேமஞ்செய்துகொண்டிருத்தல்; சீவக. 1676.

37. மருப்பிடைத்திரிவு - கொம்பினிடையே தம் உடம்பைப் பிறழச்செய்தல் (சீவக. 1677.) 38. பாழி - போர்க்களம். [மறதி.

42. புகவு - தனியே பகைவர் சேனையிற் புகுதல். பொச்சாப்பு - 41-2. சீவக. 1679.

43. சித்திரம் - இரகசியங்களை. 44. பரி - நடை.

பி-ம். [1] ஏமப்.

இலைய வினப்பரி கொளீஇச் சிலையின்
மதியோர் புகழ்ந்த மரபியல் வழாமை
நுதியமை நுண்படை நூல்வழிச் சிதறி
மழைத்துளி படினும் வான்றுகள் சூழினும்
விலக்கித் தவிர்க்கும் விற்றொழி லுள்ளிட்
டிலக்கத் திண்படை [1] யேறுபல காட்டலும்
தலைத்தேர் யானைக்குந் தருக்கின ராயினர்
படைத்தே ராள பாலக ரிவரென
அவைபுகழ்ந் தெடுத்த வரும்பெறற் கிளவியொடு
தகைமுடி வேந்தன் றாள்புகழ்ந் தேத்தித்

(பிரச்சோதனன் கூற்று)

தகைசால் சிறப்பிற் றன்னொடு நம்மிடைப்
பகைமுத லாகப் பழிதர வந்த
செற்ற நம்வயிற் கொள்ளான் சிறந்த
சுற்ற மாகச் சூழ்ச்சியின் விளக்கி
நன்றுணர் விச்சை நம்பியர்க் கருளி
அன்புவழிப் படுத்த வரச குமரற்குக்
கைம்மா றிதுவெனக் [2] கடவதி னிறையும்

---

46. இலையம் - லயம்; தாளம்; "பாணி நடைப்புரவி" பு. வெ. 112.

47. மதியோர் புகழ்ந்த : பெருங். ௧. 38 : 293.

46 - 7. சிலையின் மதியோர் - வில்வித்தையிற் கூரிய அறிவுடையோர்.

48. நூல்வழிச் சிதறி - பிளவுபடும்படி நூலினிடத்தே சிதறி; "இழைபக விமைப்பி னெய்திட்டு" சீவக. 1680.

49 - 50. "மழையொடு சூழ்ந்துகொண்டு வான்றுகள் சிலையினீக்கி" (சீவக. 1680) என்பதனாலும் அதனுரையாலும் இவ்வடிகளின் கருத்தையுணர்க. 51. இலக்கம் - லட்சியம்; குறி. படையேறு - ஆயுதவடு.

55. வேந்தன்: எழுவாய். தாள் - உதயணன் முயற்சியை.

58. செற்றம் - நெடுங்காலம் நிகழும் பகை; முருகு. 132.

61. அரசகுமரற்கு - உதயணனுக்கு.

62. கடவதின் - செய்தற்குரிய காரியத்தில். இறையும் - சிறிதும்.

57 - 62. இங்கே சொல்லப்படும் உதயணனது நடுவுநிலை, தம்மைக் கொல்லப் பிறந்த திட்டத்துய்ம்மன் முதலியவர்களுக்கும் படைக்கலப் பயிற்சி செய்வித்த துரோணரது இயல்பை நினைக்கச்செய்கின்றது.

பி - ம். 1 வேறுபல. 2 கடவது நிறையுஞ் செம்மாறொற்றுச்.

செம்மா ணாற்றுச் சிறுமைய மாதலின்
ஒன்பதின் கோடி யொண்பொருள் கொடுப்பினும்
பண்பெனக் 1கொண்டிவன் பண்டஞ் செய்யான்
நங்குடித் தலைமை யிங்கிவற் கியற்றி
நாமிவன் குடைக்கீழ்க் காமுறக் கலந்திவன்
வேண்டியது செய்யு மாண்பல திலமென
மண்முத லிழந்தோற்கு மறுமன மழித்துத்
தன்பதிப் புகுந்து தான்மணம் படுகெனக்
குறையுறு கிளவி முறைபல பயிற்றிச்
செயப்படு கருமஞ் செய்நரொ டுசாஅய்
முயற்சி யுள்ளமொடு முந்தவற் போக்கி

**(பிரச்சோதனன் அந்தப்புரஞ் சென்று கூறல்)**

அவைக்கள மெழுந்து 2 குவைக்களம் புக்குக்
குலமகள் பயந்த குடிகெழு குமரர்
நிலமக ணயக்கு நீதிய ராகி
வெறுமை நீங்கினர் விச்சையி னமைந்தெனத்
திருநுத லாயத்துத் தேவியர் நடுவட்
பெற்ற நாளினும் பெரும்பூட் புதல்வரைக்
கற்ற நாள்வயிற் கலிசிறந் துரைஇ

---

65. பண்டஞ்செய்யான் - பொருள்படுத்தான்.

68. அலது இலம் - அன்றி வேறு கைம்மாறு இலம்.

69. மண்முதலிழந்தோற்கு: உதயணனுக்கு. மறுமனம் - வேறு கருத்து. 70. மணம்படுக - மணஞ்செய்து கொள்ளுக.

71. குறையுறுகிளவி: பணிவைப் புலப்படுத்தும் மொழி யென்பது கருத்து. 72. செய்நர் - செய்பவர். உசாஅய் - வினவி.

73. அவன் - உதயணனை.

74. குவைக்களம் - மகளிர் கூட்டத்தையுடைய இடம்.

75. குலமகள் - பெருந்தேவி.

77. வெறுமை - அறியாமை; "வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால்" கம்ப. நாட்டுப். 53.

79. 'பெற்ற நாளினும்' என்றமையின் பெற்ற நாளிலும் மகிழ்ச்சி யுண்மை பெறப்படும்; "கணவ ருவப்பப் புதல்வர்ப் பயந்து" மதுரை. 600.

பி - ம். 1 கொண்டவன். 2 நவைக், கவைக்.

மகிழ்ச்சிக் கிளவி மழையென விசைப்ப
முகிழ்த்தகை முறுவன் முனிவின்று பயிற்றிக்

(உதயணன் சொல்லியனுப்பல்)

[1] கடவர் வருத்த கரும நாளாற்
கடவதை யாதலின் மடவர லாய்த்து
நங்கை கேள்வியு நல்லவைப் படுக்கென
வந்துரைத் தனரால் வத்தவன் றமரென

(அரசன் வாசவதத்தையின் யாழரங்கேற்றத்திற்கு ஆவன செய்தல்)

வெந்திறல் வேந்தனு நன்றென வருளி
வாயிற் கூத்துஞ் சேரிப் பாடலும்
கோயி னாடகக் குழுக்களும் வருகென
யாழுங் குழலு மரிச்சிறு பறையும்
தாழ முழவுந் தண்ணுமைக் கருவியும்
இசைச்சுவை தரீஇ யெழுபவு மெறிபவும்

79 - 81. "மற்றவன் சொன்ன வாசகங் கேட்டலு மகனைப், பெற்ற வன்றினும் பிஞ்ஞகன் பிடித்தவப் பெருவில், இற்ற வன்றினு மெறி மழு வாளவ னிழுக்கம், உற்ற வன்றினும் பெரியதோ ருவகைய னானான்" கம்ப. மந்திர. 42.

82. முகிழ்த்தகை - முல்லையரும்பின் அழகையுடைய.

83. கடவர் - உரியவர். நாளால் - நாளின்கண்.

84. கடவதை - செய்யத்தக்கது.

85. கேள்வி - வீணை; "ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வி" (சிலப். ௩ : 70.) நல்லவைப்படுக்க - நல்ல சபையிலுள்ளோர் அறியச் செய்க; "நல்லவை புகழ" (117) என்பர் பின்; "நல்லவையுட் புக்கிருந்து" (பழ. 326.)  87. நன்று : உடன்பாட்டுக்குறிப்பு.

89. கோயில் நாடகக் குழு - அரண்மனையில் நடிப்போர்கூட்டம். வருகென - வருகவென்று அரசன் கட்டளையிட.

90. அரிச்சிறுபறை - அரித்தெழுகின்ற ஓசையையுடைய சிறுபறை; அரி - தவளையொலியுமாம்; மதுரை. 262.

91. தாழமுழவு - படுத்தல் ஓசையையுடைய முழவு; "தாழம் பறை" பெருங். க. 56 : 189.

90 - 91. பெருங். க. 38 : 174 - 5.   92. தரீஇ - தந்து.

பி - ம். 1 கடவுள்.

விசைத்தெறி பாண்டிலொடு வேண்டுவ பிறவும்
கருவி யமைந்த புரிவளை யாயமொடு
பல்லவை யிருந்த நல்லா சிரியர்
அந்தர வுலகத் தமரர் கோமான்
இந்திரன் மாணக ரிறைகொண் டாங்குப்
பொருவேன் முற்றத்துப் [1] புரிவனர் புகுதரப்
பாடன் மகளிர் பல்கல னொலிப்ப
ஆடன் மகளி ராயமொடு கெழீஇ
வேல்வேந் திருந்த நூல்வேண் டவையத்துத்
துகிர்த்துலா மண்டபத் தகிற்புகை கமழக்
கண்டங் குத்திய மண்டப வெழினியுட்

---

93. பாண்டில் - கஞ்சதாளம்; மலைபடு. 4.

94. கருவி - வாத்தியத் தொகுதி.

95. பல்லவையிருந்த - பலசபைகளில் தலைவராயிருந்த. நல்லாசிரியர் - யாழாசிரியர் முதலியோர் (152); இவர்கள் பஞ்சாசாரிய ரெனப் படுவார்கள்; சிலப்.

96. அந்தரம் - சுவர்க்கம். 97. இறைகொள்ளுதல் - தங்குதல்.

98. பொருவேன் முற்றம்: க. 37 : 2, அடிக்.

101. நூற்பொருளை விரும்பிக் கேட்கும் சபை.

102. துலாம் - தூணின்மேலுள்ள போதிகையின் இருபக்கத்தின் கீழே வாழைப்பூவடிவமாகச் செய்யப்படும் உறுப்பென்பர்; "துலா மண்டபம்" (உ. 12 : 43) எனப்பின்னும்வரும்; சிலப். கடு : 213 - ஆம் அடியின் விசேடவுரையைப் பார்க்க; "வயிரநற் காண்மிசை மரக தத் துலாம், செயிரறப் போதிகை கிடத்தி" (கம்ப. நகர. 29); இது துலா வென்றும் வரும்.

103. கண்டம் - பலநிறத்தாற் கூறுபட்ட திரைச்சீலை; ஆகுபெயர்; அத்திரை குத்துக்கோலுடனே பண்ணப்பட்டதாதலின், 'கண்டங் குத்திய' என்றார்; "பட்டியல் கண்டம்" (பெருங். க. 40 : 115); "கண்டப் பூந்திரை காழ்முதற் கொளீஇ" (உ. 4 : 134); "நெடுங்காழ்க் கண்டங் கோலி" (முல்லை. 44); "நெடுங்காழ்க் கண்ட நிரல்பட நிரைத்த" (சிலப். உஎ. : 151); "பட்டியன்ற கண்டத்திரை", "காவிற் கண்டத் திரை" (சீவக. 647, 873.) மண்டபவெழினி - திரைச்சீலையாற் செய்யப்பட்ட மண்டபம்; கூடாரம்.

பி - ம். [1] புருவனர்.

(வாசவதத்தையின் யாழரங்கேற்றம்)

டாயுறை வியனகர்த் தமர்பா ராட்ட
ஆயஞ் சுற்ற வணியிழை புகுதந்
தொலிபெறு கீதத் தோதை போகிய
பலிகெழு நல்யாழ் பாங்குறத் தழீஇக்
கின்னர கீதத்துக் கேள்வி மாந்தர்
[1] முன்னுற நின்று மூதறி செவிலிநும்
மகண்மா ணுக்கி வணங்கு நும்மென
அவைப்பரி சாரங் கடத்துளிப் போக்கி
ஐவகைக் கதியு மற்ற மின்றித்
தெய்வ நல்யாழ் திருந்திழை தைவர
மெய்ப்பனிப் பதுபோன் மொய்யவை மருள
நாற்பெரும் பண்ணு மெழுவகைப் பாலையும்
மூவேழ் திறத்தொடு முற்றக் காட்டி

---

104. அந்தப்புர மகளிர். 105. அணியிழை - வாசவதத்தை.

107. பலி - பூசை. பலிகெழு நல்யாழ் : பெருங். க. 34 : 228.

108. கின்னர கீதம் - கின்னரப் பறவை கேட்டு வருதற்குரிய கீதம் (சீவக. 660) ; கின்னரசாதியாரின் கீதமுமாம் ; சீவக. 3068.

109. மூதறி செவிலி - பழைய முறைமையை அறிந்த செவிலி ; சாங்கியத்தாய் ; எழுவாய்.

110. மகளாகியமாணுக்கி ; மாணுக்கி: (பெருங். க. 44 : 120 ; ௩. 15 : 16.) நும்மை வணங்குமெனை.

111. அவைப்பரிசாரம் - சபையை வணங்கல் ; சீவக. 647, 651 - ஆம் பாடல்களின் உரைகளைப் பார்க்க.

112. கதி - லயகதி ; சச்சபுடம் முதலிய ஐவகைத்தாளம் ; வேறு கூறலுமாம். அற்றம் - சோர்வு ; 134.

113. தெய்வம் - மாதங்கி. தைவரல் - தடவல் ; அனுசுருதி யேற்றுதல் ; சிலப். எ, கட்டுரை, 5.

114. பனிப்பது - நடுங்குவது. மொய்த்தல் - நெருங்கல்.

115. நாற்பெரும்பண் - பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழியென்பன. எழுவகைப் பாலையாவன: செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலையென்பன ; சிலப். ௩ : 70-71-ஆம் அடிகளின் உரையைப் பார்க்க.

116. திறம் - பண்ணினின்று பிறப்பது ; "குறைநரம் பிற்றே

பி - ம். [1] முற்புற.

நலமிகு சிறப்பொடு நல்லவை புகழ
இயம்வெளிப் படுத்தபி னிசைவெளிப் படீஇய
எரிமலர்ச் செவ்வா யெயிறுவெளிப் படாமைத்
திருமலர்த் தாமரைத் தேன்முரன் றதுபோற்
பிறந்துழி யறியாப் பெற்றித் தாகிச்
சிறந்தியம் பின்குரற் றெளிந்தவ ணெழுவச்
சுருக்கியும் பெருக்கியும் வலித்து நெகிழ்த்தும்
குறுக்கியு நீட்டியு நிறுப்புழி நிறுத்தும்
மாத்திரை கடவா மரபிற் றாகிக்
கொண்ட தானங் கண்டத்துப் பகாமைப்
பணிவிசும் பியங்குநர் பாடோர்த்து நிற்பக்
கனிகொ ளின்னிசைக் கடவுள் வாழ்த்தித்
தேவ கீதமொடு தேசிகந் தொடர்ந்த
[1] வேத வின்னிசை விளங்கிழை பாடத்

(சபையோர் புகழ்தல்)

திருந்திழை மாதர்கொ றெய்வங் கொல்லென

பண்ணென லாகும்" என்பது திவாகரம். மூவேழ்திறம்: சிலப். ௩: 35-7, உரை. 117. நல்லவை: 85.

118. இயம் - இங்கே யாழ் (சிறுபாண். 229); இசைவெளிப் படீஇய - கண்டத்துப் பாட்டை வெளிப்படுத்துதற்கு.

119 - 20. = சீவக. 662. 122. எழுவ - எழுப்ப.

118 - 22. இவ்வடிகளின் கருத்து, "கருங்கொடி" (சீவக. 658) என்னுஞ் செய்யுளாலும் விளங்கும்.

126. தானம் - இசைவகையுள் ஒன்று; சுருதியுமாம். பகாமை - வேறுகத் தோற்றுமையால்.

127. ஆகாயத்திற் செல்லுங் கந்தருவர் முதலியோரும் இவ்வொலியை உணர்ந்துகொண்டு நின்று கேட்ப; பாடு - ஒலி.

128. கனிகொள் இன்னிசை - கனிதலைக்கொண்ட இனிய இசை. இசைக்கடவுள் - மாதங்கி.

129. தேசிகம் - இசைவகையுள் ஒன்று. தொடர்ந்த - தொடுத்த; செய்த. 130. வேத இன்னிசை - சாமகீதம்; சீவக. 2038.

131. மானிடமகளோ தெய்வமகளோவென்று. இழை - ஒருவரால் இழைத்துச் செய்யப்பட்ட ஆபரணம்; தொல். களவு. சூ. 4, உரை.

பி - ம். 1 வேகவின்னிசை.

இருந்தவர் தெருளா ரிசைபுகழ்ந் தேத்தி
நூலுஞ் செவியு நுண்ணிதி னுனித்தே
யாழும் பாடலு மற்ற மின்றி
விலக்கும் விடையும் விதியி னறிந்து
துளக்கில் கேள்வித் தூய்மையின் முற்றி
வத்தவ நாடன் வாய்மையிற் றருக்கும்
கொற்ற வீணையுங் கொடுங்குழை கொண்டனள்
இறைகெழு குமரரு மேனை விச்சைத்
துறைநெறி போகிய துணிவின ராயினர்
தேயாத் திருவ நீயுந் தேரின்
நிலங்கொடை முனியாய் கலங்கொடை கடவாய்
வேள்வியிற் றிரியாய் கேள்வியிற் பிரியாய்
1 இனையோய் தாணிழற் றங்கிய நாடே
வயிர வெல்படை வானவ ரிறைவன்
ஆயிரங் குஞ்சரத் தண்ணல் காக்கும்
மீமிசை யுலகினுந் தீதிகந் தன்றெனத்
தொல்லிசை யாளர் சொல்லெடுத் தேத்தப்

---

133. நூலறிவாகிய கல்வியாலும் செவியறிவாகிய கேள்வியாலும் மிகவும் கூர்த்தறிந்து.

135. விலக்கு - ஒருவகைப்பாட்டு; அது மூவகைப்படும்; சிலப். ந: 13-ஆம் அடியினுரையைப் பார்க்க. விடை - விடுத்தல்.

136. துளக்கு - நிலைகலங்குதல்.

137. வத்தவநாடன் - உதயணன். வாய்மையின் - கற்பித்தலால். தருக்கும் - தருக்குதற்குக் காரணமான.

139. இறைகெழு குமரரும்-தலைமை பொருந்திய இராசகுமாரரும்.

141. திருவ: விளி.

142. நிலம் கொடை - நிலத்தைக் கொடுத்தல். கலம் கொடை - ஆபரணத்தைக் கொடுத்தல். 145. இறைவன் - இந்திரன்.

146. அண்ணல் - பரதேசுவர சக்கரவர்த்தி; சீவக. 32.

147. இகந்தன்று - நீங்கியது.

144-7. "மாந்தரஞ் சேர லிரும்பொறை யோம்பிய நாடே, புத்தே ளுலகத் தற்றென" (புறநா. உஉ) என்பதும், "காட்சிக்கெளியன்" (386) என்னுங் குறளின் விசேடவுரையும் இவ்வடிகளுடன் ஒப்பிடற் பாலன.

பி - ம். 1 இனையோர்.

(பிரச்சோதனன் செயல்)

புகழார் வெய்திய திகழ்முடிச் சென்னியன்
ஆசில் பாட லமிழ்துறழ் நல்யாழ்க்
கேள்வி நுனித்த கீத வித்தகத்
தாசா ரியரொ டரங்கியன் மகளிரை
எடுகோ ளாள ரெனையரென் றெண்ணிப்
பேரெழுத் தோலை பெறுமுறை நோக்கிக்
கட்டுடைக் கலனுங் கதிர்முத் தாரமும்
பட்டியற் கலிங்கமொடு பாசிழை நல்கி
இலைத்தொழிற் [1] றடக்கைய ளெழுந்தீ கினியெனக்

(வாசவதத்தை தந்தையை வணங்கல்)

கலைத்தொழி லவையங் கைதொழப் புக்காங்
கிருந்த விறைவன் றிருந்தடி குறுகிச்
செம்பொ னல்யாழ் சிலதிகைந் நீக்கி
அணங்குறை மெல்விரல் வணங்கினள் கூப்பி

(பிரச்சோதனன் செயல்)

இறைஞ்சிய மாதரை யெடுத்தனன் றழீஇப்

---

149. ஆர்வு - நிறைவு.

150. அமிழ்து உறழ் நல்யாழ் - அமிர்தத்தை ஒத்த நல்ல யாழ்; "அமிழ்துபொதிந் திலிற்றும்........ இயம்" சிறுபாண். 227-9.

151. வித்தகம் - திறமை.

152. =பெருங். 94-5. ஆசாரியர் - இசையாசிரியர் முதலிய ஐவர்.

153. எடுகோளாளர் - பனையேட்டில் எழுதுபவர். எனையர் - எவ்வளவினர். 154. பேர் எழுத்து ஓலை - பெயர்களை எழுதிய ஓலை.

155. கட்டுடைக்கலன் - மணிகளை இழைத்த ஆபரணம்; கட்டுவடமுமாம்.

157. இலைத்தொழில் - இலைகிள்ளும் தொழில்; இலைவடிவமமைந்த ஆபரணங்களுமாம். தடக்கையள் - வாசவதத்தை. எழுந்தீக - எழுக. என - என்று அரசன் சொல்ல.

158. கலைத்தொழில் - கலைபயிலும் தொழில். அவையம்-சபை.

160. சிலதி - காஞ்சனமாலை.

161. அணங்கு - ஸ்வரதேவதைகள்; அழகுமாம்; "அங்கையி னணங்கினணி மெல்விரல் பிடித்து" சூளா. கல்யாணச். 276.

பி - ம். [1] தடக்கையின்.

பிதிர்சுணங் காகமொடு பெருந்தோ ணீவிக்
கதிர்பொற் பட்டமொடு கனங்குழை திருத்தி
ஒண்ணுதன் மாதரை யொருகை பற்றிப்
பொன்னிழை தாயுழைப் போகெனப் புகலலும்

(இராசமாதேவி மகிழ்தல்)

தான்முன் கண்ட தவற்றின ளாதலிற்
சென்ற வாயிற் கொன்றல ளூடிப்
புலவியிற் கருகிய திருமுக மிறைமகட்
குவகையின் மகிழ்ந்த முறுவல ளாகிக்
கடைக்கட் டூதாற் காவலற் கடைஇச்
[1] சுடர்க்குழை பயந்தோள் சொல்லா ணிற்ப

(தயார் மகிழ்ந்துகூறல்)

இன்சொன் மகளி ரெனைப்பல ருள்ளும்
நுந்தை நெஞ்ச நீயறப் பெற்றுங்
குரக்களி றடக்கிய வோசைத் தாகி
வரத்தொடு வந்த வசைதீர் சிறப்பின்

163. பெருந்தோள் : "பெருந்தோண் மடந்தை" (சிலப். ௩ : 6); 'மகளிர்க்குத் தோள் பெருக்கை இலக்கணம்' (ஷை அரும்பத.) என்பர். நீவி - தடவி.

164. கதிர் - கதிர்த்த. 166. பொன்னிழை : விளி.

167. தானென்றது, பெருந்தேவியை. கண்ட தவற்றினள்-அரசனிடம் முன்னம் ஒரு குற்றத்தைக் கண்டவள் ; கலி. ௯0 : 4.

168. வாயிற்கு - தூதிற்கு.

167 - 9. முன்னம் நிகழ்ந்த செய்தி கூறப்பட்டது.

171. கடைஇ - விடுவி.

173. இன்சொல்மகளிரென்பது முதலியன மற்றைத் தாயர் கூற்றுக்கள். எனைப் பலருள்ளும் - எத்தனையோ பல மகளிருள்ளும்.

174. அற - முற்ற ; "வகையறச் சூழா தெழுதல்" குறள், 465.

175. உரம் - வலிமை.

176. பிரமசுந்தர முனிவருக்கு இந்திரனாலும் உதயணனுக்கு அம்முனிவராலும் இவ்வீணை அளிக்கப்பெற்றமையின், 'வரத்தொடு வந்த' என்றார் (பெருங். ௨. 11 : 84-102); இதன் பெயர் கோடவதி என்பர்.

பி - ம். 1 சுடற்குழற்.

வத்தவ குலத்துத் துப்பெனத் தோன்றிய
தகையொலி வீணையொ டவைதுறை போகி
உருவிற் கொத்த திருவினை யாகிக்
குடிவிளக் குறூஉங் கொடியே வாவென
மாத ராயத்து மகள்வயிற் கொளீஇத்
தாய ரெல்லாந் தழீஇயினர் முயங்கிச்
சுற்ற[1]மாந்தர் தொக்கனர் புகல

(பிரச்சோதனன் செயல்)

வத்தவ ரிறைவனை வருகெனக் கூஉய்ப்
பொற்கோட் டம்பலம் பொலிய வேறிக்
கற்றறி வாளர் சுற்றிய நடுவட்
டாமுயல் வேட்கையின் மாநிலத் துறையுநர்
மரமுதல் சாய மருந்துகொண் டாஅங்கு
நங்குடி வலித்தல் வேண்டி நம்பி
தன்குடி கெடுத்த தகவி லாளனேன்

177. துப்பு - வலி ; பற்றுக்கோடுமாம்.

178. தகை-தக்கதாகிய உதயணனது. துறைபோகி - முற்றக் கற்று ; "சிலைகளும் பிறகளும் துறைபோய்" சீவக. 2158.

179. திருவினையாகி - செல்வத்தையுடையையாய்.

180. விளக்குறூஉம் - விளங்கச் செய்யும்.

181. மகள்வயிற்கொளீஇ-மகளைத் தம் வயிற்றினிடத்தேயணைத்து.

182. முயங்கி - முயங்க. 183. புகல - விரும்பிக் கூற.

184. வருகவென்று அழைத்து.

185. பொற்கோட்டம்பலம் - பொன்னாலாகிய சிகரத்தையுடைய அம்பலம். 186. நடுவண் - நடுவிடத்தே.

187. உயல்வேட்கையின் - பிழைக்கவேண்டுமென்னும் விருப்பத்தால்.

188. மரமானது சாயும்படி உலகத்தார் மருந்துகொண்டாற் போல; "மரஞ்சா மருந்துங் கொள்ளார்" (நற்.௨௨௬); "மருந்துகொண் மரத்தின் வாள்வடு மயங்கி" புறநா. ௧௮0 : 5, அடிக்.

189. வலித்தல் - வன்மையையுடையதாகச் செய்தல். நம்பியென்றது, உதயணனை.

189 - 90. "தான்கெடினுந் தக்கார்கே டெண்ணற்க" (நாலடி. 80) என்பதை இவற்றின்பொருள் நினைப்பிக்கின்றது.

பி - ம். 1 மாநகர்த்.

என்மனம் புகல வேண்டி னிவனைத்தன்
மண்மிசை நிறுக்கு மந்திர [1] மிருக்கென
மதிவ லாளர் விதிவகை யிதுவெனத்
தண்ணுஞ் சேனையுந் தகைக்கோ சம்பியும்
பண்டுகண் ணழிந்த பகையினை நீக்கிப்
பொன்னு நெல்லும் புரிவின் வழங்குகென்
றொன்றெனப் பயிற்றி யுருமிடித் தன்ன
வென்றி முரசம் வீதிதோ றெருக்கி
முன்யா னிவனை முருக்கலும் வேண்டினென்
பின்யா னிவனைப் பெருக்கலு முற்றனென்
எமர ணாயி னிறைகொடுத் தகல்க
அமர ணாயி னமைவொடு நிற்கென
அடல்வேற் றானை யாருணி யரசற்கு
ஞாலத் தின்னுயிர் வாழ்வோர் நாப்பட்
காலம் பார்க்குங் [2] காலன் போல
வெல்போ ருதயணன் [3] வெஃறுணை யாகப்

191. புகல - மகிழ.
192. நிறுக்கும் - நிலைபெறச் செய்யும். மந்திரம் - ஆலோசனை.
193. விதிவகை - விதித்தவகை; அஃதாவது, "எண்ணித் துணிக கருமம்" (குறள், 467) என்பது.
195. கண் அழிந்த - கண்ணோட்டங் கெட்ட.
196. புரிவு - அன்பு. 198. எருக்கி - கொட்டி.
196 - 8. பொன்னும் நெல்லும் ஒக்க வழங்குதல் இருநாட்டினரும் பகைமை நீங்கி உறவாயிருத்தலைப் புலப்படுத்தும்; "கட்டியங்கார...... முரசமன்றே" (சீவக. 2150) என்பதும் அதனுரையும் இதை வலியுறுத்தும். 199. முருக்கலும் - அழித்தலையும்.
200. பெருக்கல் - பெருகச் செய்தல்.
201. எமரன் - என்னைச் சார்ந்தவர்களுக்கு நட்பினன். இறை - கப்பம். அகல்க - சோசம்பி நகரத்தைவிட்டு நீங்குக.
202. அமரன் - போர்செய்தற்குரியவன். அமைவு - அமைதி.
203. ஆருணி: உதயணனில்லாத காலத்தில் கோசம்பி நகரத்தைக் கைப்பற்றிய அரசன்.
205. "காலனுங் காலம் பார்க்கும்" புறநா. ௪௧: 1, அடிக்.
206. வெல்துணையாக - வெல்லுதற்குக் காரணமான துணையாக.

பி - ம். 1 இறுக்கென. 2 காலம்போல, 3 வேல்துணை.

பல்கோ டியானைப் பாலகன் வருமெனக்
கணக்குத்துறை முற்றிய கடுஞ்சொ லோலை
அரக்குப் பொறி யொற்றி யானையிற் போக்கி
எண்படைத் தலைவரு மிருபிறப் பாளரும்
எண்பதி னாயிர மிளம்பது வாய்களும்
ஏற்றினம் வரூஉ நாற்றங் கமழிய
மதங்கவுட் பிறந்த கதந்திகழ் படாத்த
ஐந்நூ றியானையு மாயிரம் புரவியும்
எண்பது தேரு மிருவகைத் தொறுவும்
நன்மணி யைம்பா னருமதை யுள்ளுறுத்
திரங்குபொற் கிண்கிணி யரங்கிய லாயத்து
நாடக மகளிர் நாலெண் பதின்மரும்
கோடிய லூர்தியுங் கொண்டுவிசி யுறுத்துக்
கோடி விழுநிதி கொண்டகஞ் செறிக்கப்
பாடியல் பண்டியொடு படைசெலல் விதித்து
வளங்கெழு தாயத்து வழியடை யாகிய

207. கோடியானை - தந்தத்தையுடைய யானை; தொகுத்தல். பல் யானை யென்க. பாலகன் - பிரச்சோதனனுடைய குமாரருள் ஒருவன்.

208. கணக்குத்துறை - நூல்வழி.

209. அரக்குப்பொறி - அரக்கு முத்திரை (பெருங். ௧. 45 : 30, 58 : 81 - 2, ௫. 7 : 71); "அரக்கிலச் சினையின் வைத்த தூலை" சூளா. தூது. 82.) 210. எண்படை - எட்டுவகைப்படை.

211. "பதுவாய்க் காப்புறு படைத்தொழி லிளையரை" (பெருங். ௩. 24 : 150.) 212. ஏறு - ஆண்யானை; பு. வெ.

213 - 4. கதந்திகழ் யானையென்க.

215. இருவகைத் தொறு - பசுவும் ஏறும்; பசுநிரை ஆட்டுநிரை யென்று கொள்ளினுமாம்.

216. மணி - நீலமணி; நன்மணி ஐம்பால் : (பெருங். ௧. 40: 158; ௨. 15: 90 - 91; ௩. 9 : 153); "மண்ணார் மணியின் வணர்குரல் வண்டார்ப்ப" (பரி. ௧௦ : 89); "மாசற மண்ணுற்ற மணியேசு மிருங் கூந்தல்" (கலி. ௭௭. 16); "கூந்தல், மண்ணுறு மணியின் மாசற மண்ணி" (புறநா. ௧௪௭ : 6 - 7.) உள்ளுறுத்த - உள்ளிட்ட.

219. கோடியல் ஊர்தி - யானைத்தந்தத்தாற் செய்யப்பட்ட வாகனம்; "மருப்பியலூர்தி" (38 : 11) என்பர் பின். 221. பண்டி - வண்டி.

222. தாயம் - அரசுரிமை. வழியடை - பின்னுரிமை; 'பிறக்கடை' என்பது போலக் கொள்க.

இளங்கோ நம்பியு மிவனொடு செல்கென
மாண்மொழிக் குருசி லாணைவைத் தகம்புக
நாள்கொண் டெழுவது நாளை யாமென
அமைச்சனுஞ் செவிலியு மமைந்த வகையால்
நாள்கொளற் கிருந்துழி நன்னகர் கேட்பக்

(பாகீரதியென்பவள் செயல்)

கழிந்த யாண்டுங் கயநீ ராட்டணி
ஒழிந்ததன் றண்ட முயர்கொடி மூதூர்க்
குருதி வெள்ளங் கூலம் பரப்பி
அழுகுரன் மயங்கிய வல்லற் றுக
மதவலி வேழ மைய லுறுத்த
கடவுள் யானெனக் கடவுட் காட்டிப்
பேரிசைக் கடவுட் பெருநகர்த் தோன்றிச்
சேரி யாயத்துச் செம்முதிர் பெண்டிரொடு
கட்டறி மகடூஉக் கடிமுறத் திட்ட

---

223. இளங்கோ நம்பி - இளவரசாகிய பாலகன்.

226. அமைச்சன் - வயந்தகன். செவிலி - சாங்கியத்தாய்.

228. கழிந்த யாண்டும் - சென்ற வருடத்தும்.

229. தண்டம் - தண்டனையாக. 230. கூலம் - கடைத்தெரு.

231. அல்லற்றுக - துன்பமுடையதாக.

232. மதவலி வேழம் - மதத்தையும் வலிமையையுமுடைய யானையை; மதவலி - மிக்க வலியுமாம்; வேழம் மையலுறுத்த செய்தியை இக்காண்டம் 32-ஆம் பகுதியிற் காண்க. மையல்: "மையல் வேழம்" (குறிஞ்சிப். 165); "நெடுநல் யானை, மையலங் கடாஅஞ் செருக்கி" அகநா. ௩௦௭ : 7-8.

233. கடவுட்காட்டி - ஒரு தெய்வத்தின் தன்மையைத் தன்னிடத்துக்காட்டி; ஆவேசமுற்று.

234. கடவுட் பெருநகர் - ஒரு பெரிய தேவாலயத்திலிருந்து. தோன்றி - தோன்றாநிற்க.

236. கட்டறிமகடூஉ - கட்டுப்பார்த்தலையறிந்த மகள்; கட்டுவிச்சி; கட்டாவது சிறுமுறத்திற் பரப்பிய நெல்லிற்பார்க்கும் ஒருவகைக் குறி; பத்துப்பாட்டு, 482-ஆம் பக்கத்தின் இரண்டாம் அடிக்குறிப்பைப் பார்க்க; "இதுகாண்மி னன்னைமீரிக்கட்டு விச்சி சொற்கொண்டீர், எதுவானுஞ் செய் தங்கோர் கள்ளுமிறைச்சியுந் தூவேன்மின், முதுவார்

வட்ட ணெல்லு மாண்பில பெரிதெனக்
குற்ற முண்டெனிற் கூறுமி னெமக்கெனக்
கருங்காற் கலிங்கமொடு காஅழ் கலக்கிப்
[1] பிட்ட வாயள் பெரும்பா கீரதி
பொய்ப்பே யேறிப் பொள்ளென நக்கு
முலையிடைத் துளங்கு முத்துற ழாரமொடு
தகையெருத் துரிஞ்சுந் தமனியக் குழையள்
கொடும்பூண் மார்பிற் கூந்தல் பரப்பிப்
பிடிக்கை யன்ன பெருந்தோ ளோச்சி
இடிக்குரன் முரசின்மு னெழுந்தன ளாடி

---

துழாய்முடி மாயப் பிரான்கழல் வாழ்த்தினால், அதுவே யிவளுற்ற நோய்க்கு மருமருந் தாகுமே” (திவ். திருவாய். ௪. 6 : 3) என்பதனாலும் கட்டுவிச்சி செய்தி விளங்கும்.

238. என - என்று. செம்முதிர் பெண்டிர் கட்டுவிச்சிக்குச் சொல்ல. 239. கலிங்கம் - புடைவை. காழ் - மேகலை.

240. பிட்ட வாயள் - மேல்வாய்ப் பல்லால் கீழுதட்டைக் கவ்விய வாயினையுடையவள்; மடித்த வாயினள்.

242. துளங்கும் - அசையும். முத்துறழ் ஆரம் - முத்தையொத்த ஒருவகை மணியாலாகிய ஆரம். 243. எருத்து - புறக்கழுத்து.

244. கொடும்பூண் - வளைந்த ஆபரணம்.

245. “பயிருறத் தெய்வ மென்மேற் படிந்தது பார்மி னென்று, உயிருயிர்த் திரண்டு கையு முச்சிமே லுயர நீட்டி, மயிர்சிலிர்த் துடலுங் கூசி வாய்விரித் தொடுங்கு வாரும்” கம்ப. ஊர்தேடு. 190.

246. பேய்பிடித்தாடுவோரின்பின் பறைகொட்டிச்செல்லுதல் மரபு; “தானேயாடும்பேய், பறைபெற்றா லாடாதோ பாய்ந்து” (புறத்திரட்டு); “பண்டே யாடும் பேயின்கைப் பறையும் கொடுத்துப் பார்ப்பரால்” (பெருந்திரட்டு) என்பவை ஈண்டு அறியத்தக்கன.

239 - 46. தெய்வமேறியவருடைய செயல்கள் பின்வருவனவற்றாலும் அறியப்படும்: “தெய்வ முற்றோ னவிநயஞ் செப்பிற், கைவிட் டெறிந்த கலக்க முடைமையும், மடித்தெயிறு கௌவிய வாய்த்தொழி லுடைமையும், துடித்த புருவமுந் துளங்கிய நிலையும், செய்ய முகமுஞ் சேர்ந்த செருக்கும், எய்து மென்ப வியல்புணர்ந் தோரே” சிலப். மேற்; சிலப். ௧௨:7-19; ௩௦ : 38 - 45, பார்க்க.

பி - ம். 1 பெட்டவாயள்.

விழாக்கோ ளாளரைக் குழாத்திடைத் தரீஇத்
திருநீ ராட்டணி மருவி ராயிற்
பிணக்குறை படுத்துப் பிளிறுபு சீறிய
இன்றுஞ் சென்றியான் குஞ்சரம் புகுவலென்
றஞ்சி லோதி யணங்குவாய் கூறப்

(பெரியவர் அரசனுக்கறிவித்தல்)

பன்றியெறி யுற்ற புண்கூர் ஞமலி
குன்று வடிசிற் குழிசி காணினும்
வெரீஇ யன்ன வியப்பின ராகி
அலகை மூது ரான்றவ ரெல்லாம்
உலகந் திரியா வொழுக்கின ராதலிற்
காவன் மன்னற்குக் கதுமென வுரைத்தலிற்

(சேனாதிபதி செயல்)

றேவர் [1] சொல்லும தேதகை யாமென
வெண்முகை யடுத்துப் பைந்தோடு படுத்து
மாத ரங்கையின் மங்கலத் தியற்றிய
வாகைக் கண்ணி வலத்திற் சூட்டித்
தானைச் சேரித் தலைப்பெருந் திருவன்
நாணீ ராட்டணி நாளையென் றறைதலும்

(நகர் விழாக்கோள்ளல்)

விளையாட் டீரணி விற்றுங் கொள்ளும்

---

247. விழாக்கோளாளர் - அரசன்கட்டளைப்படி விழாவை நடத்துவோர் (பெருங். க. 38: 88.) தரீஇ - வருவித்து.

249. பிணக்குறைபடுத்து - குறைப்பிணங்கள் உண்டாகும்படி செய்து ; சீறிய - சீறும்படி.

250. இன்றும்: உம்மை இறந்தது தழீஇயது.

252. ஞமலி - நாய். 253. அடிசிற் குழிசி - சோற்றுப்பானையை.

256. உலகந்திரியா ஒழுக்கினர்-உலகத்தோடு ஒட்ட ஒழுகுபவர்.

258. சொல்லுமது எது - சொல்லுவது எதுவோ. அந்த ஆகெனஅஃது ஆகுகவென்று அரசன்சொல்ல.

262. சேனைத் தலைவன். 264. ஈரணி - புனலாடுதற்குரிய அணி.

பி - ம். 1 சொல்லுமேதகை.

தொலைவின் மூதூர்த் தொன்றின மறந்துராய்த்
தோணியு மரமுந் துறைநா வாயும்
நீரியன் மாடமு நீந்தியற் புணையும்
சுண்ணமுஞ் சூட்டுஞ் சுவைநறுந் தேறலும்
சென்னச் சிவிகையுந் தேரும் வையமும்
கண்ணார் பிடிகையுங் கட்டமை யூர்தியும்
பண்ணிரும் பிடியும் பண்ணுவனர் மறலிச்
செவ்வி பெறாஅ வைகல ராகி
வான்கிளர்ந் தன்ன வளநீ ராட்டணி
சேணிடை யுறைநருஞ் சென்று காண்புழிப்
புதவகத் துறைந்தோர் போம்பொழு தென்றென
உதயண குமரனை [1]யோர்த்துறச் சொல்லி
நூலறி வாளர் நால்வரை விட்டபின்
உவாக்கடற் பரப்பி னொல்லென மயங்கி
[2] விழாக்கொண் டன்றால் வியனகர் விரைந்தென்.

௩௭.—விழாக்கொண்டது முற்றிற்று.

---

265. தொன்றின - பழையவற்றை. 266. மரம் - மரப்புணை.

267. நீரியல்மாடம் - நீரிற்செல்லும் மாடவடிவுள்ள பள்ளியோடம்.

268. சூட்டு - மாலை. தேறல் - கட்டெளிவு.

269. சென்னம் - வடிவு (பெருங். உ. 4. 180); " சென்னவஞ் சிலம்பு " (சீவக. 1333.) வையம் - வண்டி.

270. பிடிகை - ஒருவர்மட்டும் இருத்தற்குரிய பீடத்தையுடைய ஊர்தி; பீடிகையென்பதன் விகாரம்.

271. மறலி - பகைத்து. 272. செவ்வி - சமயம்.

275. புதவு - வாயில். 276. ஓர்த்துற - அறிந்துவர.

277. நால்வரைவிடுதல் ஒருமரபு; சீவக. 1054.

279. கொண்டன்று - கொண்டது.

பி - ம். 1 ஒத்துறச். 2 விழாக்கொண்டனரால்.

## ௩௮—விழாவாத்திரை.

விரைந்தனர் கொண்ட விரிநீ ராத்திரை
புரிந்துட னயரும் பொலிவின தாகி
மல்லன் மூதூ ரெல்லாச் சேரியும்
பயிர்வளை யரவமொடு வயிரெடுத் தூதி
இடிமுர செறிந்த வெழுச்சித் தாகி
யாழுங் குழலு மியம்பிய பறுகின்
மாலை யணிந்த மணிக்காழ்ப் படாகையொடு
கால்புடைத் தெடுத்த கதலிகை நெடுங்கொடி
ஆர்வ மகளிரு மாய்கழன் மைந்தரும்
வீர குமரரும் விரும்புவன வேறிய
மாவுங் களிறு மருப்பிய வூர்தியும்
காலிரும் பிடியுங் கடுங்காற் பிடிகையும்
தேரு மாக்களுந் தெருவகத் தெடுத்த

---

௩௮. விழாவாத்திரை.

[பிரச்சோதனன் முதலியோரும், வாசவதத்தை முதலியோரும், உதயணனும், நகரத்தாரும் நீர்விழவிற்காக நகர்ப்புறம்பேயுள்ள பொய்கைக் கரையை அடைந்தது முதலியன இதனால் அறியலாகும்.]

1. ஆத்திரை - யாத்திரை; பெருங். க. 36 : 238, 38 : 139.

2. உடன் அயரும் - ஒருங்கே செய்யும். பொலிவினது : தொகுதி யொருமை. 3. மல்லல் - வளம்.

4. பயிர்வளை - முழங்குகின்ற சங்கு; வயிர் - கொம்பு; இவ்விரண்டையும் சேர்த்துச்சொல்லுதல் மரபு; முருகு. 120, அடிக்.

5. இடிமுரசு - இடிபோன்ற முழக்கத்தையுடைய முரசம்; "உரு மிடி முரசமொடு" முருகு. 121.

6. இயம்பிய - ஒலித்த; "யாழுங் குழலும் பறையு மியம்பினூர்" தொல். களவி. சூ. 47, ந. மேற்.

7. காழ் - காம்பு. படாகை - பெருங்கொடி; சிலப். ௬ : 154.

7-8. கதலிகை நெடுங்கொடி - ஒருவகைக் கொடி; "கதலிகைக் கொடியுங் காழூன்று விலோதமும்" மணி. க : 52.

11. மருப்பு - யானைத் தந்தம்; "கோட்டிற் செய்த கொடுஞ்சி நெடுந்தேர்" பொருந. 163.

12. பிடிகை - ஒருவகை யூர்தி; 37: 270.

பி - ம்: 1 கருங்காற்.

எழுதுகள் சூழ்ந்து மழுகுபு மாழ்கிப்
பகலோன் கெடுமெனப் [1] பாற்றுவன போல
அகலிரு [2] வானத் துகடுடைத் தாட
விசும்புற நிமிர்ந்த பசும்பொன் மாடத்து
வெண்சுடர் வீதி விலக்குவனர் போல
எண்ணரும் பல்படை யியக்கிடம் பெறாஅ
நகர நம்பிய ராச குமரர்
நிறைகளி றிவைகா ணீங்குமி னெனவும்
இறைவ னாணை யீங்கெவன் செய்யும்
புதல்வ னாணை புதுநீ ராட்டெனச்
சிறாஅர் மொய்த்த வறாஅ விருப்பிற்
கம்பலைத் தெருவி னெம்பரு மெடுத்த
குடையுங் கொடியுங் கூந்தற் பிச்சமும்
அடல்வே லியானை யடக்குங் காழும்
களிறெறி கவரியொடு காண்டக மயங்கிப்
பெருநீர்க் கருங்கட [3] றுளுப்பிட் டதுபோல்
ஒண்ணுதன் மகளி ருண்க ணிரைத்த

14. மழுகுபு மாழ்கி - ஒளிமழுங்கி வருந்தி. 16. துகள் துடைத்து. கதலிகை நெடுங்கொடி (8) ஆட (16.)

18. வெண்சுடர் வீதி - வெள்ளொளியையுடைய வீதியில்; சந்திர மண்டலத்தினது செலவை யென்றுமாம்.

19. இயக்கு இடம் - இயங்குதற்கு உரிய இடத்தை.

21. காண் : அசை. எனவும் - என்று சொல்லவும்.

22 - 4. "ஆணை யாணை யகலுமி னீரென, வேணுக் கோலின் மிடைந்தவ ரொற்றலின், ஆணை யின்றெம தேயென் றணிநகர், காணுங் காதலிற் கண்ணொருக் குற்றவே" சீவக. 684.

25. எம்பரும் - எவ்விடத்தும்; பெருங். உ. 7: 116; ௫. 2: 13.

26. கூந்தற் பிச்சம் - மயிற்பீலியாற் கட்டப்பட்ட ஒருவகை விருது; சீவக. 416, 2524. 27. காழ் : பெருங். க. 32: 97.

28. களிறு எறி கவரி - களிறுகள் வீசுகின்ற சாமரை.

29. கடல் துளுப்பிட்டதுபோல் - கடலைக் கலக்கியதுபோல; "கருங்கட லுளுப்பிட் டாங்கு" சீவக. 1112.

பி - ம். 1 பார்த்துறுவன. 2 வானத்தகடு. 3 துளும்பிட்டது.

கஞ்சிகை துளங்கக் கயிற்றுவரை நில்லாச்
செஞ்சுவற் பாண்டியஞ் செல்கதி பெறாஅ
குரைத்தெழுந் துகளுங் [1] குரம்புவி நிரைத்துடன்
சங்கிசை வெரீஇச் சால்பில பொங்கலின்
அவிழ்ந்த கூந்த லங்கையி னடைச்சி
அரிந்துகால் பரிந்த கோதைய ராகத்துப்
பரிந்துகா ழுகுத்த முத்தினர் பாகர்க்குக்
காப்பு [2] நேரிய கூப்பிய கையினர்
இடுக்க ணிரப்போர் [3] நடுக்க நோக்கி
அரறுவ போல வார்க்குந் தாரொ
டுரறுபு தெளித்துக் கழறும் பாகர்
வைய நிரையும் வயப்பிடி யொழுக்கும்
கைபுனை சிவிகையுங் கச்சணி மாடமும்
செற்றுபு செறிந்தவை மொக்கு ளாக
மக்கட் [4] பெருங்கடன் மடைதிறந் ததுபோல்

---

31. கஞ்சிகை - உருவுதிரை. கயிறு - மூக்கணை கயிறு.

29-31. துளுப்பிட்டதுபோல் துளங்குதலால்.

30 - 31. கண்கள் புறநிகழ்ச்சியைக் காண வரிசையுற்றுக் கஞ்சிகைக்குள்ளே தோன்றுதலின், 'உண்கணிரைத்த கஞ்சிகை' என்றார்.

32. சுவல் - பிடர். பாண்டியம் - வண்டியிழுக்கும் எருது (154, 243.) பெறாஅ - பெறாவாய்.

31-2. "கயிறிடு கதச்சேப் போல மதமிக்கு" அகநா. ௩௬.

33. குரம் - குளம்பு.

34. சால்பில - அமைதியில்லாதனவாய். பொங்கலின் - துள்ளுதலின். 35. அடைச்சி - சேர்த்து.

36. கோதை - மாலை. 37. பாகர் - வண்டியை ஓட்டுவோர்.

38. காப்பு நேரிய - தம்மைக் காத்தற்கு உடன்பட.

39. இடுக்கண் இரப்போர்-துன்பத்தைத் தீர்த்துக்கொள்ளுதற்கு இரக்கும் மகளிருடைய.

40. அரறுவபோல - முழங்குவனபோல; அலறுவபோல வென்றுமாம். தார் - கிண்கிணி மாலை. 41. உரறுபு - முழங்கி.

43. கச்சணி மாடம் - மாடச்சிவிகை.

44. செற்றுபு செறிந்தவை - மிக்கு நெருங்கியவை.

பி - ம். 1 குரம்புநிரைத்துடன். 2 நேரியக் கூப்பிய. 3 நடுக்குற. 4 பெருங்கடை.

எத்திசை மருங்கினு மிவர்ந்துமே லோங்கிய
கட்டளை வாயி லிவர்வனர் கழிந்து

(நகரமாந்தர் தங்கல்)

வரம்பில் பல்சனம் பரந்த பழனத்
தாற்றிரு கரையி னசோகம் பொழிலினும்
காய்த்தொசி யெருத்தின் கமுகிளந் தோட்டமும்
மயிலுங் குயிலு மந்தியுங் கிளியும்
பயில்பூம் பொதும்பினும் பன்மலர்க் காவுதொறும்
உயரத் தொடுத்த [1] ஊசல தாகி
மரந்தொறு மொய்த்த [2] மாந்தர்த்தாகிப்
புறங்கவின் கொண்ட நிறங்கிளர் செல்வத்

(நீரங்காடியின் வருணனை)

தூரங் காடி யுய்த்துவைத் ததுபோல்
நீரங் காடி நெறிப்பட நாட்டிக்
கூல வாழ்நர் கோன்முறை குத்திய
நீலக் கண்ட நிரைத்த மருங்கின்
உண்ண மதுவு முரைக்கு நானமும்
சுண்ணமுஞ் சாந்துஞ் சுரும்பிமிர் கோதையும்
அணியுங் கலனு மாடையு நிறைந்த
கண்ணகன் கடைக ளொண்ணுத லாயத்துக்
கன்னி மாண்டுழித் துன்னுபு நசைஇய

---

46. இவர்ந்து - பரந்து.

47. கட்டளைவாயில் - கட்டுக்களை அமைந்த வாயில் (கட்டு - வீட்டின் பகுதி); காவல் அமைந்த வாயிலுமாம். 50. தோட்டத்திலும்.

52. பொதும்பு - முதிர் மரங்களின் செறிவு. கா - இளஞ்சோலை.

57. நீர் அங்காடி-நீர்விழவிற்குரிய பண்டங்களையுடைய கடைகள்.

58. கூலவாழ்நர் - பல பண்டம் விற்கும் வணிகர். கோல் - நாட்டுங்கோல். 59. கண்டம் - கண்டத்திரை.

60. உண்ணம் - வெம்மை; "உண்ணவண் ணத்தொளி நஞ்சம்" (தேவாரம்), "உண்ணமா யிருக்கின்" (திருவிளை. கஉ:42.) உரைக்கும் - பூசும்; நானம் - புழுகுநெய்; "உரைக்கு நானமும்" சீவக. 831.

61. சுண்ணம் - வாசனைப்பொடி. சாந்து - சந்தனக்குழம்பு; 127.

பி - ம். 1 ஊசலராகி. 2 மாந்தர்க்காகி.

தூதுவர் போல [1] மூசின குழீஇ
[2] ஆணைத் தடைஇய நூனெறி யவையத்துக்
கல்வி யாளர் சொல்லிசை போல
வேட்போ ரின்றி வெறிய வாக

(தங்கு மிடங்கள்)

மாக்க ளூழிதரு மணிநெடுந் தெருவின்
மடலிவர் போந்தை மதர்வைவெண் டோட்டினும்
படலைவெண் சாந்தினும் படத்தினு மியன்ற
பந்தரும் படப்பும் பரந்த பாடி
அந்தமு மாதியு மறிவருங் [3]குரைத்த
யோசனை யகலத் தொலிக்கும் புள்ளிற்
றேவரும் விழையுந் திருநீர்ப் பொய்கைக்
கரையுங் கழியுங் கானலுந் துறையும்
நிரைவளை மகளிர் நீர்பாய் மாடமொடு

---

64-5. கடைகள் கூடியதற்கு ஒருத்தியின் கன்னித்தன்மை மாட்சிமையுற்றவிடத்து விரும்புவோரால் விடுக்கப்பட்டுவந்த தூதுவர் கூடியது உவமை; பெருங். க. 36 : 45-9.

66. ஆணை - தொல்லாசிரியரது கட்டளையால், அல்லது அரசருடைய ஆணையால். தடைஇய - பேசாதிருக்கவெனத் தடுக்கப்பட்டுள்ள.

66-8. அவையிற் கல்வியில்லாருடைய சொல்லிசை போலக் கடைகளிலுள்ள பொருள்கள் வாங்குவோரின்மையிற் பயன்படுதலிலவாக; நீராட வந்தோர்களிடத்து நுகர்தற்குரிய பொருள்கள் நிறைந்துள்ளனவென்பது இதன் கருத்து. 70. மதர்வை - செழுமை.

கடைகள் (63) மூசின குழீஇ (65) வேட்போரின்றிவெறியவாக (68.)

71. படலை வெண் சாந்து - இலைகளையுடைய வெள்ளிய சந்தனக் குழம்பு. 72. படப்பு - தோட்டக் கூறுகள். பாடி - புதிய நகரம்.

73. அறிவருங் குரைத்த - அறிதற்கரிய.

74. யோசனை - பத்துநாழிகை வழித்தூரம்.

74-5. யோசனை யகலத்துப் பொய்கை; “விரிநீர்ப் பொய்கை” (40 : 2) என்பர் பின்.

77. பெருங். க. 40 : 156-7.

பி - ம். 1 மூசினர். 2 ஆணைத்தடைஇய. 3 குரைத்தாய்.

மிடைபுதலை மணந்த மேதகு வனப்பிற்
கடல்கண் கூடிய காலம் போல
நூல்வினை நுனித்த நுண்வினைப் படாத்துத்
தானக மாடமொடு தலைமணந் தோங்கிய
வம்புவிரி கொட்டிலொடு வண்டிரை மயங்கிச்
செவ்வான் முகிலிற் செறிந்த செல்வத்
தெவ்வாய் மருங்கினு மிடையறக் குழீஇ
ஊரிறை கொண்ட நீர்நிறை விழவினுள்
இறைவன் பணியென் [1] றிறைகொண் டண்டி
நிறைபுனற் [2] புகாஅர் நின்னகத் தோரென
விழாக்கோ ளாளர் விரைந்துசென் றுரைத்தலும்

(பிரச்சோதனன் செயல்)

உவாக்கட லொலியி னுரிமையொ டுராஅய்
விழாக்கொள் கம்பலின் வெகுண்டுவெளின் முருக்கி
எழாநிலை புகாஅ வினங்கடி சீற்றத்
[3] தாணை யிகக்கு மடக்கருங் களிறு
சேணிகந் துறைந்த சேனையிற் கடிகென

78. மிடைபு - நெருங்கி.

81. தானகமாடம் - விரிந்த இடத்தையுடைய நீர்மாடம்; "தானக மாட மேறித் தையலார் ததும்பப் பாய்வார்" சீவக. 2658.

82. வம்பு - இங்கே செங்கச்சு. திரை - திரைச்சீலை. [கள்.

82-3. கொட்டிலுக்குச்செவ்வானமும் திரைக்கு முகிலும் உவமை

84. குழீஇ - கூடிநிற்ப. 85. இறை - தங்குதல்.

87. அரசனை நோக்கி, நின்னகத்தோர் நிறைபுனற்புகாராயினு ரென்று. 88. விழாக் கோளாளர்: பெருங். க. 37 : 247.

87-8. என உரைத்தலும்.

89. ஒலியின் - ஒலிபோல. உரிமையொடு - தேவியோடு (சீவக. 272.) உராய் - பெயர்ந்து.

90. கம்பலின் - முழக்கத்தால்; கம்பல்: கம்பலை யென்பதன் திரிபு. வெளில் - கட்டுத்தறி.

91. எழாநிலை புகாஅ - கூடத்திற் புகாவாய். இனம் கடி - பாகர் முதலியோரைக் கடிகின்ற; இனம் - கூட்டமுமாம், தம்மினமுமாம்.

92-3. களிறுகளை நெடுந்தூரத்திற் சென்றுறைகின்ற சேனையின் பாற் செல்லும்படி விலக்கிவிடுவீர்களாக வென்று கூறி.

பி-ம். 1 றிறைகொண் டண்டு. 2 புகாஅர் நின்னகத்தோரெனை. 3 ஆணை யிகத்த லடக்கவேண்டி, சேணிசகந் துறைந்தன்ற சேனைகட் கறையென.

வேந்துபிழைத் தகன்ற வினைவ ராயினும்
சேர்ந்தோர்த் தப்பிய செறுந ராயினும்
கலங்கவர்ந் தகன்ற கள்வ ராயினும்
நிலம்பெயர்ந் துறைதல் நெடுந்தகை வேண்டான்
தொகுதந் தீண்டிக் கிளைஞ ராகிப்
புகுதந் தீகவிப் புனலாட் டகத்தெனச்
சாற்றிடக் கொண்ட வேற்றுரி முரசம்
திருநகர் மூதூர்த் தெருவுதோ றெருக்கி
மெய்காப் பிளைய ரல்லது கைகூர்ந்
திடைகொள வரினு மிருபத் தொருநாட்
படைகொளப் பெறாஅப் படிவத்[1] தானையன்

(பிடியின் சிறப்பு)

தாழ்புனற் றாரையுந் தமரொடு தருக்கும்
நாழிகைத் தூம்பு நறுமலர்ப் பந்தும்

---

94. வினைவர் - தொழிலையுடையோர்.

95. செறுநர் - தண்டிக்கப்படுவோர்.

96. கலம் - அணிகலங்கள்; பெருங். ௧. 47 : 39-40.

94-7. வினைவர் முதலியோராயினும் இந்நிலம்விட்டு இச்சமயத்தில் வேறிடத்துச் சென்றுறைதலை அரசன் விரும்பான்.

98. தொகுதந்து ஈண்டி - கூடி நெருங்கி.

99. புகுதந்தீக - புகுதுக.

100. ஏற்றுரி முரசம் - புலியை வென்ற ஏற்றின் தோல்போர்த்த முரசம்; பெருங். ௧. 43: 195; புறநா. ௨௮௮; மணி. ௧ : 29-31; சீவக. 2142, 2152. 101. எருக்கி - தாக்கி.

102. மெய்காப்பு இளையர் அல்லது - அரசனுடைய உடம்பைப் பாதுகாத்தற்குரிய வீரர்கள் கொள்ளலாமேயன்றி.

103. இடை - படைக்கலங்களைக் கொள்ளவேண்டிய சமயம். நீர் விழாவிற்குரிய காலம் இருபத்தொரு நாளென்பது, "முழுநீர் விழவின் மூவெழு நாளும்" (பெருங். ௧. 40: 380) என்பதனாலும் விளங்கும்.

104. படிவம் - வேடம்.

105. தாரை - நீர்வீசு கருவிகளுள் ஒன்று; பெருங். ௧. 42 : 189.

106. நாழிகைத் தூம்பு : இஃது எந்திர நாழிகை எனவும் வழங்கும் (பெருங். ௧. 41 : 18.) மலர்ப் பந்து - மலர் வடிவமாகவுள்ள

பி - ம். 1 தானையென்.

சுண்ண வட்டுஞ் சுழிநீர்க் கோடுமென்
றெண்ணிய பிறவு மிளையோர்க் கியைந்த
புனலகத் துதவும் போகக் கருவி
பணையெருத் தேற்றிப் பண்ணின வாகி
மாலையு மணியு மத்தகப் பட்டும்
கோதையு மணிந்த கோல முடையன
திருநீ ராட்டினுட் டேவியர்க் காவன
மேவிய வனப்பொடு மிசைபிறர்ப் பொருதன
பாக ரூரப் பக்கஞ் செல்வன
ஆரூட் டிளம்பிடி யாயிரத் தங்கட்
குறும்பொறை மருங்கிற் குன்றம் போல
இருநில நனைப்ப விழிதரு கடாத்துக்
கைம்மிகக் களித்த கவுள தாயினும்
செயிர்கொண் மன்னர் செருவிடத் தல்ல
துயிர்நடுக் குறாஅ வேழம் பண்ணி

(பிரச்சோதனன் பொய்கைக் கரைக்கு வருதல்)

அரசுகை கொடுப்ப வண்ணுந் தியலிக்

---

மட்டத் துருத்தி; "பொதிபூம் பந்தி னெதிர்நீ ரெறிந்தும்" (க. 42: 191) என்பர் பின்னும்; பலமலர் வடிவமெழுதப் பெற்ற பந்துமாம்.

107. சுண்ணவட்டு - சுண்ணநீர் பொதிந்தவட்டு (பெருங். க. 41: 14); "வண்ணநீர் கரந்த வட்டுவிட் டெறிவோர்" (பரி. கக.) கோடு - கொம்பு; மருப்பெனவும் வழங்கும்.

106-7. நாழிகைத் தூம்பு, பந்து, வட்டு, கோடு என்பன நீர்வீசு கருவிகள்.

108. பிற - அரும்பு, சந்தனம், நெட்டி முதலியவற்றாற் செய்த சக்கரம், வாள், வேல் முதலியவை; பெருங். க. 41: 9-13; பரி. கக.

109. போகக்கருவி - இன்பநுகர்ச்சிக்குரிய சாதனப்பொருள்கள்.

110. பணை யெருத்தேற்றி - பருத்த பிடரியிலமைத்து; 124; 58:15.

114. வனப்பொடு - அழகையுடையனவாயிருத்தலுடன். பிறர் - தேவியரல்லாதாரை.

117. குறும் பொறை - சிறுமலை. குன்றம்: இங்கே பெருமலை.

120-21. போரிற் பகைவரை நடுங்கச் செய்வதன்றி ஏனையுயிர்களை வருத்தாததென்று வேழத்தின் சீலச் சிறப்புக் கூறியவாறு.

கடிகை யாரங் கழுத்தின் மின்னப்
பயிர்கொள் வேழத்துப் பணையெருத் திரீஇக்
கடவுட் கல்லது காறுளக் கில்லது
தடவுநிலை நிழற்றிய தாம வெண்குடை
ஏந்திய நீழற் சாந்துகண் புலர்த்திய
பரந்த கவரிப் படாகைச் சுற்றத்
துயர்ந்த வுழைக்கலத் தியன்ற வணியின்
முந்நீ ரொலியின் முழங்கு முரசமொ
டின்னீர் வெள்வளை யலறு மார்பின்
மைத்துன மன்னரு மந்திரத் துணைவரும்
அத்துணை சான்றவந்த ணாளரும்
சுற்றுபு சூழ முற்றத் தேறிப்
பிடியும் வையமும் வடிவமை பிடிகையும்
பெருந்தே ரொழுக்கிற் பிணங்கிய செலவின்
வண்ண மகளிர் சுண்ணமொடு சொரியும்

---

123. கடிகையாரம் - நாழிகையைப் புலப்படுத்தும் கருவியை யுடைய ஆரம்; "கடிகைவா ளார மின்ன" (சீவக. 2808); கடியார மென இக்காலத்து இப்பெயர் வழங்குகின்றது.

124. பயிர்கொள் வேழம் - பாகர் தனக்குக் கூறும் பேச்சை யறிந்து கொள்ளும் யானை; "களிறவன், தங்கிய பயிர்த்தொழி றடக்கை யாற் செய்ததே" சீவக. 1834.

125. கடவுள் - வழிபடு கடவுள்; முனிவருமாம். கால்துளக்கு - காம்பை வணக்குதல்.

125-6. "பணியிய ரத்தைநின் குடையே முனிவர், முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே" புறநா. ௬.

128. கவரிப்படாகை - சாமரைக் கூட்டம்; கவரிகட்டிய பெருங் கொடியுமாம்.

129. உழைக்கலம்-பக்கத்தில் வைத்துக்கொள்ளுதற்குரிய பொன் வெள்ளி முதலியவற்றாற் செய்த பாத்திரங்கள் (பெருங். ௧. 39 : 58 ; 56 : 197); "மங்கல வுழைக்கல மருங்கு சேர்ந்தன" (சூளா. குமார. 19.) அணியின் - மகளிர் திரளோடு.

132. மைத்துன மன்னர் - மைத்துன முறைமை பாராட்டற்குரிய அரசர்; "மைத்துன மன்னர் மால்களி றேறிப் புடைசூழ" (சீவக. 2333.) 136. தேரொழுக்கு - வண்டின் செலவு.

137. வண்ணமகளிர் - அலங்காரம் செய்யும் பெண்கள்.

மலர்தூ மாட மயங்கிய மறுகின்
நாட்பெரு வாயி னுறுநீ ராத்திரை
வாட்கெழு நெடுந்தகை வளம்பட வெழலும்

(அரசன் மனைவியர் புறப்படல்)

உயவக் கொண்ட வோவியத் தண்டிகை
இயைகொள் வெள்ளியொ டிரும்பியாப் புறுத்து
வான்கொடிப் பவழமொடு வல்லோர் வகுத்த
ஆன்கட் சந்தனத் தரிக்கவறு பரப்பி
முத்து மணியுஞ் சித்திரத் தியற்றிப்
பத்தி பயின்ற கட்டகக் கம்மத்து
மருப்பிடைப் பயின்ற மாசறு மணித்தொழிற்
பரப்பமை பலகையொடு பாசுணங் கோலி
ஐவகை வண்ணமு மாகரித் தூட்டிக்
கைவினை நுனித்த கச்சணி கஞ்சிகை
பசும்பொன் குயின்ற பத்திப் போர்வை
அசும்பிற் றேயா வலர்கதி ராழி
பாடின் படுமணி [1] யூடுறுத் திரங்க

---

138. தாம் - தாவும்.

139. நாட்பெரு வாயில் - சில விசேட நாட்களில் மட்டும் செல்லுதற்குரிய பெரிய வாயில்.

140. வாட்கெழு நெடுந்தகை - பிரச்சோதனன்; சண்டி தேவியைக் குறித்துக் கடுந்தவஞ் செய்துபெற்ற வாளையுடையவனாகலின், இவ்வாறு கூறப்பட்டான். [சிவிகை.

141. உயவ - வருந்த. ஓவியத் தண்டிகை - சித்திரமெழுதிய

144. ஆன்கட்சந்தனம் - பசுவின் கண்போன்ற நிறத்தையுடைய சந்தனம். கவறு - கைமரம்; 248. [பாடு.

146. கட்டகக்கம்மம் - சிற்றறைகளாகச் செய்யப்பட்ட வேலைப்

148. பலகையொடு - பலகையால். பாசுணம் - பக்கம்.

149. ஆகரித்து - சேர்த்து. 150. கஞ்சிகை - உருவுதிரை.

151. பத்திப் போர்வை - பத்திக் கீற்றையுடைய போர்வை.

152. ஆழி - உருளை.

153. பாடு இன் படுமணி - ஓசை இனிதாகிய ஒலிக்கின்ற மணி; முருகு. 115; கந்த. திருவிளை. 12.

பி - ம். [1] ஊடுறத்திரங்க.

மாலை யணிந்த மணித்தொழிற் பாண்டியம்
நூல்பிணித் தின்னுக நோன்சுவற் கொளீஇக்
கோல்கொள் கன்னியர் மேல்கொண் டேறி
விசிபிணி யுறுத்த வெண்கோட் டூர்தி
முரசெறி முற்றத்து முந்துவந் தேறும்
அரச மங்கைய ரடிமிசைக் கொண்ட
கிண்கிணி மயங்கிய தண்பெருங் கோயிற்

(நீர்விழாவிற்காகக் கொண்டு செல்லும் பண்டங்கள்)

[1] கடைப்பகச் செப்பே கவரி குஞ்சம்
[2] அடைப்பைச் சுற்றமொ டன்னவை பிறவும்
அணிகலப் பேழையு மாடை வட்டியும்
மணிசெய் வள்ளமு மதுமகிழ் குடமும்
பூப்பெய் செப்பும் புகையகி லறையும்
சிப்பிடு சிக்கமுஞ் செம்பொற் கலசமும்
காப்பியக் கோசமுங் கட்டிலும் பள்ளியும்
சுட்டிக் கலனுஞ் சுண்ணகக் குற்றியும்
வட்டிகைப் பலகையும் வருமுலைக் கச்சும்

---

154. பாண்டியம் - எருது ; 32, 243.

156. மகளிரூர்திக்குக் கன்னியர் கோல் கொள்ளுதலை, "பாகனை யொழித்துக் கூன்மகள் கோல்கொள" (பெருங். ௩. 5: 97) என்பதனாலும், "கொள்வார் கோல்கொள்ள" (பரி. ௧௧) என்பதன் உரையாலு முணர்க. 157. கோடு - யானைத்தந்தம் ; 180.

161. கடைப்பகச்செப்பு-உள்ளகத்துக் கடைந்திருத்தலையுடைய செப்பு. குஞ்சம் - ஈயோட்டி. 162. அடைப்பை - வெற்றிலைப்பை.

163. வட்டி - கடகப்பெட்டி ; 285.

165. அறை - துண்டம். 166. சிக்கம் - உறி.

167. காப்பியக்கோசம் - காப்பியமெழுதிய புத்தகங்கள் ; கோசம் - தொகுதியுமாம். பள்ளி - படுக்கை

168. குற்றி - குறிய வாயையுடைய பாத்திரம்.

169. வட்டிகைப்பலகை-சித்திரமெழுதுதற்குரிய பலகை ; "வட்டிகை மணிப்பலகை" சீவக. 1107.

பி - ம். 1 கடப்பகம். 2 அடைப்பச்.

முட்டிணை வட்டு முகக்கண் ணாடியும்
[1] நக்கிரப் பலகையு நறுஞ்சாந் தம்மியும்
கழுத்திடு கழங்குங் கவறுங் கண்ணியும்
பந்தும் பாவையும் பைங்கிளிக் கூடும்
யாழுங் குழலு மரிச்சிறு பறையும்
தாழ முழவமுந் தண்ணுமைக் கருவியும்
ஆயத் துதவு மரும்பெறன் மரபிற்
போகக் கலப்பையும் பொறுத்தனர் மயங்கிக்
கூனுங் குறளு மாணிழை மகளிரும்
திருநுத லாயத்துத் தேவிய ரேறிய
பெருங்கோட் டூர்திப் பின்பின் பிணங்கிச்
செலவுகண் ணுற்ற பொழுதிற் பலருடன்

(தேவியர் செயல்)

பண்டிவ் வாழ்வினைத் தண்டியுங் கொள்வோர்
இன்றிந் நங்கை கண்டதை யுண்டுகொல்

---

170. முட்டிணை வட்டு - ஒன்றையொன்று சேர்ந்துள்ள இரட்டை வட்டு; நீர்வீசு கருவி; சீவக. 2950.

171. நக்கிரப்பலகை - முதலைவடிவாகச் செய்த பலகை.

172. கழங்கு - கழற்காய் வடிவமாகச் செய்த ஆபரணம் (பெருங். க. 46 : 212.) கவறு - சூதாடு கருவி.

173. பெருங். க. 34 : 160-64.

174. 'யாழுங் குழலும் பறையு மியம்பினூர்' தொல். களவி. சூ. 47, உரை; நன். சூ. 388, மயிலை. மேற்.

174-5. ஒ. பெருங். க. 37 : 90-91.

177. போகக்கலப்பை - இன்ப நுகர்ச்சிக்குரிய பல பொருள்; கலப்பை - கலவைச் சாந்துமாம்; இது போகக்கலவை யென்றும் வழங்கும்; பெருங். உ. 18 : 108.

178. கூன் - வளைந்த வடிவமுடையது; குறள் - மிகக் குறுகிய வடிவ முடையது; இவ்விரண்டும் சேர்த்தே வழங்கப்படும்; "கூன்களுங் குறளும்" சீவக. 764.

180. பெருங்கோட்டூர்தி : (157.) 182. தண்டியும் - அலைத்தும்.

183. நங்கை - வாசவதத்தை. கண்டதை யுண்டுகொல் - கண்ட புதுமை ஏதேனுமுண்டோ?

பி - ம். 1 நத்திரப்பலகை.

பாணி செய்தனள் காண்மின் சென்றெனை
ஏறிய வையத் தெடுத்த கஞ்சிகைத்
தேறுவா மதியிற் றிருமுகஞ் சுடரக்
கதிர்விரற் கவியலுட் கண்ணிணை பிறழ
நெருக்குறு சுற்றத்து விருப்பி னோக்கி
ஒட்டிழை மகளிரை விட்டனர் நிற்பச்

(வாசவதத்தையின் செயல்)

[1] சுட்டுருக் ககிலின் வட்டித்துக் கலந்த
வண்ண விலேகை நுண்ணிதின் வாங்கி
இடைமுலை யெழுச்சித் தாகிப் புடைமுலை
முத்திடைப் பரந்த சித்திரச் செய்கொடி
முதலின் முன்னங் காட்டி நுதலின்
சுட்டியிற் றோன்றிய சுருளிற் றாகி
வித்தகத் தியன்றதன் கைத்தொழில் காட்டி
இன்னிசை வீணை யன்றியு நின்வயின்
உதயண நம்பி யோவியத் தொழிலின்
வகையறி யுபாயமும் வல்லை யாகெனத்

---

184. பாணி செய்தனள் - தாமதித்தலைச் செய்தாள். சென்று காண்மின் - போய்க் கண்டு அழைத்து வாருங்கள்.

186. பூரண சந்திரன்போல.

187. விரற் கவியலுள் - விரல்களின் கவித்தற்குக் கீழே.

188. நோக்கி - வாசவதத்தை வந்தனளோவென்று நோக்கி. சென்று காண்மினென (184) மகளிரை விட்டனர் நிற்ப (189.)

190. சுட்டுருக்கு அகிலின் - நெருப்பிற் சுட்டுருக்கிய அகிற் குழம்பின்; "எரியுருக்ககில்" (பரி. கஅ : 53.) வட்டித்து - குழைத்து.

191. இலேகை - எழுதுகோல்; இலேகிகை யென்பதன் திரிபு; உ. 2 : 213.

192 - 6. "சண்பக மாலை வேய்ந்து சந்தனம் பளிதந் தீற்றி, விண் புக நாறு சாந்தின் விழுமுலைக் காம வல்லி, கொண்டெழுந் துருவு காட்டி முகத்திடைக் குளித்துத் தோண்மேல், வண்டளி ரீன்று சுட்டி வாணுதல் பூப்ப வைத்தான்" (சீவக. 1081.) சேனாபதியின் மகளுடைய மார்பில் வாசவதத்தை ஒரு பூங்கொடி எழுதினமை இவற்றாற் கூறப்பட்டது.

199. வல்லை - வன்மையுடையாய்.

பி - ம். 1 சுட்டிருக்கலவின.

தந்தது முண்டோ பைந்தொடி கூறென
உற்ற புருவத் தொராஅ ராகி
முற்றிழை மகளிர் முறுவல் பயிற்றச்
செழுங்குரன் முரசிற் சேனா பதிமகள்
ஒருங்குயிர் கலந்த வுவகைத் தோழியை
நறுநீர்க் கோலத்துக் கதிர்நலம் புனைஇயர்
நீடகத் திருந்த வாசவ தத்தையை
நீசெலற் பாணிநின் றாய ரெல்லாம்
தாரணி வையர் தலைக்கடை நிறீஇ
நின்றனர் திருவே சென்றிடு விரைந்தென
விளங்குபொன் னறையுள விழுநிதிப் பேழையுள்
இளங்கலந் தழீஇ யெண்ணிமெய்ந் நோக்கித்
தோழியர்க் கெல்லா மூழூழ் நல்கி
வதுவை வைய மேறினள் போலப்

**(பதுமகாரிகை உட்கோளும் செயலும்)**

புதுவது மகிழ்ந்த [1] புகற்சிய ளாகிப்
பதும காரிகை மகண்முக நோக்கித்
தனித்துஞ் சேனைப் பணித்துறைப் படியின்
நீரின் வந்த காரிகை நேர்த்தது

---

200. தந்ததும் - கற்பித்ததும்; உம்மை, இறந்தது தழீஇயது.
201. உற்ற புருவம் - விம்மிதத்தால் தடித்து நெற்றியிலேறிய புருவம்.
205. நீர்க்கோலம் - நீராடச் செல்லுதற்குரிய வேடம். புனைஇயர் - புனைதற்கு.
206. நீடகத்திருந்த - நெடுநேரம் உள்ளே இருந்த (சீவக. 281.) வாசவதத்தையை நோக்கியென ஒரு சொல் வருவிக்க.
207. பாணி - காலம். 210. பேழை - பெட்டி.
212. ஊழூழ் - முறை முறையே.
213. வதுவை - கலியாணம். 214. புகற்சி - விருப்பம்.
215. பதுமகாரிகை - இராசமாதேவி; எழுவாய்.
216 - 7. உஞ்சேனை - உச்சைனி நகரம். தனித்துப் படியினென்க. காரிகை நேர்த்தது - பாற்கடலிலிருந்து தோன்றிய திருமகளின் தோற்றத்தை ஒத்ததாகும்.

பி - ம். 1 புகழ்ச்சியள்.

துகடீ ரிருந்தவத் துணிவின் முற்றி
முகடுய ருலக முன்னிய முனிவரும்
கண்டாற் [1] கண்டவாங் கதிர்ப்பின வாகித்
தண்டாப் பெருந்துயர் தருமிவள் கண்ணென
உண்மலி யுவகைய ளாகித் தன்மகள்
இனவளை யாயத் திளையர் கேட்பப்
புனல்விளை யாட்டினுட் போற்றுமின் சென்றென
ஓம்படைக் கிளவி பாங்குறப் பயிற்றி
ஆங்கவ ருள்ளு மடைக்கல நினக்கெனக்
காஞ்சன மாலைக்குக் கைப்படுத் தொழிந்தபின்

(வாசவதத்தை புறப்படல்)

ஏற்ற கோலத் தியம்புங் கிண்கிணி
நூற்றுவர் தோழியர் போற்றியல் கூறத்
தெய்வச் சுற்றத்துத் திருநடந் ததுபோற்
பையென் சாயலொடு பாணியி னொதுங்கி
உறைத்தெழு மகளிரொடு தலைக்கடை சார்தலும்

(வையத்தின் சிறப்பு)

யவனக் கைவினை யாரியர் புனைந்தது
தமனியத் தியன்ற தாமரை போலப்

---

219. முனிவர் - இங்கே சித்தர்; சைன வழக்கு; "முனிமை முகடாய மூவா முதல்வன்" சீவக. 1609.

220. அவாம் - விரும்பும். கண் தவாக் கதிர்ப்பினவென்ற பாடத்திற்கு, கண்கள் அவ்விடத்தைவிட்டு நீங்கச்செய்யாத ஒளியையுடையனவென்று பொருள் கொள்க. கதிர்ப்பினவாகி - ஒளியையுடையனவாய். 222. தன் மகளுடைய.

223. இளையர் - இளைய கன்னியர்.

225. ஓம்படைக்கிளவி - பாதுகாப்புச் சொல். பயிற்றி - பலகாற் சொல்லி.
பதுமகாரிகை, நோக்கி (215) உவகையளாகிச் (222) சென்று போற்றுமினென்று (224) பயிற்றிக் (225) கைப்படுத்து ஒழிந்தபின் (227.)

230. தெய்வச் சுற்றத்து - தெய்வ மங்கையருடைய கூட்டத்தில்.

231. பாணி - கால அளவு. 232. தலைக்கடை - முதல்வாயில்.

233. யவனதேயத்துத் தச்சர்; "யவனத்தச்சரும்" க. 58 : 40.

பி - ம். [1] கண்டவாக்.

பவழமு மணியும் பல்வினைப் பளிங்கும்
தவழ்கதிர் முத்துந் தானத் தணிந்தது
விலைவரம் பறியா வெறுக்கையுண் மிக்க
தலையள வியன்றது தனக்கிணை யில்லது
தாயொடு வந்த தலைப்பெரு வையம்
வாயின் முற்றத்து வயங்கிழை யேறப்
பாத பீடிகை பக்கஞ் சேர்த்தலும்
செந்நூல் விசித்த நுண்ணுக நுழைந்த
இலக்கணப் பாண்டியம் வலத்தி னெற்றிக்
கண்ணி பரிந்து [1] கடிக்குளம் பிளகலும்
பண்ணிய வையம் பள்ளி புகுகென
மூதறி பாக னேற வியையான்
இலக்கண மின்றென விலக்கினன் கடிய

(மாடச்சிவிகையின் சிறப்பு)

ஆடகப் பொற்கவ றணிபெறப் பரப்பிக்
கூடங் குத்திய கொழுங்காழ்க் கேற்ப
நாசிகைத் தானத்து நகைமுத் தணிந்து
மாசறு மணிக்கான் மருப்புக் குடமிரீஇ
அரக்குருக் கூட்டிய வரத்தகக் கஞ்சிகைக்

---

236. தானத்து - உரிய இடங்களில். 237. வெறுக்கை - பொன்.
239. தாயொடு வந்த - வாசவதத்தையின் தாய்க்கு ஸ்திரீதனமாக வந்த. வையம் - வண்டி. 240. வயங்கிழை - வாசவதத்தை.
241. பாத பீடிகை - கால்களையுடைய பீடப் பலகையை.
240 - 41. ஏறும்பொருட்டுச் சேர்த்தலும்.
243. வலத்தின் - வன்மையினால்; வலப்பக்கத்திலென்றுமாம்.
244. பரிந்து - அறுத்து. இளகல் - வழுக்கல்.
245. பள்ளி - கொட்டில். 246. இயையான் - உடன்படானாகி.
248. கவறு - கைம்மரம். கவறு முதலியன மாடச்சிவிகைக்கு அடை.
250. நாசிகை - சிவிகையின் ஓர் உறுப்பு; மூக்கணையென்று [வழங்கும்.
251. மருப்புக்குடம் - யானைத் தந்தத்தாற்செய்த குடமென்னும் உறுப்பு.

பி - ம். 1 கழிக்குளம்பிளக்கலும்.

கரப்பறை விதானமொடு கட்டி லுடைப்பது
கோதை புனைந்த மேதகு வனப்பின்
மல்லர் பூண்ட மாடச் சிவிகை
பல்வளை யாயத்துப் பைந்தொடி யேறலும்
செய்யோ ளமர்ந்த செம்பொற் றாமரை
வள்ளிதழ் பொதிந்த கொட்டை போல
மெல்லியன் மாதரை யுள்ளகம் புகுத்தி
மல்லற் பெருங்கிளை செல்வுழிப் படர

(காவலர் முரசறைதல்)

முனிவ ராயினு மூத்தோ ராயினும்
எனையீர் பிறரு மெதிர்வரப் பெறீரென
வானுறை யுலகினும் வையக வரைப்பினும்
தான [1] விளைவினுந் தவத்தது பயத்தினும்
எண்ணரும் பல்லுயி ரெய்தும் வெறுக்கையுட்
பெண்டிருண் மிக்க பெரும்பொரு ளின்மையின்
உயிரெனப் படுவ துரிமை யாதலிற்
செயிரிடை யிட்டது செல்வன் காப்பென
ஆறுகடி முரச மஞ்சுவரக் கொட்டிக்
காவ லாளர் காற்புறஞ் சுற்றப்
புயன்மலை [2] தொடுத்துப் பூமலர் துதைந்து

(மகளிர் பொய்கைத் துறையைச்சேர்தல்)

[3] வியன்கா மண்டிய வெள்ளம் போல
மாட மூதூர் [4] மறுகிடை மண்டிக்
கோடுற நிவந்து மாதிரத் துழிதரும்

---

253. கரப்பறை - மறைந்திருத்தற்குரிய அறை.

258. கொட்டை வாசவதத்தைக்கு உவமை.

264. விளைவு - பயன். 265. வெறுக்கை - செல்வம்.

267. உரிமை - உரிமை மகளிர்; தேவியர்; அவர்கள் சிறந்தனரென்பது, “உரிமைமுன் போக்கி யல்லால்” (சீவக. 272) என்பதனாலும் விளங்கும்.

269. ஆறுகடி முரசம் - வழிச் செல்வோரை விலக்கும் பேரிகை.

271. தொடுத்து - தொடங்கி.

274. கோடு - மலைச்சிகரம். மாதிரம் - திசைகள்; மலையுமாம்.

பி - ம். 1 வளைவினுந். 2 கொடுத்துப். 3 வியன்கர். 4 மறுகிட.

கொண்மூக் குழாத்திற் கண்ணுற மயங்கி
ஒண்ணுதன் மகளி ரூர்தி யொழுக்கினம்
புள்ளொலிப் பொய்கைப் பூந்துறை முன்னித்
தண்பொழில் கவைஇய சண்பகக் காவிற்
கண்டோர் மருளக் கண்டத் திறுத்த

(பிரச்சோதனன் செயல்)

விழாமலி சுற்றமொடு வெண்மணை லேறி
நாளத் தாணி வாலவை நடுவண்
நிரந்தநீர் விழவினு ளிரந்தோர்க் கீக்கெனப்
பன்னீ ராயிரம் பசும்பொன் மாசையும்
குவளைக் கண்ணியுங் குங்குமக் குவையும்
கலிங்க வட்டியுங் கலம்பெய் பேழையும்
பொறியொற் றமைந்த குறியொடு கொண்ட
உழைக்காப் பாள ருள்ளுறுத் தியன்ற
இழைக்கல மகளி ரிருநூற் றுவரொ
டியாழறி வித்தகற் கூர்தி யாவது
கண்டுகொண் மாத்திரை வந்தது செல்கெனத்
தனக்கென் றாய்ந்த தலையிரும் பிடிகளுள்
இலக்கணக் கருமமெட்டா முறையது
மதியோர் புகழ்ந்த மங்கல யாக்கையொடு
விதியோர் கொளுத்திய வீரிய முடையது

---

277. முன்னி - கருதி. 278. கவைஇய - சூழ்ந்த.

279. கண்டத்து இறுத்த - கண்டத்திரைகளினிடையே தங்கிய.

281. வாலவை - தூய சபை.

283. மாசை-ஒருவகை நாணயம்; "தமனிய மாசை" (க. 39 : 11) என்பர் பின்னும்.

284. குங்குமக்குவை - குங்குமம் வைத்திருக்கும் பரணி; 42 : 66.

285. கலிங்கம் - ஆடை. வட்டி - ஒரு வகைப்பெட்டி; 163.

283-5. மாசை முதலியவற்றிற்கு ஐயுருபு விரிக்க.

286. பொறியொற்று - முத்திரை; 37 : 209.

289. யாழறிவித்தகன் - உதயணன்.

291. இதுமுதற் பத்திராபதி யென்னும் பிடியின் இயல்பு கூறப் [படுகின்றது.

293. மங்கல யாக்கை : 314.

சேய்ச்செல ஞென்பரிச் சிலச் செய்தொழிற்
பூச்செய் கோலத்துப் பொலிந்த பொற்படை
மத்தக மாலையொடு மணமகள் போல்வ
துத்தரா பதத்து மொப்புமை யில்லாப்
பத்திரா பதியே பண்ணிச் செல்கென
உதயண குமரற் கியைவன பிறவும்
[1] உழைக்கல மெல்லாந் தலைச்செல விட்டு
வல்லே வருகவில் லாளன் விரைந்தென

(உதயணன் செயல்)

விட்ட மாற்றம் பெட்டனன் பேணிச்
சென்ற காட்சிச் சிவேதனைக் காட்டிப்
பொன்னறை காவலர் பொறிவயிற் படுகெனச்
செண்ண மகளிர் செப்பிற் காட்டிய
வண்ணஞ் சூட்டின கண்ணியிற் கிடந்த
பனிப்பூங் குவளை பயத்தின் வளர்த்த
தனிப்பூப் பிடித்த தடக்கைய னாகி
நெடுநிலை மாநகர் நில்லான் போதந்
திடுமணன் முற்றத் திளையரு ளியன்று
படுமணி யிரும்பிடிப் பக்க நண்ணிப்
பொலிந்த திருவிற் பொற்புடைத் தாகி
மலிந்த யாக்கையின் மங்கல மிக்கதன்
வனப்பிற் கொவ்வா வாழ்விற் றாகி

---

295. சேய் - நெடுந்தூரம். 296. படை - முதுகிடுமெத்தை.

298. உத்தராபதம் - வடநாடு; யானை பிறக்கும் இடங்களுள் இமயமும் விந்தமும் சிறந்தனவென்பர்.

299. பத்திராபதி - ஒரு பிடியின் பெயர்.

293-9. பெருங். க. 42: 226-9. 301. தலை - அவனிடத்தே.

302. என - என்று அரசன் சிவேதனிடம் சொல்லியனுப்ப.

306. செண்ணம் - வடிவு. [சீவக. 429, 1887, 2358.

308-9. குவளைப் பூவை அரசர்கள் கைக்கொள்ளுதல் மரபு;

310. மாநகர் - அரண்மனையில்.

312. பிடி - பத்திராபதி. 314. =293.

பி - ம். [1] இழைக்கல.

வாழ்நா ளற்ற வகையிற் றாயினும்
கணைச்செல வொழிக்குங் கடுமைத் திதுவென
மனத்திற் கொண்ட மதிய னாகிக்
கண்டே புகன்ற தண்டா வுவகையன்
தாரணி யிரும்பிடி தலைக்கடை யிரீஇ
ஏரணி யெருத்த மிறைமக னேறலும்

(குதிரைகள்)

தூய்மை யின்றென மாநிலத் தியங்காக்
கடவு ளியக்கங் கற்குவ போலக்
குளம்புநில னுறுத்தலுங் குறையென நாணிக்
கதழ்ந்துவிசை பரிக்குங் கால வாகி
உரத்தகைப் பொற்றா ரரற்று மார்பிற்
பந்துபுடை பாணியிற் பொங்குமயிர்ப் புரவி

(தேர்கள்)

மருங்கிரு மணிப்புடை நிரந்துடன் மிளிர
நான்முகங் கவைஇய வான்செய் பச்சைய
தானச்செங் கோட்டுத் [1] தோன்மணைப் படுத்த
சித்திரத் தவிசிற் செறிந்த குறங்கிற்

---

317. கணைச்செலவு - அம்பின் வேகம். கடுமைத்து - வேகத்தை யுடையது.

319. புகன்ற - விரும்பிய. 320. இரீஇ - இருத்தி. [படா.

323. கடவுளியக்கம் - தேவர் நடையை; அவர்கால்கள் பூமியிற்

326. பொற்றார் - பொன்னாலாகிய கிண்கிணிமாலை. பந்துபுடை பாணி - பந்தையடிக்கும் தாளவோசை; "பந்து புடைப்பன்ன பாணிப் பல்லடிச், சில்பரிக் குதிரை" (அகநா. க0ரு); "பந்துபுடை பாணி யெனப் பாயுங் கலிமான்", "கந்துகப் புடையிற் பொங்குங் கலினமா" சீவக. 846, 1050.

322-7. "பாரிற் றேர்செலிற் பழிபெரி துடைத்தென நாணிச், சோரும் வார்புய றுளங்கவிண் புகுவன துரகம்", "அடிநில முறுத லணி யருவருத்து......பாய்மாப் பறந்தன" சீவக. 2160, 2525.

329. கவைஇய - சூழ்ந்த. பச்சை - தோல்.

330. தோல்மணை - தோல் மூடிய பலகை.

பி - ம். 1 தொன்மனைப்.

பொற்றொடர் பொலிந்த பூந்துகிற் கச்சைய
கத்திகை சிதர்மணி கட்கத்துத் [1]தெரிப்ப
வித்தக நம்பியர் பக்கத்து வலித்த
[2] கானத்துக் குலைந்த கவரி யுச்சிய
தானைத் தலைப்படை பாணியிற் பரிப்ப
அச்செறி புலவ ரளவுகொண் டமைத்துக்
கட்க நுனித்த கடைக்கட் டிண்ணுகம்
கொய்சுவ லிரட்டை மெய்யுறக் கொளீஇ
ஒட்டிடை விட்ட கட்டின வாயினும்
ஒன்றினின் றியங்காச் சென்றிடை கூடுவ
மாயங் காட்டுநர் மறையப் புணர்த்த
கோவை நாழிகைக் கொழூஉக்கண் கடுப்ப
வடுச்சொ னீங்கிய வயங்கிய வருணத்
திடிச்சொற் பொறாஅ விலக்கண வினையர்
உள்ளுறக் கோத்த வள்புகொள் வலித்தொழிற்
பாகர் நின்ற பண்ணமை நெடுந்தேர்
ஆக..........................புறஞ்சுற்றக்
காலியற் புரவியொடு களிறுபல பரப்பிப்
பால குமரர் படையகப் படுப்ப

---

332. தொடர் - சங்கிலி.

331-2. தவிசினையும் குறங்கினையும் கச்சையையுமுடையன.[ஒன்று.

333. கத்திகை - ஒருவகைமாலை. கட்கம் - இங்கே தேருறுப்பில்

335. கவரி உச்சிய - சாமரை கட்டிய உச்சியையுடையன.

336. பாணி - தேரிலுள்ள கையென்னு முறுப்பு.

338. கட்கம் - ஒரு புண்ணிய மிருகம். நுனித்த - நுனியிற் செய்யப்பட்டுள்ள. [பொருத்தி.

339. கொய்சுவலிரட்டை - இரட்டைக் குதிரைகள். கொளீஇ -

343. கடுப்ப - ஒப்ப.

345. இடிச்சொல் - நெருங்கியுரைக்குஞ் சொல்.

346. வள்பு - வார்.

கடுப்பக் (343) கோத்த வள்புகொள் (346) பாகர் (347.)

350. பாலகுமரர் - இராசகுமாரர்.

பி - ம். 1 தெறிப்ப. 2 கலினத்துக்.

உருவச் செங்கொடி தெருவத்துப் பரப்பிச்
செருமிகுந் தாமமொடு சேனையிற் கூடி
மன்னவ னிருந்த தண்பொழிற் காவிற்
சென்றிறுத் தனரா னம்பிய ரொருங்கென்.

௩௮.—விழாவாத்திரை முற்றிற்று.

353. பொழிற்கா - பெருமையை யுடைய சோலை; "கதலிவனந் தழுவுபொழிற் சோலைக் காளூட்டு முள்ளூர்" தேவாரம்.
354. நம்பியர் - உதயணன் முதலானவர்.

## ௩௯.—புனற்பாற்பட்டது.

(பிரச்சோதனன் செயல்)

நம்பியர் கூடிய நாளவை மருங்கிற்
கம்பலைப் பந்தர்க் காழகில் கழுமிய
திருநா ளிருக்கைத் திறல்கெழு வேந்தன்
பெருநீ ராட்டணி பெட்கும் பொழுதெனச்
செம்பொற் படத்துப் [1] பேறுவலித் திருந்த
மங்கலக் கணிகண் மாதிர நோக்கிப்
புரைமீன் கூடிய பொழுதியல் கூற
இருப தியானையு மெண்பது புரவியும்
அருமணி மான்றே ரையைந் திரட்டியும்
ஒருநூ றாயிரத் தொருகழஞ் சிறந்த

௩௯. புனற்பாற்பட்டது.

[கணிகள் நீராடுதற்குரிய நல்ல முகூர்த்தம் வந்தமையை அறிவிக்க அரசன் முதலியோர் நீராடச் சென்றதும் அப்பொழுது அவர்கள் சிறந்த பலவகைத் தானங்களைச் செய்ததும் இப்பகுதியால் அறியலாகும்.]

1. நாளவை - இங்கே விடியற்கால ஓலக்கம்.
3. திருநாள் - நீர்விழவு. 4. பெட்கும் - விரும்புகின்ற.
5. பொற்படத்துப் பேறு - பொன்னுடை பெறுதலை.
6. மாதிரம் - ஆகாயம். 7. புரைமீன் - உச்ச நட்சத்திரம்.
4-7. எனக் கணிகள் கூற.

பி - ம். 1 பேடு.

தமனிய மாசையொடு தக்கணை யுதவிக்
கடவது நிறைந்த தடவளர் செந்தீ
ஒடியாக் கேள்விப் பெரியோ ரீண்டிய
படிவக் குழுவினு ளடிமுதல் வணங்கி
ஆசை மாக்களொ டந்தணர் கொள்கென
மாசை வாரி மன்னவ னாடி
அறிஞர் தானத் தாயிரம் [1] பொற்பூக்
கருவிநிலைப் பள்ளிக்குத் தொழுதனன் போக்கிச்
சுண்ணம் விரவிய சுரியிரும் பித்தைக்
கண்ணி நெற்றி வெண்சூட் டேற்றித்
தூத்துகி லுடுத்துத் தொடியுடைத் தடக்கைக்
கோத்தொழி லிளையர் பூப்பலி கொடுத்துச்
செம்பொ னெல்லின் செங்கதிர் சூட்டி

---

11. மாசை - உழுந்து நிறையளவுள்ள ஒருவகை நாணயம்; 35:76, அடிக்.

12. தட - ஓமகுண்டம்; 'தடவு'என்பதன் விகாரம்; "வடபான் முனிவன் றடவினுட் டோன்றி" புறநா. உ0க.

14. படிவம் - தவ வேடம். 15. ஆசைமாக்கள் - ஆதுரர்.

16. மாசைவாரி - பொற்கடல்; மிகுதிபற்றி 'மாசைவாரி' என்றார்; பொன்னில் ஆடுவதை இரணியகருப்பமென்பர்.

15-6. "ஆசை மாக்களொ டந்தணர் கொள்கென, மாசை மாக்கடன் மன்னவ னாடலின்" (சீவக. 911) என்பதையும் அதன் விசேடக் குறிப்பையும் பார்க்க; மன்னவன் ஆடிய பொன் ஆதுரர் முதலியோர்க்குக் கொடுக்கப்படும்; திருவனந்தபுரத்து அரச பரம்பரை முதலியவற்றில் இக்காலத்தும் இது நடைபெறுகின்றது.

17. அறிஞர் தானத்து - அறிஞர்க்குச் செய்யும் தானத்துடன்.

18. கருவி - சேவிப்போர்களின் தொகுதி. பள்ளி - கோயில்.

17-8. பொற்பூக்களைப் போக்கி.

20. கண்ணி நெற்றியர் : 32 : 67, அடிக்.

19-20. பித்தையிலும் நெற்றியிலும் சூட்டை ஏற்றி; பித்தை - தலைமயிர். கண்ணி : நெற்றிக்கு அடை. சூட்டு - ஒருவகை மாலை.

22. பூப்பலி: மணி. எ : 121 ; சூளா. சுயம். 210, துறவு. 47.

23. பொன்நெல் - பொன்னிறச் செந்நெல் (நாலடி. 269); கனகச் சம்பாவுமாம் (இராமா. உத்தர. சந்திரகேது. 65.) முரசிற்குக் கதிர்

பி - ம். [1] பொற்பூச் சுருவி.

வெண்டுகி விட்ட விசய முரசம்
பண்டிய லமைந்த படுகட னெல்லாம்
தண்டொழிற் செங்கோ றலைத்தலை சிறக்கென
வெந்திறல் வேந்தன் [1] விட்டிவை கூறக்
கண்டொரு பாணியிற் கடல்கிளர்ந் ததுபோற்
பல்படை மொய்த்த மல்லற் பெருங்கரை
மழைமலைத் தன்ன மாணிழை மிடைந்து
வம்புவிசித் தியாத்த செம்பொற் கச்சையர்
மாலை யணிந்த கோல்செய் கோலத்துப்
பூப்போ துறுத்த மீப்பொற் கிண்கிணி
இடுமணிப் பெருநிரை நெடுமணிற் கிடைஇ
இரும்புறம் புதைய வெழின்மறைந் திருந்த
கருங்காற் கானத்துக் கண்மணிக் குழாத்திடை
ஏற்றரி மாவின் றேற்றம் போல
மின்னிழை மகளிரொடு மன்னவன் றோன்றி
விசைய [2] வேழத் திசையெருத் தேற்றிப்
பெருவிறல் வேந்தன் சிறுவரை யெல்லாம்
ஓடுநீர்ப் பெருந்துறை யுள்ளம் பிறந்துழி

---

சூட்டுதலை, "கண்ணதிர்பு முழங்குங் கடுங்கதிர் முரசமொடு" (பதிற்.) என்பதனாலும் உணர்க.

24. வெள்ளிய துகிற் சேக்கைக்கண்ணே வைக்கப்பெற்ற வெற்றி முரசத்திற்கு; "எண்ணெய், நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை" புறநா. ௫o.

25. எல்லாஞ் செய்கென ஒரு சொல் வருவிக்க.

27. வீடென்னும் பாடத்துக்கு அப்போதிருக்கும் படைவீடெனப் பொருள் கொள்க.

31. வம்பு - அரைக்கச்சு. பொற்கச்சை - பொன்னுடை.

32. கோல் - திரட்சி.

33. போது உறுத்த - மலரும் பருவமுள்ள அரும்பை யொத்த.

34. கிடைஇ - கிடந்து.

36. மகளிர் கூட்டத்தைக் கானமென்றார், மிகுதிபற்றி.

38. மகளிர் - இங்கே பட்டத்துத் தேவிமார்.

40. எல்லாச் சிறுவரையும் நோக்கியென ஒரு சொல் வருவிக்க.

பி - ம். 1 வீட்டிவை. 2 வேழத்தசை.

ஆடுக போயென் றவர்களை யருளி
உதயண குமரனு முவந்துழி யாடித்
துறைநகர் விழவின் றேற்ற மெல்லாம்
பரந்த செல்வங் காண்கெனப் பணித்துப்
புரிந்த பூவொடு பொற்சுண்ணங் கழும
எழுந்த வார்ப்பொ டியம்பல துவைப்பப்
புண்ணியப் பெருந்துறை மன்னவன் படிந்தபின்

(நகரமாந்தர் செயல்)

இறைகொண் டீண்டிய வேலை மாந்தரும்
துறைதுறை தோறு முறைவிடம் பெறூஅர்
தண்புன லாட்டின் றக்கணை யேற்கும்
அந்த ணாள ரடைக விரைந்தெனப்
பயினூ லாளரைப் பயிர்வனர் கூஉய்க்
கவர்வனர் போலக் [1]காதலி னுய்த்து
நன்கல மேற்றி நாளணி யணிந்து
மங்கல வேள்விபுண் மகளீ வோரும்
செம்பொற் புரிசை வெண்சுதை மாடத்
துழைக்கலம் பரப்பி யுருவிய மகளிரொ
டிழைக்கல நிறீஇ யில்லீ வோரும்
ஆலைக் கரும்பு மரியுறு செந்நெலும்

---

46. கழும - மயங்க. 47. இயம் - வாத்தியம்.

49. இறைகொண்டு - தங்குதல் கொண்டு.

53. பயிர்வனர் கூஉய் - கூவி யழைத்து.

54. உய்த்து - கொடுத்து.

58. உழைக்கலங்கள் - பக்கத்தில் வைத்தற்குரிய பாத்திரங்கள்; "பொன்மயமா முழைக்கலங்கள் பொலிந்துதோன்ற" (சீவக. 2369.) உருவிய - அழகிய.

59. இழைக்கலம் நிறீஇ - ஆபரணங்களையும் நிலைபெறச் செய்து. இல் - வீடு.

60. ஆலைக்கரும்பு - ஆலையாட்டுதற்குரிய பருவத்தையுடைய கரும்பு; "ஆலைக் கலமருந் தீங்கழைக் கரும்பே" (மலை. 119.) அரியுறு - அறுத்தற்குரிய பருவ முற்ற.

பி - ம். 1 காவலின்.

பாளைக் கமுகின் படுவுஞ் சுட்டிப்
புயல்சே ணீங்கினும் பூவளங் குன்றா
வயலுந் தோட்டமும் வழங்கு வோரும்
நாகுசூ னீங்கிய சேதாத் தொகுத்துக்
குளம்புங் கோடும் விளங்குபொன் னுறீஇத்
தளையுந் தாம்பு [1] மளைகடை மத்தும்
கழுவுங் கலனும் வழுவில பிறவும்
பைம்பொனி னியன்றவை பாற்பட வகுத்துக்
குன்றாக் கோடி கொடுத்துவப் போரும்
இன்னவை பிறவு மென்னோர்க் காயினும்
உடையவை தவாஅக் கொடைபுரி படிவமொ
டிலமென் மாக்களை யிரவொழிப் பவர்போற்
கலங்கொடை பூண்ட கைய ராகி
வெண்டுகில் பூட்டிய வேழக் குழவியும்

---

61. கமுகின்படு - பாக்குமரத்தின் படுகை; படு : பயனுமாம்.

62. பூ - பூமி.

64. நாகு - பாலுண்ணுதலை விட்ட கிடாரி; "பான்மறை நாகு" (பெரிய. ஆனாய. 11.) நாகு நீங்கிய சேதா, சூல் நீங்கிய சேதாவென்க; என்றது கறவைப் பசுக்களை. 65. உறீஇ - உறச்செய்து.

66. தளை - பின்கால் பிணிக்குங் கயிறு. அளை - தயிர்.

67. கழு - கறத்தற்கரிய பசுக்களைக் கறத்தற்கு இரண்டுதலையையுஞ் சீவி மாலையாக அவற்றின் கழுத்திலிடப்படும் மூங்கிற் பிளப்பின் கோப்பு : "கழுவொடு சுடுபடை" (கலி. ௧௦௬) ; "கழுவொடு பாகர் கலங்காமல் யாத்துத், தொழுவிடை யாயர் தொழுமின்" (தொல். புறத் சூ. 3, ந. மேற்.) கலன் - கறவைக்கலன் முதலியன.

69. கோடி - பல. 71. படிவம் - விரதக் கோலம்.

72. "இலனென்னு மெவ்வ முரையாமை யீதல், குலனுடையான் கண்ணே யுள" (குறள், 223) என்பதும், அதன் உரையிற் பரிமேலழகர் பிறர் கூறுவனவாக எழுதும் உரைகளுள், 'யான்வறியனென்று இரப்பான் சொல்லு மிளிவரவைப் பிறனொருவன்பாற் சென்று அவனுரையா வகையாற் கொடுத்தல்' என்பதுவும் இங்கே கருதற்குரியன.

73. கலங்கொடை - ஆபரணத்தைக் கொடுத்தல்; "கலங்கொடை கடவரய்" 37 : 142.

74. வேழக்குழவி - யானைக்கன்று ; 36 : 165-7. பி - ம்.

பி - ம். [1] அளைகடனமத்து.

ஒண்படை யணிந்த வண்பரிப் புரவியும்
உண்டியு முடையுங் கொண்டகஞ் செறித்த
பண்டியு மூர்தியுங் கொண்டன ருழிதந்
தந்தணர் சாலையு மருந்தவர் பள்ளியும்
தந்தற மருங்கிற் றலைவைப் போரும்
நிலம்பெய் வோரு நிதிபெய் வோரும்
களிறுபெய் வோரும் பரிபெய் வோரும்
பெய்வோர் பெய்வோர் [1] பெயர்வறக் குழீஇக்
கொள்வோ ரறியாக் குரல ராகி
மணற்கெழு பெருந்துறை மயங்குபு தழீஇ
வனப்பொடு புணர்ந்த வகையிற் றாகிப்
புனற்பாற் பட்டன்று பூநகர் புரிந்தென்.

௫௧. புனற்பாற்பட்டது முற்றிற்று.

---

75. படை - சேணம்; பரி - வேகம்.
77. பண்டி - வண்டி, ஊர்தி-மற்றை வாகனங்கள். உழி தந்து - சுழன்று திரிந்து. 80. நிதி - பொற்றிரள். 86. புரிந்து - விரும்பி.
பி - ம். 1 பெயர்வுற.

---

## ௪0—உவந்தவைகாட்டல்.

புரிந்த சுற்றமொடு புணர்ந்துடன் கெழீஇ
விரிநீர்ப் பொய்கையுள் விளையாட்டு விரும்பிய
மறுநீங்கு சிறப்பின் மதிலுஞ் சேனை
நறுநீர் விழவி னுளணி கூறுவென்

---

௪0. உவந்தவை காட்டல்.

[நீராடச் சென்ற நகர மாந்தர் அங்கங்கே தத்தமக்கு மிக்க மகிழ்ச்சியைத் தந்த காட்சிகளைத் தம்மவர்க்குக் காட்டிச் சொல்லுவதும் பிறவும் இதனால் அறியலாகும்.]

2. விரி - யோசனை யகலம் விரிந்த; 38 : 74 - 5.

3. மதிலுஞ்சேனை - மதிலாற் சிறப்பெய்திய உச்சயினிநகரம்; 80. 4. கூறுவெனென்றது கவியின் கூற்று.

இது முதல் உள்ளவை, விழாக்காணச் சென்றோர் அங்கங்கே நிகழும் நிகழ்ச்சிகளைக் கண்டு காட்டுவன. இந்தப் பகுதிகள், "ஒன்றேயுயிரையுடையீர்" (சீவக. 917) என்பது முதலியவற்றைப் போல்வன.

(நீர்மாடத்தின் சிறப்பு)

[1] பனையும் வெதிரும் பாசிலைக் கமுகும்
இனையன பிறவும் புனைவனர் நாட்டிக்
கிடையும் பீலியு மிடைவரித் [2] தழுத்தி
மிடைவெண் டுகிலி னிடைநிலங் கோலி
அரிச்சா லேகமு மார வள்ளியும்
கதிர்ச்சா லேகமுங் கந்துங் கதிர்ப்ப
வம்பப் படத்துப் பொன்னுருக் கூட்டி
அள்ளிலை வாழை யகம்போழ்ந் திறுத்த
வெள்ளி வெண்டிரள் வேண்டிடத் தூன்றிக்
கட்டளை நாசியொடு கபோதங் காட்டி
எட்டிறை யெய்திய விலக்கணக் காட்சி
ஏரணி யமைந்த வெழுநில [3] நல்வினை
நீரணி மாடத்து நிலாநெடு முற்றத்

---

5 - 23. ஒருதொடர்.

5 - 17. நீரணிமாட வருணனை : பெருங். க. 42 : 28 - 39.

5. வெதிர் - சிறு மூங்கில்.

7. கிடை - நெட்டி; "வெண்கிடை மிதவையர்" (பரி. கூ.) பீலி-மயிலின் கலாபம். வரிந்து - வரிந்து கட்டி; வரிச்சுக் கழிகளுமாம்.

8. மிடை - நெருங்கிய.

9. அரிச்சாலேகம் - மான்கண் போன்ற சாளரம்; அரி - மான்; ஆகுபெயர் (42 : 37); "மான்கட் காலதர் மாளிகை யிடங்களும்" (சிலப். ரு : 8.) ஆரவள்ளி - முத்துக் கோத்த பொற்கொடிகளாலாகிய சாளரம்; அன்மொழித் தொகை; வள்ளி - கொடி; "குளிர்தரள மென் சாளர முகப்பில்" இராமா. உத்தர. சந்திரகேது. 25.

10. கதிர்ச்சாலேகம் - இருப்புக் கம்பிகளையுடைய சாளரம்.

11. வம்பப்படத்து - புதியபடத்தில். உரு - வடிவம்; "படம் புனைந் தெழுதிய வடிவு" சீவக. 1439. [சகூ0.) அகம் - மரம்.

12. அள்ளிலை - செறிந்த இலை; "தகையிலை வாழை" (ஐங்.

13. வெள்ளி வெண்டிரள் - மிக வெள்ளையாகிய வாழைத்தண்டு; "தண்டு தழுவாத் தாவுநீர் வையையுள்" பரி. கக. [கள் ; 42 : 37.

14. நாசி, கபோதமென்பன மாடத்தின் உறுப்பு விசேடங்

15. எட்டு இறை - எட்டுமூலை; "முடங்கிறை" முல்லை. 87.

16. ஏரணி - எழுச்சியையுடைய அழகு. எழுநிலம் - எழு தளம்.

17. நீர்மாடம்: 39; "நீரணி காண்போர் நிரைமாட மூர்குவோர்"

பி - ம். 1 பணையும். 2 எழுதி. 3 நல்வினை.

(நாரையின் செயல்)

தரிப்பொற் கிண்கிணி யார்ப்ப வியலிக்
கருங்கண் மகளிர் கைபுடைத் தோப்ப
இருங்கண் விசும்பக மிறகுறப் பரப்பிக்
கருங்கயல் கொண்ட கவுள வாகிப்
பொங்கிரும் புன்னைப் பூம்பொழின் முன்னிச்
செங்கா ணரை செல்வன காண்மின்

(ஒரு பிடியின் செயல்)

சாந்தரை............யன கூலப் பெருங்கடை
ஈண்டிய மாதரை யீண்டிடந் தம்மினெம்
பூங்குழை மாதர் [1] புனலகம் புக்கனள்
ஆங்கியன் றவளைத் தாங்குந ரில்லெனக்

---

(பரி, கo: 27, பரிமேல்.) ; "நீரணி மாடத்து நெடுந்துறை போகி" (சிலப். கo. 215) ; "நீரணி மாட வாவி" (சீவக. 2654) ; இம்மாடம் பள்ளியோடமென்றும் வழங்கப்படும்.

18. அரிப்பொற் கிண்கிணி - தவளையின் வாய்போன்ற வாயை யுடைய பொற்சதங்கை ; அரி - தவளை ; "தவளைக் கிண்கிணி ததும்புசீ றடியர்", "தவளையங் கிண்கிணி" (பெருங். க. 46 : 246, ௩. 9 : 167); "தவளை வாய பொலன்செய் கிண்கிணி" (குறுந். கசஅ.); "தேரைவாய்க் கிண்கிணி" (கலி. அகூ: 9); "தவளைக் கிண்கிணி" (சீவக. 243, 3126.) இயலி - நடந்து ; "மென்மெல வியலி" (மதுரை. 608.)

19. புடைத்து ஓப்ப - தட்டி ஓட்ட.

23. ஓரடை ஒரு சினையையும், ஒருசினை ஒரு முதலையும் அடுத்து வருதற்கு, 'செங்கால் நாரை' என்பது மேற்கோள் ; தொல். கிளவி. சூ. 26, சே. ந; நன். சூ. 402 மயிலை ; ஷை சூ. 403, சங்கர.

20 - 23. "இறவருந்தி யெழுந்த கருங்கால் வெண்குருகு வெண்குவட் டருஞ்சிறைத் தாஅய்க் கரைய, கருங்கோட்டுப் புன்னை யிறைகொண் டனவே" நற். கூஎ.

24 - 36. ஒரு தொடர். 24. கூலம் - கரை, கடைத்தெரு.

25. மாதரை நோக்கி. இடம் தம்மின் - இடங் கொடுங்கள்.

26. மாதர் - என் தலைவி.

பி - ம். [1] புகலகன்.

கூந்த னறுமண் சாந்தொடு கொண்டு
நானச் செப்பொடு கூன்பின் றுளங்கப்
பெருங்கோ நங்கை பெட்ப வேறிய
இருங்கை யிளம்பிடி கடச்செருக் கெய்திக்
கடிற்றுப் பாகன் கைப்புழிச் செல்லாது
தொடிக்கை மகளிர் நீர்குடை வெரீஇய
நெட்டிரும் பொய்கைக் குட்ட மண்டி
ஒளிச்செந் தாமரைப் பாசடைப் பரப்பிற்
களிக்கய விரியக் குளிப்பது காண்மின்

(ஒரு பெண்ணின் செயல்)

ஞாழற் படுசினை தோழியர் நூக்க
ஆம்பற் பரப்பிற் பாய்ந்த பைந்தொடி
செண்ணச் சிகழிகைப் பின்னிடை சேர்ந்த
பொன்னரி மாலைதன் [1] புறம்பிடைப் புடைப்பச்
செற்றப் புதவு குத்தி வாங்கிக்
கொழுநன் கூந்தல் கொண்டெனக் கருதிக்

---

28. கூந்தனறுமண் - கூந்தலிற் றேய்த்துக் கொள்ளும் மணமுள்ள மண்; "கூழைக் கேர்மண் கொணர்கம்" குறுந். ககரு.

29. கூன் - கூனிகள். 30. பெருங்கோநங்கை - பெருந்தேவி.

31. பிடி - பெண்யானை; கடச்செருக்கு - மதச்செருக்கு; 32: 34.

32. கடிற்றுப்பாகன் - யானைப்பாகன். "கடிறுபல திரிகானதர்" (திவ். பெரியாழ்வார். ௩. 2 : 6.) கைப்புழி - செலுத்தும் இடத்து; "நுகமின்றி விளாக்கைத்து" திருவா. அதிசய. 8.

33. நீர்குடை வெரீஇய - நீர்குடைதற்கு வெருவ.

34. குட்டம் - ஆழம். மண்டி - மேற்சென்று.

37 - 51. ஒரு தொடர்.

37. குங்கும மரக்கொம்பை அசைத்தலால். [பின் - பின்னல்.

39. செண்ணம் - வடிவு; "செண்ணமாகிய சிகழிகை" (41 : 61.)

40. பொன்னரிமாலை: (பெருங். உ. 3: 72 - 3, 19: 75 - 6; சீவக. 2528, 2663.) புறம்பு - முதுகு.

41. செற்றப் புதவு - தணியாக் கோபமாகிய கதவை. குத்தி வாங்கி இடித்து நீக்கி. 42. கொண்டென - கொண்டானென்று.

பி - ம். 1 புணர்படைப்.

கழூஉநீ ருண்கட் கடையி னோக்கி
அன்மையி [1] னமுங்கிய நன்னுத லுவப்ப
வள்ளிலைப் பரப்பின் வள்பெறிந் தன்ன
துள்ளியல் வட்டிகை துடிப்பிற் கடைஇ
உள்வழி யுணரா துழிதருங் கணவன்
நனிபெருங் காதலொடு நண்ணுவழி யடையப்
பனிவா ருண்கண் பைதன் மறைய
முகிழ்ந்துவீங் கிளமுலை முத்திடை நாற்றிக்
கவிழ்ந்தெருத் திறைஞ்சுமோர் காரிகை காண்மின்

(ஒரு தூங்கின் செயல்)

நீலக் குவளை நிரையித ழுடுத்த
கோலப் பாசடைப் பால்சொரிந் தன்ன
தூவெள் ளருஞ்சிறைச் சேவலொ டுளரிப்
பள்ளி யன்னம் பகலிற் றுயிலா
வெள்வளை மகளிர் [2] முள்குவநர் குடையும்
நீரொலி மயக்கிய வூர்மலி பெருந்துறைக்
கடற்றிரைக் கண்டங் கானற் குத்தி
மடற்பனை யூசலொடு மாட மோங்கிய
உருவ வெண்மணற் பெரு [3] வெண் கோயிலுட்

43. கட்கடையின் - கடைக்கண்ணால். 45. வள்பு - வார்.

46. வட்டிகை - பரிசில். கடைஇ - செலுத்தி.

47. உழிதரும் - சுழலும்.

49. பைதல் - பசலை; பிரிவாலுண்டாயது.

50. முகிழ்ந்து - அரும்பி; "முகிழ்ந்துவீங் கிளமுலை முத்தந் தைவரும்" (சீவக. 1004.) 51. ஓர் காரிகை - ஒரு மங்கை.

52 - 76. ஒரு தொடர்.

53 - 4. பால் சொரிந்தன்ன சிறையையுடைய அன்னம்; "பானிறச் சேவல்" (33 : 32.) உளரி - வகிர்ந்து.

56. முள்குவநர் குடையும் - முழுகி விளையாடும்.

58. கடற்றிரைக் கண்டம் - கடலலையைப்போன்ற கண்டத்திரை.

59. பனையூசல் - பனைமரத்திற் கட்டிய ஊசல்.

60. பெரு வெண்கோயில் - பெரிய வெள்ளிய அரண்மனை.

பி - ம். 1 அழுக்கிய. 2 முழுகுவனர். 3 வேண்...

செம்பொற் கிண்கிணிச் சேனா பதிமகள்
கம்பற் சுற்றமொடு கன்னியர் காப்பப்
பைந்தொடிக் கோமா னங்கையர் நடுவண்
வண்டுளர் ரைம்பால் வாசவ தத்தை
அரைச மங்கைய ராயமொடு கெழீஇ
நிரைவெண் மாடத்து நீரணி காணிய
போதரு மென்னுங் காதலின் விரும்பிப்
பெருங்காற் புன்னைக் கருங்கோட் டணைத்த
நாவாய் பண்ணு மாவிறன் மள்ளர்க்குக்
கள்ளடு மகடூஉக் கைசோர்ந் திட்ட
வெள்ளி வள்ளம் பல்லுறக் கவ்விக்
கூடக் கூம்பி னீடிர ளேறி
உச்சிக் கிவருங் கட்கின் கடுவன்
வீழ்ந்த திங்களை விசும்புகொண் டேறும்
தெய்வ மகாஅரி னையுறத் தோன்றித்
துள்ளுபு திரிதருந் தோற்றங் காண்மின்

61. சேனாபதி மகள் : 38 : 203, 42 : 170.

63. கோமானங்கையர் - பெருந்தேவியர் ; கோமான் - தலைவி (பெருங். ௩. 8 : 59, 9 : 33.); 'கோமான் கூறீர்' (நன். சூ. 304, மயிலை. மேற்.) 64. மு. 235.

65. அரசமங்கையருடைய ஆயம்.

66. வெண்மாடம் : 42 : 18. காணிய - காணுதற்கு.

68. அணைத்த - கட்டிய.

69. மள்ளர் - இளைய வினைஞர் ; பள்ளருமாம். பண்ணும் - செப்பஞ் செய்யும், அலங்கரிக்கும். [குந் துறைவ" நற். ௩௪௰.

68-9. "அம்பி......புன்னையங் கொழுநிழல், முழவுமுதற் பிணிக்

70. கள்ளடுமகடூஉ - கள்ளைக் காய்ச்சி விற்பவள் ; 'இடு' எனப் பாடங் கொண்டு கள்ளை விலக்கு இடுபவளெனினும் பொருந்தும்.

71. வள்ளம் - கிண்ணம்.

72. கூடக் கூம்பு - மேற்றளத்துள்ள பாய்மரம்.

73. கட்கின் கடுவன் - கண்ணுக்கினிய ஆண் குரங்கு.

75. தெய்வ மகாஅர் - தேவகுமரர்.

73-5. "மகாஅ ரன்ன மந்தி" (சிறுபாண். 56) ; "கோடியர் மகாஅ ரன்ன......கடுவன்" மலைபடு. 236-7.

(ஒரு களிமகன் செயல்)

சுழலுங் [1] கண்ணினன் சோர்தரு மாலையன்
அழனறுந் தேற லார மாந்திக்
காழக மீக்கொண் டாழுந் தானையன்
வாழ்க வாழ்கவெம் மதிலுஞ் சேனை
மட்டுண் மகளிர் சுற்றமொடு பொலிகெனத்
துட்டக் கிளவி பெட்டவை பயிற்றிக்
கட்பகர் மகடூஉக் கட்குடை யோசையும்
கன்னமர் பள்ளிக் [2] கம்மிய ரிடிக்கும்
பன்மலர்க் காவி னம்மனை வள்ளையும்
குழலும் யாழும் மழலை முழவமும்

---

77-98. ஒரு தொடர்.

78. அழனறுந்தேறல் : 160 ; அழல் - வெப்பம் ; "வெப்புடைய மட்டுண்டு" புறநா. ௨௪.

79. காழகம் - கரிய ஆடை. ஆழும் - கீழே நழுவுகின்ற.

80. மதிலுஞ்சேனை : 3.

82. துட்டக்கிளவி - ஒழுங்கீனமான சொற்கள். பெட்டவை - தான் விரும்பியவற்றை. 81 - 2. பெருங். ௨. 8 : 64.

83. கட்பகர் மகடூஉ - கள் விற்பவள். கட்குடை - கள்ளை அரிக்கின்ற.

84. கன் - தொழில் ; "கன்னடைந்த மதிற் பிரமபுரம்" (தே) ; "கன்னார் மதில்சூழ் குடந்தைக் கிடந்தாய்" (திவ்.) கம்மியர் - தொழில் செய்வோர்; கன், கல்லுமாம் ; பெருங். ௨. 17 : 17.

85. அம்மனைவள்ளை - ஒருவகை உலக்கைப்பாட்டு (பெருங். ௨. 14 : 52) ; "பைம்பொ னறைமேற் பவழ முரலாக, வம்ப மணிபெய்து வான்கேழ் மருப்போச்சி, அம்பொன் மலைசிலம்ப வம்மனை வள்ளையுடன், கம்பஞ்செய் யானைக் கரியவனைப் பாடினார்" (சூளா. சுயம். 106) ; மலைபடு. 342, அடிக்.

86. மழலை முழவம் - மழலைச் சொற்போன்ற இனிய ஓசையையுடைய மத்தளம்; "மழலை வீணையர் மகிழ்திரு வலஞ்சுழி" (தே.); "மழலைக்குழல்" (சீவக. 2480) என மழலையென்பது சிறப்பான்மை வாச்சியங்கட்கும் கூறப்படும். 87. முட்டு - குறைவு.

பி - ம். 1 கண்ணின். 2 கம்மியரடிக்கும்.

முட்டின் றியம்பும் பட்டின மொரீஇத்
துறக்கங் கூடினுந் துறந்திவ ணீங்கும்
பிறப்போ வேண்டேன் யானெனக் கூறி
ஆர்த்த வாய வூரக்களி மூர்க்கன்
செவ்வழிக் கிதஞ் சிதையப் பாடி
அவ்வழி வருமோ ரந்த ணாளனைச்
செல்ல லாணை நில்லிவ ணீயென
எய்தச் சென்று வைதவண் விலக்கி
வழுத்தினே முண்ணுமிவ் வடிநறுந் தேறலைப்
பழித்துக் கூறுநின் பார்ப்பனக் கணமது
சொல்லா யாயிற் புல்லுவென் யானெனக்
கையலைத் தோடுமோர் களிமகற் காண்மின்

(சிலமகளிர் செயல்)

பல்காசு நிரைஇய வல்குல் வெண்டுகில்
ஈரத் தானை நீரிடைச் சோரத்
[1] தோட்டார் திருநுதற் சூட்டயற் சுடரும்
சுட்டி சிதையக் குட்டத்துக் குளித்து
மகர குண்டல மறிந்துவில் வீசக்
கிளரும் பாசிழைக் கிண்கிணிக் கணைக்கால்
அஞ்செஞ் சீறடி யஞ்சுவர வோடி

---

88. கூடினும் - எனக்குக் கிடைக்குமாயினும்.

92. அந்தணாளனை நோக்கி. 93. செல்லல் - போகாதே.

94. அவண் வைது விலக்கி.

95. வழுத்தினேம் உண்ணும் - நாங்கள் புகழ்ந்து குடிக்கின்ற.

96. கணம் பழித்துக் கூறு நிற்கும். அது - அதன் காரணத்தை.

77-98. "உண்ணு நோன்பொடு" (மணி. ரு : 90) என்பது முதலியவற்றை இவ்வடிகளுடன் ஒப்பிடுக. 99-107. ஒரு தொடர்.

99. காசு - மணி. "பூந்துகிற், பல்காசு நிரைத்த சில்கா ழல்குல்" (முருகு. 15-6 ; அகநா. எ௬.) 100. சோர - நழுவ.

101. தோடார் சூட்டெனை இயைக்க ; தோட்டார் : விகாரம் ; சிலப். சு௬. 198.

பி - ம். 1. கோட்டார்.

நிரைவளை மகளிர் நீர்குடை வெரீஇப்
புரைபூங் கொண்டையிற் [1] புகைப்பன காண்மின்

(மயிலின் செயல்)

கருங்காற் புன்னையொ டிருங்கரும் புடுத்து
நாணல் கவைஇய கான லொருசிறை
மகிழ்பூ மாலையொடு [2] மருதிணர் மிடைந்த
அவிழ்பூங் கோதையொ டவிரிழை பொங்க
எக்கர்த் தாழை நீர்த்துறைத் தாழ்ந்த
நெடுவீ ழூசன் முடிபிணி யேறித்
[3] தொடுவேன் முற்றத்துத் தோழியொ டாடாப்
பட்டியல் கண்டத்துப் பலர்மனங் கவற்றவோர்
எட்டி குமர னினிதி னியக்கும்
இன்னொலி வீணைப் பண்ணொலி வெரீஇ
வஞ்சிக் கொம்பர்த் துஞ்சரித் துளரி

---

106. நீர்குடைவு ஒரீஇ. [தலை.

107. கொண்டையிற் புகைப்பன - கூந்தலுக்கு அகிற்புகையூட்டு

108 - 20. ஒரு தொடர்.

108. இருங்கரும்பு - பேய்க்கரும்பு. 109. கவைஇய -சூழ்ந்த.

110. மகிழ்பூ : வினைத்தொகை ; தொகுத்தலாக்கி மகிழம்பூ வென்றலும் பொருந்தும் ; உ. 12 : 131.

111. கோதை - கூந்தல். பொங்க - எழுந்து அசைய ; "நிரைத்தார் பொங்க" சீவக. 645.

112-3. தாழை வீழ் ஊசல் - தாழை விழுதைத் திரித்தமைத்த ஊசல் ; "தடமலர்த் தண்டாழை வீழூச றூங்கப்பெறின்" (கலி. ௧௩௧); தாழை விழுதின் கயிற்றாற் சமைத்த ஊசலும் கூறப்படும் ; "ஓங்குசினைத் தொடுத்த கொடுங்கழித் தாழை வீழ் கயிற்றூச றூங்கி" அகநா. ௨௦.

115. பட்டால் இயன்ற பல்வண்ணத் திரை ; "பட்டியன்ற கண்டத்திரை" சீவக. 647 ; பெருங். ௧. 37 : 103, அடிக்.

116. எட்டி குமரன் - எட்டிப் பட்டம்பெற்ற வணிக குமரன் ; "எட்டி குமர னிருந்தோன் றன்னை" (மணி. ௪ : 58.) எட்டியென்னும் பட்டம் : உ. 3 : 144.

118. வஞ்சிக் கொம்பர் - வஞ்சி மரத்தின் கிளையில். துஞ்சரித்து உளரி - விழித்துக்கொண்டு இறகை அலகால் வகிர்ந்து ; துஞ்சு - தூக்கம்.

பி - ம். 1 புடைப்பன. 2 மருதிணர். 3 தொடிவெண்.

ஒளிமயிர்க் கலாபம் பரப்பி யிவ்வோர்
களிமயில் கணங்கொண் டாடுவன காண்மின்

(அந்தணர் செயல்)

அதிரல் [1] பரந்த வசோகந் தண்பொழின்
மணிக்கயத் தியன்ற மறுவி றண்ணிழற்
பனிப்பூங் குவளையொடு பாதிரி விரைஇ
வேதிகை யெறிந்த வெண்மணற் றிண்ணைப்
பாலிகைத் தாழியொடு பல்குட [2] மிரீஇ
முந்நீர்ப் பந்தர் முன்கடை நாட்டி

---

119. மயிர்க்கலாபம் - மகளிருடைய கூந்தலைப்போன்ற தோகை. ஓர் - ஒப்பற்ற. 120. ஆடுவன - ஆடுதலை.

121-39. ஒரு தொடர்.

121. அதிரல் - புனலிக்கொடி (முல்லை. 51, குறிஞ்சி. 75); மோசிமல்லிகையென்றுங் கூறுவர்; சிலப். கங: 156, அடியார்க்கு.

122. மணிக்கயம்-பளிங்குபோன்ற நீரையுடைய ஆழமான நீர்நிலை (பெருங். க. 55 : 2; ங. 4 : 39); "மணிமரு டெண்ணீர்......சுனை" மலைபடு. 250-51.

121-2. பொழிலினது நிழல், கயம் போன்ற நிழலென்க; "அழல் கண் ணகற்றி நிழன்மீக் கூரி, நீர்புக் கன்ன நீர்மைத் தாகி" (உ. 13 : 17-8) என்பர் பின்; "கயம்புக் கன்ன பயம்படு தண்ணிழல்" (மலைபடு. 47) என்பதையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

123. புறத்தே குவளைப்பூவையும் அகத்தே பாதிரிப் பூவையும் கலந்து.

124. மணற்பரப்பை வெட்டிச் செய்த வேதிகைபோன்ற மேட்டு நிலத்தில்; "தேனயாம் பூம்பொழிற் றிண்ணை வெண்மணல்" சீவக. 1822.

125. பாலிகைத் தாழி - பாலிகைபோல வாயகன்ற ஒருவகைத் தாழி.

126. முந்நீர்ப் பந்தர் - கடல்போலப் பரந்த பந்தர்; முந்நீர்-கடு, நெல்லி, தான்றி இம்மூன்றன்காய்கள் ஊறிய நீரென்றுமாம்; "வெப் பின் முப்பழச்சுனை" (சீவக. 75); "தேம்பழுத் தினியநீர் மூன்றும்" (சூளா. நகர். 14); இளநீரினீர், நுங்கினீர், கருப்பஞ்சாறெனினுமாம்; புறநா. உச - ஆம் பாட்டினுரையைப் பார்க்க. இது தண்ணீர்ப்பந்தர்.

பி - ம். 1 பரந்த சோகத். 2 மரீஇ.

வரைவின் மாந்தர்க்குப் புணர்பதம் பகரும்
கலம்பூச் [1] சரவத் திலஞ்சி முற்றத்துக்
கருப்புக் கட்டியொடு தருப்பணங் கூட்டி
நெய்ச்சூட் டியன்ற சிறுப லுண்டி
நகைப்பத மிகுத்த [2] கைய ராகித்
தொகைக்கணம் போதரு மறச்சோற் றட்டில்
தலையுலை வெந்த வளைவா லரிசி
வண்ணப் புழுக்க லுண்ணுநர் சிதறி
ஊட்டெமக் கீத்த கோப்பெருந் தேவி
முன்ன ராக முன்னுமின் கொண்டெனத்
தலைப்பெரு மடையனைத் தலைக்கடை வாங்கும்
எந்தயிர் வாரா னெமக்கெனச் சீறி
அந்த ணாள ரலைப்பது காண்மின்

---

127. வரைவில் - நீக்குதலில்லாத. பதம் - உணவு. பகரும் - கொடுக்கும். [இலஞ்சி - குளம்.

128. கலம்பூச்சு அரவத்து-பாத்திரம் தேய்க்கும் ஓசையையுடைய.

129. கருப்புக்கட்டி - வெல்லம். தருப்பணம் - அவல்; பெருங். உ. 9:239; "நனிதவத்தவ டருப்பண நல்கியே சென்றாள்" ஸ்ரீ வாத. மஹாபாகவதம், குசேல. 9.

130. நெய்ச்சூட்டியன்ற - நெய்யிலே வறுத்த; "நெய்ச்சூட் டமைந்த சிற்றூண்" பெருங். உ. 2 : 81.

131. நகை - ஒளி. பதம் - உணவு; "சோறுடைக் கையர் வீறுவீ றியங்கும்" (புறநா. - ௧௭௩.) 132. அட்டில் - மடைப்பள்ளி.

133. தலையுலை - முறுகிய உலைநீரில். வளைவாலரிசி - சங்குபோலும் வெண்ணிறத்தையுடைய அரிசியின்; "வளைநிற வார்செந் லரிசி" (சீவக. 824); "வரிவளை யறையின் வாலரி" வலிவலமும். ௧௦ : 38.

134. புழுக்கல் - புழுக்கிய சோற்றை; பொங்கலை.

135. ஊட்டு - உணவை.

137. தலைப்பெருமடையனை - மடையர் தலைவனை.

137 - 9. மடையனைச் சீறி அலைப்பதைதயென்க.

114 - 39. இங்கே கூறிய அறச் சோற்றட்டில் வருணனையோடு, இலாவாண காண்டம், கடிக்கம்பலை யென்னுங் காதையிற் கூறப்படு வதை (76 - 85) ஒப்பிடுக. 140 - 46. ஒரு தொடர். - 881

பி - ம். [1] சாவஞ்சிலஞ்சி. [2] கைபவாகி.

(மகளிர் குரவை)

முன்றுறை யீண்டிய குன்ற வெண்மணல்
எக்கர் மீமிசைத் தொக்கொருங் கீண்டி
நுண்ணயிர் வெண்டுகள் குடங்கையின் வாரி
இலைப்பூண் கவைஇய வெழுதுகொடி யாகத்து
முலைக்கச் சிளமுலை [1] முகத்திடை யப்பி
மராஅ மயிலின் மயங்குபு தூங்கும்
குழாஅ மகளிர் குரவை காண்மின்

(ஒரு பெண்ணின் செயல்)

புனைந்தேந் தல்குற் காசுபுதை யாது
நனைந்து நிறங்கரந்த நார்நூல் வெண்டுகில்
அரைய தாகவு மாடைகா ணாது
நிரைவளை முன்கைத் தோழியர் குடைந்த
நுரைகை யரிக்குமோர் நுடங்கிடை காண்மின்

(சிலமகளிர்செயல்)

[2] தொக்கனர் படியுந் தொய்யின் மகளிர்தம்

140. குன்ற வெண்மணல் - மணற் குன்று; "குன்ற வெண்மணலேறி நின்று" தொல். அகத். சூ. 11, ந; யா - வி. ஒழிபு. சூ. 2, மேற்.

142. நுண்ணயிர் வெண்டுகள் - மிக நுண்ணிய வெண்மணல்.

143. கவைஇய - வளைந்த. எழுது கொடி ஆகத்து - கொடிவடிவமெழுதிய மார்பில்; 220; சீவக. 850. 144. முலைக்கச்சு: பெயர்.

145. மராமயிலின் - வெண்கடப்ப மரத்திலுள்ள மயில் மயங்கி ஆடுவதுபோல; "கொடுமிட றஞ்சிலான் றூர்போன் மராத்து, நெடுமிசைச் சூழு மயிலாலும்" (கலி. ௱௪.) தூங்கும் - ஆடுகின்ற.

147 - 51. ஒரு தொடர்.

147. காசு - மேகலையிலுள்ள மணிகளை; 99.

148. நாராகிய நூலால்செய்த வெண்டுகிலானது.

150. குடைந்த - ஆடுதலாலாகிய.

151. நுரை கையரிக்கும் - நுரையை ஆடையென்று கருதிக் கையால் அரிக்கின்ற; "நுரைபுரை வெண்டுகில்", "நுரையொடு பொங்கு நுண்ணூல் வெண்டுகில்" (286, 295) என்பர்பின்.

148 - 51. சீவக. 2663, 2666-ஆம் செய்யுட்களைப் பார்க்க.

152 - 5. ஒரு தொடர். 152. தொக்கனர் - கூடி.

பி - ம். 1 முத்திடை பரப்பி. 2 தொக்குத் துறைபடியும்.

கைக்கொ ணீரிற் கண்ணிழல் கயலென
மெய்க்கண் மேவார் மெல்லெனச் சொரிதந்
தெக்கர்க் கிளைக்கு மேழையர்க் காண்மின்

(கட்குடி மகளும் அவள் காதலனும்)

நெடுநீர் மாடத் தேணி யேறிப்
பொறிமயிற் பெடையிற் பொங்குபு பாய்தலில்
அணிக்கையிற் றவழ்ந்த மணிக்குர லைம்பால்
ஈர்முத் தாகத் தீரம் புலர்த்தி
அழனறுந் தேறல் சுழல்வண் டோப்பிக்
குறிவெங் காதலன் பொறியாப் புறுத்த
தமனிய வள்ளத்துத் தன்னிழ னோக்கிப்
பிறண்முக மிதுவெனப் பெண்மையின் மயங்கிக்

---

152. தொய்யில் - சந்தனம் முதலியவற்றாலெழுதிய கோலத்தை யுடைய. மகளிர் : எழுவாய்.

154. மெய்க்கண்மேவார் - உண்மையை அறியாராய். [மகளிரை.

155. எக்கர் - அலைகள் கொணர்ந்திட்ட மணல். ஏழையர் - அம்

152 - 5. இவ்வடிகளும், "தொக்குத் துறைபடியுந் தொண்டையஞ் செவ் வாய்மகளிர் தோண்மேற் பெய்வான், கைக்கொண்ட நீருட் கருங் கண் பிறழ்வ கயலென் றெண்ணி, மெய்க்கண்ணும் பெய்கலார் மீண்டு கரைக் கேசொரிந்து மீள்வார் காணுர், எக்கர் மணற்கிளைக்கு மேழை மகளிர்த்தே யெறிநீர்க் கொற்கை" (தொல். செய். சூ. 64, பேர். ந. மேற்.) என்னும் பழைய பாடலும் சொல்லாலும் பொருளாலும் ஒத்து விளங்குதல் காண்க.

156 - 81. ஒரு தொடர்.

156 - 7. "மகளிர் நீர்பாய் மாடம்" பெருங். க. 38 : 77.

158. "காரிருங் கூந்தல் கையி லேந்தி", "அவிழ்குரற் கூந்த லங்கை யடைச்சி" (172, 195) என்பர்பின். மணிக்குரல் ஐம்பால் - நீல மணி போலுங் கொத்தாகிய கூந்தல்; "நன்மணி யைம்பால்" பெருங். க. 36 : 304; க. 37 : 216, அடிக்குறிப்.

159. ஈர்முத்து - குளிர்ச்சியை யுடைய முத்து.

160. "அழனறுந்தேறல்" 78. [பொறி: ஆகு பெயர்.

161. காதலன் பொறியாப்புறுத்த - தலைவன் பெயரை எழுதிய;

161 - 2. பொறியாப்புறுத்த வள்ளம் : "காதலான் பெயர் சுமந்த கதிர்மணி யாழி", "நாமமோதிரந் தொட்டு" சீவக. 318, 1040.

163. பெண்மை - பெண்டிர்க்குரிய இயல்பான பேதைமைக்குணம்.

கள்ளினுட் டோன்றுமிவ் வொள்ளிழை மாதரைப்
பண்டு மொருகாற் கண்டகத் தடக்கிய
வையப் பரத்தையைக் கையொடு கண்டேம்
இனிப்[1] பொய் யுண்ணு மேழைய மல்லமென்
றணித்தகு நுதல்வியர்த் தரையெழுத் தளைஇத்
துணிப்புறு கிளவி பணிக்கடற் பிறந்த
அரும்பெற லமிழ்தென விரும்பும் வேட்கையன்
முகிழ்நகை முகத்த னாகி முற்றிழை
அவிழ்குரற் கூந்த லங்கை யடைச்சிக்
கள்ளமர் தேவிநின் கதிர்விடு நெடுமுகத்
தொள்ளணி காணிய வுள்ளி வந்ததை
உணராது புலத்தல் புணர்குவை யாயினென்
உள்ளகஞ் சுடுமென வுள்ளவிழ்ந் தெழுதரும்
காமக் கட்டுரை கனியென வளைஇத்
தாமக் கோதையொடு தாழ்சிகை திருத்தி
வளர்ந்தேந் திளமுலை மருங்கிவர்ந்து கிடந்த
பொலங்கல மணிப்பூண் பொலியப் புல்லியவள்
மனங்கொளத் தேற்றுமோர் மைந்தனைக் காண்மின்

162 - 4. கள்ளுண்ட மகளிர் தம் நிழலை வேறுமகளிராக நினைந்து தடுமாறுதல் கம்ப. உண்டாட்டுப் படலம் முதலியவற்றாலும் அறியலாகும்.

165. முன்பும் ஒருமுறை அறிந்து யான் மனத்தே அடக்கிக் கொண்ட.

166. கையொடு கண்டேன் - கையோடே பிடித்துக் கொண்டேன்; "கையொடு கண்டாய் பிழைத்தே னருளினி" கலி. கூ௯ : 28.

மாதரென்றதும் (164), பரத்தை (166) யென்றதும் ஒருத்தியை.

167. ஏழையம் - அறிவின்மையை யுடையேம்.

168 - 9. எழுத்துக்களின் முழுவடிவந்தோற்றாத புலவிச்சொல்லை; "மெய்பெறா வெழுத்துயிர்க்கு மழலை" சீவக. 181.

171. முகிழ்நகை - புன்சிரிப்பு. [அடைச்சி - சேர்த்து.

172. கூந்தலைக் கையிற் சேர்த்தல் : 158, 195. குரல் - கொத்து.

173. கள்ளமர் தேவி - வாருணி யென்னும் தெய்வம்; இது கட்குடத்துடன் கடலிற் றோன்றியதென்றும் இதன் வேறுபெயர் மதிரா தேவி யென்பதென்றுங் கூறுவர். 177. அளைஇ - கலந்து கூறி.

178. சிகை - கூந்தல். 180. அவளுடைய.

பி - ம். 1 பொயுண்ணும்

(ஒரு பெண்ணின் ஊடல்)

ஏம முந்நீ ரெறிசுற வுயர்த்த
காமனும் விழையுங் காமர் காரிகைக்
கலையுணர் மகளி ருள்ளம் போல
நிலையின் றாழ்தரு நெடுஞ்சுழி நீத்தத்து
வினைதீ ருயிரின் மிதந்தது கீழாப்
பண்ணமை நெடும்புணை திண்ணிதிற் றழீஇ
ஆய மாக்களொடு சேய்வழி யோடிக்
கலந்த [1] காதலி னூடலிற் கைசோர்ந்து
மலர்ந்துகடை போழ்ந்து மாழை கழீஇக்
காமங் கனிந்த கருந்தடங் கண்ணின்
இமைதீர் வெம்பனி முலைமுக நனைப்ப

182 - 205. ஒரு தொடர்.

182. முந்நீர் எறிசுறவு - கடலுக்கேயுரிய எறிகின்ற சுறாமீன் எழுதிய கொடியை; சுறாமீன் கடலுக்கே உரியதென்பது சீவக. 95 - ஆம் பாடலாலும், “கடல் வாழ்சுறவும்” (தொல். மரபு. சூ. 40) என்பதனாலும் விளங்கும்.

183. மன்மதன் பிறமகளிரை விரும்பாத மனத்திண்மையனதலின், ‘காமனும்’ என்றார்; உம்மை உயர்வு சிறப்புப் பொருளது; “சிலை வல்லான் போலுஞ் செறிவினன்” (கலி. ௧௪௩), “இவளைத் தீண்டவும் வேட்கை நிகழாமையின், ‘அநங்கனன்றன்’ என்றார்” (சீவக. 674, உரை) என்பவை இக்கருத்தை வலியுறுத்தும். காமர் காரிகை - விருப்பம் மருவுதற்குக் காரணமான ஒரு மங்கை; 234.

184. கலை யென்பவை மணி. உ-ஆம் காதையிற் கூறப்பட்டவை; பெருங். ௧. 35 : 84-6. மகளிருள்ளம் நிலையின்றிச் சுழலுதல்: பெருங். ௧. 35 : 156-7; “உண்ணிறை யுடைய வல்ல வொராயிர மனத்த வாகும்” சீவக. 1597.

186. வினை தீர்ந்த உயிர் மேலே சென்று எல்லா உலகிற்கும் மேலதாகிய சித்தபதத்தை அடையுமென்பது சைனநூற்றுணிபு; வினைதீருயிர் புணைக்கு உவமை. 188. சேய்வழி - நெடுந்தூரமான இடத்து.

190. மாழை கழீஇ - மதர்ப்பு மிகுத்து.

191 - 2. கண்ணின் வெம்பனி - கண்ணிலிருந்து உண்டாகும் வெப்பத்தையுடைய நீர்த்துளி; காமம், பிரிவு, துன்பம் முதலியவற்றால்

பி - ம். [1] காதலியாடலிற்.

மாரிப் பிடிக்கை நால்புறல் கடுப்ப
நீர்பொறை யாற்றாது [1] நெகிழ்ந்துவீ ழிசைந்த
காரிருங் கூந்தல் கையி னேந்தி
அகலி னகலு முயிரின ளாகித்
தலைநீர்ப் பெருந்துறை நிலைநீர் நின்ற
வண்டார் கோதையைக் கண்டன ளாகி
நீணீர் நீந்தி நெடும்புணை யொழியத்
தன்வயிற் செல்லு மில்வளக் கொழுநனை
நின்வயிற் காத லில்லா தூர்தரும்
பூம்புனன் மடந்தையைப் புணர்ந்துவிளை யாடித்
தேம்பட மொழிந்து வேம்புமனத் தடக்கி
வார லோவென வாய்திறந் தமிழற்றி
ஓராது புலக்குமோ வொள்ளிழை நாண்மின்

உண்டாகும் துயரக் கண்ணீர் வெப்ப முடையதாக இருக்கும்; "மதரரி நெடுங்கண் வேற்படை கான்ற, புள்ளி வெம்பனி", "நெடுங்கண், குமிழ்த் தெழு வெம்பனி", "வீழ்தரு வெந்துளி விரலி னீக்கி", "காதலிற் கவலைப் பாசந் தட்பத், தண்டா மரைக்கண் வெம்பனி வீழ", "உருத்தரி வெம்பனி யூழூழ் சிதரி", "உள்ளழல் வெம்பனி யுகுத்தரு கண்ணீர்த், துன்பமொ டிறைஞ்சிய தம்பியர்" (பெருங். க. 33 : 123 - 4, 46 : 223 - 4; உ. 10 : 62, 123 - 4, 16 : 20; ங. 24 : 101 - 2); "இமை தீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி" (குறுந். எ : 2); "கண்கள் வெம்பனி யுகுத்த வன்றே" (சீவக. 2508); "கண்ணுகும் வெய்யநீர் வெள் ளத்து" (கம்ப. தைலமாட்டு, 2.)　　193. நால்புறல் - தொங்குதல்,

194. நீரைப் பொறுத்தற்கு வலியின்றி.

195. காரிருங் கூந்தல் - மிகக் கரிதாகிய கூந்தலை; 158, 172.

193 - 5. "பிடிக்கை யன்ன பின்னுவீழ் சிறுபுறத்து" (சிறுபாண். 191); "பிடிக்கை யன்ன பின்னகம்", "இரும்பிடித் தடக்கை மான நெய்யருந், தொருங்குபிணித் தியன்ற நெறிகொ ளைம்பால்" (அகநா. கூ : 22, கஎஎ : 4 - 5); "பிடிக்கைக் கூந்தல்" சீவக. 2668.

196. அகலின் - தான் (தலைவன்) நீங்கினால்.

203. வேம்பு-விருப்பின்மையை.　204. வாரல்-வருதலைத்தவிர்க.

202 - 5. செயலும் மொழிதலும் நினைப்பும் நினக்கு வேறு வேறெனப் புலந்தாள்; தலைவன் நீரில் வந்தது புலவிக்குக் காரணம்.

பி - ம். 1 நெகிழ்ந்து வந்திசைந்த.

(நீராடுதலின்ின்றும் விலக்கப்பட்ட
ஒரு பெண்ணின் செயல்)

நச்சுமன வேந்தர்க்குத் துச்சி லமைத்த
சிறுவலி யொருவனிற் றன்மனஞ் சுருங்கி
நறுமெல் லாக நந்துபொறை யெள்கப்
போக்கிட மின்றி வீக்கமொடு பெருகி
அம்மையு மழகுங் கொம்மையொடு கழுமிக்
கால்பரந் திருந்த கருங்கண் வெம்முலை
மேலிருந் தனயான் பொறையாற் றேனென்
றுசிவது போலுநின் னுசிநுசுப் புணரா
தினக்கிடை யிப்புனல் குடைகுவை யாயின்
நினக்கிடை மற்றொன் றுடையை யோவெனக்
காதற் செவிலி கழறுபு விலக்கவும்
போதற் கண்ணே புரிந்த வேட்கையின்
ஐயரி பரந்த வரிமலர் நெடுங்கண்
மையுண்டு மதர்த்த மணியொழுக் கேய்ப்பக்
கோல வாகத்துக் கொடிபட வெழுதிய
சாதிங் குலிக மாதி யாகச்
சுட்டிச் சுண்ணமொடு மட்டித்துக் கலந்த

206 - 31. ஒருதொடர்.

206. நச்சுமனம் - நஞ்சுபோன்றமனம்; பிறர் பொருளை விரும்பும் மனமுமாம். துச்சில் - ஒதுக்கிடத்தை. [என்றது இடையை.

207. சிறுவலியையுடைய ஒருவன் மனம் சுருங்குவது போல. 'தன்'

208. எள்க - மெலிய; "முதலை வாளெயிற்றுக் கொண்டற் கெள்கி" திவ். பெரிய. ௨. 10 : 3.

210. அம்மை - அமைதி. கொம்மை - பெருமை. கழுமி - திரண்டு.

213. நுசுப்பு - இடையின் மென்மையை.

214. இனக்கு - இனத்தார்க்கு.

215. "மருங்குலுமொன்று தாய்க்கு மொருமகள்" சீவக. 678.

216. கழறுபு - இடித்துரைத்து. [யாகத்து" 143.

220. கொடிபட - பூங்கொடியின் வடிவையொப்ப: "எழுதுகொடி

221. சாதிங்குலிகம் - சாதிலிங்கம்: (பெருங். ௨. 5 : 22); "மறைல மென்றது குங்குமம்; சாதிங்குலிக மென்பாரு முளர்" பதிற். கக, உரை.

222. சுட்டிச் சுண்ணம்: (பெருங். க. 42 : 73.) மட்டித்து - குழைத்து; மத்தித்தென்பது வழக்கு.

குங்குமக் கொழுஞ்சேறு கூடக் குழைத்திட்
டிந்திர வின்னெனகிழ்ந் துருகி [1] யாங்கு
நீடுர வழியி னூடுநிமிர்ந் தொழுகிப்
பிணர்முரிப் பட்டுடைப் பெருநல வல்குற்
காசுநிழற் காட்டு மாசின் மாமை
ஆவி நுண்டுகி லணிநல நனைப்பப்
பூவினுட் பிறந்த புனையிழை போலத்
தண்ணீர் தோழிய ராடத் தான்றன்
கண்ணீ ராடுமோர் கனங்குழை காண்மின்

(அரசனுடைய ஏவலாளர்களின் செயல்)

திருவீற் றிருந்த திருநகர் வரைப்பின்
உருமீக் கூறு மன்னவ னொருமகள்
கண்டுகண் ணோராக் காமர் காரிகை
வண்டுள ரைம்பால் வாசவ தத்தை

---

224. பலநிறமுடைமையின் இந்திரவில் உவமை.

225. உரவழி - மார்பின் வழியே. [லைத் தொழிற் பெயர்.

226. பிணர் முரிப்பட்டு - சருச்சரையில்லாதபட்டு ; முரி : முதனி

227. காசுநிழல் - மாணிக்கத்தின் ஒளியை. மாமை - பேரழகு, ஒருவகை நிறம் ; " மணிமிடை பொன்னின் மாமை " (நற். ௩௦௪); " பொன்னுரை மணியன்ன மாமை " கலி. ௪௮.

228. ஆவி நுண்டுகில் - புகைபோன்ற நுண்ணிய ஆடை (36 : 64, 165); " புகைமுகந் தன்ன மாசி றூவுடை " (முருகு. 138); " ஆவியன்ன பூந்துகில் ", " பாலா ராவிப் பைந்துகில் " சீவக. 67, 1094.

229. திருமகள் போல.

232 - 44. ஒரு தொடர்.

232. வீற்றிருந்த - கவலையின்றியிருந்த ; " திருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து " முருகு. 70.

233. உரு மீக்கூறும் மன்னவன் - பகைவர்க்கு அச்சஞ் செய்தலில் யாவரிலும் மேலாகச் சொல்லப்பட்ட பிரச்சோதனனுடைய.

234. பார்த்து இரண்டு கண்களாலறியப்படாத பேரழகையுடைய நங்கை : " ஆயிரங் கண்ணி லாதார்க் கழகுகாண் பரிய நங்கை " (சூளா. கல்யாண. 158); " இருகண்ணாலமையாதென்றார் " (கம்ப. மிதிலை. 25.) காமர் காரிகை : 183. 235. மு. 64.

பி - ம். 1 ஆங்கணிடியிர்.

பேணி யாடும் பெரும்புனல் விழவினுள்
நாணிச் செல்லா நல்குர வுடையோர்க்
கரும்பொறி யணிகல மாரப் பெய்த
பெரும்பொறிப் பேழை யிவையெனக் கூறிக்
கறைவாய் முரசங் கண்ணதிர்ந் தியம்ப
அறையவுங் கொள்ளுங் குறையில ராகித்
துறைதுறை தோறு மிறைகொண் டோருள்
அணியா தோரை [1] யாராய்ந் தழிதரும்
பணியா வேந்தன் பணிநரைக் காண்மின்

(ஓர் அன்னச்சேவலின் செயல்)

புழற்காற் றாமரை யழற்போ தங்கண்
அல்லி மெல்லணைப் பள்ளி கொண்ட
தார்ப்பூம் பேடை தையல ரெடுத்த
நீர்ப்போர்க் கவ்வையி னீங்கி முறாஅ
தொள்ளொளிப் பவளத் துள்ளொளி யடக்கி
வெள்ளிப் பூந்தா ரெள்ளுந் தோற்றத்துப்

237. இரத்தற்கு நாணி. வறியவர்க்குக் கொடுத்தற்பொருட்டு.

238. பொறி - அடையாளம். ஆர - நிரம்ப.

239. பொறிப் பேழை - எந்திரத்தையுடைய பெட்டி.

240. கறைவாய் - உரல் போன்ற வட்டமான வாயையுடைய; கறை - கைக்கசமோம்.

242. இறைகொண்டோருள் - தங்கியவர்களுள்.

244. பணியா - பிற அரசரை வணங்காத. பணிநர் - ஏவல் செய் [வோர்.

245 - 64. ஒரு தொடர்.

245. புழல் - உட்டுளை. அழற்போது - நெருப்பைப்போன்ற செந்நிறத்தையுடைய பூ; "தீப்பட மலர்ந்த கடவு ளொண்பூ" (பெரும்பாண். 289-90, அடிக்.) 246. அகவிதழாகிய மெல்லிய அணையில்.

247. தார் - கழுத்திலுள்ள வரை. பேடை - அன்னப் பேடை; எழுவாய்.

248. கவ்வையின் - பேரொலியால். முறாஅது - முன்னிடத்ததாகிய.

249. போதாதலின் வெளநிறமுடைய உள்ளுறுப்பு வெளியில் தோற்றாது.

250. வெள்ளிப்பூந்தாரெள்ளும் - வெள்ளிப்பூமாலையை ஒக்கும்.

பி - ம். 1 ஆராய்ந்திழிதரும்.

போதுபொறை யாற்றுப் புன்னையம் பொதும்பர்த்
தாதுபுறத் துறைப்பத் தங்கலிற் றலைபிரிந்
திகழ்வி னோக்கமொ டிரைவேட் டெழுந்த
பவழச் செங்காற் பானிறச் சேவல்
திரையுமிழ் பொய்கையு ளிரையுமிழ்ந்து மயங்கி
மதிபுரை தாமரைப் பொதிபோது புல்லியஃ
தன்மையி [1]னழிந்து புன்மையிற் புலம்பி
அருப்பிள முலையவ ரடைக்கரை வைத்த
மருப்பியல் செப்பை மதித்த தாகி
அழல்வெங் காமத் தன்புதலைக் கொண்ட
மழலைத் தீங்குரன் மருட்டி யழைஇக்
குறுகச் [2] சென்றத னுறுநோக்குப் பெறாது
புன்னையம் பள்ளிப் பொழிலொரு பாடும்
அன்னப் புள்ளி னலமரல் காண்மின்

(ஓர் அந்தணன் செயல்)

நானந் தோய்த்த நறுமென் கூந்தலுள்
ஆனைந்து தெளிந்து நீரிடை மூழ்கி
ஆவிரை யலறு மறுகையுஞ் செரீஇக்

---

251. பொதும்பர் - சோலை.

249 - 51. "புன்னை வெண்கிழியிற்பவளம்புரை பூந்தராய்" (தே.); "வெண்முத் தரும்பிப் பசும்பொன் மலர்ந்து, கடைந்தசெம் பவளத் தொத்துடன் காட்டும்...புன்னை" கல். ௩௬.

252. உறைப்ப - உதிர. தலைபிரிந்து - நீங்கி.

254. சேவல் - ஆண் அன்னம்.

256. மதிபுரை தாமரை - வெண்டாமரை. போது - மலரும் பருவமுள்ள அரும்பு. போதைப் பெண்ணன்னமென்று நினைந்து புல்லி.

259. யானைத் தந்தத்தாற் செய்த செப்பைப் பெடையென்று எண்ணி. [208) என்றார் முன்.

260. அழல்வெங்காமம்: "காமக் கனலெரி" (பெருங். க. 33:

261. குரல் - குரலால். அழைஇ - அழைத்து. 263. பள்ளி - இடம்.

265 - 94. ஒரு தொடர். 265. நானம் - வாச எண்ணெய்.

266. ஆன் ஐந்து - பஞ்ச கௌவியம்.

267. அறுகை - அறுகம்புல். செரீஇ - செருகி.

பி - ம். 1 னிழிந்து. 2 சென்றுதன்.

கொட்டுமடி விரித்த பட்டுடைத் தானையள்
அங்கோற் றீந்தொடைச் செங்கோட் டியாழின்
பத்த ரன்ன மெத்தெ னவ்வயிற்றுத்
திரையொடு பட்டு நுரையொடு மறுகி
மட்டூண் மறுத்த பட்டினிப் படிவமொடு
கட்டளை பிழையாப் பட்டுடை யல்குலள்
பெட்ட வாய்மொழிப் பெரும்பா குதிர
எதிர்ப்புன லாடுநர்க் கேம மாகப்
புனற்றுறை விடுத்த பொங்குமடைப் புழுக்கலைக்
காக்கை யோட்டி நோக்கி னுண்டு
[1] வேண்டல னாயினும் விறலுஞ் சேனையும்
நீண்ட விஞ்சியு நிறைமணி மாடமும்
உருக்குறு நறுநெய் யுள்ளுறப் பெய்த
புழுக்கலொடு பாற்சோ றியின வாயின்
வழுக்க வின்றியென் வயிற்றக மார
உண்ப லென்றுதன் கண்பனி வாரக்
கொள்ளா வயிற்றி னுண்ட கையன்
செல்வோற் கண்டு பொள்ளென நக்கு

---

268. கொட்டு மடி - கொட்டி மடித்த மடி.

269. கோல் - நரம்பு. தொடை - கட்டு.

270. "பத்தல் வயிற்றை" மூத்த திருப்பதிகம், 4.

271. திரை - மடிப்பு.

272. மட்டூண் - கள் உண்ணுதலை. படிவம் - விரதக் கோலம்.

273. கட்டளை பிழையா உடை.

274. பெட்ட - விரும்பிய. மொழி - மொழியில். பாகு உதிர - பாகின் சுவைதோன்ற; இனிய மொழிகளைக் கூறி யென்றபடி.

275. ஏமம் - பாதுகாப்பு, இன்பம். [உணவு.

276. பொங்கு புழுக்கலை - பொங்கற்சோற்றை. மடை - நிவேதித்த

278 - 9. உஞ்சேனையும் இஞ்சியும் மாடமும் வேண்டலனாயினும்.

281. வாயின் - வாய்த்தால். 282. ஆர - நிரம்ப.

283. உண்பல் - உண்பேன்.

284. வயிற்றைத் தடவிய கையனாகி.

285. செல்வோன் - மேற்கூறிய புழுக்கலைச் சுமந்து செல்பவனை.

பி - ம். [1] வேண்டானாயினும்.

நுரைபுரை வெண்டுகி லரைமிசை வீக்கி
அவியிடப் படினென் னருயிர் வைப்பது
கடிவோ ரில்லை முடிகுவெ னின்றெனச்
செவிமடுத் தெற்றிச் சிவந்த கண்ணினன்
உண்டற் புண்ணிய முடையெனை யொளித்துக்
கொண்டனை போகிற் கூடுமோ நினக்கெனப்
பிண்டப் பெருங்கவுட் பெருவிய ரிழிதரக்
கண்டோ ரார்ப்பக் கலாஅங் காமுறாஉம்
பண்டப் பார்ப்பான் பட்டிமை காண்மின்

(சில பெண்களின் செயல்)

நுரையொடு பொங்கு நுண்ணூல் வெண்டுகில்
அரையிடை நெகிழ வசைத்தல் செல்லார்
இறுமென நுடங்குஞ் சிறுகொடி மருங்கின்
மதுகை யோரா மறங்கூர் மனத்தர்
எதிர்நீர் தூஉ மிளையோர் திருமுகத்
தாழ மிகவா வரிபரந் தகன்ற
மாழை யுண்கண் மலரென மதித்துத்
தண்செங் கழுநீர்த் தகைமலர்த் தாதும்
ஒண்செந் தாமரைப் பைம்பொற் றாதும்
ஆராய்ந் துழிதரு மஞ்சிறை வண்டினம்

---

286. துகிலுக்கு நுரை : 151, 295.

287. எனது அரிய உயிரை விடாமல் வைத்துக்கொள்வது, உண்ணும்படி இந்த அவியை எனக்கும் படைத்தால்தான் ; 'இல்லையேல்' என இங்கே ஒருசொல் வருவிக்க.

289. காதுகளில் அறைந்து கொண்டு. [பொருந்துமா ?

291. போகின் - போவாயாயின். நினக்குக் கூடுமோ - நினக்குப்

292. பிண்டத்தை அடக்கிய பெரிய கன்னத்தினின்றும்.

293. கலாஅம் - சண்டையை. 294. பட்டிமை - வஞ்சனை.

295 - 310. ஒரு தொடர்.

295. நுரையொடு பொங்கும் துகில் : 151, 286.

296. அசைத்தல் செல்லார் - கட்டார்.

298. மதுகை - வலி ; குறிப்பு. 299. இளையோர் - மகளிர்.

300. ஆழமிகவா இளையோரென முன்னே கூட்டுக.

301. மாழை - செருக்கு.

ஓராங்கு நிலைபெற் றுண்ணெகிழ்ந் தவிழ்ந்த
பேரா விவையெனப் பேர்தல் செல்லா
மொய்த்தலின் மற்றவை மொய்ப்பி னீங்கத்
தத்தரி நெடுங்கண் டகைவிரல் புதைஇப்
புதுமண மகளிரிற் கதுமெனத் தோன்றும்
மதுர மழலை மடவோர்க் காண்மின்

**(ஊடலைத் தீர்த்துத் தலைவன் தலைவியோடு நீராடல்)**

நிறைக்குறி னிறைத்துப் போக்குறிற் போக்கும்
பொறிப்படை யமைந்த பொங்கில வந்திகை
முன்னம் புக்க தன்னமர் காதலன்
பாடகச் சீறடிப் பைந்தொடி மாதரை
ஆடுக வாவித னகவயி னென்றலிற்
செஞ்சூட் டிட்டிகைச் சுதைச்சுவர்ப் படுகால்
அஞ்சிறை யன்னத்தி னணிபெற வியலி

---

305. ஓராங்கு - ஒருபடியவாய். அவிழ்ந்த: முற்று.

306. பேர்தல் செல்லா - பெயராவாய்.

307. மொய்ப்பின் - மொய்த்தலினின்றும்.

308. கண்களை விரல்களாற் புதைத்து.

309. மகளிரின் - மகளிர் போல; புதுமணமகளிர் நாணத்தாற் கண்களைப் பொத்திக்கொள்வர்; "வதுவைக் கோலத்து வாசவ தத்தை, புதுமைக் காரிகை புதுநாண் டிளைப்ப" (பெருங். உ. 7: 164-5); "நின் வதுவைநா ணொடுக்கமுங் காணுங் காலே" (நற். ௩௬௩); "வதுவைநா ணொடுக்கமுங் காண்குவல் யானே", "வதுவைநாட் கலிங்கத்து ளொடுங்கிய, மாதர்கொண் மானோக்கின் மடந்தை" (கலி. ௫௨, ௬௧); "புதுநா ணொடுக்கமுங் காண்குவம் யாமே" (அகநா. ௧௧௨); "நாணட நடுங்கிக் கையா னகைமுகம் புதைத்த தோற்றம்" (சீவக. 2461); நாணிக்கண் புதைத்தலென்னும் துறைப்பெயரும் இதனைக் குறிக்கும்.

311 - 42. ஒரு தொடர்.

312. பொறிப்படை - எந்திரம். இலவந்திகை - எந்திரவாவி; "இலவந்திகையு மிளமரக்காவும்" (பெருங். ௩. 14: 16); "இலவந் திகையி னெயிற்புறம்" (சிலப். ௧௦: 31; மணி. ௩: 45); 'இலவந்திகை - நீராவியைச் சூழ்ந்த வயந்தச் சோலை; அஃது அரசனும் உரிமையுமாடும் காவற்சோலை' என்பர் அடியார்க்கு நல்லார்.

315. அகவயின் - உள்ளிடத்தே.

316. இட்டிகை - செங்கல். படுகால் - படியில். 317. இயலி - நட

மண்ணுமணி யன்ன வொண்ணிறத் தெண்ணீர்த்
தண்ணிழற் கண்டே யென்னிழ லென்னும்
நுண்மதி நுணுகாப் பெண்மதி பெருக
எழுதி யன்ன வேந்துநுண் புருவம்
முழுதுநுத னெருங்க முரிய வேற்றிச்
செதும்பற் றாமரைச் செவ்விதழ் போலப்
பதம்பார்த்து மலரும் பனிமலர்த் தடங்கண்
கையிகந்து சிவப்ப வெய்துபட வுயிரா
நிரைகொ ளற்புத்தளை நெரிய வூர்தரும்
புலவி நோக்கத்துப் பூங்கொடி புலம்பி
நீரா மகளிரொடு நிரந்துட னின்ற
சூர னிவனெனச் சொல்லுங் குறிப்பினள்
பேரு முள்ளமொடு பிறக்கடி யிடுதலின்
நண்ணிய காதலி கண்ணிய துணர்ந்து
காளை போந்தவள் சிறுபுறங் கவைஇப்
பூளை மெல்லணைப் பொதியவிழ்ந் தன்ன
மென்றோ ணெகிழப் பற்றிக் குன்றா
[1] அழல்புரை வேகத்து ளற்புநீ ராட்டிச்

---

318. மண்ணுமணி - கழுவிய பளிங்கை.

320. நுணுகா - கூர்ந்து ஆராயாத. பெண்மதி - பேதைமை.

321 - 2. புருவத்தை ஏற்றி.

323. செதும்பல் - சின்னீர்; இப்பெயர் செதும்பெனவும் வழங்கும்; பெருங். க. 49 : 28, 112; "இன்னுரைச் செதும்பரற்றுஞ் செவ்வியுள்" கலி. ௬௮.

324. பதம் - காலம். 325. வெய்து - வெம்மை.

326. அற்புத்தளை - அன்பாகிய கட்டு; "அற்புத்தளையு மவிழ்ந்தன" (நாலடி. 12.) 328. நிரந்து - வரிசையுற்று.

329. குறிப்பாற் சொல்லுபவளாய்.

330. பிறக்கு - பின்; புறநா. ௧௫.

332. சிறுபுறங் கவைஇ - புறக்கழுத்தை அணைத்து; "சிறு புறங் கவையினனாக" (அகநா. ௯௨.) 333. அணை - தலையணை.

333 - 4. அணை தோளுக்குவமை; "அணைமென்றோள்" பரி. ௭.

335. வேகம் - கோபம். அற்புநீர் - அன்பாகிய நீரால்.

பி - ம். 1 அழல்புனைவேழத்து.

சிறுவரைத் தணித்தவ டிருமுகந் திருத்தி
நீரர மடந்தையுங் கணவனு மிதனுள்
ஆர்வ வுள்ளமொ டானோர்க் காண்கம்
ஏகென வுய்த்துத்த மிருநலங் காட்டி
வேக வூட லவள்வயி னீக்கி
உருவக் கோலமொ டோம்பல் செல்லா
தொருவயி னாடு மிருவரைக் காண்மின்

(சேனை வாணிகன்மகள் செயல்)

ஒருமீக் கோற்றவ னுடைப்பொரு ளுடைய
செருவார் சேனைப் பெருவா ணிகன்மகள்
தன்னொடு நவிலத் தன்னை மார்கள்
கலத்திற் றந்த நலத்தகு விழுச்சீர்
வேறுபடு திருவினுள் விளங்கிழை மகளிரைக்
கூறுபட நிறீஇக் குளித்தன ளெழுவோள்
மின்னிருங் கூந்தன் மேதகப் புனைந்த
பொன்னரி மாலையைப் புனல்கொண் டீர்ப்ப
அத்துறை மருங்கி னயற்றுறை யாடும்
மைத்துன மன்னன் கைப்படுத்து வந்துதன்
சென்னி சேர்த்தியவண் முன்னர்த் தோன்ற
நெடும்புணை தழீஇ நீத்தொடு மறலத்
தடம்பெருங் கண்ணி தலைகவிழ்த் திறைஞ்சிச்
செறிப்பி னாகிய செய்கையி [1] னொரீஇயவள்

---

336. சிறுவரை - சிறுபொழுதில். 338. காண்கம் - காண்பேம்.

339. உய்த்து - செலுத்திக் கொண்டு சென்று. தம் இரு நலம் - இருவராகிய தம்முடைய அழகிய நிழலை. 341. ஓம்பல் - ஒழிதல்.

343 - 65. ஒரு தொடர்.

343. ஒருமீக் கொற்றவன் - பிரச்சோதனன்.

345. தன்னைமார்கள் - தமையன்மார்கள்.

347. பலவகைச் செல்வத்துள். 350. ஈர்ப்ப - இழுப்ப.

352. மைத்துன மன்னன் - விளையாடுதற்குரிய அரசகுமரனொருவன். கைப்படுத்து - அம்மாலையைக் கைப்படுத்தி.

353. முன்னர் - அவளுக்கு முன்னமே. தோன்ற - தான் அம்மாலை புனைந்தமை வெளிப்படும்படி. 354. நீத்து - நீர்ப்பெருக்கு; நீச்சு.

356. செறிப்பு - அடக்கம். ஒரீஇயவள் - நீங்கியவளுடைய.

பி - ம். 1 ஒரீஇயவன்.

குறிப்பிற் [1] கொண்டனன் கோதை யென்ப
தயலோர் கருதி னற்றந் தருமெனக்
கயலேர் நெடுங்கண் கடும்பனி கால
மாலை கவர்ந்து மற்றவற் கீத்தனை
கோல வைவே லேனைய குமரர்க்
கறியக் கூறுவெ னஞ்சுவை யாயிற்
பெயர்த்துத் தம்மெனச் [2] செயிர்த்தவ ணோக்கி
நீரணி யாட்டொடு நெஞ்சுநொந் துரைக்கும்
வாணிக [3] மகளின் மடத்தகை காண்மின்

(துறைகாக்கும் காவலர் செயல்)

மின்னவிர் மணிப்பூண் மன்னவன் மடமகள்
அங்கலுழ் பணைத்தோட் செங்கடை மழைக்கண்
நங்கை யாடும் பொங்குபுனற் பூந்துறைக்
குங்குமக் [4] குழங்கல் கொழுங்களி யாக
இத்துறை [5] மேவ வெத்துறை யாயினும்
ஆடன்மின் யாவிரு மாடுவி ருளிரெனின்
ஆடகப் பொன்னினும் மளவி னியன்ற
பாவை யாகும் படுமுறை யதுவெம்
கோவி னாணை போமி னீவிரெனத்

---

358. அற்றம் - குற்றம்.

359. கண்கள் நீர்த்துளிகளைச் சொரியா நிற்க.

360. 'மாலைகவர்ந்து' என்பது முதலியன, அவள் நீர் விளையாட்டை நோக்கிக் கூறுவன. 363. தம்மென - தாவென்று.

364. நீரணியாட்டொடு - நீர் விளையாட்டுடன்.

366 - 83. ஒரு தொடர்.

368. நங்கை - வாசவதத்தை. 370. மேவ - மேவும்படி.

372. நும் அளவு - நுமது அளவு.

373. படுமுறை - தண்டம். அது - அத்தண்டமானது.

371 - 4. அரசனுக்குப் பிழை செய்தோர் தம்முடைய அளவுள்ள பொற்பாவை யொன்றைச் செய்வித்துத் தண்டமாக இறுத்து அவன் சினத்தைப் போக்கிக்கொள்ளுதல் பண்டைக் காலத்தில் ஒருசாரார் வழக்கம்; அது, "மண்ணிய சென்ற வொண்ணுத லரிவை, புனறரு

பி - ம். 1 கொண்டனன். 2 செயிர்த்தவனோக்கி. 3 மகளிர். 4 குழங்கற். 5 மேல.

தென்மலைப் பிறந்த பொன்மருள் சூரல்
கருங்கண் டோறும் பசும்பொன் னேற்றித்
தொடித்தலைப் படுகோல் பிடித்த கையர்
வரிக்குப் பாயத்து வார்பொற் கச்சையர்
திருப்புன லாடிச் செயிர்த்த நோக்கினர்
முழுநீர் விழவின் மூவெழு நாளும்
கழுநீர்ப் பெருந்துறைக் காவ னண்ணிய
வண்டுஞ் சேரா வஞ்சுவரு சீற்றத்துக்
குண்டுதுறைக் காவலர் குழாஅங் காண்மின்
இன்னவை பிறவுங் கண்ணொடு புணர்ந்த
புண்ணிய முடைமையிற் காண்மி னீரெனப்
பணிவி னல்வினைப் பயனுண் டாயின்
மணிமுடி மன்ன னணியுஞ் சேனையுள்
எழுமைப் பிறப்பு மெய்துகம் யாமெனக்
கழுமிய காதலொடு கைதொழு தேத்தி
நகர மாந்தர் பகர்வராற் பரந்தென்.

௪०—உவந்தவைகாட்டல் முற்றிற்று.

---

பசுங்காய் தின்றதன் றப்பற், கொன்பதிற் றொன்பது களிற்றொடவ ணிறை, பொன்செய் பாவை கொடுப்பவும்'' (குறுந். உ௯உ) என்பதனாலும் விளங்கும்.

375. தென்மலை - பொதியில். சூரல் - பிரம்பினது; ''பொதியிற் பிரம்பு'' (பெருங். க. 37 : 9.) 376. கண் - கணு.

377. தொடித்தலை - பூண்கட்டிய தலை; ''தொடித்தலை விழுத் தண்டு'' (புறநா. உ௪௩.) 375 - 8 = க. 37 : 9 - 11. [38 : 103.

378. குப்பாயம் - சட்டை. 380. மூவெழுநாள்: பெருங். க.

382. வண்டுகளும் வாராமைக்குக் காரணமாகிய.

383. காவலர் குழாம் - காப்போர் கூட்டம்.

386. பணிவு - தாழ்வு. 389. தொழுது - தெய்வத்தை வணங்கி.

390. பகர்வர் - கூறுகிற்பர்.

384 - 90. ''கவினூர் மதியினகன்று காட்சிக் கினிய விழவுஞ்'' (சீவக. 933) என நீர்விழவைப் பிறரும் பாராட்டியிருத்தல் காண்க.

## சக—நீராட்டரவம்.

பரந்த விழவினு ளுவந்தவை காட்டி
நகர மாந்தர் பகர்வன ரறையும்
பாடிமிழ் பணித்துறைக் கோடணை யரவமும்
(நீர் விளையாட்டுக்குரிய கருவிகள்)
கிடைப்போழ்ப் பந்தத் திடைப்புனைந் தியற்றிய
அவிர்நூற் பூங்கிழி யாப்பினொடு சார்த்திக்
கட்டளை யமையச் சட்டகங் கோலிக்
கண்டோ ரின்றியுங் கைந்நவில் வித்தகர்
கொண்டோர் மருளக் கோலங் குயிற்றி
அம்புவா யணிந்த பெருந்தண் சக்கரம்
சாந்திற் செய்த வேந்திலை யெறிவேல்
போதிற் புனைந்த பூம்பொறி வளையம்

---

சக—நீராட்டரவம்.

[நகரமாந்தரும், பேதையர் முதலிய ஏழுபருவமகளிரும், பிறரும் நீராடுதலால் உண்டாகும் முழக்க வகைகள் இப்பகுதியால் அறியலாகும்.]

பேதையர் முதலிய ஏழுபருவமகளிர் நீராடியதைஅவரவர்க்கு ஏற்ப இந்தப் பகுதியின் 56-ஆம் அடி முதலியவற்றில் வருணித்திருக்கும் அழகு நுனித்தறிந்து இன்புறற்பாலது.

2. பகர்வனர் அறையும் - சொல்லுபவர்களுடைய ஓசையும்.

3. கோடணை அரவமும் - மிக்க ஓசையும்.

4-23. ஒரு தொடர்.

4. கிடைப்போழ்ப் பந்தத்து - நெட்டியின் பிளவாகிய சந்தியின்; "பொன்கிடைப் போழ்வைச் சந்திய வாகி" பெருங். க. 42 : 36.

5. கிழி ஆப்பு - கிழிந்த துணியின் கட்டு.

6. கட்டளை அமைய - அச்சிற்குப் பொருந்த. சட்டகம் - சட்டம். கோலி - வளையச்செய்து.

7. கண்டோரின்றியும் - முன்னம் இங்ஙனம் செய்தோர் இலராகவும். வித்தகர் - திறமையுடையவர்; "கண்டதே செய்பவாங் கம்மியர்" (நான்மணி. 41) என்பது இங்கே அறிதற்பாலது.

9. "தாமரைச் சதங்கை மாலை சக்கர மென்ன வீழ்த்தும்" (சீவக. 2656.) 10. சாந்தின் - சந்தன விழுதால்.

11. போது - மலரும்பருவமுள்ள அரும்பு. வளையம் - பாரா வளைய மென்னும் படை.

மலர்புறத் தழுத்திய விலையணி யீர்வாள்
பிணையலிற் பொலிந்த கணையக் கப்பணம்
சுண்ணம் பொதிந்த வண்ண வட்டிணை
உருக்குறு..........முள்வாய் சேர்த்தி
அரக்குறு நறுநீ ரஞ்செங் குலிகம்
குங்கும வூறலொடு கொண்டகத் தடக்கிய
எந்திர நாழிகை யென்றிவை பிறவும்

(அரசகுமரர் ஒலி)

ஏற்றிப் [1] பண்ணிய வினைக்களிறு நிரைஇ
மாற்று மன்ன ராகுமி னெனத்தம்
உரிமை மகளிரொடு செருமீக் கூறிக்

12. ஈர்வாள் - அறுக்கும்வாள் (ரம்பம்); "தூமலர் மாலை வாளா .........வீழ்த்தும்" சீவக. 2656.

13. பிணையலிற் பொலிந்த - பிணைத்துக் கட்டிய மாலையாற் செய்யப்பட்ட. கணையம் - யானையைத் தடுக்குமரம்; கப்பணம் - இரும்பாற் செய்யப்பட்ட யானைநெருஞ்சி முள்; கணையக்கப்பணம், ஒருவகைப் படையுமாம்.

14. சுண்ணப்பொடி நிரம்பிய அழகிய இரட்டை வட்டுக்களையுடையதொரு கருவி; இது சுண்ணவட்டென்றும் வழங்கும்; பெருங். க. 38 : 107; 41 : 14.

16. அரக்குறு நறுநீர் - செந்நிறமுள்ள பனிநீர். செங்குலிகம் - சாதிலிங்கம் கரைத்த நீர்.

17. குங்கும ஊறல் - குங்குமப்பூ ஊறிய செந்நீர்.

18. எந்திர நாழிகை - நாழிகைத்தூம்பென்னும் கருவி; பெருங். க. 38 : 106. பிற : தாரை, பந்து, கோடு, சிவிறி முதலியன.

9 - 19. நீர்விளையாட்டுப் போருக்காகச் செய்யப்பட்ட சக்கர முதலியவற்றை ஏற்றிய யானைகளை வரிசையாக நிறுத்தி அவற்றின்மேல் ஏறியிருந்து; "கைம்மாவை, வெள்ளநீர் நீத்தத்து ஊர்பூர் புழக்குநரும்" (பரி. ௧௧ : 52 - 3.) இங்கே கூறிய சக்கரம், வேல், வளையம், வாள், கப்பணமென்பன அப்படைகள் வடிவமாகப் பூவரும்பு முதலியவற்றாற் செய்த கருவிகளென்றும், நீர் விளையாட்டுவகைகளுள் இங்கே கூறியது யானையின் மேலிருந்து செய்யப்படுவதென்றும் கொள்க.

20. மாற்றுமன்னர் - பகைமன்னர்.

பி - ம். 1 பண்ணியினைக்.

[1] கரைசென் மாக்கள் கலாஅங் காமுறூஉம்
அரைச குமர ரார்ப்பொலி யரவமும்

(பறவைக் கூட்டத்தின் ஒலி)

வளையார் முன்கை வையெயிற் றின்னகை
இளையோர் குடைதலி னிரைகொளப் பெருஅப்
பைந்தாட் குருகின் மென்பறைத் தொழுதி
தடவுச் சினைதொறுந்..............................
மேற்பட மிடைந்த மேதகு குடம்பையுட்
பார்ப்பொடு நரலும் பையு ளரவமும்

(மரங்களைக் கரையேற்றுவோர் ஒலி)

அறைவரைச் சாரற் சிறுகுடிச் சீறூர்க்
குறவர் குறைத்த கொய்புன மருங்கின்
அந்தண் ணகிலுஞ் சந்தனக் குழையும்
கருவிளங் கோடுங் காழிருள் வீடும்

---

22. கலாம் - இவர்கள் செய்யும் நீர்ப்போரை. மாக்கள் காமுறு மென்க.

20 - 23. "கணமலை யரசன் மங்கை கட்டியங் கார னாகப், பணை முலை மகளி ரெல்லாம் பவித்திரன் படைய தாக, விணைமலர் மாலை சுண்ண மெரிமணிச் சிவிறி யேந்திப், புணைபுறந் தழுவித் தூநீர்ப் போர்த் தொழி றொடங்கி னாரே" (சீவக. 2655) என்னுங்கவியும் இவ்வடிகளும் பொருளால் ஒத்துள்ளன. [தொழுதி" அகநா. ௬0.

26. நாரைப் பறவையின் கூட்டம்; "மீனார் குருகின் மென்பறைத்

27. தடவுச்சினை - பெருமையையுடைய கிளை; "தடவுச்சினைப் பல்பழம்" (புறநா. கசக); தடவு, வளைவுமாம்.

28. குடம்பை - பறவைக்கூடு. 29. பையுள் - துன்பம்.

30. அறை - பாறை. சிறுகுடி - சிறியகுடிமக்களையுடைய.

31. குறைத்த - வெட்டிய; "கோடு குறைத்துவிடல்" பழ. 81.

32. குழை - தளிர்.

33. கருவிளங்கோடு - கருவிளமரத்தின் கிளை; "கருவிளம் பொங்கரும்" (மணி. கக: 94.) இருள்வீடு - சோதிமரம்; அன்றி, இருள் - இரவுமரம் (பெருங் க. 52: 40), வீடு - தேற்றாமரம் (பரி. கக: 19) எனினுமாம்; தேற்றாமரத்திற்கு இல்லமென்னும் பெயருண்மையின், அதனை மனைமரம் (பரி. கக: 19) என்றாற்போல இங்கே வீடென்றார்.

பி - ம். 1 கரைதனமாக்கள்.

திருவிழை [1] கழையுந் தேக்குந் திமிசும்
பயம்புங் கோட்டமுங் கயம்பல கலங்க
அமிழ்ந்துகி ழாழ வருங்கலஞ் சுமந்து
நுரைபுன னீத்தத்து நூக்குவனர் புக்குக்
கரைமுதற் [2] சார்த்துங் கானக வரவமும்

(பெண்மான்களை இனத்தோடு
கூட்டும் இளைஞர் ஒலி)

இடைநீர்ப் பட்ட மடமா னம்பிணை
மம்மர் நோக்க நோக்கி நையா
நம்மில் காலை [3]யென்னவென் றெண்ணிப்
புனற்சுழி நீத்த நீந்தி மற்றவை
இனத்திடைப் புகுத்து மிளையோ ரரவமும்

(தோணியிற் செல்லும் மகளிர் ஒலி)

தொடியணி [4] தோளியர் துன்னி யேறிய
வடிவமை யம்பி யடியினுள் வானத்
தாழ றவிர்ந்து மரும்புனல் கவைஇயின
தாழ்தரும் வலிமின் றைய லீரெனத்

---

34. கழை - மூங்கில். திமிசு - ஒருவகை மரம்.

35. பயம்பு - வசம்பு. கோட்டம் - ஒருவகைமரம். கயம் பல - பல ஆழமான இடங்கள்; பல யானைகளுமாம்.

36. ஆழ - ஆழ்தலால். கலம் - மரக்கலங்களை.

30 - 36. அகில் முதலியவற்றைக் கொணர்தல் இப்பொய்கையின் அயலதாகிய யாற்றின் செயல்; "யாற்றொலி யரவம்" (124) என்பர் பின்.

37. நுரை புனல்: வினைத்தொகை. நூக்குவனர் - செலுத்திக் கொண்டு.

39. மடமானம்பிணை - பெண்மான்களின்.

40. மம்மர் நோக்கம் - மயங்கிய பார்வையை. நையா - மனங் கரைந்து.

41. நாம் இங்கே இல்லாதபொழுது இவை என்னவாகுமோ என் றெண்ணி. 42. மற்றவை - அந்த மான்களை.

45. அம்பி - தோணி. உள்வானம் - உள்ளிடம்; சிறப்புவழக்கு.

46. ஆழல் தவிர்ந்தும் - மிதந்து கொண்டிருந்தும். கவைஇயின - உள்ளே நிரம்பின.

47. தாழ்தரும் - அழுந்தும். வலிமின் - கரைக்கு இழுத்துச்செல் லுங்கள்.

பி - ம். 1 களையும். 2 சாத்தும். 3 என்னறொன்று. 4 தோழியர்.

திரிதர லோவாது தீயவை சொல்லிய
மைத்துன மைந்தரை நோக்கி மடந்தையர்
அச்சப் பணிமொழி யமிழ்தென மிழற்றி
நச்சுவன ராடு நல்லோ ரரவமும்

(பேதை மகளிர்)

அணியற லன்ன வைம்பாற் கூழையர்
மணியுமிழ்ந் திமைக்கும் வயங்குகொடிப் பைம்பூண்
முத்தொடு முரணித் தத்து மாகத்துக்
காமங் [1] காலா வேம நோக்கத்து
மாத ராற்று மழலையங் கிளவிப்
பேதை மகளிர் சேதடி யணிந்த
கண்பிணிப் பகுவாய்க் கிண்கிணி யரவமும்

(பெதும்பை மகளிர்)

[2] முகிழ்நிலா விரிந்த முத்துவடக் கழுத்தினர்
திகழ்நிலா விரிந்த திருமதி முகத்தர்
செண்ண மாகிய சிகழிகை முடியர்
வண்ண மகடூஉ வல்லவா வகுத்த
இரதப் பல்காழ்ப் பரவை யல்குலர்

---

49. மைத்துன மைந்தரை - பரிகாசமொழிகளைக்கூறும்ஆடவரை.

53. கொடிப்பைம் பூண் - கொடியாகிய ஆபரணம் (பெருங். க. 41 : 66, 69.) 54. முத்தொடு - முத்தமாலையொடு.

55. ஆசை வெளிப்படாத இன்பத்தைச் செய்யும் பார்வை ; "செவ்வனேர் நோக்கிலு நோய்நோக்க நோக்காள்" ஆதி. 79.

56. மாதராற்று - விருப்பஞ் செய்யாத.

57. சேதடி - சிவப்பாகிய அடியில்.

58. கண்பிணி - மூட்டுக்களைப் பிணித்தலையுடைய.

61. செண்ணச் சிகழிகை முடி - மயிர் முடி; பெருங். க. 40 : 39.

62. வண்ணமகடூஉ - மகளிர்களை அலங்கரிப்பவள்; சிற்பகாரி யென்பர் வடநூலார். வல்லவா - நன்றாக.

63. இரதப்பல்காழ் - இடையணியாகிய பல கோவைகளையுடைய மேகலையையணிந்த; பல்காழென்பதற்கு இருகோவை முதல் முப்பத்திரு கோவையீறாகிய வடங்களை முறையே உடைய காஞ்சி முதலிய ஐவகை மேகலைகளென்றுமாம்; பரி. ௧0: 10-11, பரிமேல்.

பி - ம். 1 காழா. 2 முழுநிலா.

பொன்னிறக் கோங்கின் பொங்குமுகிழ்ப் பென்ன
முன்ன ரீன்ற முலைமுதன் முற்றத்து
மின்னுக்கொடி பிறழுங் கன்னிக் கோலமொ
டொதுங்க லாற்றா வொளிமலர்ச் சேவடிப்
பெதும்பை மகளிர் சிலம்பொலி யரவமும்

(மங்கை மகளிர்)

கொடியணி பிறழுங் கொம்மை வெம்முலைக்
கடிகை வேய்நலங் கழிக்கு மென்றோட்
கொடியென நடுங்குங் கோல மருங்குலர்
அம்பெனக் கிடந்த வையரி நெடுங்கண்
மங்கை மகளிர் பைங்கா சரவமும்

(மடந்தை மகளிர்)

நீணிறக் கொண்மூ நெற்றி முள்கும்
வானிற வளர்பிறை வண்ணங் கடுப்பச்
சின்மெல் லோதி சேர்ந்த சிறுநுதற்
குலாஅய்க் கிடந்த கொடுநுண் புருவத்
துலாஅய்ப் பிறழு மொள்ளரித் தடங்கண்
வம்புமீக் கூரும் பொங்கிள முலையின்
நுடங்குகொடி மருங்கி னுணுகிய நுசுப்பின்
மடந்தை மகளிர் குடைந்தா டரவமும்

---

64. முகிழ்ப்பு - அரும்பு. 66. கொடி - ஓரணி.
67. ஆற்றா - வன்மையில்லாத.
70. கடிகைவேய் - துண்டமாகிய மூங்கிலின்; "வாங்கமைக் கண்ணிடை கடுப்பயாய், ஓம்பினை எடுத்த தடமென் றோளே", "தோளும், அகன்மலை யிறும்பி னுய்ந்துகொண் டறுத்த, பணையெழி லழிய" அகநா. கஅ, கஎக.
73. பைங்காசு - ஒளியையுடைய மேகலை; "பல்காசு நிரைத்த சில்காழ்" முருகு. 16.
74. நெற்றி - உச்சியில்; "நீல நெடுங்கொண்மூ நெற்றி நிழ றுறி" (இரும்பல்காஞ்சி.) முள்கும் - தங்கியிருக்கின்ற.
74 - 6. கூந்தலுக்கு மேகமும் நெற்றிக்குப் பிறையும் உவமைகள்.
77. குலாஅய் - வளைந்து. 78. உலாஅய் - உலாவி.
79. வம்பு - கச்சு. [தல் போல.
80. கொடிமருங்கின் - பூங்கொடியின் நடுவிடம் நுணுகித் துவளு

(அரிவை மகளிர்)

கலங்கவின் பெற்ற கண்ணார் களிகை
நலங்கவின் கொண்ட [1] நனிநா கரிகத்
தம்மென் சாய லரிவை மகளிர்
செம்மலஞ் சிறுவரைச் செவிலியர் காப்பப்
பூம்புன லாடுதொறும் புலம்பும் புதல்வரைத்
தேம்படு கிளவியிற் றீவிய மிழற்றிப்
பாலுறு வனமுலை பகுவாய்ச் சேர்த்தித்
தோளுறத் தழீஇ யோலுறுப் பரவமும்

(தெரிவை மகளிர்)

பொன்னரி மாலை புனல்பொதிந் தசைதர
மின்னெசிந் ததுபோற் பொன்னணி பிறழப்
புனலக மூழ்கிப் பூந்துகில் களையார்
மணலிகு நெடுந்துறை மங்கலம் பேணிப்
பெரியோ ருரைத்த பெறலருந் தானம்
உரியோர்த் தரீஇ யுள்ளுவந் தீயும்
தெரிவை மகளிர் வரிவளை யரவமும்

(பேரிளம் பெண்டிர்)

தித்தி யொழுகிய மெத்தெ னல்குலர்

---

82. களிகை - கழுத்திலணியும் ஓராபரணம்; பெருங். ந. 22: 222.

83. நாகரிகம் - மிக்க திருத்தம்; நகரசம்பந்தமான செப்பம்.

85. செம்மல் - பெருமை.

87. தீவிய மிழற்றி - இனிய மொழிகளைச் சொல்லி; பெருங். ச. 8: 96, 13: 152; "செவ்விய தீவிய சொல்லி" (கலி. கக); "தீவிய மொழிந்தே" அகநா. கசஉ.

89. ஓலுறுப்பு - தாலாட்டல்; "குரவம் பாவைகொண் டோலுறுத் தாடியும்" (பெருங். உ. 14: 19); "குரவம்பூம் பாவை கொண்டு குழவியோ லுறுத்து வாரும்" சூளா. சுயம். 80.

92. ஈரமான உடையுடன்.

93. மணல் இகு - மணல் திரண்டுள்ள. பேணி - விரும்பி.

94. தானம் - பலவகைத் தானங்களை.

95. உரியோர் - பெறுதற்கு உரியவர்களை. தரீஇ - அழைத்து.

97. தித்தி - வேங்கைப்பூந்தாது சிந்தினாற்போன்ற அழகிய ஒரு பி - ம். 1 நனிநற்காகத்.

மட்டப் பூந்துகிற் கட்டளைக் கச்சையர்
நரையிடைப் படர்ந்த நறுமென் கூந்தலர்
திரையுடைக் கலுழி திறவதி னுடித்
[1] தாமிள மகளிரைக் காமஞ் செப்பி
அஞ்சல் செல்லாது நெஞ்சுவலித் தாடுமிந்
நங்கையர் நோற்ற பொங்குபுனற் புண்ணியம்
நுங்கட் காகென நுனித்தவை கூறி
நேரிழை மகளிரை நீராட் டயரும்
பேரிளம் பெண்டிர் [2] பெருங்கலி யரவமும்

(வேறு பலவகை ஒலிகள்)

கைபுனை பாண்டியங் கட்டளை [3] பூட்டி
வையந் தரூஉம் வயவ ரரவமும்
புகுவோ ரரவமும் போவோ ரரவமும்
தொகுவோ ரரவமுந் தொடர்ந்துகை தழீஇ
நடந்தியன் மறுகி னருகுவோ ரரவமும்

---

வகை நிறம்; "வேங்கை, யம்பூந் தாதுக் கன்ன, நுண்பூந் தித்தி" (நற். கஅஎ); "விழவயர்ந் தன்ன கொழும்பஃ றித்தி" அகநா. ககூ.

98. மட்டப் பூந்துகில்: பெருங். க. 34 : 206-7.

99. "நரைவிரா வுற்ற நறுமென் கூந்தற், செம்முகச் செவிலியர்" (நெடுநல். 152-3); "விரவு நரையோரும் வெறுநரை யோரும்" பரி. கo.

100. கலுழி - கலங்கிய வெள்ளத்தில். திறவதின் - நன்றாக.

101. காமஞ் செப்பி - விரும்புதற்குக் காரணமான சொற்களைச் சொல்லி; "காமஞ் செப்பாது கண்டது மொழிமோ" குறுந். உ.

102. ஆடுமின் - ஆடுங்கள்.

102-4. முன்பு நோற்றமையால் இந்நங்கையர் இப்பொழுது ஆடிப்பெறும் புனலாட்டின்பம் உங்களுக்கும் ஆகக் கடவதென்று கூறி; "பண்ணிய வீகைப் பயன்கொள்வா னுடலால்" பரி. கக.

105. நீராட்டயரும் - நீராட்டுதலைச் செய்யும்.

105-6. முதுமகளிர் கன்னியரை நீராட்டுவித்தல்: "ஆய்தொடிக் கன்னியர், முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப், பனிப்புலர் பாடிப் பருமண லருவியி, னூதை யூர்தர ...வையை நினைக்கு மடைவாய்த் தன்று" (பரி. கக.) 109. புகுவோர் - வருவோர்.

110. தொகுவோர் - சேர்ந்து செல்பவர். கைதழீஇ - கையைக் கோத்துக்கொண்டு.

பி - ம்.—1 தாமின. 2 பெரும்கலரவமும். 3 ஊட்டி.

மயங்கிய சனத்திடை மம்மர் நெஞ்சமொடு
நயந்த காத னன்னுதன் மகளிரைத்
தேருந ரரவமுந் திகைக்குந ரரவமும்
பேருநர்ப் பெறாஅப் பெரியோ ரரவமும்
நெடுந்துறை நீந்தி நிலைகொள லறியார்
கடுங்கண் வேந்தன் காதல ரரவமும்
கொலைத்தொழில் யானை சென்றுழிச் செல்லாத்
தலைக்க ணிரும்பிடி பிளிற்றிசை யரவமும்
துறைமாண் பொராஅத் தூமண லடைகரை
நிறைமாண் குருகி னேர்கொடிப் பந்தர்ப்
பாடலொ டியைந்த பல்லோ ரரவமும்
ஆடலொ டியைந்த வணிநகை யரவமும்
யாற்றொலி யரவமொ டின்னவை பெருகிக்
கூற்றொலி கேளாக் கொள்கைத் தாகி

(ஆடவும் உண்ணவும் அமைந்தவை)

அரைப்பமை சாந்தமு முரைப்பமை நானமும்
ஒப்புமுறை யமைந்த வோமா லிகையும்
வித்தகர் வனைந்த சித்திரக் கோதையும்
காதன் மங்கைய ராகத் தெறியும்

---

114. தேருநர் - தேடுபவர். 115. பேருநர் - வழிவிலகுவோரை.

116 - 7. அறியாரான அரசகுமரர். 120. மாண்பு ஒருவாத.

121. குருகின் நேர்கொடிப் பந்தர் - குருக்கத்தியின் நுண்ணிய கொடிகளின் நிழலில்; பெருங். க. 36 : 133; "பாசிலைக் குருகின் பந்தர்" சிலப். கங: 52.

124. யாறு - க்ஷிப்பிராநதி யென்று வடநூல்களால் தெரிகின்றது; பெருங். க. 44 : 110. 125. கூற்று - சொற்கள். [நானம் - புழுகு.

126. அரைப்பு அமை - அரைத்தல் மிக்க. உரைப்பு - தேய்த்தல்;

127. ஓமாலிகை-இலவங்கம் முதலிய முப்பத்திருவகைப் பொருள்கள்: பெருங். உ. 5: 32; "முப்பத்திருவகை யோமாலிகையினு, மூறின நன்னீர்............நலம்பெற வாட்டி" (சிலப். கூ : 77 - 9) என்பதனும், அதனுரையாலும், சீவக. 623 - ஆம் செய்யுளினுரையாலும் மேற்கூறிய பொருள்கள் அறியப்படும்.

128. சித்திரக்கோதை - பலநிறமுள்ள மாலை.

சாதி லிங்கமுஞ் சந்தனத் தேய்வையும்
உரைத்த வெண்ணெயு [1] நுரைப்பம லரைப்பும்
பீடுடன் பேராப் பெருந்துறை யெங்கும்
ஆடவு முண்ணவு மாதர மாகப்
பேராக் காதலொடு பெருஞ்சிறப் பியற்றி
நீராட் டரவ நிகழுமா வினிதென்.

சக—நீராட்டரவம் முற்றிற்று.

---

130. சந்தனத்தேய்வை - சந்தனக் குழம்பு; "நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை" முருகு. 33.

129-30. பெருங். க. 42: 187.

131. உரைத்த - தேய்த்த. அமல் - பெருகிய.

133. ஆதரம் - அன்பு. 134. பேராக் காதல் - நீங்காத ஆசை.

பி - ம். 1 நுரையலாராறம்பு.

## சஉ—நங்கை நீராடியது.

நீராட் டரவ நெடுநகர் வரைப்பகம்
[1] ஆராட் டரவமொ டமர்ந்துவிழை வகற்றிய
பெருநிலை நிதியம் பேணுது வழங்கி

---

சஉ—நங்கை நீராடியது.

[வாசவதத்தை நீராடிய சிறப்பு இப்பகுதியிற் கூறப்படும்.]

1. அரவம் - ஒலியையுடைய. நகர் வரைப்பகம் - நகர எல்லையி லுள்ளவர்கள்; எழுவாய்.

2. ஆராட்டு - விழாவின் முடிவிலாடும் நீராட்டு; பெருங். க. 42: 114; "வியனமர் திருவா ராட்டு", "பொன்னூசல் பாராட்டுந் திரு வாராட்டும்" (திருக்குற்றலப் புராணம்); இஃது ஆருட்டெனவும் வழங் கும்; "ஆங்கதிற் றிருவா ருட லாதியாந் தீர்த்த வேளை" (திருக்காளத் திப் புராணம்); மலை நாட்டில் இப்பெயர் மிக்குவழங்கும். அமர்ந்து விழைவு அகற்றிய - விரும்பித்தங்கித் தம் விருப்பத்தைப் போக்கிக் கொள்ளும்பொருட்டு.

3. நிலை பெரு நிதியம் - பலகாலமாக நிலைத்துள்ள பெரிய பொருட்டிரள்களை; "நிலந்தினக் கிடந்த நிதியம்" (மலைபடு. 575;

பி - ம். 1 ஆருப்பாவம்.

(பிரச்சோதனன் பெருமை)

இருநில மடந்தைக் கிறைவ னாகிப்
பெருஞ்சின மன்ன ரருஞ்சமம் வாட்டித்
தம்மொழிக் [1] கொளீஇ வெம்முரண் வென்றியொடு
வழுவில் கொள்கை வானவ ரேத்தும்
கழிபெருங் கடவுளை வழிபடி னல்லது
வணக்க மில்லா வணித்தகு சென்னித்
திருச்சே ரகலத்துப் பிரச்சோ தனன்மகள்

(வாசவதத்தை நீராடவருதல்)

அரிமா னன்னதன் பெருமா னகலத்துத்
திருவுநிறை கொடுக்கு முருவுகொள் காரிகை
வால்வளைப் பணைத்தோள் வாசவ தத்தையைக்
கோல்வளை மகளிர் கொட்டையைச் சூழ்ந்த
அல்லியு மிதழும் போல நண்ணிப்

---

சீவக. 1471.) பேணாது - விரும்பிவைத்துக் கொள்ளாமல். வழங்கி - தானஞ்செய்து. 5. மன்னர் - பகையரசர்.

6. தம்மொழி கொளீஇ - தங்களுடைய கட்டளையை எல்லா மன்னர்களும் கொள்ளச்செய்து; இவன் முன்னோர்களையும் உளப்படுத்தி, 'தம்' என்றார். 7. கொள்கை - விரதம்.

7-8. எல்லாத் தெய்வங்களுக்கும் மிகப்பெரிதாகிய தெய்வத்தை வணங்கினன்றி. 10. "திருத்துயில் பெற்றமார்பன்" சீவக. 1504.

8 - 10. "நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி, உலகுபொதி யுருவத் துயர்ந்தோன் சேவடி, மறஞ்சேர் வஞ்சி மாலை யொடுபுனைந், திறைஞ்சாச் சென்னி யிறைஞ்சிவலங் கொண்டு" (சிலப். உகு: 54-7) என்பது இங்கே அறியற்பாலது.

11. அரிமான் - சிங்கம். பெருமான் - கணவன்; 52. அகலம் - மார்பு. 12. நிறை - ஒப்பு.

10 - 13. மகளும் காரிகையுமாகிய வாசவதத்தையை. [108.

14. கொட்டை - தாமரைப்பூவின் உட்கொட்டை; பெருங். ௩. 3:

15. அல்லி - மேற்கூறிய கொட்டையைச் சார்ந்தனவும் சிறிய கம்பிகள் போன்றனவுமான கேசரங்கள்; பெருங். ௩. 3 : 97.

13 - 5. வாசவதத்தையை நண்ணி. தலைவிக்குக் கொட்டையும் ஏனைமகளிருள் உயர்ந்தோர்களுக்குத் தாமரைமலரின் அல்லிகளும் ஏனையோர்க்கு அகவிதழ்களும் உவமம்; 38 : 257 - 9.

பி - ம். [1] கொளீஇய.

பல்வகை மரபிற் பசும்பொன் [1] குயின்ற
ஊர்தியும் [2] பிடிகையுஞ் சீர்கெழு சிவிகையும்
வையமுந் தேரும் வகைவெண் மாடமும்
பொறுப்பவு மூர்பவுஞ் செறித்திடம் பெறாஅர்
நேமி வலவ னாணை யஞ்சிப்
பூமி [3] சுவர்க்கம் புறப்பட் டாங்குத்
[4] தீட்டமை கூர்வாள் கூட்டொடு பொலிந்த
வேற்றிற லாளரு மிலேச்சருஞ் சிலதரும்
கோற்றகை [5] மாக்களு நூற்றுவில் லகலம்
குறுகச் செல்லாச் செறிவுடைக் காப்பிற்
பெருங்கடி மூதூர் மருங்கணி பெற்ற
அருங்கடி வாயிலொடு துறைதுறை தோறும்
[6] அம்பணை மூங்கிற் பைம்போழ் நிணவையும்
வட்டமுஞ் சதுரமு முக்கோண் வடிவமும்
கட்டளை யானையு மத்தக [7]வுவாவும்
வையப் புறத்தொடு கைபுனைந் தியற்றிப்

---

17 - 8. ஊர்தி முதலியன வாகன விசேடங்கள். வெண்மாடம் : பெருங். க. 40 : 66.

19. பொறுப்ப : சிவிகை முதலியன. ஊர்ப : வையம் முதலியன.

20. சக்கரவர்த்தியாகிய பிரச்சோதனனுடைய ஆணையை; பெருங். க. 47: 39, 76. நேமி - ஆஞ்ஞாசக்கரம். [மிலேச்சர்.

22. தீட்டுதலமைந்த வாள். கூடு - உறை. 23. மிலேச்சர் -

22 - 3. கூட்டொடு பொலிந்த கூர்வாளாளர், வேற்றிறலாளரென்க. சிலதர்-ஏவல்செய்வோர். [லம் - விற்கிடைத் தூரம்.

24. கோற்றகை மாக்கள் - கோலால் தடுக்கின்ற வீரர். வில்அக

22 - 5. வாட்படையாளர் முதலியோரின் காப்பு.

26. "அருங்கடிமூதூர்" 180. 27. கடி - காவல்.

28. மூங்கிலின் மெல்லிய பிளப்பாற் பின்னிச் செய்யப்பட்ட பொருள்களும்.

29. வட்ட வடிவமாகவுள்ள பொருள்கள் முதலிய மூன்றனையும்.

30. கட்டளையானை - முதன்மையையுடைய யானை. உவா - யானை.

31. புறத்தொடு - புறத்தில்.

பி - ம். 1 குன்ற. 2 பிடாகையுஞ். 3 சுவறகம். 4 தற்றமைக் கூர்வாள். 5 மாக்கணூற்று. 6 அம்புனை. 7 உயர்வும்.

பூத்தூர் நிலையொ டியாப்புற வமைத்துக்
காமர் பலகை கதழவைத் தியற்றி
வண்ணங் கொளீஇய நுண்ணூற் பூம்படம்
எழுதுவினைக் கம்மமொடு முழுதுமுத லளீஇ
[1]மென்கிடைப் [2]போழ்வைச் சந்திய வாகி
அரிச்சா லேகமு நாசியு முகடும்
விருப்புநிலைத் தானமும் பிறவு மெல்லாம்
நேர்ந்துவனப் பெய்திய நீரணி [3]மாடம்
சேர்ந்த வீதியுட் சிறப்பொடு பொலிந்த
எவ்வெவ பண்டமு மவ்வயிற் போத்தந்
தொலியுஞ் சேனை யிணை தனக் கொவ்வா
மலிநீர் மாடத்துப் பொலிவுகொண் மறுகின்
வெயிலழல் கவியாது வியல்க வரைப்பின்
உயிரழல் கவிக்கு முயர்ச்சித் தாகிப்
பூந்தா ரணிந்த வேந்தல் வெண்குடை
வேந்தன் மகளே விரையா தென்மரும்

---

32. பூத்தூர்நிலை - பூக்களை மிகச்சொரிந்துள்ள இடம்.

33. கதழ - சிறப்ப; "கதழ்வு வேகமுஞ் சிறத்தலுங் காட்டும்" திவாகரம்.

34. நுண்ணிய நூல்களாலாகிய பொலிவையுடைய ஆடையில்.

35. கம்மம் - தொழில். முதல் - அடிப்பக்கத்தில்.

36. கிடைப்போழ்வைச் சந்தியவாகி - நெட்டியின் பிளப்பாலாகிய சந்துகளை உடையவாய்; பெருங். க. 41 : 4.

37. அரிச்சாலேகம்; பெருங். க. 40 : 9. நாசி - மாடத்தின் ஓருறுப்பு; பெருங். க. 40 : 14.

39. நீரணிமாடம் : க. 40 : 17, அடிக் ; க. 40 : 156.

41. போத்தந்து - புகச்செய்து ; பெருங். ௩. 17 : 123 ; "அமரர்கள் போத்தந்தார்" திவ். பெரியாழ்வார் க. 3. 4.

43. மறுகு - குறுந்தெரு.

44 - 6. "நின் விண்பொரு வியன்குடை, வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய, குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ" (புறநா. ௩௫); சூளா. நகர. 20.

47. 'விரையாது செல்க' என்று சொல்ல எண்ணியவர், அச்சத்தால், 'விரையாது' என்றார். என்மரும் - என்பாரும்.

பி - ம். 1 பொன்கிடைப். 2 போர்வைச். 3 மாடமும்.

பண்டை மகளிர் படிமையிற் பிழையாது
தண்டந் தூக்கித் தலைப்புனல் விழவினைக்
கொண்டுவந் தாடுங் கொழுமலர்த் தடங்கட்
பொங்குமலர்க் கோதாய் போற்றென் போரும்
நின்னை யுவக்குநின் பெருமா னேந்திய
[1] வென்வேல் கடுக்கும் வெம்மை நோக்கத்துப்
பொன்னே போற்றி பொலிகென் போரும்
[2] பொருவேட் பேணிப் பொலியுஞ் சேனையுள்
பெருவேண் மறைந்து பெரும்புன லாடும்
திருவே மெல்லச் செல்கென் போரும்
பொங்குதிரை ஞாலத்து மயக்க நீக்கும்
திங்க ளன்னநின் றிருமுகஞ் சுடரத்
துன்பப் [3] பேரிரு டுமிக்கத் தோன்றிய
நங்காய் மெல்ல நடவென் போரும்
வல்லவ னெழுதிய பல்பூம் பத்திக்
[4] கட்டெழில் சேர்ந்த வட்டணைப் பலகைப்
பளிக்குமணிச் சிவிகையுள் விளக்குறுத் ததுபோல்
தோன்று மாதரைத் தோன்ற வேத்திப்
பைங்கேழ்ச் சாந்துங் குங்குமக் குவையும்

---

48. படிமை - ஒழுக்கம்.

49. தண்டம் - பிராயச்சித்தம். தலைப்புனல் விழவு - கூந்தல் நனையும்படி நீராடுதற்காகச் செய்யப்படும் விழா; 122-9, பார்க்க.

51. போற்று - பாதுகாப்பாயாக.

52. பெருமான் - கணவன்; 11.

53. வென்வேல் - வெற்றியையுடைய வேல்.

54. போற்றி - பாதுகாப்பாயாக. 55. வேள் - மன்மதன்.

56. பெருவேள் - முருகக்கடவுள்; ஆடும்: முற்று; "யாறுங் குளனும் வேறுபல் வைப்பும்" (முருகு. 224.) 57. செல்க என்போரும்.

59 - 60. திங்களை வாசவதத்தைக்கு உவமையாக்கினும்பொருந்தும்.

62. வல்லவன் - சித்திரமெழுதுதலில் வன்மையுடையோன்.

63. வட்டணை - வட்டமாகிய அணையையுடைய.

65. தோன்றும் - நன்கு புலப்பட்ட.

64 - 5. மணி. ௪ : 124 ; ௫ : 6.

66. குங்குமக்குவை - குங்குமப்பாணி; 38 : 284.

பி - ம். 1 வெள்வேல். 2 ஒருவேள். 3 போரிவிமீத். 4 கட்டழல்.

மலர்ப்பூம் பந்துந் தலைத்தளிர்ப் போதும்
மல்லிகைச் சூட்டு நெல்வளர் கதிரும்
இனிக்குறை யில்லை யாமு மாடுகம்
எனத்துணிந் திளையோ ரிருநூற் பெய்த
அனிச்சக் கோதையு மாய்பொற் சுண்ணமும்
அந்தர மருங்கின் வண்டுகை விடாஅச்
சுந்தரப் பொடியுஞ் சுட்டிச் சுண்ணமும்
வித்தகர் கொடுத்த பித்திகைப் பிணையலும்
[1] மத்தநல் யானை மதமு நானமும்
வாசப் பொடியொடு காயத்துக் கமழ
அந்தரத் தியங்குநர் மந்திர மறப்ப
நறுந்தண் ணாற்ற முடையவை நாடி
எறிந்துந் தூவியு மெற்றியுந் தெளித்தும்
பல்லோர் [2] பல்சிறப் பயர்வன ரேத்தி

67. முதலிற்றோன்றிய தளிரின் மேலுள்ள பூவரும்பும்.

68. நெற்கதிர் மகளிர் சூடுதற்குரியது; "பருஉக்காற் செந்நெற் கதிர்சூடி" (சீவக. 2699.) 70. இளையோர் - மங்கையர்.

70 - 71. நூற்பெய்த - நூலாற்கட்டிய; மாலைகளை நூலாற்கட்டுதலும் மரபு; "நெகிழ்நூற் பூச்சே ரணை" (குறுந். உ௫௬); "விரிநுண் ணூல் சுற்றிய வீரித ழலரி" கலி. ௬௪.

72 - 3. வண்டுகள், ஆகாயத்தினின்றும் பூமியில் நழுவவிடாத; சுண்ணத்தின் மணப்பெருமை கூறியவாறு; "விண்ணிற் றூவியிட்டான் வந்து வீழ்ந்தன" (சீவக. 894.) சுந்தரப்பொடி - சிந்தூரப் பொடி; சீவக. 1956. சுட்டிச்சுண்ணம் - உடம்பைத் தூய்மை செய்தற்குரிய வாசனைப்பொடி; சுட்டி, சுத்தியின் திரிபென்பர்; பெருங். க. 40 : 222.

74. வித்தகர் - தேர்ச்சியையுடையவர். பித்திகைப் பிணையல் - பிச்சிமாலை; சீவக. 971.

75. களிற்றுமதம் ஒரு சாரரால் அணியப்படுவதுண்டென்பர். கடாம் மணத்தல்: தக்க. 3, விசேடக். 76. காயம் - ஆகாயம்.

77. மந்திரம் - ஆகாயவழியிற் செல்லுதற்கு உச்சரிக்கும் மந்திரம்.

79. எறிதற்குரியன செஞ்சாந்தம் முதலியன; தூவுதற்குரியன சுண்ண முதலியன; அடித்தற்குரியன பூம்பந்து முதலியன; தெளித்தற்குரியன பனிநீர் முதலியன; பெருங். க. 42 : 186 - 91; பிறவாறும் கூறப்படும். 80. அயர்தல் - விரும்பிச் செய்தல்.

பி - ம். 1 மத்தகயானை. 2 பலசிறப்பளவனரேத்தி.

(வாசவதத்தையை மணையிற் சேர்த்தல்)

வெல்போர் வேந்தன் மடமகள் விரும்பி
நில்லாத் தண்புன னெடுங்கோட் டொருசார்த்
துறையமைத் தியற்றிய குறைவில் [1] கூடத்
தம்புகை மருங்கிற் செஞ்சுடர் மழுங்கச்
சீயமு மேறும் பாய்பரிப் புரவியும்
யானையும் புலியு மன்னமு மகன்றிலும்
ஏனைய பிறவு மேஎ ருடையன
புனைவுகொண் டேற்றி வினைவல ரியற்றிய
கனல்சேர் [2] புகையக லேந்திய கையின்
மூதறி பெண்டிர் காதலொடு பரவி
நீர்கால் கழீஇய வார்மண லெக்கர்
முத்து மணியும் பொற்குறு சுண்ணமும்
வெள்ளியும் பவழமு [3] முள்விழுந் திமைப்ப
வண்ண வரிசியொடு மலரிடை [4] விரைஇ
நுண்ணிது [5] வரித்த வண்ண னகர்வயின்
தமனியத் தடத்துப் பவழப் பாய்கால்
திகழ்மணி வெள்ளிப் புகழ் [6] மணை சேர்த்திக்
கதிர்நகை முறுவற் காரிகை மாதரை

---

83. கூடம் - இடவிசேடம்.

86. மகன்றில் - நீர்வாழ் பறவைகளுள் ஒரு சாதி.

87. ஏர் - அழகு. 89. நறும்புகையையுடைய அகலை.

85 - 9. சீய முதலியன, அகலிலுள்ள சிற்பத்தொழில்.

90. பழைய ஒழுக்கங்களை யறிந்த பெண்டிர்.

91. நீரானது குப்பைகளை வாரி இடத்தைத் தூய்மைசெய்த; "புனல்கால் கழீஇய மணல்வார் புறவின்" மலைபடு. 48.

92. பொற்குறுசுண்ணம் - பொற்பொடி.

94. விரைஇ - விரவச் செய்து ; கலந்து.

95. வரித்த - கோலஞ் செய்த. நகர் - இடம்.

96. தடம் - விளிம்பு. 97. மணை - பலகை.

95 - 7. "இழைத்தபொன் னகரில்வெள்ளி யிடுமணை......இருந்த பின்றை" (சீவக. 2416.)

பி - ம். 1 கூட்டத். 2 புகைபுகையல். 3 உள்விரைர். 4 வெரீஇ. 5 விரைத்தவண்ணநகர். 6 மனை.

எதிர்கொண்டு வணங்கி யிழித்தனர் நிறீஇக்
காஞ்சன மாலையுஞ் செவிலியும் பற்றி
எஞ்சலில் கம்மத் திணைதனக் கில்லாப்
பஞ்ச வண்ணத்துப் பத்திபல புனைந்த
பொங்குமலர்த் தவிசிற் பூமிசை யாயினும்
அஞ்சுபு மிதியாக் கிண்கிணி மிழற்ற
வேழத் தாழ்கைக் காலொடு சேர்த்த
கண்டப் பூந்திரை மண்டபத் திழைத்த
நன்னகர் நடுவட் பொன் [1] மணை யேற்றிப்

(திருமஞ்சனம் ஆட்டல்)

பெருந்திசை நோக்கி யிருந்தவ ணிறைஞ்சி
யாத்த காதலொ டேத்த லாற்றுள்
[2] அடித்தல முதலா முடித்தலங் காறும்
மொய்யுறத் தோய்ந்த நெய்தயங்கு பைந்தார்
மங்கலப் புல்லவ ரின்புறப் பெய்தபின்
நீராடு பல்கல நெரிய வேற்றி
ஆராடு தானத் தைந்நூ றுயிரம்
பசும்பொன் மாலையுந் தயங்குகதிர் முத்தமும்
இரவன் மாக்கட்குச் சொரிவன ணல்கித்

---

99. இழித்தனர் - இறக்கி.
100. செவிலி - சாங்கியத்தாய்; 117 - 8.
102. பஞ்சவண்ணம் - வெண்மை, செம்மை, கருமை, பொன்மை, பசுமையென்னும் ஐந்து நிறங்கள்; பெருங். க. 38 : 149; உ. 2 : 198; ச. 7 : 238; "ஐவண்ணம்" நன். சூ. 454. [மெல்ல ஒலிப்ப.
104. அடியின் அச்சம் கிண்கிணி மேல் ஏற்றப்பட்டது. மிழற்ற -
105 - 6. துதிக்கை போன்ற குத்துக்கோலோடு சேர்த்துச் செய்யப்பட்ட திரையையுடைய மண்டபம்; பெருங். க. 37 : 103, அடிக்; க. 40 : 115. 107. பொன்மணை - பொற்பலகை.
109. யாத்த – பிணித்த. 112. மங்கலப்புல் - அறுகம்புல்.
111 - 2. "அறுகை நெய்தோய்த்து......நேய்யேற்றுகின்றார்" (சீவக. 2416.) 113. கலம் - பாத்திரங்கள்.
114. ஆராதொனம்: பெருங். க. 42 : 2.
116. சொரிந்து கொடுத்து.

பி - ம். 1 மனை. 2 அடிக்கலமுதலா முடிக்கலந்தாறு.

தீங்கரும் காதற் செவிலியுந் தோழி
காஞ்சன மாலையுங் கையிசைத் தேந்த
[1] அளற்றெழு தாமரை யள்ளிலை நீரில்
துளக்குறு நெஞ்சி னடுக்கமொடு விம்மித்
தோழியர் சூழ வூழூ ழொல்கித்
தலைப்புனன் மூழ்குத லிலக்கண மாதலின்
மணிவிடு நிலைத்துறைத் துணைவளை யார்ப்பக்
குடைவனள் குலாஅய்க் [2] குறிப்புநனி நோக்கிப்
படையோர் கண்ணியர் பணிந்துகை கூப்பிப்
புடைவீங் கிளமுலைப் பூண்பொறை யாற்றா
திடையே மாக்குமென் றடைவனர் விலக்கிச்
சீலத் தன்ன தெய்வங் கவினிக்
கோலங் கொண்ட கூந்தலொடு குளித்துப்
பிடிக்கையின் வணரு [3] முடிக்குர லாற்றாள்
செருக்கய லன்ன சேயரி நெடுங்கண்
[4] அரத்தகம் பூப்ப வலமந் தெழலும்
வாழிய ரெம்மனை வருந்தினை பெரிதென
மொழியறி மகளிர் தொழுதனர் வணங்கி
அத்துமுறை யுரிஞ்சி யாயிரத் தெண்குடம்

117 - 8. = 100.

119. தாமரையிலையில் உள்ள நீர் நடுங்குவதுபோல.

121. ஊழூழ் - முறைமுறையாக. 123. நிலையான துறையில்.

124. குலாய் - வளைந்து. குறிப்பை மிக நோக்கி.

127. ஏமாக்கும் - கலக்கமுறும்; "நெஞ்சே மாப்ப வின்றுயி றுறந்து" (மதுரை. 575.) விலக்கி - விலக்க.

128 - 9. மங்கையருடைய கூந்தலில் சௌபாக்கியவதியென்ற பெயருள்ள ஒரு தெய்வமுண்டென்றும் அதனால் அவர் எப்பொழுதும் நீராடுதல் மரபன்றென்றும் கூறுவர்.

130. வணரும் - வளைகின்ற. முடிக்குரல் - கூந்தற்கொத்தினை. கூந்தற்குப் பிடிக்கை: பெருங். க. 40 : 193 - 5, அடிக்.

132. அரத்தகம் - செம்மைநிறம்.

135. அத்து - பத்துவகையான துவர்; சீவக. 623 - ஆம் செய்யுளின் உரையைப் பார்க்க. உரிஞ்சி - தேய்த்து.

பி - ம். 1 அளற்பெறு. 2 குறிப்புளி. 3 முடித்தலாற்றாள். 4 அலத்தகம்.

முத்துறழ் நறுநீர் முறைமையி னாட்டி

(வாசவதத்தையை அலங்கரித்தல்)

அங்கர வல்கு னங்கைக் கின்றிவை
மங்கல மண்ணுநீ ராவன வென்று
நெஞ்ச நெகிழ்ந்தவர் தன்புகலந் தாடியல்
அரவிற் பரந்த வல்குன் மீமிசைக்
கலாஅய்க் கிடந்த குலாத்தரு கலிங்கம்
நிலாவிடு பசுங்கதிர்க் கலாவ மேய்ப்ப
நீரணி கொண்ட வீரணி நீக்கிக்
கதிர்நிழற் கவாஅப் [1] பதுமநிறங் கடுக்கும்
புதுநூற் பூந்துகி [2] லருமடி யுடீஇக்
காரிருங் கூந்த லீரற வாரி
வனப்பொடு [3] புணர வகுத்தணி முடிமிசை
நீர்ப்பூம் பிணையல் சீர்ப்பமை சிகழிகை
முல்லையங் கோதை சில்சூட் டணிந்து
தண்ணறுஞ் சாந்த நுண்ணிதி னெழுதிப்
பதினோ ராண்டினுட் பாற்படக் கிளந்த
விதிமா ணுறுப்பிற்கு வேண்டுவ வேண்டுவ
கதிர்மாண் [4] பல்கலங் கைபுனைந் தியற்றி
உறுப்பெடுக் கல்லா வுடம்பின ளாயினும்
சிறப்புவை யாதலிற் சீர்மையொ டிருந்து

---

135 - 6. ஆயிரத்தெண்குடத்தில் வந்த நீரை ஆட்டி; பெருங். உ. 2 : 203 - 4; 5 : 9 - 10.

141. கலாஅய் - கலந்து. கலிங்கம் - இங்கே கோங்கம்பூப் போன்ற நிறத்தையுடைய ஆடை; 206 - 7.

141 - 2. கலாவம் - ஒருவகை மேகலை; நனைந்தமையால், கலிங்கம் கலாவத்தை யொத்தது. 143. ஈரணி - ஈர உடையை.

144. கதிர்நிழற்கு - சூரியகிரணத்தை. அவா - விரும்புதலையுடைய. பதுமம் - தாமரை. 145. உடீஇ - உடுத்தி.

146. = 201.

147. வகுத்து - ஐம்பாலாக வகுத்து; சீவக. 2437.

148 - 9. பிணையல்முதலியன மாலை விசேடங்கள்.

153. பல் கலம் - பல ஆபரணங்கள்.

பி - ம். [1] புதுநிறங். [2] அரும்பிடியுடீஇ. [3] புணர்ந்த. [4] பல்கலை.

காமர் கோலங் கதிர்விரித் திமைப்பத்
தாமரை யுறையுண் மேவாள் போந்த
தேமலர்க் கோதைத் திருமகள் போலக்
கோமகள் போதுங் குறிப்புநனி நோக்கி

(அந்தணமகளிர் முதலியோர்)

அரணி கான்ற வணிகிளர் செந்தீக்
[1] கிரிசையின் வழாஅ வரிசை வாய்மை
அளப்பரும் படிவத் தான்ற கேள்வித்
துளக்கி னெஞ்சத்துத் துணிந்த வாய்மொழி
சால்வணி யொழுக்கி னூலிய னுனித்த
மந்திர நாவி னந்தண மகளிரும்
வரும்புன லாடற்குப் [2] பரிந்தனர் வந்த
விரைபரி மான்றே ரரைச மகளிரும்
அறிவினுஞ் செறிவினும் பொறியினும் புகழினும்
எறிகடற் றானை யிறைமீக் கூறிய
செம்பொற் பட்டத்துச் சேனா பதிமகள்
நங்கை தோழி நனிநா கரிகையும்
அருந்திணை [3] யாயத் தவ்வயின் வழாஅத்
திருந்திய திண்கோட் பெருந்திணை மகளிரும்

160. அரணி - யாகத்திற்குரிய தீக்கடைகோல்.
161. கிரிசை - கிரியை; 43 : 174. 162. படிவம் - விரதம்.
163. துளக்கு - நடுக்கம், சலனம்.
164. சால்வு - சால்பு; நற்குணங்களால் நிறைந்திருத்தல்; பரி. ஒ.
160 - 65. "நறுநெய் பயந்த நன்னகர் முத்தீ, மறுமைக் கெண்ணிய மயலறு கிரிசை, அந்தணர்" பெருங். ௧. 43 : 173 - 5.
166. பரிந்தனர் - விருப்புற்று.
168. செறிவு - அடக்கம். பொறி - ஒளி.
169. தானை இறை மீக்கூறிய - சேனைத்தலைவர்களுக்கெல்லாம் மேலாகச்சொல்லப்பட்ட.
170. எட்டிப்பட்டத்திற்கு அறிகுறியாகக் கொடுக்கப்பட்ட பொற்பட்டத்தையுடைய. 170 - 71. ௸ 38 : 203 - 4.
172. அருந்திணை - பெறுதற்கரிய ஒழுக்கம்.
173. திண் கோள் - வன்மையான் கொள்கை. பெருந்திணை - பெரிய குலத்திற் பிறந்த.

பி-ம். 1 கிரிகையின். 2 பரிந்திறை. 3 மாயத்தவ்வயின்.

செண்ண மமைத்த செம்பொற் பட்டத்து
வண்ண மணியொடு முத்திடை விரைஇய
கண்ணி நெற்றிக் காவிதி மகளிரும்
காலினுங் கலத்தினுஞ் சாலத் தந்த
மாநிதிச் செல்வத்து வாணிக மகளிரும்
நிலத்தோ ரன்ன நலத்தகு பெரும்பொறை
அருங்கடி மூதூர்ப் பெருங்குடி மகளிரொ
டெண்ண லாகத்துப் பெண்ணுல கேய்ப்பக்
கன்னி மகளிர் கதிர்த்த கோலமொடு
நன்மணி யைம்பா னங்கையொடு போந்தோர்

(நீர் விளையாட்டு)

நீர்தலைக் கொண்ட நெடும்பெருந் துறைவயிற்
போர்தலைக் கொண்டு பொங்குபு மறலிக்
கொங்கலர் கோதை கொண்டுபுறத் தோச்சியும்

---

174. செண்ணம் - வடிவு. காவிதிப் பட்டத்தினுக்கு அறிகுறியாகக் கொடுக்கப்பட்ட பொற்பட்டம். 175. விரைஇய - கலந்த.

176. கண்ணிநெற்றி : 32 : 67, அடிக். காவிதியென்பது உழுவித்துண்போர்களிற்சிறந்தோர் அரசனாற்பெறுவதொரு பட்டப்பெயர்; பெருங். உ. 3 : 144 - 5 ;பத்துப்பாட்டு, 395 - ஆம் பக்கம் 2-ஆம் அடிக் குறிப்பைப்பார்க்க.

177. கால் - வண்டி, கலம் - கப்பல்; "கலத்தினுங் காலினுந் [தருவன ரீட்ட" சிலப். உ : 7.

178. வாணிக மகளிர் - வைசிய மகளிர்.

179. நிலம்போன்ற பொறுமை : குறள், 151.

180. அருங்கடிமூதூர் - பிறர்புகுதற்கரிய காவலையுடைய பழைய நகரம்; "பெருங்கடிமூதூர்" (26.) பெருங்குடி - வணிகருடைய மூன்று பிரிவினுள் ஒருபிரிவு; "பெருங்குடி வாணிகன் பெருமட மகளே" சிலப். உ: 76.

181. எண்ணல் - மதித்தல். பெண்ணுலகு - பெண்கள் மட்டுமே நிறைந்துள்ள இடம்; அதனை மணித்தீவமென்பர்; ௩. 14 : 4, 24 : 58.

182. கதிர்த்த - ஒளிவீசிய.

183. நன்மணியைம்பால் : 37 : 216, அடிக்.

185. போர் - நீர்ப்போர்.

186. கோதை - ஒருவகைமாலை. புறத்து - முதுகில். ஓச்சி - அடித்து ; "கோதைகொண் டோச்சு வாரும்" கம்ப. நீர்விளை. 5.

அஞ்செஞ் சாந்த மாகத் தெறிந்தும்
நறுநீர்ச் சிவிறிப் பொறிநீ ரெக்கியும்
முகிழ்விரற் [1] றூரை முகநேர் விட்டும்
மதிமரு டிருமுகத் தெதிர்நீர் தூவியும்
பொதிபூம் பந்தி [2] னெதிர்நீ ரெறிந்தும்
சிவந்த கண்ணினர் வியர்ந்த நுதலினர்
அவிழ்ந்த கூந்தலர் நெகிழ்ந்த வாடையர்
ஒசிந்த மருங்குல ரசைந்த தோளினர்
நல்கூர் பெரும்புனல் கொள்க வென்றுதம்
செல்வ மெல்லாஞ் சேர்த்திறைத் தருளி
இளையா விருப்பிற்றம் விளையாட்டு [3] முனைஇக்
கயம்பா டவியப் புறங்கரை போந்து
[4] பொறிமயிற் றொழுதி புயல்கழி காலைச்
செறிமயி ருளர்த்துஞ் செய்கை போற் [5] றம்
நெறிமயிர்க் கூந்த னீரற வாரிச்
செழும்பூம் பிணைய லடக்குபு முடித்துக்
குழங்கற் சாந்த மழுந்துபட வணிந்து
பைங்கூற் பாதிரிப் போதுபிரித் தன்ன

---

187. சாந்தம் - சந்தனவிழுதை; பெருங். க. 41 : 129 - 30.

188. சிவிறிப்பொறி - ஒருவகை யந்திரம். எக்கியும் - மேலே இறைச்செய்தும்; "எடுத்தவே யெக்கி நூக்குயர்பு தாக்க" பரி. கசு.

189 - 91. தாரை, பந்து : நீர்வீசு கருவிகள் ; 38 : 105 - 9.

186 - 91 = 79. 192. வியர்ந்த - வியர்த்த.

194. ஒசிந்த - வருந்திய.

195. நல்கூர் - பின்கூறப்படும் பொருள்கள் இல்லாத.

197. முனைஇ - வெறுத்து.

198. கயம் - மேற்கூறிய பொய்கை. பாடு அவிய - ஒலி அடங்க.

199. மயிற்றொழுதி - மயிலின் கூட்டம்.

200. உளர்த்தும் - அலகால் வகிரும். 201. = 146.

203. குழங்கற் சாந்தம் - மணத்தையுடைய சந்தனக்குழம்பு ; "குழங்கற் சாந்திடைக் குளித்து" ந. 2 : 203.

204. கூன்பாதிரிப் போது - கூனிய பாதிரிப்பூவை ; "பாதிரிக் கூன்மலர்" குறுந். கசஎ.

பி - ம் 1 தாமரை. 2 எதிரெதிர். 3 முனைஇக். 4 பொறிமயில். 5 தன்னெறி.

அங்கோ சிகமும் வங்கச் [1] சாதரும்
கொங்கார் கோங்கின் கொய்ம்மல ரன்ன
பைங்கேழ்க் கலிங்கமும் பட்டுத் தூசும்
நீலமு மரத்தமும் வாலிழை வட்டமும்
கோலமொடு புணர்ந்த வேறுவே றியற்கை
நூலினு முலண்டினு நாரினு மியன்றன
யாவை யாவை யவையவை மற்றவை
மேவன மேவன காமுற வணிந்து
கம்மியர் புனைந்த காமர் பல்கலம்
செம்மையி னணியுஞ் செவ்விக் காலத்துச்

(உதயணன் செயல்)

சிந்தையி னொழிக்குஞ் செலவிற் றாகி
அந்தர விசும்பி னமரர் பொருட்டா
மந்திர முதல்வன் மரபிற் படைத்த
இந்திரன் களிற்றொ டிணைந்துடன் பிறந்த

---

205. கோசிகம் - பட்டாடை. வங்கச்சாதர் - வங்கதேசத்திலிருந்து வந்த சாதரென்னுமுடை; சாதரென்பது சிலப். ௩ : 88, அடியார்க்கு நல்லாருரையிற் காணப்படுகின்றது. கோசிகத்திற்குப் பாதிரிப் போது உவமை; "அங்கோசிக வாடை பூத்தன பாதிரி" சீவக. 1650.

206. கொங்கு - தேன்.

207. கேழ் - நிறம். கலிங்கம் - ஒருவகை ஆடை. பட்டுத்தூசு - பட்டாடை.

208. வால் இழை - வெள்ளிய நூலிழை. வட்டம் - ஆடை; நீல ஆடை, சிவந்த ஆடை, வெள்ளை ஆடை யென்க.

210. உலண்டு - பட்டுநூல்; ஆகுபெயர். இயன்றன - ஆடை; இது வினையாலணையும்பெயர். பருத்தி நூலாலும், பட்டுநூலாலும், நாராலும் செய்யப்பட்டவை; "நார்நூல் வெண்டுகில்" 43 : 125.

212. மேவன - மனம் விரும்புவனவற்றை.

213. கம்மியர் - கம்மாளர். 214. செவ்வி - சமயம்.

215 - 29. இவ்வடிகளில் பத்திராபதியென்னும் பெண்யானையின் இயல்பு கூறப்படும்.

215. மனவேகத்தையும் அடக்கும் வேகமுடையதாய்.

216. அந்தர விசும்பு: இருபெயரொட்டு.

218. ஐராவதத்துடன் பிறந்த.

பி - ம். 1 சந்தமும்.

இரும்பிடி தானு மிதற்கிணை யன்றென
அரும்பிடி யறிவோ ராராய்ந் தமைத்தது
காலினுங் கையினும் படைத்தொழில் பயின்றது
கோலினும் வேலினு [1] மறலினுங் குமைத்தது
தட்பமும் வெப்பமுந் தாம்படிற் றீர்ப்பது
பகலினு மிருளினும் பணியிற் பயின்ற
[2] திகலிருங் கும்பத் தேந்திய சென்னியது
மேலிற் றாயது காலிற் கடியது
மத்தக மாலையொடு நித்தில மணிந்த
துத்தரா பதத்து மொப்புமை யில்லாப்
பத்திரா பதியிசைப் பனிக்கடற் பிறந்த
வெஞ்சூர் தடிந்த வஞ்சுவரு சீற்றத்து
முருகவே ளன்ன வுருவுகொ டோற்றத்
துதையண குமரன் புதைவா ளடக்கிச்

220. பிடி அறிவோர் - பெண்யானையின் இலக்கணம் அறிபவர்.

221. கை - துதிக்கை. படை - படுத்தல்; கொல்லுதல்.

222. பகைவர் கோலாற் போர்செய்யினும் வேலாற் போர்செய்யினும்; கோல் - குத்துக்கோல், அம்பு. 224. பணி - தொழில்.

225. கும்பத்து - மத்தகத்தால்.

226. காலின் - காற்றைக்காட்டிலும்; கடுமை - வேகம்; "கால் கிளர்ந் தன்ன வேழம்" முருகு. 82.

227. மத்தகமாலை - நெற்றிமாலை. நித்திலம் - முத்துமாலை; அஃதாவது இருபத்தேழு பருமுத்துக்களாற் செய்யப்பட்ட நட்சத்திரமாலை யென்பர். 229. பத்திராபதியென்னும் பெண்யானையின் மேல்.

226 - 9. = 38 : 293 - 9 ; 43 : 19 - 20.

232. புதை - உறை ; 43 : 114.

229 - 32. பிணிமுகமென்னும் யானையின்மேல் எழுந்தருளியிருந்து போர்செய்து வெற்றிபெற்றவராதலின் முருகக்கடவுளை உதயணனுக்கு இங்கே உவமை கூறினர் ; "மாக்கடன் முன்னி, அணங்குடை யவுண ரேமம் புணர்க்கும், சூருடை முழுமுத றடிந்த பேரிசைக், கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்கு" (பதிற். கக) ; "பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்குச், சேயுயர் பிணிமுக மூர்ந்தமருழக்கி" (பரி. ரு) ; "பிணிமுகமேற் கொண்டவுணர் பீடழியும் வண்ணம், மணிவிசும்பிற் கோனேத்த மாறட்ட வெள்வேலே" சிலப். உச.

பி - ம். [1] அறலினுமமைத்து. [2] அகலிருங்.

(உதயணன் கருதுதல்)

சிறையெனக் கொண்ட மன்னவன் செல்வமும்
துறைவயி னுடுநர் துதைந்த போகமும்
நெய்பெய் யழலிற் கையிகந்து பெருகிப்
புறப்படல் செல்லா வாகி மற்றவை
மனத்திடை நின்று கனற்றுபு சுடுதலின்
மாற்றுச் செய்கை யென்னு நீரால்
ஆற்ற வெவ்வழ லவிப்பக் கூடுதல்
வயிரத் தோட்டி யன்றியும் பயிரிற்
சொல்லியது பிழையாக் கல்விக் கரணத்துப்
பிடியொடு புணர்ந்த விப்பக லாயினும்
முடியு மென்னு முயற்சிய னாகிப்
பாப்புரி யன்ன மீக்கொ டானை
இருபுடை மருங்கினும் வருவளிக் [1] கொசிந்து
வீச்சுறு கவரித் தோற்றம் போல
மிக்குவாய் [2] கூரு மீட்சி வேட்கையன்

---

233. தன்னைச் சிறைகொண்ட பிரச்சோதனனுடைய செல்வப் பெருக்கமும். 234. போகம் - இன்பநுகர்ச்சி.

235. கை இகந்து - அளவுகடந்து.

236. புறப்படல் - வெளிப்படல்.

237. கனற்றுபு சுடுதலின் - மிகச்சுடுதலால்.

233 - 7. செல்வமும் போகமும் சுடுதலின்.

238. மாற்றுச் செய்கை - விரோதத் தொழில்.

239. ஆற்றவும் அவிப்பவும். கூடுதல் - எண்ணம் நிறைவேறுதல்.

240. வயிரத்தோட்டி - வயிரத்தாற் செய்யப்பட்ட அங்குசம்; "வயிரத் தோட்டி யுடையன" (சூளா. கல்யாண. 86.) பயிர் - யானையைத் தொழிற்படுத்தற்குரிய பேச்சுக்கள்; "பயிர்த்தொழி றடக்கையாற் செய்ததே" சீவக. 1834.

241. கரணம் - சாதனம். 242. இப்பகலிலாவது.

239 - 43. கூடுதல் முடியுமென்கிற.

244. பாப்புரி - பாம்பின் தோல். தானை-மேலாடை. தானைக்குப் பாம்பின் உரி உவமை; "அரவுரி யன்ன வறுவை" (பொருந. 83, அடிக்.) 245. ஒசிந்து - அசைந்து.

247. மீளுதலில் விருப்பமுற்று.

பி - ம். 1 ஒசிந்த. 2 கூறும்.

கொக்குவா யன்ன கூட்டமை விரலினன்
நண்ணா மன்னனை நலிவது நாடும்
எண்ணமொ டிருந்தன னிரும்பிடி மிசையென்.

௪௨—நங்கைநீராடியது முற்றிற்று.

---

248. அவன் யோசித்துக்கொண்டிருக்கையில் இயல்பாகச் சேர்ந்திருந்த கையின் இரட்டை விரல்களுக்குக் கொக்கின்வாய் உவமை.

249. பிரச்சோதனனுக்கு வருத்தஞ்செய்தலை.

---

## ௪௩—ஊர் தீயிட்டது.

எண்ணமொ டிருந்தோன் கண்ணியது கருதி
யாத்திரைக் [1] கமைந்தன பாற்பட வடக்கிப்
போகுபொரு ளுணர்ந்து பாகுசெயற் கெய்தி
நயந்தெரி நாட்டத்து வயந்தகன் கூறும்

(யூகி சொல்லியதை உதயணனுக்கு வயந்தகன் கூறல்)

பாகிய வுள்ளத்துப் படிமந் தாங்கிய
யூகி சூழ்ந்த வுரைப்பருஞ் சூழ்ச்சி
வாய்திறந் தின்றிது கோமகற் குரையெனக்

---

௪௩—ஊர் தீயிட்டது.

[யூகியின் சூழ்ச்சியை வயந்தகனாலறிந்த உதயணன் வாசவதத்தையைக் கொண்டுசெல்ல நிச்சயித்தலும் யூகியின் முயற்சியால் அங்கங்கே மறைந்திருந்த வீரர் போர்செய்யத் தொடங்கலும் கள்ளமங்கையர் நகரத்தில் தீக்கொளுவுதலும் இதனால் அறியலாகும்.]

1. இருந்தோன் - உதயணன். கண்ணியது கருதி - அவன் வாசவதத்தையைக் கைப்பற்றிச் செல்லக் கருதியதைத் தான் நினைந்து.

3. பாகு - பக்குவம்.

4. நாட்டம் - நாடுதலையுடைய. கூறும் - கூறுவான்.

5. பாகுஇயல் - பகுத்தறிதல் பொருந்திய; "பாகிய வுள்ளத்துப் பாகர் கம்பலும்" (பெருங். உ. 2 : 205.) படிமம் - தவவேடம்.

6. யூகி : எழுவாய். சூழ்ச்சியை.

7. வெளிப்படையாகச் சொல்லென்று.

பி - ம். 1 அமைந்தன்று.

கூறின னருளிக் குறிப்பிற் கேண்மதி
செறுநர் சிறையகப் பட்டன னாயினும்
உறுவலி நாகத் தொற்றிடம் பார்த்தல்
அறைகடன் ஞாலத் திறைகட னாதலின்
நம்மை யெள்ளிய வெம்மை வேந்தன்
சூழ்ச்சி வெள்ளத் தாழ்ச்சி யெய்தி
ஒன்று தோறுந் துன்னின னாடும்
நெடுநீர் விழவிற் படைபிடித் தோரைக்
கடிமுறை கடிவ தல்ல தில்லென
இடுமணி யானை யெருத்த மேற்றி
அடன்முர சறைந்தமை யறிந்தன மாதலின்
உத்தரா பதத்து மொப்புமை யில்லாப்
பத்திரா பதியைப் பண்ணமைத் தியற்றித்
தான்மேற் கொண்ட தன்மைய னாதலின்
நூன்மேற் சூழ்ந்த [1] நுனிப்பில் வழாமைச்
செருவடு வேந்தனும் பெருநடுக் கெய்தத்
தொகைகொண் மாடத் தகநகர் வரைப்பின்

---

8. கேட்டருள்க. 6 - 8. யூகி கூறினன்.

9. செறுநர் சிறை - பகைவருடைய சிறையில்.

10. நாகம் - யானை ; அதனியல்பு, "களிறுகவு ளடுத்த வெறிகற் போல, ஒளித்த துப்பினை" (புறநா. ௩0), "காய்ந்தெறி கடுங்க றன்னைக் கவுட்கொண்ட களிறு போல, வாய்ந்தறி வுடைய ராகி" (சீவக. 2910), "வேற்றுவ னெறிந்த கல்லைக், காந்திய கந்த தாகக் கவுட்கொண்ட களிறு போல" (சூளா. சீயவதை. 94) என்பவற்றால் அறியலாகும். ஒற்றிடம் - அறியுமிடம்.

11. இறைகடனாதலின் - அரசனுடைய கடமையாதலால்.

12. வெம்மை வேந்தன் - பிரச்சோதனன்.

13. ஆலோசனையிற் குறைந்து.

18. அரசன் முரசறைவித்தமை : 38 : 94 - 104.

19 - 20 = 42 : 228 - 9. 21. 'தான்' என்றது உதயணனை.

22. நூல்மேற்சூழ்ந்த - நூலிற் கூறியவண்ணம் ஆராய்ந்த.

23. வேந்தன் - பிரச்சோதனன்.

24. அகநகர் வரைப்பில் - உச்சைனியின் உள்ளிடத்தில்.

பி - ம். [1] நுனிப்பியல்.

நகைகொண் முறுவ னந்நாட் டாட்டியர்
புகையெரி பொத்திய புணர்ப்புவகை யுண்மையின்
ஊர்வயிற் கம்பலை யல்ல தொருவரும்
நீர்வயிற் கம்பலை நினைக்குந ரில்லை
இல்லை யாதலின் வெல்சமம் பெருக்கி
வேந்தற் கோடல் வியனுடு கெடுத்தல்
ஆங்கவன் மகளை யருஞ்சிறை வெளவுதல்
மூன்றினு ளொன்றே காய்ந்தவர் கடுந்தொழில்
தோன்றக் கூறிய மூன்றி னுள்ளும்
முன்னைய விரண்டு [1] முடியா மற்றவன்
அரும்பெறன் மடமக ளமிழ்துபடு தீஞ்சொல்
ஏசுவ தில்லா வெழில்படு காரிகை
வாசவ தத்தைக்கு வலத்த ளாகிச்
செந்தீ வெம்புகை யிம்பர்த் தோன்றலும்
அந்தீங் கிளவியை [2] யாண்மையிற் பற்றிக்
[3] காற்பிடி தன்னொ டேற்றுக வேற்றலும்
வேற்படை யிளையர் நாற்பெருந் திசையும்
வாழ்க வுதயணன் வலிக்கநங் கேளெனப்

---

25. நந்நாட்டாட்டியர் - நம்முடைய நாட்டிலிருந்து வருவிக்கப்பட்ட கள்ளமங்கையர்; 116.

26. எரிபொத்திய - தீயை மூட்டும்படி. புணர்ப்புவகை - யான் செய்திருக்கும் விதம்.

27 - 8. ஆதலால், நகரத்தார் இங்கே துணை செய்தற்கு வாரார்.

30. வேந்தற்கோடல் - பிரச்சோதனனைச் சிறைப்படுத்திக்கொள்ளல்.

32. காய்ந்தவர் - பகைத்தவர்.

30 - 32. கோடலும் கெடுத்தலும் வெளவுதலுமாகிய மூன்றனுள்.

38. இம்பர் - இவ்விடத்தில்.

40. காற்பிடி - காற்றைப்போலச் செல்லுதலிற் சிறந்த பெண்யானை; "அணிநடை மடப்பிடி" 48.

41. வேற்படை யிளையரென்றது, ஊகி போர்செய்தற்கு அங்கங்கே மறைத்து வைத்திருக்கும் வீரர்களை.

42. தங்கள் தலைவர்களை வாழ்த்திக்கொண்டு பகைவரோடு போர் தொடங்கல் வீரர்களுக்கு இயல்பு: 113; "செய்கழற் சீவகன் வாழ்க வென்னவே" சீவக. 778.

பி - ம். 1 முடியாவாதலின்மற்றவன்றும். 2 ஆண்மையிற். 3 கார்ப்பிடித் தன்னொடு.

பாழினு முழையினுங் காழில் பொத்தினும்
ஒளித்த வெம்படை வெளிப்பட வேந்தி
மலைக்குந ருளரெனின் விலக்குந ராகித்
தொலைக்கு நம்படை துணிந்திது கருதுக
இமைத்தோர் காணு வியற்கைத் தாக
அமைக்கப் பட்ட [1] வணிநடை மடப்பிடி
நண்ணு [2] மன்ன னுடுதலை மணந்த
ஐந்நூற் றேறுடுத லாற்று தாயினும்
முந்நூற் றெழுபது முப்பது மோடி
வீழினும் வீழ்க வேதனை யில்லைக்
கூழினு முடையினுங் [3] குறிப்பின ராகிய
நாட்டுப்புற மாக்களும் வேட்டுவத் தலைவரும்
குறும்பருங் குழீஇய குன்றுடைப் பெருநா
டறிந்தோர்க் காயினு மணுகுதற் கரிய
அரிய வாயினு முரியவை போல
இயற்றினன் பண்டே கவற்சி நீங்கி
இன்ன னென்று தன்னறி வுறீஇப்பின்
குற்றப் படினு மற்ற மோம்பிப்

---

43. முழை - குகை. காழில் - வயிரமில்லாத. பொத்து - மரப் [பொந்து.
44. படை - ஆயுதங்களை.
45. மாறுபட்டுப் போர்செய்வோருளராயின்.
46. நம் படை - நம்முடைய சேனை.
44 - 6. ஏந்தி விலக்கி நம் படை தொலைக்கும்.
47. ஒருமுறை இமைத்தோர் கண் திறப்பதற்குள் கண்ணுக்கெட் டாத தூரத்திற் செல்லும் விரைவுடையதென்பது கருத்து.
53. கூழ் - உணவு. உடை - ஆடை. குறிப்பினர் - கருதுதலை [யுடையவர்.
55. குறும்பர் - குறுநிலமன்னவர்.
55 - 6. நாடுகள் அணுகுதற்கரியன.
57 - 8. ஆனாலும் உரிய இடங்கள் போலவே இருக்கும்படி முன் னமே அமைத்து வைத்திருக்கின்றேன்.
59. ஆதலால் தன்னை இன்னனென்று தெரிவித்து.
60. அற்றம் ஓம்பி - சோர்வை ஒழித்து.

பி - ம். 1 அணிநகை. 2 மன்னர் நாடுதலை. 3 குறிப்பிலராகிய.

போதத்தி னகன்று [1] சாதத்தின் வழிநின்
[2] றடுகளிக் குரவைசே [3] ரார்கலி யாளர்
நடுகற் படப்பை யிடுகற் சீறூர்
கண்கூட் டிருந்த வைம்பதிற் றிரட்டிப்
புல்பரந்து கிடந்த கல்லதர் கடந்தபின்
தமரன் மாக்களைத் தருக்கி னூறும்
அமரடு நோன்று ணைமருள ரவ்வயின்
இன்னவை பிறவுந் தன்மனத் தடக்கித்
தானவ ணொழிக மானவ னகரில்
இழுக்குடைத் தென்னு மெண்ணமுண் டாயினும்
வழுக்குடைத் ததனை வலித்த னீங்குக
யாவை யாயினும் யான்றுணி கருமம்
தீய தின்மை தெளிகவெம் பெருமகன்
யூகி யென்னு முரைபரந் தோடப்
புல்வா யினத்திற் புலிபுக் காங்குக்
கொல்வாள் வீசிக் கூற்றுத்தலை பனிப்ப
வெல்போர் வேந்தன் வீரரைச் சவட்டி
எய்தப் போதுவ லேத மாயினும்
ஐய மின்றி யான்றுணி கருமம்
செய்யா னயின் வைய மிழக்கும்

---

61. போதம் - அறிவு. சாதம் - பிறப்பு.

62. ஆர்கலி - மிக்க முழக்கம்.

64. கண்கூட்டிருந்த-கருதப்படுகிற கொள்ளையுடனிருந்த; கூட்டு-கொள்ளை. ஐம்பதிற்றிரட்டி - நூறு.

66. தமர் அல் மாக்களை - பகைவரை.

67. நமர் - நம்மவர். அவ்வயின் உளர்.

69. மானவன் - பிரச்சோதனன்.

69 - 71. இங்ஙனம் பிரச்சோதனன் நகரிற் செய்தல் குற்றமுடையதென்னும் எண்ணம் உண்டாயின் அவ்வெண்ணம் தவறுடையது ; ஆதலின் அதனை மேற்கொள்ளலைப் போக்குக.

73. எம்பெருமகன் தெளிக.

75. மான் கூட்டத்திற் புலி புகுந்ததுபோல.

77. சவட்டி - அழித்து. 80. இழக்கும் - இழப்பான்.

பி - ம். 1 சாமத்தின். 2 அருளிக். 3 ஆகளி.

மையல் யானை மன்னவன் ஞுனென
இயைந்த தோழ னெண்ணிய கருமம்
வயந்தக குமரன் வத்தவற் குரைப்பத்

(உதயணன் செயல்)

தானும் யானுந் தீதில மாயின்
வானும் வணக்குவ மேனைய தென்னென
முறுவல் கொண்ட முகத்த னாகி
நறுநீர் விழுவி னுளணி [1] யகலம்
பூண்சேர் மார்வன் காண்பான் போலக்
கடைப்பிடி யுள்ளமொடு மடப்பிடி கடைஇக்
கோமக ளாடும் பூமலி பெருந்துறை
அகலா தணுகாது பகலோன் [2] விண்முனிந்
திருநில மருங்கி னிழிதந் தாங்குப்
பெருநலந் திகழுந் திருநலக் கோலமொடு
செய்குறிக் கருமந் தெவ்வப் பட்டுழித்
தாக்குந ரசாஅய்ப்பொர நேர்க்குந [3] ரிரிவுழி
இருவரு மவ்வழிப் பருவர றீரப்
பெருவலிக் கிளையிற் கூடுவது போல

81. மையல் யானை : "மையல்வேழம்" (பெருங். க. 37 : 232; 2 - 9 : 69.) மன்னவன் - உதயணன்.

82. தோழன் - யூகி. கருமம் - காரியத்தை.

85. ஏனையது என் - மற்றைச் செயல் யாதாகும்? செய்தலில் எனக்கு யாதொரு வருத்தமுமில்லை யென்றபடி.

87. அகலம் - பரப்பை.

88. மார்வன் - மார்பன்; செய்யுள் வழக்கு.

89. கடைப்பிடியுள்ளமொடு - காரியத்தை முடித்தற்குக் குறிக்கொண்ட கருத்துடனே. கடைஇ - செலுத்தி.

90. கோமகள் - வாசவதத்தை.

91 - 3. சூரியன் உதயணனுக்கு உவமை. [விடத்து.

94. செய்யக்குறித்ததாகிய காரியத்தை உதயணன் கைக்கொண்ட

95. தாக்குநர் பொர அசாஅய் - நீர்ப்போர்செய்வோர் பொருதலால் மெலிந்து. நேர்க்குநர் - எதிர்த்துப் பொருதற்குரியோர்.

96. இருவரும் - மேற்கூறிய இருதிறத்தாரும்.

பி - ம். 1 அகலப்பூண். 2 விழுன்முனிந்து. 3 அரிவுழி.

விண்ணக மருங்கிற் கண்ணகன் றூராஅய்
மண்ணக மறிக்கு மதுகைத் தாகிப்
பாருடைப் பவ்வம் பருகுபு நிமிர்ந்த
நீருடைக் கொண்மூ நெகிழாக் காலொ
டெண்டிசைப் பக்கமு மெதிரெதிர் கலாஅய்க்
கண்டவர் நடுங்கக் கடுவளி தோன்றலிற்

(யூகியின் செயல்)

கனவிற் கண்ட கண்ணார் விழுப்பொருள்
நனவிற் பெற்ற நல்குர வன்போல்
உவந்த மனத்தின் விரைந்தெழுந் தியூகியும்
மறையத் திரிதரு மாந்தர்க் கெல்லாம்
அறியக்[1] கூறிய குறியிற் றாகப்
பத்திரா பதத்துப் பகையமை போர்வை
உட்குவரு முரச முருமுறழ்ந் ததிரக்
கொட்டினன் கொட்டலுங் கொள்ளென வுராஅய்

(யூகியின் வீரர் செயல்)

எவ்வெத் தானத்துங் கவ்வை தோற்றி
உதையண குமரனும் யூகியும் வாழ்கெனப்
புதைவா ளுரீஇப் பூசல் விளைத்தலும்

---

99. மறிக்கும் - நிலைகுலையச்செய்யும்.

100. பார் - பாறை; "பார்முதிர் பனிக்கடல்" முருகு. 45.

101. காலொடு - காலிறங்குதலோடு; மழைக்காலென்பது வழக்கு.

102. கலாஅய் - கலந்து; சீவக. 508.

103. கடுவளி - கடுங்காற்றோடு.

98 - 103. அப்பொழுது பெருங்காற்றும் பெருமழையும் தோன்றலின். தீரத் (96) தோன்றலின் (103.)

108. குறியிற்றாக - அடையாளமுடையதாக.

110. உருமுறழ்ந்து - இடியையொத்து.

109 - 11. யூகி எற்றுரிபோர்த்த முரசத்தைக் கொட்டினன்;

112. கவ்வை - பேரொலி. 113. =42.

114. புதை - உறை; 42 : 232. இங்கே உதயணனைச் சேர்ந்த வீரர் போரைச் செய்யத் தொடங்கியவுடன்.

பி - ம். 1 கூறிக்.

(கள்ளமங்கையர் தீயிடுதல்)

மட்டணி மூதூர் மனைதொறு மரீஇய
[1] கட்டணி கூந்தற் கள்ள மங்கையர்
அட்டிலு மறையும் விட்டெரி கொளுவலின்

(தீப்பட்ட ஊரில் நிகழும் நிகழ்ச்சிகள்)

எட்டெனக் கூறிய திசைதிசை தொறூஉம்
ஐந்தலை யுத்தி யரவுநா ணாக
மந்தர வில்லி னந்தணன் விட்ட
தீவா யம்பு திரிதரு நகரின்
ஓவா தெழுமட முட்குவரத் தோன்றி
அரும்புன லாடா தகவயி னொழிந்த
பெரும்பரி சாரத்துப் பெண்டி ரெல்லாம்
நறுநெய் தோய்ந்த நார்நூல் வெண்டுகிற்
செறிமென் கச்சை சேர்ந்த வல்குலர்
அசல மஞ்ஞையி னணிநிறந் தழீஇப்
பசலை பாய்ந்த திதலைத் தித்தி
அசைந்த வவ்வயி றடையத் தாழ்ந்த
கொடுங்காற் குண்டிகைக் கொட்ட மேய்ப்ப
அறாஅ தொழுகு மம்முலை யாரம்
பொறாஅ வாயினும் புடைத்த [2] லானர்

116.=25. 117. கொளுவலின் - கொளுத்துதலினால்.

120. மந்தரம் - மேரு; சைனநூல் வழக்கு; சூளா. துறவு. 209; "மந்தரநற் பொறிசிலையா வளைத்துக்கொண்டார்" (திருநா. தேவாரம்.) அந்தணன் - இறைவன்; "யாழ்கெழு மணிமிடற் றந்தணன்" (அகநா. கடவுள்.) 121. நகர் - முப்புரம்.

117 - 21. கலி. கடு: 1 - 4.

122. உட்குவர - அச்சம் உண்டாக.

124. பரிசாரத்துப் பெண்டிர் - வேலை செய்யும் மகளிர்.

125. நார்நூல் வெண்டுகில் : 42 : 210.

127. அசல மஞ்ஞையின் - மலையிலுள்ள மயில்போல்.

130. குண்டிகை - கமண்டலம். கொட்டம் - ஒழுகுதல்.

128 - 30. 44 : 25.

132. புடைத்தல் - அடித்துக்கொள்ளுதல்.

பி - ம். [1] விட்டணி. [2] ஆனு.

ஆற்றல் வேந்த னற்ற நோக்கி
வேற்று வேந்தர் புகுந்தன ருளர்கொல்
கூற்ற வேழங் குணஞ்சிதைந் ததுகொலென்
றீற்றுப் பெண்டி ரிளமகத் தழீஇ
ஊற்றுநீ ரரும்பிய வுள்ளழி நோக்கினர்
காற்றெறி வாழையிற் கலங்கிமெய்ந் நடுங்கி
ஆற்றேம் யாமென் றலறின ரொருசார்
போதுகொண் டணியிற் பொறுக்க லாற்றாத்
தாதுகொண் டிருந்த தாழிருங் கூந்தலர்
கருங்கே ழுண்கண் கலக்கமொ டலமரப்
பெருஞ்சூற் பெண்டிர் பேரழ ழுக்கி
வருவோர்க் கண்டு வணங்கின ரொருசார்
தவழும் புதல்வரை யொருகையாற் றழீஇப்
பவழஞ் சேர்ந்த பல்கா ழல்குலர்
அவிழ்ந்த பூந்துகி லங்கையி னசைஇ
நகைப்பூங் கோதையொடு நான்ற கூந்தற்கு
மிகைக்கை காணாது புகைத்தீ யெறிப்பப்
படைத்தோன் குற்ற மெடுத்துரைஇ யிறக்கேம்
அங்கித் தேவ னருளென வயன்மனைப்
பொங்குநீர்ப் பொய்கை புக்கன ரொருசார்
பறைந்திடை சோர்தரு பசலை வெண்ணரைக்

---

135. கூற்றவேழம் - கூற்றம் போன்ற யானை; நளகிரி; "நள கிரிக் கூற்றம்" 44 : 91.

138. "காற்றெறி வாழையி னுற்ற நடுங்கி" கு. 14 : 156.

141. "தாதுசூழ் கூந்தல்" கலி. ககக : 12.

143. பெருஞ்சூல் - பூரண கருப்பம். 146. = சீவக. 1184.

145 - 6 'செந்துகிர்க்கோவை மேகலை' என்பதற்குப் பவழக் கோவை எட்டினாற் செய்த மேகலையென்று பொருள்கூறி, "தவழும் புதல்வரை ... அல்குலர்" என்னும் இப்பகுதியை மேற்கோள்காட்டினர் அடியார்க்குநல்லார்; சிலப். அந்திமாலை. 27 - 34, உரை.

147. அசைஇ - கட்டி.

149. மிகைக்கை - அதிகக்கையை.

150. இறக்கேம் - இறப்பேம்; "படைத்தோன் மன்றவப் பண்பி லாளன்" (புறநா. ககச) என்பதை இவ்வடி நினைப்பிக்கின்றது.

151. அங்கித்தேவன் : விளி. 153. பறைந்து - தேய்ந்து.

குறைந்த கூந்தலர் கோசிகம் போலப்
புள்ளி விதிர்த்த வுள்ளுறு மேனியர்
பைசொரிந் தன்ன பாலி றோன்முலை
நரைமூ தாட்டியர் நடுக்க மெய்திக்
காலிடு தளர்ச்சியர் கண்பிற ராகக்
கோலொடு தளர்ந்து கூட்டுந ரின்றி
ஆதி முற்றத்து வேதிகை முட்டிச்
சுழலு நெஞ்சமொடு துயர மெய்தி
அழலின் முற்ற மடைந்தன ரொருசார்
சீப்புள் ளுறுத்துத் திண்ணெழுப் போக்கிக்
காப்புள் ளுறுத்த கடிமதில் வாயிற்
கால்கடி யாளர் வேல்பிடித் தோடி
ஆணை யாணை யஞ்சன்மின் கரவொடு
பேணல் செல்லாது பெருந்தீப் படுத்த
நாணில் பெண்டிரை நாடுமின் விரைந்தென
ஆய்புகழ் வேந்த னரசத் தாணிக்
கோயில் காவல் கொண்டன ரொருசார்
எப்பான் மருங்கினு மப்பா லவரவர்
பெருந்துய ரெய்திக் கரிந்துகண் புதைப்ப
நறுநெய் பயந்த நன்னகர் முத்தீ

---

154. கோசிகம் - பட்டாடை ; 42 : 205.

153 - 5. புள்ளிவிதிர்த்த - புள்ளிகள் தெறித்த ; "வெண்ணரை யுடம்பினன் விதிர்த்த புள்ளியன்" சீவக. 2010.

158. பிறரே கண்ணாக.

160. ஆதிமுற்றம் - முதல் முற்றம்; விவாகம் முதலியவை நடத்தற்குரிய முற்றம் ; "மங்கலம் பொலிய வேந்தி மாதரார் முன்பு செல்ல, ...அங்கவர் செம்பொன் மாடத் தாதிபூ மியினுட் புக்கார்" (பெரிய. திருஞா. 1230.) வேதிகை - திண்ணை.

163. சீப்பு - கதவுக்கு வலியாக உள்வாயிலே இடப்படும் மரம் ; எழு - ஒருவகைத் தடைமரம் ; "எழுவுஞ் சீப்பும்" சிலப். கரு : 215.

165. கால் கடியாளர் - காற்றுப்போன்ற வேகமுடைய வீரர்.

166. கரவு - கள்ளம்.

169. அரசத்தாணி - அரசிருக்கை மண்டபம்.

173. நன்னகர் - யாகசாலை.

மறுமைக் கெண்ணிய மயலறு கிரிசை
அந்தணர் சேரியு மருந்தவர் பள்ளியும்
வெண்சுதை மாடமும் வேந்தன் கோயிலும்
தெய்வத் தானமொ டவ்வழி யொழியத்
தண்ணறுங் காழகி லுண்ணயிர் கூட்டி
அம்புகை தவழ்ந்த வரக்குவினை மாடமும்
வெம்புகை தவழ்ந்து வேந்துகண் புதைப்ப
வால்வளை மகளிர் மணிநிலத் தமைந்த
கால்வளர் சாலி யாய்பத வரிசிப்
பொன்செய் கிண்கிணிப் புதல்வ ராடும்
கம்பலை வெரீஇக் கவரல் செல்லா
அம்பலக் கொடுங்கா ழுசைத்த யாப்பின்
கிடையும் பூளையுங் கிழியும் பஞ்சியும்
படையமைத் தியற்றிய மடையணிப் பள்ளியுட்
பிணிக்குரல் பயிற்றும் பேடையைக் [1] காணா
தணிக்கட் புறவி னைம்பாற் சேவல்
எரிவளை புகையிடை யிறகுவிரித் தலற
மேலெழு பேடை மீண்டுவந் தாடக்
கீழெழு செந்தீக் கிளைபிரித் தழற்ற
மாமயிற் பெடையொடு மகளிர் நாப்பட்
டூவி மஞ்ஞை தோகைவிரித் தகவ

---

174. கிரிசை - கிரியை ; "செய்யுங் கிரிசைகள் கேளீரோ" திவ். திருப்பாவை, 2.
173 - 5. 42 : 160 - 62.

177. தெய்வத் தானம் - தேவாலயங்கள்.

178. அயிர் - கண்டசருக்கரை. 179. அம் புகை - நறும்புகை.

182. சாலியரிசி - நெல்லரிசியை ; சிலப். கசு : 27.

184. வெரீஇ - அஞ்சி.

187. "படையமை சேக்கையுள்" (கலி. க0 : 10, அகநா. உஅக : 12) ; "படையமை சேக்கைப் பள்ளி" (சிலப். கங : 70) ; படை - படுக்கை.

188. பிணிக்குரல் - துன்பத்தைப் புலப்படுத்தும் குரல்.

190. வளை புகை : வினைத்தொகை.

194. தூவி - மயிலின் குட்டு ; சீவக. 65.

பி - ம். [1] காணாதுமணிக்.

ஏற்றுரி முரசி னிறைவன் மூதூர்க்
காற்றுத் துணையாகக் கனலெரி கவரப்
படலணி வாயின் மடலணி வேயுள்
இடையற வில்லா விருக்கையிற் பொலிந்த
பன்னூ றாயிரம் [1] பாடிக் கொட்டிலும்
முந்நூ றாயிர முட்டிகைச் சேரியும்
ஐந்நூ றாயிரங் கம்மவா லயமும்
சேனை வேந்தன் சிறப்பினொ டிருந்த
தானைச் சேரியுந் தலைக்கொண் டோடிக்
கானத் தீயிற் கடுகுபு திசைப்ப
ஏனை மாடமு மெழுந்தன் றெரியென்.

௩௭—ஊர் தீயிட்டது முற்றிற்று.

---

195. ஏற்றுரிமுரசு : 38 : 100, அடிக்.

197. மடல் - பனையோலை முதலியன. வேயுள் - வேய்ந்திருப்பது.

199. பன்னூறாயிரம் - பதினூறாயிரம்; "பன்னூ றாயிரம் பண்முர சார்ப்ப" (பெருங். ௩. 7 : 58.) பாடிக்கொட்டில் - சேனைவீரர் தங்கியிருக்கும் சிறுகுடில்கள்; ௩. 25 : 109.

200. முட்டிகைச் சேரி - கொல்லர்சேரி; குயச்சேரியுமாம்.

201. கம்மவாலயம் - கம்மியர்கள் வேலைசெய்யும் இடங்கள்; கம்மாலை யென்பது வழக்கு. 202. சேனைவேந்தன் - சேனாபதி.

203. தலைக்கொண்டு - மேற்கொண்டு.

204. கடுகுபு - விரைந்து. திசைப்ப - திகைப்ப; "திசைக்கின் றதே யிவனேய்" (திருவாய்.); "திசைத்தது மில்லை" கம்ப. கைகேசி. 19.

205. எழுந்தன்று - எழுந்தது.

பி - ம். [1] பாடித்தொட்டிலும்.

## சச—பிடியேற்றியது.

### (மங்கையர் கலக்கம்)

எரிதலைக் கொண்டாங் கெயிலக மெரியப்
புறமதிற் சேரிப் பூசலு மார்ப்பும்
உறுநீர்ப் பெருங்கட லுவாவுற் றாஅங்
காகுலம் பெருகலி னருந்துறை தோறும்
போகா தாடுநர் புன்க ணெய்தி
மேகலை விரீஇய தூசுவிசி யல்குல்
நீருடை நனைதல் செல்லார் கலங்கிக்
கானிரி மயிலிற் கவின்பெற வியலி
அயிலிடு நெடுங்க ணரும்பனி யுறைத்தர
உயிரேர் கணவரைத் தானை பற்றி
நல்லது தீதென் றறியா தவ்வழிச்
செல்வது பொருளோ செப்பீ ரோவென்
றல்லல் கூர வலமரு வோரும்

---

சச—பிடியேற்றியது.

[எல்லோரும் மிக்க கலக்கத்தை அடைந்து வருந்துகையில், பாது காக்கும்படி சொல்லியனுப்பிய அரசன் கட்டளையைத் தலைக்கீடாகக் கொண்டு உதயணன் வாசவதத்தையைப் பிடியின்மேல் ஏற்றித் தன் னூர்க்குச் சென்றது இதனால் அறியலாகும்.]

1. எயிலகம் - மதிலுக்கு உள்ளிடத்ததாகிய அகநகர்.

2. புறமதிற்சேரி - மதிற்புறத்தேயுள்ள பலவகைத் தெருக் கள்; 113. பூசல் - இங்கே பேரொலி. ஆர்ப்பு - பிற ஒலிகள்.

3. கடல் பூரணையிற் பொங்கி முழங்குதல் போல.

4. ஆகுலம் - துன்பமுழக்கம். 5 - 13. ஒருதொடர்.

5. போகாது - நகர் செல்லாமல்.

4 - 5. துறைதோறும் ஆடுநர்.

6. விரீஇய - விரித்துக்கட்டப்பட்ட. விசித்தல் - கட்டுதல்.

7. நீருடை - நனைந்த ஆடை. 8. இரிதல் - கெட்டோடுதல்.

9. அயிலிடு - வேல்போன்ற. உறைத்தர - துளிப்ப.

10. ஏர் - ஒத்த; "இலவம் போதே ரெழிற்றங்கைச் சீறடிகள்" சீவக. 1588.

மாக்குருக் கத்தியொடு மல்லிகை மணந்த
பூப்பெரும் பந்தர் நூற்றிரை வளைஇய
காற்பெரு மாடங் காற்றொடு துளங்க
விண்ணுலகு பெறினும் விடுத்தற் காகாப்
பண்ணியல் பாணி நுண்ணிசை யோர்வார்
ஊரக வரைப்பி னொல்லென வெழுந்ததோர்
பூசலுண் டெனவும் பொறையுயர் மாமலை
வேயுயர் பிறங்கற் சேயுயர்ந் தோடும்
சூருறு மஞ்ஞையிற் சோர்ந்த கூந்தலர்
புதல்வரை யொழிந்தியாம் போந்தன மேயென
அதிர்வனர் நடுங்கி யழலி னுயிர்த்துத்
திதலை யவ்வயி றங்கையி னதுக்கி
உதிர்பூங் கொம்பி னொடுங்கு வோரும்
குட்ட மாடிக் குளிர்ந்த வருத்தம்
அட்டுப்பத மாக வறிந்தோ ரமைத்த
மட்டுமகிழ்ந் துண்ணு மாந்த ரவ்வழிப்
பட்ட தென்னெனப் பசும்பொனி னியன்ற
வட்ட வள்ளம் விட்டெறிந்து விதும்பி
எழுந்த கம்பற் கிசைந்துசெல் வோரை

---

14 - 26. ஒருதொடர். 15. வளைஇய - சூழ்ந்த.

14 - 5. குருக்கத்தியும் மல்லிகையும் படர்ந்த பந்தர்; 41: 121.

16. கால் - ஊன்றிய முளைக்கால்கள்; "கழிப்பட மாடம்" 42.

18. பாணி - தாளம், பாட்டு. 20. பொறை - சிறுகுவடு.

21. வேயுயர் பிறங்கல் - உயர்ந்த மூங்கிற்றிரள். சேயுயர்ந்து - மிகவுயர்ந்து.

22. சூருறு மஞ்ஞையின் - அச்சமுற்ற மயில்போல; சூர் - தெய்வமுமாம்; "சூருறு மஞ்ஞையி னடுங்க" (குறிஞ்சி. 169); மகளிர் கூந்தற்கு மயிற்றோகை உவமை. 20 - 22. பெரியதிரு. க. 2 : 1.

23. ஒழிந்து - விட்டுவிட்டு. ஏ : இரக்கக்குறிப்பு.

25. திதலை - தேமல்விசேடம்; 43 : 128 - 9.

27 - 34. ஒருதொடர். 27. குட்டம் - ஆழமான நீரில்.

28. அட்டு - காய்ச்சி. 29. மட்டு - கள். அவ்வழி - நகரில்.

30. பட்டது என் என - உண்டாகிய துன்பம் யாதென்று.

31. விதும்பி - நடுங்கி; விரைந்தென்றுமாம்.

32. கம்பற்கு - முழக்கத்தின் காரணத்தை அறிதற்கு.

அழிந்த தில்லை யறிந்தேம் யாமென
மொழிந்திடை விலங்கி முன்னிற் போரும்
கம்மப் பல்கலம் விம்மப் பெய்த
பொறியமை பேழையொடு பூந்துகி றழீஇக்
குறிவயி னின்ற குறள்வயி னோக்கார்
சோரும் கூந்தலர் வாரும் கண்ணினர்
ஆருந் துன்பமொ டூர்வயி னோக்கி
வீழ்பூங் கொடியின் விரைந்துசெல் வோரும்
பழிப்பின்று புனைந்த பட்டணைப் படுகாற்
கழிப்பட மாடங் காலொடு துளங்க
விழிப்பின் மேனிதம் மின்னுயிர் விடுமென
வேகப் புள்ளின் வெவ்விசை கேட்ட
நாக மகளிரி னடுங்கு வோரும்
ஓடுவிசை வெங்காற் றுருமொ டூர்தரப்
பாடற் றண்ணுமைப் பாணியிற் பிழையா

---

35 - 40. ஒருதொடர்.

35. கம்மப்பல்கலம் - அரியதொழில்களையுடைய பல பேரணிகலங்கள் ; பெருங். உ. 2 : 171 ; “ கம்மப் பல்கலங் களைந்து ” (சீவக. 991.) விம்ம - மிக. [தழீஇ - கைக்கொண்டு.

36. பொறியமை பேழை - முத்திரை யமைந்த பெட்டி ; 32 : 77.

37. குறித்த இடத்தில் நின்ற மிகக் குறிய வடிவமுடையவரை.

38. வாரும் - நீரொழுகும். 39. ஊர்வயின் - ஊரிடத்தை.

41 - 5. ஒருதொடர். [புடைய படி.

41. பட்டணைப்படுகால் - பட்டாற்செய்யப்பட்ட அணைகளை

42. மு. 16. கழிப்படமாடம் - கால்களையுடைய கூடாரம். காலொடு - காற்றால்.

43. விழிப்பில் - இமைப்பொழுதில் ; இழிப்பிலெனப் பிரித்து இழிவுபடுத்தலில்லாதவெனலுமாம். உயிர்விடும் - உயிர்நீங்கும்.

44. வேகப்புள்ளின் - கருடனுடைய ; வெவ்விசை - வேகத்தாலுண்டாகிய முழக்கத்தை.

45. நாகமகளிரின் - நாககன்னியரைப்போல.

44 - 5=46 : 23 - 4 , ௬. 24 : 175 - 6.

46 - 51. ஒருதொடர்.

46. உருமொடு - இடியுடன். ஊர்தர - பரக்க.

47. பாணி - கைத்தாளம்.

தாடன் மகளி ரரங்கம் புல்லெனச்
சுவைசோர்ந் தழிய நவைகூர்ந்து நடுங்கி
மஞ்சிடைப் புகூஉ மகளிர் போலத்தங்
கஞ்சிகை யெழினியிற் கரந்துநிற் போரும்
நடுங்கு வோரு நவையுறு வோரும்
ஒடுங்கு வோரு மொல்கு வோரும்
இனைய ராகத்தம் புனைநலம் புல்லென
நங்கையுஞ் சேயண் மிறைவனு நண்ணான்
என்கொ லீண்டுநம் மின்னுயிர்த் துணையென
மங்கைய ரெல்லா மம்ம ரெய்தக்

(அறிஞர் கூற்று)

கணிகை யிரும்பிடி யணிநல நசைஇயப்
பிடியொடு போந்த பெருங்களிற் றொருத்தலை
வீரிய விளையர் வாரியுள் வளைஇ
மதந்தலை நெருங்கி மதக்களிறு வலியாக்
கதந்தலை யழியக் கந்தொ டார்த்துச்
சாம கீத வோசையிற் றணிக்கும்
நூலறி பாகரொடு மேலறிவு கொள்ளா

48. புல்லென - பொலிவழிந்து தோன்ற ; 54.

49. சுவை - ஒன்பது சுவை.

50. மஞ்சு - மேகம். விஞ்சை மகளிரைப்போல்.

51. கஞ்சிகையெழினியில் - உருவுதிரைக்குள்ளே.

55. நங்கையும்சேயள் -வாசவதத்தையும் நெடுந்தூரத்திலுள்ளாள்.

58. கணிகையிரும்பிடி - வேசைத் தன்மையையுடைய கரிய பெண் யானையின். 59. பெருங்களிற்றொருத்தலை - ஆண்யானையை.

60. வாரி - யானையை அகப்படுத்துமிடம்.

61. மதக்களிறு வலியா - மதயானையைத் தனக்குத் துணையாகக் கொண்டு பிடித்து. 62. கதம் - கோபம். கந்து - கட்டுத்தறி.

63. சாமகீதவோசையின் - இனிய சங்கீதத்தால் ; தணிக்கும் - அதன் கோபத்தைத்தணியச்செய்கின்ற; இசைக்குக்களிறு வணங்குமென்பது பெரியோர் கொள்கை ; 35 : 100 - 101, அடிக் ; "வார்கவுள் யானை வணக்குதற் கியைந்த, வீணை விச்சை" என்பர் பின்னும் ; ௫. 6 : 114 - 5.

திகழ்ச்சியின் விட்ட விறைவன் போல
மகிழ்ச்சி யெய்தி மணிமுடி வேந்தன்
வத்தவ ரிறைவனை விட்டன னுழிதரல்
நீதி யன்று நெறியுணர் வோர்க்கென
ஓதிய லாள ருடனுங் குழிதரப்

(அரசன் செயல்)

பௌவ மெல்லாம் படரு மீண்டெனக்
கௌவை வேந்தனுங் காற்றொலி யஞ்சி
யானையி னருஞ்சிறை வளைஇ யதனுணம்
சேனையு முரிமையுஞ் செறிக வந்தெனப்
பிறிதிற் றீரா நெறியின னாகக்

(யானைகளின் செயல்)

காற்றொடு கலந்த கார்முழக் கின்னிசை
மாற்றுக்களிற் றெதிர்வென மறித்தன மயங்கி
அந்தப் போதிகை யிடைபரிந் தழியக்
கந்துமுதல் கிழித்துக் காரென வுரறி
மேலியன் முறைவர் நூவிய லோசை
எஃகெறிந் தன்ன வெஃகறு செவிய

---

65. இகழ்ச்சியின் விட்ட - சோர்வினால் அந்த யானையை விட்டு விட்ட. இறைவன்போல - தலைவன்போல.

66. வேந்தன் - பிரச்சோதனன்.

65 - 6. "இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம், மகிழ்ச்சியின் மைந்துறும் போது" (குறள், 539) என்பதன் சொல்லும் பொருளும் இவ்வடிகளில் ஒருவகையாக அமைந்திருத்தல் காண்க.

67. வத்தவரிறைவன் - உதயணன்.

69. ஓதியலாளர் - சொல்லும் இயல்பையுடைய அறிஞர். உடனுநர் - கோபமுற்றவராய். 72. யானைகளைச் சூழ நிறுத்தி.

73. உரிமை - தேவியர். 75. கார்முழக்கின் இசையை.

76. மாற்றுக்களிறு - பகைமையையுடைய களிறு.

77. அந்தப் போதிகை - யானைகளின் பின்னங்கா‌ற் சங்கிலி; பரிந்து - அறுத்து; "அடுகளி றந்தப்போதிகை பரிந்தனன்றே" (சீவக. 1831.) 78. காரென உரறி - மேகம்போல் முழங்கி.

79. முறைவர் - பாகர். ஓசை - யானைப் பேச்சுக்கள்.

80. எஃகு - வேல். வெஃகறு - விருப்பமற்ற.

அடக்கவு மடங்காப் புதுக்கோள் யானை
வால்வளை மகளிரொடு மைந்தரை யுழக்கி
ஏரிருங் குலிகப் புனல்பரந் திழிதரும்
காரிருங் குன்றிற் கவின்பெறத் தோன்றக்

(நளகிரியின் செயல்)

கொன்னே சிதைந்து கோவின் குறிப்புடன்
நகரி முழக்கினு மிகையெழு தீயினும்
அளவி லார்ப்பினு மருந்தளை பரிந்து
கடலென வதிர்ந்து காரெனத் தோன்றி
விடலருஞ் சீற்றமொடு வேறுபட நோக்கிக்
களமெனக் கருதிக் கனன்ற வுள்ளமொடு
நளகிரிக் கூற்ற நகர முழக்க
எதிரெழு வோரை யதிர நூறி
வத்தவர் கோமான் வயவர் திரிதர
எத்திசை மருங்கினு முட்குவரத் தோன்றிய

(அரசன் செயல்)

இன்னாக் காலை யொன்னா மன்னனும்

---

81. புதுக்கோள்யானை - புதியனவாய்ப் பிடித்துவரப்பட்ட யானைகள்; 33 : 79, அடிக்.

83. குலிகப்புனல் - சாதிலிங்கம் கரைத்த செந்நீர்; அது மேலுள்ள இரத்தத்திற்கு உவமை; "அஞ்சனக் குன்றேய்க்கும் யானை யமருழக்கி, இங்குலிகக் குன்றேபோற் றோன்றுமே" களவழி. 7; சீவக. 2239 - பார்க்க. 85. கொன்னே - காரணமின்றி.

87. தளை பரிந்து - கட்டறுத்து.

90. களமென - போர்க்களமென்று.

91. நளகிரிக்கூற்றம் - நளகிரியாகிய யமன்; 43 : 135. இது பிரச்சோதனனது பட்டத்து யானை. உழக்க - கலக்க.

88-91. "தோற்ற மலைகடலோசை புயல்கடாஅம், காற்றி னிமிர்ந்த செலவிற்றாய்க் - கூற்றும், குறியெதிர்ப்பை கொள்ளுந் தகைமைத்தே யெங்கோன், எறிகதிர்வேன் மாறன் களிறு" முத்தொள்ளாயிரம்.

92. அதிர நூறி - நடுங்க அழித்து.

94. உட்குவர - அச்சந்தோன்ற.

95. இன்னாக்காலை - யாவரும் துன்பமடையுங்காலத்தில். ஒன்னா மன்னன் - உதயணன்.

தன்னுண் டொழிற்றுணி வெண்ணு மாயினும்
செறியக் கொள்ளுஞ் செய்கை யோரான்
அறியக் கூறிய வன்பின் னல்லதைத்
தன்வயி னின்றுதன் னின்னியங் கொள்ளும்
என்மக ளுள்வழி யிளையரொ டோடிக்
காவ லின்றுதன் கடனெனக் [1]கூரி
மத்தவன் மான்றோர் வத்தவற் குரைமெனப்
பாய்மான் றானைப் பரந்த செல்வத்துக்
கோமான் பணித்த குறைமற் றிதுவென
ஏவ லிளைய ரிசைத்த மாற்றம்

(உதயணன் செயல்)

சேதியர் பெருமகன் செவியிற் கேட்டு
விசும்புமுதல் கலங்கி வீழினும் வீழ்க
கலங்க வேண்டா காவலென் கடனெனக்
காற்றிற் குலையாக் கடும்பிடி கடைஇ
ஆற்றுத்துறை குறுகிய வண்ணலைக் கண்டே

(காவலர் உதயணனிடம் கூறல்)

காவன் மாக்களுங் காஞ்சுகி முதியரும்
ஏவ லிளையரு மெதிரெழுந் தோடி

---

96. தன்னுடைய ஆண்மைத் தொழிலைத் துணிந்து செய்தற்கு முன்னமேயுள்ள பகைமையால் நினைப்பானாயினும்.

97 - 8. அன்பினனாகியிருத்தலையன்றி இப்பொழுது வேறுசெய்தலை ஓரான். 99. இயம் - யாழ்.

101. காவல் - காத்தல். கூரி - மிகுத்து.

102. மத்த வன்மான் - யானை. உரைமென - சொல்லுமென்று ஏவலிளையர்க்குக் கட்டளையிட.

104. குறை - காரியம். இதுவென - இதுவாகுமென்று ஏவலிளையர் உதயணனுக்குக் கூற. 106. சேதியர்பெருமகன் - உதயணன்.

109. பிடி கடைஇ - பத்திராபதியைச் செலுத்தி.

110. ஆறு: 41 : 124 ; இந்த ஆறு க்ஷிப்பிராநதி யெனப்படும்.

111. காஞ்சுகி முதியர் - அரசனுடைய குலவொழுக்கங்களையறிந்து, அவனுக்கும் அவன் தேவிமாருக்கும் அவற்றைக் கற்பித்துக் கொண்டு வாழும் சட்டையிட்ட முதியோர் ; 46 : 318 ; 47 : 167.

பி - ம். 1 கூறி.

மாடமுங் கடையு மதிற்புறச் சேரியும்
ஓடரி கவரலி னூர்புக லாகாது
வையமுஞ் சிவிகையுங் கைபுனை யூர்தியும்
காற்றுப்பொறி கலக்க வீற்றுவீற் றுயின
போக்கிட மெங்கட்குப் புணர்க்க லாகா
தாக்கிட மெமக்குமுண் டாக வருளி
ஆய்ந்த நல்யாழ்த் தீஞ்சுவை யுணர்ந்தநின்
மாணாக் கியையெம் மன்னவ னருளால்
இரும்பிடி நின்னொ டொருங்குட னேற்றிக்
கொடுக்குவ வேண்டுமென் றெடுத்தெடுத் தேத்தி
அருந்திறற் காவல ரச்சு மெய்திப்
பெருந்திறன் மன்னற்குப் பணிந்தன ருரைப்ப

(உதயணன் செயல்)

எவ்வா யமரு மின்மொழிக் கிளவி
அவ்வாய் மங்கல மாகென விரும்பிக்
கவ்வையும் பெருகிற் றுய்தலு மரிதே
இவ்வழி மற்றிவ ணிற்றலு மேதம்
வருக வீண்டென வத்தவன் வலிப்பத்
தவாஅக் காதலொடு தகையாழ் காட்டும்
உவாத்தி யாதலி னுறுதியு மதுவெனச்
செய்கையி னறியாச் சிதைவிற் றாகிக்
கௌவை யெரியுங் காற்றினொ டெழுந்த
தரிமா னன்னநம் பெருமாற் சேரத்

---

116. காற்று பொறி கலக்க - காற்றானது எந்திரங்களை நிலைகுலையச் செய்தலால். வீறு - வேறு. 118. ஆக்கிடம் - ஆக்கும் இடம்.

119 - 20. நின்மாணாக்கியை - உன்னிடம் யாழ்கற்ற வாசவதத்தையை; மாணாக்கி : க. 37 : 110 ; ரு. 15 : 16.

122. கொடுக்குவ வேண்டும் - பாதுகாத்து அளித்தல் வேண்டும்.

123. காவலர் - காவல் வீரர்; 137.

124. மன்னற்கு - உதயணனிடத்தில்.

127. கவ்வையும் - முழக்கமும். 128. ஏதம் - குற்றமாகும்.

129. வலிப்ப - துணிந்து கூற.

131. உவாத்தி - ஆசிரியன்; சீவக. 1090; மணி. 13 : 4.

134. நம்பெருமாற்சேர - பிரச்சோதனனை அடையும்படி.

திருமா றுதவியைத் தீதொடு வாரா
துதயண குமர னொருபிடி யேற்றிப்
போவது பொருளெனக் காவல ரிரப்பப்
பெரியோர்க் குதவிய சிறுநன் றேய்ப்பக்
கரவாது பெருகிக் கையிகந்து விளங்கும்
உள்ளத் துவகை தெள்ளிதி னடக்கி
மதர்வை வண்டொடு சுரும்புமணந் தாடும்
குயில்பூங் கோதையொடு குழற் [1]குரல் வணரும்
கயிலெருத் திறைஞ்சிக் கானிலங் கிளைஇ
உருகு நெஞ்சத் துதயண குமரனைப்
பருகும் வேட்கையள் பையுள் கூர
நிறையு நாணு நிரந்துமுன் விலங்க
நெஞ்சு நேர்ந்தும் வாய்நேர்ந் துரையா
அஞ்சி லோதியை நெஞ்சு வலியுறப்
பயிற்சி நோக்கி னியற்கையிற் றிரியாக்
காஞ்சன மாலை கையிசைந் தொருங்கே
ஏந்தின ளேற்ற விரும்பிடி யிரீஇ
முடியா வாள்வினை முடித்தன மின்றெனை
வடியேர் தடங்கண் வாளொளி மிளிரும்
கொடியேர் சாயலைக் [2] குடங்கையிற் றழீஇப்
பிடியேற் றினனாற் பெருந்தகை யுவந்தென்.

சச—பிடியேற்றியது முற்றிற்று.

---

136. உதயண குமரன் : அண்மை விளி.
139. கரவாது - ஒளியாமல். 138 - 40. நாலடியார், 38.
141. மதர்வை - மயக்கம். [கொத்து வளைந்து கிடக்கின்ற.
142. வல்லோனால் தொடுக்கப்பட்ட பூமாலையோடு கூந்தற்
143. கயிலெருத்து - ஆபரணங்களையுடைய கழுத்து; கயில் : ஆகு [பெயர்.
146. நிரந்து - வரிசையுற்று. விலங்க - தடுக்க.
147. வாய்நேர்ந்துரையா - வாயினாற் சொல்லாத.
149. திரியா - வேறுபடுத்தி. 151. இரீஇ - இருத்தி.
153. வடி - மாவடுவின் பிளப்பு.
154. குடங்கையிற்றழீஇ - வளைந்த கையினாலே தழுவி.

பி - ம். 1 குரலணவ. 2 கொடுங்கையிற்.

## சரு—படைதலைக்கொண்டது.

(காஞ்சனமாலை செயல்)

பெருந்தகை யண்ணல் பிடிமிசை யேற்றித்
திருந்திழை யணிந்த பரந்தேந் தல்குல்
நீர்மைப் பல்காசு நிழலுமிழ்ந் திமைப்பப்
பார்வை முள்கிய பட்டுநிறம் பயப்பத்
தான [1] மீக் கூரி மேனிவந் தோங்கி
அமிழ்துபெய் செப்பி னன்ன வெம்முலை
நுகர்பூங் காமத்து நுதிமுக முரிஞ்சிக்
கடாஅ யானைக் கண்ணக மறைத்த
படாஅத் தன்ன படிவத் தாகிய
வடகப் போர்வையை வனப்பொடு திருத்திக்
கடக முன்கைக் காஞ்சன மாலை
உரத்தகை யண்ணல் வரத்திற் பெற்ற
வழிவரு நல்லியாழ் [2] வயந்தகற் கீத்துப்

---

சரு—படைதலைக்கொண்டது.

[உதயணன் வாசவதத்தையைக் கொண்டு செல்லுதலையறிந்து தடுத்தற்கு வந்த பிரச்சோதனனுடைய படைவீரரும் அங்கங்கே யூகியால் மறைத்துவைக்கப்பட்டிருந்த உதயணனுடைய வீரரும் எதிர்த்துப் போர்செய்தது இதனால் அறியலாகும்.]

1. அண்ணல் - உதயணன்.

3. காசு - மாணிக்கம். நிழல் - ஒளி.

4. முள்கிய - கலந்த. 5. மீக்கூரி - மேலே பெருகி.

8. கடாஅயானை - மதக்களிறு; கடாம் - மதம்.

9. படாஅத்து அன்ன - முகபடாத்தை ஒத்த. படிவம் - வடிவம்.

10. வடகப்போர்வையை - போர்த்திய மேலாடையை.

6 - 10: இவ்வடிகள், "கடாஅக் களிற்றின்மேற் கட்படாம் மாதர், படாஅ முலைமேற் றுகில்" (குறள், 1087) என்பதைத் தழுவியமைந்துள்ளன.

13. வயந்தகற்கு - வயந்தகனிடம்.

12 - 3: 37 : 176 - 8, அடிக்குறிப்பைப் பார்க்க.

பி - ம். 1 மிக்கூரி. 2 வத்தவற்.

[1] பொற்படைப் புளகமிசைப் பொங்குஞ் சாமரை
நற்பிடி நடத்தொறு நடுங்குந் தோழியைப்
பொற்கொடி மருங்குல் புல்லுவன ளருளிப்

(உதயணன் செயல்)

பவனத் தரச னுவனித் தெறிந்த
குந்தக் கடைமணி யுறுதலின் முரிந்த
வலப்பா லெயிற்றின் குற்றமு மலைத்துடன்
வலிந்துமேற் சென்ற கலிங்கத் தரசன்
குஞ்சர மருப்பிற் குறியிடப் பட்டுச்
செஞ்சாந் தெழுகிய சேடுபடு செல்வத்து
மார்பின தூ வனப்புந் தோளினது திரட்சியும்
நிறத்தது நீர்மையு நெடுமைய தளவும்
சிறைத்துயர் நீக்கற்குச் செய்த வேடமும்
குறிக்கொளற் கமைந்தவை பிறவுந் திறப்பட
வாகிய லமைச்சன் யூகிக் குள்ளவை
சாங்கிய முதுமக டான்றெரிந் துணர
அறிவின் முன்னே செறியச் செய்த
பொறியுடை யோலை பொருக்கென வீழ்த்து

---

14. பொன்னலாகிய பருமத்திற்றைத்த கண்ணடியின் மேலே பொங்குகின்ற சாமரையையுடைய; "பைம்பொற் புளகப் பருமக்களி யானையீட்டம்" சீவக. 809.

15. நடத்தொறும் - நடக்குந்தோறும்.

16. புல்லும்படி உதயணன் கட்டளையிட்டு.

17. உவனித்து - குறிபார்த்து; சீவக. 2179.

18. குந்தக்கடைமணி - வேலினிடமுள்ள மணி; "வேலின் கடை மணிபோற் றிண்ணியான்" (திரிகடுகம்); கைச்சவளத்து மணியுமாம்; மணி - உருண்டைவடிவமுள்ளதோர் உறுப்பு.

20. கலிங்கத்தரசனது. 21. குறி - தழும்பு; ௨. 7 : 184.

22. சேடு - பெருமை.

25. சிறைத்துயர் - உதயணனது சிறைத்துன்பத்தை.

27. வாகியல் - தோளழகு.

17 - 27. யூகியின் அடையாளமும் அவனுடைய இயல்பும்.

28. சாங்கியத்தாய் தெரிந்துகொள்ளும்படி.

30. பொறி - முத்திரை; 46 : 330.

பி - ம். 1 பொற்புடை.

(சாங்கியத்தாய் வருந்தலும் வயந்தகன் செயலும்)

மடத்தகை பொருந்திய வயத்தகை மாதரை
நடுக்க மோம்பி விடுக்குநள் போலச்
சார்ந்தன ளாகியவட் கோம்படைக் குறிப்பொடு
நண்ணிய பொழுதிடைக் கண்ணிற் காட்ட
வயந்தக குமரன் மறைத்து நீட்டலும்
நயந்த நெஞ்சமொடு நன்கன மடக்கிச்
சேற லாற்றாண் மாறினண் மறைந்தபின்

(உதயணன் செயல்)

அங்கண் ஞாலத் தன்புடை யோரைப்
புன்க ணீக்குதல் புகழுடைத் தாதலின்
உங்க ளன்பின் யானுறு நோயினைப்
பைங்கண் வேழத்துப் பகடன் றீர்ந்ததிவள்
செழுங்கடை மழைக்கண் செருக்கயல் புரைய
உண்ணெகிழ்ந்து கலிழ்ந்த வுறாஅ நோக்கிற்
கண்ணெகிழ் கடுநோய் கைவரு காலை
ஈர்வது போலு மிருளுடை யாமத்துத்
தீர்திற மறியேன் 1 நேர்வழித் தீர்திறம்
வந்துகை கூடிற் றாகலி னின்றிது
நீக்கலின் கடனென மாக்கே ழிரும்பிடி
அந்தோற் செவியினுண் மந்திர மாக
வழிமொழி கூறிய வத்தவர் பெருமகன்

---

17 - 30. யூகியின் அடையாளங்களைச் சாங்கியத்தாய் தெரிந்து கொள்ளும்படி எழுதிய ஓலையை உதயணன் வீழ்த்தி.

33. ஓம்படை - பாதுகாப்பு. 34. சாங்கியத்தாய் வந்தபொழுது.

37. சாங்கியத்தாய் மறைந்தபின்.

40. உங்கள் சாதியினிடத்துள்ள அன்பினாலே யானடைந்த துன்பத்தை; "நம்பொருட் டாக நெடுந்தகை யெய்திய, வெம்பெருந் துயரம்." 46 : 106 - 7.

41. வேழத்துப் புகடு - நளகிரி யென்னும் யானை. அன்று ஈர்ந்தது - அக்காலத்தில் தீர்த்தது; ஈர்தல் - பிளத்தல்.

49. மந்திரமாக - இரகசியமாக.

49 - 50. விரைந்து செல்லுதற்குரிய மந்திரத்தைப் பிடியின் காதில் உதயணன் உபதேசித்தானென்று வேறு நூல்களால் தெரிகின்றது.

பி - ம். 1 தேறிவழி.

கழிபோக் கெண்ணிக் கடவா நின்றோன்
கம்பலைக் கவற்சியிற் 1 கடுங்கோளைக் கொளீஇ
அம்பொடு பிடித்த வில்ல னாகி
ஓராஅ வுரிமைக் கொருபுடை வரூஉம்
வராக னென்னும் வயவனைக் கண்டே
வந்தனை யிப்பா லஞ்ச லார்ப்போர்
கள்வ ராதலு முண்டெனக் கையகத்
தொள்வரிச் சிலையு முடுவார் பகழியும்
தந்தனை யாகியென் றகைவா ளேந்தி
ஊறுண் டெனினு முழையிற் பிரியா
தேறிவ் விரும்பிடி யென்றோ டென்றுதன்
நெஞ்ச நெகிழா வஞ்சமனத் தடக்கி
அன்பின்று கிளந்த வருளில் பொருண்மொழித்
தோட்டியின் வணக்கம் வேட்டவன் விரும்பிக்
கொடுஞ்சிலை கொடுத்துக் கூப்பிய கையன்
கடுஞ்செல விரும்பிடிக் கான்முதற் பொருந்தி
ஏற்றம் விரும்பலு மிளம்பிடி யெடுப்பி
ஆற்றன் மன்னன் காற்றெனக் கடாவ
விசையின் வீழ்ந்து வெருளி யாற்றான்
ஆய்பெருங் கடிநகர் வாயிலு நோக்கான்
கோமக னுள்வழிக் குறுகலுங் குறுகான்

---

52. கோளைக்கொளீஇ - வில்லில் நாணை ஏறிட்டு; சீவக. 1659.

54. ஓரா - நீங்காத. உரிமைக்கு - உரிமை மகளிர் கூட்டத்தைக் காத்தற்கு.

55. வராகன்-வாசவதத்தையின் கன்னிமாடத்துக் காவல் வீரருள் ஒருவன். உதயணன் கண்டு. [டத்தார்.

56. அஞ்சல் - அஞ்சாதே. ஆர்ப்போர் - இங்கே முழங்கும் கூட்

58. உடு - நாணைக்கொள்ளும் இடம்; குறிஞ்சிப். 170, ந.

64. தோட்டியின்வணக்கம் - அங்குசம்போன்ற வணக்கத்தை; இவ்வுவமை இச்சமயத்திற்கேற்பக் கூறியது; இது, "வில்வணக்கந் தீங்கு குறித்தமையால்" (குறள், 827) என்பது போல்வது.

66. கான்முதல் - காலிடத்தை. [லச்செய்து.

67. ஏறுதலை வராகன் விரும்புதலும். எடுப்பி - விரைந்து செல்

69. வராகன் வீழ்ந்து. வெருளி - அஞ்சி. ஆற்றானாயினன்.

பி - ம். 1 கடுங்கோலைக்.

ஓவிய முட்கு முருவியைத் தழீஇப்
போயினன் வத்தவன் புறக்கொடுத் தொய்யெனக்

(பிரச்சோதனனுடைய வீரர்செயல்)

காவ லாளர் கலக்க மெய்தி
மண்ணக மழித்து மலைத்துச்சிறை கொண்ட
நண்ணா மன்ன னுட்ட மோராம்
பண்ணமை பிடிமிசைப் பையர வல்குலை
ஏற்றல் வேண்டுமென் றிரங்தேற் றினமாற்
கூற்ற வாணையெங் கொற்றவன் றலைத்தாள்
என்சொலிச் சேறுமென் றெண்ணுபு நாணினர்
வெஞ்செலற் பகழியும் வில்லுங் தழீஇத்
தஞ்சினம் பெருகத் தாக்குநர்ப் பெறாஅர்
பொங்குபுகழ் வேந்தன் வென்றி யேத்தி
விண்ணக மேறி னல்லது விரிநீர்
மண்ணக வரைப்பினெம் மண்ணலைப் பிழைத்தோர்க்
கின்னுயிர்க் கேம மாகுத லரிதெனப்
பின்னிலை முனியார் பிடிவழிப் [1]படரக்

(உதயணனுடைய வீரர்செயல்)

கரைவேட் டுலாஅங் கருங்கட லழுவத்
திரைவேட் டுலாஅ மினச்சுற வினத்தின்
[2] வத்தவ நாட்டு வித்தக வீரரும்
மலைக்கு மாந்தரைத் தலைக்கொண் டோடி

---

72. உருவியை - உருவமுடைய வாசவதத்தையை.

75. மலைத்து - போர்செய்து. 76. உதயணனது கருத்தை.

79. அரசன் திருமுன்னே. 80. நாணினராய்.

82. போர் செய்பவர்களைப் பெறாராய்.

86. ஏமம் - பாதுகாப்பு.

87. பின்னிலை - பின்னே சென்று போர் செய்தற்கு; 46 : 12. பிடிவழிப்படர - பிடிசெல்லும் வழியே போர்செய்தற்குச் செல்ல.

88. அழுவம் - பரப்பு.

89 - 90. சுறாமீன்களின் கூட்டம் வீரர்க்கு உவமம்; " சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப. " புறநா. ௧௩.

91. தலைக்கொண்டு - எதிர்ப்பட்டு.

பி - ம். 1 படாஅக். 2 வத்தவள.

ஐந்தலை நாகத் தழலுறு கண்ணினர்
பைந்தலை துமித்துச் செங்குடர் சிதறிப்
பிடித்த வாளர் மடித்த வாயர்
திருவமர் மூதூர்த் தெருவுங் கோணமும்
ஒருவழி யொழியா துயிர்நடுக் குறீஇத்
திரிதர்வர் மாதோ திருநக ரகத்தென்.

சரு.—படை தலைக்கொண்டது முற்றிற்று.

---

92. 46 : 13; சீவக. 746.   95. கோணம் - குறுந்தெரு.
96. நடுக்குறீஇ - நடுங்கச்செய்து.

---

## சசு.—உழைச்சன விலாவணை.

திருநக ரகவயிற் றிறன்மீக் [1] கூறி
ஒருதுணை வயவ ருள்வழித் திரிதர
ஒடிவி றோற்றத் துதயண னாரும்

(போர் நிகழ்ச்சி)

பிடிவழிப் படரும் பேணா மன்னரை
அதிரத் தாக்குதற் கமைக்கப் பட்ட
பதிநிலந் தோறும் பதிந்துமுன் னிருந்த

---

சசு—உழைச்சன விலாவணை.

[வாசவதத்தையை வலிதிற்கொண்டு உதயணன் சென்றதை யறிந்து பக்கத்திலிருந்த பலவகைச் சனங்கள் பிரிவாற்றமற் புலம்புதலும் பிறவும் இதிற் கூறப்படும்.]

உழைச்சனம் - பக்கத்திலுள்ள சனங்கள். விலாவணை - அழுகை ; இது பெரும்பான்மைபற்றிய பெயர்.

1. அகவயின் - உள்ளிடத்தே.

2. வயவர் - பிரச்சோதனன் வீரர்.

3. தோற்றம் - நெடுந்தூரத்திலுள்ளாராலும் அறியப்படும் புகழின் உயர்ச்சி. 4. பேணா மன்னரை - பகைவீரரை ; 74.

5. தாக்குதற்கு - கொல்லுதற்கு.

6. பதிநிலந்தோறும் - வழியிலுள்ள ஊர்கடோறும்.

பி - ம். 1 கூறி.

ஐந்நூற் றைம்பத் தைவ ராடவர்
செந்நூற் பத்திச் சேடகக் கையர்
மன்னிய மாதிர மறுவின்று மயங்கி
மின்னுமிழ்ந் ததுபோல் வீசிய வாளினர்
கரண நுனித்த வரணக் காப்பினர்
பின்சென் மாந்தரை முன்சென்று விலங்கி
அரதன நாகரிற் சொரிதரு வெகுளியர்
ஏற்றோர்த் தாக்கிக் கூற்றுறை யுலகினுள்
உறைகுவி ராயிற் குறுகுமின் விரைந்தெனச்
சிறையழி புனலிற் சென்றுமே னெருங்கி
வேலுங் கணையமும் வீழினு மிமையார்
வீரியத் தறுகணர் வீக்கிய கச்சையர்
ஆர்வ லாள ரார்த்தன ரெறிய
ஓங்குமடற் பெண்ணைத் தீங்குலைத் தொடுத்த
விளைவுறு தீங்கனி வீழ்ச்சி யேய்ப்பத்

---

8. சேடகம் - கேடகம்; 58. 9. மாதிரம் - திசை, ஆகாயம்.

10. வாளுக்கு மின் உவமை.

11. கரணம் - செய்தலை ; 42; "எண்ணா லரணமு மீரெண் கரணமும்" (37:28.) அரணம் - கவசம்; "அரணம் வீசினார்" சீவக. 777.

12. பின்செல் - உதயணனைத் தடுத்தற்பொருட்டு அவன் பின்னே போகின்ற.

13. அரதனம் - இரத்தினம். நாகரின் - நாகர்போல ; "எறிகோ லஞ்சா வரவி னன்ன, சிறுவன் மள்ளரு முளர்" புறநா. அசு.

15. போர் செய்தற்கு விரைந்து குறுகுமின்.

16. சிறையழிபுனல் - கரையுடைந்த நீர் ; "சிறைய ழிந்ததோர் செம்புனல் போன்றவ, ணறைக டற்படை யார்ப்பொ டெழுந்தவே" சீவக. 1776.

17. கணையம் - அம்பு ; அம் : சாரியை. "விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பின், ஓட்டன்றோ வன்க ணவர்க்கு" (குறள், 775) என்பதை இதனுடன் ஒப்பிடுக.

18. வீக்கிய - கட்டிய.

20. பெண்ணைத் தீங்குலை - பனங்குலையில்.

21. கனிவீழ்ச்சி - பழத்தின் விழுகையை.

தளையவிழ் தாமமொடு தலைபல புரளவும்
வேகப் புள்ளின் வெவ்விசைக் குலந்த
நாகப் பிறழ்ச்சியிற் றோண்முத றுணியவும்
அஞ்செஞ் சாந்த மெழுதிய வகலம்
ஒண்செங் குருதிப் பைந்தளி பரப்பவும்
[1] குசைத்தொழிற் கூத்தன் விசைத்துநனி விட்ட
பொங்குபொறித் தாரையிற் றங்கல்செல் லாது
குருதிச் செம்புன றவிரா தெக்கவும்
மிகைசெலற் கெழுந்த வேக வெவ்வழல்
அகவயிற் சுடுதலி னவிந்த வாற்றலர்
நிலத்தொடு நேரா நெஞ்சினர் போலப்
புலக்கமழ் புண்ணர் விண்ணிடை நோக்கிக்
கொலைப்பெருங் கூர்வாள் கோடுற வழுத்தலிற்
பொறிப்படு வேங்கையிற் குறிப்பிலர் குரங்கவும்
மத்தகத் திழிதரு நெய்த்தோர்ப் பெரும்புனல்
மொய்த்துமுகம் புதைதலின் முன்னடி காணார்
மடித்த செவ்வா யழுந்தக் கவ்விப்
பிடித்த வாளொடும் பிறழ்ந்தனர் கவிழவும்

20 - 22. வீரர்களது தலைக்குப் பனம்பழம் உவமம்: "தலையிறுபு தாரொடுபுரள ...பனைமிசைப் பல பதினாயிரங்குலை தரையுதிர்வபோல்" (பரி. உ); "இலங்கையர் கோனைப், பானுநேர் சரத்தாற் பனங்கனி போலப் பருமுடி யுதிரவில் வளைத்தோன்" பெரியதிரு. க. 1 : 7.

23. வேகப்புள் - கருடன்.

24. நாகப்பிறழ்ச்சி - பாம்புகளின் நிலைகுலைவு. தோள்முதல் - தோளின்அடி. தோள்களுக்கு நாகங்கள் உவமை.

23 -4 = 44 : 44 - 5, அடிக். 26. தளி - துளி.

28. பொறி - நீர்வீசும் எந்திரம்.

29. எக்க - மேலேகிளர ; 42 : 188.

31. அகவயின் - மனத்தில். ஆற்றல் குறைந்தவர்களாகி.

33. புல - புலவுநாற்றம். 34. கோடுற - வளைய. [தாழ.

35. பொறி - அகப்படுத்தும் யந்திரம் (புறநா. கக:5-6.) குரங்க-

36. மத்தகம் - நெற்றி.

37. முன்அடி - அடிகளின் முன்னிடத்தை.

பி - ம். [1] குமைத்தெழிற்.

கையொடு துமித்த வைவாள் வாய்மிதித்
தற்ற வடியினர் செற்றத்திற் கழுமிக்
கற்ற கரண மற்ற வாக
உரத்தகை மழுங்கி யுள்ளடி யின்றி
மரக்காற் கூத்தரின் மறிந்தனர் விழவும்
[1] மடத்தகை மகளிர் மருங்குல் கடிந்த
முலைப்பூ ணழுத்திய மொய்சா ரகலம்
வாண்முக மழுத்தலின் வயவுநடை சுருங்கிச்
செந்நிறக் குருதியிற் [2] பைந்நிணங் கெழீஇச்
செயிர்த்த நோக்கினர் செங்க ணுடவர்
வியர்த்த நுதலினர் வீழ்ந்தன ரவியவும்
சுடரும் வாளினர் சோர்நிண மிழுக்கி
அடர்பூ ணகலத் தரும்படை யுற்றுக்
குடர்க டாக்கக் குழிப்படு களிற்றிற்
படர்கூ ரெவ்வமொடு பதைத்தனர் [3] பனிப்பவும்
தலையுந் தடக்கையுந் தாளு முடம்பும்
கொலையமை வில்லுங் கூர்வாய்ச் சுரிகையும்
வேலு மீட்டியுங் கோலுங் குந்தமும்
சேடக வட்டமுஞ் செந்நூற் பாரமும்

---

40. துமித்த - வெட்டுண்ட. 41. அடிகள் அற்றவர்களாய்.

42. தாம் கற்றிருந்த போர்ச்செயல்கள் அற்றனவாக.

44. மரக்காற் கூத்தரின் - மரத்தாற் செய்யப்பட்ட கால்களின் மேலேநின்று ஆடும் கூத்தரைப்போல; மரக்காற்கூத்தின் இயல்பை, சிலப். ௬ : 59 - ஆம் அடியினுரையாலுணர்க.

45. கடிந்த - மெலியச்செய்த. 46. அகலம் - மார்பை.

47. வயவுநடை - வலியநடை; "வயவலி யாகும்" (தொல். உரி. சூ. 68); விரும்பிய வண்ணம் நடக்கும் நடையுமாம்.

48. கெழீஇ - பொருந்தி. 51. இழுக்கி - வழுக்கி.

52. படை - ஆயுதம். 53. தாக்க - தடைப்படுத்த.

54. படர் கூர் எவ்வம் - நோய்மிக்க துன்பம். பனிப்ப - நடுங்க.

56. சுரிகை - உடைவாள். 57. குந்தம் - சிறுசவளம்.

58. சேடகவட்டம் - வட்டமான கேடகம். செந்நூற்பாரம் - செந்நூலாற் செய்யப்பட்டுள்ள ஒருவகைக் கேடகம்; "செந்நூற் பத்திச் சேடகக் கையர்" (8); பாரம் - கவசமுமாம்.

பி - ம். 1 செயக்களி மகளிர். 2 பைந்நிணந்தழீஇ. 3 பணியவும்.

தண்டும் வாளுந் [1] தளையிடு பாசமும்
பொங்குமயிர்க் கிடுகும் புளகத் தண்டையும்
அரக்குவினைப் பலகையு நிரைத்தவெண் குடையும்
கூந்தற் பிச்சமுங் கோணு வட்டமும்
வாங்குகைத் தறுகண் வாரணப் பிளவும்
பரவைச் செந்திரை விரவுபு முடுகி
அன்ன பிறவு முன்மு னுருட்டிக்
கைந்நவி லாளர் காடெறிந் துழுத
செந்நில மருங்கிற் செஞ்சால் சிதைய
மாஞ்சுமந் திழிதருங் கடும்புனல் கடுப்பக்
குருதிச் செம்புனல் போர்க்களம் புதைப்ப
அடங்காத் தானை யவந்திய ரிறைவற்
காருயி ரன்ன வரும்பெறன் மடமகள்
வால்வளைப் பணைத்தோள் வாசவ தத்தையை
வலிதிற் கொண்ட வத்தவ ரிறைவனை
நலிதற் கெழுந்த நண்ணு விளையரைக்
கடல்விலக் காழியிற் கலக்க மின்றி
அடல்விலக் காள ரார்த்தன ரடர்ப்பவும்

---

59. தளை - கட்டு. பாசம் - கயிறு; 37 : 29.

60. மயிர்க்கிடுகு - மயிர்போர்த்த கேடகம். புளகத்தண்டை - கண்ணடி தைத்த கேடகம்; "போர்மயிர்க் கேடகம் புளகத் தோற்பரம்" சீவக. 2218.

61. அரக்குவினைப்பலகை - சாதிலிங்கம் பூசிய பலகை; பலகை - கேடகமுமாம்.

62. கூந்தற்பிச்சம்-மயிற்பீலியாற் கட்டப்பட்ட ஒருவகை விருது; 38 : 26. கோணுவட்டம் - ஒருவகை விருது; இப்பெயர் கோணவட்ட மெனவும் வழங்கும்; ௩. 20 : 22.

63. வாரணப்பிளவு - பிளவுபட்ட யானையின் உறுப்புத்துண்டம்.

67. சால் - படைச்சால்.

70. அவந்தியரிறைவற்கு - அவந்தி நாட்டாரின் தலைவனான பிரச்சோதனனுக்கு. 75. ஆழி - கரை.

75 - 6. "வேந்துடைத் தானை முனைகெட நெரிதர, ஏந்துவாள் வலத்த னொருவ னாகித், தன்னிறந்து வாராமை விலக்கலிற் பெருங்கடற், காழி யனையன்" புறநா. ௩௩0 : 1 - 4.

பி - ம். 1 தலையிடு.

(யூகியின் செயல்)

உயிரொன் றாகிய செயிர்தீர் காதற்
றுணைநலத் [1] தோழன் றுயர மறுத்தற்
கிணைமலர்த் தடங்க ணிமையகத் தொடுங்கிய
காட்சியிற் கனையும் வேட்கைய னாகி
விம்முறு விழுநகர் வீதியிற் கொண்ட
வெம்முறு படிவ நீக்கி யூகி
பிணம்படு பெருங்காட்டுப் பேயு முட்கும்
அணங்கருந் தானத் தஞ்சுதக விரீஇத்
தாழி படுத்துத் தமரையுந் தெளியான்
பூழி படுத்த சாதனை யமைவிற்
கற்படை போழினுங் [2] கதுவாய் போகா
தெற்புடம் பறுக்கு மியற்கைத் தாகிக்
கொற்புனைந் தியற்றிய கொலையமை கூர்வாள்
வாய்வயிற் றெய்வம் வணங்குபு கொண்டு
தீவயி றார்த்திய திறலோன் போலநின்
காய்வுறு கடும்பசி களைகுவெ னின்றெனைக்
காத்த லோம்பென வாற்றுளி கூறிப்
பத்தி குயின்ற பல்வினைக் கம்மத்துச்

---

78. துயரம் - சிறைத் துயரத்தை. 80. கனையும் - மிக்க.

81. நகர் - உச்சைனி. 82. படிவம் - வேறு வேடம்.

83. காடு - மயானம். 84. இரீஇ - இருந்து.

85. தாழிபடுத்து - தாழியை மேலே கவித்துக்கொண்டு; தவஞ் செய்வோருள் ஒருசாரார் தாழிக்குள்ளிருந்து தவம் செய்தலும் மரபு; "தாழி கவிப்பத் தவஞ்செய்வோர் மண்ணுக, வாழிய நோற்றனை மால்வரை" தொல். புறத்திணை. சூ. 5, ந. மேற்.

86. பூழி - புழுதி; மயானச் சாம்பலுமாம். சாதனை அமைவின் - சாதித்த முயற்சியின் அமைவால்.

87. கற்படை - படைக்கற்களை. கதுவாய்போகாது-வடுப்படாமல்.

91. திறலோன் - அருச்சுனன்; அவன் காண்டவவனமெரித்தமை இங்கே அறியற்பாலது; "காவெரி யூட்டிய கவர்கணைத் தூணிப், பூவிரி கச்சைப் புகழோன்" (சிறுபாண். 238 - 9.) 'நின்' என்றது வாளை நோக்கி; "உருச்சுடர் வாளைநோக்கிக், கலிக்கின்ற யாய நெஞ்

பி - ம். 1 தோமுன். 2 கதுவாப்.

சித்திரச் சேடகஞ் செறியப் பற்றி
உற்றோ னுற்ற வுறுகண் டீர்க்கெனக்
கற்றோய் கலிங்கங் கட்டிய கச்சையன்
ஊழி யிறுதி யுட்குவரத் தோன்றி
வாழுயிர் பருகும் வன்கட் செய்தொழிற்
கூற்றம் போல வேற்றவர் முருக்கிக்
கடிகமழ் நறுந்தார்க் காவலன் மகளைப்
பிடிமிசைக் கொண்டவன் பெயரு நேரத்து
முடிமுத லண்ணலை முந்தினன் குறுகித்
தொடிமுதற் றிணிதோ ளோச்சி
வலமுறை வந்து பலமுறை [1] பழிச்சி
நம்பொருட் டாக நெடுந்தகை யெய்திய
வெம்பெருந் துயரம் விடுத்தனை யாகிக்
காட்டகத் தசையாது கடுகுபு போகி
நாட்டகம் புகுக நண்பிடை யிட்ட
இரும்பிடி நினக்கிது பெருங்கடன் மற்றெனப்
பிடியோம் படுத்துப் பெருமை யெய்திக்
குடியோம் பியற்கையெங் கோமக னெழுகென

---

சிற் கட்டியங் காரனம்மேல், வலித்தது காண்டுமென்று வாளெயி றிலங்க நக்கான்" (சீவக. 266.) 95. சேடகம் - கேடகத்தை.

96. உற்றோன் - உதயணன். தீர்க்கு என - தீர்ப்பேனென்று சபதஞ்செய்து.

97. கற்றோய் கலிங்கம் - காவிக்கல்லைக்கரைத்த நீரிலே தோய்க்கப்பட்ட உடையை. கச்சையன் - கச்சையை யுடையனாகி. சபதஞ் செய்வோர் அதற்கு அறிகுறியாகக் கல்லாடையை உடுத்திக் கொள்ளு [தல் மரபு.

98. ஊழியின் இறுதியில். உட்குவர - அஞ்சும்படி,

100. ஏற்றவர்முருக்கி - எதிர்த்தவரை வெட்டிக்கொண்டு சென்று.

102. கொண்டவன் : உதயணன்.

104. தோளோச்சி - தோளை உயர்த்தி.

105. பழிச்சி - துதித்து.

106 - 11. பிடியை நோக்கி யூகி கூறுவது. 106. = 45 : 40.

108. அசையாது - தங்காமல். 110. இரும்பிடி : விளி.

111. பிடி ஓம்படுத்து - பாதுகாத்துக்கொள்ளென்று பிடிக்குக் [கூறி.

112. எங்கோமகன் : அண்ணல்விளி.

பி - ம். 1 பழிப்பி.

வரத்தொடு புணர்ந்த வாரணக் காவற்
றிறத்தொடு கொடுத்துச் செய்பொருள் கூறிப்
புறக்கொடுத் தொழியும் போழ்திற் றிறப்பட

(உதயணன் செயல்)

ஒருநாட்டுப் பிறந்த வார்வ மன்றியும்
கருமக் கிடக்கையுங் கலங்காச் சூழ்ச்சியும்
மறைபுறப் படாமையு மறையுண் ணுமையும்
வாசவ தத்தைக்கு வலித்துணை யாய
தாய்மையுந் தவமும் வாய்மையு நோக்கி
விடுதற் கருமை முடியக் கூறி
வடிவும் வண்ணமும் படிவமும் பிறவும்
அருந்தவ மகளைத் திருந்துமொழித் தோழன்
உணர வெழுதிய வோலையும் வாங்கிப்
புணர வவள்வயிற் போக கொண்டென
ஊகந்த ராயற் காக நீட்டித்

(உதயணன் மகிழ்ந்து செல்லுதல்)

தமரது வென்றியுந் தருக்கு நிலைமையும்
அரிய தோழன் சூழ்ச்சிய தமைதியும்
எய்திய வின்பமுங் கையிகந்து பெருக
வையக வரைப்பின் வத்தவ ரிறைவற்
கெவ்வந் தீர்க்கென விமையோ ரியற்றிய

---

113. வாரணக்காவல் - பிடியைப் பாதுகாத்தலை.

114. செய்பொருள் - பின்பு செய்யவேண்டிய காரியங்களை.

115. ஒழியும் பொழுதில் - யூகி செல்லுங்காலத்தில்.

116 - 25. சாங்கியத்தாயின் இயல்பை நன்கு அறியும்படி யூகிக்கு உதயணன் கூறலும் அவள் பொருட்டு முன்னமே வரைந்த ஓலையை அவனுக்குக் கொடுப்பித்தலும்.

118. மறை - இரகசியம். அறையுண்ணுமை - பிறராற் கீழறுக்கப் படாமை. 121. முடியக்கூறி - முற்றச்சொல்லி.

123. தோழன் - யூகி. 125. 329 - 30, பார்க்க.

126. ஊகந்தராயன்-யூகி. நீட்டி - ஓலையை ஒருவனிடங்கொடுத்து.

128. தோழன் - யூகி. 129. கையிகந்து - அளவுகடந்து.

131. எவ்வம் - துன்பத்தை.

தெய்வத் தன்ன திண்பிடி கடைஇ
மன்னிய தோற்றமொடு வடகீழ்ப் பெருந்திசை

(வாரகன் செயல்)

முன்னிய பொழுதின் முன்னுங் கூறிய
வணங்குசிலை கொடுத்த வலிகெழு வராகன்
இரும்பிடி கடாவல னிவனென வெண்ணி
அரும்படை யாள ராருயி ரோம்பி
நயந்துகை விடாஅன் பின்செல் வோனை
எறிபடைத் தானை யேயர் பெருமகன்
உறுபடை யில்லா வொருதிசை காட்டி
ஆற்றலும் வென்றியு மறிவு மூன்றும்
கூற்றுத்திறை கொடுக்குங் கொற்றத் தானை
அவந்தியர் பெருமக னடிமுதல் குறுகிப்
பயந்துதான் வளர்த்த பைந்தொடிப் பாவையைச்
சிறையிவ னென்னுஞ் சிந்தையி னீக்கிக்
குறையுடை யுள்ளமொடு கொள்கெனத் தந்துதன்
காதலின் விடுப்பப் போகுதல் வலித்தனென்
வணக்க மின்றியான் செய்தனன் றனக்கெனக்
கூறினை சென்மெனத் தேறக் காட்டிப்
படிறிடை மிடைந்த பணிகோ ளீயா
ஆன்பாற் [1] செந்தேத் தணியுறு கிளவி

---

132. கடைஇ - செலுத்தி.

134 - 5.=55. 136. கடாவலன் - செலுத்தான்.

137. அரும்படையாளர் - உதயணன் வீருடைய.

138. பின்செல்லும் வராகனை நோக்கி.

139. ஏயர்பெருமகன் - உதயணன்.

143. பிரச்சோதனனுடைய அடியைக்குறுகி; அடிமுதல், தலைத் தாளென்பன ஒருபொருளன. 146. குறை - காரியம்.

147. போகுதல் வலித்தனென் - போகத்துணிந்தேன்.

145 - 8.=47 : 93 - 6.

151. பாலுந்தேனும் ஒத்தசொற்களை; "தேனும் பாலும் போல் வன சொல்லி" யா. கா. செய். சூ. 13, மேற்.

பி - ம். 1 சந்தத்திணியுறு.

அடுதிற லாற்ற லறியக் கூறப்
பிடிவழிப் படர்ந்து பெயர்ந்தவ ணிற்பத்

(வாசவதத்தை வருந்தல்)

தொடியுடைத் தடக்கையிற் றொழுதன ளிறைஞ்சி
மீட்டவற் போக்கு மாற்றங் கேட்டே
மணிமுதற் கொளீஇய மாண்பொற் சந்தின்
எரிமணி யிமைக்கு மிலங்குபொற் கோணத்துக்
கதிர்நகைக் கோவைக் கைவினைப் பொலிந்த
மத்தகப் புல்லக நக்குபு கிடந்த
திலகத் திருநுதல் வியர்பொடித் திழியக்
கலக்குறு சின்னீர்க் கருங்கயல் போல
நிலைக்கொளல் செல்லா நீர்சுமந் தலைஇப்
பிறழ்ச்சியொ டுலாவும் பெருமதர் மழைக்கண்
[1] அச்ச நோக்கி னச்செயி றணிந்த
நாகப் பிள்ளை யங்கட் பிறந்த
ஆவி போல வைதுவெய் துயிராப்
பருவர லுறூஉப் பையு ளெஞ்சினள்
கண்டிரள் வேய்த்தோட் காஞ்சன மாலையைக்
கொண்டிழி கென்னுங் குறிப்பினள் போலச்
செவ்வி யின்றிச் சேயிழை புலம்ப

(காஞ்சனை உதயணனை வினவுதல்)

எள்ளியது தீர வுள்ளியது முடித்த

---

152. கூற - உதயணன் சொல்ல.
153. வழி - பின்னே. வராகன் நிற்ப.
155. வாசவதத்தை கேட்டு.
158. நகைக் கோவை - முத்தமாலை.
159. புல்லகம் - தலையணிகளுள் ஒன்று ; உ. 3 : 72.
161. சின்னீர் - சிலவாகிய நீர். 164. நஞ்சு எயிறு.
165. நாகப்பிள்ளை - பாம்புக்குட்டி. 166. ஆவி - மூச்சு.
165 - 6. உ. 16 : 42. 168. காஞ்சனமாலையை நோக்கி.
169. கொண்டு இழிக - என்னையும் கைக்கொண்டு இறங்குக.
170. செவ்வி - சமயம். சேயிழை - வாசவதத்தை.
171. எள்ளியது - பிறரிகழ்ந்தது.

பி - ம். 1 அக்க.

உலவாக் கேள்வி யுதயண குமரனைத்
தொகுவிரல் கூப்பித் தொழுவன ளாகித்
தேம்பொதி செவ்வாய்க் காஞ்சனை யுரைக்கும்
பைந்தளிர் பொதுளிய பனிமலர்க் காவிற்
செந்தளிர்ப் பிண்டிச் சினைதொறுந் தொடுத்த
பின்னுறு பொன்ஞாண் பெருந்தொடர் கோத்த
பண்ணுறு பல்வினைப் பவழத் திண்மணை
ஊக்கமை யூசல் வேட்கையின் விரும்பினும்
திருநலத் தோழியர் சிறுபுறங் கவைஇப்
பரவை யல்குற் பல்காசு புரளக்
குரவை யாயங் கூடித் தூங்கினும்
தன்வரைத் தல்லா விம்முறு விழுமமொடு
நோய்கூர்ந் தழியுமெங் கோமக ளடுங்க
எறிவளி புரையு மிரும்பிடி கடைஇப்
பின்வழிப் படருமெம் பெரும்படை பேணாய்
என்வலித் தனையோ விறைவ நீயென

(உதயணன் தேற்றல்)

நடுக்கம் வேண்டா நங்கையு நீயும்
அடுத்த காவல னிவளொடு மமர்ந்து
விடுத்தமை யுணரா வீரிய விளையர்
தருக்கொடு வந்து செருச்செய றுணிந்தனர்

---

174. உரைக்கும் - உரைப்பாள்.
176. பிண்டி - அசோகமரம்.
177. பொன்ஞாண் - பொற்கயிறு.
179. ஊக்கு அமை - அசைத்தலமைந்த.
180. சிறுபுறம் கவைஇ - பிடரியைக் கையால் தழுவி.
182. குரவை தூங்கினும் - குரவை யாடினும்.
184. கோமகள் - வாசவதத்தை,
185. எறிவளி - அடிக்கும் பெருங்காற்றை. கடைஇ-நீ செலுத்தி.
186. எம்முடைய பெருஞ்சேனையை.
187. என்வலித்தனையோ - என்ன நினைத்தாயோ ? என - என்று காஞ்சனமாலை வினவ.
189 - 90. காவலன் - பிரச்சோதனன். பிரச்சோதனன் விரும்பி இவளை விடுத்தமையை.

பணிவகை யின்றிப் பண்டு மின்னதை
அணியிழை மடவோய் துணிகுவெ னாயின்
அரியவு முளவோ வஞ்ச லோம்பெனத்

(காஞ்சனமாலை வாசவதத்தையைத் தேற்றல்)

தெரிவனன் கூறிய தெளிமொழி கேட்டே
அன்ன தாகிய வருளுண் டாமெனின்
அஞ்சொற் பேதா யதுவிது வாமெனப்
பின்னிருங் கூந்தலொடு பிறழ்கலந் திருத்திக்
கலக்க நீங்கெனக் காஞ்சனை தெருட்டி
நலத்தகை மாதரு நனிநடுக் கொழிய
வலத்தினும் வலியினும் வத்தவன் கடாவத்

(கோட்டந் தாங்கிய பணிப்பெண்கள் வருந்தல்)

திருமா தேவி பெருநகர் வரைப்பினும்
செருமாண் வென்றிச் செல்வன் பக்கமும்
மையார் கண்ணியை யொய்யா னாகிக்
கையிகந் தனனாற் காவலன் மகனெனக்
காற்றினு மெரியினு மேற்ற வார்ப்பினும்
நாற்றிசை மருங்கினு நண்ணல் செல்லார்
பகலிட மருங்கிற் பருதியைக் கெடுத்த
அகலிடம் போல வச்ச மெய்திப்
படைமலர்த் தடங்கண் பனிசுமந்து வீழ
இடைமுலைக் கிடந்த வேக வல்லி
முற்றுறு [1] கழங்கொடு முதலகடு பொருந்திப்

---

192. பணிவகையின்றி - அரசன் பணித்தவகையில்லாமலும்.
194. அஞ்சலோம்பென - அஞ்சுதலை ஒழிவாயென்று. [குறிப்பு.
197. 'அதுவிது' என்றது, தம்முட்கொண்டிருக்கும் சங்கேதக்
199. தெருட்டி - தெருட்ட. 200. மாதர் - வாசவதத்தை.
201. வலம் - வெற்றி. 204. ஒய்யானாகி - செலுத்தானாய்.
211. ஏகவல்லி - ஒற்றைவடம்; உ. 7 : 22. "ஒருகாழ் முத்த மிடைமுலை விளங்க" அகநா. எங : 4.
212. கழங்கு - பொன்னாற்செய்த கழற்சிக்காய் மாலை; 38 : 172, வல்லி (211), பதைப்ப (213.)

பி - ம். 1 களங்கொடு.

பற்றிடம் பெறாது பாம்பெனப் பதைப்ப
வெருவுறு மஞ்ஞையிற் றெருமந் திகலிப்
பழிப்பில் கம்மியன் பசும்பொனிற் புனைந்த
கொடிப்பல விரீஇய கொழுந்துபடு கோலத்துக்
கொட்டங் கொண்டோர் கட்டழ லுயிரா
விட்டகன் றனையோ வேந்தனெ டின்றெமை
மட்டுவார் கோதாய் மறந்தெனை மாழ்கவும்

**(அடைப்பை தாங்கியவர் வருந்தல்)**

சிறுபுறங் கவைஇச் சீப்பின் வாரிக்
குறுநெறிக் கொண்ட கூழைக் கூந்தலுள்
நறுமலர்க் கோதை நான்றுவந் தசைஇ
வடுப்போழ்ந் தன்ன வாளரி நெடுங்கண்
குமிழ்த்தெழு வெம்பனி கோங்கரும் பேய்ப்ப
முகிழ்த்தன் முன்னிய முலைமுதன் முற்றத்து
வரித்த சாந்தின் வண்ணஞ் சிதைப்பச்
செறிதொடர் கொளீஇய சித்திரக் [1] கம்மத்துப்
பொறியமை புடைசெவிப் போழ்வாய் மணிக்கண்
அருங்கய லடைப்பை பங்கைபி னேந்திப்
பெருங்கட் பேதைய ரிருந்துய ரெய்தவும்

**(கவரியேந்தியவர் வருந்தல்)**

மறுவகத் தடக்கிய மதியம் போலச்
சிறுமுகச் சிகழிகை புடைமுதல் புதைஇய
மல்லிகை நறுஞ்சூட்டு வெள்ளிதின் விளங்கவதன்

---

217. கொட்டம் - ஒருவகைப்பெட்டி; குங்குமம், மஞ்சள் முதலிய பொருள்கள் வைத்தற்கு உரியது. பனங்குருத்தாற் செய்யப்படும் சிறிய பெட்டி இக்காலத்தில் இப்பெயருடன் பாண்டிநாட்டில் வழங்குகின்றது; "கொழுங்கொடி முசுண்டை கொட்டங் கொள்ளவும்" சிறு [பாண். 166.

223. பெருங். உ. 4 : 12.

பனி (224), சிதைப்ப (226.)

224. வெம்பனி : 40 : 191 - 2, அடிக்.

227. தொடர் முதலியன அடைப்பைக்கு அடை.

229. கயலடைப்பை - கயல் வடிவமாகவுள்ள வெற்றிலைப்பை.

231 - 3. சிகழிகைக்கு மறுவும் அதனைச் சூழ்ந்த மல்லிகைச் சூட்

பி - ம். [1] கயத்துப்.

ஊர்கோ ளேய்ப்பச் [1] சூழ்புடன் வளைஇய
செம்பொற் பட்டம் பின்றலைக் கொளீஇச்
சில்லென் கோலத்துச் சிறுகொடி மருங்கிற்
றனிமுத் தணிந்த தண்சாந் தாகத்துப்
பனிமுத் தாலி படைக்கண் கால
வெள்ளிப் போழை யுள்ளகத் தடக்கி
மணியினும் பொன்னினு மருப்பினும் வல்லவர்
அணிபெறப் புனைந்த வமர்பெறு காட்சித்
தின்மை செறிவில் சேடக மகளிர்
தன்மை கடுக்குந் தானைக் கச்சையர்
வம்புநெருக் குற்ற பொங்கிள முலையர்
குவளைக் கோதை கொண்ட கூந்தலர்
தவளைக் கிண்கிணி ததும்புசீ றடியர்
விளக்குறு மணிக்கை முகட்டுமுதல் வளைத்த
பொங்குமயிர்க் கவரிப் பைந்தொடி மகளிர்
எரியுறு மெழுகி னுள்ளஞ் சோரப்
பரிவுறு நெஞ்சினர் பையாந் தேங்கவும்

(பணிசெய்யும் கூனர் வருந்தல்)

கன்மிசை மருங்கின் மின்மிளிர்ந் ததுபோற்
றிடர்சே ராகத்துச் சுடர்மணி பிறழ
முத்துற ழாலி தத்துறு கண்ணொடு
பணிப்புறு கிளவியிற் பக்க நோக்கி
மங்கலச் செப்பின் மாண வேந்திய
குங்குமங் கொண்ட [2] கூன்வழுக் குறவும்

---

டிற்கு மதியமும் உவமை; சிகழிகை - மயிர்முடி; திருவிளை. தடாதகை. 16 - ஆம் செய்யுளில் இக்கருத்து அமைந்துள்ளது. 238. = 253.

239. போழ் - தகடு. 241. அமர் - யுத்தம்.

242. தின்மை - தீயசெயல்; "தின்மையும் பாவமும்" (கம்ப. பயன், 2.) சேடகமகளிர் - கேடகத்தையேந்திய மகளிரது.

246. 40 : 18, அடிக். 247. கை - காம்பு.

250. பையாந்து - துன்பமுற்று; 303.

253. 238; 48; 245. 254. பணிப்பு - நடுங்குதல்.

256. கூன் - கூனர்கள்.

பி - ம். 1 சூழுடன்றுளைஇச். 2 கூன் வழிக்குறுகவும்.

(பணிசெய்யும் குறளர் வருந்தல்)

அருங்கலந் துதைஇப் பெருங்கல மெல்லாம்
பேணி யணிந்த நாணுக் கோலத்துப்
பையர வல்குற் பவழப் பல்காசு
கைபுனை கலிங்கத் தைதுகலந் தொன்றி
நீலத் தெண்ணீர் நீந்து மாமையிற்
கோலக் குறுக்கைவாள் கூட்டுட் கழீஇப்
பாலிகை பற்றிய குறள்வழிப் படரவும்

(தோழியர் புலம்பல்)

மணிகிடந் திமைக்கு மாட மாணகர்
அணிகிடந் திமைக்கு மகன்பெருங் கோயிலுட்
காப்புற வகுத்த கன்னியங் கடிமனை
யாப்புற வகுத்த போர்ப்பெருங் கோணத்துக்
கழறுகா லமைத்துக் கண்ணகன் பரப்பின்
நிழறரு படுகா னீரதிற் புனைந்த
கற்பிறங் கடுக்கத்து நற்குறி யாவையும்
படுகற் சுரமும் பாறையும் படுவும்
நடுக லடுக்கலு நறும்பூஞ் சாரலும்
தேனுடை வரையுங் கானகக் குறும்பும்
அருவி யறையு முருவ வேனலும்
குழியுங் [1] குவடும் வழிநீ ரசும்பும்
வள்ளியும் வருந்துஞ் சுள்ளியுஞ் சூரலும்
வழைசேர் வாழையுங் கழைசேர் கானமும்

---

260. கலிங்கம் - (இங்கே) நீல ஆடை.
263. பாலிகை - கத்திப்பிடி. குறள் - மிகக்குறிய வடிவம்.
261 - 3. குறளர்க்கு ஆமை உவமம்; "யாமை யெடுத்து நிறுத்தற் றாற் றோளிரண்டும்" (கலி. கூச); "குறளாமை" சீவக. 2798.
266. கன்னியங் கடிமனை - கன்னிமாடம்.
267. போர்ப்பெருங் கோணம் - பொருத்துதலையுடைய பெரிய
268. பெருங். உ. 5 : 43. 269. படுகால் - படி. [மூலை.
271. படுவும் - குளமும். 273. குறும்பு - பாலைநிலத்தூர்.
276. சுள்ளி - ஆச்சாமரம். சூரல் - பிரம்பு.
277. வழை - சுரபுன்னை.

பி - ம். 1 கவடும்.

நாகமு நறையு மூகமு முழுவையும்
கடமா னேறுங் கவரியுங் காடியும்
மடமான் பிணையு மஞ்ஞையு மகன்றிலும்
விடமா நாகமும் வேக யானையும்
கழனியும் பொய்கையும் பழனப் படப்பையும்
தெரிமலர்க் காவு முருவின வாக
அமைக்கப் பட்ட செயற்கருஞ் செல்வத்து
மைதவழ் சென்னிக் கைசெய் குன்றொடு
நால்வகை நிலனும் பால்வகுத் தியற்றி
1 அறவை யல்லது பிறபுகப் பெறாஅ
வளமரந் துறுமிய விளமரக் காவினுட்
கொண்ட கோலமொடு குரவை பிணைஇ
வண்ட லாடுந் தண்டாக் காதல்
எம்மையு முள்ளா திகந்தனை யோவென
மம்மர் கொண்ட மனத்த ராகித்
தோழிய ரெல்லாம் பூழியுட் புரளவும்

(செவிலித்தாயர் புலம்பல்)

அம்பொன் வள்ளத் தமிழ்துபொதி யடிசில்
கொம்பி னெல்கிக் குறிப்பிற் கொள்ளாய்
செம்பொற் கிண்கிணி சிலம்பொ டார்ப்ப
மணிநில மருங்கிற் பந்தொடு மறலிநின்
அணிவளைப் பணைத்தோ ளசைய வாற்றாய்

---

278. நறை - ஒருவகை மரம். ஊகம் - கருங்குரங்கு.
279. கவரி - கவரிமா. 280. மகன்றில்-ஒருவித நீர்வாழ் பறவை.
285. கைசெய்குன்று - கட்டுமலை.
286. நால்வகை நிலன் - குறிஞ்சி முதலியவை; கோயிற்கு அங்கமாக இவைகள் அங்கே அமைக்கப்பட்டுள்ளன; சீவக. 147 - ஆம் செய்யுள் முதலியவற்றையும் அவற்றின் உரைகளையும் பார்க்க.
287. அறவை - முற்பிறப்பில் அறஞ்செய்த உயிர்கள்.
288. துறுமிய - செறிந்த. 289. பிணைஇ - கைகோத்து.
292. மம்மர் - மயக்கம்.
294 - 5. அமிழ்து - பால். அடிசிலைக் கொள்ளாய்; நற். ககo.
297. மறலி - மாறுபட்டு. 298. அசைய - மெலிய.

பி - ம். 1 அயறவையல்லது.

இன்றீங் கிளவி யொன்றிரண்டு மிழற்றிப்
பண்சுவைத் தொழிந்து பாலி றேன்முலை
ஒண்முக விரலிற் கண்முக ஞெமிடி
மையார் நெடுங்கண் மாலை யாமத்துப்
பையாந்து பொருந்திப் பள்ளி கொள்வோய்
காதற் காளை கானத் தொய்ப்பப்
போதற் கண்ணே புரிந்தனை யோவெனச்
செவிலித் தாய ரவலித் தழவும்

(காஞ்சுகி முதியர் வருந்தல்)

கற்ற மந்திரி காட்டவுங் காணது
பெட்டாங் கொழுகும் பெருமகன் போலவும்
முறைமையிற் றேயு நிறைமதி நீர்மை
நண்புகொ ளொழுக்கி னஞ்சுபொதி தீஞ்சொல்
வளைஇய மடந்தையைத் தெளிவன னொழுகி
வெறுக்கை யின்மையிற் றுறக்கப் பட்ட
இளையவன் போலவுங் கிளைஞரும் பிறரும்
கண்டவ ரெல்லாங் கையெறிந்து நகூஉம்
கம்பலைப் பெரும்பழி யெய்திய காவலன்
வம்ப மன்னனை வழிதெளிந் தனனென
வெண்ணரை சூழ்ந்த தண்ணுமைப் பறைதலைக்
காஞ்சுகி முதியர் சாய்ஞ்சஞ் ரெய்தவும்

---

301. ஞெமிடி - நெருடி ; " ஞெமிடிக் கொண்டு " நற். உஉ.
304. ஒய்ப்ப - செலுத்த ; " செய்யு ளுரை யொய்யு மகளிர் " [பதிற். எகூ.
306. அவலித்து - வருந்தி.
308. பெட்டாங்கு - விரும்பியபடியே. பெருமகன் - அரசன்.
309. பூரண சந்திரனது தன்மையையுடைய ; " மதிப், பின்னீர பேதையார் நட்பு " குறள், 782.
310. நஞ்சை உள்ளேவைத்து மறைத்துள்ள இனியசொல்லாலே.
311. வளைஇய மடக்தையை - தடுத்துப் பிணித்த பரத்தையை.
312. வெறுக்கை - பொருள்.
315. பழியை அடைந்த காவலன் : பிரச்சோதனன்.
316. வம்ப மன்னனை - புதிய அரசனை ; உதயணனை.
315 - 6. பெருங். க. 35 : 6 - 7.
317. தண்ணுமைப் பறை தலை - குடமுழவுபோன்ற தேய்ந்த தலை.
318. காஞ்சுகி முதியர் : 44 : 111. சாய்ஞ்சஞ - சாய்ந்து. உ

(சாங்கியத்தாயின் செயல்)

பொன்னணிப் பாவை போகிய புணர்ப்பின்று
தன்னி னாகிய தன்மைத் தென்று
தண்டார் வேந்தன் கொண்ட காலை
விடுத்தற் கரிதென நடுக்க மெய்தி
ஓங்கிய வொழுக்கி னுயர்ந்தோர்ப் பேணிச்
சாங்கியந் தாங்கிய சால்பணி [1] படிமை
வருமதி நுனித்த பெருமூ தாட்டி
வேக வேந்தன் வெஞ்சம முருக்கிப்
போக வேந்தனைப் போகப் பண்ணிப்
பொருபடை பரப்பி யுருமறைந் துழிதரும்
யூகி யுள்வழி யொற்றுந ளெய்தி
ஆகுபொரு [2] ளோலையி னிருவரு மறிவுற்றுக்
கண்கூ டெய்துங் காலங் கூறி
மண்கூட் டாளன் மனைவயின் மறையவும்
இன்னோர் பிறரு மம்மருண் மயங்கிய
உழைக்கல மகளிரு மிழைப்பிரிந் தரற்றவும்
பேராறு மடுத்த பெருங்கடல் போல
ஓசை யறியாப் பூசலும் புலம்பும்
ஊரக மருங்கிற் கூரெரி கொளுவ
எதிர்த்த மாந்த ரின்னுயி ரிறுதியும்
கதிர்த்த மூறுவற் கன்னியைத் தழீஇ
வத்தவ னகற்சியு மவ்வழிச் செலவும்

---

319. பாவை - வாசவதத்தை.
322. விடுத்தற்கு - பரிகரித்தற்கு. 324. படிமை - தவவேடம்.
325. மூதாட்டி - சாங்கியத்தாய். 329. ஒற்றுநள் - ஆராய்ந்து.
பெருமூதாட்டி (325), எய்தி (329.)
330. ஓலையின் - உதயணனது ஓலையால்; 45 : 30, அடிக்.
331. கண்கூடெய்தும் - தாம் பார்க்கும்.
332. மண்கூட்டாளன் - குயவன்.
334. இழைப்பு இரிந்து - தொழில் செய்தலைத் தவிர்ந்து.
336. புலம்பு - அழுகை.
பி - ம். [1] படிவம். [2] ஓலையுள்:

வித்தக குமரர் வீழ்ச்சியும் பிறவும்
ஒத்தவை யுணர்ந்து முற்றிறைக் குரையார்
பொய்ப்பொரு ளாயினு மெய்ப்பொருட் கண்ணும்
உய்வகை யில்லை வெய்யோன் மாட்டென்
றறிந்தோ ரறிந்தோர் செறிந்தன ராகி
வெய்துறு விழுமமொடு விம்மங் கூரச்
செய்வதை யறியார் திரிவராற் பலரென்.

சசு.—உழைச்சன விலாவணை முற்றிற்று.

---

342. இறைக்கு - பிரச்சோதனனுக்கு. உற்று உரையாராய்.
344. வெய்யோன்மாட்டு - அரசனிடத்தில்.
346. விம்மம் - விம்முதல் ; இரங்குதல்.

---

## சஎ—உரிமை விலாவணை.

(வராகன் செயல்)

செய்வதை யறியா ராகிப் பல்லவர்
கைவிரல் பிசைந்து பையென [1] வருவழி
வில்கைக் கொண்டவன் விடுக்கப் பட்ட
வல்வினைக் கொடுந்தொழில் வராகன் வந்துதன்

---

சஎ—உரிமை விலாவணை.

[வாசவதத்தையுடன் உதயணன் சென்ற செய்தியை வராகன் வந்து சொல்லக்கேட்டு மிகுந்த கோபங்கொண்ட பிரச்சோதனன் மூதன் மந்திரி தேற்றத்தேறிச் சென்று சொல்லப் பெருந்தேவியும் பிறரும் புலம்பியது இதனால் அறியலாகும்.]

1. பல்லவர் - பலர்.

2. இனி யாதுசெய்வேமென்னுங் கவலையால் கைவிரல் பிசைந்தனர். பையென - மெல்ல ; “ பையெனக் கவிழ்ந்து நிற்ப ” சீவக. 512.

4. வராகன் : வாசவதத்தையின் மாடத்துக் காவல் வீரர்களில் ஒருவன்.

3 - 4. வராகன் இன்னனென்பதும், செய்திசொல்லி உதயணனால் அவன் விடுக்கப்பட்டமையும் : 45 : 52 - 67 ; 46 : 184 - 580

பி - ம். வருவுழி.

கோமக னிருந்த கோயி னெடுங்கடைத்
தோரணக் கந்தின் றூண்முதல் பொருந்திக்
கடிகமழ் நறுந்தார்க் காவலற் குறுகி
அடியுறை யருண்மொழி யான்பணிந் துரைப்பச்
செவ்வி யறிந்து நொவ்விதின் வருகெனக்
கோற்றொழி லவற்குக் கூறின னிற்ப

(நிமித்திகன் கூற்று)

ஈரிதழ்த் தாரோ யிற்றை நாளால்
காரொ டுறந்தவிக் கடுவளி நிமித்தம்
ஊரொ டுறந்த வுறுகண் காட்டி
இன்னா வின்ப நின்வயிற் றருமெனத்
தொன்னூ லாளன் றோன்றக் கூற

(பிரச்சோதனன் வினவுதல்)

இன்னா வின்பத் தியற்கை யென்னென
மன்னவன் வினைய மாத்திரைக் கண்ணே

---

5. கோமகன் - பிரச்சோதனன்.

6. தோரணக்கந்து - அரண்மனையின் முதல்வாயிலில் நடப்பட்டிருக்கும் கம்பம்; வாயில்காவலர் சார்ந்து நிற்றற்குரியது இது.

8. அடியுறை அருண்மொழி - உதயணன் எனக்கு அருளிய மொழிகளை; 'அடியுறை' என்பது அடியவனென்னும் பொருளில் வருவதொரு தொடர்மொழி; பிரச்சோதனனை யுட்கொண்டு உதயணனை அடியுறையென்றான்; "அடியுறை யருளாமை" (கலி. ௯௪ : 4); "இரும்பிசிராந்தை யடியுறை", "அடிநிழற் பழகிய வடியுறை" புறநா. ௬௭, ௧௬௮.

9. செவ்வி - சமயம். நொவ்விதின் - விரைவாக; 48 : 139; "நொவ்விதாச் சென்றீக" ஐந். ஐம். 10.

10. வாயிலோனுக்கு வராகன் கூறி நிற்க.

11. நாளால் - நாளின்கண்.

12. உறந்த - மிகுந்த. கடுங்காற்றாகிய நிமித்தம்; எழுவாய்; 69.

13. உறுகண் - துன்பம்.

14. இன்னா இன்பம் - முதலில் துன்பத்தைத் தந்து பின்பு மகிழ்ச்சியைத் தருவதோர் இன்பம்; 16, 228. இது பரிணாம வின்பமென்றும் வழங்கும்; "புள்ளின்குறி கொள்வா, னின்றேவரு மிடையூறது நன்றாய் விடு மென்றான்" (கம்ப. பரசு. 6) என்பதுமிது.

15. தொன்னூலாளன் - நிமித்திகன்.

(வாயில்காவலன் செயல்)

செறியிலைப் பொற்குழை சிறப்பொடு தூக்கிய
சிறுதுளைக் காதிற் செங்கட் செந்நோக்
கருவொடு படாஅ வறிதெழு சினத்தன்
ஆர மார்ப னருமறைப் பள்ளியுள்
உற்றது கூறுங் கொற்ற வாயிலன்
கோலொடும் வாளொடுங் கூப்பிய கையன்
முன்பணிந் திறைஞ்சிய தன்மை கண்டே
செந்தா மரைக்கணிற் செவ்விதி னோக்கி
வந்தது கூறென வணங்கி வாய்புதைத்
தந்தர விசும்பினு மணிநில வரைப்பினும்
பெண்ணோ ருருவம் பிறர்தமக் கில்லா
நுண்ணேர் மருங்கினும் முடித்திஎம் பெருமான்
வடிவேற் றடங்கண் வாசவ தத்தைக்
கடிவழிப் படூஉ முரிமையுட் கம்மியன்
வல்வில் விளையன் வராக னென்போன்

---

18. குழை தூக்கிய.

20. காரணமின்றி எழுகின்ற சினத்தன். [மிடம்.

21. மார்பன் : அரசன். மறைப்பள்ளி - இரகசியங்களைப் பேசு

19 - 22. காதினையும் நோக்கினையுமுடைய சினத்தனாகிய வாயிலன்.

23 - 4. "கொண்ட வாளொடுங் கோலொடுங் கூப்புபு, சண்ட மன்னனைத் தாடொழுது" சீவக. 430.

17 - 24. மாத்திரைக்கண் வாயிலன் இறைஞ்சிய தன்மையை

26. என - என்று அரசன் கேட்ப. [மன்னவன் கண்டு.

27. 'அந்தர விசும்பினும்' என்பது முதலியன வாயிலோன்

28. தன்னைப்போன்ற பெண்ணுருவம் பிறர்க்கில்லாத. [கூற்று.

29. நுண்ணேர் - மிக நுண்ணிய.

29 - 30. நும்மடியவளும் எம்பெருமானுமாகிய வாசவதத்தைக்கு ; அடித்தி : 35 : 111 ; 47 : 226 ; "தம்பெருமான் பாத முடிதீட்டி" (சீவக. 2608) என்புழிப்போல இங்கே, 'எம்பெருமான்' என்பதில் னகரவொற்று, பெண்பாலை உணர்த்தியது.

32. விற்போரில் மிகச்சிறந்தவர்கள் பெயருக்கு முன் 'வல்வில்' என்னும் அடை கொடுக்கப்படும் ; வல்வில்ராமன், வல்வில்லோரி யென்ப வற்றாலுணர்க ; புறநா. கரு௨ : 1-6, அடிக்.

நகைத்தொழி லறியா நன்னகர் வரைப்பகம்
புகைக்கொடி சுமந்து பொங்கெரி தோன்றப்
புறமதிற் சேரியுங் குறுகுதற் கரிதாக்
காற்று மெரியுங் கலந்துடன் றோன்ற
எப்பான் மருங்கினு மப்பான் மலைக்குநர்த்
தப்புத லல்லது மிக்குயல் காணேம்
கூற்று மஞ்சுநின் ஞற்ற லாணை
உரைப்பவு மொழியாது தலைத்தலை சிறப்பநின்
அடிநிழல் வட்ட மடையத் தரூஉம்
கடியர ணின்மையிற் கையற வெய்தி
வெம்முரண் வேழத்து வெஞ்சின மடக்கிய
உண்முர ணரூஉ வுதயண குமரனொ
டுடன்பிடி யேற்ற லுற்றனெ மாகித்
தடம்பெருங் கண்ணியைத் தலைவயிற் பணிந்திரந்
தேற்றின மேற்றலுங் காற்றெனக் கடாஅய்
எம்மொடு படாஅ னிந்நகர் குறுகான்
தன்னகர்க் கெடுத்த தருக்கின னதலின்
ஆயிரத் தைவர் காவற் காளையர்
மாயிரு ஞாலத்து மன்னுயி ருண்ணும்
கூற்றெனத் தொடர் வேற்றுமுன் விலங்கி
வயவ ரென்றியாம் வகுக்கப் பட்டோர்
பயவ ரன்றிப் பணிந்தவர் தொலைய
வென்றி யெய்திக் கொன்றுபலர் திரிதரப்
பின்றையு நின்றியான் பிடிப்பின் செல்வுழி

70. நகைத்தொழில் - விளையாட்டுத்தொழிலை.
வளியென (69), எரிதோன்ற (71.)
74. மலைக்குநர் - போர்செய்வோர். [உயல் - பிழைத்தல்.
75. தப்புதல் - கொல்லல்; "பார்ப்பார்த்தப்பிய" (புறநா. ௯௪.)
79. கடியரண் - மிக்க பாதுகாப்பு. கையறவு - செயலறவு.
80. முன்பு நளகிரியின் கோபத்தை யடக்கிய.
85 - 6=45 : 71 - 3.
87. காளையர் - பிரச்சோதனனுடைய வீரர்.
91. பயவர் - பயனையளிப்போர்.

அடுத்த காத லணங்கைத் தந்தவன்
விடுக்கப் போந்தனென் மீண்டிது கூறெனத்
தடக்கை கூப்பிநின் னடித்திசைக் கிறைஞ்ச
ஒழிந்தியான் வந்தனெ னிகழ்ந்ததை நினைப்பினோர்
மாயம் போலுங் காவல் வருளென

(பிரச்சோதனன் செயல்)

உரைத்த மாற்ற முணரக் கேட்டே
செருச்செய் நெடுங்கண் டீயெனச் சிவப்பப்
பிரச்சோ தனனெனும் பெரும்பெயர் விளக்கம்
மகிழ்ச்சி யெய்தி வத்தவற் றெளிந்த
இகழ்ச்சி யளற்று ளிறங்கிற் றின்றெனச்
சுற்ற மாக்களைச் சுடுவான் போலப்
பொற்றார் மார்பன் பொங்குபு வெகுண்டு
முகைநகை முத்தொடு தகைமுடி தயங்க
அருவரை யகலத் தாரம் புரளத்
திருமுடி யண்ண றீப்படச் சீறி
எழுவுறழ் திணிதோ ளடுத்தன னோச்சிப்
பொழிமணித் திண்டூண் பொறிபடப் புடைத்து
மாற்றுச் சிங்கத்து மறக்குரல் கேட்ட
ஏற்றுச் சிங்கத்தி னிடித்தெழுந் தாறிக்
கொடியணி தேருங் குதிரையும் யானையும்
வடிவே லிளையரும் வல்விரைந் தோடி

---

94 - 6. வாசவதத்தையை அவள் தந்தையின் கட்டளைப்படி அழைத்துச் செல்கின்றேன்; இதனை நீ சென்று அரசனுக்குச் சொல்வாயாகவென்று சொல்லித் திசைநோக்கி உதயணன் வணங்க; 46: [143 - 9.

99. பிரச்சோதனன் கேட்டு.

101 - 3. திருக்குறள், 601.

106. புன்னையரும்பு முதலிய அரும்புகளைப் போன்ற ஒளியை [யுடைய முத்து.

110. கோபத்தினது மிகுதியால் தூணிலறைந்தான்; "பொற்றூண் டீப்படப் புடைத்து" (சீவக. 1857); "மடித்தவா யெயிறு கவ்வி மருங்கினோர் வயிரக் கற்றூண், அடித்தன னசனி வீழ வருவரை நெரிவ தேபோற், படித்தலை நடுங்க மற்றப் பரூஉத்திரள் வயிரத் தம்பந், தொடித்தலை சிந்தந்து நுங்கத் துகளெழுந் தொழிந்த தன்றே" சூளா. அரசியல். 9.

112. ஏற்றுச்சிங்கம் - ஆண்சிங்கம்.

எய்கணை யியற்கை யியற்றன்ன யிரும்பிடி
கையகம் புக்க தன்றியிவ் வையகத்
தறத்தொடு புணர்ந்த துறைப்புன லாட்டத்
தற்றமும் பிறவு மொற்றுவன னோக்கி
வள்ளி மருங்கின் வயங்கிழைத் தழீஇ
எள்ளி யிறந்த வின்னா மன்னனைப்
பற்றுபு தம்மெனப் படையுறப் படுத்து
ஞாலந் தரும்பொரு ளியற்பட நாடிய
சாலங் காயனைத் தலைக்கை யாக்கப்
பல்பொருள் பொதிந்த பயந்தெரி பனுவற்
பாரதகன் றன்னொடு பயந்தீர் நண்பின்
மந்திர மாக்களு மந்த ணாளரும்
அகத்தாற் சூழீஇய வவைய னாதலின்
முகைத்தார் வேந்தற்கு முகத்தெழு பெருஞ்சினம்
புனற்படு நெருப்பிற் பொம்மென வுரறி
ஆறிய [1] வண்ண மணிமுக நோக்கித்
தெளிதகு கிளவி செவ்விதிற் கேட்ப

(சாலங்காயன் கூற்று)

உளைவன செய்த வுதயண குமரனைத்
தளைவயி னகற்றலுங் கிளைவயிற் பெயர்த்தலும்
ஆர மார்பவஃ தியாவரு மறிவர்
வருமுலை யாகத்து வணங்குகொடி மருங்கில்
திருமக டன்வயிற் றெரிந்தனை காணிற்
குலத்தினுங் குணத்தினு நலத்தகு நண்பினும்
நிலத்தினி னின்னொடு நிகர்க்குந னாதலின்

---

115. அம்பைப்போல விரைந்துசெல்லும் இயல்பையுடைய பிடி.
117. நீர்விழவில். 118. ஒற்றுவனன் - ஆராய்ந்து.
119. வள்ளி - பூங்கொடி. 120. எள்ளி - இகழ்ச்சிசெய்து.
121. பற்றுபு தம்மென - பிடித்துத்தாருமென்று.
123. சாலங்காயன் - முதன் மந்திரி. தலைக்கை - பிரதானி.
125. பாரதகன் - அரசன் பிள்ளைகளுள் ஒருவன். பயந்தீர்நண்பு - பயனைக் கருதாத நண்பு. [முழங்கி.
129. புனற்படு நெருப்பின் - வடவைத் தீயைப்போல. உரறி - 
பி - ம். 1 வண்ணலணிமுக.

மேல்வகை [1] விதியின் விழுமியோர் வருத்த
பால்வகை மற்றிது பழிக்குந ரில்லை
ஆறெனா வருளா யண்ணன் மற் றதுநீ
வேறென வருளிய வேட்கை யுண்டெனின்
முன்னிலை முயற்சியி னன்றி மற்றினிப்
பின்னிலை முயற்சியிற் பெயர்த்தனந் தருதல்
திருவளர் மார்ப தெளிந்தனை யாகென
ஒருபே ரமைச்ச னுள்விரித் துரைப்ப

(பிரச்சோதனன் செயல்)

எறிநீர் வரைப்பி னெப்பொரு ளாயினும்
என்னி னறிவோ ரில்லென மதிக்கும்
மன்னருண் மன்னன் மனத்திற் றேறி
இடத்தோ ளன்ன விடற்கருங் காதல்
உரிமைத் தேவியர்க் கொருமீக் [2] கூரிய
பட்டத் தேவிக்குப் பட்டதை யெல்லாம்
ஏனோ ருணர்த்துத னீக்கிக் கோமான்
தானே யுணர்த்துந் தன்மைய னாகி
அரசு கொற்றத் தருங்கடம் பூண்ட
முரசெறி வள்ளுவ முதியனைத் தரீஇக்
கார்பனி துளித்துக் கதிர்கண் புதைஇய

140. பால் - ஊழ்; 32 : 20 - 27.

141. ஆறெனா - இது பெரியோர் சென்ற வழியென்று.

143 - 5. வாசவதத்தையுடன் உதயணனை மீட்குஞ் செயலை இப்பொழுது நாமே நேரில் மேற்கொள்ளுதலைத் தவிர்ந்து பிற்காலத்துப் பிறரைக்கொண்டு செய்வித்தலைத் தெளிந்தருளுதியென்று.

146. ஒரு பேரமைச்சன் - சாலங்காயன்.

150. கணவனுடைய இடத்தோள் மனைவியின் கூறென்பது நூற்றுணிபு.

151 - 2. அரசனுடைய உரிமைத் தேவியர் பதினாறாயிரவரில் மேலான பட்டத்தேவிக்கு : உ. 4 : 18-24.

152 - 4. பட்டத்தேவிக்கு ஏனையோர் சொல்லுமுன்னம் தானே இச்செய்தியைச் சொல்லுதற்கு அரசன் நினைந்து.

156. தரீஇ - தருவித்து.

157. 'கார்பனிதுளித்து' என்பது முதலியன : வள்ளுவனை நோக்கி அரசன் கூறல்.

பி - ம். 1 விதியினும். 2 கூறிய.

வார்பணி மாலைநம் வளநகர் புகுதல்
புனலாடு விழவிற் பொலிவின் றாதலின்
கோலங் குயிற்றிக் கோட்டணை யியற்றிக்
காலை புகுதல் காவலன் பணியெனத்
துறைநக ரறியப் பறையெடுத் தறைகெனச்
செல்சுட ரந்தி நல்லிய லோம்பிப்
பள்ளிக் கோயிலுட் பல்லிய மெடுப்ப
ஆய்பூஞ் சேக்கையு ளருமணி சுடரப்
பாயல் கோடல் பலரறி வுறீஇய
கைக்கோ விளையருங் காஞ்சுகி முதியரும்
[1] அகக்கோ ளாளரொ டருமறை யாகப்
பண்டிவட் புகூஉம் பொங்குபுனல் விழவணி
அன்றவ ணிலனா யாவித் திழிந்த
இந்திர குமர னியற்கைய னாகிக்
கஞ்சிகைச் சிவிகையுட் கரணத் தொடுங்கி

(பள்ளியறை)

வேண்டிடந் தோறுந் தூண்டுதிரிக் கொளீஇக்
கைவயிற் கொண்ட நெய்யகற் சொரியும்

---

162. துறைநகர்-துறையில் நீர்விழவிற்குப் புதிதாகச்சமைத்த நகரம். என-என்று அரசன் சொல்லி. 163. அந்திநல்லியல் - மாலைக்கடன்.

166. அறிவுறீஇய - அறியும்படி.

167. காஞ்சுகிமுதியர் : 44 : 111, அடிக்.

168. அகக்கோளாளர் - அகம்படிப் பெண்கள். அருமறையாக - கண்ணுக்குப் புலப்படாமல் இருக்க.

170. ஆவித்து - பெருமூச்செறிந்து.

171. இந்திரகுமரன் - தேவகுமரன் ; "இந்திர குமரரின் யாங் காண் குவமோ" சிலப். கரு : 173.

170 - 71. தனக்குரிய அரசச்சின்னம் யாதொன்றும் இன்றிச் சென்றமையால், அரசனுக்கு அறப்பயனை நுகர்ந்த பின்பு சுவர்க்கத்தி னின்றும் இழிந்த தேவகுமரனை உவமை கூறினார்.

172. கஞ்சிகை - திரை ; 199. கரணத்து ஒடுங்கி - மனத்தில் ஊக்கமின்றி ; ஒடுங்குதல் அரசன் தொழில்.

173. திரிக்கொளீஇ - திரியைப் பொருந்தச் செய்து.

பி - ம். [1] அக்கோளாளர்.

யவனப் பாவை யணிவிளக் கழலத்
திருந்துசா லேகமொடு பொருந்துகத வொற்றிப்
பளிக்குமணி யிழிகைப் பவழக் கைவினைப்
புலிக்கா லமளிப் பொங்குபட் டசைஇ
எலிப்பூம் போர்வையொடு மயிர்ப்படம் விரித்துக்
கலத்தி னல்லது காலின் வாரா
நலத்தகு பல்படை யழற்றற் குரியவை
[1] ஆய்வனர் படுத்த வம்பூம் பள்ளியுட்

(திருமாதேவியின் உட்கோள்)

பெருமூ தாட்டியர் பேணுவனர் சூழத்
திருமா தேவி யருநக ருற்ற

---

173 - 5. "யவன ரியற்றிய வினைமாண் பாவை, கையேந் தையக னிறையநெய் சொரிந்து, பரூஉத்திரி கொளீஇய குரூஉத்தலை நிமிரெரி" நெடுநல். 101 - 3.

174 - 5. கொண்ட அகலில் நெய்சொரியும் விளக்கென்க.

176. சாலேகம் - இருப்புக் கம்பிகளை யுடைய சாளரம்; "சாலேகஞ் சார நட" (முத்.) ஒற்றி - ஒன்றுபடச் சார்த்தி.

177. இழிகை - கைச்சுரிகை ; சீவக. 558.

178. புலிக்காலமளி-புலிவடிவம் அமைந்த காலையுடைய கட்டில்.

179. எலிப்பூம்போர்வை - எலிமயிராற் செய்யப்பட்ட பூத்தொழிலையுடைய போர்வை ; "மயிரெலியின் போர்வையொடெம் மன்னன்விடுத் தானே", "எலிமயிர்ப் போர்வை வைத்து", "எலிமயிர்த் தொழிற், பொங்கு பூம்புகைப் போர்வை மேயினார்", "செந்நெ ருப்புணுஞ் செவ்வெ லிம்மயி, ரந்நெ ருப்பள வாய்பொற் கம்பலம்" சீவக. 1874, 2471, 2680, 2686.

180. கலம் - கப்பல். கால் - வண்டி ; 42 : 177 ; சிலப். உ: 7.

181. நலத்தகு பல்படை - நலத்திற்குத் தக்க பலவகையான படுக்கை ; "ஐந்துரூஉன் றடுத்த செல்வத் தமளி" (சீவக. 838) என்பதன் விசேடவுரையைப் பார்க்க. அழற்றற்கு - வெப்பஞ் செய்தற்கு.

177 - 82. ஐ. க்ச : 53 - 61 ; "பவளப் பாய்காற் பசுமணி யிழிகை, வம்பார் நல்லிவில் விம்மு கட்டில்" சீவக. 558.

184. திருமாதேவி : எழுவாய்.

பி- ம். 1 யவனர்.

ஆகுலப் பூசலு மழலு மற்றிவை
காவல னறிந்த கருத்தின னாகியென்
வாசவ தத்தையை வலிதிற்கொண் டேகினும்
தீது நிகழினு மேதமில்லென
நினைப்புள் ளுறுத்த நெஞ்சின னாகி
மனத்து ளோர்க்கு மம்மர் தீர
அருங்கடி காவல ரஞ்சின ரெதிர்கொள
இருஞ்சின வேந்தன் பெருஞ்சின மகற்றி
வாயிலுள் வருமிடத் தெதிர்கொளற் பொருட்டாக்
கோயிலு ளிருந்த கோப்பெருந் தேவிக்குப்

(பிரச்சோதனன் செயல்)

பொலப்பூங் குடத்திற் போற்றித் தந்த
தலைப்பூ நறுநீர் சிறப்பு முந்துறீஇத்
தருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து
வெண்முகிற் பொடிக்கும் வெய்யோன் போலக்
கைபுனை சிவிகையிற் கஞ்சிகை நீக்கி
அம்பூந் தானை யடிமுதற் றடவர
வெம்போர் வேந்தன் மெல்லென விழிந்து
நெடுவெண் டிங்க ளகடுறத் தழுவும்
கடிவெண் மாடத்துக் கன்னியங் கடிமனை

---

185. ஆகுலப் பூசல் - வருத்தத்தையுடைய ஆரவாரம்.

186. காவலன் - உதயணன்.

188. தீது நிகழினும் - அவன் அவளை வலிதில் மணஞ்செய்து கொண்டாலும்; தாய் தந்தையருடைய உடம்பாடின்றி ஒரு கன்னியை வலிதில் மணஞ்செய்து கொள்ளுதல் அநாரியவொழுக்கமாதலின், 'தீது நிகழினும்' என்றாள். ஏதம் இல் - குற்றமில்லையாகும்.

191. அரசனை எதிர்கொள்ள. 194. தேவியின் பொருட்டு.

195 - 6. தலையிலே தாமரைப் பூவையுடைய பூரணகும்பம்; உ. 5 : 104. சிறப்பு - மற்றச் சிறப்புக்கள்.

197. =33 : 134, அடிக்; நெடுநல். 90; தொள். உரி. சூ. 65, சே. ந; இ - வி. சூ. 281, மேற். ஞெமிரிய - பரந்த; இச்சொல் ஞெமரிய வெனவும் வழங்கும். [49.

198. பொடிக்கும் - தோன்றும். வெய்யோன் - சூரியன்; 48 :

202. நெடுவெண்டிங்கள்: அகநா. உ : 17.

இல்லாத் தன்மையிற் புல்லெனத் தோன்றும்
பையுட் செல்வத்துக் கையற வெய்திப்
பொன்னு மணியும் புகாறப் புனைந்த
தொன்னு டமரத் துணைமுதற் பொறித்த
[1] தோடமை கொளுவத் தூடுற வளைஇத்
தாழ்காழ் நகையொடு தாமந் துயல்வரும்
மாசி றிண்ணிலை வாயிற் பேரறைப்
பள்ளி மண்டபத் தொள்ளொளி கிளரத்
திருவுகொ ளுரோணி யுருவுநலம் விரும்பிய
விரிகதிர்ச் செல்வனின் வியப்பத் தோன்றிப்
பாயல் கொள்ளான் பட்டத் தேவி
சாயற் செல்வந் தலையளித் தோம்பி
அணியிய லமிர்த மாற்றிய பின்னவட்
டெளியக் காட்டுந் தெரிவின னாகிப்

---

205. கையறவு - செயலறுதலை.

207. அமர - ஒப்ப. துணைமுதற் பொறித்த - இரட்டை (ஆண்பால் பெண்பால்) வடிவங்கள் எழுதிய.

206 - 7. பொன்னாற் புனைந்தநாடு சுவர்க்கம்; மணியாற் புனைந்த நாடு நாகருலகம்; இவை முறையே புகழினும் போகத்தினும் சிறந்தனவென்பது சைனநூற்றுணிபு; "நாகநீ ணகரொடு நாகநா டதனொடு, போகநீள் புகழ்மன்னும் புகார்நகர்" (சிலப். க: 21 - 2); நாகருலகம் பவணமெனவும் வழங்கும்; "பள்ளிமாட மண்டபம் பசுங்கதிர்ப் பவணமே", "பவணத்தொரு பாங்கின தாலளிதோ" சீவக. 146, 2853.

208. தோடு - தொகுதி. கொளு - பொருத்துவாய்; அம்: சாரியை.

209. காழ்நகை = நகைக்காழ் - முத்தாரம். தாமம் - பூமாலை.

212. உரோணி - உரோகிணி.

213. செல்வனின் - சந்திரனைப்போல.

212 - 3. = உ. 9: 167 - 8; "மண்ணகங் காவலின் வழுக்கி மன்னவன், பெண்ணருங் கலத்தொடு பிணைந்த பேரருள், விண்ணக மிருள்கொள விளங்கு வெண்மதி, ஒண்ணிற வுரோணியோ டொளித்த தொத்ததே" சீவக. 198.

215. சாயற்செல்வம் - மென்மையாகிய செல்வத்தை.

216. அமிர்தம் ஆற்றிய பின் - இனிய உணவை அரசனுக்குத் தேவி அளித்தபின்பு.

பி - ம். 1 தோழமை கொழுவத்தூழ்உற.

பூங்கொடி புனைந்த வீங்குமுலை யாகத்து
வாங்கமைப் பணைத்தோள் வாசவ தத்தையை
நல்லியாழ் நவிற்றிய நளிமணிக் கொடும்பூண்
உறுவரை மார்பி னுதயண குமரன்
மறுவி றொன்று மனைவளர் தரூஉம்
செல்வி யாகச் சிறப்பொடு சேர்த்தியவன்
நாட்டகம் புகுத்தற்கு வேட்ட தென்மனன்
ஒண்குழை மடவோ யுவத்தி யோவென

(திருமாதேவி கூற்று)

அருமையிற் பெற்றநும் மடித்தி தன்வயிற்
றிருமணச் சூழ்ச்சி யெழுமைத் தாயினும்
ஏத [1] மின்று லின்பம் பயத்தலின்
யானைக் கெழுந்த வெஞ்சின மடக்கிநின்
றானைத் தலைத்தா டந்த ஞான்றவன்
நிலையிற் றிரியா விளமைக் கோலம்
உயர்பிற் றிரியா தொத்துவழி வந்த
மகளுடைத் தாயர் மனத்தகம் புகற்றலின்
யானு மன்றே பேணினெ னடிகள்
மான மில்லை மற்றவன் மாட்டென

(பிரச்சோதனன் கூற்று)

உவந்த வொள்ளிழை யுள்ள நோக்கி
நிகழ்ந்த திற்றென நெருப்பு நுனையுறீஇச்

---

218. கொடி - ஓராபரணம்.
222. தொன்று - பழமை.
221 - 3. வாசவதத்தையை உதயணனுடைய இல்லறக்கிழத்தி யாகச் செய்து. 225. என - என்று அரசன் வினவ.
226. நும்மடித்தி : 35 : 111; 47 ; 29.
228. இன்பம் பயத்தலின் ஏதமின்று.
230. தலைத்தாள் - திருமுன்னே.
233. புகற்றலின் - விரும்பச் செய்தலின் ; சீவக. 870.
கோலம் (231) புகற்றலின் (233.) 235. மானம் - குற்றம்.
236. தேவியின் கருத்தை அரசன் நோக்கி.
237. இற்றென - இதுவென்று.

பி - ம். 1 இன்றுதின்பம்.

சுடுநா ராசஞ் செவிசெறித் தாங்கு
வடிவேற் றானை வத்தவன் றன்னொடு
பாவை பிரிவினைக் காவல னுணர்த்தலின்

(திருமாதேவி வருந்தல்)

இசைகொள் சீறியா ழின்னிசை கேட்ட
அசுண நன்மா வந்நிலைக் கண்ணே
பறையொலி கேட்டுத்தன் படிமறந் ததுபோல்
நீலத் தன்ன கோலத் தடங்கண்
முத்துற ழாலி தத்துவன தவழப்
பெறலரு மென்மகள் பிரிந்தன ளம்மெனக்
கூறிய கிளவி கூற்றுவ னிமிழ்த்த
பாசம் போலப் பையுள் செய்ய
அலமந் தழூஉ மஞ்சி லோதியை

(பிரச்சோதனன் தேற்றல்)

முகைமலர்ப் பைந்தார் குழைய முயங்கி
மடவை மன்ற மடவோய் மண்மிசை
உடைவயிற் பிரியா துறைநரு முளரோ
இற்றுங் கேண்மதி முற்றிழை மகளிர்

---

237 - 8. சிலப். உரு : 48.　　238. நாராசம் - இரும்புக்கம்பி.

242. அசுணநன்மா - இசையை அறிவதொரு விலங்கு.

243. படி மறத்தல் - மெய்மறத்தல்.

241 - 3. யாழொலியைக் கேட்டு மகிழ்தலும் பறையொலியைக் கேட்டுத் துன்புறுதலும் அசுணத்திற்கு இயல்பு; "மறையிற்றன் யாழ் கேட்ட மானையருளா, தறைகொன்று மற்றத னாருயி ரெஞ்சப், பறை யறைந்தாங்கு" (கலித். கசரு); "பறைபட வாழா வசுணமா" (நான் மணி. 4); "இன்ன ளிக்குரல் கேட்ட வசுணமா வன்னளாய்" (சீவக. 1402); "யாழ், நறையடுத்த வசுணநன் மாச்செவிப், பறைய டுத்தது போலும்" கம்ப. அவையடக்கம்.

244. கண்ணினின்றும்.　　245. பெருங். க-46 : 253.

246. நம்மைப் பிரிந்தனளென்று.　　[இமிழ்த்த - கட்டிய.

247. கூறிய கிளவி - அரசன் சொல்லிய சொல்லானது.

251. மடவை மன்ற - நிச்சயமாக அறிவில்லாய்; "மடவை மன்ற வாழிய முருகே" நற். ருச.

252. உடைவயின் - தன்னையுடைய கணவனிடத்து.

253. இற்றும் - இன்னும்; ரு. 1 : 61.

தத்துநீர்ப் பெருங்கடற் சங்குபொறை யுயிர்த்த
நித்திலத் தன்னர் நினைந்தனை காணென
ஆர்வக் காதலன் காரணக் கட்டுரை
இகப்ப விடாஅன் றெளிப்பத் தேறிக்
கயல்புரை கண்ணி யியல்புகிளந் தேத்திப்
பொன்னணி நகரமொடு தம்மனை புலம்ப
வான்மதி யிழந்த மீனினம் போலப்
பொலிவின் றாகிப் புல்லென் கோலமொடு
கலாவேற் காவலன் மடமகட் காணாது
விலாவித் தன்றால் விழுவணி நகரென்.

௪௭—உரிமை விலாவனை முற்றிற்று.

---

253 - 5. தாய்தந்தையர்க்கன்றிக் கொண்டோனுக்குப் பயனளித்தலின், மகளிர் சங்கீன்ற முத்தையொப்பார்; "சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை, நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென்செய்யும், தேருங்கா லும்மக ளுமக்குமாங் கனையளே" (கலி. ௯); "வலம்புரி யீன்ற முத்த மண்மிசை யவர்கட் கல்லால், வலம்புரி பயத்தை யெய்தா தனையரே மகளிர்" (சீவக. 563); "நெருங்கடல் வேனெடு மாற னெடுங்களத் தன்றுவென்றான், பெருங்கடல் ஞாலத்துட் பெண் பிறந் தார்தம் பெற் றார்க்குதவார், இருங்கடல் போற்றுய ரெய்தன்மி னின்றன வென்னுமுந்நீர்க், கருங்கடல் வெண்சங் கணிந்தறி யாதண் கதிர்முத்தமே" பாண்டிக்கோவை.

257. தேவி தேறுதலுற்று.

260. மீனினம் - நாண்மீன்களின் கூட்டம்.

260 - 61. "மதியங் கெடுத்த வயமீனெனத் தம்பி மாழாந்து", "வெண்மதி யிழந்த மீன்போல் விடலைக்குத் தம்பி மாழாந்து" சீவக. 23, 1695.

262. கலா வேல் - போரிற் சிறந்த வேல்; "புலாஅக் களஞ் செய்த கலாஅத் தானையன்" புறநா. ௬௯.

263. விலாவித்தன்று - அழுதது; "விழவுடை மூதூர் விலாவிக் கின்றதே" சீவக. 1092.

## சஅ—மருதநிலங் கடந்தது.

(பிரச்சோதனன் படைவீரர் செயல்)

விழவணி விழுநகர் விலாவணை யெய்த
முழவணி முன்றிலொடு முதுநகர் புல்லென
அழுகை யாகுலங் கழுமிய கங்குல்
மதியா மன்னனைப் பதிவயிற் றம்மென
வெல்போர் வேந்தன் விடுக்கப் பட்ட
பல்போர் மறவ ரொல்லென வுலம்பிப்

(குதிரைகள்)

புடைப்போர்ப் புளகத் துடப்புமறைப் பருமத்துத்
தீப்படு [1] கரணத்துக் கணைவிடு விசைய
செய்வினைத் தச்சன் கைவினைப் பொலிந்த
வேற்றவ ரொல்லென வேற்றினன் பாய்த்துள
கண்டிரள் கவினமொடு பிண்டிகைக் கவ்வித்
திரைத்தலைப் பிதிர்வி னுரைக்கும் வாயின

---

சஅ—மருதநிலங் கடந்தது.

[தடுத்தற்குவந்த பிரச்சோதனன் படைவீரரை உதயணனுடைய வீரர் வென்று வீழ்த்தியதும் பிடியின் வேகத்தைப் பொறமல் வருந்திய வாசவதத்தையைக் காஞ்சனமாலை தேருட்டியதும் பிடி மருதநிலங்கடந்ததும் பிறவும் இப்பகுதியால் அறியலாகும்.]

1. விழவு - நீர்விழவு. அதனை அணிந்த விழுநகர் - புதுநகர்; [பாடி.

2. முதுநகர் - உச்சயினி.

4. உதயணனை இங்கே கொண்டு வாருமென்று.

5. வேந்தன் - பிரச்சோதனனால். 6. உலம்பி - முழங்கி.

7. போர்ப்புளகம் - இரட்டைக் கண்ணுடி; போர் - போர்வையுமாம். உடப்புமறை - உடம்பை மறைக்கின்ற; பருமம் - சேணம்; "குதிரை யுடலணி" (சூலி. கக.) 8. கரணம் - செயல்.

10. வேற்றவர் ஒல்லென - பகைவர் அஞ்ச. ஏற்றின் - சிங்கத்தைப் போன்ற. பாய்த்துள - பாய்தலையுடையன.

11. பிண்டிகை - செம்பஞ்சியின் திரளை.

பி - ம். 1 கானத்துக்.

கற்றோர்க் கமைந்த கருவி மாட்சிய
பொற்றா ருடுத்த பொங்குமயிர்ப் புரவி

(தேர்கள்)

புரவி பூண்ட பொன்னுகக் கொடுஞ்சிப்
பரவைத் தட்டிற் பன்மணிப் பலகை
அடிதொடைக் கமைந்த இடுகுடைக் காப்பிற்
காழமை குழிசிக் கதிர்த்தவா ரத்துச்
சூழ்பொற் சூட்டிற் [1] சுடர்மணிப் புளகத்
தாழாக் கடுஞ்செல லாழித் திண்டேர்

(யானைகள்)

திண்டேர்க் கமைந்த தண்டாக் காப்பிற்
குன்றுகண் டன்ன தோன்றல் குன்றின்
அருவி யன்ன வுருவுகொ ளோடைய
ஓடைக் கமைந்த சூழிச் சுடர்நுதற்
கோடில் வெழுதிய கோலக் கும்பத்

---

13. கற்றோர்க்கு அமைந்த - தம்மை ஊரக் கற்றோருக்கு அடங்கிய; "கல்லாதா னூருங் கலிமாப் பரிப்பின்று" (இன்னா. 29); "ஊர்ந் தான் வகைய கலினமா" நான்மணி. 73.

14. தார் - கிண்கிணிமாலை.

15. "பொன்னுகம் புரவி பூட்டுவிட்டு" சீவக. 471.

16. பரவை - பரப்பு. தட்டு - தேரின் ஓருறுப்பு.

17. அடி தொடைக்கு அமைந்த - அடிவைத்து நிற்றற்கும் அம்புகளை வைத்து எய்தற்கும் அமைந்த. இடுகுடைக்காப்பின் - பகைவரெய்யும் அம்பு படாதபடி சட்டப்பலகையாலாகிய காவலையுடைய; "இடு குடைக் காப்பின கிளர்பொற் பீடிகை, அடிதொடைக் கமைந்தன" (சீவக. 2213.) 18. குழிசி - உருளையின் குறடு. ஆரம் - ஆரக்கால்.

19. சூட்டு - ஆரக்காலைச் சூழ்ந்திருக்கும் வட்டை. புளகம் - கண்ணாடி.

18 - 9. "சூட்டு வைக்கிய வாரமே யமைந்ததேர்க் குழிசி" சீவக. [790.

20. கடுஞ்செலல் - விரைந்து செல்லுதலையுடைய.

22. "குன்றுறழ் யானை" (பெரும்பாண். 352); "வரை மருளு முயர்தோன்றல், வினைநவின்ற பேர்யானை" (மதுரைக். 46 - 7.) தோன்றல - காட்சியையுடையன. 24. சூழி - முகபடாம்.

25. இலவெழுதிய - இலவம்பூவை யெழுதிய.

பி - ம். 1 சுடர்மணிக் கானத்துத்.

திடுபூந் தாம மிருங்கவு ளசைஇப்
படுவண் டோப்பும் பண்ணமை கோலத்து
விண்ணுரு மன்ன வெடிபடு சீற்றத்
தண்ணல் யானை யவையவை தோறும்

(படை வீரர் செயல்)

மேலாட் கமைந்த காலாட் காப்பிற்
கருவிப் பல்படை கடல்கிளர்ந் தெனவுறப்
பரவை யெழுச்சிப் பக்கமு முன்னும்
வெருவரத் தாக்கி வீழ நூறி
நற்றுணைத் தோழ ருற்றுழி யுதவ
அமிழ்தி னன்ன வஞ்சில் கிளவி
மதர்வை நோக்கின் மாதரைத் தழீஇ
ஓங்கிய தோற்றமொ டொருதா னாகி
நீங்கிய மன்னற்கு நிகழ்ந்தது கூறுவேன்
சேரா மன்னனுஞ் சேனையம் பெரும்பதிக்
கோரிரு காவத மூரா மாத்திரம்

(சூரியன் அத்தமித்தல்)

விரிகதிர் பரப்பி வியலகம் விளக்கும்
பரிதி ஞாயிறு பல்லவர் காணின்
அற்றந் தருமென வருள்பெற் றதுபோற்
கொற்ற வெங்கதிர் குளிர்கொளச் சுருக்கிக்
குண்டகன் கிடக்கைக் குடகடற் குளிப்ப

---

26. இடுபூந்தாமம் - மத்தகமாலை. அசைஇ - கட்டி.
30. மேலாட்கு - குதிரை முதலியவற்றின் மேலுள்ள வீரர்களுக்கு. காப்பின் - காவலையுடைய.
31. கருவி - ஆயுதங்கள், தொகுதி.
30 - 31. படைகள் கடல் கிளர்ந்தாற்போல உற்றுப் போர் செய்ய.
34. தோழர் - உதயணனுடைய தோழர்களாகிய வீரர்கள்.
35. குறுந். ௧௪ : 1 - 2. 39. உஞ்சேனை - உச்சயினி நகரம்.
42. பரிதி - வட்டம். 43. அற்றம் - சோர்வு.
44. வெங்கதிரைச் சுருக்கி. 45. குடகடல் - மேல்கடலில்.
41 - 5. இவன் செல்லுதலைப் பிறர் காண்பாராயின், அக்காட்சி இவனுக்குச் சோர்வைத் தருமென்று மனமிரங்கியவன்போலச் சூரியன் மறைந்தான்.

(மாலை வருணனை)

வண்டகத் தடக்கிய வாய வாகிக்
[1] கூலப் பொய்கையு ணீலமொடு மலர்ந்த
கோலக் கழுநீர் குழிவாய் நெய்தல்
எழுநீர்க் குவளையொ டின்னவை பிறவும்
தாமரை தலையாத் தன்னகர் வரைப்பகம்
ஏம மாகவிவ னெய்துவ னென்றுதம்
தூய்மை யுள்ளமொடு கோமகற் கூப்பும்
குறுந்தொடி மகளிர் குவிவிரல் கடுப்ப
நறுந்த ணாற்றம் பொதிந்த நன்மலர்த்
தடங்கயந் துறந்த தன்மைய வாகிக்
குடம்பை சேர்ந்து குரல்விளி பயிற்றிப்
புட்புலம் புறுத்த புன்கண் மாலை
கட்புல மருங்கிற் கலந்த ஞாயிற்று
வெப்ப நீக்கித் தட்பந் தான்செயக்

(பிடியின் நிலை)

கண்ணுறு பிறங்கற் கருவரை நுனித்தலை
வெண்ணிற வருவி வீழ்ச்சி யேய்ப்ப
மத்தக மருங்கின் மாலையொடு கிடந்த
நித்திலத் தாம நிலையின் வழாமை
வைத்த தலையிற் றுக வலிசிறந்து
வித்தகக் கோலத்து வீழ்ந்த கிழவற்குப்
பத்தினி யாகிய பைந்தொடிப் பணைத்தோட்
டத்தரி நெடுங்கட் டத்தை தம்மிறை

---

47. கூலம் - கரை. 52. கோமகன் - உதயணன்.

46 - 53. தன்னுடைய நகரஞ்சென்று இன்புறுதற்கு இவன் இவ்வழியே வருகின்றானென்று மனமுவந்த மங்கையருடைய கைகள் குவிந்தாற்போலத் தாமரை முதலிய நீர்ப்பூக்கள் குவிந்தன.

55. கயம் துறந்த - தடாகங்களை நீங்கிய.

57. புள் - பறவைகள். மாலை - மாலைக்காலம் ; எழுவாய்.

61-3. அருவி பிடியின்மாலைக்கும் நித்திலத்தாமத்துக்கும் உவமை.

65. வீழ்ந்த - விரும்பிய. கிழவற்கு - உதயணனுக்கு.

67. தத்தைதம்மிறை - பிரச்சோதனனுடைய.

பி - ம். 1 கோலப்.

ஆணை [1] யஞ்சிய வசைவுநன் கோம்பிக்
கோணை நீண்மதிற் கொடிக்கோ சம்பி
நகைத்துணை யாய மெதிர்கொள நாளைப்
புகுத்துவ லென்பது புரிந்தது போலப்
பறத்தரல் விசையினும் பண்ணினு மண்மிசை
உறப்புணர்ந் தூரு முதயணன் வலப்புறத்
தறியக் கூறிய செலவிற் றாகிக்
கோடுதல் செல்லாது கோமகன் குறிப்பறிந்
தோடுதல் புரிந்த வுறுபிடி மீமிசைக்
கூந்தலுங் கூந்தல் வேய்ந்த கோதையும்
ஏந்திளங் கொங்கையு மெடுக்க லாற்றாள்
அம்மென் மருங்கு லசைந்தசைந் தாடப்
பொம்மென வுயிர்க்கும் பூநுதற் பாவையைக்
கைம்முதற் றழீஇக் காஞ்சனை யுரைக்கும்

(காஞ்சனையின் கூற்று)

கட்டி லாள ருட்புகன் றுறையும்
நாகத் தன்ன நன்னகர் வரைப்பின்
ஏகத் திகிரி யிருநிலத் திறைவன்

---

68. ஆணை - ஆஞ்ஞையை. அசைவு - வருத்தம். [தானி.

69. கோசம்பி - கௌசாம்பி நகரம்; உதயணனுடைய இராச

70. நகைத்துணையாயம் - இயல் இசை நாடகங்களினாலும் இனிய மொழிகளினாலும் மகிழ்ச்சியை விளைவிக்கின்ற மகளிர் திரள்; "இன்னகை யாயமொ டிருந்தோன்" (சிறுபாண். 220), "இன்னகை மகளிர்" (பொருந. 85.) 71. புகுத்துவல் - புகுத்துவேன்.

72. பறத்தரல் விசை - பறந்து செல்லுஞ் செலவு; "பறவை யிரும்பிடி" (48 : 133); "பறந்தியறருக்கின" (சீவக. 2215.) பண்ணினும் - இசையாலும்; "பண்ணியல் யானை மேலான் பதுமுகன்" சீவக. 747. 75. கோடுதல் - கோணுதல்.

77. கோதை - மாலை. 79. அசைந்தசைந்தாட - மிகமெலிய.

81. உரைக்கும் - சொல்லுவாள்.

82. கட்டிலாளர் - சிங்காதனத்திற்கு உரிய அரசர் பலர். உட் புகன்று - மனம்விரும்பி.

83. நாகம் - தேவருலகம், நாகருலகம். நகர் - உச்சயினி.

84. உ. 8 : 30. இறைவன் - பிரச்சோதனன்.

பி - ம். 1 அஞ்சியசைவு.

நீப்பருங் காத னிற்பயந் தெடுத்த
கோப்பெருந் தேவியொடு கூடிமுன் னின்று
பொற்குடம் பொருந்திய பொழியமை மணித்தூண்
நற்பெரும் பந்தருண் முத்துமணற் பரப்பி
நல்லோர் கூறிய நாளமை யமயத்துப்
பல்லோர் காணப் படுப்பிய லமைந்த
செந்தீ யந்தழ லந்தணன் காட்டச்
சேதா நறுநெய் யாசின் றுருத்துச்
செழுமலர்த் தடக்கையிற் சிறப்பொடு மேற்படக்
கொழுமலர்க் காந்தட் குவிமுகை யன்னநின்
மெல்விரன் மெலிவுகொண் டுள்ளகத் தொடுங்கப்
பிடித்துவலம் வந்து வடுத்தீர் நோன்பொடு
வழுவில் வாலொளி வடமீன் காட்டி
உழுவ லன்பி னுதயண குமரன்
அருமறை யாளர்க் கருநிதி யார்த்திப்
பெருமறை விளங்கப் பெற்றனன் கொள்ளக்
கொடுத்தில னென்பது கூறி னல்லதை
அடுத்தனன் கண்டா யணிமுடி யண்ணல்
வையத் தேனோர் வல்ல ரல்லாத்

---

87. குடம் - தூணுறுப்புக்களுள் ஒன்று.

88. முத்துமணல் - முத்தாகிய மணலே.

89. அமயத்து - நன்முகூர்த்தத்தில்.

91. தழல் - சுவாலையில். அந்தணன் - புரோகிதன்; "மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட" சிலப். க : 52.

92. நெய்யைச் சொரிந்து.

97. வடமீன் - அருந்ததி; "சோதிவட மீனைக், கானமயி லன்ன வடன் முன்னேநனி காட்ட" சூளா. கல்யாண. 280. [புடைய.

98. உழுவலன்பின் - எழுபிறப்பும் தொடர்ந்துவந்த அன்பினை

99. ஆர்த்தி - நிரம்பக்கொடுத்து.

101. உன் தந்தை உன்னை உதயணனுக்கு மேற்கூறியவண்ணம் கொடுக்கவில்லை யென்கிற குறையன்றி வேறு குறையில்லையென்பது கருத்து.

102. அணிமுடியண்ணல் (உதயணன்) உன்னை அடுத்தனன்.

103. ஏனோர் வல்லரல்லா - மற்றையோர் நன்கு கல்லாத.

தெய்வப் பேரியாழ் கைவயிற் றரீஇ
எழுவியல் கரணம் வழுவிலன் காட்டுநின்
ஆசா னிவனென வருளிய வச்சொற்
றாசார்ந்து துளும்புங் காசுவிரி கலாபத்துப்
பைவிரி யல்குற் பாவாய் மற்றிது
பொய்யுரை யன்றிப் புணர்ந்தன் றதனால்
பொருளென விகழாது பொலங்கல மடவோய்
மருளெனக் கருதிய மடியுறை கேண்மதி

(யானையின் வேகத்தால் தோன்றும் விம்மிதத்தைத் தெரிவித்தல்)

எண்டிசை மருங்கினு மெதிரெதி ரோடி
மண்டில மதியமொடு கதிர்மீன் மயங்கி
நிலைக்கொண் டியலா வாகித் தம்முள்
தலைக்கொண் டியலுந் தன்மை போலக்
கண்ணகன் மருங்கின் விண்ணகஞ் சுழலும்
மண்ணக மருங்கின் விண்ணுற நீடிய
மலையு மரனு நிலையுற னீங்கிக்
கடுகிய விசையொடு காற்றென வுராஅய்
முடுகிய விரும்பிடி முகத்தொடு தாக்கிய
எதிரெழுந்து வருவன போலு மதிர்வொடு
மண்டிணி யிருநில மன்னுயிர் நடுங்கத்

104. தெய்வப் பேரியாழ் - கோடவதி ; இஃது உதயணனுடைய வீணையின் பெயர். தரீஇ - உனக்குத் தந்து.

106. ஆசான் : 34 : 235 ; 35 : 309.

108. இது - ஆசானென்று பெரியோர் கூறியது.

109. மெய்யுரையாயிற்று.

110. பொருளென - பொருளென்று கொண்டு.

111. மருளென - மயக்கமென்று. மடியுறை - மடியுறுத்தல்; பிறழ்ச்சியை யுறுத்தும் விம்மிதத்தை.

115. தலைக்கொண்டு - அதிகரித்து. இயலும் - செல்லும்.

113 - 6. விண்ணகத்துப் பொருள்களின் சுழற்சித் தோற்றம் [கூறினன்.

119. உராஅய் - பெயர்ந்து.

120. முடுகிய - விரைந்த. தாக்கிய - தாக்குவதற்கு. [புறநா. உ.

122. மண்திணி - அணுக்கள் செறிந்த ; "மண்டிணிந்த நிலன்"

துளக்க மாறு தாசி னிலைதிரிந்து
கலக்கங் கொண்டு கைவரை நில்லா
[1] தோடுவன போன்ற வாதலின் மற்றுநின்
நீடுமலர்த் தடங்கண் பாடுபிறழ்ந் துறழ
நோக்கல் செல்லா திருவென நுதன்மிசை

(காஞ்சனை செயல்)

வேர்த்துளி துடைத்து வித்தக வீரன்
அருவரை யகலத் தஞ்சுவன ணீட்டித்
திருவளர் சாயலைத் திண்ணிதிற் றழீஇ
உவணப் புள்ளினஞ் சிவணிச் செல்லும்
சிறக ரொலியிற் றிம்மென வொலிக்கும்
பறவை யிரும்பிடிப் பாவடி யோசையின்
அவணை போத லஞ்சி வேய்த்தோள்
வாளரித் தடங்கண் வாலிழை மாதர்
கேள்விச் செவியிற் கிழித்துகிற் பஞ்சி
பன்னிச் செறித்துப் பற்றினை யிருவெனப்
பிடியிடை யொடுங்குங் கொடியிடை மருங்கின்

---

123. துளக்கமாறாது - நடுங்குதல் தவிராமல். ஆசின்-விரைவாக.
117 - 25. மண்ணகத்துப் பொருள்களின் சுழற்சித்தோற்றம் [கூறினான்.
126. பாடு - பக்கத்தில்.
127. இருவென - இருப்பாயென்று.
128 - 9. உதயணனுடைய மார்பைச் சார்ந்திருக்கும்படி நீட்டி.
130. தழீஇ - தழுவி.
131. உவணப்புள்ளினம் - கருடப் பறவைகளின் கூட்டம். சிவணி - கலந்து, ஒத்து. 132. சிறகுகளின் ஒலியைப் போல.
133. பறவை - பறந்துசெல்லல்; 72. பாவடி - பரவிய கால்கள்; "பாவடியாற் பணையெருத்தின்" புறநா. உஉ.
134. அவணை - அவ்விடத்தில்; ஐ, சாரியை; இவணை, உவணை என்பனபோலக் கொள்க; "இவணையான" தொல். மொழி. சூ. 47.
136. செவியில் - வாசவதத்தையின் செவிகளில். பஞ்சி-பஞ்சை.
137. பன்னி - ஆராய்ந்து. பற்றினை - உதயணனைப் பற்றிக் [கொண்டு.
138. கொடியிடை மருங்கின் - வாசவதத்தைக்கு.
பி - ம். [1] ஓடுவதுபோன்றதாதலின்.

நோய்கொள லின்றி நொவ்விதிற் கடாவலென்
றாய்புக ழண்ண லசைதல் செல்லான்

(மருதநில வருணனை)

அங்க ணகல்வய லார்ப்பிசை வெரீஇய
பைங்க ணொருமை படுகன் றோம்பிச்
செருத்தல் செற்றிய தீம்பா லயல
உருவ வன்னமொடு குருகு பார்ப்பெழுப்
பாசடைப் பிலிற்றும் பழனப் படப்பை
அறையுறு கரும்பி னணிமடற் றொடுத்த
நிறையுறு தீந்தே னெய்த்தொடை முதிர்வை
உழைக்கவின் றெழுந்த புழற்காற் றாமரைச்
செம்மல ரங்கட் டீயெடுப் பவைபோல்
உண்ணெகிழ்ந் துறைக்குங் கண்ணகன் புறவிற்

---

139. இன்றி - இல்லையாக. நொவ்விதிற் கடாவல் - விரைவாகச் செலுத்துதலைத் தவிர்க; "நொவ்விதின் வருகென" (47 : 9.) என்று - என்ன.

142. எருமை : எழுவாய். படுகன்று - உண்டாகிய கன்றை.

143. செருத்தல் செற்றிய - மடியிற் செறிந்த. தீம்பால் - இனிய பாலை.

144. குருகு - நாரை. பார்ப்பு - குஞ்சு.

145. பாசடை - பசிய இலையில். பிலிற்றும் - சுரந்து ஒழுக்குதற்கு இடமாகிய. படப்பை - தோட்டம்.

143 - 5. பாலைப் பிலிற்றும்.

146. அறையுறு - பாத்தியின்கணுற்ற; "அறையுற்று" (மலைபடு. 118.) மடலில் தொடுத்த.

147. தீந்தேன் - இனிய தேன்; நெய்த்தொடை முதிர்வை - தேனையுடைய முதிர்ந்த தொடையினின்றும்; நெய் - தேன். தேனடையினின்றும்.

146 - 7. "தீங்கரும் பெருத்திற் றூங்கி யீயின்றி யிருந்த தீந்தேன்" சீவக. 712.

148. கவின்று - அழகுபெற்று. புழற்கால் - உட்டுளையையுடைய தண்டு.

149. செம்மலரங்கண் - செம்மையாகிய பூவினிடத்தே. தீ எடுப்பவைபோல் - தீயை வளர்த்தற்குச் சொரியும் நெய்யைப்போல.

150. உறைக்கும் - துளித்தற்கு இடமாகிய. புறவில்-சோலையில்.

147 - 50. தேன் முதிர்வையினின்றும் 'தாமரை மலரில் உறைக்கும் புற'வென்க; "கரும்பின்மேற் றொடுத்ததேன் கவிகொடாமரைச், சுரும்பின்வாய்த் துளித்தலின்" சீவக. 1936.

பாளைக் கமுகும் பணையும் பழுக்கிய
வாழைக் கானமும் வார்குலைத் தெங்கும்
பலவும் பயினு மிலைவளர் மாவும்
புன்னையுஞ் செருந்தியும் பொன்னிணர் ஞாழலும்
இன்னவை பிறவு மிடையற வின்றி
இயற்றப் பட்டவை யெரிகதிர் விலக்கிப்
பகலிருள் பயக்கும் படிமத் தாகி
அகல மமைந்த வயிர்மண லடுக்கத்துக்
காடோய் கணைக்கதிர்ச் சாறோய் சாலி
வரம்பணி கொண்ட நிரம்பணி நெடுவிடை
உழவ ரொலியுங் களமர் கம்பலும்
வளவய லிடையிடைக் களைகளை கடைசியர்
பதலை யரியல் பாசிலைப் பருகிய
மதலைக் கிளியின் மழலைப் பாடலும்
தண்ணுமை யொலியுந் தடாரிக் கம்பலும்
மண்ணமை முழவின் வயவ ரார்ப்பும்
மடைவாய் திருத்து மள்ளர் சும்மையும்

151. பணை - மூங்கில். பழுக்கிய - பழுக்கச் செய்த.

153. பயின் - ஒருவகை மரம்; 51 : 53; 'பயினி' எனவும் ஒருமரப் பெயர் காணப்படுகின்றது.

154. ஞாழல் - புலிநகக் கொன்றை.

156. இயற்றப்பட்டவை - உண்டாக்கப்பெற்ற மரங்களானவை.

157. படிமம் - வடிவம்.

158. அயிர்மணலடுக்கம் - நுண்மணற் குன்று.

159. கால் தோய் கணைக்கதிர் - தாளிற் படிந்த திரண்ட கதிர் களையுடைய; "கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே" (சீவக. 53); கால் தோய் - நாலுகாற்றும் தோய்ந்த வெனினும் பொருந்தும்; "பால் வார்பு கெழீஇப் பல்கவர் வளிபோழ்பு, வாலிதின் விளைந்தன வைவனம் வெண்ணெல்" (மலைபடு. 114 - 5.) சாலி - நெல்.

160. நெடுவிடை - நெடிய இடம்.

161. களமர் கம்பல்-களத்தில் வேலை செய்வோருடைய முழக்கம்.

162. களை களை - களைகளைக் களைகின்ற.

163. பதலை அரியல் - பத்தரில் உள்ள கள்ளை ; பதலை-ஒருவகைப் பாத்திரம்.

162 - 4. கடைசியர் பாடலென்க. 165. தடாரி - கிணைப்பறை.

167. திருத்தும் - திருந்தச்செய்கின்ற. சும்மை - ஒலி.

இடையற வின்றி யிரையாறு தழீஇ
வயற்புலச் சீறூ ரயற்புலத் தணுகி
மருதந் தழீஇய மல்லலம் பெருவழி

**(உதயணன் அருட்ட நகரத்தை யணுகுதல்)**

ஒருநூற் றிருபத் தோரைந் தெல்லையுள்
வலப்பா லெல்லை வயல்பரந்து கிடந்த
அளற்றுநிலைச் செறுவி னகனிலங் கெழீஇ
இடப்பான் மருங்கிற் பரற்றலை முரம்பிற்
புன்புலந் தழீஇய புகற்சித் தாகி
வன்றொழில் வயவர் வலிகெட வகுத்த
[1] படைப்புறக் கிடங்குந் தொடைப்பெரு வாயிலும்
வாயிற் கமைந்த ஞாயிற் புரிசையும்
இட்டமைத் தியற்றிய கட்டளைக் காப்பின்
மட்டுமகிழ் நெஞ்சின் மள்ளர் குழீஇய
[2] அருட்ட நகரத் தல்கூ ணமயத்

---

168. இரை ஆறு தழீஇ - முழங்குகின்ற ஆறு தழுவப்பட்டு.

171. நூற்றிருபத்தைந்து எல்லை.

173. அளற்றுநிலைச்செறு - சேற்றையுடைய வயல்; "இருஞ்சேற் றகல்வயல்" (முருகு. 72.) 172 - 3. வலப்பாலெல்லை கெழீஇ.

174. பரற்றலை முரம்பின் - பருக்கைக் கற்களைத் தன்னிடத்தே கொண்ட மேட்டு நிலத்தையுடைய.

175. புன்புலம் - புன்செய்கள். புகற்சித்தாகி - விருப்பத்தைச் செய்வதாகி.

176. வன்றொழில் வயவர் - வன்மைத் தொழிலையுடைய பகைவீரர்.

177. படைப்புறக்கிடங்கும் - மதிலின் புறத்ததாகிய அகழியும்; படை : ஆகுபெயர்; "பல்படைப் புரிசை" (புறநா. ௨௪௪.) தொடைப் பெருவாயில் - கோபுரம்; இதனை வாயில்மாடமெனவும் வழங்குவர்.

178. ஞாயில் - எய்துமறையும் சூட்டு; இது மதிலுறுப்பினுள் ஒன்று. மதில் மருதநிலத்ததென்பது, 'மதில் பெரும்பான்மையும் மருதத்திடத்ததாகலானும்' (தொல். புறத். சூ. 9, ந.) என்பதனாலும் அதன்பின் காட்டப்பட்டுள்ள மேற்கோள்களாலும் விளங்கும்.

179. காப்பின் - காவலையுடைய.

180. மட்டு மகிழ் - கள்ளையுண்டு மகிழ்கின்ற.

181. "அருமதிற் படப்பை யருட்ட நகரகம்" (49 : 2) என்பர் பின். அல்கூண் மயத்து - இரவில் உணவை யுண்ணுகின்ற சமயத்தில்; அல்கு

பி - ம். 1 படப்புங். 2 அட்ட நகரத்து.

தஞ்சொன் மகளி ரடிமிசை யரற்றும்
பைம்பொற் பகுவாய்க் கிண்கிணி யொலியும்
மையணி யிரும்பிடி மணியும் பாடவித்
தெய்தினன் மாதோ விருளிடை மறைந்தென்.

௪௮—மருதநிலங்கடந்தது முற்றிற்று.

---

ஊண் - இட்டு வைத்துண்ணுமுணவுமாம்; "சிலைகெழு குறவர்க் கல்கு மிசை வாகும்" புறநா. ௨௩௯.

182. மகளிர் - வாசவதத்தையும் காஞ்சனமாலையும்.

184. மையணியிரும்பிடி - அஞ்சனத்தை யணிந்த பெருமையை யுடைய பிடியின்; பெருங். க. 55: 134; 56: 133; உ. 12: 37; ந. 22: 199 - 200; "அஞ்சன மெழுதின ...குஞ்சரம்", "மையணிமத யானை" (சீவக. 2230, 2434.) பாடு அவித்து - ஒலியை அடக்கி.

185. மறைந்து எய்தினன்.

---

## ௪௯—முல்லைநிலங் கடந்தது.

(வயந்தகன் கூறல்.)

இருளிடை மருங்கி னிருநிலந் தழீஇய
அருமதிற் படப்பை யருட்ட நகரகம்
[1] உருள்பட லொற்றி யூடெழுப் போக்கிக்
கருங்கட் பம்பை நெருங்கக் கொட்டி
அழற்படு சீற்றத் தஞ்சுவளி செலவிற்
கழற்கா லிளையர் கலங்காக் காப்பின்

---

௪௯.—முல்லை நிலங்கடந்தது.

[உதயணன் முல்லை நிலத்தைக் கடந்தது இதனுல் அறியலாதும்.]

இதில், முல்லைத்திணைக்குரிய முதல் கரு உரி என்னும் மூவகைப் பொருள்களும் அங்கங்கே செவ்வனே கூறப்பெற்றுள்ளன.

2. படப்பை - பக்கம்.

3. படல்: "படலே றியமதின் மூன் றுடைப் பஞ்சவன்" (பாண் டிக்கோவை.) எழு - கதவை உள்வாயிற்படியில் தடுக்குமரம்.

4. பம்பை - ஒருவகைப்பறை. 6. காப்பின் - காத்தலோடு.

பி - ம். 1 உருள்பிடல்.

இயற்றப் பட்ட வியற்கை யிற்றென
வயத்தகு நோன்றாள் வயந்தக குமரன்
ஆழ்கடற் பௌவத் தருங்கல மியக்கும்
[1] நீயான் போல நெஞ்சுணர் மதிப்பினன்
தெய்வப் பேர்யாழ் கைவயி னீக்கி
வீக்குறு புரோசை வாய்ப்பொற் பந்தத்து
யாப்புற வமைத்துக் காப்புறு தொழிலின்
நீர்நிறைக் கொளீஇய தாமரைக் கம்மத்துக்
கூரிலைக் கொலைவாள் வார்மயிர் வட்டத்துச்
சேடக வரணமொ டுடுபட விரைஇ
இறைமகன் கேட்ப விற்றென வுரைக்கும்
துறைவளங் கவினிய நிறைவளப் படுவிற்
செல்வ மருதத் தெல்லையு ளிருந்த
தொல்லருஞ் சிறப்பினிம் மல்லன் மாநகர்
அகப்பட் டியங்குந ரச்ச நீக்கிப்
புறப்பட் டியங்குநர்ப் புன்கண் செய்யும்
காப்புவினை யுடைத்தே யாப்புற விதனை
இடத்திட் டேகுது மெனினே யெங்கும்
முடத்தாட் டாழை மொய்த்தெழு முழுச்சிறைத்
தோட்டமும் படுவுங் கோட்டகக் கோடும்
பிரம்பெழு [2] பெரும்பா ரடைந்துமிசைச் செற்றிச்
செதும்புபரந் தெங்குஞ் சேற்றிழுக் குடைத்தாய்

---

10. நீயான் - மாலுமி; இப்பெயர் மீயானெனவும் வழங்குகின்றது; மணி. ச : 29. 12. பந்தம் - கட்டு.

8 - 13. வயந்தகன், தன்கையிலிருந்த யாழைப் பிடியின் புரோசைக்கயிற்றிற் கட்டிவிட்டுக் காத்தற்றொழிலைத் தான் மேற்கொண்டு.

14. தாமரையின் இதழ்போன்ற வேலைப்பாட்டையுடைய.

15 - 6. வாளையும் மயிர்க்கேடகத்தையும் கைக்கொண்டு.

17. உரைக்கும் - சொல்வான். 20. இந்த அருட்டநகர்; 2.

23. காத்தற் றொழிலையுடையது. இதனை - இந்நகரை.

25. தாழையை வேலியாகவுடைய; சிறை - வேலி.

26. படு - மடு. கோட்டகம் - பயிருடைத்தான நீர்நிலை.

28. செதும்பு - ஊறல்; 40 : 323; 49 : 112.

பி - ம். 1 மீயான். 2 பெரும்பாழ்.

வாய்க்கா னிறைந்த போக்கரும் பணையொடு
வரம்பிடை விலங்கி வழங்குதற் கரிதாய்
நிரம்பாச் செலவி னீத்தருஞ் சிறுநெறி
நலத்தகு புகழோய் நடத்தற் காகாது
வலத்திட் டேர்ந்து வழிமுதற் கோடுமென்

(உதயணன் செயல்)

றுரைப்பக் கேட்டே யுதயண குமரன்
குறிவழிக் காட்டிய கொலைத்தொழி னகரம்
அறித லஞ்சி யடியிசை கேட்கும்
எல்லை யகன்று வல்லைமருங் கோட்டி
முதனெறிக் கொண்டு முந்நாற் காவதம்
கதழ்வொடு கடக்குங் காலை யவ்வழி

(வயந்தகன் கூறல்)

ஒருபாற் படாஅதோ ருள்ளம் போல
இருபாற் பட்ட வியற்கைத் தாகிய
நெறிவயி னேதங் குறிவயிற் காட்டி
[1] வடுவி னண்பின் வயந்தக னுரைக்கும்
இடுகன் முதலன விடைவயிற் கிடந்த
தின்னாப் பேர்தே ரியற்கைத் தெண்மதி
ஒன்னா மன்னற் குற்றது செய்யும்

---

31. நீத்தரு - கடத்தற்கரிய.

இடத்திட்டு ஏகுது மெனின் (24) நடத்தற்காகாது (32.)

33. இந்நகரத்தினை வலத்திட்டுச் செல்வோம்.

36. அடியிசை - பிடியின் அடியோசை.

40. வேசையர் உள்ளம் போல; "கலையுணர் மகளி ருள்ளம் போல், நிலையின் றழிதரு......நீத்தம்", "அரம்போ ழவ்வளை மகளிர் மனத்தின், நிரம்பா நெறியின வாகி" (40 : 184-5 ; 50 : 10 - 11); "இருமனப் பெண்டிர்" குறள், 920.

44. இடுகல் - கொண்டுவந்திட்ட கல்.

45. இன்னாப்பேர் தேர் - துன்பத்தைச் செய்பவர், வருவோரை ஆராய்கின்ற. மதி: முன்னிலையசை.

46. ஒன்னா மன்னற்கு - பிரச்சோதனனுக்கு.

பி - ம். 1 வடிவினட்பின்.

யாப்பி லாளர் காப்பிற் றாகி
ஏற்றமு மிழிவு மிடையிடைப் பல்கி
ஊன நாடு முளவழிச் சில்கி
நீரு நிழலு நீங்கிற் றாகி
வெவ்வினை யாள ரல்லது விழும்பிய
செவ்வினை யாளர் சேரார் நம்பதிக்
கணித்து மன்றது மணிப்பூண் மார்ப
வலத்திற் கிடந்த வழிவகை தானே
வளைந்த செலவிற் றாகித் தலைத்தலைக்
கடுஞ்சின வென்றிக் காவ லாடவர்
[1] கொடுஞ்சிநற் றேருங் குதிரையும் யானையும்
காலாட் குழாத்தொடு நால்வகைப் படையும்
ஒருநிரல் செல்லு முள்ளகல் வுடைத்தாய்த்
திருநிலை பெற்றுத் தீயோ ரின்னா
நருமதை காறு நாட்டக மப்பால்
வஞ்சர் வாழு மஞ்சவரு நீநிலத்
தகவிடந் தானும் பகவிடத் தியங்குநர்க்
கின்ப மாகிய வேம வெண்குடை
மன்பெருஞ் சிறப்பின் மண்ணகக் கிழமை
ஒருகோ லோச்சிய திருவார் மார்பநின்
முன்னோர் காலைப் பன்னூல் பயிற்றிய
நல்லிசை நாட்டத் துல்லியன் கண்ட
குளமும் பொய்கையுங் கூவலும் வாவியும்

47. யாப்பிலாளர் - மனப்பொருத்தம் இல்லாதவருடைய.
48. பல்கி - அதிகரித்து. 49. சில்கி - குறைந்து ; 51 : 77.
53. அணித்தும் அன்று - சமீபித்ததும் அன்று.
56. காவலாடவர் - அரசர்.
57. கொடுஞ்சி - கொடிஞ்சி ; தேரின் முன்னர்த் தாமரை முகை வடிவமாகச் செய்தமைக்கப்படுவதோர் உறுப்பு.
59. ஒருநிரல் - ஒருவரிசை. உள் அகல்வு - உள் விரிவை.
61. நருமதையாறுவரையில் நாட்டகமாகும்.
64. இன்பமுண்டாகும்படி. 66-7. ஓச்சிய முன்னோர்காலத்தில்.
68. துல்லியனென்பவன் செய்த.

பி - ம். 1 கொடுஞ்சினத்தேர்.

அளவிறந் தினியவை யசைவிடத் துடைத்தாய்ப்
பயப்பறு பாலை நிலனு மொருபால்
இகக்க லாகா விரண்டினு ளுவப்பதை
ஓட்டுக வல்விரைந் தென்றலி னுதயணன்

**(உதயணன் செயல்)**

காட்டுப் பெருவழி கடத்தன் மேவான்
நாட்டுப் பெருவழி நணுகக் காட்டிப்
பொருள்வயிற் பிரிவோர் வரவெதி ரேற்கும்
கற்புடை மாதரிற் கதுமென வுரறி
முற்றுநீர் வையக முழுது முவப்பக்
கருவி மாமழை பருவமொ டெதிரப்
பரவைப் பௌவம் பருகுபு நிமிர்ந்து
கொண்மூ விதானந் தண்ணிதிற் கோலித்
திருவிற் [1] றும முருவுபட நாற்றி
விடுசுடர் மின்னொளி விளக்க மாட்டி
ஆலி வெண்மண லணிபெறத் தூஉய்க்
கோல வனப்பிற் கோடணை போக்கி
அதிர்குரன் முரசி னதிர்த வானது

---

70. அசைவிடத்து - மெலியுமிடங்களில்.
71. பயப்பு - பயன் ; "பயப்பே பயனும்" தொல். உரி. சூ. 9.
73. என்றலின் - என்று வயந்தகன் கூறினமையால்.
76. பிரிந்தோருடைய வரவை.
77. மாதரின் - மாதரைப் போல. உரறி - முழங்கி.
79. கருவி - தொகுதி. பருவம் - கார்ப்பருவம்.
80. பரவைப் பௌவம் - பரத்தலையுடைய கடல்.
81. கொண்மூ விதானம் - மேகமாகிய மேற்கட்டி.
82. திருவில் தாமம் - இந்திரவில்லாகிய மாலையை.
83. மின்னொளியாகிய விளக்கை.
84. ஆலங்கட்டியாகிய வெண்மணலைத் தூவி.
85. கோடணை - முழக்கம்.

81 - 5. "மேகத்தொரு பந்த ரெடுத்துவெம் வெண்முத்த மொழுக்கி மினற்கொடியால், மாகத்து நிரைத்து மழைச்சிலையால் வழி தோரண மிட்டனன் வாசவனே" (தக்க. 182); வி. பா. அருச்சுனன் தீர்த்த. 51. 86. அதிர்தல் - இடித்தல்.

பி - ம். 1 றாமம்.

தூநிறத் தண்டுளி தானின்று சொரிந்து
வேனி றுங்கி மேனி வாடிய
மண்ணக மடந்தையை மண்ணுநீ ராட்டி
முல்லைக் கிழத்தி முன்னரு ளெதிரப்
பல்லோர் விரும்பப் பரந்துகண் ணகன்று
பொருள்வயிற் பிரிந்து பொலங்கல வெறுக்கையொ
டருள்வயின் வந்த வின்னுயிர்க் காதலன்
மார்பக மணைந்த நேரிழை மடந்தையர்
மருங்குல் போலப் பெருங்கவி [1]னெய்திய

(முல்லைநில வருணனை)

சிறுகொடி யூழூழ் பரப்பி மற்றவர்
முறுவ லரும்பிய முல்லை யயல
குரவுந் தளவுங் குருந்துங் கோடலும்
[2] அரவுகொண் டரும்ப வறுகால் வண்டினம்
அவிழ்பதம் பார்த்து மகிழ்வன [3] முரலக்
கார்வளம் பழுனிக் கவினிய கானத்
தேர்வளம் படுத்த வெல்லைய வாகி
உறங்குபிடித் தடக்கை யொருங்குநிரைத் தவைபோல்
இறங்குகுர லிறடி யிறுங்குகடை நீடிக்

---

89. மண்ணுநீராட்டி - மஞ்சன மாட்டி.

90. முல்லை நிலமாகிய தலைவியின் முன்பு.

96. ஊழூழ் - முறைமுறையே. அவர் - அம்மடந்தையருடைய.

97. முறுவல் - பல். முல்லை - முல்லைக் கொடியின்.

98. குரவு - குராமரம். தளவு - ஒருவகை முல்லைக்கொடி. குருந்து - குருந்தமரம். கோடல் - வெண்காந்தள்.

99. அரவு - பாம்பு.

98 - 9. குரவு, தளவு, குருந்து இவை அரவின் எயிறு போன்றும், கோடல் அரவின் படம் போன்றும் அரும்பவென ஏற்பக்கொள்க; "வெஞ்சின வரவின் பையணந் தன்ன, தண்கமழ் கோடல்", "அரவெயிற் றன்ன வரும்புமுதிர் குரவு" (அகநா. ௧௫௪, ௨௩௭); "பையுடை நாகவாயி லெயிறுரு மிக்க குரவம் பயின்று மலர" தே.

100. அவிழ்பதம் - மலருங்காலம்.

104. குரல் - கதிர். இறடி - தினை. இறுங்கு - சோளம்.

103 - 4. "பிடிக்கை யன்ன பெருங்குர லேனல்", குறுந். ௧௯௦.

பி - ம். 1 எய்திச். 2 மருக்கொண்டு. 3 மிறலக்.

பட்டிமை யொழுக்கிற் பலர்தோய் சாயல்
அரம்போ ழவ்வளை மகளிர் மனத்தின்
நிரம்பா நெறியின வாகி யரும்பொருள்
கல்லா மாந்த ருள்ளம் போல
நொய்ந்நுரை சுமந்து மெய்ந்நயந் தெரிந்த
மேலோர் நண்பிற் றூழ விழிதரும்
அருவி யறாஅ வாகவி னயல
[1] பருவி வித்திய பைந்தாட் புனந்தோ
றீரமில் குறவ ரிதண்மிசைப் பொத்திய
ஆரத் துணியொடு காரகில் கழுமிய
கொள்ளிக் கூரெரி வெள்ளி விளக்கிற்
கவரிமா னேறு கண்படை கொள்ளும்
தகரங் கவினிய தண்வரைச் சாரல்
நறையு நாகமு முறையிரு வேரியும்

---

9. பட்டிமை யொழுக்கின் - வஞ்சனையாகிய ஒழுக்கத்தையுடைய.

10. அரம் போழ் அவ்வளை - வாளரத்தால் அறுக்கப்பட்ட அழகியவளை; "அரம்போ ழவ்வளை செறிந்த முன்கை" (அகநா. ௩௪௪.) மகளிர் மனத்தின் - பரத்தையருடைய மனம் நிரம்பாததுபோல; 40: 184; 49: 40.

11. நிரம்பா நெறியினவாகி - முடிவடையாத வழிகளையுடையனவாய்; "செல்லச்செல்ல வஃகு நெறிசேர் சிலம்பு" சீவக. 1416.

16. பருவி வித்திய - பருத்தி விதையை விதைத்த; "பருவி விச்சி மலைச்சாரற் பட்டை கொண்டு பகடாடிக், குருவி யோப்பி"(தே. சுந்தர. திருவையாறு, 3); பருவி, பரீஇ யென்றும் வழங்கும்; "பரீஇ வித்திய வேனல்" (குறுந். எஉ.) 17. ஈரம் - அன்பு.

18. ஆரத் துணி - சந்தனமரத் துண்டம்.

19. வெள்ளி - வெண்மைநிறம்.

19 - 20. புலி முதலியவற்றிற்கு அஞ்சி விளக்கொளியுள்ள இடத்தில் தூங்குதல் மானுக்கியல்பு; "சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை ...முத்தீ விளக்கிற் றுஞ்சும்", "கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து, மடமான் பெருநிரை வைகுதுயில்" புறநா. உ; உ௪௭.

21. தகரம் - ஒருவகை மரம்; 51: 27.

22. நறை - நறைக்கொடி. நாகம் - ஒருவகை மரம்; "நறுவீ யுறைக்கு நாக நெடுவழி" சிறுபாண். 88.

பி - ம். 1 பரீஇ வித்திய.

வருக்கையு மாவும் வழையும் வாழையும்
அருப்பிடை நிவந்த வாசினி மரமும்
பெருஞ்செண் பகமும் பிண்டியும் பிரம்பும்
[1] கருங்கோற் குறிஞ்சியுங் கடிநாள் வேங்கையும்
சுள்ளியுஞ் சூரலும் வள்ளியு மாலும்
வால்வெள் வசம்பும் வள்ளிதழ்க் காந்தளும்
பால்வெண் கோட்டமும் [2] பணிச்சையுந் திலகமும்
வேயும் வெதிரமும் வெட்சியுங் குளவியும்
ஆய்பூந் தில்லையு மணிமா ரோடமும்
ஆரமுஞ் சந்து மகிலுந் தமாலமும்
ஏரில வங்கமு மேலமு மிருப்பையும்
......................பாய்தலிற் கிழிந்து
பொதிக்க ணிறாஅற் பூம்புறம் புதைஇ
மதிக்கண் மறைந்த மாசுண மான

---

23. வழை - சுரபுன்னை.

24. அருப்பிடை - அரியவழியின் இடையே; அருப்பம், அருப்பாயிற்று. மருப்பிடை - மலைக்குவட்டிடை யெனலுமாம்; "மலைமருப்பெறி" (தக்க. 687.) ஆசினி - ஈரப்பலா. 25. பிண்டி - அசோகு.

26. கருங்கோற் குறிஞ்சி - கரிய கொம்புகளையுடைய குறிஞ்சி மரம்; "கருங்கோற் குறிஞ்சிப்பூ" (குறுந். ௩.) கடிநாள் வேங்கை - மணநாளைப்புலப்படுத்தற்குப் பூக்கும் வேங்கைமரம்; "மன்ற வேங்கை மணநாட் பூத்த, மணியே ரரும்பின பொன்வீ" அகநா. உ௩உ.

27. சுள்ளி - ஆச்சாமரம். சூரல் - ஒருவகைப் பிரம்பு.

29. பால்வெள் - மிகவெள்ளிய. பணிச்சை - ஒருமரம்; 51: 53.

30. வேயும் வெதிரமும் மூங்கில் விசேடங்கள்; 51: 11 - 2. குளவி - காட்டுமல்லிகை. 31. மாரோடம் - செங்கருங்காலி.

32. ஆரமும் சந்தும் சந்தனமர விசேடங்கள். தமாலம் - பச்சிலை மரம்.

35. இறாஅல் - தேனடை. புதைஇ - புதைத்து.

36. மதியிடத்தை மறைத்த பெரும்பாம்பையொப்ப.

35 - 7. தேனடைக்குப் பூரணசந்திரனும், அதினின்றும் ஒழுகும் தேன்பெருக்கத்திற்குப் பெரும்பாம்பும் உவமைகள்; "வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத், தேனி னிறலென வேணி யிழைத்திருக்கும்,

பி - ம். 1 கருங்காற். 2 பணிச்சை.

மணிவரை மருங்கி னணிபெற வொழுகி
முதிர்பூங் காவி னுதிர்தா தளைஇ
மலைவாழ் குறவர் மகளிர் குடையும்
சுனைவாய் நிறைக்குஞ் சூருடைச் சிலம்பிற்
பாடுபெயர்த் தறியாப் பக்கம் பயின்ற
கோடுயர் நிவப்பிற் குளிர்மலை யோங்கி
மாட நிரைத்த மறுகை போல
நிரப்ப மெய்தி முரப்புநிலை முறுது
கல்விற் காட்டிய செல்லற் றாவழிப்
பிண்டி பிணங்கிப் பிலம்புக் கதுபோல்
கண்டவர்க் காயினுங் கடத்தற் காகா
அருமை யெய்திய வரிலமை யாரிடை
இறும்பம லடுக்கத் தின்றேன் கொளீஇய
பொங்கெரி விளக்கம்................ம்
ஏனற் பெருந்தினை யேனங் காவலர்
கானற் பெருமரங் கண்ணுற மாட்டி
இருள்பட வோங்கிய வெல்லை வேலிதொறும்
வெருள்படப் போக்கிய வெண்டீ விளக்கம்
மங்குல் வானத்து மதிநிலா மழுங்கக்
கங்குல் யாமத்துக் கடையற வெழுந்த

---

கானக நாடன்", "வரையிசை மேற்றொடுத்த நெய்க்க ணிறாஅல், மழை நுழை திங்கள்போற் றோன்றும்" கலி. ௩௧, ௬௨. [டுப். 35.

36 - 7. "பாம்பு நான்றெனப் பாய்பசுந் தேறலே" கம்ப. நாட்

38. அளைஇ - கலந்து. 40. சூர் - தெய்வமகளிர்.

42. கோடு - மலையுச்சி. 43. மறுகை - வீதி.

44. நிரப்பம் - நிரம்புதல். முரப்புநிலை முறுது - பருக்கைக் கற்களையுடைய மேட்டு நிலத்தில் நிற்றலை வெறுமல்.

45. செல்லல் - துன்பம். 46. பிண்டி - அசோகமரம்.

48. அரில் - சிறுதூற்றின் பிணக்கு.

49. இறும்பு - குறுங்காடு. கொளீஇய - கொள்ளுதற்கு.

51. "பெருந்தினைப் பிறங்கல்" (51 : 22.) ஏனங்காவலர் - கொல்லைக்ளிற் பன்றிகள் வாராமற் காப்பவர்கள்.

52. கானல் - மலையைச்சார்ந்த சோலை.

54. போக்கிய - பரவச்செய்த.

கதிரோன் போல வெதிரெதிர் கலாஅய்
நறும்பூஞ் சோலை காற்றூஞ் கழுமிய
குறுஞ்சிப் பெருந்திணை குலாஅய்க் கிடந்த
பதிற்றுப் பத்தொடு விதிப்பட வெண்ணிய
ஐயைந் தெல்லையு மரையிரு ணடுநாள்
எய்தி யிகந்தன்று வியற்றமை பிடியென்.

ரு௦—குறிஞ்சிநிலங் கடந்தது முற்றிற்று.

---

57. கலாஅய் - கலந்து. 59. குலாஅய் - வளைந்து.

60 - 61. நூற்றிருபத்தைந்தெல்லை.

62. இயற்றமை - பண்ணுதலமைந்த ; என்றது மேற்றவிசு முதலியவற்றைச் செவ்வனே அமைக்கப்பெற்ற என்றபடி ; 53 : 49.

---

## ருக—நருமதை கடந்தது.

எய்தி யிகந்த வியற்றமை யிரும்பிடி
கொய்பூங் குறிஞ்சிக் கொழுநிலங் கைவிட்
டைந்நான் கெல்லையொ டாறுந் தகன்றபின்

(நருமதை வருணனை)

மதிய முரைஞ்சு மால்வரைச் சென்னிப்
பொதியவிழ் பூமரம் பொதுளிய சோலை
அகலத் தெல்லையு மாழ்ச்சிய தந்தழும்
உயர்பி ணைக்கழு முணர்த்தற் காகா
விஞ்சையம் பெருமலை நெஞ்சகம் பிளந்து

---

ருக—நருமதை கடந்தது.

[இதில், நருமதையாற்றின் தோற்றமும் அது செல்லுமழகும் உதயணன் அதைக் கடந்ததும் கூறப்படும்.]

3. இருபத்தைந்து எல்லை கடந்த பின்பு ; ஆறு - வழி.

4. உரைஞ்சும் - தேய்க்கும்.

5. இச்சோலை விந்தத்தடவியென்று பாராட்டப்படும் ; 58 : 32 ; ௳. 3 : 52 ; சிலப். ௬ : 29.

8. விஞ்சையம் பெருமலை - விந்த மலை ; விந்தைக்கு இருப்பிடமாகிய மலை ; (விந்தை - துர்க்கை.) நெஞ்சகம்-நடுவிடம் ; குறுந். க.

கல்லுட் பிறந்த கழுவாக் கதிர்மணி
மண்ணுட் பிறந்த மாசறு பசும்பொன்
வேயுட் பிறந்த வாய்கதிர் முத்தம்
வெதிரிற் பிறந்த பொதியவி ழருநெல்
மருப்பினுட் பிறந்த மண்ணா முத்தம்
வரையிற் பிறந்த வயிரமொடு வான்றி
நுரையுட் பிறந்த நொ......லாடை
முடந்தாட் பலவின் குடம்புரை யமிழ்தமும்
நெடுந்தாண் மாவி னெய்படு கனியும்
கருந்தாள் வாழைப் பெருங்குலைப் பழனும்
பெருந்தேன் றொடையலும் விரைந்துகொண் டளைஇ
நறவஞ் சாரற் குறவர் பரீஇய
ஐவன நெல்லுங் கைவளர் கரும்பும்
கருந்தினைக் குரலும் பெருந்தினைப் பிறங்கலும்
பாவை யிஞ்சியுங் கூவைச் சுண்ணமும்
நாகத் தல்லியு மேலத் திணரும்

---

9. "கல்லினுண் மணியுநீ" (பரி. ௩); "கல்லிற் பிறக்குங் கதிர் மணி" (நான்மணி. 7); "கற்பா லுமிழ்ந்த மணி" சீவக. 4.

11. வேய் - மூங்கில். 12. வெதிர் - ஒருவகை மூங்கில்; "வெதிர் நெற் குறுவாநாம்" கலி. ௪௨.

11 - 2 = 50: 30; "வேய்கண் ணுடைந்து முத்துதிரவும், வெதிர் கண் ணுடைந்து நெல்லுதிரவும்" யா. வி. சூ. 95, மேற்.

13. மருப்பு - யானைத்தந்தம், பன்றிக்கொம்பு. [கனி.

16. முடந்தாள் - வளைந்த அடியையுடைய. குடம்போன்ற பலாக்

17. நெய் - தேன். 19. தேன்தொடையல் - தேனடை.

20. நறவம் - குங்குமமரம். பரீஇய - அறுத்த.

21. ஐவனநெல் - மலைநெல்.

22. பெருந்தினை - ஒருவகைத் தினை; 50 : 51. பிறங்கல்-திரட்சி.

23. இஞ்சிக் கிழங்கைப் பாவையென்றல் மரபு; "செய்யாப் பாவை வளர்ந்துகவின் முற்றிக், காயங் கொண்டன விஞ்சி" (மலைபடு. 125 - 6.) கூவைச்சுண்ணம் - கூவைக்கிழங்கு; இக்கிழங்கு மாப்போ லிருத்தலின் இப்பெயர் பெற்றது; "நூறொடு குழீஇயின கூவை" மலைபடு. 137.

24. நாகத்து அல்லி - நாகப்பூவின் அகவிதழ். இணர் - கொத்து.

கட்சா லேகமு முட்கா ழகிலும்
குங்குமத் தாதும் பைங்கறிப் பழனும்
கிழங்கு மஞ்சளுங் கொழுங்காற் றகரமும்
கடுப்படு கனியுங் காழ்த்திப் பிலியும்
சிற்றிலை நெல்லிச் சிறுகாய்த் துணரும்
அரக்கின் கோலொ டன்னவை பிறவும்
ஒருப்படுத் தொழியாது விருப்பி னேந்தி
மலைவயிற் பிறந்த மாண்புறு பெருங்கலம்
நிலைவயின் வாழ்நர்க்குத் தலைவயி னுய்க்கும்
பகர்விலை மாந்தரி னுகர்பொரு ளடக்கிப்
பன்மலைப் பிறந்த தண்ணிற வருவிய
அமலை யருங்கல மடக்குபு தழீஇத்
தன்னிற் கூட்டிய தானைச் செல்வமொ
டிருகரை மருங்கினும் பெருகுபு தழீஇ

(மரங்கள்)

அணிக்குருக் கத்தியு மதிர லு மனுக்கி
மணிச்சையு மயிலையு மௌவலு மயக்கி
ஞாழலும் புன்னையும் வீழ நூக்கிக்
குருந்துங் கொன்றையும் வருந்த வணக்கித்
தடவும் [1]பிடவுந் தாழச் சாய்த்து
முளவு முருக்கு முருங்க வொற்றி

25. சாலேகம் - சிறுதேக்கு. உள் காழ் - உள்ளே வைரத்தை யுடைய. [50 : 21.

26. கறி - மிளகு. 27. மஞ்சட்கிழங்கு. தகரம்-ஒருவகைமரம்;

28. கடு - ஒருவகைமரம் ; இதன் காய் கடுக்காய் ; "கடுக்கலித் தெழுந்த" (மலைபடு. 14.) 30. அரக்கின்கோல் - கொம்பரக்கு.

34. விலை மாந்தரின் - விலைப்படுத்தும் வணிகர்களைப்போல.

33 - 4. கம்ப. ஆற்றுப். 7. 39. அதிரல் - மோசிமல்லிகை.

40. மணிச்சை - ஒருமரம்; மணிச்சிகை என்று ஒரு மரப்பெயர் குறிஞ்சிப்பாட்டிற் காணப்படுகின்றது. மயிலை - இருள்வாசி (இருவாட்சி.) மௌவல் - செம்முல்லை. 41. ஞாழல் - குங்குமமரம்.

43. தடவு - தடா. பிடவு - பிடா. [illegible] 40

44. முள்ளிமரமும் முண்முருங்கையும் ; முளவு - முள் ; 52 : 41.

பி - ம். 1 பிளவுச்.

மாவும் மருதும் வேறரப் புய்த்துச்
சேவுங் குரவுஞ் சினைபிளந் தளைந்து
நறையு நாகமு முறைநடு முருக்கி
வழையும் வாழையுங் கழையுங் கால்கீண்
டாலு மரசுங் காலொடு துளக்கிப்
புன்கு நாவலும் புரள வெற்றிக்
கொங்கார் கோடலொடு [1] கொய்யல் குழீஇ
அனிச்சமு மசோகமு மடர வலைத்துப்
பனிச்சையும் பயினும் பறியப் பாய்ந்து
வள்ளியு மரலுந் தன்வழி வணக்கிப்

(விலங்கு முதலியன)

[2] புள்ளி மானும் புல்வாய்த் தொகுதியும்
ஆமா வினமுந் தாமா றோடி
இடைப்புனற் பட்டவை யுடைப்புனற் கிவரப்
பொறிமயிற் பேடை போத்தொடு புலம்ப
எறிமயி ரேனமொ டெண்கின மிரியக்
குரங்கு முசுவு மரந்தொறும் வாவச்
சுரும்புந் தும்பியும் விரும்புபு விரைய
அகத்துறை பல்லுயி ரச்ச மெய்தப்
புறத்துறை பல்லுயிர் புகன்றுவிளை யாடப்
படிவப் பள்ளியொடு பாக்கங் கவர்ந்து
குடிகெழு வளநாடு கொள்ளை கொண்டு
கவ்வை யோதங் கால்கிளர்ந் துராஅய்ப்

---

45. புய்த்து - பெயர்த்து; "புய்ந்துகால் போகி" களவழி. 39.
46. சே - சேமரம்.
51. கொய்யல் - கொய்யல் மரம் (கொய்யா); "அங்கொரு கொய்யற் றழைமூழ்கி" கம்ப. பூக்கொய். 31.
52. அனிச்சம் - அனிச்சமரம்.
53. பனிச்சை - ஒருமரம்; 50 : 29. பயின் - ஒருமரம்; 48 : 153.
56. ஆமா - காட்டுப்பசு. தாமாறு - தாவும்படி.
58. போத்து - ஆண்மயில்; "மயிற்போத் தூர்ந்த வயிற்படை நெடுவேள்" தொல். மரபு. சூ. 43, பேர். மேற்.
64. படிவப்பள்ளி - முனிவர் ஆச்சிரமம். பாக்கம் - பக்கத்திலுள்ள [இடங்கள்.
66. உராஅய் - பெயர்ந்து.

பி - ம். 1 கொய்தழை, கொய்தல். 2 புள்ளியும்

பௌவம் புகூஉம் படர்ச்சித் தாகிக்
கருங்காற் குருகுங் கம்புளுங் கழுமிப்
பெரும்பூட் பூணியும் பேழ்வாய்க் கொக்கும்
குளிவையும் புதாவுந் தெளிகயக் கோழியும்
அன்றிலு நாரையுந் துன்றுபு கெழீஇ
வாளையும் வராலு நாளிரை யாக
அயிரையும் பிறவு மல்கிரை யமைத்துப்
பறவைப் பார்ப்பினஞ் சிறுமீன் செகுத்து
வார்மண லடைகரைப் பார்வலொடு வதியும்
சும்மை யறூஉத் தன்மைத் தாகிக்
கயம்பல கெழீஇ யியங்குதுறை சில்கிப்
பெருமத யானையொடு பிடியினம் பிளிற்றும்
நருமதைப் பேர்யாறு நண்ணிய பொழுதில்

**(வயந்தகன் வழிகாட்டல்)**

தலைப்பெருந் தண்புன லூன்வந் தன்றென
நிலைப்பரு நீணீர் நீத்திற் றாகி
மாக்கடல் வரைப்பின் மன்னுயிர்க் கியன்ற
ஆக்கமுங் கேடுஞ் [1] சாற்றிய தொப்ப
வளமலர்ப் பைந்தார் வயந்தக னிழிதந்

---

67. படர்ச்சித்தாகி - செல்லுதலையுடையதாய்.

68. கம்புள் - சம்பங்கோழி.

69. பூணி - ஒரு பறவை ; சீவக. 2108.

70. குளிவை - ஒருபறவை ; குளுவையென வழங்கும். புதா - பெருநாரை ; மரக்கால்நாரையுமாம் ; சிலப். க0 : 117. கயக்கோழி - நீர்க்கோழி. [மூர" அகநா. கூஅசு.

72. நாளிரையாக - காலைஇரையாக ; "வாளை நாளிரை தேரு

73. அயிரை - ஒருவகை மீன் ; "அயிரைக் கொழுமீன்" (பதிற். உக.) அல்கிரை - மிக்க இரை ; இராவுணவுமாம் ; "கொடுவாய்ப் பேடைக் கல்கிரை தரீஇய" (அகநா. கூ.) 74. பார்ப்பு - குஞ்சுகள்.

75. பார்வலொடு - பார்த்தலுடன் ; "பார்வற் கொக்கு" பதிற். [உக.

77. கயம் - ஆழ்ந்த பள்ளங்கள். சில்கி - சிலவாகி ; 49:49.

80. முதல்முறையான வெள்ளம் வந்ததென்று சொல்லும்படி.

82. கடல்வரைப்பில் - பூமியில்.

பி - ம். 1 சாற்றியதிகப்ப.

திளமணற் படாஅ தியங்குதுறை நோக்கிக்
காணிலை கொள்வுழித் [1] தானிலை காட்ட

(உதயணன் செயல்)

அரிமதர் மழைக்க ணனந்த ரெய்திய
திருமா மேனியைத் திண்ணிதிற் றழீஇச்
செல்விசை கதுமெனச் சுருக்கி மெல்லென
வரையே றரிமாப் போல மற்றதன்
கரையே றினனாற் கார்நீர் கடந்தென்.

ருக—நருமதை கடந்தது முற்றிற்று.

---

86. கால் நிலைகொள்ளு மிடத்தை.
87. அனந்தர் - தூக்க மயக்கம்.
88. வாசவதத்தையை உறுதியாகத் தழுவிக்கொண்டு.
89. செல்விசை - பிடிசெல்லும் வேகத்தை.
90. அரிமா - சிங்கம்.

பி - ம். 1 தானிலைஇக்.

---

## ருஉ—பாலைநிலங் கடந்தது.

(வயந்தகன் செயல்)

கார்நீர் நருமதைக் கரையகங் கடந்தபின்
வார்நீர் துடைத்து வயந்தக னேறி
வானக நாண்மீன் றான நோக்கி
ஆற்றின தளவு மாரிரு ளெல்லையும்
ஏற்றமை யிரும்பிடி யியக்கமு மெண்ணி

---

ருஉ—பாலைநிலங் கடந்தது.

[உதயணன் பாலை நிலத்தைக் கடந்ததும் பிடி நடையில் மெலிவுற்றதும் பிறவும் இதிற் கூறப்படும்.]

3. நாண்மீன் தானம் - நட்சத்திரங்களின் இடங்களை.
5. ஏற்றமை - ஏறுதற்கமைந்த. இயக்கம் - நடை.

(துர்க்கையின் கோயில்)

அரநுதி யன்ன பரன்முரம் படுகத்துச்
சுரமுத லடைந்த சூழகன் புரிசைப்
பாழ்நில வாழ்நர் பரவினர் தூஉம்
செந்தடிக் குருதிப் பைந்திணைக் கொழுங்குடர்
எண்டிசை மருங்கினுங் கொண்டவை யெடுத்த
வேர்முத லூசல் வேம்பின் சினைதொறும்
கண்பா டவிந்த கருமணிப் பிறங்கலொ
டுழைக்கோ டணிந்து பீலி நாற்றிக்
கழைக்கோற் றொடுத்த கதலிகை நுடங்கச்
செறிதோற் பரமு மெறிகோல் வாளும்
அப்புப் புதையு மணிவரிச் சிலையும்
செப்புறச் செய்த செல்வ முன்றிற்

---

6. வாளரத்தின் நுனியை ஒத்த பருக்கைக்கற்களாலாகிய மேட்டினை யுடைய பக்கமலை; "கொல்லடைந்த வேலன்ன கூர்ம்பரல்" (புற. வி. மேற்.); சிறுபாண். 7-8, அடிக். "பொருந்தார்கை வேனுதி போற்பரல்" பெருமாள் திருமொழி, க: 5.

7. சுரமுதல் - சுரத்தினிடத்தே: "சுரன்முதல்வந்த" (நற். கூ) புரிசை - மதில். [தாவுகின்ற.

8. பாழ்நில வாழ்நர் - பாலைநில மாக்கள். தூஉம் - பலியாகத்

9. செந்தடிக்குருதி - சிவந்தஇறைச்சியிலிருந்து பெருகுகின்ற இரத்தம்; தடி - இறைச்சி; "கருந்தலையும் வெண்ணிணமுஞ் செந்தடி

11. வேர்கள் முதலியவற்றாலாகிய ஊசல். [யும்" பு. வெ. 74.

12. பாடவிந்த கண்களில் உள்ள மணிகளின் திரட்சியோடு; பிரார்த்தனை செலுத்துவோர் காளியின்முன் கண்ணைப் பெயர்த்து வைக்கின்றனரென்பது இதனலறியப்படுகின்றது.

13. உழைக்கோடு - மான்கொம்பு. பீலி நாற்றி - மயிற்கலாபங்களைத் தொங்கக் கட்டி.

14. கழைக்கோல் - திரண்ட மூங்கிலில். கதலிகை - கொடி.

15. தோற்பரம் - தோலாலாகிய கேடகம். எறிகோலும், வாளும்; கோலென்பதற்கு வளையென்று பொருள் கொண்டு, கோல்வாள், வளைந்த கத்தியென்றலுமாம்.

16. அப்புப்புதை - அம்புக்கட்டு. புதையென்பதற்கு அம்புக்கட்டென்று பொருளெழுதி இவ்வடியை மேற்கோள் காட்டினர்; சீவக. 212, அடியார்.

...................றிகழ்மதி முகத்தி
[1] எண்வகைப் பொலிந்த வொண்படைத் தடக்கைக்
கச்சார் வனமுலைக் கண்மணிக் கொடும்பூட்
பச்சைப் பாற்கிளி பவழச் செவ்வாய்
முத்தேர் முறுவன் முயங்குகயற் றடங்கட்
சிலையேர் புருவச் செங்கட் செல்வி
கலைகா முறுவி நிலைகா முற்ற
கற்சிறைக் கோட்டத்து நற்சிறை யொடுங்கி

(வழியிலுள்ளவை)

வில்லே ருழவர் செல்சாத் தெறிந்துழி
நல்லாப் படுத்த [2] நடுக லுழலையும்
ஆளிடு பதுக்கையு மரில்பிணங் கடுக்கமும்

---

19. எண்படைகள் இன்னவையென்பதை, "பட்டய மெடுத் தொருகை பத்திர மெடுத்தொருகை பற்றுமழுவுஞ், சொட்டையு மெடுத் திருகை சக்கர மெடுத்தொருகை சுற்று மயிலும், வட்டமு மெடுத் திருகை வச்சிர மெடுத்தொருகை மற்கரதலம், எட்டினும் விதிர்ப்பன சுழற்றுவன வெந்தழ லெழுந்தெரியவே" (அரிச்சந்திர. விவாக. 117) என்னுஞ் செய்யுளாலறிக. 20. பூண் - ஆபரணம்.

21. பச்சைப் பாற்கிளி - பச்சைக்கிளி போல்வாள்.

24. கலை காமுறுவி - கலைமானை ஊர்தியாக விரும்புபவள்; இவளுக்குள்ள கலையானத்தி என்னும் திருநாமம் இதை வலியுறுத்தும்.

25. கற்சிறைக்கோட்டத்து - கல்லாற் செய்யப்பட்ட மதில் சூழ்ந்த கோயிலின். சிறை - ஒருபக்கத்தில்.

26. வில்லேருழவர் - வில்லை ஏராக உடைய உழவர்; மறவர்; குறள், 872. செல்சாத்து எறிந்துழி - அவ்வழியே செல்லும் வணிகர் கூட்டத்தை அடித்துப் பறித்த இடத்து.

27. நல்லாப்படுத்த - நல்ல பசுக்களை உள்ளே அகப்படுத்திக் கொண்ட. நடுகல் உழலை - நட்ட கற்களின் துளைத்த துவாரங்களில் மூங்கிலைப் புகுத்தி வைத்திருக்கும் இடங்களும்; வழிச் செல்வோரை வென்று பசுக்களை அகப்படுத்தி வைத்தல் இவர்களுக்கு இயல்பு.

28. ஆளிடு பதுக்கையும் - பாலை நிலமாக்களால் கொல்லப்பட்டவர்களின் பிணத்தைவீழ்த்தி மேலே மூடிவைத்திருக்கும் கற்குவியல்களும்; "அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கை" (புறநா. ௩.) அரில் பிணங்கு அடுக்கம் - சிறுதூறுகள் ஒன்றோடொன்று பின்னியிருக்கும் சிறுகுன்றுகள்.

பி - ம். 1 எண்கைப். 2 நடுகணு.

தாளிடு குழியுந் தலைகரந் தியாத்த
புல்லும் பொள்ளலும் வெள்ளிடைக் [1] களரும்
நீரில் யாறு நிரம்பா நிலனும்
ஊரில் காடு மூழடி முட்டமும்
வறுஞ்சுனைப் பரவையுங் குறும்பாற் குன்றமும்
இயற்கையி னமைந்தவுஞ் செயற்கையிற் சிறந்தவும்
ஒன்றுகண் டவைபோற் சென்றுலப் பரிதாய்த்
தட்பக் காலத்தும் வெப்ப மாறா

(மரங்கள்)

தோமையு முழிஞ்சிலு முலவையு முகாயும்
கடுவுந் தான்றியுங் கொடுமுட் டொடரியும்
அரவு மரசு மாரு மாத்தியும்
இரவு மீண்டுங் குரவுங் கோங்கும்
கள்ளியுங் கடம்பு முள்ளியு முருக்கும்
தணக்கும் பலாசுங் கணைக்கா னெமையும்
ஈங்கையு மிலவுந் தேங்காய் நெல்லியும்
வாகையும் பிறவும் வன்மர மொடுங்கித்
தோகையுங் குயிலுந் துன்னல் செல்லா

29. தாள் இடு குழி - வெட்டப்பட்ட கால்களை இட்டுவைத்திருக்கும் குழி. தலைகரந்து யாத்த - வெட்டுண்ட தலைகளை மறைத்து வைத்திருக்கும்.

30. பொள்ளல் - மரப்பொந்து.

32. ஊழடிமுட்டம் - முறையே அடிப்பாடாக இருந்து பின்பு வழி இல்லையாய் இருக்கும் இடங்கள்; "நாழிலு மிழுக்கு மூழடி முட்டமும்" குறிஞ்சி. 258.

33. பரவை - பரப்பு. பாற்குன்றம் - பருக்கைக் கற்களாலாகிய சிறுமலைகள்.

36. தட்பம் - குளிர்ச்சி.

38. கொடுமுள் தொடரி - வளைந்த முள்ளையுடைய விடத்தே தொடரியென்னுமரம்; பத்துப்பாட்டு, ப. 229: 3-ஆம் அடிக். இப் பெயர் விடத்தர், விடத்தேர், விடத்தேரை யென்று வழங்குகின்றது.

37 - 8. ஓமை முதலியன மரவிசேடங்கள்.

39. அரவு - [illegible]. 40. இரவு - இருள்மரம்.

41. முள்ளியுமுருக்கும்: "முளவு முருக்கும்" 51 : 44.

42. தணக்கு: உ. 15 : 15 [illegible]

44. பிறவுமாகிய வன்மரம். 45. தோகை [illegible]

பி - ம். [1] கிளரும்.

(புறவின் செயல்)

நுண்பொறிப் புறவின் செங்காற் சேவல்
வெண்சிறைப் பெடையொடு விளையாட்டு விரும்பி
வன்பர லார்ந்த வயிற்ற வாகிக்
[1] கண்பொரி கள்ளிக் கவர்சினை யேறிக்
கூப்பிடு குரலிசை சேட்புலத் திசைப்பவும்

(விலங்கு முதலியவற்றின் செயல்)

கானப் பன்றித் தோன்முலைப் பிணவல்
குரங்குநடைக் களிற்றொடு திரங்குமரற் சுவைத்து
நீர்நசைக் [2]கெள்கித் தேர்மருங் கோடவும்
உள்ளழ லுறாஅ தொள்ளழ லன்ன
செம்முக மந்தி கைம்மகத் தழீஇப்
பைங்குழைப் பிரச மங்கையி னக்க
நொதுமற் கடுவ னதுகண் டாற்றாது

---

46. பொறி - புள்ளிகள். புறவின் சேவல் - ஆண்புறா.

48. பரலார்ந்த - பருக்கைக் கற்களை நிரம்ப உண்ட.

46 - 8. "பொறிவரிப் புறவின் செங்காற் சேவல், சிறுபுன் பெடையொடு சேட்புலம் போகி, அரிமண லியவிற் பரறேர்ந் துண்டு" (அகநா. உஎக) என்பது இவ்வடிகளிலமைந் திருத்தல் காண்க; இப்புறவு, தூதுணம் புறவென்று வழங்கப்படும்.

49. கணுக்கள் பொரியும் கள்ளி; "பொரிகாற் கள்ளி" குறுந். [கடுச.

50. சேட்புலத்து - நெடுந்தூரமான இடத்தில்.

51. பிணவல் - பெண்பன்றி.

52. களிற்றொடு - ஆண்பன்றியோடு. மரல் - ஒருவகைக்கற்றாழை; இக்காலத்து மருளென்று வழங்கப்படும்.

53. நீர்வேட்கையால் மெலிந்து ; எள்கல் - மெலிதல் ; 40 : 208. தேர்மருங்கு - பேய்த்தேரினிடத்தே ; (பேய்த்தேர் - கானல்.)

52 - 3. யானை பேய்த்தேரை நீரென்று மயங்கல் ; "வெண்டேரோடுங் கடங்காய் மருங்கில், துனையெரி பரந்த துன்னரும் வியன் காட்டுச், சிறுகண் யானை நெடுங்கை நீட்டி, வான்வாய் திறந்தும் வன் புனல் பெறாஅது, கான்புலந்து கழியும்" அகநா. கஎகூ.

54. உள்ளழல் - பசித்தீ. 55. மந்தி - பெண்குரங்கு.

56. குழைப்பிரசம் - தளிரிற் சிந்தியிருக்கும் கள்ளை. [சகிக்காமல்.

57. நொதுமற் கடுவன் - அயலதாகிய ஆண்குரங்கு. ஆற்றாது -

பி - ம். 1 கண்பொறிக். 2 கிளகி.

காஞ்சிரங் கவர்கோற் கவின்பெறத் தொடுத்த
[1] தண்டே னூட்டித் தாகந் தணிப்பவும்
வெங்கற் சாரல் வேய்வினு டுதிர்த்த
அங்கதிர் முத்த மணிமழைத் துளியெனக்
காட்டுக் கோழிச் சூட்டுத்தலைச் சேவல்
குத்த லாற்றாது தத்துற்றுத் தளரவும்
கயந்தலை தழீஇய கறையடி யிரும்பிடி
நயந்தலை நீங்கிய நாரின் முருங்கை
வெண்பூங் கவள முனைஇ நெல்லிப்
பைங்கா யமிழ்தம் பல்வயி னடக்கி
யாறுசெல் வம்பலர் சேறுகிளைத் திட்ட
உவலைக் கேணி யவலடுத் துலாவவும்
செந்தளி ரிருப்பைப் பைந்துணர் வான்பூத்
தீஞ்சுவை நசைஇய தூங்குசிறை வாவல்
கல்லெனத் துவன்றிப் பல்வயிற் பறப்பவும்
இன்னவை பிறவும் வெம்மையின் வருந்தி
நடப்பவும் பறப்பவு மிடுக்க ணெய்தி

---

58. காஞ்சிரங் கவர்கோல் - எட்டிமரத்தின் கவர்த்த கிளையில்.

60 - 61. மூங்கில்முத்தத்தை மழைத்துளியென்று.

62. காட்டுக் கோழிச் சேவல்.

63. குத்தலாற்றாது - அலகாற் குத்தியெடுக்க இயலாமல்.

64. கயந்தலை - கன்றினை.

65. நயம் - ஈரம். நாரில் முருங்கை - நாரில்லாத முருங்கையினது; "நாரின் முருங்கை நவிரல் வான்பூ" அகநா. க.

66. வெள்ளைப்பூவாகிய கவளத்தை வெறுத்து.

66 - 7. நெல்லிக்காயாகிய அமுதத்தைப் பல்லையுடைய கவுளின் கண் அடக்கிக்கொண்டு.

68. வம்பலர் - அயலார்.

69. உவலைக்கேணி - தழைமூடிய கேணியாகிய. அவல் - பள்ளம்.

70. செந்தளிர் இருப்பை - சிவந்த நிறமுள்ள தளிர்களையுடைய இருப்பை; "இருப்பைச் செப்பட ரன்ன செங்குழை" (அகநா. க.) வான்பூ - வெள்ளிய பூ.

71. தூங்குசிறை வாவல் - தொங்குகின்ற சிறகையுடைய வௌவால்; "தூங்குசிறை வாவலுறை தொன்மரம்" சீவக. 498.

74. விலங்குகளும் பறவைகளும்.

பி - ம். 1 தீந்தேனூட்டி.

வேட்டச் செந்நாய் வேண்டா தொழித்த
காட்டுமா வல்சியர் கரந்தை பாழ்பட
வெட்சி மிலைச்சிய வில்லுறு வாழ்க்கைச்
சிறுபுல் லாளர் சீறூர்க் கியங்கும்
கற்குவி புல்லதர் பற்பல பயின்று
பாலை தழீஇய பயனறு பெருவழி
நீடிரு ளல்லது நீந்துத லரிதென

(யாழ் விழுதல்)

[1] எதிர்மலர்ப் பைந்தா ரேயர் பெருமகன்
[2] அதிர்கயம் விட்ட காலை யவ்வழி
ஆய்ந்த கோலத் தமரும் விழையும்
தீந்தொடைப் பேரியாழ் திவவொடு [3] கொளீஇ

---

75. வேட்டச் செந்நாய் வேண்டாதொழித்த - வேட்டையைச் செய்யும் செந்நாய் உண்டு வேண்டாமல் ஒழித்தலால் எஞ்சிய.

76. காட்டுமா வல்சியர் - காட்டிலுள்ள விலங்குகளின் ஊனாகிய உணவினையுடையவர். கரந்தை - பசுக்களை மீட்டல்; அத்தொழிற்குரியார் அதற்கு அறிகுறியாக அணிவதும் கரந்தைப்பூவே.

75 - 6. "ஓய்பசிச் செந்நா யுயங்குமரை தொலைச்சி, யார்ந்தன வொழிந்த மிச்சில் சேய்நாட், டருஞ்சுரஞ் செல்வோர்க்கு வல்சி யாகும்" (நற். ௪௩); "வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில், ......, எம்மொ டுணீஇய" குறுந். ௫௬. [சிய - சூடிய.

77. வெட்சி - பசுக்களைக் கவர்தற்குரிய வெட்சிமாலையை. மிலைச்

76 - 8. இவர்கள் கவரும் பசுக்களை மீட்கும் ஆற்றலாளர் இல்லையென்பது கருத்து; "கட்சியுங் கரந்தையும் பாழ்பட, வெட்சி சூடுக விறல்வெய்யோனே" (சிலப். ௧௨) என்பதை இப்பகுதி தழுவிவந்துள்ளது.

79. கற்குவி புல்லதர் - கற்களைக் குவித்திருக்கும் புல்லையுடைய வழிகள்; "புல்பரந்து கிடந்த கல்லதர்" 43 : 65.

80. பாலை தழீஇய - வெப்பத்தைத் தழுவிய; பாலை-வெப்பம்; தக்க.

81. இருளிற் செல்லலாமேயன்றி இவ்வழியைப் பகலிற் கடத்தலரிதென்று; "கொடுங்கோல் வேந்தன் குடிகள் போலப், படுங்கதிரமயம் பார்த்திருந் தோர்க்கு" சிலப். ௧௫: 15 - 6.

83. அதிர்கயம் விட்ட காலை - முழங்குகின்ற யானையைச் செலுத்திய இடத்து.

85. தீந்தொடைப் பேரியாழ் - இனிய நரம்பினையுடைய கோட

பி - ம். 1 எதிர்மலைப். 2 அதிசயம். 3 கொளீஇய.

யாப்புறு புரிஞாண் வீக்குமுத லவிழ
ஓர்ப்பில் காலை யுதயண குமரனை
நீப்பிட மிதுவென நினைப்பது போலப்
பஞ்சுரம் பழுனிய பண்முறை நிற்ப
வெஞ்சுரக் கான்யாற்று வேயொடு பிணங்கிக்
கொய்தகை பொதும்பர்க் கையகன் றொழிய
வலிகெழு வயந்தகன் வத்தவ நின்யாழ்
நிலமிசை வீழ்ந்தது நிற்கநின் பிடியென
நலமிகு புகழோய் நாலிரு நூற்றுவிற்
சென்றது கடிதினிச் செய்திற னிதன்மாட்
டொன்று மில்லை யுறுதி வேண்டின்
தந்த தெய்வந் தானே தருமெனப்
பின்னிலை வலித்து முன்னிலை கூறிய
இன்னாப் போகுதற் காகும் பொழுதெனத்
துன்னார்க் கடந்தோன் றோன்றக் கூறிப்
பறந்துசெல் வதுபோற் சிறந்தவன் கடாவலின்

---

வதி யென்னும் பெரிய யாழ்; எழுவாய்; “ தீந்தொடை மகர வீணை ” (சீவக. 608.) திவவொடு கொளீஇ - வார்க்கட்டோடு பொருத்தி.

86. கட்டுதலுற்ற முறுக்கிய கயிற்றுக்கட்டின் முடி அவிழ்தலால்.

87. ஓர்ப்பில் காலை - தன்னைக் கருதாத காலத்தில்.

88. நீப்பிடம் - நீங்கும் இடம். 89. பஞ்சுரம் - பாலைப்பண்.

90. வேயொடு பிணங்கி - மூங்கிலிற் சிக்குண்டு.

91. கொய்து அகை - கொய்யப்பட்டு வருந்துகின்ற. பொதும்பர் - [காட்டில். பேரியாழ் (85), கையகன்று ஒழிய (91.)

92 - 3. அரச! நின்யாழ் வீழ்ந்தது; பிடி நின்றிடுகவென்று வயந்தகன் சொல்ல.

97. “ தந்த தெய்வந் தருமெனச் சேறலும் ” நம்பி. சூ. 135.

94 - 101. வயந்தக! யாழ் விழுந்த இடத்திலிருந்து எண்ணூறு விற்கிடைத்தூரம் பிடி வந்துவிட்டது. இனி யாம் செய்தற்குரியது யாதும் இன்று. யாழை முன்பு அளித்ததெய்வம் திரும்பவும் தந்தே தீரும். முன் கருதியவண்ணம் பகைவருடைய எல்லையைக் கடப்பதற்கே காலம் அமைந்துள்ளதென்று பிடியை உதயணன் விரைவாகச் செலுத்தவினால். “மேலாடை வீழ்ந்த தெடுவென்று னவ்வளவில், நாலாறு காத கடந்ததே” (நள். கலிநீங்கு. 42) என்ற செய்யுள் இங்கே நினைவுக்கு வருகிறது.

(பிடி மெலிவடைதல்)

மன்பெருஞ் சிறப்பின் மாத்தா ளிரும்பிடி
எண்பதி னெல்லை யோடிக் கண்சுழன்
றுதிரப் புள்ளி [1]யூழூழ் வீழ்தரப்
பொதியவிழ் முட்டையிற் புறப்படத் தோன்றி
இறுதி யிடும்பை யெய்துபு மறுகித்
தாழ்ந்த கையிற் றாகித் தலைபணிந்
தாழ்ந்து செலவின் றாட்டந் தோன்ற
இன்னுயி ரின்னே விடுமிதற் கின்றென
மன்னுயிர் காவலன் மனத்தி னெண்ணி
யானை வித்தக னாதலி [2]னழுனிலத்
தேனை நின்ற விருபதி னெல்லையும்
எய்துவ னென்னுஞ் சிந்தையன் வெய்துற்
றேரலர் தாரோ னாற்றலி னூர்தரக்
கோலக் குமரன் குறிப்புவரை நில்லாது
காலக் [3]கரணத்துக் கடும்பிணி கனற்ற
ஊன்றதர்ந் திழிந்த வுதிர வெம்புனல்

---

104. ஊழ் ஊழ் - முறைமுறையே. 105. முட்டைபோல.

106. இறுதியிடும்பை - மரணத்துன்பத்தை.

107. கையிற்றாகி - கையையுடையதாகி.

108. செலவின்று - செல்லுதல் இல்லாமல். ஆட்டந்தோன்ற - ஆடுதலுற.

109. இதற்கு இன்னுயிர் இன்று இன்னே விடுமென - இப்பிடிக்கு இனியவுயிர் இன்று இப்பொழுதே நீங்கிவிடுமென்று; 53 : 35.

110. காவலன் - உதயணன்.

111. யானைவித்தகனாதலின் - யானையைச் செலுத்தும் ஆற்றலுடையனாதலால். அழுனிலம் - பாலைநிலம்.

112 - 4. எஞ்சிநின்ற இருபதெல்லையையும் கடப்பேனென்று எண்ணிச் செலுத்த. 115. குறிப்புவரை - குறிப்பின் எல்லையில்.

116. காலக்கரணத்து - காலத்தின் செயலால். கடும்பிணி கனற்ற - காலகூடமென்னும் நோய் வெதுப்ப; "கால கூட மென்னும் வெந் நோய், சாலவும் பெருக" இ. 3 : 129 - 30.

117. ததர்ந்து - சிதறி; க. 58 : 10; ந. 9 : 27.

பி - ம். 1 ஊழூர். 2 அயனிலத். 3 கூடத்துக்.

தான்புறப் பட்டுத் தாங்குதற் கரிதாய்
வாயிற் கூறி யாங்கு மற்றுத்தன்
நோயின் கடுமை நூக்குபு நலிய
என்னுயிர் விடுவ லிழிந்தனை யாகி
நின்னுயிர்க் கேம மறிந்தனை நீங்கென
வடுத்தீர் பெரும்புகழ் வத்தவ னிறைவனை
விடுப்பது போல நடுக்க மெய்திய
மெய்யிற் கூறிக் கைவரை நில்லாது
வெந்நோய் முடுக வேற்றவ னாடிறந்
தைந்நூற் றெல்லையு ளசைந்ததாற் பிடியென்.

ருஉ—பாலைநிலங் கடந்தது முற்றிற்று.

---

120. நூக்குபு - செலுத்தி. நலிய - நலிதலால்.

121. உயிர் விடுவல் - உயிரை விடுவேன்.

122. ஏமம் - பாதுகாப்பை.

125. மெய்யிற் கூறி - தன்னுடைய உடம்பின் வேறுபாட்டால் தெரிவித்து.

126. வேற்றவனாடு - பிரச்சோதனனுடைய நாட்டை. இறந்து - கடந்து.

127. ஐந்நூற் றெல்லையுள்: "ஒருநூற் றிருபத் தோரைந் தெல்லை" (48 : 171), "ஐம்பதி னிரட்டியொ டையைந் தெல்லை" (49 : 126), "பதிற்றுப் பத்தொடு விதிப்பட வெண்ணிய, ஐயைந் தெல்லை" (50 : 60-61), "ஐந்நான் கெல்லையொ டாறைந்து" (51 : 3), "எண்பதி னெல்லை" (52 : 103) என்பவற்றாலும், "ஏனை யின்ற விருபதி னெல்லை" (52: 112) என்பதனாலும், "ஐந்நூற் றெல்லையு ளசைந்ததாற் பிடி" (52: 127) என்பதனாலும் முன்பு கூறிய ஐந்நூற்றெல்லையுள் (43: 50) நானூற் றெண்பது கடந்து எஞ்சிய இருபது எல்லைக்குட் பிடி வீழ்ந்தமை அறிக. இந்த எல்லையின் அளவு இன்னதென்று இவற்றாற் புலப்படாவிடினும், "ஓரிரு காவத மூரா மாத்திரம்" (48 : 40) என்பதனால், இங்கே கூறிய எல்லை காதமென்று ஒருவகையாகத் தெரிகின்றது; ஆனாலும் இந்நூலாசிரியர் கொண்டிருக்கும் காத அளவு இன்னதென்று நன்கு விளங்கவில்லை.

## ருரு—பிடிவீழ்ந்தது.

(உதயணன் செயல்)

அசைந்த விரும்பிடி யற்ற நோக்கி
வயந்தக குமரற்கு வத்தவ னுரைக்கும்
[1] நொப்புணை வலியா நுரைநீர்ப் புக்கோற்
கப்புணை யவல்வயி னவன்கை தீர்ந்தாஅங்
கவந்தியர் கோமா னருண்முந் துறீஇப்
பை........க கொலேப்பாற் படவருத் தீந்த
[2] அரும்பிடி நம்மை யாற்றறுத் தன்ருற்
கரும்படு தீஞ்சொற் காஞ்சனை [3] யெழீஇ
அவர பக்கம் விரைவனை யிழிகெனக்
கவர்கணை நோன்சிலை கைவயி னடக்கி
வருத்தமுற் றலமரும் வாளரித் தடங்கட்
டிருத்தகு தாமரைத் திருப்புக்குத் திளைக்கும்
அருவரை யகலத் தணிபெறத் தழீஇக்
கருவரை மிசைநின் றிருநிலத் திழிதரும்
உமையொடு புணர்ந்த விமையா நாட்டத்துக்

ருரு—பிடிவீழ்ந்தது.

[பிடிவீழ்ந்தமையும், நற்கதி அடையும்படி உதயணன் அதற்கு மந்திரத்தை உபதேசித்ததும், அதன் பிரிவாற்றது வருந்தி அவன் அதற்கு நீர்க்கடன் நிகழ்த்தியதும், ஏனை மூவருடன் சிலதூரஞ் சென்று பிறர் அறிந்து கொள்ளாதபடி மற்றை நாட்பகலில் ஒரு மூள்ளிலவமரத் தடியில் அவன் மறைந்திருந்ததும் இதனுல் அறியலாகும்.]

1. அற்றம் - சோர்வை.

3. நொப்புணைவலியா - நொய்ம்மையாகிய தெப்பத்தைச் செலுத்

4. அவல் வயின் - பள்ளத்தில். [திக்கொண்டு; சீவக. 2654, ந.

7. ஆற்றறுத்தன்று - வழியிற்கைவிட்டது; “அற்றத்திட் டாற்றறுத்தான் மார்பு” கலி. கசச.

8. காஞ்சனை : விளி. எழீஇ - நீ எழுந்து.

9. அவரபக்கம் - இப்பிடியின் பின்பக்கத்தின் வழியே.

10. கவர்கணை : 59. 11. தடங்கண் - வாசவதத்தையை.

13. அகலத்துத் தழீஇ - மார்பிடத்தே தழுவி.

பி - ம். 1 நொய்ப்புணை. 2 இரும்பிடி. 3 தழீஇ.

கண்ணணங் கவிரொளிக் கடவுள் போல
மத்தக மருங்கிற் றத்துவன னிழிதர

(பிடி வீழ்தல்)

மருங்குற மண்மிசை வீழின் மற்றென்
இரும்புறத் [1] திருந்தோர்க் கேதமென் றெண்ணி
மல்குநீ ருடுக்கை மண்ணக மடந்தையைப்
புல்லிக் கோடல் புரிந்தது போலப்
பாவடி நிலனுறப் பரப்பி யுதயணன்
சேவடி தலையுறச் செய்தது பொறுவென
வணக்கஞ் செய்வது போல மற்றுத்தன்
அணிக்கேழ்ப் பொறிச்செவி யாட லாற்றுது
செங்கேழ்த் துருத்தியி னங்காந் துயிர்த்தொறும்
பைசொரி பவழம் போலப் படிதாழ்
கைசொரி யுதிரங் கான்றுவந் திழிதர

(உதயணன் செயல்)

வீழ்ந்த வாறுமது நோக்கிய திசையும்
தேர்ந்த நூல்வழித் திண்ணி தாகலின்
அந்நிலை யெய்து மிடுக்கணும் பின்னிலைத்
தன்னிலந் தழூஉதலுந் தான்வலிப் பெய்தி

---

16. கண் அணங்கு அவிர் ஒளி - காண்போர் கண்களை வருத்து கின்ற மிக்க ஒளி; "பூவந்த வுண்கண் பொறுக்கென்று - மேவித்தன், மூவா விளநலங் காட்டி" (சிலப். க : 34-5.) 15 - 6.=இ. 4 : 51 - 2.

14 - 6. மலையினின்றும் பூமிக்கு எழுந்தருளும் இறைவன் போல.

17. தத்துவனன் இழிதர - குதித்து இறங்க.

18. மருங்கு - பக்கம். 19. புறத்து - முதுகில். ஏதம் - துன்பம்.

22. பாவடி - பாவிய கால்கள்; 48 : 133.

23. செய்தது - செய்தகுற்றத்தை.

25. செவியாடலாற்றுது - செவியை அசைத்தல் செய்யாமல்.

27. துதிக்கைக்குப் பையும் இரத்தத்திற்குப் பவழமும் உவமை; "கவளங்கொள் யானையின் கைதுணிக்கப் பட்டுப், பவளஞ் சொரிதரு பைபோற் - றிவளொளிய, ஒண்செங் குருதி யுமிழும்" களவழி. 14.

29 - 32. பிடி வீழ்ந்ததன்மையையும் அது நோக்கிய திக்கையும் உதயணன் நூல்வழியே ஆராய்ந்து, முதலில் தனக்குத் துன்பமுண்டாகு

பி - ம். 1 திழிந்தோர்க்கு.

மணியும் புரோசையு மணிபூண் டவிசும்
கடித்தக முட்பட வெடுத்தனன் களைஇ
இன்னுயி ரினிவிடு மிதனுக் கின்றென
மன்னுயிர் காவலன் மனத்தி னெண்ணித்
துன்னிய தோழற்குத் தோன்றக் கூறி
வத்தவ ரிறைவன் மத்தகம் பொருந்திக்
குளிர்ப்பத் தைவந் தளித்த லானான்
இறுதிக் காலத் துறுதி யாகிய
ஓம்படைக் கிளவி பாங்குறப் பயிற்றிச்
செல்கதி மந்திரஞ் செவியிற் செப்பி
எம்மை யிடுக்க ணிம்மை தீர்த்தோய்
வரும்பிறப் பெம்மோ [1] டொருங்கா கியரெனச்
செந்தா மரைக்கண் டெண்பனி யுறைப்ப
நிறுத்த லாற்றா [2] நெஞ்சினிகழ் கவற்சியன்
மறுத்து முதயணன் வயந்தகற் குரைக்கும்
பெறற்கரும் பேர்யாழ் கைவயிற் பிரிந்ததும்
இயற்றமை யிரும்பிடி யின்னுயி ரிறுதியும்
எள்ளு மாந்தர்க் கின்ப மாக்கி

---

மென்பதையும், பின்பு தனக்குரிய இடத்தைத் தான் பெறக்கூடு மென்பதையும் நிச்சயித்து. [இடு மெத்தை.

33. புரோசை - யானைக் கழுத்திற் கட்டுங் கயிறு. தவிசு - முது

34. கடித்தகம் - யானையின் பின்புறத்தே தொங்கக் கட்டியிருக்கும் கேடகம்போன்றதொரு படை; உறைஎன்றும் கூறுவர்; 140. களைஇ - களைந்து.

35. இன்று இதனுக்கு இனி உயிர் நீங்குமென்று; 52 : 109.

39. தைவந்து - தடவி. 41. பயிற்றி - பலமுறை கூறி.

42. செல்கதி மந்திரம் - நற்கதியிற் செல்லுதற்குக் காரணமான மந்திரத்தை; "செல்கதி மந்திரஞ் செவியிற் செப்பிய, மல்லலங் குமரனை" (சீவக. 1217.) 44. ஆகியரென - ஆகுகவென்று.

45. உறைப்ப - துளிக்க. 47. மறுத்தும் - மீட்டும்.

48. 52 : 91. யாழ் - கோடவதி; ௩. 14 : 269.

49. இயற்றமை - பண்ணுதல் அமைந்த; 50 : 62.

50. எள்ளுமாந்தர் - பகைவர்.

பி - ம். 1 ஒருங்காதியர். 2 நெஞ்சினிகழ் வகற்சியின்.

உள்ளு தோறு முள்ளஞ் சுடுதலிற்
கவற்சியிற் கையற னீக்கி முயற்சியிற்
குண்டுதுறை யிடுமணற் கோடுற வழுந்திய
பண்டிதுறை யேற்றும் [1] பகட்டிணை போல
இருவே மிவ்விடர் நீக்குதற் கியைந்தனம்
திருவேர் சாயலைத் தேமொழித் துவர்வாய்க்
காஞ்சன மாலையொடு கண்படை கொளீஇக்
காவ லோம்பெனக் காவல னருளிக்
கவர்கணை நோன்சிலை கைவயி னீட்டி
[2] அரணக் கூர்வா ளசைத்த தானையன்
[3] கரணச் சேடகங் கைவயி னடக்கி
விச்சையின் மெலிந்துதன் விழுத்தகு நகரிழந்
தச்சமோ டொளித்த வணித்தகு பேரொளிக்
கோலக் குமரன் போலத் தோன்றி

---

51. உள்ளம் - நமது மனத்தை.

52. கையறல் - செயலறுதலை. [புடைய கரையில்.

53. குண்டு - ஆழம். இடுமணற்கோடு - இடப்பட்ட மணலை

54. பண்டி - வண்டி. பகட்டிணை - இரண்டெருதுகள்.

53 - 4. "ஆரைச் சாகாட் டாழ்ச்சி போக்கும், உரனுடை நோன் பகட் டன்ன வெங்கோன்", "பண்டச் சாகாட் டாழ்ச்சி சொலிய, வரி மணன் ஞெமலக் கற்பக நடக்கும், பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ" (புறநா. ௬0, ௯0), "மடுத்தவா யெல்லாம் பகடன்னான்" (குறள், 624), "நிரம்பாத நீர்யாற் றிடுமணலு ளாழ்ந்து, பெரும்பார வாடவர்போற் பெய்பண்டந் தாங்கி, மருங்கொற்றி மூக்கூன்றித் தாட வழ்ந்து வாங்கி, உரங்கெட் டுறுப்பழுகிப் புல்லுண்ணு பொன்றும்" (சீவக. 2784) என்பவற்றின் பொருள்கள் இவ்வடிகளுடன் ஒப்பிடற் [பாலன.

54 - 5. போல இயைந்தனம்.

52 - 5. பெருங். ௩. 3 : 57-62.

57. கண்படை கொளீஇ - துயிலச் செய்து.

59. கவர்கணை நோன்சிலை : 10.

60. அரணம் - பாதுகாப்பு. அசைத்த - கட்டிய.

61. சேடகம் - கேடகம்.

62 - 4. மேலே செல்லும் மந்திரத்தை மறந்து, தனது நகரத்தை இழந்து ஒளித்திருக்கும் தேவகுமரன் போலே தோன்றி.

பி - ம். 1 பகட்டிணைப். 2 யாணர்க். 3 தாணச்.

மடப்பிடி தனக்கு மாக்கடன் கழியா
தியங்குத லிலக்கண மிறைமகற் கின்மையிற்
செய்வது துணியுஞ் சிந்தைச் சூழ்ச்சியன்
வெவ்வழி நிலமிசை வில்லேப் பாட்டிடை
எவ்வெம் மருங்கினுந் [1] தெரிவோ னவ்வழி
நல்காக் [2]கரவ னடுவன் மேல்வர
ஒல்காத் தவமிலா தொளித்தது போலக்
குண்டுசுனை யடுக்கத்துக் கொழுங்கனி வீழ்ச்சிப்
பண்ணமை படைச்சுவர்க் கண்ணகன் றமைந்து
நாற்பெரு வாயி லேற்ப வியற்றிக்
கற்படை யமைத்துக் [3]கடுமழை மறப்பினும்
உட்படு நீரோ டூற்றுடைத் தாகி
[4] வாசற வறியா வளப்பருங் குட்டத்துப்
பாசடைத் தாமரை யாம்பலொடு பயின்று
புட்புகன் றுறையுமோர் பூம்பொக் கரணியை
முற்படக் கண்டே முகனம ருவகையன்
விளக்குறு வெள்ளி முளைத்துமுன் றோன்ற
வடக மீக்கோள் வாளொடு களைந்ததன்
படுகரை மருங்கிற் பாங்குற வைத்து

65. மாக்கடன் - அபரக் கிரியை.

68. வில்லேப்பாட்டிடை - அம்பு வீழும் எல்லையில்.

69. தெரிவோன் - நீர்நிலை யுளதோ வென்று ஆராயும் உதயணன்

70. நல்காக் கரவன் - உலோபி. நடுவன் - யமன்.

72. அடுக்கம் - மலைப்பக்கம்.

73. படைச்சுவர் - படைகளையுடைய சுவர்.

75. மழை மறப்பினும் - மழை இல்லையாயினும்.

77. வாசு அறவு அறியா-நீர் வற்றுதலை அறியாத; வாசு-நீர்; 'வா:' என்பது வடமொழியில் நீரெனப் பொருள்படுவது. குட்டம் - ஆழம்.

79. பூம்பொக்கரணி - ஒரு தாமரைக் குளத்தை; பொக்கரணி: புட்கரிணியென்பதன் திரிபு; புட்கரம் - தாமரை.

81. வெள்ளி - சுக்கிரன்; "வெள்ளி முளைத்த நள்ளிருள் விடியல்" [பொருந. 72.

82. வடகமீக்கோள் - மேலாடை.

83.=174. பாங்கு - நல்ல இடம்.

பி - ம். 1 தெரிவோற்கவ்வழி. 2 காலை நடுவன். 3 கடுமுறை, கடுமறை. 4 ஆசறவறியா.

வருதிரை புகூஉம் வருணன் போல
இருகரை மருங்கினும் புள்ளெழுந் தியம்பத்
தெளித்தலைத் தண்ணீர் குளித்தன னாடி
வாய்மைக் கொத்த வாய்ப்பூச் சியற்றித்
தூய்மைக் கொத்த தொழில னாகி
அரும்படைத் தானை யரசூர்ந் தியற்றிய
இரும்பிடி யினிதுழி யேறுக சென்றெனப்
போர்க்கடம் பூண்ட பொருவலித் தடக்கையின்
நீர்க்கட னாற்றிய நியமக் கிரிகையன்
பூம்போ தணிந்த [1] வாங்குகரை மருங்கின்
வழிபடு தெய்வம் வணங்குவன னேத்திக்
கழிபிடி வலங்கொண் டொழிவிடத் தொழிந்து
துணைபிரிந் தனைய னிணைபிரி மகன்றிலிற்
போத லாற்றான் காதலிற் கழுமிப்
பிடிக்க ணின்ற பேரன் பாளன்
வடிக்கண் மாதர் வருத்த மோம்பிப்
பகலிடத் தற்றம் படாமை யிருக்கும்
அகலிட மறித லருமை யுடைத்தெனத்
தாழிற் றாழ்ந்து சூழிற் சூழியல்
அந்த ணாளனொடு மந்திரம் விரும்ப
வஞ்சமி னண்பின் வயந்தக னுரைக்கும்

**(வயந்தகன் கூற்று)**

நஞ்சம் பொதிந்து நமக்கும் பிறர்க்கும்

---

87. வாய்மை - மந்திரம். வாய்ப்பூச்சு - ஆசமனம்.
90. இனிதுழி - நல்ல உலகத்தில். 92. நீர்க்கடன் - உதகக் கிரியை.
95. கழிபிடி - இறந்தபிடியை.
96. இணைபிரி மகன்றிலின் - தன்னுடைய துணையைப் பிரிந்த மகன்றிற் பறவைபோல; "துணைபிரி மகன்றி லொத்தாள்" சீவக. 302.
99. மாதர் - வாசவதத்தையின். ஓம்பி - பரிகரித்து.
100. அற்றம் படாமை - சோர்வுபடாமல்; பிறரறியாமல்.
102. தாழின் - தான் துன்புறின்.
103. அந்தணாளனொடு - வயந்தகனோடு. மந்திரம்-ஆலோசித்தலை.
105. நஞ்சம் - விடம்போன்ற கொடுந்தன்மை.

பி - ம். 1 வாய்க்கரைமருங்கினை.

அஞ்சல் செல்லா வரணகம் வலித்துக்
காட்டகத் துறையுங் கடுவினை வாழ்க்கை
வேட்டுவர் பயின்ற விடமற் றிந்நிலம்
நாட்டுச் சந்தது நாமிவ ணீந்தி
ஒன்றிரு காவதஞ் சென்ற பின்றைக்
குன்றகச் சாரற் குறும்புபல வடக்கிநம்
வன்றூ ளிளையர் வாழ்பதிக் கியங்கும்
வழியது வகையுந் தெரிவழிக் குறையும்
திகைத்திலே ஞதன் மதிக்குமென் மனனே
மடத்தகை மாதர் வருந்தினு நாமிவட்
கடப்பது கருமம் காவல வருளென

**(உதயணன் செயல்)**

வாளொடு கேடகம் வயந்தகற் கீத்துக்
கோலொடுங் கொடுஞ்சிலை கோமகன் கொண்டு
பள்ளி கொண்ட வள்ளியஞ் சாயற்
கற்பொடு புணர்வியைக் காஞ்சன மாலாய்
நற்பொரு ளிதுவென நன்கன மெடுப்பி
நடக்கல் வேண்டு நாமிவ ணீங்கி
இடுக்க ணில்லா விடம்புகு மளவென
உற்றவ னுரைத்த வுறுதி மாற்றம்

**(காஞ்சனை செயல்)**

பொற்றூர் வேந்தன் பூங்கொடிப் பாவையைச்

---

106. அஞ்சல் செல்லா - அஞ்சாத. அரணகம் - அரண்களின் உள்ளிடத்து.

109. இரண்டு நாடுகளின் சந்தி இது. நீந்தி - கடந்து.

111. குறும்பு பல - சிற்றரண்கள் பலவற்றை; "அருங்குறும் புடுத்த கானப் பேரெயில்" புறநா. உக.

116. என - என்று வயந்தகன் சொல்ல.

118. கோல் - அம்பு. 119. வள்ளி = வல்லி - கொடி.

120. கற்பொடு புணர்வியை - கற்புடன் கூடிய வாசவதத்தையை.

121. நற்பொருள் இது - நற்காரியம் இது.

122-3. இடுக்கணில்லா இடம்புகுமளவும் நடக்கல் வேண்டும்.

125. பாவை - வாசவதத்தை.

செவ்விதிற் றேர்ந்து கைவிரல் கூப்பித்
தோழி காஞ்சனை தோன்றக் கூறிக்

(வாசவதத்தையின் நிலை)

காழில் பஞ்சி [1]யூழறிந் தாற்றி
விரற்கொண் டமைத்து வித்தக ரூட்டிய
அரத்த வடர்மையு மரந்தோய்ந் தென்ன
நோய்கொண்டு கறுக்கு மாய்மலர்ச் சேவடி
ஏழடி யிடுத லாற்றா தாயினும்
ஊர்திரைப் பௌவ மூலாவு மூக்கமொடு
பூமலர்க் கோதையும் பொறையென வசைவோள்
மாமலை தாங்கு மதுகையள் போல
இன்பக் காதலற் கேத மஞ்சிப்
பொன்புனை பாவையும் போகுதல் வலிப்பக்
கொடிப்படை கோமக னுகக் கூழை
வடுத்தீர் வயந்தகன் வாள்வலம் பிடித்துக்
கடித்தகப் பூம்படை கைவயி னடக்கிக்
காவல் கொண்ட கருத்தின னுகப்
புரிசைச் சுற்றங் காஞ்சனை யாக
உரிமைக் கொத்த திருமா மேனியைப்
புன்புலர் விடியற் புறம்பனி யொழுகிய
அம்புத லதர்வை யணிநடைக் [2] கியலிய

128. காழ் இல் - விதையில்லாத.
130. அடர்மை - நொய்ம்மை.
132. "ஒன்பதின்சா ணடப்பினு மொருகாத மென்றஞ்சும்", "ஏழடி யூக்கி நடந்துசெலா" சீவக. 179, 1384.
133. பௌவம் - கடல்.
134. பூமாலையையும் பாரமாக நினைந்து மெலிபவள்; "அனிச்ச மாலை பெரும்பாரமாய்" (சீவக. 231.) 135. மதுகை - வலி.
136. சாதலற்கு - தலைவனுக்கு. 137. வலிப்ப - துணிய.
138. கொடிப்படை - முன்படை. கூழை - பின்படை.
140. கடித்தகப் பூம்படை; 34.
142. புரிசைச்சுற்றம் - சுற்றுப்படை. [இயல
145. அதர்வை - ஒருகொடி; 55 : 53; வழியுமாம். இயலிய -

பி - ம். 1 யூழறிந்தூட்டி. 2 இசலிய.

வனப்பொடு புணரிய வடகப் போர்வையை
மணிப்பூண் வனமுலை யிடைக்கரை புதைஇப்
பைந்தொடிப் பணைத்தோள் பைய வீசி
அஞ்செந் தாமரை யகவித ழன்ன
சில்லரித் தடங்கண் மெல்லென மிளிர
மானின் மடப்பெடை மம்ம ரெய்த
வேனிற் காலத்துத் தான நோக்கி
மணிக்கட் பீலி மாமயிற் பேடை
அணிக்கவின் மென்னடை யனுக்க வசைந்தசைந்
தியலா நின்ற காலை வியலிடத்
தெல்லை யாரிரு ணல்வினை முன்னர்ப்
பாவம் போலப் பறைந்துகை யகலக்
கோவத் தன்ன குழவிக் கோலமொடு
குணமலைப் பிறந்து குடவரை நிமிர்ந்து
கனல்கதிர் கான்று கடுமை கூராத்
தனிக்காற் றேரோன் றனிமை யெய்த
அனித்த மிதிப்பினும் பனித்த லாறு
ஒளிச்செஞ் சீறடி யுருக்கரக் கேய்ப்ப
உளித்தலை வெம்பர லூன்றுபு நலியப்
பவளக் கொப்புளம் பக்கம் பயிலத்

---

147. புதைஇ - புதைத்து. [சீவக. 341.

148. பைய வீசி - மெல்ல வீசி; "மயில்கைவீசி நடந்ததே."

150. மிளிர - மிளிர்தலால். 154. அனுக்க - வருத்த.

156-7. நல்வினையின்முன்னர்ப் பாவம் நீங்குவதுபோல இருள் நீங்க; "தவத்தின்முன் னில்லாதாம் பாவம்" நாலடி. 51.

160. கூரா - மிக்கு. 161. தனிக்கால் - ஒருருளை.

162. அனித்தம் - அனிச்சமலரை; பனித்தல் - நடுங்குதல்; "அனிச்சமும்..........மாதர், அடிக்கு நெருஞ்சிப் பழம்" (குறள், 1120); "பஞ்சியடி ரனிச்ச நெருஞ்சி யீன்ற பழமாலென், றஞ்சுமல ரடிகள்"

163. உருக்கு அரக்கு ஏய்ப்ப - சிவக்க. [சீவக. 341.

164. உளித்தலை வெம்பரல் - உளிபோன்ற கூரிய தலையையுடைய வெவ்விய பருக்கைக்கல்; "உளிமுக வெம்பரல்" (அகநா. ௫௫ : 3); பெருங். க. 52: 6, அடிக்.

165. பயில - பயிலுதலால். "கோவத் தன்ன கொப்புளங் கூர்ந்து" (54 : 59) என்பர் பின்.

தவளைக் கிண்கிணி தாங்குத லாற்றா
திவளை திடுக்க ணிசைத்தும் யாமெனத்
ததும்புகுரற் பூச லிரங்குவன வொலிப்ப

(உதயணன் கூற்று)

மணங்கமழ் நறுந்தார் மன்ன குமரன்
வயந்தகற் குரைக்கும் வாலிழை வருந்தினள்
இயங்குதல் செல்லா திருக்குமிடங் காணெனக்

(வயந்தகன் செயல்)

கார்ப்பூ நீலங் கவினிய கவித்துறை
நீர்ப்பூம் பொய்கை நெறியிற் கண்டதன்
படுகரை மருங்கிற் படர்புறம் வளைஇக்
கன்முரம் படுத்துக் [1]கவடுகா ழூழ்ந்து
புள்ளினம் புகவினும் புகற்கரி தாகி
ஒள்ளெரி யெழுந்த வூழ்படு கொழுமலர்
முள்ளரை யிலவத்துண் முழையரண் முன்னி
முள்ளங் கோடு மூழிலைப் பிறங்கலும்
வள்ளிலை வாடலும் வயந்தகன் களைந்து

166. தவளைக்கிண்கிணி: பெருங். க. 40: 18, 46: 246; ங. 9: 167; ச. 12: 161; ரு. 9: 90.

168. "ததும்புங் கிண்கிணி" (உ. 7: 70) என்பர் பின்.

166 - 8. கிண்கிணி ஒலிப்ப.

170. உரைக்கும் - உரைப்பான். 171. செல்லாது: முற்று.

172. கவி - முழக்கம். 174. = 83. வளைஇ - வளைந்து.

175. கவடு - மரக்கிளைகள்.

177. நெருப்பைப் போன்ற செந்நிறப் பூக்களையுடைய.

178. முள்ளரை - முள்ளையுடைய அடிப்பக்கம். முழையரண் - குகைபோன்ற காவலிடத்தை.

177 - 8. இலவமலருக்கு நெருப்பு: "எரிமல ரிலவத்து" (பெருங். க. 54: 143); "எரிப்பூ விலவத் தூழ்கழி பன்மலர்" (ஐங். ஙசஅ); "எரியுரு வுறழ விலவ மலர" (கலி. ஙங : 10); "இலவத், தழலகைந் தன்ன வலங்குசினை யொண்பூ" அகநா. உசக.

179. முள்ளங்கோடு - முள்ளையுடைய கிளைகள். ஊழிலைப் பிறங்கல் - உதிர்ந்த சருகுகளின் குவியல்.

180. வள்ளிலை - பெரிய இலை.

பி - ம். 1 கவறு.

பாய லமைத்த பாசடைப் பள்ளியுள்
ஆய்வளைத் தோளியை யமர்துயில் கொளீஇத்
தடம்பெரும் பொய்கை தண்ணிழல் வலியா
ஒடுங்கினர் மாதோ கடும்பகல் கரந்தென்.

௫௫—பிடிவீழ்ந்தது முற்றிற்று.

---

181. பாசடைப் பள்ளி - பசிய இலையாலாகிய படுக்கை.
183. பொய்கையும் நிழலும் தமக்கு ஆதாரமாகக் கொண்டு.

---

## ௫௪—வயந்தகனகன்றது.

(அந்தி வருதல்)

கரந்தன ரொடுங்கிய கடும்பகல் கழிந்தபிற்
பரந்த வானம் பசலை யெய்த
அழலுமிழ் கதிரோ னத்தஞ் சேர
நிழலுமிழ் செல்வ னிலாவிரித் திமைப்ப
வான்றோ யிஞ்சி வளநகர் வரைப்பிற்
றேன்றோய் கோதைத் திருநிலை மகளிர்
வெள்ளி விளக்கத் துள்ளிழு துறீஇப்
பள்ளி மாடத்துப் பரூஉச்சுடர் கொளீஇக்
காடி கலந்த கோடிக் கலிங்கம்

---

௫௪—வயந்தகனகன்றது.

[உதயணன் முதலியவர்கள் அங்கிருக்கையில், இப்போதே இடபகன்பாற் சென்று ஊர்திகளும் நால்வகைப் படைகளும் கொணர்வேனென்று சொல்லி அவன்பால் விடைபெற்று வயந்தகன் புட்பக நகரத்திற்குச் சென்றது இதிற் கூறப்படும்.]

2. பசலை யெய்த - பொன்னிறத்தை அடைய.

3. கதிரோன் - சூரியன். அத்தம் - அத்தகிரியின்கண்; "அத்த மென்னும், பொன்னஞ் சிலம்பு" இறை. சூ. 18, மேற்.

5. இஞ்சி - மதில். 6. சுமங்கலைகள்.

7. வெள்ளித் தகளியினுள். 8. சுடர் - தீபம்.

9. காடி - கஞ்சி. கோடிக் கலிங்கம் - புதிய ஆடை.

கழும வூட்டுங் காழகி னறும்புகை
முழுநிலா மாடத்து முடிமுத றடவக்
கேள்வித்துறை போகி வேள்வி முற்றிய
அந்த ணாளர் தந்தொழி றொடங்கப்
பால்வெண் குருகின் பன்மயிர்ச் சேவல்
பூம்பொறிப் பெடையைப் புலவி யுணர்த்திப்
பொறிப்பூம் பள்ளி புகாஅ தயல
மதிதோய் மாடத்து மழலையம் புறவொடு
வெள்ளிவெண் மாடத்துப் பள்ளி கொள்ளும்
பசும்பொ னகரமர் விசும்புபூத் ததுபோல்
செழுஞ்சுடர் விளங்குஞ் சிறுபுன் மாலை
வையெயிற்றுத் துவர்வாய் வாசவ தத்தைதன்
தார்ப்பூண் மார்பிற் றந்தை [1]கடிமனைச்
சீர்ப்பூண் களைந்த சில்லென் கோலமொடு
நிலாவெண் முற்றத் துலாவி யாடிச்
செம்முது செவிலியர் கைம்முதற் றழீஇய
சாலி வாலவிழ் பாலொடு கலந்த
தமனிய வள்ளத் தமிழ்த மயிலாள்

---

10. கழும - மயங்க.

9 - 10. "காடியுண்ட பூந்துகில் கழும வூட்டும் பூம்புகை" சீவக. 71.

11. முடிமுதல் - மேலிடங்களை.

12. கேள்வி - கேட்கக்கடவன; வேதமுமாம். துறைபோகி - முற்றக்கற்று.

12 - 3. பெருங். உ.15 : 38 - 9 ; பு. வெ. 163.

14. சேவல் - ஆணன்னம் ; 33 : 32.

16. பூம்பள்ளி - பூவாகிய படுக்கை.

17. "மாடக் கொடுமுடி மழலையம் புறவும்" (ட. 15 : 278) என்

19. பொன்னகர் அமர் - அமராவதி தங்கப்பெற்ற. [பர் பின்.

22. கடிமனை - அரண்மனையில்.

23. சீர்ப்பூண் - கனமான ஆபரணங்களை.

25. கைமுதல் - கையின்கண்.

26. சாலிவாலவிழ் - வெள்ளிய நெற்சோற்றை.

27. அமிழ்தம் - உணவை. அயிலாளாக.

பி - ம். 1 கடிமணச்.

யானையும் புலியுங் [1] கூன்ற் காடியும்
அரிமா னேறு நரிமான் சூழ்ச்சியும்
........வுங் காட்டமொ டனையவை பிறவும்
தந்துரைக் கிளவியிற் றந்துறை முடித்த
தன்னிணை யாயம் பன்னொடி பகரச்
செவியிற் கேட்குஞ் செல்வஞ் செய்யாது
நண்ணிய தோழியொடு கண்ணிற் காணக்
கலவ மஞ்ஞை கவர்குரல் பயிற்றி
இலவங் கொம்புதோ றிறைகொண் [2]டீண்டப்
பொறிவரி யிரும்புலிப் போத்துநனி வெரீஇ
மறியுடன் றழீஇய மடமா னம்பிணை
துள்ளுநடை யிரலையொடு வெள்ளிடைக் குழுமப்
பிடிக்கணந் தழீஇய பெருங்கை யானை
இடிக்குர லியம்பி யெவ்வழி மருங்கினும்

---

28 - 32. யானை முதலியவற்றைப் பற்றிய தந்துரைக்கிளவிகளில் தமக்குரியவற்றை முற்ற அறிந்த ஆயம் பல நொடிகளைப் பகர. தந்துரைக் கிளவியென்றது உரைவகையுள் ஒன்றாகிய பொருளொடு புணராப் பொய்ம்மொழியை. அம்மொழியாவன, 'ஒரு பொருளின்றிப் பொய்படத் தொடர்ந்து சொல்லுவன. அவை, ஓர் யானையுங் குரீயுந் தம்முள் நட்பாடி இன்னுழிச் சென்று இன்னவாறு செய்தனவென்று அவற்றுக்கு இயையாப் பொருள்பட்டதோர் தொடர்நிலையாய் ஒருவனுழை ஒருவன் கற்று வரலாற்றுமுறைமையான் வருகின்றன' (தொல். செய். சூ. 173, பேர்.); பெருங். க. 33: 175 - 6; நெடுநல். 152 - 4. "செம்முது செவிலியர் பொய்ந்நொடி பகர" தொல். செய். சூ. 176, பேர். மேற்.

35. கவர் குரல் - விரும்புங் குரலை; "வாரணம்...பருந்தொடு கவர்குரல் பயிற்றும்" (சீவக. 2106.) 36. இறைகொண்டு - தங்கி.

35 - 6. = 143 - 4; "இலவ மேறிய கலவ மஞ்ஞை" பழம் பாடல்.

37. பொறி - புள்ளி. புலிப்போத்து - ஆண்புலி; "புலிப்போத் தன்ன புல்லணற் காளை" பெரும்பாண். 138.

38. மறி - குட்டி. பிணை - பெண்மான். 39. இரலை - கலைமான்.

38 - 9. "திரிமருப் பிரலையொடு மடமா னுகள" (முல்லை. 99.) குழும - சேர்ந்து நிற்ப. 41. இயம்பி - முழங்கி.

பி - ம். 1 கானற். 2 ஈண்டிப்.

நீர்வழிக் கணவரு நெடுங்கைய வாகிக்
காரிரு முகிலிற் கானம் பரம்பச்
செழுநீர்ப் பொய்கையுட் கொழுமலர் கூம்பப்
புள்ளினங் குடம்பை சேரப் புல்லென
அம்புறு புண்ணி னந்திவந் திறுப்ப

(வயந்தகன் கூற்று)

ஓங்கிய பெரும்புக ழுருமண் ணுவாவுறை
தேங்கமழ் திருநகர்த் திசையு மெல்லையும்
ஆற்ற திடரு மவ்வழி யுள்ள
பொல்லாக் குறும்பும் போகுதற் கருமையின்
காலை நீங்கிய மாலை யாமத்துப்
பனிப்பூங் கோதையொடு தனித்தன மியங்கின்
அற்றந் தரூஉமஃ தமைச்சிழுக் குடைத்தென
உற்ற தோழ னுதயணற் குரைக்கும்
கொடியணி நெடுமதிற் கொற்றவன் மடமகள்
பிடிமிசை யிருந்து பெருங்கவின் வாடி
வருத்த மெய்திய வண்ணமும் வழிநடந்
தாரத்த மார்ந்த வஞ்செஞ் சீறடி
கோவத் தன்ன கொப்புளங் கூர்ந்து
நோவ வொல்கி நொசிந்த மருங்குலள்
அமிழ்துற ழடிசி லயிலா வசைவொடு

---

42. அணவரும் - மேலெடுத்த. 43. பரம்ப - பரவ.

40 - 43. "மழையென மருண்ட மம்மர் பலவுடன், ஓய்களி றெடுத்த நோயுடை நெடுங்கை", "துனையெரி பரந்த துன்னரும் வியன்காட்டுச், சிறுகண் யானை நெடுங்கை நீட்டி, வான்வாய் திறந்தும் வண்புனல் பெறாஅது, கான்புலந்து கழியும்" அகநா. ௧௧௧, ௧௭௧.

44. கொழுமலர் - தாமரைமலர். [சயந்தி.

46. புண்ணிலுற்ற அம்பைப்போல் (33 : 94-6.) 48. திருநகர் -

49. ஆற்றது - வழியினது. 50. குறும்பு - சிற்றரண்.

53. அஃது - அங்ஙனம் செல்லல். அமைச்சு - அமைச்சனது தன்மை. என - என்று வயந்தகனெண்ணி. 55. வாசவதத்தை.

58. ஆரத்தம் - செம்பஞ்சுக்குழம்பு.

59. =53 : 165. கோவத்தன்ன - இந்திரகோவத்தையொத்த.

60. நொசிந்த - நுணுகிய. மருங்குலள் : முற்று.

61. அசைவு - வருத்தம்.

நவைகொண் டழிந்து நடுக்க மெய்தித்
தாங்க லாற்று டளர்தலு மாங்கே
உலைவில் பெரும்புகழ் யூகி யொட்டார்
நிலவரை நிமிர்வுறு நீதி நிறீஇக்
கூற்றுறழ் மொய்ம்பி னேற்றுப்பெய ரண்ணல்
பரந்த படையொ டிருந்தினி துறையும்
புகலரும் புரிசைப் பொருவில் புட்பகம்
இருளிடை யெய்திப் பொருபடை தொகுத்துக்
காலை வருவேன் காவ லோம்பிப்
போகல் செல்லாது புரவல விருவென
உள்ளத் துள்பொரு ளுணர்ந்தோன் போல
வள்ளிதழ் நறுந்தார் வயந்தக னுரைத்த
மாற்றங் கேட்டே மன்னவன் மனமுவந்

**(உதயணன் கூற்று)**

திற்றுங் கேளென மற்றவற் குரைக்கும்
கொடியணி நெடுமதிற் கொடிக்கோ சம்பிப்
படியணி நெடுங்கடைப் பகலங் காடியுள்
ஊறுகளி யானை யொருங்குட னேற்றி

---

62. நவைகொண்டு - இகழ்ந்து.
63. ஆங்கே - அப்படியே. 64. ஒட்டார் - பகைவர்.
65. நிலவரை - நில எல்லையில். நிறீஇ - நிறுவியிருத்தலால்.
64 - 5. யூகி, பகைவர் நாட்டெல்லையில் உதயணனுக்கு அனுகூலமாக இருக்கும்படி பல சாதனங்கள் செய்திருத்தல், "கூழினு-முடையினும்" (43 : 53) என்பது முதலியவற்றாலும் விளங்கும்.
66. ஏற்றுப்பெயரண்ணல் - இடபகன்; "யாப்புடை நண்பி னேற்றுப் பெயரன்" (56 : 148.) 68. புட்பகம் - ஒருநகரம்.
வண்ணமும் (57), தளர்தலும் (63), ஓம்பி (70) யென்க.
72. உள்ளத்து - உதயணன் உள்ளத்தில்.
75. இற்றும் - இதனையும்.
இடபகனுக்கும் தனக்குமே தெரிந்த ஓரடையாளத்தையும் நிகழ்ந்தவற்றையும் சொல்லும்படி வயந்தகனுக்கு உதயணன் கூறுகின்றான்.
76. கோசம்பிநகரில்.
77. படி - ஏறும் படிகள். பகலங்காடி - பகற்காலத்திற்குரிய கடைத்தெருவில். [கொண்டு.
78. களி - மதம். இடபகனையும் யானைமீது என்னுடன் ஏற்றிக்

வீறுபடு கோலமொடு வியனகர் விழவணி
கொண்ட காலைத் தண்டப் பாற்படுத்
தென்னணி பெருங்கலந் தன்னணிந் தேற்றிக்
குற்றமில் பெரும்புகழ்க் கோப்பெருந் தேவி
கொற்றக் கோயிலுண் மற்றப்பிற ரின்றித்தன்
பெருமலர்ச் சீறடி யிருநிலத் தியங்கத்
தண்ட வேந்தன் றமரா நமக்கெனக்
கொண்ட கொள்கையுங் குறிப்பினது நிலைமையும்
யானை வாரியுஞ் சேனை வீடும்
அடுத்தனை யாராய்ந் தறிய வென்வயின்
நெடித்தல் செல்லாய் விடுத்த னீயென
விடுத்தனன் விடுத்து வேந்த னிருந்த
அந்தக் கோட்டியுண் மந்திர மாகப்
பெரும்பொரு ளிதுவெனப் பொருந்தக் கூறி
அரும்பெறல் யூகியு முருமண் ணுவாவும்
வயந்தகன் வரினு நயந்தனன் றெரியா
திருக்க தானென நெறிப்படக் கூறிக்
குறிப்பெழுத் தோலை பொறிப்புனைந் தொற்றிய
அம்மடி யன்றியு மாகு மெய்ம்மொழி
வருவோர்க் கறியக் கூறி மற்றென்
செருவில் வேந்தன் செய்கை யென்ற
பின்ன ரல்லது துன்னின ரிவரெனத்
துணியப் பெறாயெனத் துணிந்தியான் கூறிய
பணிவகை யுண்டது பண்டைக் காலத்

---

80. தண்டப்பாற்படுத்து - சேனைகளினிடையே சேர்த்து.
82 - 3. அந்தப்புரத்தில். 84. இயங்க - இயங்குதலால்.
85. 'இவன் சேனாபதி ; நமக்கு நண்பன்' என்று கூறி.
89. நெடித்தல் செல்லாய் - தாமதியாதே. விடுத்தல் - விடை பெற்றுக் கொள்க.
91. அந்தக்கோட்டி - இரகசியமாகக் கூடும் கூட்டம்.
94. வயந்தகனும் வரினென உண்மையை மாறிக் கூட்டுக. தெரி
95. தானென்றது இடபகனை; [illegible] [யாதபடி.
97. மடி - ஓலைக்கூடு. 102. பணி - கட்டளை.
76 - 102. கோசம்பி நகரத்தின் யூகனும் இடபகனும் ஒரு பானை

தின்றிந் நிலைமைக் கன்றது நினைப்பின்
அற்றந் தருமென வுற்ற தோழற்
கடையா ளருண்மொழி யறியக் கூறிப்
படையாள் கடுந்தொழிற் பற்று மன்னன்
பாவையைத் தழீஇப் பண்ணுப்பிடி யேற்றி
எய்தா வரும்பொரு ளெய்திய பின்றைப்
பொய்வகை புணர்த்த புணர்ப்பும் போந்தபின்
செய்வகை யறிதற் பொருட்டுஞ் சேனையுள்
உய்வகை மற்றவ னொழிந்த வுறுதியும்
உறுதி யோரான் பிறிதுநினைந் தொற்றிக்
குஞ்சரங் கடாஅய்க் கொணர்மின் சென்றெனும்
வெஞ்சின வீரன் வெகுட்சியும் வெகுட்சியின்
விடுத்த பல்படை பெயர்த்தற் பொருட்டா
நம்படை யொழிந்த வண்ணமும் வெம்படைக்
காவல னொடு கங்கு னீங்கிச்

---

யின்மேற்கொண்டு விழாவுக்குரிய அணியுடன் அங்காடியுட் சென்று பிறகு சேனைக்கூட்டத்திற்குப் போய் அங்கே இடபகனுக்கு எனது பேரணிகலங்களைப் பூட்டிப் பிறகு அந்தப்புரத்திற்கு அவனுடன் சென்று ‘இவன் சேனாபதி; நமக்கு நண்பன்’ என்றுகூறிய கொள்கையையும் குறிப்பையும் கூறுக. அன்றியும், ‘நீ சென்று யானைவாரி முதலியவற்றை ஆராய வேண்டுமாதலின் என்பால் தாமதிக்காமல் செல்க’ என அவனை விடுத்துப் பிறகு ‘அரசவையுள் இரகசியமாகக் கூடும் இடத்தில் யூகியும் உருமண்ணுவாவும் வயந்தகனும் வரின் தெரியாதவன் போல இருப்பாயாக’ என்றால் விடுக்கப்பட்ட ஓலையையும் அடையாள வார்த்தைகளையும் சொல்லிச் சேனாபதியின் செயல் இனி யாது எனக் கேட்டபின்னரே வருபவர்களை நம்மொடு சேர்ந்தவர்களென்று துணிவாயாக’ என்று நான் முன்பு கட்டளையிட்டது [உண்டு.

104. அற்றம் - சோர்வை.

105. அடையாள் - அடையாளம்; 56 : 184.

76 - 105. — 56 : 181 - 4. 106. படையையுடைய.

109. புணர்ப்பு - வாசவதத்தையை அழைத்துச் செல்லும்படி அரசன் கூறியதாகச் சொல்லி விடுத்தது முதலியன.

110. உஞ்சேனையுள். 111. அவன் - யூகி.

114. வீரன் - பிரச்சோதனன்.

சார வந்த தன்மையுஞ் சார்ந்தபின்
அரும்பொறி யழிந்த வெந்திரம் போல
இரும்பிடி வீழ்ந்தத னின்னுயி ரிறுதியும்
இறற விரும்பிடிப் பக்க நீங்கி
இடுக்க ணெய்தி யிலங்கிழை மாதர்
நடக்க லாற்று ணடுக்க மெய்திக்
கடக்கருங் கானத்துக் கரந்த சேக்கையும்
சேக்கையு ணின்றுநீ சென்ற செலவும்
வாய்ப்பக் கூறி வாட்படை தொகுத்து
வையம் பூட்டி வழிவரல் விரைந்தென்
எவ்வந் தீர விருள்கழி காலைக்
கோற்குறி யெல்லையுட் குறிவழி வம்மென
வாட்டிறல் வத்தவன் வயந்தகற் போக்கிப்

(உதயணன் செயல்)

பணிவரை மார்பன் றனிய னாகி
வேழ வேட்டத்து வீழ நூறி
அருஞ்சிறை யெய்தி யாப்பொடு புக்க
பெருஞ்சிறைப் பள்ளிப் பேரிருள் போலும்
துன்பப் பெருங்கடற் கின்ப மாகி
மாந்தளிர் மேனி யேந்துபுணை யாக
நீந்துதல் வலித்த நெஞ்சின னாகிக்
கணையொடு திரிதருங் காமன் போலத்

---

119. பொறி - இயக்கும் விசைக்கருவி. 122. மாதர் - வாசவதத்தை.
124. கரந்த - மறைந்த. சேக்கை - தங்குமிடம்.
127. விரைந்துவரல் - விரைந்து வருக.
132. வேழ வேட்டத்து - யானை வேட்டையில். பகைவரை வீழ நூறி.
133. சிறையெய்தி - சாலங்காயனால் சிறையிலுற்று.
135. கடலைக் கடத்தற்கு. 136. வாசவதத்தை புணையாக.
138. "வெங்கணை நோன்சிலைக் காம னிவனெனும்" (உ. 15 : 97), "பூமென் கணையும் பொருசிலையுங் கைக்கொண்டு, காமன் றிரியுங் கருவூரா" (சிலப். ௯ : 49, அடியார். மேற்.), "கைச்சிலை கணையோ டேந்திக் காமனிக் கடையைக் காப்பான்" (சீவக. 2090) என்பவை இங்கே அறியற்பாலன.

துணைநல மாதரைத் தோழியொடு துயிற்றித்
துஞ்சல் செல்லான் வெஞ்சின விடலை
வாள்வலங் கொண்டு காவ லோம்ப
வரிநிறக் கோம்பி வாலிமிழ்ப்பு வெரீஇ
எரிமல ரிலவத் திருஞ்சினை யிருந்த
[1]அலந்த மஞ்ஞை யாமங் கூவப்
புலர்ந்தது மாதோ புரவலற் கிரவென்.

௫௪—வயந்தகனகன்றது முற்றிற்று.

---

140. பாலைநிலத்துக்கேற்ப விடலை என்றார்.
142. கோம்பி - பச்சோந்தி. இமிழ்ப்பு - கட்டுதற்கு.
143. எரிமலரிலவம் : 53 : 177 - 8, அடிக்.
143 - 4. = 54 : 35 - 6.
142 - 4. "கோம்பிக் கொதுங்கிமே யாமஞ்ஞை" திருச்சிற். 21.
144 - 5. ஆசிரியப்பா 'என்'என்னும் அசைச் சொல்லால் இற்றதற்கு 'அலந்த மஞ்ஞை......புரவலற் கிரவென்' என்னும் இந்தப்பகுதி மேற்கோள் ; யா. வி. சூ. 69 ; இ-வி. சூ. 732.

பி - ம். 1 அனந்தர்.

---

## ௫௫—சவரர் புளிஞர் வளைந்தது.

(உதயணன் செயல்)

புலர்ந்த காலைப் பூங்கழற் குருசில்
மலர்ந்த பொய்கையுண் மணிநிறத் தெண்ணீர்க்
கொழுமலர்த் தடக்கையிற் கூட்டுபு கொண்டு

---

௫௫—சவரர் புளிஞர் வளைந்தது.

[பாலைநில மாக்களாகிய சவரரும் புளிஞரும் பிடியின் அடிச்சுவடு முதலியவற்றைக்கண்டு இவ்வழியே யாரோ சென்றிருக்கின்றனரென்பதை யறிந்து தேடிவந்து உதயணனைக்கண்டு பொருது தோல்வியுற்று வேறென்றுஞ் செய்தற்கு ஆற்றலில்லாதவர்களாகி அவனைச் சூழ்ந்து வளைந்து நின்றது இதனுள் அறியலாகும்.]

சவரர் புளிஞரென்பன, வேட்டுவச் சாதியின் விசேடங்கள்.
2. மணி - பளிங்கு. மணிநிறத்தெண்ணீர் : 40 : 122.
3. கூட்டுபு - கைகளைச் சேர்த்து.

குழவி ஞாயிற் றெழிலிகந் தெள்ளும்
திருமுக மருங்கிற் செருமீக் [1] கூரி
ஒள்ளிழை மகளி ருள்ளங் கவற்றும்
செந்தா மரைக்கண் கழீஇ மந்திரத்
தந்தி கூப்பித் தென்புலக் கிறைஞ்சித்
தமரிற் பிரிந்ததன் றனிமையை நினைஇ
அமரிய தோழி யாகத் தசைந்து
சுடர்முகம் புல்லெனப் படரொடு மயர்ந்து
வேனில் வள்ளியின் மேனி வாடி
உள்ளங் கனலு மொள்ளிழை மாதரைக்
குற்ற நலத்துக் குறிப்புநனி காட்டி
உற்ற வெந்நோ யோம்பென வுற்ற
காஞ்சன மாலையை யாங்கன மருளி
வருபடைக் ககன்ற வயந்தகன் வருவழிப்
பொருபடை யண்ணல் பொழில்வயி னிருப்பக்
கடுவிசைக் கனலி சுடுகதிர் மருங்கிற்
குடுமி நெற்றிக் கூருளி யன்ன
வல்வாய் வயவன் வறண்மரத் துச்சிப்

---

4 - 5. உதயணன் முகத்திற்குச் சூரியனுவமை.

7. கண்கழீஇ - கண்களைக்கழுவி; இதனை இடக்காடக்கலென் பர்; "நாளந்தி கோறின்று கண்கழீஇத் தெய்வத்தைத், தானறியு மாற் றாற் றொழுதெழுக" (ஆசா: 10.) 8. காலைக்கடனைக் கழித்து..

9. தன்னென்றது வாசவதத்தையை.

10. அமரிய - விரும்பிய. 11. படர் - துன்பம்.

12. வள்ளி - கொடி; "வள்ளியஞ்சாயற், கற்பொடு புணர்வி" (53 : 120 - 21) என்றார் முன்னும். 14. குறிப்பினை.

15. ஓம்பு - பரிகரி.

18. அண்ணல் - உதயணன்.

நிமித்தத்தையறிந்து உதயணன் பகைப்படை வருமென்று போர் செய்தற்குச் சந்நத்தனாக இருத்தல்.

19. கனலி - சூரியன். கிழக்குத்திக்கில்; 33.

21. வயவன் - ஒருவகைப் பறவை; இதனை மரங்கொத்திப் பறவை யென்பர்; 34.

பி - ம். 1 கூறி.

பல்காற் குரைத்தது பகற்படை தருமெனப்
பாட்டிற் கூறக் கேட்டன னாகி
வெண்மதி நெடுங்குடை வேற்றவன் படையொடு
நுண்மதி யமைச்ச னுண்மறைந் தொடுங்கி
மராவு மாவுங் குராவுங் கோங்கும்
தண்ணிழற் பொதும்பர்க் [1] கண்ணழற் காட்டும்
காழமை கழைத்தொடர்க் கடும்பரிப் போர்வைத்
தாழமை பெரும்பொறித் தச்சுவினைப் பொலிந்த
அரக்கூட் டம்புகர் மரக்கூட் டியானையைச்
செறுவுபு நிரீஇய செய்கை யோரா
தெறிபடை யாளரொ டுறுமுரண் செய்யக்
காழ்த்த காலைக் கீழ்த்திசை முன்பகல்
அன்றவட் பாடிய வணிவரி வயவன்
இன்றிவ ணின்னே யிகற்படை தருதல்
பொய்த்த தின்றி மெய்த்த [2] தாமென
அங்குபடு புட்குர லாண்டகை யஞ்சி
வெங்கணை திருத்தி வில்லிடந் தழீஇ
இரும்பிடை யிட்ட பெரும்புடைக் கச்சையன்
வளிசுழற் றுறாஅ முளிமரக் கானத்

22. குரைத்தது - முழங்கியதாய். 23. பாட்டு - ஓசை; "பாடிய வயவன்" (34.) உதயணன் கேட்டு. [காயன்.

24. பிரச்சோதனன் சேனையுடன். 25. அமைச்சன் - சாலங்

27. பொதும்பர் - சோலையில். கண் - கணுக்களில்.

28. காழ் - புறக்காழ். கழைத்தொடரிடையே. கடும்பரி - வேகமாகிய நடை. கடும்பரி முதலியன மரக்கூட்டு யானைக்கு அடை. போர்வை - மேலே போர்த்த பலகைகளையுடைய.

29. தாழ் - தாழக்கோல். பொறி - எந்திரம்.

30. அரக்கு ஊட்டு - செவ்வரக்கைப் பூசிய.

அமைச்சன் யானையினுள்ளே மறைந்தொடுங்கி (25) அதனை (30) நிரீஇயசெய்கையை உதயணன் உணராமல் (31.) [காலத்தில்.

33. காழ்த்தகாலை - வைரங்கொண்டு போர்செய்யத் தொடங்கிய

34. அவண் பாடிய. 39. இரும்பு - வாள். [முன்.

40. முளிமரம் - உலர்ந்த முள்ளிலவு; "வறண்மரம்" (21) என்றார்

பி - ம். 1 கண்ணிழற். 2 தாதலின்.

தென்கோ னிகழு மேத மின்றெனை
நெஞ்சொ டுசாவுஞ் சிந்தைய னாகி
வெஞ்சின வீர னின்ற காலை

(வேடர் இயல்பு)

மடப்பிடி வீழ்ந்த மணிமலைச் சாரல்
அடக்கருஞ் சீறா ரரணக வுறையுளர்
கணங்கொ டலைவனைக் கைக்கொண் டியங்கா
அணங்கரும் பெருஞ்சாத் தவிய றூறிப்
பல்விலைப் பண்டங் கவர்ந்துபய மறியார்
சில்விலைக் கிடூஉஞ் செல்லா வாழ்க்கையர்
சுரஞ்செல் வம்பல ருரும்பத மடக்கி
மாணுறி யாத்த வாணத் தானையர்
அடுகணை மறவ ரகவிலை யோமை
நெடுநிலைத் திரடா ணோர்துணித் ததர்வைக்
கொடிபுரை கயிற்றொடு கொளுத்தினர் சமைப்ப
[1] வடியி னன்ன வாளரித் தடங்கட்
பைங்குழை மகளிர் பல்காழ்க் கலையோ
டங்குழைச் செயலைத் தண்டழை யுடீஇக்

---

42. உசாவும் - வினவும்.
45. அரண் அகம் - அரண்களின் உள்ளிடத்தனவாகிய ; 53 : 106.
46. இயங்கா - இயங்கி.
47. பெருஞ்சாத்து - வாணிகருடைய பெருங்கூட்டத்தை.
48. பயமறியார் - அவற்றின் பயனை அறியாராய்.
49. செல்லா வாழ்க்கையர் - வறுமையையுடையவர்.
50. வம்பலர் - வழிச்செல்வாருடைய. பதம் - உணவு.
51. உறி யாத்த - உறியாகக்கட்டிய. ஆணம் - பாதுகாப்பு.
50 - 51. வழிப்போவோருடைய உணவைப் பறித்து அவர்களுடைய உடைகளையும் பறித்து அவற்றில் உணவைப் பொதிந்து உறியாகக் கட்டுபவர்கள். 52. ஓமை - ஒருமரம்.
53 - 4. அதர்வைக்கொடி - ஒருகொடி ; 53 : 145. சமைப்ப - சமைப்பார்கள்.
55. வடி - மாவடுவின் பிளப்பு.
56. பல்காழ்க் கலை - பல கோவையாகிய மேகலை; இவை ஆறலைத்துக் கொண்டவை. 57. அசோகந்தழையை உடுத்து.

பி - ம். 1 வடுவினன்ன.

காலி னியங்குநர் கற்குழிக் கொளினும்
நூலி னியன்றவை நோக்கார் சாபமென்
றுடூஉவு மகடூஉவு மாடு மறியார்
காடுதேர் முயற்சியர் கைப்பட் டோர்களைப்
பாடற் பாணிப் பல்லிசை கேட்டும்
ஆடெனை வணங்கிற் கருந்தலை துமித்தும்
வீளை யோட்டின் வெருவ வெய்தவர்
ஊளைப் பூசலோ டாடல்கண் டுவந்தும்
[1] காட்டுயிர் காணார் கைப்பயில் குறியொடு
வேட்டன செய்யும் வேட்டுவினைக் கடுந்தொழிற்
கவர்கணை வாழ்க்கைச் சவரர் புளினர்

(வேடர் செயல்)

காலை யெழுந்து கணங்கொண் டீண்டிச்
சோலைப் போதகச் சுவடுறத் துழல்வோர்
காஅட்டுப் பிடிமற் றன்றிது கருதின்
நாஅட்டுப் பிடியே நடந்தது தானெனை
முதிர்புலா னாற்றமொடு முன்முன் வீசி
உதிர வழியே யதிர வோடிப்
பிடியது வீழ்ச்சியும் பெண்பாற் சுவடும்
அடுதிற லாடவ ரற்றமும் பிறவும்

---

58. கற்கள் குழிந்தாலும் காலால் நடப்பவர்கள்; "கற்றேயுந் தேயாது சொல்" பழ. 394.

மகளிர் (56) இயங்குநர் (58.)

59. சாபமென்று - சாபமென்று சொல்லும்படி.

60. ஆண்களும் பெண்களுமாகிய அவ்வேடர்கள் பொன்னின் தன்மையையும் அறியார்; மாடு - பொன்; "பல்விலைப் பண்டங் கவர்ந்து பயமறியார்" (48) என்று முன்னுங் கூறியதை நோக்குக.

62. இசை - பாலைப்பண்; பொருந. 21 - 2.

63. ஆடெனை - ஆடாக நினைத்து. அணங்கிற்கு - தெய்வத்திற்கு.

64. வீளையோட்டின் - சீழ்க்கை யொலியைச் செலுத்தலுடன்; 114; குறுந். ௨௭௨; சீவக. 447; பு. வெ. 247.

70. போதகச்சுவடு - யானையின் காற்சுவட்டை.

73. ஒருவருக்கு முன் ஒருவர் கையை வீசிக்கொண்டு.

76. அற்றம் - சுவடு.

பி - ம். 1 காட்டுயர்.

படியி னுய்ந்து கடுகுவன ரோடி
வெள்ளிடை வெண்மணன் மிதித்த சுவடுதொறும்
[1] புள்ளடி யொழுக்கம் புரிவனர் நோக்கி
நெருந னீடிரு ணீங்குநர் சுவடிவை
அருமை யுடைத்தவர்த் தலைப்பட னமக்கென
அடியுறி னடையு மம்புடை யெயினர்
கடிகை வெள்ளிலுங் கள்ளி வற்றலும்
வாடிய வுவலொடு நீடதர் பரப்பி
உழைவயிற் றரியாது முழைவயி னொடுங்கிய
ஆறலை யிளையரை யாண்மை யெள்ளி
வேறினி நம்மொடு விளிகநுங் களவெனச்
சேறல் வலியாச் செய்கை நோக்கி

(நிமித்திகன் கூற்று)

வாய்ச்சிறு புதுப்புள் வீச்சுறு விழுக்குரல்
கேட்டுப்பொரு டெரியுமோர் வேட்டுவ முதுமகன்
பெருமக னென்னப் பெறலருங் கலத்தோ
டொருமக னுளவழி யெதிர்த்து மம்மகன்

---

79. புள்அடி ஒழுக்கம் - பறவைகளின் அடிச்சுவட்டின் வரிசை.

80. நெருநல் - நேற்று.

78 - 80. புள்ளினங்கள் பாலை நிலத்தில் இரவிலன்றிக் கீழே நடத்தற்கியலாவாதலின் புள்ளினங்களின் அடிச்சுவட்டைக் கண்டு இங்ஙனங் கூறினர்.

81. அவர்த் தலைப்படல் - அவர்களை அடைதல்.

82. அடி - சுவடு.

83. கடிகைவெள்ளில் - விளாமரத் துண்டங்கள்.

84. உவல் - தழை. 85. முழை - குகை.

86. எள்ளி - இகழ்ந்து. 87. நும் களவு விளிகவென்று.

88. சேறல் வலியா - செல்லுதற்குத் துணியாத.

89. பறவையின் ஒலியை வீச்சென்றல் மரபு; "மேல்புறத்திலாந்தையிட்ட வீச்சு நன்றம்மே" குற்றாலக்குறவஞ்சி, 54.

90. வேட்டுவமுதுமகன் - முதியவேடன்; 56 : 7.

91. பெருமகனென்ன - அரசன்போல. பெறுதற்கு அரிய ஆப[ரணங்களோடு.

92. எதிர்த்தும் - எதிர்ப்பேம்.

பி - ம். [1] புள்ளழி.

நடுங்குதுய ருறுத்துங் கடுங்க ணாண்மையன்
ஆண்மை யழிய நாண்மீக் [1] கூரி
மெய்ப்பொரு ணோர்ந்து கைப்படு நமக்கெனக்
காட்டக மருங்கி னல்லது மற்றவர்
நாட்டகம் புகுத னன்கிருள் கழியினும்
இல்லை யெழுகெனச் செல்வோர் முன்னர்ப்

(வேடர் செல்லுதல்)

புரக்கூட் டமைந்த வரக்கூட் டரத்தம்
பவளத் துணியிற் பசுமையொடு கிடப்ப
இன்னணிப் புக்கோ ரிவ்வழி யல்லது
மற்றவ ரெங்கு மறைந்திலர் காண்கெனச்
செல்வோ ரொருங்குடன் வல்லையும் வழியும்
வான்மரப் பொதும்புங் கானமுங் கடறும்
முழைவளர் குன்றுங் கழைவளர் கானமும்
பயம்பும் பாழியு மியங்குவனர் வதியும்
முதுமரப் பொத்தும் புதுமலர்ப் பொய்கையும்
இனையவை பிறவு மனையவ ருள்வழிச்
செருக்கய லுண்கட் சீதையைத் தேர்வுழிக்
குரக்கினத் தன்ன பரப்பின ராகிப்
பிடிமுதற் கொண்டுமலை ரடிமுதலொற்றிச்

---

94. தனது ஆண்மை அழிதலால் அவன் மிக்க நாணமுற்று.

95. நேர்ந்து - கொடுத்து. கைப்படும் - அகப்படுவான்.

97 - 8. இருள்கழியினும் நாட்டகம் புகுதல் இல்லையாகும். என - என்று அம்முதியவன் சொல்ல.

99. புரக்கூட்டமைந்த - நகரத்திற் கூட்டுதல் அமைந்த. அரக்கூட்டு அரத்தம் - செம்பஞ்சு. [மை - ஈரம்.

100. பவளத்துணியின் - பவளத் துண்டங்களைப்போலவே. பசு

101. இன்னணிப்புக்கோர் - இவ்வளவு அணிமைக் காலத்திற்

103. வல்லை - சிற்றரண்; மேட்டு நிலமுமாம். [சென்றவர்கள்.

104. மரப்பொதும்பு - மரச்செறிவு. 106. பயம்பு - பள்ளம்.

107. முதுமரப்பொத்து - ஆலமரப்பொந்து.

109 - 10. சீதையைத் தேடும் வானரங்களைப்போன்ற பரப்பை யுடையவர்களாகி.

பி - ம். 1 கூறி.

(வேடர் உதயணனைக் கண்டு தாக்கல்)

செல்வோர் கதுமெனச் செம்மலைக் கண்டே
கல்லெனத் துவன்றிக் கார்கிளர்ந் ததுபோல்
ஆர்ப்பும் விளையு மவ்வழிப் பரப்பிக்
கார்க்கலைக் கோட்டொ டார்ப்பொலி மயங்கி
அரவச் செய்கையர் வெருவரத் தாக்கப்

(உதயணன் செயல்)

பல்பனி பரந்த சில்லரி மழைக்கண்
நச்சுயிர்ப் பளைஇய வச்ச நோக்கமொடு
விம்முவன னடுங்கும் பொம்ம லோதியை
மாஞ்சினை யிளந்தளிர் மணிநிற மேனிக்
காஞ்சன மாலாய் காவல் போற்றுமதி
அப்பாற் புகுதரு மற்ற மின்மையின்
இப்பால் வருவா ரின்னுயி ருண்கெனக்
கைச்சிலை வளைத்துக் கணைநாண் கொளீஇ
முற்றிய கோங்கின் முழுத்தாள் பொருந்தி
ஒற்றுபு நோக்கு மொற்றை யாளன்
வார்கணை செவியுற வாங்கி மற்றவர்
ஆருயிர் வௌவுதன் ருண்முதல் பொருந்தி
உடும்பெறிந் ததுபோற் கடுங்கணை முள்க
விட்ட வேந்தன் விற்றொழில் கண்டும்
கண்டுகை விடுதல் கரும மன்றென
விண்டல ரிலவத் தண்டைசார்ந் தவனைக்

(வேடர் உதயணனை நோக்கிக் கூறுதல்)

கண்ட வேட்டுவர் தண்டாது நெருக்கி
மையணி யிரும்பிடி வீழ மற்றுநீ

---

114. விளை - சீழ்க்கை ; ஒருவகை வாயொலி ; 64.
115. கலைக்கோடு - மான்கொம்பாலாகிய வாத்தியம்.
117. பல்பனி - பல நீர்த்துளிகள்.
118. நச்சுயிர்ப்பு - விடக்காற்றுப்போன்ற மூச்சு.
119. வாசவதத்தையை. 121. மு. 36 : 130.
122. அற்றம் - அஞ்சுதற்குரிய இடம். 123. உண்கு-உண்பேன்.
126. ஒற்றையாளன் - தனியன். 128. வௌவ - வௌவுதற்கு.
129. முள்க-அழுந்த. 134. மையணி இரும்பிடி: 48 : 184, அடிக்.

உய்வலென் றெண்ணி யொளித்தனை போந்தனை
எவ்வழிப் போதிநின் னின்னுயி ருண்குவம்
யாரை நீயெமக் கறியக் கூறென
வீர வெம்மொழி நீரல பயிற்றி

(உதயணன் வேடரை நலிதல்)

உடுவமை பகழி யொருங்குடன் றாவ
விடுகணை விடலை வில்லின் விலக்கி
[1] வதிபயின் றடைந்த மறவரை யதிரக்
கைவயிற் கடுங்கணை யொவ்வொன்று கொண்டவர்
மெய்வயிற் கழிந்து வியனிலத் [2]திங்க
வீரருள் வீரன் விசைபெற விடுதலின்
வீர வேட்டுவர் சார்த லாற்றார்

(வேடர் கலங்கிக் கூறல்)

கோல வுருவொடு குன்றிடைப் போந்தவோர்
காலன் கொல்லிவன் கானத் தோர்க்கெனப்
பன்முகத் தானும் பற்றடைந் தன்னவன்
வின்முகம் புகாஅர் வேட்டுவ ரஞ்சிப்
புட்கூற் றுளனை யுட்கூற் றாகி
அழித்தனை கொணர்ந்தெனப் பழித்தனர் கழறி
[3] உளைப்பொலி மான்றே றுதயண குமரனை
வளைத்துநின் றனரால் வலிப்பது தெரிந்தென்.

௫௫—சவரர்புளிஞர் வளைந்தது முற்றிற்று.

---

139. உடு - நாணைக்கொள்ளுமிடம்; "உடுவார் பகழி" (45 : 58 [என்றார் முன்னும்.
140. =56 : 59.
141. வதி - வழி. அதிர - நடுங்க.
143. நிலத்து இங்க - நிலத்திற்குள்ளே தங்கும்படி; புறநா. ௧௫௨; திருச்சிற். 101. இங்க : சீவக. 763. 144. வீரருள் வீரன் : 56 : 89.
145. சார்தலாற்றார் - அணுகுதற்கு வலியிலராகி.
150. புள்நிமித்தங் கூறிய முதியவேடனை நோக்கி. உட்கூற்றாகி - நமக்குள்ளே கலந்து நம்மைக் கொல்ல வந்திருக்கும் யமனாகி.
153. வலிப்பது - தாங்கள் வலிந்து பிடித்தலை.

பி - ம். 1 மதி. 2 இயங்க. 3 உளைபொலி.

## ௫௬—வென்றி யெய்தியது.

(வேடர் எண்ணுதல்)

தெரிவுறு சூழ்ச்சியர் செய்வதை யறியார்
ஒருவ னும்பல ரொழிவமென் றூது
விசையுடை வெங்கணை விற்றொழி லவின்ற
[1] அசைவி லாள னழிக்கவும் பட்டனம்
உரைமி னொல்லென வுறுவது நோக்கிக்

(நிமித்திகன் கூற்று)

கருவினை நுனித்த வருவினை யாண்மைப்
புள்ளுணர் [2]முதுமகன் றெள்ளிதிற் றேறி
இளையவர் கேட்க விற்றென விசைக்கும்
கிளையுடைப் பூசலொடு முளையரில் பிணங்கிய
முள்ளரை யிலவத் துள்ளவ னிருப்பக்
கேளிழுக் கறியாத் தாளிழுக் குற்றீஇயினிர்
கோளிமிழ் கனலி சூழ்திசைப் பொத்திப்
புகையழ லுற்றீஇப் புறப்படுத் தவர்களை

---

௫௬—வென்றியெய்தியது.

[சூழ்ந்துநின்ற வேட்டுவர் ஒரு முதுவேட்டுவன் சொல்லால் உதயணனைச் சூழ்ந்த இடங்களைக் கொளுத்திவிட, உள்ளேயிருந்த அவன் புறம்போந்து போர்செய்து பின்பு அவர்களால் வின்னாண் அறுப்புண்டதும் அப்பால் வேறிடஞ் சென்று அவன் அவர்களாற் சூழப்பட்டு நிற்கையில், புட்பகத்தே யிருந்துவந்த வீரர்களால் தோல்வியுற்ற வேட்டுவர் ஓடிப்போனதும் இதனால் அறியலாகும்.]

2. அவன் ஒருவன், நாம் பலர்.
4. அசைவிலாளன் - மெலிவில்லாதவனால்.
5. நிமித்திகனைப் பார்த்து உறுவதுநோக்கி ஒல் உரைமின் என;
6. கருவினை - வினையுஞ் செயலை. [ஒல் - விரைவு.
7. புள்ளுணர் - நிமித்தத்தை உணர்ந்த.
8. இசைக்கும் - இசைப்பானாயினன்.
9. முளையரில் - மூங்கிற்றூறுகள்.
11. தாள் இழுக்குற்றீஇயினிர் - முயற்சியில் தவறினீர்.
12. கோள் இமிழ் கனலி - கொல்லுதல் மிக்க நெருப்பை. பொத்தி - மூட்டி.
13. அழல் - இங்கே பெருநெருப்பு. அவர்களை வெளிப்படுத்தி.

பி - ம். 1 அசைவில்லாளரை யழிக்கவும். 2 மதிமகன்.

நவையுறு நடுக்கஞ் செய்த லுணரீர்
கள்ள மின்றிக் கட்டாள் வீழ்த்த
வெள்ளை வேட்டுவீர் புள்ளெவன் பிழைத்ததென்
றுள்ளழிந் தவர்கட் குறுதி கூறக்

(வேடர் தீ மூட்டல்)

கணையொடு பிடித்த கைக்கோ லரணிப்
புடையிடு பூளைப் பூப்புற மடுத்துப்
பிசைந்த சிறுதீப் பெருக மூட்டி
இசைந்த முளரி யெண்டிசைப் பக்கமும்
வேனற் பேரழல் கானவர் கொளுத்தி
நோவக் கூறிச் சாவ தல்லது
போதல் பொய்க்கு மினியெனப் போகார்
அரிமா வளைந்த நரிமாப் போல
இகன்முனை வேட்டுவ ரிடுக்கண் செய்யப்

(வாசவதத்தை ஏங்கல்)

புகைமிகு வெவ்வழல் பூம்பொழில் புதைப்பக்
கான வெந்தீக் கடும்புகைப் பட்ட
மானமர் பிணையின் மம்ம ரெய்தித்
தளையவிழ் தாரோன் றனிமைக் கிரங்கிக்
களைகண் காணாது கையறு துயரமொடு
பெய்வளைத் தோளி வெய்துயிர்த் தேங்கக்

---

15. கட்டாள் வீழ்த்த - வலிமையையுடைய ஆட்களை வீழச்செய்த.

16. வெள்ளை - அறிவின்மை; "ஏழை வேட்டுவீர்" (சீவக. 417.) புள் பிழைத்தது எவன் - யான் கூறிய நிமித்தம் தவறியது இல்லை; என்றது, "அழித்தனை கொணர்ந்தெனப் பழித்தனர் கழறி" (55 : 151) என்றதை உட்கொண்டு.

18. கைக்கோலாகிய அரணியில்.

19. பூளைப்பூவை அரணியின் புறத்திற் சேர்த்து.

21. முளரி - விறகுகளையுடைய. 22. வேனல் - வெம்மை.

23. நோவ - நாம் நோகும்படி.

24. போதல் பொய்க்கும் - அவன் வெளிப்படுதல் இல்லையாகும்.

25. அரிமா - சிங்கத்தை. நரிமா - நரிகள். [கம்

29. மானமர் பிணையின் - பெண்மானைப்போல. மம்மர் - மயக்

30. உதயணனுடைய தனிமைக்கு. 32. வாசவதத்தை ஏங்க.

(உதயணன் செயல்)

குலங்கெழு குருசில் கொடிக்கைம் மாறி
அலங்கிதழ்க் கோதையொ டவிழ்முடி திருத்திக்
கலங்க லோம்பிக் காஞ்சன மாலாய்
இலங்கிழை மாதரை யென்வழிப் படாதோர்
பக்கங் கொண்டு படர்மதி யிப்பால்
வில்வி னீக்கி வெள்ளிடை செய்தவர்
அல்ல லுறீஇ யாருயி ருண்கெனக்
கழைவளர் கானங் கடுந்தீ மண்ட
முழைவயிற் போதரு முளையெயிற் றிடிக்குரற்
புலவும் புலிபோற் பொங்கழல் புதைஇய
இலவஞ் சோலையி னிறைமகன் போதர
ஆளி கண்ட வானை யினம்போல்
வாளி வல்வில் வயவர் நீங்கச்
சில்லிருங் கூந்தலை மெல்லென நடாஅய்
வெல்போர் விடலை வெள்ளிடைப் படுத்தலின்

(வேடர் செயல்)

அரணிடை யகற்றி யச்ச நீங்கி
முரணுடை வேட்டுவர் மூழ்த்தனர் மூசி
முன்னும் பின்னும் பக்கமு நெருக்கிப்
பொன்னணி மார்பன் போர்த்தொழி லடங்கக்

---

33. குறுகிய இடத்தைவிட்டு நீங்கி.
36. என் வழிப்படாது - யான் செல்லும் வழியே வாராமல்.
37. படர்மதி - செல்வாயாக.
38. வெள்ளிடை செய்து - வெளியிடத்தை உண்டாக்கி.
39. உண்கு என - உண்பேனென்று. 40. மூங்கிற்காடு தீப்பற்ற.
41. முழைவயின் - குகையினின்றும்.
42. புலவும் - புலால் நாற்றம் வீசுகின்ற.
43. இலவஞ் சோலையினின்றும். 44. ஆளி - அத்தியாளி.
46. நடாஅய் - நடத்தி.
48. அரண் - பாதுகாப்பை. அகற்றி - நீக்கி.
49. மூழ்த்தனர் - வளைந்து; "மூழ்ந்த பிணிகலிய" (நன். சூ. 416, மயிலை. மேற்.) மூசி - மொய்த்து.
51. அடங்க - இல்லையாகும்படி; புறநா. 59, [illegible]

கலையுணர் வித்தகர் கைபுனைந் தியற்றிய
சிலைநா [1] ணறுத்தலிற் செய்வதை யின்றி

(உதயணன் நிலை)

வலைநா ணிமிழ்ப்புண் வயமாப் போலக்
காட்சிக் கின்னா வாற்ற லனுகிப்
பேரமர் ஞாட்பினுட் பெருமுது தந்தைதன்
வார்சிலைப் புரிநாண் வாளியி னறுப்பத்
தேர்மிசைத் திரிந்த திறலோன் போல
வீழ்தரு கடுங்கணை வில்லின் விலக்கி
ஊழ்வினை துரப்ப வுயிர்மேற் செல்லாது
தாழ்தரு தடக்கையுந் தாளுந் தழீஇ
வாயறை போகிய வடுச்சேர் யாக்கையன்
ஆழி நோன்றா ளண்ணலைக் கண்டே

(வாசவதத்தையின் செயல்)

தாழிருங் கூந்தற் றளரிய னடுங்கித்
தானணி பெருங்கலந் தன்வயிற் களைந்து
கான வேட்டுவர் கைவயிற் கொடுவெனக்
கவிரிதழ்ச் செவ்வாய்க் காஞ்சன மாலைகை

---

53. உதயணனுடைய வில்லின்நாணை வேடர்கள் அறுத்தமையால்.

54. வலைக்கயிற்றாலே கட்டுண்ட சிங்கத்தைப்போல.

55. ஆற்றலனுகி - உதயணன் பொருதவனுகி.

56. பெருமுது தந்தை : கன்னன்.

56 - 7. தன்னுடைய வில்லின் நாணை.

58. திறலோன் - அபிமன். 59. = 55 : 140.

56 - 9. "பேரமரு ளன்றுபெருந் தாதையொடும் பேராப், போரமரு ணின்றவிளை யோனிற்பொலி வுற்றான்" (சீவக. 288) என்பது இவ்வடிகளுடன் ஒப்புநோக்கற்பாலது.

61. கணைகள் ஒன்றும் செய்யவில்லையென்பது கருத்து.

62. அறை - அறுதல்; மழுங்குதல்.

62 - 3. யாக்கையனாகிய அண்ணலைக் கண்டு.

64. "தாழிருங்கூந்தல்" (சிலப். உ: 80.) தளரியல் - வாசவதத்தை.

பி - ம். 1 ணறுத்லிற்.

அவிரிழை நன்கல மமைவர நீப்பிக
அழியன்மி னீரென வழுவனள் மிழற்றிய
காஞ்சனை நமைப்பொரு கானவர் தமக்குக்
கொடுத்தில மாயிற் கொடுமைவிளை வுண்டெனக்
கலக்க வுள்ளமொடு கடுஞ்சிலை கைத்தர

(உதயணன் செயல்)

நலத்தகு மாதர் நடுக்க நோக்கி
வலத்த னாகிய வத்தவ னகப்பட்
டின்னுயிர் போகினு மின்ன னென்னாது
மன்னுயிர் காவன் மனத்தி னெண்ணிக்
குன்றச் சாரற் குறும்பினு ளுறையும்
வன்றோ ளிளையீர் வந்துநீர் கேண்மின்
பெருங்கலம் பெய்தியாம் பிடியொடும் போந்த
அருங்கல வாணிக ரப்பிடி வீழ
வருத்த மெல்லா மொருப்படுத் தொருவழி
நெறிவயி னீக்கிக் குறிவயிற் புதைத்தனெம்
கொள்குவி ராயிற் கொலைத்தொழி னீங்குமின்
உள்வழி யப்பொருள் காட்டுக முய்த்தெனச்

(வேடர் தலைவன் உதயணனை வினவுதல்)

சொற்பொருள் கேட்டே விற்றொழை மடக்கி
அறவரை யிழந்த செறுநரை விலக்கிக்
குறவருட் டலைவன் குருசிலைக் குறுகி

---

65 - 8. தான் அணிந்த ஆபரணங்களை வேடர்கையிற் கொடுக்கும்படி காஞ்சனமாலைகையிற் கொடுத்து. 69. மிழற்றிய - மிழற்ற.

70. காஞ்சனை : எழுவாய். 72. கடுஞ்சிலை - உதயணனது.

75. இன்னனென்னாது - தன்னை இன்னானென்று தெரிவியாமல்.

76. காவல் - காத்தலை. 77. குறும்பு - சிற்றரண்.

79. பெருங்கலம் - பெரிய ஆபரணங்களை.

82. புதைத்தனெம் - அக்கலங்களைப் புதைத்தேம்.

83. அக்கலங்களைக் கொள்வீராயின்.

84. உய்த்துக் காட்டுகம் என - உங்களை அழைத்துக்கொண்டு சென்று காட்டுவோமென்று உதயணன் சொல்ல.

86. அறவரை - தருமத்தின் எல்லையை; சீவக. 449.

யாரே நீரெமக் கறியக் கூறென
வீரருள் வீரனை வேட்டுவன் கேட்ப

(உதயணன் கூற்று)

வத்தவர் கோமான் வாணிக ரித்திசைப்
பெரும்பெயர்க் கிளவிப் பிரச்சோ தனனுட்
டரும்பொருள் கொண்டியா மாற்றிடைப் போந்தனெம்
மடப்பிடி வீழ விடர்ப்பட் டிருளிடைப்
பொழில்வயிற் புதைத்த தொழிலினெம் யாமென
முகைத்தார் மார்ப னுவப்பதை யுரைப்ப

(வேடர் செயல்)

வளங்கெழு வத்தவன் வாணிக ரெனவே
உளங்கழிந் தூர்தரு முவகைய ராகிக்
கொல்லாத் தொழிலினர் கொலைப்படை யகற்றி
வல்லாண் டோன்றலை வடகம் வாங்கிக்
கையாப் புறுத்துக் காட்டிய வெழுகென

(உதயணன் கூற்று)

உய்ம்மருங் குபாயத்துப் பொய்ம்மருங் கோடி
[1] அழல்வழி வந்தியா மசைந்தனம் வதிந்த
பொழில்வயிற் புதைத்தனம் புகற்கரி தாகத்

88. 'நீர்' என்றது ஏனையோரையும் உளப்படுத்தி.
89. வீரருள்வீரன் : 55 : 144.
90. யாம் உதயணனுடைய வாணிகர்கள்.
91. பெரும்பெயர்க்கிளவி : சக்கரவர்த்தியென்பது; பெரும்பெயர் - பெரும் புகழுமாம். நாட்டிலுள்ள.
95. உவப்பதை - வேட்டுவர் மகிழ்தற்குரிய சொல்லை.
98. கொலைப்படை - கொல்லும் படைகளை.
100. காட்டிய - காட்டுவதற்கு.
99 - 100. மேலாடையால் உதயணனுடைய கையைக்கட்டி, கலம் புதைத்த இடத்தைக் காட்டுவதற்கு எழுவாயாகவென்று வேடர் சொல்ல.
101. துன்பத்தினின்றும் நீங்குதற்குரிய உபாயமாகப் பொய்யின்பால் வலிய அடைந்து.
102. அழல்வழிவந்தென்பது முதலியன உதயணன் கூற்று.
பி - ம். 1 அல்வழி.

தெரிவில் கொள்கையி னெறிதலைக் கொளீஇயினிர்
அவ்வழி லாறு மாத்திர மிவ்வழி
நின்மி னீரென மன்னன் குமரன்
தெளியக் கூறப் புளிஞர் தேறி

(வேடர் கூற்று)

எவ்வழி யாயினு மெரியவித் தவ்வழிக்
காண லுறுதுங் காட்டா யாயின்
ஆண முன்கை யடுதும் யாமென

(வாசவதத்தை வருந்தல்)

நன்கை யாத்தது நன்று நொந்திவன்
கவிகைக் கேலாது கட்டெனக் கவிழ்ந்தோள்
அவிரழற் கானத் தருளி லாளர்
அடுது மெனவே யமர்ப்பிணை போலத்
தீயுறு தளிரின் மாநிற மழுங்க
மாழை யொண்க ணூருழும் மல்க
மம்ம ருள்ளமொடு மடத்தகை மாழ்க

(காஞ்சனை வருந்தல்)

மாழ்கிய மாதரை வாங்குபு தழீஇக்
கனவளைப் பணைத்தோட் காஞ்சன மாலை
புனவளைத் தோளி பொழிலகங் காவனம்
பெருமான் செல்வம் பேணாய் மற்றிவ்
வரிமா னன்னோற் காருயிர் கொடீஇய

---

104. தெரிந்துகொள்ளாதபடி.

110. பாதுகாப்பாகிய முன்கையைத் தறித்து விடுவேமென்று வேடர்கள் சொல்ல. 111. யாத்தது - கட்டியதற்கு. நன்று - மிக.

112. கவி கைக்கு - இரப்போர்க்குக் கொடுக்கும் பொருட்டுக் கவிந்த கைகளுக்கு. கட்டு ஏலாதென்று முன்னம் கலங்கிய வாசவதத்தை.

114. அமர்ப்பிணை - விரும்புதலையுடைய பெண்மான்.

115. "கையுங் காலு மோய்வன வழுங்கத், தீயுறு தளிரி னடுங்கி" [குறுந். ௩அ௩.

117. மடத்தகை - வாசவதத்தை.

119. காஞ்சனமாலை: எழுவாய். 120. தோளி: விளி.

120 - 21. நம்பெருமானென்றது பிரச்சோதனனை.

122. அரிமானன்னோற்கு - உதயணன் பொருட்டு. கொடீஇய - கொடுத்தற்கு.

போந்தனை யோவெனத் தான்பா ராட்டி
இரங்குவது நோக்கி யிறைமகன் கூறும்

(உதயணன் கூற்று)

வருந்துத றவிரயாம் வழியிடைப் புதைத்த
அருங்கலப் பேரணிப் பெருங்கலங் கருதின்யாப்
புறுமுறை பின்னிடத் தறிமின் மற்றிவள்
நீப்பருந் துயர நெறிவயி னோம்பித்
தீப்புகை தீர்தலுங் காட்டுதுஞ் சென்றெனக்

(வேடர் செயல்)

கையகப் பட்டோன் பொய்யுரைத் தனனெனின்
உய்வகை யிலையிவ னுரைத்ததை யெல்லாம்
செய்தும் யாமென வெவ்வினை யாளர்
மையணி யானை தாங்கித் தழும்பிய
கையாப் பொழித்துக் காத்தனர் நிற்ப

(உதயணன் செயல்)

வாவிப் புள்ளின் றூவி விம்மிய
அணைமிசை யசைந்த வம்மென் சிறுபுறம்
மணன்மிசை யசைந்து மாக்கவின் வாட
அறியாது வருந்திய வாருயிர்த் துணைவியைப்
பொறியார் தடக்கையிற் போற்றுபு தழீஇப்
பூங்குழல் குருசி றேங்கொளத் தீண்ட
நீலத் தண்மலர் நீர்ப்பட் டனபோல்
கோலக் கண்மலர் குளிர்முத் துறைப்ப
அவலங் கொள்ளு மவ்வரைக் கண்ணே

---

126. கருதின் - நீங்கள் பெறுவதற்கு விரும்பினால்.

126 - 7. என் கையைக் கட்டுதலைக் குறித்துப் பின்பு அறிந்து கொண்மின் ; இது கூறியது வாசவதத்தையின் பொருட்டு.

129. என - என்று உதயணன் சொல்ல.

131. உய்வகை - இவன் தப்பும் வழி.

133. மையணியானை : 48 : 184, அடிக். தாங்கி - தடுத்து.

134. கையாப்பு - கைக்கட்டை. 135. புள் - அன்னம்.

136. அணை - தலையணை. சிறுபுறம் - புறக்கழுத்து.

139. பொறி - சங்கரேகை முதலியன. 140. பூங்குழலைத் தீண்ட.

143. அவ்வரைக்கண்ணே - அப்பொழுதே.

(வயந்தகன் இடபகன்பாற் செல்லல்)

கவலை யுள்ளமொடு கங்குற் போகிய
வயந்தக குமரன் வந்துகாட் டொதுங்கிக்
கன்றொழி கறவையிற் சென்றவ ணெய்திக்
காப்புடை மூதூர்க் கடைமுகங் குறுகி
யாப்புடை நண்பி னேற்றுப் பெயரன்
வைகுபுலர் விடியல் வயவர் சூழ்வரப்

(இடபகன் செயல்)

பெருநலத் தானைப் பிரச்சோ தனன்றமர்
இருநிலக் கிழமை யேய ரிறைவன்
வென்றியும் விறலும் விழுத்தகு விஞ்சையும்
ஒன்றிய நண்பு மூக்கமு முயர்ச்சியும்
ஒழுக்க நுனித்த வுயர்வு மிழுக்கா
அமைச்சி னமைதியு மளியு மறனும்
சிறப்புழிச் சிறத்தலுஞ் சிறந்த வாற்றலும்
வெங்கோல் வெறுப்புஞ் செங்கோற் செல்வமும்
செருக்கிச் செல்லுஞ் செலவின னென்றுதம்
தருக்கிய தலைத்தாட் டானைச் செல்வப்
பெருமகற் றெளீஇத் தம் மருமதி மேம்படக்
கய்ந்நவி லாளனை யெஃகுள் ளடக்கிய
பொய்ந்நிலங் காட்டின னென்பதோர் பொய்ம்மொழி
வெந்நில மருங்கின் வேட்டுவ ரெல்லாம்
போற்று துரைத்த மாற்றம் பட்டதை

---

146. கன்றொழி கறவையின் - கன்றைப் பிரிந்த பசுவைப்போல.
147. மூதூர் - புட்பகநகரத்தின். குறுகி - குறுக.
148. ஏற்றுப்பெயரன் - இடபகன் : 54 : 66.
149. வைகுபுலர்விடியல் : அகநா. ௩௭ : 5, ௪௧ : 1.
152. விஞ்சை - வித்தை.
157. வெங்கோல் - கொடுங்கோன்மை.
152 - 8. உதயணனுடைய குணவிசேடங்கள்.
159. தலைத்தாள் - முதன்மையான முயற்சியையுடைய.
160. பெருமகற் றெளீஇ - அரசனைத் தெளியச்செய்து.
161. எஃகு - வேற்படைகளை. 163. வெந்நிலம் - பாலைநிலம்.

துணிவியல் சுற்றமுந் தொடர்ந்துடன் விட்டுப்
பின்வர வமைத்து முன்வரப் போகி

(வயந்தகன் உதயணனைக் காணுமல் வருந்தல்)

வாட்டொழில் வயந்தகன் காட்டக மருங்கின்
அண்ண விருந்த வறிகுறித் தானம்
நண்ண லுற்ற காலை மன்னவன்
அம்புபட வீழ்ந்த வெங்கண் மறவர்
உதிரப் பரப்பி னுருவுகெட வுண்ட
காக்கையுங் கழுகுந் தூப்பதந் துறந்து
கோடுகொண் டிருந்த குழாஅ நோக்கிக்
காடுகொண் மள்ளர் கதுமென நடுங்கிப்
போர்க்கள முண்மை பொய்த்த லின்றென
நீர்க்கரைப் பொய்கை நெற்றிமு னிவந்த
[1] முள்ளரை யிலவ மொள்ளெரி சூழப்
பொங்குபுகை கழுமிய பூம்பொழிற் படாஅன்
இங்குநம் மிறைவ னிருந்த விடமவன்
ஏதம் பட்டன னுதலி னின்னே
சாதல் பொருளெனக் காதல் கழுமி
வருபடை யுய்த்த வயந்தகன் மாழ்கப்

(படையாளர் அவனைத் தேற்றல்)

பொருபடை யாளர் புல்லிடைத் தெரிவோர்
வேட்டுவ ராதல் வில்லிற் காட்டி
வாட்டொழில் வயந்தகன் வருத்த மோம்பிப்
பெருங்கணஞ் சென்ற பிறங்குபுற் கானம்

206. மன்னவன் - உதயணனுடைய.
208. உருவு - வடிவம்.
209. தூப்பதம் - ஊனுகிய உணவை.
210. கோடு - மரத்தின் கொம்பு. 211. மள்ளர் - வீரர்.
212. இன்றென - இல்லையென்று மள்ளர் சொல்ல.
213. நெற்றி - உச்சி. 219. மாழ்க - மயங்க.
220. பொருபடையாளர் - வீரர்கள்; எழுவாய். புல்லிடைத் தெரிவோர் - புற்களினிடையே காணப்படுவோர்; 261.
222. வயந்தகனுடைய வருத்தத்தை.

பி - ம். [1] முள்ளெரி.

(படையாளர் உதயணனைக்கண்டு
வேடர்களைச் சூழ்தல்)

பரந்தனர் செல்வோர் பாவையைத் தழீஇக்
காவி கவினிய தாவில் பொய்கையுள்
தனித்தா ணிவந்த தாமரை போலப்
பனித்தார் மார்ப னிற்ப மொய்த்துடன்
வளைத்தனர் வலக்கும் வயவரைக் கண்டே
உளைப்பொலி மாவும் வேழமு மூர்ந்தவர்
போழுந் திசைவயிற் புதைந்தனர் நிற்பக்

(நிமித்திகன் கூறல்)

கதிரகத் திருந்த முதிர்குரற் பறவை
போமின் வல்லே போதி ராயினும்
உயிர்த்தவ னுரைக்கு மென்பதை யுணர்ந்து
முந்துபுள் ளுரைத்த முதுமகன் கூற

(படையாளர் செயல்)

வெந்திறல் வேட்டுவர் விரைந்தன ராகி
அல்லி நறுந்தா ரண்ணலை நலிய
1 ஒல்லா மறவ ரோவித்தன ரோடி
வேகப் புள்ளமொடு விசைத்தன ரார்த்துக்

---

224. பாவையை - வாசவதத்தையை.

225. காவி - கருங்குவளை. 227. மார்பன் - உதயணன்.

228. வளைத்தனர் வலக்கும் - மிக நெருங்கிச் சூழும். வய்வரை - வேடர்களை. [களையும்.

229. உளைப்பொலிமாவும் - பிடரிமயிராற்பொலிவுபெற்றகுதிரை

231. கதிரகத்து - கருங்காலி மரத்தில்; கதிரம் - கருங்காலி; சூரியனுக்குரிய இடத்து என்றுமாம்; கிழக்கிலென்றபடி.

232. வல்லே - விரைவாக. 233. தவல் - கெடுதலை.

234. முந்து புள்உரைத்த - முன்பு நிமித்தங் கூறிய; 55: 89 - 90; [56 : 7.

235 - 6. வேடர் உதயணனை வருத்த.

237. ஒல்லாமறவர் - உதயணன் நிலையைக் காணப்பொறாத இட [பகன் சேனைவீரர்கள்.

238. புள்ளம் - கொடுவாள்.

பி - ம். 1 ஓடாமறவ.

கோடும் வயிருங் குழுமின் துவைப்பவக்
கருந்தொழி லாள ரிருந்தலை துமித்துப்
பெருந்தகைக் [1] கிழவனைப் போா மறவரை
இடுக்கண் செய்யவு மியல்பி லாளர்
நடுக்க மெய்தக் குடைப்பெருந் தானை

(உதயணன் செயல்)

வத்தவ ரிறைவனு மெய்த்தகைத் தாகத்
தமர்மேல் வந்தமை தானகத் தடக்கி
நுமரோ மற்றிவர் பிறரோ தாமெனக்
கவர்கணை மொய்த்த கானத் திடைம்மறைத்
தெம்முயிர் காமி னெனவே யாங்கவர்

(வேடர் உதயணனை நோக்கிக் கூறல்)

அடையார்க் கடந்த வுதயணன் மந்திரி
இடபக னென்போ னெறிப்படை தானிது
கோளுலா வெழுமெனிற் கூற்றெனப் பரந்த
நாளுலாப் புறுத்தும் வாள்வலி யுடைத்தே
தெரிந்தனை நில்லா யாகி யெம்மொடு
புரிந்தனை போது போதா யாயின்
பிரிந்து காண்பிற ரருந்தலை துமிப்பவென்
றூர்வ வேட்டுவ ரண்ணற் குரைத்து
வார்சிலை யம்பொடு வாங்கிக் கொள்கென

239. கோடு, வயிர் : கொம்பென்னும் வாத்திய விசேடங்
241. உதயணனை விட்டு நீங்காத வேடர்களை. [துவைப்ப-முழ
244. மெய்த்தகைத்தாக - உண்மையாக.
245. தமர் - தம்மவர்கள்.
248. எனவே - என்று உதயணன் கூறியவுடன். அவர் -
251. கோள் உலாய் - கொள்ளுதலை மேற்கொண்டு. [வேடர்
252. உலாப்புறுத்தும் - அழிக்கும்.
இப்படை (250) வாள்வலியுடைத்து (252.)
253. நில்லாயாகி - தனியே நில்லாமல்.
255. பிறராகிய அவர்கள் உங்களுடைய அரிய தலைகளைத் து
பார்கள் ; இதனை எம்மைவிட்டுப் பிரிந்து காண்பாயாக.

பி - ம். 1 கள்வனைப்.

(வேடர் செயல்)

வீர வேந்தற்கு விரைந்தவ ரீயா
முற்பகற் செய்வினை பிற்பக லுறுநரிற்
பார்வை நின்றும் பதுக்கையுட் கிடந்தும்
போர்வைப் புல்லுட் பொதிந்தன ரொளித்தும்
கழுக்குநிரை யிருந்துங் காலியற் புரவி
விழுக்குநிணம் பரிய விடுகணை விட்டும்
கோலிய வல்விற் குமரரை மாட்டியும்
வேலிய வாளரை வீழ நூறியும்
வெங்கணை வாளியுள் விளிந்தனர் வீழப்

(உதயணன் செயல்)

பைங்கண் வேழத்துப் படைத்திறல் வேந்தன்
தமர்வழங்கு படையு மவர்வழங்கு வாளியும்
பொன்னிழை மாதரொடு தன்வயிற் காத்து
மரம்பயி லழுவத்து மறைந்தன னிற்ப
உரங்கெழு மறவ ருதயண னொழிய
மத்துறு கடலிற் றத்துறு நெஞ்சினர்
பைவிரி நாகத் தைவாய்ப் பிறந்த

---

257 - 8. வில்லும் அம்பும உதயணனுக்கு வேடர்கள் கொடுத்து.

259. முற்பகலிற் செய்த வினையின்பயனைப் பிற்பகலில் அடைபவர்களைப்போல முதலில் உதயணனை வருத்திய வேடர்கள் பின்பு தாம் வருந்தினார்களென்பதற்கு இது கூறப்பட்டது; "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமே வரும்" (குறள், 319), "முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு, பிற்பகற் காண்குறூஉம் பெற்றியகாண்" (சிலப். ௨௧ : 3 - 4), "முற்பக லோர்பழி முடிக்கின் மற்றது, பிற்பக றமக்குறும் பெற்றி யென்னவே" (கந்த. இரண்டா நாட். 365) என்பவை இவ்வடியுடன் ஒப்பிடற்பாலன.

260. பார்வை நின்றும் - பார்வை மிருகங்களுக்கு இடையே நின்றும்; பெரிய. கண்ணப்ப. 3. பதுக்கையுள் - கற்குவியல்களுக்குள்ளே.

261.=56 : 220. 262. கழுக்கு நிரை - கழுகின் வரிசைகளில்.

266. கணைவாளி - அலகையுடைய அம்பு; சீவக. 90.

267. வேந்தன் - உதயணன். 268. அவர் - வேடர்.

269. தன்வயிற் காத்து - தன்னிடம் வரஈதபடி காத்துக்கொண்டு.

270. அழுவத்து - பரப்பில். 271. ஒழிய - தவிர்ந்து நிற்ப.

ஒலிப்புயிர் பெற்ற வெலிக்கணம் போல
ஒழிந்தோ ரொழியக் கழிந்தோர் காணு
ஆறுகொண் மாந்தர்க் கச்ச மெய்தி
ஏறுபெற் [1] றிகந்த பின்றை வீறுபெற்
றங்கண் விசும்பிற் றிங்களைச் சூழ்ந்த
வெண்மீன் போல வென்றி யெய்திப்
பன்மாண் படைஞர் பரந்தனர் சூழ
மலிந்தவ ணேறி வத்தவர் பெருமகன்
கலிந்த துன்பங் கையிகந் தகலப்
பொலிந்தன னென்ப [2] பொருபடை யிடையென்.

௫௬—வென்றியெய்தியது முற்றிற்று.

---

273 - 5. நாகத்தின் மூச்சுக்காற்று வீசப்பெற்ற எலிக் கூட்டங்களைப் போல ஒழிந்தனர்; "ஒலித்தக்கா லென்னு முவரி யெலிப்பகை, நாக முயிர்ப்பக் கெடும்" (குறள், 763.) 276. எய்தி - எய்துவித்து.

277. ஏறுபெற்று - ஆயுதங்களாலுண்டான புண்களைப்பெற்று.

278 - 9. "திங்களைச் சூழ்ந்த பன்மீனெனச் சென்றெய்தி" (சீவக. 1337); திங்கள் உதயணனுக்கும் அதனைச் சூழ்ந்த மீன்கள் அவனைச் சூழ்ந்த வீரர்களுக்கும் உவமை.

282. கலிந்த: கலித்தவென்பதன் விகாரம்.

பி - ம். 1 றிருந்த. 2 பொலிபடை.

## ௫௭—படைவீடு.

(படையாளர் செயல்)

பொருபடை யிளையர் புகன்றனர் சூழ்ந்து
செருவடு செம்மலைச் செல்ல லோம்பிக்

---

௫௭—படைவீடு.

[உதயணனும் வாசவதத்தையும் அயர்ச்சி நீங்குதற்குச் சேனைகளுடன் சயந்தியைச் சார்ந்த மலைச்சாரலில் தங்கியிருந்தமை இதனால் அறியலாகும்.]

1. புகன்றனர் - விரும்பி.
2. செம்மலை - உதயணனை. செல்லல் - துன்பம்.

கூப்பிய கையினர் காப்பொடு புரிய
வண்டலர் படலை வயந்தக குமரனும்
தண்டத் தலைவனுந் தலைப்பெய் தீண்டிக்
கனிபடு கிளவியைக் கையகப் படுத்துத்
துனிவொடு போந்த தோழனைத் துன்னி
இழுக்கா வியல்பி னொழுக்க மோம்பி

(உதயணன் செயல்)

வஞ்சமில் பெரும்புகழ் வத்தவ ரிறைவனும்
நெஞ்ச மகிழ்ந்து நீத்துமிக வுடைய
துன்பப் பெருங்கடற் றுறைக்கட் பொருந்திய
இன்பப் பெரும்புணை யாயினி ரெமக்கென
அன்புடை யருண்மொழி நன்புபல பயிற்றி
ஆர்வத் தோழரை யார்த லாற்றான்
வீரத் தானை வேந்தன் விரும்பி
நறைமலர்ச் சோலை யிறைகொண் டிருப்பப்

(இடபகன் ஏவலாளர் உதயணனுக்குப்
படைவீடு அமைத்தல்)

பெருமூ தாளரும் பெருங்கிளைச் சுற்றமும்
திருமா தேவிக்குத் தெரிவன ரமைத்த

---

3. காப்புப் புரிய; ஒடு : இசைநிறை.

4. படலை - இலை விரவித் தொடுத்த மாலை.

5. தண்டத் தலைவன் - இடபகன்.

6. கிளவியை - வாசவதத்தையை.

7. தோழனை - உதயணனை.

8. ஒழுக்கமோம்பி - தம்முடைய ஒழுக்கத்தைப் பாதுகாக்க; அவன்பால் தாம் செய்ய வேண்டுவனவற்றைச் செய்ய.

11.=54 : 135 ; 57 : 107 - 8.

10 - 12. இருவரையும் நோக்கி உதயணன் கூறிய முகமன்.

13. நன்பு பல - நன்மையையுடைய பலவற்றை; "நன்புடை நல் லூர்ப் பெருமணம்" தேவாரம்.

14. ஆர்தல் ஆற்றான் - நோக்கால் நுகரும் வேட்கை தணியா னாகி; 44 : 145; "பருகு வன்ன காத லுள்ளமொடு" அகநா. கூக்க.

16. இறைகொண்டு - தங்கி.

17. பெருமூதாளர் - பெரிய ஒழுக்கத்தினையுடைய மெய்காப் பாளர்; "பெருமூ தாளரே மஞ் சூழ" முல்லைப். 54.

வண்ண மகளிரொடு வைய முந்துறீஇ
வந்தொருங் கீண்டிய பின்றைச் சயந்தி
நாடுவண் டரற்றுங் கோடுயர் சாரல்
இறைமகன் [1]விட்டிட வுறையுண் முறைமையின்
மறுகு முற்றமு மாண்பட வகுத்துத்
தறிமிசைக் கொளீஇய [2]செறிநூன் மாடமொடு
நிரைநிரை கொண்ட நுரைபுரை திருநகர்
பசும்பொற் புளகம் விசும்புபூத் ததுபோல்
பரந்த பாடி நிரந்தவை தோன்றப்

**(வாசவதத்தைக்குரிய இடங்களும் பண்டங்களும் அமைத்தல்)**

பேணார்க் கடந்த பிரச்சோ தனன்மகள்
பூணா ராகத்துப் பொங்கிள வனமுலை
வள்ளிதழ்க் கோதை வாசவ தத்தைக்குப்
பள்ளி மாடமும் பாற்பட வமைத்துப்
பாவையு முற்றிலும் பூவையுங் குழலும்
பைம்பொற் கவறும் பளிக்குமணி நாயும்
சந்தனப் பலகையுஞ் சந்தப் பேழையும்
சாந்தரை யம்மியுந் தேங்கட் காழகிற்
புகைத்துளை யகலுஞ் சிகைத்தொழிற் சிக்கமும்
கோதைச் செப்புங் கொடிக்கொட் டகரமும்
கிளியு மயிலுங்..............................
தெளிமொழிப் பூவையுஞ் செம்பொற் கரண்டமும்
மணிக்கலப் பேழையு மணிக்கண் ணாடியும்
மணிதிகழ் விளக்கு மயிர்வினைத் தவிசும்

---

20. சயந்தி - ஒரு நகரம்; இஃது உருமண்ணுவாவிற்குரியது;
21. சாரலில். 22. விட்டிட - தங்க. [58 : 106 - 8.
24. தறி - தூண். நூன்மாடம் - கூடாரம்.
24 - 5. = 57 : 112 - 3. 26. புளகம் - கண்ணாடி.
27. பாடி - படைவீடு. 32. முற்றில் - சிறுமுறம்.
34. சந்தப்பேழை - ஆடைப்பெட்டி. 36. சிக்கம் - சீப்பு.
37. கோதை - பூமாலை. 39. பூவை - நாகணவாய்ப்புள்.
40. மணிக்கலம் - இரத்தினவணி.

பி - ம். 1 வீட்டிட முறையுண். 2 செறிதூண்.

இருக்கைக் கட்டிலு மடைப்பைத் தானமும்
செங்கோ டிகமும் வெண்பாற் றவிசும்
முட்டிணை வட்டும் பட்டிணை யமளியும்
ஆல வட்டமு மணிச்சாந் தாற்றியும்
மாலைப் பந்து மேனைய பிறவும்
ஏந்திய கையர் மாந்தளிர் மேனி
மடத்தகை மகளிர் படைப்பொலிந் தியல

(உதயணனுக்குரியன அமைத்தல்)

அரைசியன் முறைமையி னண்ணற் கமைந்த
விரைபரி மாவும் வேழமுந் தேரும்
தெள்ளொளித் திரள்காற் றிகழ்பொ னல்கிய
வெள்ளிப் போர்வை யுள்ளொளிப் படலத்து
வள்ளிக் கைவினை வனப்பமை கட்டிலும்
விளங்குமணி முகட்டின் றுளங்குகதிர் நித்திலக்
கோவைத் [1]தாரளங் கொட்டையொடு துயல்வரும்
கொற்றக் குடையும் வெற்றி வேலும்
கொடியுங் கவரியு மிடிபுறழ் முரசும்
[2] சங்க படவமுங் கம்பல விதானமும்
அங்காந் தியன்ற வழலுமிழ் பேழ்வாய்ச்
சிங்கா சனமும் பொங்குபூந் தவிசும்
பள்ளிப் பலவகைப் படுப்பவும் பிறவும்
வள்ளிப் போர்வையும் வகைவகை யமைத்துத்

---

46. மாலைப் பந்து - பூச்செண்டு ; "மாலைப்பந்து மாலையுமேந்தி" [சீவக. 2928.
32 - 46.=38 : 163 - 77.

48. படைப் பொலிந்து - சேனைகளாக விளங்கி.

51. பொன் அல்கிய - பொற்பூக்கள் தங்கப்பெற்ற.

53. வள்ளிக் கைவினை - கொடித்தொழில்.

55. கோவைத்தாரளம் - முத்துமாலை ; கொட்டை - கடைமணி ; "மணிபுனை செம்பொற் கொட்டை வம்பணி முத்தமாலை" சீவக. 113.

58. படவம் - படகமென்னும் வாத்தியம் ; சங்கமும் படவமும்.

60. "பொங்கு மெல்லணை" மணி. ௭ : 6.

62. வள்ளிப்போர்வை - கொடிகளின் வடிவமெழுதிய போர்வை.

பி - ம். 1 தானங். 2 சங்கபடலமும்.

(சிலதர் முதலியோர் செயல்)

தெளியப் படூஉ முளிவில் செய்தொழிற்
சிலதரு மியவருஞ் சிந்து தேசப்
பலவகை மரபிற் பாடை மாக்களும்
ஆய்நல மகளிர் வேய்நலம் பழித்த
தோடர வந்த வாய்மொழி லாளரோ
டென்னோர் பிறருந் துன்னினர் சுற்ற
ஏவற் கமைந்த காவற் றொழிலொடு
கைக்கோ விளையருங் கணக்குவினை யாளரும்
மெய்க்கோண் மள்ளரு மீளி மாந்தரும்
புற்றகத் தொடுங்கி முற்றிய காலை
ஈரம் பார்க்கு மீயற் கணம்போல்
நேரம் பார்த்து நெடுந்தகைக் குரிசிலை
மீட்டிடம் பெற்றுக் கூட்டிடங் கூடிக்
கடிதுமிசை வியற்கைப் பிடிமிசை யிருந்த
வருத்த மறிந்து மருத்துவர் வகுத்த
அரும்பெற லடிசி லவிழ்பதங் கொள்ளும்
பெரும்பக னாழிகை பிழையா தளக்குநர்
செவ்வி யறிந்து கவ்விதின் மொழிய

(உதயணன் நீராடி உண்ணல்)

நள்ளிரு ணடைப்பிடி யூர்ந்த நலிவினும்
பள்ளி கொள்ளாப் பரிவிடை மெலிவினும்
கவர்கணை வேடரொ [1]டமர்வினை வழியினும்
பல்பொழு துண்ணாப் பசியினும் வருந்திய
செல்வக் காளை வல்லவன் வருத்த

63. முளிவு - கேடு. 64. சிந்துதேசத்திலுள்ள.

65. பாடை - பாஷை; "முட்டிலா மூவறு பாடை மாக்கள்" (சீவக. 93); "புலம்பெயர் மாக்கள்" (சிலப். ௫ : 11); "பரந்தொருங் கீண்டிய பாடை மாக்கள்" மணி. க : 16.

67. தோடர - தோளை அலங்கரிப்பதற்கு.

71. மெய்க்கோள் மள்ளர் - மெய்காப்பாளர்.

77 - 9. "ஆயுள் வேதருங் காலக் கணிதரும்" சிலப். ௫ : 44.

80. கவ்விதின் : உ. 6 : 61 ; குறள், 1144. 83. வழி - இடம்.

பி - ம். 1 டமர்வினை.

வாச வெண்ணெய் பூசிப் புனைந்த
காப்புடை நறுநீர் காதலி னாடி
யாப்புடைத் தோழரொ டடிசி லயில

(வாசவதத்தை நீராடல் முதலியன)

[1] நிறைத்துவர் நறுநீர் சிறப்பொ டாடிய
தாமரை முகத்தியைத் தமனியப் பாவையிற்
காமர் கற்சுனைத் தானமுத னிரீஇத்
தன்ன மகவயிற் றவாஅத் தாதைக்கு
முன்ன ரெழுந்த முழுக்கதம் போலப்
புறவயிற் பொம்மென வெம்பி யகவயின்
தண்மை யடக்கிய நுண்ணிறைத் தெண்ணீர்
வரிவளைப் பணைத்தோள் வண்ண மகளிர்
சொரிவன ராட்டித் தூசுவிரித் துடீஇக்
கோங்கின் றட்டமுங் குரவின் பாவையும்
வாங்கிக் கொண்டு வாருபு முடித்து
[2] மணிமா ராட்டத் தணிபெற வழுத்திக்
காவலன் மகளைக் கைதொழு தேத்தி
ஆய்பத வடிசின் மேயதை யூட்டி
அவிழ்மலர்ப் படலைத் தந்தை யகவயின்
நிகழ்வதை நிகழ்த்திப் புகழ்வரும் பொலிவொடு
பரிசனஞ் சூழ்ந்து பரிவுநன் கோம்ப
அன்றை யப்பக லசைஇ யொன்றிய

---

87. அரசர் நகர்வனவற்றைக் காப்பென்றல் மரபு ; சீவக. 1873, 85 - 8. உதயணன் நீராடி அடிசில் அயில. [ந.

89. நிறைத்துவர் நறுநீர் - சாலில் இட்டுப் பத்துத்துவர் ஊற வைத்த வாசநீர். 90. வாசவதத்தையை.

92. தன்ன மகவயின் - தன்னுடைய பிள்ளையினிடத்து.

93. முழுக்கதம் - பூர்ணமான கோபம். 95. நிறை - சால்.

98. கோங்கம்பூவும் குரவம்பூவும் ; உ. 14 : 19, 24.

100. மாராட்டத்து அணி - மகாராட்டிரதேசத்து அலங்காரம்.

102. மேயதை - விரும்பியதை.

105. பரிவு ஓம்ப - வருத்தத்தைப் பரிகரிக்க.

106. அசைஇ - இளைப்பாறி.

பி - ம். 1 நிறைத்துறை. 2 மணிமாறுட்டத்.

துன்பப் பெருங்கட லீந்தி யின்பத்
தேம நெடுங்கரை யெய்தி யாமத்து
மதியம் பெற்ற வானகம் போலப்
பொதியவிழ் பூந்தார்ப் புரவலற் றழீஇச்
சுரமுத னிவந்த மரமுத லேறும்
பால்வெண் கடலின் பனித்திரை யன்ன
நூல்வெண் மாடங் கோலொடு கொளீஇ
மொய்த்த மாக்கட் டாகியெத் திசையும்
மத்த யானை முழங்கு [1]மாநகர்
உத்தர குருவி னொளியொத் தன்றால்
வித்தக வீரன் விறற்படை வீடென்.

௩௭—படைவீடு முற்றிற்று.

---

107 - 8.=57 : 10 - 12.

111. *சுரமுதல் - வழியிடத்தில்.* 112 - 3.=57 : 24 - 5.

114. *மாக்கட்டாகி - மாக்களை உடையதாகி.*

116. *உத்தரகுருவின் - போக பூமியைப்போல.*

116 - 7. "*விலைதிரிந் தாழி நீங்கி யுத்தர குருவு மாகிக், கொலைகடிந் திவற லின்றிக் கோத்தொழி னடாத்து மன்றே*" (சீவக. 2583); "*உத்தர குருவி னொப்ப*" சிலப். உ: 10.

115 - 7. *மாநகராகிய படைவீடு.*

பி - ம். 1 *மாந்தர்.*

## ௩௮—சயந்தி புக்கது.

(உதயணன் யானைமீதூர்ந்து செல்லல்)

விறற்படை சூழ விளங்குமணிப் பைம்பூண்
மறப்படை நோன்றாள் வத்தவர் பெருமகன்
போரகத் தெழுந்த பூசல் [1]வினைஞர்
மார்பகம் போழ்தலி னீரந் தீரா

---

௩௮—சயந்திபுக்கது.

[உருமண்ணுவாவின் நகரமாகிய சயந்தியை உதயணனடைந்தது இதனால் அறியலாகும்.]

3. *வினைஞர் - பகைவருடைய.* 4. *மார்பகத்தை.*

பி - ம். 1 *வினையாளர்.*

நெய்த்தோர்க் கச்சையி னித்திலம் போலச்
செம்மை சேர்ந்த [1] வெண்மைய வாகிய
எஃகெழி லாகத் திருவரைத் தாழ்ந்த
பாந்த ளன்ன பரேரெறுழ்த் தடக்கையின்
மிதிதோற் கொல்லன் பொதியுலைச் செந்தீத்
ததர்வன போலச் [2] சிதர்வன சிந்திப்
புகரணிந் தோங்கிய நெற்றிப் பூங்கவுள்
அயறசும் பிருந்த வந்த நாற்றத்து
மதக்களி சுவைக்கு மணிநிறப் பறவைத்
தொகைத்தொழி லோப்புந் தகைச்செவிக் கேற்பப்
பணைத்த வெருத்திற் பைங்கட் செயிர்நோக்
கணைப்பக் கண்டத னணிநிழற் சீற்றத்து
நீல மால்வரை நிமிர்ந்துநடந் தன்ன
கோலக் குஞ்சரங் கொள்ளப் பண்ணிப்
பாகர் தருதலிற் பணையெருத் தேறிக்
கருமுகின் மருங்கி னிருளறுத் தேர்தரும்
வெம்மைச் செல்வன் மேனிலை பெற்ற

---

7. இருவரை - பெரியமலை.

8. "பரேரெறுழ்த் திணிதோள்" (நெடுநல். 31.) துதிக்கைக்குப் பாம்பு உவமை: "பாம்புபதைப் பன்ன பரூஉக்கை துமிய" (முல்லை. 70) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க. [குறுந். கஎஉ.

9. மிதிதோல் - துருத்தி; "உலைவாங்கு மிதிதோல் போல"

10. ததர்வன - சிதறுதலை; 52: 117; "ததர்பட்ட சாந்தமும்" கலி. கக.

12. அயறசும்பிருந்த - புண்வழலை துளித்தலமைந்த; "அயறு சோரு மிருஞ்சென்னிய" புறநா. உஉ.

13. பறவை - வண்டுகளின்.

12 - 3. நாற்றத்து மதக்களி: மதம் நாறுமென்பதைத் தக்கயாகப் பரணி 3-ஆம் தாழிசையாலும் அதன் விசேடக்குறிப்பாலும் உணரலாகும்.

16. தன் அணிநிழல் சீற்றத்து - தன்னுடைய அழகிய நிழலினிடத்தேயுள்ள கோபத்தையுடைய.

17 - 8. "நீல மால்வரை நிலனொடு படர்ந்தெனக், கால வேகங் களிமயக் குற்றென" மணி: ச: 43-4.

21. உதயணனுக்குச் சூரியன் உவமை: உ. 1: 21.

பி - ம். 1 வம்மைய. 2 சிதர்ப்பன.

தண்மைத் திங்களிற் றகைக்குடை நிழற்ற
உதயண குமர னொளிபெறத் தோன்றப்

(காவலர் முதலியோர் செயல்)

புதைகுப் பாயத்துப் பூண்ட வாளிற்
கடுங்கட் காவலர் கொடுங்கோடு சிலைப்ப
எப்பான் மருங்கினு மொய்ப்புற்று விளங்கிக்
கிழியிடம் பெறுஅர் வழியிடம் பார்ப்ப
யானையும் புரவியுஞ் சேனையுஞ் செல்ல
விடற்கருந் தோழர் புடைக்களி றேற

(அரும்பொருள்கள்)

அந்தண் பொதியிற் சந்தன மரமும்
நறுந்தண் சோலை யிறுங்காற் றிமிசும்
அடவி விந்தத் தியானை மருப்பும்
வடதிசை மாமலைச் சுடர்விடு பொன்னும்
குடகடற் பிறந்த படர்கொடிப் பவழமும்
தென்றிசைப் பிறந்த வெண்சுடர் மணியும்
விஞ்சையம் பெருமலை விளங்கொளி வெள்ளியும்

---

20 - 23. யானைக்குக் கருமுகிலும் உதயணனுக்குச் சூரியனும் குடைக்குச் சந்திரனும் உவமைகள்.

25. கொடுங்கோடு - வளைந்த ஊதுகொம்பு.

27. கிழியிடம் பெறுஅர் - கிழித்துச் செல்லும் இடம் பெறுராகி; கூட்டத்தை விலக்கி இடையிற் புகுதற்கியலாரென்றபடி.

29. தோழர் - வயந்தகனும் இடபகனும்.

30. பட்டினப். 188; சிலப். ௧௪ : 81.

32. அடவிவிந்தம்: 51: 5, அடிக்; "வெம்பு கருநடர் வந்தவன மெனும் விந்தவனமென வேவவும்" (தக்க. 62); "மலையைத் தடவிய விந்தத் தடவி மலைந்தவொன்னார்" தமிழ்நா. 134.

33. வடதிசை மாமலை - மேரு; பொன் - சாம்பூநதம்; "வட மலைப்பிறந்த ...பொன்னும்" (பட். 187); "வடமலைப் பொன்னனார்" சீவக. 2863.

35. வெண்சுடர் மணி - முத்து; "தென்கடன் முத்தும்" (பட். 189) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

36. விஞ்சையம் பெருமலை - வித்தியாதரகிரி; அது வெள்ளிமலை.

இலங்கை யீழத்துக் கலந்தரு செப்பும்
இமயத்துப் பிறந்த வயிரச் சாதியும்
கடாரத் திரும்பொடு கையகத் தடக்கி

(பலநாட்டுக் கைத்தொழிலாளர்)

யவனத் தச்சரு மவந்திக் கொல்லரும்
[1] மகதத்துப் பிறந்த மணிவினைக் காரரும்
பாடலிப் பிறந்த பசும்பொன் வினைஞரும்
கோசலத் தியன்ற வோவியத் தொழிலரும்
வத்த நாட்டு வண்ணக் கம்மரும்
தத்தங் கோண்மேற்றங் கைத்தொழி லோன்ற

(வாசவதத்தைக்குரிய வண்டியின் உறுப்புக்கள்)

ஆரமுஞ் சூட்டு நேர்துணைக் குழிசியும்
அச்சு மாணியும் வச்சிர யாப்பும்
அகவாய்க் கோடும் புறவாய்ப் பூணும்
பத்திரப் பந்தமுஞ் சித்திரப் புளகமும்
புறமணைப் பலகையு [2] மகமணைத் தட்டும்
[3] சந்திக் கோணமு மெந்திர வாணியும்
கஞ்சிகைக் கொளுவொடு கயிற்றுநிலை யமைத்து
மூக்குங் கோடுங் கோப்புமுறை கொளீஇ
முகத்து ணளவு மகத்து ணமைதியும்
நூலிட் டமைத்த கோலக் [4] கூடத்து
நாண்மீ னொழுக்குங் கோண்மீன் கோப்பும்
கரந்துறை கோளொடு நிரந்தவை நிரீஇயவற்

---

37. "ஈழத்துத் தச்சன் கடைந்த வினைச்செப்போ" யா - வி, செய். சூ. 9, மேற். [திருவால. உ௫ : 17.

38. சீவக. 2417; வயிரம் பிறக்குமிடங்களுள் இமயமும் ஒன்று;

39. கடாரம் - காழகம்; பர்மா. 33 - 9. = பட்டின. 187 - 91.

40. யவனத்தச்சர் : 38: 233. 40 - 41. மணி. கக : 107 - 9.

42. பாடலி - பாடலிபுத்திர நகரம்; "நந்தர், சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை, நீர்முதற் கரந்த நிதியங் கொல்லோ" அகநா. உகரு.

51. "கோணச்சந்தி மாண்வினை விதானத்து" மணி. கக: 113.

56. நாண்மீன் - நக்ஷத்திரங்களின். ஒழுக்கு- செல்லுகை. கோண் மீன்-நவக்கிரகம். 57. கரந்துறைகோள்-மறைந்துறையும் கிரகங்கள்.

பி - ம். 1 மக்கத்துப். 2. ம் வகமனத். 3 சிந்திக். 4 கூட்டத்து.

றெழ்ச்சியு மிறுதியுஞ் சூழ்ச்சியு முணர
அரும்பொறி மண்டல மகவயி னியற்றிப்
புலமை யுணர்ந்து புலங்கெழு நுட்பத்துப்
பெரும்பொறிப் பாவை மருங்கி னிரீஇ
முடியு மடியு முறைமையிற் புனைந்து
கொடியு மலருங் கொள்வழி யெழுதிப்
பிடியுங் களிறும் பிறவு மின்னவை
வடிமாண் சோலையொடு வகைபெற வரைந்து
நயத்திறம் பொருந்த நாடகங் கண்டும்
வசித்திர வனப்பின் வீணை யெழீஇயும்
பொன்னு மணியும் பன்மலர்த் தாரும்
திருத்தி யணிந்து மருப்புநெய் பூசிச்
சேணெறி செல்லக் கோணெறி கொளுத்தி

**(வாசவதத்தை வையமேறல்)**

உலைவி லூர்ச்சி வலவன் காத்தலிற்
புதுத்துணை மகளி ரொதுக்குநடை யேத்தக்
காஞ்சன மாலை பூம்புறத் தசைஇ
மாசில் விண்ணவன் மடமகள் போல
வாசவ தத்தை வைய மேறக்
கோற்றொழி லாளர் மாற்றுமொழி யியம்பக்
கொடிபல நுடங்கக் குன்றஞ் சிலம்ப
இடியுறழ் முரசி னிருங்க ணொருக்கிக்
காட்டக மருங்கின் வீட்டிட மமைகெனப்

**(துடிகள் செயல்)**

பெருமலைச் சாரற் சீறூர் வாழும்

---

58. எழ்ச்சி - தோன்றுதல்; ௩. 25: 6; ௪. 11: 15; "எழ்ச்சி கேடின்றி யெங்கணு நிறைந்த வெந்தாய்" (திருவாய். ௩. 2: 4.) இறுதி- [அத்தமனம்.

59. அகவயின் - உள்ளிடத்தே.

60. புலம் - பல தேயங்களிலும்.

61. பொறிப்பாவை - எந்திரப்பாவை.

72. நடையேத்த - அடியீடு எத்த.

76. மாற்றுமொழி - சனங்களின் திரளை விலக்குதற்குரிய சொற்கள்; வெவ்வேறான பாஷைகளுமாம்.

77. சிலம்பவென்றது எதிரொலியை. 78. இடியுறழ் முரசு.

79 - 80. அமைகவென்று வாழும்.

காலக் குறும்ப ரோலைத் தூதிற்
பெரும்பொறி யண்ண லரும்பொறி யொற்றிக்
குழிப்படு வேழக் கூன்மருப் பிரட்டையும்
வரைப்படு தேனுஞ் சினைப்படு கனியும்
வீணைத் தண்டும் வேய்படு முத்தும்
கானத் தகிலு மேனத் தெறியும்
பொறிப்புலித் தோலு மறுப்பிய லூகமும்
மந்திப் பிணையொடு மற்றவை பிறவும்
தந்திறை தந்து முந்துசிறைப் பட்ட
அற்ற காலத்து முற்ற நோக்கி
அடியுறை செய்தொழிற் குடிமுதல் பிழைத்தல்
இருநிலம் பெயரினு மெம்மாட் டிலவெனப்
பெருமகன் றமரொடு தெளிவனர் தேற்றி

(உதயணனும் பிறரும் சயந்தியை அடைதல்)

உழைப்படை யாப்பிற் புடைப்படை காப்ப
மிலேச்ச மன்னர் தலைப்படை யொட்ட
நற்படைத் தோழர் விற்படை பின்வரக்
கடல்கிளர்ந் தன்ன வடலருந் தானை
இறும்பம லடுக்கத்துக் குறும்புபல போகி
அரிலற லகவயி னுடுத வாறு

81. குறும்பர் - சிற்றரண்களை யுடைய குறுநிலமன்னர். ஓலைத்தூதின் - ஓலையாகிய தூதினால்.
82. உதயணனுடைய இலாஞ்சனையை உணர்ந்து.
87. பொறிப்புலித்தோல் : சீவக. 266. மறுப்பியலூகம் - மறுவைப் பிடரியிலேயுடைய கருங்குரங்கு. [சிறைப்பட்ட.
89. தம் திறை - தம்முடைய திறையாக. சிறைப்பட்ட - உதயணன்
83-9.=மலைபடு. 500-526; சிலப். உ௫: 37 - 55.
91. அடியுறை - அடியேம்.
91 - 2. பிழைத்தல் இலவென்று ; "எம்பிறப் படியேம் வாழ்க நின் கொற்றம்" சிலப். உ௫: 56. [னோகி.
94. உழைப்படை யாப்பின் - பக்கத்திலுள்ள படைகளின் அணிக
95. மிலேச்சமன்னர்: ௩. 25: 54. தலைப்படை - முன்படை.
96. தோழருடைய வில்வீரர். [மலைப்பக்கத்தில்.
98. இறும்பு அமல் அடுக்கத்து - குறுங்காடு மிக்கிருக்கின்ற

வரியகட் டலவன் வள்ளுகி ருற்றெனக்
கன்னி வாளை யுண்ணு தொடுங்கும்
தண்பணை தழீஇய வண்பணை வளநா
டருமிளை யுடுத்த வமைவிற் குன்றூது
பெருமலை சூழ்ந்த வரிதிய லமைவோ
டிழிக்கப் படாஅ வெழிற்பொலி வெய்திப்
பெருமண் ணுவாவும் பேராப் பல்படை
உருமண் ணுவாவுக் குரிமையி னிருந்த
சயந்தியம் பெரும்பதி யமர்ந்துபுக் கனரால்
இயைந்த செம்மையொ டியைந்திசி னோரென்.

௫௭—சயந்திபுக்கது முற்றிற்று.

## முதலாவது
## உஞ்சைக்காண்டம் முற்றுப்பெற்றது.*

---

100. அலவன் - நண்டு. 101. கன்னிவாளை - பெண்வாளை.

100 - 102. ஒரு கன்னி, தன்மேலே பிறனொருவன் உகிருற்றால் நடுங்குமாறுபோல, வண்டினுடைய உகிர் உற்றதாகக் கன்னிவாளை நடுங்கி உண்ணாது ஒடுங்கும் வயல்கள் சூழ்ந்தநாடு; "வண்டுவாழ் கொடுந்துறைக் கன்னி வாளைமேல், நண்டுகி ருற்றென நடுங்கி நாணி னால், விண்டொளித் தூண்டுறந் தொடுங்கும் வீழ்புனல், கொண்டபூங் கிடங்கணி நகரங் கூறுவாம்" சீவக. 1443.

103. மிளை - காவற்காடு; காட்டரண்.

104. பெருமலை - மலையரண். 106. உவாவும் - நிறையும்.

107. உருமண்ணுவா - உதயணனுடைய மந்திரி.

* இதன்பின், "இந்தக் காவ்யமெழுதினது, அன்பூர் நயினான் அழகு கவி யெழுத்து; நெல்வேலி நாதர் வடிவம்மை அழகியமன்னார் முன்னிற்க" என்பது ஒரு பிரதியிலும், "நெல்லைக் காந்திமதியம்மன் துணை" என்பது மற்றொரு பிரதியிலும் எழுதப்பெற்றிருந்தன.

## இரண்டாவது

# இலாவாண காண்டம்.



### க—நகர் கண்டது.

(நகரமாந்தர் செயல்)

சயந்தியம் பெரும்பதி யியைந்தகம் புகுதலின்
தாதுமல ரணிந்த வீதி தோறும்
பழுக்குலைக் கமுகும் விழுக்குலை வாழையும்
கரும்பு மிஞ்சியு மொருங்குட னிரைத்து
முத்துத் தாியமும் பவழப் பிணையலும்
ஒத்த தாம மொருங்குடன் [1] பிணைஇப்
பூரணப் பெருங்கடைத் தோரண நாட்டி
அருக்கன் வெவ்வழ லாற்றுவ போல
விரித்த பூங்கொடி வேறுபல நுடங்க
எண்வகைச் சிறப்பொடு கண்ணணங் கெய்த
விடாஅ விளக்கொளி வெண்பூந் தாமமொடு
படாகையும் விதானமும் பாற்கடல் கடுப்ப
இருமயிர் முரச முருமென வுரறக்
கடமுழக் கின்னிசை யிடையிடை யியம்ப

---

### உ—இலாவாண காண்டம்.

இஃது இலாவாணமென்னும் நகரில் உதயணன் இருந்தபொழுது நிகழ்ந்த சரித்திரங்களைத் தொகுத்துக் கூறுவது.

### க—நகர்கண்டது.

[நகரத்தார் பலரும் மிகப்பாராட்ட உதயணன் வாசவதத்தையுடன் சயந்திநகரம் சார்ந்தமை இதனால் அறியலாகும்.]

5. பிணையல் - மாலை.

6. பிணைஇ - பிணைத்து. 7. கடை - வாயில்.

8. அழல் - வெப்பம். 10. எண்வகைச்சிறப்பு : உ. 6: 69.

14. கடமுழக்கு - குடமுழவின் முழக்கம்.

பி - ம். [1] பிணைஇப்.

வெந்துய ரருவினை வீட்டிய வண்ணலை
இந்திர வுலக மெதிர்கொண் டாங்கு
மகளிரு மைந்தருந் துகணிலந் துளங்க
நற்பெருங் கடைமுத னண்ணுவனர் குழீஇப்
பொற்பெருங் குடத்திற் புதுநீர் விலங்கி

**(நகரமாந்தர் உதயணனுக்கு உபசாரங்கூறி வரவேற்றல்)**

இருள்கண் புதைத்த விருங்கண் ஞாலத்து
விரிகதிர் பரப்பிய வெய்யோன் போல
வெங்க ணிருட்டிய [1] ரிங்க ணீக்கிய
பொங்குமலர்த் தாரோய் புகுகென் போரும்
....................................ஞட்கா தொழுகிற்
பகைவ ரெண்ணம் பயமில வென்னும்
நீதிப் பெருமைநூ லோதியு [2] மோராய்
யானை வேட்கையிற் சேனை நீக்கிப்
பற்ரு மன்னனிற் பற்றவும் பட்டனை
பொற்ருெடிப் [3] பாவையை யுற்றது தீரக்
கொற்ற மெய்திக் கொண்டனை போந்த
மிகுதி வேந்தே புகுகென் போரும்
பயங்கெழு நன்ஞடு பயம்பல தீரப்
புகுந்தனை புகன்றுநின் புதல்வரைத் தழீஇ
ஒன்ஞ மன்னனை யோடுபுறங் கண்டு
நின்னகர் நடுவண் மன்னுகென் போரும்

---

15. வினை - கருமங்கள். அண்ணலை - அருகனை.
15 - 6. சீவக. 3087 - 90.
19. பூரணகும்பத்துடன் குறுக்கிட்டு வந்து.
20 - 21. க. 58: 21 - 3. 25. பயம் - பிரயோசனம்.
28. பற்ருமன்னனின் - பகைவனுல்; பிரச்சோதனனுல்.
29. அது - அப்பழி. 32. பயம் - பிரயோசனம், அச்சம்.
33. புதல்வரென்றது குடிகளை.
34. ஒன்ஞமன்னன் - பாஞ்சாலராயன்; இவன் உதயணன் நீங்கிய பொழுது கோசம்பியைக் கைப்பற்றி ஆண்ட அரசன்.
35. நின்னகரென்றது கோசம்பி நகரை.

பி - ம். 1 ரின்கண். 2 மோதாய். 3 பாவையுற்றது.

(நகரமாந்தர் வாசவதத்தையைக் கண்டுகூறல்)

மாயோன் மார்பிற் றிருமகள் போலச்
சேயோன் மார்பிற் செல்வமெய் தற்கு
நோற்ற பாவாய் போற்றெனப் புகழ்நரும்
திருமலர்ச் செங்கட் செல்வன் றன்னொடு
பெருமகன் மடமகள் பின்வரக் கண்டனம்
உம்மை செய்த புண்ணிய முடையம்
இம்மையின் மற்றினி யென்னு கியரென
அன்புறு கிளவிய ரின்புறு வோரும்
மண்மீக் [1] கூரிய மன்னவன் மடமகள்
பெண்மீக் [2] கூரிய பெருநல வனப்பின்
வளைபொலி பணைத்தோள் வாசவ தத்தை
உளளென மற்றியா முரையிற் கேட்கும்
அவணலங் காண விவண்வயிற் றந்த
மன்னருண் மன்னன் மன்னுகென் போரும்

(யூகியை வாழ்த்துபவர்)

கருத்திற் சூழ்ச்சியொடு [3] கானத் தகவயிற்
பெருத்திறல் வேந்தனெம் பெருமாற் சிறைகொள
மாயச் சாக்காடு மனங்கொளத் தேற்றி
ஆய மூதூ ரகம்புக் கவன்மகள்
நாகுவளை முன்கை நங்கையைத் தழீஇப்
போகெனப் புணர்த்த போகாப் பெருந்திறல்
யூகியு மன்னுக வுலகினு ளென்மரும்

(உதயணனைப் புகழ்வோர்)

வியன்கண் ஞாலத் தியன்றவை கேண்மின்
நன்றாய் வந்த வொருபொரு ளொருவற்கு

---

37. சேயோன் - முருகக்கடவுள் போல்வான். மார்பிற் செல்வம்- இன்பம்; சீவக. 2701. 39. திருமலர் - தாமரைப்பூ.
42. என்னுகியர் - யாதாக வேண்டும்.
51. எம்பெருமான் - உதயணனை.
52. மாய்ச்சாக்காடு - பொய்ம் மரணத்தை. [சுட்டு.
53. மூதூர் - உச்சயினி. அவன் - பிரச்சோதனன்; செஞ்சுறி

பி-ம். 1 கூறிய. 2 கூறியப். 3 கரணத்.

நன்றே யாகி நந்தினு நந்தும்
நன்றாய் வந்த வொருபொரு ளொருவற்
கன்றாய் மற்றவை தழுங்கினு மழுங்கும்
தீதாய் வந்த வொருபொரு ளொருவற்குத்
தீதே யாகித் தீயினுந் தீயும்
தீதாய் வந்த வொருபொரு ளொருவற்
காசில் பெரும்பொரு ளாகினு மாமெனச்
சேயவ ருரைத்ததைச் செவியிற் கேட்கும்
[1] மாயி காஞ்சனம் வத்தவ ரிறைவற்குப்
பெருஞ்சிறைப் பள்ளியு ளருந்துய ரீன்று
தீயது [2] தீர்ந்தத் தீப்பொரு ளூர்ந்தவன்
செல்வப் பாவையைச் சேர்த்திச் செந்நெறி
[3] அல்வழி வந்துநம் மல்ல றீர
நண்ணத் தந்தது நன்றா கியரெனக்
கண்ணிற் கண்டவன் புண்ணியம் புகழ்நரும்
ஓங்கிய பெருங்கலந் தருக்கிய வுதயணன்
தேங்கமழ் கோதையென் றிருநுதன் மாதரை
வேண்டியுங் கொள்ளான் வேட்டனென் கொடுப்பிற்
குலத்திற் சிறியவன் பிரச்சோ தனனென
நிலத்தின் வாழ்ந ரிகழ்ச்சி யஞ்சி
யானை மாயங் காட்டி மற்றுநம்
சேனைக் கிழவனைச் சிறையெனக் கொண்டு

---

61. அன்றாய் - தீதாய். 66. சேயவர் - பெரியோர்.

67. மாயிகாஞ்சனம் - பிரச்சோதனனாற் செய்விக்கப்பட்ட கபட வித்தை; என்றது பொய்யானையாற் கவர்ந்ததை; "யானை மாயங் காட்டி" (79) என்பர்.

69. தீயது தீர்ந்து - முதலில் தீயதாய் முடிந்து. அத்தீப்பொருள் தீர்ந்து - அஃது அத்தீப்பயனினின்றும் நீங்கி. அவன் - அங்ஙனம் தீங்கு செய்த பிரச்சோதனனுடைய.

71. அல்வழி - இருளில். 72. நன்றாகியர் - நன்றாகுக.

74. பெருங்கலம் - பேரியாழ்; கோடவதி.

74 - 84. பிரச்சோதனன் எண்ணியதும் செய்ததும்.

78. இகழ்ச்சி - இகழ்தலை. 79. பொய் யானையைக் காட்டி.

பி - ம். 1 மாயாக்கஞ்சனம். 2 தீர்ந்ததீப். 3 அந்தணனல்லதுநம்.

வீணை வித்தகம் விளங்கிழை கற்கென
பாணிழை யல்குன் மகனலங் காட்டி
அடற்பே ரண்ணலைத் தெளிந்துகை விட்டனன்
கொடுப்போர் செய்யுங் குறிப்பிஃ தென்மரும்
மற்று மின்னன பற்பல பயிற்றி
மகளிரு மைந்தரும் புகழ்வன ரெதிர்கொள
அமரர் பதிபுகு மிந்திரன் போலத்
தமர்நகர் புக்கனன் றானையிற் பொலிந்தென்.

க—நகர்கண்டது முற்றிற்று.

---

81. விளங்கிழை - வாசவதத்தை.
85. பயிற்றி - இடைவிடாமற் கூறி.

---

## உ—கடிக்கம்பலை.

பொலிந்த சும்மையொடு பொன்னணி மூதூர்
மலிந்தகம் புக்கபின் மண்பொறை கூரப்
பெறலரும் பெருங்கிளை பிறைகொண் டீண்டி
இன்மகி ழிருக்கை யேயர் மகனொடு
தண்மகிழ் நெடுங்குழற் றத்தொளித் தாமத்து
மதிக்கவி னழித்த மாசறு திருமுகத்
தணிக்கவின் கொண்ட வையரித் தடங்கண்
வனப்புவீற் றிருந்த வாசவ தத்தை
வதுவைச் செல்வம் விதியிற் கூறுவென்

(கணியின் சிறப்பு)

எண்டரும் பெருங்கலை [1] யொண்டுறை போகிக்
கண்ணகன் புணர்ப்பிற் கவின்பெற நந்தி

---

உ—கடிக்கம்பலை.

[கலியாணத்தின் பொருட்டு நகரத்தார் மனமுவந்து அங்கங்கே செய்யும் பலவகைச் செயல்களால் உண்டாகும் முழக்கவகைகளை இதனுல் அறியலாகும்.]

2. பொறை - பாரம். 1 - 9. கவியின்கூற்று.
10. கணிதநூலை முற்றக்கற்று.

பி - ம். 1 யெண்டுறை.

விண்ணகம் விளங்கு மேதகு நாட்டத்த
நாற்பொரு ளுணர்ந்து பாற்பொருள் பன்னி
நூற்பொரு ளுணித்துத் தீப்பொரு ளொரீஇ
அலகை வேந்தற் குலகங் கொண்ட
ஒழுக்க நுனித்த வழுக்கா மரபிற்
புணர்ப்பியல் காட்சியன் புரையோர் புகழ
நிழற்பெருங் குடையு நேரா சனமும்
செருப்பொடு புகுதலுஞ் சேனை யெழுச்சியும்
யானையுந் தானையு மேனைய பிறவும்
மண்ணகக் கிழவர் மனக்கோ ளுருது
விண்ணகக் கிழவனின் விழுப்பங் [1] கூரித்
தம்மிற் பெற்ற தவம்புரி தருக்கத்
தரும்பரி சாரத்துப் பெருங்கணி வகுத்த

(வள்ளுவன் மணநாளை அறிவித்தல்)

நன்னா ளிதுவெனப் பன்னா டறியப்
பசும்பொற் பலவார் விசிந்து பிணியுறீஇக்
[2] கோதை முத்தொடு தாமந் தழைஇ
ஏற்றுரி போர்த்த விடியுறழ் தழங்குரற்
கோற்றொழில் வேந்தன் கொற்ற முரசம்
பெரும்பணைக் கொட்டிலு ளரும்பலி யோச்சி
முற்றவை காட்டிக் கொற்றவை பழிச்சித்
திருநாள் படைநாள் கடிநா ளென்றிப்

---

15. அலகைவேந்தன்: ௩. 3: 47.

21. மனக்கோள் - மனக்கொள்கை; "மனக்கோ ளினக்கென வடிவுவே றிலையே" பரி. ௪ : 56.

22. விண்ணகக் கிழவனின் - தேவேந்திரனைப்போல.

24. பரிசாரம் : க. 37: 111.

25. நன்னாள் - மணநாள். 26. பிணியுறீஇ - கட்டுதலுற்று.

28. ஏற்றுரி - இடபத்தின்தோல். தழங்குரல் = தழங்குகுரல் - முழங்குகின்ற ஒலி. 29. முரசம் - முரசத்தை.

29 - 30. புறநா. ௫0, ௩௬௨.

31. முற்றவை - பெரியசபை. கொற்றவை - துர்க்கை. [நாளும்.

32. திருவிழாநாளும், போர்செய்தற்கு எழும் நாளும், மண

பி - ம். 1 கூறித். 2 தோகைமுத்தொ

பெருநாட் கல்லது பிறநாட் கறையாச்
செல்வச் சேனை வள்ளுவ முதுமகன்
நறுவெண் சாந்தொடு மாலை யணிந்து
மறுவில் வெண்டுகின் மருங்கணி பெறீஇ
அணைமிசை யமர்தந் தஞ்சுவரு வேழத்துப்
பணையெருத் தேற்றிப் பல்லவர் சூழத்
தேர்திரி மறுகுதோ றார்முழு தறியப்
பொலிக [1] வேல்வலம் புணர்க பூமகள்
மலிக மண்மகண் மன்னுக மன்னவன்
மல்லன் மூதூர்ப் பல்லவர் கேண்மின்
திருவொடு புணர்ந்து தீயவை நீக்கி
உருவொடு புணர்ந்த வொளியின ராகுமின்
பல்களிற் றியானைப் படைப்பெரு வேந்தன்
மெல்லியற் குலமகண் மிடைமணிப் பைம்பூட்
சிலம்பொலி சீறடிச் சென்றேந்து புருவத்
திலங்கொளி வாட்க ணின்னகைத் துவர்வாய்
வாசவ தத்தையொடு வதுவை கூடிக்
கோல நீண்மதிற் கொடிக்கோ சம்பி
மாலை மன்னவன் மணமக னாகும்
காலை யிதுவெனக் கதிர்மணிக் கடிப்பிற்
கண்ணதிர்ந் தியம்ப வின்மொழி பயிற்றிக்
கல்லென வறையு மொல்லென் கம்பலை
அறைந்தறி வுறீஇய பின்றை நிறைந்த

---

34. சேனையையுடைய பறையறைவோன்.
36. பெறீஇ - பெறுவித்து.
35 - 6. மங்கலத்திற்கு வெண்மை உரியது.
முரசத்தை (29) எருத்தில் ஏற்றி (38.)
43. திரு - நன்மை. 45. பெருவேந்தன் - பிரச்சோதனன்.
47. "கோடேந்து புருவமொடு குவவுநுத னீவி" அகநா. கக.
49. வதுவை - கலியாணம். 51. மன்னவன் - உதயணன்.
52. காலை இது - காலமாகும் இது. கடிப்பு - குறுந்தடி.
28 - 55. = சீவக. 2387 - 92; மணி. க: 27 - 72.

பி - ம். 1 செல்வம்.

(வீட்டை அலங்கரிப்பவர்)

பெரும்பெயர் மூதூர் விரும்புபு துவன்றிப்
படையமை நெடுமதிற் கடைமுகந் தோறும்
பசும்பொற் றோரணம் விசும்புற நாட்டி
அரும்பொற் றூரோ டணிகதிர் முத்தின்
இரும்பெருந் தாம மொருங்குடன் வளைஇ
உத்தம வேழத் துயர்புறம் பொலிய
வித்தக வெண்குடை விரகுளி கவிப்ப
மணிக்கைக் கவரி மரபின் வீசுநர்
புடைக்களி றிருங்குடன் புகூஉ மகலத்
தடைப்பமை பெரும்பொறி யாப்புமுதற் கொளீஇப்
பத்திர மணிந்த சித்திரக் கதவின்
வாயி றோறும் வலத்து மிடத்தும்
[1] தாயின் மாடத்துத் தாண்முத லெல்லையுட்
சதிரத் திண்ணைத் தண்பூம் பந்தருட்
பழுக்காய்க் குலையும் பழங்காய்த் துணரும்
களிக்காய்ப் பறியுந் துவர்க்கா [2] யும்பலும்
பளிக்காய்க் குப்பையும் பலம்பெய் பேழையும்

---

56. பெரும்பெயர் மூதூர்: சிலப். கா: 66.

57. கடைமுகம் - வாயில்முகப்பு.

58. தோரணம் - தோரணகம்பம்; வீட்டின் முன்னுள்ள தூண்கள்; "தோரணத் தூண்க டோறும்" சூளா. கலியாண. 26, சுயம் [வர. 212.

63. கை - காம்பு.

64. புடைக்களிறு - பக்கத்துச் செல்லும் இரண்டு யானைகள்.

65. அடைப்பு அமை - அடைத்தலமைந்த.

66. பத்திரம் - நல்ல உருவங்கள்.

68. தாயின்மாடம்-வீட்டின் முதலிலுள்ள மாடம்; தாய்மனையென் [பது வழக்கு.

69. சதிரம் - சதுரம்.

70. பழங்காய்த் துணர் - பழைய காய்க்கொத்து.

71. களிக்காய் - கருங்காலி சீவிக் காய்ச்சின குழம்பில் ஊற வைத்த பாக்கு; களிப்பாக்கு; சீவக. 2473. பறி - ஒருவகைப்பெட்டி. துவர்க்காய் - துவர்ப்பையுடைய காய்.

72. பளிக்காய்க்குப்பை - பச்சைக் கருப்பூரம் விரவிய பாக்கின்

பி - ம். 1 நாயின். 2 யுமலும்.

தளிரிலை வட்டியொடு தாதுபல வமைத்துச்
சுண்ணப் பெருங்குடம் பண்ணமைத் திரீஇ
எண்ணு தீயுந ரின்மொழிக் கம்பலும்

(அறச்சாலை.)

தண்ணிழற் பொதிந்த வெண்மணற் பந்தர்
கண்ணுறக் கவினிக் கைப்புடை நிறைந்த
செல்வச் சாலையொடு பல்வழி யெல்லாம்
அந்த ணாளரொ டல்லோர் பிறர்க்கும்
அமுதி னன்ன வறுசுவை யடிசில்
நெய்ச்சூட் டமைந்த சிற்றாண் பந்தரொ
டெப்பொழு தாயினு மப்பொழு தீயும்
தூம நவின்ற நாமக் கைவினை
மடைத்தொழில் வழாஅ [1] வாழ்க்கையர் பயின்ற
அறச்சோற் றட்டி லகத்தும் புறத்தும்

---

தொகுதி; பளிங்கு - பச்சைக்கருப்பூரம்; பளிங்குக் காயென்பதன் [தொகுத்தல்.

73. தளிரிலைவட்டி - வெற்றிலைப் பெட்டி.

74. சுண்ணம் - சுண்ணம்பு; வாசனைப் பொடிகளுமாம்.

73 - 4. "தாதுகு சுண்ணத்தர்" மதுரை. 399.

70 - 74. ந. 14: 81 - 6; "தகைசெய் தீஞ்சேற் றின்னீர்ப் பசுங் காய், நீடுகொடி யிலையினர் கோடுசுடு நூற்றினர்" (மதுரை. 400 - 401); "அங்கருங் காலி சீவி யூறவைத் தமைக்கப் பட்ட, செங்களி விராய காயுஞ் செம்பழுக் காயுந் தீந்தேன், எங்கணுங் குளிர்த்த வின்னீ ரிளம்பசுங் காயு மூன்றும், தங்களி செய்யக் கூட்டித் தையலார் கைசெய் தாரே", "கைசெய்து கமழு நூறுங் காழ்க்கும்வெள் ளிலையுங் காம, மெய்தநன் குணர்ந்த நீரா ரின்முக வாச மூட்டிப், பெய்தபொற் செப்பும்" (சீவக. 2473 - 4) என்பவற்றை இவ்வடிகளுடன் ஒப்பிடுக.

75. கம்பல் - முழக்கம்; கம்பலை யென்பதன் திரிபு. "இன் சொலா லீத்தளிக்க" (குறள், 387.) 72 - 5. சீவக. 2403.

79. அல்லோர் - அந்தணரல்லாதோர். [நாடு. 19.

79 - 80. "அந்தண ரமுத வுண்டி யயில்வுறு மமலைத்து" கம்ப.

81. சிற்றாண் - சிற்றுண்டி; "நெய்ச்சூட் டியன்ற சிறுபூ லுண்டி" (க. 40: 130.) 83. தூமம் - புகை.

84. மடைத்தொழில் வல்லோர் இடைவிடாது தங்கிய.

பி-ம். [1] வாழ்க்கை பயின்ற.

முரட்கோ விளைய ரரண்மாட் டியற்றி
முட்டாது நடாஅ மட்டூண் கம்பலும்

(சிறார் ஏவன் மகளிர் முதலியோர் செயல்)

பவழப் பட்டத்துப் பளிக்குமணித் தூணிற்
றிகழ்பொற் போதிகைச் செம்பொற் செழுஞ்சுவர்
வெள்ளி வேயுள் வெள்ளியம் பலகைப்
பீடிகை நிறைத்த மாட மறுகிற்
கொடுப்போர் வீழ்த்த குங்குமக் குழையலும்
தொடுப்போர் வீழ்த்த தூவெள் ளலரும்
வேதியர் கடைத்தலை வேள்விச் சமிதையும்
வாதிகர் கடைத்தலை வாசச் சுண்ணமும்
கலந்தோ ருதிர்த்த கலவைச் சாந்தமும்
புலந்தோர் பரிந்த புதுப்பூ மாலையும்
சிறாஅர் வீழ்த்த செம்பொற் கண்ணியும்
அறாஅ மறுகி னாவணப் பலியும்
பசுங்காய் தெவிட்டும் பற்கூட் டரத்தமும்
இயங்குந ரின்புற வின்னவை பிறவும்
காட்டெனக் கமர்ந்து கூட்டுந ரமைத்த
கலவைக் கொழுங்களி யெழுதுக ளவித்து

86. அரண் - காவலை. [நன். மேற்.
87. நடாஅம் - நடத்துகின்ற. அட்டூண் கம்பல்: "அட்டூண் டேுளி"
91. கடைத்தெருவில்; "பீடிகைத் தெருவிற் பெயர்வோன்" சிலப். கரு: 104.
92. குங்குமக் குழையல் - குங்குமப்பூவைக் குழைத்த குழம்பு.
95. வாதிகர்—வாஸிகர் - வாசனைப்பொருள்களைக் கூட்டுவோர்.
97. புலந்தோர் - ஊடினோர். பரிந்த - நீக்கிய; "கைம்மாலை யிட்டுக் கலுழ்ந்தா டுணையில்லார்க், கிம்மாலை யென்செய்வ தென்று" நாலடி. 393.
99. ஆவணப்பலி - கடைவீதியிலுள்ளார் மாலைக்காலத்தில் தெய்வங்களுக்குத் தூவும் பொருள்கள்; "நெல்லு மலருந் தூஉய்க்கை தொழுது, மல்ல லாவண மாலை யயர" நெடுநல். 43 - 4.
100. தெவிட்டும் - குதட்டுதற்குக் காரணமான.
102. காட்டென - குப்பைகளென்று; "காட்டுக் களைந்து கலங் கழீஇ" ஆசார. 46.
103. எழுகின்ற துகளை.

வெறிக்களங் கடுப்ப வீதியு முற்றமும்
நிறைப்போது பரப்பி நெடுங்கடை தோறும்
அணித்தகை சிதைத்தன ரிவரென வாடும்
முனித்தலைச் சிறாரை முன்னில் வாங்கித்
தாயரைக் காட்டியவர் தவறெடுத் துரைக்கும்
ஏவன் மகளிர் வாய்மொழிக் கம்பலும்

**(சீஷலயழம் அங்கே நடைபெறுவனவும்)**

வண்ணக் கலிங்கத்துக் கண்ணறைக் கண்டம்
தலையொடு தலைவர விலைபடுக் கிரீஇக்
கச்சுவாய் கோடித்து முத்துப்புரி நாற்றி
ஒண்மணித் தாரொடு பன்மணிப் புளகம்
விலங்கு நீளமு மிலங்கித் தோன்றி
மிழற்றுபு விளங்கு மெழிற்பொலி வெய்த
வல்லவன் புனைந்த பல்வகைக் கம்மத்து
மங்கலப் பெருங்கொடி மங்குல்வா னத்துள்
உரற்றுமழை கிழிக்கு மொண்மணி யுச்சிப்
பல்லோர் காணும் பரூஉத்திர ளடியிற்
பன்மணி கண்டத்துக் கண்ணிழற் கலங்கி
ஓங்குபு நிமிர்ந்த [1] தாம்பொடு கவ்விப்
பயில்பூம் பத்திக் குயில்புரை கொளுவின

104. வெறிக்களம்கடுப்ப - வெறியாடுகளத்தை ஒப்ப.

104 - 5. வீதியிலும் முற்றத்திலும் பலநிறமுள்ள பூக்கள் பரப்பப் பெற்றிருத்தலின், அவற்றிற்கு வெறிக்களம் உவமையாயிற்று; மதுரை. 277 - 84; மலைபடு. 149 - 50.

106. அழகிய கோலங்களை இப்பிள்ளைகள் சிதைத்தனரென்று.

107. முனித்தலைச்சிறாரை - முனிவர்களுடைய தலைபோன்ற தலையையுடைய சிறுபிள்ளைகளை; "முனித்தலைக் கண்ணி நெற்றிச் சிறார்" [சீவக. 2541.

108. அவர் - அக்குழந்தைகளுடைய.

106 - 9. குழந்தைகள் செய்த தவறுகளை அவர்கள் தாயர்பால் ஏவன் மகளிர் கூறுவதாகவுள்ள இவ்வழகிய பகுதியுடன், யசோதைபக்கல் ஆயர்மங்கையர் கண்ணன் தீம்புகளைக்கூறி முறையிடுவனவாகிய, "ஆற்றிலிருந்து விளையாடு வோங்களை" (திவ். பெரியாழ்வார். உ : 10. 1) என்பது முதலிய இனிய பகுதிகளை ஒப்பிடுக.

114. விலங்கும் - குறுக்கும்.　　118. உரற்றும் - முழங்கும்.

பி - ம். [1] தாம்பொடு.

[1] வட்டமைத் தியற்றிய வலம்புரி சாற்றி
ஆடகப் பொற்கயிற் றரும்பொறி யாப்பின
வயிரப் பல்லரிப் பயில்பூம் பத்திக்
கிண்கிணித் தாரொடு கலவிய கதிரணி
கொளுவொடு படாஅக் கொடிப்பவ ழத்துத்
தாமந் தாழ்ந்து தலைமுதற் கோத்த
நீலக் காழ்மிசை நெற்றி [2] மூழ்கி
உண்ணுகுப் போலையுட் கண்விரித் தியற்றிய
பாத சக்கர மாறெதிர் நீர்தரக்
கோதைத் தாமமொடு கொட்டைமுதற் கோத்த
இலங்கொளி முக்குடை யெந்திரத் தியங்க
அறிவர் சரித முறையிற் சுட்டி
உரையு மோத்தும் புரையாப் புலமைப்
பெரியோர் நடாவுந் திரியாத் திண்ணெறி
ஓராஅ வுலகிற் கோங்குபு வந்த
அராஅந் தாணத் தருச்சனைக் கம்பலும்

(வீதிகளை அலங்கரிப்பவர்)

கண்ணிற் கண்ட நுண்வினைக் கம்மம்
கையிற் புனையுங் கழிநுண் ணாளர்
ஏட்டினுங் கிடையினு மொட்டமை கிழியினும்
நாற்றமுந் தோற்றமும் வேற்றுமை யின்றி
ஏற்ப விரீஇய விலையுங் கொழுந்தும்
கொழுந்திற் கேற்ற வழுந்துபடு குலாவும்

---

127. கொளு - பொருத்து. 129. காழ் - காம்பு.
130. நுகும்பு - மடல் விரியாத பனங்குருத்து; "முளைநுகும்
131. ஆறு சக்கரங்கள்; மாறுமாம். [போலை" ச. 16 : 23.
133. முக்குடை - சந்திராதித்தம், நித்த விநோதம், சகலபாசனம்.
134. அறிவர்சரிதம் - தீர்த்தங்கரர் முதலியோருடைய வரலாறு.
135. புரையா - ஒவ்வாத.
138. அராஅந்தாணத்து-அருகக்கடவுள் கோயிலில்; உ. 6 : 161; ரு. 4: 151; "தவலருஞ் சிறப்பி னராந்தா ணத்துளோன்" மணி. ௩: 87.
139 - 40. "கண்டதே செய்பவாங் கம்மியர்" நான்மணி. 41.
144. குலா - வளைவு.

பி - ம். 1 கட்டமைத். 2 மூள்கி.

குலாவிற் கமைந்த கோலச் சந்தியும்
முகிழும் போதும் [1] மகிழ்சுழ லலரும்
அன்னவை பிறவும் பன்மரம் பண்ணித்
தீட்டின ரன்றியு நாட்டினர் நிறீஇக்
கழைமுதற் கொளீஇக் கைபுனை வனப்பின்
இழைமுதற் கொளீஇய வெழில வாகிக்
காம வல்லியுங் கதலிகை யணிந்த
தாம வல்லியுந் தண்பெரும் படாகையும்
காலேந் திரமுங் கைவயிற் பிரியா
நூலேந் திரமு நோக்கினர் போகாப்
பத்திப் படாமுஞ் சித்திரக் கொடியும்
இன்னோ ரன்ன வென்னோர் சேரியும்
உறப்புணர்த் தார்க்குஞ் சிறப்பொலிக் கம்பலும்

(முதியர் கூற்று)

இடியுறழ் முரசி னிறைமக னணியும்
முடியணி யொழிய முற்றணிப் பெருங்கலம்
யாவர் வேண்டினும் யாவரு மீமின்
ஈத்ததி னிரட்டி கோத்தரு நுமக்கென
நாற்பெருந் திசையு நகரங் காடியுள்
வாய்த்த செய்தொழில் வாணிகர்க் கறையும்
கோப்பெரு முதியர் வாய்ப்பறைக் கம்பலும்

(மகளிர் தம் புதல்வரை அலங்கரித்து விடுத்தல்)

[2] குடிக்கணி கொடுக்குங் கொற்றத் தானை

---

146. போது - பேரரும்பு. மகிழ் - கள் ; வண்டு ; தேற்றாமரத்தை 'மனைமரம்' (பரி. கக) என்றாற் போலக்கொள்க.

153. காலேந்திரம் - காலத்தைப் புலப்படுத்தும் எந்திரம் ; க. 58: 56 - 9.

159. முடி அரசர்க்கே உரித்தாதலின், 'முடியணியொழிய' என்றார் ; "அருங்கல முலகின் மிக்க வரசர்க்கே யுரிய வன்றிப், பெருங்கல முடைய ரேனும் பிறர்க்கவை பேண லாகா" (சூளா. கலியாண. 189) என்பதனாலும், "களிறனென்" (சீவக. 200) என்பதன் விசேடவுரையாலும் உணர்க.

161. கோத்தரும் - அரசன் தருவான்.

162. கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு என்பன பெருந்திசையெனவும் இவற்றின் சந்தியாகிய மூலைகள் நான்கும் கோணத்திசையெனவும் கூறப்படும் ; நன். வி. ௬. 186.

பி - ம். 1 விழி குழலரும். 2 குடிக்கவி.

இடிக்கண் முரசி னோயர் பெருமகன்
வதுவை நாப்பட் புதுவது புணர்ந்து
நுந்தையர் தம்மொடு செலீஇ யெந்தையர்
வருக வீண்டென வறிதி னேடும்
தம்மமர் புதல்வரைத் தலையடி காறும்
கம்மப் பல்கலங் கைபுனைந் தணிந்து
செம்மலின் [1] விடுக்குஞ் சிறந்த சாயல்
அம்மென் கூந்த லரிவையர் கம்பலும்

(கள்ளுண்பார் செயல்)

வத்தவ ரிறைவன் வதுவையு ணம்மோ
[2] டொத்தவர் வரிசை யொத்துப் புகுதலிற்
பத்திபட நிரைத்த பைங்குலைத் தாறும்
தெங்கி னூறலுந் தேம்பிழித் தேறலும்
தாங்கரும் பெண்ணைப் பூங்குலை யமுதமும்
மதுவுஞ் சீதமும் புதுமலர் வேரியும்
உக்கிர வூறலுஞ் சிக்கரத் தெளியலும்
......................காஞ்சியத் தெளிவும்
கரும்பி னூறலும் பெரும்பொதித் தேனும்
இவையும் பிறவுஞ் சுவைதெரி யாளர்

---

167. புதுவது - புதியகோலம். [சிறுர்களை.

168. செலீஇ - சென்று. எந்தையர் - நீவிர்; என்றது இளஞ்

170. தலையடிகாறும் - தலைமுதல் பாதமளவும்.

171. கம்மப்பல்கலம் : ௧. 44 : 35.

172. செம்மல் - தலைமை.

176. இளநீர்க் குலையும். 177 - 82. பானவகை.

177. தென்னங்கள்ளும், தேனுற்சமைத்த கள்ளின் தெளிவும்; "தேம்பிழி தேறல்" (குறிஞ்சி. 155.) 178. பெண்ணை - பனை.

179. மது - திராக்ஷைப்பழம் முதலியவற்றிலிருந்து எடுத்தது; இருப்பைப் பூவிலுள்ளதென்றுங் கூறுவர். சீதம் - கரும்பின் சாற்றிலிருந்து உண்டாக்கும் கள்; சீதுவெனவும் வழங்கும்.

180. சிக்கரத்தெளியல் - உசலம் பட்டையிலிருந்து உண்டாக்கும் கள்; முருங்கைப்பட்டையிலிருந்து உண்டாக்கியதுமாம்.

181. காஞ்சியத் தெளிவு - காடியிலிருந்து உண்டாக்கும் கள்; காஞ்சிகமென்பது காடியைக் குறிக்கும் வடசொல்.

பி - ம். 1 விளக்குஞ். 2 டொத்த வரிசை.

விட்டுணை லாற்று மட்டுமலி நறுங்கள்
பெய்ம்மின் றம்மி னீமின் பிறர்க்கெனத்
தம்மி ரேறு முண்மகிழ்ந் துரைக்கும்
கள்ளுநண் ணுள ரொள்ளொளிக் கம்பலும்

(யானைப்பாகர்)

மாற்றுத்தொழின் மன்னர் மயங்கிய ஞாட்பினுட்
கூற்றுத்தொழி லிளையர் குடர்சூடு மருப்பின
வெம்படை மிகப்பலர் மெய்ம்மிசை யெறியினும்
தம்படைக் கொல்காப் பண்புடன் பயிற்றி
மூத்தோர் பெண்டிர் நீத்தோர் மகாஅரென
நாற்பா லோரையு நூற்பாற் செய்தொழிற்
பாகர் வேண்டினும் பையுள் செய்யா
வேக வுள்ளத்து வேழந் தெரிந்து
நிரந்தன காட்டிய நேயந் தோன்றப்
பார்படு முத்தொடு தாருடன் பூட்டி
ஐவகை வண்ணத்துக் கைவல் கம்மியர்
கொடியும் பத்தியும் வடிவுபட வெழுதிச்
சூழியு மோடையுஞ் சுடர்மணிக் கோவையும்
ஊழறிந் துயர்த்த வுத்தம வுயர்ச்சிய
[1] மண்ணுநீர் சுமக்கற்குப் பண்ணுமுறை பிழையாக்
கோல யானை நாலிரண்டு மிகையா
ஆயிர மணிந்தவை கோயிலுட் டரூஉம்

---

183-7. "கள்ளிலா மூதூர் களிகட்கு நன்கின்று" (இன்னா. 10.) என்பவாதலின், இது கூறினார்.

மஞ்சனநீர் சுமத்தற்குப் பண்ணப்படும் ஆயிரத்தெட்டு யானைகள்.

188. ஞாட்பு - சண்டை. 194. பையுள் - துன்பம்.

192 - 5. "உயிர்நடுக் குறூஉ வேழம்" ௧. 38 : 121.

197. பார் - பருமை.

201. உத்தம உயர்ச்சி : எழுமுழ உயர்ச்சி.

202. மண்ணுநீர் - மஞ்சனநீர் ; 227.

203 - 4. ஆயிரத்தெட்டு யானையை மஞ்சனங் கொணர்தற்குத் தரும் ; ௧. 42 : 135 ; உ. 5 : 9 - 10 ; "விரைத்தலை மாலை சூட்டி மின்னு ரங்கை சேப்ப, அரைத்தசாந் தணிந்த கோட்ட வாயிரத் தெட்டு

பி - ம். 1 மண்ணுநீர்.

பாகிய வுள்ளத்துப் பாகர் கம்பலும்

(மஞ்சன நீர் கொணர்தற்குரிய மகளிர்)

மணியரி யடக்கிய மாண்வினைப் பகுவாய்
அணிமிழற் றரவத் தம்பொற் கிண்கிணி
சிலம்பொடு சீறடிப் புறம்புதைத் தரற்றவும்
அம்மென் மருங்கு லசைய வடிபரந்த
கொம்மை கொண்ட தன்மைய வாகிக்
கோங்கரும் பழித்த வீங்கிள மென்முலை
உட்பட விட்ட வட்ட நுடக்கத்துச்
சுண்ண விலேகை வண்ணஞ் சிதைய
மண்ணிய நித்தில [1] வடத்தொடு புரளும்
பல்கலஞ் சுமத்த லாற்றாது பையென
ஒல்குபு நுடங்கு மொருபிடி நுசுப்பினர்
மண்ணக மருங்கின் மதிபல பயின்றன
விண்ணக மென்னையும் விடுக்குங் கொல்லென
மதியகம் வெள்க வனப்பொடு புணர்ந்த
கதிர்விடு திருமுகத் தெதிர்வன போலச்
சென்றுவந் துலாவுஞ் சேயரிக் கண்ணினர்
ஈன்றோர் மாட்டு மெதிர்முக நோக்காது
மான்றோங் கூறு மம்மர் நோக்கினர்
பொன்னணி கொண்ட பூந்தண் சிகழிகைக்
கன்னி மகளிர் கண்ணணங் குறாஉம்

---

வேழம், நிரைத்தன (மண்ணு நீர்க்கு முரசொடு முழவம் விம்ம, வரைத் தலைத் துவலை போன்று மதநில நனைப்ப வன்றே" சீவக. 2414.

205. பாகு - பக்குவம்; க. 43 : 5.

207 - 8. "சீறடிய கிண்கிணி சிலம்பொடு சிலம்ப" சீவக. 2019.

212. க. 38 : 191.

216. ஒருபிடி நுசுப்பினர் - ஒரு பிடியில் அடங்கும் இடையுடையார்; "ஒருபிடி நுசுப்பி னுளை", "ஒருபிடி நுசுப்பின்" (சீவக. 613, 2458); "இடையு நடையு மொருபிடி யென்ன வெழுதுவனே" சீகாழிக் கோவை, 144.

223. தோம் - குற்றம்; "துடிதோங் கூறிய விடுகிய நடு" ந. 5 :

222 - 3. நாணுடைமை கூறியவாறு. [18.

பி - ம். 1 வட்டத்தோடு.

ஒவ்வா வணியின ரொப்பக் கூடி
மண்ணகக் கிழவற்கு மண்ணுநீர் சுமக்கும்
புண்ணிய முடையீர் போதுமி னீங்கென
வாயி றோறும் வந்தெதிர் கொள்ளப்
போர்வை மடக்கார் பொலியப் புகுதரும்
கோயின் மகளிர் கோல மெல்லடி
நூபுரங் கலந்த பாடகக் கம்பலும்
அன்னவை பிறவும் பன்னா றாயிரம்
ஒடிவில் கம்பலை யொருங்குதலைக் கூடிக்
கடிகமழ் செல்வங் கலந்தன் றானகரென்.

உ—கடிக்கம்பலை முற்றிற்று.

---

230. "தானை மடக்கா மான மாந்தர்" (க. 32 : 65) என்றார் முன்.
232. பாடகம் - காலில் அணியும் ஓராபரணம்.
235. கடி - நறுமணம், கலியாணம்.

---

## ௩—கட்டிலேற்றியது.

(சோதிடர் நல்ல முகூர்த்தம் அறிந்து கூறல்)

கடிகமழ் செல்வங் கலந்த காலை
இடியுறழ் முரசி னேயர்பெரு மகற்கும்
பிடிமகிழ் யானைப் பிரச்சோ தனன்மகள்
வடிமலர்த் தடக்கை வாசவ தத்தைக்கும்
ஒருயிர்க் கிழமை யோரை யளக்கும்
பேரிய லாளர் பிழைப்பிலர் நோக்கி
வழுவில் செந்தீப் பழுதில வேட்கும்
பொழுதுமற் றிதுவெனப் புரையோர்க் குரைப்ப

(மணப்பந்தர்)

அறுதொழின் முத்தீ யருந்துறை போகிய

---

௩—கட்டிலேற்றியது.

[மணவறைக்கட்டிலின்மீது வாசவதத்தையுடன் உதயணனை அமர்வித்தமை இதனால் அறியலாகும்.]

5. ஓரை - முகூர்த்தம். 6. பேரியலாளர் - பெருங்கணிகள்.
8. புரையோர்க்கு - பெரியோர்க்கு ; புரை = உயர்வு.

மறைநவி லாவின் மரபிய லந்தணன்
பல்பூம் பந்தருட் செல்வஞ் சிறக்கும்
இருநிலத் திலக்கண மியற்பட நாடி
வெண்மண னிரப்பங் கொளீஇக் கண்ணுறப்
புண்ணியப் பலாசின் கண்ணிறை சமிதை
முக்குழிக் கூட்டத் துட்பட வோக்கி
ஆற்றாச் செந்தீ யமைத்தனன் மேற்கொள
ஐயொன் பதின்வகைத் தெய்வ நிலைஇய
கைபுனை வனப்பிற் கான்முதற் றோறும்
[1] ஆரணங் காகிய வணிமுளை யகல்வாய்ப்
பூரண பொற்குடம் பொலிய விரீஇ
வெண்மணன் ஞெமிரிய தண்ணிழற் பந்தருள்
ஐஇய வாசவா னெய்யொடு கலந்த
ஐவகை யுணவொடு குய்வளங் கொளீஇ
நறிய வாகிய வறுசுவை யடிசிற்

---

10. மறைநவில் - வேதத்தைக் கூறி அடிப்பட்ட.

12. பூமியின் இலக்கணத்தை ஆராய்ந்து.

13. நிரப்பம் கொளீஇ - நிரம்புதல் கொள்ளச் செய்து; நிரப்பம் - நிரவலுமாம்; "நிரப்பங் கொளீஇ நின்ற நிலமிசை" உ. 4: 60.

14. பலாசு - புரசமரம்.

15. முக்குழி - மூன்று அக்கினிகளின் குழிகள். ஓக்கி - செலுத்தி.

16. ஆற்றா - தணிக்க இயலாத.

17. நாற்பத்தைந்துவகைத் தெய்வங்கள் நிலைத்த; "நன்கு நிலை பெற்ற நாற்பத் தையணங்கு" உ. 4 : 39.

18. கான்முதல் தோறும் - கம்பங்களின் அடிகள்தோறும்.

19. அணிமுளை - அழகிய தானிய முளைகளையுடைய.

20. இரீஇ - இருத்தி. "பூரண பொற்குடம் வைக்க" (திருச்சிற். 296); "பூரண பொற்குடம் வைத்து" திவ். நாச்சியார். ௬ : 1.

21. ஞெமிரிய - பரந்த. "தண் மணற் பந்தர்" மணி. ௧ : 58.

22. ஐஇய - வியப்பையுடைய. ஆன்நெய் - பசுநெய்.

23. ஐவகையுணவு: "கடித்துப் பருகி விழுங்கி நக்கி, எடுத்துச் சுவைத்த விவையைந் துண்டி" (திவா.) குய்வளம் - தாளிப்பின்வளம்; "குய்வளங் கழுமி" சீவக. 2735.

பி - ம். 1 ஆரணங்காகி.

பெருஞ்சோற் றமலை பரந்துபலர் மிசையும்
மிச்சி லெய்தா வுட்குவ ரொருசிறை
......விசை யம்மிக் குணதிசைக் கோணத்
தீடமை பீடிகை பாடுபெற விருந்த
பொன்னயி ராணி முன்வயிற் பேணிப்
பன்னிய பனுவற் பார்ப்பன முதுமகன்
அந்த ணாவிரை யலரு மறுகையும்
நந்தி வட்டமு மிடையிடை வலந்த
கோல மாலை நாற்றி வானத்
தருந்ததி யரிவையோ [1] டாணிகற் பரவும்
பொருந்துமொழிப் புறநிலை புணர்ந்துபலர் வாழ்த்தி
நான்முறை படைத்த நான்முகக் கடவுள்
தான்முதற் றானத்துத் தகைபெற விரீஇப்

(தெய்வ நிவேதன வகை)

பாலுலை வெந்த வாலவிழ்க் கலவையும்
தேனுலை வெந்த தூநிறத் துழவையும்
புளியுலை வெந்த பொன்னிறப் புழுக்கலும்
கரும்புலை வெந்த கன்னற் [2] றுழவையும்

---

25. பெருஞ்சோற்றமலை - மிக்க உணவின் திரளை; "பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்", "அமலைக் கொழுஞ்சோறு" புறநா. உ, ௩௪.

26. மிச்சில் - மிஞ்சிய பொருள்கள். உட்குவரு - அச்சந்தோன்றுகின்ற.

25 - 6. மிசையும் ஒருசிறை.

27. கிழக்கேயுள்ள மூலையில். 28. பீடிகை - பீடம்.

29. பொன்னயிராணி - பொன்னாற் செய்யப்பட்ட அருந்ததியின் வடிவம்; "அரும்பெறற் கற்பி னயிராணி" (நாலடி. 381); தொல். கற்பு. சூ. 51, ந. பார்க்க ; இஃது அரசாணியென்று வழங்குகின்றது.

31. ஆவிரையலர் - ஆவிரம்பூ. அறுகை - அறுகம்புல்.

32. நந்திவட்டம் - நந்தியாவட்ட மலர்; "நந்திவட்டத்தொடு கொன்றை வளாவிய நம்பனையே" (தேவாரம்,) வலந்த - சுற்றிய.

34. ஆணிகன் - வசிட்டமுனிவன்; துருவனுமாம்.

36 - 7. பிரமதேவருக்குரிய இடத்திலிருந்து ; 58.

38. பாலுலை - பாலாகிய உலையில். கலவை - கலந்தது.

39. துழவை - துழாவியட்ட அன்னம். 40. புளியன்னம்.

41. கரும்புலை - கரும்பின் சாறாகிய உலையில்.

பி - ம். 1 டாணிகட். 2 குழவையும், குழைவையும்.

நெய்யுலை வெந்த மைந்நிறப் புழுக்கொடு
பொன்னகன் மணியகல் செப்பகல் வெள்ளி
ஒண்ணிறப் போனக மண்ணக மலிர
அரிவைய ரடுமடை யமிழ்துகொண் டோச்சிப்

(தேவரை வழிபடுதல்)

பஞ்ச வாசமொடு பாகுவலத் திரீஇ
அஞ்செஞ் சாந்தமொடு மஞ்ச ணீவி
இருப்பக னிறைந்த நெருப்புநிறை சுழற்றித்
தேவர் தூம மேவர வெடுப்பி
மலையினீ ராயினு மண்ணினீ ராயினும்
அலைதிரைப் பௌவத் தகத்தினீ ராயினும்
விசும்பினீ ராயினும் விரும்புபு வந்துநும்
பசும்பொ னுலகம் பற்றுவிட் டொழிந்து
குடைநிழற் றானைக் கொற்றவன் மடமகள்
மடையமைந் துண்டு மங்கலந் தம்மென
ஒப்பக் கூறிச் செப்புவன ரளிப்பக்

(கன்னி மகளிர் செயல்)

கன்னி மகளிர் துன்னுவனர் சூழ
நான்முகக் கடவுளொடு [1] தாண்முதற் றனம்
அன்னத் தொழுதியின் மென்மெல வலங்கொண்
டம்மென் சாயற் செம்முது பெண்டிர்

---

42. புழுக்கு - பொங்கல்.

43. செப்பகல் - செம்பாற் செய்யப்பட்ட அகல். வெள்ளி - வெள்ளியாற் செய்யப்பட்ட அகல்.

44. போனகம் - உணவு. மலிர - நிறைய.

45. மடையமிழ்து - மடையாகிய நிவேதனம். ஓச்சி - பலியாகச் [செலுத்தி.

46. 'பஞ்சவாசம்: "தக்கோல மேல மிலவங்கஞ் சாதிக்காய், கப்பூர மென்றிவை கம்பஞ்ச வாசம்" (திவாகரம்.) பாகு - வெற்றிலை; 63.

50 - 56. நீவிர் யாண்டுள்ளீராயினும் இங்குவந்து இந்நிவேதனத்தைப்பெற்று மங்கலத்தைக் கொடுக்கவேண்டுமென்று விண்ணவர்களை ['வேண்டி.

58. = 36 - 7.

59. தொழுதி - திரள்.

பி - ம். 1 தான்முதற்.

உழுந்துஞ் சாலியு முப்பு மலரும்
பசுங்கிளிச் சிறையெனப் பக்க நிறைத்த
பாகுஞ் சாந்தமும் போகமொடு புணர்ந்த
மங்கல மரபின வங்கையு ளடக்கிக்
கொழுமுகைச் செவ்விரல் போதெனக் கூப்பி
எழுமுறை யிறைஞ்சுகென் றேத்துவனர் காட்ட
ஐதேந் தல்குலர் செய்கையிற் றிரியா
மடைத்தொழில் கழிந்தபி னடைப்பட நாட்டி

(காஞ்சனை வாசவதத்தையை உதயணனுக்கருகில் இருக்கச்செய்தல்)

அரம்போ ழவ்வளை யணிந்த முன்கைச்
சுருங்காச் சுடரொளிச் செம்பொற் பட்டம்
சூளா மணியொடு துளங்குகடை துயல்வரும்
புல்லகம் பொருந்திய மெல்லிலே ணுதிப்
பொன்னணி மாலை பொலிந்த பூமுடீஇ
வண்ணப் பூமுடி வாசவ தத்தையைச்
செண்ணக் காஞ்சனை [1] செவ்விதிற் றழீஇ
இலக்கந் திரியா தியற்பட விரீஇ
நலத்தகை மன்னவ னட்பொடு புணர்த்த

(உதயணன் திருமணச் சடங்குகளைச் செய்தல்)

புண்ணியப் புறநடைப் பண்ணமை யிருக்கையன்

---

61.=உ. 4 : 88 - 9. 63. பாகு - வெற்றிலை ; 46.
68. நடைப்படம் - நடைப்பாவாடை.
69. அரத்தால் அறுக்கப்பட்ட அழகிய வளையல்களை; "அரம்போ ழவ்வளைப் பொலிந்த முன்கை" அகநா. சு.
71. சூளாமணி - முடிமணி; "சூளாமணி யும்பர்க் காயவன்" திருச்சிற். 47.
72. புல்லகம் - தென்பல்லி வடபல்லி யென்னும் தலையணி; "முத்தகப் புல்லகம்" க. 46 : 159.
73. பொன்னணி மாலை : க. 40 : 40, அடிக். முடீஇ - முடித்து.
71 - 3. "கேழ்கிளர் தொய்யகம் வாண்முகப் புல்லகம், சூளாமணியொடு பொன்னரி மாலையும், தாழ்தரு கோதையுந் தாங்கி முடிமிசை, யாழின் கிளவி யரம்பைய ரொத்தாள்" சிலப். சு : 106 - 8, அடி
74 - 5. மு. உ. 4 : 129 - 30. [யார். மேற்.
பி - ம். 1 செவ்வியிற்.

உறுவரை யுதயத் துச்சிமுக நோக்கி
அமைதிக் கொப்ப வளர்த்துகூட் டமைத்த
சமிதைக் கிரிகை சால்புளிக் கழிப்பி
மந்திர விழுநெறித் தந்திரம் பிழையாது
துடுப்பிற் றேய்த்த சேதா நறுநெய்
அடுத்த செந்தீ யங்கழ லார்த்திப்
பைம்பொற் கிண்கிணி பரட்டுமிசை யார்க்கும்
செந்தளிர்ச் சீறடி செவ்வனம் பற்றிப்
போகமுங் கற்பும் புணர்ந்துட னிற்கென
ஆகுபொருள் கூறி யம்மிமுத லுறீஇ
நன்னெய் தீட்டிய செம்மல ரங்கைப்
பொம்மல் வெண்பொரி பொலியப் பெய்தபின்
நன்னிலை யுலகினு ணாவல் போலவும்
பொன்னணி நெடுமலை போலவும் பொழில்வயின்
மன்னுக விவரெனத் தன்னெறி பிழையான்
விதியிற் கூறிய விளங்கிழை வேட்கும்
அதிரா நெறியி னத்தொழில் கழிந்தபின்
மதியி னன்ன வாண்முகம் பொலிய

---

79. கீழ்த்திசையை நோக்கி.

81. கிரிகை - கிரியை; 132.

82. தந்திரம் - தொழில். 83. துடுப்பு - நெய் சொரியும் அகப்பை; தருவி.

84. அழலார்த்தி - சுவாலையிற் சொரிந்து.

83 - 4. "துடுப்புநெய் சொரிதலோடுங், கொண்டழற் கடவுள் பொங்கி வலஞ்சுழன் றெழுந்தது" சீவக. 2466.

85 - 6. = உ. 19 : 185 - 6; ந. 5 : 10; "புடைச்சிறு பரடு புல்லிக் கிண்கிணி சிலம்போ டார்ப்ப" சீவக. 2445.

88. அம்மிமுதல் - அம்மியினிடம்.

91. நாவல் - நாவல் மரம்; இது மேருவின் தென்பாலுள்ளது; இம்மரத்தால் இத்தீவிற்கு நாவலந்தீவென்பது பெயராயிற்று.

92. பொன்னணி நெடுமலை - மேரு.

91 - 3. நாவலும் மேருவும் பிரியாது விளங்குவதுபோல இவ்விருவரும் பிரியாது விளங்குகவென்று வாழ்த்தினர்; "இமய மென்னும் பொன்னெடுங் குன்றம் போல .........மன்னுவாய் திருவோ டென்று வாழ்த்தி" சீவக. 2417.

ஓடுகொடி மூக்கி [1] னாடுபோழ்ந் தொன்றாய்க்
கூடுதல் வலித்த கொள்கைய போலப்
பொருது போந்துலாம் போதரித் தடங்கண்
அமிழ்துசேர்ந் தனவக விதழ்கா ணிறக்கமொடு
பிறந்தவிற் பெருங்கிளை நிறைந்தொருங் கீண்டப்
பால குமரர் தோள்புகன் றெடுப்ப
நாடு நகரமும் கூடுதற் கருளி
யாயு மெந்தையுந் தீமுன் னின்று
வாயிற் கூடுதல் வாரா திவண் வந்தென
வலிபுணர் வதுவைக்குச் சுளியுநள் போல
நடத்த றேற்றா மடத்தகை மாதரை
வளைபொலி முன்கை வருந்தப் பற்றித்
தளையவிழ் தாரோன் வலமுறை வந்து
மறுவில் காதன் மக்களைப் பெறுகென
முறைமையிற் பிழையாது முகிழ்விரல் பற்றித்
தகாஅக் காலந் தலைவரு மெனினும்
பகாஅக் காதலொடு பத்திமை..........
செஞ்சுடர் போன்ற வங்குலி நுழையா
வெஞ்சுடர் வீர னெஞ்சுமுத னீவித்
தென்மருங்கு மடுத்த தீர்த்தப் புன்மிசை

---

97. ஓடு கொடி மூக்கு-வளருகின்ற நீண்ட மூக்கு.

101. பிறந்தவிற் பெருங்கிளை - பிரச்சோதனனுடைய பெரிய சுற்றத்தார்கள்.

102. புகன்று - விரும்பி. 105. வந்து என - வந்தேனென்று.

106. வலிபுணர் வதுவைக்கு-வலிந்து செய்யும் கலியாணத்திற்கு. சுளியுநள்போல - கோபிப்பவள்போல.

106 - 7. நாண மிகுதியால் வாசவதத்தை தலை கவிழ்ந்து மெல்ல நடத்தலை அவள் சுளித்து நடத்தலைப் போன்றதாகக் கூறினார்.

112. தகாக் காலம் - வறுமை முதலியவற்றால் மெலியுங்காலம்.

113. பகாக்காதல் - வேறுபடாமைக்குக் காரணமாகிய அன்பு.

114. அங்குலி - விரல் ; கையுமாம்.

115. வீரன்-உதயணன் ; எழுவாய். நெஞ்சுமுதல் - மார்பிடத்தை.

116. தீர்த்தப்புல் - பரிசுத்தமாகிய தருப்பைப்புல் ; "புண்ணியப் புல்" (உ. 4: 153) என்பர் பின்.

பி - ம். [1] னாடுபோழ்ந்தன்றாய்க்.

மென்மருங் கெழிலியை மெல்லென நடாஅய்
வதுவைத் தானம் [1] பொதுவந் தொன்றி
அந்த ணாள ராசிடை கூற
வெந்திறல் வேந்தன் பைந்தொடி யோடும்
உத்தர கோணத் தத்தக வமைத்த
வேற்றுரி யதன்மிசை யாற்றுளி யிருந்து
படுசுடர்ச் செக்கர்ப் பசலை தீர
விடுசுடர் மதியமொடு வெண்மீ னிவர்ந்த
வடபான் மருங்கிற் சுடர்மீக் கூரிய
கற்புடை விழுமீன் காணக் காட்டிப்
பொற்றொடி நுதன்மிசைப் புனைவிரல் கூப்பி
மன்னிய வுலகினு ளின்னியல் பாக
என்வயி னருளென மும்முறை யிறைஞ்சுவித்
தெதிர்த்த விரதமொ டியல்பிற் பிழையாது
சதுர்த்தி யிருந்து கதிர்த்த காப்பொடு
மெய்ம்முத றிரியாது வேண்டுங் கிரிகையிற்
கைம்முதற் கேண்மை கழுமிக் கழிந்தபின்

---

117. எழிலியை - அழகையுடையவளை. நடாஅய் - நடத்தி.

119. ஆசிடை - ஆசீர்வாதமொழிகள்; "ஆசிடைக் கிளவி பாசிழை பயிற்றி" (சு. 8 : 24); "பணிந்தவட் காசிடை மொழிந் தான்" (நீல. தரும. 55.) 122. ஆற்றுளி - விதிப்படியே.

123. படுசுடர்ச்செக்கர் - அத்தமித்த சூரியனையுடைய செவ் வானம்; "படுங்கதி ரமயம்" சிலப். கரு : 16.

126. கற்புடைவிழுமீன் - அருந்ததி; அருந்ததியைக்காட்டி; "வட மீனைக், கானமயி லன்னவடன் முன்னோனனி காட்ட" சூளா. கலியாண.

129. என்வயின் அருள்-எனக்கு அருள்செய்வாயாக. [280.

130. விரதமென்றது முயக்கமின்மையை.

131. சதுர்த்தி - நான்குநாட்கள். நாலாநாட் பகல் முடிய விர தம் இருத்தல் மரபு; "மூன்று இரவின் முயக்கமின்றி ஆன்றோர்க்கு அமைந்த வகையாற் பள்ளிசெய்து ஒழுகி நான்காம் பகலெல்லை முடிந்த காலத்து" (தொல். கற்பு. சூ. 5, ந.) என்பதையும், "ஓரிற் கூடிய வுடன் புணர் கங்குல்" (அகநா. அசு) என்றவிடத்து 'ஓரில்-சதுர்த்தியறை' எனவெழுதிய உரையையும் காண்க.

132. கிரிகை - கிரியை; 81.

பி - ம். 1 பொதுபந்தன்றி.

(மணவறைக் கட்டிலின் சிறப்பு)

மருப்பினும் பொன்னினு மணியினும் புனைந்த
திருத்தகு திண்காற் றிருநிலை பெற்ற
வெண்பூம் பட்டிற் றிண்பிணி யமைந்த
பள்ளிக் கட்டில் வெள்ளிதின் விரிந்த
கோடுயர் பல்படை சேடுறச் சேர்த்தி
வயிரமும் வெள்ளியும் பவழமும் பொன்னும்
மணியு முத்து மணிபெறப் பரப்பி
அடிநிலை யமைத்து முடிநிலை காறும்

(உதயணனையும் வாசவதத்தையையும் பள்ளிக்கட்டின் மேலேற்றுதல்)

தாம நாற்றிக் காமங் குயின்ற
கோலச் செய்கை வாலணிப் பொலிந்த
எட்டி காவிதிப் பட்டந் தாங்கிய
மயிலியன் மாத ரியல்பிற் படுத்த
கட்டின் மீமிசைக் கட்டலர் கமழும்
ஒண்டார் மார்பி னுதயண குமரற்குத்
தண்டாக் காதலொடு தக்கவை யறிந்து
விண்ணவர் கிழவன் வீற்றிடங் கடுப்ப
மண்ணக மன்னர் மரபறிந் தியற்ற
அவ்வளைப் பணைத்தோ ளதிரா கரிகையைக்
கைவயிற் பிழையாது காஞ்சனை தழீஇ
உண்மை யுணரா நுண்மைப் போர்வையிவள்
வெண்மை காணின் மெல்லியல் யாரெனத்

134. மருப்பு - யானைத் தந்தம்.

136. திண்பிணி - திண்ணிய கட்டு.

137. பள்ளிக்கட்டில் - படுக்கைக்குரிய கட்டில்; க. 32 : 72.

138. பல்படை - ஒன்றன்மேலொன்றாக அமைத்த பல படுக்கைகள்.

143. வாலணி - தூய்மையான ஆபரணங்களால்.

144 - 5. எட்டிப் பட்டத்தையும் காவிதிப் பட்டத்தையுமுடைய மகளிர்; கணவர்க்கும் தந்தைமார்க்கும் உரியபட்டங்கள் உரிமையால் அவர்களுடைய மனைவியர்க்கும் மகளிர்க்கும் அமைந்தன போலும்; பெருங். க. 42 : 176, அடிக். 149. விண்ணவர்கிழவன் - இந்திரன்.

151. அதிராகரிகையை - வாசவதத்தையை.

தன்னொளி சமழ்த்திவள் பெண்ணொளி புகற்ற
மண்ணார் மணிப்பூண் மாதரை யிரீஇயபின்
கண்ணார் குருசிலைக் கவின்பெற வேற்றித்
தகைமலர்த் தாரோன் றடக்கை பற்றியவள்
முகைமலர்க் கோதை முடிமுதற் றீட்டிச்
செம்பொற் றால மலிரப் பெய்த
மங்கல வயினி மரபுளி யுறீஇ
ஒல்லென் சும்மையொடு பல்வளந் தரூஉம்
உருமண் ணுவாவின் பெருநகர் மாந்தர்
ஆசில் செங்கோ லவந்தியன் மடமகள்
வாசவ தத்தையொடு வத்தவ விறைவனை
முட்டில் செல்வமொடு முறையிற் பிழையாது
கட்டிலேற் றினராற் கருதியது முடித்தென்.

௩—கட்டிலேற்றியது முற்றிற்று.

---

155. புகற்ற - விரும்பச் செய்ய.
153 - 5. போர்வை புகற்ற என்க.
159. தீட்டி - தீண்டச் செய்து.
160. தாலம் - உண்கலம். மலிர - நிறைய.
161. அயினி - அன்னத்தை.
163. உருமண்ணுவாவின் பெருநகர்: சயந்தி; க. 58: 107 - 8.
164. அவந்தியன் - பிரச்சோதனன்.

## ௪—ஆறுதிங்கள் உடன்மயிர் களைந்தது.

கருதியது முடித்த கடிநாட் கோலமொடு
பருதி ஞாயிற் றுருவொளி திகழக்
கலிகெழு மூதூர் கைதொழு தேத்த
வலிகெழு நோன்றாள் வத்தவ ரிறைவன்

---

௪—ஆறுதிங்கள் உடன்மயிர் களைந்தது.

[கலியாணமானபின் பலவகைச் சிறப்புடன் ஆறுமாதத்திற் செய்யப்படுவதோரு மங்கலகாரியம் விதிப்படி செய்வித்தல் இதனுல் அறிய லாகும்.]

1. கடிநாட்கோலம் - மணக்கோலம்.
4. வத்தவரிறைவன்: எழுவாய்.

(பிரச்சோதனன் சிறப்பு)

முதுநீர்ப் பொழிலுகந் [1] தெதிரின் றேதப்
பதினா றாயிரம் பதினறு வகைய
சுருக்க மின்றிச் சூழ்ந்துடன் றிரியாப்
பெருக்கத் தானைப் பிரச்சோ தனற்குப்

(பிரச்சோதனனுடைய தேவியர்)

பெருநில மன்னர் திருநகர்ப் பிறந்துதம்
காட்டுப்பெயர் பொறித்த சூட்டுப்பொலி சுடர்நுதற்
கொடிப்பூண் டிளக்குங் கோல வாகத்து
வடிப்போழ்ந் தன்ன வாளரித் தடங்கண்
அருந்தவர்க் காயினுந் திருந்துமுக மிறைஞ்சாது
செங்கதிர் விரும்பும் பைங்கொடி நெருஞ்சிப்
பொன்புனை மலரின் புகற்சி போல
வெறுத்த வேட்கைத் தாமுளஞ் சிறப்பக்
[2] காதலற் கவாஅங் காம நோக்கத்

---

6. பிரச்சோதனன் நாடு முதலிய பதினாறு வகையினுள் ஒவ்வொன்றிலும் பதினாறாயிரமுடையவனென்று தெரிகின்றது; அவற்றுள் கிடைத்த பகுதியால் தெரிவன: நாடுபதினாறாயிரம், தேவியர் பதினாறாயிரர், அமைச்சர் பதினாறாயிரர், பசு பதினாறாயிரமென்பன.

10. நாடு - தாம் பிறந்த நாடு. சூட்டு - நெற்றிச்சூட்டு.

12. வடி - மாவடு; "நறுவடி மாஅத்து" ஐங்குறு. ௬௧, ௨௧௩.

15. புகற்சி - விருப்பம்.

14 - 5. நெருஞ்சிப்பூ, சூரியனையே நோக்குமென்பதை, "ஓங்கு மலை நாடன், ஞாயி றனையனென் றோழி, நெருஞ்சி யனையவென் பெரும் பணைத் தோளே" (குறுந். ௩௧௫), "நெருஞ்சிப் பசலை வான்பூ, ஏர்தரு சுடரி னெதிர்கொண் டாங்கு" (புறநா. ௧௫௫), "வெஞ்சுடர் நோக்கும் நெருஞ்சியில்" (இறை. சூ. 47, உரை, மேற்.), "நீள்சுடர் நெறியை நோக்கு நிரையிதழ் நெருஞ்சிப் பூப்போல்" (சீவக. 461) என்பவற்றால் உணர்க.

16. வெறுத்த வேட்கைத்தாம் - மிக்க விருப்பமுடையதாகிய.

17. காதலற்கு - கணவனை.

பி-ம். 1 நெதிர்நின்றேதப்    2 காதலிற்

திரெண் ணுயிரர் பேரெணப் பட்ட
ஓவிய ருட்கு முருவக் கோலத்துத்

(வாசவதத்தை தாயின் சிறப்பு)

தேவியர்க் கெல்லாந் தேவி யாகிக்
கோவீற் றிருப்புழிப் பூவீற் றிருந்த
திருமகள் போல வொருமையி னெட்டி
உடன்முடி கவித்த கடனறி கற்பின்
இயற்பெருந் தேவி வயிற்றகத் தியன்ற
வட்டப் பெரும்பூண் வாசவ தத்தையொடு
கட்டி லேற்றங் கடந்த பின்னர்

(மணக்காற் பந்தர் அமைத்தல்)

உயர்ந்த நண்பி னுருமண் ணுவாவும்
வயந்தக் குமரனும் வத்தவற் கியற்றிய
..................ளங் கழிந்து மூதூர் வாயிற்
றம்பெயர் நிறீஇய மன்பெரு மாந்தரும்
நிறையோம் பொழுக்கத்து மறையோம் பாளரும்
பன்னகர் தோறு மன்னவன் வேண்ட

---

18. பதினாயிரந்தேவியர் : உ. 10:49.

10 - 20. நுதலையும் ஆகத்தையும் கண்ணையும் நோக்கத்தையும் உடைய தேவியர் ; ஈரெண்ணாயிராகிய தேவியர்.

22. அத்தாணியிற் சென்று சேர்தற்குரியளாகலின், திருமகளை மாபெருந் தேவிக்கு உவமையாக்கினர், "செந்தா மரைமகளே யல்லது பெண் சாராத திருவின் மிக்க, சிந்தா மணியேய்ந்த சித்திரமா மண்டபத்துச் செல்வன் புக்கான்" (சீவக. 2370) என்பது இக்கருத்தைப் புலப்படுத்துகின்றது.

23 - 4. அரசன் சிங்காதனத்தில் வீற்றிருந்து முடிபுனையுமிடத்தும் பட்டத்துத் தேவியும் உடனிருத்தல் மரபு ; "திருமாது புவியெனும் பெருமாதரிவர்கள்" என்னும் மெய்க்கீர்த்தியிலுள்ள 'செம்பொன்வீர சிங்காதனத்து உலகுடைமுக்கோக்கிழானடிகளொடும் வீற்றிருந்தருளிய கோப் பரகேசரி பன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள்' என்பதனாலும் வேறுள்ள சில மெய்க்கீர்த்திகள் முதலியவற்றாலும் இது விளங்குகின்றது.

26. கட்டிலேற்றம் - கட்டிலில் ஏற்றுதல்.

வத்தவரிறைவன் (4) வாசவதத்தையொடு (25) கட்டிலேற்றம் கடந்த பின்ன (26) ரென்க. 31. நிறை - மனத்தை நிறுத்தல்.

முனைவர் வகுத்த புனைபூ ணகலத்துக்
காழகத் தொன்னூற் கருதுநெறி நுனித்ததன்
ஆழமைக் கடங்கா வமைவரு காட்சி
அரும்பொரு ளுணரும் பெருங்கணிச் சங்கமும்
திணைகளுங் கணக்கரு மினைபவர் மொய்த்து
நாற்கயி றமைத்துக் கோற்கயிறு கொளீஇ
நன்குநிலை பெற்ற நாற்பத் தையணங்
குண்பத மெட்டெட் டெண்வர வாங்கி
எண்பத் தெழுகோற் [1] றண்கையிற் றழீஇக்
கணக்க மாந்தர் கயிறிட் டளந்த
மணக்காற் பந்தருள் வடமென் மருங்குற்

(இடம் திருத்தல்)

குலத்தொடு புணர்ந்த நலத்தகு நண்பின்
அழுக்கா றகன்ற வொழுக்கா றோம்பிக்
கைவினை யைந்துங் கற்றகத் தடக்கி
மெய்யிற் றூய்மையொடு மேதகு வனப்பிற்
செயிர்வினை கடிந்துதஞ் சிறப்புவழித் தாங்கி
மயிர்வினை நுனித்த மாசில் கம்மத்துச்
[2] சிற்பியற் புலவர் நற்கென நாட்டிப்
[3] பதர்ச்சொற் பருப்பொருள் பன்னுபு நீக்கிப்
பொருட்சொன் னிரப்பும் புலவர் போலக்
கல்லு மோடும் புல்லுங் கரியும்
உமியு மயிரு மென்பு முட்பட
அமைவி றன்மைய வரித்துடன் களைந்து
விண்மேம் படூஉம் விழுத்தக வுடைத்தாய்
மண்மேம் படுத்து மணிநிழ லுறீஇ
வடக்குங் குணக்கும் வகையுளிப் பணித்துக்

36. பெருங்கணிச் சங்கம் - பெருங்கணிகளின் கூட்டம்.

39. நாற்பத்தைந்து தெய்வங்கள் : உ. 3 : 17.

50. சிற்பு - சிற்பம். நற்கு - நன்மை.

51. பதர்ச்சொல் - பொருளில்லாத சொல். பருப்பொருள் - தூலப்பொருள் ; "பருப்பொரு டானும் விழுப்பொருளாம்" (யா.கா. உரை.) பன்னுபு - ஆராய்ந்து. 58. பணித்து - தாழ்த்து.

பி - ம். 1 றண்கையிற். 2 சிறப்பியற். 3 பகாச்சொற்.

குடக்குந் தெற்குங் கோண முயரி
நிரப்பங் கொளீஇ நின்ற நிலமிசை
விசும்புறை தேவர் வேள்விச் சேதான்
பசுஞ்சோற் றமலைப் பாசங் கொளீஇ
மறுவின் றமைந்த நறுவெண் சாந்திற்
பத்தியுங் கொடியும் பல்வழி யெழுதி
முத்தமு மணியுஞ் சித்திரத் தியற்றிய
ஆடகப் பொன்னு மகனில முதுபொழிற்
றன்பெயர் கொளீஇய மன்பெருஞ் சீர்த்தி
மரக்களி யன்ன திருத்தகு பொன்னும்
இரத்தினக் குப்பையு மிலங்கொளிப் பவழமும்
இன்னவை பிறவும் பன்முறை பண்ணித்
தொல்லோர் வகுத்தநூற் றுறைமுறை போகிய
நல்லா சிரியர் நடுவுநிலை யமைத்துக்
கீழ்த்திசை முதலா வாழ்த்துபு வணங்கித்
தெய்வம் பேணிக் கைவினைக் கம்மத்துச்
சத்தி முகமே சக்கர வட்டம்
பத்தி வரிப்பே பாவை நுடக்கம்
குஞ்சர முகமே நந்தி மலரவை
எஞ்சாத் திருவடி வெனப்பெய ரிவற்றுட்
போரடு மன்னர்க்குப் புரையோர் புகழ்ந்த
பாசடைத் தாமரைத் தாதகத் துறையும்
மாசின் மடமகண் மருங்கின் வடிவாய்க்
குலாஅய்க் கிடந்த கோலக் கோணத்துக்
கலாஅய்க் கிடந்து கவ்விய கொழுந்தின்
வள்ளியு மலருங் கொள்வழிக் கொளீஇ
வலமுறை வகுத்த நலமுறை நன்னகர்
நாற்பெரு வாயின் முதலொரு மேற்பத்
தமனியப் பேரிற் றலைநிலந் தழீஇய

60. நிரப்பம் - நிரவல், சமம்.
66. ஆடகம் - ஒருவகைப்பொன்.
68. மரம் - நாவல்; களி-அதன் பழச்சாறு. பொன் - சாம்பூநதம்.
66 - 68. "நாவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழை" முந.
77. நந்திமலர்: உ. 12: 15.
83. கலாஅய் - கலந்து. 84. வள்ளி - கொடி.

கொழுங்களி யுழுந்துஞ் செழுங்கதிர்ச் செந்நெலும்
உப்பு மரிசியுங் கப்புரப் பளிதமொ
டைவகை வாசமுங் கைபுனைந் தியற்றிய
முக்கூட் டமிர்து மக்கூட் டமைத்துத்
தேனும் பாலுந் தயிருங் கட்டியும்
ஆனெயும் வெண்ணெயு மனையவை பிறவும்
பதினறு மணியும் பைம்பொன் மாலையும்
நுதியிற் பெய்து விதியுற விரீஇப்
பொதியிற் சந்தனம் போழ்ந்துகொண் டியற்றிக்
கதிரொளி பயின்ற கம்மக் கைவினை
நாற்கா லமைத்த பாற்பெரும் படுமனைப்
பொங்குமயிர்த் தவிசொடு பூமலர் புனைஇ
நண்ணிய சிறப்பொடு நாற்பெருந் திசையும்
பண்ணிய வுணவின் றிண்ணிலைக் குப்பையுள்
முடிமுதற் குத்தி யடிநிலைக் கமைந்த
பைம்பொன் விளக்கிற் செஞ்சுடர் மாட்டிக்

(உதயணன் வருதல்)

குறைவின் றமைந்த கோல நுட்பத்து
மறுவின் றமர்ந்த மங்கலப் பேரணி
மன்ன குமரன் றன்னோர் சூழ
உருத்த மன்ன ரூர்ச்சி வேழத்து
மருப்புக்கை யமைத்து வாய்முத றேறும்
உருக்குறு தமனியத் தொழுகுகொடி யோட்டிப்
பவழக் கொட்டைப் பல்வினை துனித்த
திகழணிச் செருப்பிற் சேவடி யிழிந்து
கடவுட் டானம் வலமுறை வந்தபின்

88-9. உ. 3 : 61 - 4 ; "உழுந்துபய றுப்பரிசி யப்பமருங் கலங்கள், கொழுந்துபடக் கூப்பிநனி யாயிர மரக்கால்; செழுந்துபடச் செந்நெனிறைத் தந்றுண்கொடி யறுகின், கொழுந்துகுறைத் தணிந்து கோலை வேற்கணவ ரமைத்தார்" சீவக. 2486.

92. கட்டி - வெல்லம். 107. உருத்தமன்னர் - பகையரசர்.

110. கொட்டை - குமிழ். [202.

110 - 11. "பவழக் கொட்டைப் பொற்செருப் பேற்றி" சீ. 22 :

107 - 11. இவ்வடிகளிற் கூறப்பட்டது யானைமருப்பாற் செய்த பிடியடிவருணனை.

அடர்பொற் றிருநக ரறியக் காட்டி
நிலத்துமிசை யிழிந்த நிகரி னெடுமுடி
நலத்தகை யிந்திர னெழிற்பொலி வொப்ப
இலக்கண விருக்கை திருத்திய பின்றை

(வாசவதத்தை வந்து அமர்தல்)

நாணுக் கவின்கொண்ட நனிநா கரிகத்
தியாணர்ப் பூந்துகி லணிந்த வல்குல்
இலைப்பூண் கவைஇ முலைப்புறம் புதைஇப்
பொற்கொடி யிழையொடு நற்குடன் றாழ
ஏகவுத் தரிய மிடைச்சுவல் வருத்த
வட்டுடைப் பொலிந்த வண்ணக் கலாபமொடு
பட்டுச்சுமந் தசைந்த பரவை யல்குல்
இயைந்தணி பெற்ற வேன்ற வவ்வயிற்
றசைந்தணி கொண்ட வம்மென் சாயற்
றாமரை யெள்ளிய காமரு திருமுகத்
தின்பக் காம னெய்கணை போலச்
செங்கடை [1]போர்ழ்ந்த சிதரரி மழைக்கண்
வண்ணக் கோதை வாசவ தத்தையைச்
செண்ணக் காஞ்சனை செவ்விதிற் றழீஇ
இகல்வரை மார்பற் கியைய விரீஇயபின்

(அந்தணர் முதலியோர் செயல்)

அகன் [2]மணிக் காவ லாற்றுளி நிறீஇ
எண்டிசை மருங்கினு மிவர்திரை யேய்ப்பக்
கண்டப் பூந்திரை காழ்முதற் கொளீஇ
எழுதுவினைக் கம்மத்து முழுமுதற் கோத்த
முத்த மாலை முடிமுதல் வருட
ஓத்த மேவாரை நோக்கி யோங்கிய
கைத்தொழி னுனித்த வித்தக வாளர்

122. வட்டுடை - முழந்தாளளவாக உடுக்கும் உடைவிசேடம்; [மணி. ௩; 122.
129 - 30. உ. 3 : 74 - 5.
134. கண்டப் பூந்திரை : க. 37 : 103, அடிக்.
133 - 4. "தெண்டிரை யெழினி காட்ட" கம்ப. நாட்டுப். 4.

பி - ம். 1 போர்த்த. 2 மணிக்காவல்.

பொன்புனை நன்கலத் தின்பத மார்ந்தபின்
மணியறைந் தன்ன மாணிருங் குஞ்சி
[1] அணிவலஞ் சுரிந்த வமைதிக் கேற்ப
வளர்பிறை யன்ன மல்லிகைக் கத்திகை
கிளர்பொற் போதொடு களையறப் பிணித்த
வாக்கமை சிகைமுதற் பாற்பட வடைச்சி
மகரங் கவ்விய மணிக்குழைக் காதினர்
தகரங் கலந்த தண்ணறுஞ் சாந்தினர்
பானிற வெண்டுகி [2]லானத் தானையர்
இறைமகற் கியன்ற குறைவில் செல்வமோ
டந்தண ரீண்டி யடித்துக [3]ளாற்றி
மந்திர விதியின் வாய்ப்பூச் சியற்றித்
தந்தொழின் முடித்துத் தலைவனைக் குறுகி
[4] வெண்ணிற மலருந் [5] தண்ணறுஞ் சாலியும்
புண்ணியப் புல்லும் பொன்னொடு முறைமையின்
மண்ணார் மணிப்பூண் மன்னனொடு மாதரைச்
சென்னியு முச்சியுஞ் சேடுபடத் தெளித்துக்
கூப்பிய கையர் காப்பொடு பொலிந்த
அமரரு முனிவரு மமர்வன ராகி
ஆயுளுந் திருவும் போகமும் பொலிவும்
மேயினர் தருகென மிகப்பல வாழ்த்தி
மறையிற் கிரிகையின் முறையறிந் தோதி

(நாவிதன் செயல்)

மின்வா ளழித்த மேதகு கைவினைப்
பொன்வாள் பற்றிப் பன்மாண் பொலிகென
வலப்பாற் சென்னி வகைபெறத் தீட்டி

---

140.=உ. 7 : 17. 142. கத்திகை - மாலை.
149. அடித்துகள் ஆற்றி - கால்கழுவி.
150. வாய்ப்பூச்சியற்றி - ஆசமனம் செய்து; க. 53 : 87.
153. புண்ணியப்புல் - அறுகு. 155. சேடு - பெருமை.
152-5. சீவக. 2494. 160. கிரிகை-கிரியை. ஓதி - ஓத.
163. வலப்பாற்சென்னி - தலையின் வலப்பக்கத்தில்.
162 - 3. "வாக்கினிற் செய்த பொன்வாண் மங்கல விதியி னேந்தி, ஆக்கிய மூர்த்தத் தண்ணல் வலக்கவு ளுறுத்தி" சீவக. 2495.
பி-ம். 1 அணிவஞ்சிசுரிந்த. 2 லானத். 3 ளாற்றிய. 4 வெண்ணிற மலருங், விண்ணிறமலருஞ். 5 தண்ணீறுஞ்.

இலக்கணம் பிழையா வெஃகமை யிருப்பின்
நீரளந் தூட்டிய நிறையமை வாளினைப்
பஞ்சிப் பட்டொடு துரூஉக்கிழி நீக்கிப்
பைங்கதி ரவிர்மதிப் பாகத் தன்ன
அங்கேழ்க் கன்மிசை யறிந்துவாய் தீட்டி
வெங்கேழ்த் துகின்மிசை விதியுளி புரட்டிச்
செங்கேழ்க் கையிற் சிறந்துபா ராட்டி
ஆசறு நறுநீர் பூசனை கொளீஇ
வாட்டொழிற் கம்மம் வல்லிதிற் பிழையாது
சேட்டெழிற் பொலிந்த திருமுகக் கேற்ப
மூரிக் கொள்ளான் முனிதல் செல்லான்
ஆவிக் கொள்ளா னயர்ந்தும் பிறர்நோக்கான்
சீர்கெழு நெடுந்தகை செவ்வியிற் றிரியான்
கண்ணினு மனத்தினுங் கையினு மமைத்த
மண்ணுவினை மயிர்த்தொழி னன்னல நாவிதன்
எல்லை வகுப்ப ....................................
எதிர்நோக் காற்று விலங்கிழை முகத்தையும்

---

164. எஃகு அமை இருப்பின் - எஃகும் அதன் அளவையொத்த இரும்புமாகிய இரண்டையும் காய்ச்சிச்செய்யப்பட்ட.

165. வாள் - மயிர்க்கத்தி.

167 - 8. மதிப்பாகத்தன்ன கல் - சாணைக்கல்.

165 - 9. “ஆய்ந்தபொன் வாளை நீக்கி யவிர்மதிப் பாகக் கன்மேற், காய்ந்தவாள் கலப்பத் தேய்த்துப் பூநிறீஇக் காமர் பொன்ஞாண், தோய்ந்ததன் குறங்கில் வைத்துத் துகிலினிற் றுடைத்துத் தூய்தா, வாய்ந்தகைப் புரட்டி மாதோ மருடகப் பற்றி னானே” சீவக. [2496.

172. கம்மம் - கருமம்; தொழில்.

174. மூரிக்கொள்ளுதல் - திமிர்தீரவுடம்பை நிமிர்த்தல்; உ. 6: [102.

175. ஆவி - கொட்டாவி.

176. நெடுந்தகை செவ்வியின் - உதயணனது குறிப்பினின்றும்.

174 - 6. பெரியோர்கள் முன் அங்கசேட்டை செய்யலாகாதென்பது விதி; ஆசார. 94.

180. எதிர்நோக்கு ஆற்று - நேரே பாராத. இலங்கிழை - வாசவதத்தையினது; “அகிலி னவி தேக்கிடுங் குழலி னாளை, நோக்கல னுனித்து நொய்தா விடக்கவு னுறுத்தி னானே” சீவக. 2495.

மதிமாசு கழீஇய வண்ணம் போலக்
கதிர்மே விலங்கக் கைவினை முடித்தபின்
அடிவினைக் கம்மியர் வெடிபட வடுக்கிய
[1] உயர்நலக் கோலத் தொள்ளொளி திகழ
வகைபமை கொல்லியின் [2]வசையறத் துடைத்துச்
சேவடிக் கேற்பச் செழுமதிப் பாகென
வாருகிர் குறைத்து வனப்புவீற் றிரீஇய
ஒண்ணிறக் கல்வி னன்னிறம் பெறீஇ
விரலிற் கொண்ட [3]வெண்ணிற நுண்டாது
விரிகதிர் மதியின் விளங்கொளி யழிப்ப
நிறம்பெற வுரிஞ்சி நேர்துகிற் றுடைத்தும்
தண்டா மரையி னகவிதழ் போலப்
பண்டே சிவந்த படிய வாயினும்
கண்டோர் மருளக் கைவளங் காட்டி
அரத்தப் பஞ்சி யணிநிறங் கொளீஇப்
பரப்பும் விதிர்ப்பும் பருப்பு மின்றி
அணித்தலைச் சார்ங்க மணிபெற வெழுதி
இருவகைக் கம்ம முருவொளி திகழ
வல்லோர் முடித்த பின்றைப் பல்லோர்
அருங்கல வெறுக்கை யார வீசி
விரும்புறு மனத்தவர் விண்ணவர் காப்ப
மன்னுக வேந்தே மண்மிசை நீடென
அன்னவை கலந்த வார்வ நாப்பண்
எண்ணுவரம் பறியா வின்பச் செல்வமொடு
மண்ணுவினை [4]முடிந்தன்றான் மயிர்வினை மகிழ்ந்தென்.

ச—ஆறுந்திங்கள் உடன்மயிர்களைந்தது முற்றிற்று.

---

186. மதிப்பாகு - பிறை ; பாகு: பாகமென்பதன் சிதைவு.
187. உகிர் - நகம்.
197. சார்ங்கம்-கொம்பாலாகிய வில்லைப்போன்ற வடிவம் ; மானு [மாம்.
200. வீசி - கொடுத்து.
205. மண்ணுதல் - பண்ணுதல்.

பி - ம். 1 உயிர். 2 வசைபெறத். 3 வெண்ணீற்றுண்டானது. 4 முடித்தன்றான்.

## ரு— மண்ணுநீராட்டியது.

(உதயணன் கூற்று)

மயிர்வினைக் கம்ம மரபுளி முடித்தபின்
வயிரக் கொடுங்குழை வார்ந்த காதிற்
பெருமக னுடும் பீடுகெழு சிறப்பிற்
றிருமண்ணு நறுநீர் விரைவதின் வருகென
உருமண்ணு வாவொடு வயந்தகற் குரைப்ப

(நீர்க்குடம் செல்லுஞ்சிறப்பு)

ஐம்பெருங் குழுவு மெண்பே ராயமும்
மன்பெருஞ் சுற்றமும் வம்ப மாந்தரும்
நிலையிடம் பெறாஅர் நெருங்குபு செற்றித்
தலையிட மருங்கிற் றமனியத் தண்குடம்
ஆயிரத் தோரெட் டணிமலர் வாய
முத்துத் தாமமொடு [1] பொற்புரி யணிந்து
வித்தகர் புனைந்த சித்திர நெடுங்குடை
எண்ணறுங் கோலமொடு கண்ணுறக் கவிப்பக்
காரிகை வனப்பிற் கன்னி மகளிர்
சீர்கெழு மெல்விரல் செறியப் பற்றி
இடுமணி யானை [2] யிரும்புறத் திருப்பப்
படுகண் முழவொடு பல்லியங் கறங்க

---

ரு—மண்ணுநீராட்டியது.

[உதயணனையும் வாசவதத்தையையும் பலவகைச் சிறப்புடன் நீராட்டியதும் அலங்கரித்ததும் இதனால் அறியலாகும்.]

4. திருமஞ்சன நீர் விரைவாக வருகவென்று.

6. பு. உ. 13 : 3; சிலப். ஞ : 157; மணி க : 17; தொல்.

10. அணிமலர் - தாமரைமலர். [களவி. சூ, 57, ந. மேற்.

7. வம்பமாந்தர் - புதியமனிதர்.

9 - 10. அணிமலர்வாய ஆயிரத் தோரெட்டுத் தமனியக் குடமென்க ; 47 - 8, 104. 11. பொற்புரி - பொன்வடம்.

14. காரிகைவனப்பு - பேரழகு.

9 - 16. சீவக. 2414 - 5, பார்க்க.

17. படுகண் - ஒலிக்கின்ற பக்கம்.

பி - ம். 1 பொற்புற வணிந்து. 2 யிருபுறத்.

ஏம முரச மிழுமெனச் சிலைப்பக்
காமர் சங்கம் வாய்வதின் முழங்க
வரித்த பூங்கொடி விரித்துவிசும் பிவரப்
பத்திரப் படாகை பலவயி னுடங்கச்
சாதிங் குலிகமொடு சமர மொழுகிய
மேதகு முளைக்காற் கோதை துயல்வரக்
குத்துமுளை செறித்த வித்தக விதானத்துத்
தண்ணெழி னடுவ ணண்ணெழி னுனித்த

(மங்கலங்கள் பதினாறு)

அயின்முனை வாளும் வயிரத் தோட்டியும்
கொற்றக் குடையும் பொற்பூங் குடமும்
வலம்புரி வட்டமு மிலங்கொளிச் சங்கும்
வெண்கண் ணாடியுஞ் செஞ்சுடர் விளக்கும்
கவரியுங் கயலுந் தவிசுந் திருவும்
முரசும் படாகையு மரசிய லாழியும்
[1] ஒண்வினைப் பொலிந்த வோமா லிகையுமென்
றெண்ணிரண் டாகிய பண்ணமை வனப்பிற்
கடிமாண் மங்கலங் கதிர்வளை மகளிர்
முடிமிசை யேந்தி முன்னர் நடப்ப
வேலும் வாளுங் கோலுங் கொண்ட
காவ லிளையர் காவல் கொள்ள

---

21. பத்திரப் படாகை - மங்கலத்தையுடைய பெருங்கொடிகள்; பத்திரம் - வாழையிலையுமாம்.

22. சாதிங்குலிகம் - சாதிலிங்கம்; க. 40 : 221. சமரம்-சாமரை.

23. முளைக்காற் கோதை - நெல்முளை முதலியவற்றைத் தம்மிடத்தே உடைய மாலைகள்.

24. குத்துமுளை - கீழேகுத்தி நாட்டுதற்குரிய காம்புகள்.

30. திரு - திருமகள் வடிவமான பாவை.

32. ஓமாலிகை - இலவங்கம்முதலிய முப்பத்திரண்டின் தொகுதி; க. 41 : 127.

34. கடிமாண் மங்கலம் - கலியாணத்திற்குரிய மாட்சிமைப்பட்ட மங்கலப்பொருள்களை.

பி - ம். 1 மாண்வினைப்.

(மஞ்சன நீர் எடுத்தற்கு உரிய தளம்)

மருப்புநிலைக் கந்தி னிருப்பெழுப் போக்கி
வயவர் காக்கும் வாயிற் செல்வமொடு
கயவர் துன்னாக் கட்டிற் றாகிப்
படையமை யிட்டிகைப் பாடமை படுகால்
இடமமைத் தியற்றிய [1] வேந்துநிலைக் கோணத்துக்
கழறுகா லமைத்த கட்கின் வாவியுள்

(மஞ்சன நீரெடுத்துவருதல்)

நிழறிகழ் தெண்ணீர் நீலஞ் சூழப்
பறவைத் தொழுதிப் பக்க நீக்கி
நிறைய முகந்து முறைமையி னேந்தி
ஐஞ்ஞூற் றிரட்டி யணியிதழ்த் தாமரைச்
செந்நீர்ப் போதொடு செறிய வீக்கிப்
பூஞ்சுமட் டிரீஇப் போற்றுவனர் தந்த
தேங்கமழ் நறுநீர் திறவதிற் பற்றிப்
பணைமுர சியம்பும் படைப்பெரு முற்றத்துத்
துணைநலத் தோழர் துன்னினர் சூழா
மண்ணுநீ ராட்டின் மலைந்தன ராகி
வண்ண மணியும் வயிரமு முத்தும்
இட்டனர் கொள்ளு முட்டின ராதலின்
வான மீனின் வயின்வயி னிமைக்கும்
தானந் தோறுந் தகைபெறக் குழீஇ
வித்தகர் [2] வரித்த சித்திர நகர்வயிற்
பொற்பெரும் [3] படுமணை முத்தொடு விரவிச்

---

38. மருப்பு நிலைக்கந்து - யானைத் தந்தத்தாற் செய்த தூண்களுடன். இருப்பெழு - இரும்பாற் செய்த உழலைமரங்களை.

40. கட்டிற்று - காவலையுடையது.

41. படுகால் - படி; க. 37 : 12.

43. கழறுகாலமைத்த: க. 46 ; 268. 47-8. ஆயிரவிதழ்க்கமலம்.

49. பூஞ்சுமடு இரீஇ - பூவாலாகிய சுமையடையில் இருத்தி; "குழிசிபூஞ் சுமட்டிரீஇ" (பெரும்பாண். 159); சுமடு, சும்மாடென வழங்கும்.

50. திறவதின் - நன்றாக.

53. மலைந்தனராகி - மாறுபட்டவர்களாகி.

58. வரித்த - கோலமிட்ட. நகர் - இடம்.

59. மணை - பலகை.

பி - ம். 1 வேந்து கலைக். 2 விரித்த. 3 படுமனை.

[1] சாலியு முழுந்துங் கால்வழிப் பரப்பிப்
பாஅ யமைந்த பின்றைச் சேஎய்ச்
செவ்வியிற் சேர்ந்து சிறப்பொடு வணங்கி
எவ்வழி யோரு மேத்தின ரெதிர்கொள
அவ்வழி யிரீஇய பின்றை மெய்பெறச்

(உதயணனுக்கு நெய்யணிதல்)

சங்கினும் பாலினுஞ் சலமில் வாய்மை
விழுத்திணைப் பிறந்த வொழுக்குடை மரபினர்
நெய்தலைப் பெய்தற் கெய்திய சிறப்பணி
ஏந்திய சென்னி மாந்தர் கூடி
அறுகைப் புல்லினும் வாகைத் தளிரினும்
நறுநெய் தோய்த்து முறைமுத லீவி
நின்றோ ரன்ன நீப்பருங் காதற்
பொன்னணி புலவரொடு செம்மலை யாகிக்
கொற்றங் கொண்டு கோலினி தோச்சென
வெற்ற வெள்வேல் வீரியற் புகழ்ந்து
மடவரன் மாதரை மணம்புரி காதலற்
கிடவயி னிருத்தல் கடவ தாதலிற்
றங்கரச் செல்வர் தலைத்தலை தரூஉம்
மங்கல மணமிசை வெண்டுகில் புதைஇ
இருக்கை திருத்திய பின்றைத் திருத்தகு

---

65. சலம் - வஞ்சனை. 66. விழுத்திணை - உயர்ந்த குலம்.

65 - 6. குலத்தூய்மை கூறினர், "வலம்புரி யன்ன குலம்புரி பிறப்பும்" (ஆத்திரையன். பொதுப்.); "சங்கும் போலும் நம்குடி ; இது தூய்மைக்கு உவமை" (சீவக. 547, ந.); "சங்கம்போல் வான்மையார்" பு-வெ. 185.

67. நெய்தலைப் பெய்தற்கு - நெய்யைத் தலையிலே சேர்த்தற்கு.

69. வாகைத்தளிர் : 87.

67 - 70. சீவக. 2416, பார்க்க.

72. புலவரென்றது அமைச்சரை.

73. கொற்றம் - அரசவுரிமை, "கொற்றங் கொண்டு குடிபுறங் காத்து" (உ௨ : 11) என்றார் மணிமேகலையிலும்.

74. வெற்றம் - வெற்றி. வீரியன் - உதயணனை.

76. இடவயின் - இடப்பக்கத்தில்.

பி - ம். 1 ஆலியும்.

(மகளிர் வாசவதத்தைக்கு நெய்யணிதல்)

மறுவி றொல்குடி மங்கல மடந்தையர்
நறுவெண் சாந்தி னன்னலங் குயிலக்
கொடிபல வெழுதிய கோலத் தோளினர்
முடிமிசை யணிந்த முல்லையங் கோதைக்
கொடுங்குழை திளைக்குங் காதினர் கடுங்கதிர்க்
கலாவம் புதைத்த நிலாவெண் டுகிலினர்
நுரைபுரை [1] கலிங்க மொருமுலை புதைப்பத்
திருக்கொடிச் சாலி செம்பொன் வாகையென்
றொருப்படுத் தூழூழ் முறைமையி னேந்தி
நானங் கலந்த நறுநெய் தோய்த்துத்
தானந் தோறுந் தலைமுத லுறீஇக்
கொண்டோன் வேட்குங் குறிப்பினை யாகித்
தண்டாப் புலமொடு மகளிரைத் தழீஇத்
திருமணக் கிழமையி னொரு [2] மீக் கூரிக்
கற்புமேம் படீஇயர் பொற்றொடி பொலிந்தென
நற்பல கிளவி பற்பல பயிற்றி
நெய்தலைப் பெய்த பின்றை மெய்வயின்

---

81. சாந்தின் - சந்தனத்தால்.

82. கொடிபல - பலபூங்கொடி வடிவங்களை.

81 - 2. மகளிர் தோள்களில் இங்ஙனம் எழுதுவதை, "கமழுஞ் சாந்திற், காமரு காம வல்லிக் கொடிகளின் கொண்டு பூத்துத், தூமணிக் கொழுந்து மென்றோட் டுயல்வர வெழுதி னாளே" (சீவக. 2442) என்பதனாலும் உணர்க.

83. முல்லைமாலை கற்பிற்குச் சூடுவது.

84. திளைக்கும் - அசையும்.

85. கலாவம் - ஒருவகை இடையணி.

86. நுரைபுரைகலிங்கம் - நுரையை ஒத்த ஆடை; "தீம்பா னுரைபோற் றிகழ்வெண்பட் டுடுத்து" (சீவக. 3046); "நுரையென விரிந்த நுண்பூங் கலிங்கம்" சிலப். உஉ : 21.

87. சாலி - நெல். வாகை - வாகைத்தளிர்; 69.

91. கணவனை விரும்பும்; "பெற்றோற் பெட்கும் பிணையை யாகென" (அகநா. அகூ.) 92. புலம் - நிலம்.

93. மீக்கூரி - மீக்கூர்ந்து

94. மேம்படீஇயர் - மேம்படுக.

பி - ம். [1] கலிங்கமும். [2] மீக் கூறிக்.

மென்மையு நேயமு நன்மையு நாற்றமும்
ஒருநாட் பூசினு மோரியாண்டு விடாஅத்
திருமா ணுறுப்பிற்குச் சீர்நிறை யமைத்துக்
கரும வித்தகர் கைபுனைந் தியற்றிய
வாச வெண்ணெய் பூசினர் போற்றி
நூல்வழி நுனித்த நுழைநுண் ணுணர்வினர்
நால்வகைக் கோலத்து நால்வகை மாக்கள்
தாமரை மூடிய தமனியக் குடநீர்
தாமுறை சொரிந்துதம் முறைமையி னாட்டிச்

(மகளிர் செயல்)

செய்த கோலஞ் சிதைய மறலிப்
[1] பெய்த ஞடிப் பேதையர் பிணங்கி
அத்தி னெறிந்து முத்துப்பரிந் திட்டும்
சித்திர நுண்டுகில் சேர்ந்த வல்குற்
பத்திப் பல்காசு பரிந்தன ருகுத்தும்
கோதை பரிந்துங் [2] குடநீர் தூயும்
மானேர் நோக்கியர்......................
போதுவிரி பொய்கையுட் புக்கனர் புரிந்தும்
குளித்த மகளிரொடு திளைத்த லாஞர்
குடைந்த வெண்ணுரை குடங்கையின் வாரித்
தடங்கண் சிவப்ப வெறிதலி னடுங்கி

97. நேயம் – நெய்ப்பு.

98 - 101. "ஒருபகல் பூசி னோராண் டொழிவின்றி விடாது நாறும், பெரியவர் கேண்மை போலும் பெறற்கரும் வாச வெண்ணெய்" சீவக. 2737.

102. செயற்கையறிவோடு இயற்கையறிவையுமுடையார்; "மதி நுட்ப நூலோ டுடையார்க்கு" குறள், 636.

103. நால்வகைமாக்கள் – நான்குவகை மகளிர்; "வாலிழை மகளிர் நால்வர் கூடி" அகநா. அசு.

104. தாமரைப்பூக்களால் மூடப்பெற்ற பொற்குடங்களிலுள்ள நீரை; க. 47 : 195 - 6. 105. ஆட்டி – ஆட்ட.

107. பேதையர் – மகளிர்.

108. அத்து – துவர். பரிந்திட்டு – அறுத்திட்டு. [கலி. ௬௧.

111. கோதைபரிந்து – பூமாலையை அறுத்து; "கோதைபரிந்து"

பி - ம். [1] பெய்தனுப்ப. [2] குடநீர்த்தாவும்.

விம்முவனர் தளர்ந்து மென்மெல வொதுங்கிக்
கூந்தல் சோரப் பூந்துகி லசைஇ
வேந்தன் மகளொடு விளையாட்டு விரும்பி
வண்ண மகளிரு மைந்தரு மயங்கி
மண்ணுநீ ராட்டின் மரபுளிக் கழிந்தபின்
திருமணுத் தானம் பெரும ணுள்ளிட்டு
மண்ணுறு மணியு மாலையுந் தூசும்
கண்ணுற மொய்த்த கழிபே ரவாவினின்
றேற்கு மாந்தர்க் காற்ற வீசிப்
பூவினுட் பொலிந்த தாமரை போலத்
தாவி லணியிற் றூன்மீக் [1] கூரிய
அறுவைக் கோதிய வைவகை வண்ணத்துத்
துறைவிதி நுனித்த தூத்தொழி லாளர்
கண்டுளங் கவிரொளிக் கழூஉநிறம் பெறீஇய
வெண்டுகி லிணைமடி விரித்தன ருடீஇச்
செய்த கோலத்துச் சித்திரங் காண

(அலங்காரஞ் செய்யுமிடம்)

வெய்யோன் கதிரொளி வீசுவளி நுழையா
இரும்பணி பெற்ற வரும்பணைப் படுகால்
மேற்புற மமைந்த விளங்குமணி வேயுள்
யாப்புறு மண்டபத் தாசனத் திரீஇக்
கோப்புறு விழுக்கல மேத்துவனர் காட்டிக்

(உதயணனை அலங்கரித்தல்)

கனமணி முடியுங் கதிர்முத் தாரமும்
இனமணிப் பூணு மேக வட்டமும்
வயிரக் குழையும் வல்வினைப் பொலிந்த

---

118. அசைஇ - கட்டி.
122. திருமணுத்தானம் - நீராடியபின் செய்யுந்தானம்.
125. ஆற்றவீசி - மிகக்கொடுத்து.
128. அறுவை - ஆடை. ஐவகை வண்ணம் : சீ. 7 : 238. [டது.
131. இணைமடி - சேர்த்தஆடை; ஆடையின்மென்மை கூறப்பட்
133. வெயிலுங்காற்றும் நுழையாத. 134. படுகால் - படி.
135. வேயுள் - மேலேமூடியது.

பி - ம். 1 கூறிய.

நெடுந்தோள் வளையுங் கடுங்கதிர்க் கடகமும்
நாமர வளியுங் காமர் கைவினைச்
சித்திரப் பிணையலும் பத்திரச் சுரிகையும்
பத்திக் கச்சினொ டொத்தவை பிறவும்
ஆரணங் காகிய பேரணி கலங்களும்
உழைப்பெருஞ் சிலதியர் பிழைப்பிலர் நீட்ட
அருவரை பிளந்த வஞ்சுவரு நெடுவேல்
ஒருவலத் துயரிய பொருவில் புட்கொடித்
தளையவிழ் நறுந்தார்த் தனக்கிணை யில்லா
இளையவன் படிவ மேற்ப வியல்புறீஇச்
சித்திர விருநிதிச் செந்நெறி நுனித்த
வித்தக வினைஞர் தம்முடன் வந்து
வடிவு கண்டிடும் வத்தவர் பெருமகன்
ஒடிவில் வென்றி யுதயண குமரன்
ஒருமெய் சேர்ந்திவை பெருமை பெறுகென
அருளி னணியி னல்லதை யிவற்கிவை
உருவென வணியா வுறப்புமுத லணிதவிற்
புண்ணிய முடையவிப் பொன்னணி கலனென
எண்ணிய நெஞ்சமொடு நுண்வினைப் பொலிந்த
கோல வித்தகர் வாலணி புனைய

(வாசவதத்தையை அலங்கரித்தல்)

ஆராக் காத லவந்திகை தன்னையும்
நீராட் டிடத்தி னீக்கி நடுவிற்குப்
பார மாகிய காசு புனைஇ
ஈர நுண்டுகி லகற்றி யேருடைக்
கோடிப் பூந்துகில் கொய்து விளிம்புரீஇச்
சேடா ரல்குற் சேடுபட வுடீஇ
வல்லவர் வகுத்த மல்வினை நகர்வயிற்
1 பொன்மணை பொலியப் போற்றுவன ரிரீஇ
நன்மணக் கோலத்துக் கைந்நல நுனித்த

147. வரை - கிரௌஞ்சமலை.
150. இளையவன் - முருகக்கடவுள்.
161. ஆரா - தணியாத. அவந்திகை - கிளிபோன்ற வாசவதத்தை; ஆகுபெயர்; அவந்தியரசன் புதல்வியுமாம். 167. நகர் - இடம்.
பி - ம். 1 பொன்மனை.

அங்கலுழ் பணைத்தோண் மங்கல மகடூஉக்
கட்டிய கச்சையள் கைவிரல் கூப்பி
நெட்டிருங் கூந்த னீரற வாரிப்
பன்னுமுறை விரித்துப் பின்னுபு தொகுத்துக்
கோட்டிடை வளைஇய குஞ்சரத் தடக்கையிற்
சூட்டொடு விரைஇச் சுற்றுபு முடித்துப்
பத்திப் பலகைப் பரிசரக் கைவினை
வித்தகப் பத்தி வேறுபட விரித்தவை
ஒழுக்குமுறை யறிந்து வழுக்கிலள் வைத்து
முடிக்கல முதலா முறைமுறை தோன்றும்
அடிக்கல மீறா வணிந்தழகு பெறீஇ
வாச நறுஞ்சாந்து வகைபெறப் பூசி
மாசி றிருமகள் வண்ணம் பழிப்பதோர்
கோலஞ் செய்து கொண்டகம் புக்குக்
கடிநகர் வரைப்பிற் கல்லென் சும்மையொ
டடிசி லயினி யார்பத மயின்று
மன்பெரும் 1 போகத்து மகிழ்ந்துவிளை யாடி
இன்புற் றனரா லிருவரு மியைந்தென்.

௫—மண்ணுநீராட்டியது முற்றிற்று.

---

170. மகடூஉ - மகள். 174. கோடு - யானைத்தந்தம்.

175. சூட்டு - ஒருவகைமாலை.

174-5. "முத்தார் மருப்பி னிடைவளைத்த முரண்கொள் யானைத் தடக்கையின், ஒத்தே ருடைய மல்லிகையி னொலியன் மாலை யுறப்படக்கி, வைத்தார்" சீவக. 2693.

பி - ம். 1 போதத்து.

## ௯—தெய்வச் சிறப்பு.

(நல்லோர் கூற்று)

இன்புற் றிருவரு ளியைந்துடன் போகிய
நன்பெருங் காலை நல்லோர் குழீஇக்
கண்கெழு பெருஞ்சிறப் பியற்றிப் பண்புளிப்
பூப்புரி மாடத்துப் போற்றெனப் புகாஅத்
தேவ குலத்தொடு திருநகர் வலஞ்செயல்
காவல குமரர் கடிநாட் கடனென
வென்றி முழக்கங் குன்றாது வழங்குநர்
முன்னர் நின்று முன்னியது முடிக்கென
மங்கல மரபினர் மரபிற் கூறக்

(உதயணன் ஆலயத்திற்குச் செல்லல்)

காவல குமரனுங் கடிநகர் வலஞ்செய
மேவின னருள மேவரப் புனைந்த
பசும்பொ னலகிற் பவழத் திரள்கால்
விசும்பிவர் மதியுறழ் வெண்பொற் போர்வைத்
தாம நெடுங்குடை தகைபெறக் கவிப்பக்
காமர் கோலங் காண்மி னீரென
ஏமச் செங்கோ லேயர் பெருமகன்
செம்பொற் செருப்பிற் சேவடி யிழிந்து

---

௯—தெய்வச் சிறப்பு.

[கலியாணத்திற்குரிய செயல்களுள் ஆலயம் வலம் வருதலை உதயணன் மேற்கொண்டமை இதிற் கூறப்படும்; சினாலய அமைதியும் சினதேவன் அதில் வீற்றிருத்தல் முதலியனவும் இதில் விரிவாகப் பாராட்டப்பட்டுள்ளன.]

4. உதயணன் தன்னுடைய அரண்மனையிற் புகுந்து.

5. தேவகுலம் - தேவாலயம். 6. கடிநாள் - மணநாள்.

7. முழக்கம் வழங்குநர் - வள்ளுவர். 8. முடிக்கென - முடிக்க என்று பறையறைந்து தெரிவிப்ப.

9. மங்கலமரபினர் - பரம்பரையாக மங்கலகாரியங்களைச் செய்விக்கும் அதிகாரிகள். கூற - உதயணனுக்குச் சொல்ல.

11. மேவினன்அருள - உடன்பட. 14. குடை கவிப்ப.

15. என - என்றுசொல்லும்படி. 16. உதயணன்.

வெண்பூ நிரந்த வீதியு ளியங்கி
நகர்வலங் கொள்ளு நாண்மற் றின்றெனப்
பகலங் காடியிற் பல்லவ ரெடுத்த
பல்வேறு கொடியும் படாகையு நிரைஇ
யாறுபுகு கடலின் மாறுதிரை மானக்
கண்ணுற்று நுடங்கிக் காரிருள் கழுமி
விண்ணுற் றியங்கும் வெய்யோ னழுங்க
மரீஇய மாந்தரு மனைகெடுத் துழன்றிது
பொரீஇக் காணிற் போக பூமிக்
கிருமடங் கினிதெனப் பெருநக ருற்ற
செல்வக் கம்பலை பல்லூழ் நிறைந்து
மாண்பதி யுறையுநர் காண்பது விரும்பித்
தன்னி னன்றியுந் தமக்குவழி வந்த
குலப்பெருந் தெய்வங் [1] கூப்புத லானும்
அரிமலர்க் கண்ணியொ டகநாட்டுப் பெயரும்
கருமக் காலைப் பெருவரம் பெறுகென
உள்ளகத் துணர்ந்ததை யுண்மை யானும்
சுருக்க மின்றிச் சுடர்ப்பிறை போலப்

---

18. நிரந்த - நிரம்பிய. 19. என - என்று எண்ணி.

20. பகலங்காடி - பகற்காலத்திற் பொருள்கள் விற்கப்படுங் கடைத்தெரு ; நாளங்காடி யெனப்படும்.

21. பல்வேறுகொடி - பலவகைப்பட்ட வேறுவேறான கொடிகள் ; மதுரை. 366 - 73 ; பட்டின. 160-80, பார்க்க.

23. கழுமி - நிறைந்து.

24. வெய்யோன் அழுங்க - சூரியன் வருந்த.

25. மரீஇய மாந்தரும் - அடிப்பட்டுப் பழகிய மனிதரும்.

26. பொரீஇ - ஒப்பிட்டு. 27. என - என்று சொல்லும்படி.

29. விரும்பி - விரும்ப.

30 - 39. தெய்வதரிசனம் இன்றியமையாததென்பதற்குரிய காரணங்கள்.

31. கூப்புதலானும் - கைகுவித்தல் மரபாதலானும்.

32. அகநாட்டு - உண்ணாட்டிற்கு.

33. பெறுகென - பெறுவேனென்று.

34. உணர்ந்ததை - எண்ணியது.

பி - ம். 1 கூப்புதல்யானும்.

பெருக்கம் வேண்டிப் பெருநில மன்னவன்
ஆரணங் காகிய வறிவர் தானத்துப்
பூரணப் படிமை காண்ட லானும்
இன்னவை பிறவுந் தன்னிய லாதலின்

(சினாலயம்)

ஆணப் பைம்பொ னடித்தொடைப் பலகைக்
கோணங் கொண்ட கொளுஉத்திரட் சந்துமிசை
உறுப்புப்பல தெரிந்த சிறப்பிற் றாகிச்
செம்பொ னிட்டிகைத் திண்சுவ ரமைத்துக்
குடமுந் தாமமுங் கொழுங்கொடிப் பிணையலும்
அடர்பூம் பாலிகை யடிமுதற் குளீஇப்
புடைதிரண் டமைந்த போதிகைப் பொற்றூண்
வேண்டக மருங்கிற் காண்டக நிறீஇ
[1] வரிமான் மகர மகன்றில் யானை
அரிமா னன்ன மணிநிற வெண்கினம்
குழவிப் பாவையொ டழகுபெறப் புணர்ந்து
பொருவில் பூதத் துருவுபட [2] வரீஇ
மரகத மாலை நிரலமைத் திரீஇ
எரிமலர்த் தாமரை யிலங்கொளி யெள்ளிய
திருமணிக் கபோதஞ் செறியச் சேர்த்திப்
பத்திப் பல்வினைச் சித்திரக் குலாவின்
ஒத்தமைத் தியன்ற சத்திக்கொடி யுச்சி
வித்தக நாசி வேண்டிடத் திரீஇத்

---

35 - 6. மதுரை. 193 - 4; குறுந். உ௪௯; நாலடி. 125.
37. அறிவர் தானத்து - சினாலயத்தில்.
38. படிமை - பிரதிமை; வடிவம். [வென்க.
தன்னியலாதவின் (39), பைந்தாரோன் (170), துன்றி (162)
40. ஆணம் - அன்பு. 45. குளீஇ - மறையச்செய்து.
47. நிறீஇ - நிறுத்தி.
48. வரிமான் - புலி. மகன்றில் - ஒருவகை நீர்ப்பறவை.
49. அரிமான் - சிங்கம். எண்கு - கரடி. 51. வரீஇ - எழுதி.
52. இரீஇ - இருத்தி. 54. கபோதம் - ஒருறுப்பு.
56. சத்தி - கொடிநாட்டுங்குழி. 57. நாசி - ஒருறுப்பு.
பி - ம். 1 வரிமாண்மகரமன்றில். 2 வீரீஇ.

தூண்மிசைக் கேற்ப [1] வேண்முள் ளழுத்திய
போதிக் கொத்த சாதிப் பவழக்
கொடுங்காழ்க் கோவைக் கடுங்கதிர்ப் பிணித்திரள்
அவ்வயிற் கேற்றுக் கவ்விதிற் பொலிந்து
நீல வுண்மணிக் கோலக் குழிசி
புடைத்துளைக் கேற்ற விடைத்துளை யாப்பின்
அமைத்துருக் கியற்றிய வாடகப் பொன்னின்
விசித்திரத் தியற்றிய வித்தக வேயுட்
டிஞ்சுவை நெல்லித் திரள்காய்த் தாரையுட்
கூப்புபு பிணித்த கூடப் பரப்பிற்
கட்டளை யமைத்துக் கட்கினி தாகி
எட்டுவகைப் பெருஞ்சிறப் பேற்ப வெழுதி
ஒட்டிய வணப்பினோ [2] ரோட வுத்தரத்
தொண்மணிப் [3] புதவிற் றிண்ணிதிற் கோத்த
பொறிநிலை யமைந்த செறிநிலைப் பலகை
வள்ளியும் பத்தியு முள்விரித் தெழுதி
ஒள்ளொளி திகழும் வெள்ளிக் கதவின்
பக்கம் வளைஇய நித்திலத் தாமம்
சித்திர மாலையொடு சிறந்தொளி திகழ
வளவிற் கமைந்த வாயிற் றாகி
நிலவிற் கமைந்த [4] நிரப்ப மெய்தி
மண்ணினு மரத்தினு மருப்பினு மன்றிப்

58. எண்முள் - வலிய இருப்புமுள். 59. போதி-போதிகை.
62. குழிசி - குடமென்பதோருறுப்பு.
65. வேயுள் - மேற்பரப்பு.
66. நெல்லிக்காய் மாலைகளை. 68. கட்கு - கண்ணுக்கு.
69. எட்டுவகைச்சிறப்பு: உ. 1 : 10; "சுடர்மண் டலஞ்சுர துந்துபி தெய்வத் துவனிசிங்கப், பிடர்மண் டலவணை பிண்டிவெண் சாமரை பெய்மலரின், அடர்மண் டலமழை யம்பொற் குடைமும்மை யாமடியோம், இடர்மண் டலங்கெடுப் பாற்கிமை யோர்செயு மெண் சிறப்பே" (திருநூற்றந்தாதி, 80.) 71. புதவு - வாயில்.
73. வள்ளி - பூங்கொடி.
76. சித்திரமாலை - பல நிறங்களையுடைய மலர்களாலாகிய மாலை.

பி - ம். 1 வெள் ளெழுத்திய நாசிக்கொத்த. 2 ரோமவுத்திரனது. 3 புகவிற். 4 நிரப்பவெய்தி.

பொன்னினு மணியினுந் துன்னெழி லெய்தி
அடியிற் கேற்ற முடியிற் றாகி
அங்கண் மாதிரத் தணியழ குமிழும்
பைங்கதிர்ச் செல்வனொடு செங்கதிர்க் கியன்ற
வாலொளி மழுங்க மேலொளி திகழப்
[1] பருஉப்பணைப் பளிங்கிற் பட்டிகை கொளீஇ
வேற்றொழில் பொலிந்த மாற்றமருங் கமைத்துக்
காம்புங் கதிருங் கூம்புமணிக் குமுதமும்
பாங்குற நிரைத்த பயிற்சித் தாகிப்
பத்திச் சித்திரப் பன்மணிக் கண்டம்
வித்தக வண்ணமொடு வேண்டிடத் தழுத்தி
அரும்பும் போதுந் திருந்துசினைத் தளிரும்
பெருந்த ணலரொடு பிணங்குபு குலாஅய்
உருக்குரு பசும்பொ னுள்விரித் தோட்டிக்
கருத்தி னமைந்த காம வள்ளி
[2] கோணச் சந்தி தோரணங் கொளீஇ
மாலை யணிநகை மேலுற வளைஇ
நீலத் திரண்மணிக் கோலக் கருநிரை
இடையிற் கேற்றுப் புடையிற் பொலிந்து

**(சிங்காதனம்)**

விழைதகு விழுச்சீர் மந்த மாமலை
முழையிற் போதரு முயற்சி போல
முதனிலைப் பலகைச் சுவன்முத லோச்சி

---

83. பைங்கதிர்ச்செல்வன் - சந்திரன்.
84. வாலொளி - தூய்மையான கிரணம்.
85. பட்டிகை - பட்டை.
86. வேல் தொழில் - வேல்போன்ற வேலைப்பாடு.
94. காமவள்ளி - காமவல்லி.
96. மாலை யணிநகை - முத்தமாலை.
98. பொலிந்து - விளங்காநிற்க.
100. முழையின் - குகையினின்றும்.
101. சுவன்முதல் - பிட்சிடம்.

பி - ம். 1 பருஉப்பிணைப். 2 சோணச்.

மூரி நிமிர்வன போல வேர்பெற்று
வைந்நுதி யமைந்த வயிர வாயிற்
கண்ணிழ லிலங்கு மொளியிற் றாகிப்
பவழ நாவிற் றிகழ்மணிப் பகுவாய்ப்
பசுமணிப் பரூஉச்செவிப் பன்மணிக் கண்டத்
துளைமயி ரணிந்த வுச்சிக் கேற்ப
வாய்புகு வன்ன வந்தொசி கொடிபோற்
சென்றுசெறிந் திடுகிய நன்றுதிர ணடுவிற்
றகைமணிக் கோவை தன்கைக் கேற்பப்
பரூஉத்திரட் குறங்கிற் பளிக்குமணி வள்ளுகிர்த்
திருத்தஞ் செறிந்து திகழ்ந்துநிழல் காட்டும்
உருக்குறு தமனியத் தொண்பொற் கட்டில்
அணிப்பொலிந் தியன்ற வழலுமிழ் மூரிமான்
உச்சியிற் சுமந்துகொண் டோங்குவிசும் பிவர்தற்கு
நச்சி யன்ன வுட்குவ ருருவிற்

(சீனதேவனும் வழிபடுவோரும்)

[1] றருமா ஞசனத் திருநடு விலங்க
இருந்த வேந்தைப் பொருந்து மருங்குற்
றலைவா யுற்றுத் தலையெழிற் பொலிந்து
சிலைகவிழ்த் தன்ன கிம்புரி கவ்வி
நிழல்காட் டாடி நிழன்மணி யடுத்துக்
கோலங் குயின்ற நீலச் சார்வயல்
வாடாத் தாரினர் சேடார் கச்சையர்
[2] வட்டுடைப் பொலிந்த கட்டுடை யல்குலர்
மலர்ந்தேந் தகலத் திலங்குமணி யாரத்

102. மூரி நிமிர்தல் - சோம்புதீர நிமிர்தல்; வர் - எழுச்சி; உ. 4: 174.

99 - 102. "அணங்குடை நெடுங்கோட் டளையக முனைஇ, முணங்குநிமிர் வயமான் முழுவலி யொருத்தல்" புறநா. ௫௨.

109. நடு - இடை. 113. கட்டில் - ஆதனம்.

116. உட்குவரு உரு - அச்சம் தோன்றுகின்ற வடிவு.

121. ஆடி - கண்ணடி.

122 - 38. வழிபடுவோர். 122. நீலச்சார்வு அயலில்.

124. வட்டுடை - முழந்தாளளவாக உடுக்கும் உடை; உ. 4 : 122.

பி - ம். 1 றருமாஞசனத். 2 பட்டுடை.

துடன்கிடந் திமைக்கு மொருகாழ் முத்தினர்
முழவுறழ் மொய்ம்பினர் முடியணி சென்னியர்
கழூமணிக் கடிப்பினர் கடகக் கையினர்
புடைதிரண் டமைந்த பொங்குசின நாகம்
இடைநிரைத் தன்ன வெழில்வளை கவ்விய
எழூவுறழ் திணிதோ ளெடுத்தன ரேந்திப்
புடையிரு பக்கமும் போதிகை பொருந்தித்
தொடையமை கோவை துளங்குமணிப் பன்னகை
முகிழ்முடிச் சிறுநுதன் முதிரா விளமை
மகிழ்நகை மங்கையர் மருங்கணி யாகப்
புடைதிரண் டியங்கும் பொங்குமணிக் கவரி
அடைவண் டோப்பு மவாவினர் போல
எழின்மணி யியக்கத் தொழில்கொண் டைய
மணிவிளக் குமிழு மணிநிலாச் சுவர்மிசை
வலத்தா ணீட்டி யிடத்தாண் முடக்கிப்
பொன்பொலிந் தியலும் பொங்குபூந் தானைப்
பசும்பொற் கச்சை பத்தியிற் குயின்ற
விசும்பக நந்தும் வேட்கையர் போலத்
தாமரைத் தடக்கையிற் றூம மேந்தி
[1] விச்சா தரர்நக ரெச்சாரு மயங்கி
நீனிற முகிலிடைக் காமுறத் தோன்றத்
திருமுடி யிந்திர ரிருநிலக் கிழவர்
உரிமை மகளிரொ டுருபுபடப் புனைந்த

---

126. உடன் - ஒருங்கு. ஒருகாழ் - ஒருவடம்.
128. கடிப்பு - ஒருவகைக் காதணி; ந. 9 : 66.
129. சின நாகம் - கோபத்தையுடைய பாம்பு.
131. எடுத்தனர் ஏந்தி - எடுத்து உயர்த்த.
133. மணிப்பன்னகை - முத்தவடம்.
139 - 46. வித்தியாதரர் வடிவமுதலியன.
145. நகர் - கோயிலின். 148. உருபு - வடிவம்.

147 - 8. "அங்கண்வானத் தமரரசரும், வெங்களியானை வேல் வேந்தரும், வடிவார்கூந்தன் மங்கையருங், கடிமலரேந்திக் கதழ்ந் திறைஞ்ச" (யா. வி. சீர். சூ. 13 ; யா. கா. சூ. 9, மேற்.) என்னும் வஞ்சிப்பா இப்பகுதியுடன் ஒப்புநோக்கற்பாலது.

பி - ம். 1 விச்சாதிரர்.

பொத்தகக் கைவினைச் சித்திரச் செய்கைத்
தத்தந் [1] தானத் தத்தக நிறீஇ
அழகுபடப் புனைந்த வலம்புரிமணிக் கவிசின்மிசை
நிறைகதிர் வெண்மதி நிலாவொளி விரிந்து
முறையின் மூன்றுட னடுக்கின போலத்
தாம முக்குடை தாமுறை கவிப்ப
உலக வெள்ளத் தாழும் பல்லுயிர்க்
கலகை யாகிய வருந்தவக் கிழவனை

(உதயணன் செயல்)

இருக்கை யியற்றிய திருத்தகு செல்வத்
தாரணங் காகிய வணிகிளர் வனப்பிற்
பூரணம் பொலிமை புகழ்ந்துமீக் கூறித்
திருமணி யடக்கிய செம்பொற் செப்பின்
அருமணி சுடரு மாராஅந் தாணம்
உரிமைச் சுற்றமொ டொருங்குடன் றொன்றிக்
கதிவிளக் குறாஉங் கருத்தினன் போல
விதியிற் சேர்ந்து துதியிற் றுதித்துப்
பெறற்கரும் பேதையைப் பெறுகெனப் பரவிச்
சிறப்பெதிர் கொள்கைச் சித்திக் கிழவன்
பேரறம் பேணிய சீர்நெறிச் சிறப்பிற்
றெய்வதை யமர்ந்தெனக் கைம்முதல் கூப்பி
விரவுமலர்ப் போதொடு வேண்டுவ வீசிப்
பரவுக்கடன் கழித்தனன் பைந்தா ரோனென்.

௩—தெய்வச்சிறப்பு முற்றிற்று.

---

149. பொத்தகக்கைவினை - சிற்ப நூலிற் கூறிய கைத்தொழில்; பொத்தகம்: க. 36 : 225, அடிக். 150. நிறீஇ-நிலைபெறச்செய்து.
152 - 4. முக்குடை. 159. பொலிமை - பொலிதல்.
160. "செங்கதிர்த் திருமணிச் செப்புப் போன்றவே" (சீவக. 3000); மணி - சமவசரணம். 161. அராஅந்தாணம் - சினாலயத்தை.
165. பெறற்கரும் பேதை - கேவலமடந்தை; முத்தி. பெறுகென-பெறுவேனாகவென்று. 166 - 7. சித்திக்கிழவன் பேரறம் - சின தருமம்.
168. அமர்ந்தென - விரும்பிக் கைகூப்பினாற்போல.
169. வீசி - மிகுதியாகக் கொடுத்து.
170. பரவுக்கடன் - வேண்டிவரங்கொள்ளுதலை.
பி - ம். 1 தானத்துத்தக்க.

## ௭—நகர்வலங்கொண்டது.

(உதயணன் செயல்)

பரவுக்கடன் கழிந்து விரவுப்பகை தணிந்த
தாமந் துயல்வருங் காமர் கைவினைக்
கோயின் முற்றத்து வாயில் போந்து
குன்றுகண் கூடிய குழாஅ மேய்ப்ப
ஒன்றுகண் டன்ன வோங்குநிலை வனப்பின்
மாட மோங்கிய மகிழ்மலி மூதூர்
யாறுகண் டன்ன வகன்கனை வீதியுட்
காற்றுறழ் செலவிற் கோற்றொழி லிளையர்
மங்கல மரபின வல்லது மற்றையர்
கொங்கலர் நறுந்தார்க் குமரன் முன்னர்
நில்லன்மி னீரென நீக்குவனர் கடிய

(மகளிர் செயல்)

மல்ல லாவணத் திருவுடை மருங்கினும்
நண்ணு மாந்த ராயினுங் கண்ணுறின்
இமைத்த லுறாஅ வமைப்பின் மேலும்
புதுமணக் கோலத்துப் பொலிவொடு புணர்ந்த
கதிர்முடி மன்னனைக் காண்பது விரும்பி
மணியறைந் தன்ன மாவீ ழோதி

---

௭—நகர்வலங்கொண்டது.

[உதயணனும் வாசவதத்தையும் பலதிறத்தாரும் பாராட்ட இன்புறும்படி நகர்வலம் வந்தமை இதனால் அறியலாகும்.]

3. கோயில் - ஆலயம். பகைதணிந்த (1) கோயிலின் (3.)

4 - 6. மாடநிரைகளுக்குக் குன்றின் நிரை உவமை; மதுரை. 474, அடிக்.

7. வீதிகளுக்கு யாறு உவமை; இ. 7 : 23; "யாறுகிடந் தன்ன வகனெடுந் தெரு" (மதுரை. 359) என்பதன் அடிக்குறிப்பைப்பார்க்க.

11. கடிய - விலக்க. இளையர் (8) கடிய (11.)

12 - 31. ஒரு தொடர். 13. பகைவரும் காண்பாராயின்.

14. அமைப்பு - இயற்கையழகின் அமைதி.

17. நீலமணிமிடை அறல்பட அமைத்தாற் போன்ற கூந்தல்; மாவீழ் - வண்டுகள் விரும்பி வீழ்ப்பெற்ற; உ. ச: 140; "மணி யறைந் தன்ன வரியற லைம்பால்" சீவக. 335.

அணிபெறக் கிடந்த வம்பொற் சூட்டினர்
சூடுறு பொன்வினைச் சுவணர் புனைந்த
தோடுங் கடிப்புந் துளங்கு காதினர்
வெம்மை பொதிந்த பொம்மெ னிளமுலை
[1] இடைப்படஇப் பிறழு மேக வல்லி
[2] அணிக்கலை புனைந்த வரசிலைப் பொன்னடர்
புனற்சுழி புரையும் பொலிவிற் றாகி
வனப்பமை யவ்வயிற் றணித்தகக் கிடந்த
உந்தி யுள்ளுற வந்துட னடுங்கி
அளைக்கிவ ரரவின் றளர்ச்சி யேய்ப்ப
முளைத்தெழு முலைக்கச் சசைத்தலி னசைந்த
மருங்கு லேவ விரும்புபு விரைந்து
மைவரை மீமிசை மகளிர் போலச்
செய்வளை மகளிர் செய்குன் றேறினர்
உணர்ந்தோர் கொண்ட வுறுநன் றேய்ப்ப
வணர்ந்தேந்து வளர்பிறை வண்ணங் கடுப்பத்
திருநுதற் கேற்ற பரிசாரக் கைவினை
நீடிய பின்றைக் கூடாது தாங்கும்
கொற்றவற் காண்மென வெற்றவேற் றடக்கையர்
கோல வித்தகங் குயின்ற நுட்பத்துத்

18. சூட்டு - நெற்றிச் சூட்டு.
19. சுவணர் - சிங்கச்சுவணமென்னும் பொன்னாற் செய்யப்பட்ட ஆபரணங்களையுடையார்; சு. 11 : 21 - 4. 20. = 38. [211.
22. படஇ - பட்டு. ஏகவல்லி - ஒற்றை வடமாகிய ஓரணி; க. 46:
23. அரசிலைப் பொன் அடர் - அரசிலைபோலப் பொற்றகட்டாற் செய்யப்பட்ட ஓரணி.
26. வருதல்: ஏகவல்லியின்வினை. உடல் நடுங்கி.
27. அளைக்கு - புற்றிற்கு.
22 - 7. உந்தியின் மேலே கிடக்கும் ஏகவடத்திற்குப் புற்றிற்குச் செல்லும் பாம்பு உவமை. 28. அசைந்த - மெலிந்த.
30. மலைமேலே காணப்படும் மகளிரைப்போல.
31. செய்குன்று - கட்டுமலை. 32 - 47. ஒருதொடர்.
33. வணர்ந்து - வளைந்து.
34. பரிசாரக் கைவினை - சேடியர்செய்யுந் தொழில்.
36. காண்மென - காண்மினென்று சொல்ல.

பி - ம். 1 இடைபடிப். 2 மணிக்கலை.

தோடுங் கடிப்புந் துயல்வருங் காதினர்
வாலிழை மகளிர் வழிவழி விலக்கவும்
ஒன்பது விருத்தி நன்பத நுனித்த
ஓவவினை யாளர் பாவனை நிறீஇ
வட்டிகை வாக்கின் வண்ணக் கைவினைக்
கட்டளைப் பாவை கடுப்பத் தோன்றிக்
குறைவினைக் கோலங் கூடினர்க் கணங்காய்
நிறைமனை வரைப்பிற் சிறையெனச் செய்த
சுவர்சார் வாகத் துன்னுபு நிரைத்த
நகர்கா ணணி விரைவன ரேறினர்
ஒருபுடை யல்ல துட்குவரு செங்கோல்
இருபுடைப் பெயரா வேயர் பெருமகன்
சிதைபொருள் வலியாச் செறிவுடைச் செய்தொழில்
உதையண குமரன் வதுவைக் கணிந்த
கோலங் கொண்ட கோல்வளை மகளிருள்
ஞாலந் திரியா நன்னிறைத் திண்கோள்
உத்தம மகளி ரொழிய மற்றைக்
கன்னிய ரெல்லாங் காமன் றுரந்த
கணையுளங் கழியக் கவினழி வெய்தி

---

40. ஒன்பது விருத்தி - ஒன்பதுவகையான இருப்பு; க. 35: 46-7; இவைகள் இன்னவென்பதை, "ஒன்பான் விருத்தியுள்" (சிலப். அ: 25) என்பதன் விசேட உரையாலுணர்க.

41. ஓவவினையாளர்-ஓவியநூலார்; சித்திரமெழுதுவோர்; "ஒண்வினை யோவியர்" (க. 35 : 46) என்றார் முன்னும்.

42. வட்டிகை வாக்கு - எழுதுகோலின் திருத்தம்.

44. அணங்காய் - வருத்தமாக. 45. சிறை - அரண்.

46. சுவரையே பற்றுக்கோடாகக் கொண்டு செருங்கி.

47. ஏணியில் ஏறினர். 48 - 71. ஒருதொடர். [பர்பின்.

48 - 9. "ஏகச் செங்கோ லேயர் பெருமகன்" (உ. 8 : 3) என்

50. சிதைபொருள் வலியா - நிரம்பாத காரியங்களைச் செய்தற்

51. வதுவைக்கு - கலியாணத்தின் பொருட்டு. [குத் துணியாத.

53. நிறை - மனத்தை நிறுத்தல். நிறையாகிய திண்ணிய கொள்கைகளையுடைய.

53 - 4. கற்புடை மகளிர் மனம் கலங்காராயினரென்றபடி.

இறைவளை நில்லார் நிறைவரை நெகிழ
நாண்மீ தூர்ந்து நன்னெஞ்சு நடப்பத்
தோண்மீ தூர்ந்து தொலைவிட நோக்கி
அற்றம் பார்க்குஞ் செற்றச் செய்தொழிற்
பற்றா மாந்தரிற் பசலை பாய்ந்த
கருங்கண் புலம்ப வருந்தின ரதனாற்
காட்சி விரும்பன்மின் மாட்சி யின்றெனா
ஈனாத் தாய ரானது விலக்கும்
ஆணை மறுத்தியா மாண முடைமையின்
இந்நகர் காண்கவெம் மன்னை மாரெனக்
கண்ணின வேட்கை பின்னின்று துரப்ப
வாயின் மாடத்து மருங்கணி பெற்ற
வரிச்சா லேகம் விரித்தன ரகற்றித்
ததும்புங் கிண்கிணித் தகைமலர்ச் சேவடிப்
பெதும்பை மகளிர் விதும்பி நோக்கினர்
நேரியற் சாய னிகர்தமக் கில்லாக்
காரிகை கடுநுனைத் தூண்டி லாக
உட்கு நாணு மூரா ணொழுக்கும்

57. இறை - முன் கை. வரை நெகிழ - அளவு கடப்ப.
60. அற்றம் - சோர்ந்த சமயம்.
61. பற்றாமாந்தர் - பகைவர்.
கன்னியர் (55) வருந்தினர் (62.)
63. விரும்பன்மின் - விரும்பாதீர்.
64. ஈனாத்தாயர் -செவிலித்தாயர்.
65. ஆணம் : ந. 25 : 152.
66. காண்க - காணக்கடவேம். அன்னைமார் : முன்னிலைக்கண் [வந்தது.
69. வரிச் சாலேகம் - வரிகளையுடைய சாளரக்கதவுகளை ; அரி - மான் கண்ணும் காற்றுமாம் ; க. 40 : 9, 42 : 37 ; ச. 3 : 112.
70. ததும்புங் கிண்கிணி : க 46 : 246.
71. பெதும்பைமகளிர் - வேட்கை பிறக்கின்ற பருவத்தார். விதும்பி - காணுதற்கு விரைந்து ; "பெதும்பையர் விதும்பினின்றார்" (சீவக. 2530.) 72 - 94. ஒருதொடர்.
73. காரிகை - பேரழகு.
74. ஊராணொழுக்கு - சுற்றமோம்பல் ; க. 36 : 281 - ஆம் அடியின் குறிப்பைப் பார்க்க.

கட்கின் கோலமுங் கட்டிரை யாக
இருங்கண் ஞாலத் தினையோ ரீட்டிய
அருங்கல வெறுக்கை யவைபீ ணுக
வாங்குபு கொள்ளும் வழக்கியல் வழாஅப்
பூங்குழை மகளிர் புனைமணிப் பைம்பூண்
ஒளிபெற் றிலங்கு முதயண குமரன்
அளிபெற் றமர்ந்த வம்பூஞ் சேக்கையுள்
உவக்கும்[1] வாயறிந் தூடி மற்றவன்
நயக்கும் வாயு ணச்சுவைப் புலவியுள்
நோக்கமை கடவுட் கூப்பினுங் கதுமெனப்
பூம்போ தன்ன தேங்குவளைத் தடக்கை
வள்ளுகிர் வருட்டி னுள்குளிர்ப் புறீஇப்
பஞ்சி யணிந்த வஞ்செஞ் சீறடிப்
பொன்னணி கிண்கிணிப் போழ்வாய் நிறையச்
சென்னித் தாமத்துப் பன்மலர்த் தாதுக
இரந்துபின் னெய்து மின்சுவை யமிர்தம்
புணரக் கூடிற் போகமு மினிதெனப்
மீட்டல் செல்லா வேட்ட விருப்பொடு
கோடுகொண் மயிலின் குழாஅ மேய்ப்ப
மாடந் தோறு மலிந்திறை கொண்டனர்
சுவல்பொதி கூழையர் சுடர்பொற் றோட்டினர்
பெயலிடைப் பிறழு மின்னேர் சாயலர்
பாப்பெயிற் றன்ன பன்னிரைத் தாலி
கோப்புமுறை கொண்ட கோலக் கழுத்தினர்

---

75. கட்டு இரை - அத்துண்டிலிற் கட்டிய இரை.

73 - 8=௧. 35 : 108 - 9. 79. மகளிர் - பரத்தையர்.

82. வாய் - வழி.

86. வருட்டின் - தடவுதலால். குளிர்ப்புறீஇ - குளிர்ப்புறுவித்து ; கலி. ௭௨ : 11, ௮௨ : 28 - 30, ௮௮ : 10 - 11, ௧௧ : 11.

88 - 9. நிறையத் தாதுக. 93. கோடு - மலையின் உச்சி.

93 - 4. மாடத்திற்கு மலையும் மகளிர்க்கு மயில்களும் உவமை ; 95 - 103. ஒருதொடர். [சீவக. 71.

97. பாம்பெயிறு - பாம்பின் பல்.

பி - ம். 1 வாயறிந்தூறியற்றவன்.

மணிநில மருங்கின் முனிவில ராடும்
பந்துங் கழங்கும் பட்டுழிக் கிடப்ப
அந்தண் மஞ்ஞை யாடிட மேய்ப்பக்
கோதையுங் [1] குழலுந் துள்ளுபு விரியப்
பேதை மகளிர் வீதி முன்னினர்
வெண்முகி னடுவண் மீன்முகத் தெழுதரும்
திருமதி யென்னத் திலக வாண்முகம்
அருமணி மாடத் தகவயிற் சுடர
வாட்கெழு மழைக்கண் வாசவ தத்தை
தோட்குத் தக்க தொடுகழற் குருசிலைக்
கண்டீர் நீங்கிக் காணிடந் தம்மென
விண்டீர் மகளிரின் வியப்பத் தோன்றி
அரிமதர் நெடுங்க ணளவிகந் தகல
இருமுலைப் பொற்பூ ணிடவயிற் றிருத்தாத்
தெரிவை மகளிர் தேமொழிக் [2] கிளவிக்
குழித்தலைப் புதல்வ ரெழிற்புறம் வரித்த
அஞ்சாந் தழிய வாகத் தடக்கி
நுண்சா லேகத் தெம்பரு [3] நோக்கினர்

(மகளிர் மைந்தராகியவர் செயல்)

அறம்புரி செங்கோ லவந்தியர் பெருமகன்
மறம்புரி தானை மறமாச் சேனன்
பாவைய ருள்ளு மோவா வாழ்க்கை
ஏசுவ தில்லா வாசவ தத்தையும்
காம னன்ன கண்வாங் குருவிற்
றாமந் தாழ்ந்த வேம வெண்குடை
வத்தவ ரிறைவனு முற்பான் முயன்ற

---

104 - 16. ஒருதொடர்.

109. கண்டவர்களே, நீவிர் நீங்கி உதயணனைக் காணுமிடத்தை எமக்குத் தருமினென்று.

110. விண்டீர் - விண்ணுலகத்தை விட்டு வருகின்ற.

114. குழித்தலைப் புதல்வர் - உச்சந்தலையிற் குழியையுடைய குழந்தைகளை.

116. எம்பரும் - எவ்விடத்தும்; க. 38 : 25; இ. 2 : 13.

117 - 8. பெருமகனாகிய மறமாச்சேனன் - பிரச்சோதனன்.

பி - ம். 1 குழையுந். 2 கிளவிக்குமுற்றலைப். 3 நோக்கினல்.

அத்தவ மறியி னெத்திறத் தாயினும்
நோற்று மென்னுங் கூற்றின ராகி
மணிநிற மஞ்ஞையுஞ் சிங்கமு மயங்கி
அணிமலை யிருந்த தோற்றம் போல
மகளிரு மைந்தருந் தொகைகொண் டீண்டி
மாடந் தோறு மலர்மழை பொழிய

(நகரத்திலுள்ளார் செயல்)

ஆடம் பலமு மாவண மறுகும்
கீத சாலையுங் கேள்விப் பந்தரும்
ஓது சாலையுஞ் சூதாடு கழகமும்
ஐவே றமைந்த வடிசிற் பள்ளியும்
தங்கோ ளொழிந்த தன்மைய ராகி
மண்கா முறூஉம் வத்தவ மன்னனைக்
கண்கா முற்ற கருத்தின ராகி
விண்மே லுறையுநர் விழையுங் கோலமொடு
மென்மெல நெருங்கி [1] வேண்டிடம் பெறூஅர்
அரும்பதி யுறைநர் விரும்புபு புகழ

(உதயணன் செயல்)

அருந்தவங் கொடுக்குஞ் சுருங்காச் செல்வத்
துத்தர குருவ மொத்த சும்மை
முத்துமணல் வீதி முற்றுவலம் போகித்

---

125. நோற்றும் - நோற்பேம்.

126 - 7. மஞ்ஞை மகளிர்க்கும் சிங்கம் ஆடவர்க்கும் உவமைகள்; சீவக. 2469.

131. கீதசாலை - சங்கீதசாலை (௧. 34: 224.) கேள்விப்பந்தர் - நூற்கேள்விகளைக் கேட்டற்குரிய பந்தர்; "தண்மணற் பந்தருந் தாழ்தரு பொதியிலும், புண்ணிய நல்லுரை யறிவீர் பொருந்துமின்" மணி. [௧: 58 - 9.

132. ஓதுசாலை - கற்குமிடம்.

134. தம்கோள் - தாம் மேற்கொண்டிருந்த செயல்.

140. தவம் கொடுக்கும் - தவத்தால் அளிக்கப்படுகிற.

141. உத்தரகுருவம் - போகபூமி.

140 - 41. "அருந்தவ முடித்தோ, ருத்தர குருவி னொப்ப" சிலப். ௨: 9 - 10. [5; புறநா. ௯௧: 1.

142. முத்துமணல்: ௫. 6 : 41; பெரும்பாண். 335; கலி. ௯௯:

பி - ம். 1 யீண்டிடம்.

தெய்வ மாடமுந் தேர்நிலைக் கொட்டிலும்
ஐயர் தானமு மன்னவை பிறவும்
புண்ணியப் பெயரிடங் கண்ணி னோக்கி
நாட்டகம் புகழ்ந்த நன்னகர் புகல

(உதயணனும் வாசவதத்தையும் நீராடல்)

மீட்டகம் புக்கு மேவரு செல்வமொடு
மங்கல மண்ணுநீர் மரபி னாடக்
கொங்கலர் கோதையைப் பண்டுமுன் பயின்ற
தோழி தானே தாழாது விரும்பிக்
கைந்நவில் கம்மத்துக் கம்மியன் புனைந்த
செய்கலத் துள்ளுஞ் சிறந்தவை நோக்கி
ஏற்குந் தானத்துப் பாற்பட வணிந்து
பானீர் நெடுங்கடற் பனிநா ளெழுந்த
மேனீ ராவியின் மெல்லி தாகிய
கழுமடிக் கலிங்கம் வழுவில வாங்கி
ஒண்மணிக் காசிற் பன்மணிப் பாவை
கண்ணிய காத லுண்ணெகிழ்ந்து விரும்பி
ஆடற் கவாவு மமிழ்தஞ் சோர
ஊடுபோந் துறழ வொளிபெற வுடீஇ
மாலையுஞ் சாந்து மங்கல மரபின்
நூலிற் றிரியாது நுண்ணெறிழ் புரிய
புதுவது புனைந்த பூங்கொடி புரையும்
வதுவைக் கோலத்து வாசவ [1] தத்தை
புதுமைக் காரிகை புதுநாண் டிளைப்பக்
கதிர்விளங் காகத்துக் காமங் கழுமி
அன்னத் தன்ன வன்புகொள் காதலொடு

146. புகல - விரும்ப.

148. ஆட - உதயணன் ஆட.

154 - 6. பாற்கடலிற் பனிநாளில் எழுந்த ஆவிபோன்ற ஆடை; “பாலா ராவிப் பைந்துகில்” சீவக. 1094.

165. புதுமைக்காரிகை - புதிய அழகு.

164 - 5. க. 40 : 309, அடிக். 166. கழுமி - மிக்கு.

167. அன்னத்தன்ன - அன்னப் பறவையைப் போன்ற; “மாத

பி - ம். 1 தத்தையைப்.

[1] பொன்னகர்க் கியன்ற புகரில் புகழ்நகர்
வரைவில் வண்மை வத்தவ மன்னற்குப்
பொருவில் போகம் புணர்ந்தன்று வினிதென்.

எ—நகர்வலங்கொண்டது முற்றிற்று.

---

ருங் களிற னும்............ஆதரம் பெருகு கின்ற வன்பினு லன்ன மொத்தும்" சீவக. 189.

168. பொன்னகர்க்கியன்றபுகர் - "அறஞ்செய்மாக்கள் புறங் காத்தோம்புநர், நற்றவஞ்செய்வோர் பற்றற முயல்வோர்" ஆதியரில் லாதகுற்றம் (மணி. கச: 40 - 42); "ஈவாரு மேற்பாரு மில்லாத வானத்து, வாழ்வாரே வன்க ணவர்" என்பது இதனை வலியுறுத்தும். புகழாவது, "தேவ குலமுந் தெற்றியும் பள்ளியும், பூமலர்ப் பொழிலும் பொய்கையு மிடைந்து, நற்றவ முனிவருங் கற்றடங் கினரு, நன்னெறி காணிய தொன்னூற் புலவரு, மெங்கணும் விளங்கிய" புகழ்; மணி. உக: 72 - 6.

பி - ம். 1 பொன்னேர்க்.

---

## அ—யூகி போதரவு.

போகம் புணர்ந்த பொன்னக ரவ்வயின்
வேகத் தானை வேந்தன் மகளோ
டேகச் செங்கோ லேயர் பெருமகன்

---

அ—யூகி போதரவு.

[உதயணனை வாசவதத்தையுடன் அனுப்பிய பின்பு, யூகி உச்சயினி முதலிய இடங்களிற் செய்விக்க வேண்டுவனவற்றைச் செய்வித்து விட்டு அறியவேண்டுவனவற்றை அறிந்துகொண்டு விரைவாகச் செல்லும் ஓர் எந்திரத் தேரிலேறி இடபகனிருக்கும் புட்பகநகரத்திற்கு வந்தமை இதனால் அறியலாகும்.]

1 - 5. கவியின் கூற்று. 1. பொன்னகர் - சயந்தி.

3. குருகுலத்திற் பிறந்தவனாதலின், உதயணன் ஏகச் செங்கோலை யுடையவனாகக் கூறப்பெற்றான்; இவன் தந்தை, "ஏகத் திகிரி யிருநிலத் திறைவன்" (க. 48 : 84) என முன்பு கூறப்பட்டிருத்தலும், "ஒருபுடை யல்ல துட்குவரு செங்கோ, லிருபுடைப் பெயரா வேயர் பெருமகன்" (உ. 7 : 48 - 9) என இவன் கூறப்பட்டிருத்தலும் காண்க.

போகங் கழுமிப் புணர்ந்து விளையாட
யூகிக் கிப்பா லுற்றது கூறுவென்

(யூகியின் துணைவிசேடங்கள்)

கண்ணகன் கிடக்கைக் கலிகெழு [1] மூழியுள்
மண்ணகந் தழீஇ மன்னிய வூழிதொறும்
புண்ணிய வுலகிற்கும் பொலிவிற் றாமெனத்
தொன்றோங் காளர் துணியப் பட்ட
பொன்றா வியற்கைப் புகழது பெருமையும்
ஆன்முலைப் பிறந்த வானிற வமிர்தம்
மலைப்பெய் நெய்யொடு தலைப்பெய் தாங்கு

---

4. கழுமி - நிறைந்து.

5. இப்பால் - பின்பு ; "இப்பாற், பட்டதை யெல்லாம் பல்லவர் கேட்கப் பகர்குற்றேன்" சீவக. 360.

6 - 10. புகழின் பெருமை.

6. கலிகெழுமு ஊழியுள் - ஒலிமிக்க ஆகாய ஊழி முதலிய ஊழிகளுக்குள் ; இவற்றை, "கருவளர் வானத் திசையிற் றோன்றி, உருவறி வாரா வொன்ற னூழியு, முந்துவளி கிளர்ந்த வூழூ ழூழியுஞ், செந்தீச் சுடரிய வூழியும் பனியொடு, தண்பெய றலைஇய வூழியு மவையிற், றுண் முறை வெள்ள மூழ்கியார் தருபு, மீண்டும் பீடுயர் பீண்டி யவற்றிற்கு, முள்ளீ டாகிய விருநிலத் தூழியும்" (பரி. ௨) என்பதனாலறிக ; ஊழி - கற்பம்.

7. நிலவூழியாகிய கற்பந்தோறும்.

8. புண்ணிய உலகிற்கும் - விண்ணுலக இன்பத்தையும் அளித்தற்குரிய ; உம்மை : இறந்தது தழுவியது.

9. தொன்றோங்காளர் - ஓங்கிய முன்னோர் ; தொன்று - பழமை.

10. பொன்றா இயற்கைப் புகழது - அழியாத இயல்பையுடைய கீர்த்தியினது ; "ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற், பொன்றாது நிற்ப தொன் றில்" குறள், 233.

8 - 10. "நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப், போற்றாது புத்தேளுலகு" (குறள், 234); "இவணிசை யுடையோர்க் கல்ல தவண, துயர்நிலை யுலகத் துறையு ளின்மை, விளங்கக் கேட்ட மாறுகொல்" (புறநா. ௫0) என்பவை இவ்வடிகளுடன் ஒப்புநோக்கற்பாலன.

11 - 4. நண்பினமைதி.

11. ஆன் - பசு. வால் நிறம் - வெள்ளைநிறம்.

11 - 2. சீவக. 2077, ஒப்புமைப்.

12. மலைப்பெய் நெய் - தேன்.

பி - ம். 1 பூமியுள்.

வேறுபட் டேகினுங் கூறுபட் டியலா
அன்பினி [1] னளைஇய நண்பி னமைதியும்
அசைவி றூனை விசைய வெண்குடைப்
பெருநில மன்னர் கருமங் காழ்த்த
அருமதி நுனித்த வமைச்சி ஞற்றலும்
இன்னவை பிறவுந் தன்வயிற் றூங்கி

(யூகி உச்சயினியிற் செய்தவை)

மன்றணி வீதி மதிலுஞ் சேனையுள்
வென்ற கொற்றமொடு விசய மெய்தி
இறைவற் பிரிக்கு மறிவிற் சூழ்ந்த
படிவ வுருவம் பட்டாங் கெய்தி
இடியுறழ் முரசி னேய ரிறைவன்
கண்ணியது முடித்துக் காரிகை பொலிந்த
வண்ணக் கோதை வாசவ தத்தையொடு

---

13. கூறுபட்டு - பிரிவுபட்டு.

11 - 4. முல்லைத் திணைக்குரிய ஆன்பாலும் குறிஞ்சித்திணைக்குரிய தேனும் தம்முட்கலந்து மிக்க இன்பம் பயத்தல், வேறுவேறிடத்திருக்கும் உதயணனும் யூகியும் மனங்கலந்து மிக்க இன்பம் விளைவித்தற்கு உவமை; "தேனிற் பாலெனச் செல்வன் றம்பியோ, டானி யம்பவ கழிய வாயிடை" (சீவக. 1761), "நெய்த்தலைப் பால்கலந் தனைய நேயத்தான்" என்பவற்றிலும் இக்கருத்து அமைந்துள்ளது.

15 - 7. அமைச்சிஞற்றல்.

16. மன்னர் கருமம் காழ்த்த - அரசருடைய காரியங்களைச் செய்தலில் முற்றிய; "கருமங் காழ்த்தமை கண்டவர்" சீவக. 242.

18. இன்னவை பிறவும் - இவைபோல்வன பிறவற்றையும்.

19. மன்றணி - மன்றை அணிந்த.

20. வென்ற கொற்றமொடு - பிரச்சோதனனால் வென்று கொள்ளப்பட்ட உதயணனது அரச வுரிமையுடன்.

21. இறைவற் பிரிக்கும் - உதயணனைச் சிறையினின்றும் நீக்குதற்குரிய. சூழ்ந்த - ஆலோசித்துக்கைக்கொண்ட,

22. படிவவுருவம் - வேறு வடிவமாகிய பேய்வடிவம்; "மெய்ப் பேய்ப் படிவமொடு பொய்ப்பே யாகி" (உ. 9 : 41.) பட்டாங்கு - உள்ள

24. கண்ணியது-வாசவதத்தையை அடையக் கருதியது. [படியே.

பி - ம். 1 னளைஇய.

வழிமுதற் கொண்ட கழிமுதற் [1] கங்குலின்
மல்குகடற் றானை மன்னரை வணக்கிப்
பில்குகளி யானைப் பிரச்சோ தனனெனும்
ஐந்தலை நாக [2] மழல வெகுட்டிப்
பைந்தளிர்க் கோதையைப் பற்றுபு தழீஇச்
சிறைகொளப் [3] பட்டுச் செல்வ நீத்த
குறைமக னென்பது கோடல் செல்லாது
திருமன னெகிழ்ந்த வருண்மலி யன்பொடு
தந்தனன் கோமா னென்றுதலை வணங்கி
ஒண்டார் மார்ப னுதயணன் பணிமொழி
மந்திர மாக மகண்மாட் டியைந்தவை
அன்றவ னுள்ளத் தகமுணா வராகன்
உரைத்த வண்ணமு மிகப்பல வாகத்
தொல்லோர் முன்னர்த் தோன்றக் காட்டி
ஒல்கா வென்றி [4] யுதயணற் றடைய
வெல்போர்ப் பெரும்படை வேந்தன் விடுத்தலும்
விடுத்த பெரும்படை விளியத் தாக்கி
உடைத்த தோழ ருக்க வென்றியும்
வென்றி வியனகர் வெந்துய ருற்றதும்

---

26. வழிமுதற் கொண்ட - வழிக்கொண்ட.

27. மன்னரை - பிரச்சோதனனுக்கு நண்பராய் உதயணனோடு போர்செய்தற்கு வந்த அரசர்களை.

29. அழல - கோபிக்க. வெகுட்டி - வெகுளச்செய்து. சினத்தில் ஐந்தலை நாகம் மிக்கதென்பதை, "ஐவாயரவி னவிராரழல் போன்று சீறி" (சீவக. 2345) என்பதனாலும் அறிக.

30. தழீஇ - உதயணன் தழுவிக்கொண்டு.

32. கோடல் செல்லாது - உட்கொள்ளாமல்.

34. கோமான் - பிரச்சோதனன்.

35. பணிமொழி - சொல்லிய சொற்களை.

36. இயைந்தவை - இயைந்தவற்றை.

37. அவன்-பிரச்சோதனனுடைய. 40. தடைய-தடுத்தற்கு.

43. தோழர் - உதயணனுடைய தோழர்களின். [உச்சயினி நகரம்.

44. வென்றிவியனகர் - முன்னமே வெற்றியையுடைய அந்த

பி - ம். 1 கங்குலன். 2 மழலவேகிட்டி. 3 பட்டுஞ். 4 யுதயணற்குடையும்.

பட்டாங் குணர்ந்து [1] முட்டாங் கியற்றி
உணரா தான்போ லொருமீக் கொற்றவன்
புணரா தார்முற் பொச்சாப் பஞ்சி
வணங்குகொடி மருங்குல் வாசவ தத்தையைப்
பயந்தினி தெடுத்த பத்தினித் தெருட்டி
உயர்ந்த கோயிலு ளொடுங்கிய வொடுக்கமும்
நளிவரை யன்ன நளகிரி யேறி
ஒளிமணிக் கொடும்பூ ணுதயண குமரனைப்
பற்றுபு தம்பின் செற்றெனப் பகைகொண்டு
வெற்ற வேந்தன் வெகுண்டெழ வின்மையும்
இனையவை பிறவும் புனைநகர் வரைப்பினும்
கோயின் முற்றத்தும் வாயின் மருங்கினும்
வம்பலர் மொய்த்த வம்பலத் தகத்தும்
யானைத் தானத்து மருந்தவப் பள்ளியும்
தானைச் சேரியுந் தானெடுத் துரைக்கும்
பாடை யறியாத் தேசிகச் சேரியும்
ஓதுநர் சாலை யகத்து மோவாச்
சூதுபொரு கழகத் தருகலுந் தோமில்
நல்லதுந் தீயது மறிந்தகத் தடக்கா
மட்டுமகிழ் மகளிர் துட்டச் சேரியும்
காரிகை பகருங் கருங்கடை மழைக்கண்
வார்கொடி மகளிர் வளநகர் வரைப்பினும்

---

45. உள் தாங்கு இயற்றி - வெளிப்படுத்தாமல்.
46. கொற்றவன் - பிரச்சோதனன்.
47. பொச்சாப்பு - தன்னுடைய சோர்விற்கு.
49. தெருட்டி - தெளியச் செய்து. 54. வெற்றம் - வெற்றி.
57. வம்பலர் - பரதேசிகள்.
60. தேசிகச்சேரி - பலதேயத்து வணிகர் இருக்கும் தெரு; "தேவ குலனுந் தேசிகப் பாடியும்" ந. 4 : 25.
62. அருகலும் - சமீபவிடத்தும்.
64. க. 40 : 81 - 2. மட்டுமகிழ் - கள்ளையுண்டுகளிக்கின்ற.
65. காரிகை பகரும் - தம்முடைய அழகை விற்கும். [யர்.
66. வார்கொடி - பூங்கொடி; சிலப். ப. 15. மகளிர் - பரத்தை

பி - ம். 1 பெட்டாங்கு.

குதிரைப் பந்தியுங் கோடிகர் வரைப்பினும்
மதிமயக் குறூஉ மறுகணி கடையினும்
நீர்த்துறைக் கரையினுங் கூத்துறை சேரியும்
மன்றுஞ் சந்தியு மொன்றுகண் டன்ன
ஊர்முழு துள்வழிக் கார்முழு துலாஅம்
கடுவளி வரவி னுடையாக் கற்பின்
நறுநுதற் பணைத்தோ ணங்கையை நம்மிறை
உறுவரை மார்பி னுதயணற் குள்ளத்
தருளொடும் போக்கிப் பொருளொடும் புணர்த்தமை
யாவிரு[1] மறைவி ரன்றெனின் மற்றிவன்
காவ லவ்வழிக் காணலெம் யாமென
மங்கையர் நாப்பண் மறவோ[2] ரெடுத்த
கம்பலைப் புறமொழி நன்பல கேட்டும்
கூற்ற வேழ மடக்கிய குமரற்குக்
காற்று மெரியுங் கலந்துகை கொடுப்ப
மயக்க மெய்தி மாணகர் மாந்தர்
கயக்க மின்றிக் கடையிடை தெரியார்
தம்முட் டாக்கிய விம்ம வெகுட்சியுள்
பொருமுர ணண்ணல் பூந்தா ரகலத்துத்
திருமக டன்னிற் றீரா தியைந்தனள்
இன்னு மவனே கன்னிரை கானத்துக்
காதலிற் காப்பத்[3] தீதில ளாகிப்
புக்கன ளவனொடு புனைபிடி யூர்ந்தெனத்
தொக்க மாந்தர் நற்பொருள் பொதிந்த
வாய்ப்புட் கொண்ட வலிப்பின ராகி
யாப்புள் ளுறுத்த வமைதிச் சூழ்ச்சியின்

---

67. கோடிகர் - ஆடைநெய்வோர்.
68. மறுகு - வீதி.
69. கூத்துறை சேரி-கூத்தர் இருக்கின்ற தெரு.
71 - 2. = க. 47 : 12, 69.
77. தண்டிப்பேமென்பது கருத்து.
உணர்ந்தும் (45) கேட்டும் (79) என்க.
80. கூற்றவேழம் : உ. 9 : 43. 83. கயக்கம் - கலக்கம்.
85. அண்ணல் - உதயணன். 91. வாய்ப்புள் - வாய்ச்சொல்.

பி - ம். 1 மறிவிர். 2 ருடுத்த. 3 தீதிலளாகிப்.

செறிந்த செய்கை யறிந்துமனத் தடக்கிச்
செறுநன் போலச் செல்வ வேந்தனும்
உறுநர் வேண்டு முள்பொருட் குடன்றொரு
மறுமொழி கொடுப்பி னல்லது மனத்தில்
துன்பாற் பட்டமை நன்பா னுனித்து
நூலிய னெறியினு மதியினுந் தெளிந்து
சொல்வேறு குறியொடு சுழன்றகத் தொடுங்கிய

(யூகி தன் படைவீரர்க்குக் கூறியவை)

பல்வே றுருவிற்றம் படைநரைப் பயிர்ந்து
பூவளங் கவினிய பொழிலுஞ் சேனை
மாகள வனத்து மன்னுயிர் நடுக்கும்
பணைப்பெருந் திரடோட் பகுவாய்க் கூரெயிற்
றிணைப்பெருங் காதி னிலங்குகுழை யணிந்த
சேடேந்து வனப்பிற் செழுமலர்த் தடங்கண்
மோடேந் தரிவை முற்றத்து முறைது
பனஞ்செறும் பன்ன பன்மயிர் முன்கை
நிணம்பசை கொண்ட நீளி நெடும்பற்
சாஅய் நீங்கிச் சார்ந்தோர் துட்கெனும்
பேஎ யுருவம் பெறவகுத் தெழுதிய
அழிசுவர் மண்டபத் தகவயி னிருள்
வழிபடர் வலித்த மந்திரக் கோட்டியுள்
வென்வேல் வேந்தனை விடுத்தனிர் சிறையென

97. துன்பாற்பட்டமை - துன்போடு பொருந்தின்மை. நுனித்தும் - கூர்த்தறிந்தும்.

100. தம் படைநரை - தம்முடைய சேனைவீரர்களை. பயிர்ந்து - ஒலிக்குறிப்பால் அழைத்து.

101-2. உச்சயினி நகரத்தைச் சார்ந்த மகாகாளவனத்தில்.

106. மோடு - பெரிய உடம்பு. அரிவை - காளி; "பிணர்மோட் டுருகெழு செலவின்" முருகு 50-51.

107. முன்கை மயிருக்குப் பனஞ்செறும்பு உவமம்; "பெண்ணை வன்செறும் பிற்பிறங் கிச்செறி, வண்ண வன்மயிர் வார்த்துயர் முன்கையன்" (கம்ப. கங்கை. 33.) செறும்பு, சிலாம்பென வழங்கும்.

108. நீளி - நீட்சி. 109. சாஅய் - மெலிவுற்று.

113. வேந்தனை - உதயணனை.

இன்னுரை யமிர்த மியைந்தவர்க் கீத்துத்
தான்செயப் படுபொரு ளாங்கவர்க் குணர்த்தி
ஊன்சேர் கடுவே லுதயண னீங்கிய
கான்சேர் பெருவழிக் கடத்தல் செல்லீர்
நாடு மலையுங் காடும் பொருந்திக்
கனிவளங் கவர்ந்து பதிவயிற் பெயரும்
[1] பனியிறை வாவற் படர்ச்சி யேய்ப்பப்
படையினுந் தொழிலினு நடைவே றியன்ற
உருவினு மியல்பினு மொருவிரும் பலரும்
கலிகெழு பண்டங் களைகலம் போல
வலிகெழு சிறப்பின் மதிலுஞ் சேனை
உள்ளகம் வறுமை யெய்திப் புல்லெனப்
பெருந்தவ முள்வழி விரும்புபு செல்லும்
பொருளும் போகமும் புகழும் போல
மறுவின் மணிப்பூண் மன்னவ னுள்வழிக்
குறுகுதல் குணனென வுறுநரை யொருப்படுத்
தேகச் செய்தபி னுறுபொரு ளுடிக்
கடவுட் பள்ளியுட் கள்ள வொழுக்கொடு
நெடுநகர் மாந்தர் நெஞ்சுணத் திரிதரும்

---

114. இயைந்தவர்க்கு - மனங்கலந்து உழைத்த வீரர்க்கு ; இன்னுரையமிழ்தம் ஈத்தென்க.

116 - 7. உதயணன் எந்த வழியாகச்சென்றனனோ அந்த வழியே நீவிர் செல்லற்க. [லுதல்.

120. இறை - சிறை. வாவல் - வௌவாற்பறவை. படர்ச்சி - செல்

119 - 20. வேறிடஞ்சென்று கனிகளைக்கவர்ந்து தம்முடைய இடத்திற்குச் செல்லும் வௌவால்களை யொப்ப ; "பழுமர முள்ளிய பறவையின்" (பொருந. 64) என்பதையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

123. பண்டங்கள் களையப்பட்ட கப்பலைப்போல.

125. புல்லென - பொலிவிழப்ப.

124 - 5. உஞ்சேனை புல்லென.

126 - 9. தவமுள்ள இடத்தைப் பொருள் முதலியன அடைதல் போல உதயணனுள்ள இடத்தை நீவிரடைதல் குணமென்றான்.

130. பொருள் - காரியம்.

132. மாந்தருடைய நெஞ்சத்தைக் கவர்தற்கு.

பி - ம். [1] பனிச்சிறை.

ஒட்டிய தோழரொடு கட்டுரை விரும்பி
மூன்றிடம் பிழையா வான்ற நுண்ணெறிப்
பண்ணவர் முனிவர் பட்டதும் படுவதும்
எண்ணுவ ராயி னேதந் தருமென
நினைத்தோன் பெயர்ந்து நெறியிற் றீர்ந்தவர்
வினைத்துக ளறுக்கும் வேட்கை யல்லது
வேண்டுவ வுரையா மூங்கைக [1] ளாமெனும்
நீதியது நேர்மை யுளனா யோதிய
சமைய விகற்பஞ் சாலக் காட்டி
அசைவி லாள ரருநெறி வலித்தது
மருண்டுந் தெளிந்தும் வந்தவை [2] பிதற்றிப்
பெயரு மியற்கைப் பெற்றியிற் றிரியான்
பூசுபு புலரா யாக்கையொடு பெயரிய
தோழ ரோடு மிகப்பல கழறி
வேற்றோன் போல மாற்றம் பெருக்கிப்

---

134. மூன்றிடம் - மனம் வாக்குக்காயம்.

135. பண்ணவர் முனிவரென்பன ஒரு பொருளினவாயினும் மத வேறுபாடு பற்றி இங்கே வேறுவேறாகக் கொள்ளுதற்குரியன.

135 - 6. முனிவர் எண்ணுவராயின், அவ்வெண்ணம் நமக்கு ஏதந்தருமென்று.

137. நினைத்தோன் - நினைத்தோனாகி. நெறியிற் றீர்ந்தவர்-உலக [ஒழுக்கத்தை விட்ட இப்பெரியோர்.

138. வேட்கையல்லது - வேட்கையை யுடையராயிருத்தலன்றி.

139. ஆம் : அசை,

நெறியிற் றீர்ந்தவர் (137) மூங்கைகளாவார் (139.)

140 - 48. தன்னையும் தன் செயலையும் ஆங்குள்ள முனிவர்கள் அறிந்து கொள்ளாதபடி யூகி தக்க சிலவற்றை அவர்களுடன் மொழிந்து பின்பு நிகழ்த்த வேண்டியவற்றைத் தோழர்களுக்குக் குறிப்பாகக் கூறல் [முதலியன.

140. உளனாய் - யூகி உடையவனாகி.

142. அசைவிலாளர் - சலிப்பின்மையையுடைய வீரர். வலித்தது-துணிந்ததை.

144. பெயர்ந்து செல்லும் இயல்பினின்றும் வேறுபடாமல்.

145. பூசுபு-வேற்றுவண்ணங்களைப் பூசிக்கொண்டு. பெயரிய-வந்த.

147. வேற்றோன்போல - தான் அயலான் போலவே பிறர்க்குத் தோற்றும்படி. மாற்றம் - விடை.

பி - ம். 1 ளாயினும். 2 பிதற்றிய.

படிவப் பள்ளியுட் பகலிடங் கழித்துக்

(உதயணன்பால் மெய்யன்புள்ள ஒரு குயவனியல்பு)

குடிகெழு வளமனை குழீஇய செல்வத்துக்
கன்னி நன்மதிற் கடிக்கோ சம்பி
மன்முத லோருந் தொன்முதல் பிழையாது
பெருங்கலக் கைவினைப் பேறது பெற்றுத்
தானகந் தாங்கிய வூனமில் செல்வின்
இட்டிடர்ப் பொழுதி னின்ப நீக்கிக்
கட்டழற் புகூஉஞ் சுட்டுறு கோல்போல்
நட்டை யிட்டு நாட்டகந் துறந்துதம்
பெருமகற் கொள்ளும் வேட்கையிற் போந்த
குயமக னில்லங் குறுகின னூகி
ஆங்கினி திருந்த வருந்தவ வொழுக்கிற்
சாங்கிய மகளைப் பாங்கினிற் [1] றரீஇ
நிகழ்ந்ததை யெல்லா நெறியிற் கூறிப்
புகழ்ந்த வண்ணம் போகுதல் பொருளெனப்
பசியு மழலும் பரிவற வெறியும்
மிசைமருந் தியன்ற விசைவுகொ ளின்பத்துத்
தருப்பணக் கிழியுந் தண்ணீர்க் கரகமும்
ஒருப்படுத் தமைத்துப் புறப்படப் போக்கி
அமரிய நண்பிற் றமருளுந் தமரரம்

150 - 52. உதயணனுடைய முன்னோர் காலந்தொடங்கி அரண்மனைக்குக் கலஞ்செய்து கொடுக்குமுரிமை பூண்ட குயக்குடியிற் பிறந்து.

153. தானகம் - தானம்; பதவி. செல்வு - செல்வம்; "விரைந்தாளு நல்குரவே செல்வே" தேவாரம். [யிற்றுமாம்.

156. நட்டை - உதயணனுடைய நட்பை; நட்டம், நட்டென்று

155-6. "சுட்டுக்கோல் போல வெரியும் புகுவரே, நட்டா ரெனப்படுவார்" (நாலடி. 208) என்பதன் கருத்து இவ்வடிகளில் அமைந்துள்ளது.

158. யூகி குறுகி. குயமகன் : சாதகனென்போன்.

160. தரீஇ - வருவித்து. 163. அழல் - நீர்வேட்கை.

164. மிசைமருந்து - உண்ணும் மருந்து.

165. தருப்பணக் கிழி - அவல் முடிப்பு.

164 - 5. = ௨. 9 : 251. 167. அமரிய - விரும்பிய.

பி - ம். 1 றழீஇ.

யவனப் பாடி யாடவர் தலைமகன்
தவனியப் பைம்பூட் டம்மிறைக் கியன்ற

(எந்திரத் தேர்)

கண்மணி யன்ன திண்ணட் பாளன்
கையிற் புனைந்த கழிநுண் சிறப்பொடு
வையகத் தியங்கும் வெய்யவ னூரும்
தேரி னன்ன செலவிற் றாகி
யாவரு மறியா வரும்பொறி 1 யாணியின்
இருப்புப் பத்திர மிசையக் கவ்வி
மருப்புப் பலகை மருங்கணி பெற்றுப்
பூணி யின்றியும் பொறியி னியங்கும்
மாண்வினை வைய மனத்தி 2 னொய்ப்பக்
கடுப்புந் தவிர்ப்புங் கண்டன னாகிப்
படைத்துப் பெயர்த்தற்குப் பாடமை வித்தகர்க்
கண்ணினுங் கையினுந் திண்ணிதி னடக்கி
எண்ணிய கருமத் தன்றியும் யூகி
சிறைவினை நீக்கி யிறைவினை யிரீஇக்
கொடிக்கோ சம்பி புகுத்துதற் கிருந்து
கோடித் தன்ன கோடுசால் வையத்து
மூவகை யோகமுஞ் சீரமைத் திரீஇ

168. யவனப்பாடி - யவன தேசத்திலிருந்து வந்துள்ள கம்மியர் [தெரு.
169. தவனியம் - பொன்.
172. வெய்யவன் - சூரியன்.
174. ஆணியின்-ஆணியால். 175. பத்திரம் - தகடு.
177. பூணி - பூண்டு ஈர்க்கும் எருது முதலியவை. பொறி - எந்திரம்; "பூணி யின்றிப் பொறிவினைக் கொளீஇ" என்பர் பின்; உ. 9 : 15.
178. ஒய்ப்ப - செலுத்தி வந்து கொடுக்க; புறநா. உகூ : 6.
179. கடுப்பு - விரையச் செலுத்தல். தவிர்ப்பு - நிறுத்தல். காணுதல் - செய்தல்.
180. படைத்து - பூட்டி. வித்தகர் - திறமையுடையாரை. [மாம்.
181. கண் - முன்னிடம்; கை - பக்க இடம்; கண், கை உவமையு
183. சிறைவினை-உதயணன் சிறை யிருத்தலை. இரீஇ - இருத்தி.
184. இருந்து - நெடுநாள் ஆலோசித்து முயன்று.
185. கோடித்தல் - புதிதாக அலங்கரித்துச் செய்தல்.
186. மூவகை யோகம் - மூன்றுவகைப் பொருள்கள் கூடிய,

பி - ம். 1 யாணியின். 2 னொப்ப.

எந்திர வூர்தியொ டேனவை யியற்றி
மந்திர மாகத் தந்தம ருளரெனிற்
போத்தந் தல்லது போதாய் நீயென
1 ஆத்த வாரமோ டவனவ ணொழியத்

(யூகி புறப்பாடு)

தெய்வப் படைக்கலங் கையகத் தடக்கி
வத்தவ னன்ன டத்திசை முன்னி
வித்தக வாணி வேண்டுவயின் முறுக்கி
விண்ணகத் திழிந்து விமான மேறி
மண்ணகத் தியங்கன் மனத்தின் வேண்டிய
பூந்தார் மார்பிற் புரந்தர குமரனிற்
போந்தனன் மாதோ புறநகர் கடந்தென்.

அ—யூகி போதரவு முற்றிற்று.

---

மருந்து; இது திரியோக மருந்தென வழங்கும்; "தீர்தற் குரிய திரி யோக மருந்திவை" நீல. தரும. 116.

188. மந்திரம் - இரகசியம்.

189. போத்தந்தல்லது - அனுப்பியல்லது. என - என்று யவனப்பாடித் தலைமகனுக்கு யூகி கூறி. [தலைவன்.

190. ஆத்த : உ : 11 : 75. வாரம் - அன்பு. அவன் - யவனர்

196. புரந்தரகுமரனின் - இந்திரகுமாரனைப்போல.

பி - ம். 1 ஆர்த்த.

---

## கூ—யூகி சாக்காடு.

(வழியின் இயல்பு)

புறநகர் போந்த பின்றைச் செறுநீர்
அள்ளற் படப்பை யகனிலந் தழீஇப்

---

கூ—யூகி சாக்காடு.

[யூகி, எந்திரத்தேரை யூர்ந்து புட்பக நகரத்தை அடைதலும், உதயணன் காமபரவசனாகி யிருத்தலை இடபகனாலறிந்து இராசகாரியத்தை மேற்கொள்ளும்படி அவனைச் செய்வித்தற்பொருட்டுச் சில காரியங்களை மறைந்திருந்து செய்யக்கருதித் தான் இறந்துபோனதாகப் புலப்படுத்தி ஒளித்தலும் பிறவும் இதனால் அறியலாகும்.]

2. படப்பை - தோட்டம்.

புள்ளொலிப் பொய்கையொடு பூந்துறை மல்கி
வான்கண் டன்ன வனப்பின வாகி
மீன்கண் டன்ன வெண்மணல் விரிந்த
கானும் யாறுந் தலைமணந்து கழீஇ
அரும்பணி புன்னையுஞ் சுரும்பிமிர் செருந்தியும்
இலையணி யிகணையு மின்னவை பிறவும்
குலையணி கமுகொடு கோட்டெங் கோங்கு
பழன மடுத்த கழனிக் கைப்புடைப்
[1] போர்மா றட்ட பூங்கழன் மறவர்
தேர்மா ரோட்டித் திண்ணிதி னமைத்த
கோட்ட மில்லா நாட்டு வழிவயின்

(யூகி புட்பக நகரை அடைதல்)

ஆணி வைய மாரிருண் மறையப்
பூணி யின்றிப் பொறிவிசைக் கொளீஇ
உள்ளிய வெல்லை யோட்டிக் கள்ளமொ
டொடுங்குந் தானமுங் கடும்பகற் கரக்கும்
ஆளவி காடு மருஞ்சுரக் கவலையும்
கோளவிக் தொடுங்கிய குழூஉக்குடிப் பதியும்
வயவர் நாடுங் கயவர் கானமும்
குறும்புங் குன்றமு மறிந்துமதி கலங்காது

---

5. வெண்மணலுக்கு விண்மீன்கள் உவமை.

8. இகணை - ஒருமரம்; "கணைக்கா லிகணையுங் கமுகும் வாழையும்" (நு. 19 : 38); "விசும்புற நிவந்த மாத்தா ளிகணைப், பசுங்கேழ் மெல்லிலை" அகநா. கஙக.

9. கோட்டெங்கு - குலைகளையுடைய தென்னை; "கோட்டெங் கிற் குலைவாழை" பட்டின. 16.

10. பழனம் - மருதநிலம். கைப்புடை - பக்கம்.

11. மாறு - பகை. 13. கோட்டம் - வளைவு.

14. ஆணி வையம்: 28; வையம் - தேர். இருளில் வையம் மறையும்படி.

15. பூணி - பூணும் எருது முதலியவை. விசைக்கொளீஇ-வேகங் கொள்ளச்செய்து; உ. 8 : 177. 17. கரக்கும் - மறையும்.

18. ஆள் அவி - மனிதர்களில்லாத. கவலை - கவர்த்த வழி.

19. கோள் - கொள்கை. பதி - ஊர்கள்,

பி - ம். 1 போர்மாரட்டப்.

பகலு மிரவு மகலப் போக்கி
இருநாற் [1] றிருப திரட்டி யெல்லையுள்
அருநா லமைச்ச னயற்புற நிறீஇ
நட்புடைத் தோழ னன்கமைந் திருந்த
புட்பகந் தன்னைப் பொழுதுமறைப் புக்குப்

**(யூகி இடபகனைக் காணலும் அவன் உதயணன் செய்தியை வினவலும்)**

புறத்தோ ரறியா [2] மறைப்பமை மாயமொ
டாணி வைய மருப்பொறி கலக்கி
மாண வைத்து மகிழ்ந்தனன் கூடி
மாண்முடி மன்னன் [3] றோண்முதல் வினவிச்
சிரம மெல்லாஞ் செல்லிருட் டீர்ந்து
கரும மறியுங் கட்டுரை வலித்துத்
தோழனுந் தானுஞ் சூழ்வது துணியா
வெந்திறன் மிலைச்சர் விலக்குவனர் காக்கும்
மந்திர மாடத்து மறைந்தன னிருந்து

**(முன்பு நிகழ்ந்தவற்றை இடபகனுக்கு யூகி கூறல்)**

தன்றொழி றுணியாது தானத்தின் வழீஇக்
குஞ்சர வேட்டத்துக் கோளிழுக் குற்ற

---

23. நானூற்றுநாற்பதெல்லையுள்.

24. அமைச்சன் - யூகி. நிறீஇ - தேரை நிறுத்தி.

25. தோழன் - இடபகன். 26. பொழுதுமறை - மாலையில்.

28. ஆணிவையம் : 14. பொறி கலக்கி - பொறிகளை வேறுபடுத்தி.

30. மன்னன் - உதயணனுடைய. தோண்முதல் வினவி - தோள்களின் வன்மையை வினவி; இங்ஙனம் வினவுதல் அரசர் வழக்கம்; "வேந்தர் வேந்தன்றன், வரைத்தடந் தோளிணை வலியவோ வென்றான்" (கம்ப. சடாயுகாண். 18.) 32. வலித்து - நினைத்து.

34. மிலைச்சர் : க. 42 : 23 ; ௩. 26 : 74.

35. மந்திரமாடம்-இரகசியத்தைப்பேசுதற்கு இடமான மாளிகை.

36. தன் தொழில் - இராசகாரியம். தானத்தின் - தன் பதவியினின்றும்.

37. குஞ்சர வேட்டத்து - யானை விருப்பத்தால்; வேட்டம் - வேட்டையுமாம்; க. 32 : 29. கோள் - கொள்கை; 'கோளிழுக் குற்ற' என்றது, சிறையுற்றமையை.

பி - ம். 1 றறுபத்திரட்டி. 2 விறப்பமை. 3 ருண்முதல்.

வெஞ்சின வேந்தனை விடுத்தல் வேண்டி
வஞ்ச விறுதி நெஞ்சுணத் தேற்றி
உஞ்சையம் பெரும்பதி யொளிக்களம் புக்கு
மெய்ப்பேய்ப் படிவமொடு பொய்ப்பே யாகிப்
பல்லுயிர் மடிந்த நள்ளென் யாமத்துக்
கூற்றுறழ் வேழங் குணஞ்சிதைந் தழியச்
சீற்ற வெம்புகை செருக்க வூட்டிக்
கலக்கிய காலை விலக்குநர்க் காணாது
நாவாய் கவிழ்த்த நாய்கன் போல
ஓவா வவலமொடு காவலன் கலங்கிப்
பண்ணமை நல்யா ழின்னிசைக் கொளீஇய தன்
கண்ணயற் கடாத்துக் களிப்பிய றெருட்டின்
ஆழித் தடக்கை யற்ற மில்லென
வருமொழிக் கட்டுரை முகமன் கூறிநம்

---

38. வேந்தன்-உதயணனை. விடுத்தல் - சிறையினின்றும் நீக்குதலை.

39. வஞ்ச இறுதி - தன்னுடைய பொய்மரணத்தை.

40. ஒளிக்களம் - மறைவிடத்தில்.

42. மடிந்த - அயர்ந்து தூங்கிய; "ஊர்மடி கங்குல்" : (அகநா. ௪௬ : 2; சிலப். ௧௧ : 207.)  43. வேழம் - நளகிரியின்.

44. சீற்ற வெம்புகை - கோபத்தை உண்டாக்கும் வெவ்விய புகையை. செருக்க - மயங்கும்படி; "ஆனைதன் னிலைகண் டெய்தி யகிலிடும் புகையு மூட்டிச், சேனைமன் னகர ழித்துச் சிறைவீடின் கடனே யென்று, மானநல் யூகி யானைச் செவியின்மந் திரத்தைச் செப்ப, ஆனை தன் மதகம் பத்தி னருந்தளை யுதறிற் றன்றே" (உதயணகுமார. உஞ்சை, 85) என்பதனால், அகிற்புகை யூட்டியதுடன் யானைச்செவியில் யூகி மந்திரத்தைச் செப்பினனென்றும் தெரிகின்றது.

46. நாவாய் - கப்பல்; "கலங்கவிழ்த் தல்ல லுற்றான்", "மல்லன் மாக் கடலிடைக், கல்லெனக் கலங்கவிழ்த், தல்லலுற் றழுங்கிய, செல்வன்" (சீவக. 332, 572) ; "கலங்கவிழ்த்த நாய்கன்போல்" யா. வி.

47. காவலன்-பிரச்சோதனன். கலங்கி-கலங்க. [சூ. 86, மேற்.

48. இசைக்கொளீஇ - இசையை எழுப்பி.

49. தெருட்டின் - தெளியச்செய்தால்.

50. ஆழித்தடக்கை: விளி. அற்றம் இல்லென - சோர்வு இல்லை யாகு மென்று மந்திரிகள் பிரச்சோதனனுக்குச் சொல்ல,

பெருமகன் றன்னுழைப் [1]பிரச்சோ தனனிம்
மன்னுயி ருற்ற நடுக்க நீக்குதல்
இன்னியன் மான்றே ரேயற் கியல்பென
உதையண குமரனு முள்ளம் பிறழ்ந்ததன்
சிதைவுகொள் சீலந் தெளிந்தனன் கேட்டு
வீணை யெழீஇ வீதியி னடப்ப
ஆணை யாசாற் கடியுறை செய்யும்
மாணி போல மதக்களிறு படியத்
திருத்தகு மார்வ னெருத்தத் திவர
அண்ணன் மூதூ ரார்ப்பொடு கெழீஇ
மன்னவன் வாழ்க வத்தவன் வாழ்க
ஒலிகெழு நகரத் துறுபிணி நீக்கிய
வலிகெழு தடக்கை வயவன் வாழ்கெனப்
பூத்தூய் வீதிதோ றேத்தின ரெதிர்கொள
அவந்தி யரச னுவந்தனன் விரும்பிப்
பொலிவுடை யுரிமையொடு பரிசனஞ் சூழப்
புலிமுக மாட மலிர வேறி
மையல் வேழ மடக்கிய மன்னனை
ஆணை கூறு தருண்மொழி விரவாது
காண லுற்றனன் காத லிதுவெனச்

51-2. நம்பெருமகன் தன்உழை - உதயணனிடத்தே. பிரச்சோதனன்: எழுவாய்.

54. ஏயற்கு - ஏயர்குடியிற்பிறந்த உனக்கு. என-என்றுசொல்லி விடுப்ப.

55. பிறழ்ந்து - வேறுபட்டு; பகைமை நீங்கி.

56. சீலம் - இயல்பை.

58. ஆசாற்கு - ஆசிரியனுக்கு. அடியுறை - தொண்டு.

59. மாணி - மாணுக்கன்.

60. உதயணன் அதன்பிடரியில் ஏற. [மார்.

63. பிணி - யானையாலுண்டாகிய துயர். 67. உரிமை - தேவி

68. புலிமுகமாடம் - புலிபோன்ற வடிவமைந்த மாடம்; புலியுருவத்தை முகப்பிற் செய்துவைத்துள்ள மாடமுமாம்; "கொடிப்புலி முகத்து வாயிற் கோட்டையுட் கொண்டு வந்தான்" (உதயணகுமார. உஞ்சை. 100); "மாடத்துக் கைபுனை கிளர்வேங்கை" (பரி. ௧௦: 45-6.) மலிர - நிறைய. 69. மன்னனை - உதயணனை.

பி - ம். [1] பிரச்சோதனனிடம்.

சேனை வேந்தன் றனைத்து விளிப்ப
அறியாப் பாழியு மறியக் காட்டிக்
குறியாக் கூற்றத்தைக் கோள்விடுங் கொல்லெனச்
சிறியோ ரஞ்சப் பெரியோர் புகல
ஆனை யேற்ற மறியக் காட்டி
இருட்டெறு சுடரி னன்ன விறைவன்முன்
வருட்டுபு நிறுத்த மன்னனை நோக்கித்
தெருட்டுதற் காயவித் தீக்குறி வேழம்
யாதிற் சிதைந்ததஃ தறிய வுரைக்கென
ஏதில் வேந்தன் காதலின் வினவ
வேத முதல்வன் விளம்பிய நூல்வழி
மாதங்க மென்று மதித்தலிற் பெற்ற
பெயரது மற்றத னியல்பறிந் தோம்பி
வெருட்டலுந் தெருட்டலும் விடுத்தலும் விலக்கலும்
பணித்தலு முயர்த்தலுந் தணித்தலுந் தாங்கலும்
தமர்பிற ரென்ப தறியுந் திறனும்
நீல முண்ட நூலிழை வண்ணம்
கொண்டது விடாமைக் குறிப்பொடு கொளுத்தல்
பண்டிய றென்னூற் பாகியல் பாதலின்
முதற்கட் பிணித்தோர் சிதைப்பில் விடாது
கொண்டதை யிதுவெனச் சண்ட வேந்தற்
கெதிர்மொழி கொடீஇக் கதிர்முக மெடுத்தோன்

---

72. பிரச்சோதனன் தன்னிடத்தே அழைப்ப.

73. பாழி - இடம்.   74. கூற்றத்தை யென்றது களகிரியை.

75. புகல - விரும்ப.

77. சுடரினன்ன - சூரியனையொத்த. இறைவன் - பிரச்சோதனன்.

78. வருட்டு - வயமாக்கி.   79-80. க. 32 : 28.

81. வேந்தன் - பிரச்சோதனன்.

88 - 9. நீலநிறமுற்ற நூலிழை வேறுநிறம் கொள்ளாமையை, "மூர்க்கன்றான், கொண்டதே கொண்டு விடானுகு மாகாதே, உண்டது நீலம் பிறிது" (பழ. 168) என்பதனுலுமுணர்க; சீவக. 2003. யானையை அதன்குணமறிந்து பழக்கவேண்டுமென்பது கருத்து.

90. பாகியல்பு - பாகனுடைய இலக்கணம்.

93. கொடீஇ - கொடுத்து. எடுத்தோன் - உதயணன்.

தகைமலர்ப் படலைத் தந்தை தலைத்தாள்
முகைமலர்க் கோதை முறுவற் செவ்வாய்க்
கன்னி யாயத்துப் பொன்னணி சுடர
வீசுவளிக் கொடியின் விளங்குபு நின்ற
வாசவ தத்தை மதிமுகத் தேற்றிச்
சிதரரி மழைக்கண் மதர்வை 1நோக்கம்
உள்ளகத் தீர வள்ளற் பட்ட
போதகம் போலப் போத லாற்றுக்
காதற் குமரனைக் கருமக் காமத்துக்
கணிகை திறவயிற் பிணிபிறர்க் குணர்த்தி
இகழ்வொடு பட்ட புகழ்கா ணவையத்து
மல்லன் மூதூர் மலிபுனல் விழவினுட்
சில்லரிக் கண்ணியொடு சிறுபிடி யேற்றிச்
செயற்படு கருமத் தியற்கை யிற்றெனை
இப்பா லிறைமகற் போத்தந் தப்பால்
நிகழ்ந்ததை யறிதந் தொளித்தன னாகி
வேறல் செய்கை வேந்தற் குண்மை
தேறன் மாக்களைத் திறவிதிற் காட்டிப்
பழந்தீர் மரவயிற் பறவை போலச்
செழும்பல் யாணர்ச் சேனையின் னொழிய
நம்பதி புகுதரக் கங்குற் போத்தந்

---

94. தலைத்தாள் - முன்னே.

98. வாசவதத்தையின் முகத்தே தன் பார்வையைச் செலுத்தி.

100. ஈர - அறுப்ப. அள்ளல் - சேறு. 93-100. = க. 32 : 31-3.

101. போதகம் - யானை. 102. கருமக்காமம் - பொய்க்காமம்.

103. கணிகை - நருமதை. திறவயின் - திறத்தில். பிணி - காமநோய்.

105. புனல்விழவு - நீர்விழவு.

108. இப்பால் - இங்கே. போத்தந்து - புகச்செய்து.

109. ஒளித்தனனாகி - யான் ஒளித்து.

110. வேறல் செய்கை - வெல்லுதலைச்செய்தல்.

111. தேறன்மாக்கள் - தன்னால் தெளியப்பட்ட வீரர்.

112. பழந்தீர்ந்த மரத்தினின்றும் வேறிடஞ் செல்லும் வாவற் பறவையைப்போல; உ. 8 : 119 - 20; புறநா. உ0கூ: 7 - 10.

114. போத்தந்து - புகச்செய்து.

பி - ம். 1 நோக்கவும்.

தியான்பின் போந்தன னிதுவென வவன்வயின்
ஓங்கிய பெரும்புகழ் யூகி மேனாட்
பட்ட வெல்லாம் பெட்டாங் குரைப்பக்

(இடபகன் யூகியைப் பாராட்டல்)

கெட்ட காலை விட்டன ரென்னாது
நட்டோ ரென்பது நாட்டினை நன்றென
உறுதுணைத் தோழன் மறுமொழி கொடுத்தபின்

(யூகி உதயணன் செய்தியை வினவுதல்)

தன்னுரை யொழித்து நுண்வினை யமைச்சனைப்
பெயர்ந்த காலைப் பெருமகற் கிப்பால்
உயர்ந்த கானத் துற்றதுண் டெனினதூஉஞ்
சின்மொழி மாதரைச் சேர்ந்ததற் கொண்டு
நிலையது நீர்மையுந் தலையது தன்மையும்
உள்விரித் துரையென வூகி கேட்ப

(இடபகன் நிகழ்ந்தவற்றைக் கூறல்)

அடலரும் பல்படை யிடபக னுரைக்கும்
அழகமை மடப்பிடி யைந்நூ றோடி
அழனிலை யத்தத் தசைந்துயிர் வைப்பத்
தடம்பெருங் கண்ணியொடு நடந்தனர் போந்து
கடும்பகல் கழிதுணைக் காட்டகத் தொடுங்கி
1 வெங்கதிர் வீழ்ந்த தண்கதிர் மாலை
வயந்தக னென்பால் வரீஇய போதரத்
தயங்குமலர்த் தாரோன் றனிய னாகி
மாலை யாமங் கழிந்த காலை

---

115. அவன் - இடபகன். 117. பட்ட - உண்டாயின.
118. குறள், 1293 ; நாலடி. 113, 283 - 4 ; பழமொழி, 59.
120. தோழன் - இடபகன். 121. அமைச்சனை - இடபகனை.
123. உற்றது - நேர்ந்த துன்பம். அதூஉம் - அதுவும்.
125. = 209. அமைச்சனை (121)க் கேட்ப (126.)
128. பிடி - பத்திராவதி. ஐந்நூறு - ஐந்நூறெல்லை ; 'ஐந்நூறு' என்றது மிகுதிபற்றி.
129. அழல் நிலை அத்தத்து - வெப்பம் நிலைத்த அரியவழியில். உயிர்வைப்ப - உயிரைவிட ; 239.
131. கழிதுணை - நீங்குமளவு. 133. வரீஇய - வருதற்கு.

பி - ம். 1 வெண்கதிர்.

வெஞ்சொல் வேட்டத் தஞ்சுவரு சீற்றத்துச்
சலம்புரி நெஞ்சிற் சவரர் புளிஞர்
கலந்தன ரெழுந்து கானந் [1] தெரிவோர்
ஊனென மலர்ந்த வேனி லிலவத்துக்
கானத் தகவயிற் கரந்தன னிருந்த
அரச குமரனை யகப்படுத் தார்ப்ப
வெருவுறு பிணையின் விம்முவன னடுங்கும்
அஞ்சி லோதியை யஞ்ச லோம்பென
நெஞ்சுவலிப் புறுத்து நீக்குவன னிறீஇ
விலக்கவண் கொளீஇ வில்லின் வாங்கி
ஓரோர் கணையி னுராஅய் வந்தவர்
ஏழேழ் மறவரை வீழ நூறலின்
ஆழ நெஞ்சமொ டச்ச மெய்திப்
பட்டவர் தந்தமர் பகையி னெருங்கிக்
கட்டெரி கொளீஇக் கரந்தன ரெனலும்

(யூகி மூர்ச்சித்தலும் பின்பு தெளிந்து கேட்கத் தொடங்கலும்)

ஒட்டிய தோழற் குற்றதை யறியான்
பகையடு தறுக ணிமையகன்று பிறழ
உரைபெயர்த்துக் கொடாஅன் யூகி மாழ்க
வரைபுரை மார்பனை வாங்குபு தழீஇக்
கதுமென வுரைத்தது கவன்றன னாகி

139. இலவம் - இலவமரம். 141. அகப்படுத்து - உட்படுத்தி.
143. அஞ்சிலோதியை - வாசவதத்தையை.
145. விலக்கு - விலக்குதலை. 146. உராஅய் - பெயர்ந்து.
149. பட்டவர்தம் தமர் - இறந்தோருடைய உறவினர்.
150. தீயை மூட்டிவிட்டு மறைந்தாரென்று இடபகன் கூறியவுடன்.
151. உற்றதை - பின்பு நிகழ்ந்ததை.
153. மாழ்க - மயங்க.
150 - 53. "தொடிகடவழ் வீங்குதிர டோளிறுக யாத்துக், கடிகடவழ் குழன்மகளிர் கசிந்துமனங் கரியக், கொடிகடவழ் மாடநகர்க் கொல்லவென மாழ்கி, இடிகடவழ்ந் திட்டபட நாகமென வீழ்ந்தான்" (சீவக. 1798) என்பது இவ்வடிகளுடன் ஒப்பு நோக்கற்பாலது.
155. கதுமெனவுரைத்தது - மெல்லச் சொல்லாமல் விரைவாகச் சொன்னதற்கு.

பி - ம். 1 திரிவோர். 2 யிலக்கவணே.

எதிர்மலர்க் குவளை யிடுநீர் சொரிந்து
சீதச் சந்தனந் தாதோ டப்ப
ஏஎல் பெற்றெழுந் [1]திருந்தன னுரைக்கென
மாஅ லன்ன [2]மன்னுயிர் காவலன்
ஆட்டிடைப் பாயு மரிமாப் போல
வேட்டிடைப் பாய்தலை வெரீஇ யோடாப்
பஞ்சி மெல்லடிப் பரல்வடுப் பொறிப்ப
வஞ்சி மருங்குல் வாடுபு நுடங்க
அஞ்சுபு நின்ற பைந்தொடி மாதரைச்
சிறுவரை கடாஅய்ச் செல்ல னீங்கக்

(பின்பு நிகழ்ந்தவற்றையும் உதயணனது இயல்பையும்
இடபகன் கூறல்)

கறுவுகொ ளாளர் மறுவுவந் தோடி
[3] உறுவுகொ ளுரோணியொ டுடனிலை புரிந்த
மறுவுடை மண்டிலக் கடவுளை வளைத்த
காரந்துறை யூர்கோள் கடுப்பத் தோன்றி
நிரந்தவர் நின்ற பொழுதிற் பெயர்ந்து
குறிவயிற் குறித்தியாஞ் செல்லு மாத்திரை

---

157. சோகத்தைப் போக்குதற்குச் சந்தனத்தை அப்ப; உ. 10: 120. [கேட்ப.

158. ஏஎல் - உணர்ச்சி; சீவக. 302, ந. உரைக்கவென்று பூசி

159. மாஅல் அன்ன - திருமாலை யொத்த; "மாஅல்" என்பதே இயற்பெயரென்பர் சேனாவரையர். காவலன் - உதயணன்.

161. வேட்டிடை - வேடச்சாதியினிடையே.

164. வாசவதத்தையை. 165. சிறுவரை - சிறிதுதூரம்.

166. கறுவுகொளாளர் - வேட்டுவர். மறுவுவந்து - மீண்டு வந்து.

167. உறுவு - உறுதல்; சேர்தல். உரோணி - உரோகிணி.

168. சந்திரனை வளைத்த.

167 - 8. = க. 47: 212 - 3; "விண்ணூர்பு திரிதரும் வீங்கு செலன் மண்டிலத்து, முரண்மிகு சிறப்பிற் செல்வனொடு நிலைஇய, உரோகிணி நினைவனள் நோக்கி" நெடுநல். 161 - 3.

169. ஊர்கோள் - பரிவேடம். 167 - 9. சீவக. 1098.

170. அவர் - வேட்டுவர்.

பி - ம். 1 இருந்தனனெனவுரைக்கென. 2 மன்னுயிரந்தவன். 3 உருவுகொளோணி.

அறிவி னாடி யரும்பொரு ளுண்டென
விரைமுதல் கட்டிய விரும்பி னிமிழ்ப்பின்
உரைமுதல் காட்டி யுளமை கூறி
நின்ற பொழுதிற் சென்றியாந் தலைப்பெய
எந்திற மறியா வேதிலன் போல
வெந்திறல் வேந்தனு மவரொடு விராஅய்
ஓட லாற்றா னாகி யொருசிறை
ஆடமைத் தோளியோ டகன்றன னிற்ப
வேட்டுவ ரகலக் கூட்ட மெய்திக்
கரும நுனித்த கடுங்க ணாண்மை
உருமண் ணுவாவி னூரகம் புகீஇப்
போகப் பெருநுகம் பூட்டிய காலை
மாக விசும்பின் மதியமு ஞாயிறும்
எழுதலும் படுதலு மறியா வின்பமொ
டொழுகுபுன லகழினை யுடையெனக் கிடந்த
முழுமதி னெடுங்கடை முதற்பெரு நகரம்
தாரணி யானை பரப்பித் தலைநின்
1 ருருணி யரச னாள்வது மறியான்
தன்னுயி ரன்ன தம்பியர் நினையான்
இன்னுயி ரிடுக்க ணின்னதென் றறியான்
அவையுங் கரணமு மவைவகுத் திருவான்
அந்தி மந்திரத் தருநெறி யொரீஇத்

---

172. அரும்பொருள் - யாம் புதைத்து வைத்திருக்கும் அரிய [பொருள்.
174. உளமை - உள்ள தன்மை.
175. நின்றபொழுதில் - உதயணன் நின்ற காலத்தில்.
176. எம் திறம் - எம்முடைய திறத்தை. ஏதிலன் - அயலான்.
178. ஓடுதலைச் செய்யானாகி.
182. ஊரகம் - சயந்திநகரத்துள்.
183. பெருநுகம் - பெரியபாரம்.
185. எழுதல் - உதித்தல். படுதல் - அத்தமித்தல்.
184 - 5. = சு. 2 : 87 - 8, அடிக்.
187. முழுமதில் : தொல். புறத். சூ. 10, ந. ; நகரம் - கோசம்பியை.
190. தம்பியர் - பிங்கலகடகரை.
193. முக்காலங்களிலும் செய்தற்குரிய நியமங்களை ஒழிந்து.
பி - ம். 1 ருருணியாசான்.

தந்தையொ டொறுக்கப் படாஅன் சிந்தை
அகனுணர் வில்லா மகனே போலத்
தன்மனம் பிறந்த வொழுக்கின னாகிப்
பொன்னகர் தழீஇய புதுக்கோப் போலச்
செவ்வியுங் கொடாஅ னிவ்வியல் புரிந்தனன்
அண்ண லாதலி னசைவில னென்னத்
தன்னமர் தோழன் பன்னின னுரைப்ப

(சாங்கியத்தாயைக்கண்டு யூகி பின் நிகழ்த்த வேண்டியவற்றைக் கூறல்)

வேகந் தணியா வெஞ்சின நெடுவேல்
யூகந் தாயண னுறுவிலன் கேட்டு
முறுவல் கொண்ட முகத்தின னாகிப்
பெறுக போகம் பெருமக னினிதென
அறுவகைச் சமயத் துறுபொரு ளொழியாது
பன்னுபு தெரிந்த பழியறு வாய்மொழித்
தொன்மூ தாட்டியைத் துன்னத் தரீஇத்
தருமத் தியற்கையுங் கருமக் கிடக்கையும்
தலைமைய தன்மையு நிலைமைய நீர்மையும்
வேறுவே றாகக் கூறுகூ றுணர்த்தி
இதுவென் வலிப்பென வதுவவட் குணரக்
கூறுதல் புரிந்த குறிப்பின னாகி
அகலா தோரையு மகல்கென நீக்கி
உம்மைப் பிறப்பிற் கொண்டுஞ் செம்மற்குத்
தாயோ ரன்ன தகையினி ராதலின்
மேயோர்க் கல்லது மெய்ப்பொரு ளுணர்த்தல்

---

194 - 5. தந்தையால் ஒறுத்து நல்வழியில் நிறுத்தப்படாத ஒரு மகனைப்போலவும்.

197. புதுக்கோ - இந்திர பதவியைப் பெறுதற்குச் சென்ற நகுட அரசன்.

198. செவ்வியும் - சமயத்தையும்.

199. அசைவிலன் - யான் புடை பெயர்ச்சியில்லாதிருக்கின்றேன்.

206. பன்னுபு - ஆராய்ந்து. 207. தரீஇ - அழைத்து.

209. = 125.

211. என் வலிப்பு - என்னுடைய துணிவு.

216. மேயோர் - மனங்கலந்து விரும்பிப் பழகியவர்.

ஏதில் பெரும்பொரு ணீதியு ளின்மையின்
தெரியக் கேட்கென விரியக் காட்டி

(இனியவர் கடமை இன்னவென்பது)

அற்றங் காத்தலி னுண்மை போலவும்
குற்றங் காத்தலிற் குரவர் போலவும்
ஒன்றி யொழுகலி னுயிரே போலவும்
நன்றி யன்றிக் கன்றியது கடிதற்குத்
தகவில [1] செய்தலிற் பகைவர் போலவும்
இனையன பிறவு மினியோர்க் கியன்ற
படுகட னதியிற் பட்டது நினையான்
[2] தொடுகழற் குருசில் வடுவுரை நிற்ப
இன்ப வளற்று ளிறங்கின னதலின்
துன்பந் துடைத்த தொழிலே போல
அவல மொழிப்பி யவன்வயிற் றிசையா
இகலடு பேரா ணிலாவா ணத்தவன்
உகந்துண் டாடி மகிழ்ந்தபி னொருநாள்
வாலிழை மாதரை மன்னவ னகல்விடைக்

---

217. ஏது - குற்றம்; "வருமேதற வென்பால் வைத்த, ஒரு பேதை" (தண்டி. சூ. 22, மேற்.) 218. கேட்க என.

219. அற்றம் காத்தலின் - சோர்வு வாராமற் காத்தலின்.

220. குரவர் - தாய்தந்தையர்; ஐங்குரவருமாம்.

224. பிறவுஞ் செய்தலென ஒருசொல் வருவிக்க. இனியோர் - நண்பினர்.

225. படுகடனும். ஆதியில் - முதலில்.

226. வடுவுரை நிற்ப - பழிமொழி அழியாது நிற்ப; "கெடுவ லெனப்பட்டக் கண்ணுந் தனக்கோர், வடுவல்ல செய்தலே வேண்டும் - கெடுவரை, முற்றுநீ ராழி வரையகத் தீண்டிய, கற்றேயுந் தேயாது சொல்" பழ. 394.

227. இன்ப அளற்றுள் - சிற்றின்பமாகிய சேற்றில்; 98-101.

228. துன்பத்தை முன்னமே துடைத்த.

229. ஒழிப்பி - ஒழித்து. திசையா - மயங்காமல்.

230. இலாவாணம் = இலாவாணகம் - ஒருநகரம்; அதனைச் சார்ந்த சோலையுமாம்.

232. மாதரை - வாசவதத்தையை. உதயணன் நீங்கிய பொழுது.

பி - ம். 1 செய்தொழிற். 2 கெடு.

கோலக் கோயில் கூடோரிக் கொளீஇப்
பொய்ந்நில மருங்கிற் போத்தந் தென்வயிற்
கண்ணெனத் [1] தருதல் கடனெனக் கூறி
இன்பந் துடைத்தவற் கிறைக்கடம் பூட்டுதல்
[2] நிங்கட னெமென நினைந்துநெறி திரியா
துருப்ப நீளதர்க் கமைத்துமுன் வைத்த
தருப்பணஞ் செருமித் தன்னுயிர் வைத்தனன்
யூகி யென்ப துணரக் கூறி
நிலங்குறை பட்ட மன்னனை நிறுவுதல்
புலந்துறை போகிய பொய்யில் வாய்மொழி
நும்பி னாத லெம்பிற் சூழ்ந்த
தறியக் கூறினேன் யானென வவனொடும்
செறியச் செய்த தெளிவின னாகி
உருமண் ணுவாவொடு வயந்தக குமரனைக்
கருமக் கிடக்கை காண்வரக் காட்டி
இன்னுழி வருகென வன்னவை பிறவும்
ஒருபொரு ளொழியா தவனொடு சூழ்ந்து

(தான் இறந்து விட்டதாக யூகி நடித்து அஃது உண்மை யென்றே அயலாரை நம்பச் செய்தல்)

மறைப்பிட னமைத்துப் புறத்தோர் [3] முன்னர்

---

233. கோயில் - அரண்மனையை. [கூறி.
மாதரை (232) என்வயின் (234) தருதல் உமதுகடன் (235) எனக்
235. கண்ணென - விரைய.
236. அவற்கு - உதயணனுக்கு. இறைக்கடம் - அரசவுரிமையை.
237. நிம்கடன் - உமது கடமை; நிம் - முன்னிலைப்பன்மை;
238. அதர்க்கு - வழியில் உதவுவதற்கு. [திசைச்சொல்.
239. தருப்பணம் - அவல்; க. 40 : 129. செருமி - விக்கி; உயிர் வைத்தனன் - இறந்துபட்டான்; 129.
240. உதயணனுக்குக் கூறி.
243. ஆதல் - ஆகுக; குறள், 34, பரி.
244. அவன் - சாங்கியத்தாய்.
248. இன்னுழி - இன்ன இடத்தில்.
250. மறைப்பிடன் - மறைதற்கு உரிய இடத்தை.

பி - ம். 1 தெரிதல். 2 நினக்குக்கட னாதலின். 3 முன்னமாத்திரை.

ஆத்திரைத் தருப்பண மாத்திரை கூட்டி
உண்புழி விக்கிக் கண்புகச் செருமி
உயிர்ப்பு நீங்கிய வுடம்பின னாகிச்
செயற்கைச் சாக்காடு தெளியக் காட்டத்
தோழனுந் தமருஞ் சூழ்வனர் குழீஇ
வாழல மினியென வஞ்ச விரக்கம்
பல்லோர் முன்னர்க் கொள்ளக் காட்டிச்
சுடுதற் கொவ்வாச் சூழ்ச்சி யண்ணலைக்
கடுவினை கழூஉங் கங்கா தீரத்
திடுது முய்த்தென விசைத்தனர் மறைத்துத்
தவமுது மகளைத் தலைமகற் குறுகி
முகனமர்ந் துரைத்து முன்னையி ராமினென்
றகனமர் காதலோ டாற்றுளி விடுப்பக்
காட்டகங் கடந்து காவல னிருந்த
நாட்டக நணுகி நகரம் புக்கனள்
தெரிமதி யமைச்சனொடு திறவதிற் சூழ்ந்த
அருமதித் திண்கோ ளறம்புரி மகளென்.

௯—யூகிசாக்காடு முற்றிற்று.

---

251. ஆத்திரைத் தருப்பணம் - யாத்திரைக்கு வைத்திருந்த அவல். மாத்திரை - மருந்தாகிய மாத்திரை; உ. 8 : 164 - 5.

254. செயற்கைச் சாக்காடு - பொய் மரணத்தை.

256. வஞ்சவிரக்கம் - பொய்யழுகையை.

258. சூழ்ச்சியண்ணலை - யூகியை; சிறந்த அறிவுடையாரது உடம்பைத் தகனஞ் செய்யலாகாதென்பது ஐதிகம்.

260. உய்த்திடுதுமென்று.

261. மகளை நோக்கியென ஒருசொல் வருவிக்க.

262. முன்னையிராமின் - முன்தன்மையையுடையீர் ஆவீராக; "அடங்கல ரட்ட வேலா னனையி ராமி னென்றான்" சீவக. 556.

263. விடுப்ப - இடபகன் விடுப்ப.

264. காவலன் - உதயணன். 265. நகரம் - சயந்தி.

266. அமைச்சனொடு - யூகியொடு. திறவதின் - செவ்வையாக;

267. அறம்புரிமகள் - சாங்கியத்தாய். [சீவக. 124.

## ௧0—யூகிக்கு விலாவித்தது.

அறம்புரி யாட்டி யமைச்சனி னீங்கி
மறம்புரி தானை மன்னவ னிருந்த
தயங்கிதழ்த் தாமரைத் தண்பணை தழீஇய
சயந்தியம் பெரும்பதி யியைந்தகம் புக்குப்
பொன்வரை யன்ன பொருவி லாகத்து
மன்ன குமரனை மரபுளிக் குறுகித்
தாய்காண் கன்றிற் [1]காவலன் விரும்பி
ஏற்ற செவ்வி மாற்றங் கூறிச்
சேடுபடப் புனைந்த சித்திரக் கம்மத்துப்
பீடங் காட்டலி னீடுபட விருந்து
மன்னவன் மகனை மாதரொடு போந்து

---

௧0—யூகிக்கு விலாவித்தது.

[சாங்கியத்தாய் உதயணனையும் வாசவதத்தையையும் முறையே சார்ந்து அளவளாவுவதும், அப்பால் உருமண்ணுவாவுடன் வயந்தகனைக்கண்டு யூகி கூறிய மந்தணச்செய்தியைச்சொல்லுவதும், வயந்தகன் எழுதித்தந்த உதயணன் படத்தைக்கொண்டு சென்று காட்டியவுடன் அதில் உள்ள ஒரு சிறப்பைத்திப்பால் யூகிஇறந்தானென்றறிந்து உதயணன் மூர்ச்சிப்பதும், அப்பால் அவன் ஒருவனகயாகத் தெளிந்து யூகியின் அருஞ்செயல்கள் பலவற்றைச் சொல்லிச் சொல்லிப் புலம்புதலும், தோழர்கள் தேற்றுதலும் இதனுலறியலாதும்.]

1. அறம்புரியாட்டி - சாங்கியத்தாய். அமைச்சனின் - யூகியினின்றும்.

3. தண்பணை தழீஇய - மருதநிலம் சூழ்ந்த ; "தண்பணை தழீஇய தளரா விருக்கை" பொருந. 169 ; சிறுபாண். 78 ; பெரும்பாண். 242.

5. பொன்வரை அன்ன அகம்-இமவான் போலும்மார்பையுடைய "பனிவரை மார்பன்" (சிறுபாண். 240.) 6. குறுகி - குறுக.

சாங்கியத்தாய் (1) உதயணனைக் குறுக (6.)

7. கன்று உதயணனுக்கு உவமை ; 41 ; "அந்திவந் தடைந்த தாயைக் கண்டவான் கன்றி னன்னான்" கம்ப. கைகேசிசூழ்வினை. 104.

9. சேடுபட - பெருமைப்பட. சித்திரக் கம்மத்து - சித்திரத் தொழிலையுடைய ; க. 35 : 98. [இருந்து.

10. ஈடுபட - எளிவரவுபட ; தக்க. 61, உரை. சாங்கியத்தாய்

பீ - ம். 1 காவலின்.

நின்னகர்ப் புகுந்த பின்னர்க் கண்டனென்
என்னு கியர்மற் றென்வயி னினியென
முகமற் கிளவி தருவ கூறி
ஆடியல் யானை யவந்திய னகர்வயிற்
பாடி மாற்றமொடு பட்டதை யுரைத்தபின்
முனிமூ தாட்டியை முகனமர்ந்து நோக்கி
இனியவர் பெருங்கட மியல்பிற் றீர்த்த
யூகி நம்மொடு போந்தில னேவெனப்
போகிய புகழோற்குப் பொருக்கென [1]வுரையாள்
ஆங்கவன் கேட்ப வறிவி னாடிச்
சாங்கிய முதுமக டான்றெரிந் துரைக்கும்
ஒலியுஞ் சேனையுள் வலியோரை வணக்கி
நங்கையைத் தழீஇநீ போந்த கங்குற்
பட்டதை யெல்லாம் பட்டாங் குணர்ந்து
மறுபிறப் புணர்ந்த மாந்தர் போல

---

13. என்னுகியர் - யாது ஆகவேண்டுவது.

14. முகமன் - உபசாரம்.

15. ஆடியல் யானை - அசையும் இயல்பையுடைய யானை; "ஆடியல் யானையுந் தேரும்" (சிலப். ௨௯ : 86.) நகர் - உச்சயினி.

16. பாடிமாற்றமொடு - பொய்கைக்கரையில் நீர் விழவிற்காக அமைத்திருந்த பாடியிலுள்ளார் கூறிய சொற்களோடு; தொல். செய். சூ. 242, பேர். பட்டதை - பின்னும் அந்நகரில் நிகழ்ந்த செய்தியை.

17. முனி மூதாட்டியை - தவமகளாகிய சாங்கியத்தாயை; "செவிலித் தவமகள்" (63) என்பர் பின்னும். முகனமர்ந்து - முகம் இனியனாய்; குறள், ௮௪.

18. இனியவர் பெருங்கடம் - நண்புடையோரது பெரிய கடமையை. இயல்பிற் றீர்த்த - இயல்பாகவே நிறைவேற்றிய.

19. என - என்று உதயணன் கேட்ப.

20. போகியபுகழ் - எங்கும் சென்று பரந்த கீர்த்தி. பொருக்கென - விரைவாக. 22. உரைக்கும் - உரைப்பாள்.

24. வாசவதத்தையைக் கைப்பற்றி நீ இங்கு வந்த இரவில்.

25. பட்டாங்கு உணர்ந்து - உள்ளவாறே யூகியறிந்து.

26. மறுபிறப்பை உணர்ந்த மாந்தர் நிகழ்ந்த செய்திகளைப் பிறர் அறிந்து கொள்ளாதபடி தங்கள் மனத்துள் அடக்குமாறுபோல.

பி - ம். 1 வுரைப்பாள்.

உறுகுறைக் [1]கரும முள்ளக மருங்கிற்
றனே [2]புணரி னல்லது புறப்பட்
டேனோ ரறியா வியற்கைத் தாகிக்
காரிய முடிவி னிருண் [3]மறையா
அரும்பொறி வையத்துக் காந்தகத் தொடுங்கி
எம்மைக் கொண்டுவந் தேமஞ் சார்த்தி
வெம்மை வேட்டுவர் வியன்மலை வரைப்பிற்
கோற்றொழிற் கரும மாற்றனி முடித்துச்
சிலபகல் கழிந்தபின் வருவனீர் சென்று
நலமிகு வேந்தனை நண்ணுமின் விரைந்தென்
றொழிந்தன னுதயண யூகி பின்னென
மொழிந்தன னடக்கி முகிழ்விரற் பணைத்தோள்
வாசவ தத்தையை வகையுளிக் காண்கெனத்
தேச மன்னன் றிறத்துளிக் கூறக்
கன்றுகாண் கறவையிற் சென்றவட் பொருந்தித்
தளர்நடை யிளமையிற் றன்கொண் டோம்பிய
வளர்கொடி மருங்குல் வருந்தப் புல்லி
உவகைத் தண்டுளி யூழூழ் சிதறி
அமிர்துகடை கடலி னரவ மோவாது
தமர்தலை மணந்த தம்பெருங் கோயிற்
கண்ணீர் வெள்ளங் காலலைத் தொழுக

---

27. உள்ளகமருங்கின் - மனத்தினுள்ளே. 29. ஆகி - ஆக.
30. மறையா-மறைந்து. 31. பொறிவையத்து-எந்திரத்தேரில்.
32. ஏமம் - பாதுகாப்புள்ள இடத்தில்.
34. கோற்றொழிற் கருமம் - உதயணனுடைய செங்கோலுக்குரிய காரியத்தை.
37. யூகி பின்னே தங்கினனென்று.
38. அடக்கி - பிறசெய்திகளை அவன் கூறாது அடக்க.
39. காண்கென - காண்பீராகவென்று.
40. தேசமன்னன் - உதயணன்.
41. அவள் - வாசவதத்தையை.
44. ஊழூழ் - முறைமுறையாக.
அமிர்துகடை (45) என்பது முதல் விரிப்ப (57) என்பதுகாறும் ஒரு தொடர்.

பி - ம். 1 கருமமும். 2 புணரின். 3 மறைய.

வட்டிகை வாக்கின் வனப்பொடு புணர்ந்த
பட்டச் சின்னுதற் பதினு றுயிரர்
நும்மோய் மார்களுந் தம்மின மகளிரும்
ஒருதுணை யாயமு முடைவுகொண் டொழியப்
பெருமகன் றுனெனப் பெற்றியிற் பிழையான்
யாப்பமை காதலோ டாருயி ரன்ன
கோப்பெருந் தேவிக்கு நீப்பிட முணர்த்தித்
தந்தையுரை காட்ட வுய்ந்தது முதலா
இன்பக் கட்டுரை பைந்தொடி கேட்ப
முறைமையின் விரிப்ப முகத்தொளி புல்லென
நிறைமலர் நெடுங்க [1]ணீஇர் நெகிழத்
தமர்வயி னினைஇய தன்மைய ளாகிப்
புகரில் கோலத்துப் புனையிழை புலம்பத்
தாழ்நகை யாகத்துத் தண்சாந்து சிதைய
வீழ்தரு வெந்துளி விரலி னீக்கிச்
செவிலித் தவமக டேறக் காட்டி

48. வட்டிகை வாக்கின் - சித்திரமெழுதும் பலகையின் திருத்தத்தைப்போல ; வாக்கு - வர்ணங்களின் அமைப்புமாம் ; 86.

49. பட்டச் சின்னுதல்—பட்டத்தையணிந்த சிறிய நெற்றியை யுடைய ; சூளா. குமார. 73. பதினுறுயிரர் : பிரச்சோதனன் தேவிமார் ; உ. 4: 18 - 20.

50. நும்மோய்மார்களும் - உன்னுடைய தாய்மார்களும் ; "அருந் ததிக் கற்பி னெம்மோய்" (கம்ப. சூர்ப்பநகை. 50.) தம்மினம் - அவர் களுடைய இனத்தாராகிய.

49 - 50. = உ. 4 : 18. [உடைவு - மனம் உடைதலை.

51. துணையாயம் - வாசவதத்தையினது தோழிமாரின் குழு.

52. பிரச்சோதனன் சிறிதும் கலங்கானுகி.

54. கோப்பெருந்தேவிக்கு - பட்டத்தேவிக்கு ; வாசவதத்தையின் தாய்க்கு. நீப்பிடம் - மகள் உதயணனுடன் சென்றதை ; நீப்பு - நீத் [தல்.

57. புல்லென - பொலிவிழந்து தோன்ற.

59. தமர்வயின் நினைஇய - தமரை நினைத்த.

61. நகை - முத்துவடம் ; சீவக. 412, ந.

62. வெம்துளி - துக்கக் கண்ணீர் ; "வெம்பனி" (124) என்பர் பின் ; க. 40 : 191 - 2, அடிக் ; புறநா. கசச : 8 - 9.

63. "முனிமூ தாட்டி" (17) என்றூர் முன்னும்.

பி - ம். 1 ணீரோ.

அவலங் [1]கோட லங்கண் ஞாலத்து
வெங்கண் வேந்தன் பைந்தொடிப் பாவாய்
மங்கல மகளிர்க்கு மரபன் றிதுவென
நீலப் பொய்கைப் பாசடைத் தாமரை
கதிர்வாய் திறந்து..............................
பகுவாய்க் கிண்கிணி பாட்டுமிசை யார்ப்பக்
கோடுவாய் சிலம்பிற் கொழுஞ்சிகைக் குன்றின்
பாடமை படுகால் பைய வேறி
நங்காய் காணுன் பெருமா னன்னகர்
உந்தத் திசையதென் றொன்றப் பிறவும்
உகப்பக் கூறி மிகப்பல வருட்டி
உலகியல் வழாஅ துருமண் ணுவாவொடு
வலிகெழு நோன்றாள் வயந்தகற் குறுகி
நட்டோன் றுணிந்த கட்டழற் கருமம்
[2] மந்தண மாக வந்தணி யுரைத்தலும்
நன்னெறி நூல்வழித் திண்ணறி வாளன்

---

64. கோடல் - கொள்ளற்க.

66. மரபன்று - முறைமையன்று. [ந. 5 : 10.

69. "பசும்பொற் கிண்கிணி பரடுசுமந் தரற்ற" என்பர் ;

70. கோடு - மலையின் உச்சி. சிலம்பின் - மலையைப்போன்ற. சிகை - தூபி. குன்று - கட்டுமலை. 71. படுகால் - படி.

72. நுன்பெருமானன்னகர் - உன் தலைவனுடைய நகராகிய கோசம்பியானது ; கணவனைப் பெருமானெனல், "தம்பெருமா னடி சார்ந்தனள்" (சீவக. 221) என்பதனாலும் விளங்குகின்றது ; நுன்பெரு மானன்னகர் - பிரச்சோதனனுடைய நகருமாம் ; "நும்பெருமான் செய்த யானைமாயத்து" என்பர் ; உ. 17 : 116 - 7.

74. உகப்ப - உவப்ப ; "உகவையின் மொழிந்ததோ" (கம்ப. அயோத்தி. மந்திர. 79.) மிகப் பல வருட்டி - பல செயல்களால் மிக வயமாக்கி ; திருச்சிற். 269.

77. நட்டோன் - யூகி. அழற்கருமம் - வாசவதத்தையிருந்த அரண்மனையைத் தீப்பற்றச் செய்தல் ; உ. 9 : 232 - ஆம் அடி முதலிய வற்றைப் பார்க்க.

78. மந்தணமாக - இரகசியமாக ; "மந்தணம் பலபேசி" தேவா

79. திண்ணறிவாளன் - உருமண்ணுவா.

பி - ம். 1 கொண்டலங்கண். 2 மந்திரமாக

வருந்தி நோற்ற வருந்தவம் போலப்
பிற்பய முடைமை தெற்றெனத் தெளிந்து
தெரிமதி யாட்டியைத் திட்பங் கொளீஇ
அருமதி யமைச்சனை யன்பிற் கெழீஇத்
தோழற் குணர்த்துஞ் சூழ்வினை தொடங்கிக்
கட்டளை யமைந்த கண்ணார் வனப்பினோர்
வட்டிகைப் பலகையுள் வாக்குவகை யமைத்து
வத்தவன் வடிவினோர் வண்ணப் பாவை
வித்தகஞ் சிறப்ப வேறுபட வெழுதி
[1] நாற்க ணுக வமைத்துமற் றவற்றுள்
மேற்கண் மழுகிய வினையிற் றாகக்
கைத்தொழி லமைத்தபி னுய்த்தவட் குணர்த்தி
விருத்தி யமைத்த வினைமுடி பாவைக்
கருத்துமெய் தெரிதல் காவலன் கடனெனத்
தேவியொ டிருந்த செவ்விக் கோட்டியுள்
ஓவியப் பாவை யுய்த்தவள் காட்ட

---

80 - 81. முதலில் துன்பத்தையும் முடிவில் நற்பயனையும் தருதலால், இம்முயற்சிக்குத் தவம் உவமை கூறப்பட்டது.

82. திட்பங்கொளீஇ - மனவுறுதி கொள்ளச்செய்து.

83. அமைச்சன் - யூகி.

85. சிற்பநூலிற் கூறிய அளவு. 86. = 48.

87 - 8. உதயணனது உருவம் போன்ற உருவமொன்றைச் சில பகுதி வேறுபட அப்பலகையில் எழுதுவித்து.

89. தோழர் நால்வராதலின், அது தோன்ற நாலுகண் அவ்வுருவத்தில் அமைக்கப்பட்டன.

90 - 91. அவற்றுள், மேற்கண்ணை ஒளிமழுங்கியதாக அமைத்த பின், அப்படத்தினைச் சாங்கியத்தாயிடங் கொடுத்து அறிவிக்கவேண்டியவற்றை அறிவித்து. மேற்கண் : 104.

93. என - என்று அவளுக்குச் சொல்ல. 'தெரிதல் காவலன் கடன்' என்றது நீ கூறவேண்டாவென்றபடி.

94. உதயணன் வாசவதத்தையோடு இருந்தபொழுதில் அவள் வந்து அப்படத்தைக் காட்ட.

பி - ம். 1 நாற்கேணுக.

நுண்ணுணர் மன்னன் றன்னொப் பாகிய
கண்ணுளர் நுட்பத்துக் கருத்து நோக்கி
இடம்படு ஞாலத் துடம்பொடு புணர்ந்த
இன்னியன் மாந்தர் தின்னிய லுறுப்பினுள்
தாளே பெருங்கிளை தோளே துணைவி
பல்லே மக்கள் கண்ணே தோழர்
முடியே குரவ ரடியே யாளாம்
ஆக்கையி னுடி யங்ஙனங் காணின்
மேற்கட் குற்றத்து விதுப்பியல் வழாது
நூற்க ணுணித்த நுண்ணுணர் வெண்ணத்தின்
யூகி தன்வயி னுறுகண் வெந்தொழில்
ஆகிய துண்டென வையந் தேறி
உதயணன் மாழாந் துயிர்வாழ் வொழிகெனச்
சிதர்பொறி யெந்திரம் போலச் சிதர்ந்து
தாரும் பூணு மார்பிடைத் துயல்வரச்
சோருங் கண்ணினன் றுளங்கிமெய்ம் மறப்ப

---

96. நுண்ணுணர் மன்னவன் - சிற்பத் தொழில்களின் நுட்பங்களை அறிந்த உதயணன்; இவன் இன்னனாதல், "இன்னிசை வீணையன்றியு நின்வயின், உதயண நம்பி யோவியத் தொழிலின், வகையறி யுபாயமும் வல்லை யாகெனத், தந்தது முண்டோ பைந்தொடி" (க. 38 : 197 - 200) என்பதனாலும் விளங்கும்.

97. கண்ணுளர் - சித்திரமெழுதுவோர்; நோக்கினோர் கண்களிடத்தே தம் தொழிலை நிறுத்துதலால் இவர் இப்பெயர் பெற்றாரென்பர்; மதுரைக். 518, ந. நுட்பம் - நுட்பத்தொழில்.

100. துணைவி - மனைவி.

101. கண்ணே தோழர் : உ. 11 : 166, 17 : 161.

102. ஆள் - அடியர்.

99 - 102. மனிதருடைய உறுப்புக்களுள் இன்னது இன்னது இன்னார் இன்னாராகுமென்பது.

104. மேற்கட்குற்றத்து - மேற்கண்மழுங்கியிருக்கும் குற்றத்தால்; விதுப்பியல் வழாது - விரைந்து நடுக்கமுற்று.

106. உறுகண் வெந்தொழிலென்றது, மரணத்தை.

108. ஒழிகென - ஒழிவேனென்று.

109. சிதர்தல் - சிதறுதல். [ஆதலின்கண்ணில்

111. துளங்கி - நடுங்கி. மெய்ம்மறப்ப - உதயணன் மூர்ச்சிக்க;

இடியே றுண்ட நாகம் போலக்
கொடியோர் சாயற் கொழுங்கவின் வாடப்
பூவிருங் கூந்தல் புல்லென விரிய
வாசவ தத்தையும் வத்தவன் மார்பின்
மம்ம ரெய்திய மயக்க நோக்கி
விம்ம லெய்தி வியன்பெருங் கோயில்
அழுகை யாகுலங் கழுமிய பின்றை
அவல வுயிர்ப்பிணி யடியற வெறியும்
தவலருஞ் சாந்தந் தடியுற வப்பிச்
சீதச் செய்கையின் மாதுயர் விடுப்பத்
தீதில் பெருமகன் றெளிவுமுந் துறீஇக்
காதலிற் கவலைப் பாசந் தட்பத்

(யூகி இறந்தானாக நினைந்த உதயணனது வருத்தம்)

தண்டா மரைக்கண் வெம்பனி வீழ
விண்டோய் கானத்து வேழ வேட்டத்துச்

(யூகி தனது சிறைத்துயரம் நீக்கியது முதலியவற்றைச்
சொல்லி உதயணன் புலம்பல்)

சிறைகொளப் பட்டியான் செல்சார் [1] வறுத்தபின்
மறைகொண் மாயமொடு துறைநகர் விழவினுள்
ஏதின் மன்னன் காதலி பயந்த
மாதரைத் தழீஇப் போதரப் புணர்த்துப்

---

115 - 6. உதயணன் மார்பில் வாசவதத்தையும் மூர்ச்சித்து விழுந்ததைக்கண்டு. 118. கழுமிய - மிக்க.
119. பிணி - மூர்ச்சையை. 120. சாந்தம்-சந்தனக்குழம்பை.
121. சீதச் செய்கையின் - மற்றுமுள்ள சைத்தியோபசாரத்தால்.
120 - 21. = உ. 9 : 156 - 7.
122. பெருமகன் - அரசன்; உதயணன்.
123. தட்ப - தடுப்ப; "நாண்முதற்பாசந்தட்ப" சீவக. 470.
124. வெம்பனி - துக்கக் கண்ணீர்; "வீழ்தரு வெந்துளி" (62) என்றார் முன்னும்.
125. வேழவேட்டத்து - யானை விருப்பத்தால்.
126. செல்சார்வு அறுத்தபின் - பற்றுக்கோட்டை இழந்த பின்பு.
127. மறைகொண்மாயம் - இரகசியமாகிய வஞ்சச் செய்கை. விழவு - நீர்விழவு. 129. மாதரை - வாசவதத்தையை.

பி - ம். [1] வுறுத்த.

போதுவ லென்றோய் பொய்த்தனை போவெனக்
காதற் றோழனைக் காணாது கலங்கி
மாதாங்கு தடக்கை மன்னருண் மன்னவன்
[1] கனிகதிர் மண்டில நாண்முதற் றோன்றி
ஒளியிடப் பெறாஅ வுலகம் போல
இருளகம் புதைப்ப மருளகத் தெய்தித்
தருமமுங் கருமமுந் தளரச் சாஅய்
ஆழி னல்லதை யரசியல் வழாமை
வாழ்த லாற்றேன் யானென மயங்கியும்
நிழற்பொலி காவி னிரந்துட னாடிக்

(இளமைப் பருவத்தில் யூகி தன்பால் வைத்திருந்த அன்பின் மிகுதியைச் சொல்லி உதயணன் புலம்பல்)

குழற்சிகை யவிழக் குண்டுநீர் யமுனைக்
கணைக்கடு நீத்திடைப் புணைப்புறந் தழீஇ
விளையாட்டு விரும்பி யளையின [2] வாகிய
இன்சுவை யடிசி லுண்பது மொரீஇ
மன்பெருங் கோயிலுள் வளர்ந்த காலை
வேக நம்பிக்கு விலக்குக வடிசிலென்
றாகுபொரு ளறிவி யரும்பொரு ளென்மகன்

---

130. போதுவல் - பின்வருவேன்.

131. காதற்றோழனை - யூகியை. 132 - 8. ஒரு தொடர்.

132. மா தாங்கு தடக்கை - யானையைத் தடுத்து வயமாக்கி நடத்தும் பெரிய கையையுடைய; மா - குதிரையுமாம்; மதுரைக். 727-9, [அடிக்.

133. மண்டிலம் - சூரியமண்டலம்.

136. சாஅய் - மெலிந்து.

138. யான்வாழேனென்று மயங்கியும்.

139. காவின் - சோலையில். 140. சிகை - குடுமி.

141. கணைக்கடு நீத்திடை - அம்பு போன்ற வேகத்தையுடைய வெள்ளத்தில். புணை - தெப்பம். 142. அளை - தயிர்.

140 - 44. நீர்விளையாட்டுவிருப்பத்தால் உணவையும் ஒழிந்திருந்த காலத்தில். 145. நம்பியென்றது, உதயணனை.

146. ஆகுபொருளறிவி - நற்றாய்.

பி - ம். 1 கனிர்கதிர். 2 மாகிய.

யூகந்த ராய னுண்கென வுண்ணாய்
குடிப்பெருந் தேவி யடிக்கலம் பற்றி
அருளினுங் காயினு மொப்ப தல்லதை
பொருளஃ தன்று புரவலன் மாட்டென்
றென்செய் குற்ற நின்கட் டாங்கி
அன்பளி சிறப்பித் தின்பத மியற்றல்
இளமைக் காலத்து மியல்பா வுடையோய்
முதுமைக் காலத்து மதலையிற் றாங்கிப்
பின்போக் குரிய பெருந்தகை யாள
முன்போக்கு விரும்புதன் மூர்க்க தியல்பெனக்
கேட்டோ ருருக மீட்டுமீட் டாற்றப்
பூந்தார் மார்ப புலம்புகொண் டழீஇ

(உருமண்ணுவா உதயணனைத் தேற்றல்)

இருநில வரைப்பி னியற்கை யோராப்
பெருநிலங் காவல பேணா தவர்முன்
இனையை யாகுத லிறைமை யன்றாற்
கொடுங்காழ் [1] சோரினுங் கூட மூன்றிய
நெடுங்காழ் போல நிலைமையின் வழாஅது
துன்பத்திற் றுளங்கா தின்பத்தின் மகிழா
தாற்றுளி நிற்ற லாடவர் கடனென
மாற்றம் பற்பல மரபிற் கூறி
யடநடுதரூடடங்கண் டபுத்த

---

147. யூகந்தராயன் - யூகி; இப்பெயர் ஊகந்தராயனெனவும் வழங்கும். உண்கவென்று சொல்ல.

150. அஃது - அடிசிலிடவேண்டாவென்பது. பொருளன்று காரியமன்று.

154. மதலையின் - தூண்போல; பிள்ளை போலவென்றுமாம்.

157. உதயணன் அரற்ற.

158. அழீஇ - அழிந்து. 159. ஓரா - அறிந்து.

160. பேணாதவர்முன் - பகைவர் முன்பு.

161. இறைமை - அரசர்க்குரிய தன்மை.

162. காழ்சோரினும் - கழிகள் ஆக்கையற்றுக் கீழே வீழினும்; "காழ்சோர் முதுசுவர்" சிறுபாண். 133.

163. நெடுங்காழ் - நீண்ட தூண். 167. தபுக்க - நீக்க.

பி - ம். 1 சொரியினும்.

அந்த ணாளரின் வெந்திறல் வீரன்
சொற்றுணைத் தோழன் றெழில்பா ராட்டி
நற்றுணை மாந்தர் முற்றுணை யாக
அரசிய லாக்கங் கூடு மாயினும்
பெருவிறற் றோழன் வருதலு முண்டெனத்
தானயர் பெருநெறித் தலைநின் றனனால்
வீணை வித்தகன் விலாவணை தொடர்ந்தென்.

கo—யூகிக்கு விலாவித்தது முற்றிற்று.

---

168. வீரன் - வயந்தகன்.

171 - 2. நம் பெருவிறற்றோழன் வருதலுமுண்டு - யூகி பிழைத்து வருதலும் உளதாகும். என - என்று வயந்தகன் சொல்ல.

173. அயர்தல் - வருந்துதல்.

174. வீணை வித்தகன் - உதயணன்; "வீணை வேந்தன்" என்பர்; சு. 2: 79.

---

## கக—அவலந் தீர்ந்தது.

விலாவணை யொழியான் வீணைக் கைவினை
நிலாமணிக் கொடும்பூ ணெடுந்தகை நினைந்து
வைக றோறும் வான்மதி மெலிவிற்
பையுள் கொண்ட படிமை நோக்கி
அரும்பெற லமைச்சரொ டொருங்குடன் குழீஇக்

---

கக—அவலந் தீர்ந்தது.

[உருமண்ணுவாவை உதயணனுக்கு உசாத்துணைவனாகத் தோழர் முதலியோர் நியமித்ததும், அவன் உதயணனுடைய துன்பத்தை நீக்குதற்கும் ஒரு முனிவர்பாற் குறிகேட்டற்குமாக இலாவாண நகரின் அயலதாகிய மலைச்சாரற் சோலையில் உண்டாடற்குச் சயந்தி நகரத்தாருடன் அழைத்துச் செல்ல உதயணனை உடன்படச்செய்வித்ததும் இதனால் அறியலாகும்.

2. நெடுந்தகை - உதயணன்.

3. மதிமெலிவின் - சந்திரன் நாளுக்குநாள் தேய்ந்து வருதல்

4. பையுள் - துன்பம். படிமை - உருவம்; தன்மையுமாம். [போல.

5. அமைச்சரோடு தோழர் ஒருங்கு குழீஇ.

காவல னதிர்ந்த காலை மண்மிசைத்
தாவில் பல்லுயிர் தளர்ச்சி யெய்தலின்
எத்திறத் தாயினு மத்திற மகற்றுதல்
மந்திர மாந்தர் தந்திர மாதலின்
வத்தவர் கோமாற் கொத்த வுறுதொழில்
உத்தம மந்திரி யூகியிற் பின்னர்
அருமை சான்ற வாய்பொருட் கேள்வி
உருமண் ணுவாவிற் குறுகட னிதுவெனத்
தாழாத் தோழர் தன்மேல் வைத்தபின்
வீழாக் காதலொடும் விரும்புவ னாகிச்
செய்பொரு ளிதுவென வையந் தீர
மன்னுயிர் ஞாலக் கின்னுயி ராக்கும்
இறைபடு துன்பங் குறைபட வெறியும்
மருந்தின் பிண்டந் தெரிந்தனிர் கேண்மின்

(உதயணனது கவலையைத்தீர்த்தற்குரிய பரிகார வகைகள்)

தணப்பில் வேட்கை தலைத்தலை சிறப்ப
உணர்ப்புள் ளுறுத்த வூட லமிர்தத்துப்
புணர்ப்புள் ளுறுத்த புரைபதம் பேணும்

---

6. காவலன் அதிர்ந்த காலை - அரசன் கலங்கிய காலத்தில்; "பெற்றா னதிர்ப்பிற் பிணையன்னா டானதிர்க்கும்" நான்மணி. 19.

7. தா-கேடு. 8. அத்திறம்-உதயணனுக்குள்ள துன்பத்தை.

9. மந்திரமாந்தர் - மந்திரிகள். தந்திரம் - உபாயம்.

10 - 14. யூகி பார்த்துவந்த காரியங்களைப் பார்க்கும்படி தோழர் உருமண்ணுவாவை நியமித்தனர். 15. உருமண்ணுவா விரும்பி.

16 - 9. ஒரு தொடர்.

17. ஞாலக்கு = ஞாலத்துக்கு - பூமிக்கு.

17 - 8. ஞாலத்திற்கு அரசன் உயிரென்பதை, "நெல்லு முயி ரன்றே நீரு முயிரன்றே, மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்" (புறநா. கஅசு), "உலகினுக் குயிரா யிருந்தன னிறைகுலோத் துங்கன்" (திருவிளை. பழியஞ்சின. 44) என்பவற்றாலறிக.

19. மருந்தின் பிண்டம் - பரிகாரத்தின் தொகுதியை.

20. தணப்பு - நீக்கம். 21. உணர்ப்பு - உணர்த்தல்.

22. புரைபதம் - உயர்ந்த நுகர்ச்சி.

காமக் காரிகைக் காதன் மகளிர்
தாமப் புணர்முலைத் தலைப்பிணி யுறீஇ
யாமக் கோட்டத் தருஞ்சிறைக் கோடல்
வணங்கா மன்னரை வாழ்வுகெட முருக்கி
அணங்கரும் பெருந்திறை கொணர்ந்துமுன் னிடுதல்
பூமலர் பொதுளிய புனல்வரைச் சோலை
மாமலைச் சாரலொடு கானங் காட்டுதல்

(புணை வகைகள்)

யானையுஞ் சரியுளை யரிமா னேறும்
மானிற் பெடையும் வாள்வரி யுழுவையும்
புள்ளு மாக்களு முள்ளுறத் தியன்ற
நொய்ம்மர நெடும்புணை கைம்முதற் றழீஇக்
கூறு டாயமொடு குழூஉக்கொண் டண்டி
ஆறு டாயமொ டணிவிழ வமர்தல்
இன்ன தொன்றினு னென்னதொன் றாயினும்

---

24. பிணியுறீஇ - கட்டுவித்து ; தழுவுவித்து.

25. யாமக்கோட்டம் - (இங்கே) அந்தப்புரம்.

20 - 25. மங்கையரைக்கொண்டு அவன் மனக்கவலையைப் போக்கல் ஒருவகைப் பரிகாரமாகும்.

26 - 7. பகைவரை வென்று அவர்கள் கொடுக்குந் திறையைக் கொணர்ந்து அவனுக்கு முன்னிடுதல் ஒருவகைப் பரிகாரமாகும்.

28. புனல்வரை - நீர்க்கரை. நதிக்கரையிலுள்ள சோலை.

28 - 9. சோலையையும் மலைச்சாரலையும் காடுகளையும் காணச்செய்தல் ஒருவகைப் பரிகாரமாகும்.

30. யானையும் சிங்கமும். 31. பெண்மானும் புலியும்.

32. புள் - (இங்கே) ஒன்றற்கொன்று பகையாகிய பறவைகள்.

33. நொய்ம்மர நெடும்புணை - கனமில்லாத மரங்களாற் செய்விக்கப்பட்ட நெடிய தெப்பம் ; "நொய்ம்மர விறகின்" மலைபடு. 446.

30 - 33. யானை முதலியவற்றின் முகங்கள்போன்ற முகங்களையுடைய புணைகள் ; "பரிமுக வம்பியுங் கரிமுக வம்பியு,மரிமுக வம்பியும்" (சிலப். கங: 176 - 7) என்பது இவற்றைப் புலப்படுத்தும்.

34. கூறு ஆடு-கூறுகூறாக நின்று விளையாடுகின்ற.

35. ஆறு - நதி. விழவு - நீர்விழவு. அமர்தல் - விரும்பிச்செய்தல்.

30-35. மகளிருடன் புணையேறி நீர்விளையாட்டு அயரச்செய்தல் ஒருவகைப் பரிகாரமாகும்.

காமுறு கருமங் கால்வலை யாக
எமுற வொழியா வேயர் மன்னனை
உடுத்துவழி வந்த வுழுவ லன்பின்
வடுத்தீர் கைவினை வாசவ தத்தையொ
டொருப்படுத் தொழியா தோங்குமலை மருங்கிற்
கடிகமழ் கானங் காணக் காட்டிப்
படிவப் பள்ளியுட் பாவப் பெருமரம்
விரத மழுவின் வேரறத் துணிக்கும்
குறிக்கோ ளுறுதவ னுண்மை கூறி
.......................................................

(உதயணனுடைய பிறப்பு
வரலாறு முதலியன)

இன்றே யன்றியுந் தொன்றுவழி வந்த
குன்றாக் கற்பினெங் கோப்பெருங் கிழவோள்
நித்திலம் பொதிந்த விப்பி போலத்

---

37. உதயணன் விரும்பும் விளையாட்டையே வலையாகக்கொண்டு.
38. எமுறவு - மயக்கம்.
39. உடுத்து - வளைத்து; வயமாக்கி. உழுவலன்பு - எழுமையுந் தொடர்ந்த அன்பு; க. 32: 42. 41. ஒருப்படுத்து - சேர்த்து.
43. படிவப்பள்ளியுள் - விரதவொழுக்கமுடையோர் தங்கிய ஆச்சிரமத்தில். பாவமாகிய மரத்தை. 44. விரதமாகிய மழுப்படையால்.
45. குறிக்கோளுறுதவனுண்மை - பிறர் அறியவேண்டிய குறிகளைக் கேட்டு அறிந்துகொள்ளுதற்குரிய முனிவன் இருத்தலை; 'தவனுண்மை கூறி' என்றது, யூகி பிழைத்து வருவானென்பதைக் கேட்டற்கு உதயணன் அம்முனிவன்பாற் செல்ல விரும்புவானென்பதை உட்கொண்டு.

இதுகாறும் உள்ளவை உருமண்ணுவா தோழரை நோக்கிக் கூறியவை. இனி வருவன அவன் உதயணன்பாற் சென்று கூறுபவை; உதயணனுடைய பிறப்பு வரலாறு கூறுதல்மூகமாக எதிர்கால நிகழ்ச்சியைச் சதானிகனுக்கு முன்புகூறிய ஒருமுனிவன் பெருமையை உதயணனுக்கு உருமண்ணுவா கூறுகின்றான்.

46. உம்மை எதிரது தழுவியது.
47. கோப்பெருங்கிழவோள் - மிருகாபதி; இவள் உதயணனுடைய தாய்; 129 - 30.
48. நித்திலம் உதயணனுக்கும், இப்பி மிருகாபதிக்கும் உவமை.

திருவயிற் றகவயி னுருவொளி யாறா
நின்னைத் தாங்கிய நன்னா ளமையத்துக்
கண்ணிழன் ஞாறிய காமர் பள்ளியுள்
வெண்ணிலா முற்றத்து விரும்பி யசைதலின்
ஒள்ளொளி யரத்த மூனென நசைஇப்
பல்வலிப் பறவை பற்றுபு பரிந்து
விபுல மென்னும் வியன்பெருங் குன்றத்
தருவரை யருக ராய்நலங் கவினிய
ஆலங் கானத் தணியொடு பொலிந்த
ஞாலங் காவ னஞ்சென நீக்கிப்
பாய்பரி யிவுளி யேயர் பெருமகன்
தன்கட் கொற்ற மெல்லாந் தன்மகன்
வென்றித் தானை விக்கிரற் கருளி
மறுவி னெஞ்சமொடு மாதவந் தாங்கி
உறுபெருங் காட்சி யோங்கிய படிவத்

---

47 - 50. உன்னை மிருகாபதி கருவுற்றிருந்த காலத்தில்.

51. ஞாறிய - தோன்றிய; கண்ணாடிகளின் மிகுதியால் நிழல் தோன்றுவதாயிற்று.

52. அசைதலின் - துயிலுதலின்.

53. ஒள்ளொளி அரத்தம் - மேலே போர்த்தப்பட்டிருந்த மிக்க ஒளியையுடைய சிவந்த ஆடையால். ஊனென நசைஇ - மிருகாபதியைத் தசையாக எண்ணி உண்ண விரும்பி; "செந்துகின் மூடிக் கொண்டு திருநிலா முற்றந் தன்னில், அந்தமாத் துயில்கொள் கின்ற வாயிழை தன்னைக் கண்டு" உதயணகுமார. உஞ்சை. 13.

54. பல்வலிப்பறவை - சிம்புளென்னும் பறவை; "பறந்துசெல் சிம்புள்" என்பர்பின்; 65. 55. விபுலகிரியில்.

56. வரை - பக்கமலை. அருகர் - அருகே.

58. கம்ப. அயோத்தி. மந்திர. 25.

59. 'ஏயர் பெருமகன்' என்றது, மிருகாபதியின் தந்தையை; உதிதோதய காவியத்தில் இவன் பெயர் சேடகனென்று காணப்படுகின்றது.

60. கொற்றம் - அரசுரிமை; 138.

61. விக்கிரன் - மிருகாபதியின் தமையன்; 122.

59 - 61. ஏயர் பெருமகன் தன் அரச உரிமைகளை விக்கிரனுக்கீந்து.

தறம்புரி தந்தை பள்ளிய தருகர்ப்
[1] பறந்துசெல் சிம்புள் பையென வைத்தலும்
கயலேர் கண்ணி துயிலேற் றெழுவே
[2] உயிர்போ யுருமையி னுறுபுட் போக
அச்ச வகையினு மந்தரச் செலவினும்
பொற்றொடி மாதர் பொறைநோய் கூர
எல்லாக் கோளு நல்வழி நோக்கத்
திருமணி விளக்கந் திசைநின் றழலப்
பெருமணிப் பாவையிற் பிறந்தனை கிடந்தோய்
திருமெய் தழீஇ யருமைத் தாக
நிகழ்ந்ததை யறியாள் கவன்றன ளிரங்க
ஆத்திரை போந்த வருந்தவன் கண்டுதன்
ஆத்த காதன்மக ளாவ தறிந்துசென்

---

64 - 5. தந்தையாகிய முனிவனுடைய ஆச்சிரமத்தினருகே மிருகாபதியைச் சிம்புள் மெல்ல வைத்தலும்.

66. கயலேர்கண்ணி - மிருகாபதி.

67. அவள் உயிரோடிருந்தமையின் அப்பறவை அவளை விட்டுவிட்டுச் சென்றுவிட; "பற்றுயி ருண்ணுப் புள்ளும் பறந்துவான் போயிற் றன்றே" உதயணகுமார. உஞ்சை. 14.

65 - 7. சிம்புள் பிராணவதம் பண்ணுதலொரு பட்சியென்று கூறி இவ்வடிகளை மேற்கோளாகக் காட்டினர் தக்கயாகப்பரணி உரையாசிரியர்; தாழிசை, 630.

69. பொறைநோய்கூர - கருப்ப வேதனையாகிய நோய் அதிகரிக்க.

70. வி. பா. சம்பவச். 67.

71. மணிவிளக்கம் - மாணிக்கமாகிய விளக்கு; அழல - ஒளிவிட; "மணிவிளக் கெரிய" சீவக. 304.

72. பெருமணிப்பாவையின் - பெரிய மாணிக்கப்பாவையைப் போல. உதயணன் பிறப்பு வரலாறும், சீவகன் பிறப்பு வரலாறும் ஒருவாறு ஒத்திருத்தல் காண்க.

74. கவன்றனள் - மிருகாபதி கவலையுற்று.

75. ஆத்திரை - யாத்திரை. அருந்தவன் - மிருகாபதியின் தந்தையாகிய முனிவன்.

76. ஆத்த காதல் மகளாவது - தன்னுடைய காதலாற் பிணிப்புற்ற மகளாதலை. சென்று - அவளிடம் போய்.

பி - ம். 1 பறந்து சிம்புள். 2 உயிர்பெய்துருமையின், உயிர்பிரிந்தருமையின்.

றஞ்ச லோம்பென நெஞ்சகம் புகலப்
பள்ளிக் கொண்டுபுக் குள்ளழி வோம்பி
அதிரா ஞாலத் தரசுவீற் றிருந்த
கதையுரைக் கெல்லாங் காரண னுதலிற்
புதையிரு ளகற்றும் [1] பொங்கொளி மண்டிலம்
உதய [2] மிவர்தர வுதித்தோன் மற்றிவன்
உதயண னெனப் பெயர்முதற் கொளீஇப்
பரம விருடிகள் பல்லோர்க்குத் தலைவன்
தருமந் தாங்கிய தவாஅக் கொள்கைப்
பிரமசுந் தரனெனும் பெரும்பெயர் முனிவற்குப்
பழிப்பில் கற்பிற் பரமசுந் தரியெனும்
விழுத்தகு பத்தினி விரும்பிப் பெற்ற
புத்திரன் றன்னொடு வத்தவர் தோன்றலும்
[3] இருவிரு மவ்வழி மருவிவிளை யாடிச்
செல்லா நின்ற சில்லென் [4] காலை
வெஞ்சின வேழ வெகுளி நீக்கும்
மந்திர நாமம் வந்துநீர் கன்மெனத்

---

77. அஞ்சலோம்பு - அஞ்சுதலை ஒழி. புகல - விரும்ப.

80. எல்லாக்கதைகளுக்கும் இவன் காரணனாக இருத்தலின்.

81. ஒளிமண்டிலம் - சூரியமண்டலம்.

82. உதயம் - உதயகிரி.

82-3. ‘சூரியன் உதயமாகையிற் பிறத்தலால் இவன் பெயர் உதயணன்’ என்று கூறி.

89. யூகியென்று இந்நூலுள்ளே வழங்குபவன் இப்புத்திரனே. வத்தவர் தோன்றல் : முன்னிலைக்கண்வந்தது.

85-9. பிரமசுந்தர முனிவனுக்குப் பரமசுந்தரியென்னும் மாது பெற்ற புத்திரனோடு.

90. இருவிரும் - புத்திரனும் நீயுமாகிய இருவிரும்.

91. சில்லென்காலை - இளம்பிராயத்தில்; 109.

93. மந்திரநாமம் : இருபெயரொட்டு. நீர் கன்மென - நீங்கள் இருவிரும் கற்றுக்கொள்ளுங்களென்று பிரமசுந்தரமுனிவன் இருவருக்கும் உபதேசித்து.

பி-ம். 1 பொங்கிருண்மண்டிலம். 2 மிவர்தரப்பிறந்தோன். 3 இருவரும். 4 காளை.

தேவவிந் திரனிற் றிருந்தப் பெற்ற
ஆய்பெரு நல்லியா ழமைவர வெழீஇக்
கான யானையுங் கரந்துறை புள்ளும்
ஏனைய பிறவு மான வுவகையொடு
கேட்டவை யெல்லாம் வேட்டவை விரும்பி
வேண்டிய செய்தலி னீண்டிய மாதவன்
வரத்தின் வல்லே வல்லை யாகென
[1] உரைத்தம் முனிவ னுவந்தனன் கொடுத்துப்
பெறலரும் பேரியாழ் பெற்ற வாறும்
ஆர்வ நெஞ்சின னாகிய கல்வி
நேர்தனக் கில்லா நெஞ்சு ணமைதி
யூகி நினக்கிங் கடைக்கல மென்பதும்
போகிய புகழோன் பணிப்பக் கொண்டு
தோழ னாகித் தோமில் கேள்வி
யாழும் பாட்டு மவைதுறை போகிக்
கல்லா நின்ற சில்லென் [2] காலத்து
மைவரை மருங்கின் மடப்பிடி சூழத்
தெய்வ யானை நின்றது நோக்கிக்
கண்டே நின்று காத லூர்தர
மந்திர வாய்ப்பும் வல்ல யாழின்
கந்திர வகையுங் காண்பல் யானென
எழீஇயவ ணியக்கப் பொழிமத யானை

---

99. ழ. 116. 100. வல்லே - விரைவில்.

94-101. இந்திரனால் தான் பெற்ற யாழ் யானையையும், புட்களையும் வயமாக்குதலையறிந்து அம் முனிவன் அந்தயாழை உதயணனுக்கு அளித்து. 102. பெற்ற - தான் பெற்ற. [முனி.

106. போகியபுகழோன் : உ. 10 : 20. புகழோன் - பிரமசுந்தர

107. தோழனாகி - யூகிக்குத் தோழனாகி.

108. பாட்டு - மிடற்றுப்பாடல். 109. சில்லென்காலம் : 91.

111. நோக்கி - உதயணன் நோக்கி. 112. கண்டு - ஆராய்ந்து.

113. மந்திரவாய்ப்பும் - மந்திர சித்தியையும்.

114. கந்திரவகையும் - இசையின் வகையையும் ; கந்திரம் : கந்தருவமென்பதன் சிதைவு.

115. எழீஇயவண்இயக்க - ஒலியை எழுப்பி அங்கே யாழ்வாசிக்க.

பி - ம். [1] உரைத்தமுனி. [2] கானத்து.

வேண்டிய செய்தலின் வேண்டிய மாதவன்
பள்ளிக் குய்ப்ப நள்ளிருட் கூறும்
பாக ரேறினுந் தோற்கயி றிடினும்
நீமுன் னுண்ணினு நீங்குவல் யானென
ஆகு பொருள்கேட் டறிவுற் றெழுந்து
போதுங் காலை மாதவ னொருமகன்
வியாச் செங்கோல் விக்கிர னொருநாள்
எச்ச மின்மையி னெவ்வங் கூராத்
துப்புர வெல்லாந் துறப்பென் யானெனத்
தற்பயந் தெடுத்தவன் றாணிழல் வந்தோன்
மதலை யாகுமிப் புதல்வன் யாரெனச்
செருமிகு சிற்றத்துக் குருகுலத் தரசன்
சாயாச் செங்கோற் சதானிகன் றேவி
அருமைசால் கற்பின் மிருகா பதியெனும்
நங்கை தன்னகர்க் கங்குற் கிடந்தோட்
கின்னது நிகழ விவ்வயிற் றந்த
பொன்னணி பைம்பூட் புதல்வன் முனிவன்
ஐயாண்டு நிறைந்தன னதனி னிவனைத்
தெய்வ ஞானந் திறப்படக் காட்டித்

---

116. ஜ. 99.

115-7. அந்த யானை வயமானமையால் அதனை உதயணன் தானிருக்குமிடத்திற்குக்கொண்டு போக, அவன்கனவில் அது கூறுகின்றது.

118-9. பாகரேறுதல் முதலிய மூன்றுகுற்றங்களுள் ஒன்று நிகழுமாயின் யான் உன்னைவிட்டு நீங்குவேனென்று கூறியது.

122. விக்கிரன்: 61. 123. எச்சம் - சந்ததி.

124. துப்புரவெல்லாம் - நுகர் பொருள்களையெல்லாம்.

125. வந்தோன் - வந்தவிக்கிரன்.

126. என - என்று தந்தையாகிய முனிவன் வினவ.

127. ௬. 27 : 181 ; ௪. 15 : 26. சைன நூல்களிற் கூறப்படும் அரசபரம்பரை ஐந்து; அவை இக்குவாகுகுலம், அரிகுலம், குருகுலம், நாதகுலம், உக்கிரகுலமென்பன.

128. செங்கோலென்றது கோலென்னுந் துணையாய் நின்றது; "கோடாத செங்கோல்" (சீவக. 7) என்புழிப்போல.

130. நங்கை - உன் தங்கை. 131. இவ்வயிற்றந்த - இங்கே

134. இவனுக்கு ஞானோபதேசஞ்செய்து. [பெற்ற.

தன்னகர்க் குய்ப்பெ னென்றலு மடிகள்
என்னுழைத் தம்பி னிறையென வியற்றித்
தாய மெல்லாந் தனக்குரித் தாக
ஏயர் கொற்ற மிவன்வயிற் கொடுத்துப்
பெறலரும் பெருந்தவத் துறுபயன் கொள்வலென்
றுய்புகழ் முனிவனொடு தேவியை யிரந்து
செருமிகு குருசிறன் மருமகற் றழீஇ
நீல யானை நின்றது பண்ணிக்
கோல வெருத்தங் [1] குலவ வேற்றி
வளநகர் புக்குத்தன் [2] னுளமனைக் கெல்லாம்
உதயண னிறையென வறிவரச் சாற்றி
வேத்தவை நடுவண் வீற்றினி திருத்தி
ஏயர் குலமுதற் கிறைவ னாகி
அவ்வழி மற்றுநீ வளர விவ்வழிப்

(தேவியைப் பிரிந்த சதானிகன் செயல்)

பட்டதை யறியான் பயநிலங் காவலன்
கட்டழ லெவ்வமொடு கடவுளை வினவக்

(முனிவன் கூற்று)

கடும்புள் ளெதிர்ந்து காட்டகத் திட்டதூஉம்
நெடுந்தோ ளரிவை நின்னைப் பெற்றதூஉம்
தகையுடை முனிவன் றலைப்பட் டதூஉம்

---

135. என்றலும் - என்று அம்முனிவன் கூறலும்.
136. இறையென - அரசனாக. 137. தனக்கு - இவனுக்கு.
138. ஏயர்க்குரிய அரசவுரிமையை இவனுக்கு அளித்து.
139. தவப்பயனை யான் அடைவேனென்று சொல்லி.
140. தேவியை - மிருகாபதியை. 141. குருசில் - விக்கிரன்.
142. நீலயானை - ஒருவகை யானை.
146. இருத்தி - இருத்த. 149. காவலன் - சதானிகன்.
150. கட்டழலெவ்வமொடு - மிக்க அழல்போன்ற துன்பத்தோடு; "கட்டழ லெவ்வங் கைம்மிக" (சீவக. 360.) கடவுளை - ஒரு முனிவனை. வினவ - நிகழ்ந்தவை கூறும்படி சதானிகன் கேட்க.
151. கடும்புள் - சிம்புட்பறவை.
153. முனிவன் - தந்தையாகிய முனிவன்.

பி - ம். 1 பொலிய. 2 னுள்மனைக்.

வகையுடை நல்யாழ் வரத்திற் பெற்றதூஉம்
விசையுடை வேழம் வணக்கும் விச்சையும்
மாமன் கொண்டுதன் மாணகர் புக்கதூஉம்
ஏயர்க் கிறைமென வியற்றிய வண்ணமும்
மாசில் கொற்றவன் மறுத்திவண் வரவும்
ஆண்டகை மொய்ம்பினோ ராசடிப் படுப்பதூஉம்
ஈண்டிவண் வந்துநீ வீற்றிருப் பதூஉம்
உள்ளுறுத் [1]தோதியா னுள்ள முவப்ப
முற்பா னிகழ்ந்தவும் பிற்பாற் பெருக்கமும்
இனையவை யெல்லா மியற்படப் பிழையாது
வினவிய பொழுதின் [2]விரித்துரைத் தனனோர்
பனுவ லாளனைப் பணிந்துகை கூப்பிக்
கண்போற் காதனின் கழிபே ரமைச்சன்
முன்போல் விளிந்து முடிக்கும் காரியம்
உண்டு மாங்கொல் கண்டுவந் தோர்களைக்
கண்டில மாதலிற் பண்பொடு புணரக்
கேட்டபி னறிதும் யாமென வேட்ப
இன்னவை கிளந்துபின் றன்வயிற் றழீஇ
என்கூற் றினையு [3]நங்கூற் றாகத்
தேன்சுவைக் கொளீஇ வேம்பி னூட்டும்
மகாஅர்மருந் தாளரின் மறத்தகை யண்ணலை

---

154. யாழைப் பிரமசுந்தரமுனிவனாற் பெற்றதும்.
155. விச்சை - மந்திரம். 156. மாமன் - விக்கிரன்.
158. மறுத்து - மீட்டும். இவண் - இந்நகரத்தே.
159. ஓரரசு - பிரச்சோதனன். அடிப்படுப்பது - சிறைப்படுத்தல்.
160. இவண் - இந்நகரத்தே (கோசம்பி நகரத்தே.)
161. ஓதியான் - ஞானத்தால்; "எல்லா, மோதியி னுணர்ந்து கண்டான்" சீவக. 951.
164 - 5. ஓர் பனுவலாளனை - ஒரு முனிவனை.
166. கண்போல் அமைச்சன் - யூகி; உ. 10 : 101. [உ. 1 : 52-6.
167. முன்போல் - சிறைப்பட்ட காலத்தில் இறந்ததுபோலவே;
170. கேட்டபின் - முனிவனைக் (165) கேட்டபின்பு. வேட்ப - உதயணன் விரும்பும்படி.
167-8. காரியமும் உண்டுகொல் என உம்மையை மாறிக் கூட்டுக.

பி-ம். [1]தொழியா. [2]விரித்துவேறுரைத்தபனுவல். [3]நின்கூற்றாகத்

நகாஅர் பல்லவர் நலம்புகழ்ந் தேத்தும்
விழுப்ப மெய்தி யொழுக்கியல் போம்பி
[1] இழுக்கா தியன்ற விலாவா ணத்தயல்
உண்டாட் டயர்த லுறுதி யுடைத்தென
வண்டார் மார்பனை வலியுள் ளுறீஇ
ஏழ்ச்சி வேண்டுஞ் சூழ்ச்சி கொடுக்கென
உள்ள தோழரு மொருப்பட் டெய்தி
வள்ளிதழ் நறுந்தார் [2] வத்தவற் குறுகி
முறைபட வுணர்த்த குறைவில் கட்டுரை
கொள்ளக் கூறலும் வள்ளலும் விரும்பி
நிதியக் கலத்தொடு பதிபல வருளிக்
கொற்ற முரசிற் கோடணை கொட்டி
ஓசைபோக் கினரா லுவகையின் மகிழ்ந்தென்.

கக—அவலந் தீர்ந்தது முற்றிற்று.

---

175. நகாராய்.

177. இலாவாணத்து அயல் - இலாவாணமென்னும் நகரத்தின் அயலிடத்தே.

178. உண்டாட்டு - விளையாட்டு; உ. 12 : 34.

180. ஏழ்ச்சி - எழுச்சி; க. 58 : 58, அடிக்.

என் கூற்றினையும் நும் கூற்றாக (172) ஏழ்ச்சிவேண்டும் சூழ்ச்சி தொடுக்கவென்று உருமண்ணுவா கூற (180.)

173 - 80. வேம்பினைத் தேனுற் பொதிந்து குழந்தைகளுக்குக் கொடுக்கும் மருத்துவரைப்போல, மேற் செய்யவேண்டுவனவற்றை உதயணன் மனங்கொள்ளும்படி நீர் கூறவேண்டுமென்றபடி.

184. வள்ளல் - உதயணன்.

185. நிதியக்கலம் - பொன்னணி. பதிபல - பலஊர்களை. அருளி -

186. கோடணை கொட்டி - முழக்கமுண்டாகக் கொட்டி. [அருள.

பி - ம். 1 இறுக்காறியன்ற. 2 வயந்தகற்.

## கஉ—மாசன மகிழ்ந்தது.

ஓசை போக்கிய பின்றை யோவா
மாசில் சிறப்பின் வான்பூத் தன்ன
நகரம் வறுவி தாகநாட் கொண்டு

(இலாவாணத்தின் அயலிலுள்ள மலையின் இயற்கை யழகும் செயற்கையழகும்)

தகரங் கமழுந் தண்வரைச் சாரற்
றக்கோ ருறையுந் தாபதப் பள்ளியும்
கற்றோ ருறையுங் கடவுட் டானமும்
புக்கோர் புறப்பட லுறூஉப் பொலிவிற்
சுனையும் யாறு மினையவை மல்கி
மேவர வமைத்த மேதகு வனப்பிற்

---

### கஉ—மாசன மகிழ்ந்தது.

[சயந்தி நகரத்திலுள்ள ஆடவரும் மகளிரும் அரசன் கட்டளைப் படியே பலவகையான நுகர்போருள்களுடன் இலாவாண நகரத்தின் அயலிலுள்ள மலைச்சாரலிற் சென்று உண்டாடியது இதனால் அறிய லாகும்.]

2 - 3. வான்பூத்தன்ன நகரம் - வானுலகம் பொலிவுற்று விளங்கி னாற்போலும் சயந்தி நகரம்; என்றது அதன் செயற்கையழகு கூறிய வாறு. வறுவிதாக - வறுமையையுடையதாக; அரசன் முதலிய யாரும் இலாவாணஞ் செல்லப் புறப்படுகின்றமையின் இங்ஙனங் கூறினர்; "பூநகர் புல்லென" (40) என்பர்பின்; இது, "மன்னன் கரிகால் வள வனீங் கியநா, ளிந்நகர் போல்வதோ ரியல்பின தாகிப்,பொன்னகர் வறி தாப் போதுவர்" (மணி. க : 39 - 41) என்பது போல்வது.

4. தகரம் - தகரமரம்; இது நறுமணமுடையது.

5. தாபதப்பள்ளி - முனிவருடைய ஆச்சிரமம்; "தண்டா ரணி யத்துத் தாபதப் பள்ளியொன், றுண்டு" சீவக. 337.

6. கடவுட்டானம் - தேவாலயங்கள்; தேவஸ்தானம்; "கடவுட் டானத் தற்றமில் பூசைச் செல்வம்" திருவிளை. தடாதகை. 53.

9. மேவர - விரும்பித்தங்கும்படி.

கோலக் கோயிலொடு குரம்பை கூடிப்

(மரங்கள் முதலியன)

பலவு மாவு நலமா நாகமும்
மகிழும் பிண்டியும் [1]வரியித ழனிச்சமும்
வேங்கையு மாவும் விளவும் வேயும்
கோங்கமுங் குரவுங் கொடிக்குருக் கத்தியும்
நறையு நந்தியு மறைபயி லகிலும்
வழையும் வாழையுங் கழைவளங் கவினிய
திகிரியுந் தில்லையும் பயில்பூம் பயினும்
முல்லையும் பிடாவுங் குல்லையுங் கொன்றையும்
குருந்தும் வெட்சியு நரந்தையு நறவும்
நறும்பா திரியு நாண்மலர்க் கொகுடியும்
இறும்பம லேலமு மேரில வங்கமும்
பைங்கூ தாளமும் வெண்பூஞ் சுள்ளியும்
[2] கொய்தகை போந்துங் கைதகை காந்தளும்
திமிசுந் தேக்கு ஞெமையு மாரமும்

---

10. கோயில் - அரண்மனை. குரம்பை - சிறுகுடில்.

12. அனிச்சம் - ஒருமரம்; க. 51 : 52.

13. ஆ - ஆச்சாமரம். வேய் - பெரு மூங்கில்.

15. நறை - நறைக்கொடி; "நறைநாத் தொடுத்த வேங்கையங் கண்ணி" (புறநா. ௧௬௮.) நந்தி - நந்தியாவட்டம்; உ. 4 : 77. அறைபயில் - துண்டாக்கப்படுகின்ற. 16. கழை - கோல்.

17. திகிரி - சிறு மூங்கில். பயின்-ஒருமரம்; "பலவும் பயினும்" [க. 48 : 153.

18. குல்லை - கஞ்சா; துழாயுமாம்.

19. நரந்தை - நரந்தப்புல், நாரத்தை. நறவு : "நறவஞ்சுர புன்னை" (பரி. ௧௨); நறாவெனவும் வழங்கும்.

20. கொகுடி - ஒருவகை முல்லை; குறிஞ்சிப். 81. "கொழுமலர்ப் புன்னையே கொகுடி முல்லை" தே. வடதுராங்காடு துறை.

21. இறும்பு - சிறுகாடு.

22. கூதாளம், கூதளியெனவும் வழங்கும். வெண்பூஞ்சுள்ளி - வெண்மையான பூக்களையுடைய மராமரம்; 108, 129; திணைமாலை நூற். 2.

23. கொய்து அகை போந்து - கொய்யப்பட்டுத் தழைக்கின்ற பனைமரம். கைதகை - மகளிர் கைவிரல்களை யொத்த.

24. ஞெமை - ஒருவகைமரம்; "வழைஞெமை யாரம்" பரி. ௧௨.

பி - ம். 1 விரியித. 2 கொய்தகைப்போதுங்கைதைக்.

[1] சேபா லிகையுஞ் செங்கொடு வேரியும்
தீவாய்த் தோன்றியுந் திலகமுந் திரிகோற்
பகன்றையும் பலாசு மகன்றலைப் [2]புழகும்
குளவியுங் குறிஞ்சியும் வளவிய மௌவலும்
சிறுசெங் குரலியுஞ் சிறுசெண் பகமும்
நறும்பொற் [3] கொட்டமுந் துறும்புபு களுலி
இன்னவை பிறவும் பன்மரம் பயின்று
கொடிப்பூம் பந்த ரிடைப்பரந் தியன்ற
இடமிடந் தோறுங் கடனது வாகித்
தண்டாக் காதலி னுண்டாட் டுரைப்பேன்

(மாசனம் மலைச்சாரலையடைதல்)

தேரும் வையமுஞ் சிவிகையும் பண்டியும்
ஊரு மூர்தியும் [4] பிடிகையு முயர்வரை

---

25. சேபாலிகை - நீர்சொச்சி; உ.15 : 104. செங்கொடுவேரி: "செங்கொடு வேரி தேமா" குறிஞ்சி. 64.

26. தீவாய்த் தோன்றி - தீயைப்போன்ற செம்பூக்களையுடைய செங்காந்தள்; "ஆயிதழ்த் தோன்றி, சுடர்கொ ளகலிற் சுருங்குபிணி யவிழ" (அகநா. உகடு.) திலகம் - மஞ்சாடிமரம்.

27. பகன்றை - சிவதைக்கொடி; "வெள்ளிதழ்ப், பகன்மதி புருவிற் பகன்றை மாமலர்" (ஐங்குறு. சஙிசு.) பலாசு - புரசு. புழகு - மலையெருக்கம்பூ; "அரக்குவிரித் தன்ன பரேரம் புழகு" (குறிஞ்சி. 96); "அழகா வென்றிப் புழகா" திருவால. நசு : 12.

28. குளவி - காட்டு மல்லிகை. குறிஞ்சி - குறிஞ்சிமரம். மௌவல் - முல்லை; ஒருவகை மல்லிகை யென்றுங் கூறுவர்.

29. சிறு செங்குரலி - கருந்தாமக்கொடி; "சேடல் செம்மல் சிறுசெங் குரலி" குறிஞ்சி. 82.

30. கொட்டம் - ஒருவகை மரம்; "குங்குமங் கொட்ட மேலம்" (கம்ப. ஆற்று. 13.) துறும்புபு - கெருங்கி; "துறும்பு செஞ்சடைத் தூமதி வைத்து" (தே. எறும்பியூர்.); துறும்புபுகளுலி: ஒரு பொருட்பன்மொழி.

32. கொடிப்பூம்பந்தர் - பூங்கொடிகளாலாகிய பந்தர்; "இடுகு[கொடிப் பந்தரும்" உ. 15 : 11.

34. தண்டா - அமையாத. உண்டாட்டு - இருபாலாரும் பானவகைகளையுண்டு மகிழ்ந்து விளையாடல்; 178. 'உரைப்பேன்' என்றது கவியின் கூற்று. 36. பிடிகை - ஒருவகையூர்தி.

பி - ம். 1 சோபாலிகை. 2 புழுகும். 3 கோட்டமுக் 4 பிடலிகை.

மையணி வேழமு மாவும் பண்ணி
மடமொழி மகளிரு மைந்தரு மேறிக்
கடன்மலை பெயருங் காலம் போல
..........விடு தேனிற் பூநகர் புல்லென
நீரணி பெருமலைச் சார லெய்தி

(பாடியின் இயல்பு)

மாசில் வானத்து மதிவிரிந் தன்ன
தூசக் குடிஞையுந் துலாமண் டபமும்
பல்காழ்த் திரையும் [1] படாகையங் கொட்டிலும்
ஒல்காக் கூடமு மொருங்குதலைப் பிணங்கி
மன்றும் வீதியுந் துன்றிவீ றெய்தி
எவ்விடந் தோறு மவ்விடத் தாகி
உயர்மிசை யுலக நீங்கி நிலமிசை
அந்தர மருங்கி னந்தன வனத்தொ
டிந்திர [2] னுரிமையொ டெண்கொண் டிறங்கின
இன்பம் பயந்த விலாவா ணத்தயல்

---

37. மையணிவேழம் - அஞ்சனம் அணிந்தயானை; க. 48 : 184,

39. கடல் கூட்டத்திற்கு உவமை. [அடிக்.

40. புல்லென - பொலிவிழந்து தோன்ற; "நகரம் வறுவி தாக" (3) என்றார் முன்னும்.

43. தூசக்குடிஞை - வெள்ளிய ஆடையாலாகிய சிறுகுடிசைகள். துலாமண்டபம் : க. 37 : 102.

44. பல்காழ்த்திரை - பல குத்துக்கோல்களுடனே செய்யப்பட்ட மதிட்டிரை; "நெடுங்காழ்க் கண்டங் கோலி" (முல்லை. 44); "நெடுங்காழ்க் கண்ட நிரல்பட நிரைத்த, கொடும்பட நெடுமதில்" (சிலப். உஎ: 151-2.) படாகை - பெருங்கொடி.

45. ஒல்காக்கூடம் - மெலிவையடையாத கூடம்; "கூடங் குத்திக் கயிறுவாங் கிருக்கை" முல்லை. 40.

42 - 5. குடிஞை முதலியவற்றிற்கு மதியொளியுவமை.

48. உயர்மிசையுலகம் - சுவர்க்கம்.

49. நந்தனவனம் - கற்பகச்சோலை.

50. உரிமை - (இங்கே) இந்திராணி முதலியோர். இறங்கின-இறங்கினவொத்த.

பி - ம். 1 படாகையுங். 2 னுரிமை யோடுடன்.

மன்பெருஞ் சோலை மலைவயிற் போகா

(மகளிரும் மைந்தரும் பலவகைக்காட்சிகளைக்கண்டு மகிழ்தல்)

அறைவாய் முரசி னதிர்க ணன்ன
[1] நிறைவாய்த் தண்சுனை நிவந்த நீலத்
தொண்மலர் குற்ற மகளி ரவைநம்
கண்மல ரழித்த கவின போன்மென
[2] நீலமொ டிகன்ற நேரிழை மகளிரைக்
கோலமொடு கலந்த குமரர் மற்றவை
தேம்புடை விரியக் கூம்பிடங் காட்டிநும்
கண்ணிழ லெறிப்பக் கலக்கமொடு நடுங்கி
ஒண்ணிழ விழந்த வொளிய வாகித்
[3] தொழுவன விரக்குந் தோழிகைக் [4] கொடீஇ
ஒழிக வுள்ளழி விவற்றொடு நீரெனக்
கழுமிய [5] வெகுளியர் காணக் காட்டி
மாறுத் தானை மன்னனை வழுத்தி
ஆறுக் காதலொ டாடின ரொருசார்
பூந்தண் சாரற் பொங்குகுலை யெடுத்த
காந்தட் கொழுமுகை கண்ட மகளிர்நம்

---

51 - 2. இலாவாண நகரத்தின் அயலிலுள்ள சோலைகள் சூழ்ந்த மலையின் கண்ணே சென்று.

53 - 66. ஒருதொடர் :— [வென்றுமாம்.

53. அறைவாய் - முழங்குதல் வாய்த்த; அடித்தல் வாய்த்த

54. சுனைநிவந்த நீலம்-சுனையிலுயர்ந்து தோன்றிய நீலம்; "பைஞ் சுனைப் பூத்த பகுவாய்க் குவளை" ஐங்குறு. உகக.

53-4. சுனைக்கு முரசின் கண் உவமை; "பறைக்க ணன்ன நிறைச் சுனை" (அகநா. ௧௭௮, ௩௨௪.) 55. குற்ற - பறித்த.

57. நீலமொடு இகன்ற - நீலப்பூக்களொடு பகைத்த.

59. கூம்பிடம் - குவிந்த இடத்தை.

62. தொழுவன இரக்கும் - கைகுவித்தனவாய் இரவாநின்றன. கொடீஇ - கொடுத்து.

63. இந்த நீலமலர்களொடு உள்ளழிதலை நீர் ஒழிவீராகவென்று.

64. கழுமிய வெகுளியர் - மிக்க வெகுளியையுடைய மகளிர்.

67 - 81. ஒரு தொடர். 68. முகை - அரும்பை.

பி - ம். 1 நிரைவாய். 2 நீலமொடணிந்த. 3 தொழுவனிரக்கும். 4 கொண்டென. 5வெகுளிகாண.

கைவிர லெழினலங் கவர்ந்தன விவையெனக்
கொய்பூங் [1] காந்தள் கொண்ட கையினர்
எமக்கணி யுடையரென் றெம்மொ டுறையுநீர்
நுமக்கணி [2] யுடையரை யெதிர்ந்தனி ரீங்கென
எழில் [3] விர றேறு மியைந்தணி யாகிய
கழுமணி மோதிரங் கழித்தனர் களைந்து
கவற்சி கொண்ட காமத் துணைவியர்
[4] இயற்கை யோரி னிற்றென மதித்துக்
காலக் காந்தட் கதழ்விடங் காட்டிக்
கோலக் கொழுவிர லேலொளி யெறிப்ப
அரும்பென நில்லா வஞ்சின வளிய
விரிந்த விவற்றொடு விடுமின் வேர்வென்
றிரந்தனர் தெருட்டி யியைந்தன ரொருசார்
தேங்கமழ் சிலம்பிற் பாங்குபட நிவந்த
வேங்கை விரியிணர் விரும்புபு கொய்து
புணர்வெங் காதலர் புனையிருங் கூந்தற்
கிணரிவை யணிமினென் றிரந்தனர் நீட்ட
விரும்பினர் கொண்டு வீயென வுணரார்
அரும்பிள வனமுலை யாகத் தருகர்ச்
[5] சிதர்வன கிடந்த சில்லரிச் சுணங்கிவை

---

69. இவை - இக் காந்தள் மலர்கள்.

67 - 9. "கொடிச்சியர் கூப்பி வரைதொழு கைபோல், எடுத்த நறவின் குலையலங் காந்தள்" கலி. ௪௦: 11-2.

71. நீர் என்றது மோதிரங்களை நோக்கி.

72. எதிர்ந்தனிர் - ஏற்றுக்கொண்டீர்.

74. கழுமணிமோதிரம் - செப்பஞ் செய்த மணிகள் இழைத்த மோதிரங்களை; "கழுமணிச் செம்பொ னாழிக் கைவிரல்" சீவக. 2716.

75. கவற்சி - கவலை. காமத்துணைவியர் - காமக்கிழத்தியரது.

76. ஓரின் - உணர்ந்தால். இற்று - இத்தன்மையது.

77. கதழ்விடம் - சிதைந்துவிரிந்த இடத்தை.

78. ஏல் ஒளி - எழுச்சியையுடைய ஒளி. எறிப்ப - வீசுதலால்.

79. அளிய - அளிக்கத்தக்கன. 80. வேர்வு - சினம்; ஆகுபெயர்.

82 - 99. ஒரு தொடர். 82. சிலம்பு - பக்கமலை.

86. வீயென உணரார் - பூக்களென்று அறியாராகி.

87. அருகர் - அருகே.

பி - ம். 1 காந்தளொடு. 2 புடையோரை. 3 விறற்றேறு. 4 இயலகை யோரிற்றென. 5 சிதாவமை.

புதல்வர்ப் பயப்பிற் புலந்துகை நீங்கி
மலையக மருங்கின் [1] மரம்பொருந் தினவெனச்
சிலையணி யழித்த சென்றேந்து புருவத்
தரிமலர் நெடுங்க [2] ணழுதெழு நோக்கித்
தெரிவை மகளிர் திண்பார் வீசிட
மாலை யோதி மடவரன் மகளிர்க்குக்
காலை கழியினுங் கழியா திதுவென
உவந்த வுள்ளமொடு நயந்துபா ராட்டி
அன்மையை யுணர்த்த [3] வண்மையிற் றாழ்ந்து
வீழ்பூங் கொம்பின் வேங்கை நிரந்த
ஆய்பூங் கானந் தாடின ரொருசார்
அரும்பெறற் காதலொ டணிநமக் காகி
மருங்குலு மாகமும் வருந்தப் போந்த
கருங்கண் வெம்முலை யரும்பி னழித்து
வண்பொற் றட்ட மலர்ந்த வாதலின்
நண்பிற் கொத்தில நம்மோ டிவையெனக்
கோங்கங் குறுகல் செல்லா [4] ரயல
மாம்பொழிற் சோலை மகிழ்ந்துட னாடும்
ஒள்ளிழை மகளிர்க் கொளிர்மதி யன்ன
சுள்ளிவெண் சூழ்ச்சி சுரும்புணத் தொடுத்து
நெறிப்பல கூந்த னேயந் தோன்றக்
குறிப்பறிந் தணிந்து கூடின ரொருசார்

89. புதல்வர்ப் பயப்பின் - பிள்ளைகளை யாம் பெற்றமையினால்.

88 - 90. சுணங்கு வேங்கைமரத்தைப் பொருந்தின. வேங்கைப் பூவைச் சுணங்காக நினைந்தனர்.

93. பார் வீசிட - வேங்கைப் பூக்களைப் பூமியில் வீசிட.

97. அன்மையை - சுணங்கு அல்லாமையை.

98. நிரந்த - வரிசைபெற்று நின்ற.

100 - 110. ஒரு தொடர்.

102. கோங்கரும்பு நகிலுக்கு உவமை; சிறுபாண். 25-6, அடிக்.

103. பொற்றட்டம் - பொன்னாலாகிய தட்டைப்போன்ற பூக்களை; "கோங்கந் தட்டம்" (உ. 14 : 24) என்பர் பின்.

105. கோங்கம் - கோங்கமரங்களை.

106. மாம்பொழிற் சோலை: இரு பெயரொட்டு.

108. சுள்ளி வெண்சூழ்ச்சி - மராமரத்தின் வெள்ளிய பூக்களாலாகிய இண்டைகளை; சுள்ளி : 22, 129; "வெண்பூஞ்சுள்ளி" உ. 15. 16.

பி - ம். 1 மாருரந். 2 ணழுலென. 3 வன்மை. 4 ரியலா.

நாக நறுமர நவியத்திற் றுணித்து
வேக வெவ்வழல் விளிய மாட்டி
மானிணப் புழுக்கலொடு தேனெய் விதவையிற்
பன்முறை பகர்ந்து தொன்முறை பிழையார்
நன்னாட் கொண்டு தன்னையர் பரியப்
பொன்னேர் சிறுதினை விளைந்த [1] புனந்தொறும்
சாயலுங் கிளவியுந் தம்மொடு நிகர்த்த
தோகையுங் கிளியுந் தொக்கவை யகலத்
துறுகல் வேயின் குறைகண் டன்ன
தடந்தோ ளசையத் தட்டை [2] புடைத்து
முடந்தாட் பலவின் முன்றி னின்ற
கானவர் மகளிர் காரிகை நோக்கி
வானவர் மகளி [3]ரல்ல ராயின்
வளமலைச் சாரல் வரைமிசை யுறையும்
இளநல மகளி ரிவரென வெண்ணி
அஞ்சி லோதிய ரஞ்சின ரொருசார்
எச்சார் மருங்கினு மின்னோர் பிறரும்

---

111 - 26. ஒரு தொடர்.

111. நவியம் - கோடரி; "வடிநவி னவியம் பாய்தலின்...... மரந்துளங்கிய காவும்" புறநா. உங.

113. புழுக்கல் - புழுக்கிய ஊன். தேன் நெய் விதவையின் - தேனோடு கலந்த பாற்சோற்றை.

114. பகர்ந்து - துதித்து. தொன்முறை பிழையார் - மரபு தவறாராகி.

115. நன்னாட் கொண்டு - நல்ல தினத்தில் விதைத்து. தன்னையர் பரிய - தமையன்மார் நீங்க.

116. சிறுதினை - ஒருவகைத்தினை. 117 - 8. நிரல்நிறை.

119. துறுகல் - உருண்டைக் கல்லில் முளைத்த.

120. தட்டை - கிளிகடி கருவி.

121. முடந்தாட் பலவின் - வளைந்த அடியையுடைய பலாமரத்தின்; "முடமுதிர் பலவின்" அகநா. ௩௫௨.

122. காரிகை - பேரழகு.

124 - 5. வரை - தாழ்வரை. இவர் வரையரமங்கையரென்றெண்ணி.

பி - ம். 1 புலந்தொறும். 2 யுடைத்து. 3 ரல்லவாயின்.

[1] விச்சா தரியரின் வியப்பத் தோன்றிச்
சுனைப்பூக் குற்றுந் சுள்ளி சூடியும்
சினைப்பூ வணிந்துங் கொடிப்பூக் கொய்தும்
மகிழின் வட்ட வார்மலர் [2]தொடுத்தும்
பவழப் பிண்டிப் பல்லிணர் [3] பரிந்தும்
சென்னத் தளிரிற் கண்ணி கட்டியும்
மாலை தொடுத்து மலைவளம் புகழ்ந்தும்
கோலக் குறிஞ்சிக் குரவை யாடியும்
மணிமயிற் பீலி மாமயிற் றெழுதி
அணிகல நோக்கிய மாடல்கண் டுவந்தும்
மாதர்ப் பைங்கிளி மழலை கேட்டும்
மகளிர் நாப்பண் மன்னவன் போலத்
துகளணி யிருப்பிற் துன்னுபு [4] சூழ
அந்தண் மராஅத்த பைந்தளிர் வாங்கிக்
கண்ணயற் பிறந்த கவுளிழி கடாத்துத்
தண்ணறு நாற்றந் தாழ்ப்பத் தவிர்த்துப்
பெருமையிற் பிறப்பினும் பெற்றி போகாச்

---

128. விச்சாதரியரின் - வித்தியாதர மகளிரைப்போல.

129. குற்று - பறித்து ; "சுனைப்பூக் குற்றுந் தொடலை தைஇயும்" நற். களஅ ; குறுந். கசஉ.

131. மகிழின் வட்டவார் மலர் : "கோதைதையாக் குழிசியோடாரங் கொளக் குயிற்றிய, ஓடுதேர்க்கான் மலர்ந்தன வகுளம்" (சீவக. 1650); மகிழம் பூக்களைத் தொடுத்தும் ; "மகிழ்பூ மாலை" (க. 40 : 110) என்றார் முன்னும்.

132. "அத்தச் செயலைத் துப்புற ழொண்டளிர்" (ஐங். உளஅ.) பிண்டி - அசோகமரம். பரிந்தும் - தாங்கியும்.

133. சென்னம் - வடிவு. மலைவளம்புகழ்தல் : 156 ; கலி. சo: 6.

135. குறிஞ்சிக்குரவை - குறிஞ்சி நிலத்திற்குரிய குரவைக் கூத்தை ; இது குன்றக்குரவையெனவும் வழங்கும்.

136. தொழுதி - கூட்டம்.     137. ஆடல் - மயிலாடுதலை.

139 - 48. ஒரு தொடர்.

141. மராத்த பைந்தளிர் - மராமரத்தின் பசியதளிரை.

142. மு. "கண்ணயற் பிறந்த கவுளிழி கடாத்த, அண்ணல் யானை" (தொல். களவு. சூ. 11, ந. மேற்.) தாழ்ப்ப - வண்டுகளைத் தங்கச் செய்ய.

பி - ம். 1 விச்சாதிரியரின். 2 தொடுத்துப். 3 பரிந்து சென்ன. 4 சூழ்ந்தவந்தண்.

சிறுமை யாளர் செய்கை போல
மூசுத லோவா மிஞிற்றின மிரிய
வீசுத லோவா விழுத்தகு தடக்கை
இருங்களிற் றினநிரை விரும்புபு நோக்கியும்
கொய்குர லேனலுங் குளிர்சுனைப் பாறையும்
மைவளர் சென்னி மரம்பயில் கானமும்
மலர்ப்பூஞ் [1] சோலையுந் திளைத்த லானூர்
ஆடியும் பாடியுங் கூடியும் பிரிந்தும்
ஊடியு முணர்ந்து மோடியு மொளித்தும்
நாடியு நயந்து நலம்பா ராட்டியும்
மைந்தரு மகளிரு மணந்துவிளை யாடி
மைந்துற் றனரால் வளமலை புகழ்ந்தென்.

கஉ—மாசன மகிழ்ந்தது முற்றிற்று.

---

145. சிறுமையாளர் செய்கை : பிறர்க்கு ஈயாமை; உ. 14: 32-6.
141-8. குறிஞ்சிப். 146-50. 150. மை - மேகம்.
151. திளைத்தல் - இடைவிடாது அனுபவித்தலை.
156. மைந்துற்றனர் - விருப்பம் மிகுந்தனர்.

பி - ம். 1 சோலைதிளைத்தல்.

---

## கங—குறிக்கோட் கேட்டது.

மைந்தரு மகளிரு மலைவயி னாடி
வெந்திறல் வேந்தன் வீழ்பவை காட்டி

---

கங—குறிக்கோட் கேட்டது.

[உதயணன், பரிவாரங்களுடன் ஒரு வனத்தை அடைந்து அதிலிருந்த ஒரு முனிவரைத் தரிசித்து, யூகி உயிருடனிருத்தல், அவனை யடைதல் முதலியவற்றைக் காரணங்களுடன் அவர் கூறக்கேட்டுத் துன்பம் நீங்கினமை இதனால் அறியலாகும்.]

2. வீழ்பவை - விரும்புவனவற்றை.

ஐம்பெருங் குழுவு மெண்பே ராயமும்
கண்ணுறக் கவவிக் கலந்து விடாஅ
அருமைக் கொத்த வஞ்சுவரு காப்பின்
உரிமைச் சுற்றம் பின்பட வுய்த்துத்
தீதற வெறியுந் தெரிபொருட் கேள்வி
மூதறி முனிவன் [1]பள்ளி முன்னர்

(சோலைவளம்)

அரணம் வேண்டா தச்ச நீக்கி
வருண மொன்றாய் மயங்கிய வூழிச்
சிறுமையும் வறுமையுந் தின்மையும் புன்மையும்
[2] இறுபும் புலம்பு மின்மையு மிரக்கமும்
அறியு மாந்தரி னுறுவளங் கவினி
ஐந்திணை மரனும் பைந்தளிர்க் கொடியும்
தந்துணைச் [3]செல்வந் தலைத்தலை பெருகி

3. மு. உ. 5 : 6. ஐம்பெருங்குழு : "அமைச்சர் புரோகிதர் சேனா பதியர், தவாத்தொழிற் றூதுவர் சாரண ரென்றிவர், பார்த்திவர்க் கைம்பெருங் குழுவெனப் படுமே"; எண்பேராயம் : "கரணத் தியலவர் கரும காரர், கனகச் சுற்றங் கடைகாப் பாளர், நகர மாந்தர் நளி படைத் தலைவர், யானை வீர ரிவுளி மறவர், இனைய ரெண்பே ராயமென்ப" (சிலப். ௫ : 157 - 60, அடியார். மேற்.); "சாந்துபூக் கச்சாடை பாக்கிலை கஞ்சுகநெ, யாய்ந்த விவரெண்ம ராயத்தார் - வேந்தற்கு, மாசனம் பார்ப் பார்மருத்தர் வாழ்நிமித்த ரோடமைச்ச, ராசி லவைக்களத்தா ரைந்து" சிலப். ௫ : 157, அரும்பத. மேற்.

4. கவவி - (உதயணனைச்) சூழ்ந்து.

6. உரிமைச் சுற்றம் - அந்தப்புர மடவார்.

7. தீது - காமம் வெகுளி மயக்கம்.

8. மூதறி - பழம்பொருளையறிந்த.

9. அரணம் - பாதுகாப்பை.

10. வருணம் - நால்வகைவருணங்கள். மயங்கிய ஊழி - (இங்கே) [கலியுகம்.

11. ஊழிச் சிறுமை - ஊழியினது இழிவு. தின்மை-தீமை ; "தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே" கம்ப. பயன்.

12. இறுபு - இறத்தல்.

13. மாந்தரின் - மாந்தரைப்போல. கவினி-அழகுபெற்று.

14. குறிஞ்சி முதலிய ஐந்து நிலத்திற்கும் உரிய மரங்களும் கொடி [களும்.

15. தம் செல்வம் - தளிர், அரும்பு முதலியன.

பி - ம். 1 பள்ளியுமுன்னர். 2இறுபயும், இறபவும் 3 செல்வத்தலை.

அருமதி முனிவர் நிருமிதம் போல
அழல்கண் ணகற்றி நிழன்மீக் [1]கூரி
நீர்புக் கன்ன நீர்மைத் தாகி
ஊர்புக் கன்ன [2]வுள்ளுறப் புரீஇ
மலர்த்தவி சடுத்துத் தளிர்க்குடை யோங்கிப்
பூங்கொடிக் கவரி புடைபுடை வீசித்
தேங்கொடிப் பறவையுந் திருந்துசிறை மிஞிறும்
விரும்புறு சுரும்பும் பெரும்பொறி வண்டும்
[3] குழல்வாய்த் தும்பியுங் குயிலுங் கூடி
மழலையம் பாடலின் மனம்பிணி யுறீஇ
முதிர்கனி யமிர்த மெதிர்கொண் டேந்தி
மேவன பலபயின் றீவன போன்ற
பயமர மல்லது கயமர மில்லாக்
காவினு ளிரீஇக் காவல் போற்றி

(உதயணன் முனிவரைக் காணுதல்)

மாதவ [4]முனிவற்கு மன்னவன் காணும்

---

16. முனிவர் நிருமிதம் - முனிவர்களுடைய படைப்பு; சௌபரி முனிவருடைய நிருமிதம் போல்வது.

17. அழல் - வெப்பம். மீக்கூரி - அதிகரித்து.

18. தண்ணீரிலே புகுந்தாற் போன்ற தன்மையை யுடையதாகி; "மணிக்கயத் தியன்ற மறுவி றண்ணிழல்" (௧.40:122) என்றார் முன்னும்.

19. உறப்பு - செறிவு.

22. தேங்கொடிப்பறவை - தேனாகிய வண்டொழுங்கு; கொடி - ஒழுங்கு.

24. குழல்வாய்த்தும்பி - புல்லாங்குழல் போன்ற இசையையுடைய தும்பி; "குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட" (மணி. ௪ : 3); "இருந்தும்பி,யின்குழ லூதும் பொழுது" (கார். 15); "துஞ்சுங்களி வரி வண்டுகள் குழலின்படி சுழலும்" கம்ப. கங்கை. 3.

22 - 4. தேன் முதலியன வண்டின் சாதி விசேடங்கள்; "மங்கை நல்லவர்" (சீவக. 892) என்னும் செய்யுளாலுணர்க.

25. மனத்தை வேறொன்றிற் செல்லாதபடி கட்டித்தடுத்து.

26. கனியமிர்தம் - பழங்களாகிய இனிய உணவை; ந. 2: 30.

27. மேவன - விரும்புதற்குரிய பொருள்கள்.

28. பயமரம் - பயனைத்தரும் மரங்கள். கயமரம் - இழிவான மரங்கள்.

29. இரீஇ - இருக்கச் செய்து.

பி - ம். 1 கூறி. 2 வுள்ளுவப். 3 சழலவாயம்பி. 4 முனிவர்க்கு.

கருமமுண் மைமரபிற் கிளப்பப்
பெருங்குலப் பிறப்பினு மரும்பொருள் வகையினும்
இருங்கண் ஞாலத் தின்னுயி ரோம்பும்
காவல் [1]பூண்ட கடத்தினும் விரும்பி
இமையோ ரிறைவனை யெதிர்கொண் டோம்பும்
அமையா திட்டிய வருந்தவ [2]முனிவரின்
விபலக வேந்தனை யியல்புளி யெதிர்கொண்
டணித்தகு பள்ளி யசோகத் தணிநிழல்
மணித்தார் மார்பனை மணன்மிசை யடுத்த
பத்திப் பன்மலர்ச் சித்திரங் குயின்ற
இயற்றுத் தவிசின்மிசை யிருக்கை [3]காட்டக்
கவற்சி மனத்தொடு காண்டக [4]விருந்ததன்
தாண்முதல் சார்ந்து தோண்முதற் றொழுனை
உள்ளி [5]புள்ளழிந் தொழுகுவரைத் தடக்கையின்

31. காரியமுண்டென்பதை முறைப்படி முனிவனுக்குச் சொல்ல.
34. கடம் - கடமை. விரும்பி - அரசனை விரும்பி.
33 - 5. "விண்ணின்மேற் காவல் புரிந்துறங்கான் விண்ணவர்கோன், மண்ணின்மே லன்னை வயவேந்தே - தண்ணளியிற், சேரா வவுணர் திறங்களையுந் தேவர்கோன், நேரார்மே லத்தகையை நீ" தண்டி.
36. முனிவரின் - முனிவரைப்போல. [சூ. 29, மேற்.
37. இயல்புளி - நூல்கள் சொல்லிய இயல்பால்.
38. பள்ளி - ஆச்சிரமத்துள்ள. அசோகத்து அணிநிழல் - அசோக மரத்தின் அழகிய நிழலில்; "அணிநிழ லசோகமர்ந்து" யா - கா. சூ. 5, உரை, மேற்.
40. சித்திரம் குயின்ற - பலவகை நிறம்அமைந்த.
41. இயற்றுத் தவிசு - இயற்கையாகவே அமைந்த ஆதனம்.
42. கவற்சிமனம் - கவலையையுடைய மனம். தன் - உதயணனுடைய.
43. தாள்முதல் - அடியை. தோண்முதற் றொழுனை - கைபோலுதவும் முதன்மையையுடைய தோழனாகிய யூகியை; தோள் - கை; "தோளுற்றொரு தெய்வந் துணையாய்" (சீவக. 10); "உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே, இடுக்கண் களைவதா நட்பு" குறள், 788.
44. உள்ளழிந்து - ஊக்கம் சிதைதலால்.

பி - ம். 1 பூண்டத்தினும். 2 முனிவர. 3 காட்டிக். 4 விருந்தனன். 5 புள்ளிழக்.

[1] வெள்ளிதழ் நறுமலர் வீழப் பையாந்து
நினைப்புள் ளுறுத்தவ னிலைமை நோக்கி
[2] இனத்தி னிரித்தாங் கெவ்வகை நிமித்தமும்
மனத்தி [3] னூற்றவை மறையின் றுணர்தலிற்
[4] றுனிவுகொண் மன்னற்கு முனிவன் கூறும்

(முனிவன் கூறல்)

பசுமரஞ் சார்ந்தனை யாதலின் மற்றுநின்
உசிர்ப்பெருந் தோழ னுண்மையுங் கூட்டமும்
கண்ணகன் றுறைந்த கடிநா ளமையத்துத்
திண்ணி தாகுந் தெளிந்தனை யாகுமதி
விரும்பினீ பிடித்த வெண்மலர் வீழ்ச்சி
பொருந்தினீ யளக்கும் பொருவில் போகத்
திடையூ றுண்மை முடியத் தோன்றும்
வீழ்ந்த வெண்மலர் வெறுநிலம் படாது
தாழ்ந்த கச்சைநின் றாண்முதற் றங்கலிற்
பிரிந்த போகம் பெயர்த்தும் பெறுகுவை
நிலத்துமிசை யிருந்தனை யாதலின் மற்றுநின்
தலைப்பெரு நகரமொடு நன்னாடு தழீஇக்
கொற்றங் கோடலு முற்றிய தாகி
முன்னிய [5] நின்றவை முடியத் தோன்றுமென்
றெண்ணிய விப்பொரு டிண்ணிதி னெய்தும்
பெறும்பய மிதுவெனப் பிழைத்த வின்றி

---

45. பையாந்து - துன்பமுற்று; க. 46 : 250, 303; ந. 7 : 80.
46. நிலைமையை முனிவர் நோக்கி.
47. இனத்தின் இரித்து - உடன்வந்தோர்களைப் போக்கி.
48. மறையின்று - வெளிப்படையாக. 49. துனிவு - வெறுப்பை.
51. உசிர் - உயிர். தோழன் - யூகி. உண்மை - உளனாதல். கூட்டம் - அடைதல்.
54. வீழ்ச்சி - வீழ்தலால்.
55. அளக்கும் - அனுபவிக்கும்; உ. 14 : 1.
56. உண்மை - உளதாதல். 58. தாண்முதல் - அடி.
62. கொற்றம் - அரசவுரிமை. 63. முன்னியனவும் எஞ்சினின்றனவும்.
65. பெறும்பயம் - அடையும் பயன்.

பி - ம். 1 வள்ளிதழ். 2 இனத்திரிந். 3 னூற்றமுறை. 4 றுனிவு. 5 நின்றமை.

[1] உறும்பெருஞ் சாரணருரைவே றன்மையும்
[2] இறுவா யெழுச்சியு மித்துணை யளவென
உறுதவ முனிவ னுள்ளிரித் தொழியாது
வத்தவர் பெருமகன் றத்துற வகலக்
கழிபொரு ளெதிர்பொருட் கேது வாக
அழிபொரு ளன்றி யாகுபயங் கூறத்

(உதயணன் உவத்தல்)

தக்கது [3]மன்ற மிக்கோன் கூற்றென
நட்புடைத் தோழனை நண்ணி யன்னோர்
உட்புகன் றெழுதரு முவகைய னாகிப்
பள்ளி மருங்கிற் பாவங் கழீஇ
வள்ளி மருங்குல் வாசவ தத்தையைக்
கூடுத லானுக் குறிப்பு முந்துறீஇ
ஆடுத [4]லூற்றமொ டமர்ந்தன னுவந்தென்.

௧௩—குறிக்கோட் கேட்டது முற்றிற்று.

---

66. சாரணருடைய உபதேசமும்.
67. இறுவாயெழுச்சி - வீடு. 69. தத்துறவு - தமோற்றம்.
70. எதிர் பொருட்கு - பின் நிகழும் காரியங்களுக்கு.
72. மன்ற - நிச்சயமாக. 73. தோழனை - யூகியை.
74. புகன்று - விரும்பி. 75. கழீஇ - கழித்து.
76. வள்ளி - கொடி. 78. ஊற்றம் - முயற்சி.

பி - ம். [1]உறுபெறுஞ். [2]இன்றுவா. [3]மன்றனமிக்கொள். [4]லூற்ற மொடு போந்தனன்.

---

## ௧௪— உண்டாட்டு.

ஆடுத லானு வளப்பின னாகி
நாடுதலை மணந்த நன்னகர் நிலையான்

---

௧௪—உண்டாட்டு.

[உதயணனும் வாசவதத்தையும் பரிசனங்களுடன் உண்டாடுதல் இதிற் கூறப்படும்.]

1. அளப்பு - அனுபவம்; "பொருந்திநீ யளக்கும் பொருவில் போகத்து" (உ. 13 : 55) என்றார் முன்னும்.

மாயோன் மார்பின் மன்னுபு கிடந்த
ஆரம் போல வணிபெறத் தோன்றிப்
பசும்பொற் றுதொடு பன்மணி வரன்றி
அசும்புசே ரருவரை யகலம் பொருந்தி
ஞால மாந்தரை நாணி யன்ன
நடுங்குசெலற் கான்யாற்றுக் கடும்புன லாடி
மணிநிழற் பாறை மருங்கிற் பல்கி
அணிகலப் பேழை [1]யகந்திறந் தன்ன
நறுமல ரணிந்த குறுவாய்க் குண்டுசுனை
நீணீர் முழவின் பாணியிற் பாடியும்
குழையர் கோதைய ரிழைய ரேரிணர்த்
தழையர் தாரின ருழைவயிற் பிரியார்
பல்வகை மகளிரொடு செல்வஞ் சிறந்தும்
கானுறை மகளிரிற் கவின்பெறத் தோன்றித்
தேனுறை சிலம்பிற் றுனந் தோறும்
விரவுமலர்க் கோதையர் வேறுவே [2]றியலிக்

3 - 4. மாயோன் மார்பிற் கிடக்கும் ஆரம் அருவிக்கு உவமம்; "மாயோன் மார்பி லாரம் போல, மணிவரை யிழிதரு மணிகிள ரருவி" (தொல். செய். சூ. 35, 78, பேர். மேற்); "நெடியோன் மார்பி லாரம் போன்று, பெருமலை விலங்கிய பேரியாறு" சிலப். உ௫ : 21 - 2.

5. பொற்றுது - பொற்பொடி. 6. அசும்பு - ஊற்று.

8. கடும்புனல் - விரைந்து செல்லும் புனல். 9. பல்கி - பெருகி.

10 - 11. நறுமலர்க்கு அணிகலங்களும் சுனைக்குப் பேழையும் உவமை; "பன்மலர் துவன்றிய தீர்த்தப் பாங்கரிற், பொன்மலர் மண்டபம் பொலிந்து தோன்றுவ, தென்மணிப் பேழையைத் திறந்த மூடி போல்" காஞ்சிப். நகரப். 118.

12. நீணீர் முழவின் பாணியின் - அருவியாகிய முழவின் தாளத்திற்கு ஏற்ப; "பாடின் னருவிப் பனிநீ ரின்னிசைத், தோடமை முழவின் துதைகுர லாக" (அகநா. அஉ : 3 - 4); "முழவின்னிசை மூரி முழங்கருவி" (சீவக. 1193); நீணீர் - அலையுமாம்; "அலையொலி முழவெழ" நைடதம், 115.

14. தழை - தழை முதலியவற்றாலாகிய ஆடை. பிரியாராகிய.

18. இயலி - உலாவி; "பீலி மஞ்ஞையி னியலி" பெரும்பாண்.

[331.

பி - ம். 1 யகந்தீர்ந்தன்ன. 2 றிகலிக்.

குரவம் பாவைகொண் டோலுறுத் தாடியும்
விரிந்துவே யுடைத்த வெண்கதிர் முத்தம்
தெரிந்துவே றமைத்துச் சிற்றி லிழைத்தும்
பூங்கட் பாவைக்குப் பொற்கல மிவையெனத்
தேங்கட் சாரற் றிருந்துசினை மலர்ந்த
கோங்கந் தட்டம் வாங்கினர் வைத்தும்
செப்பட ரன்ன செங்குழைப் பிண்டிக்
[1] கப்புடைக் கவிசினை நற்புடை நான்ற
தழைக்கயிற் றூசல் விருப்புற் றாக்கியும்
பைங்கொடி முல்லை வெண்போது பறித்தும்
கத்திகை தொடுத்தும் பித்திகை பிணைத்தும்
சித்திர மாகச் செந்தளிர் வாங்கிப்
பத்திரச் சேதம் பற்பல கிள்ளியும்

---

19. குரவம்பாவை - குராப்பூவாகிய பாவையை. ஓலுறுத்து - தாலாட்டி; "ஓலுறப் பரவமும்" (க. 41 : 89); "குரவம்பூம் பாவை கொண்டு குழவியோ லுறுத்து வாரும்" சூளா. சுயம். 80.

22. பொற்கலம் - பொன்னாலாகிய உண்கலம்.

24. கோங்கந்தட்டம் - கோங்கம் பூவை; "வண்பொற் றட்ட மலர்ந்த" உ. 12 : 103.

25. செப்படர் - செம்பாலாகிய தகட்டை ; செங்குழைப்பிண்டி - செம்மையாகிய தளிரையுடைய அசோகு; "செப்பட ரன்ன செங் குழை" அகநா. க.

26. கப்பு - பிரிவு. கவி சினை - கவிந்த கிளைகள்.

27. தழை : தாழை யென்பதன் விகாரம். ஊக்கல் - ஆட்டல் ; தாழையின் விழுதாலும் அதன் கயிற்றாலும் சமைக்கப்பட்ட ஊசலி விருந்து ஆடுதல்இயல்பு ; க. 40 : 112 - 3 - ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க ; தழைக்கயிறு - தழைகளைக் கட்டிய கயிறுமாம்.

29. கத்திகை - ஒருவகை மாலை. பித்திகை - சிறுசண்பகம்.

31. பத்திரச்சேதம் - மகர மீன் உருவம் முதலியனவாக இலை களைச் சேதித்தல் ; "கொழுமடற் குமரி வாழை" (சீவக. 2716) என் னுஞ் செய்யுளைப்பார்க்க; "வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியா...... குராஅமலி ராவெஞ் சோலை" முருகு. 37 - 41.

பி - ம். 1 கைப்புடைச்.

[1] உறியோர்க் குதவுதல் செல்லா தொய்யெனச்
சிறியோ ருற்ற செல்வம் போலப்
பொருசிறை வண்டினம் பொருந்தாது மறக்க
நறுமலர்ச் செல்வமொடு நாட்கடி கமழும்
செண்பகச் [2] சோலைத் தண்டலை தைஇயும்
[3] பேறருங் கற்பிற் பிரச்சோ தனன்மகள்
மாறடு வேற்கண் வாசவ தத்தை
செல்வமுஞ் சிறப்பும் பல்லூழ் பாடிக்
குராஅ நீழற் கோல்வளை யொலிப்ப
மராஅங் குரவை மகிழ்ந்தனர் மறலியும்
[4] ஆடுபொற் கிண்கிணி யடிமிசை யரற்ற
நீடி யன்ன நிழலறை மருங்கிற்
பந்தெறிந் தாடியும் பாவை புனைந்தும்
அந்தளிர்ப் படைமிசை யயர்ந்தன ரொடுங்கியும்
[5] ஏனற் குறவ ரிருங்குடிச் சீறூர்
மானமர் நோக்கின் மகளிரொடு மரீஇ
வெங்கண் மறவர் வில்லின் வீழ்த்த

---

32. உறியோர்க்கு - உரியோர்க்கு; 'முறியோர்க்கு' எனப்பாடங் கொள்ளின், முறிதலுற்றவறியவர்க்கென்க; "இரந்தவர்க் கீட்டப் பட்ட விருநிதிக் கிழவ" (சூளா. மந்திர. 35.) ஒய்யென உதவுதல் செல்லாதென்க.

33. சிறியோருற்ற செல்வம் சண்பகப்பூவிற்கு உவமை.

32 - 3. = உ. 12: 144 - 5.

35. நாட்கடி - புதிய மணம்.

32 - 6. இவ்வடிகளின் கருத்து, "அறுபதவண் டினங்குறுகி யறியாத சண்பகங்கள், நறவொழுக விதழ்விரியு நறுமலர்பூத் தறுதோற்றம், குறைபெறுந ரடைந்தறியாக் குறையிலறன் மாலையான், பெறலரிய பெருஞ்செல்வம் பெற்றிருத்தல் போலுமால்" (சீகாளத்திப். தென் கைலாய. 22) என்னுஞ் செய்யுளில் அமைந்திருத்தல் காண்க.

38. வாசவதத்தையினது. 39. பல்லூழ் - பலமுறை.

43. அறை - பாறை.

43 - 4. "விண்டோய் வரைப்பந் தெறிந்த" கலி. ௪0 : 22.

45. தளிர்ப்படை - தளிராகிய படுக்கை. 46. ஏனல் - தினை.

பி - ம். 1 முறியோர்க்குதவுதல். 2 சோலையொடு தண்டலைத்தையும். 3 பெறலருங். 4 ஆய்பொற். 5 ஏனிக்குறவர்.

பைங்கண் வேழத்துப் பணைமருப் புலக்கையின்
அறையுர னிறைய வைவனப் பாசவல்
இசையொடு தன்னைய ரியல்புபுகழ்ந் திடிக்கும்
அம்மனை வள்ளை யின்னிசை கேட்டும்
கோயின் மகளிர் மேயின ராடப்
பொருவில் போகமொ டொருமீக் [1] கூறிய
உருவப் பூந்தா ருதயண குமானும்
வள்ளியம் பணைத்தோண் முள்ளெயிற் றமர்நகை
வான்மணிக் கொடும்பூண் வாசவ தத்தையும்
இயல்பிற் செய்ய வாயினு முயர்வரை
அருவி யாட்டினு [2] மறற்கணைத் திளைப்பினும்
பூங்குழை மகளிர் பொலங்கலத் தேந்திய
தேங்கமழ் தேறலொடு தெளிமது [3] மடுப்பினும்
தாமரைச் செவ்விதழ்த் [4] தலைக்கேழ் விரித்த
காமர் நெடுங்கண் கைம்மீச் சிவப்பக்
கனிந்த காதலொடு முனிந்து...............
மயக்க மாகி முயக்க மில்லாது

---

49. யானைக்கொம்பாகிய உலக்கையினாலே.

50. அறையுரல் - பாறையாகிய உரல்; கலி. சக : 3, சரு : 4; சூளா. சுயம்வர. 105. ஐவனப் பாசவல் - ஐவன நெல்லாலாகிய பசிய அவலை.

49 - 50. "யானை வெண்மருப் புலக்கை யறையுர லவண மிடித்த, தேனெய் வாசவல்" சீவக. 1562.

51. தன்னையர் - மூத்தோருடைய.

52. அம்மனை வள்ளை - உலக்கைப்பாட்டு; க. 40 :- 85, அடிக்.

56. வள்ளியம் பணைத்தோள் - சங்கு வளையையணிந்த மூங்கில் போன்ற தோள்; "வெள்ளி வள்ளி வீங்கிறைப் பணைத்தோள்" (நெடு நல். 36, ந.); "வெள்ளி வள்ளியின் விளங்கு தோணலார்" (சீவக. 420); வள்ளி - தொய்யிற் கொடியுமாம். 58. இயல்பாகவே சிவந்தன வாறு [னும்.

60. பொலங்கலத்து - பொற்பாத்திரத்தில்.

61. தேறல் - கட்டெளிவு. மது - பழத்திலிருந்து எடுப்பது.

60 - 61. புறநா. உச : 31-3, கூ : 18-20, நகஎ : 6-7; பொருந. 85-8, அடிக்.

பி - ம். 1 கூரிய. 2 மறக்களை. 3 மடுப்பவுக். 4 தலைக்கேள்.

பிரிவரும் புள்ளி னொருமையி னொட்டி
வண்டார் [1] சோலை வளமலைச் சாரல்
உண்டாட் டயர்பவா லுவகையுண் மகிழ்ந்தென்.

கச—உண்டாட்டு முற்றிற்று.

---

66. பிரிவரும்புள்ளின் - இருதலைப் புள்ளைப்போல; "ஓருயிர்ப் புள்ளி னிருதலைபு மொன்று, போரெதிர்ந் தற்று" (கலி. அக); "யாமே, பிரிவின் றியைந்த துவரா நட்பின், இருதலைப் புள்ளி னோருயி ரம்மே" அகநா. கஉ.

68. உண்டு - பானவகைகளையுண்டு. அயர்ப - செய்வார்கள்.

பி - ம். 1 சோதை.

---

## கரு—விரிசிகை மாலைசூட்டு.

வண்டார் சோலை வளமலைச் சாரல்
உண்டாட் டயரும் பொழுதி னொருநாள்
(முனிவராச்சிரமம்)
[1] வழையமன் முன்றிலொடு வார்மணல் பரப்பிக்
கழைவளர் கான்யாறு [2] கல்லலைத் தொழுகி
ஊக முகளு முயர்பெருஞ் சினைய
நாகப் படப்பையொடு நறுமலர் துறுமிச்

---

கரு—விரிசிகை மாலைசூட்டு.

[உதயணன் ஓராச்சிரமத்தை அடைந்து வயந்தகனுடன் இருக்கையில் ஒரு முனிவர் மகளாகிய விரிசிகையென்பவள் பலவகை மலர்களைப் பறித்துக்கொண்டு வந்து, "யானும் பாவையும் அணிந்து கொள்ளும்படி இவற்றை மாலையாகப் புனைந்து தருக" என்றுவேண்ட, உதயணன் அவற்றை அங்ஙனமே தொடுத்தளித்ததும் அவள் அம்மாலையை அணிந்துகொள்ள அறியாமல் வருந்துவதையறிந்து அழைத்துத் தன் மடிமீது வைத்து அவளுக்கு அதனைச் சூட்டியதும் இதனால் அறியலாகும்.]

3. ஒடு: அசை. 5. ஊகம் - கருங்குரங்கு.

6. நாகம் - ஒருவகை மரம். படப்பை - தோட்டம்.

பி - ம். 1 வழையமர். 2 காலலைத்.

சந்தனப் பலகைச் சதுரக் கூட்டமொடு
மந்திரச் சாலை மருங்கணி பெற்ற
[1] ஆத்திரை யாளர் சேக்குங் கோட்டிலும்
நெடியவன் மூவகைப் படிவம் பயின்ற
[2] எழுதுநிலை மாடமு மிடுகொடிப் பந்தரும்
கல்லறை யுறையுளொடு பல்லிடம் பயின்றே
துறக்கக் கிழவனுந் துன்னிய காலை
இறக்க லாகா வெழிற்பொலி வெய்தித்
தண்பூந் தணக்கந் தமாலந் தகரம்
ஒண்பூங் காந்தள் வெண்பூஞ் சுள்ளி
வீயா நாற்றமொ டணிவளங் கொடுப்பக்
கையமைத் தியற்றிய செய்சுனை தோறும்
வராலும் வாளையு முராஅய் [3] மறலக்
கழுநீ ராம்பல் கருங்கேழ்க் குவளையொடு
கொழுநகைக் குறும்போது குறிப்பிற் பிரியாப்
புணர்ச்சி மகளிர் போகத்துக் கழுமித்

---

7. சந்தனமரத்தாலாகிய சதுரமான ஆதனப் பலகைகளின் தொகுதியுடன்.

8. மந்திரச்சாலை - மந்திரங்களை உருவேற்றும் இடம்.

9.=37. ஆத்திரையாளர் - யாத்திரை செய்பவர்; க. 36: 221. சேக்கும் - தங்கும்.

10. நெடியவன் - திருமால். மூவகை - மனிதவகை, விலங்கின் வகை, நீர்வாழ்வனவற்றின்வகை. படிவம் - வடிவம். திருமாலுடைய பத்து அவதாரங்களுள் இந்த மூவகையு முள்ளன.

11. எழுதுநிலைமாடம் - சித்திரசாலை. கொடிப்பந்தர்: உ. 12. 32.

12. கல்லறை உறையுள் - கல்லை அறுத்தியற்றிய இருப்பிடம்; குகை; கல்லறை - கல்லாலாகிய அறையுமாம்.

14. இறக்கலாகா - கடக்கமுடியாத.

15. தணக்கம் - ஒருவகை மரம்; தணக்கெனவும் வழங்கும் "தணக்கும் பலாசும்" க. 52: 42.

16. சுள்ளி - மராமரம்; உ. 12: 108.

18. கை - ஒப்பனை. 19. மறல - மாறுபட.

21. நகைக்குறும் போது - ஒளியையுடைய மலரும்பருவமுள்ள அரும்பு; எழுவாய். 22. கழுமி - மயங்கி.

பி - ம். 1 மாத்திரை. 2 எழுநிலைமாடம்; [illegible] - உ

துயிற்கண் டிறந்த தோற்றம் போல
நறவுவாய் திறந்து நாண்மலர்க் கமழ
அறுகால் வண்டின மார்ப்ப வயலே
அந்தீம் பலவு மள்ளிலை வாழையும்
முதிர்கோட் டெங்கொடு முன்றி னிவந்து
மணிக்கண் மஞ்ஞையு மழலை யன்னமும்
களிக்குரற் புறவுங் கருங்குயிற் பெடையும்
பூவையுங் கிளியும் யூகமு மந்தியும்
மருளி மாவும் வெருளிப் பிணையும்
அன்னவை பிறவுங் கண்ணுறக் குழீஇ
நலிவோ ரின்மையி னொலிசிறந் தாராஅய்
அரசிறை கொண்ட [1] வாவணம் போலப்
பொலிவொடு புணர்ந்த பொழிலகம் புதைஇப்
பெருந்தகு படிவமொடு பிறப்பற முயலும்
அருந்தவ நோன்மைய ராத்திரைக் கொட்டிலிற்
கேள்வி முற்றிக் கிரிசை நுனித்த
வேள்விக் கலப்பை விழுப்பொருள் விரதத்துச்
சீரை யுடுக்கை வார்வளர் புன்சடை
ஏதமில் காட்சியோர் மாதவ ருறையும்
பள்ளி குறுகி யொள்ளிழை மகளிரொடு

---

20-24. "கூடினர் கணம்மலர்க் குவளை" சீவக. 66.
26. அள்ளிலை - செறிந்த இலை. 27. கோள் - குலை.
28. மழலையன்னம்: "மழலை நடைமா ணனமே" சீவக. 1526.
31. மருளிமா - மருளுதலையுடைய கலைமான்; "மருளி யாயம்" (க. 34 : 170) என்றார் முன்னும். வெருளி - அஞ்சுதலையுடைய.
34. அரசர் தங்குதல் கொண்ட வீதி போல; ஆவணம் - வீதி.
36. படிவமொடு - தவவேடத்தொடு. [ மு. 6 : 85.
38. கிரிசை - கிரியை; க. 42 : 161, 43 : 174; ந. 22 : 23;
39. வேள்விக் கலப்பை - பூசைக்குரிய பாத்திரங்கள் வைத்துள்ள [பை.
40. சீரை - மரவுரி; புறநா. 126.
38 - 40. க. 54 : 12-3.
41. காட்சியோராகிய மாதவரென்க; காட்சி - அறிவு.
40 - 41. ச. 15 : 5-6. 42. பள்ளி - ஆச்சிரமம்.

பி - ம். [1] வதுவணம்.

வான்பொற் கோதை வாசவ தத்தையும்
காஞ்சன மாலையுங் காண்டற் ககலப்
பெருந்தண் பிண்டி பிணங்கிய நீழல்
அரும்படைத் தானை யகன்ற செவ்வியுள்
வயந்தக குமரனொடு வத்தவ னிருந்துழி

(விரிசிகையின் பாதாதிகேச வருணனை)

ஏத மின்றி யிறைக்கடங் கழித்துக்
காதற் பெருந்தொடர் களைத லாற்றான்
மாதர்த் தேவியொடு மாதவம் புரிந்த
மன்னவ முனிவன் றன்மக ளொருமகள்
அணித்தகு பேரொளி யரத்த மடுத்த
மணிப்பளிங் கன்ன மாசில் வனப்பின்
உகிரணி பெற்ற நுதிமுறை சுருங்கி
நிரலள வமைத்த விரலிற் கேற்பச்
செம்மையிற் சிறந்து [1] வெம்மைய வாகி
ஊன்பெறப் பிறங்கி யொழுகுநீ ராமைக்
கூன்புறம் பழித்த கோலப் புறவடிக்
குவிந்த வடிமையிற் கோபத் தன்ன

---

44. காண்டற்கு - வளங்காணுதற்கு. 45. நீழலில்.

48. இறைக்கடம் - அரசவுரிமை; உ. 9 : 236.

49. காதலாகிய பெரியதொடரை. ஆற்றான் - வலியில்லாதவனாகி.

51. மன்னவமுனிவன் - இராச முனிவனுடைய. இம்முனிவன் வரலாற்றை ச: 15-ஆம் காதையிற் பார்க்க.

52 - 3. அரத்தம் - செம்பஞ்சு. செம்பஞ் சமைத்த பளிங்குபோன்ற அழகு; "பளிக்கறைப் பவழப் பாவை பரிசெனத் திகழுஞ் சாயல்" (சீவக. 192); "பளிங்குபுறத் தெறிந்த பவழப் பாவையின்" மணி. ச : 124; கஅ: 78.

54. உகிர் - நகம்.

57 - 8. புறவடிக்கு ஆமையின் கூன்புறம் உவமம்; "ஆமை யினம் பார்ப்பின் கூன்புறம்போல்" (சீவக. 177); "ஆமையா மென்ற போதர மல்லன சொல்லி னலும், யாமையாழ் மழலை யாடன் புறவடிக் கிழுக்க மன்றே" கம்ப. காட்சிப். 34.

பி - ம். 1 வெண்மைய.

பாட்டி னன்னர்ப் பாய சீறடித்
திரட்டி யன்ன செல்வக் கணைக்காற்
செறிந்துவனப் பெதிர்ந்த தேன்பெய் காம்பின்
நிறங்கவின் பெற்ற காலமை குறங்கிற்
கைவரை நில்லாக் கடுஞ்சின வரவின்
பையழித் தகன்ற பரந்தேந் தல்குற்
றுடிநடு வன்ன துளங்கிய நுசுப்பிற்
கொடியடர்ந் தொழுகிய கோல மருங்கிற்
புனற்சுழி யலைத்துப் பொருந்திய கொப்பூழ்
வனப்புவீற் றிருந்த வாக்கமை யவ்வயிற்
றஞ்சி லாகத் தெஞ்சுத வின்றித்
திணைமுத லிட்ட செங்கண் முகிழ்முலை
அணைபுரை மென்மை யமைபடு பணைத்தோட்
காம்பமை சிலம்பிற் கடிநாட் காந்தட்
பூந்துடுப் பன்ன முன்கையிற் பொலிந்து

---

60. நன்னர் - நன்மை.

61 - 2. தேன் பெய்த காம்பைப்போன்ற செல்வக்கணைக் காலென இயைக்க; "தேனெய்பெய், வாடாத காம்பேபோற் கணைக் காலின் வனப்பினவே" சீவக. 176.

63. குறங்கு - துடை. 65. பை - படம்.

66. துடி - உடுக்கை. துளங்கிய - அசைந்த. நுசுப்பு - இடையின் நடுப்பாகம். 67. மருங்கு - இடை.

68. புனற்சுழி - நீர்ச்சுழியை; கொப்பூழ்-உந்தி; "நீர்ப்பெயர்ச் சுழியி னிறைந்த கொப்பூழ்" (பொருந. 37); "கொப்பூழ் கங்கையின் சுழிய லைக்கும்" சீவக. 172.

69. வாக்கு - திருத்தம்.

72. அணை-பஞ்சணை. அணை தோளுக்கு உவமை: "அணைமென் றோள்"(பரி. எ); "அணைமரு ளின்றுயி லம்பணைத் தடமென்றோள்", 'அணைமென்றோள் யாம்வாட' (கலி. கச, சுகூ); "செம்பஞ்சி யணைய ணையவாடமைத்தோள்" (சீவக. 170.) 73. காம்பு - மூங்கில்.

73 - 4. காந்தட் பூந்துடுப்பு - காந்தளின் மலரும் பருவமுள்ள அரும்பு; "துடுப்பீன்று, ஞெலிபுட னிரைத்த ஞெகிழிதழ்க் கோடலும்" (கலி. கoக.) முன்கைக்குக் காந்தட்டுடுப்பு உவமை; "பஃறுடுப் பெடுத்த வலங்குகுலைக் காந்தள், அணிமலர் நறுந்தா தூதுந் தும்பி, கையாடு வட் டிற் றோன்றும்" (அகநா. கoஅ); "கைபோற் பூத்த கமழ்குலைக் காந்தள்" (பரி. கக); "கைவிரிந்தன காந்தளும்" சூளா. நாடு. 11.

கொழுமுகை குவித்த செழுமென் சிறுவிரற்
கிளிவா யன்ன வொளிவா யுகிரின்
விரிந்துநிலா நிறைந்த மேதகு கமுகின்
எருத்திற் கேற்ற திருத்தகு கழுத்திற்
கூடுமதி யன்ன சேடணி திருமுகத்
தகழ்கடற் பிறந்த வாசறு பேரொளிப்
பவழக் கடிகை பழித்த செவ்வாய்
முருந்தொளி முருக்கிய திருந்தொளி முறுவல்
நேர்கொடு சிவந்த வார்கொடி மூக்கிற்
பொருகயல் போலப் புடைசேர்ந் துலாஅய்ச்
செருவேல் பழித்த சேயரி நெடுங்கட்
கண்ணிற் கேற்ப நுண்ணிதி னொழுகி
முரிந்தேந்து புருவம் பொருந்திய பூநுதல்

---

75. முகை - காந்தளரும்பை. விரல்களுக்குக் காந்தளரும்பு உவமை; "தொகுவிரல், செங்காந்தண் மணியரும்பு மலரங்கை" சீவக. 170.

76. நகத்திற்குக் கிளிவாயுவமம்; "கிளிவா யொப்பி னொளிவிடு வள்ளுகிர்" பொருந. 34.

77 - 8. கழுத்திற்குக் கமுகின் கழுத்து உவமை; "மங்கைதன் கழுத்தை நோக்கி வளரிளங் கமுகும் வாரிச், சங்கமு மினைதி யாயி னவையின்றித் துணிதி தக்கோய்" கம்ப. நாடவிட்ட. 48.

79. கூடுமதி - கோடு கூடிய மதியை; "அண்ணல், நாடுதலை யளிக்கு மொண்முகம் போலக், கோடுகூடு மதியம்" (புறநா. கஎ.) பிறையோடு கூடிய மதியென்றலுமாம்; பிறை நெற்றிக்குஉவமை; "குழ லிக்கோட் டிளம்பிறையுங் குளிர்மதியுங் கோடினபோல், அழகுகொள் சிறுநுதலு மணிவட்ட மதிமுகமும்" (சீவக. 1658.) சேடு - பெருமை.

80 - 81. அகழ்கடல் - சகரரால் தோண்டப்பட்ட கீழ்கடல்; "தொடுகடல்" (புறநா. சு : 3) என்பதன் உரையைப்பார்க்க. அக்கடற் பவழம் : "குணகடற் றுகிரும்" (பட்டினப். 189.) கடிகை - துண்டம்.

82. முருந்து - மயிலிறகின் அடிக்குருத்து.

83. வார் கொடி மூக்கு - நீண்ட மூக்கு; "ஒழுகு பொற்கொடி மூக்கும்" (சீவக. 165.) 84. உலாய் - உலாவி.

85. சேயரி - செம்மையாகிய அரிகளையுடைய.

86. ஒழுகி - நீண்டுவளர்ந்து.

87. முரிந்து ஏந்து - வளைந்து மேல் உயர்ந்த; "சென்றேந்து புருவம்" உ. 16 : 25.

நாள்வாய் வீழ்ந்த நறுநீர் வள்ளைத்
தாள்வாட் டன்ன [1] தகையமை காதின்
நீல மாமணி [2] நிமிர்ந்தியன் றன்ன
கோலங் கொண்ட குறுநெறிக் கூழை
ஒருசிகை முடித்த வுறப்பமை கோலத்து
விரிசிகை யென்னும் விளங்கிழைக் குறுமகள்

(விரிசிகையின் செயல்)

இருந்தினி தொழுகு மியன்மலைப் பள்ளியுள்
அருந்தவ ரல்லதை யாடவ ரறியாள்
தவிர்வில் காதலொடு தன்வழிப் படூஉம்
கவர்கணை நோன்சிலைக் காம னிவனெனும்
மைய லுள்ளமொடு பைய வியலிப்
பிள்ளைமை கலந்த பேதைப் பெரும்பிணை
வெள்ளை நோக்கமொடு [3] விரும்புபு விதும்பிப்
பவழப் பாவையும் பந்துங் கிடைஇப்

---

88 - 9. வள்ளைத்தாள் வாட்டன்ன - வள்ளைக் கொடியின் வாடிய தண்டை யொத்த ; "வள்ளைவாடுயிர் செகுத்து......திளைப்பானு வார் காதும்" (சீவக. 168); "வள்ளைத் தாள்போல் வடிகா திவைகாண்" (மணி. ௨௦ : 53.) தகையமை - அழகமைந்த.

90 - 91. கூழை - கூந்தல் ; நீலமணி கூந்தற்குவமை ; ௧. 37: 216, அடிக். குறுநெறிக் கூழை : "கூழையுங் குறுநெறிக் கொண் டன" அகநா. ௬௧ : 1.

93. விரிசிகை : அவள் பெயர். 95. அல்லதை - அல்லாமல்.

97. ௧. 54: 138, அடிக். கவர்கணை - விருப்பத்தைச் செய்யும் அம்பையும், நோன்சிலை - வலியவில்லையுமுடைய; "கவர்கணைச் சாமனார் தம்முன்செலவு"(கலி. ௯௪); "காமவேள் கவர்கணை" சூளா. நகர. 18.

98. பைய இயலி - மெல்ல உலாவி.

99 - 100. பிள்ளைமை - பிள்ளைத்தன்மை. பிணை - பெண்மான். வெள்ளைநோக்கம் - உள்ளே ஒன்றும் கொள்ளாத பார்வை ; "வெள்ளை நோக்கின் முள்ளெயிற்று......இன்சொலார்", "வெள்ளைமை கலந்த நோக்கிற் கிண்கிணி மிழற்றி யார்ப்பப், பிள்ளைமை காதல் கூர" (சீவக. 1099, 2520.) விரும்புபு விதும்பி - விரும்பி விரைந்து.

101. பாவையையும் பந்தையும் கீழே கிடத்தி ; கிடைஇ - கிடக் கச் செய்து.

பி - ம். [1] தகைமைக். [2] நிவிர்ந்து. [3] விதும்புபு.

புகழப் பட்ட பூமரக் காவினுள்
நந்தி வட்டமு நாகத் தலரும்
சிந்து வாரமுஞ் [1] சேபா லிகையும்
மணிக்குருக் கத்தியும் பணிப்பூஞ் சுள்ளியும்
நாட்சிறு சேடமு நறுஞ்செண் பகமும்
கோட்கமைந் தேந்திய கோலப் பன்மலர்
அம்பூங் குடங்கை யகவயி னடக்கிக்
கொம்பேர் மருங்குல் கோமகற் குறுகித்
திருந்துவாய் திறந்து தேனென மிழற்றிப்
பெருந்தண் [2] மலரிற் பிணைய றொடுத்தென்
பாவையும் யானும் பண்புளிச் சூடுகம்
ஈமி னையவென் றிரந்தன ணிட்ட

(உதயணன் கருதுதலும் மாலை தொடுத்து
விரிசிகைக்கு ஈதலும்)

நூலொடு புணர்ந்த வாலியன் மரபிற்
றவத்தியற் பள்ளி சார்ந்தன ளாறையும்
இயற்கைத் திருமக ளிவளென வெண்ணி
இணைமலர் நெடுங்க ணிமைத்தலும் வாடிய
துணைமலர்க் கோதைத் தோற்றமுங் கண்டே
முனிவர் மகளெனத் தெளிவு முந்துறீஇ
ஐய மின்றி [3] யானை யோட்டிய

103. நந்திவட்டம் - நந்தியா வட்டப்பூ.

104. சிந்துவாரம், சேபாலிகை - நொச்சிமரச்சாதி விசேடங்கள்; உ. 12: 25. சேபாலிகை : இது சோபாலிகை யெனவும் வழங்கும் ; "சுள்ளி சுனைநீலஞ் சோபாலிகை" திணைமா. 2.

105. சுள்ளி - மராமரம்.

107. கோட்கு - கொள்ளுதற்கு. 108. குடங்கை - உள்ளங்கை.

109. கொம்பேர் மருங்குல் - விரிசிகை; எழுவாய். கோமகற் குறுகி - உதயணனை அணுகி. 111. பிணையல் - மாலையை.

112. சூடுகம் - சூடுவேம்.

113. ஈமின் ஐய: ஒருமைப் பன்மை மயக்கம்; "ஐயமற்றிவணின் லைமை கேட்டீமின்" கலி. உசு: 12.

114. வாலியல் மரபின் - தூய்மையான இலக்கணமுறைமையுடன்.

116. ஊறுதிலில் எண்ணி. 119. தெளிவு முந்துறீஇ - தெளிந்து.

பி - ம். 1 சோபாலிகையும். 2 மலரிற்றிணையல். 3 ஆனை.

தெய்வத் திகிரி கைவலத் துயரிய
நிலப்பெரு மன்னர் மகளிர்க் கமைந்த
இலக்கணக் கூட்ட மியற்படத் தெரியா
அரும்படை வழக்கி னன்றியு முனியாது
நரம்புபொரத் தழும்பிய திருந்துவிர லங்கையிற்
புரிநூன் மீக்கோள் பூம்புறத் தேற்றதன்
தெரிநூல் வாங்கி யிருநூற் கொளீஇப்
பவழமும் வெள்ளியும் பசும்பொன் னடரும்
திகழ்கதிர் முத்தமுந் திருமணிக் காசும்
உறழ்படக் கோத்த வொளியின போல
வண்ணம் வாடாது வாசங் கலந்த
தண்ணறும் பன்மலர் தானத் திரீஇ
வாட்டொழிற் றடக்கையின் வத்தவர் பெருமகன்
சூட்டுநலம் புனைந்து சுடர்நுதற் கீய
ஈயக் கொண்டுதன் னெழின்முடிக் கேற்பச்
சூடுத றேற்றாள் சுற்றுபு திரியும்
ஆடமைத் தோளி யலமர னோக்கி
மடவரன் மாதரை வாவென வருளித்
தடவரை மார்பன் [1] றண்முத லுறீஇ
உச்சிக் கேற்ப வொப்பனை கொளீஇப்

---

121. திகிரி - ஆஞ்ஞாசக்கரம்.

123. இலக்கணமுண்மையைத் தெரிந்து.

124. படை வழக்கினன்றியும் - படையைச் செலுத்தலால் தழும்பு பட்டிருத்தலல்லாமலும்.

125. நரம்பு பொர - யாழ்நரம்பு பொருதலாலும்.

126. மீக்கோள் - மேலாடை.

127. இருநூற்கொளீஇ - இரண்டு நூல்களைத் திரித்து.

130. உறழ்பட - மாறுபட. ஒளியின - ஒளியையுடைய கோவைகளை.

132. தானத்து இரீஇ - உரிய இடங்களில் அமைத்து.

134. சுடர்நுதற்கு - விரிசிகைக்கு.

136. தேற்றாள் - அறியாளாகி. 137. உதயணன் நோக்கி.

139. உதயணன் அவளைத் தன் துடையின் மீது இருக்கச்செய்து.

பி - ம். 1 தான்முதல்.

பக்கச் சின்மலர் பத்தியிற் கட்டுபு
நீல நாகம் பைவிரித் தன்ன
கோலச் சிகழிகை தான்முதல் சேர்த்தி
அஞ்செங் கத்திகை பணிபெற வடைச்சிப்
பைங்கேழ்த் தாமம் பக்கம் வளைஇ
இருளறு மதியிற் றிருமுகஞ் சுடர
அமைபுரி தோளியை யன்பி னளைஇப்
புனைமலர்ப் பிணையல் சூட்டினன் புகன்றென்.

௧௫—விரிசிகை மாலைசூட்டு முற்றிற்று.

---

141. சின்மலர் - சிலபூக்களை. 143. சிகழிகை - மயிர்முடி.

142 - 3. கூந்தற்பின்னலுக்குப் பைவிரித்த பாம்பு உவமம்: "பின்னும் வேணிவார் குழலெனுங் கரியபே ரரவம்" (பிரபு. மாயைபூசனை. 7); "பைத்த நெடியகரும் பாம்பென்னப் பின்னுபுமுன், வைத்தகுழல்" (வெங்கையுலா, 239.) 144. அடைச்சி - செருகி.

145. தாமம் - மாலை.

147. அமைபுரி தோளியை - மூங்கில் விரும்பும் தோளையுடைய விரிசிகையை. அளைஇ - கலந்து.

## ௧௬—ஊடலுணர்த்தியது.

(உதயணன் விரிசிகையை விடுத்தல்)

புனைமலர்ப் பிணையல் புரவலன் சூட்டி
[1] இனமடற் பெண்ணை யீர்ங்தோடு திருத்திச்

---

௧௬—ஊடலுணர்த்தியது.

[உதயணன் விரிசிகைக்கு மாலை சூட்டியது முதலியவற்றைக் கண்டு மிகவூடிய வாசவதத்தையை அவன் பலவகையாகப் பாராட்டி உணர்த்தவும் அவள் சிறிதும் சினந்தணியாதிருக்கையில், ஒரு முசுக்கலை அங்கே திடீரென்று விரைந்து வந்ததனைக்கண்டு அஞ்சிய அவள் ஓடிவந்து அவனைத் தழுவிக்கொண்டது இதனால் அறியலாகும்.]

2. பெண்ணை இருந்தோடு - பனையோலை; என்றது காதணியை.

பி - ம். 1 இனமலர்ப்

செல்க நங்கை மெல்ல நடந்தென
அடுத்த காதலொ டண்ணல் விடுப்ப

(வாசவதத்தை காணுதலும் ஊடுதலும்)

வேண்டிடத் தாடும் விருப்புறு நீக்கம்
யாண்டுகழிந் தன்ன வார்வ மூர்தரத்
தழையுங் கண்ணியும் விழைவன வேந்திப்
பொற்பூங் கிண்கிணி புறவடிப் [1] பிறழ
நற்பூங் கொம்பர் நடைபெற் றாங்குக்
கவவுறு காதலிற் கண்ணுற வரூஉம்
உவவுறு மதிமுகத் தொளிவளை முன்கைக்
கண்ணார் கனங்குழை கதுமெனக் கண்டே
மண்ணார் மார்வன் மாதரைச் சூட்டிய
காமர் பிணையற் கதுப்பணி கனற்றத்
தாமரை யன்னதன் றகைமுக மழுங்கா
ஓடரி சிதரிய வொள்ளரி மழைக்கண்
ஊடெரி யுமிழு மொளியே போலச்
சிவப்புள் ளுறுத்துச் செயிர்ப்பு முந்துறீஇ
நயப்புள் ளுறுத்த வேட்கை நாணி
உருத்தரி வெம்பனி யூழூழ் சிதரி

3. நங்காய் மெல்ல நடந்து செல்கவென.

5. விளையாடும் விருப்பத்தாலுற்ற பிரிவினால்.

5 - 6. "பூவிடைப் படினும் யாண்டுகழிந் தன்ன... பிரிவரி தாகிய தண்டாக் காமம்" குறுந். ௫௭ : 1-3.

7. விழையத்தக்க தழையையும் கண்ணியையும் ஏந்தி; 30; 'தழை விழைதக்கனதொடுத்தும்' இறை. சூ. 2, உரை.

9. தழையுங் கண்ணியும் ஏந்தி வருதலின், 'பூங்கொம்பர் நடை பெற்றாங்கு' என்றார்.

10. கவவு - தழுவுதல். கண்ணுற - காண; கண், இடமுமாம்.

11. உவவு - பூரணை. 12. கனங்குழை - வாசவதத்தை.

13. மாதரை - விரிசிகைக்கு; உருபுமயக்கம்.

14. பிணையல் - மாலை. கதுப்பணி - கூந்தலணி; 73.

15. மழுங்கா - ஒளி குறைந்து. 16. சிதரிய - சிதர்ந்த.

18. சிவப்பு - செம்மை நிறம்; கோபக்குறிப்புமாம். செயிர்ப்பு - கோபம். 16 - 8. = 212 : 92.

20. உருத்து - வெய்தாகி. அரிவெம்பனி - அரித்து ஒழுகுகின்ற வெவ்விய கண்ணீரை. வெம்பனி : க. 40 : 191 - 2, அடிக்.

பி - ம். 1 புழற.

விருப்புமறைத் தடக்கி வேக நோக்கமொடு
பனிப்பிறை யழித்த படிமைத் தாகிய
அணித்தகு சிறுநுத லழன்றுவிய சிறிய
உருவ வானத் தொளிபெறக் [1]குலாஅய
திருவி லன்ன சென்றேந்து புருவம்
முரிவொடு புரிந்த முறைமையிற் றுளங்க
இன்பம் பொதிந்த வேந்தணி வனமுலை
குங்குமக் கொடியொடு குலாஅய்க் கிடந்த
பூந்தா தொழுக்கஞ் சாந்தொடு திமிர்ந்து
தளிர்ப்பூங் கண்ணியுந் தழையும் வீசிவிட்
டொளிப்பூந் தாம முள்பரிந்து சிதறி
முழுநீர்ப் பொய்கையுட் பொழுதொடு விரிந்த
செழுமலர்த் தாமரைச் செவ்விப் பைந்தாது
வைக லூதா வந்தக் கடைத்தும்
எவ்வந் தீராது நெய்தற் கவாவும்
வண்டே யனையர் [2]மைந்த ரென்பது
பண்டே யுரைத்த பழமொழி மெய்யாக்

21. வேகநோக்கம் - கோபப் பார்வை.
22. படிமைத்தாகிய - வடிவையுடையதாகிய. [141 - 3.
23. வியர் - வேர்வை. 16 - 23. கோபக்குறிப்புகள்; சிலப். கச :
24. குலாஅய - வளைந்த. [12 : 91.
25. திருவில் - இந்திரவில். சென்றேந்து புருவம் : உ. 2 : 47,
26. முரிவு - வளைவு. [சூழ்ந்து.
28. குங்குமக்கொடி-குங்குமத்தால் எழுதிய பூங்கொடி. குலாஅய்-
29. பூந்தாது - பூந்துகள். திமிர்ந்து - தேய்த்து உதிர்த்து.
30. எந்திவந்த கண்ணியையும் தழையையும் வீசியெறிந்து.
31. உள்பரிந்து - மனம் வருந்தி.
32. பொழுது - சூரியன்; சூரிய உதயமுமாம்.
34. ஊதா - நுகர்ந்து.

36. “பெண்டிர் நலம்வெளவித் தண்சாரற் றாதுண்ணும், வண்டிற் றுறப்பான்மலை” (கலி. சo : 23 - 4); “தாதுண் வேட்கையிற் போதுதெரிந் தூதா, வண்டோ ரன்னவவன்” நற். உ௫ : 9-10.

33 - 6. “கன்னி நறுந்தேறன் மாந்திக் கமலத்தின், மன்னித் துயின்ற வரிவண்டு - பின்னையும்போய், நெய்தற் கவாவு நெடுநாட” நள. கலிநீங்கு. 51.

பி - ம். [1] குலாயத். [2] மாந்த.

கண்டே னொழிகினிக் காமக் கலப்பெனப்
பிறப்பிடைக் கொண்டுஞ் சிறப்பொடு பெருகி
நெஞ்சிற் பின்னி நீங்கல் செல்லா
அன்பிற் கொண்ட வார்வ வேகமொடு
நச்சுயிர்ப் பளைஇ நண்ணல் செல்லாள்
[1] கச்சத் தானைக் காவலன் மடமகள்
பெருமகன் மார்பிற் பிரியா துறையுமோர்
திருமக ளுளளெனச் செவியிற் கேட்பினும்
கதுமெனப் பொறாஅ [2]ளாதலிற் கண்கூ
டதுவவட் கண்டகத் தறாஅ வழற்சியிற்
றற்புடை சார்ந்த தவமுது மகளையும்
கைப்புடை நின்ற காஞ்சனை தன்னையும்
அற்பிடை யறாஅ வெந்தை யணிநகர்
உய்த்தனிர் கொடுமினென் றாழடி யொதுங்கிச்
சிதர்மல ரணிந்து செந்தளி ரொழுகிய
புதுமலர்ச் சோலையுட் புலந்தவ ளகல

---

39. பிறப்பிடைக் கொண்டும் - பிறந்தது தொடங்கி.

41. ஆர்வவேகம் - இராகவேகம்.

39-41. உழுவலன்பினால்; "ஏயர் மன்னனை, உடுத்துவழி வந்த வுழுவ லன்பின், வடுத்தீர் கைவினை வாசவ தத்தை", "தொன்முறை வந்த, பிறப்பிடைக் கேண்மைப் பெருமனைக் கிழத்தி" (உ. 11: 38-40, 18 : 115-6) என வருதலுங் காண்க.

42. நச்சுயிர்ப்பு - நஞ்சுபோல் வெய்தாகிய பெருமூச்சு; க. 46 : 165-6.

43. கச்சம் - ஒருபேரெண்.

44-5. அரசர் திருமால் கூற்றினராதலின், அவர் மார்பில் திருமகளுளளென்பது மரபு. 46. கண்கூடு - பிரத்தியட்சமாக.

47. அது - விரிசிகைக்கு மாலைசூட்டியதை. அழற்சி - கொதிப்பு.

48-9. சாங்கியத்தாயையும் காஞ்சனமாலையையும் நோக்கி என ஒரு சொல் வருவிக்க.

50-51. உச்சயினிக்கு அழைத்துக்கொண்டு செல்லுமினென்று; "தணந்தனை யாயினெம் மில்லுய்த்துக் கொடுமோ" நற். ௩௨௪ : 3.

52. சிதர் - வண்டு; "பொறைதளர் கொம்பின்மேற் சிதரின மிறைகொள" கலி. ௩௪ : 12.

பி - ம். 1 கச்சைத். 2 ளாயினும்.

(காஞ்சனை முதலியோர் செயல்)

அகலு மாதரை யன்பிற் கெழீஇக்
கலைபுணர் கணவனொடு காஞ்சனை பிற்படக்
கண்ணிற் காட்டிக் காம வெகுளி
நண்ணின் மற்றிது [1] நயந்துவழி யோடி
மாசறக் கழீஇ மனத்திடை யாநோய்
ஆரா வாய்முத் தார்த்தி னல்லது
தீரா துயிர்க்கெனத் தெளிவு முந்துறீஇ
ஊராண் குறிப்பினொ டொருவயி னொதுங்கும்
தன்னமர் மகளொடு தாய்முன் னியங்க

(உதயணன் செயல்)

[2] நறவிளை தேற லுறுபிணி போலப்
பிறிதிற் றீராப் பெற்றி நோக்கிக்
குறிப்புவயின் வாரா ராயினுங் கூடிப்
பொறிப்பூ ணகத்துப் புல்லுவன னொடுக்கி
அருமைக் காலத் தகலா நின்ற
திருமகட் பரவு மொருமகன் போல
உரிமைத் தேவி யுள்ளக நெகிழும்
வழிமொழிக் கட்டளை வழிவழி யளைஇ

---

54 - 5. வாசவதத்தையை உதயணனும் காஞ்சனையும் பின் தொடர்ந்து செல்ல.

56. காட்டி - குறிப்பித்து ; குறிப்பித்தவன் சாங்கியத்தாய்.

57. இது - இவ்வெகுளி. 58. கழீஇ - கழுவி.

58-9. நோயைக் கழீஇ ஆர்த்தினல்லது.

61. ஊராண் குறிப்பு - உபகாரக் குறிப்புடன் ; "ஒன்றுற்றக்கால், ஊராண்மை மற்றத னெஃகு" குறள், 773.

61 - 2. குறிப்பொடு தாய் முன் இயங்க.

63. தேறல் உண்டாக்கிய கள்ளின் தெளிவு: உ. 2: 177.

63 - 4. கள்ளாலுண்டாகிய நோயைக் கள்ளே தீர்ப்பதுபோலத் தன்னாலுண்டாகிய ஊடலைத் தானே தீர்க்கவேண்டுமென உதயணன் கருதி ; "கள்ளினாற் கள்ளறுத்தல் காண்டு மதுவன்றே, முள்ளினான் முட்களைபு மாறு" பழ. 54. [திருமகளை ; க. 35: 137-8, அடிக்.

67-8. நல்வினையின்மையாகிய காலத்தில் தன்னை விட்டு நீங்குகின்ற

70. பணிவைப் புலப்படுத்தும் சொற்றொடர்களைப் பின்னும் பின்னும் சொல்லி.

பி - ம். 1 நவந்து. 2 நறவினைத்.

முடியணி திருத்தியு முலைமுதல் வருடியும்
அடிமிசைக் கிண்கிணி யடைதுக ளகற்றியும்
கதுப்பணி புனைந்துங் கதிர்வளை யேற்றியும்
மதுக்களி கொண்ட மதரரி நெடுங்கட்
கடைத்துளி துடைத்துங் கடிப்புப்பெயர்த் தணிந்தும்
புதுத்தளிர் கொடுத்தும் பூம்புற நீவியும்
செயிரிடை யிட்டிது [1] சிறக்குவ தாயின்
உயிரிடை யிட்ட வுறுகண் டருமெனத்
தன்னுயிர்க் கணவ னுண்ணெகிழ்ந் துரைக்க
அம்மொழி கேளா தசைந்த மாதரை
அருவி யாற்றிசை யணிமுழ வாகக்
கருவிரன் மந்தி பாடக் கடுவன்
குரவை யயருங் குன்றச் சாரற்
றுகிலிணைப் பொலிந்த பகலணைப் பள்ளியுள்
முகிழ்ந்தேந் திளமுலை முத்தொடு முயீஇத்
திகழ்ந்தேந் தகலத்துச் செஞ்சாந்து சிதையப்

(வாசவதத்தை உரைத்தல்)

பூண்வடுப் பொறிப்பப் புல்லுவயின் வாராள்
நாணொடு மிடைந்த நடுக்குறு [2]மழலையள்

75. கடிப்பு - ஒருவகைக் காதணி.
76. புறம் நீவியும் - முதுகைத் தடவியும்.
77. என்குற்றத்தை மனத்திடத்தே கொண்டு ஊடல் மிகுமாயின்.
78. மரணத்துன்பத்தைத் தருமென்று.
80. அசைந்த - ஊடலால் மெலிந்த.
81. அருவியொலிக்கு முழவொலி உவமை; "பெருவரை மிசையது நெடுவெள் ளருவி, முதுவாய்க் கோடியர் முழவிற் றதும்பி" (குறுந். எஅ : 1-2); "முழவின்னிசை மூரி முழங்கருவி" சீவக. 1193.
82. மந்தி - பெண்குரங்கு. கடுவன் - ஆண்குரங்கு.
84. இணை - இணைத்தல்.
85. "முலைக்கண்ணு முத்து முழுமெய்யும் புல்லும், இலக்கணம்" நாலடி. 399. முயீஇ-முழுவி; முத்தாடி; "முறுவலக் காறந்து வந்தென் முலைமுழு வித்தழுவி" (திருச்சிற். 227); "என்மார்வத் திடையழுந்தத் தழுவாதே முழுவாதே" பெருமாள்திருமொழி, கூ: 6.
87. மு. உ. 19: 111-3. புல்லுவயின் வாராள் - அணைக்கும்பொழுதும் மனமிரங்காளாகி.

பி - ம். 1 சிதைக்குவ. 2 மிழலையள்.

காம வேக முள்ளங் கனற்றத்
தாமரைத் தடக்கையிற் றாமம் பிணைஇ
ஆத்த வன்பி னரும்பெறற் காதலிக்
கீத்தது மமையாய் பூத்த கொம்பின்
அவாவுறு நெஞ்சமொடு கவான்முத லிரீஇத்
தெரிமலர்க் கோதை திகழச் சூட்டி
அரிமலர்க் கண்ணிநின் னகத்தன ளாக
அருளினி விழைந்த மருளி னோக்கின்
மாதரை யாமுங் காதலெம் பெரும
பொம்மென் முலையொடு பொற்பூ ணொருங்க
விம்ம முறுமவள் வேண்டா முயக்கெனப்
பண்ணெகிழ் பாடலிற் பழத்திடைத் தேன்போல்
உண்ணெகிழ்ந்து கலவா வூடற் செவ்வியுள்

(ஒரு முசுக்கலையின் செயல்)

தாழ்வரை யடுக்கத்துத் தளிர்சேர் தேமாத்
தூழுறு தீங்கனி யுண்ணு விருத்தலின்
இவறினை நீயெனத் தவறு முந்துறீஇ
இனப்பெருந் தலைமக னிணையி னொட்டித்

89. காமவேகம் - இராகவேகம்; உ. 16: 41, 19: 166; ந. 7: 43, 8: 3, 14: 104. 90. தாமம் பிணைஇ - மாலை தொடுத்து.

91. ஆத்த அன்பின் - பிணித்த அன்பினால்; "அங்காத்திருந் தானே" (சீவக. 1882) என்பதையும் அதன் உரையையும் பார்க்க.

93. கவான்முதல்-தொடையில். 96. மருளின்-மருட்சியையுடைய.

97. காதலெம் - விரும்புதலுடையேம்.

99. விம்மமுறும் அவள் - அவள் விம்முதலுறுவாள்; ச. 6: 37. முயங்குதல் வேண்டாவென்று.

101. ஊடற்செவ்வியுள் - வாசவதத்தை ஊடுதல் மிக்க சமயத்[தில்.

102. அடுக்கம் - மலைப்பக்கம். தேமாத்து - தேமாமரத்தினது; "கழனி மாஅத்து விளைந்துகு தீம்பழம்" குறுந். அ.

103. உண்ணுவிருத்தலின் - தனக்குக்கொடாமல் உண்டுகொண்[டிருத்தலால்.

104. இவறினை - பேராசையுற்றாய்.

105. இனப்பெருந் தலைமகன் - குரக்கினங்களுக்கெல்லாம் பெரிய தலைமகனாகிய ஒருகுரங்கு; தலைமகனென்பது, "கடுவன் முதுமகன்" (நன். மயிலை. ப. 234, 271, மேற்.) என்றாற் போல்வது; "குரங்கின் றலைவன்" (ஐங். உஎகூ: 1.) ஒட்டி-ஒட்ட; வருத்தி ஓட்ட.

தனக்கரண் காணாது தடவரைத் தத்திப்
பெருமகன் கோயிற் றிருமுற் பாய்ந்தெனக்
கரணீ யருளென் றடைவது போன்றோர்
கருமுக முசுக்கலை கதுமெனத் தோன்ற

(வாசவதத்தை நடுங்கி ஊடல் தீர்தல்)

[1] இன்னதென் றுணரா நன்னுத னடுங்கி
அழல்கதிர் பரப்பி யுழல்சேர் [2]வட்டமொடு
நிழலவிர் கதிர்மதி நிரந்துநின் றாங்குத்
திலகத் திருமுகஞ் செவ்வன் றிருத்தி
ஒழுகுகொடி மருங்கு லொன்ற யொட்டி
மெழுகுசெய் பாவையின் மெல்லிய லசைந்து
மன்னவன் மார்பின் மின்னென வொடுங்கி
அச்ச முயக்க [3]நச்சுவனள் விரும்பி
அமிழ்துபடு போகத் தற்புவலைப் படுத்த

(உதயணன் செயல்)

மாதரை மணந்த தார்கெழு வேந்தன்

---

106. அரண் - புகலிடத்தை.

107. பெருமகன் - உதயணனது. கோயிலென்றது முன்கூறிய பகலணைப் பள்ளியை; 84.

108. அரண் நீ. செவ்வியுள் (101) தோன்ற (109.)

110. நன்னுதல் - வாசவதத்தை.

109-10. "பலவி னிருஞ்சினைக் கலைபாய்ந் துகளினும், அஞ்சுமனளித்தெ னெஞ்சம்" நற்றி. கஙஅ: 2-3.

111 - 2. சூரியமண்டலத்துடன் சந்திரமண்டலம் சேர்ந்தாற் போல; இஃது உதயணனை வாசவதத்தை சென்று தழுவியதற்கு உவமை; க. 32: 22.

113. திருத்தி-திருந்தச் செய்துகொண்டு.

115. மெழுகாற் செய்த பாவைபோல வாசவதத்தை உருகி மெலிந்து; "மெழுகினாற் புனைந்த பாவை வெய்துறுத் தாங்கு" சீவக. 1386.

117. அச்சமுயக்கம் - அச்சத்தால் வந்து தழுவுதலை.

118. அமிழ்து - இனிமை. அற்புவலை - அன்பாகிய வலையில்.

102 - 18. முசுக்கலையின் தோற்றத்தால் வாசவதத்தை ஊடல் தீர்த்தமை; "விரிசிகை வேண்ட......பாவாய்" (உ. 19: 164 - 70) என்ற இடத்தும் கூறப்பட்டுள்ளது.

பி - ம். 1 இன்னதொன்று. 2 வட்டம். 3 நசசுவன.

[1] வழித்தொழிற் கரும மனத்தி னெண்ணுன்
விழுத்தகு மாதரொடு விளையாட்டு விரும்பிக்
கழிக்குவனன் மாதோ கானத் திளிதென்.

கசு—ஊடலுணர்த்தியது முற்றிற்று.

---

120. வழித்தொழிற்கருமம் - பின்செய்யவேண்டிய காரியங்களை.

பி - ம். 1 வழுத்தொழித்.

---

## கஎ—தேவியைப் பிரித்தது.

கழிக்குங் காலைக் கானத் தகவயின்

(யூகியின் செயல்)

வழுக்கி றேழரொ டிழுக்கின் றெண்ணி
[1] வந்தவ ணொடுங்கிய வெந்திற லமைச்சன்
பொய்ந்நில மமைத்துப் புரிசைக் கோயில்
வெவ்வழ லூற்இ விளங்கிழைப் பிரித்து
நலத்தகு சேதா நறுநெய்த் தீம்பால்
அலைத்துவாய்ப் பெய்யு மன்புடைத் தாயின்
இன்று செய்து மன்னனை நீறாஉம்

---

### கஎ—தேவியைப் பிரித்தது.

[யூகி, காமபரவசனுகவிருக்கும் உதயணனை வாசவதத்தையினின்றும் பிரித்து இராசகாரியத்தைக் கருதும்படி செய்வித்தற்குத் தோழருடனெண்ணி, மலைச்சாரலில் உலாவி இன்புறும் அவ்விருவரையும் சாங்கியத் தாயைக்கொண்டு இலாவாண நகரத்திலிருக்கும்படி முதலிற் செய்வித்ததும், அப்பால் வாசவதத்தையின் வேண்டுகோளின்படி உதயணன் காடுசென்று வேண்டுவகொண்டு மீளுவதற்குள் அரண்மனையில் தீப்பற்றச் செய்வித்து உள்ளேயிருந்த வாசவதத்தையைச் சாங்கியத் தாயுடன் அதிலிருந்த சுருங்கை வழியே தானிருக்குமிடத்திற்கு வருவித்து உண்மைகூறி அவளைத் தேற்றியதும் இதனால் அறியலாகும்.]

2. இழுக்கின்று - தப்பாமல்.
3. அவண் ஒடுங்கிய அமைச்சன் - யூகி.
4. பொய்ந்நிலம் - சுருங்கை; இது கரந்துபடை யெனவும் வழங்கும்.
5. விளங்கிழை - வாசவதத்தையை.

பி - ம். 1 வந்தவணொடுங்கிய.

கருமக் கடுக்க மொருமையி னுடி
உருமண் ணுவாவொடு வயந்தகற் குணர்த்தித்
தவமுது மகளைத் தக்கவை காட்டி
உயர்பெருங் கோயிலுட் டேவியை யொழியா
நிலாமணிக் கொடும்பூ ணெடுந்தகைக் குருசிலை
உலாவெழப் போக்கி யொள்ளழ லுறீஇயபின்
இன்னுழித் தம்மினென் றன்னுழி யவளொடு
[1] பின்கூட் டமைவும் பிறவுங் கூறிக்
[2] கன்கூட் டெய்திக் கரந்தன னிருப்ப

(சாங்கியத்தாயின் செயல்)

மந்திர நாவி னந்த ணுட்டி
தேருடை மன்னர் திறல்படக் கடந்த
போரடு குருசிலைப் பொழுதிற் சேர்ந்து

---

9. கடுக்கம் - விரைவு; "கடுக்கனே கயிலாய மலைதனை, யெடுக்க லுற்ற விராவண னீடற" தேவாரம்.

6 - 9. வருத்திக் குழந்தைக்குப் பாலையூட்டுந் தாய்போலத் தன் புறுத்தி உதயணனை நல்வழியில் நிறுத்தற்குரிய காரிய விரைவை யூகி நாடி; "உலப்பி லுலகத் துறுதியை நோக்கிக், குலைத்தடக்கி நல்லறங் கொள்ளார்க் கொளுத்தல், மலைத்தழு துண்ணுக் குழவி யைத் தாய, ரலைத்துப்பால் பெய்து விடல்" (பழ. 212); "காலொடு கையமுக்கிப் பிள்ளையை வாய்நெரித்துப், பாலொடு நெய்பெய்யுந் தாய னையர்-சால, அடக்கத்தை வேண்டி யறன்வலித்து நாளும், கொடுத்து மேற் கொண்டொழுகு வார்" அறநெறி. 46.

11. சாங்கியத்தாய்க்கு. 12. தேவியை விட்டு நீக்கி.

13. குருசிலை - உதயணனை. 14. உலாவெழ - உலாவ எழும்படி.

13 - 4. "உலாவேட் டெழுந்த வுதயண குமரன்" என்பர். பின்; உ. 18: 4.

15. இன்னுழி - இன்ன இடத்தில். அன்னுழி - அவ்விடத்தில்; "அன்னுழி யுமையவ ளகத்து ளோர்செய, லுன்னினள்" கந்த. பார்ப்.

16. பின்கூட்டமைவும் - பின்பு வந்து அடைதலையும். [பதி. 1.

17. கன்கூட்டெய்தி - கற்களைக் கூட்டி அமைக்கப்பட்ட சுருங் கையையடைந்து; க. 40: 84, அடிக். கன்கூட்டு - தோண்டிய இடமுமாம்.

18. அந்தணுட்டி: எழுவாய். 20. குருசிலை - உதயணனை.

பி - ம். 1 பினகூட்டமையும். 2 கண்கூட்.

வரையுடைச் சாரலில் வருஉங் குற்றத்
துரையுடை முதுமொழி யுரைத்தவற் குணர்த்தித்
(சாங்கியத்தாய் உதயணனுக்குக் கூறல்)
தோற்கை யெண்குங் கோற்கைக் குரங்கும்
மொசிவா யுழுவையும் பசிவாய் முசுவும்
வெருவு தன்மைய வொருவழி னொருநாட்
கண்ணுறக் காணிற் கதுமென நடுங்கி
ஒண்ணுதன் மாத ருட்கலு முண்டாம்
பற்றா ருவப்பப் பனிவரைப் பழகுதல் .
நற்றார் மார்ப நன்றியின் றாகும்
இன்னெயிற் புரிசை யிலாவா ணத்துநின்
பொன்னியல் கோயில் புகுவது பொருளென
(உதயணன் இலாவாணம் சென்று இருத்தல்)
உறுவரை மார்ப னுவந்தன னாகி
இறுவரை யிமயத் துயர்மிசை யிழிந்து
பன்முகம் பரப்பிப் பௌவம் புகூஉம்
நன்முகக் கங்கையி னகர நண்ணிப்
பன்மலர்க் கோதையைப் பற்றுவிட் டகலான்
சின்னாள் கழிந்த காலைச் சிறந்த
(தோழர் உதயணனிடம் கூறுதல்)
நன்மாண் டோழர் நண்ணுபு குறுகிச்

---

21 - 2. குற்றத்தைப் புலப்படுத்தும் பழங்கதைகளை.
23. எண்கு - கரடி.
24. மொசிதல் - ஈ மொய்த்தல்; "பலர்மொசிந் தோம்பிய திரள்பூங் கடம்பு" பதிற். கக. [உளதாகும்.
27. மாதர் - வாசவதத்தை. உட்கலும் உண்டாம் - அஞ்சுதலும்
23 - 7. "அச்சப் பொருளாவன :—'வள்ளெயிற் றரிமா வான் வரி வேங்கை...குன்றுறை யகணம்' என்று சொல்லப்பட்டன போல்வன" (தொல். மெய். சூ. 1, பேர்.) என்பது இங்கே அறியற்பாலது.
28. பற்றார் - பகைவர்.
30. இலாவாணத்து - இலாவாண நகரத்துள்ள.
31. பொருளென - காரியமாகுமென்று சாங்கியத்தாய் கூற.
34. பன்முகம் - ஆயிரமுகம்; "கங்கை, துறைகொ ளாயிர முகமுஞ் சுழல" (கல். "உறைகின்றிரும்".) பௌவம் - கடலில்.
34 - 5. "கங்கையம் பேரியாறு கடற்படர்ந் தாங்கு!" மதுரை.
36. பற்று - நீங்காத அன்பு. [696.

செய்வினை மடிந்தோர்ச் சேர்ந்துறை வில்லை
மையறு தாமரை மலர்மக ளானெனல்
வையகத் துயர்ந்தோர் வாய்மொழி யாதலின்
ஒன்னா மன்னர்க் கொற்றுப்புறப் படாமைப்
பன்னாட் பிரிந்து [1] பசைந்துழிப் பழகாது
வருவது பொருளென வாசவ தத்தையைப்
(உதயணன் மறுத்தலும் வாசவதத்தையின் கூற்றும்)
பிரித லுள்ளம் பெருந்தகை மறுப்பத்
தாழிருங் கூந்தலைத் தணப்ப நின்றதோர்
ஊழ்வினை யுண்மையி னொளிவளைத் தோளியும்
வேட்டம் போகி யடிகள் காட்டகத்
தரும்பினு மலரினும் பெருஞ்செந் தளிரினும்
கண்ணி கட்டித் தம்மி னெனக்கென
(உதயணன் வேட்டைக்குச் செல்லல்)
வள்ளிதழ் நறுந்தார் வத்தவ மன்னனும்
உள்ளம் [2] புரிந்தன னொள்ளிழை யொழியக்
கழிநாட் காலைக் கான நோக்கி
[3] அடுபோர் மாவூர்ந் தங்க ணீங்க
(அமைச்சர் ஏவலாளர் வாசவதத்தையின் மாடத்திற்குத் தீ மூட்டல்)
வடுநீங் கமைச்சர் வலித்தன ராகிப்
பிணைமலர்ப் பட்டைப் பிரச்சோ தனன்றன்

---

39. மடிந்தோர் - சோம்புதலுற்றோர்.

39 - 40. மடிந்தோர்பால் திருமகள் சேராளென்பது, "மடி யுளாண் மாமுகடி யென்ப மடியிலான், றாளுளா டாமரையி னாள்" (குறள், 617) என்பதனால் விளங்கும்.

42. ஒற்று - ஒற்றர்களால்.

43. ஓ. கு. 2 : 169. பசைந்துழி - பற்றுள்ள இடத்தே.

44. என - என்று தோழர்கள் சொல்ல.

45. பிரியுங் கருத்தை உதயணன் மறுக்க.

47. வளைத்தோளி - வாசவதத்தை.

50. என - என்று சொல்ல. 52. புரிந்தனன் - விரும்பி.

53. கழிநாட்காலை - மறுநாள் விடியலில்.

54. உதயணன் சென்றுவிட. 55. வலித்தனராகி - துணிந்து.

56. பிணைத்த மலர்மாலையையுடைய.

பி - ம். 1 பசந்துழி. 2 புரிதன்ன. 3 அடும்போர்.

இணைமலர்ப் பாவையை யியைந்ததற் கொண்டும்
ஊக்க மிலனிவன் வேட்கையின் வீழ்ந்தென
வீக்கங் காணார் வேட்டுவ ரெள்ளிக்
கலக்க மெய்தக் கட்டழ லூஉறீஇய
தலைக்கொண் டனரெனத் தமர்க்கும் பிறர்க்கும்
அறியக் கூறிய செறிவுடைச் செய்கை
வெஞ்சொன் மாற்றம் வந்துழைக் கூட
வன்கண் மள்ளர் வந்தழ லூஉறீஇப்
போர்ப்பறை யரவமொ [1]டார்ப்பனர் வளைஇக்
கோப்பெருந் தேவி போக்கற மூடிக்
கைபிகந்து பெருகிய செய்கைச் சூழ்ச்சியுட்

(உருமண்ணுவா முதலியோர் செயல்)

பொய்ந்நில மமைத்த பொறியமை மாடத்
திரும்பும் வெள்ளியு மிசைத்துருக் குறீஇ
அருங்கல மாக்கி யாப்புப்பிணி யுழக்கும்
கொலைச்சிறை யிருவரைப் பொருக்கெனப் புகீஇ
கலத்தகு மாத ரடிக்கல முதலாத்
[2] தலைக்கலங் காறுந் தந்தகத் தொடுக்கிச்

57. இணைமலர் - இணைத்த மலர். இயைந்ததற்கொண்டும் - அடைந்தது முதல்.

58. வேட்கையின் வீழ்ந்து - ஆசைக்கடலில் அழுந்தி.

59. வீக்கம் - பெருமையை.

60. அழலூஉறீஇய - நெருப்புவைத்தற்கு.

62. செறிவுடைச் செய்கை: 78.

66. கோப்பெருந்தேவி - வாசவதத்தை.

68. பொய்ந்நிலம் - சுருங்கை வழி. பொறி - யந்திரம்.

69. கொடுத்த பொன்னில் தாம் திருடிய பொன்னுக்கு ஈடாக இரும்பையும் வெள்ளியையும் சேர்த்து உருக்கி.

70. அருங்கலம் - கிரீடம்; அரிய ஏனை அணிகலன்களுமாம். யாப்புப்பிணியுழக்கும் - விலங்காற் பிணிப்புண்டு வருந்தும்.

71. கிரீடத்திற்குக் கொடுத்தபொன்னைத் திருடி இராசத்துரோகம் செய்தவராதலின், "கொலைச் சிறை யிருவர்" என்றார்; "கன்வினைக் கோறல் கடுங்கோ லன்று" (சிலப். உ0: 64) என்பது இங்கே அறியற் மாடத்துப் (68) புகுத்தி (71.) [illegible] [பாலது.

72. மாதர் - வாசவதத்தையின்; [illegible]

73.—உ. 19: 65. அகத்து - அவ்வீட்டினுள்ளே; [illegible]

பி - ம். [1] டார்ப்பனவின்இக் [2] [illegible]

சித்திரப் பெரும்பொறி யுய்த்தன ரகற்றி
வத்தவர் கோமான் மனத்தமர் துணைவியொடு
தத்துவச் செவிலியைத் தலைப்பெருங் கோயில்
மொய்த்தழல் புதைப்பினும் புக்கவட் [1] போமினென்
றத்தக வமைத்த யாப்புறு செய்கையொ
டருமணி வரைப்பக மாரழ [2] லுறீஇய
கருமக் கள்வரைக் கலங்கத் தாக்கி
உருமண் ணுவாவு மொருபா லகலப்
பொறிவரித் [3] தவிசிற் பொன்னிறப் பலகை
உறநிறைத் தியற்றி யுருக்கரக் குறீஇய
மாடமும் வாயிலு மோடெரி கவர

(சாங்கியத்தாய் வாசவதத்தையைக்கொண்டு யூகிபாற் செல்லல்)

இளையரு மகளிருங் களைகண் காணார்
வேகுறு துயரமொ டாகுல மெடுப்பத்
தடங்கண் பிறழத் தளர்பூங் கொடியின்
நடுங்கிவெய் துயிர்க்கு நன்னுதற் பணைத்தோட்
டேவியைப் பற்றித் தெரிமூ தாட்டி
யூகி கூறிய வொளிநில மருங்கிற்
பெருங்கல நிதியம் பெய்துவா யமைத்த
அரும்பிலத் தியாத்த வச்ச மாந்தர்
வாயில் பெற்று வழிப்படார்ந் தாங்குப்
போக வமைத்த பொய்ந்நிலச் சுருங்கையுள்

---

74. சித்திரப்பெரும்பொறி - சுருங்கைக்குச் செல்லுதற்குரிய வழியிலுள்ள பொறியை.

75. துணைவியொடு - வாசவதத்தையோடு.

79 - 81. = உ. 18: 60 - 63.

82. பொறிவரித்தவிசு - புலித்தோல் ஆசனம்; சிங்காதனமுமாம்.

84. எரி கவர - தீக் கவர்தலால்.

86. ஆகுலம் - துன்ப முழக்கம்.

90. ஒளிநிலம் - ஒளித்துக்கொள்ளுதற்குரிய இடம்.

91. பெய்து - போகட்டுவிட்டு.

91 - 2. வாய் அமைத்த அரும் பிலத்து - பொதியறையில்; இதில் அகப்பட்ட மாந்தர் அஞ்சிவருந்துதலை, "பொதியறைப் பட்டோர்போன் றுளம் வருந்தி" (மணி. ௪ : 105, கக : 8) என்பதனாலும் அறிக.

பி - ம். 1 போமினென. 2 லுறீஇயக். 3 தவிசின.

நற்புடை யமைச்சனை நண்ணிய பொழுதிற்
கற்புடை மாதரைக் காதற் செவிலி
அற்புடைப் பொருள்போ லறிவிற் காட்டி
அஞ்சி லோதி யஞ்சனும் பெருமான்
நெஞ்சுபுரை யமைச்ச னீதியிற் செய்து
வஞ்ச மிதுவென வலிப்பக் கூறி
அருந்திற லமைச்சனொ டொருங்குதலைப் பெய்தபின்
இன்னகை முறுவலொ டெண்ணியது முடிந்தெனத்
தெறிதேர் பூந்து விரும்பி யூகி யிறைஞ்சி
மதிபுரை முகத்திக்கு மற்றிது கூறும்

(யூகி கூறல்)

இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் ஞாலத்துத்
[1] தன்னி னல்லது தாமீக் [2]கூரிய
மன்னரை வணக்கு [3] மறமாச் சேனன்
காதன் மகளே மாதர் மடவோய்
வத்தவர் பெருமகன் வரைபுரை யகலத்து

95. நற்புடையமைச்சனை - நன்மையையுடைய மந்திரியாகிய யூகியை; நற்பு - நன்மை, புடை - பக்கமுமாம்; "காவற்சாகா டுகைத் தற்கண் அவ்வரசற்கு இணையாய அமைச்சன்" (குறள், அங்க. அவதாரிகை.) 97. போறிவின் - போறிவால்.

98. அஞ்சிலோதி: விளி. அஞ்சல் - அஞ்சாதே.

100. இது - இச்செய்கை. வலிப்ப - துணியும்படி.

102. இன்னகை முறுவல் - மகிழ்ச்சியாலுளதாகிய சிரிப்பு; முறுவற்குக் காரணம், எண்ணியது முடிந்தமை; "உள்ளிய, வினைமுடித் தன்ன வினியோள்" (நற். ௩); "செய்வினை முடித்த செம்மலுள்ளமொடு" (குறுந். உஎ0, உஎ௯.) 104. கூறும் - கூறுவான்.

105. ஒ. புறநா. ௩௬௩ : 1.

106 - 7. தன்னால் உயர்வடைவதையன்றித் தாமே மீக்கூர்ந்த அரசர்களை வழிப்படுத்தும். "நட்டவர் குடியுயர்க்குவை, செற்றவ ரரசு பெயர்க்குவை" (மதுரை. 131-2), "நட்டாரை யாக்கிப் பகைதணித்து" (பழ. 398, சிறுபஞ்ச. 18), "மாறுநின் றவரையும் வணக்கி னல்லது, சீறுநின் றவரையுஞ் செகுப்ப தில்லையே" (சூளா. நகர. 19) என்பவற்றின் கருத்து இவ்வடிகளில் அமைந்துள்ளது.

பி - ம். 1 தன்னின். 2 கூறிய. 3 மறமாச்சேனன்.

வித்தக நறுந்தார் விருப்பொடு பொருந்தி
நுகர்தற் கமைந்த புகர்தீர் பொம்மற்
கோல வனமுலைக் கொடிபுரை மருங்குல்
வால்வளைப் பணைத்தோள் வாசவ தத்தாய்
அருளிக் கேண்மோ வரசியல் வழாஅ
இருளறு செங்கோ லேய [1] நிறைவன்
சேனை காப்பனும் பெருமான் செய்த
யானை மாயத் தருந்தளைப் [2] படுதலிற்
கொங்கலர் நறுந்தார்க் கோல மார்பிற்
பிங்கல கடகர் பெற்றியிற் பிழைப்பப்
பாஞ்சால ராயன் பரந்த படையொடு
மாண்கோ சம்பி வெளவியது மறியான்
அருஞ்சுழி நீத்தத் தாழு மொருவன்
பெரும்புணை பெற்ற பெற்றி போல
நிற்பெறு சிறப்பொடு நெடுநகர் புகல
முற்படத் தோன்றிய முகைப்பூண் மார்வன்
தற்படு துயரந் தன்மனத் தணையான்
மட்டுறு கோதாய் மற்றுநின் வனமுலை
விட்டுறை வாற்ரு வேட்கையிற் கெழுமிப்
பட்டுறை பிரியாப் படிமையி னவ்வழி
ஒட்டிடை விட்டபி னல்லதை யொழிதல்
வாணுதன் மடவோ யரிதுமற் றதனாற்
சேண்வரு பெருங்குடிச் சிறுசொ னீங்க
ஆர்வ நெஞ்சத் தாவது புகலும்

114. அருளிக்கேண்மோ - கேட்டருள்.
116. நம்பெருமான் - உன் தந்தையாகிய பிரச்சோதனன்.
119. பிங்கல கடகர் - உதயணனுடைய தம்பியர்.
120. பாஞ்சாலராயன் - பாஞ்சாலதேசத்து அரசன். படையொடு வந்தெனஒரு சொல் வருவிக்க. 121. உதயணன் அறியானுகி.
124. புகல - விரும்ப. 128. கெழுமி - மயங்கி.
129. பட்டுறை - பட்டாலாகிய உறை. படிமை - பிரதிமை.
130. ஒட்டு - சேர்ந்தஉறைதல்.
132. சிறுசொல் - காமபரவசனுகியுள்ளானென்னும் இழிசொல்.
133. ஆவது - ஆக்கம்; பயனுமாம்.

பி - ம். 1 நிறைவனைச். 2 படுத்தலிற்.

இன்னுயி ரன்ன வென்னையு நோக்கி
மன்னிய தொல்சீர் மரபிற் றிரியா
நலமிகு பெருமைநின் குலமு நோக்கிப்
பொருந்திய சிறப்பி னரும்பெறற் காதலன்
தலைமையின் வழீஇய நிலைமையு நோக்கி
நிலம்புடை பெயரினும் விசும்புவந் திழியினும்
கலங்காக் கடவுணின் கற்பு நோக்கி
அருளினை யாகி பழியா வமைச்சியல்
பொருளெனக் கருதிப் பூங்குழை மடவோய்
ஒன்னா மன்னனை யுதயண குமரன்
இன்று செய்தத [1] னிகன்மேம் படநினைச்
சின்னாள் பிரியச் சிதைவதொன் றில்லை
வலிக்கற் பாலை வயங்கிழை நீயென்
றொலிக்குங் கழற்கால் யூகி [2] யிரப்ப

(வாசவதத்தை தன்னுட் கருதுதல்)

நெறிதா ழோதி நெஞ்சி னகத்தே
பொறிதாழ் மார்பிற் புரவலற் கிசைந்த
நூல்வல் லாளர் நால்வ ருள்ளும்
யூகி முடிந்தன னுருமண் ணுவாவொடு
வாய்மொழி வயந்தக னிடபக னென்ற
மூவரு மல்லன் முன்னின் றிரப்போன்
யாவன் கொல்லிவ [3]னென்றவற் கெதிர்மொழி
யாவதுங் கொடாஅ ளறிவிற் சூழ

(சாங்கியத்தாய் கூறல்)

விம்முறு நிலைமை நோக்கித் துன்னிய
உறுதி வேண்டும் யூகி மற்றிவன்

---

134. "உயிர்புரை யூகியோ டெண்ணி" நன். மயிலை. சூ. 366, [மேற்.
139. விசும்பு - மேலுலகம்.
140. நின்கடவுட்கற்பு - நின்னுடைய தெய்வத்தன்மையுள்ள கற்பு.
143. ஒன்னாமன்னனை - பாஞ்சாலராயனை.
144. மேம்பட - மேம்படுதற்கு.
பொருளெனக்கருதி (142) வலிக்கற் பாலை (146.)
154. என்ற - என்றெண்ணி.
156. வாசவதத்தை விம்முறு நிலைமையைச் சாங்கியத்தாய் கண்டு.
157. நமக்கு உறுதியை வேண்டுகின்ற யூகியாவான் இவன்.
பி - ம். 1 னிகன மெம்படுகினைச். 2 புரைப்ப. 3 னென்றிவற்.

இறுதி செப்பி யிவண்வந் தோனெனத்
தாய்தெரிந் துரைப்பச் சேயிழை தேற்றி

(வாசவதத்தை செயல்)

உரைத்த கருமத் துறுதி விழுப்பமும்
கருத்துநிறை காணாது கண்புரை தோழன்
வலித்த கருமமும் வத்தவர் பெருமகன்
உதயண குமரன் யூகி யென்பதை
உரையினு முடம்பினும் வேறெனி னல்ல
துயிர்வே றில்லாச் செயிர்தீர் சிறப்பும்
திண்ணிதி னறிந்த செறிவின ளாயினும்
பெண்ணியல் பூர்தரப் பெருங்கண் பில்கிக்
குளிர்முற் றாலி குளிர்புள் ளுருஅ
தொளிமுத் தாரத் துறைப்பவை யாக்கி
அரிமா னன்ன வஞ்சுவரு துப்பினெம்
பெருமான் பணியன் றாயினுந் தெரிமொழி
நூலொடு பட்ட நுனிப்பியல் வழாமைக்
கால வகையிற் கருமம் பெரிதெனல்
நெறியிற் றிரியா நீர்மையிற் காட்டி
உறுகுறை யண்ணா லிவன்வேண் டுறுகுறை
நன்றே யாயினும் தீதே யாயினும்
[1] ஒன்று வலித்த வுறுதி யுடைத்தெனக்

---

158. இறுதி - மரணத்தை. 160. விழுப்பம் - சிறப்பு.

161. கருத்துநிறை காணாது - உதயணன் உள்ளத்தை நிறுத்தல் காணாமையால். கண்புரை தோழன் : உ. 10 : 101, 11 : 166.

162 - 3. வத்தவர் பெருமகனாகிய உதயண குமரன். என்பதை ; ஐ : சாரியை.

165. இருவர்க்கும் உயிரொன்றென்று யாரும் சொல்லுதற்குரிய குற்றந்தீர்ந்த மிக்க நட்பையும் ; " உயிரோ ரன்ன செயிர்தீர் நட்பு " நற்.

167. பெண்ணியல்பு - பேதைமை.

168. ஆலி - நீர்த்துளி.

169. முத்தாரத்து - முத்தாரத்தைப் போல; " வைவேற்கண்பட்ட முத்த வடங்கண்டு காக்கிலன் " (சிதம்பரம் சாஸனப்பாடல்.) உறைப்பவை - துளிப்பனவாக.

171. தெரிமொழி - தெரியும் மொழிகளையுடைய.

175. குறையுறும் அண்ணலாகிய இவன். குறை - காரியம்.

177. ஒன்று - ஒன்றி.

பி - ம். 1 ஒன்ற.

[எஉ.

கைவரை நில்லாது கனன்றகத் தெழுதரும்
வெய்துயிர்ப் படக்கி வேண்டியது வேண்டாக்
குறிப்பெயக் குடைமை கூறலு முண்டோ
மறத்தகை மார்வன் மாய யானையிற்
சிறைப்படு பொழுதிற் சென்றவற் பெயர்க்க
மாய விறுதி வல்லை யாகிய
நீதி யாளநீ வேண்டுவ [1] வேண்டென
முகிழ்நகைக் கிளவி முகமன் கூறி
அண்ண லரசற் காகுபொருள் வேண்டும்
ஒண்ணுதன் மாத [2] ரொருப்பா டெய்தி
அருகின் வந்த பெருவிருந் தாளரைச்
சிறப்புப் பலியருச் செல்வனிற் பேணும்
பெறற்கரும் பெரும்பண் பெய்திய தெனக்கென
அசதிக் கிளவி நயவர மிழற்றி
நேர்ந்த மாதரை நெடுந்தகைக் குருசில்
பேர்ந்த காலைப் பிழைப்பில ளாகுதல்
அறியு மாத்திர [3] மவ்வழி யமைத்துச்
செறியச் செய்த செவிலியுந் தானும்
[4] மறுதா வுடைய மாயச் சூழ்ச்சி
உறுதியொ டொளித்தன ளுரியது [5] முடித்தென்.

கஎ—தேவியைப் பிரித்தது முற்றிற்று.

---

179. 'வேண்டியது வேண்டா' என்பது முதலியன வாசவதத்தை கூற்று. 182. அவனைப் பெயர்த்தற்கு.

187. ஒருப்பாடு - ஒருமைப்படுதல்.

189. செல்வனின் - அருகதேவனைப்போல.

190. பெரும்பண்பு - இல்வாழ்க்கையை நடத்துமுறைமை.

191. அசதிக்கிளவி - பரிகாசச்சொல்.

192 - 3. குருசில் - உதயணன். பேர்ந்தகாலை - பிரிந்தகாலத்தில். பிழைப்பு - கேடு; பிழைப்பிலளாகுதல் - உயிருடனிருத்தலை.

194. அவ்வழி அமைத்து - அவ்விடத்தை இடமாக்கி.

பி - ம். 1 வேண்டுவென. 2 ரொருப்பாட்டெய்தி. 3 மவன்வழி. 4 மறுதாவுடைய. 5 முடித்தென்.

## கஅ—கோயில் வேவு.

உள்ளியது முடித்த யூகியுஞ் செவிலியும்
ஒள்ளிழை மாதரொ டொளித்த பின்னர்ப்

(உதயணன் மீண்டு வருதல்)

பலாவம லசும்பிற் பயமலைச் சாரல்
உலாவேட் டெழுந்த வுதயண குமரன்
குழையணி காதிற் குளிர்மதி முகத்திக்குத்
தழையுந் தாருங் கண்ணியும் பிணையலும்
விழைபவை பிறவும் வேண்டுவ கொண்டு
கவவிற் கமைந்த காமக் கனவி
அவவுறு நெஞ்சத் தகல்விடத் தழற்றத்
தனிக்கன் றுள்ளிய புனிற்றுப் போல
விரைவிற் செல்லும் விருப்பின னாகிக்

---

கஅ—கோயில் வேவு.

[வாசவதத்தைக்கு வேண்டுவனவற்றைக் கைக்கொண்டு மலைச் சாரலிலிருந்து புறப்பட்டு வழியில் தீயநிமித்தங்களைக் கண்டு கவலையுற்றுவரும் உதயணன், அரண்மனை வேதலைக்கண்டு வாசவதத்தை இறந்தாளென்றே நிச்சயித்து மூர்ச்சித்து விழுந்து, தோழர்தேற்ற ஒருவாறு அவன் தேறியெழுந்தது இதனால் அறியலாகும்.]

3. "பலாவம லடுக்கம் புலாவ வீர்க்குங், கழைநரல் சிலம்பின்" அகநா. அ: 7.

4. உலாவேட்டு - உலாவுதலை விரும்பி ; "நெடுந்தகைக் குருசிலை புலாவெழப் போக்கி" என்றார் ; உ. 17: 13 - 4.

6. தழை - தழைவிரவித்தொடுத்த ஒருவகை மாலை; தார் - மார்பின் மாலை; கண்ணி - தலைக்கணியுமாலை; பிணையல் - மலர்களை நெருக்கிப் பிணைத்தமாலை ; சீவக. 193, 1338, 2054.

7. பிறவென்றது - சதங்கைமாலை, தொங்கல், கருப்பூரமாலை, தேம்பூமாலை முதலியவற்றை.

8 - 9. கவவு - தழுவுதல். அவவு - அவா ; "கவவுக்கை விடப் பெறும் பொருட்டிறத், தவவுக்கை விடுத லதுமனும் பொருளே" (கலி. கஅ.) காமக்கனவி, அகன்ற இடத்துச் சுடுமென்பதை, "நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந், தீயாண்டுப் பெற்றா ளிவள்" (குறள், 1104) என்பதனாலும் அறிக.

10 - 11. "கறவைதம் பதிவயின், கன்றமர் விருப்பொடு மன்று நிறை புகுதர" (கலி. கககூ); "ஆன்கணங், கன்றுபயிர் குரல மன்று நிறை புகுதர" குறிஞ்சி. 217 - 8.

(குதிரை வருணனை)

[1] கலினங் கவவிக் கான்றநுரை தெளிட்டும்
வலியுடை யுரத்தின் [2] வான்பொற் றாலிப்
படலியம் பழுக்கமொடு [3] பஃறகை வில்லாப்
பருமக் காப்பிற் [4] படுமணைத் தானைத்
தருமைக் கருவி யலங்குமயி ரெருத்தின்
வயமாப் பண்ணி வாய்க்கயி றுபிணித்துக்

(குதிரையைப் பாகன் கொணர்ப்ப உதயணன் அதன் மீதூர்ந்து வருதல்)

குறக்கை புக்க கொளுவமை கச்சையன்
அறைக்கண் மருங்கி [5] னகத்துளை யின்றிக்
கண்ணள [6] வமைந்து கதிர்த்த மூங்கிற்
பண்ணமை காழ்மிசைப் பசும்பொன் வலக்கும்
அடிநிலைச் சாத்தோ டியாப்புப் பிணியுறீஇ
வடியிலைக் கதிர்வாள் வைந்நுனைக் குந்தமொடு
வார்ப்பி னமைத்த யாப்பமை பரும்பொறி
மணிக்கை மத்திகை யணித்தகப் [7] பிணித்துக்
கோற்கமை [8] வுறுநடைக் குதிரைக் கோதிய
நூற்க ளுளரொடு நுனித்துக் கதியினுப்
வாக்கமை வாளன் கூப்புபு வணங்கிக்
கடுநடைப் புரவி கைம்முதல் கொடுப்ப

---

12. கலினம் கவவி - கடிவாளத்தை உள்ளிட்டு. நுரையைக்
13. தாலி - ஓராபரணம். பஃறகைவு - பல தையல். [கான்ற.
15. பருமமாகிய காப்பு.
16. கத்தரிகையிற் கொய்யப்பட்டு அசைகின்ற மயிரையுடைய
17. வயமா - குதிரை. [பிடரியினையும்.
18. குறக்கைபுக்க கொளு - புலிவடிவமைந்த மூட்டுவாய்.
19. அறை - பாறை. அகத்துளை - உட்டுளை. 20. கண் - கணு.
21. காழ் - கோல். பொன் வலக்கும் - பொற்பூண் கட்டிய.
22. அடிநிலைச் சாத்து - அங்கவடி.
23. குந்தம் - கைவேல்.
26. கோற்கு அமைவுறும் நடை - அம்பின் வேகத்திற்கு ஒத்த வேகம்; "கணைச்செல வொழிக்குங் கடுமைத்து" க. 38: 317; பு. [வெ. 138.
28. கூப்புபு - கையைக் குவித்து.
29. கைம்முதல் - உதயணன் கையில்.

பி-ம். 1 கலிகலங்கலவி. 2 வான்பொற்பஃறாலி. 3 பஃறகைமில்லாப். 4 படுமனைத். 5 னகத்துளை. 6 வமைந்துக். 7 பிடித்துக். 8 குறுநடைக்.

அடுதிற லண்ண லணிபெற வேற்றி
மறுவின் மாண்கர் குறுக வருவழி

(தீய நிமித்தம்)

இடுக்கண் டுருதற் கேது வாகி
இடக்க ணாடலுந் தொடித்தோ டுளங்கலும்
ஆருயிர்க் கிழத்தி யகன்றன ளிவணிலள்
நீர்மலர்ப் படலை நெடுந்தகை யாளை
காணு யாகி யாணு விரக்கமொ
டிழுக்கி ரேழமொ டியங்குவை யினியென
ஒழுக்கும் புட்குர லுட்படக் கூறிய
நிமித்தமுஞ் சகுனமு நயக்குண மின்மையு
நினைத்தனன் வரூஉ நேரத் தமைத்த

(உதயணன் புகைத்தோற்றத்தைக் காணுதல்)

[1] தண்ணிதிப் பலகைச் சந்தனச் சார்வணைக்
கண்ணுற நினைத்த கைப்புடை யாவணத்
திருமணி யருங்கல மெளிதினிற் றரீஇக்
காலத்தி னடக்குங் கூலக் கொழுங்கடைக்
கடுவுங் [2] கொட்டமுங் காழகிற் குறையும்
அரக்கு மதிங்கு மரும்பெறற் பயினும்
நறையு நானமு நாறிரு வேரியும்

---

31. மாண்கர் - இலாவாண நகரம்.
32. இடுக்கண் - துன்பம்.
32 - 3. ஆடவர்க்கு இடக்கண் ஆடலும், இடத்தோள் துடித்தலும் [தீயநிமித்தம்.
35. படலை - மாலை.
38. புள் - மரங்கொத்தி முதலிய பறவைகள்.
41. நிதிப்பலகை - பொற்பலகை. சார்வு அணை - சார்தற்குரிய [அணை.
42. ஆவணத்து - கடைவீதியில்.
43. தரீஇ - வருவித்து.
44. கூலம் - பல்பண்டம்.
45. கடு - கடுக்காய். அகிற்குறை - அகிற்கட்டை.
46. அதிங்கு - அதிமதுரம். பயின் - பிசின்.
47. நானம் - புழுகு. இருவேரி - வெட்டிவேர்.

பி - ம். 1. தண்ணுதிப். 2. கோட்டமுங்.

அறைவெள் ளரைமு மன்னவை பிறவும்
அண்ணரும் பொழு லாக்கிய கமழ்புகை
மாதிரத் தியங்குஞ் சோதிடர் விமானமும்
வாச மூட்டும் வகையிற் ருகி
மஞ்சொடு நிரைஇ வெஞ்சுடர் மழுக்க
இருள்படப் பரந்த மருள்படு பொழுதிற்
கண்டா னாகித் திண்டே ருதயணன்
வண்டார் கோதை வாசவ தத்தை
இருந்த விடமும் பரந்தெரி தோன்றவவட்
கேதுகொ லுற்றதென் றெஞ்சிய நெஞ்சின்
ஊறவ னுண்மை தேறின னாகிச்
செல்லா நின்ற காலை வல்லே

(உதயணனும் வயந்தகனும் நிற்றல்)

மாய மள்ளரை யாயமொ டோட்டி
உருமண் ணுவாவும் வயந்தக குமரனும்
பொருமுர ணண்ணல் புகுதரும் வாயிலுட்
பொச்சாப் போம்புதல் புரிந்தனர் நிற்ப

(காஞ்சனமாலையின் கலக்கம்)

எச்சார் மருங்கினு மெரிபுரை தாமரை
கண்ணுற மலர்ந்த தெண்ணீர்ப் பொய்கையுள்
நீப்பருஞ் சேவலை நிலைவயிற் காணது
பூக்கண் போழும் புள்ளிற் புலம்பி

---

50. மாதிரத்து - ஆகாயத்தில். சோதிடர் - சோதிட்கர்; சந்திரன், சூரியன், மற்றைக்கோள்கள், 27 - நக்ஷத்திரங்கள், தாரகைகளென்பார்; "சந்திரருஞ் சூரியருந் தாரகையு நாண்மீனும், வெந்திறல கோட்களுமா மெனவிளங்கி விசும்பாரூ, மந்தரத்தை வலஞ்சூழ்ந்து வருபவரு நிற்பவருஞ், சுந்தரஞ்சேர் மணிமுடியாய்ச் சுடர்பவருஞ் சோதிடரே" (சூளா. துறவு. 206.) இவர்கள் பஞ்சவரென்றுங் கூறப்படுவர்.

49 - 51. "முகிற்றலை மதிய மன்ன முழுமணி மாடத் திட்ட, அகிற்புகை தவழ்ந்து வானத் தருவிசும் பறுத்து நீண்டு, பகற்கதிர்ப் பரப்பித் ருகிப் பஞ்சவர் விமான முட்டிப், புகற்கரு மமரர் கற்பம் புக்கயா வுயிர்த்த தன்றே" சீவக. 600.

52. நிரைஇ - கலந்து. 63. பொச்சாப்பு - சோர்வு.

67. புள் - அன்னம்.

64 - 7. "சேக்கை யாடித்தன் சேவலைக் காணிய, பூக்க ணுடைமோர் புள்ளுமொத் தாளரோ" சீவக. 1862.

எரிதவழ் கோயி லெவ்வழி மருங்கினும்
திரிதர லோவா டைய்ந்துநிற மழுங்கிக்
கட்டழற் கதிய நெட்டிருங் கூந்தல்
1 புதையெரி புற்றப் புன்சொற் கேட்ட
பெரியோர் போலக் கருகி வாடிய
தகையழி தாமமொடு தாழ்வன பரப்பித்
தோழியைக் காணுள் சூழ்வளிச் சுழற்றியள்
செவ்விய தன்கையி னவ்வயி றதுக்கா
நாவலந் தண்பொழி னண்ணு ரோட்டிய
காவலன் மகளே கணங்குழை மடவோய்
மண்விளக் காகி வரத்தின் வந்தோய்
பெண்விளக் காகிய பெறலரும் பேதாய்
பொன்னே திருவே 2 யன்னே யரிவாய்
நங்காய் நல்லாய் கொங்கார் கோதாய்
வீணைக் கிழத்தீ வித்தக வுருவீ
தேனேர் கிளவீ சிறுமுதுக் குறைவீ
உதையண குமர னுயிர்த்துணைத் தேவீ
புதையழ லகவயிற் புக்கனை யோவெனக்
கானத் தீயிடைக் கணமயில் போலத்
தானத் தீயிடைத் தானுழன் றேங்கிக்
காணல் செல்லாள் காஞ்சனை புலம்பிப்
பூசல் கொண்டு புறங்கடைப் புரளும்

(உதயணன் கண்டு மூர்ச்சித்தல்)

ஆகுலத் திடையே யண்ணலுங் கதுமென
வாயில் புகுந்து வளங்கெழு கோயில்
தீயுண விளியுந் தேமொழிச் செவ்வாய்க்
காஞ்சன மாலை கலக்கமுங் காணுப்
பூங்குழை மாதர் பொச்சாப் புணர்ந்து

---

70. கட்டழற்கதிய - மிக்க நெருப்பாற் கதுவிய.
74. சூழ்வளி - சுழல்காற்று. சுழற்றி - சுழற்சி.
77. காவலன் - பிரச்சோதனன். 80. அன்னே - தாயே.
89. பூசல் - ஆரவாரம்.
92. விளி - ஓசை. 94. பொச்சாப்பு - பொல்லாங்கை.
பி - ம். 1 புதையெரிப்புற்ற. 2 யன்னும்.

கருவி யமைத்த காலியற் செலவிற்
புரவியின் வழுக்கிப் பொறியறு பாவையின்
முடிமிசை யணிந்த முத்தொடு பன்மணி
விடுசுடர் விசும்பின் மீனெனச் சிதறச்
சாந்துபுல ராகத்துத் தேந்தார் திவளப்
புரிமுத் தாரமும் பூணும் புரள
எரிமணிக் கடகமுங் குழையு மிலங்க
வாய்மொழி வழுக்கி வரையின் வீழ்ந்த
தேமொழிக் கிளவியிற் றிறல்வே றாகி
இருநில மருங்கிற் பெருநலந் தொலையச்
சோரு மன்னனை யார்வத் தோழர்

(தோழர் உபசரித்தலும் அவன் தெளிந்து எழுதலும்)

அடைந்தனர் தழீஇ யவலந் தீர்க்குங்
கடுங்கூட் டமைத்துக் கைவயிற் கொண்ட
போகக் கலவை யாகத் தப்பிச்
சந்தனங் கலந்த வந்த ணறுநீர்த்
தண்டளி சிதறி வண்டின மிரியக்
குளிரிமுதற் [1] கலவையிற் கொடிபெறக் குலாய்
......................பொன்மணித் தட்டப்
பவழப் [2] பிடிகை பக்கங் கோத்த
திகழ்பொன் னலகிற் செஞ்சாந் தாற்றியிற்
பன்முறை வீசத் தொன்முறை வந்த

96. பொறியறுபாவையின் - எந்திரமற்ற பாவையைப்போல; க. 33 : 146; 36 : 60. 99. தார் திவள - மாலை குழைய.
102. மொழி வழுக்கி - சொல்தமொழி.
103. தேமொழிக்கிளவியின் - வாசவதத்தையின் பிரிவால்.
106. அவலம் - மூர்ச்சையை.
107. கடுங்கூட்டு - மூர்ச்சையை விரைவில் தீர்க்கும் மருந்து.
108. போகக்கலவை : க. 38 : 177.
109. நறுநீர் - பனிநீர்; க. 34 : 188. 110. தளி - துளி.
111. குளிரி - செங்கழுநீர்; பூந்தடுக்குமாம். கொடி - ஒழுங்கு.
113. பிடிகை - கைப்பிடி. 114. சாந்தாற்றி - விசிறி.
109 - 15. சீவக. 2478, 2615 - ஆம் பாடல்களைப் பார்க்க.

பி - ம். 1 கவ்வையிற். 2 பீடிகைப்.

*பிறப்பிடைக் கேண்மைப் [1] பெருமனைக் கிழத்தியை*
*மறப்படை மன்னன் வாய்சோர்ந் தரற்றுச்*
*சேற்றெழு தாமரை மலரிற் செங்கண்*
*ஏற்றெழுந் தனனு வினியவ ரிடையென்.*

கஅ—கோயில் வேவு முற்றிற்று.

---

116. உ. 16 : 39 - 41 ; ௩. 6 : 64.
118-9. *கண்ஏற்று - கண்மலர்ந்து*; கலி. கஉ : 8 ; பு. வெ. 197.

பி - ம். 1 பெரும்பணைக்.

---

## ககூ—தேவிக்கு விலாவித்தது.

*ஏற்றெழுந் ததன்பி னினியோர் குழீஇ*
*ஆற்றல் சான்ற நூற்றுறை மருங்கிற்*
*பழையவும் புதியவு முறைமுறை பிரியார்*
*காரண முரைப்பவு மோர்வரை நில்லான்*

(உதயணன் தீயில் விழச் செல்லல்)

*அந்தீங் கிளவியெ னம்பிணை மூழ்கிய*
*செந்தீ யானும் புகுவென் சென்றெனக்*
*முரிந்த கந்தி னெரிந்த வேயுள்*
*அரிந்த யாப்பிற் சொரிந்த கடுங்காழ்*

---

ககூ—தேவிக்கு விலாவித்தது.

[அங்ஙனம் எழுந்த உதயணன் பிரிவாற்றமையாற் பின்னும் வருந்தி, யானும் இறப்பேனென்று தீயில்விழச் சென்றதும், பல நியாயங்களைக் கூறித் தோழர் தடுப்பத் தடையுண்டு அப்பால் அவன் அவளுடைய தலைக்கலன்கள் முதலியவற்றை வருவித்து ஒவ்வொன்றையும் தனித்தனியே நோக்கிப் பலவாறு புலம்பியதும் பிறவும் இதனால் அறியலாகும்.]

1. *இனியோர் - தோழர் முதலியோர்.* 4. *நில்லானுகி.*
3 - 4. *பிரியாராய்ப் பழையவும் புதியவுமாயவற்றை உரைப்பவும்.*
7. *கந்து - தூண். வேயுள் - மேற்பரப்பு.*
8. *அரிந்தயாப்பு - அறுபட்ட கட்டு. காழ் - கைமரங்கள்.*

கரந்த மாடங் [1] காவலன் குறுக

(தோழர் விலக்கல்)

ஆரளைச் செறிந்த வருஞ்சின நாகத்துப்
பேரழற் காணிய பேதை மாந்தர்
வாயின் மருங்கிற் றீயெரி கொளீஇயது
செயிர்படு பொழுதிற் செம்முக நின்றுதம்
உயிரொழிந் ததுபோ லுறுதி வேண்டார்
அடங்கா ரடக்கிய வண்ணல் மற்றுநின்
கடுஞ்சினம் பேணுக் கன்றிய மன்னர்
[2] கறுவு வாயிற் குறுதி யாக
இகப்ப வென்றுக வேந்த முடைத்தே
ஆகிய தறிபு மரும்பொருட் சூழ்ச்சி
பூகியி னல்லதை யுதயண குமரன்
[3] உள்ள மிலனென வெள்ளைமை கலந்த
புறத்தோ ருரைக்கும் புன்சொன் மாற்றம்
அகத்தோர்க் கென்று [4] மகஞ்சுட லாறு
தாங்கன மங்கிலை யறிந்துமனங் கவலா
தோங்கிய பெருங்குலந் தாங்குதல் கடனுப்

---

10. அளை - புற்று.
11. அழல் - கோபம். காணிய - காணும்பொருட்டு.
12 வாயில் மருங்கின் - புற்றின் வாயிலில்.
12 - 3. அது செயிர் படு பொழுதில் - அப்பாம்பு கோபமுற்று வந்தபொழுது. செம்முகம் - அதன் முகத்தின் நேரே.
14. வேண்டாராகி. 15 அண்ணல் : விளி.
16. பேணு - மதியாமல். கன்றிய - வயிரங்கொண்ட.
17. கறுவுவாயிற்கு - கோபிக்கும் வழிக்கு.
18. இகப்ப - உயிரை விடுதற்கு.
21. உள்ளம் - ஊக்கம். வெள்ளைமை - அறிவின்மை.
22. புறத்தோர் - அயலார். 23. அகத்தோர்க்கு - எமக்கு.
24. நீ அறிந்து.

பி - ம். 1 காமன். 2 கருமவாயிற். 3 உள்ளமில்லென. 4 மருஞ்சுட.

பூண்டனை யாகுதல் பொருண்மற் றிதுவென
மாண்ட தோழர் மாற்றுவனர் விலக்கக்

(உதயணன் வாசவதத்தையின் உடம்பைக் காணவிரும்பல்)

காலங் கலக்கக் கலக்கமொ டோஅய்
ஞால முழுது நவைக்குற் றெழினும்
ஊர்திரை யுடைய வொலிகெழு முந்நீர்
ஆழி யிறத்தல் செல்லா தாங்குத்
தோழரை யிகவாத் தொடுகழற் குருசில்
சூழ்வளை முன்கைச் சுடர்க்குழை மாதர்
மழைக்கா லன்ன மணியிருங் கூந்தல்
அழற்புகை சூழ வஞ்சுவன ளடுங்கி
மணிக்கை நெடுவரை மாமலைச் சாரற்
புனத்தீப் புதைப்பப் போக்கிடங் காணா
தளைச்செறி மஞ்ஞையி னஞ்சுவனள் விம்மி
இன்னுயி ரன்ன வென்வயி [1] னினைஇத்
தன்னுயிர் வைத்த மின்னுறழ் சாயல்
உடப்புச் சட்டக முண்டெனிற் காண்கம்
கடுப்பழ லவித்துக் காட்டுமின் விரைந்தெனக்
கரிப்பிணங் காணார் காவல னென்னும்
மொழிப்பல காட்டவு மொழியா னழிய

---

25 - 7. தாங்குதலைக் கடமையாகப் பூணுதல் காரியமென்று தோழர்கள் விலக்க.
31. ஆழி - கரை.
30 - 32. தோழர்க்குக் கரையும் உதயணனுக்குக் கடலும் [உவமை.
34. "கூந்தல் வனப்பிற் பெயருழ" கார். 13.
36. கை - பக்கம். 38. அளை - குகை.
39. என் வயின் நினைஇ - என்னை நினைந்து.
40. உயிர்வைத்த - உயிரை நீக்கிய.
41. உடப்புச் சட்டகம் - உடம்பின் வடிவு.
42. கடுப்பு - விரைவு; வெம்மையுமாம்.
43. கரிப்பிணம் - கரிதலையுடைய பிணத்தை.
44. காட்டவும் - தோழர் எடுத்துக் கூறவும்.

பி - ம். 1 னிணைஇத்.

(உருமண்ணுவாவின் செயல்)

முன்னைய ராதலின் முதற்பெருந் தேவி
இன்னுயி ரிகப்ப விடாஅ ரிவரென
மன்ன குமரன் மதித்தன னாயின்
எண்ணிய சூழ்ச்சிக் கிடையூ றாமெனத்
தவலரும் பெரும்பொரு ணிலைமையி னெண்ணி
உலைவில் பெரும்புக ழுருமண் ணுவாவிரைந்
தாய்புக ழண்ணல் மேயது விரும்பி
நீள்புடை யிழிந்துக ஞாயி லொதுங்கிக்
கோயில் வட்டத் தாய்கலங் குயின்ற
பள்ளிப் பேரறை புள்ளகம் புக்காங்
கழிவுறு சுருங்கை வழிமுதல் மறைஇ
விழுமுறு துயரமொடு விளிந்துயிர் வைத்த
[1] குய்ம்மனத் தாளர் குறைப்பிணங் காட்டித்
தாயுந் தையலுந் தீயுண விளிந்தமை
மாய மன்றென மன்னனைத் தேற்றி
மணியு முத்து மணியு மிழந்துதிக்
தாரக் கம்மஞ் சாரலிற் றிருந்து
கொள்கைக் கட்டழ லுள்ளுற மூட்டி
மாசுவினை கழித்த மாதவர் போலத்
தீயகத் திலங்கித் திறல்விடு கதிரொளி
சேடுறக் கிடந்த செம்பொற் செய்கலம்

---

49. பெரும்பொருள் - பெரிய காரியம்.
51. அண்ணல் மேயது - உதயணன் விரும்பியதை.
52. ஞாயில் - மதிற்சூட்டில்.
55. சுருங்கையின் வழியை மறைத்து.
57. குய்ம்மனத்தாளர் - வஞ்ச மனத்தாருடைய; உ. 17 : 69 - 71.
58. சாங்கியத்தாயும் வாசவதத்தையும் நெருப்பில் வெந்து இறந்தது. 59. மாயமன்று - பொய்யன்று.
60 அணி - அழகு. 61. கம்மம் - தொழில்.
62. கொள்கை - விரதம். 65. பொன்னணியை; உ. 17 : 72 - 8.
62 - 5. “சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ், சுடச்சுட நோற்கிற் பவர்க்கு” குறள், 267.

பி - ம். 1 குய்ம்மணத்தாளர்.

பொன்னணி மார்பன் முன்னணை விடுதலின்

(உதயணன் வாசவதத்தையின் பொன்னரிமாலை
முதலியவற்றை நோக்கிப் புலம்பல்)

(பொன்னரிமாலை)

ஒண்செந் தாமரை யொள்ளித ழன்ன
பண்கெழு விரலிற் பன்முறை தொகுத்து
நான மண்ணி நீணிறங் கொண்டவை
விரித்துந் தொகுத்தும் வகுத்தும் வாரியும்
உளர்ந்து மூறியு மளந்துகூட் டமைத்த
அம்புகை கழுமிய வணிமா[1]ராட்டம்
வெம்புகை சூழ்ந்து மேலெரி யூர
விளிந்தது நோக்கி யொழிந்தனை யாதலின்
நன்னுதன் மாதர் பின்னிருங் கூந்தற்
பொன்னரி மாலாய் பொருளிலை யென்றும்

(நெற்றிப் பட்டம்)

கொடியு மலருங் கொழுந்துங் குலாஅய்
வடிவுபெற வகுத்த மயிர்வினைச் சிப்பத்து
வத்தவ மகடூஉச் சித்திரத் தியற்றிய
பல்வினைப் பரிசாரத் தெல்லை யாகி
மதிப்புறங் கவைஇய வானவிற் போல
நுதற்புறங் கவவி மிகச்சுடர்ந் திலங்கும்
சிறப்புடைப் பட்டஞ் சிறியோர் போல

---

68. பண் - யாழ்; ஆகுபெயர்.
69. நீணிறங்கொண்டவை - கூந்தல்.
72. மாராட்டம் - ஒரு தேயம்; இங்கே அத்தேயத்தாருடைய அலங்காரத்திற்கு ஆகுபெயர்.
76. பொன்னரிமாலை: க. 40 : 40, அடிக். பொருளிலை - நன்மையில்லாய்.
78. சிப்பம் - சிற்பம்.
79. வத்தவ மகடூஉ - வத்தவநாட்டுப் பணிப்பெண்; வண்ணவேலைகளிலும் சித்திரவேலைகளிலும் வத்தவநாட்டு வினைஞர் புகழ்பெற்றவர்; "வத்த நாட்டு வண்ணக் கம்மரும்" க. 58 : 44.
81. கவைஇய - வளைந்த. 83. பட்டம்: விளி.
81 - 3. பல நிறமுள்ள பட்டத்திற்கு வானவில் உவமம்.

பி - ம். 1 ருட்டம்.

இறப்புக் காலத்துக் குறப்புத்தொழி லணிந்த
வன்கண்மை பெரிதெனத் தன்கணு நோக்கான்
பட்டப் பேரணி விட்டெறிந் திரங்கியும்

(திலகம்)

பனிநாட் புண்ணியத் தணிபெறு திங்கள்
அந்திபுன் முளைத்த வெண்பிறை போலச்
செந்திச் சிறுநுதன் மூழ்கத் தீந்து
நிலமிசை மருங்கின் வீழ்ந்தனை யோவெனத்
திலக நோக்கிப் பலபா ராட்டியும்

(காதணி)

வெண்மதிக் கரப்புடை வியாழம் போல
தண்மதி திகழு மூசலாடிச்
சீர்கெழு திருமுகத் தொளி யாகிய
வார்நலக் காதினுள் வனப்புவீற் றிருந்த
நன்பொற் குழைநீ நன்னுதன் மாதரை
அன்பிற் காத்தே பகன்றனை யோவெனப்
போதணி கூந்தற் பொற்பூம் பாவை
காதணி கலத்தொடு கவன்றனன் கலங்கியும்

(கண்கள்)

பொய்கையிற் றீர்ந்து புன்கண் கூர
எவ்வ மாந்த ரெரிவா யுறீஇய
பொருங்கயல் போல வருந்துபு பிளிராக்
களைகண் பெறாஅக் கலக்க நோக்கமொடு

85. தன் கண்ணையும்.
87. திங்கள் - மாதம்.
88 - 9. செந்திக்கு அந்தியும், நெற்றிக்குப் பிறையும் உவமை.
91. திலகம் - ஒருவகை நெற்றிப் பட்டம்; கலி. கஉ : 35, கஎ : [11.
96. குழை - குண்டலம்; விளி.
92 - 6. "மண்டல நிறைந்த மாசின் மதிப்புடை வியாழம் போன் றோர், குண்டல மிலங்க நின்ற கொடி" (சீவக. 618) என்பதில் இங்கே யுள்ள உவமை காணப்படுகின்றது. [சேர்த்த.
101. எவ்வமாந்தர் - துன்பத்தைச் செய்யும் மனிதர். உறீஇய -
102. பிளிரா - பிறழ்ந்து.

தளையவிழ்ந் தகன்ற தாமரை நெடுங்கண்
அசையற வருளா யாகிக் கவிழ்ந்து
செவ்வழல் புதைத்திடச் சிதைந்தனை யோவென
அவ்விழிக் கிரங்கி வெவ்வழ லுயிர்த்தும்

(நகில்கள்)

செஞ்சாந்து வரித்த சின்மெல் லாகத்
தஞ்சாய் மருங்குல் வருந்த வடிபரந்து
வீங்குபு செறிந்த வெங்கண் வனமுலை
பூங்கொடிப் பொற்கலம் போழ்ந்துவடுப் பொறிப்ப
மகிழ்ச்சி யெய்தி மனமொன் றாகிய
புணர்ச்சிக் காலத்து மதர்த்துமுகஞ் சிவப்ப
நோய்கூர்ந் தழியு நீயே யளியை
வேக வெவ்வழல் வெம்புகை யணிந்த
பொங்கழற் போர்வை போர்த்ததோ வெனவும்

(பலவகை ஆபரணங்கள்)

இலைப்பெரும் பூணு மிதயவா சனையும்
நலப்பெருங் களிகையு நன்முத் தாரமும்
பன்மணிப் பூணுஞ் சின்மணித் தாலியும்
முத்தணி வடமுஞ் சித்திர வுத்தியும்
நாணுந் தொடரு மேனைய பிறவும்
மெய்பெறப் புனைந்து கைவல் கம்மியச்
செய்கையிற் குயிற்றிய சித்திரங் கொளீஇப்
பூணணி யுள்ளு மாணணி யுடையவை
ஆகக் கேற்ப வணிகம் வாராய்
வேகத் தானை வேந்தன் மகளே
தனித்தா யியங்கலுந் தாங்கினை யோவெனப்
பணித்தார் மார்பன் பலபா ராட்டியும்

---

104. நெடுங்கண் : விளி. 108. வரித்த - கோலஞ்செய்த.
110. வனமுலை : விளி. 111. கொடியென்னும் பொன்னணி.
114. அளியை - அளிக்கத்தக்காய்.
117. இதயவாசனை - ஓராபரணம்.
118. களிகை - கழுத்தணி ; க. 41 : 82 ; ரு. 22 : 222.
120. உத்தி - சீதேவியென்னும் அணி.
121. தொடர் - சங்கிலி. 125. அணிகம் - அணிவேம்.

(தோளணிகள்)

ஒக்குவரை மருங்கி னொளிபெற நிவந்த
காம்பொசிந் தன்ன கவினை யாகிய
நலங்கிளர் தடந்தோ ளணையுறச் செறிந்
தலங்குமலர்த் தாமரை யகவயி னமர்ந்த
திருமக ளிருக்கை யுருவுபடக் குயிலாக்
காமுறப் புனைந்த தாம முளப்படப்
பொறிவரி யொழுக்கம் போலு மற்றிம்
மறிபிலைக் கம்மமொடு மகரங் கவ்விக்
கொடியொடு துளங்கி யடிபெற வகுத்த
அருமணிக் கடகமோ டங்குலி யழியச்
செற்றுபு சிறந்த சிறப்புமுள் ளாது
கற்றதெ னமர்ந்த கலப்பின வாகியும்
பற்றுவிட் டகறல் பண்போ வெனவும்

(இடையணி முதலியன)

பவழக் காசொடு பன்மணி விரைஇத்
திகழக் கோத்த செம்பொற் பாண்டில்
கைவினைக் கொளுவிற் செய்துநலங் குயின்ற
எண்ணாற் காழ்நிரை கண்ணுமிழ்ந் திலங்க
உருவக் கோலமொ டொட்குவிற் றிருந்த
அரவுப்பை யன்ன வைதேந் தல்குல்
புகைக்கொடிப் புத்தேள் பொருக்கென வூட்டி
அழற்கொடி யரத்த மறைத்தவோ வெனவும்
மணிக்க ணன்ன மணித்தகு பெடையைப்

---

130. காம்பு - மூங்கில். கவினை - அழகையுடையாய்.

131. தோள்: விளி. 133. குயிலா - குயின்று.

135. பொறிவரி ஒழுக்கம் - வண்டினொழுக்கம்.

136. இலைக்கம்மம் - இலை வடிவாகிய தொழில். மகரம் - ஓரணி; மகரவாயென வழங்கும்; சீவக. 170. 138. அங்குலி - மோதிரம்.

140. கற்றது என் - கற்றது யாது.

142. விரைஇ - கலந்து.

143. பாண்டில் - வட்டக்காசு. 144. கொளு - மூட்டுவாய்.

145. எண்ணாற் காழ்நிரை - விரிசிகையென்னும் மேகலை.

142 - 5. கலி. அகி: 3 - 5. 150. அன்னம் - அன்னச்சேவல்.

பயிலிதழ்ப் பனிநீர்ப் பக்க நீக்கி
வெயில்கெழு வெள்ளிடை விட்டிசி னுங்கு
மணியரிக் கிண்கிணி சிலம்பொடு மிழற்ற
..........................................................
நின்னணி காண்கஞ் சிறிது சிறிதுலாஅய்
மராஅந் துணரு மாவின் றளிரும்
குராஅம் பாவையுங் கொங்கவிழ் முல்லையும்
பிண்டித் தளிரும் பிறவு மின்னவை
கொண்டியான் வந்தேன் கொள்குவை யாயின்
வண்டிமிர் கோதாய் வாரா யெனவும்

(முன்னிகழ்ச்சிகளை நினைத்துப் புலம்பல்)

அணிவரைச் சார லருவி யாடியும்
பணிமலர் கொய்தும் பாவை புனைந்தும்
திருவிழை மகளிரொ டொருவழி வருவோய்
மருவின் மாதவன் மாசின் மடமகள்
விரிசிகை வேண்ட வேறுபடு வனப்பிற்
றுமந் தொடுத்தியான் கொடுத்தது தவறெனக்
காம வேகங் கடுத்த கலப்பிடை
முகத்தே வந்தோர் முசுக்கலை தோன்ற
அகத்தே நடுங்கி யழற்பட வெய்துயிர்த்
தஞ்சி யடைந்த வஞ்சி றேமொழிப்
பஞ்சி மெல்லடிப் பாவாய் பரந்த
கடுந்தீக் கஞ்சாது காத்தியோ வெனவும்
அங்கண் மாநிலத் தகன்றுயிர் வாழ்வோர்
வன்கண் ணாளரென் றுபண் டுரைப்போய்
நின்க ணம்மொழி நிற்ப வென்கட்
புன்க ணேக்கா து போதியோ வெனவும்

155. மராத்துணர் - செங்கடம்பின் பூங்கொத்து.
156. குராம்பாவை - குராவம்பூ.
166. காமவேகம் : உ. 16 : 89, அடிக். கடுத்த - மிக்க.
167 - 71. முசுக்கலையால் வுடல் தீர்ந்தமை ; உ. 16 : 109 - 18.
172. அகன்று - பிரிந்து.

இளைப்புறு ஞமலி கலத்தகு நாவிற்
செம்மையு மென்மையுஞ் சிறந்துவனப் பெய்தி
[1] அம்மை மூன்று மணிபெறப் பிணங்கி
இலைபடக் குயிற்றிய வெழிலொளிக் கம்மத்துத்
தலைவிரற் சுற்றுந் தாதணி வளையமும்
வட்ட வாழியுங் கட்டுவட வினையும்
மகர வாயொடு நகைபெறப் புனைந்த
விரலணி கவ்வி நிரலொளி பெய்திப்
பூவடர் மிதிப்பினும் புகைந்தழ லுறாஉஞ்
சேவடிக் கேற்ற செம்பொற் கிண்கிணி
பாடகக் குரலொடு பாடுபிறழ்ந் தாற்றக்
கழலிக் [2] கண்பின் காயெனத் திரண்ட
அழகணி சிறுதுடை யசைய வொதுங்கி
ஆயத் திறுதி யணிநடை மடப்பிடி
கானத் தசைந்து தானத்திற் றளர்ந்தபிற்
கரிப்புறப் பதுக்கையுங் கடுநனைப் பாறும்
எரிப்புள் ளுறீஇ யெஃகின் வியலவும்
எற்கா முறலி னேத மஞ்சிக்
கற்கால் பயின்ற காலவி சில்லதர்
நடுக்க மெய்தி நடப்பது [3] நயந்தோய்
இடுக்கண் யான்பட வென்னையு நினையாது
கடுப்பழ லகவயிற் காத்திமோ வெனவும்

176 - 7. ஒடி இளைத்த நாயின் நா, பாதங்களுக்கு உவமை; "வருந்துநாய் நாவிற் பெருந்தகு சீறடி" (பொருந. 42) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

180 - 82. விரற்சுற்று முதலியன கால்விரலணிகள்.

184. அடர் - இதழ். 185 - 6. உ. 3 : 85.

187. கண்பு - ஒருவகைக் கோரை; "களிறுமாய் செருந்தியொடு கண்பமன் றூர்தர" (மதுரை. 172); "கண்புமலி பழனம்" மலைபடு. 454.

189. பிடி - பத்திராபதி. 191. பதுக்கை - கற்குவியல்.

192. எரிப்பு - எரியச் செய்தலை. எஃகு - வேல்.

194. கால் அவி - காற்றடங்கிய. சில்லதர் - சிறிய வழிகள்.

பி - ம். 1 நம்மை, 2 காண்பின், 3 வியந்தோய்.

படிகடந் தடர்ந்த பல்களிற் றியானை
இடிபுறழ் முரசி னிறைமகன் பணிப்ப
நாலமை வீணைக் கோலமை கொளீஇக்
கரணம் [1] பயிற்றினுங் காந்தண் முகிழ்விரல்
அரணங் காணு வஞ்சின போலப்
பயத்தி னீங்காச் சிவப்புள் ளூறுவின
அடைதற் காகா வாரழற் செங்கொடி
தொடுதற் [2] காற்றத் துணிந்தவோ வெனவும்
வடிக்கண் மாதர் முடிக்கல முதலா
அடிக்கலந் தழீஇ முடித்தார் மார்பன்
அரற்றியு மயர்ந்து முரற்றியு முயிர்த்தும்
வீழ்ந்து மெழுந்துந் தாழ்ந்துந் தளர்ந்தும்
செருவடு செங்கண் டெண்பனி சிதறி
உருவுடை யகலத் தூழூ ழுறைத்தரக்
கோல விரும்பிடி குழிப்பட் டாழ
நீல வேழ [3] நினைந்துழன் றாங்கு
மாலை மார்பன் மாதரைக் காணு
தின்னவை பிறவும் பன்முறை யரற்றச்

(தோழர் செயல்)

செறுநர் முன்னர்ச் சீர்மை யன்றெனை
உறுநர் சூழ்ந்த வொருபா லொடுங்கித்
தேரும் புரவியும் வார்கவுள் யானையும்
மறப்படை யிளையரொடு திறப்பட வகுத்துப்
போரணி கலமும் பொருளு நல்கி
ஆருணி யரச னடுதிற லாண்டகை
அற்ற மறியாச் செற்றச் செய்கையொடு

198. படி - பகை ; " படிமதஞ் சாம்ப " பரி. ௬.
199. இறைமகன் - பிரச்சோதனன். 200. கோல் - நரம்பு.
203. உள்ளூறுவின - உள்ளூறுத்தின.
208. உரற்றி - பேரொலி செய்து. 211. உறைத்தர - துளிப்ப.
216. இக்கிகழ்ச்சி பகைவர்முன்பு சிறந்ததன்று ; க. 33 : 126.
217. உறுநர் - தோழர் ; எழுவாய்.
221. ஆருணியென்பது பாஞ்சாலராசன் பெயர்.
221 - 2. ஆண்டகை அற்றம் அறியா - உதயணனது சோர்வை யறிந்து.

பி - ம், 1 பற்றினுங். 2 காற்றல். 3 நினைந்துடன்றாங்கு.

*மேல்வர வுண்டெனின் மீளி வாட்டிச்*
*சென்று நெருங்காது பின்றியும் விடாது*
*குன்றக மடுத்துக் கூழவ ணொடுக்கி*
*யாப்புற நிற்கெனக் காப்புறு பெரும்படை*
*திசைசெலப் போக்கி யசைவி லாண்மை*
*மன்பெருங் குமரனை மரபுளிக் காட்டித்*
*துன்பந் தீரிய தொடங்கினர் துணிந்தென்.*

கக—தேவிக்கு விலாவித்தது முற்றிற்று.

---

223. *மீளி - பகைவனது பெருமையை.*
225. *கூழ் - உணவுப் பொருள்கள்.*
229. *தீரிய - தீர்த்தற்கு.*

---

## உ०—சண்பையுள் ஒடுங்கியது.

**(காதலின் குற்றத்தை உதயணனுக்குத் துணிவுடையோர் உணர்த்தி விலக்கல்)**

*துணிவுடை யாளர் துன்னினர் சூழ்இ*
*அணியுடை யண்ணற் கமைந்தமை காட்டிப்*
*படுதிரைப் பௌவத்துக் கடுவளி கலக்கப்*

---

உ०—சண்பையுள் ஒடுங்கியது.

[சிற்றின்பத்தால் உளதாகும் பெருந்தீங்கைத் தோழர் எடுத்துக் கூறக்கேட்ட உதயணன் ஆறுதலுற்றுப் பிழைத்திருந்ததும், அதனை அறிந்த யூகி முதலிய மூவரும் வேறிடஞ் செல்லக்கருதி ஒருவகை மருந்தையுண்டு தம்மைப் பிறரறியாதபடி வேற்றுவடிவமுற்றுப் புறப்பட்டுப்போய் ஓராச்சிரமத்தை அடைந்து ஆங்குள்ளவனும் உருமண்ணுவாவின் தந்தையுமாகிய ஒரு முனிவனைக்கண்டு நிகழ்ந்தவற்றைக்கூறிச் சிலநாள் இருந்ததும், அங்கே உருமண்ணுவாவாற் காஞ்சனமாலை வந்ததும், அப்பால் நால்வரும் அங்கிருந்து புறப்பட்டுச்சென்று அங்கநாட்டிலுள்ள சண்பை நகரத்தில் மித்திரகாமனென்னும் வணிகனுடைய வீட்டில் யாரும் அறியாதபடி மறைந்திருந்ததும் இதனால் அறியலாகும்.]

1. *துணிவுடையாளர் - தோழர் முதலியோர்.*
2. *அண்ணற்கு - உதயணனுக்கு.* 3. *கடுவளி - கடுங்காற்று.*

பொறியவிழ்ந்து கவிழ்ந்த பொருகலத் துய்ந்தோர்
நெறிதிரிந் தோரீஇ நீத்துயிர் வழங்காத்
தீவகம் [1] புக்குத் தாவகங் கடுப்பப்
பெருந்துய ருழக்கு மருந்துபசி [2] மூளத்
தின்னிலை வரைப்பிற் சினைதொறுஞ் செறிந்து
கண்ணவை யுறாஉங் கனிபல கண்டவை
நயவரு நஞ்செனப் பெயர்தெரி வின்மையின்
ஊழுறுத் தக்கனி தாழ்விலர் வாங்கித்
துன்ப நீக்குந் தோற்றமு மன்றி
இன்ப நாற்றமு மியைந்தன விவையென
[3] நச்சுபு தெரிந்த நாற்றமுஞ் சுவையும்
ஒப்புமை யின்மையி னுயிர்முதற் றாங்க
அமரர் காட்டிய வமுதுநமக் கிவையெனப்
பசிநோய் தீர வயிறலிற் கதுமெனத்
தசைபோழ்ந்து கழற்றித் தபுத்திசி னாங்குத்
தாமரைச் செங்கட் டகைமலி மார்ப
காமத் தியற்கையுங் காணுங் காலை
இறுதியி லின்பமொ டினியது போல
உறுபய னின்றி யுடம்புமுதற் புகுத்தலிற்

---

4. பொறி - எந்திரம். கலத்துய்ந்தோர் - கப்பலினின்றும் தப்பினவர்.

5. நெறி திரிந்து - வழி தப்பி.

6. தீவகம் - தீவில். தாவகம் - காட்டுத் தீயை.

9. கண்களை வெறியோடச் செய்யும் ஒளியையுடைய பழங்கள் பலவற்றைக் கண்டு.

10. அக்கனிகள் நஞ்சாகுமென்று தெரியாமையின்.

11. ஊழுறுத்து - வீழ்த்தி; “ஊழுறு தீங்கனி” (அகநா. உ : 2.) தாழ்விலர் - தாமதியாமல்.

12-3. தோற்றத்திலும் நாற்றத்திலும் இவைகள் சிறந்தன என்று எண்ணி.

15. உயிர்முதற்றாங்க - பசித்த உயிர்களைப் பாதுகாத்தற்கு.

17. அயிறலின் - அக்கனிகளை அவர்கள் உண்டமையினாலே.

18. தபுத்திசினாங்கு - அவை கொன்றாற்போல.

21. இனியது போலத் தோன்றியென ஒருசொல் வருவிக்க.

22. பயனற்ற விலங்குடம்பு முதலியவற்றிற் புகுத்தலினாலே.

பி - ம். 1 புக்குக் காய்வகங். 2 யானர். 3 நக்குபு.

பெறுபய மிதுவெனப் பேணார் பெரியோர்
வெற்றித் தானையொடு விசயம் பெருக்கிக்
கொற்றம் வேண்டாப் பற்றொடு பழகிய
ஆர்வப் புனலகத் தழுந்துவை யாயின்
ஊர்கடல் வரைப்பி னுயிர் நடுக்குறீஇப்
பெரும்பே துற்று விளிபுடற் றதனாற்
கரும்பே ரிளவிக் கனங்குழை திறவயிற்
கழுமிய காதல் கைவிடல் பொருளெனக்
காமத்துக் கடையுங் காதற் குற்றமும்
ஏமாப் பிலவென வெடுத்துரை காட்டி
அமைச்சத் [1] தொழிலர் விலக்குபு காட்ட
(யூகி முதலியோர் ஒரு மலைச்சாரலுக்குச் செல்லுதல்)
இருப்ப மொடுங்கிய வியல்பின ராகிய
அண்ண லிலைமை திண்ணிதி னறிந்து
வண்ணக் கோதை வாசவ தத்தைக்குக்
காதற் கணவ னேத மின்மை
அறியக் கூறி யகல்வது பொருளெனப்

---

23. பெரியோர் காமத்தை உறுதியுடையதாக எண்ணார்.

20 - 23. "கெடுங்காமம், முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய், பிற்பயக்கும் பீழை பெரிது" நீதிநெறி. 3.

3 - 23. கப்பல் கவிழ்தலால் உயிர்தப்பி ஒரு தீவிற் பசியொடு சென்றோர் அங்கே காணப்பட்ட விடமயமாகிய கனிகளை அவற்றின் அழகிய தோற்றம் முதலியவற்றால் விரும்பி உண்ண அவை கொன்றாற் போல, காமமும் முதலில் இன்பம்போலக் காணப்படினும் பின்பு இழிந்த பிறப்பைக் கொடுத்துப் பெருந்துன்பத்தை விளைவிக்குமென்பது இவ்வடிகளாற் போந்த கருத்து.

25. கொற்றம் வேண்டாய் - அரசவுரிமையை வேண்டாயாகி. பற்று - காதல்.

26. ஆர்வப்புனலகத்து - ஆசையாகிய வெள்ளத்தில்.

27. நடுக்குறீஇ - நடுங்கி. 28. பெரும்பேதுற்று - மிகமயங்கி.

30. கழுமிய - மிக்க. 31. கடையும் - தாழ்வும்.

32. ஏமாப்பில - துன்பந்தருவன; பாதுகாப்பிலவென்றுமாம்.

34. இருப்பமொடுங்கிய - தாழ்வு நீங்கிய; துக்கம் நீங்கிய.

38. பொருள் - காரியமாகும். என - என்று யூகி சொல்ல.

பி - ம். 1 தோழர்.

பொறியமைத் தியற்றிய பொய்க்கிலம் போகி
வேண்டிய வளவிற் காண்டகக் கூட்டிச்
சுரந்துநிற மெய்து மரும்பெறல் யோகம்
யாவரு மறியாத் தன்மைத் தாக
மூவரு முண்டு வேறுநிற மெய்தி
அந்தண வுருவொடு சந்தனச் சாரற்
பெருவரை யடுக்கத் தருமைத் தாகிய
கல்சூழ் புல்லதர் மெல்லடி யொதுங்கிப்
பிரிவுதலைக் கொண்ட வெரிபுரை வெந்நோய்
தலைமை நீரிற் றண்ணெனத் தெளித்து
முலைமுதற் கொழுந னிலைபெற வேண்டும்
உள்ள வூர்தி யூக்கம் பூட்டக்
கள்ளக் காத ருங்கின ளாகி
இமிழ்வினை விச்சையி னிடுக்கட் பட்ட
மகிழ்மணி நாகர் மடமகள் போல
யூகி நீதியிற் பேதைபிணிப் புண்டு
வேண்டுவயிற் சென்ற காலை யாண்டே

(ஓர் ஆச்சிரமத்தின் வருணனை)

தண்கோ லல்லது வெங்கோல் புகாஅச்
செங்கோ லாளன் சேதியம் பெருமலைத்
தாண்முதற் றழீஇ நாண்மதுக் கமழும்
கற்சுனை நீலமுங் கணிவாய் வேங்கையும்

---

41. யோகம் - மருந்து. 45. அடுக்கம் – பக்கமலை.

46. புல்லதர் - புல்பரந்த வழி. 47. நோய் - விரகம்.

48. தலைமை நீரின் - தலைமையாகிய நீரினாலே. தெளித்து - தெளியச்செய்து ; நீக்கி.

50. மனமாகிய வண்டியில் ஊக்கமாகிய எருதை. [தால்.

52. இமிழ்வினை விச்சையின் - கட்டுந்தொழிலையுடைய மந்திரத்

57. சேதியம்பெருமலை - சிலையத்தையுடைய பெரியமலை.

58. தாண்முதல் - அடியிடத்தை.

59. கணிவாய் வேங்கை - கணித் தொழில் வாய்த்த வேங்கை மரம் ; இம்மரம் குறிஞ்சிநிலமாக்கள் மணஞ்செய்து கொள்ளுதற்குரிய நல்லநாளில் மலரும் ; "கணிவாய் வேங்கை" (நற். ௩௭௩); "இன வேங்கை நாளுரைப்ப" (திணைமா. 18) ; "கணிவேங்கை நன்னாளே நாடி மலர்தலால்" பழ. 120.

நற்சினை நறவமு நாகமு நந்தியும்
பருவ மன்றியும் பயங்கொடுப் பரூஉப்
பலவு மாவுந் துலைவளர் வாழையும்
இருங்கனி நாவலு மிளமா துளமும்
ஒருங்குடன் கஞலி யுள்ளம் புகற்றும்
மாசின் முனிவரொடு மகளிர் குழீஇயதோர்
ஆசில் பள்ளி யறிந்துமுன் னொடி

**(யூகி முதலிய மூவரும் முனிவனாச்சிரமத்தில் இருந்தல்)**

மற்றத னகவயிற் றெற்றெனத் தெரியும்
உருமண் ணுவாவின் பெருமுது குரவன்
அவமில் சூழ்ச்சித் தவமுது மகனொடு
கருமங் கூறிக் கண்ணுற் றுப் பிரியார்
அணித்துஞ் சேய்த்து மன்றி யமைவுற
மணிப்பூண் மாதரு மனம்புரி தோழனும்
காதற் செவிலியுங் காந்தவ ளொடுங்கி
மாதவர்த் தெரீஇ மரீஇ யொழுகப்

**(சாங்கியத்தாயின் செயல்)**

பள்ளியும் பதியு மலையுஞ் சேணிடத்
துள்ளவை யுரைத்துத் தள்ளாத் தவநெறி
அற்றந் தீர வுற்றுப்பிரிந் தொழுகிய
உருவுடை முதுமக ளொருவயிற் றியன்றமை

---

61 - 2. அகாலத்திலும் பயனளித்தலொழியாத பலா முதலிய மூன்று மரங்களும்; "கால மன்றியு மரம்பயங் கொடுத்தலின்" (மலை பு. 134); "கால மன்றியு மரம்பயம் பகரும்" (புறநா. ௧௧௬) என்ற விடத்தும் மலைவளம் இவ்வாறு கூறப்பட்டிருத்தல் காண்க. கொடுப்பு - கொடுத்தல்.

63. இருங்கனி - பெரியகனி; கரியகனியுமாம்.

64. கஞலி - நெருங்கி. புகற்றும் - விரும்பச்செய்யும்.

66. பள்ளி - ஆச்சிரமம். 64 - 6. புகற்றும் பள்ளியென்க.

68 - 70. அப்பள்ளியில் தவஞ்செய்து கொண்டிருக்கும் உருமண்ணுவாவின் தந்தையாகிய முனிவனை அடைந்து காரியத்தைச் சொல்லி அவனைப் பிரியாராகி; உ. 20 : 103 - 4; ௪. 9 : 23.

72. மாதர் - வாசவதத்தை. தோழன் - யூகி.

73. செவிலி - சாங்கியத்தாய்.

75 - 6. மிக்க தூரத்திலுள்ளனவாகிய பள்ளி முதலியவற்றைத் தம் இடமாகக் கூறி.

நீப்பிடந் தோறும் யாப்புற வறிவுறீஇ
நாட்ட வொழுக்கொடு நன்னுத லிவளை
வேட்டோன் விட்டுக் காட்டக நீந்திக்
குண்டுநீர்க் குமரித் தெண்டிரை யாடிய
போயின னென்னும் பொய்ம்மொழி பொத்தித்
தீவினை யாளரைத் தெளியக் கூறி
வாய்மொழி யாக வலித்தனள் வழங்கி
மறுவின் மன்னற் குறுதி வேண்டித்
தண்டழை மகளிரொடு தலைநின் றொழுகக்

(காஞ்சனமாலையின் வரவு)

கண்டனி ருளிரோ காவலன் மகளையென்
றொண்டொடிக் காஞ்சனை யுயிர்நனி நில்லாச்
செல்ல னோக்கிச் செயற்பாற் றிதுவென
ஒல்லு நண்பி னுருமண் ணுவாவவட்
கொண்டனன் வந்து கோமகட் காட்டிக்
கருமக் காரண மவள்வயிற் பேசி
விண்டலர் கழுநீர் வென்ற கண்ணியொடு
தலைப்படுத் தனனுத் தானவட் போகி
வண்டுளை மைம்பால் வயங்கிழை மாதரை

---

76 - 9. தவநெறியை அற்றந்தீர உற்று, தம்மைப் பிரிந்துசென்ற ஒரு முதியவள் வயிற்றில் தாம் மூவரும் பிறந்ததாகப் பிரிந்துசென்ற இடங்களிலெல்லாம் அறிவுறுத்தி; நீப்பிடந்தோறும் - பள்ளிதோறுமென்றுமாம்.

80. நாட்டவொழுக்கு - தேசாசாரம்.

82. ஆடிய - ஆடுதற்கு. 83. பொத்தி - மறைத்து.

84. தீ வினையாளர் - அக்கினி காரியஞ் செய்வோர்.

85. வாய்மொழியாக - மெய்ம்மொழிபோல.

86. மன்னற்கு - உதயணனுக்கு.

87. தழைமகளிரொடு - தழையை உடையாகக்கொண்ட முனிவர் மகளிரொடு.

89 - 90. காஞ்சனையின் பெருந்துயரை நோக்கி.

91. அவள் - அக்காஞ்சனமாலையை.

93. கருமக்காரணம் - அச்செயலின் காரணத்தை.

95. தலைப்படுத்தனனு - சேர்க்க. தான் - காஞ்சனமாலை.

ஆற்றவித் தோம்பப் போற்றுபு தழீஇ
நீங்கல் செல்லா நெறிமையி னொக்கி

(யூகி முதலிய நால்வரும் சண்பை நகருக்குச் செல்லுதல்)

யாங்கினி திருத்துமென் றறிவினிற் சூழ்ந்து
பற்றா ராயினு முற்றா ராயினும்
ஒற்றவ ருளரெனி னற்றந் தருமென
மற்றவ ணொடுங்கார் மறைந்தனர் போகி

(சண்பை நகரின் சிறப்பு)

உருமண் ணுவாவின் பெருமுது குரவன்
அவமில் சூழ்ச்சித் தவறி றோழன்
பெரும்புனற் கங்கை பெருவளங் கொடுக்கும்
அங்க நன்னாட் [1] டணிபெற விருந்த
தெங்குநிக ரில்ல தெழிற்கிடங் கணிந்தது
பொங்குமலர் நறுந்தார்ப் புனைமுடிப் பொற்கழல்
விச்சா தரருந் தேவ குமரரும்
அச்சங் கொள்ள வாடுகொடி நுடங்கிச்
சத்திக் குடத்தொடு தத்துற வோங்கி
விளங்குபு துளங்கும் வென்றித் தாகி
அளந்துவரம் பறியா வரும்படை யடங்கும்
வாயிலும் வனப்பு மேனியிற் றிருந்து
மதிலணி தெருவிற் றாகி மற்றோர்க்
கெதிரில் போக மியல்பமை மரபொடு

---

99. யாங்கு இனிது இருத்தும் - இனி எவ்விடத்தே இனிமையுடன் இருப்பேம்.

100. பற்றார் - பகைவர். உற்றார் - உறவினர்.

101. ஒற்றவர் உளரெனின் - ஒற்றியுணர்வார் உள்ளாராயின். அற்றம் - சோர்வை.

102. அவண் ஒடுங்கார் - அங்கே தங்காராய்.

104. தோழனென்றது விசயவரனை.

103 - 4.=68 - 9. குரவனுடைய தோழன். 107. கிடங்கு - அகழி.

111. சத்திக்குடத்தொடு - சூலம் நாட்டிய குடத்தொடு.

113. படை - காவற்படை. 108 - 14. நகர்வாயில்.

115. மற்றோர்க்கு - மற்ற அரசர்க்கு.

116. எதிரில் - நேர்படுதலில்லாத. மரபொடு கூடியென ஒரு சொல் வருவிக்க.

பி - ம். 1 டனிபெற.

குதிரையுங் களிறுங் கொடிஞ்சித் தேரும்
அடுதிறன் மள்ளரும் வடுவின்று காப்ப
நெடுமுடி மன்னருண் மன்ன னேரார்
கடுமுர ணழித்த காய்சின நெடுவேற்
படுமணி யானைப் பைந்தார் வெண்குடை
உக்கிர குலத்து ளரசரு ளரசன்
விற்றிறற் றானை விசயவர னென்னும்
நற்றிறன் மன்ன னுருங் காக்கும்
சண்பைப் பெருநகர்ச் சால்பொடும் விளங்கிய

(யூகி முதலியோர் மித்திரகாமன் வீட்டில் மறைந்திருத்தல்)

முட்டில் வாழ்க்கைச் செட்டியர் பெருமகன்
மித்திர காமன் மிக்குயர் பெருமனை
வத்தவன் காதலி வாசவ தத்தையென்
றத்தக வறிந்தோ ரவ்விடத் தின்மையின்
ஆப்புடை நண்பி னந்த ணுட்டியும்
நீப்பருங் காத லிலைமைத் தோழியும்
ஓங்கிய பெரும்புகழ் யூகியு முகவாக்
காப்பொடு புறநகர் மேற்படி பிழையாப்
பூங்குழன் மாதரொடு புகுந்தன ராகி
ஆங்கினி திருந்தன ரவ்வழி மறைந்தென்.

௨௦—சண்பையுள் ஒடுங்கியது முற்றிற்று.

## இரண்டாவது
## இலாவாணகாண்டம் முற்றுப்பெற்றது.

ஆக காண்டம் இரண்டிற்குக் கூடிய காதை, ௭௮.

---

117. கொடிஞ்சி - தாமரைப்பூ வடிவமாகப் பண்ணித் தேரின் முன்னே நடப்படுவதோர் உறுப்பு.

121. படுதல் - மாறியொலித்தல். 125. நகரில்.

127. பெருமனையில். 132. உகவா - உகந்து.

134. மாதரொடு - வாசவதத்தையொடு.

135. ஆங்கு - அவ்விடத்து. அவ்வழி - அப்பொழுது.

மூன்றாவது

# மகத காண்டம்.



## க—யாத்திரை போகியது.

ஆங்கினி திருந்த காலை யிக்கினி
வெந்துபடக் கடந்த வெந்துசுடர் நெடுவேல்
உதயண னிலைமை யிதுவென வுரைப்பேன்
(உதயணன் உட்கோள்)
பழனப் படப்பைப் பாஞ்சால ராசன்
அழன்மிகு சீற்றத் தாருணி யரசன்
திரியு நெய்யு மொருவயிற் செல்லிய

---

ரு—மகத காண்டம்.

*இஃது, உதயணன் மகதநாட்டில் இருந்தபொழுது நிகழ்ந்த வரலாற்றின் தொகுதிகளைக் கூறுவது.*

க—யாத்திரை போகியது.

[பகையை வெல்லுதற்கு முயலவேண்டுமென்று உதயணனைத் தோழர் வற்புறுத்தியதும், இறந்தவர்களை நினைந்து பின்னும் வருந்திய அவனை நோக்கி இறந்தோர்களைப் பண்டை வடிவத்துடன் தருபவரும் இராசகிரிய நகரத்தில் இருப்பவருமாகிய ஒரு முனிவரைச் சார்ந்து இரப்பின் அவரால் தேவி முதலியோரை மீட்டும் பெறுதல்கூடுமென்று இசைச்சன் சொல்லியதும், அப்பால் உதயணன் முதலியோரும் அறிவு முதலியவற்றிற் சிறந்த நூறு வீரர்களும் வேற்று வடிவும் செயலு முடையவர்களாய்ப் புறப்பட்டுப் பல இடங்களைக் கடந்து மகதநாட்டின் எல்லையை அடைந்ததும் இதனால் அறியலாகும். இதில் மான் முதலியவற்றைத் தனித்தனியே நோக்கி உதயணன் புலம்புவதாக உள்ளபகுதி மிக இன்பம் பயப்பது.]

1. *ஆங்கு - சண்பை நகரில். இருந்த காலை - வாசவதத்தை முதலியோர் இருந்த காலத்தில்.*

இனி (1) *உதயணன் நிலைமை உரைப்பேன்* (3.)

5. *ஆருணியென்பது பாஞ்சாலராசன் பெயர்.*

6. *செல்லிய - செல்ல.*

எரிவிளக் கற்ற மிருள்பரந் தாங்குப்
பாய தொல்சீர்ப் பகைபடு தானை
ஏய ரற்றத் திடுக்கட் காலை
அன்றவ ணறிந்தே தொன்றுவழி வந்த
குலப்பகை யாகிய வலித்துமேல் வந்து
நன்னகர் வெளவு மின்னுச் சூழ்ச்சியன்
என்வகை யறிந்த நன்பொரு ளாளன்
பெரும்படைத் தானைப் பிரச்சோ தனன்றன்
அரும்படை யழியா வாற்றலிற் போந்தவன்
மடமகட் கொண்ட விடனறி சூழ்ச்சி
யூகி யுளனெனி னிகழா [1] னிவனெனச்
சாவுமுந் துறுத்த வலிப்பின னாகித்
தீயகங் கழுமிய கோயில் வேவினுள்
தேவியை யிழந்து பூவிதழ்ச் சோலைப்
புல்லென் யாக்கையொடு போயின னுதயணன்

(பாஞ்சாலராசன் உட்கோள்)

இல்லெனக் கெழுபகை யிம்மையி னினியென

---

7. விளக்கு அற்றம் - விளக்கின் அறுதியில். பரந்தாங்கு - பரந்தாற்போல; "விளக்குநெய், தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு நல்வினை, தீர்விடத்து நிற்குமாந் தீது" நாலடி. 51.

5 - 7. ஆருணியரசனுக்கு இருள் உவமம்.

9. ஏயர் - மிருகாபதியின் முன்னோர்.

9 - 10. காலையை அறிந்து.

11. ஆகிய - ஆக; வளர. வலித்து - துணிந்து.

12. நன்னகர் - கோசம்பி நகரத்தை.

13. நன்பொருளாளனென்றது யூகியை.

15. அழியா - அழித்து.

15 - 6. அவன் மகள் - வாசவதத்தையை.

17. இவன் - பாஞ்சால ராசன்.

18. வலிப்பினன் - துணிவுடையான்.

ஆகிப் (18) போயினன் உதயணன் (21.)

22. இம்மையில் இனியெனக்குப் பகையில்லையென்று நினைந்து.

பி - ம். 1 னிவனெனச்.

மாற்று வேந்தன் மதில்காப் பிகந்துதன்
ஆற்றன் மகிழ்ந்த வந்நிலை யொற்றி

(அமைச்சர் உதயணனுக்குக் கூறல்)

[1] மகத மன்னனொடு மகட்கிளை யாகித்
தொகைகொண் டண்டியவன் றொல்படை தழீஇ
ஆதித் துணிவுடை நீதியிற் கரந்த
தம்பியர் கூட வெம்பிய வெகுட்சியின்
ஒடுங்கா மாந்த ருள்ள மஞ்சப்
பாடுபெயர்ந் திடிக்கு [2] மேடகம் போல
அகன்றுபெயர்ந் தழிக்கு மரும்பெறற் சூழ்ச்சி
நவின்ற தோழனொடு பயப்பட வலித்து
மதியுடை யமைச்சர் மனந்தெளி வுறீஇப்
புதிதிற் கொண்ட பூக்கவின் வேழம்
பணிசெயப் பிணிக்கும் பாகர் போல
நீதி யாள ராதி யாகிய
திறத்திற் காட்டவு மறத்தகை பழக்கி

---

23. மாற்றுவேந்தன் - பாஞ்சாலராசன்.

24. ஒற்றி - உணர்ந்து.

22 - 4. "இகழ்ச்சியிற் கெட்டாரை புள்ளுக தாந்தம், மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து" குறள், 539.

25. மகதநாட்டரசனுக்கு உறவாகி; மகட்கிளையாகி யென்றது மருகனாதலை. 26. அவன் - மகதமன்னனுடைய.

27. முன்பு, பகையை வெல்லுதற்குரிய காலத்தையும் இடத்தையு மறிந்து மறைந்த. 28. பிங்கல கடகரும் துணையாக.

30. பாடு பெயர்ந்து - இடம்விட்டுப் பெயர்ந்து; பின் சென்று. மேடகம் - ஆட்டுக்கிடாய்.

31. பெறுதற்கரிய ஆலோசனையை.

30 - 31. "ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர், தாக்கற்குப் பெருந் தகைத்து" (குறள், 486.) 32. தோழன் - உருமண்ணுவா.

34. பூக்கவின் - தெறுழ்க் கொடியின் பூவைப்போன்ற புள்ளிகளின் அழகையுடைய; "களிற்றுமுக வரியிற் றெறுழ்வீ பூப்ப" புறநா.

35. பணிசெய - ஏவிய தொழில் செய்ய. [ககூ: 2.

37. அறத்தகை - உதயணன்.

பி-ம். 1 மத்த. 2 மோதும்.

(உதயணன் இரங்கல்)

முன்னுப காரத்து நன்னயம் பேணித்
தன்னுயிர் கொடுக்குந் தவமுது தாயும்
[1] விறப்பினிற் பெருகியும் [2] வறப்பினிற் சுருங்கியும்
உறுதி நோக்கி யுயிர்புரை காதலோ
டாழ்விடத் துதவு மரும்புணை போலத்
தாழ்விடைத் தாங்கிச் சூழ்விடைத் துளங்கா
உள்ள வாற்ற லுறுபுகழ் யூகியும்
அள்ளற் றாமரை யகவித ழன்ன
அரிபரந் தகன்ற வம்மலர் நெடுங்கட்
டெரிமலர்க் கோதைத் தேவியு மின்றித்
தருமமு மருத்தமுங் காமமு மிழந்தே
இருநில மருங்கி னிறைமை தாங்கி
வாழ்தலி னினிதே யாழ்தலென் றழிந்தே
உரக்கவின் றேய விரக்கமொ டாற்றவும்

(தோழர் தேற்றல்)

கைவரை நில்லாக் கையறு கவற்சிகண்
டின்மொழி விச்சை யிலாமய னென்னும்
ஆளவி நெஞ்சத் தந்தண னிருந்த
காள வனமும் வெந்தீப் புக்கெனக்

---

38. முன்னுபகாரம் - முன்பு தன்னைப் பிழைப்பித்தது.
39. தாய் - சாங்கியத்தாய். 42. புணை - தெப்பம்.
43. தாழ்விடை - துன்புற்ற சமயத்தில்.
44. உள்ள ஆற்றலையும் மிக்க புகழையுமுடைய யூகியும்.
41 - 4. "உயிர்புரை யூகியோ டெண்ணி" (நன். மயிலை. சூ. 366, மேற்.) என்பது இங்கே அறியற்பாலது.
45. அகவிதழ் - உள்ளிதழ். 47. தேவி - வாசவதத்தை.
48. சாங்கியத்தாய் முதலியோரின்மையின், தருமமுதலியவற்றை இழக்கலாயிற்றென்றான்; கிரனிறை. 49. இறைமை - அரசாட்சி.
50. ஆழ்தல் - இறத்தல். 51. உம்மை : அசைநிலை.
53. இலாமயன் - முன்பு குறி கூறியவன் போலும்; உ. 13 : 7-8.
54. ஆளவி நெஞ்சம் - ஆண்மையவிந்த நெஞ்சம்.
55. காளவனமும் : உம்மை, உயர்வுசிறப்பு. காளவனம் : 129.
புக்கென - புக்கதென்ற.

பி - ம். [1] பிறப்பிணிற். [2] மறப்பினிற்.

காதலன் றன்னையுஞ் சாவற லாற்றி
மயக்க நெஞ்சமொடு மனம்வலித் திருந்துழி

(இசைச்சன் கூற்று)

இசைச்சன் கூறுவ னீங்கிது கேட்கென
விச்சையின் முடியா விழுமிலை யில்லெனல்
பொய்ச்சொ லென்பர் புன்மை யோரே
அற்ற தாத லிற்றுங் கூறுவென்
கற்றதுங் கேட்டதுங் கண்ணு மாந்தர்க்
கொற்கடத் துதவு முறுவலி யாவது
பொய்ப்பது போலு நம்முதற் றாகப்
பற்றொடு பழகி யற்பழ லழுந்தி
முடிவது நம்மைக் கடிவோ ரில்லை
இல்லை [1] யாதலிற் சொல்லுவ லின்னும்
முடியாக் கருமமாயினு முடியும்
வாயின் முற்றித்து வயங்கா தாயினும்
சாவினும் பழியார் சால்புடை யோரென
மல்லற் றானை மறங்கெழு மன்னவன்
செல்வப் பாவை சென்றினி திறந்துழி
இம்மை யாக்கையி னியல்பின னாகத்
தன்மையிற் றருஉந் தாழாப் பெருவினை
உட்குடை விச்சை யொன்றுண் டதனைக்

---

56. உதயணன் இறத்தலைத் தவிர்த்து.

57. மயக்கம் - இனி யாரிடத்துச் சென்று குறிகேட்போமென்ப தனாலுண்டான மயக்கம்.

58. இசைச்சன் - உதயணனுடைய பார்ப்பனத்தோழன்; க. 2 : [3 - 4.

61. இற்றும் - இன்னும்; “இற்றுங் கேண்மதி” க. 47 : 253.

62. கண்ணு - கண்ணுக.

64. நம்முதற்றாக - நம்மிடத்தில்.

62 - 4. கண்ணுக உதவும் வலியாதல் நம்முதற்றாகப் பொய்ப்பது [போலும்.

65. பற்று - கிடைத்த பொருளின் மேலுள்ள அன்பு. அற்பு அழல் - அன்பாகிய தீயில்; “சொன்னீரவ ளற்பழலுட் சொரிந் தாற்ற” (சீவக. 1072.) 66. முடிவது - முற்றுப்பெறுவதாகும்.

69. முற்றித்து - முடித்து. 70. என - என்று சொல்லி.

72 - 4. = ச. 6 : 65 - 6. 75. உட்கு - அச்சம்.

பி - ம். 1 யாயினுஞ்.

கற்றுநனி நவின்ற கடனறி யந்தணன்
இருந்தினி துறையு மிராச கிரியெனும்
[1] பொருந்தரு வியனகர்ப் புக்கவற் குறுகி
ஆற்றுளி வழிபா டாற்றி யமைச்சனொடு
பூக்குழை மாதரை மீட்டனங் கொண்டு
பெறற்கரு விச்சையுங் கற்று நாமெனத்
திறப்படு கிளவி தெரிந்தவ னுரைப்ப

(உதயணன் கூற்றும் தோழர்செயலும்)

விறற்பொ ருதயணன் விரும்புபு விதும்பி
என்னே யன்னவு முளவோ வென்றலின்
வேட்டதன் வழியே பாற்பட நாடி
ஆதி வேதத் தகவயிற் பெரியோர்
ஓதிய வுண்டென வுணரக் கூற
இன்னே போது மேகுமின் விரைந்தெனப்
பள்ளம் படரும் பன்னீர் போலவன்
உள்ளம் படர்வழி யுவப்பக் காட்டிக்
கணைப்புரி பெரும்படைக் காவ னீக்கிக்
குணப்புரி தோழர் கொண்டனர் போதர
ஆற்றலும் விச்சையு மறிவு மமைந்தோர்
நூற்றுவர் முற்றி [2] வேற்றுநா ராகென

---

78. அவன் - அம்முனிவனை.
79. அமைச்சனொடு - யூகியொடு. 82. அவன் - இசைச்சன்.
83. விரும்புபு விதும்பி - விரும்பி விரைந்து.
84. அன்னவும் - அப்படிப்பட்ட வித்தைகளும். என்றலின் - என்று உதயணன் சொல்லுதலால்.
86. ஆதிவேதத்தகவயின் - முதனூலில்; "ஆதிவேதம் பயந்தோய் நீ" சீவக. 1242.
89. "நீதித் தனியாறு புகமண்டும், பள்ளமெனுந் தகையானை" (கம்ப. குலமுறை. 21); "பள்ளம்புகு புனல்போனெறி படருஞ்சிவ னடியார், றுள்ளம்புகு மருணந்தி" திருப்புலீங்க. குனியசிங்காதன. 1.
91. தம்மைப் பிரதிந்து கொள்ளாதபடி தம்முடைய பெரிய காவற்படையை நீக்கி.
92. கொண்டனர் போதர - அழைத்துக்கொண்டு செல்லுதற்கு.
94. என - என்று தோழர் சொல்ல.

பி - ம். 1 பெருந்தகு. 2 வேற்றுநாடர்களென.

(வேற்று வேடவகை)

வெண்ணூற் பூந்துகில் வண்ணங் கொளீஇ
நீலக் கட்டியு மரகதத் தகளையும்
பாசிலைக் கட்டியும் பீதகப் பிண்டமும்
கோல மாகக் கொண்டுகூட் டமைத்துப்
பிடித்துருக் கொளீஇக் கொடித்திரி யோட்டிக்
கையமைத் தியற்றிய கலிங்கத் துணியினர்
கொய்யுளைப் புரவி மேற்கொண் டவிற்
கைவினைக் கம்மங் காண்பினி தாக
வாரமைத் தியற்றிய காலமை செருப்பினர்
செம்பொற் கொட்டைப் பந்தர்க் கொளுவினர்
மாத்திரை [1] நுண்கயிற் றுத்திரை யாப்பினர்
உள்கூட் டமைந்த சில்கூட் டல்குலர்
இரும்பனை யினமடல் விரிந்துளர் வெண்டோட்
டீர்க்கிடை யாத்த [2] நூற்புரிப் பந்தச்
செந்தோட் டணிமலர் சேர்ந்த வுச்சி
அந்தோட் டம்பனை யரக்குவினை யுதீஇய
சித்திரத் திண்கால் வித்தகக் குடையினர்
மரகத மணிக்கை மாசில் பொற்றொடி
உருவுபடச் செறித்த வுரோமக் கொட்டையிற்
செந்தளிர் மாஅத்துப் பைங்காய் பழித்த
செண்ணார் வடிவிற் கண்ணார் கத்தியர்

95 - 100. வெண்மை முதலிய ஐந்து வண்ணங்களுடைய ஆடை; க. 42 : 102, அடிக். "அஞ்சு வணத்தி னுடை யுடுத்தான்" என்றார் கம்பரும்; கம்ப. ஊர்தேடு. 79.

102. கைவினைக் கம்மம் - கைத்தொழில். காண்பு - காண்பதற்கு.

104. கொட்டை - குமிழ்.

105. மாத்திரை - ஒருவகை மருந்து. மருந்து வைத்துள்ள உறி யினர்; மாத்திரை - பெரிய திரைச்சீலையுமாம்.

107 - 11. குடை. 108. பந்தம் - கட்டு.

110. உதீஇய - உறுத்திய.

113. கொட்டை - உருண்டை வடிவமாகவுள்ளது.

115. செண்ணார்வடிவு - செண்ணம ஆர் வடிவு; மிக்க அழகான [வடிவு.

பி - ம். [1] நுண்செயிற். [2] நூற்பிரிப்பந்த

ஏரில வங்கந் திம்பூ வேலம்
கப்புரப் பளிதமொ டொட்படுத் தியற்றிய
வாசத் திரையொடு பாகுநிறைத் தடக்கிய
மாசி லருமணி மடைத்த வாடையர்
பட்டுச் சுவேகமொடு பாட்டுப்புற மெழுதிய
கட்டமை சுவடி பற்றிய கையினர்
புரிநூ லணிந்த பொன்வரை மார்பினர்
விரிநூற் கிரந்தம் விளம்பிய நாவினர்
வாச வெள்ளை [1] வரைந்த கழுத்தினர்
தேசந் திரிதற் காகிய வணியொடு
வளங்கெழு மாமலை வண்புன் றுளக
நலங்கெழு சிறப்பி னட்டக நீந்திப்
பைந்தொடி யரிவைக்குப் படுகடங் கழீஇய
கண்புரை யந்தணன் காள வனத்தினின்
றுதய ஞாயிற்றுத் திசைமுக நோக்கித்
திருமகட் டேரு மொருமையிற் போந்து
கருப்பாச மென்னுங் கானக் கான்யாற்றுப்
பொரும்புன லீத்தம் புணையிற் போகிச்
சேணிடைப் போகிய பின்றை யப்பால்
நீணிலைப் படுவிற் பேர்புணை நீந்தி
நொந்துநொந் தழியு நோன்புபுரி யாக்கையர்
அருஞ்சுரக் கவலையு மடவியும் யாறும்
பெருஞ்சின வீர ரொருங்குடன் போர்வழி

(உதயணன் மான் முதலியவற்றை நோக்கிப் புலம்பல்)

வென்றடு சிறப்பின் வீணை வித்தகன்
ஒன்றிய தேவியை யுள்குவன னாகிச்

---

116 - 9. ஒருதொடர்.
118. திரை - வெற்றிலை. 119. மடைத்த - பொருத்திய.
120. பட்டுச்சுவேகம் - பட்டாலாகிய உறை.
124. வாசவெள்ளை - வாசச் சந்தனம்.
126 - 7. புன்றுளக நாட்டைக்கடந்து. 129. = 55.
135. படு - மடு.

பி - ம். 1 வரைந்த.

செறிந்த மருங்கிற் றிரிமருப் பிரலை
புறந்தற் காப்பப் புணர்மறி தழீஇய

(மான் பிணை)

மடமா னம்பிணை கண்டு மாதர்
கடைபோழ் நெடுங்கட் காம நோக்கம்
உள்ளத் தீர வொள்ளழ லுயிரா
இனத்திற் கெழீஇ யின்ப மகிழ்ச்சியொடு
புனத்திற் போகாது புகன்றுவிளை யாடும்
மான்மடப் பிணையே மயங்கழற் பட்ட
தேனோர் கிளவி சென்ற வுலகம்
ஆற்றி யாயின் யாமு மங்கே
குறுகச் செல்கங் கூறு மெனவும்

(மயிற்பெடை)

பணிவரை மருங்கிற் பாறை தோறும்
மணியிரும் பீலி மல்க வுளரி
அரும்பெற லிரும்போத் தச்சங் காப்ப
மதநடை கற்கு மாமயிற் பேடாய்
சிதர்மலர்க் கூந்தற் செந்தீக் கவர
மயர்வன ளிளிந்தவென் வஞ்சி மருங்குல்
மாறிப் பிறந்துழி மதியி னாடிக்
கூறிற் குற்ற முண்டோ வெனவும்

(ஆண்புறா)

வெஞ்சுரஞ் செல்வோர் வினைவழி பஞ்சப்
பஞ்சுர வோசையிற் பையெனப் பயிரும்
வெண்சிறைச் செங்கா லுண்பொறிப் புறவே
நுண்சிறு மருங்கு லுகர்வின் சாயற்

---

141. திரிமருப்பு - முறுக்கி விட்டா லொத்த கொம்பு; இரலை - கலைமான்; “திரிமருப் பிரலையொடு மடமா னுகள” முல்லை. 99.
142. மறி - குட்டி. 145. ஈர - அறுப்ப.
154. போத்து - ஆண்மயில்; “பொறிமயிற் பேடை போத்தொடு புலம்ப” (௧. 51 : 58); “மயிற்போத் தார்த்த மயிற்படை நெடுவேள்” தொல். மரபு. சூ. 41, பேர். மேற்.
156. கூந்தலை முதலில் தீக்கவர. பிறந்துழி-பிறந்தன்ன இடத்தை.
161. பஞ்சரம் - ஒருவகைப்பண்; இது பாலைக்குரியது; ௧. 52 : 89.

பாசப் பாண்டிற் [1] பல்கா ழல்குலென்
வாசவ தத்தை யுள்வழி யறியின்
ஆசை தீர வவ்வழி யடைகேன்
உணரக் கூறு யாயிற் பெடையொடு
புணர்வு விரும்பல் பொல்லா தெனவும்

(வண்டு)

பசைந்துழிப் பழகல் செல்லாது பற்றுவிட்
டுவந்துழித் தவிரா தோடுதல் காமுறும்
இளையோ ருள்ளம் போலத் தளையவிழ்ந்
தூதுமல ரொழியத் தாதுபெற நயந்து
கார்ப்புன மருங்கி னூர்த்தனை திரிதரும்
அஞ்சிறை யறுகாற் செம்பொறி வண்டே
எரியுள் விளிந்தவென் வரிவளைப் பணைத்தோள்
வள்ளிதழ்க் கோதை யுள்ளுழி யுணரிற்
கவற்சி வகையிற் பெயர்த்தனை களைஇயர்
அரும்பூங் கோதைப் பூந்தா தூண்டவள்
அவிழ்பூங் கூந்தலுண் மகிழ்துயில் வெய்தி
நீயு மெவ்வந் தீர யானும்
நல்லிள வனமுலை புல்லுபு பொருந்த
உய்த்தனை காட்டுதி யாயிற் கைம்மா
றித்துணை யென்பதொன் றில்லென விரங்கியும்

(தென்றல்)

பொங்குமழை தவழும் பொதியின் மீமிசைச்

---

164. பாண்டில் - வட்டக்காசு.

169. பசைந்துழிப் பழகல் செல்லாது - அன்புள்ள விடத்துப் பழகாது; "பசைந்துழிப் பழகாது" உ. 17 : 43.

170. தவிராது - தங்காமல்.

171. இளையோர் உள்ளம் - பரத்தையருடைய மனம்.

172. தாது - வேறுமலர்களிலுள்ள தேனை. [பார்க்க.

174. அஞ்சிறை - அகத்தே சிறையையுடைய; நன். வி. சூ. 222,

169 - 74 = உ. 16 : 32-6; "நறுந்தா தூண்டு நயனில் காலை, வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்" மணி. ௧௮ : 19-20.

176. உள்ளுழி - உள்ளவிடத்தை.

177. கவற்சிவகையின் - பலவகைக் கவலையினின்றும். களைஇயர்- [களைக.

182. உய்த்தனை - கொண்டுவந்து.

184. மழைதவழும் பொதியில்: குறுந். ௮௪ : 3, புறநா. ௧௨௮ : 5.

[1] பல்காசு, பல்தாக.

சந்தனச் சோலைதொறுந் தலைச்சென் றாடி
அசும்பிவ ரடைகரைப் பசுந்தோ டுளரிச்
சுள்ளிவெண் போது சுரும்புண விரித்து
மணிவாய் நீலத் தணிமுகை யலர்த்தி
ஒண்பூங் காந்த ளூழ்க்கிச் சந்தனத்
தந்த ணறுமல ரவிழ மலர்த்தி
நறுங்கூ தாளத்து நாண்மல ரளைஇக்
குறுங்காற் குரவின் குவிமுகை தொலைச்சி
முல்லைப் போதி னுள்ளமிழ் துணாஅப்
பல்பிட வத்துப் பனிமலர் [1] மறுகிப்
பொற்றார்க் கொன்றை நற்றாது கவர்ந்து
[2] சாந்துவினைக் கம்மியன் கூட்டுவினை யமைத்துப்
பல்லுறப் படக்கிய பையகங் கமழ
எல்லுறு மாலை யியையத் துயர்வரை
அல்குதற் கெழுந்த வந்தண் டென்றல்
செவ்வழித் தீந்தொடை சிதைந்தன கிளவியென்
எவ்வினைத் தோளிலை யெவ்வழி யாதும்
கூடிச் சென்றவள் சேடின வளமுலைக்
குழங்கற் சாந்திடைக் குளித்துவினை யாடியென்
அழுங்க னெஞ்சத் தயாஅநோய் தீர
மயர்வினை [3] மாற்றுதி யாயி னின்மாட்

---

186. அசும்பு - ஊற்று. தோடு - பூவிதழ். உளரி - அசைத்து.
187. சுள்ளி - மராமரம்.
188. நீலத்து - நீலோற்பலத்தினது.
193. அமிழ்து உணா - இனிய மணத்தை உண்டு.
194. பிடவம் - பிடா.
196. சாந்து வினைக் கம்மியன் - சந்தனச் சாந்து முதலியன அமைக்குந் தொழிலுடையோன்.
197. பையகம் - பையின் உள்ளிடம்.
198. மாலை - மாலைக்காலம்.
199. அல்குதற்கு - தங்குதற்கு. தென்றல் - தென்றலே.
200. செவ்வழி - ஒரு வகைப் பண். [illegible]
204. அயாநோய் - வருத்தமாகிய நோயை. [illegible]
205. மயர்வு - மயக்கம்; வினை மயர்வு மாற்றுதியாயின் [illegible]

பி - ம். 1 மருவிப். 2 சாந்துவினை. 3 [illegible]பாட்டுதி.

[1] டியர்வுள வியற்கை யொழியுமோ வெனவும்
இன்னவை பிறவு மன்னவை கண்டோர்
அவல நெஞ்சமோ டறிவுபிறி தாகத்
தவலருந் தேவியைத் தானினைந் தாற்று
திறுதி யெண்ணி யிகவா மன்னனை

(உதயணன் முதலியோர்
மகதநாட்டின் எல்லையை அடைதல்)

உறுதி மொழியி னுணர்த்துவன ராகிப்
பல்வகைத் தோழர் படிவ வேடமொடு
செல்வ மகதத் தெல்லை யெய்தி
ஒருவழிப் பழகல் செல்லா துருவுகரந்து
பெருவழி முன்னினர் பெருந்தகைக் கொண்டென்.

க—யாத்திரை போகியது முற்றிற்று.

---

210. இறுதி - வாசவதத்தையின் மரணத்தை.
212. படிவவேடம் - வேறுவேறான வேடம்.
213. மகதத்து - மகதநாட்டினது. 214. கரந்து - மறைந்து.
215. பெருவழி - விசாலமான வழி ; சாலையென்றும் வழங்கும்.
பி - ம். 1 யெர்புனத்தியற்கை, யெர்புன.

## உ—மகதநாடு புக்கது.

(தோழர்செயல்)

பெருவழி முன்னிப் பெருந்தகை வேந்தனை
உருமண் ணுவாவும் வயந்தக குமரனும்
அருமறை நாவி னந்த ணாளன்
மயக்கமில் கேள்வி யிசைச்சனு மென்றிக்
கடனறி தோழர் காவல் போற்றி
மடநடை மாதர் மாறிப் பிறந்துழி

---

உ—மகதநாடு புக்கது.

[உருமண்ணுவாமுதலியோர், மிகவிரிவானதும் பலவகை வளங்களையுடையதுமாகிய மகதநாட்டினுள் உதயணனுடன் புகுந்தது இதனால் அறியலாகும்.]

4. இசைச்சன் : ௩. 1 : 58.
5. கடன் - தம்முடைய கடமைகளை. காவல்போற்றி - பாது [காத்து.

மீட்கும் வேட்கையொடு சேட்புலம் போகி
விரிகதிர்த் திங்கள் வெண்குடை யாகக்
ஒருவயிற் கவித்த லுற்ற வேந்தற்
கருமை யமைச்சர் பெருமலை யேறிக்
கொண்டியாந் தருதுங் கண்டனை தெளிகென
நண்புணத் தெளித்த நாடகம் போலப்
படைச்சொற் பாசத் தொடக்குள் ளொரீஇக்
கலாவேற் குருசில் விலாவணை யோம்பி

(எருமையின் செயல்)

[1] வயல்கொள் வினைஞர் கம்பலை வெரீஇக்
கயமூழ் கெருமை கழைவளர் கரும்பின்
விண்ட விளமடல் முருக்கித் தண்டாது
தோகைச் செந்நெல் சவட்டிப் பாசிலை
ஒண்கேழ்த் தாமரை யுழக்கி வண்டுகள்
ஆம்ப லகவிலை முருக்கிக் கூம்பற்
குவளைப் பன்மலர் குழைத்துத் தவளைத்
தண்டுறை கலங்கப் போகி வண்டினம்
பாட லோவாப் பழனப் படப்பைக்
கூடுகுலைக் கமுகின் கொழுநிழ லசைந்து
மன்றயற் பாக்கு மருதந் தழீஇக்

---

7. சேட்புலம் - நெடுந்தூரமான இடம்.

9. கவித்தலுற்ற - கவித்தற்கு விரும்பிய.

11. கொண்டு யாம் தருதும் - அந்தத் திங்களைப் பிடித்துக் கொண்டு வந்து யாம் கொடுப்போம்.

13. படைச்சொற் பாசத் தொடக்குள் - படைத்து மொழியாகிய கயிற்றின் கட்டினுள்.

14. கலாவேல் - போரிற் சிறந்த வேல்; சு. 47 : 262, அடிக். விலாவணை ஓம்பி - அழுகையை ஒழித்து.

16. கழை - கோல். 17. மடல் - தோகை.

18. சவட்டி - அழித்து.

19. வண்டு உகள்; வண்துகள் - வளவிய தாதுக்களுமாம்.

23. படப்பை - தோட்டம். 24. அசைந்து - இளைப்பாறி.

25. மன்று - தொழுவம்.

15 - 25. அகநா. சகூ : 1 - 6 ; குறுந்தொகை 1 - 7.

பி - ம். [1] வயல்கொள் வினைஞர்.

அலகை வேந்த னாணை கேட்ப
அரம்பு மல்லலுங் காரம்பு மில்லது
செல்வப் பெருங்குடி சிறந்தணி பெற்றது
நல்குர வாளரை நாடினு மில்லது
நன்பெரும் புலவர் பண்புளி பண்ணிய
புகழ்ச்சி முற்று மகிழ்ச்சியின் மலிந்து
இன்னவை பிறவு மெண்ணுவரம் பிகந்த
மன்பெருஞ் சிறப்பின் மகதநன் னாடு
சென்றுசார்ந் தனராற் செம்மலோ டொருங்கென்.

உ—மகதநாடு புக்கது முற்றிற்று.

---

47. அலகை வேந்தன் - மற்றை அரசர்க்கு உவமையாகவுள்ள அரசன்: உ. 2: 15.
48. அரம்பு - குறும்பு; "வரம்பிகந் தரம்பு செய்யும்" (சீவக. 2727.) காரம்பு - பாழ்நிலம். 55. செம்மல் - உதயணன்.

---

## ௩—இராசகிரியம் புக்கது.

மன்பெருஞ் சிறப்பின் மகதநன் னாடு
சென்று சார்ந்தபின் வென்றியிற் பெருகி

(ஊர்களின் சிறப்பு)

யாறுங் குளனும் வாய்மணந் தோடித்
தண்டலை தோறுந் தலைபரந் தாட்டி
வண்டிமிர் பொய்கையும் வாவியுங் கயமும்

---

௩—இராசகிரியம் புக்கது.

[உதயணன் மகதநாட்டின் இராசதானியாகிய இராசகிரிய நகரத்தை அடைந்தது இதனால் அறியலாகும். இதில் மதிலைக் கன்னியாகவும் நகரத்தைத் தாமரை மலராகவும் உருவகஞ் செய்திருத்தல் பாராட்டற்பாலது.]

3. குளன் - ஏரி. யாறும் குளனும்: எழுவாய். மணந்து - கலந்து.
4. தண்டலை - பூந்தோட்டம்.
5. பொய்கை - மானிடராக்காத நீர்நிலை; வாவி - ஆற்றிலுள்ள ஓடை; "வண்டார் குவளைய வாவியும் பொய்கையும்" (சீவக. 837.) கயம் - ஆழமான குளம்.

கேணியுங் கிணறு நீணிலைப் படுவும்
நறுமலர் கஞலி யுறநிமிர்ந் தொழுகிச்
சாலி கவினிய கோலச் செறுவிற்
செல்வங் கொடுத்து நல்குத லறாஅ
இன்பங் கெழீஇய மன்பெருஞ் சிறப்பிற்
பல்குடித் தொல்லூர் புல்லுபு சூழ

(இராசகிரியத்தின் சிறப்பு)

உயர்மிசை யுலகி னுருகெழு பன்மீன்
அகவயிற் பொலிந்துத னலங்குகதிர் பரப்பி
நிலப்புடை நிவத்தரு நிறைமதி போலக்
காட்சி யியைந்த மாட்சித் தாகிச்

(மதில்)

சித்திரக் கைவினை செறிந்த கோலத்துப்
[1] பத்திரப் பாம்புரி [2] யத்தகக் கலாஅய்
[3] முற்பட வளைஇய பொற்படைப் படுகாற்
கண்டவர் நடுக்குங் குண்டகழ்ப் பைந்துகில்
தண்டாச் செல்வமொடு தனக்கணி யாக
உடுத்துவீற் றிருந்த வடுத்தீ ரல்குல்
மாற்றோர் நுகராப் படாஅ தேற்ற
பன்மணி பயின்ற வொண்முகட் டுச்சி

---

6. கேணி-சிறியகுளம்; "தண்கேணித் தகைமுற்றம்" (பட்டின. 51.) படு - மடு. 5 - 6. பொய்கை, கேணி: ௩. 9 : 12.

8. சாலி கவினிய - நெல் அழகுபெற்ற. செறு - நன்செய்.

13. அகவயின் - உள்ளே.

14. பூமியில் உயர்ந்து தோன்றும் மதியைப்போல.

12 - 5. பல ஊர்கள் சூழ்ந்த இராசகிரிய நகரத்திற்குப் பல நட்சத்திரங்கள் சூழ்ந்த திங்கள் உவமை.

17. பத்திரம் - அழகு. பாம்புரி - மதிலினடியேயுள்ள ஆளோடிகள்; சீவக. 1250, ந. கலாஅய் - கலந்து.

18. பொற்படைப் படுகால்-பொன்னாலே செய்யப்பட்ட மேகலை; "மேகலையேணிப் படுகால்" (பரி. ௧௦) என்பதன் உரையைப் பார்க்க.

19. குண்டு அகழ் பைந்துகில் - ஆழத்தையுடைய அகழியாகிய பசிய ஆடை.

22. மாற்றோர் - பகைவரால்.

23. முகட்டுச்சி: ஒருபொருட்பன்மொழி.

பி - ம். 1 பத்திப். 2 வித்தகக்கலாய். 3 மூட்பட.

நலத்தகு ஞாயி லிலக்கண விளமுலைப்
பொறிநிலை யமைந்த போர்ப்பெருங் கதவிற்
செறிநிலை யமைந்த சித்திரப் புதவின்
யாப்புற வமைத்த வாய்ப்புடைப் பணதி
வல்லோர் வகுத்த செல்வக் கூட்டத்
தாய்நலக் கம்மத் தழுகொடு புணர்ந்து
தீயழற் செல்வன் செலவுமிசை தவிர்க்கும்
வாயின் மாடத் தாய்நல வணிமுகத்
தொண்பொற் சத்தித் திண்கொடி சேர்ந்து
விண்ணிற் செல்லும் விளங்கொளி யவர்களை
மண்ணிற் செல்வுங் காணிய வல்விரைந்
[1] தடைதர்மி னென்னு மவாவின போல
வடிபட வியங்கும் வண்ணக் கதலிகைக்
கூந்த லணிந்த வேந்துநுதற் சென்னிக்
கடியெயின் முதுமகள் காவ லாக

---

24. ஞாயில் - மதிலின்மேல் எப்புழைக்கு நடுவேயுள்ள எய்து மறையும் சூட்டென்னும் உறுப்பு.

25. போர்ப்பெருங்கதவு - பெரிய இரட்டைக் கதவு; "புலிப் பொறிப் போர்க்கதவு" பட்டின. 40.

26. சித்திரப்புதவு - சித்திரங்களையுடைய வாயில்.

30. தீயழற் செல்வன் - சூரியன்.

31. வாயின் மாடம் - கோபுரம்; இது மலைநாட்டு வழக்கென்பர்.

32. சத்திக்கொடி - சூல ஒழுங்கு.

33. ஒளியவர்களை - தேவர்களை.

34. காணிய - காணுதற்கு. வல்விரைந்து - மிகவிரைந்து.

35. அடைதர்மின் - அடையுமின். அவாவினபோல - விரும்பி அழைப்பனவைபோல.

36. வடிபட - காற்று மேலே படுதலால்; வளி வடியாயிற்று, களிறு கடிமுயதுபோல.

36 - 7. கதலிகைக் கூந்தல் - துவசமாகிய கூந்தல்.

38. எயிலாகிய முதுமகள்.

17 - 38. பாம்புரியாகிய மேகலையையும், அகழியாகிய ஆடையையும், ஞாயிலாகிய கொங்கைகளையும், புதவாகிய பணதியையும், வாயின் மாடமாகிய முகத்தையும், கொடிகளாகிய கூந்தலையுமுடைய எயிலாகிய

பி - ம். 1 திடைதர்மி.

(படைச்சேரி)

நெடுநீர்ப் பேரியாறு நிறைந்துவிலங் கறுத்துப்
பல்வழிக் கூடிய படிய வாகிச்
செல்வழி யெல்லாஞ் சிறந்த கம்பலை
கரைபொரு துலாவுந் திரையொலி கடுப்ப
நிறைவளங் கவினிய மறுகிரு பக்கமும்
அந்தி வானத் தகடுமுறை யிருந்த
ஒண்கே [1] ழுடுவி னொளிபெறப் பொலிந்து
கண்ணுற நிவந்த பண்ணமை படுகாற்
கைவினை நுனித்த மைதவழ் மாடத்
தரும்படைச் செல்வ ரமர்ந்தினி துறையும்
பெரும்படைச் சேரி திருந்தணி யெய்திக்
கைபுனை வனப்பினோர் பொய்கை யாக

(பரத்தையர் தெரு)

வானுதன் மகளிரு மைந்தரு மயங்கிக்
காம மென்னு மேமப் பெருங்கடற்

முதுமகளென்க; "வயிரவரை கண்விழிப்ப போன்றுமழை யுகளும், வயிரமணித் தாழ்க்கதவு வாயின்முக மாக, வயிரமணி ஞாயின்முலை வான் பொற்கொடிக் கூந்தல், வயிரக்கிடங் காடைமதிற் கன்னியது கவினே", "அகழ்கிடங் கந்துகி லார்ந்த பாம்புரி, புகழ்தரு மேகலை நாயில் பூண் முலை, திகழ்மணிக் கோபுரந் திங்கள் வாண்முகஞ், சிகழிகை நெடுங் கொடி செல்விக் கென்பவே" சீவக. 105, 1444.

39. விலங்கறுத்து - குறுக்கிடுபவைகளை நீக்கி.

40. படியவாகி - தோற்றத்தினையுடையவாய்.

41. கம்பலை - மனிதரிடத்திருந்தும் யானை முதலியவற்றினிடத்தி ருந்தும் உண்டாகும் ஒலிகள்.

41 - 2. கம்பலைக்கு அலையொலி உவமை. 43. மறுகு - வீதி.

39 - 43. மறுகிற்கு யாறு உவமை; உ. 7 : 7 - ஆம் அடியின் குறிப்பைப்பார்க்க. 45. உடு - நட்சத்திரம்.

46. படுகால் - படி. 48. படைச்செல்வர் - படைவீரர்.

49 - 50. படைச்சேரி, இடை நகரத்தைச் சூழப் புறநகரத்தில் உள்ளதாதலின், அஃது ஒருபொய்கையாகக் கூறப்பட்டது; படைச் சேரி, புறப்படை வீடெனவும் வழங்கும்.

51 - 109. இராசகிரியநகரம் ஒரு தாமரை மலராகவும், அதி லுள்ள பலவகைச் சேரிகள் அம்மலரிலுள்ள பலவகையுறுப்புக்களாகவும் இவ்வடிகளாற் கூறப்படும்.

பி - ம். [1] ழெழுவி.

படுதிரைப் பரப்பிற் குடைவன ராடி
அணிதலும் புனைதலு முனிவில ராகிக்
காத லுள்ளமொடு கலந்துண் டாடுநர்
போகச் சேரி புறவித ழாகச்

(வேளாளர் தெரு)

சால்பெனக் கிடந்த கோலப் பெருநுகம்
பொறைக்கழி கோத்துப் பூண்டன ராகி
மறத்துறைப் பேரியாற்று மறுகரை போகி
அறத்துறைப் பண்டி யசைவிலர் வாங்கி
உயர்பெருங் கொற்றவ னுவப்பினுங் காயினும்
தவிர்க்கவும் போக்கவும் படாத தன்மையர்
நன்புலந் தழீஇய மன்பெருஞ் செய்கைக்

---

56. போகச்சேரி - பரத்தையர் தெரு.

57. சால்பு-பல குணங்களாலும் நிறைதல். நுகம் - நுகத்தடியில்.

58. பொறைக்கழி கோத்து - பொறையாகிய கழியைக் கோத்து; கழி - கயிறுமாம்; க. 32 : 17. 'பூண்டனராகி' என்றதனால் இவர் எருதாக உருவகஞ் செய்யப்பட்டனர்.

57 - 8.=க. 32 : 17 - 8; "வளைபயில் கீழ்கட லின்றிட மேல்கடல் வானுகத்தின், துளைவழி நேர்கழி கோத்தென" திருச்சிற். 6.

59. பாவவழியாகிய பெரிய யாற்றினது மற்றைக் கரையை அடைந்து.

60. அறத்துறைப்பண்டி - அறத்தின் பகுதியாகிய வண்டியை.

57 - 60. "கவற்சியிற் கையற ணீக்கி முயற்சியிற், குண்டுதுறையிடுமணற் கோடுற வழுந்திய, பண்டிதுறை யேற்றும் பகட்டிணை போல, இருவே மிவ்விடர் நீக்குதற் கியைந்தனம்" (க. 53 : 52 - 5) என்பதும், "மடுத்தவா யெல்லாம் பகடன்னா னுற்ற, இடுக்க ணிடர்ப்பா டுடைத்து" (குறள், 624) என்பதும், "அச்சொடு தாக்கிய பாருற் றியங்கிய, பண்டச் சாகாட் டாழ்ச்சி சொல்லிய, வரிமணன் ஞெமரக் கற்பக நடக்கும், பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ" (புறநா. ௯௦) என்பதும், "நிரம்பாத நீர்யாற் றிடுமணலு ளாழ்ந்து, பெரும்பார வாடவர் போற் பெய்பண்டந் தாங்கி, மருங்கொற்றி மூக்கூன்றித் தாடவழ்ந்து வாகுகி, யுரங்கெட் டுறுப்பழுகிப் புல்லுண்ணு போன்றும்" (சீவக. 2784) என்பதும் இங்கே அறியற்பாலன.

63. நன்புலம் - நல்லறிவு; நல்ல நூல்களுமாம்.

காரணக் கிளவிப் பூரண நோக்கிற்
பெருங்கடி யாள ரருங்கடிச் சேரி
புறவிதழ் மருங்கிற் புல்லித ழாக

(வாணிகர் தெரு)

மதியுறழ் சங்கின் வாய்வயிற் போந்த
நிதியம் பெற்ற நீர்மையர் போல
அதிரா வியற்கை யங்கண் ஞாலத்துக்
குதிரை மருப்புங் கொளற்கரி தாகிய
அழலுமிழ் நாக நிழலுமிழ் மணியும்
சிங்கப் பாலுந் தெண்டிரைப் பௌவத்து
மூவா வமரர் முயன்றுடன் கொண்ட
வீயா வமுதமும் வேண்டிற் போய்த்தரும்
அரும்பெறற் பண்ட மொருங்ககத் தடக்கி
விட்டன ரிருவா முட்டில் செல்வத்துப்
பல்வினை வாணிகர் நல்வினைச் சேரி
புல்லிதழ் பொருந்திய நல்லித ழாக

---

64. காரணத்தையுடைய சொற்களையும் நிறைவுற்ற ஆராய்ச்சியை[யும்.

65. கடி - பாதுகாப்பு.

65 - 6. பெருங்கடியாளர் சேரிகள், புறவிதழ்களின் அகத்தேயுள்ள புல்லிதழ்களாக.

67 - 8. நிதிகளுள் சங்கநிதி சிறந்ததென்பர்.

76. விட்டனரிருவா - பண்டங்களைக் கைவிட்டு வேறிடத்தில் இருத்தாத; 'விற்றூற் பையிலே வில்லாக்காற் கையிலே' என்பது ஒரு பழமொழி.

70 - 77. வணிகர் யார் எந்தப்பொருளை விரும்பினும் அவர்களுக்கு அதைத்தரும் ஆற்றலையுடையவரென்றபடி; "இரவ லாளரே பெருந்திரு வுறுக, அரவுமிழ் மணியு மலைகட லமுதும், சிங்கப் பாலுந் திங்கட் குழவியும், முதிரை வாலுங் குதிரை மருப்பும், ஆமை மயிரு மன்னத்தின் பேடும், ஈகென விரப்பினு மில்லெனல் வறியான், சடையனை யயன்றைத் தலைவனை, உடையது கேண்மி னுறுதி யோர்ந்தே" என்னும் பழம்பாடலிலும் இவ்வடிகளிற் போலவே குதிரைமருப்பு முதலியவை பெறுதற்கரியனவாகக் கூறப்பெற்றிருத்தல் காண்க.

78. மேற்கூறிய புல்லிதழைச் சார்ந்த நல்ல இதழ்.

77 - 8. வாணிகர்சேரி நல்லிதழாக.

(அந்தணர் தெரு)

மேன்முறை யியன்ற நான்மறைப் பெருங்கடல்
வண்டுறை யெல்லை கண்டுகரை போகிப்
புறப்பொரு ளல்லா வறப்பொரு ளாவின்
ஒளிகண் கூடிய வளிமதி போல
ஓத்தொடு புணர்ந்த [1] காப்புடை யொழுக்கின்
உலகப் பல்லுயிர்க் கலகை யாகிப்
பெருந்தகை வேள்வி யருந்தவப் படிவமொடு
தந்தொழி றிரியாத் தரும நெஞ்சின்
[2] அந்தணர் சேரி யகவித ழாக

(அமைச்சர் தெரு)

இருநில வரைப்பி னெதிர்ப்போ ரின்றி
அருநிலை யுலகி னாட்சி [3] விறப்பினும்
பெரும்படைக் கொற்றம் பீடழிந்து சுருங்கா
அரும்படை மன்ன ராற்றலி னெருங்கத்
தலைமையின் வழீஇய நிலைமை யெய்தினும்
உற்றது முடிக்கு முறுதி நாட்டத்துக்
கற்றுப்பொரு டெரிந்த கண்போற் காட்சி
அருமதி யமைச்சர் திருமதிற் சேரி

79 - 80. நான்கு வேதங்களையும் முற்றவோதி; "வேதங் கரை கண்டான் வீற்றிருக்கும்" பு. வெ. 163.

82. கலைநிறைந்தமையின் மதி உவமை.

83.—௩. 4 : 82 - 3 ; குறள், 134.

நாவினையுடைய (81) அந்தணர் (87.)

89. விறப்பினும் - பெருகினாலும்.

90. சுருங்கா - சுருங்கி. 91. மன்னர் - பகைமன்னர்.

92. வழீஇய நிலைமையை அடைந்தாலும்.

சுருங்கி (90) எய்தினும் (92) என்க.

94 - 5. "சூழ்வார்கண் ணாக வொழுகலான்" (குறள், 445); "மந்திரக் கிழவர் கண்ணா" சூளா. தூது. 135.

பி - ம். 1 காப்புக்கடை. 2 அந்தண்சேரி. 3 விருப்பினும்.

மாசில் பைந்தாது சுமந்த மத்தகத்
தாசில் பன்மல ரல்லி யாகச்

(அரண்மனை)

சுடுகதி ரணிந்த சூழ்கதிர்ச் செல்வன்
விடுசுடர்ப் பேரொளி விமானம் போலச்
சேணொளி திகழு மாண்வினை மாடம்
வேண்டிய மருங்கிற் காண்டக நெருங்கிச்
செஞ்சுடர் மணிமுடி திகழுஞ் சென்னிப்
பைந்தலை நாகர் பவணங் கடுப்பக்
காப்பின் றாயினுங் கண்டோ ருட்கும்
யாப்புடைப் புரிசை யணிபெற வளைஇ
அருமணிப் பைம்பூ ணரசகத் தடைந்து
வாயி லணிந்த வான்கெழு முற்றத்துக்
கோயில் கொட்டை யாகத் தாமரைப்
பூவொடு பொலியும் பொலிவிற் றாகி
அமையாச் செய்தொழி லவுணர்க் கடந்த
இமையாச் செங்க ணிந்திர னுறையும்
அமரா பதியு நிகர்தனக் கின்றித்
துன்ப நீக்குந் தொழிலிற் றாகி
இன்பங் கலந்த விராச கிரியமென்

---

97. அல்லி - அகவிதழ்களின் உள்ளேயுள்ள சிறிய இதழ்.

98 - 9. சூரியனுடைய தேரைப்போல.

103. பவணம் - நாகருலகம்; சீவக. 146, 2853; "நல்லரா வுறையும் புற்றம் போலவும்........வெரூஉ மோரொளி, வலனுயர் நெடுவே லென்னைகண் ணதுவே" (புறநா. ௩0௧) என்பதும் இங்கே அறியற்பாலது. 104. உட்கும் - அஞ்சும்.

பவணங்கடுப்ப (103) உட்கும் (104.) 106. அரசு - அரசன்.

56 - 108. "கொட்டையைச் சூழ்ந்த வல்லியு மிதழும் போல"; க. 42: 14 - 5.

50 - 114. இவ்வடிகளிற் போலத் தாமரைமலரும் அதனுறுப்புக் களும், "பொய்கை போர்க்களம் புறவிதழ் புலவு வாட்படை புல்லிதழ், ஐய கொல்களி றகவித ழரச ரல்லிதன் மக்களா, மையில் கொட்டை யம் மன்னனு மலர்ந்த தாமரை வரிசையாற், பைய வுண்டபின் கொட்டைமேற் பவித்தி ரத்தும்பி பறந்ததே" (சீவக. 2311)

றெண்டிசை மருங்கினுந் தன்பெயர் பொறித்த
மன்பெருஞ் சிறப்பின் மல்லன் மாநகர்

**(உதயணன் இராசகிரியம் புகுதல்)**

சாரச் சென்றதன் சீர்கெழு செல்வமும்
விள்ளா விழுச்சீர் விச்சா தரருறை
வெள்ளியம் பெருமலை யன்ன விளங்கொளி
மாட மறுகின் மயங்கொளிக் கழுமலும்
நீடுபுகழ்க் [1] குருசி னெஞ்சிடை நவிய
வள்ளிதழ்க் கோதை வாசவ தத்தையை
உள்ளுபு திருநகர் புக்கன னுலந்தென்.

௩—இராசகிரியம் புக்கது முற்றிற்று.

---

என்பதில் முறையே கூறப்பெற்றிருத்தலையும், "மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப், பூவொடு புரையுஞ் சீரூர் பூவின், இதழகத் தனைய தெருவ மிதழகத், தரும்பொகுட் டனைத்தே யண்ணல் கோயில்" (பரி. ப. 174), "நீனிற வுருவி னெடியோன் கொப்பூழ், நான்முக வொருவற் பயந்த பல்விதழ்த், தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றிச், சுடுமண் ணோங்கிய நெடுநகர்" (பெரும்பாண். 402 - 5) என்பவற்றில் நகரம் தாமரைமலராகக் கூறப் பெற்றிருத்தலையும் காண்க.

115. தன்பெயர் - தன்புகழ்; "ஏமாங் கதமென் றிசையாற் றிசை போயதுண்டே" (சீவக.31); "செங்கோற் றென்னவர் காக்கு நாடென, எங்கணும் போகிய விசையோ பெரிதே" சிலப். ௧௩ : 9 - 10.

118. விச்சாதரர் - வித்தியாதரர்.

118 - 9. வித்தியாதரர்க்கு இருப்பிடமாக வெள்ளிமலையொன் றுண்டென்பது சைனர் கொள்கை. இது கைலாயமலையன்று.

120. கழுமல் - திரட்சி. 123. உலந்து - நெஞ்சழிந்து.

பி - ம். 1 குருகின்.

## ௪—புறத்தோடுங்கியது.

உள்ளுத லானா துள்ளகஞ் சுருங்கிய
வள்ளிதழ் நறுந்தார் வத்தவன் றன்னொடு

(யவனச்சேரி முதலியசேரிகள்)

விண்ணுற நிவந்த பண்ணமை படைமதில்
வாயிலு மருங்கிலுங் காவல் கண்ணி
வேந்துபிழைத் தொழுகினுங் காய்ந்து கலக்கறா
முழுப்பரி சார முதற்க ணெய்தி
விழுப்பெருஞ் செல்வமொடு வென்றி தாங்கிய
ஐம்பதி னிரட்டி யவனச் சேரியும்
எண்பதி னிரட்டி யெறிபடைப் பாடியும்
அளப்பருஞ் சிறப்பி னாயிர மாகிய

---

௪—புறத்தோடுங்கியது.

[உருமண்ணுவா முதலியோர், வாசவதத்தையை மீட்டுத்தருவேனென்று காகதுண்டகனென்னும் முனிவனைக்கொண்டு கூறுவித்து உதயணனைத் தேற்றி அவனோடும் இராசகிரிய நகரத்தின் புறத்தே மறைந்திருந்தது இதனால் அறியலாகும்.]

1. உள்ளுதல் ஆனாது - நினைத்தல் அமையானாகி.

3. விண்ணுறநிவந்த மதில்: "வான்றோ யிஞ்சி" (மலைபடு. 92.) படைமதில் - பல படையாகச் செய்யப்பட்ட மதில்; படை - சுவரின் பகுதி; "பல்படைப் புரிசை" (புறநா. ௨௨௪); "படையார் புரிசைப் பட்டினஞ்சேர் பல்லவ னீச்சரமே", "படையுடை நெடுமதில்", "படையார் மதின் மூன்றையும்" தேவாரம்.

4. கோபுரவாயிலினிடத்தும் மதிற்பக்கத்திலும்இருந்து காத்தலைக் கருதி.

5. வேந்து - தம்முடைய அரசன். பிழைத்து - பாதுகாப்பிலனாகி. காய்ந்து கலக்கு அறா - கோபித்துப் பகைவரை வருத்துதலொழியாத. 6. பரிசாரம் - வழிபடுதலை.

8. யவனச்சேரி - யவன தேயத்து வீரர் தெரு.

9. எறிபடைப்பாடி - ஈட்டி வேல் முதலிய படைகளையுடைய வீரர்சேரி.

தலைப்பெருஞ் சேனைத் தமிழச் சேரியும்
கொலைப்பெருங் கடுந்திறற் கொல்லர் சேரியும்
மிலேச்சச் சேரியுந் தலைத்தலை சிறந்து

(சித்திரசாலை)

வித்தக வினைஞர் பத்தியிற் குயிற்றிய
சித்திர சாலையு மொத்தியைந் தோங்கிய
ஒட்டுவினை மாடமுங் கொட்டுவினைக் கொட்டிலும்
தண்ணீர்ப் பந்தருந் தகையமை சாலையும்
அறத்தியல் கொட்டிலு மம்பலக் [1] கூடமும்
மறப்போர்க் கோழி மரபிற் பொருத்தும்
விறற்போ ராடவர் விரும்பிய கண்ணும்
மறக்களி யானை வடிக்கும் வட்டமும்
கடிசெல் புரவி முடுக்கும் வீதியும்

---

11. தமிழச்சேரி - தமிழையுடைய சேரி ; என்றது, தமிழ் நாட்டிலிருந்து வந்தவீரரிருக்கும் சேரியை ; தொல். புள்ளி. சூ. 90, இளம். ந.; நன். மயிலை. சூ. 224 ; இ. வி. சூ. 134, மேற்.

12. கொல்லர் - ஆயுதங்களை வடித்துக் கொடுப்போர் ; "வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே" (புறநா. கஉ); "மூந்நூறுயிர முட்டிகைச் சேரியும்" என்றார் முன்னும் ; க. 43: 200.

13. மிலேச்சச் சேரி - மிலேச்ச நாட்டு வீரர் இருக்கும் சேரி ; "மிலேச்ச மன்னர்" க. 58: 95; ௩. 25: 54.

14. வித்தக வினைஞர் - சிற்ப வேலை செய்வோர். குயிற்றிய - எழுதிய. 14 - 5. சித்திரசாலை : பரி. கஅ : 28, கக : 53.

16. ஒட்டுவினை மாடம்-செங்கற்களை ஒன்றோடொன்று பொருந்த ஒட்டிய மாடம் ; என்றது வெளவானத்திபோல்வனவற்றை. கொட்டுவினைக்கொட்டில் - செம்பு முதலியன கொட்டித் தொழில் செய்யும் இடங்கள் ; கொட்டுவினை - ஆடை முதலியவற்றைக் கொட்டுந் தொழிலுமாம்.

18. அறத்தியல் கொட்டில் - தருமோபதேசம் செய்யுமிடம். அம்பலம் - பொதுவிடம்.

19. கோழிகளை மரபிற் பொரச் செய்தலாவது, சொல்லுக்குச் சொல்லும், ஆமைக்கு ஆமையும், தெங்குக்குத்தெங்குமாகிய நிறங்களை அறிந்து சண்டைக்கு விடுதல் ; பு. வே. 348, உரை.

21. வடிக்கும் வட்டம் - வயமாக்கிப் பயிற்றும் வட்டமான இடங்கள் ; "புரவி வட்டமும்" சீவக. 84.

பி - ம். 1 கூட்டமும்.

அடுத்தொலி யறாஅ வரங்கமுங் கழகமும்
அறச்சோற் றட்டிலு மம்பலச் சாலையும்
தேவ குலனுந் தேசிகப் பாடியும்
மாவுந் தேரு மயங்கிய மறுகும்
காவுந் தெற்றியுங் கடவுட் பள்ளியும்
தடவளர் செந்தீ முதல்வர் சாலையும்
வேண்டிடந் தோறுங் காண்டக நெருங்கி
ஆதி யாகி யமைந்தவனப் பெய்தி
மயங்கிய மாந்தர்த் தாகி யார்க்கும்
இயங்குதற் கின்னாப் புறம்பணைச் சேரியும்
அந்தண் பாடியு [1] மணுகி யல்லது
வெந்திறல் வேகமொடு விலக்குதற் கரிய
ஐங்கணைக் கிழவ னமர்ந்துநிலை பெற்ற
எழுதுவினைத் திருநக ரெழிலுற வெய்தி

(பொய்கை)

இட்டிகைப் படுகாற் குட்டக் கோணத்
துத்தர மருங்கி னத்தினஞ் சொரிந்த
மணிதெளித் தன்ன வணிநிறத் தெண்ணீர்ப்

---

23. அரங்கம் - நாடகசாலை. கழகம் - சூதாடுமிடம்; படைக்கலம் பயிலும் இடமுமாம்.

25. தேவகுலன் - தேவாலயம். தேசிகப்பாடி - பல தேசத்து வாணிகர் இருக்கும் தெரு; "பாடை யறியாத் தேசிகச் சேரியும்" என்றார் முன்னும்; உ. 8 : 60.

27. கடவுட்பள்ளி - முனிவர் ஆச்சிரமங்கள்.

28. தட - ஓமகுண்டம்; "வடபான் முனிவன் றடவினுட் டோன்றி" (புறநா. ௨௦௧.) முதல்வர் சாலை - வேள்வி முதல்வராகிய அந்தணரகரம்.

32. புறம்பணைச்சேரி - நகரத்தின் புறம்பேயணைந்த இடத்திலுள்ள சேரி. 33. அந்தண்பாடி - அந்தணர் தெரு; ௫. 3 : 87.

35 - 6. மன்மதனுடைய கோயிலை யுடையதாய்; 58 - 9.

37. இட்டிகைப் படுகால் - செங்கலாற் கட்டிய படி. குட்டம் - ஆழம். 38. நத்து - சங்கு.

39. க. 40 : 122, அடிக். மணி - முத்து.

பி - ம். 1 மனுகி.

பெருந்தண் பொய்கை மருங்கிற் குலாஅய்ச்

**(தாபதப்பள்ளி அமைந்துள்ள இடம்)**

சேறுபடு செறுவி ஞாறுநடு கடைசியர்
கழிப்புநீ [1] ராரலொடு கொழுப்பிருக் கொளீஇய
நாரைச் சேவல் பார்வலொடு வதிந்த
எழிற்பூம் புன்னைப் பொழிற்புடை நிவந்த
வள்ளிதழ்த் தாமரை வான்போ துளரி
முழுத்திரட் டெங்கின் விழுக்குலை நெற்றி
அகமடல் வதிந்த வன்புபுரி பேடை
நரல்குர லோதை யளைஇ யயல
கணைக்காற் கமுகி னிணைப்பொதி யவிழ்ந்த
அம்மென் பாளையு ளசைந்த வண்டினம்
மும்மர் வைகறை மருங்குதுயி லேற்ற
அனந்தர் முரற்சி யளைஇப் புதைந்த
பூங்கண் முற்றிய புறத்துப்புடை யாடித்
தேங்கட் டும்பி தீங்குழ லிசைப்ப
இயல்பிற் கெழீஇய வின்றுணைப் பிரிந்தோர்க்
குயலரி தாக வூழூழ் கவற்றும்

---

41. செறு - வயல். ஞாறு - நாற்று.

42. கழிப்பு - கழித்தல். ஆரல் - ஒருவகைமீன். கொழுப்பு இரு கொளீஇய - கொழுப்பையுடைய இருமீனைக் கொத்தியெடுத்துக் கொள்ளுதற்கு.

43. பார்வல் - கவர்ந்துகொள்ளக் காலம்பார்த்திருத்தல்; "பார்வற் கொக்கு" பதிற். உக.

45. வள்ளிதழ் - பெரிய இதழ். உளரி - அசைத்து.

46. நெற்றி - உச்சி.

47. உள் மடலிற்றங்கிய பெண் நாரை.

49. கணைக்கால் - திரண்டஅடி. இணை - இரண்டாகிய.

51. துயிலேற்ற - விழித்த; "செங்க, ணேற்றெழுந் தனளால்" என்றார் முன்னும்; உ. 18 : 118 - 9.

52. அனந்தர் - தூக்கமயக்கம்.

53. பூங்கள் - பூவிலுள்ள தேன்.

54. தும்பியிசைக்குக் குழலிசை உவமை: உ. 13 : 24, அடிக்: "தும்பி...தீங்குழ லாம்பலி னினிய விமிரும்" ஐங்குறு. உகசு.

56. கவற்றும் - கவலையடையச் செய்யும்.

பி - ம். 1 ரார்வலொடு.

வயலுந் தோட்டமு மயல்பல கெழீஇய
தாமரைச் செங்கட் டமனிய விணைக்குழைக்
காமன் கோட்டத்துக் கைப்புடை நிவந்த
இளமரக் காவி னிணைதனக் கில்லாத்
தூபத் தொழுக்கத் தாபதப் பள்ளி
தமக்கிட மாக வமைத்த பின்றை

(அமைச்சர் செயல்)

வீழ்துணை மாதர் விளிவுநினைந் திரங்கி
வாழ்த லாற்றான் வாய்மொழி [1]யரசன்
உற்றவ னுருயி ருய்தல் வேண்டி
இற்றவள் பிறந்துழிக் காட்டு மந்திரம்
கற்றுவினை நவின்றனென் காட்டுவெ னினக்கென
வஞ்ச மாயினு நெஞ்சுவலி யுறுக்கெனக்
கண்கவர் பேரொளிக் காகதுண் டகனெனும்
அந்த ணாளனை யமைச்சர் தருதலின்

(காகதுண்டக முனிவன் கூற்று)

அருமதி யண்ணற் கவனிது கூறும்
இருமதி யெல்லை யிமைந்த விரதமொ
டிரக்க மின்றி யிருக்கல் வேண்டும்
அத்துணை யிருந்தபி னருங்காட் டகவயின்

---

59. காமன்கோட்டம் - மன்மதன் கோயில்.

58 - 9. "தாமரைச் செங்கட் செவ்வாய்த் தமனியக் குழையினாய்" (சீவக. 2057) என்பது இங்கே ஒப்பு நோக்கற்பாலது.

61. தாபதப்பள்ளி - முனிவர் ஆச்சிரமம்.

63. மாதர் விளிவு - வாசவதத்தையின் மரணத்தை.

66. இற்றவள் - வாசவதத்தை.

68. நெஞ்சுவலியுறுக்க என - மனம் துணிவடையும்படி செய்க வென்று சொல்லி.

71. அவன் - காகதுண்டகமுனிவன்.

72. இருமதியெல்லை - இரண்டுமாத அளவு.

73. இரக்கமின்றி - வாசவதத்தையை நினைந்து இரங்குதலில்லாமல்; என்றது, 'இரங்கி வாழ்த லாற்றான்' (63-4) என்றதை உட்கொண்டு.

பி - ம். 1 அந்தணனற்ற.

மொய்த்தழ லீமத்து முன்னர்க் காட்டிய
தவாஅ வன்பிற் 1 றவமர் சாதனை
போகிய பொழுதி னாகிய 2 நலத்தொடு
மேலை 3 யாகிய வடிவின ளாகி
மற்றவ ளடைவது தெற்றெனத் தெளியெனக்
கற்புடை மாதரைக் கைப்படுத் தன்னதோர்
கட்டுரை வகையிற் பட்டுரை யகற்றி
ஆப்புடை யொழுக்க மறியக் கூறிக்
காப்பொடு புணரிற் 4 காணலு மெளிதெனக்
காவல குமரற்கு மேவன வுரைத்து
5 விடுத்தவன் போகிய பின்றை மடுத்த

(உருமண்ணுவா முதலியோர் கூற்று)

இருநிலம் புகுதலு 6 மொருவிசும் பிவர்தலும்
வருதிரை நெடுங்கடல் வாய்க்கொண் டுமிழ்தலும்
மந்தர மேந்தலு மென்றிவை பிறவும்
பண்டியல் விச்சை பயிற்றிய மாக்களைக்
கண்டு மறிதுங் கண்கூ டாகச்

---

75. ஈமம்-பிணஞ்சுடுதற்கடுக்கிய விறகடுக்கு; புறநா. ௨௩௧, உரை.
76. சாதனை - சாதித்தல்.
77. போகியபொழுதின் - முடிந்தகாலத்தில்.
74 - 7. மயானத்துத் தவஞ்செய்தல் முனிவனதுதொழில்.
79. அவள் - வாசவதத்தை.
81. பட்டுரை - அரசனிடத்துண்டாகிய இரங்கற்சொற்கள்; பண்டுள்ள உரையுமாம். 82. ஒழுக்கம் - விரதம்.
83. காப்பு - ஐம்பொறிகளைக் காத்தல்.
84. மேவன - பொருந்துவனவற்றை.
85. அவன் - காகதுண்டகமுனிவன்.
88. மந்தரம் - மேருமலை.
86 - 8. "நிலத்திற் குளித்து நெடுவிசும் பேறிச், சலத்திற் றிரியு மோர் சாரணன்" (மணி. ௨௪ : 46 - 7) என்பதிலும் நிலத்திற் புகுதல் முதலியவற்றுட் சில கூறப்பட்டிருத்தல் காண்க.
90. கண்கூடு - பிரத்தியட்சம்.

பி - ம். 1 றவாசசாதினை. 2 நிலத்தொடு. 3 யாக்கிய. 4 கற்றலு. 5 விடுத்தனன். 6 மருவிசும்.

செத்தோர்ப் புணர்க்கும் விச்சையொடு புணர்ந்தோர்க்
கேட்டு மறியலம் வீட்டருஞ் சிறப்பிற்
புண்ணிய முடைமையி னண்ணின னுமிவன்
ஒருதலை யாகத் தருதல் வாயென
உறுதி வேண்டி யுருமண் ணுவாவும்
மருவிய தோழரு மன்னனைத் தேற்றி
மாய [1] வொழுக்கமொடு சேயதை நோக்கி
மிகுதிக் காதன் மகத மன்னனொடு
சுற்ற மார்க்குஞ் சூழ்ச்சிய ராகிக்
கொற்ற வேந்தன் குறிப்புவழி யோடி
அகத்துறைந் தொடுங்குதல் செல்லா ரகன்மதிற்
புறத்தொடுங் கினராற் பொருள்பல புரிந்தென்.

௪—புறத்தொடுங்கியது முற்றிற்று.

93 - 4. புண்ணியத்தினால் உயிர்ப்பிக்கும் வித்தையை அடைந்தவனாகிய இம்முனிவன் வாசவதத்தையை அளித்தல் உண்மையென்று.

97. மாயவொழுக்கம் - பொய்யாக ஒழுகுதல். சேயதை நோக்கல் - தீர்க்க தரிசனம்; என்றது பகைவெல்லுதலை; "ஆய்மையின் மந்திரத் தறிஞனுமெனச், சேய்மையி னோக்குறு சிறுகணான்" கம்ப. சடாயு காண். 5.

98. மகதமன்னன் - தருசகன். 99. சூழ்ச்சி - ஆலோசனை.

102. பொருள் பல புரிந்து - பல காரியங்களைச் செய்துகொண்டு; ௩. 1 : 95 - 124, பார்க்க.

பி - ம். 1 வொடுக்கமொடுசெய்கை.

## ௫—பதுமாபதி போந்தது.

பொருள்புரி யமைச்சர் பூங்கழற் குருசிலொ
டிருளறு திருமணி யிராசகிரி யத்துப்

௫—பதுமாபதி போந்தது.

[இராசகிரிய நகரத்தார் மன்மதனுக்கு விழாச்செய்யத் தொடங்குதலும், அதற்குரிய நாட்களேழனுள் முதல்நாள் வழிபடுதற்குப் பதுமாபதியென்பவள் போந்து மன்மதனுடைய ஆலயத்தை அடைதலும் இதனால் அறியலாகும்.]

1. பொருள்புரி - காரியங்களை விரும்பிச் செய்கின்ற.

புறமதி லொடுங்கிய பொழுதின் மறனுவந்

(மகத மன்னவன்)

தமரா [1] மன்ன ரருஞ்சம முருக்கிப்
பைங்கழ லமைந்த பாடமை நோன்றாள்
வெண்கதிர் மதியின் [2] வீற்றொளி திகழ்ந்து
தான்மீக் கூரிய வேம வெண்குடை
மணிமுடிச் சென்னி மகத மன்னவன்
தணியா வேகத்துத் தருசகன் றங்கை

(பதுமாபதியின் பாதாதிகேசம்)

பசும்பொற் கிண்கிணி பரடுசுமந் தரற்ற
அசும்பம ருமரை யலைத்த வடியினள்
சிறுபிடித் தடக்கையிற் செறிவொடு புணர்ந்து
மென்மையி னியன்று செம்மைய வாகி
நண்புவீற் றிருந்த நலத்தகு குறங்கினள்
மணியும் பவழமு மணிபெற நிரைஇய
செம்பொற் பாசிழை செறிய வீக்கிய
பைந்துகி லணிந்த பரவை யல்குலள்
துடிதோங் கூறிய விடுகிய நடுவிற்குப்
பார மாகிய வீரத் தானையள்

---

4 - 5. பகை மன்னரைப் போர்க்களத்தே அழித்து அதற்கு அறிகுறியாக அணிந்த வீரக்கழல்; அவரது முடிப்பொன்னாற் செய்த கழலுமாம். நோன்றாள் - பிறக்கிடாத தாள்; நோன்மை - வன்மை; தாள் - முயற்சியுமாம்.

7. மீக்கூரிய - மீக்கூர்ந்த.

7 - 8. மகதமன்னவன் பெருநிலமன்னனென்பார், குடையும் முடியும் கூறினார்.

9. தருசகன் - மகதமன்னவன் பெயர்.

10. = ச. 35 : 208 ; உ. 3 : 85 - 6, அடிக்.

12 - 4. பிடிக்கை துடைக்கு உவமை : "ஈர்ந்துநிலந் தோயு மிரும்பிடித் தடக்கையிற், சேர்ந்துடன் செறிந்த குறங்கு" சிறுபாண். 19-20.

16. பாசிழை - மேகலை.

18. துடி - உடுக்கை. தோம் - குற்றம்; "மான்றோய் கூறுமம்மர் நோக்கினர்" உ. 2 : 223.

பி - ம். 1 மன்னருஞ். 2 வேறொளி நிகழ்ந்து.

ஊக்க வேந்த னூக்கம் போல
வீக்கங் கொண்டு வெம்மைய வாகி
இலைப்பூண் டிளைக்கு மேந்திள முலையள்
திலதஞ் சுடருந் திருமதி வாண்முகத்
தலமெனக் கிடந்த மதரரி மழைக்கட்
கதிர்வளைப் பணைத்தோட் கணங்குழைக் காதிற்
புதுமலர்க் கோதை புனையிருங் கூந்தற்
பதுமா பதியெனும் பைந்தொடிக் கோமகள்

(முரசறைதல்)

கன்னி யாயந் துன்னுபு சூழ
மதிற்புறங் கவைஇய புதுப்பூங் காவின்
மகர வெல்கொடி மகிழ்கணைக் காமற்கு
நகரங் கொண்ட நாளணி விழவினுள்
எழுநா ளோறுங் கழுமிய காதலொடு
வழிபா டாற்றிய போதரு மின்றென
அழிகவுள் வேழத் தணியெருத் தேற்றிய
இடியுமிழ் [1] முரசி னிருங்கண் டாக்கி
வடிவேற் கொற்றவன் வாழ்கெனப் பல்லூழ்
அணித்திரட் கந்தின் மணிப்பொற் பலகைச்
சித்திர முதுசுவர் வித்தக வேயுள்

---

20 - 21. “மடியிலான் செல்வம் போன் மரனந்த” (கலி. ௩௫) என்பவாகலின், ‘ஊக்க வேந்த னூக்கம்போல, வீக்கங்கொண்டு’ என்றார்.
22. “இலைப்பொலி பூண்முலை” சீவக. 1210.
27. கோமகள் - இராசகுமாரி. 29. கவைஇய - சூழ்ந்த.
30. “மகர வெல்கொடி மைந்தன்” சீவக. 912.
32. எழுநாள் தோறும் - எழுநாளும்; இத்திருவிழா நடைபெறுங் காலம் எழுதினம்; “எழுநாள் கழிந்த வழிநாட் காலை” ௩. 6 : 180.
27 - 33. மகளிர் காமனை வழிபடுதல்: கலி. ௧௪௭; சிலப். ௧ : 60 - 61; சீவக. 2057.
33. ஆற்றிய - ஆற்றுதற்கு. போதரும் - வருவாள்.
34. அழிகவுள் - மதத்தாற் சிதைந்த கன்னம். வேழம் - யானை.
35. கண் - கொட்டுமிடம்.
37. கந்து - தூண். 38. வேயுள் - மேற்பரப்பு.

பி - ம். 1 னிருங்கணந்தாக்கி.

ஆவணந் தோறு மறைந்தறி வுறுத்தலின்

(நகரமாந்தர் விழாத் தொடங்கல்)

இடையற வில்லாக் கடைமுத றோறும்
கைவ லோவியர் மெய்பெற வெழுதிய
உருவப் பூங்கொடி யொசிய வெடுத்துத்
தெருவு மந்தியுந் தெய்வச் சதுக்கமும்
பழமண னீக்கிப் புதுமணற் பரப்பி
விண்மிசை யுலகின் [1] விழவமைந் தாங்கு
மண்மிசை யுலகின் மன்னிய சீர்த்தி
முழவுமலி திருநகர் விழவுவினை தொடங்க

(பதுமாபதி புறப்படல்)

அரும்பொறி நுனித்த யவனக் கைவினைப்
பெரும்பொறி வையந் திருந்தியாப் புறீஇ
மங்கலச் சாந்தின் மலர்க்கொடி [2] யெழுதிப்
பைம்பொற் பத்திரம் புளகமொடு [3] வீக்கிக்
கதிர்நகைத் தாம மெதிர்முக நாற்றிப்
பத்திர மாலை சித்திர மாகப்
புடைப்புடை தோறுந் தொடக்கொடு தூக்கிக்
கட்டி தோய்த்த காழகி னறும்புகை
பட்டுநிணர் கட்டிற் பல்படை குளிப்ப
உள்ளக மருங்கின் விள்ளாக் காதற்

---

போதருமின்றென (33) அறிவுறுத்தலின் (39.)

42. பூங்கொடி - அழகிய துவசம்; பூ - மலர் வடிவுமாம். ஒசிய - அசைய.

43. அந்தி - முச்சந்தி. சதுக்கம் - நாற்சந்தி; சிலப். கச : 213.

40 - 44. "விழவுமலி மூதூர் வீதியு மன்றமும், பழமணன் மாற்றுமின் புதுமணல் பரப்புமின், கதலிகைக் கொடியுங் காழூன்று விலோதமு, மதலை மாடமும் வாயிலுஞ் சேர்த்துமின்" மணி. க : 50-53.

48 - 9. யவனதேயத்துத் தச்சுத்தொழில் சிறந்ததாதலின், 'யவனக் கைவினைப்பெரும்பொறி வையம்' என்றார்; "யவனத் தச்சரும்" மணி. கக : 108.

51. பத்திரம் - இலைபோன்ற பலகை. புளகம் - கண்ணாடி.

52. நகைத்தாமம் - முத்துவடம். நாற்றி - தொங்கவிட்டு.

55. கட்டி - புகையுறுப்புக்களுள் ஒன்றாகிய நேர்கட்டி யென்பது.

56. பட்டு நிணர்கட்டில் : சீவக. 2030. நிணர்தல் - பிணித்தல். படை - படுத்த மெத்தை.

பி - ம். 1 விழவறைந். 2 யெழுதிய. 3 விலக்கிக்.

றுணைநலத் தோழியர் துப்புர வடக்கி
அணிநலத் தோழிக் கமைந்தன வியற்றி

(வண்டியெருதுகள்)

நெய்ந்நிறங் கொண்ட பைந்நிற மஞ்சளின்
வைம்மருப் பணிபெற வண்ணங் கொளீஇக்
கைவினைக் கண்ணி கவின்பெறச் சூட்டித்
தகைமலர்ப் பொற்றார் வகைபெற [1] வணிந்து
காண்டகு வனப்பிற் காலியற் செலவிற்
பாண்டில் வையம் பண்ணிப் பாகன்
கோலுடைக் கையிற் கூப்புவன னிறைஞ்சி
வையம் வந்து வாயி னின்றமை
தெய்வ மாதர்க் கிசைமின் சென்றென
இசைத்த மாற்றத் துரைப்பெதிர் விரும்பிப்
போதுவிரி தாமரைத் தாதகத் துறையும்
தீதுதீர் சிறப்பிற் றிருமக ளாயினும்
உருவினு முணர்வினு மொப்புமை யாற்றாத்
தெரியிழை யல்குற் றேமொழிக் குறுமகள்

(மகளிர் ஏந்திய பொருள்கள்)

பாவையும் பந்துங் கழங்கும் பசும்பொற்
றூதையு முற்றிலும் பேதை மஞ்ஞையும்
கிளியும் பூவையுந் தெளிமணி யடைப்பையும்
கவரியுந் தவிசுங் கமழ்புகை யகிலும்
சாத்துக் [2] கோயும் பூத்தகைச் செப்பும்

---

58. துப்புரவு - நுகர்பொருள்கள்.

60 - 61. கொம்புக்கு மஞ்சள் பூசி. 62. கண்ணி - மாலை.

63. தார் - கிண்கிணிமாலை; சீவக. 84.

65. பாண்டில் - நரையெருது; சிறுபாண். 260, ந.

68. தெய்வமாதர்க்கு - தெய்வப் பெண்போன்ற பதுமாபதிக்கு. என - என்று பாகன் கூற. 69. உரைப்பு - சொல்லுதல்.

74. “பந்தும் பாவையுங் கழங்குமெமக் கொழித்தே” (ஐங்குறு. ௩௭௭.) 75. தூதை - சிறுபானை. முற்றில் - சிறுசுளகு.

76. பூவை - நாகணவாய்ப்புள். அடைப்பை - வெற்றிலைப்பை.

77. தவிசு - ஆதனம்.

78. சாத்துக்கோய் - சந்தனம் வைக்கும் பரணி; ௩. 9 : 43 - 4;

பி - ம். 1 வணிந்த. 2 கோதையும்.

இன்னவை பிறவு மியைய வேந்தி

(பதுமாபதி வண்டியேற வருதல்)

வண்ண மகளிர் வழிநின் றேத்திச்
செண்ணச் சேவடி போற்றிச் சேயிழை
மென்மெல விடுகெனப் பன்முறை பணிய
ஒண்செங் காந்தட் கொழுமுகை யுடற்றிப்
பண்கெழு தெரிவிர லங்கை சிவப்ப
மயிலெருத் தணிமுடி மாதர்த் தோழி
கயிலெருத் தசைத்த கைய ளாகித்
தாழியுண் மலர்ந்த தண்செங் குவளை
ஊழுறு நறும்போ தொருகையிற் பிடித்து
விண்ணக மருங்கின் வேமா னியர்மகள்
மண்ணகத் திழிதர மனம்பிறழ்ந் தாங்குக்
கன்னிக் கடிநகர்ப் பொன்னிலத் தொதுங்கி
விடுகதிர் மின்னென விளங்குமணி யிமைப்ப
இடுமணன் முற்றத்து மெல்லென விழிதர

சீவக. 764. பூத்தகைச் செப்பு - பூக்களையுடைய அழகிய செப்பு; க. 33: 76; 38: 165; "வேயாது செப்பி னடைத்துத் தமிவைகும் வீ" திருச்சிற். 374.

82. மென்மெல இடுக - மெல்ல மெல்லப் பாதங்களை வைக்க.

80 - 82. வண்ணமகளிர் அடியீடேத்திப் பணிய.

83 - 4. விரலுக்குக் காந்தள்முகை உவமை: "முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரல்" குறுந். கசுஎ.

85. மயிற்கழுத்துப் போலக் கரிய கூந்தலையும் விருப்பத்தையு முடைய தோழியினது.

87. "தாழிவாய்க் குவளை", "தாழிவாய் மறைக்குந் தண்ணென் றடம்பெருங் குவளை" (சீவக. 833, 2974); "தாழிக்குவளை" (சிலப். ௬ : 192); "தாழிக் கோலப் போதன கண்ணாள்" (சூளா. மந்திர. 76); "தாழிநறுங் குவளையந்தார்த் தருமன்" வி. பா. வசந்தகால. 18.

89. வேமானியர் - விமானத்திற் சஞ்சரிக்குந் தேவர்; "வேமானியர் தம்மகளின் விரும்பநனி சேர்ந்தாள்" சீவக. 2455.

91. கன்னிக் கடிநகர் - கன்னிமாடம்.

93. இடுமணல் - கொண்டுவந்து இட்ட இளமணல்.

வாயில் போந்து வைய மேறிற்
சாய ளேமெனத் தாயகட் டெடுத்துப்

**(பதுமாபதி வையமேறிக் காமன் கோயில் செல்லல்)**

போற்றுப்பல கூற வேற்றுவன ளிருப்பப்
பாகனை யொழித்துக் கூன்மகள் கோல்கொளப்
பொதியிற் சோலையுட் கதிரெனக் கவினிய
கருங்கட் சூரற் செங்கோல் பிடித்த
கோற்றொழி லாளர் மாற்றுமொழி விரவி
நலத்தகு நங்கை போதரும் பொழுதின்
விலக்கரும் வேழம் விடுதி ராயிற்
காயப் படுதிர் காவலன் பணியென
வாயிற் கூறி வழிவழி தோறும்
வேக யானைப் [1] பாகர்க் குணர்த்தி
உட்குவ ருருவங் கட்புல மருங்கிற்
காண விடாஅ ரானையி னகற்றிக்
கச்சுப்பிணி யுறுத்துக் கண்டகம் பூண்ட
அச்சுறு நோக்கி னறுபது கழிந்த

94 - 6. நடந்துவந்து ஊர்தியிலேறின் மெல்லியலாள் வருந்துவ ளென்று நினைந்து செவிலித்தாய் வயிற்றில் அணைத்தெடுத்துக்கொண்டு வந்து ஏற்றினள்.

97. கூன்மகள் - அயிராபதி; ௩. 6 : 159 - 60, 7 : 1. தேர்க்கு மகளிர் கோல் கொள்ளுதல் மரபு; ௧. 38 : 156; "கொள்வார் கோல்கொள்ளக் கொடித்திண்டேரேறுவோர்" (பரி. ௧௧ : 51.) என்பதன் உரையைப் பார்க்க.

98-9. பிரம்புகளுட் பொதியின்மலைப் பிரம்பு சிறந்தது.

99 - 100. அரசசேவகர் செந்நிறம் ஊட்டிய பிரப்பங்கோலைக் கைக்கொள்வர்; ௧. 37 : 10, அடிக்.

103. காயப் படுதிர் - கோபிக்கப்படுவீர்.

102 - 3. ௧. 38 : 92 - 3.

106. உட்குவரு உருவம் - அச்சத்தையுண்டாக்கும் வடிவமுடையவற்றை.

108. கண்டகம் - உடைவாள்.

109. அறுபது - அறுபது பிராயம்; "அடுமுரணீங்கி யறுபது கழிந்தோர்" என்பர்பின்; ௩. 10 : 56.

பி - ம். [1] பாகற்கு.

காஞ்சுகி மாக்கள் சேர்ந்துபுடை காப்பக்
கண்டோர் விழையுந் தண்டாக் காதலொ
டருந்தவ முண்மை யறிமி னீரெனப்
பெருஞ்சாற் றுறாஉம் பெற்றியள் போலப்
பைந்தொடி மகளிர் நெஞ்சுநிறை யன்பொடு
வண்ண மலருஞ் சுண்ணமுந் தூவ
அநங்கத் தானத் தணிமலர்க் காவிற்
புலம்படை வாயில் புக்கனள் பொலிந்தென்.

௫—பதுமாபதி போந்தது முற்றிற்று.

---

110. காஞ்சுகி மாக்கள் - சட்டையிட்ட சேவகர்கள்.

111. தண்டா - அமையாத.

112 - 5. இவ்வடிகளின் பொருள், "அறத்தா றிதுவென வேண்டா சிவிகை, பொறுத்தானோ டூர்ந்தா னிடை" (குறள், 37) என்றதை நினைப்பிக்கின்றது.

116. அநங்கத்தானத்து - காமன் கோட்டத்தில்.

117. புலம்பு அடை - தனிமையை அடைந்த ; யாருமில்லாத.

---

## ௬—பதுமாபதியைக் கண்டது.

வாயில் புக்கபின் வைய நிறீஇ
ஆய்வளைத் தோழி யகம்புக் கருளென

---

௬—பதுமாபதியைக் கண்டது.

[காமன் கோயிலையடைந்த பதுமாபதியை உதயணனும் அவனை அவளும் கண்டு தம்முட் காதல் கொண்டதும், பதுமாபதி அன்று செய்தற்குரிய தானங்களைச் செய்துவிட்டு அரண்மனையையடைந்ததும், உதயணன் அவள் வரலாற்றை அயிராபதி யென்பவளால் அறிந்து கொண்டது முதலியனவும் இதனால் அறியலாகும். இதில் தலைவன் தலைவிகளுடைய ஒத்த அன்பைப் புலப்படுத்தியிருக்கும் பகுதி அறிந்து இன்புறற்பாலது.]

1. நிறீஇ - நிறுத்தி.
2. தோழி: விளி. என - என்று கோல் கொண்டவள் சொல்ல;

வையா வலவன் வந்தனன் குறுகிப்
பூண்ட பாண்டியம் பூட்டுமுதல் விட்டபின்
மஞ்சுவிரித் தன்ன வைய வாயிற்
கஞ்சிகை கதுமெனக் கடுவளி யெடுப்ப
வெண்முகிற் பிறழு மின்னென நுடங்கித்

(உதயணன் நிலை)

தன்னொளி சுடருந் தையலை யவ்வழிக்
குறுஞ்சினைப் புன்னை நறுந்தா தாடிக்
கருங்குயிற் சேவ றன்னிறங் [1] கரந்தெனக்
குன்றிச் செங்க ணின்றுணைப் பேடை
உணர்தல் செல்லா தகன்றுறும் விரும்பிப்
புணர்த [2] லுணர்வொடு பொங்குசிறை யுளரி
அளிக்குர [3] லழைஇத் தெளித்துமன நெகிழ்க்குமக்
[4] குயிற்புணர் மகிழ்ச்சி [5] யயிற்கூட் டமைத்த

3. வலவன் - பாகன்; இவன் வையத்திற் பாண்டியத்தைப் பூட்டுதலும் விடுத்தலுஞ் செய்பவன்; ங. 5 : 97.

6. கஞ்சிகை - திரைச்சீலையை; 38. வளி - காற்று.

8. தையல் - பதுமாபதி.

10. கரந்தென - மறைய; வேறுபட.

11. குன்றிமணிபோலும் செவ்விய கண்களையுடைய குயிற் பெடை; "செங்க ணிருங்குயில்" ஐங்குறு. நகூசு; அகநா. உஉக : 18.

12. விரும்பல் சேவலின் தொழில்.

13. உளரி - மூக்கால் வகிர்ந்து (அத்தாதை உதிர்த்து.)

14. அன்பைப் புலப்படுத்துங் குரலாலழைத்து.

9 - 15. தாதினால் நிறம் வேறுபட்ட ஆண்குயில், தன்னை அறியாது மயங்கி வருந்தித் தேடுதற்கு அகலும் பெண்குயிலை அன்புடனழைத்து இன்புறுதலை, "புன்காஞ்சித் தாதுதன் புறம்புதையக் கிளியெனக்கண், டன்புகொண் மடப்பெடை யலம்வந்தாங் ககல்வதனை, என்புருகு குரலழைஇ யிருஞ்சிறகர் குலைத்துகுத்துத், தன்பெடையைக் குயிறழுவத் தலைவந்த திளவேனில்" (சீவக. 648) என்பது முதலிய மூன்று செய்யுட்களாலும் உணர்க.

15. மகிழ்ச்சி : எழுவாய். அயில் - கூரிய இரும்பு; எஃகு; "அயிலாலே போழ்ப வயில்" பழமொழி, 387.

பி - ம். 1 கவர்ந்தெனக். 2 லுறவொடு. 3 லளைஇத். 4 கயிற் புணர். 5 யற்கூட்.

செஞ்சுடர் வேலி னெஞ்சிடம் போழத்
தன்ஞாழ் நவிற்றிய தாமரை யங்கைப்
பொன்ஞாண் டுயல்வரும் பொங்கிள வனமுலை
மனைப்பெருங் கிழத்தியை நினைத்தன ளாகிச்
[1] செம்மை நெடுங்கண் வெம்மை யுறூஉத்
தெண்பனி யுறைத்தரத் திருத்துஞ் சகலத்துப்
பொன்பூத் தன்ன வம்பூம் பசப்பொடு
நாண்மலர்ப் புன்னைத் தாண்முதல் பொருந்திக்
கொடிக்குருக் கத்திக் கோலச் செந்தளிர்
பிடித்த விரலின ளாகிக் கெடுத்த
அவந்திகை மாத ரணிநல நசைஇக்
கவன்றன னிருந்த காலை யகன்று
போமின் போமி னென்றுபுடை யோட்டும்
காவ லாளரைக் கண்டிவட் புகுதரும்
உரிமை யுண்டென வரிமா னன்ன
வெஞ்சின விடலை நெஞ்சுநிறை துயரமொடு

---

16. வேலின் - வேலைப்போல.

15 - 6. மகிழ்ச்சி நெஞ்சிடத்தைப் போழ.

17. தன்ஞாழ் - தன்யாழ்; னகரத்தின் பின் யகரத்திற்கு ஞகரம் போலியாக வந்தது; பொன் யாத்த வென்பது பொன் ஞாத்தவென்று வந்தாற்போல; தொல். தொகை. சூ. 4, இளம்; ந.

18. பொன்ஞாண் - பொற்கொடி.

19. வாசவதத்தையை நினைந்து. 20. வெம்மையுற்று.

21. உறைத்தர - துளிப்ப. திருத்துஞ்சுஅகலம் - திருமகள் தங்கும் மார்பு; "பொன்றுஞ்சு மார்பன்", "திருத்துயில் பெற்ற மார்பன்" (சீவக. 14, 1504.) 22. பசப்பு - பசலை.

24 - 5. குருக்கத்தியின் தளிரைப் பிடித்த கையளாகி; ௩. 7 : 78.

23 - 5.=௩. 7 : 78 - 9.

26. அவந்திகை மாதர் - வாசவதத்தை; ௩. 7 : 57. நசைஇ - விரும்பி.

29. உதயணன் கண்டு.

30. உரிமை - அரசனுடைய அந்தப்புர மகளிர்.

30 - 31. அரிமானன்ன விடலை - சிங்கம்போன்ற உதயணன்; உ. 17 : 170; "அரிமா னன்ன வணங்குடைத் துப்பிற், றிருமா வளவன்" பட்டின. 298 - 9.

பி - ம். 1 செம்மல்.

நீக்கச் சென்றனெ னெருந லின்றிவண்
நீக்கப் பட்டனெ ளுதலி னிலையா
ஆக்கமுங் கேடும் யாக்கை சார்வா
ஆழிக் காலிற் கீழ்மேல் வருதல்
வாய்மை யாமென மனத்தி னினைஇ

(உதயணன் பதுமாபதியைக் காணல்)

நீங்கிய வெழுந்தோன் பூங்குழை மாதரை
வண்ணக் கஞ்சிகை வளிமுகந் தெடுத்துழிக்
கண்ணுறக் கண்டே தன்னமர் காதல்
மானேர் நோக்கின் வாசவ தத்தை
தானே யிவளெனத் தான்றெரிந் துணரான்
மந்திர விதியி னந்த ணாளன்
தந்தனன் மீட்டெனுஞ் சிந்தைய னாகி
உறுப்பினு நிறத்தினும் வேற்றுமை யின்மையின்
மறுத்து நோக்கு மறத்தகை மன்னன்

(உதயணன் கண்கள்)

செஞ்சுடர் முகத்தே செருமீக் [1] கூரிய
வெஞ்சின [2] வேந்தர்க்கு நஞ்சுமிழ் நாகத்துத்

---

32. நெருநலென்றது கால அணிமையைப் புலப்படுத்தி நின்றது. இவண் - இவ்விடத்தே.

35. ஆழிக்கால் - உருளையாகிய கால்; உருளையிலுள்ள ஆரக்காலுமாம்.

34 - 5. "அகடுற யார்மாட்டு நில்லாது செல்வஞ், சகடக்காற் போல வரும்" (நாலடி. 2) என்பது இங்கே அறியற்பாலது.

36. நினைஇ - நினைந்து; இனைஇ யென்றுகொண்டு, வருந்தியென்றலுமாம். 37. நீங்கிய - நீங்குதற்கு. மாதரை - பதுமாபதியை.

39. தன்னமர் காதல் - தன்னை விரும்பும் காதலையுடைய; "தன்னமர் காத லானும்" (சீவக. 190.) தையலைக் (8) கண்டென்க (39.)

39 - 41. இவளை வாசவதத்தையென்று கருதினமை : 153-5.

42. மந்திர விதியினையுடைய அந்தணாளன் - காகதுண்டக முனிவன்; "மந்திர விதியின் மரபுளி வழாஅ, அந்தணர்" முருகு. 95 - 6.

45. மறுத்தும் - மீட்டும். மன்னன் - உதயணன்.

46. செரு மீக்கூரிய-போரில் மேம்பட்ட.

பி - ம். 1 கூறிய. 2 வேர்தற்கு.

தீயோ ரன்ன திறல வாகி
முளையோர் முறுவன் முகிழ்த்த சின்னகை
இளையோர் நெஞ்சிற் றளைமுதல் பரிந்தவர்க்
கமிழ்தம் பொதிந்த வருளின வாகித்
தலைப்பெருந் தாமரைச் செம்மல ரன்ன
நலத்தொடு புணர்ந்த விலக்கண நெடுங்கண்

(உதயணனும் பதுமாபதியும் தம்முள் மயங்கல்)

வயப்பட வுற்று வயங்கிழை மாதர்
தானுங் கதுமென நேர்முக நோக்க
நெஞ்சிறை கொளீஇய நிறையமை நெடுந்தாழ்
வெந்தொழிற் காம வேட்கை திறப்பத்
திண்பொறி கலங்கித் திறல்வே றாகி
வேலை யெல்லை மீதூர்ந் திரண்டு
கோலப் பெருங்கடல் கூடி யாங்கும்
இசைந்த வனப்பி னேயர் மகற்கும்
பசைந்த காதற் பதுமா பதிக்கும்
யாப்புறு பால்வகை நீப்புற வின்றி
பிறப்புவழிக் கேண்மையிற் சிறப்புவழி வந்த

---

48. தீ ஓரன்ன - விடத்தையொத்த ; தீ - விடம் ; " வேக வெந்தீ நாகம் " மணி. ௨௦ : 98.

49. முளை - நாணன்முளை. முறுவல் - பல். நகை - சிரிப்பு.

50. மங்கையருடைய நெஞ்சின் கட்டை அறுத்து.

53. கண்களினது.

56. இறைகொளீஇய - தங்கிய. நிறையாகிய தாழை ; " நிறைத் தாழ் பறித்தென் னெஞ்சம் புகுந்து " என்றார் முன்னும் ; க. 33 : 150.

53 - 7. " நீண்ட கமலத்தை நீலக் கடைசென்று, தீண்டு மளவிற் றிறந்ததே - பூண்டதோர், அற்பின்றாழ் கூந்தலாள் வேட்கை யகத் தடக்கிக், கற்பின்றாழ் வீழ்த்த கதவு " (நள. சுயம். 82) என்பதை இவ் வடிகள் நினைப்பிக்கின்றன.

58. பொறி - அறிவு. 59. வேலை - கடற்கரை.

62. பசைந்த - அன்புற்ற.

63. பால்வகை - ஊழ்வகை. நீப்புறவு - நீங்குதல்.

64. பிறப்புவழிக் கேண்மை - உழுவலன்பு ; "உழுவ லன்பி னுள்ளம் ", " உடுத்துவழி வந்த வுழுவ லன்பு ", " பிறப்பிடைக் கேண்மைப் பெருமனைக் கிழத்தி " க. 32 : 42 ; உ. 11 : 39, 18 : 116.

காமப் பெருங்கடல் கண்ணுறக் கலங்கி
நிறைமதி யெல்லைத் துறையிகந் தூர்தர

(பதுமாபதி நினைத்தல்)

நன்னகர் கொண்ட தன்னமர் விழவினுட்
கரும்புடைச் செல்வன் விரும்புபு தோன்றித்
தன்னலங் கதுமெனக் காட்டி யென்னகத்
திருநிறை யளத்தல் கருதிய தொன்றுகொல்
அந்தண வடிவொடு வந்திவட் டோன்றி
மேவன நுகர்தற்கு மாயையி னிழிதரும்
தேவ குமரன் கொல்லிவன் றெரியேன்
யாவ னாயினு மாக மற்றென்
காவ னெஞ்சங் கட்டழித் தனனென
வெஞ்சின விடலையொடு நெஞ்சுமா றூடி

(பதுமாபதி கண்ணின் செயல்)

உலைப்பருந் தானை யுதயண [1] குமரற்
கிலைக்கொழுந்து குயின்ற வெழில்வளைப் பணைத்தோள்
உரிய வாயின வுணர்மி னென்றுதன்
அரிமதர் நெடுங்க ணயனின் றோர்க்கும்
அறியக் கூறுத லமர்ந்தன போல

65. காமப்பெருங்கடல் : எழுவாய். 66. ஊர்தர - பரக்க.
67. தன்னென்றது, மன்மதனை. 70. = க. 34 : 65.
72. மேவன - விரும்பியவற்றை.
74 - 5. "யாவனே யானு மாக வருநிறைக் கதவ நீக்கிக், காவ லென் னெஞ்ச மென்னுங் கன்னிமா டம்பு குந்து, கோவவென் னுள்ளம் யாத்தாய்" (சீவக. 714.) என்பது இவ்வடிகளுடன் ஒப்பிடற் பாலது.
76. நெஞ்சுமாறூடி - ஒருவர் நெஞ்சில் ஒருவர்புகுந்து ; ௩. 8 : 92 - 7 ; "வரிசிலை யண்ணலும் வாட்க ணங்கையும், இருவரு மாறிப்புக் கிதய மெய்தினர்" கம்ப. மிதிலை. 37.
77. உலைப்பருந் தானை - பகைவராற் கெடுத்தற்கரிய சேனை.
78. இலைக்கொழுந்துகுயின்ற என்பதைத் தோளுக்கு அடையாக்குக ; வளைக்கு அடையாக்கினும் பொருந்தும் ; க. 37 : 157 ; உ. 19 : 136 - 8. 81. அமர்ந்தன - விரும்பியன.

பி - ம். [1] குமரனிலைக்.

நெறியிற் றிரியா நிமிர்ந்துசென் றூட

(பதுமாபதி கோயிலை வலஞ்செய்தல்)

வளங்கெழு மாவி னிளந்தளி ரன்ன
நயத்தகு மேனியு நல்லோர் நாடிய
பயப்புள் ளுறுத்த படியிற் றாகக்
கைவரை நில்லாப் பையு ளொடுக்கி
உட்கு நாணு மொருங்குவந் தடைதர
நட்புடைத் தோழி நண்ணுவன ளிறைஞ்ச
மேதகு வையத்தின் மெல்லென விழிந்து
தாதுகு புனைமலர்த் தண்பூங் காவினுட்
சூடக முன்கைச் சுடர்க்குழை மகளிரொ
டாடுத லானு வவாவொடு நீங்கி
வனப்பெனப் படூஉந் தெய்வந் தனக்கோர்
உருவுகொண் டதுபோற் றிருவிழை சுடரத்
தன்னமர் தோழி தன்புறத் தசைஇ
அன்ன நாண வண்ணலைக் கவற்றுப்
பொன்னரிக் கிண்கிணி புடைபெயர்ந் தரற்ற
அரிச்சா லேகத் தறைபல பயின்ற
திருக்கிளர் மாடஞ் சேர்ந்துவலங் கொண்டு

(பதுமாபதி தானம் அளித்தல்)

கழிபெருஞ் சிறப்பிற் கன்னி மகளிர்
அழியுந் தான மவ்விடத் தருளி

---

82. திரியா - திரிந்து. 84 - 5. மேனி பசலையுற.

86. பு. ந. 7 : 43. பையுள் - துன்பத்தை.

87. உட்கு - அச்சம்; சு. 13 : 100; "நாணு முட்கு நண்ணுவழி யடைதர" (குறிஞ்சி. 184); சீவக. 731, ந.

93. தெய்வம் : எழுவாய்.

95. தன்னமர் - தன்னை விரும்புகின்ற; தன்னையொத்த வென்றுமாம். அசைஇ - சாய்ந்து.

96. அண்ணலை - உதயணனை. கவற்று - கவலச்செய்து.

98. அரிச்சாலேகம் - மான்கண்போன்ற துளைகளையுடைய சாளரம்; க. 40 : 9, அடிக். அறை - இங்கே மணவறைகள்; சீவக. 2059.

99. மாடம் - மன்மதன் கோயில்; "காமன் மாடத்துளிழிந்து" சீவக. 2055.

101. அழியும் தானம்-கன்னித்தன்மை அழிதற்குரிய தானத்தை.

நான்முகன் மகளிர் நூன்முதற் கிளந்த
ஒழுக்கிற் றிரியா ளுறுபொருள் வேண்டும்
வழுக்கா வந்தணர் வருக யாவரும்
விலக்கவு நீக்கவும் பெறீஇ ரென்றுதன்
தலைத்தாண் முதியர்க்குத் தானே கூறி
நோன்புமுத றொடங்கித் தேங்கமழ் கோதை
தலைநாட் டானந் தக்கவை [1]யளித்தலிற்

(ஒரு மங்கை பாடுதல்)

பலநா ளேற்ற பயனுண் டெனினே
வளமையும் வனப்பும் வண்மையுந் திறலும்
இளமையும் விச்சையு மென்றிவை பிறவும்
இன்பக் கிழமையு மன்பே ருலகினுள்
யாவர்க் காயினு மடையு மடையினும்
வார்கவுள் யானை வணக்குதற் கியைந்த
வீணை விச்சையொடு விழுக்குடிப் பிறவரிது
விழுக்குடிப் பிறந்திவ் வீறொடு விளங்கிய

---

102. மகளிர் நூன்முதல் - மகளிர்க்குரிய இலக்கணமுதலியவற்றைக் கூறும் நூலிடத்தே.

105. விலக்கவும் நீக்கவும் பெறீஇரென்றது, "போமின் போமின்" (28) என்றதை உட்கொண்டு.

106. முதியர் - மூத்தகாஞ்சுகியர்.

104 - 6. தானம்பெற வருவோரை விலக்கலாகாதென்பது, 142 - ஆம் அடி முதலியவற்றாலும் அறியப்படும்.

108. தலைநாட்டானம்-முதற்றினத்திற் செய்யப்படுந் தானத்தை.

110 - 12. உதயணனுடைய குண விசேடங்கள் ; க. 35 : 159, 230; 36 : 89 - 91.

115. பிறவு அரிது - பிறத்தலரிது ; " பிறவினொ டிறவு மானான்" (தே. திருஞா. இடைமருது); "பிறவாழிக் கரைகண் டாரே" வி. பா. கிருட்டினன். 1.

114 - 5. இசையானது யானையை வணங்கச் செய்தற்குரியது ; க. 35 : 100 - 101, அடிக்.

116. இவ்வீறு - மேற்கூறிய வளமை முதலிய குணங்கள்.

பி - ம். 1 யழிதலிற்.

வழுக்கா மரபின் வத்தவர் பெருமகன்
உதயண குமரனொ டொப்போன் மற்றிவள்
புதைபூண் வனமுலைப் போகம் பெறுகென
மரபறி மகடூஉப் பரவினள் பாட
அன்ன னாக வென்னயந் தோனெனப்
பொன்னிழை மாதர் தன்மனத் திழைப்பத்
தலைநாட் டான மிலக்கணத் தியைந்தபின்

(பதுமாபதி அரண்மனையை அடைதல்)

மாயிரு ஞாலத்து மன்னவன் மகளே
ஞாயிறு படாமற் கோயில் புகுதல்
இன்றை நன்னாட் கியல்புமற் றறிகெனத்
தொன்றியன் மகளிர் தொழுதனர் கூறச்
செய்வதை யறியலள் வெய்துயிர்ப் பளைஇத்
தெய்வத் தானம் புல்லென வையத்
திலங்கிழை மாத ரேற்ற வேறிப்
பொலந்தொடி மகளிர் பொலிவொடு சூழ
வந்த பொழுதிற் கதுமென நோக்கிய
[1] அந்த ணாளற் கணிநல னொழியப்
பெருநகர் புகழத் திருநகர் புக்கபின்

---

117 - 8. பெருமகனாகிய உதயண குமரனோடு.

118. உதயணன் உவமமாதற்குரிய தலைவனென்றபடி; "பிறர்க்கு நீ வாயி னல்லது நினக்குப், பிறருவம மாகா வொருபெரு வேந்தே" (பதிற். ௭௩) என்பதும் இக்கருத்தை வலியுறுத்தும்.

120. மரபு - இன்ன இன்ன காலத்து இன்ன இன்ன பாடலைப் பாடவேண்டுமென்னும் முறைமை.

121. என் நயந்தோன் - என்னை விரும்பியவன்.

122. தன் மனத்து இழைப்ப - தன்னுள்ளத்தே நுண்ணிதாக ஆராய; "இழைத்துணர்ந், தீண்டிய கேள்வியவர்" (குறள், 417); "தன் மனத் திழைக்கின் றானே" சீவக. 1089.

123. தலைநாட்டானம் : 108.

125. சூரியன் அத்தமித்தற்கு முன்னே அரண்மனையை அடைதல்.

127. தொன்று இயல் மகளிர் - பழைய முறைமையை அறிந்த மகளிர்.

129. மன்மதனுடைய கோயில் பொலிவுகெட.

132. நோக்குதல் இருவர்க்கும் பொது.

134. திருநகர் - அரண்மனை. 133 - 4. குறுந். ௫௪.

பி - ம். 1 அந்தணாளர்க்.

(பதுமாபதியின் கட்டளை)

இகலடு தானை யிறைமீக் [1] கூறிய
தவலரும் வென்றித் தருசகன் றங்கை
கொங்கலர் கோதை நங்கைநம் பெருமகள்
புகழ்தற் காகாப் பொருவில் கோலத்துப்
பவழச் செவ்வாய்ப் பதுமா பதிதன்
கன்னி நோன்பின் கடைமுடி விதனொடு
முன்னி முற்று மின்ன தீமென
நச்சுவனர் வரூஉ நான்மறை யாளரை
அச்சங் கொள்ள வகற்றன்மி னென்றுதன்
ஆணைவைத் தகன்றனள் யாண ரமைத்தவிழ்
தறிமி னீரெனப் பொறியமை புதவிற்
கடைமுதல் வாயிற் கடுங்காப் பிளையரை
அடைமுது மாக்க ளமைத்தகன் றமையிற்

(உதயணன் நிலை)

கண்டோர் பெயர்த்துக் காண்ட லுறாஉம்
தண்டா வனப்பின் றகைமைய ளாகிய
கன்னி யாகங் கலக்கப் பெறீஇயரெனப்

---

135. அரசர்களுள் மேலாகக் கூறப்பட்ட.

136. தங்கையென்றது, தருசகனுடைய தாயின் உடன்பிறந்தவளது மகளாயதுபற்றி. 140. இதனொடு - இவ்விழாவோடு.

141. ஈம் = ஈயும் - ஈவாள்; கொடுமினெனினும் பொருந்தும்.

143. = 105. 144. யாணர் - புதிதாக.

145. பொறியமை புதவு - அரசனுக்குரிய இலச்சினையமைந்த கதவு; "புலிப்பொறிப் போர்க்கதவின்" (பட்டின. 40); "மற்றை வாயில்கண் மூன்றினும் வல்லைபோய், உற்று நோக்கினர் தாமென்ன வொற்றிய, கொற்ற மீனக் குறி", "பொன்னங் கயற்குறி, மாற்றி யுத்தர வாயிற் கதவதில், ஏற்றி லச்சினை யிட்டனர்" திருவிளை. விடையிலச்சினை. [21-2.

146. கடுங்காப்பிளையர்-கடிய காவலைச்செய்யும் சேவகர்.

147. அமைத்து - அடங்கச்செய்து. 148. பெயர்த்து - மீட்டும்.

149. தண்டா - அமையாமைக்குக் காரணமாகிய.

150. பெறீஇயர் - பெறுக.

பி - ம். 1 கூரிய.

பன்மலர்க் காவினுட் பகலு மிரவும்
உறையு ளெய்திய நிறையுடை நீர்மை
இளையோ னமைந்த காலை மற்றுத்தன்
தளையவிழ் கோதைத் தையல் விவளெனும்
மைய லுள்ளமொடு பைத [1]லெய்தி

(உதயணன் கூனியை வினவுதல்)

மன்னவன் மடமகள் பின்னொழிந் திறக்கும்
ஏந்திள வனமுலை யெழில்வளைப் பணைத்தோள்
மாந்தளிர் மேனி மடமா னோக்கின்
ஆய்ந்த கோலத் தயிரா பதியெனும்
கூன்மட மகடனைக் கோமகன் குறுகி
யாவளிந் நங்கை யாதிவண் மெய்ப்பெயர்
[2] காவலர் கொள்ளுங் காவினுள் வந்த
காரண மென்னை கருமமுண் டெனினும்
கூறினை செல்லிற் குற்ற மில்லென
மாறடு குருசில் வேறிடை வினவ

(கூனியின் விடை)

அந்த ணாள னரும்பொரு ணசையின்
வந்தன னென்னும் வலிப்பின ளாகி
இன்பங் கலந்த விந்நகர்க் கிறைவன்

---

152. நிறையுடை - மனத்தை நிறுத்துந் தன்மை உடைந்த.
153. இளையோன் - உதயணன். 155. பைதல் - துன்பம்.
153 - 5. அவன் பதுமாபதியை வாசவதத்தையென்று நினைத்து மயங்கினமை,இப்பகுதியின் 39-ஆம் அடி முதலியவற்றாலும்உணரலாகும்.
156. இறக்கும் - செல்லுகின்ற.
159 - 60. கூன்மகள் : ந. 5 : 97, 7 : 1, 8 : 55.
156 - 60. அயிராபதியை அவன் அடைந்து.
163. கருமமுண்டெனினும் - உனக்கு வேறு காரியமிருப்பினும்.
164. கூறினை செல்லின் - சொல்லிச்சென்றால். இல்லென - இல்லையென்று.
165. குருசில் - உதயணன். வேறிடை - தனித்த இடத்து.
166. பொருள் நசையின் - பதுமாபதி தானஞ்செய்யும் பொருள் மேலுள்ள விருப்பத்தால். 167. வலிப்பினளாகி - துணிவுடையவளாகி.
168. இறைவனென்றது தருசகன் தந்தையை.
பி - ம். 1 லெய்திய. 2 காவலற்.

தன்பெரு மாட்டி தலைப்பெருந் தேவி
சிதைவில் கற்பிற் சிவமதி யென்னும்
பேருடை மாதர்க் கோரிடம் பிறந்த
உதையை யோடை யென்னு மொண்டொடி
காசி யரசன் காதலி மற்றவள்
ஆசின்று பயந்த வணியிழைக் குறுமகள்
மதுநாறு தெரியன் மகளிருட் பொலிந்த
பதுமா பதியெனப் பகர்ந்த பேரினள்
துன்னருஞ் சிறப்பிற் கன்னி தானும்
வயந்தக் கிழவற்கு நயந்துநகர் கொண்ட
விழவணி நாளகத் தழகணி காட்டி
எழுநாள் கழிந்த வழிநாட் காலை
வேதியர்க் கெல்லாம் வேண்டுவ கொடுக்கும்
போதல் வேண்டா பொருட்குறை யுண்டெனின்
ஏத மில்லை யிவணி ராமினென்

(கூனி உதயணனை வினுதல்)

றிந்நாட் டாரலி ரேனையர் போல்வீர்
எந்நாட் டெவ்வூ ரெக்கோத் திரத்தீர்
யாமு நும்மை யறியப் போமோ
வாய்மை யாக மறையா துரைமினென்
றேயர் குருசிலைத் தூய்மொழி வினவ

170. சிவமதி - தருசகன் தாய்.

171. ஓரிடம் பிறந்த - ஒருவயிற்றிற் பிறந்த ; உடன் பிறந்த.

173. காதலி - மனைவி.

172 - 6. பதுமை காசியரசன் மகளென்பது, ௩. 16 : 3 - ஆம் அடி முதலியவற்றாலும் விளங்கும்.

178. வயந்தக்கிழவன் - மன்மதன்.

179 - 80. எழுநாள் விழவு : ௩. 5 : 31 - 2.

178 - 81. இந்நகர் மன்மதனுக்கெடுத்த திருவிழா நடத்தற்குரிய எழுநாளும் கழிந்த பின்னாளில் வேதியர்க்கு அவர் வேண்டிய பொருளை இவள் கொடுப்பாள்.

182. உமக்குப் பொருட்குறைவுண்டெனிற் போதல் வேண்டா.

183. இவணிராமினென்று - இவ்விடத்திலேயேயிருமென்று கூறி.

184. ஏனையர் - வேற்று நாட்டார். 186. - · வினா.

188. தூய்மொழி - கூனி.

(உதயணன் விடை)

நன்றான் மற்றது கேளாய் நன்னுதல்
கண்டார் புகழுங் கலக்கமில் சிறப்பிற்
காந்தார மென்னு மாய்ந்த நாட்டகத்
தீண்டிய பல்புக ழிரத்தின புரத்துள்
மாண்ட வேள்வி மந்திர முத்தீச்
[1] சாண்டிய னென்னுஞ் சால்புடை யொழுக்கின்
ஆய்ந்த நெஞ்சத் தந்தணன் மகனென்
மாணக னென்பேன் மற்றிந் நாடு
காண லுறலொடு [2]காதலிற் போந்தனென்
என்றது சொல்ல நன்றெனை விரும்பி
ஆய்புக ழண்ணலை யறிந்தன ளாகிச்
சேயிழைக் கூன்மகள் சென்றனள் விரைந்தென்.

௬—பதுமாபதியைக் கண்டது முற்றிற்று.

---

189. நன்னுதல் : விளி.
195. மகனென் - மகன் ; என், தன்மையை உணர்த்தி நின்றது ; "பிரீதிமதி காதற், றன்மகனென்யான்" சீவக. 1792.
196 - 7. = ௩. 8 : 73 - 4.
பி - ம். 1 சாண்டியர். 2 காணலிற்.

---

## எ—கண்ணுறு கலக்கம்.

(சூரியன் அத்தமித்தல்)

சேயிழைக் கூன்மகள் செவ்வனங் கூறிப்
போகிய பொழுதி னாகிய சூழ்ச்சி
அரும்பெறற் றோழரைப் பொருந்தலும் பொருக்கெனப்

---

எ—கண்ணுறு கலக்கம்.

[உதயணனும் பதுமாபதியும் ஒருவரையொருவர் கண்டமையால் ஒத்த அன்புடையவர்களாகி அன்றிரவு முழுவதும் கலங்கிக் கொண்டிருந்தமை இதனால் அறியலாகும்.]

1. கூன்மகள் : ௩ : 6 : 159 - 60, அடிக். செவ்வனம் - நன்றாக. உதயணனுக்குக் கூறி. 3. உதயணன் பொருந்தலும்.

பகலிடம் விளக்கிய பருதியஞ் செல்வன்
அகலிடம் வறுவி தாக வத்தத்
துயர்வரை யுப்பாற் கதிர்கரந் தொளிப்ப

(மாலைக்காலம்)

ஆண்கட னகற லதுநோன் றொழுகுதல்
மாண்பொடு புணர்ந்த மாசறு திருநுதற்
கற்புடை மகளிர் கடனெனக் காட்டி
வினைக்கும் பொருட்கு நினைத்துநீத் துறையுநர்
எல்லை கருதிய திதுவென மெல்லியற்
பணைத்தோண் மகளிர்க்குப் [1]பயிர்வன போல
மனைப்பூங் காவின் மருங்கிற் கவினிய
பைந்தார் முல்லை வெண்போது நெகிழ
வெறுக்கைச் செல்வம் வீசுத லாற்றாது
மறுத்துக் கண்கவிழ்ந்த மன்னர் போல
வாச மடக்கிய வாவிப் பன்மலர்
மாசி லொள்ளொளி மணிக்கண் புதைப்பப்

---

5. வறுவிதாக - வறுமையுடைத்தாக ; பொலிவிழப்ப.

5 - 6. அத்தத்து உயர்வரை - அத்தகிரிக்கு. உப்பால் - அப்பால்.

4 - 6. சூரியன் அத்தமிக்க. 7 - 14. முல்லையரும்பின் மலர்ச்சி.

7. ஆண்கடன் - ஆண் மக்களது கடமை. அதுநோன்று - அப்பிரிவைப் பொறுத்து.

9. காட்டல் தலைவர் செயல்.

10. வினை - போர். நீத்துறையுநர் - தலைவர்.

11. இது - இக்காலமாகும்.

12. பயிர்வனபோல - குறிப்பிப்பனபோல.

13 - 4. மனையைச் சார்ந்த தோட்டத்தில் அழகுபெற்ற முல்லை ; "இல்லெழு முல்லை" (க. 33 : 73) ; "மனைமரத், தெல்லுறு மௌவல்" (குறுந். ௧௧) ; "இல்வளர் முல்லையொடு மல்லிகை", "மனைவளர் முல்லை" சிலப். ௪ : 27 ; ௧௩ : 120. [யாது.

10 - 14. குறுந். ௩௰௮.

15. வெறுக்கை - பொன். வீசுதலாற்றாது - கொடுத்தல் செய்

16. கண்கவிழ்ந்த - கீழ்நோக்கிய ; "கரப்பவர்க்குச் செல்சார் கவிழ்தல்" (நான்மணி. 39.) 17 - 8. தாமரைமலர்கள் குவிய.

பி - ம். 1 பயில்வன.

பெருமை பீடற நாடித் தெருமந்
தொக்க லுறுதுய ரோப்புத லுள்ளிப்
பக்கந் தீர்ந்த பரிசில ருந்தவாச்
செறுமுகச் செல்வரிற் சேராது போகி
உறுபொரு ளுள்ள துவப்ப வீசி
வெறுவது விடாஅ விழுத்தகு நெஞ்சத்
துரத்தகை யாளர் சுரத்துமுற் றீறார்
எல்லுறு பொழுதிற் செல்ல லோம்பி
மகிழ்பத மயின்றிசி னுங்கு மல்லிகை
அவிழ்தா தூதி யளிதுயி லமரக்
கழனி யாரல் கவுளகத் தடக்கிப்
பழன மருதிற் பார்ப்புவாய் சொரிந்து
கருங்கா ரைரை நரன்றுவந் திறப்பத்

---

19. பெருமையும் பீடும் அறும் வண்ணம்; இரத்தலின் இழிவைப் புலப்படுத்தியபடி. கொடுப்போரை நாடி. 20. ஒப்புதல் - ஒழித்தல்.
21. பரிசிலர் : எழுவாய். உந்து அவா - வந்தோரைத் தள்ளிவிடும் விருப்பத்தையுடைய; தம்மைச் செலுத்தும் ஆசையையுடையவெனவுமாம்.
22. கோபிக்கின்ற முகத்தையுடைய செல்வரிடத்தே சேராமற் [போய்.
23. கையிலுள்ளதாகிய பொருளை.
24. வெறுவதுவிடா - சும்மா அனுப்பாத.
25. உரத்தகையாளர் - அறிவுடையோர். சுரம் - அரியவழி; பாலைநிலமுமாம். 26. வேறிடம் செல்லுதலைத் தவிர்ந்து; செல்லல்-துன்பமும்.
27. பதம் - உணவு. அயின்றிசினுங்கு - உண்டாற்போல. மல்லிகைப் பூவில்.
21 - 7. "மல்கு திரைய கடற்கோட் டிருப்பினும்,வல்லூற் றுவரில் கிணற்றின்கட் சென்றுண்பர், செல்வம் பெரிதுடைய ராயினுஞ் சேட் சென்றும், நல்குவார் கட்டே நசை" (நாலடி. 263) என்பதை இவ்வடிகளின் கருத்து நினைப்பிக்கின்றது.
28. தாது ஊதி - தாதை ஊதி உண்டு; "நறுந்தா தூதுங் குறுஞ் சிறைத் தும்பி" (குறுந். உருக.) அளி - வண்டு.
15 - 28. வண்டுக்குப் பரிசிலரும் தாமரைக்குக் கண்கவிழ்ந்த மன்னரும் மல்லிகைக்கு உரத்தகையாளரும் உவமைகள். [குஞ்சு.
29. ஆரல் - ஒருவகை மீன். 30. மருது - மருதமரம். பார்ப்பு -
29 - 31. "உடங்கிரை தேருந் தடந்தா ளரை, ஐய சிறுகட் செங்கடைச் சிறுமீன், மேக்குயர் சினையின் மீமிசைக் குடம்பைத், தாய்ப் பயிர் பிள்ளை வாய்ப்படச் சொரியும்" (நற். கக : 4 - 7); "கொடுஞ் சிறைப் பறவை, இறையுற வோங்கிய நெறியயன் மராஅத்த, பிள்ளை யுள் வாய்ச் செரீஇய, இரைகொண் டமையின்" குறுந். கூஉ : 2 - 5.

துணைபிரி மகளி ரிணைமலர் நெடுங்கண்
கட்டழன் முத்தங் காலப் பட்டுடைத்
தனிக்கா ழல்குற் பனிப்பசப் பிவர
அழல்புரை வெம்பனி யளைஇ வாடை
[1] உழல்புகொண் டுரூஉ தொல்லென் றூர்தரச்
செங்கேழ் வானக் கம்பலம் புதைஇ
வெங்க ணீர தாகி வேலிற்
புன்கண் மாலை போழத் தன்கட்

(உதயணன் வருந்துதல்)

டீராக் கற்பிற் றேவியை மறந்து
பேராக் கழற்காற் பெருந்தகை புலம்பிப்
பைவிரி யல்குற் பதுமா பதிவயிற்
கைவரை நில்லாக் காம வேகம்
அன்றுமுத லாகச் சென்றுமுறை நெருங்கப்
பவழமு மணியும் பாங்குபட விரீஇத்
திகழ்கதிர்ப் பசும்பொற் சித்திரச் செய்கை
வனப்பமை வையந் தனக்குமறை யாகிய
கஞ்சிகை கடுவளி யெடுப்ப மஞ்சிடை

---

32. மகளிருடைய கண்.

33. கட்டழல் - கடுமை அழல். அழல் முத்தம் - வெம்மையாகிய நீர்த்துளி; "புலம்புமுத் துகுத்த" (க. 33 : 44) என்றார் முன்னும். துயரக்கண்ணீர் சுடுதல் : க. 40 : 191 - 2, அடிக்.

35. பிரிந்தோர்க்கு அழலையொத்த ; குறுந். ௩௫ : 5.

35 - 6. வாடை ஊர்தர ; ஊர்தர - பரவ ; "தண்வரல் வாடையும் பிரிந்திசினோர்க் கழலே" என்பது இவ்வடிகளுடன் ஒப்பிடற்பாலது.

37. செவ்வானமாகிய கம்பலத்தைப்போர்த்து.

38 - 9. வேற்படையைப்போல மாலைக்காலம் தன்னெஞ்சைப் போழ்தலால்; "செஞ்சுடர் வேலி னெஞ்சிடம் போழ" (௩. 6 : 16) ; க. 33 : 95, அடிக்.

40. தேவியை - வாசவதத்தையை. 41. பேரா-பிறக்கிடாத.

43. ஓ. ௩. 6 : 86. கைவரை - ஒழுக்க எல்லை. காமவேகம் - இராகவேகம்; ௩. 8 : 3.

44. அன்று என்றது விழாவின் முதல்நாளை.

45. பவழமுதலியன வையத்திற்கு அடை. 48. = ௩. 6 : 6.

47 - 8. மறையாகிய கஞ்சிகை - மூடுதிரையை. மஞ்சு - வெண் மேகம்.

பி - ம். 1 உழல்வு.

வானர மகளிரிற் றானணி சுடர
முகைநலக் காந்தண் முகிழ்விர லேவைத்
தகைமலர்ப் பொய்கைத் தண்செங் கழுநீர்
சில்லெனப் பிடித்து மெல்லென விழிந்து
நண்ண வருவோள் போலு மென்கண்
ஆற்றே னவட னஞ்சாந் திளமுலை
நோற்றே யாயினு நுகர்வல் யானெனத்
தெய்வ நல்யாழ் கையமைத் தியற்றிய
ஐதேந் தல்கு லவந்திகை வீவும்
உறுதுணைத் தோழ னிறுதியு நினையான்
மாண்ட சூழ்ச்சி மந்திர வமைச்சர்
வேண்டுங் கொள்கைய னாகி நீண்ட
தடம்பெருங் கண்ணி தகைபா ராட்டி
உறுவகை யண்ண றுறுகண் பொருந்தலும்
கைவயிற் கொண்ட கழுநீர் நறும்போது
கொய்மலர்க் கண்ணி கொடுப்போள் போலக்
கனவிற் றோன்றக் கண்படை யின்றி
நனவிற் றோன்றிய நறுநுதற் சீறடி
மைவளர் கண்ணியை யெய்தும் வாயில்
யாதுகொ லென்றுதன் னகத்தே நினைஇ

---

49. அரமகளிர் - தெய்வமகளிர்.

50 - 52. = ௩. 5 : 83 - 8.  53. என்கண் நண்ண.

54 - 5. தவஞ்செய்தேனும் அவளை அடைவேன்; "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ மீண்டு முயலப் படும்" குறள், 265.

57. அவந்திகை - வாசவதத்தை ; ௩. 6 : 26.

58. தோழனிறுதி - யூகியின் சாக்காடு.

59. மந்திரம் - ஆலோசனை. அமைச்சர் - உருமண்ணுவா முதலி[யோர்.

61. கண்ணி - பதுமாபதியின்.

62. உதயணன் துயில் கொண்டவுடன்.

63. கழுநீர்ப் போதை.

64. கண்ணி - பதுமாபதி.  65. கண்படை - உறக்கம்.

63 - 5. 51-ஆம் அடி முதல் பார்க்க; "வேட்டதே கண்டாய் கனா" (கலி. ௧௨) என்பது இங்கே அறியற்பாலது.

67. எய்தும் வாயில் - அடையும் வழி. 68. நினைஇ - நினைந்து.

வெங்கனன் மீமிசை வைத்த வெண்ணெயின்
நெஞ்ச முருக நிறுத்த லாற்ருன்
காவினுட் காவலன் கலங்கக் கோயிலுட்

(பதுமாபதி வருந்துதல்)

பாசிழை யல்குற் பாவையும் புலம்பித்
தாயில் கன்றி னுய்நலந் தொலைஇப்
புகையினுஞ் சாந்தினுந் தகையிதழ் மலரினும்
வாசங் கலந்த மாசி றிருமனை
ஆயஞ் சூழ வமளியு ளேறி
நறுமலர்க் காவினுட் டுறுமிய பூந்துணர்க்
கொடிக்குருக் கத்திக் கொழுந்தளிர் பிடித்து
நாண்மலர்ப் புன்னைத் தாண்முத லணைந்து
[1] பருகு வன்ன நோக்கமொடு பையாந்
துருகு முள்ளமோ டொருமா றெடுங்கி
நின்றோன் போலவு மென்றோள் பற்றி
அகலத் தொடுக்கி நுகர்வோன் போலவும்
அரிமலர் நெடுங்க ணகவயிற் போகாப்

---

69 - 70. நெருப்பின்மேல் வைத்த வெண்ணெயைப்போல் மன முருக ; க. 33 : 153, அடிக். 71. காவலன் - உதயணன்.

73. தாயைப் பிரிந்த கன்று மிக வருந்துதல், "நாளா வுய்த்த நாமவெஞ் சுரத்து, நடைமெலிந் தொழிந்த சேட்படர் கன்றின், கடை மணி யுகுநீர் துடைத்த வாடவர்", "பண்பில் கோவலர் தாய்பிரித் தியாத்த, நெஞ்சமர் குழவி போல நொந்துநொந்து" (அகநா. கௌக, உகூ) என்பவற்ருலும் அறியப்படும்.

74. தகை - கட்டப்படும்.

80. பருகு அன்ன நோக்கமொடு - கண்ணுற் பருகுந்தன்மையை யொத்த பார்வையோடே; "பருகு வன்ன வருகா நோக்கமொடு" (பொருந. 77, அடிக்.) பையாந்து - துன்பமுற்று; "பையாந்து, புகலேக் கற்ற" (அகநா. ௯௭); உ. 13 : 45, அடிக்.

77 - 82. ௩. 6 : 23-ஆம் அடி முதலியவற்றிலும் இக்கருத்து வந்துள்ளது.

84. தன்கண்ணை இவள், 'அரிமலர் நெடுங்கண்' என்றது பட்டாங்கு கூறுதற்கண் வந்தது; "அம்பலம்போற் கோலத்தினுள்" (திருச்சிற். 27), "எம்பாவை பேதுற" (சீவக. 1364) என்றாற்போல. கண்ணினின்றும் போகாத.

பி - ம். [1] பருகுவனன்ன.

புரிநூன் மார்பன் புண்ணிய நறுந்தோள்
தீண்டும் வாயில் யாதுகொ லென்றுதன்
மாண்ட சூழ்ச்சி மனத்தே மறுகி
ஆசி லணியிழை தீயயல் வைத்த
மெழுகுசெய் பாவையி னுருகு நெஞ்சினள்
பள்ளி கொள்ளா ளுள்ளுபு வதிய
இருவயி னொத்த வியற்கை நோக்கமோ
டொருவயி னொத்த வுள்ள நோயர்
மல்லற் றானை வத்தவர் மன்னனும்
செல்வப் பாவையுஞ் செய்திற மறியார்
கொல்வது போலுங் குறிப்பிற் றாகி
எல்லி யாம மேழிருள் போலப்

(சந்திரன் அத்தமித்தல்)

பசுங்கதிர்த் திங்கள் விசும்பளந் தோடிக்
கடுங்கதிர்க் கனலி கக்குபு போகித்
தானொளி மழுங்கி [1] மேன்மலை குளிப்ப

(விடியற்காலம்)

மீன்முகம் புல்லென வா..........று........கை
தெளிமணி விளக்கு மளிமலர்ப் பள்ளியுட்
புலப்பிற் றீரக் கலப்புறு கணவரை
முயக்கிடை விடாஅச் சுடர்க்குழை மகளிர்
தோண்முதற் புணர்ச்சி யிரியத் துட்கென
வாண்முக மழுங்க வலியற வராவும்
வைவாள் போலும் வகையிற் றாகி
வெள்வேல் விடலையொடு விளங்கிழை மாதர்க்குச்

---

88 - 9. "மெழுகினாற் புனைந்த பாவை வெய்துறத் தாங்கு மோவா, தழுதுநைந் துருகு கின்ற வாயிடை" (சீவக. 1386) என்பது இங்கே ஒப்புநோக்கற்பாலது. 91 - 2. = ௪. 32 : 48 - 9.

96. எழிருள் - எழிரவு.

98. பிரிந்தவர்களுக்கு நெருப்பை வெளிப்படுத்தி.

101. மணி விளக்கும் - மாணிக்க விளக்கு ஒளியை வீசுகின்ற.

102. புலப்பு-தனிமை ; புலவியுமாம். 104. இரிய - கெட.

105 - 6. அராவும் வைவாள் - வாளரம்.

பி - ம். 1 மேன்மலைக்.

செந்தீக் கதீஇய வெந்தழற் புண்ணினுட்
சந்தனச் சாந்திட் டன்ன [1] தண்மையொடு
வந்தது மாதோ வைக லின்றென்.

எ—கண்ணுறு கலக்கம் முற்றிற்று.

---

108 - 9. தீப்பட்ட புண்ணினுள்ளே சந்தனக்குழம்பை அப்பினாலொத்த தன்மையுடன்; "கட்டழற் கதிய புண்ணிற் கருவரை யருவி யாரம், பட்டது போன்று நாயகன் பரிவுதீர்ந்து" சீவக. 583.

பி - ம். 1 தன்மையொடு.

## அ—பாங்கர்க்குரைத்தது.

**வை**கிய காலை வத்தவ ரிறைவனும்
பைவிரி யல்குற் பதுமா பதியும்
கண்ணுறக் கலந்த காம வேகம்
ஒண்ணிறச் செந்தீ யுண்ணிறைத் தடக்கிய
ஊதுலை போல வுள்ளகங் கனற்ற

(பதுமாபதியின் நிலை)

மறுத்தவற் காணுங் குறிப்புமனத் தடக்கிப்
பண்கெழு விரலிற் கண்கழூஉச் செய்து
தெய்வம் பேணிப் பையென விருந்தபிற்

---

அ—பாங்கர்க்குரைத்தது

[வாசவதத்தையால் வருந்தும் என்னெஞ்சினைப் பதுமாபதி தன் வயமாக்கி அவளும் என்மனத்திற் புகுந்தனளென்று உதயணன் தன் கருத்தைத் தோழர்க்கு உரைத்தது இதனால் அறியலாகும்.]

3. மு. ௩. 6 : 65. கலந்த - கலத்தலாலுண்டாகிய. காம வேகம்: உ. 16 : 89, 19 : 166; ௩. 7 : 43.

3-5. காமவேகம் கனற்றுதலால்; "காம வேக மூள்ளங் கனற்ற" (உ. 16 : 89.) 6. மறுத்து - மீட்டும்.

7. பண்கெழுவிரலின் - யாழொடு பயின்ற விரல்களையுடைய கைகளினால். கண் கழூஉச்செய்து - கண்களைக் கழுவி.

8. பையென - மெல்ல.

7 - 8. "பண்கெழு மெல்விர லாற்பணைத் தோளிதன், கண் கழூஉச் செய்து கலைநல தாங்கி, விண்பொழி பூமழை வெல்கதிர் நேமிய, வண்புகழ் மாலடி வந்தனை செய்தாள்" (சீவக. 220); "நாள்ந்தி

(செவிலி முதலியோர் பதுமாபதியிடம் கூறல்)

பாசிழைச் செவிலியும் பயந்த தாயும்
நங்கை தவ்வையும் வந்தொருங் கீண்டிப்
படிநலப் பாண்டியங் கடிதூர்ந் தூராஅய
[1] வையத் திருப்ப மருங்குனொந் ததுகொல்
தெய்வத் தானத்துத் தீண்டிய துண்டுகொல்
பாடகஞ் சுமந்த சூடுறு சேவடி
கோடுயர் மாடத்துக் கொடுமுடி யேற
வாதக் கொப்புளொடு வருத்தங் கொண்டகொல்
அளிமலர்ப் பொய்கையுட் குளிர்நீர் குடையக்
கருங்கண் சிவப்பப் பெருந்தோ ணொந்தகொல்
யாதுகொ னங்கைக் கசைவுண் டின்றெனச்
செவ்வி யறிந்து பையெனக் குறுகி
வேறுபடு வனப்பின் விளங்கிழை வையம்
ஏறின மாகி யிளமரக் காவினுட்
சேறு மோவெனச் சேயிழைக் குரைப்ப

(பதுமாபதி கூற்று)

முற்ற நோன்பு முடியு மாத்திரம்
கொற்றக் கோமான் குறிப்பின் றாயினும்
வினவ வேண்டா செலவென விரும்பி
மெல்லென் கிளவி சில்லென மிழற்றிப்
புனைமாண் வையம் பொருக்கெனத் தருகென

---

கோநின்று கண்கழீஇத் தெய்வத்தைத், தானறியு மாற்றாற் றொழு தெழுக" ஆசார. 9.

10. தவ்வை - செவிலியின் மகளாய் மூத்தவள்.

9 - 10. = ௯. 9 : 48. 11. படி - உருவம். ஊராஅய - பெயர்ந்த.

13. மன்மதன் கோயிலில் தெய்வந் தீண்டியதோ?

14. பாடகம் - ஓரணி. 16. கொப்புள் - கொப்புளம்.

19. அசைவு - வருத்தம். 20. செவ்வி - சமயம்.

21. விளங்கிழை : விளி. 23. சேறுமோ - செல்வேமா?

24. நோன்பு முற்றமுடியுமளவு. 25. கோமான் - தருசகன்.

26. செலவைக் குறித்து வினவ வேண்டா.

27 - 8. சோலை செல்லுதற்கு வையத்தை விரைவில் வருவிக்க வென்று பதுமாபதி கூற.

பி - ம். 1 வையகத்.

வினைமா ணிளையரை யேவலின் விரும்பி
நாப்புடை பெயரா மாத்திரம் விரைந்து
காப்புடை வையம் பண்ணி யாப்புடை
மாதர் வாயின் மருங்கிற் றருதலிற்

(பதுமாபதியின் செயல்)

கோதை யாயம் பரவ வேறித்
திருமலர் வீதி 1 போதந் தெதிர்மலர்க்
காவினுட் பொலிந்த வோவக் கைவினைக்
கண்ணார் மாட நண்ணுவன ளிழிந்து
தேனிமிர் படலைத் திருவமர் மார்பனைத்
தானினி தெதிர்ந்த தானத் தருகே
அன்று மவாவி நோக்கின ளன்றியல்

(உதயணன் பதுமாபதியாகிய இருவர் செயல்)

இருவரு மியைந்து பருவரல் காட்டிப்
புறத்தோர் முன்னர்க் குறிப்புமறைத் தொடுக்கிக்
கருங்கண் டம்மு ளொருங்குசென் றூட
வந்தும் பெயர்ந்து மன்றைக் கொண்டும்
காலையும் பகலு மாலையும் யாமமுந்
தவலருந் துன்பமொடு கவலையிற் கையற்
றைந்நாள் கழிந்த பின்றைத் தன்மேல்
இன்னா வெந்நோய் தன்னமர் தோழிக்
குரைக்கு மூக்கமொடு திருத்தகு 2 மாதர்
வான்றோய் மண்டபம் வந்தொருங் கேறித்
தேன்றோய் கோதை சில்லென வுராஅய்

29. செவிலி முதலியோர் இளையரை ஏவுதலால்.
32. தருதலின் - வையத்தை இளையர் தருதலால்.
34. திருமகள் விளங்கித் தோன்றும் வீதியில் ; சிலப். ௬ : 127.
35. ஓவம் - சித்திரம். 36. மாடம் - மன்மதன் கோயில்.
37. படலை - மாலை. மார்பன் - உதயணன்.
38. தானம்-இடம். 39. அன்றும் : உம்மை இறந்தது தழுவியது.
40. பருவரல் - துன்பம்.
41. தம்முடைய குறிப்பை; "புறத்தோ ரறியாக் குறிப்பி[னுணர்த்தி" (80.)
43. அன்றைக்கொண்டு - அன்றுமுதல்.
45. கையற்று - செயலற்று. 46. ஐந்நாள் - ஐந்து தினம்.
50. உராய் - பெயர்ந்து.

பி - ம். 1 போதமுந்தெதிர். 2 மாதரை.

இடுகிய கருங்கண் வீங்கிய கொழுங்கவுட்
குறுகிய நடுவிற் சிறுகிய மென்முலை
நீண்ட குறங்கி னிழன்மணிப் பல்கலம்
பூண்ட வாகத்துப் பூந்துகி லல்குல்
அயிரா பதியெனுஞ் செயிர்தீர் கூனியைத்
தடந்தோண் மாதர் கொடுங்கழுத் தசைஇ
நின்ற செவ்வியு ளொன்று ரட்ட
வாமான் றிண்டேர் வத்தவர் பெருமகன்
கோமாட் கோடிய [1] குறிப்பின னாகித்
திகழ்தரு மதியிற் றிருமெய் தழீஇ
வெள்ளைச் சாந்தின் வள்ளி யெழுதிய
வயந்தக குமரன் வரைபுரை யகலத்
தசைந்த [2] தோள னாகி யொருகையுட்
டாரகம் புதைத்த தண்மலர் நறும்பைந்
தூழறிந் துருட்டா வொருசிறை நின்றுழிப்
பந்தவன் செங்கை [3] பயில்வது நோக்கி

**(பதுமாபதி அயிராபதியை வினவல்)**

அந்தண வுருவொடு வந்தவ னின்றோன்
யார்கொ லவனை யறிதி யோவெனப்
பாவை வினவப் பணிந்தவ ளுரைக்கும்

---

51 - 5. அயிராபதியின் தோற்றம்.
51. இடுகிய - சுருங்கி நோக்கிய. 52. நடு - இடை.
55. கூனி : ந. 6 : 159 - 60, அடிக். 56. அசைஇ - கட்டி.
58 - 65. எதிரே உதயணன் நின்றவிடத்து.
59. கோமாள் - தலைவி ; க. 40 : 63, அடிக்.
61. வள்ளி - கொடி.
64. பந்து, பைந்தெனவும் வழங்கும்; "நொம்பைந்து புடைத் தொல்கு நூபுரஞ்சேர் மெல்லடியார்" (தே. ஞான. சாய்க்காடு.) மாலை யாற் சமைத்த பந்தினை ; "மாலைப் பந்து மாலையு மேந்தி" சீவக. 2928.
65. உருட்டா - உருட்டி. சிறை - வேறிடம்.
66. பதுமாபதி நோக்கி.
67 - 9. அந்தணவடிவொடு அங்கு நின்றவன் யாரென்று பதுமாபதி தோழியைக் கேட்ப. 69. அவள் - அயிராபதி.

பி - ம். 1 குவியின. 2 தோழ. 3 பயிர்வது.

(அயிராபதியின் விடை)

அடிகள் போக யானு மொருநாள்
ஓடியாப் பேரன் புள்ளத் தூர்தர
ஆண முடைத்தாக் கேட்டனெ னவனை
மாணக னென்போன் மற்றிந் நாடு
காண லுறலொடு காதலின் வந்தோன்
மறையோம் பாளன் மதித்தன னாகித்
தானுந் தோழருந் தான நசைஇ
நின்றனர் போகா ரென்றவட் குரைப்பப்

(பதுமாபதி அயிராபதியிடம் கூறல்)

பல்வகை மரபிற் பந்துபுனைந் துருட்டுதல்
வல்லவன் மற்றவன் கைவயிற் கொண்டது
புறத்தோ ரறியாக் குறிப்பி னுணர்த்தி
நமக்கு வேண்டென நலத்தகை கூறக்

(அயிராபதி உதயணனிடம் குறிப்பித்தல்)

கண்ணினுங் கையினுங் கண்ணிய துணர்த்திப்
பெருந்தகை யண்ண றிருந்துமுக நோக்கி
நின்கைக் கொண்ட பூம்பந் தென்கை
ஆய்வளைத் தோளிக் கீக்க வென்ன
அங்கை யெற்றிச் செங்கணிற் காட்டிய

(உதயணன் செயல்)

கூன்மகள் குறிப்புத் தான்மனத் தடக்கித்

---

70. அடிகளென்பது முன்னிலைக்கண் வந்தது; இச்சொல் பெண்பாற்கும் வருதல், "குலம்யா தடிகட் கென்ன", "அஃதே யடிகளு முளரோ", "நம்பி வந்தன னடிகளென்றான்" (சீவக. 1787, 1884, 1909), "ஏத முண்டோ வடிகளீங் கென்றலும்" (சிலப். கஅ : 24) என்பவற்றாலுணர்க.

71. ஊர்தர - பரக்க.

72. ஆணம் - அன்பு. 73 - 4. = ௩. 6 : 196 - 7.

76. தானத்தை விரும்பி. 80. = 41.

78 - 81. அவன் கைப்பந்தைப் பிறர் அறிந்துகொள்ளாத குறிப்பால் நமக்கு வேண்டுவாயாகவென்று பதுமாபதி கூற.

82. கருதியதைக் கண்ணினும் கையினுமுணர்த்தி; 86.

83. அண்ணல் - உதயணனது.

84 - 5. நின் கைப்பந்தை பதுமாபதியின் பொருட்டு என்கையில் ஈகவென்று. 87. குறிப்பு - பந்தை அளித்திடுகவென்பது.

தன்வயிற் றாழ்ந்த தைய னிலைமை
இன்னுயிர்த் தோழர்க் கிசைத்தல் வேண்டி

(உதயணன் கூற்று)

மந்திரச் சூழ்ச்சியுள் வெந்திறல் வீரன்
வள்ளிதழ்க் கோதை வாசவ தத்தையை
உள்வழி யுணரா துழலுமென் னெஞ்சினைப்
பல்லிதழ்க் கோதைப் பதுமா பதியெனும்
மெல்லியற் கோமகண் மெல்லென வாங்கித்
தன்பால் வைத்துத் தானுந் தன்னுடைத்
திண்பா னெஞ்சினைத் திரிதலொன் றின்றி
என்னுழை நிறீஇத் திண்ணிதிற் 1 கலந்த
காம வேட்கைய டாளெனக் கூற

(இசைச்சன் மறுத்தல்)

ஈங்கிது கேட்கென விசைச்ச னுரைக்கும்
மன்னிய விழுச்சீர் மகதத்து மகளிர்
நன்னிறை யுடையர் நாடுங் காலை
மன்னவ னாணையு மன்ன தொன்றெனக்

---

88. தாழ்ந்த - ஆசைவைத்த.

89. தோழர்க்கு - உருமண்ணுவா முதலியோர்க்கு. இசைத்தல் - பொருந்தச் சொல்லுதல்.

90. மந்திரச் சூழ்ச்சி - இரகசிய ஆலோசனை. வீரன் - உதயணன்.

92. உள்வழி - நினைக்குமிடத்து. உணராது உழலும் - செய்வன தவிர்வன அறியாமற் சுழலுகின்ற.

95. ‘தான்’ என்றது பதுமாபதியை.

96. திரிதலொன் றின்றி - வேறிடத்து உழலுதல் சிறிதுமில்லாமல்; திரிதல் வேறுபடுதலுமாம்.

97. நிறீஇ - நிறுத்தி. திண்ணிதின் - நிச்சயமாக; 134.

92 - 7. தம்முள் ஒருவர் நெஞ்சு மற்றொருவரிடத்து மாறியிருத்தலை, “நெஞ்சுமாறுடி” (௩. 6 : 76) என்பதனாலும் அதன் குறிப்பாலு[முணர்க.

98. கூற - உதயணன் சொல்ல.

99. உரைக்கும் - உரைப்பான். 100. மகதம் - மகதநாடு.

101. நிறை - மனத்தைத் தீயவழியிற் செல்லாதபடி நிறுத்தல்.

100 - 102. “அருந்திற லரசர் முறைசெயி னல்லது, பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாது” (சிலப். உ௮ : 207 - 8);

பி - ம். 1 கலந்தாங்கரும.

கன்னி தானுங் கடிவரை நெஞ்சினள்
வேட்டுழி வேட்கை யோட்டா வொழுக்கினள்
அற்றன் றாயிற் கொற்றங் குன்றித்
தொடிகெழு [1] தோளி சுடுதீப் பட்டெனப்
[2] படிவ நெஞ்சமொடு பார்ப்பன வேடம்
கொண்டான் மற்றவன் கண்டோர் விழையும்
வத்தவர் கோமா னென்பதை யறிவோர்
[3] உய்த்தவட் குரைப்ப வுணர்ந்தன ளாகிப்
பெறுதற் கரிய பெருமக னிந்நகர்
குறுக வந்தனன் கூறுதல் குணமென
[4] நெஞ்சுநிறை விட்டன ளாகு மன்றெனின்
ஈன மாந்த ரொப்ப மற்றிவர்
தான மேற்ற நகாஅ தென்றுதன்
நுண்மதி நாட்டத்து நோக்கின ளாமது
திண்மதித் தன்றெனத் திரிந்தவன் மறுப்ப

(மற்றைத்தோழனும் மறுத்துக் கூறல்)

ஒருப்பா டெய்தி யுற்றவ ரெல்லாம்
குறிப்பின் வாரா நோக்கெனக் குருசிற்கு

---

“மாதவர் நோன்பு மடவார் கற்பும், காவலன் காவ லின்றெனி னின்றால்” (மணி. உஉ: 208 - 9) என்பன ஈண்டு அறியற்பாலன.

103. மடவார்கற்புக்கு அரசன் காவலேயன்றித் தம் காவலும் வேண்டுமென்ப வாகலான், ‘கன்னிதானுங் கடிவரை நெஞ்சினள்’ என்றார்.

104. வேட்கை - ஆசையை.

105. அற்று அன்றாயின். கொற்றம் குன்றி-அரசுரிமை குறைந்து.

106. தோளி - வாசவதத்தை. 107. படிவம் - விரதம்.

110. உய்த்து - ஆராய்ந்து.

111. பெருமகன் - அரசனாகிய உதயணன்.

112. நம்விருப்பத்தைக் கூறுதல் நன்றென்றெண்ணி.

114. ஈனமாந்தர் - இரத்தற்றொழிலையுடையோர்.

116. நுண்மதி நாட்டத்து - நுண்ணிய அறிவினது ஆராய்ச்சியினால்; “நன்மதி நாட்டத்து” (தொல். குற்றியலுகர. சூ. 78.) அது - பதுமாபதி விரும்பினாளென்றது.

117. திரிந்து - வேறுபட்டு. அவன் - இசைச்சன்.

118. ஒருப்பாடு - ஒருமை; துணிவுமாம்.

119. அவள் நோக்குக்கள் குறிப்பின் வாரா.

பி - ம். 1 தோழி. 2 படுவ. 3 உய்த்தவற். 4 நெஞ்சிறை.

மறுத்த வாயிலொடு வலிப்பன ராக

(உதயணன் கூற்று)

உயிரோன் றாகி யுள்ளங் கலந்தவள்
செயிரின் றாகிய செங்கடை நோக்கம்
அணங்கெனக் காயிற் றவட்குமென் னோக்கம்
அத்தொழி னீர்த்தென வெய்த்தன னென்ன
உரைப்பத் தேறு வுயிர்த்துணைத் தோழரைத்
திருச்சேர் மார்பன் றேற்றுதல் வேண்டி
மலரினு மரும்பினுந் தளிரினும் வனைந்த
சந்தக் [1] கண்ணிதன் சிந்தை யறியப்
பூக்குழை மாதர் நோக்கிடை நோக்கிப்
படுகாற் பொய்கைப் பக்க நிவந்த
நறுமலர்ப் பொதும்பர் நாற்றுவனம் போகி
மறைந்தன னிருந்த காலைமற் றவளென்
கண்ணி கொள்ளிற் கலக்கு முள்ளம்
திண்ணி தாகுத றெளிமி னீரென
மன்னவ னுரைத்தனன் மற்றவர்க் கெடுத்தென்.

அ—பாங்கர்க்குரைத்தது முற்றிற்று.

---

120. வலிப்பனராக - வற்புறுத்துவாராக.
121. "உயிர்கலந் தொன்றிய தொன்றுபடு நட்பு" அகநா. உ0ரு: 1.
122. செயிர் - குற்றம். நோக்கம்: எழுவாய்.
123. எனக்கு வருத்தஞ்செய்வதாயிற்று.
124. எய்த்தனன் - அறிந்தேன். 123 - 4. = ந. 9 : 72 - 3.
128. சந்தம் - அழகு; சந்தனமுமாம்.
127 - 8. = ந. 9 : 3 - 5, 21 - 3.
129. நோக்கிடை நோக்கி - நோக்கும் சமயத்தை யாம் தனித்தனியே பார்த்து. 130. படுகால் - படிக்கட்டு. நிவந்த - உயர்ந்த.
131. பொதும்பர் - மரச்செறிவு; மரக்கிளையுமாம்; இப்பெயர் பொதும்பெனவும் வழங்கும்; ந. 9 : 8. நாற்றுவனம் - தொங்கக்கட்டினேமாய்.
132. அவள் - பதுமாபதி. 134. திண்ணிதாகும் - உறுதியுடைய [தாகும்.

பி - ம். 1 கண்ணிதஞ்.

## ௯—கண்ணி தடுமாறியது.

மன்னவன் கூற மற்றது நன்றென

(தோழர் கண்ணி கட்டிவைத்தல்)

இன்னுயிர்த் தோழ ரியைந்தனர் போகித்
தண்ணறும் பிணைமலர் தகைபெரி துடைய
ஒண்ணிறத் தளிரோ டூழ்பட விரீஇக்
கண்விழவு தரூஉங் கண்ணி கட்டி
அன்ன மென்னடை யரிவை காணப்
புன்னையு ஞாழலு மகிழும் பொருந்திய
துன்னரும் பொதும்பிற் றொத்திடைத் துளங்காத்
தளிர்தரு கண்ணி தம்மு ளறிய
ஒளிபெற வைத்தவ ணொளித்த பின்னர்

(உதயணன் தான் சித்திரித்த வாழைக்குருத்தையும் கட்டிய கண்ணியையும் வைத்தல்)

வளங்கெழு வாழை யிளஞ்சுருள் வாங்கித்
தாமரைப் பொய்கையுந் தண்பூங் கேணியும்
காமன் கோட்டமுங் கடிநகர் விழவும்
மாமலர்க் கோதை மடமொழி யூரும்
வையக் கஞ்சிகை வளிமுகந் தெடுக்கவுந்

---

௯—கண்ணி தடுமாறியது.

[தம்முட் காதல்கொண்ட உதயணனும் பதுமாபதியும் ஒருவர் கண்ணியை ஒருவர் கவர்ந்து மகிழ்வுற்றது இதனால் அறியலாகும். கண்ணி - ஒருவகைமாலை.]

1. அது - நீ கூறிய செயல். 3. தகை - அழகு.
4. ஊழ்பட இரீஇ - முறைமைப்பட உரிய இடங்களில் இருத்தி.
5. கண்ணுக்கு விழாவைப்போல இன்பத்தைச்செய்கின்ற கண்ணி.
3 - 5. = ௩. 8 : 127 - 8, 9 : 21 - 2, 82 - 3.
6. அரிவை - பதுமாபதி.
8. பொதும்பு - மரச்செறிவு; மரக்கிளையுமாம். தொத்து - பூங்கொத்து.
10. ஒளிபெற - விளக்கம்பெற. அவண் - அவ்விடத்தே.
11. இளஞ்சுருள் - சுருண்டிருக்கும் இளங்குருத்து.
14. மடமொழி - பதுமாபதி.

தெய்வப் பாவையைத் தேனிமிர் புன்னைத்
தாண்முதல் பொருந்தித் தானவட் கண்டதும்
காமர் நெடுங்கண் கலந்த காமமும்
இன்னவை பிறவுந் தன்முத லாக
உள்ளம் பிணிப்ப வுகிரிற் [1] பொறித்து
வள்ளிதழ்க் கண்ணி வளம்பெறச் சூட
அரும்பினும் [2] போதினும் பெருந்தண் மலரினும்
முறியினு மிலையினுஞ் செறியக் கட்டி
ஒருங்குபுறம் புதைஇ யுதயண குமரனும்
திருந்திழைத் தோளி விரும்புபு நோக்கச்
சிதர்சிறை வண்டின் செவ்வழி [3] புணர்ந்த
ததரிதழ் ஞாழற் றாழ்சினைத் தூக்கிப்
பைந்தாட் பொருந்திச் செஞ்சாந் துதிரத்
திருமலி யகலஞ் சேர முயங்கிப்
பொருமுர ணண்ணலும் போந்த பொழுதின்

**(பதுமாபதியின் செயல்)**

ஆடுகொம் பன்ன வம்மென் மருங்குற்

---

16 - 7. புன்னைத்தாள் முதல் - புன்னை மரத்தின் அடி; ௩. 6: 23, 7: 79. 18. "கண்ணுறக் கலந்த காம வேகம்" ௩. 8: 3.

19. முதல் - காரணம்; "தன்முத லாகலின்" (89) என்பர்பின்.

20. உள்ளம் பிணிப்ப - வேறொன்றிற் செல்லாதபடி அவள் மனத்தைக் கட்ட; என்றது அவளுடைய மனத்தைக் கவரவென்றபடி. உகிரிற் பொறித்து - நகத்தாற் சித்திரித்து.

21. பதுமாபதி சூடிக்கொள்ள.

22. அரும்பு - சிற்றரும்பு. போது - பேரரும்பு.

23. முறி - கொழுந்து. கட்டி - கண்ணி கட்டி.

22 - 3. = 3 - 5, அடிக். 24. புதைஇ - மறைத்து.

25. தோளி - பதுமாபதி. விரும்புபு - விரும்பி.

26. சிதர்சிறை - சிதர்ந்த சிறகு. செவ்வழி - ஒருபண்.

27. ததர் - செறிவு; "ததர்தழை", "ததரிதழ்" (அகநா. உ௩௪: 10, ௩௩௩: 24, பி - ம்.); சிதறுதலுமாம்; க. 52: 117, அடிக். தாழ்சினை - வளைந்து தணிந்த கொம்பு.

28. பைந்தாள் - அந்த ஞாழன்மரத்தின் பசிய அடியில். செஞ்சாந்து - தான் பூசிப் புலர்ந்த செஞ்சந்தனத்துகள்.

30. போந்த பொழுதின் - உதயணன் சென்ற காலத்தில்.

பி - ம். [1] பொலிந்து. [2] பொதியினும். [3] யுணர்ந்த.

பாடகச் சீறடிப் பல்வளை மகளிரைப்
பக்க நீக்கிப் பைந்தொடிக் கோமாள்
நற்பூம் பொய்கை புக்குவிளை யாடும்
உள்ள மூர்தர வொழிநிலத் தோங்கிக்
[1] கொடுக்குஞ் சீர்க்கமு மடுத்தூழ் வளைஇய
முத்த மாலையும் வித்தக மாகிய
உளிப்பெருங் கம்மமு முகத்துமுத லுறீஇத்
திண்டூட் சதுரங் கொண்ட வெல்லையுட்
சீயமு மேறுந் திருவும் பொய்கையும்
சேயிதழ் மலருங் காம வல்லியும்
மேயினர் விழைய மேதகப் புணர்ந்த
கோலக் கோயுட் கொண்டுநிறை யமைத்த
சூடமை சாந்து மீடறிந்து புனைந்த
மதங்கமழ் நறுமலர்ச் சதங்கைத் தாமமும்
சாலக் கொள்கெனத் தன்வயிற் றிரியாக்
கோலக் கூன்மகட் கறியக் கூறிச்

---

33. கோமாள் - தலைவி; பதுமாபதி; ௧. 40 : 63, அடிக்.

31 - 3. பதுமாபதி தோழியரைத் தன் பக்கத்தினின்றும் நீக்கி அயலிடம் செல்லச் செய்து. [தலால்.

34 - 5. விளையாட வேண்டுமென்ற கருத்துத் தன்னைச் செலுத்து

36. கொடுக்கு, சீர்க்கமென்பன மண்டபத்திலுள்ள சிற்ப விசேடங்கள்.

38. உளிப்பெருங்கம்மம் - உளியாற் செய்த சிறந்த தொழில்.

39. திண்ணிய தூண்களையுடைய.

40. சீயம் - சிங்கம். ஏறு - இடபம்.

42. புணர்ந்த - சீய முதலியவற்றின் வடிவங்கள் அமைந்துள்ள.

43. கோலக்கோயுள் - அழகிய பரணியில்.

44. சூடமை சாந்து - அகிற்றேய்வை.

43 - 4. கோயுட்சாந்து: ௩. 5 : 78; சீவக. 764.

45. மதம் - மான்மதம்; கத்தூரி; யானைமதமுமாம். சதங்கைத் தாமம் - ஒருவகை மாலை.

46. கொள்கென - கொண்டுவருகவென்று. திரியா - பிரியாத.

47. கூன்மகட்கு - அயிராபதிக்கு.

பி - ம். 1 கொடிக்குஞ்.

செவிலித் தாயுந் தவ்வையு மாயமும்
அகலப் போகிய வமைய நோக்கி
அன்னம் போல மென்மெல வொதுங்கி
நன்மூலைத் தீம்பா றம்மனை கொடுப்ப
ஒருங்குண் டாடிய கருங்கண் மதிமுகத்
தந்த ணாட்டி யாப்பியா யினியெனும்
மந்திரத் தோழியொடு மணங்கமழ் காவின்
அணித்தழை மகளி ரருங்கடிக் கமைந்த
மணிச்சுதைப் படுகான் மருங்கணி பெற்ற
அளப்பருங் குட்டத் தாழ்ந்த பொய்கைத்
தாட்கொ ளெல்லையுள் வாட்கண் சிவப்பக்
குளித்துங் குடைந்துந் திளைத்து விளையாடிக்
கூட்டமை நறும்புகை யூட்டமைத் தியற்றிக்
கண்ணெழிற் கலிங்கந் திண்ணென வசைத்துப்
பார மாகி நீரசைந் தொசிந்த
காரிருங் கூந்த னீரறப் புலர்த்தி
ஏற்ப முடித்துப் பூப்பிறி தணியாள்

---

48. செவிலித்தாய் முதலியோர் உடன் வந்தமை, "பாசிழைச் செவிலியும்" (௩. 8: 9) என்பது முதலியவற்றால் விளங்கும்.

51. தம்மனை - தாய். 52. ஆடிய - விளையாடிய. [166-7.

54. மந்திரத்தோழி - அருமறைகாத்தற்குரிய பாங்கி; ௩. 14:

55. தழை - தளிர்முதலியவற்றால் சமைத்த ஒருவகையுடை. கடி - கலியாணம்.

56. படுகால் - படி. மருங்கே படுகால் அணிபெற்ற.

57. குட்டம் - ஆழம். 58. தாட்கொளெல்லை - நிலையான இடம்.

59. திளைத்து - இடைவிடாது பயின்று.

60. கூட்டமை நறும்புகை - நேர்கட்டி முதலியன சேர்தலமைந்த மணப்புகை; "தேக்க ணின்னகி றேனொடு கூட்டமைத், தாக்கப் பட்ட வளவில் கொழும்புகை" சீவக. 534.

61. கலிங்கம் - ஒருவகை உடை; "நலம்பெறு கலிங்கம்" (முருகு. 109.) திண்ணென - இறுக. அசைத்து - உடுத்து.

63. புலர்த்தி - உலர்த்தி. 64. அணிந்துகொள்ளாளாய்.

[1] முத்தப் பேரணி முழுக்கல மொழித்துச்
சிப்பப் பூணுஞ் செம்பொற் கடிப்பும்
ஏக வல்லியு மேற்பன வணிந்து
தாமரை யெதிர்போது வாங்கி மற்றுத்தன்
காமர் செவ்வியிற் காய்நலம் பெற்ற
நாம மோதிரந் தாண்முதற் செறித்துப்
புனைநறுஞ் சாந்தமுந் துணைமலர்ப் பிணையலும்
மனநிறை கலக்கிய கனல்புரை நோக்கத்துப்
பொன்வரை மார்ப னென்னோ யகலக்
கொள்ளி னன்றெனை வள்ளிதழ்க் கோதை
மன்னவன் வைத்த சின்மென் போதுடன்
நறுமலர் கமழ்சினை செறியச் சேர்த்தி
நெடுந்தோட் செல்ல றீரச் சிறந்தவன்

---

65. முத்தப்பேரணி முழுக்கலம் - ஒருவகைத்தலைக்கோலம்; இதனை மத்தக நித்திலமென்பர்; பரி. ௧௧ : 5.

66. சிப்பம் - சிற்பம். கடிப்பு - காதணி; ௨. ௯: 128. [அடிக்.

67. ஏகவல்லி - முத்துக்கோத்த ஒற்றைவடம்; ௧. 46 : 211,

68. எதிர் தாமரைப்போது - மேலேயெழுந்த தாமரைப்பூ; "தாமரைத் தாளி, னெதிர்மலர் மற்றவன் கண்ணொக்கும்" (நான்மணி. கடவுள்.); "எதிரிதழ் நீலம்" கலி. ௧௧ : 6.

68 - 9. தன் காமர் செவ்வியின் - தன்னுடைய விருப்பமருவிய நிறம்போல. காய் நலம் - ஒளிவீசுகின்ற அழகு.

70. நாமமோதிரம் - தன்பெயரெழுதிய மோதிரம்; "நாமமோதி ரந்தொட்டு" (சீவக. 1040.) தாள் முதல் - தாமரைப் பூவின் அடியில்.

71. துணைமலர்ப்பிணையல் - இரண்டிரண்டாக மலர்களைப் பிணைத் துக்கட்டிய கண்ணி; "துணைமலர்க் கண்ணி" சீவக. 1621.

70 - 71. = 120 - 21.

72. மனநிறை - தன்மனத்தின் நிறையை. உதயணனோக்கம் பதுமாபதியை வருத்தினமை, "அவட்குமென் னோக்க மத்தொழி னீர்த்து" (௩. 8 : 123 - 4) என்பதனாலும் உணரப்படும்.

74. கோதை - மாலையை.

75. சிலவாகிய மெல்லிய பூக்கள்.

கோதையைச் (74) சினையிற் சேர்த்தி (76.)

77. தோட்செல்லல் - தோள் மெலிவாகிய துன்பம்; "பெருந்தோ ணெகிழ்த்த செல்லல்" குறுந். ௨௧௦.

பி - ம். 1 முற்றப்.

குறுந்தா ரகவயிற் கூடுபு முயங்கிக்
குவிமுலைச் சாந்த நவிர்முதற் பொறித்தே
இழுமென் காவின தியல்புஞ் செல்வமும்
கொழுமலர்த் தடங்கணிற் குலாஅய் நோக்க
நண்ணியோர் முன்னர்க் கண்ணியது மறைத்து
வண்ண முகிழு மலருந் தளிரும்
நண்ணி யீன்ற நமக்கெனக் கரையா
அரும்பெறற் றோழியு மகன்ற செவ்வியுள்
விரும்புவன ளாகி விண்ணவர் மருள
வத்தவர் கோமான் வித்தகம் புனைந்த
இலைவினைக் கம்மத்துப் பலவினை கண்டே
தன்முத லாகலிற் சின்னகை முறுவலொடு
பொற்பூண் முலைமிசை யப்புபு தடாஅக்
கண்ணி கொண்டுதன் சென்னி சேர்த்தி
ஒருங்குகலந் தனள்போற் றிருந்தொளி திகழ்ந்து

---

77 - 8. உதயணனது மாலையைத் தான் தழுவி.

79. நவிர்முதற் பொறித்து-தன்கூந்தலாற் பொறியொற்றி; நவிர்-கூந்தல்; "ஒண்பூஞ் சாந்தி னுண்பொறி யொற்றிப் போயினள்" (107-8); "குறுநெறிக் கூந்தன் மண்பொறி யுணர்த்தி" சிலப். கஙு: 84.

82. நண்ணியோர் - பாங்கிமார்.

84. 'நமக்கு' என்றது, பாங்கிமாரையும் உளப்படுத்தி. கரையா - சொல்லி.

85. தோழி - யாப்பியாயினி. உம்மை மற்றைப் பாங்கியர்களின் அகற்சியையும் புலப்படுத்தி நின்றது.

88. வாழைக்குருத்திற் சித்திரித்த பலவகைச் சித்திரங்களைக் கண்டு. அச்சித்திரங்களின்னவென்பது, 11-ஆம் அடி முதலியவற்றால் விளங்கும்.

89. அது தன் காரணமாக இருத்தலால்; 19.

90. அப்புபு - அப்பி.

90 - 91. தடாஅக்கண்ணி - வளைந்த கண்ணி; "கோட்டங் கண்ணியும்" (புறநா. உஎ௬); கண்ணி வளைந்த வடிவமுடையதென்பது, "மாதர்ப்பிறைக் கண்ணி யானை" (தே. திருநா. ஐயாறு) என்பதனாலும் விளங்கும்.

92. ஒளி - பாவனைக் கலவியால் வந்த நிறம்; "தேசுமொளியுந் திகழ நோக்கி" பரி. கஉ, பரிமேல்.

பசப்புமீ தடர்ந்து மிகப்பொலிந் திலங்கத்
(யாப்பியாயினி ஐயுற்று வினுதல்)
தன்னமர் தோழியும் பின்னமர்ந் தெய்தி
நீயார் நங்கை நின்னே போலுமெம்
சேயான் றங்கை செல்வப் பாவை
மாயோ டன்னை மலர்த்தகைக் காவினுள்
[1] இன்னினிக் கெடுத்தே னன்னவள் கூறிய
துன்னருந் தோட்டத்திற் றுளங்குவன ளாகி
வேறுபட் டனளென விம்முவன ளிறைஞ்சிக்
கூறுது நாணிய குறிப்புநனி நோக்கி
நின்கட் கிடந்த நீரணி யேஎர்
என்கண் கவற்றிற் றென்றலோ டியலித்
(உருமண்ணுவா மற்றைத் தோழர்க்குக் கூறல்)
தன்னகர் புக்க பின்னர்த் தோழரொடு
மன்ன குமரனும் வந்தவட் குறுகத்
தண்பூங் கண்ணி கொண்டதன் றுண்முதல்
ஒண்பூஞ் சாந்தி னுண்பொறி யொற்றிப்
போயினள் புரவலன் பூந்தார் [2] மார்பிற்

---

93. பசப்பை வென்று. 94. அமர்ந்து - விரும்பி.

95. நங்கை: விளி. போலும் - போல்வாள்.

95 - 6. எம் சேயான் - எம்முடைய அரசனாகிய தருசகன்.

97. மாயோள் - மாமைநிறமுடையவள்.

96 - 8. பதுமாபதியைக் காணுமற் போயினேம்.

98. இன்னினி - இப்பொழுது. அன்னவள் : எழுவாய்.

99. துளங்குவனளாகி - அசைந்து.

100. என்று அத்தோழி சொல்ல.

101. நாணுதல், பதுமாபதியின் தொழில். நோக்கல், தோழியின்தொழில். 'நாண நாட்டம்' என்ற அகத்துறை இங்கே நினைவிற்கு வருகிறது.

102. நீரணி ஏர் - நீர்விளையாட்டிற்குரிய அலங்கார அழகு.

103. கவற்றிற்று - கவலைப்படச் செய்தது; சிலப். கக : 52. இயலி - பதுமாபதி நடந்துசென்று. 104. நகர் - இடம்.

105. மன்ன குமரன் - உதயணன். அவண் - அவ்விடத்தே.

107. பொறி ஒற்றி - இலச்சினையையமைத்து.

பி - ம். [1] இன்னெனிக். [2] மார்பற்.

காகிய பால ளிவளென் றறிந்தே
கூறிய கிளவிக் கொத்த தின்றென
உறுபுகழ் நண்பி னுருமண் ணுவாவவர்க்
கறியக் கூற வங்கை மலர்த்தா
வியந்த மனத்த ராகி நிகழ்ந்ததற்
கியாப்புறு கரும மாராய்ந் திருந்துழி

(பதுமாபதிவைத்த பிணையல் முதலியவற்றை வயந்தகன் எடுத்து வந்து கொடுத்தல்)

நீப்பருங் காத னிறைந்துட னுடல்
பண்புடைத் தென்றத் தண்டழை யணிந்த
காவி னத்த மேவின னாகித்
தேர்வனன் றிரிவுழி வார்தளிர் பொதுளிய
அருகுசிறை மருங்கி னொருமகள் வைத்த
புதுமலர்ப் பிணையலும் புனைநறுஞ் சாந்தமும்
கதிர்மணி யாழியுங் கண்டன னாகி
வலிகெழு மொய்ம்பின் வயந்தக குமரன்
ஒலிகெழு தானை யுதயணற் குய்ப்ப

(உதயணன் அவற்றை அணிந்துகொள்ளுதல்)

அரும்பெறற் சூழ்ச்சி யவனையும் [1] பின்னிணைப்
பெருந்திற லவரையும் பெற்றோன் போல
அன்புபுரி பாவை யாடிய பொய்கையுள்
நம்புபுரி மன்னனு நயந்தன னாடி
உடையு மடிசிலு முருமண் ணுவாவிற்குக்

---

109. பாலள் - ஊழை யுடையவள்.

111. அவர்க்கு - மற்ற நண்பர்களுக்கு.

114. யாப்புறுகருமம் - இருவரையும் சேர்த்து வைத்தற்குரிய தொழிலை.

117. அத்தம் - வழி. 119. ஒருமகள் - பதுமாபதி.

121. "காதலான் பெயர்சு மந்த கதிர்மணி யாழி" சீவக. 318.

120 - 21. = 70 - 71. 124. சூழ்ச்சியவன் - யூகி.

124 - 5. பின்னிணைப் பெருந்திறலவர் - தம்பியராகிய பிங்கல கடகர் ; ௩. 24 : 51.

127. நம்புபுரி - விரும்புதலைச்செய்யும் ; தொல். உரி. சூ. 31.

பி - ம். 1 பின்னணைப்.

கடனு வைத்தலிற் கைபுனை ந் தியற்றி
அகன்மடி யவன்று னமர்ந்து கொடுப்ப
வாங்கின னுடுத்துப் பூந்தண் சாந்தம்
எழுவுறழ் தோளு மகலமு மெழுதிப்
புனையிருங் குஞ்சித் தோட்டுக் கிடையே
துணைமலர்ப் பிணைய லூன்றச் [1] சூடிச்
சுடர்மணி யாழி படைபயின்று பலித்த
செறிவிர லங்கையின் மறைவுகொள வைத்துக்
கழுநீர் நறும்போ துளர்த்துபு பிடித்து
மறங்கெழு வேந்தனு மம்மர் தீரப்
போந்த பொழுதி னேந்துநிலை மாடத்துப்

(பதுமாபதி உதயணனைக்கண்டு தன்னிடம் செல்லல்)

பக்க நின்ற பொற்பூங் கோதையும்
கண்ணுற நோக்கிச் சின்னகை முகத்தினள்
கண்ணிற் கூட்டமு மன்றி நம்முட்
கண்ணிய மாயினங் கவல லென்றுதன்
நெஞ்சி னகத்தே யஞ்சில மிழற்றிக்
குன்றுக் கோயில் சென்றவள் சேர்ந்தபிற்

(உதயணன் செயல்)

றனக்கவ ளுரிமை பூண்டமை தமர்களைச்
சினப்போர் மதலை செவ்வன் றேற்றிப்
பள்ளி கொண்ட நள்ளிருள் யாமத்துப்
போரடு தறுகண் பொருந்தலும் பொருக்கென

---

128 - 9. உடைமுதலியவற்றைக் கொடுக்குந்தொழிலை மிக்க உண்மையுள்ளவர்களிடம் ஒப்பித்தல் அரசர்க்கு இயல்பு ; "பூந்துகின் மாலை சாந்தம் புனைகலம் பஞ்ச வாசம், ஆய்ந்தவர் இயற்றப் பட்ட வடி சினீ ரின்ன வெல்லாம், மாந்தரின் மடங்க லாற்றற் பதுமுகன் காக்க வென்றுங், கேந்துபூண் மார்ப னேவ வின்னண மியற்றி னானே" (சீவக. 1896.) 135. ஆழி - மோதிரத்தை. பலித்த - பலத்தைப்பெற்ற.
137. உளர்த்துபு - வலிய அலர்த்தி.
142. கண்ணிற் கூட்டம் - உள்ளப்புணர்ச்சி. [மாயினேம்.
143. கண்ணியமாயினம் - ஒருவர் கண்ணியை ஒருவர் உடையே
146. அவள் - பதுமாபதி. 147. மதலை - உதயணன்.

பி - ம். [1] சூட்குச்.

(உதயணன் கனக் காண்டல்)

நீருடை வரைப்பி னெடுமொழி நிறீஇய
பிரியாப் பெருக்கத்துப் பிரச்சோ தனன்மகள்
அரியார் தடங்க ணதிநா கரிகி
மணியிருங் கூந்தன் மாசுகண் புதைப்பப்
பிணியொடு பின்னி யணிபெறத் தாழ்ந்து
புல்லெனக் கிடந்த புறத்தள் [1] பொள்ளென
நனவிற் போலக் காதலன் முகத்தே
கனவிற் றோன்றக் காளையும் விரும்பி
மாசில் கற்பின் வாசவ தத்தாய்
வன்க ணாளனேன் புன்கண் டீர
வந்தனை யோவென வாய்திறந் தரற்றப்
பைந்தளிர்க் கோதை பையென மிழற்றி
ஏதில னன்னாட் டெற்றுறந் [2] திறந்தனை
காதலர் போலுங் கட்டுரை யொழிகெனக்
[3] குறுகா ளகறொறு மறுகுபு மயங்கி
நிற்பெயர்ப் பாள னிப்பதி யுள்ளெனக்
கற்பயில் பழுவங் கடந்தியான் வந்தனென்
வெகுள னீயெனத் தவளையங் கிண்கிணிச்
சேவடி சேர்ந்து செறியப் பற்றி
[4] வென்றடு குருசில் வீழ்ந்தன னிரப்ப
மதுநாறு தெரியன் மகதவன் றங்கை
பதுமா பதிவயிற் பசைந்தவள் வைத்த

---

150. நெடுமொழி - புகழ். 152. அதிநாகரிகி - வாசவதத்தை.
153. மணியிருங் கூந்தல் : க. 37 : 216, அடிக். [முதுகு.
154. பிணி - கட்டு. 155. புல்லென - பொலி விழந்து. புறம்-
159. புன்கண் - துன்பம். 161. பையென - மெல்ல.
162. ஏதிலன் நன்னாட்டு - அயலான் நாட்டில்.
164. உதயணன் மயங்கி.
165. நிற்பெயர்ப்பாளன் - உன்னை மீட்டுத்தரும் முனிவன்.
166. பழுவம் - காடு. 167. தவளையங் கிண்கிணி : க. 40 : 18,
171. பசைந்து - அன்புவைத்து. [53 : 166, அடிக்.

பி - ம். 1 பொழிலென. 2 திறந்தும். 3 வைகுறு நாடொறு. 4 என்ற குருசில்.

கோதையுஞ் சாந்துங் கொண்டணிந் தனையென
மாதர்த் தேவி மறுத்து நீங்கத்
தண்மலர்ப் படலைத் தருசகன் றங்கை
பன்மலர்க்கோதைப் பதுமா பதியெனும்
பேருடை மாத ருளண்மற் றென்பது
நேரிழை யரிவை நின்வாய்க் கேட்டனென்
இன்னவும் பிறவுங் கூறி மற்றென்
நன்னர் நெஞ்ச [1] நாடுவை நீயெனப்
பின்னரு மிக்குப் பெருமக னிரப்ப
மடங்கெழு மாதர் மறைந்தன ணீங்கக்
கடுங்கதிர்க் கனலி கால்சீத் தெழுதர
விடிந்தது மாதோ வியலிருள் விரைந்தென்.

கூ—கண்ணி தடமொழியது முற்றிற்று.

---

172. = 131 - 4. 173. தேவி - வாசவதத்தை.
174. மலர்ப்படலை - மலரும் இலையும் விரவித்தொடுத்த மாலை.
179. நன்னர் - நன்மை. நாடுவை - ஆராய்வாய்.
182. கனலி - சூரியன். கால்சீத்து - இருளை ஒழித்து; "கனை சுடர் கால்சீயாமுன்" சிலப். கூ : இறுதிவெண்பா.

பி - ம். 1 நவையந.

---

## க0—புணர்வு வலித்தது.

(உதயணன் செயல்)

விடிந்திரு ணீங்கலும் வடிந்த மான்றேர்
உதையண குமரன் புதையிருட் கண்ட
கனவின் விழுப்ப மனமொன் றாகிய

---

க0—புணர்வு வலித்தது.

[பதுமாபதியை அடைதற்குரிய வழியை ஆராய்ந்து நிச்சயித்தது இதனல் அறியலாகும்.]

1. வடிந்தமான் - வயமாக்கப்பட்ட குதிரை.
2. இருளிற் கண்ட. 3. விழுப்பம் - சிறப்பை.

தோழர்க் குரைப்ப வாழ்கென வாழ்த்தி

**(தோழர் கூறுதல்)**

முற்றிழை யரிவை செற்றங் கொண்டனள்
மற்றிவள் வைத்த மாலையுஞ் சாந்தமும்
அணிந்ததை பொல்லா தருளினை யினியிவட்
கணிந்த காமங் கைவிடல் பொருளென
உயிர்த்துணைத் தோழ ருரைப்பவும் விடாஅன்

**(உதயணன் செயல்)**

செயிர்த்தொழி லியானைச் செம்ம றெளியான்
ஏற்ற பொழுதே யின்பத் தேவியொடு
வேற்றோன் போல விழைவினை யகற்றித்
தற்கா முற்ற தன்னமர் காதற்
பொற்பூண் மாதரைப் பொருந்த வலிப்ப

**(மந்திரிகள் உடன்படல்)**

வாமான் றானை வத்தவ னிவனெனக்
[1] கோமாற் குணர்த்திக் கூட்டிய வந்தேம்
ஒருவயி னோக்கி யிருவரு மியைதலின்

---

3 - 4. மனமொன்றாகிய தோழர் : உ. 17 : 99 ; "அறுபதி னாயிர ரெனினு மாண்டகைக்,குறுதியி லொன்றிவர்க் குணர்வென் றுன்னலாம், பெறலருஞ் சூழ்ச்சியர்" (கம்ப. மந்திர. 11) என்பதை ஒப்பிடுக.

5. அரிவை - வாசவதத்தை. செற்றம் - தணியாக் கோபத்தை.

7. அணிந்ததை - நீ அணிந்துகொண்டது. பொல்லாது - தீது. அருளினை - அருள் செய்தாயாய்.

6 - 7. மாலையும் சாந்துமணிந்தமை : ந. 9 : 131 - 4.

8. பொருள் - செய்யத் தக்க காரியம்.

9. விடாஅன் - கொண்ட கருத்தை நீக்கானாகி.

10. தெளியான் - தெளிவில்லானாகி.

11. ஏற்றபொழுதே - விழித்தெழுந்த பொழுதில். தேவி - வாசவதத்தை.

12. வேற்றோன்போல - அயலோனைப்போல. விழைவு - விருப்பம்.

13 - 4. தன்னை விரும்பியவளும் தன்னால் விரும்பப்பட்டவளுமாகிய பதுமாபதியை அடைதற்கு உதயணன் நிச்சயிப்ப.

16. கோமாற்கு - தருசகனுக்கு. கூட்டிய - நட்பினராக்குதற்கு.

17. இருவரும் - உதயணனும் பதுமாபதியும்.

பி - ம். 1 கோமாற்கோக்கிக்.

ஏயர் பெருங்குடிக் காகுபெய ருண்டென
ஊழ்வினை வலிப்போ டுவந்தன ராகிச்

(உதயணன் குறை இரத்தல்)

சூழ்வினை யாளர்க்குத் தோன்றல் சொல்லும்
[1] ஆருயி ரன்னவென் னற்புவார் கொளீஇக்
காரிகை மத்தினென் கடுவலி கடையும்
வார்வளைத் தோளி வந்தனள் புகுதரு
மாடம் புக்கிருந் தோடுகய லன்ன
பெருங்கண் கோட்டி விரும்புவன ணோக்கி
நாணொடு நிற்கு நனிநா கரிகம்
காணலெ னாயிற் கலங்குமென் னுயிரென
உரப்போர் வென்றி யுதயண குமரன்
இரப்போன் போல வினியோர்க் குறைகொளத்

(தோழர் கருதுதலும் சொல்லுதலும்)

குன்றுபல வோங்கிய குளிர்நீர் வரைப்பில்
நன்றுணர் மாந்தர் நாளைக் காலை
இரவல ருருவொடு புரவலற் போக்கி
மாற்றோ ருட்கும் வேற்றுநாட் டகவயிற்

---

18. ஆகு பெயர் - ஆகும்பொருள் ; ஆக்கம் ; பெயர் - பொருள் ; "பெற்ற பெரும்பெயர் பலர்கை யிரீஇய" பதிற். ௬0.
19. ஆகி - ஆக.
20. தோன்றல் சொல்லும் - உதயணன் சொல்லுவான்.
21. அன்பாகிய வாரைச்சுற்றி.
22. காரிகை மத்தின் - அழகாகிய மத்தினால்.
21 - 2. "நலத்தைமத் தாக நாட்டி நல்வலி யிளமை வாராக், குலப்பிறப் பென்னுங் கையாற் கோலப்பா சங்கொ ளுத்திக், கலக்கியின் காமம் பொங்கக் கடைந்திடு கின்ற காளை" (சீவக. 711) என்பதன் கருத்து இவ்வடிகளில் ஒருவகையாக அமைந்திருத்தல் காண்க.
24. மாடம் புக்கு - மாடத்தில் யான் புகுந்து.
25. பெருங்கண்கோட்டி - பெரியகண்ணால் வளைத்துப்பார்த்து ; "மலர்த்தடங்கண் கோட்டி" சீவக. 470.
29. குறைகொள - குறையிரப்ப. 28 - 9. = கலி. ௬௭ : 1 - 2.
31. மாந்தர் : எழுவாய். 32. புரவலன் - உதயணனை.
33. உட்கும் - அஞ்சும்.

பி - ம். 1 ஆருயிரன்ன.

றுமு முன்ன ராகி மற்றவற்
கேம நன்னெறி யீத லாற்றூர்
காமங் கன்றிய காவல் வேந்தனைத்
தம்மிற் றீர்த்து வெம்முரண் வென்றி
மகதவன் றங்கை மணிப்பூண் வனமுலை
நுகர விட்டனர் நுண்ணறி விலரெனின்
ஏத மதனு ணிகழ்பவை யிவையென
நீதியிற் காட்ட நெடுந்தகை [1] யண்ணல்
வேண்டா மற்றிது மாண்டகைத் தன்றென
மற்றவள் புகுதரு மாடம் புகினே
குற்றம் படுவ கூறக் கேண்மதி
காவ லாளர் கடுகுபு வந்தகத்
தாராய்ந் தெதிர்ப்ப ரருநவை யுறுது
போரார் குருசில் போதர வுண்டெனின்
உருவ மாதர் பெருநலம் பெறுதி
நன்று வெய்தும் வாயி லவருணே
என்றே யாயினு [2] மிரவல னென்னார்
வேண்டா வதுவென விதியிற் காட்டி
மாண்ட தோழர் மன்னவன் றன்னை
மறுத்த வாயிலொடு [3] வலிப்பனர் கூற
நிறுக்க லாற்று நெஞ்சின னாகி
வத்தவர் பெருமக னுத்தர நாடி

---

35. இன்பத்தைத்தரும் நல்ல வழியைக் கூறுராகி.
36. கன்றிய - ததும்பிய.
37. தீர்த்து - நீங்கச்செய்து. மாந்தர் (31), இலரெனின் (39.)
40. ஏதம் - துன்பத்தைத்தருங் குற்றம். நிகழ்பவை-உண்டாவன.
41. அண்ணல் - உதயணன்.
43. புகின் - நீ புகுந்தால். 45. கடுகுபு வந்து-விரைந்துவந்து.
46. அருநவை - அரியதண்டம்; "பெரும்பெயர் மன்னனிற் பெருநவைப் பட்டீர்" சிலப். கசு : 171.
47. குருசில் : முன்னிலை. 48-9. பெறுதி எய்தும்; பெறுதி - பெறுதல்.
55. உத்தரம் - விடையை.

பி - ம். 1 யண்ணலை. 2 மிகவல. 3 வலிப்பினர்.

இன்னுயி ராயினு மீவ னவனென
மன்னவன் மனத்தகை யெல்லா மதித்து
நன்மூ தாளன் பன்னினன் மொழிய

(உதயணன் கூறல்)

[1] வாரி மருங்கற வற்றினு மகவயின்
நீர்வளஞ் சுருங்கா நெற்றித் தாரைக்
கூவலும் பொய்கையுங் கோயில் வட்டத்
தெவ்வழி [2] வேண்டினு மவ்வழிக் காட்டும்
ஞான வல்லியத் தரும்பொரு ளுணர்த்தனென்
ஏனை நூற்கு மேதில னல்லேன்
[3] கரந்துழி யறிய வருங்கல வெறுக்கை
வைத்துழிக் காட்டும் வாய்மொழி விச்சை
கற்றுக்கை போகிக் காணவும் பட்டது
கொற்றவ னிவற்றுக் குறையொன் றுடையது
காணவு மமையுங் காணா னாயினும்
காவ லாளனைக் கட்பட லுறுவேன்
காட்டுதல் குறையெனக் கேட்டவன் விரும்பி
நல்லவை நாப்பட் செல்வனைச் சேர்ந்தவன்
வல்லவை யெல்லாம் வலித்திற் கூறக்

(உதயணன் தருசகனைக் காணல்)

கற்றோர்க் காண்ட லாகுங் காவலிற்
பெற்ற பயனென வெற்ற வேந்தனும்

---

12. பன்னல் - ஒவ்வொன்றாகக் கூறல்.
13. உரிய இடங்களில் நீர் இல்லையாயினும்.
14. நெற்றித் தாரை - உச்சியிலே நீர்த்தாரையையுடைய.
18. மற்றை நூலுக்கும் யான் அயலேனல்லேன்.
19. கரந்துழி - மறைந்த இடம்.
21. காணவும் பட்டது-என்றால் முன்பு கண்டு எடுக்கவும் பட்டது.
22. இவற்று - இந்த இரண்டு வித்தைகளுள்.
25. குறை என - எனது காரியம் என்று உதயணன் சொல்ல.
26. செல்வனை - தருசகனை. 29. வெற்றம் - வெற்றி.
28 - 9. அரசாட்சியால் அடைந்த பயன் கற்றோரைக் காண்டலாகுமென்று.

பி - ம். 1 மாரி. 2 வேண்டு. 3 கருந்துழி.

காண்பது விரும்பி மாண்பொடு புணர்ந்த
பேரத் தாணி பிரித்த பின்றை
நேரத் தாணி நிறைமையிற் காட்டலிற்
பகையறு குருசிலைப் பண்டுபயின் றன்ன
உவகை யுள்ளமொ டொழுக்க மறுது
கண்ணினுங் கையினு மன்றி நாவின்
இன்னுழி யிருக்கென விருந்த பின்றைக்
கற்றவை யெல்லாந் தெற்றென விளஅய்த
தானே கேட்டு வியந்துதலை துளக்கி
ஆனைக் கட்டுரை கழிந்தபின் மேனாட்
டள்ளா வென்றித் தம்மிறை வைத்த
விள்ளா விழுப்பொரு ளுள்வழி யுணரா
மன்னவன் மற்றிது நின்னி னெய்துவேன்
கற்றறி விச்சையிற் காட்டுதல் குறையென

(தருசகனுக்கு உதயணன் நிதியைக்காட்டல்)

உற்றன னுரைப்ப வுள்வழித் தெரிந்து
தான்வைத் தனன்போற் காட்டலிற் றருசகன்
ஆனைக் காதலொ டாருயி ரன்ன
தோழ னாகித் தோன்று தோற்றும்
ஞான நவின்ற நல்லோ னிவனென
[1] எனைத்திவன் வேண்டினு மீவ னென்றுதன்

---

32. நேரத்தாணி - சிறிய ஓலக்க மண்டபம்.

33 - 4. பண்டு பயின்றன்ன உவகையுள்ளமொடு - முன்பு பழகினாற் போன்ற மகிழ்ச்சியையுடைய உள்ளத்தோடு; "செல்வுழிக் கண்ணொருநாட் காணினுஞ் சான்றவர், தொல்வழிக் கேண்மையிற் றோன்றப் புரிந்தியாப்பர்" (நாலடி. 154.) 35. நாவின் - நாவினால்.

36. இன்னுழி - இன்ன இடத்தில். என-என்று அரசன்சொல்ல.

38. துளக்கி - அசைத்து.

39. மேனாள் - பண்டைக்காலத்தில்.

40. தம் இறை - தந்தை.

43. நீ காட்டவேண்டுவது என்வேண்டுகோளென்று.

44. உள்ள இடத்தை உதயணன் அறிந்து.

48. ஞானம் - அறிவுநூல். 49. எனைத்து - எந்தப்பொருளை.

பி - ம். [1] எனைத்திவர்.

கணக்குவினை யாளரொடு கரண மொற்றி
அகத்தே யுறைகென வமைத்த பின்னர்

(உதயணன் நீநற்றுள்ள இடத்தைக் காட்டல்)

எப்பான் மருங்கினு மப்பா லுடை
அகத்துநீ ருடைய வதனது மாட்சி
மிகுத்தநூல் வகையின் மேவரக் காட்டக்
கன்னியங் கடிநகர் காணவா வுடைய
இளமரக் காவினுள் வளமைத் தாய
நீர்நல னுணர்ந்து சீர்நலக் குருசிற்
கெழுகோ லெல்லையு ளெழுமிது நீர்மற்
றன்றியு மதனது நன்றி நாடின்
நாவிற்கு மினிதாய்த் தீதற வெறியும்
தண்மையு நுண்மையுந் தமக்கிணை யாவன
தெண்ணீ ரெவ்வழித் தேரினு மில்லை
புகழ்வரை மார்பிற் பூந்தா ரண்ணல்
அகழும் பொழுதி னிகழ்வ கேண்மதி
இருமுழத் தெல்லையுள் வரிமுகம் பொறித்த
பொன்னிறத் தேரை போதரும் பின்னர்
மும்முழத் தெல்லையுட் டெண்ணிறங் குயின்றது
தோற்ற மினிதாய் நாற்ற மின்னுப்
பருமண லுண்டது பண்ணுநர் வீழ
உட்கா ழீன்ற வொருகோ லரையின்
எட்பூ நிறத்தொடு கட்கா முறுத்தும்
விளங்கறல் வெள்ளியின் வீசுறு மென்றதன்
அகம்புக் கனன் 1 போ லகன்ற ஞானத்தின்

50. ஒற்றி - ஒன்றுவித்து. 52. அப்பால் - அந்தப் பக்கம்.
55. கன்னியங்கடிநகர் - கன்னிமாடம்.
57. குருசிற்கு - தருசகனுக்கு. 60. தீதை அறும்படி நீக்கும்.
64. அகழ்தல் - தோண்டுதல். 65. வரி - புள்ளி.
70. காழ் - வயிரம். ஒன்றரைக் கோலளவில்.
71. எட்பூ - எள்ளின்பூ. கட்காமுறுத்தும் - கண்களை விரும்பச் செய்யும்.
72. அறல் - நீர்.

பி - ம். 1 போனவின்ற.

உண்ணெறிக் கருத்தி [1] னண்ணிய தாகிய
மண்ணின் சுவையு மின்னதென் றொழியா

(தருசகன்செயல்)

துரைப்பக் கேட்டே யோங்கிய பெரும்புகழ்த்
திருப்பே ருலகம் பெற்றோன் போல
அகழ்வினை யாளரை யவ்வயிற் றரீஇ
இகழ்வி லத்தொழி லிறைவ னேவப்

(உருமண்ணுவா முதலியோர்செயல்)

பெருமண் வேந்தனைப் பிழைப்பின் றோம்புதற்
குருமண் ணுவாவு முள்ளகத் தொடுங்க
வாய்மொழி யிசைச்சனும் வயந்தக குமரனும்
தேமொழி மாதர் தாய்முதற் கோயிலுட்
டரும நூலுந் தந்துரை கதையும்
பெருமுது கிளவியொடு பிறவும் பயிற்றி
நங்கை விழையு நாளணி கலங்கள்
கொங்கணி மலரிற் கூட்டுவன ருய்த்துச்
சென்றுவந் தாடல் செய்வது வலிப்பப்
பிறவுறு தொழிலொடு மறவோ ரெல்லாம்
ஆய்புக ழரசனை யற்றப் படாமற்
காவல்புரிந் தனராற் கடிமனைக் கரந்தென்.

கஉ—அமாத்தியர் ஒடுங்கியது முற்றிற்று.

---

77. திருப்பேருலகம் - சித்தபதவி; "வென்றவ ருலகம் பெற்ற வேந்துடை யின்ப மெல்லா, மின்றெனக் கெதிர்ந்த தென்றான்" (சீவக. 956) என்பது இவ்வடியுடன் ஒப்பிடற்பாலது.
78. அகழ் வினையாளரை - மண்ணைத் தோண்டுந்தொழிலையுடையாரை.
80. வேந்தனை - உதயணனை.
81. உள்ளகத்து - உதயணன் உள்ள இடத்தில். ஒடுங்க - மறைந்திருப்ப.
83. பதுமாபதியின் தாயினது அரண்மனையில்.
86. நங்கை - பதுமாபதி. 87. மலரின் - பூக்களுடன்.
89. பிறவுறுதொழில் - மற்றத்தொழில். மறவோர்-முன்பு கூறப்பட்ட நூறுவீரர்; ௩. 1 : 94.
90. அற்றப்படாமல் - சோர்வுபடாமல். 91. கரந்து - மறைந்து.

பி - ம். 1 நன்னிலத்தாதி.

## ௧௬— கோயில் ஒடுங்கியது.

ஈரந்த வுருவொடு காவல் புரிந்தவர்
ஒடுங்குதல் வலித்துடன் போகிய பின்றை
முனைவெந் துப்பின் மன்னனு முன்போல்
புனைவகை மாடம் புக்குமறைந் திருத்தலிற்

**(பதுமாபதியின் செயல்)**

றண்டடு திண்டோட் குருசிலைத் தன்னொடு
கொண்டுட் போகுங் குறிப்பின ளாகித்
தீது தீண்டாத் தெரிவொடு புகுதரும்
வாயி லுடி வைய நீக்கிப்
பல்வகைத் தான நல்குக மின்றென
எல்லிற் போதர வியையு மாதலிற்
சிலத மாக்களொடு சிவிகை வருகென

**(பதுமாபதி மன்மதன் கோயிலை யடைந்து உதயணனைக் காண்டல்)**

அலர்தகை யைம்பா லணியிழை யேறிப்

---

௧௬—கோயிலொடுங்கியது.

[காமனது கோட்டத்தைச் சார்ந்துள்ள மாடத்திலிருந்த உதயணன், பிறரறியாமற் சிவிகையிற் புகுந்து பதுமாபதியுடன் சென்று அவளுடைய மாளிகையில் மறைந்து ஒடுங்கியிருந்தமை இதனால் அறியலாகும்.]

1. அவர் - உருமண்ணுவா முதலியோர்.
2. வலித்து - துணிந்து.
3. முனைவெந்துப்பின் - போரில் வெவ்விய வலியையுடைய. மன்னன் - உதயணன்.
4. புனைவகை மாடம் புக்கு - அலங்கரித்த கட்டுக்களையுடைய மன்மதன் கோயின்மாடத்திற் புகுந்து; ௩. 10 : 24, 43, 13 : 44.
5. தண்டு அடு திண்டோள் - கதாயுதத்தை ஒத்த திண்ணிய தோள்களையுடைய. 7. தீது - அம்பலும் அலரும்.
8. வாயில் - வழி.
9. பலவகைப்பட்ட தானங்களை இன்று கொடுப்பேமென்று கூறி.
10. எல் - பகல்.
11. சிலதமாக்கள் - சிவிகை சுமப்பவர்; 58; ௩. 22 : 108.
12. பதுமாபதி சிவிகையிலேறி.

போந்தன ளாகிப் பூந்தண் கானத்துள்
எழுதுவினை மாடத்து முழுமுத லிழிந்து
தாமகத் திருக்கு மாமணிப் பேரறை
வாயில் சேர்வுற வையம் வைக்கென
அமைத்தன ளாகி யவ்வயி னொடுங்கிய
சினப்போ ரண்ணலொடு [1] வளப்பா டெய்தி
அப்பகல் கழிந்த பின்றை மெய்ப்பட

(பதுமாபதி தானமளித்தல்)

மாண்டரு கிளவி பூண்ட நோன்பிற்
கன்றுகடை யாதலிற் சென்றோர் யார்க்கும்
மணியு முத்தும் பவழமு மாசையும்
அணியு மாடையு மாசி லுண்டியும்
பூவு நானமும் பூசுஞ் சாந்தமும்
யாவை யாவை யவையவை மற்றவர்
வேண்டே மெனினு [2] மீண்ட வீசலின்
இந்நில வரைப்பிற் கன்னியர்க் கொத்த
ஆசி லாசிடை மாசில மாண்பின்
மந்திர நாவி னந்த ணாளரும்
அல்லோர் பிறருஞ் சொல்லுவனர் போயபிற்

14. எழுதுவினை மாடம் ; பரி. ௧௮ : 28.

15. தாம் இருவரும். மாமணிப் பேரறை : 44.

16. வைக்க என ; "வாயிலுள் வைத்த வண்ணச் சிவிகை" (42) என்பர் பின்.

18. அண்ணல் - உதயணன். வளப்பாடு - மிக்க மகிழ்வுடன் அளவளாவுகை ; "ஒண்சுடர் வளப்பாடு கொளலும்" பரி. ௨ : 64.

20. கிளவி - பதுமாபதி.

22. மாசை - பொன்.

26. ஈண்ட வீசலின் - மிகக்கொடுத்தலால் ; விரைவாகக் கொடுத்தலாலெனலுமாம் ; "ஈண்ட வளர்ந்தேம்" சீவக. 1794.

28. ஆசிடை - ஆசீர்வாதம்.

27 - 8. கன்னியர்க்கொத்த ஆசீர்வாதமாவது சிறந்த கணவனை யடைகவென்பது.

29. மந்திரங்களை ஓதுமுறையினையுடைய அந்தணர்களும், ஆசிடையைச் (28) சொல்லுவனராய்ப் போயபின் (30.)

பி - ம். [1] வளப்பாடெய்தி. [2] மீண்டுவ.

கோலக் காமன் கோட்டத் தகவயின்
மாலை யாமத்து மணிவிளக் கிடீஇ
மோகத் தான முற்றிழை கழிந்தபின்

(பதுமாபதி உதயணனுடன் செல்லுதல்)

மரபறி மகளிர் பற்றினர் பாடக்
கரும மமைந்தபிற் கடிமனை புகீஇயர்
திருமதி முகத்தியைச் சேர்ந்து கைவிடாஅ
அருமதி நாட்டத் தந்தணி போந்து
பட்டினிப் பாவை கட்டழ லெய்தும்
நீங்குமி னீரெனத் தான்புற நீக்கி
பஞ்சி யுண்ட வஞ்செஞ் சீறடி
ஒதுங்க விடினும் விதும்பும் வேண்டா
வாயிலுள் வைத்த வண்ணச் சிவிகை
ஏற னன்றெனக் கூறி வைத்தலின்
மணங்கமழ் மார்பன் மாடப் பேரறை
இருந்தன னாங்குப் பொருந்துபு பொருக்கெனக்
கட்டளைச் சிவிகையுட் பட்டணைப் பொலிந்த
பூம்பட மறையப் புக்கன னொடுங்க
வண்டொடு கூம்பிய மரைமலர் போல
ஒண்டார் மார்பனை யுட்பெற் றுவகையின்

---

31. கோட்டம் - கோயில்.

32. மாலையாமம் - முதல்யாமம். மணிவிளக்கு இடீஇ-இரத்தின தீபத்தை யிட்டு.

33. தானங்களைச் செய்தபின். 34. மரபறிமகளிர் : ௩. 6 : 120.

35. புகீஇயர் - புகுத்துதற்கு. 37. அந்தணி - யாப்பியாயினி.

38. கட்டழல் - மிக்கவெப்பம் ; 82.

39. ஆண்உள்ளவர்களைப் புறத்தே நீக்கி. 40. பஞ்சி - செம்பஞ்சி.

41. விதும்பும் - நடுங்கும். 42. 11 - 6.

42 - 3. சிவிகையை வைத்தலின்.

44. மார்பன் - உதயணன். மாடப்பேரறை : 15.

46. பட்டணை - பட்டாலாகிய அணை.

47. பூம்படம் - பூத்தொழில்களமைந்த திரை.

44 - 7. மாடத்திலிருந்த உதயணன் விரைந்துவந்து அச்சிவிகையுட் புகுந்து ஒடுங்க. 49. உள் - சிவிகையினுள்ளே.

மணிவரைச் சாரன் மஞ்ஞை போல
அணிபெற வியலி யடிக்கல மார்ப்பத்
தொய்யில் வனமுலைத் தோழி மாரொடு
பையப் புக்குப் பல்வினைக் கம்மத்துச்
சுருக்குக் கஞ்சிகை விரித்தனர் மறைஇப்
பள்ளிப் பேரறைப் பாயலு ளல்லது
வள்ளிதழ்க் கோதையை வைக்கப் பெறீரென
யாப்புறக் கூறிக் காப்போர் பின்செல
வலிகெழு மொய்ம்பிற் சிலத மாக்கள்
[1] அதிர்ப்பி னுசும்ப மதிற்புறம் பணிந்த
காவும் வாவியுங் காமக் கோட்டமும்
பூவீழ் கொடியிற் பொலிவில வாக
வாழ்த்துப்பலர் கூறப் போற்றுப்பல ருரைப்ப
வழுவில் கொள்கை வான்றோய் முதுநகர்

---

50. மலைப்பக்கத்துமயிலைப்போல; "வழிவளர் மயில்" (சீவக. 2074) என்பதனுரையைப் பார்க்க. 51. ஆர்ப்ப இயலி.

50 - 51. "பீலி மஞ்ஞையி னியலி" (பெரும்பாண். 331), "நன்மா மயிலின் மென்மெல வியலி" மதுரை. 608.

54. சுருக்குக் கஞ்சிகை - வேண்டியபொழுது சுருக்கிக் கொள்ளுதற்குரிய திரை. விரித்தல் தோழியர் செயல். மறைஇ - மறைத்து.

55 - 6. பள்ளியறையிலுள்ள படுக்கைமீதன்றி வேறிடத்தில் இவளைவைத்தலைத் தவிர்கவென்று.

59. உசும்ப - அதட்ட. மதிற்புறம்பு அணிந்த - மதிலின் புறம்பை அலங்கரித்த.

61. பூவீழ்கொடியின் - பூக்கள் உதிர்ந்த கொடிகள் போல.

60 - 61. "தன்னே டிருந்த பொழுதிளஞ் சோலைசெய் தன்மை கண்டேற், கன்னே தனியிருந் தாற்செயு மாறு மறிவிக்கவோ, மின்னே வெனநின் றவிர்சடை யார்திரு வெங்கை வெற்பி, லென்னே வறிந் தருள் செய்வார் வராம விருந்ததுவே" (வெங்கைக்கோவை, 163) என்பதை இவ்வடிகளுடன் ஒப்பிடுக. 62. போற்று - துதி.

63. வழுவில்......நகர் - இராசகிரியம்; இதன்சிறப்பு, இந்தக் காண்டம் 3 - ஆம் பகுதியாலும் விளங்கும்.

பி - ம். 1 அதிர்ப்பின்றுசும்ப.

மணியுமிழ் விளக்கின் மறுகுபல போகிக்
கொடியணி கோயில் குறுகலும் படியணி
பெருங்கடை காவலர் பெருமான் றங்கை
கருங்கடை மழைக்கட் கனங்குழைப் பாவை
முடித்த நோன்பி னெடித்தவகை யறியார்
இருளின் குற்றங் காட்டி நங்கைதன்
உரிமையுள் படுநரைக் கழறுவன ராகி
முழுநிலைக் கதவ மகற்றிமுன் னின்று
தொழுத கையர் புகுதுகென் றேத்த
வாயில் புக்குக் கோயில் வரைப்பிற்
கன்னி மாடத்து முன்னறை வைத்தலிற்
பகலே யாயினும் பயிலா தோர்கள்
கவலை கொள்ளுங் கடிநிழற் கவினி
[1] மாடெழு மைந்தரு மூடு சென்றுடர்
அணியிற் கெழீஇ யமர ராடும்
பனிமலர்க் காவின் படிமைத் தாகி
இருளொடு புணர்ந்த மருள்வரு மாட்சித்
தன்னகர் குறுகித் துன்னிய மகளிரை

---

64. விளக்கின் மிகுதியையுடைய வீதிகள் பலவற்றைக்கடந்து; ௩. 3: 120. 65. படிகளையுடைய.

66. பெருங்கடை - அரண்மனைவாயில்.

68. நோன்பின் நெடித்த - நோன்பினாலே தாமதித்த.

70. உரிமையுள் படுநரை - அந்தப் புரத்துள்ள வேலைக்காரர்களை; கழறுவனராகி - இடித்துரைத்து. 71. அகற்றி - திறந்து.

72. புகுதுக என்று.

74. வைத்தலின் - சிவிகையை வைத்தமையால்.

75 - 6. பயிலாதோர்கள் பகலே யாயினும் கவலைகொள்ளுதற்குக் காரணமான நிழல்.

77. எழும் மைந்தரும் - தவழ்வது தவிர்ந்து எழுந்து நிற்கும் சிறுவரும்.

79. காவின் படிமைத்தாகி - கற்பகச் சோலையின் வடிவமுடைய [தாய்.

81. நகர் - மாளிகை.

பி - ம். 1 மாடமும.

அகல்க யாவிரு மழலு மெனக்கெனத்
திலக முகத்தி திருந்துபடந் திறந்து
கூன்மகள் வீச வானு வகத்தே
தக்க வெல்லை யிருத்தலின் மிக்க
காழகி னறும்புகை யூழ்சென் றுண்ட
மணிக்காற் கட்டிலுள் வல்லோர் படுத்த
அணிப்பூஞ் சேக்கை யறைமுத லாகப்
பக்கமுந் [1] தெருவும் புக்குமுறை பிழையா
தாராய்ந் தந்தணி யமைத்ததன் பின்றைப்
பேரிசை யண்ணலும் பெருநல மாதரும்
ஆரிருள் போர்வை யாக யாவரும்
அறிதற் கரிய மறையரும் புணர்ச்சியொடு
கரப்பறை யமைத்துக் கைபுனைந் தோர்க்கும்
உரைக்க லாகா வுறுபொறிக் கூட்டத்துப்
[2] புதவணி கதவிற் பொன்னிரை மாலை
மதலை மாடத்து மறைந்தொடுங் கினரென்.

கரு—கோயில் ஒடுங்கியது முற்றிற்று.

---

82. யாவிரும் அகல்க, எனக்கு அழலுமெனப் பதுமாபதிசொல்ல.
84. அயிராபதி சாமரை வீச.
85. இருத்தல், பதுமாபதியின் தொழில்.
88. சேக்கையறை - பள்ளியறை.
89. தெரு - அந்தப் புரத்துள்ள மகளிர்தெரு.
90. ஆராய்ந்தது, அயலார்கள் இன்மையை அறியும்பொருட்டு.
93. மறையரும் புணர்ச்சி - வேதத்திற் கூறிய அரிய காந்தருவ மணம்; மறை - இரகசியமுமாம்.
94. கரப்பறை - பிறரறியாதபடி ஒளித்திருத்தற்குரிய அறை.
95. பொறிக்கூட்டம் - எந்திரச்சேர்க்கை.
96. புதவு - வாயில்; "உயர்ந்தோங்கிய நிறைப்புதவு" மதுரை.
97. மதலை - கொடுங்கை. 

பி - ம். 1 திருவும் புக்குமுறை. 2 புதையணிக்கதவிற்.

## கச—நலனாராய்ச்சி.

(உதயணன் நிலை)

மதலை மாடத்து மடமொழி மாதரொ
டுதயண குமர னொடுங்கிய வுவகையன்
விண்ணுறை தேவரும் விழையும் போகத்துப்
பெண்ணுறை யுலகம் பெற்றோன் போலவும்
நோக்கருங் கதிரவ னீக்கம் பார்த்துப்
பைங்கதிர் விரிக்கும் பனிமதிக் கிழவன்
அங்கண் ஞாலத் தளவை யாகிய
பன்னாட் பக்கஞ் செல்லாது சின்னாள்
வெண்முக நிலாவொளி சுருங்க மெல்லென
உண்மகி ழுரோணியொ டொளித்தது போலவும்
[1] திகழ்மணி மார்ப னகநக ரொடுங்கப்
பொருள்புரி யமைச்சர் புறநகர் காப்புழி

---

கச — நலனாராய்ச்சி.

[பதுமாபதி, தனது தோழியைக் கொண்டு உதயணனுடைய இசையுணர்ச்சிமுதலியவற்றை ஆராய்ந்தமை இதனால் அறியலாகும்.]

1 - 2. உதயணன், பதுமாபதியுடன் ஒடுங்கியிருத்தலாலுண்டாகிய மகிழ்ச்சியை உடையனாகி.

4. பெண்ணுறையுலகம் : க.42 : 181, அடிக்.

3 - 4. விண்ணுறை......உலகம்-நாகருலகம்; இவ்வுலகம் போகத்திற் சிறந்ததென்பது சைனர் கொள்கை.

6. மதிக்கிழவன் - சந்திரனாகிய தலைவன்.

8. பன்னாட்பக்கம் - பல நட்சத்திரங்களினிடத்தே; என்றது, உரோகிணி ஒழிந்தவற்றை.

6 - 11. இவற்றிலுள்ள உவமை, "மண்ணகங் காவலின் வழுக்கி மன்னவன், பெண்ணருங் கலத்தொடு பிணைந்த பொருள், விண்ணக மிருள்கொள விளங்கு வெண்மதி, ஒண்ணிற வுரோணியோ டொளித்த தொத்ததே" (சீவக. 198) என்பதிலும் காணப்படுகின்றது.

12. அமைச்சர் - உருமண்ணுவா முதலியோர்.

பி - ம். 1 திகழொளிமார்பன்.

இருளறு நுண்மதித் தோழியை யெழுதெனக்

(தோழி எழுதித்தந்த அரண்மனைவடிவமுதலியவற்றைக்
கண்டு உதயணன் நினைத்தல்)

கோயில் வட்டமுங் கோணப் புரிசையும்
வாயின் மாடமும் வஞ்சப் பூமியும்
இலவந் திகையு மிளமரக் காவும்
கலவம் புகலுங் கான்கெழு சோலையும்
உரிமைப் பள்ளியு மருமைக் காப்பிற்
படைக்கலக் கொட்டிலும் புடைக்கொட் டாரமும்
நடைப்பெரு வாயிலு முடைக்குறும் புழையும்
அவைமண் டபமு மாடம் பலமும்
வகைமாண் டெய்வம் வழிபடு தானமும்
குதிரைப் பந்தியு மதிர்த லானு
யானைத் தானமுந் தானைச் சேக்கையும்
எயில தகற்றமு மயில்விளை யாடும்
சுதைவெண் குன்றமும் புதையிருட் டானமும்
உடையன வெல்லா முள்வழி யுணர்ந்து

---

13. தோழி - யாப்பியாயினி ; பதுமாபதியுமாம். எழுதென்றது, நகரத்தின் வடிவத்தை. என - என்று உதயணன் சொல்ல.

14. கோயில் வட்டம் - வட்டவடிவமான அரண்மனை. புரிசை - கோயிலைச் சூழ்ந்த மதில்.

15. வாயின் மாடம் - கோபுரம். வஞ்சப்பூமி - உள்ளூப் பொய் யான தரை ; “ கள்ளப் பூமி ” (க. 33 : 17) என்றார் முன்னும்.

16. இலவந்திகை - எந்திரவாவி ; க. 40 : 312, அடிக்.

17. கலவம் புகலும் — மயில்கள் விரும்புகின்ற ; கலவம் : ஆகு பெயர். கான் - மணம்.

18. உரிமைப்பள்ளி - அந்தப்புர மகளிர் இருக்குமிடம்.

19. படைக்கலக் கொட்டில் - ஆயுதசாலை. கொட்டாரம் — தானியக் களஞ்சியம்.

20. குறும்புழை - நுழைவாயில். 21. ஆடம்பலம் - நடனசாலை.

22. தேவாலயங்களும். 25. அகற்றம் - அகற்சி ; விசாலம்.

26. குன்றம் - கட்டுமலை. இருள் தானம் - இருட்டறை.

தெளிதல் செல்லாத் தெவ்வ னிவனெனின்
அளியியற் செங்கோ லரசுமுதல் வவ்வலும்
எளிதெனக் கென்னு மெண்ணின னாகிப்
பெண்பாற் சூழ்ச்சியிற் பிழைப்புப் பலவெனும்
நுண்பா னூல்வழி நன்கன நாடின்
ஏத மில்லை யிதுவெனத் தேறி
மாதர் மாட்டு மகிழ்ச்சியொடு தெளிதல்
நீதி யன்றென நெஞ்சத் தடக்கிச்
செருக்கய னெடுங்கண் செவ்வி பெற்றாங்
குரத்தகை யண்ண லுறைவது வலிப்பத்

(பதுமாபதி செவ்வி அரியளாதல்)

தவ்வை யாயினுந் தாயே யாயினும்
செவ்வி யறியார் சென்றுமெய் சாரிற்
காட்டக் காணாள் கதம்பா டேற்றி
வாட்கட் பாவை மருவற் கின்னாக்
காட்சிய ளாகிக் கருதுவ தெதுவெனின்
வீயா நண்பின் வேத மகளுழை
யாழும் பாட்டு மவைதுறை போகக்
கற்றல் வேண்டு மினியெனக் கற்பதற்
கன்புடை யருண்மொழி யடைந்தோ ருவப்ப
நன்பல பயிற்றிய நாவின ளாகி
அமிழ்தி னன்ன வறுசுவை யடிசிலும்
இவணே வருக வின்று முதலெனத்

---

28. இவனென்றது தருசகனை.
29. அரசு முதல் - அரசாட்சி முதலியவற்றை.
29 - 30. வெளவலும் எனக்கு எளிது.
36. செவ்வி - சமயம்.
39. மெய்சாரின் - இயல்பாகச் சார்ந்தால்.
40. காட்டக் காணாள் - அறிவிக்க அறியாளாய். கதம்பாடேற்றி - கோபங்கொண்டாள் போன்று தன்னைக் காட்டி.
41. மருவற்கு - பிறர் வருதலில்.
43. வேதமகள் - யாப்பியாயினி.
44. துறைபோக - முற்றுப்பெற.
45. இனி - இப்பொழுது.

தமர்வயி னேய் தன்மைய ளாகி
மழையயா வுயிர்க்கும் வான்றோய் சென்னி
இழையணி யெழுநிலை மாடத் துயரறை

(கட்டில்)

வாள்வரி வயமான் மூரி நிமிர்வின்
நிலைக்கா லமைந்த நிழறிகழ் திருமணி
யிகற்குரல் வளைஇய கழுத்திற் கவ்விய
பவழ விழிகைப் பத்திக் கட்டத்துப்
பட்டுநிணர் விசித்த கட்டமை கட்டிலுட்
பொழுதிற் கொத்த தொழில வாகி
எழுதுவினைப் பொலிந்த விழுதுறழ் மென்மைய
முறைமையி னடுத்த குறைவில் கோலமொடு
நிரப்ப மெய்திய நேர்பூம் பொங்கணைப்
பரப்பிற் கொத்த பாய்காற் பிணைஇ
அரக்குவினைக் கம்மத் தணிநிலைத் திரள்காழ்
ஒத்த வூசி குத்துமுறை கோத்த
பவழ மாலையும் பன்மணித் தாமமும்
திகழ்கதிர் முத்தின் றெரிநலக் கோவையும்
வாய்முத றோறுந் தாழ்முத லணிந்த
அந்தண் மாலையு மகடுதோ றணவரப்

---

51 - 2. மேகம் இளைப்பாறும் உச்சியையுடைய மாடத்தின் சூளிகையில்.

53 - 4. புலி மூரிநிமிர்ந்த காலத்துள்ள அதன் கால்களைப்போன்ற வடிவமைந்த கால்கள்; "புலிக்கா லமளி" (க. 47 : 178) என்றார் முன்னும். நிழல் - ஒளி.

56. இழிகை - கைச்சுரிகை. 57. பட்டாற் பின்னிக் கட்டிய.

59. இழுது உறழ் மென்மைய - வெண்ணெயையொத்த மென்மையையுடையவாய்; "இழுதார் மென்பள்ளி" சீவக. 1576.

60. முறைமையின் அடுத்த - அன்னத்தூவிமுதலிய ஐந்தும் மூன்றுக அடுத்த.

61. நிரப்பம் - நிரம்புதல்.

62. பிணைஇ - சேர்த்து. 63. காழ் - கொட்டை.

65. பல் மணித்தாமம் - பலவாகிய இரத்தின ஆரம்.

67. வாய் - இடம். 68. அணவர - சேர.

பைம்பொற் புளகம் பரந்துகதி ரிமைப்ப
ஐவே றுருவின் மெய்பெறப் புணர்ந்த
பொய்வகைப் பூவும் வையெயிற் றகல்வாய்
மகரத் தங்கண் வகைபெறப் போழ்ந்த
காம வல்லியுங் களிறும் பிடியும்
தேமொழிச் செவ்வாய்த் திருமகள் விரும்பும்
அன்ன வீணையு மரிமா னேறும்
பன்மரக் காவும் பாவையும் பந்தியும்
பறவையும் பிறவு முறநிமிர்ந் தோவா
நுண்ணவாப் பொலிந்த கண்ணவா வுறாஉம்
மீமிசைக் கட்டின் வாய்முதற் றாழ்ந்த
வண்ணப் படாஅங் கண்ணுறக் கூட்டிப்

(பாக்குவகை முதலியன)

பைங்கருங் காலிச் செங்களி யளைஇ
நன்பகற் கமைந்த வந்துவர்க் காயும்
மிருங்கண் மாலைக்குப் பெரும்பழுக் காயும்
வைகறைக் கமையக் கைபுனைந் தியற்றிய
இன்றே னளைஇய விளம்பசுங் காயும்
பைந்தளி ரடுக்கும் பலமுத லாகிய
மன்பெரு வாசமொடு நன்பல வடக்கிய
பயில்வினை யடைப்பையொடு படியகந் திருத்தி
உருவொடு புணர்ந்த வயிரணை மீமிசை
இருபுடை மருங்கினு மெழில்பட விரீஇ

69. புளகம் - கண்ணாடி.

70. ஐ வேறுரு - ஒன்றற்கொன்று வேறுபட்ட ஐந்து நிறம். மெய்பெற - உண்மையாகத் தோற்றும்படி.

71. பொய்வகைப்பூ - செட்டிமுதலியவற்றாற் செய்யப்பட்ட பூக் [கள்.

82. நன்பகல் - உச்சிப்பொழுது; பொருந. 46, ந.

81 - 2. கருங்காலிக் குழம்பில் ஊறிய பாக்கும்.

81 - 5. உ. 2 : 70 - 74, அடிக்.

86. தளிரடுக்கு - இள வெற்றிலை யடுக்கு. பலம் - சாதிக்காய்.

88. அடைப்பை - வெற்றிலை முதலியவை வைத்த பை. படியகம் - படிக்கம்; "எரிமணி யடைப்பை செம்பொற் படியகம்" (சீவக. 2140.) 90. இரீஇ - இருந்து.

ஏமச் செவ்வி யேனோர் நுகரும்
யாமத் தெல்லையுண் மாமறைப் பேரறை
உலாவு முற்றத் தூழ்சென் றுட
நிலாவிரி கதிர்மணி நின்று விளக்கலும்
பள்ளி தன்னுள் வள்ளிதழ்க் கோதையொடு
மன்னய முரைத்து நன்னலங் கவர்ந்து

(உதயணன் சித்திரத்தைக் கண்டுவியத்தல்)

வித்தக ரெழுதிய சித்திரக் கொடியின்
மொய்த்தலர் தாரோன் வைத்துநனி நோக்கிக்
கொடியின் வகையுங் [1]கொடுந்தாண் மறியும்
வடிவமை பார்வை வகுத்த வண்ணமும்
திருத்தகை யண்ணல் விரித்துநன் குணர்தலின்
மெய்பெறு விசேடம் வியந்தன னிருப்பக்

(பதுமாபதி ஊடல்)

கைவளர் மாதர் கனன்றுகனன் றெழுதரும்
காம வேகந் தான்மிகப் பெருகப்
புலவி நெஞ்சமொடு கலவியுட் கலங்கிப்
புல்லுகை நெகிழப் புணர்வுநனி வேண்டாள்
மல்லிகைக் கோதை மறித்தன ளிருந்து
சூட்டுமுகந் திருத்தி வேட்டுநறு நீரின்

---

91 - 2. ஒருவருடைய பேரழகை ஒருவர் நுகர்ந்து கொண்டிருக்கும் யாமத்தில்.

94. விளக்கலும் - விளங்கச் செய்தவுடன்.

96. நயம் - இனியமொழிகளை.

கொடியின்கண் (97) தன்கருத்தை வைத்து அதனை மிகப் பார்த்து (98.)

99. மறி - மான்குட்டி. 100. பார்வை - மறியின்பார்வை.

102. வியந்தனனிருப்ப - உதயணன் வியந்துகொண்டிருக்க.

103. மாதர் - பதுமாபதி.

106. புல்லுகை - புல்லுதல். 107. மறித்தனள் - முகமாறி.

108. தலையிலுள்ள சூட்டைத் திருத்தி. 108 - 112. கோழியின் இயல்பு.

பி - ம். 1 கொழுந்திரண் மறியும் வடிவமைபார்வை,

மயிரு மிறகுஞ் செயிரறக் கழீஇக்
கோனெய் பூசித் தூய்மையு ணிறீஇப்
பாலுஞ் சோறும் வாலிதி னூட்டினும்
குப்பை கிளைப்பறாக் கோழி போல்வர்
மக்க ளென்று மதியோ ருரைத்ததைக்
கண்ணிற் கண்டே னென்று கைந்நெரித்
தொண்ணுதன் மாத ருருகெழு சினத்தள்
தம்மால் வந்த தாங்கரும் வெந்நோய்
தம்மை நோவ தல்லது பிறரை
என்னது நோவ லேத முடைத்தெனக்
கருங்கே ழுண்கண் கயலெனப் பிறழ்ந்து
பெருங்கயத் தாமரைப் பெற்றிய வாகத்
திருநுதல் வியர்ப்பெழுந் திருநிலத் திழிதர
நிலாவுறு திருமுக நிரந்துடன் மழுங்கிக்
கருமயி ரிவர்ந்து காண்டக் குலாஅய்ப்
புருவம் பலகால் புடைபுடை பெயர
முத்துற ழாலி தத்துவன தவழ்ந்து
பொன்னிறக் குரும்பை நன்னிற மழுங்கத்
தன்னிறங் கரப்பத் தவாஅ வெம்மையொடு
வீழனல் கடுப்ப வெய்துயிர்த் தலைஇக்
காதல்செய் கலங்கள் போதொடு போக்கி
அந்தண் சாந்த மாகத்துத் திமிர்ந்து
பண்புரை கிளவி பையெனத் திரியக்

(உதயணன் பதுமாபதியின் ஊடலைத் தீர்த்தல்)

கரும்பேர் கிளவி கதிர்முகை முறுவற்

---

109. கழீஇ - கழுவி. 110. கோலால் நெய்யைத் தடவி.
112. கிளைப்பு அரு - கிண்டுதல் நீங்காத.
111 - 2. "கப்பி கடவதாக் காலைத்தன் வாய்ப்பெயினுங், குப்பை கிளைப்போவாக் கோழிபோல்" (நாலடி. 341) என்பதன் பொருளை இவ்வடிகள் பெற்றுள்ளன.
115. உரு - அச்சம். 118. என்னதும் - சிறிதும்.
119 - 20. கண்கள் சிவப்ப. 125. ஆலி - கண்ணீர்த்துளி.
128. அலைஇ - அலைத்து. 130. திமிர்ந்து - தேய்த்துதிர்த்து.
131. திரிய - வேறுபட,

பெருந்தடங் கண்ணி பிழைப்போன் றுணரேன்
வருந்தல் வேண்டா வாழிய நங்கையென்
றிரந்தன னாகி யேற்பக் காட்டிய
[1] இலம்புடை நறுமல ரெழுதுகொடிக் கம்மத்துச்
சிலம்பிடைத் தங்கிய சேவடி யரத்தம்
காரிருங் குஞ்சி கவின்பெறத் திவள
அரவுவாய்க் கிடப்பினு மலர்கதிர்த் தண்மதிக்
குருவுக்கதிர் வெப்ப மொன்று மில்லை
சிறியோர் செய்த சிறுமையுண் டெனினும்
தரியாது விடாஅர் தாநனி பெரியோர்
என்பது சொல்லி யெழில்வரை மார்பன்
பொன்புனை பாவை புறக்குடை நீவிச்
செங்கையிற் றிருத்திப் பைந்தோ டணிந்து
கலம்பல திருத்தி நலம்பா ராட்டிச்
சாந்த மெழுகிச் சாயனெகிழ் பறிந்து
பூம்புறங் கவவப் புனைதா ரோதி
பூண்ட பூவொடு பொறையோன் றுற்றேன்
நீண்டன்மின் பெருமவெனத் தீரிய வுரைத்து

(பதுமாபதி ஊடல் தீர்தல்)

மாடத் தகத்தி லாடுவினைக் காவினுட்
கொம்பர் மீமிசைக் கூகைவந் துலாஅய்

---

139. இலம்புடை - தொங்குதலை யுடைய.

137. சேவடி அரத்தம் - அவளுடைய அடிகளிலூட்டிய செம்பஞ்சின் குழம்பு.

138. திவள - விளங்க.

139. அரவுவாய் - பாம்பின்வாயில். 139 - 40. நாலடி. 148.

142. தரியாது விடார் - பொறுப்பார்.

144. புறக்குடைநீவி - முதுகைத்தடவி: "பொருந்தா மன்னரைப் புறக்குடை கண்ட" என்பர்பின் ; ரு. 17 : 19.

148. கவவ - அணைப்ப. கணவன் மனைவியின் புறங்கவவுதல்: ஐங். உ0ச : 2 ; அகநா. கக : 19, உசு : 23, ருஉ : 9.

150. தீரிய - தன்னை விடும்படி.

152. கூகை - கோட்டான்.

பி - ம். 1 இலம்பிடை.

வித்தகக் கைவினைச் சத்தி யேறி
உட்குத்தக வுரைத்தலுங் கட்கின் பாவை
நெஞ்சந் துட்கென நெடுவிடை நின்ற
காற்றெறி வாழையி னுற்ற நடுங்கி
அஞ்சி லோதி யாகத் தசைத்தர
அச்ச முயக்க நச்சுவனன் விரும்பி
மெல்லியன் மாதரொடு மேவன கிளந்து
புல்லியுந் தளைத்தும் புணர்ந்தும் பொருந்தியும்
அல்குலு மாகமு மாற்றநலம் புகழ்ந்தும்
1 அமர ராக்கிய வமிழ்தெனக் கினியோள்
தன்முளை யெயிற்றுநீர் தானென வயின்றும்
ஒழுகா நின்ற காலை யொருநாள்

(பதுமாபதி தோழிக்குச் சொல்லல்)

இன்பப் பேரறை நன்பகற் பொருந்தி
அருமறை யறிதற் கமைந்த வார்வத்
தொருதுணைத் தோழியை யொன்றுவனள் கூவித்
திருவிற் கமைந்த தேந்தார் மார்பன்

---

153. சத்தி - மாடத்திலுள்ள சூலம்.

154. அச்சமுண்டாகக் குழறியவுடன். கண்ணுக்கினிய பாவை போல்வாள்.

155. துட்கென - திடுக்கென. நெடு இடை - நெடிய கானகத்தில்; "நெடுவிடைச் சென்றதென் னெஞ்சு" கார். 19.

153 - 5. = ௩. 22 : 149 - 53 ; குறுந். ௧௫௩.

156. ஒ. க. 43 : 138.

157. ஆகத்து அசைத்தர - உதயணனது மார்பைக் கட்டிக் [கொள்ள.

157 - 8. = உ. 16 : 116 - 7. 160. தளைத்தும் - கட்டியும்.

162 - 3. "முளையெயிற் றமிழ்தூறுந் தீநீர்" (கலி. ௬ : 13); அகநா. ௩௩௫ : 24 - 5; மணி. ௧௮ : 71 - 2; சீவக. 491.

166 - 7. அருமறையறிந்தார்க்கு இருக்கவேண்டிய நல்லகுணங்களமைந்த தோழி எனக்கூட்டுக; இரகசியத்தை வெளிப்படுத்தாதவளென்றபடி.

168. இந்திரவில்லையொத்த இனியமாலை; "திருவின் மால்வரைக் குலவிய தனையதோர் தேந்தார்......மார்பிடைத் துயல" சீவக. 2363.

பி - ம், 1 மம்மராக்கிய,

உருவிற் கமைந்த வுணர்வுநன் குடைமை
அளத்து நாமெனத் துளக்கிலள் சூழ்ந்து
[1] பலர்புகழ் மார்பன் பயின்ற விச்சைகள்
வல்லவை யாய்கென வழிபா டாற்றி

(தோழி வினாக்களும் உதயணன் விடைகளும்)

நல்லவை யாவென நகைக்குறிப் பூர்தர
வினவிய மகளிர்க்குச் சினவுநர்ச் சாய்த்தவன்
வேத விழுப்பொரு ளோதின னுளனெனின்
எனைத்துங் கரவேன் காட்டுவென் யானென
எமக்கவை யென்செயு மிசையொடு சிவணிய
கருவிக் [2] கரண மருவினை யோவென
நீத்தவர் வேண்டிய [3]துப்புர வல்லால்
பார்ப்பன மக்கள் பரிந்துபிற பயிற்றார்
வேள்விக் குரிய கருவி யாவும்
வானோர் கண்ணி வல்லேன் யானென
நல்லதொன் றுண்டெனிற் சொல்லலெங் குறையெனத்

---

169. "வனப்பிற் கேற்ற வலியும் விச்சையும்" (ந. 20 : 159) என்பர் பின்.

170. அளத்தும் - அளந்தறிவோம். துளக்கிலள் - கலங்குதலில்லாதவளாய்.

172. ஆய்கென - ஆராய்வாயாக வென்று பதுமாபதி சொல்ல.

173. யாவென - எவையென்று தோழி கேட்க.

174. மகளிர்க்கு - தோழிக்கு; மகளிர் : ஒருமை; "வெற்பின் வளமகளிர் பாகன் மலை" ஐந்திணையெழுபது, 39.

176. எனைத்தும் கரவேன் - சிறிதும் ஒளியேன். என - என்று உதயணன் கூற.

177. என்செயும் - என்னபயனைச் செய்யும். [வினவ.

178. கருவிக்கரணம் - யாழ்வாசித்தல். என - என்று தோழி

179. துப்புரவு - சுத்தமான வித்தைகள்.

180. பரிந்து - அன்புற்று. பயிற்றார் - பயிலார்.

181. கருவி - கருவிநூல்கள்; என்றது ஆறங்கமுதலியவற்றை.

182. என - என்று அவன் கூற.

183. சொல்லல் - சொல்லுக. என - என்று அவள் வினவ.

பி - ம். 1 மலர்புகழ். 2 கானமருவினையாவென. 3. துப்புரு.

தோளுறு துணைவிக்குத் துயரம் வந்தநாள்
[1] சூளுறு கிளவியிற் றொழுதனள் கேட்ப
இடவரை யருவியி னிம்மென விசைக்கும்
[2] குடமுழ வென்பது பயிற்றினென் யானென
அவைக்குரி விச்சை வல்ல வந்தணன்
சுவைத்தொழின் மகனென நகைத்தொழி லாடி
அந்தர மருங்கி னமர ராயினும்
மந்திர மறப்ப மனநனி கலக்கும்
பைந்தொடி பயிற்றும் பண்யாழ் வருகெனத்
தந்துகைக் கொடுக்கலுந் தண்பூங் கொடிபோல்

(பதுமாபதியின் செயல்)

எதிர்முகம் வாங்கி யெழினி மறைஇப்
பதுமா நங்கையும் பையெனப் புகுந்து
[3] கோன்மணி வீணை கொண்டிவ ணியக்கத்
தான மறிந்தி யாப்பி யாயினி
நீநனி பாடென நேரிழை யருளித்
துணைவன் முன்னர்த் தன் றொன்னலந் தோன்றக்
கணைபுணர் கண்ணி காட்டுதல் விரும்பி
ஒள்ளுறை நீக்கி யொளிபெறத் துடைத்து
வன்பிணித் திவவு வழிவயி னிறுக்க
மெல்விர ளேவைப் பல்கா லேற்றி
ஆற்று ளாகி யரும்பெறற் றோழியைக்
கோற்றேன் கிளவி குறிப்பிற் காட்டக்

184. துணைவிக்கு - மனைவிக்கு.
187. என - என்று அவன் கூற.
186 - 7. "அருவி, தாழ்ந்து வீழ்ந்தவை முழவிற் றதும்பின" [சீவக. 1560.
192. பைந்தொடிபயிற்றும் - பதுமாபதிபயிலுகின்ற. வருகென - கொண்டு வருகவென்று சொல்லி. 193. தந்து - வருவித்து.
194. எழினி மறைஇ - திரையுள் மறைத்து.
196. கோல் - நரம்பு; அழகுமாம். 198. அருளி - சொல்லி.
201. உறை - யாழின் போர்வை.
202 - 5. பதுமாபதி பலமுறை முயன்றும் இவவை நிறுத்தவேண்டிய இடத்து நிறுத்த இயலாதவளாய் உதயணனிடம் கொடுக்கும்படி தோழிக்குக் குறிப்பிக்க.

பி - ம். 1. சூழுறு. 2 குழமுழ. 3 தோண்மணி.

(உதயணனும் யாப்பியாயினியும் உரையாடல்)

கொண்டவள் சென்று வண்டலர் தாரோய்
வீணைக் கேற்ப விசையொடு மற்றிவை
தானத் திரீஇத் தந்தீ கெமக்கெனக்
குலத்தொடும் வாராக் கோறரும் விச்சை
நலத்தகு மடவோய் நாடினை யாகின்
அலைத்தல் கற்றல் குறித்தேன் யானென
மற்போர் மார்பவிது கற்கல் வேண்டா
வலியி னாவது வாழ்கநின் கண்ணி
தரித்தர லின்றிய விவற்றை யிவ்விடத்
திருத்த லல்லது வேண்டலம் யாமென
அன்ன தாயி னாமெனிற் காண்கம்
பொன்னிழை மாதர் தாவெனக் கொண்டு
திண்ணிய வாகத் திவவுநிலை நிறீஇப்
பண்ணறி வுறுத்தற்குப் பையெனத் தீண்டிச்
சுவைப்பட நின்றமை யறிந்தே பொருக்கெனப்
பகைநரம் பெறிந்து மிகையுறப் படூஉம்
எள்ளற் குறிப்பினை யுள்ளகத் தடக்கிக்
கோடும் பத்தலுஞ் சேடமை போர்வையும்
மருங்குலும் புறமுந் திருந்துதுறைத் திவவும்
விசித்திரக் கம்மமு மசிப்பில னாகி
எதிர்ச்சிக் கொவ்வா முதிர்ச்சித் தாகிப்

---

207. இவை - இத்திவவுகளை.
208. தந்ீக - தருக. என - என்று தோழி கூற.
211. அலைத்தல் - என்னை வருத்தாதே. என - என்று உதயணன் [கூற.
213. வலியின் - வன்மையினாலே.
214. தரித்தரல் - நிலைத்திருத்தல். இன்றிய - இல்லாத; "இருளு மின்றிய வொளியு மின்றிய" பாசவதைப்பரணி, 25.
215. என - என்று தோழி கூற.
216. ஆமெனிற் காண்கம் - கூடுமானாற் செய்வோம்.
221. எறிந்து - தெறித்து; 235.
222. எள்ளற்குறிப்பினை - இகழ்ச்சிக்குறிப்பை.
223 - 4. கோடும் பத்தலும் மருங்குலும் திவவும் யாழுறுப்புக்கள்.
225. கோடு முதலியவற்றை அவமதியானாகி.

பொத்தகத் துடையதாய்ப் புனனின் றறுத்துச்
[1] செத்த தாருச் செய்தது போலும்
இசைத்திற னின்னா தாகிய திதுவென
மனத்தி னெண்ணி மாசற நாடி
நீட்டக் கொள்ளாண் மீட்டவ ளிறைஞ்சிக்
கொண்ட வாறுமவன் கண்ட கருத்தும்
பற்றிய வுடனவ னெற்றிய வாறும்
அறியா தான்போன் மெல்ல மற்றதன்
உறுநரம் பெறீஇ யுணர்ந்த வண்ணமும்
செறிநரம் பிசைத்துச் சிதைத்த பெற்றியும்
மாழை நோக்கி மனத்தே மதித்தவன்
அகத்ததை யெல்லா முகத்தினி துணர்ந்து
புறத்தோ னன்மை திறப்படத் தெளிந்து
தாழிருங் கூந்தற் றோழியைச் சேர்ந்திவன்
யாழறி வித்தக னறிந்தரு ளென்றலின்
இன்னுஞ் சென்றவ னன்ன ளுருதல்
நன்னுத லமர்தர நாடிக் காண்கெனப்
பின்னுஞ் சேர்ந்து பெருந்தகை யெமக்கிது

227. பொத்து - பொந்து. 228. தாரு - மரத்தால்.
229. இசைத்திறன் - இசைவகை.
231. நீட்ட - உதயணன் யாழைக் கொடுக்க.
232. கொண்டவாறும் - உதயணன் வாங்கிய விதத்தையும்.
233. பற்றியவுடன் - இவவு நிலைபெற்றவுடன். எற்றிய ஆறும் - நரம்பை அவன் தெறித்த விதத்தையும்.
235. நரம்பு எறீஇ - நரம்பைத் தெறித்து; 221.
234 - 5. அறியாதான் போல் உணர்ந்த வண்ணமும்.
237. யாப்பியாயினி மேற்கூறிய அவன் செயல்களை மதித்து.
238. "அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங், கடுத்தது காட்டு முகம்", "முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினும், காயினுந் தான்முந் துறும்" குறள், 706-7.
240. தோழி - பதுமாபதி.
241. என்றலின் - என்று யாப்பியாயினி கூறினமையின்.
243. நன்னுதல்: விளி. காண்க என.
244. பெருந்தகை : விளி.

பி - ம். [1] செனித்தனமாகிச்.

பண்ணுமை நிறீஇயோர் பாணிக் கீதம்
பாடல் வேண்டுமென் றுடைமைத் தோளி
மறுத்துங் குறைகொள மறத்தகை மார்பன்
என்கட் கிடந்த வெல்லா மற்றிவள்
தன்கண் மதியிற் றன்றெறிந் துணர்ந்தனள்
பெரிதிவட் கறிவெனத் தெருமந் திருந்திது
வல்லுந னல்லே னல்லோய் நானென
ஒருமனத் தன்ன வுற்றார்த் தேற்றா
அருவினை யில்லென வறிந்தோர் கூறிய
பெருமொழி மெய்யெனப் பிரியாக் காதலொ
டின்ப மயக்க மெய்திய வெம்மாட்
டன்புதுணை யாக யாதொன் றாயினும்
மறாஅ தருளென வுறாஅன் போல

(மாலைக்காலம்)

அலங்குகதிர் மண்டில மத்தஞ் சேரப்
புலம்புமுந் துறுத்த புன்கண் மாலைக்
கருவி வானங் கால்கிளர்ந் தெடுத்த
பருவம் பொய்யாப் பைங்கொடி முல்லை
வெண்போது கலந்த தண்கண் வாடை
பிரிவருங் காதற்குக் கரியா வதுபோல்
நுண்சா லேக நுழைந்துவந் தாட

---

245. பண்ணுமைநிறீஇ - பண்ணின் தன்மையை நிறுத்தி. பாணிக் கீதம் - தாளமமைந்த இசைப்பாட்டை; சீவக. 1241.

248 - 51. 'என்னிடமுள்ள இசைவிகற்பங்களை இவள் நன்றாக அறிந்து கொண்டாள்; ஆதலால் இவளுக்கு அறிவு பெரிது' என்று சிறிது நேரம் விம்மிதத்தால் மயங்கியிருந்து, 'இசையில் யான்வல்லே னல்லேன்' என்று உதயணன் கூறினுகை.

252 - 4. மனம் போன்றவர்களைத் தேற்றாத செயல் இல்லை யென்று பெரியோர் கூறிய மொழி மெய்யாகுமென்று கூறி.

256 - 7. அன்பையே துணையாகக் கொண்டு யாங்கள் விரும்பிய இசைப்பாட்டை மறுது பாடியருளவேண்டுமென்று அவள் குறைகொள் [ள.

258. கதிர்மண்டிலம் - சூரியமண்டிலம். அத்தம் - அத்தகிரி.

260 - 61. கார்காலத்திற் பூக்கும் முல்லைக் கொடி.

262. வாடை - காற்று. 264. சாலேகம் - சாளரவாயில். வாடை (262) வந்தாட (264.)

(உதயணன் பாடிக்கொண்டு யாழ் வாசித்தல்)

ஆராக் காதலிற் பேரிசை கனியக்
குரலோர்த்துத் தொடுத்த குருசி றழீஇ
இசையோர் தேய வியக்கமும் பாட்டும்
நசைவித் தாக வேண்டுதிர் நயக்கெனக்
குன்றா வனப்பிற் கோட பதியினை
அன்றுண்டு நினைத்தஃ தகன்ற பின்னர்
நலத்தகு பேரியாழ் நரம்புதொட் டறியா
இலக்கணச் செவ்விர லேற்றியு மிழித்தும்
தலைக்கட் டாழ்வு மிடைக்க ணெகிழ்ச்சியும்
கடைக்கண் முடுக்குங் கலந்த கரணமும்
மிடறு நரம்பு மிடைதெரி வின்றிப்
பறவை நிழலிற் பிறர்பழித் தீயாச்
செவிச்சுவை யமிர்த மிசைத்தலின் மயங்கி

(உதயணனுடைய இசையின் சிறப்பு)

மாடக் கொடுமுடி மழலையம் புறவும்
ஆடமை பயிரு மன்னமுங் கிளியும்
பிறவு மின்னன பறவையும் பறவா

---

265. தழீஇ - யாழைத் தழுவி.

267. இசையோர் தேயஇயக்கம் - கந்தருவ மார்க்கம்.

268. நசைவித்தாக - ஆசை காரணமாக. நயக்கென - விரும்பிக் கேட்பீராக வென்று உதயணன் கூறி; நயக்கு - நயப்பேனென்றுமாம்.

269. கோடபதி - உதயணனது வீணை.

276. பறவை நிழலில் - பருந்தும் அதன்நிழலும்போல; "பருந்து மதனிழலும் பாட்டு மெழாலும், திருந்துதார்ச் சீவகற்கே சேர்ந்தன" (சீவக. 730); "பாற்றி யக்கமு நீழலு மாமெனப் பாட" (கந்த. திருக்கல்யாண. 1.) பழித்தீயா - பழியாத.

277. செவிச்சுவை யமிர்தம் - இசையை.

275 - 7. "சூழ்மணிக் கோட்டு வீணைச் சுகிர்புரி நரம்பு நம்பி, ஊழ்மணி மிடறு மொன்றாய்ப் பணிசெய்த" சீவக. 728.

278. கொடுமுடி - மாடத்தின் ஒருறுப்பு; "கோடுயர் மாடத்துக் கொடுமுடி" ௩. 8 : 15. 279. பயிர் - ஒருவகைப் பறவை.

280. பறவாவாய்,

ஆடுசிற கொடுக்கி மாடஞ் [1] சோரக்
கொய்ம்மலர்க் காவிற் குறிஞ்சி முதலாப்
பன்மர மெல்லாம் பணிந்தன குரங்க
மைம்மலர்க் கண்ணியு மகிழ்ந்து [2] மெய்ம் மறப்ப

(பதுமாபதி வியத்தல் முதலியன)

ஏனோர்க் கிசைப்பி [3] னேதந் தருமென
மானேர் நோக்கி மனத்திற் கொண்டு
கண்கவர் வுறாஉங் காமனிற் பின்னைத்
தும்புரு வாகுமித் துறைமுறை பயின்றோன்
இவனிற் பின்னை நயனுணர் கேள்வி
வகையமை நறுந்தார் வத்தவர் பெருமகன்
உதையணன் வல்லனென் றுரைப்ப வவனினும்
மிகநனி வல்லனித் தகைமலி மார்பனென்
றுள்ளங் கொள்ளா வுவகைய ளாகி
ஒள்ளிழை [4] தோழியோ டுதயணற் பேணிக்
கழிபெருங் காமங் களவினிற் கழிப்பி
ஒழுகுவனண் மாதோ வுரிமையின் மறைந்தென்.

கச—நலஞராய்ச்சி முற்றிற்று.

---

281. சோர - மெய்ம்மறந்து விழ.

278 - 81. "வான்கட் பறவைமெய்ம் மறந்து சோர, அண்ணலு னனங்க ஞணப் பாடினன்" சீவக. 729.

282. குறிஞ்சி - குறிஞ்சிமரம். 283. குரங்க - வளைய.

284. கண்ணி - பதுமாபதி.

285. ஏனோர்க்கு - மற்றையோர்க்கு; ஏனோர், ஏனையோரென்பதின் விகாரம்; கலி. உசு, ந.

287. காமன் இசையில் வல்லவனென்பது, "இசைத்திறத் தனங் கனே யனைய நீரினர்" (சீவக. 659) என்பதனாலும் அறியலாகும்.

288. இத்துறை - இசைத்துறையில்; இவன் தும்புருவாகுமென இயைக்க.

291. உரைப்ப - உரைக்கும்படி. அவனினும் - உதயணனைக் காட்டிலும்.

294. ஒள்ளிழை - பதுமாபதி. 295. கழிப்பி - கழித்து.

பி - ம். 1 சோரக். 2 மெயகறப. 3 னேமஞ். 4 தோளியோ.

## கரு — யாழ்நலந் தெரிந்தது.

(யாப்பியாயினியின் செயல்)

மறையோம் பொழுக்கின் மதலை கேண்மதி
நிறையோம் பொழுக்கி னின்னல முணரேம்
ஒருபே ருலகம் படைத்த பெரியோன்
உருவுகரந் தொழுக வுணரா ராகக்
கொன்றையம் பசுங்காய் பெருக்கியும் பயற்றின்
நன்றுவிளை நெற்றினைச் சிறுக்கியுங் குன்று
இன்றீங் கரும்பினைச் சுருக்கியும் விண்டலைத்
துன்னரும் விசும்புற நீட்டிய நெறியும்
இன்னவை பிறவு மிசைவில வெல்லாம்
படைத்தோன் படைத்த குற்ற மிவையென
எடுத்தோத் துரையி னியம்பி யாஅங்
கியானை வணக்கு மைங்கதி யருவினை
வீணை வித்தகத் தவனினு மிக்கதன்
மாணல முணரே மடவிய னிவனென

---

கரு—யாழ்நலந் தெரிந்தது.

[பதுமாபதியும் அவள் தோழி யாப்பியாயினியும் உதயணனுக்குள்ள யாழ்ப் பயிற்சியின் மிகுதியை அறிந்துகொண்டமை இதனால் அறியலாகும்.]

1. மதலை : விளி. 2. நிறை - மனத்தை நிறுத்தல். ஒழுக்கின் - ஒழுக்கினால். அடக்க முடையையாயிருந்தது பற்றி உன் நலங்களை உணரேமாயினேம்.

3. பெரியோன் - பிரமன். 4. உலகத்தாருணராராகும்படி.

5. பயனற்ற கொன்றைக் காயைப் பெரிய உருவமுள்ளதாகச் செய்தும்.

5 - 6. பயனுள்ள பயற்றின் நெற்றினைச் சிறிய வடிவமுள்ளதாகச் [செய்தும்.

7. விண்டலை - மூங்கிலை.

9. இசைவில - பொருந்தலில்லாதன.

10. குற்றம் - உருவுகண்டெள்ளும்படி படைத்தமை.

11. ஆங்கு - அவ்விடத்தே. 12 - 3. ஐங்கதிவீணை:க. 37: 112 - 3.

12 - 4. உதயணனைக் காட்டிலும் மிக்க உனது சிறந்த நலத்தை உணரேமாய். மடவியன் இவன் - அறியாமையையுடையான் இவன்.

நாணக் காட்டு நனித்தொழில் புனைந்தேம்
மாணக் காட்டுநின் மாணாக் கியரேம்
ஆயினெ மினியென வசதி யாடிய
மைதவழ் கண்ணி கைதவந் திருப்பாச்
செவ்வழி நிறீஇச் செவ்விதிற் றம்மெனச்
செதுவன் மரத்திற் சேக்கை யாதலின்
உதவா திதுவென வுதயணன் மறுப்ப
யாணர்க் கூட்டத் தியவனக் கைவினை
மாணப் புணர்ந்ததோர் மகர வீணை
தரிசகன் றங்கைக் குரித்தென வருளிய
கோல நல்லியாழ் கொணர்ந்தனள் கொடுப்பத்

**(உதயணன் யாழ்நரம்பின் குற்றங்களைத் தெரிவித்தல்)**

திணைப்பக வணைத்தும் பழிப்பதொன் றின்றி
வனப்புடைத் தம்மவிவ் வள்ளுயிர்ப் பேரியாழ்
தனக்கிணை யில்லா வனப்பின தாகியு
[1] நிணக்கொழுங் கோல்க ளுணக்குத லின்மையின்
உறுபுரிக் கொண்டன பிறநரம்பு கொணர்கென

---

15. நாண - நீ நாணும்படி. புனைந்தேம் - முன்பு புனைந்தனம்.
16. மாணாக்கியர் : க. 37 : 110, 44 : 120.
17. அசதியாடிய - நகையாடிய.
16 - 7 இப்பொழுது நின் மாணாக்கியராயினேம்.
18. கண்ணி - தோழி. கைதவம் - கபடத்தை.
19. செவ்வழி - நல்வழி ; மகரயாழுமாம்.
20. செதுவன்மரம் - பட்டமரம் ; சீவக. 1124 ; பொல்லாமரமுமாம் ; கலி. ௨௮ : 3. 21. இது - இந்தயாழ்.
22. யாணர்க்கூட்டம் - அழகிய சேர்க்கை. யவனக்கைவினை - யவனதேசத்துத் தச்சருடைய கைத்தொழில் ; "யவனத் தச்சரு மவந்திக் கொல்லரும்" க. 58 : 40.
24. தங்கைக்குரியதெனத் தருசகனருளிய.
26. பகவு - பிளவு.
27. வள்ளுயிர்ப் பேரியாழ் - பெரிய ஓசையினையுடைய பேரியாழ்; "வள்ளுயிர்ப் பேரியாழ்" மலைபடு. 37.
29. கோல்கள் - யாழ் நரம்புகள். உணக்குதல் - உலர்த்தல்.
30. உறு புரி - மிக்க முறுக்கை. என - என்று உதயணன் சொல்ல.

பி - ம். 1 நிணக்கொழுஞ்சாயல்.

மதுக்கமழ் கோதை விதுப்பொடு விரும்பிப்
புதுக்கோல் கொணர்ந்து பொருக்கென நீட்ட
நோக்கிக் கொண்டே பூக்கமழ் தாரோன்
வகையில விவையெனத் தகைவிரல் கூப்பி
அவற்றது குற்ற மறியக் கூறினை
இவற்றது குற்றமு மெம்மனந் தெளியக்
காட்டுதல் குறையென மீட்டவ ளுரைப்ப
நன்னுதன் மடவோய் நன்றல மற்றிவை
முன்னைய போலா மூத்து........தைந்த
வாவி சா..........................ன வாயினும்
பண்ணறச் சுகிர்ந்து பன்னுத லின்மையும்
புகரற வுணங்கிப் புலவற லின்மையும்
குறும்புரிக் கொள்ளாது நெடும்புரித் தாதலும்
நிலமிசை விடுதலிற் றலைமயிர் தழீஇ
மணலகம் பொதிந்த துகளுடைத் தாதலும்
பொன்னே காணெனப் புரிமுறை நெகிழ்த்துத்
துன்னார்க் கடந்தோன் றோன்றக் காட்ட
யாழும் பாட்டும் யாவரு மறிவர்
வீழா நண்பி னிவன்போல் விரித்து
நுனித்துரை மாந்த ரில்லென நுவன்று

---

31. கோதை - தோழி. விதுப்பொடு - விரைவோடு.

34. வகை - செம்மை. என - என்று உதயணன் கூற.

37. குறை - எமது வேண்டுகோள்.

41. சுகிர்ந்து - சீவி. பன்னுதல் - ஆராய்தல்.

43. புரி - முறுக்கு.

44. நிலமிசை விடுதலில் - பூமியின்மேற் கிடத்தினமையால்.

46. காண் - காண்பாயாக. புரிமுறை நெகிழ்த்து - முறுக்கை முறையே நெகிழச்செய்து.

47. காட்ட - நரம்பினுள்ளே இருக்கும் மயிரையும் மண்ணையும் காட்ட.

46 - 7. "புரிநெகிழ்த் துரோமங் காட்ட" சீவக. 721.

49. வீழா - ஒவ்வாத.

50. நுனித்துரை மாந்தர் - கூரியதாக எடுத்துரைக்கு மனிதர்கள். இல் - இல்லை.

மன்றப் புகன்று மாமழை நோக்கி
மறித்தும் போகி நெறித்துநீர்த் தொழுகிப்
பொன்றிரித் தன்ன நிறத்தன சென்றினி
தொவித்த லோவா நலத்தகு நுண்ணரம்
பாவன கொடுப்ப மேவனன் விரும்பிக்
கண்டே யுவந்து கொண்டதற் கியைய
ஓர்த்தன னமைத்துப் போர்த்தனன் கொடுப்ப
வணங்குபு கொண்டு மணங்கம ழோதி
மாதர் கைவயிற் கொடுப்பக் காதல்
உள்ளங் குளிர்ப்ப வூழி னியக்கக்
கூடிய குருசில் பாடலின் மகிழ்ந்து

**(உதயணன் பதுமாபதியாகிய இருவர்நிலை)**

கோடுயர் மாடத்துத் தோடுயர் தீரக்
குறிவயிற் புணர்ந்து நெறிவயிற் றிரியார்
வாயினுஞ் செவியினுங் கண்ணினு மூக்கினும்
மேதகு மெய்யினு மோத லின்றி
உண்டுங் கேட்டுங் கண்டு நாறியும்
உற்று மற்றிவை யற்ற மின்றி
ஐம்புல வாயினுந் தம்புலம் பெருக
வைக ரூறு மெய்வகை தெரிவார்
செய்வளைத் தோளியைச் சேர்ந்துநல னுகர்வதோர்

---

51. மன்ற - நிச்சயமாக. 52. ஒழுகி - நீண்டு.

53. பொன் திரித்தன்ன - பொன்னை முறுக்கினாற் போன்ற; “பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்” சிறுபாண். 34; பெரும்பாண். 15; புறநா. ௩௦௮.

57. ஓர்த்தனன் - செவியாற் கூர்த்தறிந்தவனாகி.

59. மாதர்கைவயின் - பதுமாபதி கையில்.

60. ஊழின் இயக்க - முறையே வாசிப்ப.

63. திரியார் - திரியாராகி. 65. ஓதல் - ஒழிதல்.

66. நாறியும் - மோந்தும்.

64 - 9. “கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு, மொண்டொடி கண்ணே யுள” (குறள், 1101); “கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும், ஒண்டொடி கண்ணே யுளவென்னும் - பண்டையோர், கட்டுரையை மேம்படுத்தாள்” திருக்கைலாய ஞானவுலா.

69. தெரிவார் : எழுவாய்,

தெய்வங் கொல்லெனத் தெளித லாற்றார்
உருவினு முணர்வினு மொப்போ ரில்லென
வரிவளைத் தோளியொடு வத்தவர் [1] பெருமகன்
ஒழுகினன் மாதோ வொருமதி யளவென்.

கரு—யாழ்நலந் தெரிந்தது முற்றிற்று.

---

71. என - என்று சொல்லும்படி. 74. மதி - மாதம்.

பி - ம். [1] பெருமகனும்.

---

## கசா—பதுமாபதியைப் பிரிந்தது.

ஒழுகா நின்ற வொருமதி யெல்லையுள்
வழிநா ணிகழ்வின் வண்ணங் கூறுவேன்

(அச்சுவப் பெருமகன் வரவு)

கலக்கமி றூனைக் காசியர் கோமான்
நலத்தகு [1] தேவி நன்னாட் பெற்ற
மின்னுறழ் சாயற் பொன்னுறழ் சுணங்கிற்
பண்ணுறு மின்சொற் பதுமா நங்கை
ஆகந் தோய்தற் கவாஅ நெஞ்சமொடு
பாசிழை நன்கலம் பரிச முந்துறீஇக்
கேழ்கிளர் மணிமுடிக் கேகயத் தரசன்
அளவி லாற்ற லச்சுவப் பெருமகன்
மகதம் புகுந்து [2] மன்னிய செங்கோற்

---

கசா—பதுமாபதியைப் பிரிந்தது.

[பதுமாபதியுடனிருந்த உதயணன் அவளைப் பிரிந்தமை இதனால் அறியலாகும்.]

2. வழிநாள் - பின்னாள்.

4. தேவிபெயர், உதயையோடை யென்பது ; ரு. 6 : 172.

6 - 12. பதுமாபதியை மணஞ்செய்துகொள்ளவிரும்பிய கேகயத்

பி - ம். [1] தேவிகனாட். [2] மண்ணிய.

றகைவெந் துப்பிற் றருசகற் [1] கிசைப்ப
ஏற்றெதிர் கொள்ளு மின்பக் கம்பலை
கூற்றெதிர் கொள்ளாக் கொள்கைத் தாகப்
புரவியும் யானையும் பூங்கொடித் தேரும்
விரவிய படையொடு தருசகன் போதரப்
போதுபிணைத் தன்ன மாதர் மழைக்கண்
நன்றொடு புணர்ந்த நங்கை மணமகன்
இன்றிவண் வருமென வில்லந் தோறும்
எடுத்த பூங்கொடி யிருங்கண் விசும்பகம்
துடைப்ப போல நடுக்கமொடு நுடங்கத்
தேர்செலத் தேய்ந்த தெருவுக ளெல்லாம்
நீர்செல் பேரியாறு நிரந்திழிந் தாங்குப்
பல்லோர் மொய்த்துச் செல்லிடம் பெறாஅ
தொல்லென் மாக்கட லுவாவுற் றன்ன
கல்லெ னகரங் காண்பது விரும்பி
மழைநிரைத் தன்ன மாடந் தோறும்
இழைநிரைத் திலங்க வேறி யிறைகொள
மலைத்தொகை யன்ன மாட [2] மாநகர்
தலைத்தலைப் போந்து தலைப்பெய் தீண்டி
இடுமணி யானை யிரீஇ யிழிந்துதன்
தொடியணி தடக்கை தோன்ற வோச்சித்
தாக்கருந் தானைத் தருசகன் கழலடி
கூப்புபு பணிந்த கொடும்பூட் குருசிலை
எடுத்தவன........................................

---

தரசனாகிய அச்சுவப்பெருமகனென்பவன் பரிசத்துடன் வந்து தன் வரவைத் தருசகனுக்குச் சொல்லியனுப்ப.

14. ஒருவர்சொல்லை மற்றொருவர் அறிந்துகொள்ளாதபடி ஆக.
13 - 4. அவனை எதிர்கொள்ளுதலாலுண்டாகிய முழக்கம்மிகும்படி. கொள்கைத்தாகத் (14) தருசகன் போதர (16.)
18. நங்கை - பதுமாபதி. 21. நுடங்க - அசைய.
25. உவா - பூரணைத்திதி.
27. "மழைமருண் மாடம்" சீவக. 2116. [தரசன்.
31. இரீஇ இருத்தி ; - நிற்கச்செய்து. 34. குருசில் - கேகயத்
பி - ம். 1 கியம் பசைப்ப. 2 மானகர்.

* * * *
* * * *

---

* இதன் மேற்பகுதியும், கஎ - ஆம் காதையின் முதற்பகுதியும் பிரதிகளில் எழுதப்படவில்லை; இடங்கள் எழுதாமல் விடப்பெற்றுள்ளன.

---

## கஎ—இரவெழுந்தது.

* * * *
* * * *
* * * *

..............................................ச்
செய்வது தெரியுஞ் சிந்தையோ டிருந்துழித்

(தருசகனுடைய பகைமன்னர்)

தகைமலர்ப் பைந்தார்த் தருசகன் றன்னொடு
பகைகொண் டொழுகும் பற்றாக் கொடுந்தொழில்
விடுகணை விற்றொழில் விரிசிக னுள்ளிட்
டலருந் தோற்றத் தரிமா னன்னவர்
மத்தநல் யானை மதிய வெண்குடை
வித்தக நறுந்தார் விலங்குநடைப் புரவி
அத்தின புரத்தி னரசரு ளரிமான்
வேண்டியது முடிக்கும் வென்றித் தானை
ஈண்டிய வாற்ற லெலிச்செவி யரசனும்

---

கஎ—இரவெழுந்தது.

[தருசகனோடு போர்செய்யவந்த பகையரசராகிய விரிசிகன் முதலிய எண்மரும் உருமண்ணுவா முதலியோர்செய்த வஞ்சப்போருக்கு அஞ்சித் தம் படைகளுடன் இரவில் எழுந்தோடியது இதனால் அறியலாதும்.]

1. இருந்துழி - இருந்த விடத்து. 2. தகை - அழகு.
4. விரிசிகனுள்ளிட்டு - விரிசிகன் முதற்கொண்டு.
5. அரிமான் - சிங்கம்.
8. அரசருள் அரிமான் - அரசருள்ளே சிறந்தவன்; 28.

காண்டற் காகாக் கடன்மருள் பெரும்படைத்
தீண்டற் காகாத் திருந்துமதி லணிந்த
வாரண வாசி வளந்தந் தோம்பும்
ஏரணி நெடுங்குடை யிறைமீக் கூறிய
படைநவி றடக்கைப் பைந்தார்க் கருங்கழல்
அடவி யரசெனு மாண்டகை யொருவனும்
மலைத்தொகை யன்ன மையணி யானை
இலைத்தார் மார்பி னேரணி தடக்கைப்
பொருந்தா மன்னரைப் புறக்குடை கண்ட
அருந்திறற் சூழ்ச்சி யடல்வேற் றானை
அயிர்த்துணைப் பல்படை யயோத்தி யரசனும்
மாற்றோர்த் தொலைத்த கூற்றுறழ் கொடுந்தொழில்
மிக்குயர் வென்றியொடு வேந்தரை யகப்படுத்
தக்களம் வேட்ட வடலருஞ் சீற்றத்துப்
புனைமதி லோங்கிய போதன புரத்திறை
மிலைச்ச னென்னு நலத்தகை யொருவனும்
சீற்றத் துப்பிற் செருவெனப் புகலும்
ஆற்றல் சான்ற வரசரு ளரிமாத்
துன்னரு நீண்மதிற் றுவரா பதிக்கிறை
மன்னரை முருக்கிய மதிய வெண்குடைப்
பொங்குமலர் நறுந்தார்ச் [1]சங்கர வரசனும்
மல்ல னென்னும் வெல்போர் விடலையும்
தானை மன்னரை மானம் வாட்டிய

---

11. கடல் மருள் பெரும்படை - கடல்போன்ற பெரிய சேனை; மருள் : உவமவுருபு. 13. வாரணவாசி : ஓரூர்.

14. இறை மீக் கூறிய - அரசருள்ளே மேம்பட்ட.

17. மை அணி யானை - அஞ்சன மெழுதிய யானை; "மையணி... யானை" ௩. 22 : 199 - 200.

19. புறக்குடை கண்ட - புறங்கண்ட; "புறக்குடை நீவி" (௩. 14 : 144.) 21. அயிர்த்துணை - நுண் மணலின் அளவாகிய.

24. அக்களம் வேட்ட - அந்தப்போர்க்களத்திற் களவேள்வி செய்த. 25 - 6. இறையாகிய மிலைச்சன்.

இறையாகிய (29) சங்கரவரசனும் (31.)

பி - ம். 1 சங்காரத்தரசனும்.

ஊனிவர் நெடுவே லுருவக் கழற்காற்
பொங்குமயிர் மான்றேர்த் திருநகர்க் கிறைவன்
வெந்திறற் செய்கை வேசா லியுமென
அடற்றகை மன்னர் படைத்தொகை கூட்டிச்

(பகைமன்னர் ஆராய்தலும் போருக்கெழுதலும்)

சங்க மாகி வெங்கணை வீக்கமொடு
பகைநமக் காகிப் பணித்துத் திறைகொளும்
மகத மன்னனை மதுகை வாட்டிப்
புரிபல வியைந்த வொருபெருங் கயிற்றினிற்
பெருவலி வேழம் [1] பிணித்திசி னாஅங்
கிசைந்த பொழுதே [2] யிடங்கெட மேற்சென்
றருந்திறன் மன்னனை நெருங்கின மாகித்
தன்னுடை யானையும் புரவியுந் தன்றுணைப்
பொன்னியல் பாவையும் புணைமணித் தேரும்
அணிகதிர் முத்தமு மருங்கல மாதியும்
பணிமொழிச் செவ்வாய்க் கணிகை மகளிரொடு
பிறவு மின்னவை முறைமையிற் றரினும்
இருங்கண் மாதிரத் தொருங்குகண் கூடிய
கருமுகில் கிழிக்குங் கடுவளி போலப்

---

35. திருநகர் - ஸ்ரீ நகரம்.

37. படைத்தொகை - சேனைத் தொகுதிகளை.

38. சங்கமாகி - கூட்டமாகி. வீக்கம் - பெருமை.

39. பணித்து - வணக்கி. 40. மதுகை - வலி.

41 - 2. பல கயிற்றைக்கொண்டு திரித்த பெருங்கயிற்றால் யானையைக் கட்டினாற்போல, ஓரரசனால் வெல்லப்படாத தருசகனைப் பல அரசர் கூடிப் பொருதால் வெல்லலாமென்பதற்கு இது கூறப்பட்டது.

45 - 6. அவன் தன் நிறையுள்ள பொற்பாவையைத் தந்தாலும்; தம்மீது அரசர்க்குள்ள பெருஞ்சினத்தைப் போக்குதற்கு நினைந்தோர் தம்மளவாகிய பொற்பாவையைக் கொடுத்துத் தீர்த்துக்கொள்ளுதல் பண்டை வழக்கமாதலின், இது கூறப்பட்டது; "அவணிறை, பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்" (குறுந். உகூஉ) என்பதனாலும் இது விளங்கும். துணை - அளவு.

45 - 9. அவன் தனது யானை முதலியவற்றைத் தந்தாலும்.

50. மாதிரம் - ஆகாயம். 51. கடுவளி - கடுங்காற்று.

பி - ம். 1 பிணித்தினாஅங்கு. 2 வடங்கெட.

பொருமுரண் மன்னர் புணர்ப்பிடைப் பிரிக்கும்
அறைபோக் கமைச்சின் முறைபோக் கெண்ணினும்
அங்கண் ஞாலத் தழகுவீற் றிருந்த
கொங்கலர் கோதை யெங்கையைப் பொருளொடு
தனக்கே தருகுவன் சினத்தி னீங்கி
ஊனங் கொள்ளாது தானவட் பெறுகெனத்
தேறு மாந்தரை வேறவண் விடுத்துத்
தனித்தர வொருவரைத் தன்பாற் றூழ்ப்பினும்
என்ன வாயினு மன்னது விழையா
தொடுங்கி [1] யிருந்தே யுன்னியது முடிக்கும்
கொடுங்காற் கொக்கின் கோளினமாகிச்
[2] சாய்ப்பிட மாகப் போர்ப்படை பரப்பி
வலிகெழு வேந்தனை வணக்குது மென்னத்
தெளிவுசெய் தெழுந்து திருமலி நன்னாட்
டெல்லை யிகந்து வல்லை [3] யெழுந்து
கடுந்தொழின் மேவலொ டுடங்குவந் திறுத்தலின்

(தருசகன் செயல்)

அகநகர் வரைப்பி னரச னறியப்

52. புணர்ப்பு - சேர்க்கையை.

53. அறைபோக்கு அமைச்சின் - கீழறுத்தல் செய்கின்ற மந்திரிமாரோடு; "அறைபோ கமைச்சர்" சிலப். ௫ : 130.

55. எங்கை யென்றது, பதுமாபதியை.

57. அவளைப்பெறுக.

59. ஒருவரை - நம்முள் ஒருவரை.

62. கொக்கின் கோளினமாகி - கொக்கினது கொள்கையை உடையேமாய்.

61 - 2. "கொக்கொக்க கூம்பும் பருவத்து" (குறள், 490); "அடக்க முடையா ரறிவிலரென் றெண்ணிக், கடக்கக் கருதவும் வேண்டா - மடைத்தலையில், லோடுமீ னோட வொருமீன் வருமளவும், வாடி யிருக்குமாங் கொக்கு" (மூதுரை. 16) என்பவை இங்கே அறியற்பாலன. 63. சாய்ப்பிடமாக - பின்வாங்கற்குறிப்பாக.

65. நன்னாட்டு - தங்களுடைய நல்ல நாட்டில். [னல்.

67. உடங்கு வந்து இறுத்தலின் - ஒருமிக்கவந்து தங்கிச் சூழ்தலி

பி - ம். [1] யிருந்து முன்னியது. [2] சாப்பிட, [3] யிழிந்து.

புறநக ரெல்லாம் பூசலிற் றுவன்றி
அச்ச நிலைமை யரசற் கிசைத்தலின்
மெச்சா மன்னரை மெலிவது நாடித்
தருசகன் றமரொடு தெருமர லெய்தி
மாணகற் கண்டிந் நிலைமை கூறென

(அயிராபதி உதயணனிடம் கூறல்)

ஆண நெஞ்சத் தயிரா பதிவந்
தனங்கத் தானம் புகுந்தவற் கண்டு
கூப்பிய கையினள் கோயிலுட் பட்டதும்
கோற்றொடி மாதர் கொள்கையுங் கூற

(உருமண்ணுவாவின் செயல்)

உகவை யுள்ளமொடு பகையிவ ணியைதல்
கரும நமக்கென வுருமண் ணுவாவுரைத்
தின்ன தென்னான் பொன்னேர் [1] தோழிக்
கிருமதி நாளகத் திலங்கிழை மாதர்
பருவரல் வெந்நோய் பசப்பொடு நீக்குவென்
என்றன னென்பதைச் சென்றனை கூறிக்
கவற்சி நீக்கெனப் பெயர்த்தவட் போக்கிக்
கடுத்த மன்னரைக் கலங்கத் தாக்கி
உடைத்த பின்றை யல்லது நங்கையை
அடுத்தல் செல்லா னரச னாதலின்
அற்ற நோக்கி யவர்படை யணுகி
ஒற்றி மேல்வீழ்ந் துடைக்கு முபாயமா

---

69. எல்லாம் - முழுவதும். பூசலின் - பெருமுழக்கத்துடன்.
71. மெச்சா - துதியாத. மெலிவது - தோல்வியடையச் செய்தல்.
73. என - என்று தருசகன்சொல்ல. 74. ஆணம் - அன்பு.
76. கோயிலுட்பட்டதும் - அரண்மனையில் நிகழ்ந்ததையும்.
77. மாதர் - பதுமாபதி. 78. உகவை - உகத்தல்.
79. நமக்குக் கருமம் - நமக்கு நல்ல காரியமாகும்.
80. பொன் - திருமகள். 82. பசப்பு - பசலை.
84. பெயர்த்து - மீட்டும். 88. அற்றம் - சோர்ந்த சமயம்.
89. ஒற்றி - இரகசியங்களை அறிந்து.

பி - ம். 1 தோளிக்.

வாணிக வுருவின னாகி மற்றவர்
[1] ஆணத் தானை யகம்புக் காராய்ந்
திரவிடை யெறிந்து பொருபடை யோட்டிக்
கேட்போர்க் கெல்லாம் வாட்போர் வலித்தொழில்
வளமிகு தானை வத்தவர்க் கிறையைக்
கிளைமை கூறி யுளமை கொளீஇக்
காவினு ணிகழ்ந்தது காவலற் குரைப்பின்
மன்றல் கருதி வந்த மன்னற்
கொன்றுபு கொடாமை யுண்டு மாகும்
ஒன்றின னாயிற் பொன்றுஞ் சிளமுலைத்
தெரியிழை மாத ருரிமையி னோடாள்
அன்ன தாத லொருதலை யதனாற்
பின்னரு மதற்குப் பிறபிற நாடுதும்
இன்னே யெழுகென் றெழுந்தாங் கணைஇச்
சின்னச் சோலை யென்னு மலைமிசைப்
பன்னற் கேள்வி பண்வரப் பாடிட

(தோழர் செயல்)

எண்ணிய கருமத் திடையூ றின்மை
திண்ணிதிற் கேட்டுத் தெளிந்தன ராகி

---

92. இரவிடை எறிந்து - இரவில் அவர்களைத்தாக்கி ; ௫. 18 : 28.

95. கிளைமை - உறவுமுறைமை. உளமை - இந்நகரில் அவன் இருத்தலை.

97. மன்னற்கு - அச்சுவப் பெருமகனுக்கு.

98. உண்டுமாகும் - உள்ளதாகும் ; " காரிய, முண்டு மாங்கொல்" (உ. 11 : 167 - 8) ; " இல்லை யென்னீருண்டு மென்னீர் " தே. சுந்தர. திருவோணகாந்தன்றளி.

99. ஒன்றினனாயின் - தருசகன் கேகயத்தரசனுக்குத் தன் தங்கையைக் கொடுக்கச் சம்மதிப்பினும்.

100. மாதர் - பதுமாபதி. உரிமையின் - மனைவியாக.

101. ஒருதலை - நிச்சயம்.

103. எழுந்து - உருமண்ணுவா எழுந்து.

105. பன்னல் - ஆராய்தல்.

106. எண்ணிய கருமம் - தருசகனை நட்புக்கோடல்.

பி - ம். 1 ஆணைத்தானை.

ஆனு வன்பொடு மேனு ளன்றி
வழிவழி வந்த கழிபெருங் காதற்
பகையடு படைநரைத் தொகையவட் காண்புழி
நூற்றிற முற்றி யாற்றுளி பிழையா
தாற்றி னறிய வத்துணை யுண்மையின்
ஊறின் றினியென வுவகையிற் கழுமிக்
கரப்பில் வண்மைப் பிரச்சோ தனன்றன்
சினப்படை யழித்த செம்ம லாளர்க்குக்
கனப்படை காக்கைத் தொகையெனக் கருதும்
அத்திறத் தொன்றி யெத்திறத் தானும்
குவளை யுண்க ணிவளொடு புணர்ந்த
காலை யல்லது கோலக் குருசில்
புலம்பிற் றீரா னுதலிற் பொருபடை
கலங்கவாட் டுதலெனக் [1] கருத்திடை வலித்து
மலையி னிழிந்து விலைவரம் பறியா
அருவிலை நன்மணி போத்தந் தவ்வழிப்
பெருவிலைப் பண்டம் பெய்வது புரிந்து
செழுமணிக் காரர் குழுவினுட் காட்டி
உறுவிலை கொண்டு பெறுவிலை பிழையா
வெண்பூந் துகிலுஞ் செம்பூங் கச்சும்

---

110. படைநரை - சேனை வீரரை. தொகை - அளவு.

112. ஆற்றின் அறிய - வழிப்படியே அறிந்துகொள்ள.

115. செம்மலாளர்க்கு - தலைமையையுடைய வீரர்க்கு.

116. கனப்படை - பகைவருடைய மிக்க சேனையானது. இரவிற் போர்செய்யக்கருதினமையின், பகைவர் காக்கைத்தொகை யெனப்பட்டனர். 118. இவள் - பதுமாபதி.

119. குருசில் - உதயணன்.

121. வாட்டுதலென - வாட்டுவேமாகவென்று.

122. மலையின் - சின்னச்சோலை யென்னு மலையினின்றும்; 104.

123. போத்தந்து - புகச்செய்து; க. 42 : 41. அவ்வழி - பகைவருள்ள இடத்தில்.

124. பெய்வது - விலைக்குக்கொடுத்தல்.

125. மணிக்காரர் - இரத்தின வியாபாரிகள். குழுவினுட்காட்டி - கூட்டத்திலுள்ளாராகத் தம்மைப் புலப்படுத்தி.

பி - ம். 1 கருத்தினர்.

சுரிகையும் வாளு முருவொடு புணர்ந்த
அணியின ராகிப் பணிசெயற் குரிய
இளையரை யொற்றித் தளைபிணி யுறீஇப்

(வாசனைப் பொருள்கள்)

பல்லுறைப் பையி [1]னுள்ளறை தோறும்
நாகத் தல்லியு நயந்தகக் கோலமும்
வாசப் பளிதமுஞ் சோணப் பூவும்
குங்குமக் குற்றியுங் கொழுங்காற் கொட்டமும்
ஒண்காழ்த் துருக்கமு மொளிநா குணமும்
காழகி லூறுங் கட்சா லேகமும்
கோழிரு வேரியும் பேரில வங்கமும்
அந்தண் டகரமு மரக்கு மகிலும்
சந்தனக் குறையொடு சாந்திற் குரியவை
பிறவு [2]மொருவா நிறைய வடக்கி

(உண்பொருள்கள்)

முதிர்பழ மிளகு மெதிர்வது திகழ்ந்த
மஞ்சளு மிஞ்சியுஞ் செஞ்சிறு கடுகும்
தலைப்பெருங் காயமு நலத்தகு சிறப்பிற்
சீரகத் தரிசியு மேலமு மேனைக்
காயமு மெல்லா மாய்வன ரடக்கி

(மருந்திற்குரியவை)

அஞ்சன மனோசிலை யணியரி தாரம்
துத்த மாஞ்சி யத்தவத் திரதம்
திப்பிலி யிந்துப் பொப்புமுறை யமைத்துத்
[3] தாழி மேதை தவாத துவர்ச்சிகை
வண்ணிகை வங்கப் பாவையோ டின்ன
மருத்துறுப் பெல்லா மொருப்படுத் தடக்கி

---

129. பணிசெயற்குரிய - வேலைசெய்தற்குரிய.
130. ஒற்றி - உணர்ந்து. தளைபிணியுறீஇ - பொருள்களை நன்[றாகக் கட்டி.
131. உறையையுடைய பல பைகளின்.
133. பளிதம் - பச்சைக் கருப்பூரம்.
140. ஒருவா - நீங்காமல்.

பி - ம். 1 னுள்ளுறை. 2 மொருமா. 3 தோழி.

[1] இலைச்சினை யொற்றிய தலைச்சுமைச் சரக்கினர்
நான மண்ணிய நீணிறக் குஞ்சியர்
மணிநிறக் குவளை யணிமலர் செரீஇ
யாப்புற வடக்கிய வாக்கமை சிகையினர்
மல்லிகை யிரீஇ வல்லோர் புணர்ந்த
செம்பொன் மாத்திரை செரீஇய காதினர்
அங்கதிர்ச் சுடர்மணி யணிபெற [2] விரீஇ
மாசின் றிலங்கு மோதிர விரலினர்
வாச நறும்பொடி திமிர்ந்த மார்பினர்

(மகளிர்க்குரியவை)

மகரிகை நிறைய வெகிர்முக மாக்கிப்
பாடி மகளிர் விழையுஞ் சேடொளிப்
பத்திக் கடிப்பும் பவழத் திரியும்
முத்து வடமு [3] முழுமணிக் காசும்
பன்மணித் தாலியு மென்முலைக் கச்சும்
உத்திப் பூணு முளப்படப் பிறவும்
சித்திரக் கிழியின் வித்தக மாகத்
தோன்றத் தூக்கி யாங்கவை யமைத்து
நாற்றிய கைய ரேற்றிய கோலமொடு
நுரைவிரித் தன்ன நுண்ணூற் கலிங்கம்
அரைவிரித் தசைத்த வம்பூங் கச்சொடு
போர்ப்புறு மீக்கோள் யாப்புறத் தசைஇப்
பொற்றொடி நிறைக்கோல் பற்றிய கையினர்

---

152. இலச்சினை - முத்திரை. 153. நானம் - கத்தூரி.
154. செரீஇ - செருகி.
157. மாத்திரை - ஒருவகைக் காதணி; "குழையணி காதினின் மாத்திரையும்...என் சிந்தைவௌவ" திருவிசைப்பா.
158. இரீஇ - இருத்தி. 160. திமிர்ந்த - பூசிய.
161. மகரிகை - மகரவடிவமாகச் செய்த பெட்டி. வெகிர்முகம் - வெளிமுகம்.
162. பாடி மகளிர் - பாசறையிலுள்ள மகளிர்.
167. கிழி - படம். 172. மீக்கோள் - மேற்போர்வை.
173. தொடி - பூண். நிறைக்கோல் - துலாக்கோல்.

பி - ம். 1 இலைச்சுமை. 2 வரீஇ. 3 மும்மணிக்.

கழலுங் கச்சுங் கலிங்கமு மற்றவர்
விழைவன வறிந்து வேறுவே றடக்கிக்
காட்சிமுந் துறுத்த மாட்சிய ராகிப்
படைத்திற மன்னர் பாடி சார்ந்து
விடைப்பே ரமைச்சன் மேனாட் போக்கிய
அறிவொடு புணர்ந்த விசைச்சனு மவ்வழிக்
குறிவயிற் பிழையாது குதிரையொடு தோன்றலும்
அதிராத் தோழனை யவனை யொழித்துக்
[1] குதிரை யாவன கொண்டுவிலை பகரிய
வழுவில் சூழ்ச்சி வயந்தக குமரனைக்
குழுவினோர் கட்குத் தலையெனக் கூறி
வெம்முரண் வென்றியொடு மேல்வந் திறுத்த
ஒன்னா ராடற் கொருப்பா டெய்தி
வழக்கொடு புணர்ந்த [2] வாசி வாணிகம்
உழப்பே மற்றிவ னொன்பதிற் றியாட்டையன்
மண்டமர்த் தானை மகத மன்னனும்
பண்டையன் போலா னுதலிற் படையொடு
தொன்னகர் வரைப்பக மெந்நக ராக்க
இருந்தனம் வலித்தனம் யாமெனப் பலவும்

---

174. மற்றவர் - ஆடவர்.

177. பகைமன்னருடைய பாடியை அடைந்து.

178. விடைப்பேரமைச்சன் - இடபகன்.

180. குதிரையொடு - பலகுதிரைகளுடன்.

181. அதிர்தல் - நடுங்கல். தோழன் - இசைச்சன்.

182. பகரிய - விற்றற்கு.

186. ஒன்னாராடற்கு - பகைவரை வெல்லுதற்கு.

187 - 8. வாசிவாணிகமுழப்பேம் - குதிரை வியாபாரஞ் செய்வேம். இவன் ஒன்பதிற்றியாட்டையன் - இந்த மகத அரசன் ஒன்பது வருடங்களாக எமக்குப் பழக்கமுள்ளான்.

189 - 92. இவ்வரசன் முன்போல நட்புள்ளவனாக இராமையின், இனி இவனைவென்று இராசகிரியத்தை எம் நகராகச் செய்தற்கு யாம் நிச்சயித்தேமென்று.

பி - ம். 1 குதிரைமாவன. 2 வாசிசவாணிகம்.

பொக்க முடையவை பொருந்தக் கூறிப்
பகைகொண் மன்ன னகநகர் வரைப்பின்
யாவ ராயினு மறிந்துவந் தடைவது
காணுங் காலைக் கரும நமக்கெனக்
கணங்கொண் மன்னரு மிணங்குவன ராகிப்

(பகைமன்னர் செயல்)

பெரும்பரி சார மொருங்குட னருளி
அற்ற மவர்மாட் டோற்றின ராகி
அருத்த மருங்கல நிரைத்தனர் தந்திட்
டின்றைக் கொண்டு மிவணி ராமினென்
றொன்றிய காதலோ டுண்ணெகிழ்ந் துரைப்ப

(உதயணன் முதலியோர் செயல்)

வத்தவ ரிறைவனொடு மொய்த்திறை கொண்டு
பாடியுட் டமக்கிடம் பாற்படுத் தமைத்து
வீட்டின தளவும் விறற்படை வீரமும்
கூட்ட மன்னர் குறித்தவும் பிறவும்
இருளும் பகலு மருவின ராராய்ந்
தருந்திற லாள ரொருங்குயி ருண்ணும்
கூற்றத் தன்ன வாற்றல ராகி

---

193. ரு. 19 : 101 - 2. "பொய்சொன்னாலும் பொருந்தச் சொல்" என்னும் பழமொழியின் கருத்து இவ்வடியில் அமைந்துளது.

194 - 6. யாரேனும் நகருட்சென்று அங்கே நிகழ்வனவற்றை அறிந்து வருவது நமக்கு இன்றியமையாத செயலாகுமென்றுகூற.

198. பரிசாரம் - வழிபாடு ; க. 37 : 111.

199. அற்றம் - தருசகனுடைய சோர்வு அல்லது இரகசியம்.

200. அருத்தம் - பொருள்.

201. இவணிராமின் - இவ்விடத்திருங்கள்.

202. உரைப்ப - விரிசிகள் முதலியோர் சொல்ல.

204. பாடியுள் - பகைவருடைய பாசறையில்.

205. வீடு - படைவீடு.

206. கூட்டமன்னர் - பகைமன்னராகிய எண்மர் ; ரு. 17 : 38. இவர் சங்கமன்னரெனவும் வழங்கப்படுவர் ; ரு : ௨0 - ஆம் உறுப்பின் பெயராகிய சங்கமன்னருடைந்த தென்பதனாலறிக.

208. அருந்திறலாளர் - உதயணன் முதலியோர்.

208 - 9. ஒருங்குயிருண்ணுங் கூற்றமென்பதை, "எருமைக் கடும் பரியூர்வோ னுயிர்த்தொகை, யொருபக லெல்லையி னுண்ணும்" (சிலப். உசு : 215-6) என்பதனாலும் உணர்க.

(உதயணனுடைய வீரர் இரவிற் போர்புரிதல்)

மண்டில மறைந்த மயங்கிருள் யாமத்
தெண்டிசை மருங்கினு மின்னுழி யெறிதுமென்
றறியச் சூழ்ந்த குறியின ராகி
நூலிற் பரந்த கோல வீதியுட்
படைநகர் வரைப்பகம் பறைக்க ணெருக்கிப்
பாடி காவல [1]ரோடியாண் டெறிந்து
புறக்காப் பமைத்துத் தலைக்காப் பிருக்கும்
வல்வில் விளையர்க் கெல்லை தோறும்
காப்புநன் கிகழன்மின் கண்படை யுறந்தென்
றியாப்புறக் கூறி யடங்கிய பொழுதிற்
கலங்கத் தாக்கலின் மெலிந்த தாகி
[2] உடையினு முடையா தாயினும் யாவரும்
அடையுந் தான மறியக் கூறி
நாற்பால் வகுத்து மேற்பா லமைத்துக்
காவலன் றன்னையுங் காவலு ணிறீஇப்
பொற்புடைப் புரவி பொலிய வேறி
நற்படை நலியா நன்மையொடு பொலிந்த
சாலிகைக் கவயங் கோல மாகப்
புக்க மெய்யினர் பூந்தார் மார்பிற்

---

210. மண்டிலம் - சூரியமண்டலம். யாமத்து - நள்ளிரவில்.
211. இன்னுழி எறிதும் - இன்ன இடத்தில் எறிவேம்.
213. வீதி - பாடியிலுள்ள மறுகு.
214. பறைக்கணெருக்கி - பறையடித்து.
215 - 6. பாடிகாவலரைப் புறக்காப்பமைத்து.
218. உறந்து - மிகுந்து ; உறந்து இகழன்மினென்க.
219. அவர்கள் தமக்கு அடங்கியபொழுதில்.
221. பகைவர் படையுடைந்தாலும்.
222. தாம் எல்லோருங் கூடுமிடத்தை.
223. தம்மை நால்வகைப்படுத்தி.
226. படைநலியா - ஆயுதங்களாற் போழப்படாத.
227. சாலிகை - கவசம் ; சாலிகைக் கவயம், இருபெயரொட்டு.

பி - ம். 1 ரோடியூண்டெறிந்து. 2 உடையும்.

ருளாண் கடுந் [1]திறல் விரிசிகன் வாழ்கென
மேலாண் மல்லன் பாடி காத்த
நீலக் கச்சை நிரைகழன் மறவரை
வேலிற் சாய்த்துங் கோல மான்றேர்
அடவி வாழ்கென வார்த்தன ருராஅய்த்
தடவரை மார்பிற் றளராச் செங்கோல்
[2] மிலேச்சன் வாழ்கெனத் தலைக்காப் பிருந்த
தண்ட மள்ளரைத் தபுத்துயி ருண்டும்
கொண்ட வார்ப்பொடு கூட வெலிச்செவி
பண்டரும் பல்லியம் பாற்படத் [3]துவைத்தும்
விறல்வே சாலி பாடி குறுகி
அடலருஞ் சீற்றத் தரசுபல கடந்த
விடலரும் பைந்தார் வேந்தருள் வேந்தன்
[4] சங்கரன் வாழ்கெனத் தங்கல ரெறிந்தும்
வத்தவன் கொண்ட மாமுர சியக்கி
அயிலிற் புனைந்த வெயில்புரை யொள்வாள்
உரீஇய கைய ராகி யொரீஇக்
காவன் மறவரைக் கண்படை யகத்தே
வீழ நூறி வேழந் தொலைச்சி
மலையெனக் கவிழ மாமறித் திடாஅக்
கொலைவினைப் படைமாக் கொடியணி நெடுந்தேர்
வத்தவன் மறவர் மொய்த்தன ரெறியக்
கடுவளி யுற்ற கடலி னுராஅய்

---

229. தம்முடைய தலைவனை வாழ்த்திப் போர்தொடங்குதல் வீரர்க்கு இயல்பு; சீவக. 778 - ஆம் பாடலைப் பார்க்க.

229 - 32. விரிசிகன்வீரர் பொருகின்றாரென்று எண்ணும்படி மல்லன் பாடிகாத்தமறவரைத் தாக்கியும். 233. அடவி - ஓரரசன்.

உராஅய் (233) உயிருண்டும் (236.)

237 - 8. எலிச்செவி யரசனுடைய முரசுகளை முழக்கியும்; அயோத்தியரசன்பெயர் இங்கே கூறப்படாமையின், எலிச்செவியாசனுடைய முரசு முழங்கியது அவன் பாடியிலென்று கொள்ளவேண்டும்.

239. வேசாலி - ஓரரசன். 248. மா - யானை.

249. மா - குதிரை.

பி - ம்.— 1 திறற்றருசகன். 2 மலேச்சன். 3 துவைக்கும். 4 சங்கமன்.

அடலரும் பெரும்படை யார்ப்பொடு தொடங்கித்
தம்முட் டாக்கிக் கைம்மயக் கெய்தி
மதக்களி யானை வத்தவன் வாழ்கவென்
றுரைப்ப மற்றவ ரறிந்தன ராகி
எம்வயி னெம்வயி னெண்ணினர் கோளெனத்
தம்வயிற் றம்முளுந் தெளியா ராகிப்
பாடி யருங்கலம் பட்டுழிக் கிடப்ப
நீடிரு ளகத்து [1] நீங்குதல் பொருளெனச்
செவிசெவி யறியாச் செயலின ராகித்
தவிர்வில் வேகமொடு தலைவந் திறுத்த
கடுந்தொழின் மன்ன ருடைந்தன ரோடி
அடைந்தனர் மாதோ வரணமை மலையென்.

க௭—இரவெழுந்தது முற்றிற்று.

---

252. பெரும்படை - பகைப்படை.

255. அறிந்தனராகி - இங்ஙனம் செய்வித்தோர் உதயணனுடைய வீரரென்று அறிந்து. 263. மலையை அடைந்தனர்.

பி - ம். 1 நீக்குதல்.

---

## க௮—தருசகனோடு கூடியது.

அரணமை பெருமலை யடைவது பொருளென
முரணமை மன்னர் முடுகிய பின்னர்

(தோழர் செயல்)

ஆளூறு படாமைக் கோளூறு புரிந்த

---

க௮—தருசகனோடு கூடியது.

[பகைவரை வென்ற உதயணன் வயந்தகன் வாயிலாகத் தருசகனை யடைந்து அளவளாவியது இதனால் அறியலாகும்.]

2. மன்னர் - பகையரசர்.

3. ஆள் ஊறுபடாமை - பகைவரைச் சார்ந்தவர்களுள் ஓராளும் புண்படாதபடி. கோள் - அவர்களுடைய கொள்கையை.

செம்ம லாளர் தம்முட் கூடி
ஒன்னா மன்னரை யோட்டின மாதலின்
மின்னேர் சாயலை மேயநம் பெருமகற்
காக்க முண்டெனுஞ் சூழ்ச்சியோ டொருபாற்
புலர்ந்த காலை மலர்ந்தவ ணணுகிக்
களங்கரை கண்டு துளங்குபு வருவோர்
மகத மன்னற் குகவை யாகக்
கோடாச் செங்கோற் குருகுலத் தரசன்
ஓடாக் கழற்கா லுதயண குமரன்
கோயில் வேவினு ளாய்வளைப் பணைத்தோட்
டேவி வீயத் தீரா வவலமொடு
தன்னா டகன்று பன்னாடு படர்ந்து
புலம்பிவட் டீர்ந்து போகிய போர்த்தோன்
சலந்தீர் பெரும்புகழ்ச் சதானிக வரசனும்
மறப்பெருந் தானை மகத மன்னனும்
சிறப்புடைக் கிழமை செய்ததை யறிதலின்

---

4. செம்மலாளர் - தலைமையையுடைய வீரர் ; இவர் உதயணனைச் சார்ந்தவர்.

3 - 4. "ஆளற்ற மின்றி யலர்தாரவன் றோழரோடும், கோளுற்ற கோவ னிரைமீட்டனன்" சீவக. 455.

5. பகைவரை யாம் ஓடச்செய்தமையின்.

6. சாயலை - பதுமாபதியை. மேய - விரும்பிய.

8. மலர்ந்து - முகமலர்ந்து.

9. களம் - போர்க்களம். வருவோர் - உருமண்ணுவா முதலியோர்.

10. ழ. ௫. 20 : 128. 'மகத மன்னற்கு' என்பது முதலியன வயந்தகனை நோக்கித் தோழர் கூறுவன.

11. உதயணன் குலம், குருகுலம் ; உ. 11 : 127, அடிக்.

11 - 2. "கோடாத செங்கோற் குளிர்வெண்குடைக் கோதை வெள்வேல், லோடாத தானை" (சீவக. 7.) 14. தேவி - வாசவதத்தை.

16. இவண் - இந்த நகரில். தீர்ந்து போகிய - தீர்ந்துபோதற்கு.

17. சதானிகவரசன் - உதயணன் தந்தை.

18. மகத மன்னன் - தருசகன் தந்தை.

17 - 9. அவ்விருவரும் நட்புரிமை பூண்டமையை உதயணன் அறிந்தமையால்.

[1] அகப்பாட் டண்மைய னல்லதை யிகப்பத்
தாதலர் பைந்தார்த் தருசக னமக்கு
வேறல னவனை வென்றியி னீக்கி
மாறுசெயற் கிருந்த மன்னரை யோட்டியது
பண்ணி கார மாகக் கண்ணுற்று
முற்பாற் கிழமை முதலற வின்றி
நற்கியாப் புறீஇப் போது நாமெனச்
சிறந்த தோழர் சிலரொடு சென்று
விரவுமலர்த் தாரோ யிரவெறிந் தகற்றினன்
என்பது கூறென மன்பெருஞ் சீர்த்தி
வயந்தக குமரனை வாயி லாகப்

(வயந்தகன் செயல்)

போக்கிய பின்றையவன் புனைநகர் வீதியுட்
கேட்போர்க் கெல்லாம் [2] வேட்கை யுடைத்தா
மறைத்த வின்றி மறுகுதோ றறைய

(தருசகன் செயல்)

அகன்பெருந் தானை யரசத் தாணியுள்
நிகழ்ந்த திற்றென நெடுந்தகை கேட்டு
நன்னாடு நடுக்க முறீஇத் தன்மேல்
ஒன்னா மன்ன ருடன்றுவரு காலை
வணக்கும் வாயில் காணான் மம்மரொடு

20. அகப்பாட்டு அண்மையன் அல்லதை - மிகநெருங்கியவனல்லனாக இருத்தலை; இகப்ப - கடத்தற்கு ; மிகவும் நெருங்கிய அன்பனாதற்கு.
23. அது - பகைவரையோட்டும் அச்செய்கையே.
24. பண்ணிகாரமாக - காணிக்கையாக.
25. முதலறவு - முதலற்றுப் போதல். 26. நற்கு - நன்றாக.
28. இரவெறிந்து - இரவில் தாக்கி ; ௩. 17 : 92.
உதயண குமரன் (12) அகற்றினன் (28.)
30. வாயிலாக - தூதாக. 31. அவன் - வயந்தகன்.
வருவோர் (9) போக்கிய பின்றை (31.)
35. நிகழ்ந்தது - பகைவர் போர் செய்தற்கு வந்தது. நெடுந்தகை - தருசகன்.
36 - 9. பகைவரை வணக்கும் வழியறியாமலிருந்த அவனுக்கு.
பி - ம். 1 அகர்ப்பாடின்மையன். 2 கேட்டகை.

நினைப்புள் ளுறுத்த நெஞ்சமொ டிருந்தோற்கு
வென்றி மாற்றஞ் சென்றுசெவிக் கிசைப்பப்
பூப்புரி முற்றம் பொலியப் புகுந்து
வாய்ப்பொரு ளாக வறிந்துவந் தோர்களைக்
காட்டுக விரைந்தெனக் காவல னருள
நகரங் காடிதொறும் பகர்வன னறையும்
வாட்டொழிற் றடக்கை வயந்தகற் காட்டி
உட்பட் டதனை யொழிவின் றுணர்ந்துநின்
கட்பட் டுணர்த்துதல் கரும மாக
வந்தன னிவனென வெந்திறல் வேந்தன்
பருகு வன்ன பண்பின னாகி
[1] அருகர் மாற்ற மங்கையி னவித்துக்
கேட்குஞ் செவ்வி நோக்கம் வேட்ப
இருபெரு மன்ன ரிறைவருந் தம்முள்
ஒருபெருங் கிழமை யுண்மை யுணர்த்தலும்
வயந்தகன் வாயது நிற்க வுயர்ந்த
நண்பே யன்றி நம்மொடு புணர்ந்த
கண்போற் கிழமைக் கலப்பு முண்டெனத்
தானை நாப்பட் டானெடுத் துரைத்து
வீணை நவின்ற விறல்வே லுதயணன்
இவண்வரப் பெற்றேன் றவமிக வுடையெனென்
றேத மின்மையு நீதியும் வினாஅய்
இன்னு மன்ன ரிகலடு பெரும்படை
தாக்கிய வாறுந் தகரா றூறிப்
போக்கிய வாறும் போந்த வண்ணமும்
முறைமையிற் கேட்டு நிறைநீர் வரைப்பிற்

---

42. உண்மையாக அறிந்துவந்தவர்களை.
45. வயந்தகனைக் கொணர்ந்து காட்டி.
48. என - என்று அறியச்சென்றோர் கூற.
49. "பருகு காதலிற் பாடி யாடினார்" சீவக. 1765.
50. அருகர் - சமீபத்தில் உள்ள. 52. தந்தைமாரிருவரும்.
56. கிழமை - உரிமை. 57. தான் - அரசன்.
59. என்று - என்று நினைந்து. 60. ஏதம் - துன்பம்.
64. தருசகன் கேட்டு.

பி - ம். [1] அருகன்.

கெட்ட காலையுங் கேட்டோ ருவப்ப
நட்டோர்க் காற்று நன்ன ராளன்
வரவெதிர் கொள்கென வாயிலும் வீதியும்
விரைமலர்ப் பூங்கொடி வேறுபட வுயரி
வனப்பொடு புணர்ந்த வார்கவுள் வேழம்
சினப்போ ரண்ணற்குச் செல்கெனப் போக்கிக்

(தருசகன் உதயணனை எதிர்கொள்ளச் செல்லுதல்)

குலத்திற் றன்னொடு நிகர்க்குந னாதலிற்
கவற்சியொடு போந்த காவலன் முன்னர்ப்
புகற்சியொடு சேறல் பொருத்த மின்றெனப்
போற்றுங் கவரியுங் குடையுங் கோலமும்
மாற்றுவன னாகி மகதவர் கோமான்
இடுமணி யில்லதோர் பிடிமிசை யேறிப்
படுமணி வாயில் பலரொடும் போதர
வானுய ருலகம் வழுக்குபு வீழ்ந்த
தேனுயர் நறுந்தார்த் திறலோன் போலத்
தோழர் சூழ வேழ மேல்கொண்
டுதையண குமரன் புகுதர வோடிச்

(சிலர் தருசகனைத் தடுத்தல்)

சிதைபொரு டெரியுஞ் [1] செந்நெறி யாளர்
கடல்கண் டன்ன வடலருந் தானையை
இனைய கூட்டமொ டெண்ணு தகம்புக்கு

---

66. ஆற்றும் - உபகாரஞ் செய்யும்.

66 - 7. உதயணனை எதிர்கொள்கவென்று கூற.

70. அண்ணற்கு - உதயணனுக்கு.

73. புகற்சியொடு - தான் விரும்பிய பொருள்களுடன்.

75 - 7. மாற்றுவனனாகி - மாற்றி. மணியில்லாத பெண்யானை மேலேறித் தருசகன் போதர; "மணியிலாக் குஞ்சரம் வேந்தூர்த லின்னா" (இன்னா. 14) என்பாராயினும் தேவியின் பிரிவால் துன்புற்றிருக்கும் உதயணன்முன் ஆடம்பரமின்றிச் செல்லவெண்ணித் தருசகன் இங்ஙனஞ் சென்றான். 79. திறலோன் - ஒருதேவன்.

82. செந்நெறியாளர் - தருசகன் மந்திரிமார்.

83. தானையை - சேனையையுடையாய்.

பி - ம். [1] சென்னெறி.

வினைமேம் பட்ட வென்றி வேந்தனைத்
தெளிவது தீதெனச் சேர்ந்துசென் றிசைப்ப

(தருசகன் உதயணனை எதிர்கொள்ளல்)

நட்புவலைக் கிழமையி னம்பொருட் டாக
உட்குறு பெரும்படை யுலைத்த வொருவனை
வேறெனக் கருதுதல் விழுப்ப மன்றெனத்
தேறக் காட்டித் தெளிவு முந்துறீஇச்
சென்றுகண் ணுற்ற குன்று...........
இடத்தொ டொப்புமை நோக்கி யிருவரும்
தடக்கை பிணைஇச் சமயக் காட்சியர்
அன்பிற் கலந்த வின்பக் கட்டுரை
இருவருந் தம்மு ளேற்பவை கூறித்
திருவமர் கோயில் சென்றுபுக் கவ்வழி

(தருசகன் உதயணனை உபசரித்து இருக்கச்செய்தல்)

உஞ்சையம் பெரும்பதி யுழக்குபு கொல்லும்
வெஞ்சின வேழத்து வெகுட்சி நீக்கிப்
பல்லுயிர்ப் பருவர லோம்பிய பெருமகன்
மல்லற் றானை வத்தவர் கோமாற்
கொன்னு மன்ன ருடல்சின முருக்கி
இன்னா நீக்கலு மேயர் [1] குலத்தோற்
கியைந்துவந் ததுவென வியந்துவிரல் விதிர்த்துப்
பக்க மாக்க [2] டத்தமு ளுரைக்கும்
உறுபுகழ்க் கிளவி சிறிய கேளாத்
தானு மவனுந் தானத் திழிந்தோர்
மணிக்கான் மண்டபத் தணித்தக விருந்து
தொன்றுமுதிர் தொடர்பே யன்றியுந் தோன்ற
அன்றைக் கிழமையு மாற்ற வளைஇப்

---

85. உதயணனை. 88. ஒருவனை - உதயணனை.
93. பிணைஇ - பிணைத்து. 99. பெருமகன் - உதயணன்.
102. ஏயர்குலத்தோனென்றது, உதயணனை.
103. விரல் விதிர்த்தல், வியப்புக் குறிப்பு.
105. கேளா - கேட்டு. 109. அளைஇ - கலந்து.

பி - ம். 1 குலத்தோர்க்கியைந்து. 2 டத்தமுறைக்கும்.

பள்ளி மாடமொடு கோயிலும் பாற்படுத்
தெள்ளி வந்த வின்னு மன்னரைப்
போரடு வருத்தந் தீரப் புகுகெனத்
தாருடை வேந்தன் முன்பின் சென்று
கோயில் புகீஇ வாயிலு ளொழிந்து
விருப்பிற் றீரான் வேண்டுவ வமைத்து
வருத்த மோம்பினன் வத்தவற் பெற்றென்.

கய—தருசகனோடு கூடியது முற்றிற்று.

---

110. பாற்படுத்து - அமைத்து. 112. புகுகென்று கூறி.

---

## கக—படை தலைக்கொண்டது.

(தருசகன் செயல்)

வத்தவற் பெற்ற வலிப்பின னாகி
மத்த யானை மகத மன்னனும்
அருமுர ணடுதொழி [1] லிளமைய னிவனொடு
தரும சாத்திரந் தலைக்கொள் கென்று
பூசனை வழக்கொடு புரையவை நடுவண்
[2] வாசனைக் கேள்வி வழிமுறை தொடங்கலிற்

(ஓடிய பகைமன்னர் மீட்டும் போர்செய்தற்கு வரல்)

பரந்த மன்னர் நிரந்துகண் கூடிக்
கற்ற நூலிற் செற்ற வேந்தன்

---

கக—படைதலைக் கொண்டது.

[மீட்டும் போர்செய்தற்கு வந்த பகைமன்னருடைய படையும் அதை வெல்லுதற்குச் சென்ற தருசகனுடைய படையும் போர் செய்தற்குக் கலப்புற்றமை இதனால் அறியலாகும்].

4. தலைக்கொள்கு - தலைக்கொள்வேன்.
5. புரையவை - உயர்ந்தோர் சபை.
7. மன்னர் - பகையரசர்.

பி - ம். 1 லிளைமையினின்னொடு. 2 வாசினை.

வேறுபடக் காட்டிக் கூறுபட வறுப்பத்
தொலைதல் காரண மாகவது துணிந்த
நிலையி னெஞ்சினர் நும்முள் யாரெனத்
தலைக்கூட் டமைத்துத் தம்முள் வினவத்
தெய்வ மிடைநிலை யாக வதன்றிறம்
ஐயந் தீர வறிவம் யாமெனத்
தம்பாற் றெளிந்த தன்மைய ராகி
வெம்போர் நிகழ்ச்சி யென்கொன்மற் றிதுவென
வருபடை யொற்றரை வழுக்கி மற்றவன்
பொருபடை போதரப் புணர்த்த தாகுமென்
றதுவும் பிறவு மாய்வுழிச் செவ்வியிற்
பேணி வாழும் பெற்றிய ராகி
வாணிக வுருவொடு வந்திடைப் புகுந்த
வீர ராகுவோர் வேறுதிரிந் தொடுங்கி
ஆரிருண் மறைஇ யருஞ்சின மழித்தோர்
போந்தில ராதலிற் பொருத்த முடைத்தென
வேந்தனில் வந்தோர் வினவுதல் வேண்டா
அமர்மேற் கொண்டோர் யாரே யாயினும்
தமராக் கருதித் தம்வயிற் றெளிதல்
ஏல்வன் றென்ன மேலவை [1] கிளவா
இளிவஞ்சு முனிவரே யாயினு மற்றினித்
தெளிவஞ்சு தகைத்தெனத் தெளிவுமுந் துறீஇ
வஞ்சினஞ் செய்து வெஞ்சினம் பெருகக்
கெடுத்த லூற்றமொடு கடுத்தன ராகிப்
பெயர்த்தும் பெரும்படை தொகுத்தனர் கொண்டு

---

10. அது - அதுசெய்தற்கு.
பரந்த மன்னர் (7) தம்முள் வினவ (12.)
17. வழுக்கி - தவறி நம்முள் வரச்செய்து. அவன் - தருசகன்.
அவன் (17) புணர்த்ததாகும் (18.)
24. போந்திலர் - இப்பொழுது வந்திலர்.
28. ஏல்வு அன்று - பொருத்தமன்று. 30. தெளிவு - தெளிதல்.
29 - 30. "அற்றாரைத் தேறுத லோம்புக" குறள், 506.
32. கடுத்தனராகி - மிக்கு.

பி - ம். 1 கிளவாது.

(பகைவர் மகதநாட்டுச் சோலைமுதலியவற்றை அழித்தல்)

நன்னாடு நடுங்க நண்ணித் துன்னிய
ஈர நெஞ்சத் தார்வ லாளர்
பாரந் தாங்கும் [1] பழமை போல
இலைக்கொடிச் செல்வமொடு தலைப்பாரந் தோங்கிய
கணைக்கா லிகணையுங் கமுகும் வாழையும்
சினைப்பெரு மாவும் பணைக்காற் பலாவும்
கொழுமுதற் றெங்கொடு முழுமுத றுலைச்சிக்
கழனி [2] விளைநெற் கனையெரி கொளீஇப்
பழன நன்னாடு படியழித் துராஅய்ச்
செயிர்ப்பிற் சிறந்தவர் பெயர்ச்சி நோக்கிப்

(பகைவர் செயலைத் தருசகன் அறிந்து படைதிரட்டல்)

படையொற் றாளர் கடுகுபு குறுகிக்
காவலற் கிசைத்துக் கண்டுகை கூப்பி
வேக மன்னர் மீட்டும்வந் திறுத்த
வெங்கட் செய்தொழி றன்கட் கூறலும்
மறுநோய் மக்களி னாழ்ந்த மனத்தன்
[3] செறுவேல் வேந்தன் செய்வதை யறியான்
கூட்டம் பெருக்கி மீட்டுவந் தனரெனின்
ஆற்ற லெல்லா மளந்தபி னல்ல
தூக்க மிலரெனத் தூக்க மின்றி
மனத்தி னெண்ணி மற்றது கரந்து
சினத்த நோக்கமொடு சீறுபு வெகுண்டு
செருவுடை மன்னரைச் சென்றுமே னெருங்குதும்
பொருபடை தொகுத்துப் போதுகென் றேவலின்

---

34. 'துன்னிய' என்பது முதலியன இகணைமரத்திற்கு அடை.
38. இகணை ஒருமரமென்பது, "இலையணி யிகணையும்" (உ. 9 : 8) என்பதனாலும் அதன்குறிப்பாலும் விளங்கும். 41. கனை - மிகுதி.
43. பெயர்ச்சி - மீட்டும் வந்தமை.
45. காவலற்கு - தருசகனுக்கு. 47. ஒற்றர் கூறலும்.
48. மறுநோய்மக்களின் - மீட்டும் நோய் வரப்பெற்ற மனிதர் போல. என (52) எண்ணி (53.) 56. தருசகன் ஏவுதலால்.

பி - ம். 1 படைமை. 2 விழைநெல். 3 செருமேல்.

விருத்தி காரரும் வேண்டியது பெறாஉம்
உரத்தகை யாளரு மொருங்கு [1] வந் தீண்டுக
செருச்செய வலித்தனன் செல்வன் சென்றெனத்
தானை யணியத் தலைத்தா ளணியுள்
யானை யேற்றி யணிமுர சறைதலும்

(உதயணன் செயல்)

வணங்கார் வணக்கிய வத்தவர் பெருமகன்
நுணங்குபொரு ளமைச்சரொ டுணர்ந்தன னாகிக்
கண்ணிய பொருட்குத் திண்ணியது [2] தெரிய
உறுப்போ ரன்ன வுள்பொரு ளமைச்சரும்
மறப்போர் மன்னனு மாணவே றிருந்து
செயற்படு கருமத் தியற்கை யிற்றெனப்
பெயர்த்தும் வருபடை யழிப்பது வலித்து
வயந்தக குமரற் கியைந்தது கூறும்

(தான் போர்செய்யச் செல்வதாகச் சொல்லி உதயணன் வயந்தகனைத் தருசகன்பால் விடுத்தல்)

மயங்கிதழ்ப் படலை மகதவற் கண்டு
செருச்செய் தானைப் பிரச்சோ தனன்றன்
பாவையை யிழந்து பரிவுமுந் துறீஇச்
சாவது துணிந்தியான் சேயிடைப் போந்தனென்
மன்னுயிர் ஞாலத் தின்னுயி ரன்ன
அடுத்த நண்புரைத் [3] தெடுத்தனை யாகத்

---

57. விருத்திகாரர் - போர்செய்தற்பொருட்டே அரசனளித்த சீவிதம் பெற்றிருப்போர். 59. செல்வன் - அரசனாகிய தருசகன்.
60. அணிய - வகுக்கும்படி.
63. நுணங்குபொருள் - நுண்பொருள்.
64. தாம் நினைத்த காரியம் நிறைவேறற்குரிய உறுதியான செயலை [யோசிக்க.
65. அமைச்சர் - உருமண்ணுவா முதலியோர்.
66. மன்னன் - உதயணன். 68. வலித்து - துணிந்து.
69. கூறும் - உதயணன் கூறுவான்.
70. படலை - ஒருவகை மாலை. 72. பாவை - வாசவதத்தை.
73. சேயிடை - நெடுந்தூரம். 75. எடுத்தாயாகும்படி.

பி - ம். 1 வந்தீண்டிக். 2 தெறிய. 3 தெடுத்தகரையாக.

தன்மேல் வந்த தாக்கரும் பொருபடை
என்மேற் கொண்டனெ னாகி முன்னே
எறிந்தனெ னகற்றி யின்பம் பெருகச்
சிறந்ததோர் செய்கை செய்தே னின்னும்
மறிந்துவந் தனரே மாற்றோ ரென்ப
தறிந்தனெ னதன்மாட் டவலம் வேண்டா
என்னி னாதற் [1] கிசைகுவ தாயிற்
பின்ன ரறிய பிறபொருள் வலித்தல்
யான்சென் றிரியினஃ தறிகுந ரில்லைத்
தான்சென் றுறுவழித் தளர்ந்த காலை
மகத மன்னனை மலைந்துவென் றனமென
மிகுதி மன்னர் மேல்வந்து நெருங்கின்
[2] என்னு மன்ன தின்னாத் தரூஉம்
எடுத்துநிலை யரிதென வேதுக் காட்டி
என்குறை யாக வொழிக வெழுச்சி
தன்படை யெல்லாந் தருக வென்னொடும்
அடற்றொழில் யானைப் படைத்தொழில் பயின்றோர்
[3] எனைவ ருளரவ ரனைவரும் யானும்
ஏறுதற் கமைந்த விருங்கவுள் வேழமும்
வீறுபெறப் பண்ணி விரைந்தன வருக
தன்பாற் படைக்குத் தலைவ னாகியோர்
வன்பார் மன்னன் வரினு நன்றெனக்
கூறினன் மற்றெங் கோமக னென்றவற்
றேறக் காட்டி மாறுமொழி கொண்டு
[4] விரைந்தனை வருகெனக் கரைந்தவற் போக்க

---

80. மறிந்து - மீட்டும்.
81. பகைவர் வரவினால் உனக்குத் துன்பம் வேண்டா.
83. அறிய - அறிக; வியங்கோள்.
84. இரியின் - தோல்வியுற்றால்.
88. என்னும் - யாதாகும்.
90. எழுச்சி யொழிக. 99. மாறுமொழி - விடை.
100. கரைந்து - சொல்லி.

பி - ம். 1 இறுக்குவதாயிற். 2 எண்ணுமன்னரின்னாத். 3 இளைவர். 4 விரைந்தனர்வருகக்.

(வயந்தகன் செயல்)

வாயன் றாயினும் வந்துகண் ணுற்றோர்
மேவ வுரைக்கும் மேதகு வாக்கியம்
வல்ல னாகிய வயந்தக குமரன்
செல்வன் றலைத்தாட் சென்றுகண் ணெய்தி
இறைவன் மாற்றமுங் குறையுங் கூற

(தருசகன் செயல்)

மகதவ ரிறைவனுந் தமர்களைத் தரீஇநமக்
குறுதி வேண்டு முதயண னுரையிது
மறுமொழி யாதென மந்திர மாக்கள்
யாதவன் வலித்த தப்பொரு ளறிதல்
நீதன் றுதலிற் றெளிந்து செய்கென
மறுத்தல் செல்லான் வாழி யவர்நிலை
அழிக்கும் வாயி லறியுந் தானென
ஒன்றின னுரைத்ததை யொன்றுவ னாகி
அருஞ்சின யானையும் புரவியு மமைந்த
இருஞ்சின விளையரும் வருகென வேவி

(கேகயத்தரசன் எண்ணுதலும் தெரிவித்தலும்)

வலிகெழு நோன்றாள் வத்தவன் வலித்ததும்
கலிகெழு மைத்துனன் கருத்து நோக்கி
முற்கிளை வேண்டுநர் மற்றவர்க் கியைந்த
[1] அற்றந் தீர்க்கினது பிற்பயம் பெருகும்
அற்று மன்றிப் பற்று மன்னர்
மேல்வந் திறுப்ப வேல்பல படையொடு

---

101. வாய் அன்றாயினும் - உண்மை அன்றாயினும்.
101 - 3. ௩. 17 : 193. 104. செல்வன் - தருசகன்.
105. இறைவன் - உதயணன்.
108. என - என்று தருசகன் கேட்ப.
109. அவன் வலித்தது - உதயணன் துணிந்தது.
110. என - என்று மந்திரிகள் கூற.
113. உதயணனுரைத்ததை. ஒன்றியவன் - தருசகன்.
117. மைத்துனன் - இங்கே தருசகன். 119. அற்றம் - சோர்வு.

பி - ம். 1 எற்றந்.

மாயா திருப்பிற் கிளையோ மற்றிவன்
வேற்றா னெனவு மாற்றா னெனவும்
போற்றா மன்னர் புறஞ்சொற் படுமெனக்
கேகயத் தரசனுங் கிளந்துபல வெண்ணிக்
காவல் வேந்தனைக் கண்டுகை கூப்பி
வானோர் பெரும்படை வந்த தாயினும்
யானே யமையு மடிக ளென்னை
விடுத்தற் பாற்றென வெடுத்தவ னிசைப்பத்

(தருசகன் எண்ணல்)

தந்தை பெருங்கிளை காரண மாக
முந்து மப்படை முருங்கத் தாக்கி
வந்த வேந்தன் வலித்ததுந் தங்கைக்குச்
சென்ற குமரன் முந்தைக் கூறிய
மாற்றமு மனத்தே யாற்றுளி புடைபெயர்ந்
தொலிக்குங் கழற்கா லுதயண குமரன்
வலிக்கும் பொருண்மேல் வலித்தன னாகித்

(தருசகன் கேகய அரசனைப் போருக்கு விடுத்தல்)

தன்படைத் தலைவ னாக வெம்மொடே
வன்படை யாளன் வருக வென்றனன்
மாண்ட வத்தவ ராண்டகை யாதலின்
நம்மேல் வந்த வெம்முரண் வீரர்

---

122. மாய்ந்தால், தான் கிளையாதல் கூடும்; "உதவாம லொருவன் செய்த வுதவிக்குக் கைம் மாறாக, மதவானை யனைய மைந்த மற்றுமுண் டாக வற்றோ, சிதையாத செருவி லன்னான் முன்சென்று செறுநர் மார்பில், உதையானே லுதையுண் டாவி யுலையானே லுலகின் மன்னோ" (கம்ப. கிட்கிந்தை. 66) என்பதும் இக்கருத்தை வலியுறுத்தும்.

123. வேற்றான் - அயலான்.

125. கிளந்து - வெளியாகச் சொல்லி.

126. வேந்தனை - தருசகனை. 127 - 8. மதுரைக். 199 - 201.

130. தந்தை - சதானிகன்; 18 : 17 - 9.

132. வேந்தன் - உதயணன். தங்கைக்கு - தன் தங்கையாகிய பதுமாபதியை மணந்துகொள்ளற் பொருட்டு.

134. ஆற்றுளி - முறைப்படியே. 137 - 8.=96 - 7.

139. வத்தவர் - வத்த நாட்டாருடைய.

தம்மேற் சென்று தருக்கற நூறுதல்
வத்தவ ரிறைவனும் வலித்தன னவனோ
டொத்தனை யாகி யுடன்றமர் செய்ய
வல்லை யாயிற் செல்வது நீதன்
றென்றவன் விடுப்ப நன்றெனா விரும்பி
ஒட்டிய குமர னுள்ள நோக்கி

(தருசகன் வயந்தகனுக்குக் கூறலும் அவனை விடுத்தலும்)

மட்டலர் பைந்தார் [1] மகதவன் வயந்தகற்
குற்ற நண்பி னுயிர்போ லுதயணற்
கிற்றிது கூறுமதி யிளையோள் பொருட்டா
வந்திவ ணிருந்த வெந்திறல் வீரன்
தன்னொடு வந்து மன்னரை யோட்டிப்
போதரத் துணிந்தன னேத மின்றி
ஆகும் வாயி லெண்ணி யப்படை
போக நூக்கல் பொருளெனக் கூறி
மீட்டவற் போக்க வேட்பன்ன் விரும்பியவன்
கூறிய மாற்றங் கோமான் றன்னொடு
வீறிய லமைச்சர் வேறாக் கேட்டுக்
குறையின் வேண்டுங் கரும முறையிற்
றானே முடிந்ததென் றாறு வுவகையன்
யானையும் புரவியு மமையப் பண்ணி
மாண்வினைப் பொலிந்தோர் வருக மற்றோர்
சேனை நாப்பட் சேருக வின்றெனப்
பெயர்த்து மற்றவற் குரைத்தலிற் பெருமகன்

---

144. வல்லையாயின் - வல்லாயானால்.
145. நன்று : உடன்பாட்டுக் குறிப்பு. 147. மகதவன் : எழுவாய்.
149. இதனைக் கூறுவாயாக. 150. வீரன் - கேகய அரசன்.
151. தன்னொடு - உதயணனுடன். 153. வாயில் - வழியை.
155. அவற்போக்க - வயந்தகனை விடுக்க. வேட்பனன் - மணக்க. விரும்பியவன் - கேகயத்தரசன்.
156. கோமான் - உதயணன். 157 - 8. க. 36 : 119.
158 - 9. விரும்பிய காரியம் முடிந்ததென்னும் மகிழ்ச்சியனாகி.
161. வினை - போரில். 163. பெருமகன் - தருசகன்.

பி - ம். 1 மகவதற்பயந்ததற்கு.

களிற்றுப் பாகனை விளித்தன [1] னிறீஇ
அண்ணல் யானை பண்ணி வருகெனக்

(யானைகள்)

கண்ணார் தகைய கவுளிழி கடாத்தன
மண்ணார் நுதலின மாசின் மருப்பின
ஆற்ற லமைந்தன [2] நீற்பாற் புறத்தன
அமர்பண் டறிந்தன வச்ச மில்லன
புகரில் வனப்பின போரிற் கொத்தன
கோலங் கொளீஇச் சீலந் தேற்றின
இருபாற் பக்கமு மெய்து மெறிந்தும்
பொருவோர்ச் [3] செருக்கப் புன்படைக் கருவி
அடக்குபு பண்ணித் துடக்குபு காட்டும்
தோட்டி கொளீஇக் கூட்டுபு நிரைத்த
வேல்வ விளையர் கால்புடை காப்பக்
கோயின் முற்றத் துய்த்தலின் வாய்மொழி
உதயணன் றன்மாட் டுய்க்க விவற்றொடு

(குதிரை முதலியன)

பொருபடைக் குதவும் புரவியும் புரவியொடு
செருவமர் மாந்தருஞ் செல்க விரைந்தென
ஒன்னா [4] ரோட்டிய வுதயணன் கோயிற்
பொன்னார் முற்றம் புகுந்துடன் றுவன்ற

(படைகளின் புறப்பாடு)

அருந்திறல் யானை யமைந்தது நாடி
இரும்பிடர்த் தலையிற் பெருந்தகை மேல்கொள
உயர்ந்த வூக்கத் துருமண் ணுவாவும்
வயந்தக குமரனும் வாய்மொழிந் தாய்ந்த
உயர்ச்சி யுள்ளத் திசைச்சனு மேனைத்

---

164. நிறீஇ - நிறுத்தி. 168. நீல் - நீலநிறம்.

171. சீலம் - பாகன் பயிற்றும் நிலை; ௧. 32 : 56, அடிக்.

174. துடக்குபு - கட்டி. 175. தோட்டி - அங்குசம்.

184. இரும் பிடர்த்தலை - பெரிய கழுத்தினிடத்தே; "யானை யிரும் பிடர்த்தலை யிருந்து" புறநா. ௩.

186. வாய் - உண்மைச் சொல்.

பி - ம். 1 னறீஇ. 2 நாற்பாற். 3 சேர்த்த. 4 ரோட்டியுதயணன்.

தடவரை மார்பி னிடவக னுளப்பட
எந்நூற் கண்ணு மிடம்பா டுடைய
முந்நூற் றறுவர் மொய்த்தொருங் கீண்டி
வலம்படு நமக்கென வலங்கொண் டேற
ஒழிந்த மாந்தர் [1] பொலிந்துபுறங் காப்ப
இறையுடைச் செல்வ மியையத் தழீஇக்
[2] குறைபட லில்லாக் கொற்றமொடு போந்து
முரசுஞ் சங்கு முருடு மொலிப்ப
அரசப் பெருங்கொடி யொருவலத் துயரி
எழுந்த பொழுதிற் றழங்குரன் முரசிற்
றருசக குமரன் முன்பின் வந்து
கேகயத் தரசனைக் காவல் போற்றென
ஓம்படை கூறி [3] யாங்கவ ணொழியப்

(உதயணன் புறப்பாடு)

பவ்வத் தன்ன படையமை நடுவண்
வவ்வற் கெண்ணிய வத்தவ ரிறைவன்
கெடலருஞ் சிறப்பிற் கேகயத் தரசனும்
உடலுநர்க் கடந்த வுருமண் ணுவாவும்
முன்ன ராக முன்னுக வென்றொடு

---

188. ௩. 17 : 178.

189. எந்த நூல்களிலும் விசாலித்த அறிவையுடைய ; "இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினும்" நாலடி. 116.

191. நமக்கு வலம் படும் - நமக்கு வெற்றியுண்டாகும். ஊர்திகளை வலங்கொண்டேறுதல் மரபு ; பெரிய. திருஞான. 216.

193. இறையுடைச் செல்வம் - அரசச்செல்வம்.

195. முருடு - ஒருவகைப் பறை ; "முருடார்ப்ப" சீவக. 1777.

196. வலத்துயரி - வலப்பால் உயர்த்தி ; "ஏற்றுவல னுயரிய" (புறநா. ௫௬) ; "வெள்ளேறு, வலவயி னுயரிய...செல்வன்" முருகு. 151 - 4.

197. தழங்குரல் - முழங்கும் குரல் ; விகாரம் ; "தழங்குரற் பம்பையிற் சாற்றி" (சீவக. 40.) 200. ஓம்படை - பாதுகாப்பு.

202. வவ்வற்கு - பகைவரைக் கைப்பற்றுதற்கு.

203 - 5. கேகயத்தரசனும் உருமண்ணுவாவும் முன்னர்ச் செல்லுக.

பி - ம். 1 பொழிந்துபுறங். 2 குறைவுபடவில்லா. 3 யாங்கவணொழிய.

பின்ன ராவோ ரின்னரென் றுரைத்துக்
கூறுபடப் போக்கி வேறுபடப் பரப்பி
எல்லை யிகந்த விருங்கடல் போலப்
புல்லார் பாடியிற் குறுகலி னொல்லென

(பகைவர் செயல்)

ஒற்றர் மாற்றம் பெற்றுமுன் னிருந்தோர்
வேழமும் புரவியு மூழூழ் விரைஇக்
காழ்மண் டெஃகமொடு காற்படை பரப்பிப்
புண்ணிய முடையம் பொருமிவ ணின்னரை
நன்னர்ப் [1] பெற்றே நாமெனக் கூறி
அங்கண் மாதிரத் ததிர்ச்சி யெய்த
வெங்கண் முரசொடு பல்லியங் கறங்க
அறியச் செய்த குறியுடைக் கொடியர்
கூற்றுல கின்று கொள்ளா தாமென
ஆற்றல் கலந்த வார்ப்பின ராகி
மலைத்துமேல் வந்த மகதவன் படையொடு
தலைப்பெய் தன்றாற் பகைப்படை பரந்தென்.

ககூ—படை தலைக்கோண்டது முற்றிற்று.

---

209. புல்லார் - பகைவர். 210. முன்னிருந்தோர் - பகைவர்,

211. ஊழூழ் விரைஇ - முறைமுறையாகக் கலக்கப்பெற்று.

212. காழ்மண் டெஃகம் - காம்பிலே தைத்த வேல்; "காழ்மண் டெஃகம்" (மலைபடு. 129.) காற்படை - காலாட்படைகளை.

213. பொரும் இவண் - போர் செய்கின்ற இவ்விடத்தே. இன்னரை - இந்த வீரர்களை. 217. குறி - அடையாளம்.

218. இறந்த உயிர்களுக்குக் கூற்றுலகம் இடம் பற்றாது.

221. தலைப்பெய்தன்று - கலந்தது.

பி - ம். [1] பொறேம்.

# உ0—சங்கமன்னர் உடைந்தது.

(காலாட்படைகள்)

பரந்த பெரும்படை யெதிர்ந்த காலை
அருங்கணை நிறைந்த வாவ நாழிகை
பெரும்புறத் திட்ட கருங்கச் சீர்ப்பினர்
[1] பிறர்ப்பிறக் கிடீஇச் சிறப்பிகந் தெள்ளி
நகுவன போலத் தொகைகொண் டார்ப்புறும்
பைங்கழ லணிந்து பரிபசை யில்லா
இசைகொ ணோன்றா ளசைவி லாண்மையர்
வணங்குசிலைச் சாபம் வார்கணை கொளீஇ
நிணம்பட நெஞ்சமு நெற்றியு மழுத்திக்
கைபுடை பரந்து கலங்கத் தாக்குநர்
புடைநிரைத் தாரைக் கடிநீர்க் கைவாள்
படையு நெருக்கிப்.............................
பாலிகை விளிக்கும் பண்ணமை பற்றினர்
மாலையும் வயிரமு மூழூழ் பொங்கக்

---

உ0—சங்கமன்னர் உடைந்தது.

[தருசகனை வெல்லக் கருதித் தம்முட்கூடி மீட்டும் போர் செய்தற்கு வந்த பகையரசரெண்மர் உதயணனால் வெல்லப்பட்டு ஓடினமை இதனால் அறியலாகும்.]

2. ஆவநாழிகை - அம்பறாத்தூணி.

3. கச்சு சீர்ப்பினர் - இழுத்துக்கட்டிய கச்சையுடையவர்.

4. பிறர்ப் பிறக்கிடீஇ - பகைவரைப் புறங்கொடுக்கச் செய்தலால்.

5 - 6. போர் தோறும் பகைவரைவென்றுகட்டிய கழல் பலவாதலின், 'தொகைகொண் டார்ப்புறும் பைங்கழல்' என்றார். பரிபு-வருந்தி.

7. தாள் - முயற்சி. அசைவு - தளர்ச்சி.

8. சிலைச் சாபம் - சிலை மரத்தாற் செய்த வில்; "அஞ்சிலை வல்வில்" (கலி. கடு) என்பதனாலும் அதன் உரையாலும் உணர்க.

9. நெஞ்சம் - மார்பு. 11. தாரை - கூர்மை.

13. பாலிகை விளிக்கும் - கத்திப்பிடியை முறியச் செய்கின்ற; பற்று - பிடிப்பு. "பாலிகை யிடையறப் பிடித்த பாணியர்" சீவக. 2217.

பி - ம். 1 பிறப்பிறகிடீச்.

கால்வ லிளையர் கலங்கத் தாக்கவும்

(குதிரைவீரர்)

படைமிசை நிரைத்த வடிவமை வார்நூற்
சித்திரக் குரத்தின வித்தகக் கைவினைப்
புடைப்பொற் புளகமொடு பொங்குமயி ரணிந்த
அரத்தப் போர்வைய யாப்பமை கச்சின
முற்றுமறை பருமமொடு பொற்பூஞ் சிக்கத்
[1] தாண வட்டத் தியாப்புப் பிணியுறீஇக்
கோண வட்டக் கோல முகத்த
வெண்கடற் றிரையென மிசைமிசை நிவத்தரும்
பொங்குமயி ரிட்ட பொலிவின வாகி
அரிபெய் புட்டி லார்ப்பக் கருவியொடு
மேலோ ருள்ளம் போல நூலோர்
புகழப் பட்ட போர்வல் புரவி
இகழ்த லின்றி யேறிய வீரர்
வெம்முரண் வீரமொடு தம்முட் டாக்கவும்

(யானைவீரர்)

போர்ப்பறை முழக்கினு மார்ப்பினு மழன்று

---

16. படை - ஆயுதங்கள். நிரைத்த : முற்று.

17. குரத்தின - குளம்பையுடையன. [தன ; 24.

18. புளகம் - கண்ணாடி. பொங்குமயிரணிந்த - சாமரையணிந்

20. பருமம் - சேணம் ; " பருமம் பொறுப்பினும் பாய்பரி மாபோற், பொருமுர ணுற்றுத லின்று " நாலடி. 149.

22. கோண வட்டம் - ஒருவகை விருது; இது கோணவட்டமென வும் வழங்கும் ; க. 46 : 62 ; அதுபோன்ற அழகிய முகத்தையுடையன.

25. புட்டில் - கெச்சை ; " அரிபெய் புட்டி லார்ப்ப...பாய்பரி நன்மா " (அகநா. கஉஉ : 19 - 20); " பொன்னரிப் புட்டிலுந் தாரும் பொங்குபு,முன்னுறுத் தார்த்தெழுப் புரவி மொய்த்தவே" (சீவக. 2216.) கருவி - கடிவாளம்.

26. மேலோர் - ஏறிய வீரர் ; "ஏவ லிளிவெனக் கண்ணிப் பாகன், மனக்க ணியக்கம் பூண்டமா னத்து" (பெருங்.) ; " உள்ளம் போற் செல்வ " (சீவக. 1771), " உள்ளம் போல வுற்றுழி யுதவும், புள்ளியற் கலிமா ", தொல். கற்பு. சூ. 53.

30. அழன்று - கோபித்து.

பி - ம். 1 ஆணவட்ட,

கார்ப்பெய லருவியிற் கடாஞ்சொரி கவுள
கொலைநவில் பல்படை கொண்ட மாட்சிய
மலைநிமிர்ந் தன்ன மழகளிற் றெருத்திற்
சிலையுங் கணையுஞ் சீர்ப்பமை வட்டும்
மழுவுங் குந்தமு முழு [1] மயிற் பீலியும்
சங்கமுங் கணையமுஞ் சத்தியும் வாளும்
பிண்டி பாலமும் பிறவு மெல்லாம்
தண்டாக் கருவி தாந்துறை போகிய
வண்டார் தெரியன் [2] மறவர் மயங்கி
அருநில மதிரத் திரிதர லோவா
வீதி வட்டமொ [3] டாதிய கதிவயிற்
பாழி பயிற்றி நூழி லாட்டவும்

(போர் நிகழ்ச்சி)

போர்க்கள வட்டங் கார்க்கட லொலியெனக்
கடற்படைக் கம்பலை கலந்த காலை
மடற் [4] பனை யிடைத்துணி கடுப்பப் பல்லூழ்
அடக்கரும் வேழத் தடக்கை வீழவும்
வார்ப்பண் புதைஇய போர்ப்பமை வனப்பிற்
றுடித்தலை போல வடித்தலை யறவும்

31. அருவியின் - அருவிபோல. 32. படை - ஆயுதங்கள்.
34. சீர்ப்பு - சிறத்தல். வட்டு - ஒருவகை ஆயுதம்.
35. குந்தம் - கைவேல். மயிற்பீலி - மயிலின் குரல்போன்ற ஒலியையுடைய சிறுசின்னம்.
36. கணையம் - தண்டாயுதம். சத்தி - வேல்.
38. துறை போகிய - முற்றக்கற்ற.
41. வீதி, வட்டமென்பன யானையின் கதிவிசேடங்கள்; "வினை தரு வட்டமும் வீதியும் பத்தியும்" சீவக. 1839.
42. நூழிலாட்ட - கொன்றுகுவிக்க.
45 - 6. துதிக்கைக்குப் பனந்துண்டம் உவமை; புறநா. ௫௰ : 22 - 3.
47 - 8. வார்ப்பண் புதைஇய - வாரால் கட்டப்பட்ட. போர்ப்பு - போர்த்தல். துடித்தலை - உடுக்கையின் கண்; துடித்தலை யானைக் கன்றுகளின் கால்களுக்கு உவமை.

பி - ம். 1 மயிர்ப்பீலி. 2 மறவரும். 3 ஆகிய. 4 பனை.

சுற்றார் கருவிற் றுணியெனத் தோன்றி
அற்ற மில்வா லற்றன கிடப்பவும்
சித்திரத் தாமரைப் பத்திரப் பரூஉத்தொடி
நுதிமுக வெண்கோடு முதலற வெறிதலிற்
செக்கர்க் குளிக்கும் வெண்பிறை போல
உட்குவரு குருதியு ளுடன்பல வீழவும்
கார்முகக் கடுமுகி லூர்தி யாக
விசும்பிடைத் திரிதரும் விஞ்சை மாந்தரைக்
கடுந்தொழில் விச்சை கற்ற மாற்றவர்
மறத்தா னெருங்கி மற்றவ ருடனே
நிறத்தே றுண்டு நிலத்துவீழ் வதுபோல்
மார்பின் வெம்படை யார [1] மாந்தி
வீர நோக்கினர் வேழமொடு வீழவும்
பூணேற் றகன்ற புடைகிள ரகலத்துத்
தாமேற் றழுத்திய சத்தி வாங்கிப்
புரைசை யுய்த்த பொருகழற் காலினர்

---

49 - 50. யானைவால்களுக்கு வில்லின் துண்டம் உவமை.

51. தாமரைமலர்போன்ற வேலைப்பாடு பொருந்திய அழகிய பூணையுடைய.

52. கோடு - கொம்பு. முதலற - அடி அறும்படி.

54. உட்கு - அச்சம்.

52 - 4. குருதியிலழுந்தும் யானைக்கோட்டிற்குச் செவ்வானத்தி லழுந்தும் பிறை உவமை.

51 - 4. = பெரும்பாண். 412 - 4.

55 - 61. ஒரு தொடர். 55. கார்முகம் - இந்திரவில்.

55 - 6. மேகத்தை ஊர்தியாகக் கொண்டு ஆகாயத்திற் றிரியும் வித்தியாதரரை. 57. மாற்றவர் - பகைவர்.

59. நிறத்து ஏறுண்டு - மார்பில் ஆயுதங்கள் எறியப்பெற்று; நிறம் - உயிர்நிலையுமாம்.

60. மாந்தி - உட்கொண்டு. 62 - 7. ஒருதொடர்.

62. அகலத்து - மார்பில். 63. சத்தி - வேற்படையை.

62 - 3. "கைவேல் களிற்றொடு போக்கி வருபவன், மெய்வேல் பறியா நகும்" குறள், 774.

64. புரைசை - யானைக்கழுத்திற் கட்டுங் கயிறு.

பி - ம். [1] மாந்திய.

வரைமிசை [1] மறிநரின் மறப்படை திருத்தி
வெம்முரண் வேழம் வீழ்த்து மாற்றார்
தம்முயிர் நீங்கத் தாழ்ந்தனர் வீழவும்
அடுத்தெழு பெருந்திரை யகன்கட னடுவண்
உடைத்த நாவாய்க் கடைத்தொடை தழீஇ
இடைத்திரைக் கணவரூஉ மெழுச்சி யேய்ப்ப
வாக்கமை பிடிவார் வலித்த [2] கையினர்
ஊற்றமில் புரவித் தாட்கழி வாகிய
குருதிப் புனலிடைக் கருதியது முடியார்
மாவொடு மறிந்து மயங்கி வீழவும்
அலைகடல் வெள்ள மலைய வூழி
உலக மாந்தரிற் களைகண் காணார்
ஒண்செங் குருதியிற் செங்கணிப் [3] போரால்
நீலக் கொண்மூ நீர்த்திரைப் பெய்வதோர்
கால மேய்ப்பக் கருந்தலை வீழவும்
கால்வல் புரவியுங் கடுங்கண் யானையும்
வேல்வ லிளையரும் விழுந்துகுழம் பாகிய
அள்ளற் செஞ்சே றுள்ளோ ருழக்கலிற்
றுப்புநிலத் தெழுந்த துகளென மிக்கெழுந்
தந்தர விசும்பி னந்தியிற் பரப்பவும்
தெரிவருங் குணத்துத் திசைதொறும் பொருந்தப்
போர்வலம் வாய்த்த பொங்கம ரழுவத்து

---

65. மறிநரின் - கவிழ்பவரைப்போல. படைதிருத்தி - படையின் வளைவை நிமிர்த்து. 68 - 74. ஒருதொடர்.

69. கடைத்தொடை - இறுதியிற் கட்டப்பட்டுள்ள கயிற்றை.

70. அணவரூஉம் - மேல்நோக்குகின்ற.

71. பிடிவார் - கடிவாளம். 75 - 9. ஒருதொடர்.

75. ஊழி - யுகமுடிவில். 83. துப்பு நிலம் - செந்நிலம்.

80 - 84. "நாண்ஞாயி றூற்ற செருவிற்கு வீழ்ந்தவர், வாண்மாய் குருதி களிறுழக்கத் தாண்மாய்ந்து, முற்பக லெல்லாங் குழம்பாகிப் பிற்பகற், றுப்புத் துகளிற் கெழூஉம் புனலுடன், றப்பியா ரட்ட களத்து" களவழி. 1.

86. அமராழுவம் - போர்க்களப் பரப்பு.

பி - ம். 1 மரினரின். 2 கையினீருயததமில். 3 போரு.

(உதயணன் முதலியோர் செயல்)

வார்தளிர்ப் படலை வத்தவர் பெருமகன்
எலிச்செவி யரசன் றம்பி யேறிய
கொலைப்பெருங் களிற்றி னெருத்தத்துப் பாய்ந்தவன்
தம்முன் காணத் தலைதுமித் திடாது
நின்னின் முடியுமெங் கரும மீண்டெனக்
கடுத்த கட்டுரை யெடுத்தனன் கச்சிற்
றிண்டோள் கட்டிய வென்றி நோக்கி
ஒண்டார் மார்பன் கொண்டமை கண்டே
[1] ஒருக்கி நிரல்பொரூஉ முருமண் ணுவாநம்
கருத்துவினை முடிக்குங் கால மிதுவென
வேக வெள்வேற் கேகயத் தரசனை
அடைதர்க வல்விரைந் தமரார் பெரும்படை
உடைவிடம் போல வுண்டென வுரையா
இருவருங் கூடி யெலிச்செவி யரசன்
பொருமுரட் படையொடு மயங்கிய பொழுதவன்
அரணக் கருவி யழிய வாங்கிக்
கரண வகையாற் கண்ணிமைப் பளவில்
மாசில் விழுச்சீர்க் கேகயத் தரசன்
ஆசில் பைந்தலை யரிந்துநிலஞ் சேர
வீசிய வாளினன் விறலோர்ச் சவட்டி
வென்றோ [2] னேறிய வேழஞ் சார்ந்தவன்

---

88. = சீ. 4 : 28. 90. தம்முன் - தமையன்.

93. நோக்கியுமென உம்மை விரிக்க.

94. கொண்டமை - கைக்கொண்டமையை. கண்டு - உருமண்ணுவா கண்டு. 95. ஒருக்கி - ஒருசேராக்கி.

96. என - என்று எண்ணி. 97. அரசனை நோக்கி.

98. வல்விரைந்து அடைதர்க - மிக விரைந்து வருக; ந. 23 : 3.

100. இருவரும் - உருமண்ணுவாவும் கேகயத்தரசனும்.

101. மயங்கியபொழுது - கலந்தகாலத்தில். அவன் - எலிச்செவியரசன். 102. அரணக்கருவி - கவசம். வாங்கி - நீக்கி.

103. கரணம் - செயல்.

106. வாளினன் - வாளினனாகி. விறலோர் - அவனைப் பாதுகாத்துக் கொண்டிருந்த வீரர்களை. 107. வென்றோன் - உதயணன்,

பி - ம். [1] ஒருக்கு. [2] எய்திய.

ஆற்றற் றன்மைய னாதலிற் றம்பி
சிறைகொளப் பட்ட செல்வ னோக்கி
உறைகழி வாளின னுருமண் ணுவாவின்
மத்த யானை மருங்கிற் குப்புற்
றொள்வா ளோக்கி யெள்ளுந ரோட்டிய
எம்பி யுற்ற வின்னாச் சிறைவிடின்
உய்ந்தனை யாகுதி யஞ்ச னீயென
ஆர்ப்பக் கண்டே யடுதிற லுதயணன்
தாக்கருந் தானைத் தருசகன் றன்னொடு
வேற்றுமை யிலனிவன் போற்றினை யாயிற்
பெறற்கரு நம்பியைப் பெறுதி நீயெனத்
திறப்படக் கூறி மறப்படை நூறக்
கடும்புன னெருங்க வுடைந்துநிலை யாற்றா
உப்புச் சிறைபோ லுண்ணெகிழ்ந் துருகி
வெப்ப மன்னர் வீக்கஞ் சாய
உடைந்துகை யகலவவ ருரிமை தழீஇக்
கடந்தலை கழித்துக் கடுவா யெஃகமொ
டிகலாட் படுகளத் தகலம ராயத்
துதயண குமர னுற்றோர் சூழ

---

108. ஆதலின், அவனோடு போர்செய்யாமலெனு மொழி வருவித்து முடிக்க. தம்பி - தன் தம்பி. 111. குப்புற்று - குதித்து.

112. ஓக்கி - ஓச்சி. 114. பிழைப்பாய், நீ அஞ்சாதே.

115. எலிச்செவியரசன் ஆர்ப்ப.

117. இவன் - உருமண்ணுவா. போற்றினையாயின் - இவனைப் பாதுகாப்பாயாயின். 119. நூற - அழிப்ப.

உதயணன் (115) கூறி (119.) 121. சிறை - அணை.

120 - 21. "உப்பியல் பாவை யுறையுற் றதுபோல, உக்கு விடுமென் னுயிர்" கலி. ௧௩௮ : 16 - 7.

122. வீக்கம் - பெருமை. 123. உரிமை - உரிய பொருள்.

120 - 23. "ஒளிநல வுப்புக் குன்ற மூர்புனற் குடைந்த தேபோற், களிநல மன்னர் தங்கள் கடற்படை யுடைந்த தன்றே" சீவக. 813.

124. கடம் - கடமையை.

125. பகைத்த ஆட்களைக் கொன்ற களத்தில்,

126. உதயணகுமரன் : எழுவாய்,

விசய முரசொடு வியனக ரறிய
மகத மன்னற் குகவை போக்கலிற்
கேட்டுப்பொரு ணல்கி வேட்டுவிரைந் தெழுந்து
வெற்றத் தானை முற்றத்துத் தோன்றிப்
பகைக்கடன் றீர்த்த தகைப்பொலி மார்பனைப்
பல்லூழ் புல்லி வெல்போர் வேந்த
படைத்தொழின் மாற்றம் பட்டாங் குரைக்கென

(உதயணன் கூறுதல்)

எடுத்த பெரும்படை யெழுச்சியு மிறுதியும்
பரப்புஞ் சுருக்கும் பாழியு மறியான்
[1] விலக்கவு நில்லான் றலைக்கொண் டோடித்
தமரையுந் தீர்ந்து நமரையு நண்ணான்
கேளன் [2] மன்னன் வாள்வாய்த் துஞ்சி
மாக விசும்பி னின்றுயி லேற்றனன்
கேகயத் தரச [3] னெனவது கேட்டே

(தருசகன் கூறுதல்)

என்கடன் றீரே ஞயி னேனவன்
தன்கடன் றீர்த்துத் தக்க தாற்றினன்
என்பது கூறி யன்புநெகிழ்ந் துருகிப்
பேரா விடும்பையு ளாராய்ந் தவனைக்
கூரெரிப் படுத்துக் குறைவினை நீக்கி

128. உகவை - மகிழ்ச்சியை ; ந. 18 : 10.

131. பகைக் கடன் - பகையை வெல்லுதலாகிய கடமை. மார்பனை - உதயணனை.

133. பட்டாங்கு - நடந்தபடி. என - என்று தருசகன் கேட்ப.

135. பாழி - வலி.

138. கேள் அல் மன்னன் - பகையரசன்.

139. இன்றுயிலேற்றனன் - இனிய உறக்கத்தை யடைந்தான் ; இறந்தானென்றபடி ; மங்கலவழக்கு.

140. என - என்று உதயணன் கூற.

144. பேரா இடும்பையுள் - நீங்காத துன்பத்தைத் தரும் போர்க்களத்தில். அவனை - கேகயத்தரசனை.

145. குறைவினை - எஞ்சிய கிரியைகளை.

பி - ம். [1] விலக்குபு. [2] மன்னன்றனை. [3] னென்பது.

(தருசகனும் உதயணனும் நகர்புகுதல்)

மகதவ ரிறைவனும் வத்தவ மன்னனும்
அகநகர் புகுந்த காலை முகனக

(நகரமாந்தர் செயல்)

மணிச்சுதைக் குன்றமு மண்டபத் துச்சியும்
அணித்தகு மாடமு மரும்பெறற் புரிசையும்
நிலைக்கா லேணியுந் தலைச்சிறந் தேறி
இரும்பே ருலக மொருங்கியைந் ததுபோற்
றெருவு மன்றமுந் திருமணன் முற்றமும்
மலரணி முகத்து வந்திறை கொண்டு
கீழு மேலுங் கேட்புழி யெல்லாம்

(உதயணனைப் புகழ்வோர்)

வாழ்க மற்றிவ் வத்தவர் பெருமகன்
என்னா டிதுவன் றென்னான் சென்றுழி
அந்நாட் டிடுக்கணு மச்சமு மகற்றும்
தத்துவ நெஞ்சத் [1] துத்தம னென்மரும்
வனப்பிற் கேற்ற வலியும் விச்சையும்
சினப்போ ரிவற்கே சேர்ந்தனென் போரும்
வஞ்சச் சூழ்ச்சியின் வணக்கி னல்லதை
அஞ்சா திவனை யமர்வென் றழிக்கும்
வெஞ்சின வேந்தரிங் கில்லென் போரும்

(வாசவதத்தையை இகழ்வோர்)

ஆசில் செங்கோ லவந்தியன் மடமகள்

---

148. மணிச்சுதை - முத்துச் சுண்ணம். குன்றம் - செய்குன்று.
150. நிலைக்காலேணி - நகர்காணேணி; உ. 7 : 46 - 7.
153. மலரையொத்த முகத்துடன்; அணி : உவமவுருபு.
156. இஃது என்னுடைய நாடன்று என்னானாகி.
158. தத்துவம் - உத்தமவியல்பு. என்மரும் - என்பாரும்.
159. "உருவிற் கமைந்த உணர்வுநன் குடைமை" (௩. 14 : 169); "நல்லெழில் பகருமுன் னூலோர், இலங்கெழி லளவு குணமென வுரைப்பர்" நைடதம். அன்னத்தைத்தூதுவிட்ட. 31.
161 - 3. இங்ஙனங் கூறியது, இவனைப் பிரச்சோதனன் வஞ்சத்தாற் சிறைப்படுத்தியதை உட்கொண்டு.
163. இங்கு - இந்நிலவுலகத்தில். இல் - இல்லை.
164. அவந்தியன் - பிரச்சோதனன்.

பி - ம். 1 துத்தமனெனவரூஉம.

வாசவ தத்தையிவன் வலியொடு புணர்ந்த
செருவடு தோண்மிசைச் சேர்ந்தனள் வைகும்
திருவில ளாதலிற் றீப்பட் டாளெனப்
படுசொன் மாற்றந் தெளிந்த பரிவினர்
தொடிகெழு தோளி திருவிழிப் போரும்

(வாசவதத்தையைப் புகழ்வோர்)

அலகுடன் ஞாலத் தாக்கையொ டாருயிர்
நிலைநின் றமையாது [1] நிரைவளைத் தோளி
துஞ்சியுந் துஞ்சா டோணல நுகர்ந்த
வெஞ்சின வேந்தனவள் விளிவு முந்துறீஇப்
புன்கண் கூரப் புலம்புகொண் டாற்றான்
தன்னகர் துறந்து தலைமை நீக்கிப்
[2] பின்னிவ ணிரங்கப் பெற்றன ளாதலின்
அவளே புண்ணிய முடையளென் போரும்

(பிறவாறு கூறுவார்)

வலிகெழு நோன்றாள் வத்தவ மன்னற்குத்
தருசகன் றங்கை தகையோர் சாயற்
பத்திப் பைம்பூட் பதுமா நங்கை
தக்கனள் கொடுப்பின் மிக்கதென் போரும்
வேண்டி வந்த வேந்தனும் [3] வீய்ந்தனன்
ஈண்டினி யிவற்கே யியைந்த பால்வகை
ஆதலு முண்டஃ தறிவோர் யாரென
வாயின் மிகுத்து வலித்துரைப் போரும்
பொன்னணி மார்பன் முன்ன ராற்றிய
நன்னர்க் குதவும் பின்னுப காரம்

168. பரிவினர் - வருந்தி.
169. இழிப்போர் - இழித்துக் கூறுவோர்.
170 - 77. = ௪. 5 : 33-4. 173. விளிவு - அவள் மரணத்தை.
174. ஆற்றான் - சகியாதவனாகி. 181. கொடுத்தல் மிக்கது.
182. வேந்தனும் - கேகய அரசனும். 183. பால் - ஊழ்வினை.
182 - 3. ௫. 16 : 7 - 12. 185. வலித்து - நிச்சயித்து.
186. பொன் - திருமகள். மார்பன் - உதயணன்.
187. நன்னர்க்கு - நன்றிக்கு. பின் உபகாரம் - கைம்மாறு.
186 - 7. = ௫. 23 : 14 - 5.

பி - ம். 1 நிறை. 2 பின்னிவணிரங்கப். 3 வியந்தனன.

அலைதிரைப் பௌவ மாடை யாகிய
நிலமுழுது கொடுப்பினு நேரோ வென்மரும்
நகர மாக்க ளிவைபல பகர
மாசில் செங்கோன் மகத மன்னனொடு
கோயில்புக் கனனாற் கோமகன் பொலிந்தென்.

௨௦—சங்கமன்னர் உடைந்தது முற்றிற்று.

---

186 - 9. "செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும், வானகமு மாற்ற லரிது" குறள், 101. 189. என்மரும் ஆகி.
192. கோமகன் - உதயணன்.

---

## ௨௧— மகட்கோடை வலித்தது.

(உதயணன் சூழ்தல்)

கோயில் புக்கபி னாய்புக ழுதயணன்
கரந்த வுருவொடு கலந்தகத் தொடுங்கிப்
பிரிந்த பொழுதி [1] னொருங்கவட்கு மொழிந்த
அருந்தொழிற் றெளிவு மன்பு மென்றிவை
பெரும்புணை யாக விருந்தகத் துறையும்
பொற்றொடிப் பணைத்தோண் முற்றிழை மாதரை
இற்பெருங் கிழமையொடு கற்புக்கடம் பூட்ட
வரையும் வாயி றெரியுஞ் சூழ்ச்சியுள்

---

௨௧—மகட்கோடை வலித்தது.

[தருசகன் பதுமாபதியை உதயணனுக்கு மணஞ்செய்விக்க நிச்சயித்தமை இதனால் அறியலாகும்.]

1 - 8. உதயணன் பதுமாபதியை மணஞ்செய்தற்குரிய வழியை ஆலோசித்துக் கொண்டிருக்கையில்.

2. கரந்த - மறைந்த. கலந்து - பதுமாபதியைக் கலந்து.
3. பிரிந்த - அவளைப்பிரிந்த. 5. புணையாக - தெப்பமாக.
6 - 7. பதுமாபதியை மணந்துகொள்ள. 8. வாயில் - வழி.

பி ம். 1 னொருங்கவட்கொழிந்த.

(தருசகன் கருதுதல்)

ஈரைம் பதின்மரை யிகல்கெட நூறி
வீர மிக்க விறற்றறு கண்மைக்
குருகுலத் தைவரு ளொருவன் போலத்
[1] தனிப்படச் செய்கை தன்கட் டாங்கிய
மணிப்பூண் மார்பன் வத்தவ மன்னனொடு
சுற்றத் தாரெனுஞ் சொல்லுடை வேந்தர்
முற்றவ முடையரென் றுற்ற வுள்ளமொடு
பகைகொண் மன்னரைப் பணித்ததற் [2] கொண்டு
தகைகொள் வேந்தன் றமரொடு சூழ்ந்து
செங்கடை வேற்கண் வெள்வளைப் பணைத்தோட்
டங்கையைப் புணர்க்குஞ் சிந்தைய னாகி

(தருசகன் அமைச்சனை உதயணன்பால் விடுத்தல்)

உள்பொருள் வலிக்கு முறுதிச் சூழ்ச்சியன்
மல்லற் றானை மறப்பெருஞ் சீற்றத்துச்
செல்பொறி செறித்த பல்புக ழமைச்சனை
வள்ளிதழ் நறுந்தார் வத்தவர் கோமாற்
[3] கங்கண் விட்டு மடுக்கற் [4] பாலதூம்

---

9 - 20. பகைவர் தொகுதியைத் தானே வென்ற உதயணனை நன்கு மதித்துத் தன் தங்கையைக் கொடுத்தற்குத் தருசகன் துணிந்து.

9 - 11. நூறி வீரமிக்க ஒருவன் - வீமசேனன்; இவன் ஒருவனே துரியோதனன் முதலிய நூற்றுவரையும் கொன்றான்.

13 - 5. உதயணனோடு சுற்றத்தார் எனப்படுவோர் பழம்பிறப்பில் தவமுடையோரென்றெண்ணி.

16. பகைமன்னரெண்மரை அடக்கியது காரணமாக.

19. தங்கையை - பதுமாபதியை.

21 - 9. தன் கருத்தைத் தெரிவித்து வரும்படி தருசகன் ஒரு மந்திரியை உதயணனிடம் அனுப்ப.

22. செல்பொறி செறித்த - புலன்களிற் செல்லும் இந்திரியங்களை அடக்கிக்கொண்ட; "பொறிசெறித்த மாண்பினராய்ப் பொருந்தலர்ச் செற்று......வினைவாங்கு செயலினரும்" நைடதம், அன்னத்தைத்தூது விட்ட. 106.

பி - ம், 1 தனிப்படைச். 2 தொண்டுர். 3 கங்கே. 4 பாலுழி.

இங்க ணிவனை யெளிதுதரப் பெற்றும்
கோல மங்கையைக் கொடாஅ மாகுதல்
கால நோக்கிற் கரும மன்றென
வலித்ததை யுணர்த்தி 1 வருதி நீயெனத்
தலைப்பெரு வேந்தன் றனவற் போக்க

(ஒரு முதுமகள் பதுமாபதிக்கு அறிவித்தல்)

மந்திர மறிந்த தந்திர முதுமகள்
செந்தளிர்க் கோதைக்குச் சேட நீட்டிப்
பொலிக நங்கை பொருபடை யழித்த
வலிகெழு நோன்றாள் வத்தவ ரிறைவன்
யானை வணக்கும் வீணை வித்தகன்
துதைமலர்ப் பைந்தா ருதையண குமரற்கு
நேர்ந்தன னின்னை நெடுந்தகை யின்றெனத்
தீர்ந்த கோட்டியுட் டெரிந்தன ளுணர்த்தத்

(பதுமாபதி எண்ணுதல்)

துப்புறழ் 2 செவ்வாய் துளங்குபு நிரைத்த
முத்துறழ் முறுவன் முகிழ்த்த முகத்தள்

25. "பெறுதற்கரிய பெருமக னிந்நகர்" (௫. 8 : 111) என்றாராகலின் 'எளிதுதரப் பெற்றும்' என்றார். 27. கருமமன்று-காரியமன்று.

24 - 7. "நிவப்புறு நிலனெனு நிரம்பு நங்கையும், சிவப்புறு மலர்மிசைச் சிறந்த செல்வியு, முவப்புறு கணவனை யுயிரி னெய்திய, தவப்பயன் றுய்ப்பது தரும மன்றரோ" (கம்ப. அயோத்தி. மந்திர. 30) என்பது இவ்வடிகளுடன் ஒருவாறு ஒப்புநோக்கற் பாலது.

28. வலித்ததை - யான் துணிந்ததை. அவனுக்கு உணர்த்தி வருதி.

29. அவன் - அவ்வமைச்சனை.

30 - 37. ஒரு முதுமகள் இச்செய்தியைப் பதுமாபதிக்கு அறிவிக்க. 30. தந்திரம் - உபாயம்.

31. கோதைக்கு - பதுமாபதிக்கு. சேடம் - தெய்வபூசையின் நின்மாலியம். 32. படை - பகைவரெண்மருடைய சேனையை.

36. நேர்தல் - கொடுத்தல். நெடுந்தகை - தருசகன்.

37. தீர்ந்த - பாங்கிமார் நீங்கிய.

38 - 43. பதுமாபதி அதற்கு உடன்பாடின்றித் தன்னுள் ஆலோசித்துக் கொண்டிருக்க.

பி - ம். 1 வும்மினீ. 2 செவ்வாய்த்.

மந்திர நாவி னந்தணன் கேண்மை
இருநிலம் பேரினுந் திரித லின்றெனப்
பெருநல மாத ரொருமை யுள்ளமொடு
வாழ்வது வலியாள் சூழ்வன ளிருப்ப

(அமைச்சன் உதயணனை அடைந்து தருசகன் கருத்தைத் தெரிவித்தல்)

அரும்பொரு ளுணர்வி னமைச்சன் சேதியர்
பெரும்பெய ரண்ணலைப் பொருந்துபு வணங்கிக்
காவலன் கருதிய கட்டுரை [1] புணர்த்தி
பூவலர் தாரோய் புனைகழ லோனென் றுள்
எம்மிறை மாற்ற மிசைப்பேன் யானெனத்
தன்னமர் தோழரொடு மன்னவன் கேட்பப்
பயங்கெழு வையத் துயர்ந்த தொல்சீர்
விழுத்திணைப் பிறந்துதம் மொழுக்கங் குன்றாப்
போரடு மன்னர் புலம்பு முந்துறீஇ
ஆரஞ ருழக்க லறிவெனப் படாது
நீர்முதன் மண்ணகஞ் சுமந்த [2] நிறைவலி
தான்முழுது கலங்கித் தளரு மாயின்
மலைமுத லெல்லா நிலைதளர்ந் தொடுங்கும்
அலைகைப் பல்லுயிர்க் கச்ச நீக்குநர்
கவலை கொண்டுதங் காவலிற் றளரின்
உலக மெல்லா நிலைதளர்ந் தழியும்

---

40. அந்தணன்கேண்மை - மாணகனுடைய நட்பு.
41. திரிதல் - வேறுபடுதல்; "நால்வேத நெறிதிரியினும்" (புறநா. உ.) இன்று - இல்லையாகும். 42. மாதர் - பதுமாபதி.
43. வலியாள் - துணியாளாகி.
44. அமைச்சன் : எழுவாய். 45. உதயணனை வணங்கி.
46. காவலன் - தருசகன். கட்டுரை - பொருள்பொதிந்த சொல்.
49. மன்னவன் - உதயணன். 50. பயம் - பிரயோசனம்.
51. விழுத்திணை - சிறந்தகுலம்.
52 - 3. அரசர்கள் துன்புறுதல் அறிவன்று.
54. முதல் - காரணம். 55 - 6. உ. 11 : 6 - 7.
57. நீக்குநர் - நீக்குவோராகிய அரசர்.

பி - ம். 1 புணர்த்திப். 2 நிறைவளி.

அற்றே யன்றிக் கொற்றக் கோமான்
தானுந் தனிமையொ டென்றலை வந்தனன்
ஆறு வுவகையி னமைந்தபுக ழுடையன்
மேனாட் கொண்ட மிகுதுயர் நீக்கி
மறுத்தல் [1] செல்லாச் சிறப்பு முந்துறீஇ
அற்றமி னண்பின் யாப்பே யன்றியோர்
சுற்றப் பந்தமும் வேண்டினே [2] னென்றனன்
கொற்றவன் வலித்த திற்றென வுரைப்பச்

(உதயணன் எண்ணுதல்)

செருவடு குருசி லொருபக ருனும்
மறுமொழி கொடாஅன் மனத்தே நினைஇ
நறுமலர்க் கோதையை நாட்பூங் காவினுட்
கண்ணுறக் கண்டதுங் கரந்தகம் புக்கதும்
திண்ணிதி னறிந்தோர் தெரிந்துதனக் குரைப்ப
ஆராய்ந் ததனை யறிந்ததை யொன்றுகொல்
கருதி வந்த காவல குமரனும்
பொருகளத் தவிந்தனன் பொருளிவற் கீதல்
பின்னன் றாகு மென்பதை நாடி
நன்னர் நோக்கி நயந்ததை யொன்றுகொல்
கோல்வளைப் பணைத்தோட் கொடுங்குழைக் காதின்

---

60. அற்றேயன்றி - அஃதல்லாமல்.

63. துயர் - வாசவதத்தையைப் பிரிந்ததனாலுண்டான துன்பம்.

65. நண்பின்யாப்பு - நட்பினாலுள்ள தொடர்பு.

65 - 6. ௩. 23 : 14 - 6.

67. வலித்தது இற்று - துணிந்தது இந்தக்காரியமாகும்; என்றது பதுமாபதியை மணஞ்செய்விக்க நினைந்தானென்பதனை.

68. குருசில் - உதயணன். ஒரு பகல் - ஒரு முகூர்த்தகாலம்; கலி. ௩௧ : 23, ந.

69. நினைஇ - நினைத்து. 70. கோதையை - பதுமாபதியை.

71. கண்டதும் - யான் கண்டதும். அகம் - அவளுடைய அரண்மனையில்.

74. பதுமாபதியை மணத்தலைக் கருதிவந்த கேகயத் தரசனும்.

75 - 6. உதயணனுக்குப் பதுமாபதியைக் கொடுத்தலே காரியம்; இது பின்னும் நன்றாகும்.

பி - ம். 1 செல்லான். 2 னென்றெங்.

நீலத் தன்ன நெறியிருங் கூந்தலைப்
பால்வகை புணர்க்கும் படிமை கொல்லெனா
இனையவை பிறவு மனவயி னினைஇ
யான்குறை கொள்ளும் பொருளினை மற்றிவன்
தான்குறை கோட றவத்தது விளைவென
உவந்த வுள்ளமொடு கரந்தன னுரைக்கும்

(உதயணன் தன்விருப்பத்தை வெளிப்படுத்தாமல்
கபடமாக மறுத்துரைத்தல்)

மண்ணகத் திறைவன் மறமாச் சேனன்
ஒண்ணுதற் பாவை யொருபெருங் கிழத்தி
மண்ணக வரைப்பின் மகளிர் மற்றுத்தன்
வனப்பெடுத் துரைக்கென வயங்கழற் குளிப்ப
மனத்தெழு கவற்சியொடு மண்முத னீக்கி
நயத்தகு மாதரொ டமைச்சனை யிழந்தினி
வாழே னென்று வலித்த நெஞ்சமொடு
போகிய தெல்லாம் பொய்யே போலும்
[1] இன்ப மெய்தலெ னன்பவட் கொழிந்தனென்
வாழ்ந்த காலை யல்ல தியாவர்க்கும்
ஆழ்ந்த காலை யன்பு மில்லெனப்

---

80. பால்வகை - ஊழ். படிமை - புண்ணியம்.
81. நினைஇ - உதயணன் நினைத்து. 82. பொருளினை-காரியத்தை.
83. தவத்தது விளைவு - எனது தவத்தின் பயனாகும்.
68 - 83.=க. 34 : 63 - 72.
84. கரந்தனன் - தன் கருத்தை மறைத்தனனாகி.
85. மறமாச் சேனன் - பிரச்சோதனன்.
86. பாவையாகிய கிழத்தி - வாசவதத்தை; எழுவாய்.
88. உரைக்கென - உரைப்பார்களாகவென்று.
90. அமைச்சனை - யூகியை. 85 - 91 ந. 1 : 38 - 50.
93. அவட்கு - வாசவதத்தைக்கு.
94 - 5. "காலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்து, மேலாடு மீனிற் பலராவ - ரேலா, இடரொருவ ருற்றக்கா லீர்ங்குன்ற நாட, தொடர்புடையே மென்பார் சிலர்", "உண்டாய போழ்தி லுடைந் துழிக் காகம்போற், றொண்டா யிரவர் தொகுபவே - வண்டாய்த், திரி தருங் காலத்துத் தீதிலரோ வென்பா, ரொருவரு மிவ்வுலகத் தில்"

பி - ம். 1 இன்பமெய்தலும்.

புறத்தோ ருரைக்கும் புன்சொற் கட்டுரை
நிறத்தே றெஃகி னனைய வாதலின்
ஒத்த நிலைமையே னல்லே னெழிகென
வத்தவர் கோமான் வஞ்சமொடு மறுப்ப

(அமைச்சன் கூறுதல்)

மிக்க பெருங்குடிப் பிறந்த மாந்தர்க்
கொப்பின் றம்மநின் னுரையென வணங்கி
மத்த யானை வணக்கு நல்லியாழ்
வித்தக வீரவது பெற்றனென் யானென
மறுத்து மந்திரி குறைக்கொண் டிரப்பத்

(உதயணன் உடன்படல்)

தெரிபொருட் கேள்வித் தெரிசக குமரன்
தானு நீயு மாகல் [1] வேண்டலின்
மாற்று மாற்ற மில்லென மற்றவற்
கருளொடு புணர்ந்த வன்புமிகு கட்டுரை
பொருளொடு புணர்ந்தவை பொருந்தக் கூறலின்

(அமைச்சன் தருசகன்பால் மீளல்)

அமைப்பருங் கரும மமைத்தனன் யானென
அமைச்சன் மீண்டன னகநனி புகன்றென்.

உக—மகட்கோடை வலித்தது முற்றிற்று.

---

(நாலடி. 113, 384); "முட்டின் றொருவ ருடைய பொழுதின்கண், அட்டிற்றுத் தின்பவ ராயிரவ ராபவே, கட்டலர்தார் மார்ப கலியூழிக் காலத்துக், கெட்டார்க்கு நட்டாரோ வில்" பழமொழி, 59.

96-7. கட்டுரைகள் மார்பிற்றைத்த வேற்படையை ஒப்பனவாகும்; க. 35 : 232. 99. வஞ்சம் - கபடம்.

103. அது - 'மணஞ்செய்து கொள்ளுவேன்' என்னும் உனது [உடன்பாட்டை.

104. மறுத்தும் - மீட்டும்.

105-6. தருசககுமரனும் நீயும் என்னுடைய ஆக்கத்தை விரும் [புதலால்.

109. கூறலின் - உதயணன் கூறுதலால்.

பி - ம். 1 வேண்டினும்.

## ௨௨—பதுமாபதி வதுவை.

(அமைச்சன் தருசகனுக்குக் கூறல்)

அகநனி புகன்றுண் டமைச்சன் போகித்
தகைமிகு தானைத் தருசகற் குறுகி
மாற்றோர்ச் சாய்த்தவன் மறுத்த வண்ணமும்
ஆற்றல் சான்றவவ னன்புகந் தாகத்
தொல்லுரைக் கயிற்றிற் றொடரப் பிணிக்கொளீஇ
வல்லிதி னவனை வணக்கிய வண்ணமும்
பல்பொரு ளாளன் பணிந்தன னுரைப்ப

(தருசகன் மகிழ்தல்)

உவந்த மனத்தி னிகழ்ந்ததை மதியாக்
கொடுக்கும் 1 கேண்மை கோமகன் புரிய

(உதயணன் எண்ணுதல்)

வடுத்தொழி லகன்ற வத்தவர் பெருமகன்
மாய வுருவொடு மாடத் தொடுங்கிய

---

௨௨—பதுமாபதி வதுவை.

[பதுமாபதியை உதயணன் மணஞ்செய்துகொண்டமை இதனால் அறியலாகும். அவளுடைய தோழியாகிய யாப்பியாயினியை அவனுடைய தோழனாகிய இசைச்சன் மணந்ததும் இதிற் கூறப்பட்டுள்ளது.]

2. தகை - தகுதி ; தடுத்தலுமாம் ; தோற்றப் பொலிவுமாம் ; குறள், 768, பரிமேல்.

3. உதயணன் முதலில் உடன்படாமையும்.

4. கந்து - தூண். 7. பல்பொருளாளன் - அமைச்சன்.

9. கோமகன் - தருசகன்.

10 - 28. மாணகனென்று நடித்தவன் தானேயென்று பதுமாபதிக்குத் தெரிவித்தற்குரிய ஒருபாயத்தை நினைந்த உதயணன், 'என்னுடைய நண்பனும் தாய்தந்தையரில்லாதவனுமான இசைச்சனுக்கு ஒரு கன்னியை மணஞ்செய்வித்து அப்பால் என்னுடைய மணத்தைக்குறித்து ஆலோசனை செய்க' எனத் தருசகனுக்குச் சொல்லி வரும்படி வயந்தகனுக்குக் கூற.

10. வத்தவர் பெருமகன் : எழுவாய்.

பி - ம். 1 கொண்மோ.

ஆய கேண்மைய னந்தண னென்பது
சேயிழை மாதர் [1] தேறல ளாகி
ஒன்றுபுரி யுள்ளமொ டொன்று ளாதலின்
நன்றுபுரி நாட்டத்து நானவ னாதல்
அறியத் தேற்றுவோ ரயல்வே றில்லென
நெறியிற் கொத்த நீர்மை நாடி

(உதயணன் வயந்தகனைத் தருசகன்பால் அனுப்பல்)

[2] வயத்தகு நோன்றாள் வயந்தகற் றழீஇ
இசைச்ச னென்னு மென்னுயிர்த் தோழன்
அருமறை நாவி னந்தண னவன்றனக்
கிருமுது குரவரு மிறந்தன ராதலின்
வேதத் தியற்கையி னேதந் தீரக்
கிரிசையின் வழாஅ வரிசை வாய்மையோர்
அந்தணன் கன்னியை மந்திர விதியின்
அவன்பாற் படுத்த பின்ன ரென்னையும்
இதன்பாற் படுக்க வேண்டுக தானென
என்கூற் றாக வியையக் கூறி
முன்கூற் றமைத்து முடித்தனின் கடனென

(வயந்தகன் தருசகன்பாற் சென்று கூறல்)

வயந்தக குமரனு நயந்தது நன்றென
இன்னொலிக் கழற்கான் மன்னனைக் குறுகிப்
பொருத்தம் படவவ னுரைத்ததை யுணர்த்தலின்

---

12. கேண்மையை உடையனாக இருந்தோன்.
14. ஒன்றாள் - தன்னை மணஞ்செய்துகொள்ளுதற்கு உடன்படாள்.
15. அவ்வந்தணன் நானேயென்பதை.
16. தேற்றுவோர் - தெளியச்செய்வோர்.
18. நோன்றாள் - வன்மையையுடைய முயற்சி.
21. இருமுது குரவர் - தாய் தந்தையர். 22. ஏதம் - குற்றம்.
23. கிரிசை - கிரியை; உ. 15 : 38. 25. அவன் - இசைச்சன்.
26. இதன்பால் - மணத்தின்கண்.
27. என்கூற்றாக - என்சொல்லாக.
28. என - என்று உதயணன் சொல்ல. 30. மன்னனை - தருசகனை.
31. அவனுரைத்ததை - உதயணன் கூறியதை. பொருத்தம்பட வயந்தகனுணர்த்தலின்; ௩. 19 : 101 - 3.

பி - ம். 1 தேர்வன. 2 வயத்தக.

(தருசகன் யாப்பியாயினியை இசைச்சனுக்கு மணம்
புரிவிப்பதாகச் சொல்லி விடுத்தல்)

விருப்பொடு கேட்டு விறல்கெழு வேந்தன்
நங்கை தோழி நலத்தொடு புணர்ந்த
அங்கலுழ் பணைத்தோ ளாப்பியா யினியெனும்
செழுக்கயன் மழைக்கட் சேயிழை யரிவை
ஒழுக்கினுங் குலத்தினும் விழுப்ப மிக்கமை
சென்றுரை செம்மற் கென்றவ ணொருப்பட
வயந்தக குமரன் வந்து கூறத்

(உதயணன் முதலியோர் உடம்படல்)

தோழ ரெல்லாந் [1] தோழிச்சி யாகத்
தாழ்வ ளாமெனத் தாழாது வலிப்ப
நன்னெறி யறியுநர் நாடெரிந் துரைப்பத்

(தருசகன் தன்தாயின் உடன்பாட்டை அறிதல்)

தன்னெறி வழாஅத் தருசக குமரன்
தற்பயந் தெடுத்த கற்பமை காரிகைக்
கோப்பெருந் தேவிக் கியாப்புடைத் தாகத்
தங்கை திறவயின் வலித்தது மற்றவள்
இன்பத் தோழியை யிசைச்சற் கிசைத்ததும்
தெருளக் கூறி யருள்வகை யறிந்து

32. வேந்தன் - தருசகன்.

33. நங்கைதோழி - பதுமாபதியின் தோழி.

36. விழுப்பமிக்கமை - சிறப்பு மிக்க தன்மை ; குறள், 131.

37. ஒருப்பட - துணிய ; "கோதை வாயொருப் பட்டு நேர" [சீவக. 587.

39. தோழிச்சி - தோழி.

40. தாழ்வள் - தங்குவள். தோழரெல்லாம் (30) வலிப்ப (40.)

41. நாளைத் தெரிந்துரைப்ப.

42 - 9. தருசகன், பதுமாபதியை உதயணனுக்கும், யாப்பியா யினியை இசைச்சனுக்கும் மணஞ்செய்விக்கக் கருதியிருத்தலைத் தன் தாய்க்குச் சொல்லி அவளது கருத்தையறிந்து வரும்படி சில பெரியோரை அனுப்புதலால்.

43. தற்பயந்தெடுத்த - தன்னைப் பெற்றெடுத்த.

44. யாப்புடைத்தாக - உறுதியுடைத்தாக ; "யாப்புடைத் தாக விசைத்து மென்று" மணி. கக : 50.

பி - ம். 1 தோழிக்கி.

வம்பி னென்று தம்மியல் வழாஅப்
பெருமூ தாளரை விடுத்தலிற் கேட்டே
திருமா தேவியுந் தேன்புரை தீஞ்சொற்
கணங்குழை மகளைக் காம னனைய
வணங்குசிலைத் தடக்கை வத்தவர் பெருமகற்
கெண்ணின னெனவே யுண்மலி யுவகையள்
அதி [1] நா கரிகத் தந்தணிக் கணியும்
முற்றணி கலங்கள் கொற்றவி கொடுப்பப்

(பதுமாபதியின் செயல்)

பதுமா நங்கையு மதன்றிற மறிந்து
மாணகற் பிரிந்தவென் மம்மர் வெந்நோய்க்
காண மாகிய வாயிழை தனக்கு
நீங்குதிற னுண்டெனிற் றாங்குதிற னறியேன்
விலக்குத லியல்பு மன்றாற் கலக்கும்
வல்வினை தானே நல்வினை யெனக்கென
ஒள்ளிழை மாத ருள்வயி னினைஇ
மடுத்தணி கலனு மாலையும் பிறவும்
கொடுத்தன ளாகிக் கோமான் பணித்த
வடுத்தீர் வதுவையின் மறந்தனை யொழியாது
வல்லே வாவென [2] மெல்லியற் புல்லிக்

---

49. கேட்டு - தாய்கேட்டு.

51 - 3. க. 47 : 218 - 36. 54. அந்தணிக்கு - யாப்பியாயினிக்கு.

55. முற்றணி கலங்கள் : ரு. 21 : 6. கொற்றவியென்றது தாயை.

56. அதன்றிறம் - அச்செய்தியை.

58. ஆணம் - பாதுகாப்பு; "பேணிலும் வரந்தர மிடுக்கிலாத தேவரை, ஆணமென் றடைந்து வாழு மாதர்காள்" (திவ். திருச்சந்த. 69.) ஆயிழை தனக்கு - யாப்பியாயினிக்கு.

59. தாங்குதிறனறியேன் - மாணகனைப் பிரிந்த துன்பத்தைப் பொறுக்கும்வகை அறியேன்; "காமந் தாங்குமதி யென்போர்" குறுந். உகம : 1.

60 - 61. இங்ஙனம் கலங்கச்செய்யும் வல்வினையே எனக்கு நல் [வினையாகுமென்று.

62. மாதர் நினைஇ - பதுமாபதி நினைந்து.

64. கொடுத்தனளாகி - யாப்பியாயினிக்குக் கொடுத்து.

66. மெல்லியற் புல்லி - யாப்பியாயினியைப் பதுமாபதி தழுவி.

பி-ம். 1 நாகரகத். 2 மெல்லியா.

கவற்சி கரந்த புகற்சிய ளாகிச்
சிறுமுதுக் குறைவி யறிவொடு புணர்ந்த
தாய ரியற்கை சேயிழைக் காற்றித்
தானுடை யுழைக்கல மெல்லாந் தரீஇச்
சேயொளிச் சிவிகையொடு சேயிழைக் கீயத்

(தருசகன் செயல்)

தங்கை தலைமை தன்னையு முவந்து
கொங்கலர் கோதையைக் கொடுக்குநா ளாதலின்
இலக்கணச் செந்தீத் தலைக்கையி னிரீஇ
இழுக்கா வியல்பி னிசைச்ச குமரன்
விழுப்பெரு விதியின் வேட்டவட் புணர்கென
முழுப்பெருங் கடிநகர் முழுதுட னுணரக்
கோப்பெரு வேந்தன் யாப்புறுத் தமைத்தபின்

(உதயணன் செயல்)

வதுவைச் செல்வத் தொளிநகைத் தோழனை
நீங்கல் செல்லான் பூங்கழ லுதயணன்
முதற்கோ சம்பியு மொய்ப்புனல் யமுனையும்
சிதர்ப்பூங் காவுஞ் சேயிழை மாதர்
கண்டினி துறைவது காரண மாக
வண்டிமிர் காவின் மகதத் தகவயின்
வந்தனம் யாமென் றந்தணி கேட்ப

---

67. கவற்சி - கவலை. புகற்சி - விருப்பம்.

68. சிறுமுதுக்குறைவி - சிறிய பிராயத்தே பேரறிவையுடைய பதுமாபதி; அகநா. கஎ : 9, உரை.

70. உழைக்கலம் - பக்கத்தில் வைத்துக் கொள்ளுதற்குரிய வீட்டுப் பாத்திரங்கள்; க. 38 : 129, அடிக். தரீஇ - கொடுத்து.

72. உவந்து - தருசகன் மகிழ்ந்து.

74. தலைக்கையின் - முதலிடத்து. 79. தோழனை - இசைச்சனை.

80 - 86. கோசம்பிநகரமுதலியவற்றைப் பதுமாபதி கண்டு இன்பத்துடன் தங்குதற்பொருட்டே யாம் இந்நகருக்கு வந்தோமென்று யாப்பியாயினி கேட்கும்படி உதயணன் சொல்லுதலால்.

81. யமுனை - யமுனையாறு.

82. சிதர் - சிந்துதல்; வண்டுமாம்; சிறுபாண். 254, ந; அகநா. உ௫ : 9, உரை. சேயிழைமாதர் - பதுமாபதி.

இன்னிசைக் கிளவி யிறைமக னிசைத்தலிற்

(யாப்பியாயினி உதயணனே மாணகனென்றுணர்தல்)

சின்னகை முறுவற் சேயிழை கேளா
வாணகை மாதரொடு மணிவயி னொடுங்கிய
மாணகன் வாய்மொழி யிதுவான் மற்றெனத்
தேனார் காந்தட் டிருமுகை யன்ன
கூட்டுவிர லகற்றிக் கொழுங்கயன் மழைக்கண்
கோட்டுவனள் மேலைக் குமரனை நோக்கி
ஐய மின்றி யறிந்தன ளாகி
வையங் காவலன் வத்தவர் பெருமகன்
பார்ப்பன வுருவொடு பதுமா நங்கையை
யாப்புடை நெஞ்ச மழிந்தன னறிந்தேன்
ஒப்புழி யல்ல தோடா தென்பது
மிக்கதென் மனனென மெல்லிய னினைஇ
நகைத்துணைத் தோழிக்கு [1] நன்னலந் தோன்றல்
தகைப்பெரு வேந்த னாகலின் மிகச்சிறந்
தானு நன்மொழி தானவட் கொண்டு
கோட்டிச் செவ்வியுள் வேட்டனள் விரும்பா
உரைத்த லூற்றமொடு திருத்தக விருப்ப

(யாப்பியாயினி பதுமாபதியைக் காணல்)

இயைந்த வதுவை யெழுநா ளீங்கனும்

---

87. சேயிழை - யாப்பியாயினி. கேளா - கேட்டு.

88. மாதரொடு - பதுமாபதியுடன்.

89. இது என - இதுவென்றெண்ணி.

91. அகற்றி - கண்ணினின்றும் நீக்கி.

91 - 2. கண்கோட்டுவனள் நோக்கி - கண்ணால் வளைத்துப் பார்த்து; சீவக. 470; குறள். 1095.

93. மாணகனை உதயணகுமரனென்றறிந்து.

97. ஒப்புழி - ஒத்த இடம்; கம்ப. மிதிலைக்காட்சி. 147.

98. என்மனத்தே மிக்கது. மெல்லியல் - யாப்பியாயினி.

99 - 103. மாணகனே உதயணனென்பதைத் தலைவிக்குச் சொல்லுதற்கு ஊற்றங்கொண்டு யாப்பியாயினி இருப்ப.

99. தோழி - பதுமாபதி. கொண்டு (101) விரும்பா (102) இருப்ப (103.) 104. எழுநாள் வதுவை : 109.

பி - ம். 1 நன்னலந்தோன்ற.

பசும்பொற் கிண்கிணிப் பதுமா நங்கையும்
நயந்த தோழி நன்னலங் காணும்
விருப்பின ளாகி விரைந்திவண் வருகெனத்
திருக்கிளர் சிவிகையொடு சிலதரை விடுத்தலின்
ஆரா [1] வன்பினோ டகன்ற வெழுநாள்
ஏழாண் [2] டமைந்தன தன்மைய ளாயினும்
நலங்கவர்ந் தகன்ற நண்பனைக் கண்டனென்
புலம்பினி யொழிக புனைவளைத் தோளி
வளங்கெழு தானை வத்தவ னாமென
விளங்கக் கூறும் விருப்பு நாணும்
தேறிய தோழி யேறினள் சென்றுதன்
துணைநலத் தோழிமுன் மணநலக் கோலமொடு

(பதுமாபதி கூறல்)

நாணிநின் றோளேநின் பூணிள வனமுலை
புல்லின துண்மையிற் புல்லேன் யானென
மெல்லியன் மாதர் நகுமொழி பயிற்ற

(யாப்பியாயினி கூறுதல்)

நினக்கு மொக்குமஃ தெனக்கே யன்றென
மனத்தி [3] னன்னோண் மறுமொழி கொடுப்பச்
சின்னகை முகத்த ணன்னுதல் வாவென
நுகர்ச்சியி [4] னுகந்த வனமுலை நோவப்
புகற்சியொடு புல்லிப் புனையிழை கேண்மதி

---

107. வருக என - வருவாளாக வென்று.

108. சிலதர் - இங்கே சிவிகைசுமப்போர்; ௩. 13 : 11, 58.

111. நண்பனை-தலைவனை. 113. அவன் வத்தவனாவான்.

115. தோழி - யாப்பியாயினி. இசைச்சன் புல்லினது.

119. மாதர் - பதுமாபதி. நகுமொழி - பரிகாசச் சொல்.

121. மனத்தின் அன்னோள் - பதுமாபதியின் மனத்தையொத்த யாப்பியாயினி.

124. உகந்த - உயர்ந்த. 125. புல்லி - பதுமாபதியைத் தழுவி.

பி - ம். 1 வனப்பினோ 2 டமைந்ததன்ன தன்மையை. 3 னன்றோண். 4 னுகர்ந்த.

வண்டார் மார்பின் வடிநூல் வயவனைக்
கண்டே னன்ன தன்மைய னாகிக்
கள்ள வுருவொடு கரந்தகத் தொடுங்கிநின்
உள்ளங் கொண்ட வுறுவரை மார்பன்
வசையி லோன்றாள் வத்தவர் பெருமகன்
உதையண குமரன் போலு முணர்கெனச்
சிதைபொரு ளில்லாச் சின்னெறிக் கேண்மை
மணங்கமழ் மாதர் துணிந்தன ளுரைப்ப

(பதுமாபதி கூறுதல்)

நின்னை வேட்ட வந்தண னவற்குத்
துன்னிய தோழனது முன்னே கேட்டனன்
பெருமக னுள்ளத் துரிமை [1] பூண்டவென்
அதிரா நன்னிறை கதுவாய்ப் படீஇத்
தணத்த றகுமோ நினக்கெனக் கலங்கித்
திருவிழை [2] தெரியா டிட்டங் கூறப்

(யாப்பியாயினியின் செயல்)

பின்னருங் காண்பா மன்ன னுகுதல்
[3] பொன்னே போற்றெனத் தன்மனைப் பெயர்ந்து
நன்னுத லிலைமை யின்னதென் றுரைக்கவும்

(உதயணன் செயல்)

மாற்றங் கேட்டவட் டேற்றல் வேண்டி

---

125 - 32. மாணகனைக் கண்டேன்; அவ்வடிவங்கொண்டவன் உதயணனென்று உரைப்ப.

125. நூல் வடி - நூல்களை ஆராய்ந்த; "வடித்த நூலார்" (நாலடி. 163); மார்பில் அழகிய பூணூல் உடைய வயவனெனலுமாம்.

129. தாள் - முயற்சி. 133. அந்தணன் - இசைச்சன்.

136. அதிரா - நடுங்காத. கதுவாய் - வடு; க. 35 : 166, அடிக்.

138. தெரியாள் - தெளியாளாகி.

140. போற்று - பாதுகாப்பாய். பெயர்ந்து - யாப்பியாயினி மீண்டு. 141. உதயணனுக்கு யாப்பியாயினி சொல்ல. [விரும்பி.

142. அவள்தேற்றல் வேண்டி - பதுமாபதியைத் தெளிவிக்க

பி - ம். 1 பூண்டவெனதிரா. 2 தெறியா. 3 பொன்றே.

வத்தவர் பெருமகன் வண்ணங் கூட்டிச்
சித்திரக் கிழிமிசை வித்தக மாக
உண்கட் கிழமையுட் பண்பிற் றீராது
மறைப்பியல் வழாஅக் குறிப்புமுத றொடங்கி
ஆங்கப் பொழுதே பூங்குழை யுணர
வாக்கமை பாவை வகைபெற வெழுதி
வாணுதன் மாதரொடு மனைவயி னிருப்புழி
உருவக் கோயிலு ளிரவுக் குறிவயின்
வெருவக் குழறிய விழிகட் கூகைக்
கடுங்குர லறியாள் கதுமென நடுங்கினள்
ஒடுங்கீ ரோதி யென்பதை யுணர்த்தென

(யாப்பியாயினி செயல்)

மன்னவ னுரைத்த மாற்றமு மன்னவன்
தன்னொப் பாகிய தகைநலப் பாவையும்
கொண்டனள் போகிக் கோமகட் குறுகி
வண்டலர் படலை வத்தவன் வடிவிற்
பாவை காட்டிப் பைங்கொடி யிதுநம்
ஆய்பூங் காவி னந்தண வுருவொடு
கரந்துநலங் கவர்ந்த காவலன் வடிவெனத்

(பதுமாபதி செயல்)

திருந்திழை மாதர் திண்ணிதி னோக்கி
இன்னுயிர்க் கிழவ னெழுதிய பாவை

---

143 - 53. உதயணன், தன்னைப்போன்ற சித்திரமொன்றை ஒரு கிழியில் எழுதிக்கொடுத்து, “இதைக்காட்டு; யாங்களிருவரும் தனித்திருந்தவிடத்து ஒரு கோட்டானது குரலைக் கேட்டு அவள் அஞ்சினள்; இந்த அடையாள மொழியையுஞ் சொல்” என்றுகூறி யாப்பியாயினியை அனுப்பினன். 143. வண்ணம் - வர்ணம்.

144. கிழி - படம்; “இவ்வுருவு நெஞ்சென்னுங் கிழியின்மே லிருந்திலக்கித்து” (சீவக. 180.) 148. வாக்கு - திருத்தம்.

151. விழிகண் - புறப்படவிட்டகண்.

150 - 52 = 168 - 9; ௩. 14 : 152 - 7.

156. கோமகளை அடைந்து. 157. படலை - மாலை விசேடம்.

158. இது - இப்பாவை வடிவு.

என்னும் வேற்றுமை யில்லை யாயினும்
ஓராங் கிதனை யாராய்ந் தல்லது
தீண்டலுந் தேறலுந் திருத்தகைத் தன்றெனப்
பூண்டயங் கிளமுலைப் புனைவளைத் தோளி
உள்ளே நினைஇக் கொள்ளா ளாக
நள்ளென் யாமத்து நன்னுதல் வெரீஇய
புள்ளி னற்குறி யுரைத்தலும் பொருக்கெனப்

(பதுமாபதியின் மகிழ்ச்சி)

பெருவிறற் கொழுந னின்னுயிர் மீட்டுப்
பெற்ற வொழுக்கிற் பெரியோள் போலச்
செங்கடை மழைக்கட் சேயிழைத் தோழியை
அங்கை யெறிந்து தங்கா விருப்பமொடு
காமக் காதலன் கைவினைப் பொலிந்த
ஓவியப் பாவையை யாகத் தொடுக்கி
நீண்ட திண்டோ ணண்டுவன ணக்கு
நெஞ்சங் கொண்ட நெடுமொழி யாள
வஞ்ச வுருவொடு வலைப்படுத் தனையெனப்
புலவி நோக்கமொடு நலமொழி நயந்து
கோமான் குறித்ததுந் தோழி கூற்றும்
தாமொருப் பட்ட தன்மைய ளாகிச்
செல்லா நின்ற சின்னா ளெல்லை

(மணத்துக்குரியன செயப்படுதல்)

நன்னாட் டலைப்பெய னன்றென வெண்ணிக்

163. என்னும் - சிறிதும்; "என்னும் பனியாய்" பரி. ௬ : 81.

166. தோளி - பதுமாபதி.

168. நள்ளென்யாமத்து - நள்ளென்னும் ஓசையையுடைய நடு யாமத்தில்; "நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்" (நெடுநல். 186) என்பதையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

169. புள்ளின் நற்குறி - கோட்டான் குரலுக்கு அஞ்சினமை.

171. பெரியோள் - சாவித்திரி.

172 - 3. யாப்பியாயினியைக் கையாலே தட்டி.

175. ஆகத்து - தன் மார்பில். 176. நீண்டுவனள் - நீண்டி.

178. வஞ்சவுரு - மாணகன்வடிவு. 180. குறித்ததையும் கூற்றையும்.

183. நன்னாள் - மணஞ்செய்தற்கு உரிய தினம்.

கோட்டமி லுணர்விற் கொற்றவன் குன்றாச்
சேனைப் பெருங்கணி செப்பிய நன்னாட்
டானைத் தலைத்தாட் டானறி வுறுத்தலின்
வையக விழவிற் றானுஞ் செய்கையின்
அழுங்க லன்னக ராவணந் தோறும்
செழும்பல் யாணர்ச் சிறப்பின் வழாஅது
வண்ணப் பல்கொடி வயின்வயி னெடுத்தலின்
விண்வேய்ந் தன்ன வியப்பிற் றாகிப்
பெருமதி லணிந்த திருநகர் வரைப்பின்
ஆய்ந்த கேள்வி மாந்தரு மகளிரும்
ஆரா வுவகைய ராகிய காலைச்
சேரார்க் கடந்த சேதியர் மகனையும்
மதுநா றைம்பாற் பதுமா பதியையும்
மரபிற் கொத்த மண்ணுவினை கழிப்பிய
திருவிற் கொத்துத் தீதுபிற தீண்டா
நெய்தலைப் பெய்து மையணி யுயர்நுதல்
இருங்களிற் றியானை யெருத்திற் றந்த
பெருந்த ணறுநீர் விரும்புவன ராட்டிப்
பவழக் கொட்டைப் பொற்செருப் பேற்றித்
திகழ்செய் கோலத் திருமணை யிரீஇச்

(பதுமாபதியைக் கோலஞ்செய்தல்)

செங்கயற் கண்ணியை நங்கை தவ்வையர்

---

184. கொற்றவன் - தருசகன்.

185. கணி - சோதிடநூலில் தேர்ச்சியுடையவன் ; "சேனைக்கணி மகன்" (௧. 36 : 199) என்றார் முன்னும் ; சீவக. 2386.

186. தான் - அரசன். 188. அழுங்கல் - முழக்கம்.

195. சேதியர் மகனையும் - உதயணனையும்.

197. மண்ணுவினை - கலியாணம். கழிப்பிய - கழித்தற்கு.

199 - 200. மையணியானை என்க ; ௧. 48 : 184. அடிக் ; ௩. 17: 17. பதுமாபதியின் தலையில் நெய்யைப்பெய்து யானையெருத்திற் கொணர்வித்த கங்கைநீரை ஆட்டியென்க ; சீவக. 623.

202. பவழத்தாற்செய்த குமிழையுடைய பொன்னாலாகிய மிதியடியில் ; "பவழக் கொட்டைப் பல்வினை நுனித்த, திகழணிச் செருப்பு" ௨. 4 : 110 - 11.

203. திருமணை - அழகிய பலகை.

கோல மீத்தக வாலணி கொளீஇத்
திருந்தடி [1] வணங்கி வருந்த லோம்பிப்
பீடத் திரீஇய பாடறிந் தேற்றி
நறுநீர்த் துவர்க்கை வயின்வயி னுரீஇக்
கறைமாண் காழகிற் கொழும்புகை கொளீஇ
நெறித்து நெறிப்பட வாருநர் முடித்து
மங்கல நறுஞ்சூட்டு மரபி னணிந்து
வல்லோன் வகுத்த நல்வினைக் கூட்டத்
தியவனப் பேழையு ளடைந்தோ ரேந்திய
தமனியப் பல்கலந் தளிரியன் மாதர்
ஆற்றுந் தகையன வாற்றுளி வாங்கி
வெண்சாந்து [2] வரித்த வஞ்சி லாகத்
திணைமுலை யிடைப்பட் டிலங்குபு பிறழும்
துணைமலர்ப் பொற்கொடி துளங்கு நுசுப்பினை
நிலைபெற விசிப்பது போல [3] வேர்ப்ப
மேற்பாற் பிறையென விளங்க வமைந்த
தொருகா ழார மொளிபெற வணிந்து
திருக்கேழ்க் களிகை செவ்வனஞ் சேர்த்திப்
பைம்பொற் றிலகமொடு பட்ட மணிந்த

---

205. மீத்தக - மேற்பட. வாலணி கொளீஇ - தூய்மையான அணிகளைப் பூட்டி. 206. ஓம்பி - ஒழித்து.

207. இரீஇய - இருத்தற்கு. பாடறிந்து - இடமறிந்து.

209. கறைமாண்காழகில் - காரகில்.

211. நறுஞ்சூட்டு - முல்லைச் சூட்டை; "அரும்புமிலையு மயக்கி யாய்ந்த முல்லைச் சூட்டுமிலைச்சி" சீவக. 2433.

212. கூட்டம் - பொருத்துவாய்.

213. யவனப் பேழை - யவனதேயத்துப் பெட்டி: "யவனப் பேழை, மின்சொரி மணியும்", "செம்பொ னூர்ந்த விராயிரம் யவனப் பேழை" (சீவக. 114, 557.) 215. ஆற்றும் - பொறுக்கும்.

216. வரித்த - கோலஞ்செய்த.

218. பொற்கொடி - ஓரணி; க. 41 : 53.

219. ஏர்ப்ப - அழகு செய்ய. 221. ஒற்றைவடத்தை அணிந்து.

222. களிகை - கழுத்தணி; க. 41 : 82; உ. 19 : 118. செவ்வனம் - நேர்மையாக.

பி - ம். 1 வணங்கிநீ. 2 விரித்த. 3 வேற்ப.

[1] ஒண்கதிர் மதிமுக மொளியொடு சுடரச்
செம்பொ னோலை சேடுபடச் சுருக்கி
ஐவகை வண்ணத் தந்நுண் மேகலை
பையர வல்குற் பரப்பிடை யிமைப்பக்
கொய்துகொண் டுடீஇய கோடி நுண்டுகில்
மைவளர் கண்ணி மருங்குல் வருத்தக்
கடுங்கதிர் முத்துங் கைபுனை மலரும்
தடந்தோட் கொப்ப வுடங்கணிந் தொழுகிய
சின்மயிர் முன்கைப் பொன்வளை முதலாக்
கண்ணூர் கடகமொடு கைபுனைந் தியற்றிய
சூடகத் தேற்ற சுடரொளிப் பவளமொடு
பாடக நூபுரம் பரட்டுமிசை யரற்ற
ஆடமைத் தோளியை யணிந்துமுறை பிறழாது
வதுவைக் கேற்ற மங்கலப் பேரணி
[2] அதிரா கரிகியை யணிந்தன ரமைய

(உதயணனைக் கோலஞ் செய்தல்)

ஓங்கிய பெரும்புக ழுதயண குமரனைத்
தாங்கருந் தோழர் தாம்புனைந் தணியக்
கடிநாட் கோலத்துக் காம னிவனென
நெடுநகர் மாந்தர் நெஞ்சந் தெளியக்
காட்சிக் கமைந்த மாட்சி யெய்த

(உதயணன் மணமண்டபம் புகுதல்)

வெற்ற வேந்தன் கொற்றப் பெருங்கணி
கூறிய முழுத்தங் குன்றுத லின்றி

---

225. சுருக்கி - சுருங்கச்செய்து அணிந்து.
227. இமைப்ப - ஒளிவீச. 228. உடீஇய - உடுத்திய.
231. உடங்கு - சேர. 234. சூடகம் - ஒருவகை வளை.
238. அதிராகரிகி - பதுமாபதி.
241. மணக்கோலத்தையுடைய காமனிவனென்று.
244. வெற்றம் - வெற்றி. அரசனுடைய கணியைப் பெருங்கணி யென்றல் மரபு; "ஆசான் பெருங்கணி யருந்திற லமைச்சர்" சிலப். உசு : 3.
245. முழுத்தம் - முகூர்த்தம்; சிலப். உசு : 30; இப்பெயர் மூழ்த்தமெனவும் வழங்கும்.

பி - ம். 1 வெண்கதிர். 2 அதிராகரகியை.

ஆர்வச் செய்தொழி லகன்பெருங் கோயிலுள்
ஆயிரம் பொற்றா ணணிமணிப் போதிகைக்
காய்கதிர் முத்தங் கவினிய வணிமின்
அத்தூ ணடுவ ணுத்த வுருவின
சந்தனப் பெருந்தூ ணைம்பது நாட்டிய
மைந்த ரழகிற் கேற்ற......................
............................................................
அழன்மணி நெடுமுடி யரசரு ளரசன்
நிலமமர் செங்கோ னித்தில மேர்தரத்
தலைமலை படலைத் தருசகன் புகுந்து
தீவேள் சாலை திறத்துளி மூட்டிப்
புகுதுக வத்தவ னென்றலிற் பூந்தார்
அரசிளங் குமரரொ டண்ணல் புகுதரக்

(பதுமாபதி வருகை)

கதிர்மதி முகத்தியைக் [1] காவல் கண்ணி
ஆயிரத் தெண்மர் பாங்கிய ரன்னோர்
பாசிழைத் தோழியர் பாடகஞ் சுடரத்
தண்பெரும் பந்தருட் கண்பிணி கொள்ள
உயர்வினு மொழுக்கினு மொத்தவழி வந்த
மங்கல மன்னற்கு மந்திர விழுநெறி
ஆசான் முன்னின் றமையக் கூட்டித்
தீமாண் புற்ற திருத்தகு பொழுதிற்
புதுமலர்க் கோதைப் பூந்தொடிப் பணைத்தோட்
பதுமா நங்கையைப் பண்புணப் பேணி
மணநல மகளிர் மரபிற் கொத்தவை
துணைநல மகளிரொடு துன்னிய காதல்
மூதறி மகளிர் முடித்த பின்றை

(உதயணன் பதுமாபதியை மணம்புரிந்து கொள்ளல்)

ஏதமில் காட்சி யேயர் பெருமகன்
நன்னுதன் மாதரை நாட்கடிச் செந்தீ

255. வேள் - வேட்கின்ற.
264. ஆசான் - புரோகிதன்.

பி - ம். 1 காவலன்,

முன்முத விரீஇ முறைமையிற் றிரியா
விழுத்தகு வேள்வி யொழுக்கிய லோம்பிச்
செம்பொற் பட்டம் பைந்தொடிப் பாவை
மதிமுகஞ் சுடர மன்னவன் சூட்டித்
திருமணிப் பந்தருட் டிருக்கடங் கழிப்பி
ஒருமைக் கொத்த வொன்றுபுரி யொழுக்கின்
வல்லோர் வகுத்த வண்ணக் கைவினைப்
பல்பூம் பட்டிற் பரூஉத்திரட் டிருமணிக்
காலொடு பொலிந்த கோலக் கட்டிற்
கடிநாட் செல்வத்துக் காவிதி மாக்கள்
படியிற் றிரியாது படுத்தனர் வணங்கப்
பட்டச் சின்னுதற் பதுமா பதியொடு
கட்டிலே றினனூற் கருதியது முடித்தென்.

உஉ—பதுமாபதி வதுவை முற்றிற்று.

---

282. காவிதிமாக்கள் - காவிதிப்பட்டம் பெற்ற மகளிர் ; உ. 3 : 144 - 6. 283. படி - உருவம்.

285. கட்டில் - விவாகம்பண்ணி எழுந்திருந்து சாந்தியான கூத்தும் ஆலத்தியுங்கண்டு அருந்ததி காணப்போமளவும் இருக்குங் கட்டில் ; "அவளி டக்கை பற்றி, வளரெரி வலங்கொண் டாய்பொற் கட்டிரு னேறி னானே" சீவக. 2468. ்பு. உ. 3: 167.

---

## உ௩—படையெழுச்சி.

(உதயணன் செயல்)

கட்டி லேறிய காவல் வேந்தன்
ஒட்டிய நண்பி னுருமண் ணுவாவினை
விடுத்தல் வேண்டும் வல்லே விரைந்தெனத்

---

உ௩. படையெழுச்சி.

[பாஞ்சாலராயனை வென்று தன் நகரமாகிய கோசம்பியைக் கைப்பற்றுதற்கு உதயணன் படைகளோடு எழுந்தமை இதனால் அறியலாகும்.]

1. வேந்தன் - உதயணன்.

3. விடுத்தல் வேண்டும் - எலிச்செவியரசன் வைத்த சிறையினின்று விடுவிக்கவேண்டும். வல்விரைந்து - மிகவிரைந்து ; ௩. 20 : 98.

தடுத்த பெரும்புகழ்த் தருசகற் குணர்த்தித்
தெய்வமும் விழையு மைதவழ் கோயிலுள்
ஆடல் கண்டும் பாடல் கேட்டும்
மிசையுல கெய்திய வசைவி லாக்கத்
தண்ணா னெடுமுடி யமரிறை போலப்
பண்ணொலி [1] யரவத் துண்மகிழ் வெய்திக்
கழுமிய காதலொடு கவவுக் கைவிடா
தொழுகுங் காலை நிகழ்பொருள் கூறுவேன்

(தருசகன் எண்ணுதல்)

தம்முறு கருமந் தாஞ்சேர்ந் ததுவெனப்
பின்னிது முடித்தல் பெருமை யன்றால்
முன்னுப காரத்து நன்ன ராற்றிய
நட்பு மன்றி நம்மொடு கலந்த
சுற்ற மாதலிற் சுடர்ப்பூ ணுதயணன்
அற்ற மெல்லா [2] மறிந்தன மாகிக்
கொற்றநன் னாடு கொண்டனங் கொடுத்தல்

---

4. பெரும்புகழைப் பிறரிடத்துச் செல்லாது தடுத்துத் தன்னிடத்து இருக்கச் செய்த தருசகனுக்கு; "செல்லிசை நிலைஇய பண்பின், நல்லியக் கோடன்" சிறுபாண். 268 - 9.

5. "தேவரும் வெஃகற் கொத்த செயிரறு செல்வம்" கம்ப. அரசியல். 30.

6. "பாட லோர்த்து நாடக நயந்தும்" பட்டின. 113.

7. மிசையுலகு - மேலுலகு; சுவர்க்கம்.

8. அமரிறை - தேவேந்திரன்; 'அமருலகம்' என்றவிடத்துப் போல அமரர் இறுதி குறைந்து நின்றது.

6 - 9. இந்திரன்போல ஆடல்கண்டும் பாடல்கேட்டும் மகிழ்ந்து.

10. கழுமிய காதல் - நிறைந்த அன்பு. கவவு - அணைத்தல்; "கவவுக் கைவிட" கலி. ௧௪.

14. முன்னுபகாரம் - விரிசிகன் முதலிய பகைவர் எண்மரை உதயணன் வென்றமை. 14 - 5. ரு. 1 : 38 - 9.

15 - 6. ரு. 21 : 65 - 6.

17. அற்றம் - இரகசியம்; சோர்வுமாம்.

18. கொற்றம் - அரசுரிமை; பிறரைவென்ற வெற்றியுமாம்.

பி - ம். 1 யரவத்தின்மகிழ். 2 மறிந்தனனாகி.

கடனமக் கதுவென விடனுறு சூழ்ச்சியன்

**(தருசகன் உதயணனுடன் அமைச்சர்முதலியோரை விடுத்தல்)**

தாமே சென்று தம்வினை முடிக்கும்
மாமாத் தியருண் மதிமீக் கூறிய
பகைப்புலந் தேய்க்கும் படைத்திறற் றடக்கை
வகைப்பொலி மான்றேர் வருட காரனும்
வீர வென்றி விறல்வெந் துப்பிற்
றாரணி மார்பிற் றார காரியும்
செருமிகு சேனைச் செய்தொழி னவின்ற
பொருமா னூக்கத்துத் தரும தத்தனும்
பத்திப் பைம்பூட் சத்திய காயனொடு
வேல்வருந் தானை நால்வரு முதலா
இருநா றானையு மிராயிரங் குதிரையும்
அறுநூற் றிரட்டி யடன்மணித் தேரும்
அறுபதி னாயிர ரெறிபடை மள்ளரும்
திருமணிச் சிவிகையும் பொருவினைப் படாகையும்
[1] செங்காற் பாண்டிய நன்று பூண்ட
பைம்பொ னார்தியும் பவழக் கட்டிலும்
படாஅக் கொட்டிலும் பண்டிபண் டாரமும்

---

19. இடனுறு சூழ்ச்சி - பரந்த ஆலோசனை; "பரந்திடங் கொடுக்கும் விசும்புதோ யுள்ளம்" (மலைபடு. 558); "நிலனேந்திய விசும்பும்......சூழ்ச்சிய தகலமும்" (புறநா. உ: 2 - 7); "விசும்பி னன்ன சூழ்ச்சி" தொல். உவம. சூ. 6, பேர். மேற்.

20. வேந்தன் பணியின்றியும் தாமாகவே சென்று தம் காரியமாகச் செய்துமுடிக்கின்ற; பு - வெ. 1.

21. மாமாத்தியர் - பேரமைச்சர்; "தொன்னெறி முனிவ ராமாமாத்தியர் தொழுகு லத்து" (திருவால. உஎ: 6); ஆமாத்தியர் - மந்திரி மரபினருமாம். மதி மீக்கூறிய - புத்தியால் மேலாகச் சொல்லப்பட்ட (23) வருடகாரனென்க.

22 - 3. ௩. 25: 51. 25. தார் - வெற்றிமாலை.

28. பூணென்றது வீரக்கழலை. 31. அடல் - வலி.

33. பொருவினைப் படாகை - போர்செய்வதற்கு எடுக்கும் கொடி.

36. படாஅக் கொட்டில் - கூடாரம்; படாம் - ஆடை.

பி - ம். 1 செங்கோற்.

கடாஅக் களியானைக் காவலற் கியைந்த
பணைத்தோட் சிலசொற் பதுமா நங்கைக்
கமைக்கப் பட்ட வகன்பரி யாளமும்
அன்னவை யெல்லா மந்நிலை நல்கி
மன்ன குமரனொடு செல்கெனச் செப்பாச்
செயற்படு கரும மெல்லா மற்றவற்
கியற்பட வீவலென் றமைச்சரொடு கிளந்து
வேறுவே றகத் தேறக் காட்டி
நினக்கே யவனை நிறுத்துதல் கடனென

(தருசகன் கூற்று)

அவர்க்கே யவர்க்கே யருளுரை யளைஇ
வடுத்தொழி லகன்ற வருட கார
உடற்றுநர்க் கடந்த வுதயண குமரன்
அடைக்கல நினக்கென வவன்வயிற் கையடுத்
தோம்படைக் கிளவி பாங்குறப் பயிற்றி
நிலைமை யறிய நீட்ட மின்றி
மறைபுறப் படாமை மனத்தே யடக்கி

---

37. மதத்தாற் களிக்கின்ற யானை.

38. பணைத்தோள் - பருத்ததோள்; மூங்கில்போன்ற தோளுமாம்.

39. பரியாளம் - பரிவாரம்; க. 56 : 201, அடிக்.

41. செல்கெனச் செப்பா - உதயணனோடு செல்கவென்று சொல்லி.

43. இயற்பட ஈவல் - இயல்பாகவே ஈவேன்; மந்திரியரை நோக்கிக் கூறுதலால் 'ஈவல்' என்றான்.

44. ஒவ்வொரு மந்திரிமாரிடத்தும் தனித்தனியே அவரவர் தெளியும்படி விளங்கச் சொல்லி.

45. நினக்கே...கடன் : இது தருசகன் கூற்று.

46. அவர்க்கே அவர்க்கே - அவ்வம் மந்திரியர்க்கு. உரை அளைஇ - கலந்துசொல்லி.

49. அவன்வயிற் கையடுத்து - அவ்வருடகாரன் கையிலொப்பித்து.

50. ஓம்படைக்கிளவி - பாதுகாப்புச்சொல். பயிற்றி - பலகாற் சொல்லி; ரு. 20 : 199 - 200.

52. மறை புறப்படாமை - இரகசியம் வெளிவராதபடி.

ஒற்றெற் றியவரை யொற்றி னாய்ந்து
முன்னங் கொள்ளு முபாய முயற்சியொடு
நாவாய் தொகுத்து நளிபுனற் பேரியாற்
றூர்மடி கங்கு னீர்நெறி போகி
மலையர ணடுங்க நிலையர ணடுங்க
ஒற்றி னானு முபாயத் தானும்
ஆற்றல் சான்ற வாருணி தொலைச்சிக்
கோற்றொழிற் கொற்றங் கொடுத்துநீர் பெயர்மினென்
றேற்றுரி முரசி னிறைமகன் பணித்த

(படை எழுதல்)

மாற்ற மெல்லா மனத்தகம் புகற்றக்
[1] கூற்றிய றகையர் கொற்ற மாகென

---

53. பகைப்புலத்து ஒற்றவேண்டிய செய்திகளை உணர்ந்துவந்த ஒற்றர்களை வேறு ஒற்றர்களாலே ஆராய்ந்து; ௩. 25: 48; "ஒற்றர் தங்களை யொற்றரி னாய்தலும்" சீவக. 1921; குறள், 588 - 9.

54. உபாய முயற்சியோடு - தந்திரமுள்ள முயற்சியால்.

56. ஊர்மடி கங்குல் - ஊரிலுள்ள பலரும் உறங்கும் இரவில்; "மன்பதை யெல்லா மடிந்த விருங்கங்குல்" (கலி. ௯௫ : 3); "ஊர்மடி கங்குல்" சிலப். ௧௯ : 207; அகநா. ௪௯ : 2.

55 - 6. யாற்றுநீர் வழியேபோய்.

59. ஆருணி தொலைச்சி - பாஞ்சாலராயனைக் கொன்று; தொலைச்சுதல் - தோல்வியடையச் செய்தலுமாம்.

60. கோற்றொழில் - செங்கோல் செலுத்துதல். கொற்றம் - அரசுரிமை; வெற்றியுமாம்; 18. கொடுத்து நீங்கள் திரும்பிவருக வென்றான். 61. இறைமகன் - தருசகன்.

61 - 2. பணித்த மாற்றம் எல்லாம் - கட்டளையிட்ட சொல்முழுதும், மனத்தகம் புகற்ற - அப்படியே செய்யவேண்டுமென்று மனத்தை விரும்பச்செய்ய.

63. கூற்றியல் தகையர் - அரசன் கூறியவற்றிலே மனமும் செவியும் சென்ற தன்மையுடைய மந்திரிகள்; பகைவரைக் கொல்லுதலிற் கூற்றுவனை ஒத்தவர்களென்றும் தம்முடைய கூற்றின்படியே இயலும் தகையரென்றுமாம். அவர் கொற்றமாகுகவென்று சொல்ல.

பி - ம். 1 கூற்றியல்றகையா.

ஓங்கிய தோற்றத் துதயணற் றழீஇச்
செழுங்கோ சம்பிச் செம்முக முன்னி
எழுந்தது மாதோ பெரும்படை யிருளென்.

உ௩—படையெழுச்சி முற்றிற்று.

---

64 - 6. பெருஞ்சேனை, உதயணனைச் சூழ்ந்துகொண்டு கோசம்பியை நோக்கி எழுந்தது.

---

## உ௪—மேல்வீழ் வலித்தது.

(உதயணனுக்குத் தருசகன் விடைகொடுத்தல்)

இருளிடை யெழுந்த விகலடு பெரும்படை
அருளுடை வேந்தன் வழிதொடர்ந் தொழியான்
வான்றோய் பெரும்புகழ் வத்தவ ரிறைவற்குத்
தேன்றோய்த் தன்ன திருமொழி யளைஇ
இடையற வில்லா வின்பமொ டுயர்ந்த
நன்குடைக் கேள்விமுத னின்கட் டோன்றிய
கலக்கமி னிலைமையுங் கைம்மா றில்லதோர்
கிளைப்பெருந் தொடர்ச்சியும் பயந்தவின் றெமக்கென
அற்புத்தளைக் கிளவி பற்பல பயிற்றிப்

---

உ௪.—மேல்வீழ் வலித்தது.

[மேற்சென்று ஆருணியரசனோடு போர்செய்தற்குரிய வகை இன்னவென்பதை மந்திரிமாரோடு ஆராய்ந்து உதயணன் நிச்சயித்தமை இதனால் அறியலாகும்.]

2. வேந்தன் - தருசகன்.

3. வானுலகை அளாவிய பெரும்புகழையுடைய உதயணனுக்கு; "விண்பொருபுகழ் விறல்வஞ்சி" (புறநா. ௧௧); "வானந்தோய்புக ழான்மலி வெய்தினன்" சீவக. 161.

3 - 4. "வானேற நீண்ட புகழான் சரிதம்மிதன்னைத், தேனூற நின்று தெருண்டாரவை செப்பலுற்றேன்" சீவக. 6.

6. கேள்வி - நூற்கேள்வி; வீணையுமாம்.

8. பயந்த - பயனளித்தன.

9. அற்புத்தளை - அன்பாகிய கட்டு. பயிற்றி - பலகாற் சொல்லி,

பீடுகெழு தானைப் பிரச்சோ தனற்குக்
கூடிய கிளைமைக் குணம்பல கூறி
ஓடுகா லிளையரை யோலையொடு போக்கின்
நாடுவ தல்ல தவனு நம்மொடு
தீது வேண்டா நிலைமைய னாகும்
மலைத்தலைத் தொடுத்த மல்லற் பேரியாற்றுத்
தலைப்பெயன் மாரியிற் றவிர்த லின்றி
நிலைக்களந் தோறுங் கொலைப்படை விடுத்தபின்
யானும் வேண்டின் வருகுவ னேனைச்
சேணில மன்னர் கேண்மை யுடையோர்க்
கறியப் போக்கி னவர்களும் வருவர்
செறியச் செய்த குறியினி ராமின்
நிலம்படக் கிடந்தநின் னேமியந் தடக்கை
வலம்படு வினைய வாகெனப் பல்லூழ்
பொய்யா வாய்ப்புண் மெய்பெறக் கிளந்து
திருவள ரகல மிருவருந் தழீஇப்
பிரிய லுற்ற தரிசகற் குரைக்கும்

---

11. கிளைமைக்குணம் - உறவு முறைத்தன்மை.

12. இளையரை - தூதரை. ஓடுகால் இளையர்: "கால்வ லிளையர்" ந. 27 : 41.

13. நாடுவதல்லது - விரும்புவதல்லாமல். அவனும் - பிரச்சோ [தனனும்.

14. ஆகும் - ஆவான். பிரச்சோதனன் அன்புடையவனுவா [னென்றபடி.

15. "மலைத்தலைய கடற்காவிரி" பட்டின. 6.

16. மாரியின் - மழைவெள்ளம்போல.

17. விடுத்தபின் - யான் அனுப்பிய பின்பு.

21. நீயும் மந்திரிமாரும் பிறருக்குத் தெரியாதபடி செய்துகொண்ட சங்கேதத்தையுடையீராக ஆமின்.

22. நிலம்பட - நிலங்கள் மேன்மேலும் கூடும்படி. நேமி - சக்கர ரேகை; "சங்க லேகையுஞ் சக்கர லேகையு, மங்கை யுள்ளன வையற்கு" சூளா. குமார. 45.

22 - 3. கைகள் வெற்றியையுடையனவாகுகவென்று.

24. வாய்ப்புள் - நற்சொல்; "நல்ல நல்லோர் வாய்ப்புள்" முல்லை. 18.

25. இருவரும் - தருசகனும் உதயணனும்.

26. உரைக்கும் - உதயணன் உரைப்பான்.

(உதயணன் தருசகன்பாற் கூறுதல்)

இருமண மெய்திய வின்ப மெல்லாம்
உருமண் ணுவாவினை யுற்றதற் பின்னை
ஐம்மூந் நாளி னவனைச் சிறைவிடுத்
தெம்முன் னாகத் தருதனின் கடனென
அமைச்சன் பெருமையு மரசன தார்வமும்
மனத்தி னுவந்து மகதவர் கோமான்
அது [1] வொருப் பட்டாங் ககன்ற பின்னர்

(உதயணன் செயல்)

உதயண குமர னுரிமை தழீஇ
[2] அடற்பே ரியானையு மலங்குமயிர்ப் புரவியும்
படைக்கூழ்ப் பண்டியும் பள்ளி வையமும்
நடைத்தே ரொழுக்கு [3] நற்கோட் டேர்தியும்
இடைப்படப் பிறவு மியைந்தகம் பெய்து

27. இருமணம் - பதுமாபதியின் பெருமைபொருந்திய கலியாணத்தை.

29. சிறைவிடுத்து - எலிச்செவியரசனாற் கொள்ளப்பட்ட சிறையினின்றும் நீக்கி.

27 - 30. யான் நின்தங்கையை மணஞ்செய்து கொண்டமையால் அடையும் மகிழ்ச்சியை உருமண்ணுவாவை அடைந்தபின்புதான் அடைதற்குரியேன். ஆதலால் அவனைச் சிறைவிடுத்துப் பதினைந்து தினத்துள் என்முன்னே வரச்செய்தல் உன்னுடைய கடமையாகுமென்று உதயணன் கூற.

31 - 3. உருமண்ணுவாவின் பெருமையினையும், அவன்பால் உதயணனுக்குள்ள மிக்க அன்பையும் தருசகன் அறிந்து மகிழ்ந்து அங்ஙனஞ் செய்வேனென்று கூறி நீங்கியபின்பு.

34. உரிமை - அடிமைத்திரள் முதலியன.

36. படைக்கூழ் - சேனைக்குரிய உணவுகளையுடைய. பள்ளி வையம் - உறங்குதற்கு உரிய வண்டி.

37. நிலைத்தேரு முண்மையின், 'நடைத்தேரொழுக்கு' என்றார். கோட்டேர்தி - யானைத்தந்தத்தாற் செய்த வாகனம்.

38. அகம் பெய்து - படைகளின் நடுவே சேர்த்து.

பி - ம். 1 வொருபொருட்டாங்கு. 2 அடற்பெயர். 3 நற்கட்டேர்தி.

கொடிப்படை போக்கிப் படிப்படை நிறீஇப்
புடைப்படை புணர்த்துப் [1] புள்ளிற் போகி
மள்ளரொடு புணர்ந்த மாண்பிற் ருகிக்
கள்ளரொடு புணர்ந்த கட்டரண் குறுகிப்
போர்மேற் கொண்ட புகற்சியன் புரவலன்
ஆர்மேற் போங்கொ லஞ்சுதக வுடைத்தெனச்
சேனை மன்னர் சிந்தையுட் டேம்ப
வலிப்பது தெரிய வொலித்துடன் குழீஇ
விட்டன னிருந்த காலை யொட்டிய

**(தம்பியருடைய வரவை வயந்தகன் கூறல்)**

எழுச்சி வேண்டி யூகி விட்ட
அருமறை யோலை யாய்ந்தன னடக்கி
வரிமலர்ப் படலை வயந்தக னுரைக்கும்
பின்னிணைக் குமரர் பிங்கல கடகர்
இன்னுக் காலை யெள்ளி வந்த
பருமயானைப் பாஞ்சால ராயன்

---

39. கொடிப்படை - முன்படை. படிப்படை - கூலிப்படை.

40. புடைப்படை - சுற்றுப்படை. புள்ளிற் போகி - பறவைகளைப்போல விரைந்து சென்று; "வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி" (புறநா. சஎ.) 41. மள்ளர் - வீரர்.

42. கட்டரண் - காவலையுடைய அரண்; மிக்க அரணுமாம்.

போகிக் (40) குறுகி (42.)

43. புகற்சியன் - விருப்பமுடையன்; "போரெனிற் புகலும் புனைகழன் மறவர்" (புறநா. ௩க.) 44. போங்கொல் - போவானோ.

45. தேம்ப - வருந்த. [படி.

46. வலிப்பது தெரிய - தான் நிச்சயித்திருப்பதைப் பிறர் அறியும்

47. உதயணன் தங்கியிருந்தபொழுது.

48. எழுச்சி - போருக்கு எழுதலை. விட்ட - வயந்தகனுக்கு விடுத்த.

49. அருமறையோலை - பிறர் அறிந்துகொள்ளுதற்கரிய மந்தணச் செய்தியையுடைய ஓலையை. 50. படலை - ஒருவகைமாலை.

51. நின் தம்பியராகிய பிங்கலகடகர்; ௩. 9: 124 - 5.

52. இன்னுக்காலை - பிரச்சோதனனால் நீ கவர்ந்து கொள்ளப்பட்ட துன்பக்காலத்தில். வந்த - கோசம்பி நகரைக் கைப்பற்றுதற்கு வந்த. 53. பாஞ்சாலராயன் - ஆருணியரசன்.

பி - ம். 1 புனலிற்.

அருமுரண் ணழிய நூறலி னவனமர்க்
காற்றா ருடைந்து நோற்றோ ரொடுங்கும்
குளிர்நீர் யமுனைக் குண்டுகயம் பாய
வளியியற் புரவி வழிச்செல விட்டவர்
பொன்னியற் புரிசையோர் பெண்ணுறை பூமி
அவணெதிர்ப் பட்டாஅங் கிவணகம் விரும்பா
தீரறு திங்க ளிருந்த பின்றை
[1] ஆரர ணகர மாண்டன னெழுகும்
ஆருணி யரசன் வார்பிணி முரசம்
நிலனுட னதிர நெருப்பிற் காய்ந்து
தலமுதற் கெடுநோய் தரித்த லாற்றார்
போந்தனர் போலும் புரவல மற்றுநம்
ஓங்கிய பெருங்குல முயர்தற் குரித்தென்

54. முரண் - தங்கள் வலிமை. 55. ஆற்றார் - வலியில்லாராய்.

56. குண்டு கயம் - மிக்க ஆழமான இடத்தில்; நீரிற் புக்கவரோடு போர்செய்யலாகாதென்பது மரபு; "உடையிட்டார் புன்மேய்வா ரோடுநீர் புக்கார், படையிட்டார் பற்றேது மின்றி - நடையிட்டா, ரிவ் வகை யைவரையு மென்று மணுகாரே, செவ்வகைச் சேவகர் சென்று" (சிறுபஞ்ச. 41) என்பதனாலும் உணர்க.

57. வளி இயல் - காற்றுப்போலச் செல்லுதலையுடைய; ௫. 27 : 119; "வளிநடந் தன்ன வாச்செல லிவுளி" புறநா. ௧௯௭: 1.

58. புரிசை - மதில். பெண் உறை பூமி - மகளிரே உறையும் பூமி.

59. எதிர்ப்பட்டு - எதிர்ப்பட. இவணகம் - இவ்விடத்தை.

61. நகரம் - கோசம்பியை.

63. நிலன் உடன் அதிர - நாடு முழுவதும் முழங்க. காய்ந்து - [கொதித்து.

62 - 3. தன் வெற்றியைப் புலப்படுத்தற்கு அரசன் முரசை அதிர்ப்பித்தல் மரபு; "வெஃகிய புகழி னான்றன் வென்றிவெம் முரச மார்ப்ப" சீவக. 299.

64. தலமுதற் கெடுநோய் - பூமியை இழந்த துன்பம்.

65. போந்தனர்போலும் - ஆருணி யரசனோடு போர்செய்தற்கு வந்தார் போலும்.

66. அவர்கள், மானமிகுதியால் வந்தது பற்றி, 'நங்குல முயர்தற் குரித்து' என்றான்.

பி - ம். 1 வாரரணகர.

(உதயணன் செயல்)

ருங்கவ னுரைப்ப வமர்படக் கடந்த
தடக்கை கூட்டித் தாங்கா வுவகையொடு
படைப்பெரு வேந்தன் பல்லூழ் புல்லி
இருவயி னுலக [1] மியையப் பெற்ற
பெருமகன் போல வுவகையுட் கெழுமிப்
பொருமுர ணண்ணல் புகன்ற பொழுதிற்

(படைகள் ஈண்டுதல்)

பாடுபெறு சிறப்பிற் பைந்தார் மன்னன்
சேடுபடு வத்தஞ் சேர்வது பொருளென
அறியக் கூறிய குறிவயிற் [2] றிரியார்
[3] முன்னீ ராயினு முகந்துடன் புகுவோர்
பன்னீ ராயிரம் படைத்தொழி லிளையரொ
டற்றக் காலைக் கமைக்கப் பட்ட
கொற்றத் தானையுங் குழூஉக்கொண் டீண்டத்

(தம்பியர் உதயணனை இறைஞ்சிப் புலம்பிக் கூறுதல்)

தப்பினு ரென்ற தம்பியர் வந்தவன்
பொற்கழற் சேவடி பொருந்தப் புல்லி
ஓர்த்தனந் தேறி யுறுதிநோக் காது
[4] சேர்த்தியில் செய்கையொடு சிறைகொளப் பட்டுப்

---

69. வேந்தன் - உதயணன்.

70. இருவயினுலகம் - இவ்வுலகையும் சுவர்க்கத்தையும்; இம்மையின்பத்தையும் மறுமையின்பத்தையுமென்றுமாம்; "இம்மையே மறுமை தானு நல்கினை யிசையோ டென்றாள்" கம்ப. உருக்காட். 71.

71. கெழுமி - பொருந்தி. 72. புகன்ற - விரும்பிய.

74. வத்தம் - வத்தநாடு.

76. முன்னீர் - நிலத்திற்கு முந்தியதாகிய நீர்; புறநா. ௯: 10, உரை. முகந்து - ஏற்றுக் கொண்டு; "அடன்முகந்த தானை" பு - வெ. 276.

77. 145.

78. அற்றக் காலைக்கு - சோர்வுற்ற காலத்தில் தங்களைப் பாதுகாத்தற்பொருட்டு. 80. தம்பியர் - பிங்கலகடகர்.

83. சேர்ச்சி - சேர்க்கை.

பி - ம். 1 மெய்தப். 2 றெறியார். 3 முந்நீர். 4 சேர்ச்சியில்.

பெருங்குடி யாக்கம் பீடற வெருளி
அருங்கடம் பூண்ட வவியாக் காதலொடு
பயந்தினி தெடுத்த படைப்பருங் கற்பினம்
கொற்ற விறைவிக்குக் குற்றேல் பிழையா
தொருங்கியா முறைத லொழிந்தது மன்றி
இருங்கடல் வரைப்பி னினியோ ரெடுத்த
இறைமீக் கூறிய விராமன் றம்பி
மறுவொடு பெயரிய மதலைக் கியைந்த
ஆறுப் பெரும்புகழ் யாமு மெய்தத்
தேனார் தாமரைத் திருந்துமலர்ச் சேவடி
வழிபா டாற்றலும் வன்கணி னீத்தனெம்
கழிபெருஞ் சிறப்பிற் காவல் வேந்தே
இம்மை யென்ப தெமக்குநெறி யின்மையின்
முன்னர்ப் பிறப்பின் மூத்தோர்ப் பிழையா
துடன்வழிப் படூஉ [1] முறுதவ மில்லாக்
கடுவினை யாளரேம் யாமெனக் கலங்கிப்
பொள்ளெனச் சென்னி பூமி தோய
உள்ளழல் வெம்பனி யுகுத்தரு கண்ணீர்த்

---

84. வெருளி - அஞ்சி. 87. இறைவி - தாய்.

88. ஒருங்கு - உடன். 89. எடுத்த - மேலாக உயர்த்திய.

90. இறை மீக்கூறிய - அரசரில் மேலாகக் கூறப்பட்ட.

91. மறுவொடு பெயரிய மதலை - இலக்குமணன்; சைனநூலான வடமொழி உத்தரபுராணத்தில் இராமாயண சரித்திரம் வருமிடத்து 'சக்ரரேகை யென்ற அடையாளத்துடன் கூடியவனாதலால் லக்ஷ்மணன் என்ற பெயருடையவனானன்' (பருவம், 67, சுலோகம், 152) என்ற கருத்தமைந்த சுலோகம் கூறப்பட்டுள்ளதென்பர்; ஸ்ரீமத் மு. இராகவையங்காரவர்கள் கலைமகள், தொகுதி 7, ப. 332 - இல் இச்செய்தியைக் குறித்திருக்கின்றார்கள்.

92. ஆறுப் பெரும்புகழ் - தமையனை நீங்காமையால் உளதாகிய மிக்க கீர்த்தி; "இராமன் பின்பு, பிறந்தானு முளனென்னப் பிரியாதான்" (கம்ப. குக. 68) என்பது இங்கே அறியற்பாலது.

93. சேவடி - உன் திருவடிக்கு.

100. பொள்ளென - விரைய.

101. வெம்பனி: க. 40 : 191 - 2, அடிக்.

பி - ம். [1] வுறுதவ.

(உதயணன் தம்பியரைத் தழுவிக் கூறுதல்)

துன்பமொ டிறைஞ்சிய தம்பியர்த் தழீஇ
இருபான் மருங்கினுந் திரிதருங் கண்ணின்
அழறிரண் டன்ன வாலி சோர்ந்தவர்
குழறிரண் டணவருங் கோல வெருத்திற்
பல்லூழ் தெறித்தெழப் புல்லி மற்றுநும்
அல்லல் காண்பதற் கமைச்சுவழி யோடாப்
புல்லறி வாளனேன் செய்தது நினைஇக்
கவற்சி வேண்டா காளைக ளினியென
அகத்துநின் றெழுதரு மன்பிற் பின்னிக்
குளிர்நீர் நெடுங்கடற் கொண்ட வமிழ்தென
அளிநீர்க் கட்டுரை யயனின் றோர்க்கும்
உள்ளம் பிணிப்ப வொன்ற வுரைத்தினி
எள்ளு மாந்த ரெரிவாய்ப் பட்ட
பன்னற் பஞ்சி யன்ன ராகென
வெகுளித் தீயிற் கிளையறச் சுடுதல்
முடிந்த திந்நிலை முடிந்தன ரவரெனச்
செப்பிய மாற்றம் பொய்ப்ப தன்றாற்
[1] பொரக்குறை யிலமென [2]விரப்ப வின்புற்
றிளையோர் தம்மோ [3] டின்றவட் கிரங்கிக்
களைக ணாகிய காதலந் தோழனை
வளையெரிப் பட்ட தெளிபே ரன்பிற்
றளையவிழ் கோதையொடு தருதலும் பொருளோ
நும்மைத் தந்தென் புன்மை நீக்கிய

---

102. உதயணன் தழுவி. 104. வெப்பமுள்ள கண்ணீர்த்துளி.
105. அணவரும் - மேல்நோக்கி அசையும்.
ஆலி சோர்ந்து (104) தெறித்தெழ (106.)
108. நீவிர் நினைந்து. 109. காளைகள் : விளி.
114. எள்ளும் மாந்தர் - நம்மை இகழும் பகைவர்.
115. ஆய்ந்த பஞ்சியை ஒப்பார்களாகுக.
116. கிளை - பகைவனுடைய உறவினர்.
117. அவர் - பகைவர். என - என்று சொல்ல.
119. பொர - நீ பொருதலால். 118 - 9. தம்பியர் கூற்று.
121. தோழனை - யூகியை.
123. கோதையொடு - வாசவதத்தையொடு.

பி - ம், 1 போர்க்குறை. 2 வீர்ப்ப. 3 டின்றவர்க்.

உம்மைச் செய்த செம்மைத் தவத்தனெனத்
தம்பியர் தாமரைத் தடங்கண் சொரியும்
வெம்பனி துடைத்துப் பண்புளி பேணிக்
கண்ணுற வெய்திய கருமம் போல
மண்ணுறு செல்வ நண்ணு நமக்கென

(உதயணன் அமைச்சர்களுடன் ஆராய்தல்)

அன்னவை கிளந்த பின்னர்த் தன்னோ
டொன்றுற் கொள்ளு முபாய நாடி
வருட காரனொ டிடவகற் றழீஇ
அளப்பருங் கடுந்திற லாருணி யாருயிர்
கொளப்படு முறைமை கூறுமி னெமக்கென

(வருடகாரன் கூற்று)

வருட காரன் வணங்கினன் கூறும்
இருளிடை மருங்கின் விரைவன ரோடி
அற்ற மிதுவென வொற்றர் காட்டிய
நீணிலை நெடுமதி லேணி சாத்தி
உள்ளகம் புக்கு நள்ளிரு ணடுநாள்
முதுநீர்ப் பௌவங் கதுமெனக் கலங்கக்
கால்வீழ் வதுபோன் மேல்வீழ் மாத்திரம்
விள்ளாப் படையொடு வேறுநீ யிருப்பக்
கொள்ளா வேந்தனைக் கோயிலொடு முற்றிச்

---

125. தவத்தன் - தவமுடையேன்.
127. "அழறிரண் டன்ன வாலி" 104.
128. கண்ணுற - நம்மில் ஒருவரையொருவர் காண.
130. தன்னோடு கூடியென ஒருசொல் வருவிக்க.
132. வருடகாரன், - தருசகனுடைய மந்திரி. [ரு. 25 : 11.
137. அற்றம் இதுவென - சிதைந்த இடம் இதுவென்று;
138. ஏணி - மதிலேறுதற்கு அமைந்துள்ளது; "சாத்தினர், ஏணி பலவு மெயில்" பு. வெ. 112. [கடல்.
139. செறிந்த இருளையுடைய நடு இரவில். 140. பௌவம் -
141. மேல்வீழ் மாத்திரம் - மேலேவீழ்ந்து அழிக்குமளவு. [மாம்.
142. விள்ளா - வேறுபடாத; மந்தணங்களைச் சொல்லாதவென்று
143. கொள்ளா வேந்தனை - பகைவனாகிய ஆருணியை; "கொள்ளார் தேஎங் குறித்த கொற்றம்" (தொல். புறத்திணை. சூ. 12.) முற்றி - வளைந்து.

சேவக நிலைஇக் காவ லோரும்
ஆறீ ராயிர மறியப் பட்ட
வீரரை விடுத்துப் போர்செயப் போக்கித்
துயிலும் பொழுதிற் றுளங்கக் குப்புற்
றயிலுறு வெம்படை யழல வீசிக்
கதுவா யெஃகமொடு கடைமுத லோரும்
பதுவாய்க் காப்புறு படைத்தொழி லிளையரைப்
பாய லகத்தே சாய நூறி
மாவும் வேழமு மாமணித் தேரும்
தானைக் கொட்டிலொ டாணக் காப்பமைத்
தொன்னார்க் கடந்த வுதயணன் வாழ்கென
இன்னாச் செய்தெம் மெழினகர் வௌவிய
குடிப்பகை யாள ரடைத்தகத் திராது
பெண்பாற் பேரணி நீக்கித் திண்பாற்
போரொடு மொன்றிற் போதுமின் விரைந்தெனக்
காரொலி முழக்கிற் கடுத்தன மார்ப்பக்
கதுமென நிகழ்ந்த கலக்கமொடு கல்லென

---

145 - 6. பன்னீராயிரம் வீரர்; 77.

147. ஆருணி துயிலும் பொழுதில். துளங்கக் குப்புற்று - நடுங்கக் குதித்து. 148. அயில் - கூர்மை.

149. கதுவாய் எஃகம் - வடுப்படுத்துதலையுடைய வேல்.

150. பதுவாய்க் காப்பு: "எண்பதி னாயிர மிளம்பது வாய்களும்" (க. 37: 211) என்றார் முன்னும். 151. பாயல் - படுக்கை.

153. தானைக் கொட்டில் - சேனைவீரர் தங்குதற்குரிய கூடாரம். ஆணம் - அரணம். 154. வாழ்கவென்று கூறி.

156. குடிப்பகையாளர் - பரம்பரைப் பகைவர்.

157. பெண்களின் பெரும்படையை நீக்கி; இங்ஙனங் கூறியது இகழ்ச்சிக் குறிப்பு; 'பகைவரை மகளிராக்கி அவர் கொண்டு விளையாடு தற்குத் தூக்கின' (முருகு. 68, ந.); 'சிலம்பும் தழையும் புரிசைக்கண் தூங்கினவென்றது, ஈண்டுப் பொருவீருளீரேல் நும்காலிற் கழலினையும் அரையிற் போர்க்குரிய உடையினையும் ஒழித்து இச்சிலம்பினையும் தழையினையும் அணிமினென அவரைப் பெண்பாலாக இகழ்ந்தவாறென்க" பதிற். ௧௯ : 6 - 9, உரை.

159. கடுத்தனம் ஆர்ப்ப - முடுகினேமாய் ஒலிப்ப.

மதிதவழ் புரிசை வளநகர் கலங்கப்
பெருமழை நடுவ ணிருளிடை யெழுந்தோர்
கடுவன் போலக் காவல னுரறி
மகிழ்ச்சி யெய்தி மாற்றோ ரில்லெனும்
இகழ்ச்சி யேதந் தலைத்தந் தெனக் கின்றெனக்
[1] கவலை கூராக் கலங்கின னெழவும்

(பட்டத் தேவியின் கலக்கம்)

எழுந்த மன்னன் செழும்பூ ணகலத்
தீர்நறுஞ் சாந்தந் தாரொடு குழையப்
பரத்தையர்த் தோய்ந்தநின் பருவரை யகலம்
திருத்தகைத் தன்றாற் றீண்டுத லெமக்கெனப்
புலவியி னடுங்கிப் பூப்புரை நெடுங்கண்
தலையளிச் செவ்வியி னமர்ப்பன விமைப்ப
ஆற்றா வனந்தரொ டசைந்த வின்றுயிற்

161. மதிதவழ் புரிசை: "மதிதவழ் புரிசை மாடக் கூடல்" 11-ஆம் திருமுறை, திருமுகப்பாசுரம்.

162 - 5. ஒரு தொடர். 163. கடுவன் - ஆண்குரங்கு.

162 - 3. கடுவன் ஆருணிக்கு உவமை; கார்காலத்திற் குரங்கு குளிரால் நடுங்கித் துன்புறும்; "பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந் தென......மந்தி கூர" (நெடுநல். 2 - 9); "மந்திமா கூர" (கைந்நிலை, 36); "மந்திதுயி லுற்றமுழை வன்கடுவ னங்கத், திந்திய மவித்ததனி யோகரி னிருந்த" (கம்ப. கார்கால. 76.) இருளிற் கடுவனுக்குக் கண் தெரியாதென்றும் அதனால் அது மிகமயங்கித் தடுமாறுமென்றுங் கூறு வர். 164. இல் - இல்லை.

165. இகழ்ச்சி ஏதம் தலைத்தது - இகழ்ந்தமையால் துன்பம் தோன்றியது.

164 - 5. ௫. 1: 22 - 4; "இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம், மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து" (குறள், 539); "இகழ்ச்சி யிற்கெடு வார்களை யெண்ணுக, மகிழ்ச்சி யுண்மதி மைந்துறும் போது" (சூளா. சீயவதை. 56.) 166. ஆருணி கலங்கினவனாகி.

169. பரத்தையரைக் கலந்த. 'நின்' என்றது அரசனை நோக்கி.

170. தீண்டுதல் எமக்குத் திருத்தகைத்தன்று.

172. அமர்ப்பன - போர்செய்வனவாய்.

173. அனந்தர் - மயக்கம்.

பி - ம். [1] கவரக கூறக்.

கூற்றூர்ப் பிசைப்பிதென் னென்றனள் வெரீஇ
விசைப்புள் வெங்குர லிசைப்பக் கேட்ட
நாகப் பெதும்பையி னடுங்கி யாகத்
துத்தியுந் தொடரு முத்தொடு புரள
ஒளிக்கா சொருபாற் றூன்றத் துயிற்பதத்
தசைந்த வந்துகில் கையகத் தசைய
நெகிழ்ந்த நீரிற் கண்கை யாக
முகிழ்ந்த முலைமுதன் முற்றத் திமைந்த
தருப்பை பொற்கொடி யாக விரக்கமொ
டோருயிர்க் கணவற்கு நீருகுப் பனள்போல்
முகங்கொள் காரிகை மயங்கல் கூராச்
சீரலங் காரச் சித்திர முடிமிசைத்
தாரணி கோதை தாழ்ந்துபுறத் தசைய
உற்றதை யறியா ளெற்றென விரங்கி
ஆவி வெய்துயிர்ப் பளைஇயக முளைவனள்
தேவி திருமகன் றூனை பற்றி
ஆகுலப் பூசலி னஞ்சுவன ளெழுவும்

(தற்றேவல் மகளிரின் துயரம்)

அருமணி திகழு மாய்பொன் மாடத்துத்

---

174. இது கூற்றூர்ப்பிசைப்பு - இவ்வொலி கூற்றினது பெரு முழக்கமாகும். 175. விசைப்புள் - கருடன்.

176. நாகப் பெதும்பையின் - நாககன்னிகையைப் போல.

175 - 6. = க. 44 : 44 - 5, அடிக்.

178. துயிற்பதத்து - துயிலுதலையுடைய காலத்து.

179. அசைந்த - கட்டிய; மெலித்தல் விகாரம்.

180 - 83. கண்ணே கையாகவும், பொற்கொடியென்னும் ஆபரணமே தருப்பையாற்செய்த கூர்ச்சமாகவும் கொண்டு நீரையுகுப்பவள் போல,

181. “முகிழ்ந்துவீங் கிளமுலை” சீவக. 1004.

184. முகங்கொள் காரிகை - தலைவி.

187. உற்றதை யறியாள் - நிகழ்ந்ததை அறியாளாகி.

189. திருமகன் - அரசனது. [தோடு.

190. ஆகுலப் பூசலின் - துன்பத்தால் உளதாகிய பெருமுழக்கத்

188 - 90. வாலி போர்செய்யப் போகையில் தாரை அவனைத் தடுத்த செய்தி இங்கே நினைவுக்கு வருகின்றது ; கம்ப. வாலிவதை. 13.

திருமணிக் கட்டிற் பாகத் தசைந்த
உழைக்கல மகளி ருள்ளழ லூர்தரக்
குழைக்கணி கொண்ட கோல வாண்முகத்
தரிபரந் தலமரு மச்சுறு கண்ணினர்
வெருவுறு பிணையின் விம்மாந் தெழாஅப்
பட்டதை யறியார் பகைப்புல வேந்தன்
கெட்டகன் றனனென் மற்றி தென்னெனக்
கோயின் மகளி ராகுலப் பூசலொடு
வாயிலுந் தகைப்பு மறியார் மயங்கவும்

(நகரத்தார் மகிழ்ச்சி)

நகர மெல்லா முழுவது மறிந்து
திருவார் மார்பினெம் பெருமா னுதயணன்
கூற்றிடம் புக்கு மீட்டும் வந்தனன்
நம்பொருட் டாக நகர முற்றனன்
அமைச்சருந் தானு மமைத்த கருமம்
முடித்தன னாகலின் முற்றவை முடையம்
அன்றியீன் வாரா னாதலி னெங்கோன்
வென்றி யெய்துதல் வேண்டுது நாமென
வெருப்பறை கொட்டி யுருத்துவர் திண்டி

---

192. பாகம் - பக்கம். அசைந்த - தங்கியிருந்த.

193. உழைக்கலமகளிர் - பக்கத்தில் வைத்தற்குரிய பாத்திரங்களை ஏந்தும் மகளிர். அழல் - வெப்பம்.

196. விம்மாந்து - பொருமி; "விம்மாந் தியான்வீழ" (சீவக. 1801.) 197. பகைப்புல வேந்தனென்றது, உதயணனை.

200. தகைப்பு - கட்டுக்கள்; ௧. 47 : 44, அடிக்; வாயிலும் தகைப்பும் - வாயில்களிடத்துள்ள தடைகளை யென்றுமாம்.

202 - 3. "ஆருயிரைக் கூற்றம், விழுங்கியபின் வீடுகொண் டற்றால்" பு. வெ. 22.

205. அமைத்த - மனத்தில் வரையறை செய்துவைத்திருந்த.

207. அன்றி ஈன் வாரான் - அல்லாவிட்டால் இங்கே வாரான்; ஈன் - இவ்விடம்; ஐங். ௪௦௧; சிலப். பதி. 53, ௨௫ : 176; மணி. ௨௮ : 132; சீவக. 29; சூளா. மந்திர. 78.

209. வெருப்பறை கொட்டி - அச்சத்தை விளைவிக்கும் பறைகளைக் கொட்டிக்கொண்டு; "வெரூஉப்பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை" பொருந. 171.

நமக்குப்படை யாகி மிகப்புகுந் தெற்றவும்
இன்னே ரனையன வின்னு வெய்துற
ஒன்று மன்னனை யுயிருடன் பருகுதும்
இந்நிலை யருளென வெண்ணின னுரைப்ப
அந்நிலை நோக்கி மன்னனு முவந்து
பொருத்த முடைத்தென் றொருப்பா டெய்திப்
புள்ளு மில்லா வொள்ளொளி யிருக்கையுள்
மறைபுறப் படாஅச் செறிவின ராகி
உளைப்பொலி மான்றே ருதயண னோடு
வலித்தனர் மாதோ வளைத்தனர் கொளவென்.

உச—மேல்வீழ் வலித்தது முற்றிற்று.

---

210. எற்றவும் - தாக்கவும்.

211. இன்னு எய்துற - துன்பங்கள் அடைய.

213. வருடகாரன் உரைப்ப.

காவலன் (163) எழவும் (165), தேவி (189) எழவும் (190), உழைக் கலமகளிர் (193) மயங்கவும் (200), நகரமெல்லாம் (201) எற்றவும் (210) பருகுதும் (212), அருள் (213) என வருடகாரன் கூற்றை முடிக்க.

215. ஒருப்பாடெய்தி - உடன்பட்டு.

216. புள்ளும் - பறவைகளும். ஒள்ளொளி யிருக்கை - பளிங்காலாகிய அறை.

217. மறை - இரகசியம். செறிவினர் - அடக்கமுடையவர்.

216 - 7. "உள்ளுணின் றொலிபுறப் படாத தொண்சிறைப், புள்ளுமல் லாதவும் புகாத நீரது, வெள்ளிவெண் விளிம்பினுல் விளங்கு வேதிகை, வள்ளறன் மந்திர சாலை வண்ணமே" (சூளா. மந்திர. 2); "பூவையுங் கிளியு மன்ன ரொற்றெனப் புணர்க்குஞ் சாதி, யாவையு மின்மை யாராய்ந்து", "பாடு வண்டொடு பறவையு நடுக்குறுங் காப்பு" (சீவக. 384, 2379); "வண்டொடு காலையும் வரவு மாற்றினன்" கம்ப. யுத்த. மந்திர. 8.

219. வளைத்துக்கொள்ள நிச்சயித்தார்.

## ௨௫—அரசமைச்சு.

வளைத்தனர் கொள்வது வலித்தன ரிருந்துழி
ஒளித்தகத் தொடுங்கிய வொற்ற ரோடிச்
சிலைப்பொறித் தடக்கையிற் சேதியர் பெருமகற்
கிசைத்தனர் புக்குநின் [1] றேத்தினர் கூறுவர்

**(பகைப்புலன் அறிந்துவந்த ஒற்றர் கூற்று)**

தாழ்ச்சி யின்றித் தருசகன் றமரோ
டேழ்ச்சியு மெறிபடை யளவுமெம் பெருமான்
சூழ்ச்சியுஞ் சூழ்பொருட் டுணிவு மெல்லாம்
படிவ வொற்றிற் பட்டாங் குணர்ந்து
கொடியணி வீதிக் கோநகர் வரைப்பிற்
படியணி வாயிலும் பரப்பு நாயிலும்
அற்றம் பட்டுழித் தெற்றெனத் திருத்திக்

---

### ௨௫—அரசமைச்சு.

[ஆருணி யரசனோடு போர்செய்தற்குரிய வகைகளை உதயணனும் வருடகாரனும் தம்முள் இரகசியமாக யோசித்ததும், வருடகாரன், உதயணனுக்குத் தன்பால் நம்பிக்கையில்லையென்று கபடமாக ஆருணிக்குச் சொல்லிவிடுத்து அவனுடைய நட்பைப்பெற்றதும் பிறவும் இதனால் அறியலாகும்.]

3. விற்றழும்புள்ள பெரிய கையையுடைய உதயணனுக்கு; "சிலை கண்டெதிர் கொண்டவாறும்" (சீவக. 21); சிலைப்பொறி - வில்லிரேகையுமாம்.

4. இசைத்தனர் புக்கு - தம்வரவை முதலில் தெரிவித்து அப்பாற் புகுந்து.

6. ஏழ்ச்சி - எழுதல்; க. 58 : 58. எம்பெருமான் - நின்னுடைய.

8. படிவ வொற்றின் - மறைந்த வேடங்கொண்ட ஒற்றரால்; "படிவ வொற்றாளர் சொல்" (சீவக. 1845.) பட்டாங்கு உணர்ந்து - உள்ள செய்தியை நிகழ்ந்தவாறே ஆருணியரசன் உணர்ந்து.

10. பரப்பு - செண்டுவெளி. நாயில் - ஞாயில்; அஃதாவது ஏப்புழைக்கு நடுவாய் எய்து மறையுஞ் சூட்டு.

11. அற்றம் பட்டுழி - குலைந்த இடங்களை. தெற்றென - விரைய, "தெற்றெனச், செலவுகடைக் கூட்டுதி ராயின்" பொருந. 174 - 5.

பி - ம். 1 றேற்றனர்.

குறும்புழை யெல்லாங் கூடெழுக் கொளீஇச்
செறிந்த பல்படை யறிந்தவ ணடக்கி
வாயின் மாடமொடு நாயி லுள்வழி
இரவும் பகலு மிகழாக் காப்பொடு
முரவுந் தூம்பு முழங்குபு துவைப்ப
ஆண்டகை யமைத்துப் பாம்புரி திருத்தி
[1] அருஞ்சுழி நீத்தத் தாறுபுக வமைத்த
சுருங்கை வாயிற் பெருங்கத வொடுக்கிக்
கொடுந்தாழ் நூக்கி நெடும்புணை களைந்து
நீணீர்க் கிடங்கிலுட் டோணி போக்கிக்
கல்லிடு கூடை பல்லிடத் தியற்றி
வில்லுடைப் பெரும்பொறி பல்வழிப் பரப்பிப்
பற்றறத் துறந்த படிவத் தோரையும்
அற்ற மின்றி யாராய்ந் தல்ல
தகம்புக விடாஅ திகந்துசே ணகற்றி

---

12. எழு - தூண்கள் ; உழலை மரங்களுமாம்.

14. வாயின்மாடம் - கோபுரம்.

16. முரவு - முரசு ; "முரவு மொந்தை முழாவொலிக்க" (தே. திருஞா. திருக்கண்டியூர் வீரட்டம்.) தூம்பு - பெருவங்கியமென்னும் வாச்சியம்.

17. பாம்புரி - மதிலின் புறத்தேயுள்ள ஆளோடி.

19. சுருங்கை - நீர் ஓடுவதற்காக மறைத்தமைத்த கற்படை ; சிலப். கச : 65 - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.

20. நூக்கி - செலுத்தி; "வன்னிலைக் கதவ நூக்கித் தாழக்கோல் வலித்து" (திருவிளை. அங்கம்வெட்டின. 8.) நெடும்புணை - நெடிய தெப்பங்களை.

21. கிடங்கில் - அகழி. தோணி - சிறிய தெப்பங்களை. போக்கி - இல்லாமற் செய்து.

22. எறிகற்களை நிரப்பி வைத்திருங்குங் கூடைகளை ; "காய்பொன் னுலையுங் கல்லிடு கூடையும்" சிலப். கரு : 210.

23. வில்லுடைப் பெரும்பொறி - விற்பொறிகளை.

24. படிவத்தோரையும் - தவவேட முடையோரையும்.

24 - 5 = ந. 19 : 29 - 30.

26. இகந்து - இகப்ப ; கடக்கும்படி.

பி - ம். 1 அஞ்சுழி.

நாட்டுத் தலைவரை நகரத்து நிறீஇ
நகர மாந்தரை நாட்டிடை நிறீஇ
ஊரூர் தோறு முளப்பட் டோவா
ஆர்வ மாக்களை யருஞ்சிறைக் கொளீஇ
ஆணை கேட்ட வகலிடத் தெல்லாம்
ஓலை போக்கி யொல்லைவந் தியைகெனப்
பேணார்க் கடந்த பிரச்சோ தனற்கு
மாணாச் செய்தொழின் மனமுணக் காட்டி
அவமதித் தொழுகி யாணை யெள்ளி
மிகைசெய் திருந்தனன் மேலு மீட்டினி
மகத மன்னனு மதுகை யாகப்
பகைசெய வலித்தன னென்பது பயிற்றி
மந்திர வோலை போக்கிய வண்ணமும்
வெந்திறல் கலந்த விறல்வே சாலியொடு
[1] சங்க மன்னர்க்குத் தம்படை கூட்டி
விரைந்தனர் வருகென நினைந்துவிட் டதுவும்
மன்னடு நெடுவேன் மகத மன்னற்
கின்னது தருவே னென்றொடும் புணர்கெனத்
தன்னொடு பழகிய தமர்களை விட்டதும்
இன்னவை பிறவும் பன்னின பயிற்றிய

---

29. உளப்பட்டு - மனம்பொருந்தி.
30. ஆர்வ மாக்களை - நம்மிடத்து அன்பையுடைய மனிதர்களை.
32. இயைகவென ஓலை போக்கி.
34. மனமுண - மனம்பொருந்த.
35. ஆணை எள்ளி - கட்டளையை இகழ்ந்து.
36. மிகை - குற்றம். 37. மதுகை - வலி.
39. மந்திர ஓலை - இரகசியச் செய்திகள் எழுதப்பட்ட ஓலையை. பிரச்சோதனற்கு (33) ஓலை போக்கிய வண்ணமும் (39).
40. வேசாலி - சங்கமன்னருட் சிறந்தவனும் ஆருணிக்கு நண்பனுமாகிய ஓரரசன்.
41. தம்படை - அவரவருடைய சேனைகளை.
43. மன் அடு - பகைமன்னரை வருத்துகின்ற.
46. பன்னின - ஆராய்ந்தவை, பயிற்றிய - சொன்னவை.

பி - ம். 1 சங்கமன்னற்கு.

அறிந்தவொற் றுளர் செறிந்தன ருரைப்ப

(உதயணன் வருடகாரனுக்குக் கூறுதல்)

ஒற்று யாக்களை யொற்றறி வுயா
முற்றனக் குரைத்த மூவர் [1] வாயவும்
ஒத்தது நோக்கி மெய்த்தகத் தேறி
இரவே ரொளித்துச் செருமேந் தோன்ற
வளைத்திருந் தழிக்குவ மெனினே மற்றவன்
வலித்தது நாடி நலத்தகு நண்பின்
மிலேச்ச மன்னரும் கூடித் தலைத்தலை
வந்தவ னிதிப்பயங் கருதி முந்துற
முற்றுபு விடுப்பி னற்ற மீனும்
வேண்டா வஃதிவண் மீண்டிது கேட்கென
வாங்குசிலைத் தடக்கை வருட காரற்
கோங்குபுகழ் வென்றி யுதயண னிசைக்கும்
நின்னொ டென்னிடை [2] நீப்பிவ னுண்டெனத்
துன்னிய நமர்கட்குத் தோன்றக் கூறி
அவற்குப்பாங் காகிய வார்வல ருளரெனின்
மிகச்செறி வுடையையாய் விடுமதி விடூஉம்

48. ஒற்றர்களை வேறொற்றர்களால் ஆராய்ந்து; ௩. 23 : 53, அடிக்.

49 - 50. முன்பு தனக்குச் சொல்லிய மூன்று ஒற்றர்களுடைய சொற்களும் ஒத்தமையை ஆராய்ந்து; "ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர், சொற்றொக்க தேறப் படும்" (குறள், 589) என்பது இங்கே அறியற்பாலது.

51. இர - இரவில். செருமேந் தோன்ற - போரில் மேம்பாடுற.

52 - 3. அவன் வலித்தது - ஆருணி துணிந்ததை.

54. மிலேச்சமன்னர் : க. 58 : 95, ௩. 4 : 13.

55. அவன் நிதிப்பயம் கருதி - ஆருணிகொடுக்கும் பொருட் பேற்றை நினைந்து.

56. முற்றுபு விடுப்பின் - சூழ்ந்து தங்குவாராயின். அற்றம் - [சோர்வு.

60. நீப்பு - நீத்தல் ; ஒற்றுமையின்மை.

62 - 3. ஆருணியின் பக்கத்தார்க்கு நண்பராகி. விடுமதி-எனக்கும் உனக்கும் பகையுண்டென்பதைக் கூறு. விடூஉம் - அவர்கள் கூறுகின்ற.

பி - ம். 1 வாயவுள். 2 நீப்பிவனுண்மையை.

மாற்றந் தன்னையு மோர்த்தனை கொண்மோ
ஆசில் செங்கோ லவந்தியன் மடமகள்
வாசவ தத்தையை வலிதிற் கொண்ட
மேனாட் காலை யானே [1] யவனைப்
பற்றுபு நம்பதி தருகுவே னென்றசொல்
முற்றுல கெல்லா மொய்த்தொருங்கு தருதலின்
வத்தவ மன்னனு மெய்த்தகக் கேட்டுக்
கனலிரும் புண்ட நீரின் விடாது
மனவயி னடக்கி மறைந்தன னொழுகித்
தன்குறை முடிதுணைத் தானரு டோற்றி
நன்கினி துரைக்குமவ னுரைக்கு மாயினும்
வெஞ்சொன் மாற்றம் வேந்தரை யுரைத்தோர்
அஞ்சுக வென்னுந் தொன்மொழி யுண்மையின்
நெஞ்சுநீ நெகிழ்ந்தவற் றெளியலை செல்லென
மணித்தகைப் பைம்பூண் மகதவர் கோமான்
பணித்தது மருமையிற் படையென வந்தனென்
மற்றது மன்னவ னுற்றிவண் செய்ததோர்

---

64. மாற்றம் - மறுமொழி.

65. ஆசில் செங்கோல் : செங்கோலென்பது கோலென்னும் துணையாய் நின்றது.

65 - 77. ஆருணியரசன்பால் வருடகாரன், தனக்குத் தருசகன் கூறியனவென்று சொல்லும்படி உதயணன் படைத்துக் கூறல்.

67. அவனை - உதயணனை. 69. உலகமெல்லாம் சொல்லுதலால்.

71. நெருப்பிற் காய்ச்சிய இரும்பு உண்ட நீர் வெளிப்படாதது போல; "கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய, இரும்பு ணீரினு மீட்டற் கரிது" (புறநா. உக); "இரும்புண்டநீர் மீள்கினு மென்னுழையிற், கரும்புண்டசொன் மீள்கிலள் காணுதியால்" கம்ப. சடாயுவுயிர். 104. [136.

73. தன்குறை முடிதுணை-தன் காரியம் முடியும் அளவும்; ரு. 25:

74. அவனுரைக்குமாயினும் - உதயணன் சொல்வானாயினும்.

77. தெளியலை செல்லென - தெளியாமற் செல்வாயாக.

79. மருமையின் - மறுத்தற்கு இயலாமையால்.

80. மற்றதும் - அங்ஙனம் மகத அரசன் கூறியதும். அன்னவன் - உதயணன்.

பி - ம். 1 யவனை.

முன்னுப கார முடைமையி னாகும்
அன்னவன் மதித்துத் தன்மிகத் தருக்கும்
பெருமீக் கூற்றமும் பேணான் பிறரொடு
செருமீக் கூற்றமுஞ் செய்கையும் வேண்டான்
ஒருதலை யாக வாற்றலன் மற்றிவண்
பழிதலை நம்மேல் வருதலு மின்றி
நாமு மெண்ணி விட்டன மாகத்
தானே சென்று தன்வலி யறியான்
அழியினு நமக்குக் கழிவதொன் றில்லை
ஆனிலைப் படாஅ தீனிலைக் கண்ணே
பற்று மன்னர் படையொடு புணரின்
அற்றப் படூஉஇய ரதனினு முவத்துமென்
றின்னவை யெல்லாந் திண்ணிதி னுரைத்தனன்
தன்னொடு தொடர்ந்த மன்னரைத் தொகுத்துத்
தானிவண் வாரா னாயினும் யானிவட்
செய்வதை யெல்லா மெய்யெனக் கருதுமென்
றைய மின்றி யவனுழை விட்டபின்
மெய்யெனத் தெளிந்து மீட்டவன் விட்ட
கரும மாக்களை யொருவயி னோம்பிச்
செறியச் செய்தெமக் கறிய விடுக்கபின்.

---

82. உதயணன் தன்னை உயர்வாக எண்ணித் தருக்குவான்.

82 - 92. மகதவரசன் கூற்றாக உதயணன் படைத்துக் கூறியது.

83. மீக்கூற்றமும் பேணான் - பெரியோருடைய மேலான வார்த்தையையும் மதியான்.

85. ஒருதலையாக - துணிவாக.

90. ஆன் நிலை - அந்த நிலையில். ஈன் நிலை - இந்த நிலை.

91. மன்னர் - எழுவாய்.

92. அற்றப்படூஉஇயர் - சோர்வு படுவானாக.

93. உரைத்தவன், தருசகன். 95. தானென்றது, தருசகனை.

97. அவனுழை - ஆருணியினிடத்தே. விட்டபின் - செய்திகளை விடுத்தபின்பு.

99. ஒருவயின் ஓம்பி - ஓரிடத்தே நீ வைத்துப் பாதுகாத்து.

100. பின் - நான் அறிந்தபின்பு.

98 - 100. = ௫. 26 : 4 - 12.

பற்றிக் கொண்டு பற்றா மன்னன்
ஒற்ற ரிவரென வுரைத்தறி வுறீஇக்
குற்றங் காட்டிக் கொலைக்கடம் பூட்டுதும்
தெற்றென நின்வயிற் றெளிந்தன ராகி
உறுபெரும் பகைமை யுற்றோ ருணர்ந்து
செறிவுகொள் வதற்குச் சென்றன ரிசைப்ப
இதுகா ரணத்தி [1] னிகத்தல் பொருந்தும்
அதுகா ரணத்தின் யாமுந் தெளிவேம்
பாரப் பண்டியும் பாடிக் கொட்டிலும்
ஆரெரி கொளீஇ யஞ்சினே மாகி
மலையர ணல்லது நிலையர ணில்லெனத்
தவதி சயந்தம் புகுதும் புக்கபின்
மிகுதி யச்ச மீட்டவற் குணர்த்தி
வருக வேந்தன் பெருவிறல் பீடறக்
கலக்கப் பொழுதே கடிது நாமென

101. பற்றாமன்னன் - பகையரசனுடைய; "பற்றாமன்ன னகர்ப் புறமால்" சீவக. 310.

102. அறிவுறீஇ - பலரும் அறியச் செய்து.

103. கொலைக்கடம் பூட்டுதும் - கொல்விப்பேம்; கடம் - இன்றியமையாதது. 104. தெற்றென - விரைய.

105. உனக்கும் எனக்கும் விரோதமுண்டென்று. உற்றோர் - பாஞ்சாலராயனிடத்து நண்புள்ளவர்.

106. செறிவு கொள்வதற்கு - தாம் நெருங்குதற்பொருட்டு.

107. இதுகாரணத்தின் - இக்காரியம் காரணமாக. இகத்தல் - நீ தூரத்தே செல்லுதல்; பிரிதல்.

109. பாடிக் கொட்டில்-வீரர் தங்கியிருக்கும் குடிசை; இது கைந்நிலை யென்று நூல்களில் வழங்கும். 110. எரிகொளீஇ - தீக்கொளுத்தி.

111. ரு. 23 : 57. 109 - 12. ரு. 26 : 36 - 9.

113. மிகுதியச்சம் - எமக்கு மிக்க பயமுண்டென்பதை. மீட்டு - மறுபடியும். அவற்கு - பாஞ்சாலராயனுக்கு. உணர்த்தி - நீ உணர்த்தி.

114. வேந்தன் பெருவிறல் பீடற - உதயணனது மிக்க வலி பெருமையற.

115. கலக்கப்பொழுதே - உதயணன் மனக்கலக்கமுற்றிருக்கும் காலத்திலேயே. என - என்று நீ சொல்ல.

பி - ம். 1 னிதக்கல்.

விலக்க நில்லா வேட்கைய னாகித்
தான்புறப் படுதலிற் றன்னே போலும்
மாண்புறு வேந்தரை மதிலகத் தொழித்துப்
புறமதிற் கண்ணும் பொருபடை நிறீஇ
எறிபடை சிறிதினொ டணுகிய பின்றைச்
சவரர் புளிஞர் கவர்வுறு கடுந்தொழில்
எழுச்சி கூறி யிகலடு பெரும்படை
[1] மாட்டல் வேண்டுமென் றோட்டியெத் திசையும்
கூட்டத் துள்ளே கூறுபடப் போக்கிச்
சிறுபடை யாகிய பொழுதிற் கதுமென
உறுபடை யழித்துமென் றுடன்றுமேல் வந்தென
முன்னும் பின்னும் பக்கமு நெருக்கியவன்
கொண்முரா ணிரிப்பிற் கோளெளி தாமென
உண்முர ணுதயண னுரைத்தனன் வணங்கி

(வருடகாரன் செயல்)

நன்றெனப் போகித் தன்றமர்த் தழீஇ
முன்னா னுரைத்த வின்னா வெவ்வுரைக்
கொன்னா ரோட்டிய வுதயண னுள்ளத்
[2] துவர்த்த லன்றியுஞ் சிவக்கு மென்னைப்

---

117. தான் - அப்பாஞ்சாலராயன்.
118. ௩. 26 : 61. ஒழித்து - தங்கச் செய்துவிட்டு.
119. பொருபடை நிறீஇ - போர்செய்கின்ற சேனையை நிறுத்தி.
121. சவரர்புளிஞர் - இடவகனால் உதயணனுக்கு உதவியாக விடுக்கப்பட்டவர்; ௩. 27 : 7 - 13. கவர்வுறு - கைக்கொள்ளும்.
122. எழுச்சியை ஆருணிக்கு நீ கூறி.
123. மாட்டல் - மாள்வித்தல்.
124. கூறுபட - பல பிரிவாக. 125. கதுமென - விரைய.
126. அழித்தும் - அழிப்பேம். உடன்று - கோபித்து. வந்தென - வந்து.
128. இரிப்பின் - கெடுத்தால். கோள் - கொள்ளுதல்.
129. முரண் - வலி; மாறுபாடுமாம். வணங்கியது வருடகாரன் தொழில். 130. நன்று : உடன்பாட்டுக்குறிப்பு.
133. உவர்த்தல் - வெறுத்தல். சிவக்கும் - கோபிப்பான்.

பி - ம். 1 வாட்டல். 2 துவத்தல்.

பழியாக் கொண்டன னழியின னடையெனப்
பகலு மிரவு மகலி ராகிக்
காப்புநன் கிகழன்மின் கரும முடிதுணை
ஒப்புற வொருவனை யுறப்பெறி னவனொடு
[1] தீக்குழி வலித்தியாந் தீரினுந் தீர்தும்
யாதுசெய் வாங்கொலென் றஞ்சினம் பெரிதெனக்
காவ லாளர்க்குக் கவன்றன னுரைப்பப்

(சேனாபதிமகன் கூறுதல்)

பலர்புகழ் விழுச்சீர்ப் பாஞ்சால ராயனொடு
[2] செலவயர் வுடைய சேனா பதிமகன்
[3] என்னுழை விடுத்தன னிருநூ றியானையும்
பொன்னணி புனைதார்ப் புரவி பூண்ட
ஐம்பது தேரு மாயிரங் குதிரையும்
தன்பெயர் கொளீஇத் தானினி தாள்கென
மன்பெருஞ் சிறப்பிற் கொன்னூ றறுபதும்
பாவடி மடப்பிடி பதினைந் திரட்டியும்
மாவடி மடக்கண் மாதர் மென்முலை
நாடக மகளிர் நாலிரு பதின்மரும்
அடுத்து விழுநிதி பலவும் பிறவும்
[4] ஆண முடைத்தாக் கொடுப்பன் மற்றவ்
வாண்மிகு தானை வத்தவற் கைவிட்

---

134. அழியினன் - அழிந்தனன்; நடை அழியினனென்க.

134 - 5. எனை அகலீராகி. 136. "தன் குறை முடிதுணை" 73.

137. ஒப்புற - ஓம்புதலுற; பாதுகாத்தற்கு.

138. தீரினும் - உயிர்விடினும்.

140. தன் படைவீரர்க்கு வருடகாரன் உரைப்ப.

142. செலவு அயர்வுடைய - பகைமேற் செல்லுதலையுடைய. சேனாபதிமகன் : எழுவாய்.

143. என்னுழை விடுத்தனன் - என்னிடமாக ஆருணியரசன் இருக்கச்செய்தான். 148. பாவடி-பரவிய அடி.

149. வடி - மாவடுவின் பிளவு.

152. ஆணம் - பாதுகாப்பு; உ. 7 : 65, ௩. 22 : 58; திருச்சந்த. 69.

பி - ம்: [1] தீக்குறி. [2] செலவுயர்வுடைய. [3] என்னுமை. [4] மாணமுடைத்தா.

டென்னொடு கூடி யொருவ னாகப்
பின்னைச் செய்வ பிறவும் பலவென
அன்னவும் பிறவு மறிந்தவு மல்லவும்
ஆருணி யுரைத்தவு முறையா தனவும்
ஆராய் வாள னகமுணக் கிளந்தவன்
காரியக் கிளவியிற் காரணங் காட்டலின்

(வருடகாரன் கூற்று)

ஆய்பெருங் குருசி லதுநனி விரும்பி
நீயே சென்றவன் வாயது கேட்டு
வலிப்பதை யெல்லா மெளித்தனை யுணர்ந்து
வல்லே வருதி யாயி னெமக்கோர்
செல்சார் வாகிச் சிறந்தோய் நீயென

(சேனாபதிமகன் ஆருணியிடம்சென்று அறிவித்தல்)

எல்லிருள் விடுப்ப வெழுந்தனன் போகி
வஞ்சச் சூழ்ச்சி வருட காரன்
தன்சொல் லெல்லாஞ் சென்றவ னுரைப்பக்

(ஆருணியின் செயல்)

கெடலூ ழாதலிற் கேட்ட பொழுதே
அடலருஞ் சீற்றத் தாருணி தெளிந்து
முகனறிந் துரைத்து முன்னியது முடிக்கும்

---

154. ஒருவனாக-ஒருமனமுடையனாக. ஆகக் (154) கொடுப்பன் (152.)

158. வருடகாரனுடைய மனம் பொருந்த. கிளந்து - வகுத்துச் சொல்லி.

160. 'ஆராய்வாளன்' (158) என்றார் முன்னும்.

161. அவன் - பாஞ்சாலராயன்.

162. வலிப்பது - நிச்சயிப்பது. எளித்தனையுணர்ந்து - எளிமையை யுடையையாய் அறிந்து; "எளித்த லேத்தல்" (தொல். பொருளியல், சூ. 13.) 163. வல் - விரைவு.

164. செல்சார்வு - பற்றுக்கோடு.

165. எல்லிருள் - விடியற்காலத்து இருளில்; சீவக. 1747.

167. அவன் - சேனாபதி. உரைப்ப - ஆருணியிடம் சொல்ல.

168. கெடலூழ் - கெடுதற்குக் காரணமாகிய ஊழ்வினை.

170. முகனறிந்து - முகக்குறிப்பை யறிந்து.

சகுனி கௌசிகன் வருகெனத் தரீஇ
ஒட்டா மன்ன னுதயண குமரனை
நட்டா னாகி நாட்ட வந்த
தண்டத் தலைவன் றளர்வி லூக்கத்து
வண்டளிர்ப் படலை வருட காரன்
நம்பாற் பட்டன னவன்வலித் ததையெலாம்
திண்பாற் றாகத் தெளிந்தன னிவனெனச்
சென்றவற் காட்டி........................
ஒன்றிய கருமத் துள்பொரு ளெல்லாம்
சென்றறிந் தின்னும் வம்மி னீரென
நன்றறி வாளர் நால்வரைப் பணிப்ப
அருளிய தெல்லா மாகென வடிபணிந்
திருளிடைப் போந்தவற் குறுகினர் மறைந்தென்.

உரு—அரசமைச்சு முற்றிற்று.

---

171. தரீஇ - வருவித்து.
173. நட்டானாகி - நட்புக்கொண்டவனாகி.
174. தண்டத்தலைவன் - சேனாபதி.
175. தளிர்ப்படலை - தளிராலாகிய மாலை; "முறியிடை படலை மாலை" (சீவக. 483.)
174 - 5. தண்டத் தலைவனாகிய வருடகாரன்.
177. இவனென்றது, சேனாபதியை.
178. சென்றவன் - தன்பால் வந்த சேனாபதியை.
181. நால்வர் - சகுனிகௌசிகனும் வேறு மூவரும்; ௩. 26 : 30.
183. அவற்குறுகினர் - வருடகாரனை அடைந்தனர்.

## உசா—பாஞ்சாலராயன் போதரவு.

(வருடகாரன் செயல்)

மறைந்தனர் வந்து மாற்றோன் றூதுவர்
செறிந்த சூழ்ச்சியிற் செய்வது கூறலும்
உவந்த மனத்த னூன்பாற் படுவளை
ஒடுங்கினி ரிருக்கென வொளித்தனன் வைத்துத்
தார காரியைத் தரீஇ நீசென்
றார்கடற் றானை யுதயணற் குறுகி
எண்ணிய கரும மெல்லாந் திண்ணிதிற்
றிரித லின்றி முடிந்தன வதனால்
பரிதல் வேண்டா பகைவன் றூதுவன்
சகுனி கௌசிகன் றன்னை யன்றியும்

---

உசா. பாஞ்சாலராயன் போதரவு.

[வருடகாரனிடம் ஆருணியால் இரகசியமாக அனுப்பப்பட்ட சகுனிகௌசிகன் முதலிய தூதுவர் நால்வரையும் வருடகாரனது சூழ்ச்சியால் உதயணன் பிடித்துவரச் செய்து தீயிலிடுவித்து உட்பகைக்கு அஞ்சி வேறிடம் புதுபவன் போலத் தானிருந்த தூம்பையையுங் கொளுத்திவிட்டுப் படையாளரோடும் அடிமைத்திரளோடும் ஒருமலையரணையடைந்ததும், வருடகாரன் தன்னைக் கண்ணாம் வீணாயிற்றே யென்று நடித்ததும் இவற்றைத் தன் மனிதராலறிந்த ஆருணியரசன் வருடகாரன் ஆலோசனையை அறிந்துவரச்செய்து அதன்படியே தான் அரண்மனையைக் காவலுறுத்திச் சேனையோடு நகர்ப்புறத்தே வந்ததும் வருடகாரன் நேரே பார்த்துச் சிறப்புப்பெற்றதும் இதனால் அறியலாதும்.]

1. *மாற்றோன் - ஆருணியினுடைய.*

2. *கூறலும் - வருடகாரனுக்குச் சொன்னவுடன்.*

3. *வருடகாரன் உவந்த மனத்தனாகி. ஊன்பால் - உவ்விடத்தே. படுவளை - அமைந்துள்ள குகையில்.*

5. *தாரகாரி - தருசகனுடைய மந்திரி;* ந. 23 : 24 - 5. *தரீஇ - வருவித்து ;* ந. 25 : 171. 8. *திரிதல் - வேறுபடுதல்.*

*கருமமெல்லாம்* (7) *முடிந்தன* (8.) 9. *பரிதல் - வருந்துதல்.*

9-10. *பகைவனாகிய ஆருணியின் தூதுவனாகிய சகுனிகௌசிகன்.*

விசயவில் லாளரை விடுத்தனன் விரைந்தென்
றோடினை சொல்லென நீடுத லின்றி

(தாரகாரியின் செயல்)

வகைமிகு தானை வத்தவற் குறுகித்
தகைமிகு சிறப்பிற் றார காரி
உணர்த்தா மாத்திர மனத்தகம் புகன்று

(உதயணன் செயல்)

பிங்கல சார மாணி முதலாப்
பைங்கழன் மறவர் பதின்மரைக் கூஉய்
ஆடியல் யானை யாருணி தூதுவர்
1 மாடியந் தானை வருட காரனொடு
கூடிய வந்தனர் கொணர்மின் சென்றென

(மறவர் செயல்)

நிறைநீ ரகவயிற் பிறழுங் கெண்டையைச்
சிறுசிர லெறியுஞ் செய்கை போல
உறுபுக ழுதயணன் றறுகண் மறவர்
பற்றுபு கொண்டுதங் கொற்றவற் காட்ட

(உதயணன் செயல்)

இடவகன் கையு ளிருக்க விவனெனத்
தடவரை மார்பன் றலைத்தா ளுய்ப்ப

(இடவகன் செயல்)

அந்தி கூர்ந்த வந்தண் மாலைச்

---

12. நீடுதலின்றி - தாமதியாமல்; "தூங்கற்க, தூங்காது செய்யும் வினை" குறள், 672.

13. வத்தவற் குறுகி - உதயணனை அடைந்து.

15. புகன்று - விரும்பி.

17. கூஉய் - அழைத்து. 18. ஆடியல் - அசையுந்தன்மை.

19. மாடியந்தானை - கவசத்தையுடைய சேனை; "மாடியந் தானை மன்னர்" (சீவக. 537); "விளங்கு மாடியமும்" சேது. மங்கல. 76.

22. சிரல்-மீன்கொத்துங்குருவி. 24. கொற்றவன்-உதயணன்.

26. தலைத்தாள் - முன்னிடத்தில்; க. 32 : 24, அடிக்.

பி - ம். 1 மாடிவந்.

செந்தீ யீமஞ் செறியக் [1] கூட்டி
அகணி யாகிய வாய்பொருட் கேள்விச்
சகுனி கௌசிகன் றன்னொடு மூவரை
இடுமி னென்றவன் கடுகி யுரைப்ப
நொடிபல வுரைத்து நோக்குதற் காகா
அடலெரி யகவயி னார்த்தன ரிடுதலும்

(உதயணன் செயல்)

உள்ளுடைக் கடும்பகை யுட்குதக் கன்றென
நள்ளிரு ளகத்தே பொள்ளென வுராஅய்
இன்கட் பம்பை [2] யெரூஉக்குர லுறீஇ
இருந்த குரம்பை யெரியுண வெடுப்பிக்
கருவியு முரிமையுங் காப்புறத் தழீஇ
அருவி மாமலை யரணென வடைதலின்

(வருடகாரனது நடிப்பு)

மறஞ்சால் பெரும்படை வருட காரனும்

---

28. ஈமம் - பிணஞ்சுடும் விறகடுக்கு.

29. அகணி ஆகிய - உட்பட்டவனாகிய; ககணியென்னும் பாடத்திற்கு, ஆகாயத்திலுள்ள பொருள்களின் கதியை அறிபவனென்று பொருள் கொள்க.

29 - 30. சகுனிகௌசிகன்: 47.

31. அவன் - இடவகன். கடுகி - விரைந்து.

32. நொடிபல - பரிகாசமொழிகள் பலவற்றை.

உரைத்து (32) இடுதலும் (33.)

34. உட்பகை அஞ்சத்தக்கதென்று; வருடகாரனைக் குறித்து உதயணன் தன்னைச் சேர்ந்தோர் ஐயமுறும்படி இதனைக் கூறினான்.

35. உராஅய் - பெயர்ந்து.

36. பம்பை - ஒருவகைவாச்சியம். எரூஉக்குரல் - தாக்குதலாலுண்டாகும் குரலை; எருக்கு குரல்: விகாரம்.

37. இருந்த குரம்பை-வீரர்முதலியோர் இருந்த குடிசை. எடுப்பி-தீயை எழுப்பி.

38. கருவி - ஆயுதமுதலியவற்றின் தொகுதி. உரிமை - அடிமைத்திரள். 39. மலை - தவதிசயந்தமென்னும் மலையை.

பி - ம். 1 கூட்டிக்ககணி. 2 யெருக்குரல்.

அறஞ்சால் கெண்ணிய தவப்பட் டதுவெனக்
கைவிரல் பிசைந்து செய்வதை யறியான்
வந்தோர் தெளிய நொந்தன னுவல

(பிழைத்தோர் ஆருணி யரசன்பாற் சென்று கூறுதல்)

உய்ந்தோ ரோடி யூரகங் குறுகிப்
பைந்தார் வேந்தனைக் கண்டுகை கூப்பி
அகலா தாகிய வரும்பெறற் சூழ்ச்சிச்
சகுனி கௌசிகன் சார்ச்சியை முன்னே
உதையண னுணர்ந்து புதைவனர்த் தம்மெனத்
தமர்களை யேவலி னவர்வந் தவரைக்
கொண்டனர் செல்ல வண்டலர் தாரோன்
விடைப்பே ரமைச்சனுழை விடுத்தலின் மற்றவன்
கண்டவர் நடுங்கத் தண்டந் தூக்கி
இன்னுயிர் தபுக்கென வெரியகத் திட்டதும்
பின்னர் மற்றவன் பெருமலை யடுத்ததும்
[1] நம்மொடு புணர்ந்த நண்புடை யாளன்
எம்மொடு போதந் திப்பாற் பட்டதும்
இன்னவை நிகழ்ந்தவென மன்னவற் குரைப்ப

---

41. அறஞ்சால்க - தருமம் சிறக்க; இது, வருடகாரனது உட்கோள்; "அறஞ்சா லியரோ" ஐங்குறு. 312.

45. வேந்தனை - ஆருணியை.

47. சார்ச்சி: சூத்திர நிலைகளுள் ஒன்றன் பெயராகிய சார்ச்சிவழி ஒழுகுதலென்பது இங்கே கருதற்குரியது. [தாருமென்று.

48. புதைவனர்த் தம்மென - குகையில் மறைந்திருந்தவர்களைத்

49. அவரை - குகைக்குள்ளே மறைந்திருந்த நால்வரை.

50. தாரோன் - உதயணன்.

51. விடைப்பேரமைச்சனுழை - இடவகனிடத்து.

52. தண்டம் தூக்கி - தண்டனையை ஆராய்ந்து.

53. தபுக்க என.

54. உதயணன் பெருமலையை அரணாகச் சார்ந்ததும்.

55. நண்புடையாளன் - வருடகாரன்.

உய்ந்தோர் (44) உரைப்ப (57.)

பி - ம். [1] தம்மொடு.

(ஆருணி யரசன் செயல்)

அயிர்த்தவ னகன்றன னாதலி னிவனொடு
பயிர்ப்பினி வேண்டா பற்றுத னன்றெனப்
பெயர்த்தவன் மாட்டுச் செயற்பொரு ளென்னென
அகத்தர ணிறையப் பெரும்படை நிறீஇப்
புறப்படப் போந்தெற் புணர்க புணர்ந்தபின்
செறப்படு மன்னனைச் சென்றன னெருக்குதும்
என்றனன் விடுத்தலி னன்றென விரும்பிக்
கோயிலு நகரமுங் காவலு ணிறீஇக்
காழா ரெஃகமுதல் கைவயிற் றிரீஇயர்
எழா யிரவ ரெறிபடை யாளரும்
ஆறா யிரவ ரடுகடு மறவரும்
வீறார் தோன்றலொடு விளங்குமணிப் பொலிந்தன
ஆயிரந் தேரு மடர்பொன் னோடையொடு
சூழியிற் பொலிந்தன பாழியிற் பயின்றன
ஐந்நூ றியானையு மகிழு றகற்சிய
ஆர்க்குந் தாரொடு போர்ப்படை பொலிந்தன
மிலேச்ச ரேறித் தலைப்படைத் தருக்குவ
ஒருபதி னாயிரம் விரைபரி மாவும்

---

58. அவன் அயிர்த்து - உதயணன் ஐயமுற்று. இவனொடு - வருடகாரனொடு.

59. பயிர்ப்பு - மனங்கொள்ளாதிருக்குந் தன்மை. என - என்று ஆருணி சொல்ல.

60. மீட்டும் வருடகாரனிடஞ்சென்று யாம் செய்யத்தக்கது யாதென்று அவ்வுயர்ந்தோர் வினவ.

61. அகத்தரண் - அரணின் உள்ளிடத்தே.

63. மன்னனை - உதயணனை. 65. நிறீஇ - நிறுவி.

66. காழ் - காம்பு. திரீஇயர் - திரிப்பவர்களாகிய.

69. தோன்றல் - நெடுந்தூரத்தாராலும் காணுதற்குரிய தோற்றம்; "அத்தமா மணிவரை யனைய தோன்றல" சீவக. 2211.

70. ஓடை - நெற்றிப்பட்டம். 71. சூழி - முகபடாம். பாழி - [போர்க்களம்.

73. படை - ஆயுதம்.

74. மிலேச்சர் - ஒருவகைவீரர்; இவர் குதிரையைச் செலுத்தும் ஆற்றலிற் சிறந்தோர்: சீவக. 2216.

முன்ன வாகத் தன்னொடு கொண்டு
நாவாய்ப் பெருஞ்சிறை நீர்வாய்க் கோலிச்
சாந்தார் மார்பிற் சாயனுஞ் சாயாக்
காந்தா ரகனுங் கலக்கமில் பெரும்படைச்
சுருங்காக் கடுந்திறற் சூர வரனெனும்
பெரும்பேர் மறவனும் பிரம சேனனும்
அரும்போ ரண்ணலு மவர்முத லாகப்
பெரும்படைத் தலைவரும் பிறருஞ் சூழப்
பூரண குண்டல னென்னு மமைச்சனொ
டாருணி யரசன் போதர [1] வறிந்தபின்

**(வருடகாரன் செயல்)**

அடக்கருஞ் சீற்றத் தாருணி கழலடி
வடுத்தீர் வருடகன் வணங்கினன் காண

**(ஆருணி வருடகாரனுக்குச் சிறப்புச் செய்தல்)**

எடுத்தனன் றழீஇ யின்னுரை யமிர்தம்
கொடித்தேர்த் தானைக் கோமான் கூறி
இருக்கென விருந்த பின்றை விருப்போ
டாய்தார் மார்ப னீர்வயி னிரைத்த
நாவாய் மிசையே மேவா ருட்கப்
பதினா றுயிர ரடுதிறன் மறவரும்
அதிராச் செலவின வாயிரங் குதிரையும்
முதிரா யானை முந்நூற் றறுபதும்
காணமும் வழங்கி நாணா டோறும்
ஊனிடை யருமை யுணாத்தந் திடூஉம்
சேனை வாணிகஞ் செறியக் காக்கென

---

77. நாவாயாகிய பெரிய காவலைச் சூழ அமைத்துக்கொண்டு.

81. பிரமசேன் - பிரமசேனன்; இப்பெயர், "புத்திசேன்" (சீவக. 1140) என்பது போல விகாரமுற்றது. 89. கோமான்-ஆருணி.

78 - 81. ௩. 27 : 125-6.

90. இருக்க என. 91. மார்பன் - ஆருணி.

92. நாவாய் - மரக்கலம். மேவார் உட்க - பகைவர் அஞ்ச.

96. காணம் - பொற்காசு.

97 - 8. சேனைக்கு ஊனிடையிட்டு ஆக்கிய விசேடவுணவுகளை விலைக்குக் கொடுக்குந் தொழிலை உறுதியாகக் காக்கவென்று சொல்ல

பி - ம். 1 வகைந்தபின்.

வல்வினைக் கடுந்தொழில் வருட காரன்
செல்படைக் குபாயஞ் செறியக் கூறி
மறுகரை மருங்கிற் செறியப் போக்கிப்
பாஞ்சால ராயனைப் பாங்குறக் கண்ணுற்
றும்பாற் கரும மாண்புறக் கூற
அருஞ்சிறைத் தானை யாருணி யரசனிற்
பெருஞ்சிறப் பெய்தி யிருந்தன னினிதென்.

உசு—பாஞ்சாலராயன் போதரவு முற்றிற்று.

---

99 - 101. வருடகாரன் தன் ஆட்களைக்கொண்டு நாவாய் முதலியவற்றை மறுகரையடையச் செய்து.

102 - 5. ஆருணியரசனை நோக்கி மேல் ஆகவேண்டிய காரியங்களைச் சொல்லுதலால் வருடகாரன் அவ்வரசனால் மிக்க சிறப்பளிக்கப் பெற்றிருந்தான்.

---

## உஎ—பறை விட்டது.

(கால்வலிளைஞர் ஆருணிக்குக் கூறுதல்)

பெருஞ்சிறப் பெய்தியவ னிருந்த செவ்வியுள்
வண்டார் தெரியல் வருட காரனிற்
பண்டே பயிர்குறிக் கொண்டுநன் கமைந்த
[1] கால்வ லிளையர் பூசல் [2] வாயா
வேல்வல் வேந்தன் விரும்புபு கேட்ப

---

உஎ—பறைவிட்டது.

[பாஞ்சாலராயனைக் கொன்று அரசவுரிமையைப் பெற்ற உதயணன், அச்செய்தியைக் கோசம்பி நகரத்தாரும் வத்தவ நாட்டாரும் அறியும்படி முரசறைவித்துத் தெரிவித்தமை இதனால் அறியலாகும்.]

1. அவன் - வருடகாரன். செவ்வி - சமயம்.

3. பயிர் குறிக்கொண்டு - ஒலி விசேடத்தால் அழைத்தலைக் குறிப்பாகக்கொண்டு.

4. பூசல்வாயா - போர் வாய்க்கப்பெறாத.

5. வேந்தன் - ஆருணி.

பி - ம். 1 காவல். 2 வாயர்.

வடுவில் பெரும்புகழ் வத்தவன் மந்திரி
இடவகன் பணியி னேழா யிரவர்
சவரர் புளிஞருங் குவடுறை குறவரும்
குறுநில மன்னரு நிறைவன ரீண்டி
வஞ்ச காந்தையொடு கந்த வதியெனும்
குளிர்புனற் பேரியாறு கூடிய வெல்லையுள்
நளிபுன னாட்டக நடுங்கக் கவர்ந்தாண்
டொளிதரு மிருக்கையி னொடுங்கினர் தாமெனப்

(வருடகாரன் செயல்)

பைந்தளிர்ப் படலைப் பாஞ்சால ராயற்கு
வந்துகண் கூடிய வருட காரன்
அருளிக் கேண்மெனத் தெருளக் கூறும்
மாரிப் பெரும்புனல் வருவா யடைப்பின்
ஏரிப் பெருங்குள நீர்நிறை யிலவாம்
அற்றே போலப் பற்றா மன்னற்குத்
தலைவரும் பெரும்படை தொலைய நூறிற்
சுருக்க மல்லது பெருக்க மில்லை
கல்லிடை யிட்ட காட்டகங் கடந்து
வெள்ளிடைப் புகுந்த வேட்டுவப் படையினை
[1] ஆட்டுதுஞ் சென்றெனை வத்திகை மருங்கினும்
வாட்படை வகுத்துச் சேட்படப் போக்கி

---

7\. பணியின் - கட்டளையால். 8. குவடு - மலையுச்சி.

10 - 13. வஞ்சகாந்தையாறும் கந்தவதியாறும் சங்கமமாகுமிடத்துள்ள நாட்டார்கள் நடுங்கும்படி அந்நாட்டுப் பொருள்களைக் கொள்ளையடித்துவிட்டு மறைந்திருத்தற்குரிய இடத்தில் அங்கே ஒளித்திருக்கிறார்களென்று சொல்ல. 14. பைந்தளிர்ப்படலை : சிலப். ௨ : 41.

16\. கேண்மென - கேளுமென்று. தெருளக்கூறும் - தெளிவாகச் சொல்லுவான். 17. வருவாய் - வரும் வழியை.

19\. பற்றாமன்னற்கு - பகையரசனாகிய உதயணனுக்கு.

22 - 4. "நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலின், நீங்கி னதனைப் பிற" (குறள், 495) என்றார். வேட்டுவப்படைக்குக் கல்லிடையேயன்றி வெள்ளிடையில் வலியின்றென்று கருதிப் போய் வருத்துவோமென்றான்; க. 56 : 38-9. 25. சேண் பட-நெடுந்தூரத்தே செல்ல.

பி - ம். 1 வாட்டுஞ்.

மறுத்து முரைத்தனன் மன்னவன் கேட்ப
வெறுத்த வேந்தனை வெற்பிடை முற்றி
நாற்பெரும் படையு நம்புறஞ் சூழ
மேற்படை நெருங்கு காலை மாற்றவன்
சில்படை யாளரொடு செல்படை யின்றிக்
கூழ்பட வறுப்பப் பாழ்படப் பாய்ந்து
பற்றிய படைஞரு மப்பாற் படர்தர
உற்றது செய்த லுறுதி யுடைத்தெனத்

(ஆருணியின் உட்கோள்)

இயற்கை யாக வென்றொழின் மாட்டிவன்
முயற்சி யுடைமையின் முடிக்குவன் றானெனப்
பெயர்த்து மவற்கோர் பெருஞ்சிறப் பியற்றிச்
சொல்லிய வெல்லா நல்குவ னாகித்
தன்படை சிறிதே யாயினு மிவன்படை
என்படை யென்னு மெண்ண முண்மையின்
எழுது மென்றவன் மொழியா மாத்திரம்

(வருடகாரன் செயல்)

கருதிய தெல்லாங் கால்வ லிளையரின்
உருவ வெண்குடை யுதயணற் குணர்த்த

---

26. மன்னவன் - ஆருணி. உரைத்தல், வருடகாரன்றொழில். கேட்ப உரைத்தனனென்க.

27. வெறுத்த வேந்தனை - உதயணனை; வெற்பிடை முற்றி - தவதி சயந்த மலையிடத்தே சூழ்ந்து கொண்டு. [என்பர்.

31. கூழ்பட - கலக்கமுண்டாக ; 'கூழன் - தெளிவில்லாதவன்' என்பர் நீலகேசி உரையாசிரியர்.

32. அப்பால் - வெளியிடத்தே. [குச்சொல்ல.

33. உற்றது - இடையூறு. என - என்று வருடகாரன் ஆருணிக்

36. பெயர்த்தும் - மறுபடியும். அவற்கு - வருடகாரனுக்கு.

37. சொல்லியவை இவையென்பதை, ௩. 25 : 143 - ஆம் அடி முதலியவற்றால் அறிக.

38. இவன்படை - வருடகாரனொடு வந்த சேனை.

40. எழுதும் - எழுவோம். அவன் - ஆருணி.

41. கால்வல் இளையர் - தூதர் ; 4; "ஓடுகா லிளையரை யோலை யொடு போக்கி" (௧. 24: 12.) 42. உணர்த்தல், வருடகாரன் தொழில்.

(உதயணன் செயல்)

அடற்கரும் பெரும்படை யற்றப் படாமைப்
படுப்பதோர் வாயில் பாங்குற நாடி
வெம்பரி மான்றேர்த் தம்பியர்த் தழீஇ
மதில்வடி வாகிய மலைப்புடை மருங்கே
அதிர்குரல் வேழமும் புரவியு மடக்கி
அவற்றுமுன் மருங்கே யகற்றுதற் கரிய
ஒள்வாட் பெரும்படை யுள்ளுற வடக்கி
அப்படை மருங்கே யயிற்படை நிறீஇத்
தரும தத்தனைப் பெருமுகம் பெய்தவற்
கெருத்துப்புடை யாக விடவகற் கொளீஇயவன்
உருத்தெழு பெரும்படைக் கோடுபுறங் காட்டிப்
படைத்தொழு வாரியி னிடைப்படப் புகுத்தி
உருள்படி போல வருட காரன்
போக்கிட மின்றி யாப்புற வடைப்ப
இருங்கணி கார னெண்ண மாக
வரம்பணி வாரியுள் வந்துடன் புகுந்த
அருந்திற லாருணி யென்னும் யானையைப்
படைக்கலப் பாரம் பற்பல சார்த்தி

---

43. அற்றப்படாமை - சோர்வு படாமல்.

44. படுப்பது - அகப்படுத்துவது; கொல்லுதலுமாம். வாயில் - வழி; உபாயம். 45. தம்பியர் - பிங்கல கடகர்.

46. "கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி" (பதிற். கரு : 1) என்பதனுரையைப் பார்க்க.

48. அகற்றுதல் - நீக்குதல்; விலக்குதலுமாம்.

49. வாட்படை - வாளேந்திய சேனை.

50. அயிற்படை - வேலேந்திய சேனை.

51. தருமதத்தன் - தருசகனால் உதயணனுக்கு உதவியாக அனுப்பப்பட்ட நான்கு படைத்தலைவர்களுள் ஒருவன்; இவன் சிறப்பை, ௩. 23 : 26 - ஆம் அடியால் அறிக.

52. எருத்துப்புடை - புறக்கழுத்து.

52 - 3. உருத்து - கோபித்து. அவன் படைக்கு-ஆருணிசேனைக்கு.

54. வாரி - யானையை அகப்படுத்தும் இடம்.

55. உருள்படி - ஒருவகைச் சோபானம்.

54 - 6. வருடகாரன் ஆருணியைப் புகுத்தியடைப்ப.

இடுக்கண் யாஞ்செய வியைந்த தின்றென
வாரிப் பெரும்படை மற்றவண் வகுத்து
நேரா மன்னனை நீதியிற் றரீஇப்
போரிற் கோடற்குப் புரிந்துபடை புதையா
வார்கழ றோன்றாள் வத்தவ னிருப்ப

(ஆருணியின் மனநிலை)

வாய்த்த சூழ்ச்சி வருட காரனொ
டியாத்த நண்பினன் யானென வாருணி
மேற்சென் றழித்தன் மேயினன் விரும்ப

(தீய நிமித்தங்கள்)

அந்தமி லாற்ற லவந்தியன் யானை
வெந்திற னளகிரி தன்படி வாகும்
மந்தர மென்னு மத்த யானை
நீல நெடுவரை நெற்றித் தாகிய
கோலக் கோங்கின் கொழுமலர் கடுப்புறு
சூறைக் கடுவளி பாறப் பறந்தெனப்
பட்ட மடுத்த கொட்டையொடு பாறவும்
உருமுறழ் முரசின் கண்கிழிந் ததனொடு
சக்கர நெடுங்கொடி யற்றன வாகி
இருநில மருங்கிற் சிதைவன வீழவும்
புள்ளு நிமித்தமும் பொல்லா வாக

---

61. இடுக்கண் - துன்பம். யாமென்பது மனத்தொடு சூழ்தற்கண் வந்த தனித்தன்மைப்பன்மை.

67. நண்பினன் - நட்புடையேன். 70. படிவு - வடிவம்.

73. கடுப்பு - வேகம்.

74. கடுவளி : பெயர் மாத்திரையாய் நின்றது.

75. கொட்டை - யானையின் அணிவிசேடம். பட்டம், கொட்டையொடு (75) மந்தரமென்னும் யானை (71) பாறவும் (75.)

73 - 5. "கோங்குபூத் ததிர்ந்த குன்றிற் பொன்னணி புளகம் வேய்ந்த, பாங்கமை பருமயானை" (சீவக. 2253.) 71-5. கலி. ௪௨ :16-8.

76 - 8. முரசு கண் கிழிதலும் கொடியற்று விழுதலும் தீயநிமித்தங்கள் ; "திண்பிணி முரசங் கண்கிழிந் துருளவும்" புறநா. ௨௨௯ : 19.

79. புள் பறவைகளால் அறியப்படுவன. நிமித்தம் - ஏனையன.

(பூரணகுண்டலன் கூற்று)

வள்ளா நண்பின் விறலோ னமைச்சன்
பூரண குண்டலன் றாரணி மார்ப
பெயர்த்து நகரம் புகுது மிந்நாள்
அகைத்த தறிந்தனை யருண்மதி நீயேன்
றடையார்க் கடந்து 1 தடைபா டகற்றிய
அறிந்துபடை விடுப்ப தன்னது பொருளெனச்
செறிந்த தாகச் செப்பலிற் சீறிக்

(வருடகாரன் கூற்று)

கொள்ளா ரழிவினைக் கூறு மிவையென
வள்ளிதழ் நறுந்தார் வருட காரன்
ஊக்கங் 2 கொளுவ வாக்கங் கருதி

(ஆருணியின் செயல்)

ஆருணி யரச னடற்களிறு கடாஅய்க்
காரணி முகிலிடைக் கதிரொளி கரந்து
மங்கு மருக்கனின் மழுங்குபு தோன்றச்
சங்கமு முரசுஞ் சமழ்த்தன வியம்பப்

---

80. விறலோன் - ஆருணி. 81. 'மார்ப' என்றது, ஆருணியை.
82. பெயர்த்தும் - மறுபடியும்.
83. அகைத்தது - புள்ளும் நிமித்தமும் தடுத்தமையை. என்று - [எதிர்த்து.
84. தடைபாடு - தடை. அகற்றிய - நீக்க.
85. அறிந்து - காலம்அறிந்து. விடுப்பது - விடுக்க வேண்டுவது; வியங்கோள்; "கொள்ளப் படாது மறப்ப தறிவிலென் கூற்றுக்களே" (சிற். 87.) பொருள் - காரியம்.
86. சீறி - வருடகாரன் கோபித்து.
87. கொள்ளார்அழிவினை - பகைவரதழிவை. இவை - இவ்வுற் [பாதங்கள்.
89. ஊக்கங் கொளுவ - தைரியத்தை உண்டாக்க.
90. களிறு கடாஅய் - யானையைச் செலுத்தி.
90 - 92. யானையிலிருக்கும் ஆருணியின் ஒளிமழுக்கத்திற்கு மேகத்திடை மறையுஞ் சூரியனது ஒளிமழுக்கம் உவமை. இஃது அவசகுனமென்பது, "மேனியுங், கள்ளவிழ் கண்ணியுங் கரிந்த") சூளா. அரசியல். 93) என்பதனாலும் விளங்கும்.
93. சமழ்த்தன - வருந்தினவாய்.

பி - ம். 1 கடைபா. 2 கொழுவ.

பொங்குநூற் படாகையொடு வெண்கொடி நுடங்க
நிரந்த பெரும்படை பரந்தெழுந் தோடி
மாற்றோ னிருந்த மலையக மடுத்துக்

(போர் நிகழ்ச்சி)

கூற்று யெடுத்த கோல விற்படை
நாற்றிசை மருங்கினுங் கார்த்துளி கடுப்பக்
கடுங்கணை சிதறிக் கலந்துடன் றலைப்பெய
நடுங்கின ராகி யுடைந்துபுறங் கொடுத்துப்
பொறிப்படை புதைந்த குறிக்களம் புகலும்
எண்டிசை மருங்கினு மியமரத் தொலியொடு
விண்டோய் வெற்பொலி விரவுபு மயங்கி
ஆர்ப்பிசை யரவமும் போர்க்களிற் றதிர்ச்சியும்
கார்க்கட லொலியெனக் கலந்துடன் கூடித்
திமிரம் பாய்ந்த வமர்மயங் கமயத்துச்
சிலைத்தன தூசி மலைத்தன யானை
ஆர்த்தனர் மறவர் தூர்த்தனர் பல்கணை
விலங்கின வொள்வா ளிலங்கின குந்தம்
விட்டன தோமரம் பட்டன பாய்மாத்
துணிந்தன தடக்கை குனிந்தன குஞ்சரம்

---

94. படாகை - பெருங்கொடி. 96. மாற்றோன் - உதயணன்.

98 - 9. கார்த்துளி.........சிதறி : 121; "பெயலுறழக் கணை சிதறி" மதுரை. 183.

100. நடுங்குதல் : உதயணனுடைய வீரர்தொழில்.

101. பக்கத்தில் இயந்திரங்கள் மறைக்கப்பெற்ற குறித்தலையுடைய இடம்.

103. வெற்பொலி - இங்கே எதிரொலி. விரவுபு - கலந்து.

105. காரொலி, கடலொலி.

104 - 5. "காருங் கடலுமொத் தெழுந்த வன்றே" சீவக. 447.

106. திமிரம் பாய்ந்த - இருள் பரந்த.

107. சிலைத்தன - ஒலித்தன. தூசி - கொடிப்படை. மலைத்தன - போர்செய்தன.

109. விலங்கின - குறுக்கிட்டன. குந்தம் - கைவேல்.

110. தோமரம் - எறியும் ஆயுதம்.

111. தடக்கை - வளைந்த கை; "தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்" தொல். உரி. சூ. 23.

அற்றன பைந்தலை யிற்றன பல்கொடி
சோர்ந்தன பல்குடை வார்ந்தன குருதி
குழிந்தது போர்க்கள மெழுந்தது செந்துகள்
அழிந்தன பூழி விழுந்தனர் மேலோர்

(உதயணன் செயல்)

இப்படி நிகழ்ந்த காலை வெப்பமொடு
பெரும்படைச் செற்றத் திருங்கடன் மாந்திக்
குஞ்சரக் கொண்மூக் குன்றடைந்து குழீஇக்
காலிய விவுளிக் கடுவளி யாட்ட
வேலிடை மிடைந்து வாளிடை மின்னக்
கணைத்துளி பொழிந்த கார்வரைச் சாரல்
ஒருபெருஞ் சிறப்பி னுதயண குமரன்
பொருபடை யுருமிற் பொங்குபு தொடரத்

(ஆருணியின் செயல்)

தாரணி மார்ப னாருணி யரசனும்

---

114. 'செந்துகள்' என்றார், இரத்தத்தாற் சிவந்த களத்தெழுதலால்; "குருதி...துப்புத் துகளிற் கெழூஉம்" களவழி. 1.

115. அழிந்தன - மிகுந்தன. மேலோர் - குதிரையின்மீதும் யானையின்மீதும் உள்ளோர்.

117. காலாட்படையாகிய கடனீரைக் குடித்து. படைக்குக் கடல் உவமை: ௩. 19 : 201.

118. யானை மை பூசப்பெற்றிருத்தலின், 'கொண்மூக்குன்று' என்றார்; மேகம் முகபடாத்திற்கு உவமையுமாம்; "தாழு மாமழை தழுவு நெற்றியாற், சூழி யானைபோற் றோன்று மால்வரை" கம்ப. கையடை. 23.

119.=௩. 24 : 57, அடிக்.

118 - 21. "இருப்புமுகஞ் செறித்த வேந்தெழின் மருப்பிற், கருங்கை யானை கொண்மூ வாக, நீண்மொழி மறவ ரெறிவன ருயர்த்த, வாண்மின் னாக வயங்குகடிப் பமைந்த, குருதிப் பலிய முரசுமுழக் காக, அரசராப் பனிக்கு மணங்குறு பொழுதின், வெவ்விசைப் புரவி வீசுவளி யாக, விசைப்புறு வல்வில் வீங்குநா ணுகைத்த, கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை" புறநா. ௩௬௯: 1 - 9.

117 - 21. மலைப்பக்கமாதலால் தேர்ப்போர் கூறாராயினர்.

123. ஆயுதமாகிய உருமேற்றோடு.

காந்தா ரகனுங் [1] கழற்காற் சாயனும்
தேந்தார்ச் [2] சூரனுந் திறற்பம சேனனும்
இந்நாற் றலைவரு மெரிகான் றெதிர்ப்பச்
[3] செந்நே ராகச் செல்வுழி யெதிரே

(கடகபிங்கலர் செயல்)

காந்தா ரகனைக் கடக பிங்கலர்
தேந்தார் மார்பந் திறப்ப வெய்ய
ஆழ்ந்த வம்போ டழிந்தன னாகி
வீழ்ந்தன னவனும் வீழ்ந்த பின்னர்
.................. ................................

(ஆருணியின் கூற்று)

பெய்கழ லாருணி பிறந்த நாளுட்
செவ்வாய் விருச்சிகஞ் சென்றுமே னெருங்க
ஆற்றல் சான்ற வடல்வே லாருணி
ஏற்றோர் யாவ ரீண்டுவந் தெதிர்க்கெனச்

(உதயணன் செயல்)

சீற்றத் துப்பிற் சேதியர் பெருமகன்
கழலணி காலினன் கரண யாப்பினன்
நிழலணி நல்வா [4] ளழல வீசித்
தாங்கருங் காதற் றம்பியர் சூழப்
பூங்கழற் றோழர் புடைபுடை [5] யார்தர
ஒன்னாப் பகையா னுதயண னென்பேன்

---

126. பமசேனன் - பிரமசேனன். 125 - 6. = ௩. 26 : 78 - 82.

125 - 8. காந்தாரகன் முதலிய நால்வரும் தன்பால் நின்று உதயணன் முதலியோரை எதிர்க்க, ஆருணி நேரே வரும்பொழுது.

129. கடகனும் பிங்கலனும், உதயணன் தம்பிமார்.

130. தார் - இங்கே தும்பைமாலை.

133 - 4. 'பிறந்தநாளுஞ் செவ்வாய்க் கிழமையும்' எனத் தீய காலத்தைக் குறித்து வழங்கும் பழமொழி ஈண்டு அறியத்தக்கது; விருச்சிகம், அங்காரகனுக்கு ஆட்சிவீடு. [கவசம்.

137. சேதியர் பெருமகன் - உதயணன். கரணயாப்பு - போர்க்

142. ஒன்னாப் பகை யான் - பொருந்தாத பகைவன் யானே.

பி - ம். 1 கழற்கதிர்நாயன். 2 சானுவுந்திறற் பரிசேனனும். 3 சென்னேராக. 4 ணலவலம். 5 யாத்தர.

இன்று மன்ன நின்னுயி ருணீஇய
வந்தனெ னென்றே சென்றுமே னெருங்க

(ஆருணியின் செயல்)

இடுகளி யானை யெதிர்கண் டாங்குருத்
தடுதிற லாருணி யவனுரை பொறாஅன்
பன்மயி ரணிந்த பத்திச் சேடகம்
மின்னொளிர் வாளொடு பின்னவன் [1] வாங்கக்

(உதயணன் செயல்)

காதி வெவ்வினை கடையறு காலைப்
[2] போதி பெற்ற புண்ணியன் போல
வீதல் சான்ற வெகுளி முந்துறீஇ
எதிர்த்த மன்னனைச் செயிர்த்தனன் றலைப்பெய்
தியாவரும் வேண்டா விதன்பின்மற் றிவனை
வீய நூறி வெஞ்சினந் தணிகென
ஏயர் பெருமக னெதிர்வது விரும்ப

(தருமதத்தன் ஆருணியரசனைக் கொல்லல்)

வேற்று [3] வேந்தனை வீழ நூறுதல்
மாற்றா தெனக்கு மன்ன வருளெனக்
கரும மாதல் காரணங் காட்டித்

---

145. இடுகளி - அதிமதுரத்தழை முதலியவற்றை இடுதலால் உண்டாகிய மதம். மதயானை ஒன்றையொன்று நேரே கண்டாற்போலக் கோபித்து. 147. சேடகம் - கேடகம்.

148. வாங்க - எடுக்க.

149. காதி வெவ்வினை - காதிகருமங்கள்; அவை ஆத்ம குணங்களைக் கொல்லுவனவென்பர்; "காதிகண் ணரிந்த காசி றனிமுதிர் கடவுள்", "காதிக்கண் ணரிந்து வென்ற வுலகுணர் கடவுள்" (சீவக. 1240, 2713) என்பவற்றாலும் அவற்றின் உரைகளாலும் உணர்க. [366.

150. போதி - அறிவு; "போதிச் செல்வம் பூண்டவர்" சீவக.

152. ஆருணியைக் கோபித்துச் சேர்ந்து.

புண்ணியன்போல (150)த் தலைப்பெய்து (152.)

154. தணிகு - தணிவேன். 156. வேற்று வேந்தன் - ஆருணி.

157. மாற்றாது - இல்லையென்னாமல்.

பி - ம். 1 வாங்கிய. 2 போதிற் பெற்ற. 3 வேந்தரை.

தருமதத்த னென்னுங் கடுந்திறல்
அருமுரட் [1] கலுழனி னூர்ந்துமே லோடிப்
பொருமுர ணழிக்கும் புனைபடை பயிற்றி
இமைப்போர் காணா [2] விகற்றொழிற் றிரிவொடு
பலர்க்குப் பதமின்றிப் பாஞ்சால ராயனைத்
தனக்குப் பதமாகத் தலைப்பெய் தேற்றலின்
வார்கழ லொழியும் வசத்த தன்றியவன்
ஊர்வழிச் செல்லா தொல்குபு நிற்றரக்
கூர்கெழு வச்சிரங் கொண்டு வானவன்
கார்கெழு மாமலைக் கவினழித் ததுபோற்
றாரணி மார்பன் யானையை வீழாக்
கனல்சொரி மலையிற் கவிய நூறித்
தார்கெழு மார்புந் தலையுந் தகர
முடியணி யார முத்துநிரை துளங்கத்
தொடியணி திண்டோ டுணிந்துநிலஞ் சேரப்
பணிவில னெறிதலிற் படைக்கலஞ் சோரத்
தறுக ணிமையான் றருக்கினொ டுறுதியேய்ப்
பிறமுனை மருங்கி னெடுபடத் திருகி
மான்முதல் வகையி னான்மறை யாளன்

159. கடுந்திறல் - கடுந்திறலையுடையான்.

162. இமைப்போர் காணாமை வேகத்தைப் புலப்படுத்தியது.

163. பதம் - உணவு. 165. சு. 1 : 10. அவன் - ஆருணி.

166. ஊர்வழி - செலுத்தும் இடத்தே. நிற்றர - நிற்க.

167. வச்சிரப்படை நூறு முனைகளையுடைமையின், 'கூர்கெழு வச்சிரம்' என்றார்; "சதகோடி தனக்கொளித்துத் தடங்கடலிற் புகுங் கிரிபோல்" (வி. பா. இராசசூய. 15.) வானவன் - இந்திரன்.

169. வீழா - வீழ்த்தி. 170. கனல் குருதிக்கு உவமை.

173. தொடி - வீரவளை. 174. பணிவிலன் - தாழாமல்.

175. கண்ணிமையானென்றது, ஆருணியின் வீரங் கூறியபடி; "நடுக்கமில் வேந்தன்" (187) என்பர் பின்னும்; "விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பின், ஓட்டன்றோ வன்க ணவர்க்கு" (குறள், 775.) 176. எடு - எடுத்தல்.

177. மால்முதல் வகையின் - திருமாலை முதலாகவுடைய அவதார வகையுள். நான்மறையாளன் - பரசுராமன்.

பி - ம். 1 கலுழனூர்ந்து. 2 விற்றொழிற்.

மழுவே றுண்ட மன்னவன் போலக்
கொழுநிணக் குருதியுட் குஞ்சரத் தோடும்
அழிவுகொண் டாருணி யவிந்தனன் வீழ்தலிற்

(உதயணன் செயல்)

கொற்றம் பெற்றனன் குருகுலத் திறையென
வெற்ற முரசம் வேழ மேற்றி
நகரினு நாட்டினும் பகர்வன [1] ரறைகெனப்
பின்னுரை போக்கி யொன்னாற் குறுகிப்
படைத்தொழில் வதுவை நம்மாட் டெய்த
முடித்தன னென்று சமழ்த்தன னோக்கி
நடுக்கமில் வேந்தனை நாழு முன்னின்
றடக்கற் பாலமென் றியாழறி வித்தகன்
அமரார் புகழத் தமரி னடக்குவித்
தீம மேற்றியவ னுரிமைச் சனத்திற்

---

178. ஏறு - எறிதல். மன்னவன் - கார்த்தவீரியன்.

181. குருகுலத்திறை - உதயணன்; "நீயே......குருகுலக் குருசில்" (உ. 11: 127, அடிக்) 182. வெற்றம் - வெற்றி.

181 - 2. "வென்றெறி முரசின் வேந்தர்" புறநா. ௧௧௨ : 4; "வேந்தர் வென்றெறி முரசின்" குறுந். ௩௮௦ : 1 - 2.

183. பகர்வனர் அறைக - 'கொற்றம் பெற்றனன்......இறை' (181) என்று சொல்லி முரசடிக்க.

184. பின்னுரை போக்கி - பெருமைபொருந்திய வீரப்புகழை எங்கும் நீளச்செய்து; என்றது, பல தேசங்களுக்கும் சொல்லியனுப்பி யென்றபடி. ஒன்னான் - ஆருணி.

185. வதுவை - வீரமகளை மணந்தமை: "போர்ச்சயப் பாவையுஞ் சீர்த்தனிச் செல்வியுந், தன்பெருந் தேவிய ராகி யின்புற" ஸ்ரீ ராஜேந்திரசோழதேவர் மெய்க்கீர்த்தி.

186. சமழ்த்தல் - நாணுதல். [கள்.
குறுகுதலும் (184) முடித்தலும் (186) தருமதத்தன் தொழில்

188. அடக்கல் - ஈமக்கடன் கழித்தல். யாழறி வித்தகன் - உதயணன்.

189. அமரார் - பகைவர். தமரின் - தம்மவரைக்கொண்டு.

190. அவன் உரிமைச்சனம் - அவ்வாருணியின் உரிமை மகளிர்.

பி - ம். [1] ரறைந்தெனப்.

கேம மீகென் றிடவகற் போக்க

(வருடகாரன் செயல்)

வரிகழ ேனென்றுள் வருட காரன்
இரியற் படையொ டியைந்தொருங் கீண்டிக்
கொடிக்கோ சம்பிக் கொற்ற வாயில்
அடுத்தனன் குறுகி யஞ்சன்மின் யாவிரும்
வடுத்தீர் பெரும்புகழ் வத்தவர் கோமான்
படுத்தனன் கண்டீர் பாஞ்சால ராயனை
அடைத்தனிர் வையா தகற்றுமின் கதவென

(நகராமாந்தர் கூறுதல்)

நகரத் தாளர் புகரறக் கூறுவர்
தொல்வழி வந்தவெம் பெருமக னெழுதிய
வெல்பொறி யோலை விடுத்தபி னல்லது
புகுதர விடோமிந் நகர்வயின் யாமென

(யாவரும் நகர் புகுதல்)

உடனயிர்ப் பிரிய வுதயணன் மந்திரி
இடவகன் வந்தமை யிசைத்தலும் விரும்பிக்
கொடியும் படாகையும் வடிவுபட வுயரிச்
செறிந்த கதவந் திறந்தன ரெதிர்கொள
வென்றியொடு புக்கு நின்ற மறவருட்

---

191. ஏமம் - பாதுகாவல்; பொன்னுமாம்.

190 - 91. = ௪. 1 : 26 - 8.

193. கெட்டு ஓடிய ஆருணிபடையே மிஞ்சிற்றென்பது தோன்ற ‘இரியற்படை’ என்றார்.

195. ‘கண்டேன் சீதையை’ என்றாற்போல முதலில், ‘அஞ்சன்மின்’ என்றான்.

195 - 8. ‘அஞ்சன்மின்...கதவு’ என்பது, மதிலகத்தோரை நோக்கி வருடகாரன் கூறியது.

200. பெருமகன் - அரசன்; என்றது உதயணனை.

201. பொறி - இலச்சினை; முத்திரை.

202. என - என்று நகரத்தார் சொல்ல.

203. அயிர்ப்பு இரிய - சந்தேகம் கெட.

204. இசைத்தலும் - வருடகாரன் சொன்னவுடன்.

205. உயரி - உயர்த்தி.

டலைவ னாகிய தொலைவில் விழுச்சீர்ப்
பாடுசால் சிறப்பிற் பாஞ்சால ராயன்
கண்மணி யன்ன திண்ணறி வாளன்
கும்பனென் போனை வெம்ப னாறி
இன்று மற்றிங் கிவன்றம ருளரெனிற்
குன்றா ரவரைக் கோறு நாமெனக்
கழிப்புறு வெள்வாட் டெழித்தன ருரீஇ
ஒழுக்கஞ் சான்றோர் பிழைப்பில ரோம்ப
மலைத்தொகை யன்ன மாட வீதியுட்
சிலைப்பொலி தடக்கைச் சேதியன் வாழ்கென
அலைகடல் வைய மறிய வெங்கும்
பிறைமருப் பியானைப் பிணரெருத் தேற்றிப்
பறைவிட் டன்றாற் பகைமுத லறுத்தென்.

௨௭—பறை விட்டது முற்றிற்று.

மூன்றாவது

**மகத காண்டம் முற்றுப்பெற்றது.**

ஆக காண்டம் மூன்றினுற் காதை, ௧௦௫.*

---

213. குன்றார் - பகைமை குறையார். கோறும் - கொல்லுவோம்.
214. கழிப்பு - வெட்டித் தள்ளுதல்.
215. ஒழுக்கம் - மன்னரைச் சார்ந்தொழுகல்.
217. சிலை - வில்லின் தழும்பு.
220. பறைவிட்டன்று - வெற்றிப்பறை விடப்பட்டது; பகைவர் பற்றியிருந்த நாட்டைக் கைக்கொண்டு பறைவிடுதலை, சீவக. 2372-ஆம் செய்யுள் முதலியவற்றால் உணர்க.

* இதன்பின், "இந்தக் காவியம் நயினான் அமுதகவிஎழுத்து" என்னும் வாக்கியமும்,

"முன்னாளின் மூவ நுரைகண்ட சோழன் முறைமையைப்போல்
இந்நாளி லேகொங்க வேண்மாக் கதைகுன் டெழுதுவித்தான்
பன்னாளுங் கீர்த்திப் பழைசை யடைந்தான்மெய்ப் பாலனியல்
நன்னா வலர்புகழ் சின்னடைந் சான்றென்னை நாட்டவனே"

என்னும் கட்டளைக்கலித்துறையும் ஏட்டுப்பிரதியில் எழுதப் பெற்றிருந்தன.

### நான்காவது

# வத்தவ காண்டம்.



## ௧—கொற்றங் கொண்டது.

(உதயணன் வருடகாரன் முதலியோர்க்குச் சிறப்புச் செய்தல்)

பகைமுத லறுத்துப் பைங்கழ னோன்றாள்
வகைமிகு மான்றோர் வத்தவர் கோமான்
வருட காரன் பொருடெரி சூழ்ச்சி
பொய்யாது முடித்தலின் மெய்யுறத் தழீஇ
ஏறிய யானையுந் தன்மெய்க் கலனும்
கூறுபட லின்றிக் கொடுத்தனன் கூறி
அறைபோ மிவனென வாருணி யுரைத்த
குறையா விழுப்பொரு ளன்றே கொடுத்துத்
தரும தத்தனைத் தோண்முதல் பற்றிப்
பரும யானையொடு பாஞ்சால ராயனை
வெங்களத் தட்ட வென்றி யிவையென
நெய்த்தோர்ப் பட்டிகை யாக வைத்துப்
பத்தூர் கொள்கெனப் பட்டிகை கொடுத்து

---

## ௪—வத்தவ காண்டம்.

[இஃது உதயணன் வத்தவ நாட்டிலிருந்த பொழுது நிகழ்ந்த செய்திகளைத் தொகுத்துக் கூறுவது.]

௧.—கொற்றங் கொண்டது.

[உதயணன், கோசம்பிநகரை யடைந்து சிங்காதனமேறி அரசுரிமையைக் கைக்கொண்டது இதனால் அறியலாகும்.]

1. பைங்கழல் - பசும்பொன்னாலாகிய வீரக்கழல்.

3. சூழ்ச்சி - ஆலோசித்த காரியங்களை.

7 - 8. 'இவ்வருடகாரன் உதயணனை வஞ்சித்து நமக்குத் துணையாவான்' என்று கருதி ஆருணி வகைப்படுத்திச் சொன்ன நிறைந்த சிறந்த பொருள்களை.

9. தருமதத்தன் - ஆருணியைக் கொன்றவன்.

12. நெய்த்தோர் - இரத்தம். பட்டிகை - பத்திரிகை.

நன்னாட் கொண்டு துன்னினர் சூழ
வெங்கண் யானைமிசை வெண்குடை கவிப்பப்
பொங்குமயிர்க் கவரி புடைபுடை வீசக்
கங்கை நீத்தங் கடன்மடுத் தாங்குச்
சங்கமுந் தூரமு முரசினோ டியம்ப
மன்பெரு மூதூர் மாசன மகிழ்ந்து
வாழ்த்து மோசை மறுமொழி யார்க்கும்
கேட்பதை யரிதாய்ச் சீர்த்தகச் சிறப்ப
ஊழி தோறு முலகுபுறங் காத்து
வாழிய நெடுந்தகை யெம்மிடர் தீர்க்கெனக்
கோபுரந் தோறும் பூமழை பொழியச்
சேயுயர் மாடத்து வாயில் புக்குத்
தாம மார்ப னுருணி தன்னோ
டேம மேரு வியல்புடை யமைதியர்க்
கேம மீத்த வியல்பின னாகிக்
கழிந்தோர்க் கொத்த [1] கடந்தலை கழிக்கென
ஒழிந்தோர்க் கெல்லா மோம்படை சொல்லி
வேறிடங் காட்டி யாறறிந் தோம்பி
வியலக வரைப்பிற் கேட்டோர் புகழ

**(உதயணன் சிங்காதனமேறி வீற்றிருந்தல்)**

உயர்பெருந் தானை யுதயண குமரன்
அமைச்சினு நண்பினுங் குலத்தினு மமைதியிற்

14. துன்னினர் - நெருங்கினவர்; என்றது, ஐம்பெருங்குழுவும் எண்பேராயமுமானவரை. 17. மதுரைக் 696.

20. மறுமொழி - பிறர் கூறும் கூற்று.

21. கேட்பதை - கேட்டல்.

20 - 21. "ஆற்றொலி யரவமொ டின்னவை பெருகிக், கூற்றொலி கேளாக் கொள்கைத் தாகி" (பெருங். ௧. 42 : 124 - 5); "மொழி மொழி, ஒன்றல பலபல வுடனெழுந் தன்றவை, எல்லார் தெரியக் கேட்குநர் யாரவை" பரி. கஉ : 36 - 8, விசேடக்.

25. மாடத்துவாயில்: இது வாயின்மாடமெனவும் வழங்கும்.

27 - 8. = ௩. 27 : 190 - 91.

29. கழிந்தோர்க்கு - இறந்தவருக்கு. கடம் - ஈமக்கடன்.

பி - ம். 1 கடந்தலைக் கிழக்கென.

பெயர்த்துகிலை யெய்திப் பெருந் தழீஇ
....................................................
முதற்பெருங் கோயின் முந்துதனக் கியற்றி
மணிப்பூண் கண்ணியர் மரபறி மாந்தர்
முட்டில் கோலமொடு கட்டில் படுப்ப
நோற்றார் விழையு நாற்பான் மருங்கினும்
முழுவொலிச் சும்மையொடு முரசங் கறங்க
[1] விழவியல் சும்மையொடு வியனகர் துவன்றிக்
குடியுங் குழுவு [2] மடியுறை செய்ய
ஏவல் கேட்குங் காவல ரெல்லாம்
பெருந்திறைச் செல்வமொ டொருங்குவந் திறுப்பக்
களம்படக் கடந்து கடும்பகை யின்றி
வளம்படு தானை வத்தவர் பெருமகன்
மாற்றார்த் தொலைத்த மகிழ்ச்சியொடு மறுத்தும்
வீற்றிருந் தனனால் விளங்கவை யிடையென்.

க—கொற்றங் கொண்டது முற்றிற்று.

---

37. கண்ணி - ஏறுதி, காவிதியென்னும் பட்டத்திற்குரிய மாலை. மரபு - கட்டில் படுக்குமுறைமை.

38. முட்டில் கோலம் - குறைதலில்லாத அலங்காரம். கட்டில் - சிங்காதனம்.

42. அடியுறை செய்ய - அடியின்கண் உறைய; பரி. பார்க்க.

43. காவலர் - அரசர்.

47. மாற்றாரென்றது ஆருணி, காந்தாரகன் முதலாயினாரை; ந. 27 : 124 - 6.

47 - 8. முன்பு வீற்றிருந்த சிங்காதனமாதலின், 'மறுத்தும் வீற்றிருந்தனன்' என்றார்.

பி - ம். 1 விழவொலிச். 2 மடிமுறை.

## உ—நாடு பாயிற்று.

### (உதயணன் செங்கோற் சிறப்பு)

விளங்கவை நடுவண் வீற்றினி திருந்த
வளங்கெழு தானை வத்தவர் பெருமகன்
வெங்கோல் வேந்தன் வேற்றுநா டிதுவெனத்
தன்கோ லோட்டித் தவற்றி னாட்டிய
புன்சொற் படுநுகம் புதியவை நீக்கிச்
செங்கோற் செல்வஞ் சிறப்ப வோச்சி
நன்னக ரகத்து நாட்டக வரைப்பினும்
தொன்மையின் வந்த தொல்குடி யெடுப்பிப்
படிறு நீக்கும் படுநுகம் பூண்ட
குடிகட் கெல்லாங் குளிர்ப்பக் கூறித்
திருந்திய சிறப்பிற் [1]றேவ தானமும்
அருந்தவர் பள்ளியு [2]மருகந் தானமும்
திருந்துதொழி லந்தண ரிருந்த விடனும்
தோட்டமும் வாவியுங் கூட்டிய நல்வினை
ஆவணக் கடையு மந்தியுந் தெருவும்
தேவ குலனும் யாவையு மற்றவை

---

உ—நாடு பாயிற்று.

[உதயணன், போரில் தனக்கு உதவிசெய்தவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுத்து அனுப்பிவிட்டுக் குடிகளின் குறைபாட்டைத் தீர்த்துத் தன்னுடைய நாட்டைப் பரவச் செய்தமை இதனுள் அறியலாகும்.]

2. பெருமகன் : எழுவாய்.

3. வெங்கோல்வேந்தன் - ஆருணி.

4. 'தன்' என்றது ஆருணியை. தவற்றின் னாட்டிய - அநீதியால் ஆருணி நிலைநிறுத்தின.

5. படுநுகம் - பெரிய இராச்சியபாரம்; சீவக. 203.

8. பரம்பரையிற் காரியம் பார்த்துவந்த பழைய குடிமக்களை

11. தேவதானம் - தேவாலயம். [யுயர்த்தி.

16. குலம் - கோயில். 17. புதுக்க என்று. 19. தழங்கு குரல்.

பி - பி. [1] றேவர். [2] மருகர் தானமும்.

சிதைந்தவை யெல்லாம் புதைந்தவை புதுக்கென்
றிழந்த மாந்தரு மெய்துக தமவெனத்
தழங்குரன் முரசந் தலைத்தலை யறைகெனச்
செல்வப் பெரும்புனன் மருங்கற வைகலும்
நல்கூர் கட்டழ லவிந்துகை யறுப்ப
மானம் வீட லஞ்சித் தானம்
தளராக் கொள்கையொடு சால்பகத் தடக்கிக்
கன்னி காமம் போல வுள்ள
இன்மை யுரையா விடுக்க ணுளிரும்
ஊக்கமும் வலியும் வேட்கையும் விழைவும்
மூப்படர்ந் துழக்க முடங்கி னீரும்
யாப்பணி [1] நன்னலந் தொலைய வசாஅய்த்
தீப்பிணி யுற்றுத் தீரா தீரும்
இடுமணன் முற்றத் தின்னியங் கறங்கக்
குடுமிக் கூந்தலு ணறுநெய் நீவி
நல்லவை நாப்பட் பல்சிறப் பயர்ந்து
கொண்டோன் றுறந்து கண்கவிழ்ந் தொழுக
வாழ்த லாற்றாச் [2] சால்பணி மகளிரும்

---

20. மருங்குஅற - உங்களிடத்தினின்றும் அறுதலால்.

21. கட்டழலென்றது வறுமையை. கை - செயல்.

22 - 3. தானம் தளரா - நிலையினின்றும் தளராத.

24 - 5. "கன்னிய மகளிர் நெஞ்சிற் காமம்போற் கரக்க" (சீவக. 1861); "கன்னியர்தம் வேட்கையே போலுங் கனிமழலை, தன்மணிவா யுள்ளே தடுமாற" நள. 190.

20 - 25. வறுமையுடையீரும்; க. 40 : 237; நாலடி. 40; குறள், 970.

26 - 7. ஊக்கமுதலியன ஒழிந்து முதுமையினால் உடல் வளைந் தீரும்.

28. அசாஅய் - மெலிந்து.

28 - 9. தீராப்பிணியையுடையீரும்.

30. இடுமணல் - கொண்டுவந்திட்ட இளமணல்; க. 36 : 138, 38 : 311, ௫. 5 : 93.

31. குடுமி - உச்சி. நறுநெய் - வாசவெண்ணெய். 'குடுமிக் கூந்தலில் நறுநெய் பெய்து' இறை. சூ. 1, உரை.

33. கண் கவிழ்ந்தொழுக - நிமிர்ந்து பாராதிருப்ப.

பி - ம். 1 நன்கலந் தொலைவசாஅய்த். 2 சால்பிணியீரு மகளிரும்.

நிறைப்பெருங் கோலத்து நெறிமையின் வழாஅ
உறுப்புக்குறை பட்டீ ருட்படப் பிறரும்
வந்தனிர் குறுகி நுங்குறை யுரைத்துத்
துன்ப நீங்க வின்பம் பயப்ப
வேண்டின கொள்ளப் பெறுதிர் நீரென
மாண்ட வீதியொடு மன்ற மெல்லாம்
ஆர்குரன் முரச மோவா ததிரக்
கோடி முற்றி நாடொறும் வருவன
நாடு நகரமு நளிமலை முட்டமும்
உள்கண் டமைந்த கொள்குறி நுகும்பிற்
கணக்கருந் திணைகளு மமைக்குமுறை பிழையாது
வாயிற் செல்வங் கோயிலுட் கொணரப்
போரின் வாழ்நரும் புலத்தின் வாழ்நரும்
தாரின் வாழ்நருந் தவாஅப் பண்டத்துப்
பயத்தின் வாழ்நரும் படியிற் றிரியா
ஓத்தின் வாழ்நரு மொழுக்கின் வாழ்நரும்
யாத்த சிற்பக் கயிற்றின் வாழ்நரும்
உயர்ந்தோர் தலையா விழிந்தோ ரீறா
யாவர்க் காயினுந் தீதொன் றின்றி
மறனி னெருங்கி நெறிமையி னொரீஇக்

35. வழாஅ - வழுவி. 36. உறுப்புக்குறை - அவயவக்குறை.

37. குறை - ஆகவேண்டிய காரியம்.

40. பெரிய வீதிகளிலும் பொதுவிடத்திலும்.

41. மிக்க முழக்கத்தையுடைய முரசு இடைவிடாது முழங்க.

42. கோடி - கோடிபொருள்; புறநா. ௧௯௪: 6, உரை.

43. நளிமலை முட்டம் - செறிந்த மலைப்பக்கங்களில் வழிமுட்டா யிருக்கும் இடங்கள்; குறிஞ்சிப். 258, ந.

44. நுகும்பு - (இங்கே) பனையோலை; 'நுகும்பென்பது பனை வாழை, புதல் புல்லென்பவற்றிற்குரித்து' நன். சூ. 387, மயிலை.

45. கணக்கருந்திணைகளும்: ௧. 32: 61 - 2, ௬. 10: 37.

51. கயிறு - நூல்.

47 - 51. வீரரும் குடிமக்களும் செய்தற்கருந்தொழிலோரும் வாணிகஞ் செய்பவரும் அந்தணரும் நல்லொழுக்கத்தவரும் சிற்ப நூலால் வாழ்பவ[ரும்.

53. ஒன்றின்றி - சிறிதுமின்றி.

கூற்றுயிர் கோடலு மாற்றா தாக
உட்குறு செங்கோ லூறின்று நடப்ப
யாறுந் தொட்டவு மூறுவன வொழுகக்
காடும் புறவுங் கவின்றுவளஞ் சிறப்பப்
பொய்யா மாரித் தாகி வைகலும்
தண்டா வின்பந் தலைத்தலை சிறப்ப
விண்டோய் வெற்பின் விளைகுர லேனற்
குறவ ரெறிந்த கோலக் குளிர்மணி
முல்லை தலையணிந்த முஞ்ஞை வேலிக்
[1] கொல்லை வாயிற் குப்பையுள் வீழவும்
புன்புல வுழவர் படைமிளிர்த் திட்ட
ஒண்கதிர்த் திருமணி யங்கண் யாணர்
மருத மகளிர் வண்டலுள் வீழவும்

---

55. “மன்னவன் செங்கோன் மறுத்த லஞ்சிப், பல்லுயிர் பருகும் பகுவாய்க் கூற்றம், ஆண்மையிற் றிரிந்து” (சிலப். ௫ : 218 - 20); “மாறழிந், தோடி மறலி யொளிப்ப முதுமக்கட், சாடி வகுத்த தராபதியும்” விக்கிர. உலா. 7 - 8.

54 - 5. வீரங்கூறிற்று. [றிச் செல்ல.

56. பகைவர் அஞ்சுதற்குக் காரணமாகிய செங்கோல் இடையூறின்

57. தொட்ட - தோண்டின கிணறு முதலியவை.

58. காடு - பெருங்காடு. புறவு - சிறுகாடு ; பதிற். ௩௫ : 20, உரை. கவின்று - அழகுபெற்று.

59. புறநா. ௩௫ : 15 - 6, அடிக். [மிக.

60. தலைத்தலை - இடந்தோறும் ; மேன்மேலுமென்றுமாம். சிறப்ப -

61. குரல் - கதிர்.

61 - 2. ஏனற்குறவர் - தினைப்புனங் காக்கும் குறவர்.

61 - 4. குறிஞ்சியும் முல்லையும் மயங்கிய மயக்கம்.

63. முஞ்ஞை - முன்னை ; புறநா. ௧௯௭. “முன்றிலாடு முஞ்ஞை மூதிலை கறிக்கும்” தொல். செய். சூ. 31, பேர். மேற்.

65. புன்புலம் - முல்லை நிலம். படை மிளிர்த்திட்ட - கலப்பை கீழ்மேலாக்கின. 66. யாணர் - அழகு.

67. வண்டல் - விளையாடும் இடம். 68. கௌவை - ஆரவாரம்.

65 - 7. முல்லையும் மருதமும் மயங்கிய மயக்கம்.

பி - ம். 1 கொல்லையாயின.

வயலோ ரெடுத்த கௌவைக் கிருங்கழிக்
கயல்கொள் பொலம்புள் கதுமென வெருவவும்
[1] திணைவிராய் மணந்து திருவிழை தகைத்தாக்
களவு மரம்புங் கனவினு மின்றி
விளைத லோவா வியன்பெரு நாட்டொடு
பட்டி நியமம் பதிமுறை யிரீஇ
முட்டின்று நிரம்பிய காலை யொட்டாப்
பகைப்புலந் தேயப் பல்களிற் றியானையொடு
தகைப்பெருந் தம்பியர் தலைச்சென் றகற்ற
ஆணை கேட்ட வகலிடத் துயிர்கட்
கேம வெண்குடை யின்னிழற் பரப்பி

(உதயணன் செயல்)

வீணை வேந்தன் வியனுடு கெழீஇ
மகத மன்னவன் றுணையொடு வந்த
பகையடு மறவரைப் பதிவயிற் போக்கி
அருவிலை நன்கல மமைந்தவை பிறவும்

69. பொலம்புள்-பொன்வாய்ப்புள் ; சிச்சிலிப்பறவை; "புலவுக்கயலெடுத்த பொன்வாய் மணிச்சிரல்" சிறுபாண். 181.

68 - 9. மருதமும் நெய்தலும் மயங்கிய மயக்கம்.

70. திணை - குறிஞ்சி முதலிய நிலங்கள். விராய் - கலந்து. "ஐம்பாற் றிணையுங் கவினி" (மதுரைக். 326.) திருவிழை தகைத்தா - திருமகளும் விரும்பும் தன்மையை உடையதாக ; 96.

71. அரம்பு - குறும்பு; ௩. 3 : 48 ; ௪. 4 : 75.

74. முட்டு இன்று - முட்டுப்பாடில்லாமல்.

74 - 5. ஒட்டாப் பகைப்புலம் - நேசியாத பகைநிலத்தவர்.

76. தம்பியர் - பிங்கலகடகர். அகற்ற - நீக்க.

77. ஆணைகேட்ட - தன் கட்டளைப்படி நடந்த.

78. ஏமம் - பாதுகாவல் ; இன்பமுமாம்.

79. வீணைவேந்தன் - உதயணன்; உ. 10 : 174. வியல் - அகலம்.

80. மகதமன்னவன் - தருசகனுடைய.

81. மறவர் - சேனாபதிகள். பதிவயின் - அவர் நகரிடத்து.

82. நன்கலம் - சிறந்த ஆபரணம். அருவிலை நன்கலம் : புறநா. ௨௧௮ : 4.

பி - ம். 1 திண்ணைமணந்து.

தருசகன் கொள்கெனத் தமரொடு போக்கிப்
பட்ட மெய்திய பதுமா பதியொடு
முட்டில் செல்வத்து முனிதல் செல்லான்
மட்டுவிளை கோதையொடு மகிழ்ந்துவிளை யாடிச்
செங்கதிர்ச் செல்வ னெழுச்சியும் பாடும்
திங்களு நாளுந் தெளிதல் செல்லான்
அந்தளிர்க் கோதையை முந்துதா னெய்திய
இன்பக் கிழவ னிடவகை யன்றி
மன்பெரு மகதன் கோயிலுள் வான்றோய்
கன்னி மாடத்துப் பன்முறை யவளொடு
கழிந்தவும் பிறவுங் கட்டுரை மொழிந்து
பொன்னிழை மாதரொ டின்மகிழ் வெய்திப்
பெருநகர் வரைப்பிற் றிருமனை யிருந்து
தீயன நீக்கித் திருவிழை தகைத்தாப்
பாயினன் மாதோ பயந்தநன் னாடென்.

உ—நாடு பாயிற்று முற்றிற்று.

---

84. பட்டம் - தேவியென்னும் பட்டம்.

85. முனிதல்செல்லான் - வெறுனாகி.

86. பதுமாபதியுடன் மகிழ்ந்து உண்டாடி.

87. எழுச்சி - உதித்தல். பாடு - அத்தமித்தல்.

88. நாளும் - நாடோறும். தெளிதல் செல்லான் - தெளியானாகி.

87 - 8.=உ. 9 : 183 - 5. 89. கோதை - பதுமாபதி.

93. "நிகழ்ந்தது நினைத்தற் கேதுவு மாகும்" (தொல். அகத்திணை. சூ. 43) என்பதனால், 'கழிந்த............மொழிந்து' என்றார்.

96. திருவிழை தகைத்தா ; 70.

97. பாயினன் - பரப்பினான் ; செல்வம் பெருகச்செய்தான் பயந்த - பயனுற்ற.

## ௩—யாழ் பெற்றது.

(பத்திராபதியின் என்பு முதலியவற்றைக் கொணரும்படி உதயணன் சிலரை அனுப்பல்)

*பாயநன் றூடு பைத றீர்ந்தபின்*
*ஏயர் பெருமகன் சேயது நோக்கி*
*விசையுடை யிரும்பிடி வீழ்ந்த தானம்*
*அசைவி லாளர்க் கறியக் கூறி*
*என்புந் தோலு முள்ளவை யெல்லாம்*
*நன்கன நாடிக் கொண்டனிர் வம்மினென்*
*றங்கவர்ப் போக்கிய பின்றை யப்பால்*

(பத்திராபதி வீழ்ந்த இடத்தில் அதன் வடிவமெடுப்பித்துப் பூசை முதலியவற்றை நிகழ்த்துவித்தற்கு உதயணன் முயலுதல்)

*வெங்கட் செய்தொழில் வேட்டுவத் தலைவரொடு*
*குன்றச் சாரற் குறும்பரைக் கூஉய்*
*அடவியுள் வீழ்ந்த கடுநடை யிரும்பிடி*
*நம்மாட் டுதவிய நன்னர்க் கீண்டொரு*

---

௩—யாழ் பெற்றது.

[உச்சயினியிலிருந்து வாசவதத்தையோடு பிடியூர்ந்து வருகையில் மூங்கிலிற் சிக்குண்டு நழுவிய யாழை அருஞ்சுகனென்னும் அந்தணன் கொண்டுவரப் பெற்று உதயணன் மகிழ்வுற்றது இதனால் அறியலாகும்.]

1. பைதல் - துன்பம்.

2. சேயது நோக்கி - நெடுங்காலத்துக்கு முன்பு நிகழ்ந்த செய்தியை நினைத்து; சேய்மை, கால நீட்சியை யுணர்த்திற்று.

3. வேகத்தையுடைய பத்திராபதியென்னும் பிடி சோர்ந்து வீழ்ந்த இடத்தை; 10. [சுருக்கு.

4. அசைவிலாளர்க்கு - சென்று அறிதலில் தளர்ச்சி யில்லாதவர்

6. நன்கனம் - நன்றாக. [ளுள்ள.

7. அவர்களை அனுப்பிய பின்பு பத்திராபதி வீழ்ந்த இடத்தி

9. குறும்பர் - வேடர்; குறுநில மன்னருமாம். கூஉய்-அழைத்து

10 கடுமை - விரைவு. 11. நன்னர்க்கு - நன்றிக்கு.

கைம்மா றாற்றுத லென்று மின்மையின்
உதவி செய்தோர்க் குதவா ராயினும்
மறவி யின்மை மாண்புடைத் ததனாற்
கோடுயர் வரைப்பினோர் மாட மெடுப்பித்
தீடமை படிவ மிரும்பிடி யளவா
ஏற்ப வெடுப்பித் தெல்லியுங் காலையும்
பாற்படல் பரப்பிப் பணிந்துகை கூப்பி
வழிபா டாற்றி வழிச்செல் வோர்கட்
கழிவுநன் ககல வரும்பத மூட்டாத்
தலைநீர்ப் பெருந்தளி நலனணி கொளீஇ
எனைவ ராயினு மினைவோர்க் கெல்லாம்
முனைவெந் துப்பின முன்னவ ணீகென
விருத்தி கொடுத்துத் திருத்தகு செய்தொழிற்
றச்ச மாக்களொடு தலைநின்று நடாஅம்
அச்ச மாக்களை யடையப் போக்கிப்

---

12. கைம்மாறு - பிரதியுபகாரம்.

11-2. "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட், டென்னாற்றுங் கொல்லோ வுலகு" (குறள், 211.) 14. மறவி - மறத்தல்.

13 - 4. "நன்றி மறவேல்" (ஆத்திசூடி); "நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல, தன்றே மறப்பது நன்று" குறள், 108.

16. ஈடு - இடுதல்; சுவர்முதலியவற்றில் எழுதுதல்; சுதையாற் செய்வித்தலுமாம்; "படிம மிடூஉஞ் சித்திர காரர்" (27 - 8) என்பர் பின். படிவம் - வடிவம்; இது 'படிமம்' எனவும் வழங்கும்.

17. எல்லி - இரவு. காலை - பகல்.

18. பாற்படல் - வழிபாட்டுப் பகுதிக்குப் பொருந்துவனவற்றை.

20. அழிவு - பசியால்வரும் மெலிவு. பதம் - உணவு.

21. தலைநீர்ப்பெருந்தளி - தண்ணீர்ப்பந்தர்; "உண்ணும் சாலையுந் தளியும்" 39 - 40.

22. எனைவர் - யாவர். [அவண் ஈக என.

23. வெந்துப்பு இனம் - விரும்பத்தக்க நுகர்தற்குரியவற்றை.

20 - 23. "விலக்கில் சாலையாவர்க்கும் வெப்பின் முப்பழச்சுனைத், தலைத்தணீர் மலரணிந்து சந்தனஞ்செய் பந்தரும்" சீவக. 75.

24. விருத்தி - ஜீவிதம்; ஜீவிப்பதற்காக விட்ட நிலம்; சீவக. 1374; "அரசொடு நட்டவ ராள்ப விருத்தி" வளையாபதி.

26. அச்ச மாக்கள் - தன்னிடத்து அஞ்சுதலையுடைய வேலைக் காரர்கள். அடைய - முழுக்க.

பத்திரா பதியின் படிம மிடூஉஞ்
சித்திர காரருஞ் செல்கெனச் சொல்லி
ஆராக் கவலையி னதுபணித் ததற்பின்

(பத்திராபதியின் என்பு முதலியன கொணர்ந்தார்க்கு
உதயணன் பொருளளித்தல் முதலியன)

ஊரக வரைப்பி[1] னுள்ளவை கொணர்ந்தார்க்
கின்னுரை யமிழ்தமொடு மன்னவ னீத்துக்
கோப்புக வமைத்த கொற்ற வாயிலும்
யாப்புற வதன்பெயர் பாற்படக் கொளீஇ
வாயின் முன்றி லவைப்புற மாகச்
சேயுயர் மாடஞ் சித்திரத் தியற்றி
உயிர்பெற வுருவ மிடீஇ யதனைச்
செயிர்தீர் சிறப்பொடு சேர்ந்தவண் வழிபடு
.........................................
நான்மறை யாளர் நன்றுண் டாகெனத்
தாமுறை பிழையார் தலைநின் றுண்ணும்

---

27. படிவம் இடூஉம் - வடிவத்தை எழுதும்; "ஈடமை படிவம்" (16); "உருவ மிடீஇ" (36.) 29. ஆராமை - முற்றாமை.

30. கோசம்பி நகரிற் பத்திராபதியின் என்பு முதலியவற்றைக் கொண்டு வந்தோர்க்கு; 5 - 6.

31. ஈயவேண்டுவனவற்றை இனிய சொல்லாகிய அமிர்தத்துடன் ஈந்து; ௨. 8 : 114, ௩. 24: 111 - 2.

32. கொற்றவாயில் - ஒருவகை மாடம்; ௫. 5 : 45; "நற்கொற்ற வாயில்" யா - வி. செய். சூ. 6, மேற்.

33. யாப்புற - பொருத்தமுற. அதன் - அப்பிடியின். கொளீஇ - பொருத்தி. பத்திராபதி வாயிலென்று பெயரிட்டு.

34. வாயில் - மேற்கூறிய கொற்றவாயில். அவை - அம்பலம்.

35. மிகவுயர்ந்த மாடத்தைச் சித்திரங்களுடன் இயற்றுவித்து; "மாடக்குச் சித்திரமும்" நன்னூல், 54.

36. உருவம் இடீஇ - அந்தப் பிடியின் உருவத்தைச் சித்திரமாக எழுதுவித்து; இடுதல் - எழுதுதல்.

38. நான்மறையாளர்: எழுவாய். நன்று உண்டாக என - நன்மை உண்டாகுகவென்று. 39. முறை பிழையாராகி.

பி - ம். 1 னுள்ளது.

சாலையுந் தளியும் பாலமைத் தியற்றிக்
கூத்திய ரிருக்கையுஞ் சுற்றிய தாகக்
காப்பிய வாசனை கலந்தவை சொல்லி
எண்ணிய துண்ணு மேண்டொழி லறாஅக்
குழாஅ மக்களொடு திங்க டோறும்
விழாஅக் கொள்கென வேண்டுவ கொடுத்துத்
தன்னகர்க் கடப்பா டாற்றிய பின்னர்

(உதயணன் இழந்த யாழைப் பெறுதல்)

மதிலுஞ் சேனையுண் மாணி யாகிய
அதிர்வில் கேள்வி [1] யருஞ்சுக னென்னும்
அந்த ணாளன் மந்திரம் பயின்றநல்
வகையமை நன்னூற் பயனனி பயிற்றித்
* தலமுத லூழியிற் றானவர் தருக்கறப்
புலமக ளாளர் புரிநரப் பாயிரம்

---

40. சாலையுந் தளியும் - அடிசிற்சாலையும் தண்ணீர்ப் பந்தரும்; "நீரற நன்று நிழனன்று தன்னில்லுட், பாரற நன்றுபாத் துண்பானேற்- பேரற, நன்று தளிசாலை நாட்டல் பெரும்போகம், ஒன்றுமாஞ் சால வுடன்" சிறுபஞ்ச. 63.

41. கூத்தியரிருக்கை - தளிப்பெண்டுகளின் தெரு.

42. வாசனை - வாசித்தல்; படித்தல்.

41 - 2. சிலப். அடியார். மேற். ப. 7.

43. எண் தொழில் - நிலைபெற்றதொழில்.

44. திங்கடோறும் - மாதந்தோறும்.

46. கடப்பாடு - ஒப்புரவுகளை; கடமைகளை; "கைம்மாறு வேண்டா கடப்பாடு" குறள், 211.

47. உஞ்சேனையுள் - உச்சயினி நகரத்தில். மாணி - பிரமசாரி.

48. அதிர்வு - நடுக்கம்.

49. மந்திரம் - ஆலோசனை; ஜபிக்கும் மந்திரங்களுமாம்.

50. பயிற்றி - இடைவிடாமற்கற்று.

51. முதலூழியில் - முதல் யுகத்தில். தானவர் - வித்தியாதரர்.

52. புலமகளாளர் - அறிஞர். புரி நரம்பு - முறுக்கிய நரம்பு.

பி - ம். 1 யரிஞ்சய னென்னும்.

வலிபெறத் தொடுத்த வாக்கமை பேரியாழ்ச்
செலவுமுறை [1] யெல்லாஞ் செய்கையிற் றெரிந்து
மற்றை யாழுங் கற்றுமுறை பிழையான்
பண்ணுந் திறனுந் திண்ணிதிற் சிவணி
வகைநயக் கரணத்துத் தகைநய நவின்று
நாரத கீதக் கேள்வி நுனித்துப்
பரந்தவெந் நூற்கும் விருந்தின னன்றித்
தண்கோ சம்பிதன் றமர்நக ராதலிற்
கண்போற் காதலர்க் காணிய வருவோன்
[2] சதுவகை வேதமு மறுவகை யங்கமும்
விதியமை நெறியிற் பதினெட் டாகிய
தான விச்சையுந் தான்றுறை போகி
ஏனைக் கேள்வியு மினையா தனக்கில்லவன்
கார்வளி முழக்கி னீர்நசைக் கெழுந்த

---

53. தொடுத்த - கட்டிய. வாக்கு - திருத்தம்.

52 - 3. ஆயிரநரம்பையுடைய பேரியாழென்றது, ஆதியாழை; "ஆயிர நரம்பிற் றாதியா ழாகும்" நூல்.

54. செலவின் இலக்கணத்தை, "கண்ணிய செலவு" (சிலப். ப. 204) என்பதன் உரையிற் காண்க. 55. பிழையான் - தவறானாகி.

51 - 5. சிலப். அடியார். மேற். ப. 9.

56. பண் - நிறை நரம்புடையது; ஜனகராகமென்பர். திறன் - குறை நரம்புடையது; ஜன்யராகமென்பர்.

57. நயக்கரணம் - இனிமையையுடைய கிரியை. [நுணுகியறிந்து.

58. நாரதகீதக்கேள்வி - நாரதசிக்ஷையென்னும் நூல்; நுனித்து-

59. எந்நூற்கும் - மற்ற எந்த இசைநூல்களுக்கும். விருந்தின னன்றி - புதியனாக இருத்தலன்றி; பழையனாகி.

60. கோசம்பி - கௌசாம்பிநகரம்.

61. கண்ணைப்போன்ற நட்பினரை; உ. 10 : 101, 11 : 166, 17 : 161; புறநா. எக : 15. காணிய - காணும்பொருட்டு.

62. சதுவகை - நால்வகை. 64. துறைபோகி - முற்றக்கற்று.

63 - 4. வித்தியாஸ்தானம் பதினெட்டென்பர் வடநூலார்; இது பலவகைப்பட்டு வழங்குகின்றது. [வதற்கு.

66. நீர் நசைக்கு - தண்ணீர் வேட்கையைத் தணித்துக் கொள்

பி - ம். 1 செல்கையிற். 2 வேங்கைச் சுவேதமும்.

யானைப் பேரினத் திடைப்பட் டயலதோர்
..........................................................

(அருஞ்சுகன் வேங்கை மரத்திலேறி நோக்குதல்)

இமையோ ருலகிற் கேணி யாகிய
கான வேங்கைக் கவர்சினை யேறி
அச்ச மெய்தி யெத்திசை மருங்கினும்
நோக்கின னருகே யாக்க மின்றி

(உதயணனது யாழின்நிலை)

இறைவற் பிரிந்த வில்லோள் போலவும்
சுருங்கக ஞெகிழ்ந்து......................
..........................................................
பத்தற் கேற்ற பசையமை போர்வை
செத்துநிறங் கரப்பச் செழுவளங் கவினிய
[1] கொய்தகை கொடியொடு மெய்யுற நீடிய
[2] கரப்பமை நெடுவேய் நரப்புப்புறம் வருடத்
தாஅந் தீமெனத் தண்ணிசை முரலத்
தீந்தொடைத் தேனினஞ் செற்றி யசைதர
வடிவேற் றானை வத்தவர் பெருமகன்
படிவ விரதமொடு பயிற்றிய நல்லியாழ்
கடிமிகு கானத்துப் பிடிமிசை வழுக்கி
வீழ்ந்த வெல்லை முதலா வென்றும்

---

அந்தணாளன் (49), பிழையான் (55), வருவோன் (61), தனக்கு இணையில்லவன் (65), இடைப்பட்டு என முடிக்க (67.)

69. வேங்கை - ஒருவகைமரம். சினை - கிளை.
72. இறைவன் - கணவன். 73. ஞெகிழ்ந்து - நெகிழ்ந்து.
74. பத்தல், போர்வையென்பன யாழின் உறுப்புக்கள்.
75. செத்து - மழுங்கி. 76. கொய்து அகை.
77. கரப்பமை - ஒளித்தற்கு அமைந்த.
78. தாம் தீம், அனுகரணவொலி. என முரல.
79. தீந்தொடை - தேனடை. தேன் - வண்டு.
81. படிவவிரதமொடு - பிரமசரிய விரதத்தோடு.
82. பிடி - பத்திராபதி. 83. எல்லைமுதலா - காலமுதலாக.

பி - ம். 1 கொய்தைக் 2 காப்பமை நெடுவேய் கதுப்புப்புறம்.

தாழ்ந்த தண்வளி யெறிதொறும் போகா
அந்தர மருங்கி னமரர் கூறும்
மந்திரங் கேட்குஞ் செவிய போலக்
கையுங் காலு மாட்டுதல் செய்யா
மெய்யொடு மெய்யுறக் குழீஇ மற்றவை
பிறப்புணர் பவைபோ லிறப்பவு நிற்ப
..............................வேழ மெல்லாம்
சோர்ந்து கடுங்கதஞ் சுருங்குபு நீங்கக்

(அருஞ்சுகன் செயல்)

கிடந்தது கண்டே நடுங்குவ னாகி
யானை நீங்கலுந் தானவட் குறுகி
கின்னர ரிட்டன ராயினு மியக்கர்
மெய்ம்மறந் தொழிந்தன ராயினு மேலைத்
தேவ ருலகத் திழிந்த தாயினும்
யாவ தாயினும் யான்கொள லுணிந்தனென்
வலியா தெனக்கு வம்பி [1] னீயெனப்
பலியார் நறுமலர் பற்பல தூஉய்
வழுக்கா மரபின் வழுத்தினன் கொண்டு
கான நீந்திச் சேனை வேந்தன்
அழுங்கலி லாவணச் செழுங்கோ சம்பி
மன்னவன் கோயி லுன்னிய வொருசிறை
இன்பல சுற்றமொடு நன்கனங் கெழீஇத்
தண்கெழு மாலைத் தன்மனை வரைப்பில்

84. (யானைகள்) போகாவாய்.

86. “யாழி, னிருத்த செவிசாய்த்து” நல். கூரு : 10 - 11.

89. யானை நாதத்திற் றோன்றிய தென்பது இசைநூற் றுணிபு ; “இசையினி லிவட்குத் தோற்றும்” (சீவக. 748) என்பதன் உரையைப்பார்க்க. இறப்ப - மிக.

92. கிடந்தது - கிடந்த யாழை. 93. அவண் - அவ்விடத்தே.

98. வலியாது - ஆலோசனை செய்யாமல் ; வலித்தல் - நினைத்தல். அவன் யாழைநோக்கி நீர் வம்மினென்று உயர்த்திக் கூறினான்.

99. பலி - பூசை. 100. யாழைக் கொண்டு.

101. வேந்தன் - உதயணன். 102. அழுங்கலில் - கேடில்லாத.

103. அரண்மனைக்குச் சமீபமான ஒருபக்கத்தே.

104. கெழீஇ - பொருந்தி. 105. மாலைக்காலத்தில்.

பி - ம். [1] னீயெனப்.

இன்ப விருக்கையுள் யாழிடந் தழீஇ
மெய்வழி வெந்நோய் நீங்கப் பையெனச்
செவ்வழி பியக்கலிற் சேதியர் பெருமகன்

(உதயணன் ஆராய்ந்து துணிதல்)

வழிப்பெருந் தேவியொடு வான்றோய் கோயிற்
பழிப்பில் பள்ளியுட் பயின்றுவிளை யாடி
அரிச்சா லேக மகற்றின னிருந்துழி
ஈண்டையெம் பெருமகன் வேண்டா யாகி
மறந்தனை யெம்வயின் வலிதுநின் மனனென
இறந்ததை கூறி யிரங்குவ தொப்பத்
தொடைப்பெரும் பண்ணொலி நவைத்துச்செவிக் கிசைப்பக்
கொடைப்பெரு வேந்தன் குளிர்ந்தன னாகியென்
படைப்பரும் பேரியாழ்ப் பண்ணொலி யிதுவென
ஓர்த்த செவியன் றேர்ச்சியிற் றெளிந்து

(உதயணன் செயல்)

[1] மெய்காப் பாளனை யவ்வழி யாய்வோன்
மருங்கறைக் கிடந்த வயந்தக குமரன்
விரைந்தனன் புக்கு நிகழ்ந்ததை யென்னெனக்

---

106. இன்பவிருக்கையுள் - யாழ்வாசித்தற்குரிய இருக்கைகளுள் இன்பத்தைச் செய்யும் ஆதனத்தில் இருந்து; இதனை, "நன்பா லமைந்த விருக்கையள்" (சிலப். ௮ : 26) என்பதனுரைகளாலுணர்க. யாழை இடப்பக்கத்தே தழுவி; சிறுபாண். 35 ; பெரும்பாண். 16.

107. மெய் - உடம்பு. வழி : இடவுருபு. பையென - மெல்ல.

108. செவ்வழி - ஒரு பண். சேதியர் பெருமகன் - உதயணன்.

109. வழிப்பெருந்தேவி - பதுமாபதி. வழி - பின்.

110. அரிச்சாலேகம் ; க. 40 : 9, அடிக். ; உ. 7 : 69.

108 - 11. பெருமகன் இருந்துழி.

112 - 5. யாழொலி அவன் காதிற்பட.

117. பேரியாழ் : 124. 116 - 7. எனது யாழின்.

119. மெய்காப்பாளனை - தன் உடம்பைப் பாதுகாத்துக்கொண் டிருக்கும் இளைஞனை ; க. 38 : 102.

120. மருங்கறை - பக்கத்தேயுள்ள அறையில்.

121. என - என்று வயந்தகன் கேட்ப.

பி - ம். 1 மெய்காப்பாளவ்வழி.

கூட்டமை வனப்பிற் கோட பதிக்குரல்
கேட்டனன் யானுங் கேண்மதி நீயும்
விரைந்தனை சென்றுநம் மரும்பெறற் பேரியாழ்
இயக்கு மொருவனை யிவட்டர னீயென

(வயந்தகன் செயல்)

மயக்கமில் கேள்வி வயந்தக னிழிந்து
புதிதின் வந்த புரிநூ லாளன்
எதிர்மனை வரைப்பக மியைந்தனன் புக்கு
வீறமை வீணைப் பேறவன் வினவ
நருமதை கடந்தோர் பெருமலைச் சாரற்
பெற்ற வண்ண மற்றவ னுரைப்பக்
கொற்றவன் றலைத்தாட் கொண்டவன் குறுகி
வேற்றோன் பதிநின் றூற்றலிற் போந்த
அன்றை நள்ளிரு ளரும்பிடி முறுகக்
குன்றகச் சாரற் றென்றிசை வீழ்ந்த
பேரியா ழிதுவெனப் பெருமகற் குரைப்பத்

(உதயணன் செயல்)

தாரார் மார்பன் றாங்கா வுவகையன்
வருகவெ னல்லியாழ் வத்தவ னமுதம்
தருகவென் றனித்துணை தந்தோய் நீயிவண்
வேண்டுவ துரையென் றாண்டவன் வேண்டும்
அருங்கல வெறுக்கையொடு பெரும்பதி நல்கி

---

122. கூட்டமை - பலவகை உறுப்புக்களும் சேர்தலமைந்த. கோடபதி - அந்த யாழின்பெயர்.
125. இவண் தரல் - இங்கே அழைத்து வருக.
126. இழிந்து - மாளிகையினின்றும் இறங்கி.
129. வீறு - வேறொன்றற்கில்லாத அழகு. பேறு - பெற்றதை. அவன் - வயந்தகன். 131. அவன் - அருஞ்சுகன்.
132. அவனை அரசனுடைய முன்னே கொண்டு சென்று.
133. வேற்றோன் பதிநின்று - உச்சயினி நகரத்திலிருந்து.
134. முறுக - விரைகையால்.
136. பெருமகன் - அரசன்; உதயணன். வயந்தகன் உரைப்ப.
138. உதயணன் வத்தவனென்று தன்னைப் பிறன்போற் கூறி[னன்.
139. தனித்துணை யென்றது யாழை.
141. அருங்கல வெறுக்கை - பெறுதற்கரிய ஆபரணங்களோடு கூடிய நிதியம்; கலமாகிய வெறுக்கையுமாம்.

அந்தக ரிருக்கப் பெருஅய் நீயெனத்
தன்னக ரகத்தே தக்கவை நல்கி
உலவா விருப்பொடு புலர்தலை காறும்
உள்ளியு முருகியும் புல்லியும் புணர்ந்தும்
பள்ளிகொண் டனனாற் பாவையை நினைந்தென்.

௩—யாழ் பெற்றது முற்றிற்று.

---

142. அந்தகர் - அந்த வீட்டில்.
144. புலர்தலைகாறும் - விடியுமளவும்.
146. பாவை - வாசவதத்தை.

---

## ௪—உருமண்ணுவா வந்தது.

(உதயணன் நிலை)

பள்ளி யெய்திய நள்ளிரு ணீங்கலும்
விளியா விருப்பினொ டொளிபெறப் புதுக்கி
மாசில் கற்பின் மருந்தேர் கிளவி
வாசவ தத்தையை வாய்மிக் கரற்றி
எனக்கணங் காகி நின்றநீ பயிற்றிய
வனப்பமை வீணை வந்தது வாராய்
நீயே யென்வயி னினைந்திலை போலென
வகைத்தார் மார்ப னகத்தே யழல்சுடத்

---

௪. உருமண்ணுவா வந்தது.

[முன்பு நிகழ்ந்த போரிற் சங்கமன்னராற் சிறைகொள்ளப் பட்ட உருமண்ணுவாவென்பவன் தருசகன் முயற்சியால் அச்சிறையி னின்று நீங்கி, சாதகனென்னுந் தூதுவனால் வாசவதத்தை முதலியவர் களைக் கண்ணுற்று அவர்களுடன் கோசம்பிநகரின் புறத்தேயுள்ள சோலையொன்றில் வந்து தங்கியதும் அவன் உதயணனை அடைந்ததும் இதனாலறியலாகும்.]

1. நள்ளிருள் - நடு இருள். 2. புதுக்கி - (யாழைப்) புதுப்பித்து.
4. அரற்றல் - யாதுசெய்வேனென்று வருந்தல்.
5. அணங்காகி நின்ற நீ - தெய்வமாகி நின்ற நீ.
7. என்னை நினைந்திலை.
8. வகைத்தார் - வகை மாலை; "வகையமை தண்டாரான்" கலி. கஎ : 16; சீவக. 483.

தம்பியர்ப் பெற்றுந் தனியாழ் வந்தும்
இன்பம் பெருக வியைந்துண் டாடான்
செல்லுங் காலை மல்லன் மகதத்துச்
செருமுன் செய்துழிச் சிறைகொளப் பட்ட
உருமண் ணுவாவிற் குற்றது கூறுவென்

(தருசகன் செயல்)

சங்க மன்னர் தந்த முரிமை
புன்கண் டீரப் புறந்தந் தோம்பி
வாட்டொழிற் றருசகன் மீட்டனன் போக்கி
மன்னர் சிறையும் பின்னர்ப் போக்குறும்
உருமண் ணுவாவை விடுக விரைந்தெனக்
கரும மாக்களைப் பெருமகன் விடுத்தலிற்

(சங்கமன்னர் உருமண்ணுவாவைச் சிறை விடுத்தல்)

பகைகொண் மன்னர் மிகவுவந் தொன்றி
இழிந்த மாக்களொ டின்ப மார்தலின்
உயர்ந்த மாக்களொ டுறுபகை யினிதென
மகிழ்ந்த நெஞ்சமொடு மன்னவற் புகழ்ந்து
செயப்படு கருமஞ் செறியச் செய்ய

9. தம்பியர் - பிங்கலகடகர்.

10. உண்டாடல் - கள்ளுண்டு மகிழ்ந்து மகளிரோடு விளையாடல்.

12. முன் செருநிகழ்ந்ததைப் படைதலைக்கொண்டதென்னும் உறுப்பால் உணர்க. 14. சங்கமன்னர் - பகைத்து வந்த அரசர்.

15. புறந்தந்தோம்பி - பாதுகாத்து; 29.

16. தருசகன் - மகதநாட்டரசன்.

17. மன்னர் - எலிச்செவியரசன் தம்பி முதலியோர்.

19. கருமமாக்களை - காரியம் பார்ப்பவர்களை.

20. மன்னர்: எழுவாய். உவந்து ஒன்றி - மகிழ்ந்து ஒன்றுகூடி.

21 - 2. இவ்வடிகளுடன், "பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா, ரேதின்மை கோடி யுறும்", "நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற், பத்தடுத்த கோடி யுறும்" (குறள், 816, 817), "இசைந்த சிறுமை யியல்பிலா தார்கட், பசைந்த துணையும் பரிவாம் - அசைந்த, நகையேயும் வேண்டாத நல்லறிவி னார்கட், பகையேயும் பாடு பெறும்" (நாலடி. 187) என்பவை ஒப்பிடற்பாலன.

24. கருமம் - காரியங்களை.

மயக்கமி லமைச்சனை மன்னர் விட்டபின்

(உருமண்ணுவாவின் செயல்)

திருவலக் கருமந் திண்ணிதிற் செய்துவந்
துருமண் ணுவாவுந் தருசகற் கண்டு
சிறைநனி யிருந்த சித்திராங் கதனைப்
பொறைமலி வெந்நோய் புறந்தந் தோம்பிப்
போக்கிய பின்றை வீக்கங் குன்றாத்
தலைப்பெருந் தானைத் தம்மிறைக் கியன்ற
நிலைப்பா டெல்லா நெஞ்சுணக் கேட்டு
வரம்பி லுவகையொ டிருந்த பொழுதின்

(சாதகன் செயல்)

இயைந்த நண்பி னியூகியோ டிருந்த
பயன்றெரி சூழ்ச்சிப் பதின்ம ரிளையருட்
மடிதில் கேள்விச் சாதக னென்போன்
உருமண் ணுவாவும் யூகியுந் [1] தறியாக்
கரும மேற்கோ டெரிநூ லாகப்
பாவிடு குழலி னுயிடைத் திரிதர

---

25. அமைச்சனை - உருமண்ணுவாவை.
28. சித்திராங்கதன் - எலிச்செவியரசன் தம்பி; ௩. 20 : 88 - 9.
30 வீக்கம் - பெருமை. 32. நிலைப்பாடு - நிலைமை.
35. யூகியுடன் இளைஞர் பதின்மரிருந்தனரென்பது இதனால் விளங்குகின்றது.
36. சாதகன் - ஒரு குயவன்; ௪. 9 : 47 - 8.
37. தறி - நெய்வோர் இருபாலும் அமைத்துக்கொண்ட தறி.
38. கருமமேற்கோள் - காரியக்கொள்கை.
39. பாவிடுகுழலின் - ஆடை நெய்வோர் நூற்பாவிலிட்ட குழல் அங்குமிங்குந் திரிதலைப் போல; "பாவிடை யாடு குழல்போற் கரந்து" (திருவா. அடைக்கலப். 8), "பாவிற், குழல்போல நின்றுழலுங் கொள்கைத்தே நெஞ்சு" (நள. சுயம். 77), "மைதவழ் பொழில்களும் வாவியு மருவி, நெய்குழ லுறுமிழை யெனநிலை திரிவார்" (கம்ப. திருவவதார. 129), "பூவி னேடுசெந் தேன்மழை யொழிவறப் பொழியுங், காவி னேடுவள் ளிதழவிழ்த் தொழுகுதேங் கமல, வாவி யோடுநல் விசைபயி லஞ்சிறை வண்டு, பாவி னேடுவெண் குழலெனத் திரிதலைப் பாராய்" (பிரபு. வசவண்ணர். 12), "பாவிற் சுழலுங் குழல்போல்" (பழமலைக். 250) என இவ்வுவமை வழங்கப்படுதல் காண்க.
36 - 9. சாதகனென்போன் திரிதர.

பி - ம். [1] திரியாக்.

(யூகி சாதகனை உருமண்ணுவாவிடம் விடுத்தல்)

முனிவில னுதலின் முன்னு றெண்ணிய
செய்வினை முடித னோக்கித் தேவியைக்
கைவயிற் கொடுத்தல் கரும மென்றுதன்
அருமறை யோலை யரும்பொறி யொற்றி
உருமண் ணுவாவினைக் கண்டது காட்டெனா

(சாதகன் செயல்)

விரைவனன் போந்து தருசகன் காக்கும்
இஞ்சி யோங்கிய விராச கிரியத்து
வெஞ்சின வேந்தன் கோயின் முற்றத்துக்
குஞ்சரத் தானத்து நின்றோற் குறுகிக்
[1] குறியிற் பயிர்ந்து மறையிற் போகி
ஓலை காட்ட வுள்ளம் புகன்று

(உருமண்ணுவா சாதகனை வினவல்)

மேலை பட்டவுந் தேவி நிலைமையும்
வாசனை யகத்தே மாசற வுணர்ந்தும்
எம்வயிற் றீர்ந்தபிற் செய்வகை யெல்லாம்
வாயி னுரைக்கெனச் சாதகன் கூறும்

---

41. தேவியை - வாசவதத்தையை.

42. கருமமென்று - காரியமென்று.

43. இரகசியச் செய்தி எழுதிய ஓலையை முத்திரையிட்டு; பொறி - முத்திரை.

44. என - என்று யூகி சாதகனுக்குக் கூற.

45. விரைந்து போந்து. 47. வேந்தன் - தருசகன்.

48. யானைச் செண்டுவெளியில் நின்ற உருமண்ணுவாவைச் சாதகன் அடைந்து.

49. பயிர்ந்து - அழைத்து. 50. புகன்று - விரும்பி.

51. மேலை - முன்பு. தேவி - வாசவதத்தையின்.

52. வாசனையகத்து - வாசித்தலில்.

53. எம்மை நீங்கின பின்பு நீவிர்செய்தவற்றை யெல்லாம்.

54. என - என்று உருமண்ணுவா கேட்ப. கூறும் - கூறுவான்.

பி - ம். [1] குறிப்பிற்.

(சாதகன் கூற்று)

அற்பழ லூர்தா வடல்வே லுதயணன்
ஒற்கம் படாமை யுணர்ந்தன னாகி
அரும்பெறற் றோழி யாற்றும் வகையிற்
பெருந்தண் கானம் பிறபடப் போகிப்
பற்றின் மாதவர் பள்ளியு ளிருப்பின்
[1] அற்றந் தருமென வதுநனி வலீஇத்
தண்புனற் படப்பைச் சண்பைப் பெரும்பதி
மித்திர காம னற்பெருங் கிழத்தியொ
[2] டாப்புற விரீஇய பிற்றை யாருணி
காப்புறு நகர்வயிற் கரந்துசென் றொழுகும்
கழிபெரு நண்பிற் காள மயிடனென்
றழிவி லந்தண னவ்விடத் துண்மையிற்
புறப்படு மிதுவெனத் திறப்படத் தெரிந்து
செட்டி மகனொ டொட்டினம் போகிப்
பண்டம் பகரும் பட்டினம் பயின்ற
புண்டரம் புகீஇப் புதைத்த வுருவொடு
பொருந்தஞ் சான்ற புரைதபு நண்பின்
வருத்த மானன் மனைவயின் வைத்தபின்
வருத்த மானற் கொத்த [3] தம்முன்

---

55. அன்பாகிய தீப் பரக்க; "சொன்னீரவளற்பழலுட்சொரிந்தாற்ற" (சீவக. 1072.) 56. ஒற்கம்படாமை-தளர்வுபடாமையை.

57. தோழி - வாசவதத்தை.

59. பற்று இல் - இருவகைப்பற்றும் இல்லாத; பள்ளியென்றது 'ஆசில் பள்ளி' என்றதை; உ. 20: 66.

60. அற்றம் - சோர்வு. வலீஇ - நினைந்து.

61. படப்பை - தோட்டம்.

62. மித்திரகாமனுடைய மனைவியுடன்.

63. ஆப்புற - யாப்புற; "அங்காத் திருந்தானை" (சீவக. 1882.) இரீஇய - இருத்திய. 62 - 3. = உ. 20 : 127.

63 - 4. ஆருணி காப்புறு நகர் - கோசம்பி.

66. அவ்விடத்து - சண்பை நகரத்தில்.

67. இது - இந்த இரகசியச் செய்தி.

68. செட்டிமகன் - மித்திரகாமன். ஒட்டினம் - கலந்தேமாகி.

70. புண்டரம் - ஒரு நகரம்; 91, 97. புதைத்த - மறைத்த.

பி - ம். 1 அற்கம். 2 டொப்புறவிரீஇயபின்றை. 3 தம்முனோன்.

இரவி தத்த னென்னு முரவோன்
பெரும்படை தொகுத்துவந் தரம்புசெய் தலைத்தலின்
இருந்த நகரமுங் கலங்க மற்றவன்
அருந்தொழின் மலையர ணடைந்தன மாகி
இருந்த [1] பொழுதி லிப்பா லரசற்கு
நிகழ்ந்ததை யெல்லா நெறிமையிற் கேட்டுப்
பொன்னிழை மாதரைப் புணர்த்தல் வேண்டும்
இன்னே வருகென நின்னுழைப் பெயர்த்தந்
தாங்கவ ரிருந்தன ராதலி னீங்கினிச்
செய்வதை யெல்லா மெய்பெற நாடெனத்
தூதுசெல் லொழுக்கிற் சாதக னுரைப்ப

(உருமண்ணுவாவின் செயல்)

ஆற்றல் சான்ற தருசகற் கண்டவன்
மாற்ற மெல்லா மாற்றுளிக் கூறி
அவனுழைப் பாட்டகத் ததிபதி யாகிய
தவறில் செய்தொழிற் சத்தி யூதியை
வேண்டிக் கொண்டு மீண்டனன் போந்துழி
அப்பா னின்று முற்பால் விருந்தாய்ப்
புண்டர நகரம் புகுந்தன னிருந்த
மண்டமர்க் கடந்தோன் விரைந்தனன் வருகென
எதிர்வரு தூதனொ டதிரக் கூடிச்
சத்தி யூதி முதலாச் சண்பையுள்

---

75. அரம்பு - குறும்பு; ௪. 2 : 71, அடிக்.

73 - 5. வருத்தமானனுடைய தமையன் அவனொடு பகைமை கொண்டுவந்து அலைத்தலால்.

76. நகரம் - புண்டரம்.

76 - 7. அவன் மலையரண் - வருத்தமானனுடைய மலையரணை.

78. அரசற்கு - உதயணனுக்கு.

81. பெயர்த்தந்து - என்னை அனுப்பிவிட்டு.

82. அவர் - யூகி முதலியோர். 85. அவன் - சாதகனுடைய.

86. ஆற்றுளி - முறைப்படி. 87. பாட்டகம் - ஒருநகரம்.

89. வேண்டிப் பெற்றுக்கொண்டு.

92. அமர்க்கடந்தோன் - யூகி. 93. தூதன் - சாதகன்.

பி - ம். 1 பொழுதியிப்பால்.

மித்திர காமனைக் கண்டுமெலி வோம்பி
வருத்தந் தீர்ந்தபின் வருத்த மானன்
பூமலி புறவிற் புண்டராங் குறுகித்
தேமொழித் தேவியொடு தோழனைக் கண்டு
தலைப்பா டெய்தித் தாங்கா வுவகையொடு
நலத்தகு நாகத் துறைவோர் போல
இன்ப மகிழ்ச்சியொடு நன்கனம் போந்து
புகழ்க்கோ சம்பிப் புறத்துவந் தயர்வுறும்
மகிழ்ச்சி யெய்தி மனம்பிணி வுறாஉம்
மதுகாம் பீர வனமெனுங் காவினுட்
புகுதந் தவ்வழிப் புதுவதின் வந்த
விருந்தின் மன்ன ரிருந்துபயன் கொள்ள
இயற்றப் பட்ட செயற்கருங் காவினுள்
மறைத்தன னவர்களைத் திறப்பட விரீஇயபின்
உவந்த வுள்ளமொ டுருமண் ணுவாவும்
புகுந்தனன் மாதோ பொலிவுடை நகரென்.

ச—உருமண்ணுவா வந்தது முற்றிற்று.

---

95. மெலிவோம்பி - மெலிவை யொழித்து.

96 - 7. வருத்தமானனுடைய புண்டாநகரத்தையடைந்து.

98. வாசவதத்தையையும் யூகியையும் கண்டு.

99. தலைப்பாடெய்தி - கலந்து.

100. நாகம் - பவணலோகம்; உறைவோர் - நாகர்; இவ்வுலகம் பலவகைப் போகங்களிற் சிறப்புற்றதென்பது சைனர் கொள்கை; சீவக. 146 - ஆம் கவியின் விசேடக்குறிப்பைப் பார்க்க.

100 - 101. "மாசுண மகிழ்ச்சி மன்றல்", "எரிமாமணி மார்பனு மேர்திளைழயும், அருமாமணி நாகரி ஞயினரே" சீவக. 189, 217.

103. மனம் பிணிவுறாஉம் - காண்போர் மனத்தைத் தன்னிடத்தே பிணிக்கின்ற.

105 - 7. வந்த புதிய அரசர் தங்குதற்கு இயற்றப்பட்ட பூஞ்சோலை.

108. அவர்களை - வாசவதத்தை, சாங்கியத்தாய், யூகியென்பவர்களை. இரீஇயபின் - இருக்கச் செய்தபின். 110. நகர் - கோசம்பி.

## ரு—கனவிறுத்தது.

(உதயணன் நிலை)

பொலிவுடை நகர்வயிற் புகலருங் கோயிலுள்
வலிகெழு நோன்றாள் வத்தவர் பெருமகன்
புதுமணக் காரிகை பூங்குழை மாதர்
பதுமா தேவியொடு பசைந்துகண் கூடி
அசையுஞ் சீரு மளந்துநொடி போக்கி
இசைகொள் பாடலி னிசைந்துட னொழுக
விசைகொள் வீணை விருந்துபடப் பண்ணி
வசைதீ ருதயணன் மகிழ்ந்துட னிருந்துழி

(பதுமாபதியின் கூற்று)

நெடியோ னன்ன நெடுந்தகை மற்றுநின்
கடியார் மார்பங் கலந்துண் டாடிய
வடிவேற் றடங்கண் வாசவ தத்தை

---

ரு—கனவிறுத்தது.

[வாசவதத்தைக்குக் கற்பித்த யாழை எனக்கும் கற்பிக்க வேண்டுமென்று பதுமாபதி வேண்ட வாசவதத்தையை நினைந்து வருந்தி உதயணன் துயிலுதலும், அவன் கனாக்காண்டலும், அக்கனாவின் பயனை ஒரு முனிவரால் அவன் அறிந்து தெளிதலும், பின் உருமண்ணுவாவை அவன் காணுதலும் இதனுல் அறியலாகும்.]

2. வலிகெழு நோன்றாள் - மிக்க வன்மையையுடைய முயற்சி.

4. பசைந்து - பற்றுற்று; உ. 17 : 43; ரு. 2: 169; "இசைந்த சிறுமை யியல்பிலா தார்கட், பசைந்த துணையும் பரிவாம்" நாலடி. 187.

5. சீரென்றது: ஒரு சீர் முதலாக எழுசீரிறுதியாகவுள்ள தூக்கினை. அசை தூக்கு இவற்றினிலக்கணங்களைச் சிலப்பதிகார (ரு :16, கச: 150) உரையிற் காண்க. நொடி போக்குதல் - தாளத்திற்கு இசையக் கையை நொடித்தல்; "நொடிதரு பாணிய பதலையும்" மலைபடு. 11.

6. இசையைக்கொண்ட பாட்டைப் போலப் பதுமையுடன் அவன் ஒன்றி.

7. விருந்துபட - புதுமைப்பட. 9. நெடுந்தகை: விளி.

10. கடி - விளக்கம்; மணமுமாம். உண்டாடிய - விளையாடிய,

வழிபா டாற்றி வல்ல ளாகிய
அழிகவுள் வேழ மடக்கு நல்லியாழ்
யானும் வழிபட் டம்முறை பிழையேன்
காண லுறுவேன் காட்டி யருளென
முள்ளெயி றிலங்கச் செவ்வாய் திறந்து
சில்லென் கிளவி மெல்லென மிழற்றி
நகைநயக் குறிப்பொடு தகைவிரல் கூப்ப

**(வாசவதத்தையை நினைந்து உதயணன் கலங்கல்)**

முற்றிழை பயிற்றிய முற்பெரு நல்லியாழ்
கற்பே னென்றசொற் கட்டழ லுறீஇ
வேலெறிந் தன்ன வெம்மைத் தாகிக்
காவல குமரற்குக் கதுமென விசைப்ப
மாசி றாமரை மலர்கண் டன்ன
ஆசில் சிறப்பி னமரடு தறுகண்
இளநல முண்ட விணையி றோகை
வளமயிற் சாயல் வாசவ தத்தையை
நினைப்பி னெகிழ்ந்து நீர்கொள விறைஞ்சிச்

---

12. நினக்கு வழிபாடு செய்து. 13. யாழ் - கோடவதியை.

14. யானும்: உம்மை, இறந்தது தழீஇயது.

15. காணலுறுவேன் - அறிவேன்.

16 - 7. "அமிழ்துபொதி செந்நா வஞ்ச வந்த, வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப், பெறுகதில் லம்ம" (குறுந். கச), "எயிறுநாப் போழ்த லஞ்சி யஞ்சி, உழன்மாலைத் தீங்கிளவி யொன்றிரண்டு தான்மிழற்று மொருநாட்காறும்" (சீவக. 1353) என்பவை இவ்வடிகளுடன் ஒப்புநோக்கற்பாலன.

18. பதுமை கை குவிக்க.

19. முற்றிழை - வாசவதத்தை.

20. சொல்: எழுவாய். உறீஇ - காய்ச்சி.

22. கதுமென - விரைய.

20 - 22. சொல் வெம்மைத்தாகி இசைப்ப.

23 - 4. அன்ன கண்: உதயணன்கண்.

27. நினைப்பின் - நினைத்தலினால். இறைஞ்சி - குனிந்து.

சினப்போ ரண்ணல் சேயிழை மாதர்க்கு
மனத்தது வெளிப்பட மறுமொழி கொடாஅன்

(உதயணனுடைய குறிப்பறிந்து பதுமாபதி தன்னிடஞ் செல்லுதல்)

கலக்க மறிந்த கனங்குழை மாதர்
புலத்தல் யாவதும் பொருத்த மின்றெனை
எனக்கு மொக்கு மெம்பெரு மான்றன்
மனத்தகத் துள்ளோ ளின்னும் விள்ளாள்
விழுத்தவ முடையள் விளங்கிழை பெரிதெனை
ஒழுக்க மதுவா முயர்ந்தோர் மாட்டே
என்றுதன் மனத்தே நின்றுசில நினையா
அறியாள் போலப் பிறிதுநயர் தெழுந்துதன்
ஆயஞ் சூழ வரசனை வணங்கி
மாவீ ழோதிதன் கோயில் புக்கபின்

(வயந்தகன் உதயணனிடம் கூறுதல்)

கவன்றன னிருந்த காவன் மன்னற்கு
வயந்தக குமரன் வந்து கூறும்
வாலிழைப் பணைத்தோள் வாசவ தத்தைக்கும்
பாசிழை யல்குற் பதுமா பதிக்கும்
சீர்நிறை கோல்போற் றுணடு வாகி
நின்றி பேரன் பின்றிவட் டாழ்த்து

28. அண்ணல் - உதயணன். மாதர்க்கு - பதுமாபதிக்கு. கொடாஅன் : முற்று. 30. மாதர் - பதுமாபதி.

31. யாவதும் - சிறிதும். 33. விள்ளாள் - நீங்காள்.

34. விளங்கிழை - வாசவதத்தை; சுட்டுப்பொருளில் வந்தது.

33 - 4. ஒ. உ. 1 : 36 - 8, ந. 21 : 170 - 77 ; சீவக. 465 ; "மலையி னலைகடலின் வாளரவின் வெய்ய, தலையிற் பயின்ற தவத்தாற் - றலைமை சேர், அம்மாதர் புல்லு மபயன் புயம்புணர்தற், கெம்மா தவம்புரிந்தேம் யாம்" (தண்டி. மேற்.) 36. நினையா - நினைந்து.

என (31) என (34) என்று நினையா (36.)

37. பிறிது நயந்தாள் போல எழுந்து. 39. மா - வண்டு.

41. கூறும் - கூறுவான்.

44. சீர் - கனம். நிறைகோல் - துலாா.

45. நின்றி - நின்றாய். இவள் தாழ்த்து - இவளைத் தாழ்த்தி; இவள்பால் அன்பைக் குறைத்து.

நீங்கிற் றம்ம நீத்தோ ணினைந்தென
ஆங்கவ னுரைப்ப வதுவுங் கேளான்

(உதயணன் வாசவதத்தையை நினைந்து வருந்தித் துயிலல்)

முதிர்மலர்த் தாமமொடு முத்துப்புரி நாற்றிக்
கதிர்மணி விளக்கங் கான்றுதிசை யழல
விதியிற் புனைந்த வித்தகக் கைவினைப்
பதினைந் தமைந்த படையமை சேக்கையுட்
புதுநலத் தேவியொடு புணர்தல் செல்லான்
நறுந்த ணிருங்கவு ணளகிரி வணக்கியதன்
இறும்புபுரை யெருத்த மேறிய ஞான்று
கண்டது முதலாக் கான நீந்திக்
கொண்டனன் போந்தது நடுவாப் பொங்கழல்
விளிந்தன ளென்ப திறுதி யாக
அழிந்த நெஞ்சமொ டலமர லெய்தி
மேனா ணிகழ்ந்ததை யானா தரற்றி
இகலிடை யிமையா வெரிமலர்த் தடங்கண்
புகழ்வரை மார்பன் பொருந்திய பொழுதிற்

---

46. நீத்தோள் - பிரிந்த வாசவதத்தையை.

47. அவன் - வயந்தகன்.

48. முதிர் தாமம் - சூழ்ந்தமாலை; முதிர்தல் - வளைதல். புரி - வடம். 49. மணிவிளக்கம் - இரத்தினத்தீபம். கதிரைக் கான்று.

51. "ஐந்துமூன் றடுத்த செல்வத் தமளி" (சீவக. 838); "மூவைந் தடுக்கிய வமளி" நைடதம், மணம்புரி. 26.

52. தேவி - பதுமை.

53. நளகிரி - உச்சயினியை அழித்த யானை.

54. இறும்பு - மலை.

55. வாசவதத்தையைக் கண்டது முதலாக.

56. அழலில். 58. அலமரல் - மனச்சுழற்சி.

59. மேனாள் - முன்னாள். ஆனாது - அமையாது.

60. எரிமலர் - தாமரைமலர். இகல் - போர். போரில் இமையாத கண்; "விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பின், ஓட்டன்றோ வன்கண வர்க்கு" (குறள், 775.) 61. மார்பன்-உதயணன்.

60 - 61. கண் பொருந்தல் - துயிலல்.

கொள்ளென் குரலொடு கோட்பறை கொளீஇ
உள்ளெயிற் புரிசை யுள்வழி யுலாவும்
யாமங் காவல ரசைய வேமம்
வாய்ந்த வைகறை வையக வரைப்பின்

(உதயணன் கனவு காண்டல்)

நாற்கட லும்பர் நாக வேதிகைப்
பாற்கடற் பரப்பிற் பனித்திரை நடுவண்
வாயுங் கண்ணுங் குளம்பும் பவளத்
தாயொளி பழித்த வழகிற் றாகி
விரிகதிர்த் திங்களொடு வெண்பளிங் குமிழும்
உருவொளி யுடைத்தா யுட்குவரத் தோன்றி
வயிரத் தன்ன வைந்நுனை மருப்பிற்
செயிர்படு நோக்கமொடு சிறப்பிற் கமைந்ததோர்
வெண்டா ரணிந்த வெள்ளே றிடந்த
வண்டார் தாதின் வெண்டா மரைப்பூ
அங்கண் வரைப்பி னமரிறை யருள்வகைப்
பொங்குநிதிக் கிழவன் போற்றுவ மணப்ப
மங்கலங் கதிர்த்த வங்கலு ழாகத்துத்

---

63. உள்ளெயிற் புரிசையுள்வழி - அகமதிலின் உள்ளிடத்தே.

64. யாமங்காவலர் இரவுமுழுதும் விழித்தமையின் வைகறையில் துயில் மயக்கத்தால் வேகமின்றி நடத்தலின், 'அசைய' என்றார்; ஏமம்-இன்பம். யாமங்காவலர்: "யாமங் கொள்பவர்" அகநா. ௧௧௪: 10; புறநா. ௩௭: 9; சிலப். ௫: 49; மணி. ௭: 65.

66 - 7. ஏழு கடல்களுள் ஐந்தாவது பாற்கடலென்பது சைன நூற் கொள்கை; "மேற்படு கற்பக" (சீவக. 3035) என்னும் செய்யுளாலும் அதன் அடிக்குறிப்பாலும் உணர்க.

68 - 9. பவளத்து ஆயொளி - பவளத்தினது அழகிய ஒளியை.

70 - 71. திங்களையும் பளிங்கையும் ஒக்கின்ற ஒளியையுடையதாய்.

71. உட்கு - அச்சம். 72. மருப்பு - கொம்பு.

73. செயிர் - கோபம்.

74. தார் - இரேகை; மாலையுமாம். ஏறு - இடபம்.

76. அமரிறை - தேவேந்திரன்.

77. நிதிக்கிழவன் - குபேரன்.

78. அம் கலுழ் ஆகம் - அழகு ஒழுகுகின்ற உடம்பு.

தெய்வ மகடூஉ மெய்வயிற் பணித்துப்
பையு ளூரக் கைவயிற் கொடுத்தலும்

(உதயணன் எழுதல்)

பயில்பூம் பள்ளித் துயிலெடை மாக்கள்
இசைகொள் ளோசையி னின்றுயி லேற்று
விசைகொண் மான்றேர் வியல்கெழு வேந்தன்
கனவின் விழுப்ப மனவயி னடக்கி

(முனிவரைக் கண்டு உதயணன் வினாதல்)

அளப்பரும் படிவத் தறிவர் தானத்துச்
சிறப்பொடு சென்று [1] சேதியம் வணங்கிக்
கடவது திரியாக் கடவுளர்க் கண்டு
நின்றிடை யிருள்யாம நீங்கிய வைகறை
இன்றியான் கண்ட தின்னது மற்றதை
என்கொ றானென நன்கவர் கேட்ப
உருத்தகு வேந்த னுரைத்ததன் பின்றைத்

(ஒரு முனிவன் கனாப் பயன் உரைத்தல்)

திருத்தகு முனிவன் றிண்ணிதி னாடி
ஒலிகடற் றானை யுஞ்சையர் பெருமகன்
மலிபெருங் காதன் மடமொழிப் பாவை
இலங்குகதி ரிலைப்பூ ணேந்துமுலை யாகத்து

---

79. மெய்வயிற் பணித்து - உண்மையைக் கூறி.

66 - 80. இவ்வடிகளிலுள்ள வரலாற்றை இந்நூலில் ரு. 3 : 141 - ஆம் அடி முதலியவற்றால் உணர்க. 80. பையுள் - துன்பம்.

81. பயிலுதல் - மிகுதல். துயிலெடைமாக்கள் - தூக்கத்தினின் றும் எழுப்புதலைச் செய்கின்ற மனிதர்; சூதர்; "சூத ரேத்திய துயி லெடைநிலை" தொல். புறத்திணை. சூ. 36.

82. துயிலேற்று - துயில்நீங்கி; "செங்கணேற் றெழுந்தனன்" (உ. 18 : 118 - 9.) 84. விழுப்பம் - சிறப்பு.

85. படிவம் - தவவொழுக்கம். அறிவர் - முனிவர்.

86. சேதியம் - (ஈண்டுச்) சினாலயம்.

87. கடவது - செய்யக் கடவதாகிய அறம். கடவுளர் - முனிவர்.

89. மற்றதை : ஐ, சாரியை.

பி - ம். 1 சேதியன்.

நலங்கிளர் நறுநுத ஞறிருங் கூந்தல்
மாசில் கற்பின் வாசவ தத்தை
முழங்கழன் மூழ்கி முடிந்தன ளென்பது
மெய்யெனக் கொண்டனை யாயின் மற்றது
பொய்யெனக் கருது புரவ லாள
இந்நா ளகத்தே சின்மொழிச் செவ்வாய்
நன்னுதன் மாதரை நண்ணப் பெறுகுவை
பெற்ற பின்றைப் பெய்வளைத் தோளியும்
கொற்றக் குடிமையுட் குணத்தொடும் விளங்கிய
விழுப்பெருஞ் சிறப்பின் விஞ்சைய ருலகின்
வழுக்கில் சக்கரம் வலவயி னுய்க்கும்
திருமகற் பெறுதலுந் திண்ணிது திரியா
காரணங் கேண்மதி தாரணி மார்ப
[1] ஆயிர நிரைத்த வாலிதழ்த் தாமரைப்
பூவெனப் படுவது பொருந்திய புணர்ச்சியின்
தேவி யாகுமதன் றுதக டுரிஞ்சி
மூன்றூண் முடக்கிப் பின்று ணிமிர்த்தாக்
கொட்டை மீமிசைக் குளிர்மதி விசும்பிடை
எட்டு மெய்யோ டிசைபெறக் கிடந்த
விள்ளா விழுப்புகழ் வெள்ளே றென்பதை
முகனமர் காதனின் மகனெனப் படுமது
பரந்த வெண்டிரைப் பாற்கட லாகி
விரும்பப் படுமது வெள்ளியம் பெருமலை
வெண்மை மூன்றுடன் கண்டதன் பயத்தால்

---

96. நாறிருங் கூந்தல் : புறநா. ௧௧௩ : 9.
101. இந்நாளகத்தே - இன்றைக்குள். சின்மொழிச்செவ்வாய் : [16-7.
102. மாதரை - வாசவதத்தையை.
106. சக்கரம் - ஆஞ்ஞாசக்கரம்.
107. திண்ணிது - நிச்சயமானது. திரியா - இவ்விரண்டும் வேறுபடா. 109 - 10. உ. 13 : 54 - 6.
113. கொட்டை மீமிசை - தாமரைப்பூங் கொட்டையின்மேலே.
115. என்பதை - என்பது. 116. படுமது - படுவது.
119. மூன்று - பாற்கடல், வெண்டாமரை, வெள்ளேறு. பயம் - பிரயோசனம்.

பி - ம். 1 ஆயிதழ்.

திண்மை யாழி திருத்தக வுருட்டலும்
வாய்மை யாக வலிக்கற் பாற்றென
நோன்மை மாதவ னுண்ணிதி னுரைப்ப

(உதயணன் செயல்)

அன்று மின்று மறிவோ ருரைப்பதை
என்றுந் திரியா தொன்றே யாதலின்
உண்டுகொ லெதிர்தலென் றுள்ளே நினையாப்
பெருந்தண் கோயிலு ளிருந்த பொழுதில்
உருகெழு மந்திரி [1] வரவதை யுணர்த்தலிற்
புகுதக வென்றுதன் புலம்பகன் றொழிய
இகல்வேல் வேந்த னிருத்த லாற்றான்
ஆனா வுவகையொடு தானெதிர் செல்லத்
தேனார் தாமரைச் சேவடி வீழ்தலிற்
றிருமுயங்கு தடக்கையிற் றிண்ணிதிற் பற்றி
உரிமைப் பள்ளி புக்கனன் மாதோ
பெருமதி யமைச்சனைப் பிரிந்துபெற் றானென்.

ரு—கனவிறுத்தது முற்றிற்று.

---

121. வலிக்கற்பாற்று - துணியும் பகுதியை யுடையது.

122. நோன்மை - தவம்.

123 - 4. அறிவோருரைப்பது என்றுந் திரியாதென்பது: "அம் மூன்று முற்ற வறிதலாற் - றம்மி, னுறழா மயங்கி யுறழினு மென்றும், பிறழா பெரியோர்வாய்ச் சொல்" பு. வெ. 167, அடிக்.

125. காணுதலுண்டென்று மனத்தில் நினைந்து. கொல்: அசை [நிலை.

127. மந்திரிவரவதை - உருமண்ணுவாவின் வரவை.

128. புகுதக - புகுக; சீவக. 2121 - 2; 'புகுதக, ஒரு சொல்விழுக் காடு' (ஷை ந. உரை.) 132. திண்ணிதின் - இறுக.

133. உரிமைப்பள்ளி - அந்தப்புரம்.

134. அமைச்சனை - உருமண்ணுவாவை.

பி - ம். 1 யரவது.

## ௯—பதுமாபதியை வஞ்சித்தது.

(உதயணன் உருமண்ணுவாவை வினவல்)

பிரிந்துபின் வந்த பெருந்திற லமைச்சனொ
டருந்திறல் வேந்த னமைவரக் கூடி
இருந்த பின்றை நிகழ்ந்தது கூறெனச்

(உருமண்ணுவா நிகழ்ந்தவற்றை உதயணனுக்குக் கூறல்)

செருச்செய் மன்னன் சிறையிடைச் [1] செய்தலும்
தருசகன் றன்வயின் விடுத்த தன்மையும்
பொருவகை புரிந்தவர் புணர்ந்த நீதியும்
தெரிய வெல்லாம் விரியக் கூறி

(உருமண்ணுவா வயந்தகனிடம் கூறல்)

அந்நிலை கழிந்த பின்னிலைப் பொழுதின்
இன்புறு செவ்வியு ளின்னது கூறென
வன்புறை யாகிய வயந்தகற் குணர்த்த

---

௯—பதுமாபதியை வஞ்சித்தது.

[வாசவதத்தையை நினைந்து வருந்திய உதயணனுக்கு 'அவளை மீட்டுத்தரும் ஆற்றலையுடைய முனிவர் இந்நகர்ப்புறச் சோலையில் வந்திருக்கின்றனர்; நீ விரதத்தோடு தனித்திருத்தல் வேண்டும்' என்று வயந்தகன் சொல்ல, அவன் வேறு செய்தியைக் கூறிப் பதுமாபதியை வஞ்சித்து அகற்றிவிட்டுத் தனியே துயில்கொண்டது இதனால் அறியலாதும்.]

1. அமைச்சன் - உருமண்ணுவா.

3. என - என்று உதயணன் கேட்ப.

4. மன்னன் - எலிச்செவியரசன்.

5. தருசகன்: எழுவாய். தன்வயின் - தன்னை. விடுத்த-விடுவித்த.

6. புரிந்தவர் - எலிச்செவியரசன் முதலியோரும், தருசகனும். நீதி - கொல்லாதிருந்தமை முதலியன.

7. கூறி - உருமண்ணுவா சொல்லி.

10. வன்புறை - வற்புறுத்துபவன்.

9 - 10. உருமண்ணுவா வயந்தகனிடம் நீ உதயணனுக்கு இன்னதைக் கூறவென்று உணர்த்த.

பி - ம், 1 செய்தவும்,

(உதயணன் செயல்)

உருமண் ணுவாவினொ [1] டொருங்குகண் கூடித்
தருமணன் ஞெமரிய தண்பூம் பந்தருட்
டிருமலி மார்பன் றேவி பயிற்றிய
வீணை பெற்றது விரித்தவற் குரைத்துத்
தேனேர் கிளவியைத் தேடி யாற்ற

(வயந்தகன் உதயணனைக் கேட்டல்)

மானங் குன்று வயந்தகன் கூறும்
நயந்துநீ யாற்று நன்னுத லரிவையும்
பயந்த கற்பிற் பதுமா பதியுமென்
றிருவ ருள்ளுந் தெரியுங் காலை
யாவர் நல்லவ ரறிவினு மொழுக்கினும்
யாவரை யுவத்தி யாவதை யுணரக்
காவ லாள கரவா துரையென

(உதயணன் விடை கூறுதல்)

முறுவல் கொண்டவ னறிவு மாயினும்
பல்பூட் சில்சொற் பட்டத் தேவியைச்
சொல்லாட் டிடையுஞ் செல்ல நீர்தலிற்
பீடுடை யொழுக்கிற் பிரச்சோ தனன்மகள்
வாடிடை மழைக்கண் வாசவ தத்தை

---

12. க. 33 : 134, அடிக். ஞெமரிய - பரந்த.
15. கிளவியை - வாசவதத்தையை. உதயணன் ஆற்ற.
16. கூறும் - கூறுவான்.
17. ஆற்றும் - ஆற்றுதற்குக் காரணமாகிய. அரிவை - வாசவதத்தை. 21. உவத்தி - உவப்பாய். ஆவதை - அதனை.
22. கரவாது - மறையாமல். என - என்று வயந்தகன் கேட்ப.
24. பூண் - ஆபரணம். [பம்.
25. சொல்லாட்டிடையும் - சொல்லுமிடத்தும். செல்லல் - துன்
27 - 8. வாடிடை - வாடிய இடை. பெண்ணருங்கலம்: "மண்ணருங் கலமெலாம் வலிதின் வவ்வினும், விண்ணருங் கலமெலாம் விதியி னெய்தினும், பெண்ணருங் கலமிது பெறுதன் மானிடர்க், கெண்ணருந் தகைத்தென விறைவ னெண்ணினன்" சூளா. இரதநூபுரச். 110.

பி - ம். 1 டொருங்குடன்கூடி,

கண்ணகன் ஞாலத்துப் பெண்ணருங் கலமவள்
செறுந ருவப்பச் செந்தீ யகவயின்
உறுதவ மில்லேற் கொளித்தன டாளென
மறுகுஞ் சிந்தை மன்னனை நோக்கி

**(வயந்தகன் கூற்று)**

வெங்கண் வேந்தர் தங்கட் குற்ற
தங்கண் ஞாலத் தாரே யாயினும்
அகலிடத் துரைப்பி னற்றம் பயத்தலின்
அவரின் வாழ்வோ ரவர்முன் னின்றவர்
இயல்பி னீர்மை யிற்றென வுரைப்பின்
விம்ம முறுதல் வினவது முடைத்தோ
அற்றே யாயினு மிற்றுங் கூறுவென்
நயக்குங் காத னல்வளைத் தோளியைப்
பெயர்க்கும் விச்சையிற் [1] பெரியோற் கண்டவன்
உவக்கு முபாய மொருங்குடன் விடாது
வழிபா டாற்றி [2] வல்லிதிற் பெறீஇய
கழிபெருங் காதலொடு சென்றபி னவ்வழிக்
காசி யரசன் பாவையைக் கண்டே

---

29. செறுநர் - பகைவர்.

30. நெடுங்காலம் உடனிருக்கப்பெற்றிலேனென்னுங் கருத்தால், ‘உறுதவமில்லேன்’ என்றான்.

32. வெங்கண் - கண்ணோடாமை. உற்றது - உற்ற குறைவை.

34. அற்றம் - சோர்வு; உயிரறுதியுமாம்.

35. அவரின் வாழ்வோர் - அவ்வரசரின் குடிமக்கள்.

36. இயல்பு இல் நீர்மை - இயல்பில்லாத தன்மை.

37. விம்மம் - விம்மல்; உ. 16 : 99. வினவது முடைத்தோ - கேட்க வேண்டுவதோ? 32 - 7. = க. 35 : 15 - 9.

38. அற்று - அத்தன்மைத்து; அப்படி. இற்றும் - இன்னும், “அற்ற தாத விற்றுங் கூறுவென்” (க. 54 : 75); ந. 1 : 61.

39. வாசவதத்தையை.

40. பெயர்க்கும் - மீட்டுத் தருகின்ற. விச்சை - வித்தை. பெரியோற் கண்டு - பெரியோனாகிய முனிவனைக் கண்டு. [3 - 6.

44. காசியரசன்பாவை - பதுமாபதி; ந. 6 : 172 - 6; ந. 16:

பி - ம். 1 பெரியோர்க். 2 வலிதிற்பெரிய.

வாசவ தத்தையை மறந்தனை யாகிப்
பரவை யல்குற் பதுமா பதியோ
டிரவும் பகலு மறியா வின்புற்
றுட்குவரு கோயிலு ளொடுங்குவனை யுறைந்தது
மற்போர் மார்ப மாண்புமற் றுடைத்தோ
அன்னது மாக வதுவே யாயினும்
திண்ணிதி னதனையுந் திறப்படப் பற்றாய்
பின்னிது நினைக்கும் பெற்றியை யாதலின்
ஒருபாற் பட்ட தன்றுநின் மனனெனத்

(உதயணன் கூற்று)

திருவார் மார்பன் றெரிந்தவற் குரைக்கும்
வடுவாழ் கூந்தல் வாசவ தத்தையொ
1 டிடைதெரி வின்மையி னவளே யிவளென
நயந்தது நெஞ்ச நயவா தாயினும்
பால்வகை வினையிற் படர்ந்த வேட்கையை
மால்கடல் வரைப்பின் மறுத்தன ரொழுகுதல்
யாவர்க் காயினு மாகா ததுவென
மேவரக் காட்டலு மீட்டுங் கூறுவன்

(வயந்தகன் கூற்று)

அறியா னிவனென னெறியிற் கேண்மதி
அன்றுநாங் கண்ட வரும்பெற லந்தணன்

---

48. உட்கு - அச்சம். ஒடுங்குவனை - மறைந்திருந்தனையாய்.

51. திண்ணிதின் - உறுதியாக.

52. இது - வாசவதத்தையின் நலத்தை. பெற்றியை-தன்மையை யுடையாய். 53. என - என்று வயந்தகன் கூற.

54. மார்பன் - உதயணன் அவற்கு - வயந்தகனுக்கு.

56. இடை - வேறுபாடு. 58. பால் - ஊழ்.

60. யாவர்க்காயினும் - பொறிசெறிந்த பெரியோருக்கும்.

61. மேவரக் காட்டலும் - பொருந்த அறிவித்தவுடன்.

62. எனல் - என்று நினையாதே.

63. அன்றென்றது, இராசகிரியத்தின் புறத்தே ஒடுங்கிய காலத்தை. அந்தணன் - காகதுண்டகன்.

பி - ம். 1 டிடைதெரிவின்மையளே,

இன்றுநாங் காண விந்நகர் வந்தனன்
மானேர் நோக்கி மாறிப் பிறந்துழித்
தானே யாகத் தருகுவெ னென்றனன்
பனிமலர்க் கோதைப் பதுமையை நீங்கித்
தனியை யாகித் தங்குதல் பொருளெனக்

(உதயணன் பதுமாபதி முதலியோரை வஞ்சித்து அகற்றிச் சென்று துயிலல்)

கேட்டே யுவந்து வேட்டவன் விரும்பி
மாற்று மன்னரை மருங்கறக் கெடுப்பதோர்
ஆற்றற் சூழ்ச்சி யருமறை யுண்டெனத்
தேவி முதலா யாவிரு மகன்மினென்
றாய்மணி மாடத் தவ்விடத் தகன்று
திருமணக் கிழமைப் பெருமக ளுறையும்
பள்ளிப் பேரறை யுள்விளக் குறீஇ
மயிரினுந் தோலினு நூலினு மியன்ற
பயில்பூஞ் சேக்கையுட் பலரறி வின்றி

---

65. மானேர் நோக்கி - வாசவதத்தை.

66. தானேயாக - பழைய வடிவினளாக.

65 - 6. = ௫. 1 : 72 - 4.

68. பொருள் - காரியம். என - என்று வயந்தகன் கூற.

70. மருங்கு - குலம்; "சூர்மருங் கறுத்த" முருகு. 275.

71. மறை - இரகசியம்.

70 - 72. மந்தணத்தில் மகளிர் இருத்தல் மரபன்று; "புனைகுழன் மகளிரோ டிளைஞர்ப் போக்கினன்" (கம்ப. யுத்த. மந்திர. 7); "துன்று பிணியோர் துறந்தோ ரடங்காதோர், கன்று சினமனத்தோர் கல்லா தவரிளையோ, ரொன்று முறைமை யுணரா தவர்மகளி, ரென்றுமிவர் மந்தணத்தி னெய்தப் பெறுதாரே" வி. பா. கிருட்டினன்தூது. 52.

74. பெருமகள் - பதுமாபதி.

75. விளக்குறீஇ - மெழுகித் தூய்தாக்குவித்து; மணிவிளக்கை யமைத்தென்றுமாம்; சு. 7 : 17.

77. பலரறிவின்றி - பலரறியாதபடி.

76 - 7. "ஊட்டுறு பன்மயிர் விரைஇ வயமான், வேட்டம் பொறித்து வியன்கட் கானத்து, முல்லைப் பல்போ துறழப் பூநிரைத்து, மெல்லிதின் விரிந்த சேக்கை" நெடுநல். 128 - 31.

உழைக்கலச் சுற்றமு மொழித்தன ளாகி
விழுத்தகு வெண்டுகில் விரித்தன ளுடுத்துத்
தூய ளாகி வாய்மொழி பயிற்றித்
தோட்டுணை மாதரை மீட்டனை பணியென
வாட்படை மறவன் காட்டிய வகைமேற்
சேட்புலம் பகலச் சிந்தை நீக்கி
வீணை கைவலத் திரீஇ விதியுளி
ஆணை வேந்த னமர்ந்தனன் றுயிலென்.

௬—பதுமாபதியை வஞ்சித்தது முற்றிற்று.

---

78. உழைக்கலச்சுற்றம் - உழைக்கலமகளிர் ; ௩. 24 : 193.
81. தோட்டுணை மாதர் : ௨. 10 : 100 ; 'மீட்டனை பணி' என்றது வயந்தகனை நோக்கிக் கூறியது.
82. வாட்படை மறவன் - வயந்தகன்.
83. சேட்புலம்பு - நெடுங்காலம் பிரிந்தமையாலிருந்த வருத்தம்.
84. ௪. 7: 38 - 9. விதியுளி - விதிப்படி.
85. வேந்தன் - உதயணன்.

## எ—வாசவதத்தை வந்தது.

(அமைச்சர் வாசவதத்தையை உதயணன்பால் விடுத்தல்)

ஆணை வேந்த னமர்ந்துதுயில் பொழுதின்
வாளுதன் மாதரை மதியுடை யமைச்சர்
அன்பியாத் தியன்ற நன்பாற் கணவன்
மண்பாற் செல்வ மாற்றி மற்றோர்
பெண்பாற் செல்வம் பேணாத வின்மையும்
எரிசின மொய்ம்பிற் றரிசகன் றங்கை

---

எ. வாசவதத்தை வந்தது.

[வாசவதத்தை உதயணன்பால் வந்தமை இதனால் அறியலாகும்.]

2. மாதரை - வாசவதத்தையை. அமைச்சர் - உருமண்ணுவாவும், யூகியும்.

4 - 5. நிலமகளின்பத்தை (அரசாளுதலை) யன்றி மற்றொருத்தி இன்பத்தை விரும்பாமையையும் ; பெண்பாற்செல்வம்: "ஆண்பிறந் தமைந்த செல்வ முண்டனை யாதி யன்றே" கம்ப. திருவடிதொழுத. 70.

பண்பொடு புணர்ந்த பதுமா பதியையும்
பொருபடை வேந்தனை வெரீஇப் புணர்த்த
கருமக் காம மல்ல தவண்மாட்
டொருமையி னோடாது புலம்பு முள்ளமும்
இரவும் [1] பகலு மவண்மாட் டியன்ற
பருவர னோயோ டாற்றும் படியும்
இன்னவை பிறவு நன்னுத றேற
மறப்பிடைக் காட்டுதல் வலித்தன ராகிச்
சிறப்புடை மாதரைச் சிவிகையிற் றரீஇப்
பெறற்கருங் கொழுநன் [2] பெற்றி காண்கென
ஆய்மணி விளக்கத் தறையகம் புகுத்தலின்

(உதயணனுடைய நிலை)

மாமணித் தடக்கை மருங்கிற் றாழ்தரத்
தன்பாற் பட்ட வன்பின னாகிக்
கரண நல்லியாழ் காட்டுங் காலை
மரணம் பயக்கு மதர்வைத் தாயதின்
கடைக்க ணோக்கம் படைப்புண் ணகவயின்

---

8. வேந்தன் - ஆருணி.

9. காரியத்தின்பொருட்டு மேற்கொண்ட பொய்க்காமம்; "கருமநுதலிய கள்ளக் காமம்" (௧. 35: 228) என்றார் முன்னும்.

10. ௪. 6 : 53. உள்ளத்தையும்.

11. அவள்மாட்டு - வாசவதத்தையின்பால்.

12. பருவரல் நோய் - வருத்தமாகிய காமநோய். படியும் - விதத்தையும். 13. நன்னுதல் - வாசவதத்தை. [நிச்சயித்து.

14. உதயணன் மெய்ம்மறந்திருக்குஞ் சமயத்தில் அதனைக் காட்ட

15. மாதரை - வாசவதத்தையை. தரீஇ - கொண்டுவரச்செய்து.

16. பெற்றி - தன்மை.

அமைச்சர் (2) வலித்தனராகித் (14) தரீஇக் (15) காண்கென (16)

17. மணிவிளக்கத்து அறை - இரத்தினதீபத்தையுடைய பள்ளியறை; ௪. 6 : 75; "திருமணி விளக்கங் காட்டி" முல்லை. 63.

20. காட்டுங்காலை - கற்பித்த காலத்தில்.

21. மதர்வைத்து - மதர்ப்பினையுடையது. [னுள்ளே.

22. படைப்புண்ணகவயின் - ஆயுதம் பட்டதனாலாய புண்ணி

பி - ம். [1] பகலுந் தன்மாட். 2. பெற்றியிற்கா.

அழனெய் பெய்தென் [1] றாற்றே னென்னை
மழலையங் கிளவி மறந்தனை யோவென
வாய்சோர்ந் தரற்று வாசங் கமழும்
ஆய்பூந் தட்டத் தகத்தோடு தெற்றிய
தாமம் வாட்டுங் காம வுயிர்ப்பினன்
கனவி னினையுங் கணவனைக் கண்டே

(வாசவதத்தையின் செயல்)

நனவினு மிதுவோ நறுந்தார் மார்பன்
தன்னல மில்லா நன்னுதன் மகளிரை
மறுதர வில்லாப் பிரிவிடை யாற்றுதல்
உறுகடல் வரைப்பி னுயர்ந்தோற் கியல்பெனல்
கண்டனெ னென்னுங் கண்டா வுவகையள்
நூனெறி வழாஅ நுனிப்பொழுக் குண்மையின்
ஏனை யுலகமு மிவற்கே யீயையெனக்
கணவனை நோக்கி யிணைவிரல் கூப்பி
மழுகிய வொளியின ளாகிப் பையெனக்
கழுமிய காதலொடு கைவலத் திருந்த

---

23. அழனெய் - சுடுகின்ற மருந்தெண்ணெயை. பெய்தென்று - பெய்ததைப்போல்வதென்று.

20 - 23. யாழோசையாற் றோன்றிய காமவருத்தத்திற்குப் படைப் புண்ணும் நோக்கத்தாலுள்ள வருத்தத்திற்கு அதில் நெய்பெய்தலும் உவமை.

26. அகத்தோடு - உள்ளிதழ். தெற்றிய - பிணைத்த.

27. காமவுயிர்ப்பு வெம்மையுடைமை; க. 33 : 108 - 9. [தும்.

28. இனையும் - வருந்துகின்ற; நினையுமென்று பிரிப்பினும் பொருந்

29. இதுவோ - இத்தன்மையதோ. மார்பன் - உதயணனது இயல்பு: ஆகுபெயர்.

31. மறுதரவு - மீட்சி. 30 - 32. சு. 5 : 35.

34 - 5. "பிறப்பு நெடுவாழ்க்கை செல்வம் வனப்பு, நிலக்கிழமை மீக்கூற்றங் கல்விநோ யின்மை, இலக்கணத்தா லிவ்வெட்டு மெய்துப வென்றும், ஒழுக்கம் பிழையா தவர்" ஆசார. 2. [77.

36. விரல் - கை; ஆகுபெயர்; "படைகொ ளேன்விரல்" முல்லை.

37. மழுகிய - மழுங்கிய. 38. கழுமிய - நிறைந்த. வலம் - இடம்.

பி - ம். 1 ஆற்றுனென்னை.

கோட பதியின் சேடணி கண்டே
1 மகக்காண் டாயின் மிகப்பெரிது விதும்பிச்
சார்ந்தன ளிருந்து வாங்குபு கொண்டு
கிள்ளை வாயி னன்ன வள்ளுகிர்
நுதிவிரல் சிவப்பக் கதியறிந் தியக்கலிற்
காதலி கைந்நயக் கரணங் காதலன்
ஏதமில் செவிமுத லினிதி னிசைப்ப

(உதயணனுடைய செயல்)

வாசவ தத்தாய் வந்தனை யோவெனக்
கூந்தன் முதலாப் பூம்புற நீவி
ஆய்ந்த திண்டோ ளாகத் தசைஇ
என்வயி னினையா தேதிலை போல
நன்னுதன் மடவோய் நாள்பல கழிய
ஆற்றிய வாறெனக் கறியக் கூறெனா

(வாசவதத்தை வாளா விருத்தல்)

மாற்றுரை கொடாஅள் மனத்தோ டலமரீஇக்
கோட்டுவன ளிறைஞ்சிக் கொடுங்குழை யிருப்ப

(மீட்டும் உதயணன் அரற்றல்)

மயங்குபூஞ் சோலை மலைவயி னாடிப்
பெயர்ந்த காலை நயந்தனை யொருநாள்

---

39. கோடபதி - உதயணனது யாழ். சேடு - பெருமை.

38 - 9. 'வீணை கைவலத்திரீஇ...அமர்ந்தனன் துயில்' என்றார் முன்னும்; ௪. 6 : 84 - 5. 40. விதும்பி - பரபரப்புற்று.

41. சார்ந்தனளிருந்து - நெருங்கி வந்திருந்து.

42. உகிர் - நகம்; ௪ 11 : 72 - 3; "கிளிவா யொப்பி னொளிவிடு வள்ளுகிர்" (பொருந. 34.) 43. நுதிவிரல் - விரலின் நுனி. கதி - நடை.

44. நயக்கரணம் - இன்பச்செயல்.

45. செவிமுதல் - செவியிடம். [78 - 9.

48. ஆய்ந்த - மெலிந்த. தனது தோளை அவள் மார்பிற் சார்த்தி;

49. என்வயின் - என்னை. ஏதிலை போல - யாதொரு தொடர்புமில்லாதாய் போல. 51. எனா - என்று உதயணன் அரற்ற.

53. அவள் மிக வணங்கியிருப்ப.

54 - 5. சோலை - இலாவாணத்துக் கருகிலிருந்த சோலை. ஆடிப் பெயர்ந்த காலை - உண்டாடி மீண்டுவந்த நாட்களுள்.

பி - ம். 1 மகத்தாண்டாயின்.

தழையுங் கண்ணியும் விழைவன தம்மென
வேட்டம் போகிய போழ்திற் கோட்டம்
கூரெரி கொளுவ வாரஞ ரெய்தி
இன்னுயிர் நீத்த விலங்கிழை மடவோய்
நின்னணி யெல்லா நீக்கி யோராப்
பின்னணி கொண்டு பிறளே போன்றனை
எரியகப் பட்டோ ரியற்கை யிதுவோ
தெரியே னெனக்கிது தெரியக் கூறென
ஆறு வுவகையொ டவண்மெய் தீண்டியும்
தேனார் படலைத் திருவளர் மார்பன்
கனவென வறியான் காதலின் மறுத்தும்
சினமலி நெடுங்கண் சேர்த்திய [1] பொழுதின்

(அமைச்சர் வாசவதத்தையை உதயணனிடமிருந்து பிரித்தல்)

வழுக்கில் சீர்த்தி வயந்தக னடைஇ
ஒழுக்கிய திரியா யூகியொ டுடனே
நாளை யாகு நண்ணுவ தின்றுநின்
கேள்வ னன்பு கெடாஅ துருகுதல்
துயிலுறு பொழுதிற் றோன்றக் காட்டுதல்
அயில்வேற் கண்ணி யதுநனி வேண்டித்
தந்தே மென்பது கேளெனப் பைந்தொடி

56. தம்மென - தாருமென்று நீ கேட்டலால்.

57. வேட்டம் போகிய - நான் வேட்டையாடப் போன. கோட்டம் - கோயில். 56 - 7. — உ. 17 : 48 - 50.

58. வெம்மை மிக்க நெருப்பை மூட்டுதலால் பொறுத்தற்கரிய துன்பத்தை யடைந்து.

60. அணி - அழகு. ஓரா - அறியமுடியாத.

61. பின்னணி : 103 - 4, 211.

60 - 63. ஒளிமழுங்கியிருத்தலின் இவ்வாறு கூறினான்.

65. படலை - இலை விரவித் தொடுத்த மாலை.

66. மறுத்தும் - மறுபடியும்.

67. சேர்த்திய - இமைபொருத்தின.

68. சீர்த்தி - மிகுபுகழ். அடைஇ - அடைந்து.

70. நண்ணுவது நாளையாகும்.

70 - 74. இன்று தந்தேம்.

பி - ம். 1 தொழுதின்.

புனைகொல் கண்மாயி னினைவனள் விம்மி
நிறையில ளிவளென வறையுநன் கொல்லென
நடுங்கிய நெஞ்சமொ டொடுங்கி யோகி
வெம்முலை யாகத்துத் தண்ணெனக் கிடந்த
எழுப்புரை நெடுந்தோண் மெல்லென வெடுத்து
வழுக்கில் சேக்கையுள் வைத்தனன் வணங்கி
அரும்பெறல் யாக்கையி னகலு முயிர்போற்
பெரும்பெயர்த் தேவி பிரிந்தனள் போந்துதன்
ஈனுத் தாயோ டியூகியை யெய்தப்

(உதயணன் விழித்து ஆற்றல்)

போரார் குருசில் புடைபெயர்ந் தாராஅய்
மறுமொழி தாராய் மடவோ யெனக்கென
உறுவரை மார்பத் தொடுக்கிய புகுவோன்
காணா னாகிக் கையற வெய்தி
ஆனா வின்றுயி லனந்தர் தேறிப்
பெருமணி பெற்ற நல்குர வாளன்
அருமணி குண்டு கயத்திட் டாங்குத்
துயிலிடைக் கண்ட துணைநலத் தேவியை
இயல்புடை யங்க ணேற்றபிற் காணா
தாற்று மன்னனை யருமறை நாவின்

(வயந்தகன் உதயணனிடம் கூறல்)

வயத்தகு வயந்தகன் வல்விரைந் தெய்தி

---

75. புனை = புனல் - நீர்; கம்ப. நாடு. 31.
76. அறையுநன்கொல் - சொல்லுவானோ.
79. உதயணன் தோளை.
81. உதயணன் அறியாதிருக்கத் தானறிந்து நீங்குதலின், இவ்வுவமை கூறினார்.
83. ஈனுத்தாய் - சாங்கியத்தாய்; உ. 7 : 64; அகநா. ௧௦௫ : 6.
84. குருசில் - உதயணன். 87. கையறவு - செயலறுதல்.
88. அனந்தர் - மயக்கம்.
89. பெருமணி - விலைமிக்க இரத்தினம்.
90. சிலப். ௨௦ : 29 - 30; மணி. உ. : 72 - 3. அருமணி : சுட்டுப்பொருளில் வந்தது. குண்டுகயம் - ஆழமான நீரையுடைய பள்ளம்.
92. ஏற்றபின் - விழித்தபின்.
94. வல்விரைந்து - மிக விரைந்து.

இருளும் பகலு மெவ்வமொ டிரங்குதல்
பொருளஃ தன்றே [1] புரவலர் மாட்டெனக்
காரணக் கிளவி கழறுவனன் காட்டத்

(உதயணன் கூற்று)

தோமணி சேனைத் திறன்மீக் கூரிய
பிடிமகிழ் யானைப் பிரச்சோ தனன்மகள்
வடிமலர்த் தடங்கண் வாசவ தத்தையென்
பள்ளிப் பேரறை பையெனப் புகுந்து
நல்லியா ழெழீஇ நண்ணுவன ளிருப்ப
வாசவெண்ணெ யின்றி மாசொடு
பிணங்குபு கிடந்த பின்னுச்சேர் புறத்தொடு
மணங்கமழ் நுதலு மருங்குலு நீவி
அழிவுநனி தீர்ந்த யாக்கைய ளாகிக்
கழிபே ருவகையொடு கண்படை கொளூஉ
மறுத்தே நீங்கினள் வயந்தக வாராய்
நிறுத்த லாற்றே னெஞ்ச மினியெனக்

(வயந்தகன் கூற்று)

[2] கனவிற் கண்டது நனவி னெய்துதல்
தேவர் வேண்டினு மிசைதல் செல்லாது

---

97. கழறுதல் - இடித்துரைத்தல். காட்டல் - விளங்க அறிவித்தல்.
98. மீக்கூரிய - மீக்கூர்ந்த.
100. வடி - தேன்; கூர்மையுமாம்.
102. கோடவதியை வாசித்து நெருங்கியிருப்ப.
104. பின்னுச்சேர் புறம்: "பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டி" அகநா. கூ : 22.

103 - 4. கணவனைப் பிரிந்துறையும் மகளிர் கூந்தல் புனையாமை மரபு; இதனை, கசஎ - ஆம் புறப்பாட்டாலும், "பெறுகதின் செவ்வி பெருமகன் வந்தான், நறுமலர்க் கூந்த னாளணி பெறுக" (சிலப். உஎ : 215 - 6) என்பதனாலும் அறிக.

105. நுதல் நீவுதல்: குறுந். ஙகூஉ : 4 ; அகநா. உசO : 10.

109. இப்பொழுது மனத்தை நிறுத்துதற்கு வலியிலேனென்று உதயணன் கூற.

110 - 11. = க. 43 : 104 - 5; "கனவினு னெய்திய செல்வத் தனையதே" (கலி. கூஅ); "கனவிற் கண்டாங்கு வருந்தாது நிற்ப, நனவி னல்

பி - ம். 1 புலவர். 2 கனவு

காவ லாள கற்றோர் கேட்பிற்
பெருநகை யிதுவெனப் போர்த்துரை [1] கொடாஅ
ஆடலு நகையும் பாடலும் விரைஇ
மயக்கமி றேவி வண்ணங் கொண்டோர்
இயக்கி யுண்டுண் டுறைவதை யதற்கோர்
காப்பமை மந்திரங் கற்றனென் யானென
வாய்ப்பறை யறைந்து வாழ்த்துப்பல கூறி
ஒருதலைக் கூற்றொடு திரிவில லிருப்பப்

(உதயணன் செயல்)

பண்டே போலக் கண்படை மம்மருட்
கண்டே னானே கனவன் றாயின்
மாறி [2] நீங்குமோ மடமொழி தானெனத்
தேறியுந் தேறான் றிருவமர் மார்பன்
நள்ளிரு ணீங்கலும் பள்ளி யெழுந்து
காமர் சுற்றங் கைதொழு தேத்தத்
தாமரைச் செங்கண் டகைபெறக் கழீஇக்
குளம்புங் கோடும் விளங்குபொன் னழுத்திச்
சேடணி சேதா விலையன வின்னே
கோடி முற்றிக் கொண்டனிர் வருகெனத்

---

கியோ னசைசா றோன்றல்", "கனவென மருள வல்லே நனவின், நல்கி யோனே நசைசா றோன்றல்" புறநா. ௩எஎ: 19-20, ௩அஎ: 26-7.

113. இச்செய்தி மிக்க நகைப்பிற்குக் காரணமாகுமென்று மறுமொழி கொடுத்து.

116. உறைவதையுண்டு - சஞ்சரிப்பதுண்டு.

118. வாய்ப்பறையறைந்து - உரக்கச்சொல்லி ; சிலப். கச : 29 ; மணி. உ௫ : 51.

115 - 8. சிலப். கக : 171 - 200. இயக்கி மயக்குதலுண்டென்பது சைனமரபு. 119. ஒருதலைக்கூற்று - துணிவான சொல்.

123. அமர்தல் - இருத்தல் ; விரும்புதலுமாம்.

126. கண்கழுவல் : இடக்கரடக்கல் ; சீவக. 220.

127. கோடு - கொம்பு. 128. சேடு - அழகு.

129. கோடி - புதிய ஆடை ; ஒரு பேரெண்ணுமாம்

பி - ம். 1 கொடாஅன். 2 நீங்குமோர்.

தெரிமலர்க் கோதைத் தேவியை யுள்ளி
அருமறை யாளர்க் கெழுமுறை வீசி
நனவிற் கண்ட நன்னுதன் மாதரைக்
கனவெனக் கொண்டலி னினியோர்க்கு முரையான்
காமுறு நெஞ்சிற் காதலர்ப் பிரிந்தோர்க்
கேமுறு வேட்கை யாகு மென்ப
தீதுகொ லென்னப் பற்பல நினைஇ

(வயந்தகன் உதயணனிடம் கூறுதல்)

இருந்த செவ்வியுள் வயந்தகன் குறுகி
ஆனாச் செல்வத் தந்தணன் மற்றுநாம்
மேனா ணிகழ்ந்த மேதகு விழுமத்
தறம்பொரு ளின்ப மென்ற மூன்றினும்
சிறந்த 1 காதலி சென்றுழித் தரூஉம்
மகதத் தெதிர்ந்த தகுதி யாளன்
மதுகாம் பீர வனமெனுங் காவினுட்
புகுதந் திருந்து புணர்க்கு மின்றவட்
சேறு மெழுகெனச் சிறந்தன னாகி

(உதயணன் செயல்)

மாறா மகிழ்ச்சியொடு மன்னவன் விரும்பிக்

---

127 - 31. = க. 39 : 64 - 9; "பொன்னிறைந்த பொற்கோட்டுப் பொற்குளம்பிற் கற்றாதந், தின்மகிழா னந்தணரை யின்புறப்பச் - சென்னிதன், மானிலமே யானுலகம் போன்றது வான்றுகள்போர்த், தானுலக மண்ணுலகா மன்று" (தொல். புறத். சூ. 35, ந. மேற்.); பு. வெ. 202.

133. கொண்டல் - கொள்ளுதல்; பு. வெ. 179.

135. வேட்கை - ஆசையாலுண்டாகும் காரியங்கள்.

139. மேல்நாள் - முன்னாள். விழுமத்து - வாசவதத்தை தீயில் வெந்தாளென்ற துன்பத்தில்.

141. காதலி - மனைவி. சென்றுழி - சென்ற இடத்தினின்றும்.

142. மகதத்து - மகதநாட்டில்.

140 - 42. 187 - 8, கூ. 1 : 71 - 85, 4 : 64 - 70; ச. 6 : 63 - 6.

143. மதுகாம்பீரவனமென்னும் சோலை கோசம்பியின் புறத்தே யுள்ளது; ச. 4 : 102 - 4.

144. புணர்க்கும் - சேர்ப்பான். 145. சேறும் - செல்வோம்.

பி - ம். 1 காதலிற்.

கொடுஞ்சி நெடுந்தேர் கோல்கொள வேறி
நெடுங்கொடி வீதி நீந்துபு போகி
வித்தக வினைஞர் சித்திர மாக
உறழ்படச் செய்த வொண்பூங் காவின்
எறுழ்மிகு மொய்ம்ப னிழிந்தகம் புகவே

(யூகியினிலைமை)

நோயற வெறியு மருந்தோ ரன்ன
வாய்மொழிச் சூழ்ச்சித் தோழற் குணர்ந்தலிற்
குழன்ற குஞ்சி நிழன்றெருத் தலைத்தரக்
கழுவாது பிணங்கிய வழுவாச் சடையினன்
மறப்போ ரானையின் மதந்தவ நெருக்கி
அறப்பே ராண்மையி னடக்கிய யாக்கையன்
கல்லுண் கலிங்கங் கட்டிய வரையினன்
அல்லூ ணீத்தலி னஃகிய வுடம்பினன்
வெற்ற வேந்தன் கொற்றங் கொள்கெனச்
செற்றந் தீர்ந்த செய்தவச் சிந்தையன்

(வாசவதத்தையின்நிலைமை)

நன்னுத லரிவையும் பொன்னெனப் போர்த்த
பசலை யாக்கையொடு பையு ளெய்தி

---

148. வீதி யாறுபோலப் பரந்து நீண்டு கிடத்தலின் 'நீந்துபு போகி' என்றார்.

149. வித்தகவினைஞர் - சிற்பிகள். சித்திரம் - பலநிறம்; அழகுமாம்.

150. செய்த - செய்தாற் போன்ற.

149 - 50. "சித்திரச் செய்கைப் படாம்போர்த் ததுவே, ஒப்பத் தோன்றிய வுவவனம்" மணி. ங : 168 - 9.

153. தோழற்கு - யூகிக்கு.

154. எருத்து - பிடர். 155. பிணங்குதல் - பின்னிக்கிடத்தல்.

156. மறப்போரானை - பாவமாகிய போரையுடைய யானை.

158. கல்லுண்கலிங்கம் - காவிக்கற்குழம்பிற் றோய்த்த உடை; "கோத்த கல்லாடையுங் கோவணமும்", "கல்லாடை மேற்கொண்ட காபாலிகாண்", "கல்லாடை புனைந்தருளுங் காபாலியை" தே.

159. அல்லூண்நீத்தல், சைனர்க்குரிய மரபு.

161. சிந்தையன் - சிந்தையனாக இருப்ப.

162. அரிவை - வாசவதத்தை.

உருப்பவிர் மண்டிலத் தொருவயி னோடும்
மருப்புப் பிறையின் மிகச்சுடர்ந் திலங்காது
புல்லெனக் கிடந்த நுதலினொ டலமந்
தியல்பிற் றிரியா வின்பெருங் கிழவனை
வியலக வரைப்பின் மேவர வேண்டி
விரத விழுக்கலம் விதியுளி யணிந்து
திரித லில்லாச் செந்நெறிக் கொள்கையள்
பொன்னிறை சுருங்கா மண்டிலம் போல
நன்னிறை சுருங்கா ணாடொறும் புறந்தரூஉத்
தன்னெறி திரியாத் தவமுது தாயொடும்
விருத்துக் கோயிலுட் கரப்பறை யிருப்ப

(உதயணன் யூகியை அறிந்துகொண்டு தழுவல்)

யாப்புடைத் தோழ [1] னரசனொ டணுகிக்
காப்புடை [2] முனிவனைக் காட்டின னாக
மாசின் மகதத்துக் கண்டோ னல்லன்
யூகி மற்றிவ னொளியல தெல்லாம்
ஆகா னாகலு மரிதே மற்றிவன்
மார்புற முயங்கலும் வேண்டுமென் மனனென
[3] ஆராய் கின்றோர்க் ககலத்துக் கிடந்த
பூந்தண் மாலையொடு பொங்குநூல் புரள
இதுகுறி காணென விசைப்பது போல

---

164 - 5. சூரியமண்டிலத்தின் ஒரு பாகத்தே ஓடுகின்ற பிறை. மருப்பு - இரண்டு கோடுகள்.

171. சூரியமண்டிலம் போல. 173. தாய் - சாங்கியத்தாய்.

174. விருத்துக்கோயில் - புதிய அரண்மனை. கரப்பு அறை - ஒளித்தற்குரிய அறை.

162 - 74. அரிவை எய்தி அலமந்து அணிந்து கொள்கையளாய்ச் சுருங்காளாய் இருப்ப என இயைக்க. 175. தோழன் - வயந்தகன்.

176. காப்புடை - காத்தலையுடைய; சோலையின் பக்கத்திலென்று [மாம்.

178. ஒளி அலது - தேககாந்தியொன்றுமன்றி.

178 - 9. ஒளியையன்றி எல்லாம் ஆகான்; அங்ஙனம் ஆதல் அம் முனிவனுக்கு அரிது. 181. அகலத்து - மார்பில்.

183. குறி - அடையாளம்.

பி - ம். 1 னரசனையணுகி. 2 முனிவற்கு. 3 ஆராய்க்கின்றோர்க்கு.

நுதிமருப் பிலேகை நுண்ணிது தோன்ற
ஐயந் தீர்ந்து வெய்துயிர்த் தெழுந்துநின்
றூறில் சூழ்ச்சி யூகந்த ராய
நாறிருங் கூந்தலை மாறிப் பிறந்துழிக்
காணத் தருகுறு முனிவனை நீயினி
யாணர்ச் செய்கை யுடைத்தது தெளிந்தேன்
வந்தனை யென்றுதன் சந்தன மார்பிற்
பூந்தார் குழையப் புல்லினன் பொருக்கெனத்
தீந்தேன் கலந்த தேம்பால் போல
நகையுருத் தெழுதரு முகத்த னாகித்
துறந்தோர்க் கொத்த தன்றுநின் சிறந்த
அருள்வகை யென்னு வகலுந் தோழனைப்
பொருள்வகை யாயினும் புகழோய் நீயினி
நீங்குவை யாயி னீங்குமென் னுயிரெனப்

(வாசவதத்தையின் வருகை)

பூங்குழை மாதரைப் பொருக்கெனத் தம்மென்
றுங்கவன் மொழிந்த வல்லே னோக்கி
நன்னுதன் மாதரைத் தாயொடு வைத்த

184. மருப்பு நுதி இலேகை - யானைக்கொம்பின் நுனியிலுள்ள தழும்பு; இளமையில் கலிங்கத்தரசனது யானையொடு பொருதுபட்ட வடு; க. 45 : 20 - 23, பார்க்க.

186. ஊறு - இடையூறு; பிறர் மனத்தான் உற்றறிதலுமாம். யூகந்தராயன் - யூகி.

188. முனிவனை - முனிவனாகவுள்ளாய். இனி - இப்பொழுது.

189. யாணர் - புதியது. 191. பொருக்கெனப் புல்லினனாக.

192. உ. 8 : 11 - 2, அடிக்; "தேனிற் பாலெனச் செல்வன் றம்பியோ, டானி யம்பல கழிய" (சீவக. 1761); "நெய்த்தலைப்பா லுக்கு விடல்" (பழமொழி. 339.) 193. உருத்து - தோன்றி.

195. தோழனை - யூகியை.

194 - 5. சிறந்த அருள்வகை யென்றது, மார்புறத்தழுவியதனை.

196. பொருள்வகையாயினும் - காரியத்தின் பொருட்டாக வேனும்.

198. மாதரை - வாசவதத்தையை. பொருக்கென - விரைய. தம் - தாரும்; பொருந. 101, ந. பார்க்க.

199. அவன் - உதயணன்.

பொன்னணி கோயில் கொண்டனர் புகவே

(வாசவதத்தையின் செயல்)

காரிய மிதுவெனச் சீரிய காட்டி
அமைச்ச ருரைத்த திகத்த வின்றி
மணிப்பூண் மார்பன் பணித்தொழி லன்மை
நல்லா சார மல்லது புரிந்த
கல்லாக் கற்பிற் கயத்தியேன் யானென
நாண்மீ தூர நடுங்குவன ளெழுந்து
தோண்மீ தூர்ந்த துயர நீங்கக்
காந்த ளறுமுகை கவற்று மெல்விரல்
பூண்கல மின்மையிற் புல்லெனக் கூப்பிப்
பிரிவிடைக் கொண்ட பின்னணி கூந்தல்
செருவடு குருசி றுண்முதற் றிவள
உவகைக் கண்ணீர் புறவடி நனைப்பக்
கருவி வானிற் கார்த்துளிக் கேற்ற
அருவி வள்ளியி னணிபெறு மருங்குலள்
இறைஞ்சுபு கிடந்த சிறந்தோட் டழீஇச்
செல்ல றீரப் பல்லூழ் முயங்கி

(உதயணன் சாங்கியத்தாயை நோக்கிக் கூறல்)

அகல நின்ற செவிலியை நோக்கித்
துன்பக் காலத்துத் துணையெமக் காகி

---

201. கோயில் - கரப்பறை.
202. காரியம் - செய்யத்தக்கது. சீரிய காட்டி - சிறந்த கருத்துக்களை விளங்க அறிவித்து. 203. அமைச்சரென்றது, யூகியை.
204. பணித்தொழில் - கட்டளைத்தொழில்.
206. என - என்று கருதுதலால்.
208. தோண்மீதூர்ந்த - கைகடந்த.
209. = உ. 15 : 73-5. கவற்றுதல் - வருத்துதல். 211. = 103 - 4.
212. திவளுதல் - அசைதல்.
213. கண்ணீர் அடிநனைத்தல் : "தங்கண்ணின், நீர்வார்த்துக் கால்கழுவா நின்று" நள. கலிதொடர். 53. [மேகம்.
214. கருவிவான் - மின்னுமுழக்கு முதலிய தொகுதியையுடைய
215. வள்ளி - கொடி. மருங்குல் - இடை; க. 47 : 119, உ. 15 : 214 - 5. = க. 49 : 95 - 6. [67.
218. செவிலி - சாங்கியத்தாய்; க. 36 : 265 - 74.

இன்ப மீதற் கியைந்துகை விடாது
பெருமுது தலைமையி னொருமீக் கூரிய
உயர்தவக் கிழமைநும் முடம்பி னாகிய
சிற்றுப காரம் வற்றல் [1] செல்லா
தால வித்திற் பெருகி ஞாலத்து
நன்றி யீன்ற தென்றவட் கொந்த
சலமி லருண்மொழி சாலக் கூறி

(யாவரும் நகர் செல்லல்)

[2] இரவிடைக் கண்ட வண்ணமொ டிலங்கிழை
உருவ மொத்தமை யுணர்ந்தன ளாகி
ஆய்பெருங் கடிநக ரறியக் கோயிலுள்
தேவியை யெய்திச் சிறப்புரை பரப்ப
இருங்கண் முரசம் பெருங்கெரு வறைதலின்
மாணக ருவந்து மழைதொட நிவந்த
சேணுயர் மாடத்து மீமிசை யெடுத்த
விரிப்பூங் கொடியொடு விழவயர்ந் தியற்றி
அமைச்ச னாற்றலு நண்பின தமைதியும்
நயத்தகு நன்னுத லியற்பெரு நிறையும்
வியத்தன ராகி மகிழ்த்தனர் பகரப்
பஞ்ச வண்ணத்துப் படாகை நுடங்கக்
குஞ்சர வெருத்திற் குடைநிழற் றந்த
புண்ணிய நறுநீர் துன்னினர் குழீஇ

218 - 21. ௩. 1 : 38 - 9.

223 - 4. "உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி, இறப்ப நிழற் பயந் தாஅங்கு" நாலடி. 38.

226. வஞ்சனையில்லாத அன்புள்ள சொற்களை மிகச்சொல்லி; [௬. 8 : 9.

229. நகர் - நகரமாந்தர் ; ஆகுபெயர்.

230. தேவியை - பதுமாபதியை.

235. அமைச்சன் ஆற்றல் - யூகியின் வன்மை.

236. நன்னுதல் - வாசவதத்தை.

237. வியத்தனர் - வியந்தனர் ; விகாரம்.

238. பஞ்சவண்ணம் - ஐந்துவகை நிறம். படாகை - கொடி; க. 42: 102, உ. 5 : 128 ; "விரவுருவினகொடி" புறநா. ௨அ : 3.

239 - 40. = சீவக. 623.

பி - ம். [1] சொல்லாது கால. [2] இருளிடை.

அரசனுந் தேவியுந் தோழனு மாடி
விலைவரம் பறியா விழுத்தகு பேரணி
தலைவரம் பானவை தகைபெற வணிந்து
கூறுதற் காகாக் குறைவி லின்பமொடு
வீறுபெற் றனரான் மீட்டுத்தலைப் புணர்ந்தென்.

௭—வாசவதத்தை வந்தது முற்றிற்று.

---

241. தோழன் - யூகி. 243. தகை - தகுதி; அழகுமாம்.
245. வீறு - வேறொருவருக்கில்லாத அழகு.

---

## ௮—தேவியைத் தெருட்டியது.

(உதயணன் செயல்)

மீட்டுத்தலைப் புணர்ந்த காலை மேவார்
கூட்டம் வெளவிய கொடுஞ்சி நெடுந்தேர்
உருவ வெண்குடை யுதயண குமரன்
ஒருநலந் தோழன் யூகந்த ராயற்
கருளறம் படாஅ னகத்தே யடக்கி
முகனமர் கிளவி முன்னின் றுரைப்பின்
[1] ஏதின்மை யீனு மேனோர் மாட்டெனக்
காதற் றேவிக்குக் கண்ணுறை யொழுகும்
நவமுது மகட்குந் தாழ்ந்தருள் கூறிப்
பயனுணர் கேள்விப் பதுமா பதியைத்

---

௮—தேவியைத் தெருட்டியது.

[பதுமாபதியை மணந்தமையறிந்து ஊடிய வாசவதத்தையை உதயணன் தெளிவித்தது இதனால் அறியலாகும்.]

2. கூட்டம் - சேனை. 5. படான் - வெளிப்படுத்தானாகி.
6. முகனமர்கிளவி - முகமன். 7. ஏனோர் - ஏனையோர்.
6 - 7. = 82 - 3; "இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று, புனையினும் புல்லென்னு நட்பு" குறள், 790.
4 - 7. யூகந்தராயற்குக் கிளவியுரைப்பின் ஏனோர்மாட்டு ஏதின்மை யீனுமென அகத்தே அடக்கி.

பி - ம். [1] ஏதின்மையினும்.

தாங்கருங் காதற் றவ்வையை வந்து
காண்க வென்றலுங் கணங்குழை மாதரும்

(பதுமாபதி வாசவதத்தையைக் காணல்)

அரியார் தடங்க ணவந்திகை யவன்றனக்
குயிரேர் கிழத்தி யாகலி னுள்ளகத்
தழிதல் செல்லாண் மொழியெதிர் விரும்பிப்
பல்வகை [1] யணிகளு ணல்லவை கொண்டு
தோழிய ரெல்லாஞ் சூழ்வன ரேந்தச்
சூடுறு கிண்கிணி பாடுபெயர்ந் தரற்றக்
காவல னீக்க நோக்கி வந்து
தாதலர் கோதைத் தையலுக் கிசைந்தவள்
அணங்கருஞ் சீறடி வணங்கலின் வாங்கிப்
பொற்பூண் வனமுலை பொருந்தப் புல்லிக்
கற்புமேம் படீஇயர் கணங்குழை நீயென
ஆசிடைக் கிளவி பாசிழை பயிற்றி
இன்பஞ் சிறந்த பின்றை யிருவரும்
விரித்தரி தியற்றிய வெண்கா லமளிப்
பழிப்பில் பள்ளி பலர்தொழ வேறித்
திருவிரண் டொருமலர் சேர்ந்தவ ணுறையும்
பொருவரு முருவம் பொற்பத் தோன்றி
.........................................................

(உதயணன் யூகியை வினவுதல்)

பேரத் தாணியுட் பெரியோர் கேட்ப

---

11. தவ்வை - தமக்கை; என்றது வாசவதத்தையை.
12. மாதர் - பதுமாபதி. 13. அவந்திகை - வாசவதத்தை.
14. உயிரேர் கிழத்தி - உயிர்த்துணைவி.
15. அழிதல் செல்லாள் - வருந்தாளாய்.
18. சூடுதல் - அணிதல். பாடு - இடம்.
19. உதயணன் நீங்கிய சமயம் பார்த்து.
20. தையலுக்கு - வாசவதத்தைக்கு.
23. மேம்படீஇயர் - மேம்படுக.
24. ஆசிடைக்கிளவி - ஆசீர்வாதமொழி. பயிற்றி - பலகாற் சொல்லி.
28 - 9. இல்பொருளுவமை.
30. அத்தாணி - அரசிருத்தற்கு உரிய மண்டபம்.

பி - ம். [1] யணிதனல்லவை.

ஒன்னார்க் கடந்த யூகியை நோக்கி
வென்வே லுதயணன் விதியுளி வினவும்
முன்னா னெய்திய முழுச்சிறைப் பள்ளியுள்
இன்னா வெந்துய ரென்க ணீக்கிய
பின்னாட் பெயர்த்துநின் னிறுதியும் பிறைநுதற்
றேவியைத் தீயினுண் மாயையின் மறைத்ததும்
[1] ஆய காரண மறியக் கூறெனக்
கொற்றவன் கூற மற்றவ னுரைக்கும்

(யூகி கூற்று)

செங்கா னாரையொடு குருகுவந் திறைகொளப்
பைங்காற் கமுகின் குலையுதிர் படுபழம்
கழனிக் காய்நெற் கவர்கிளி கடியும்
பழன வைப்பிற் பாஞ்சால ராயன்
ஆற்றலின் மிக்க வாருணி மற்றும்
ஏற்றலர் பைந்தா [2] ரேயர்க் கென்றும்
நிலத்தொடு தொடர்ந்த குலப்பகை யன்றியும்
தலைப்பெரு நகரமுந் தனக்குரித் தாக்கி
இருந்தனன் மேனு மிகழ்ச்சியொன் [3] றிலனாய்ப்
பிரச்சோ தனனோ டொருப்பா டெய்தும்
ஓலை மாற்றமுஞ் சூழ்ச்சியுந் துணிவும்
காலம் பார்க்குங் கருமமு மெல்லாம்
அகத்தொற் றாளரி னகப்பட வறிந்தவன்
மிகப்பெரு [4] முராட்சியை முருக்கு முபாயம்

32. வென் - வென்றி. 35. பெயர்த்தும் - மறுபடியும்.

36. மாயையின் - வஞ்சனையால்.

42 - 3. பாஞ்சாலதேசத் தரசனாகிய ஆருணியென்பவன்.

42 - 5. பாஞ்சாலதேசத்தரசர், ஏயர் குலத்தரசர்க்குப் பகைஞர்.

48. ஒருப்பாடு - ஒற்றுமைப்படுதல்.

51. அகத்தொற்றாளர் - ஆருணி அரண்மனையினுள்ளே தங்கும் ஒற்றர்.

பி - ம். 1 ஆதத. 2 ரேயற். 3 றிலனும். 4 முயற்சியை.

மற்றிக் காலத் தல்லது மேற்சென்று
வெற்றிக் காலத்து வீட்டுத லரிதென
அற்புப் பாச மகற்றி மற்றுநின்
[1] ஒட்ப விறைவியை யொழித்தன் மரீஇக்
கருமக் கட்டுரை காணக் காட்டி
உருமண் ணுவாவோ டொழிந்தோர் பிறரும்
மகதநன் னாடு கொண்டுபுக் கவ்வழி
இகலடு நோன்றா ளிறைமகற் கிளைய
பதுமா பதியொடு வதுவை கூட்டிப்
படைத்துணை யவனைப் பதிவயிற் பெயர்த்தபின்
கொடைத்தகு குமரரைக் கூட்டினே னிறையக்
கொடித்தலை மூதெயில் கொள்வது வலித்தனென்
மற்றவை யெல்லா மற்ற மின்றிப்
பொய்ப்பொருள் பொருந்தக் கூறினு மப்பொருள்
தெய்வ வுணர்விற் றெரிந்துமா றுரையா
தைய நீங்கியெம் மறிவுமதித் தொழுகிய
பெருமட மகடூஉப் பெருந்தகை மாதால்
நின்னினு நின்மாட்டுப் பின்னிய காதற்
றுன்னிய கற்பிற் றேவி தன்னினும்
எண்ணிய வெல்லாந் திண்ணிய வாயின

53 - 4. "தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க, தூங்காது செய்யும் வினை" "இளைதாக முண்மரங் கொல்க களையுநர், கைகொல் லுங் காழ்த்த விடத்து" (குறள், 672, 879) என்பனவை இங்கே கருதற் பாலன.

56. இறைவி - வாசவதத்தை. 60. இறைமகற்கு - தருசகனுக்கு.

57 - 62. உருமண்ணுவா முதலியோர், காட்டிக்கொண்டு புக்குக் கூட்டிப் பெயர்த்தபினென்க.

63. குமரர் - பிங்கலகடகர்.

56 - 63. மரீஇக் கூட்டினேனென்க.

64. வலித்தனென் - நிச்சயித்தேன்.

68. "ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின், வான நணிய துடைத்து" குறள், 353.

69. பெருமட மகடூஉ - சாங்கியத்தாய்.

70 - 72. சாங்கியத்தாயால் இருவரிடத்தும் நிகழ்த்திய நன்மை

பி - ம். [1] ஒற்க.

இருநிலம் விண்ணோ டியைந்தனர் கொடுப்பினும்
பெருநில மன்ன ரேயதை யல்லது
பழமையிற் றிரியார் பயன்றெரி மாக்கள்
கிழமையிற் செய்தனன் கெழுதகை தருமெனக்
கோனெறி வேந்தே கூறுங் காலை
நூனெறி யென்றியா னுன்னிடைத் துணிந்தது
பொறுத்தனை யருளென நெறிப்படுத் துரைப்ப

(உதயணன் கூற்று)

வழுக்கிய தலைமையை யிழுக்க மின்றி
அமைத்தனை நீயென வவையது நடுவண்
ஆற்றுளிக் கூற வத்துணை யாயினும்
வேற்றுமைப் படுமது வேண்டா வொழிகென
உயிரொன் றுதல் செயிரறக் கூறி

(வாசவதத்தை பதுமாபதியாகிய இருவர்செயல்)

இருவரு மவ்வழித் தழீஇயின ரெழுந்துவந்
தொருபெருங் கோயில் புகுந்த பின்னர்
வாசவ தத்தையொடு பதுமா பதியை
ஆசி லயினி மேவரத் தரீஇ
ஒருகலத் தயில்கென வருடலை நிறீஇயபின்
வளங்கெழு செல்வத் திளம்பெருந் தேவி
அரும்பெறற் காதலன் றிருந்தடி வணங்கிப்
பெருந்தகு கற்பினெம் பெருமக டன்னொடு
பிரிந்து நீங்க லெல்லாம் பிரியா

---

களை 'அறுவகைச் சமயத்து' (உ. 9 : 205) என்பது முதலியவற்றா லுணர்க.

76. "விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற், கேளாது நட்டார் செயின்", "பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க, நோதக்க நட்டார் செயின்" குறள், 804, 805.

78. நூனெறி என்று பொறுத்தருளென. நுன்னிடை - நின்னிடத்து.

82. உதயணன் சொல்ல. அத்துணையாயினும் - சிறிதாவது.

88. அயினி - உணவு. தரீஇ - கொண்டுவரச் செய்து.

87 - 9. சீ. 14 : 163.

90. இளம்பெருந்தேவி - பதுமாபதி.

தொருங்கவ ணுறைதல் வேண்டுவ லடிகள்
அவ்வர மருளித் தருதலென் குறையெனத்
திருமா தேவியொடுந் தீவிய மொழிந்துதன்
முதற்பெருங் கோயிற்கு விடுப்பப் போயபின்

(உதயணன் கூறுதல்)

பாடகச் சீறடிப் பதுமா பதியொடு
கூடிய கூட்டக் குணந்தனை நாடி
ஊடிய தேவியை யுணர்வினு மொளியினும்
நாடுங் காலை நன்னுதன் மடவோய்
நின்னொ டொத்தமை நோக்கி மற்றவள்
தன்னொடு புணர்ந்தேன் மலரியல் யானென

(வாசவதத்தை சினத்தல்)

ஒக்கு மென்றசொ லுள்ளே நின்று
மிக்குநன் குடற்ற மேவல ளாகிக்
கடைக்கண் சிவப்ப வெடுத்தெதிர் நோக்கி
என்னே ரென்ற மின்னேர் சாயலைப்

(உதயணன் வாசவதத்தையைத் தெருட்டி மகிழ்தல்)

பருகுவனன் போலப் பல்லூழ் முயங்கி
உருவி னல்லது பெண்மையி னின்னொடு
திருநுதன் மடவோய் நினையினுந் தாயினும்
வெள்வேற் கண்ணி யொவ்வா ளென்றவள்
உவக்கும் வாயி னயந்தகக் கூறித்
தெருட்டியுந் தெளித்து மருட்டியு மகிழ்ந்தும்

---

95. அருளித்தருதல் - அருள்புரிக. என்குறை - இஃது எனக்கு இன்றியமையாமல் ஆகவேண்டிய காரியம்.

96. வாசவதத்தையோடும் இனிய சொற்களைச் சொல்லி. தீவிய: க. 41 : 87, அடிக்.

100 - 103. 'உணர்வினும்...யான்' என்பது உதயணன் கூற்று.

105. உடற்ற - கோபத்தையுண்டாக்க. மேவலளாகி - பொருந்தாளாய்.

107. என்னேர் - எனக்குச் சமானம்; இசை வேறுபாட்டால் எனக்குச் சமானமாவென்றும் பொருள்படும்.

112. வாயில் - வழி. நயந்தக - விரும்பும்படி.

இடையற வில்லா வின்பப் புணர்ச்சியர்
தொடைமலர்க் காவிற் படையமை கோயிலுள்
ஆனுச் சிறப்பி னமைதி யெல்லாம்
ஏனோர்க் கின்றென வெய்திய வுவகையர்
அறைகடல் வையத் தான்றோர் புகழ
உறைகுவனர் மாதோ வுவகையின் மகிழ்ந்தென்.

அ—தேவியைத் தெருட்டியது முற்றிற்று.

---

## கூ — விருத்தி வகுத்தது.

(உதயணன் உருமண்ணுவாவுக்கு விருத்தி யளித்தல்)

உவகையின் மகிழ்ந்தாண் டுறையுங் காலை
உயர்பெருந் தொல்சீ ருருமண் ணுவாவிற்
கெழுநா டோறு முழுநகர் புகழப்
படிவ முத்தீக் கடிகைக் [1]கணனும்
ஐம்பெருங் குழுவு மத்தி கோசமும்
மன்பெருஞ் சிறப்பின் மனைப்பெருஞ் சனமும்
தேனேர் தீஞ்சொற் றேவி மார்களும்
தானையுஞ் சூழத் தானே யணிந்துதன்
நாம மோதிர நன்னாட் கொண்டு

---

கூ—விருத்தி வகுத்தது.

[உருமண்ணுவாமுதலியோர்க்கு நாடுமுதலியவற்றைச் சீவிதமாக உதயணன் கொடுத்தல் இதனால் அறியலாகும்.] [2362.

4. கடிகைக் கணன் - முகூர்த்த விதானிகளின் கூட்டம்; சீவக.

5. ஐம்பெருங்குழு - அமைச்சர் புரோகிதர் சேனாபதியர் தூதுவர் சாரணர். அத்திகோசம் - யானையெடுத்தற்குரிய செல்வமுடையவ ரென்ப; அத்திகோசத்தாரை அத்திகோசமென்றது ஆகுபெயர்; இவர் கூட்டமாக வாழ்பவரென்பது, தொல். பெயர். சூ. 11, நன். சூ. 275, இவற்றினுரைகளில் குழுவின் பெயர்க்கு அத்திகோசத்தாரென்று மேற்கோள் காட்டப்பெற்றிருத்தலால் விளங்கும்.

8 - 9. தன் நாமமோதிரம் - தன்பெயரெழுதிய மோதிரம்; "ஆம்பான் மணிநாம மோதிரந்தொட் டையென்ன" (சீவக. 1040); "போர்க்கெல்லாந், தானதி யாகிய தார்வேந்தன் மோதிரஞ்சேர், ஏனு

பி - ம். [1] கண்ணும்.

சேனா பதியிவ னாகெனச் செறித்துப்
பன்னா ராயிரம் பழுதின்று வருவன
மன்னார் வேண்டுவ மற்றவற் கீத்துக்
குதிரையுந் தேருங் கொலைமருப் பியானையும்
எதிரிய சிறப்போ டேனைப்பல நல்கிப்
பண்பார் சாயற் பதுமா பதிதன்
கண்போ றோழி காண்டகு காரிகை
இயைந்த வேற்க ணிராசனை யென்னும்
வயங்கிழை மாதரொடு வதுவை கூட்டிப்
பெருங்கடிச் சிறப்பும் பெயர்த்தொருங் கருளி
இருங்கடல் வரைப்பி னிசையொடு விளங்கிய
சயந்தியம் பதியும் பயம்படு சாரல்
இலாவா ணகமு நிலாவ நிறீஇக்
குரவரைக் கண்டவர் பருவர றீர
ஆண்டினி திருந்தியாம் வேண்ட வருகென
விடுத்தவற் போக்கிய பின்றை யடுத்த

(யூகியின் பேறு)

ஆதி யாகிய சேதிநன் னாடு
யூகிக் காகென வோலை போக்கி

(இடவகன் பேற்றவை)

இடவகற் கிருந்த முனையூ ருள்ளிட்
டடவி நன்னா டைம்பது கொடுத்து

---

திப் பட்டத் திவன்" (தொல். புறத். சூ. 8, ந.), "செம்பொனீண்முடித் தேர்மன்னர் மன்னற்குப், பைம்பொனாழி தொட்டான் படை காட்டினான்" (சீவக. 2167); மோதிரத்திற் பெயர் பொறித்தல் : "மெய்ப்பேர் தீட்டியது.........காட்டினனொ ராழியது வாணுதலி கண்டாள்" கம்ப. உருக்காட்டு. 63.

10. மந்திரிபதத்தினும் சேனாபதி பதம் சிறந்ததென்பர்.

14. எதிரிய - ஏற்ற. 19. கடி - கலியாணம்.

22. இலாவாணகம் - ஒருமலை ; ஒருநகரமுமாம்.

23. குரவர் - இவன் தந்தையார் ; அவர் துறவுபூண்டு தவஞ் செய்து கொண்டிருந்தனர் ; உ. 20 : 68 - 9, 103. பருவரல்-துன்பம்.

26. உதயணன், வத்தவநாட்டிற்கு அரசனாகும் முன்பே சேதி நாட்டுக்கு அரசனாயிருந்ததனால். 'ஆதி யாகிய சேதிநன் னாடு' என்றார்.

29. அடவி - காடு.

விறற்போர் மன்ன ரிறுக்குந் துறைதொறும்
புறப்பது வாரமொடு சிறப்புப்பல செய்து
புட்பகம் புக்குநின் னட்புட னிருந்து
விளித்தபின் வாவென வளித்தவற் போக்கி

(வயந்தகனுக்கு அளித்தவை)

வயந்தகன் றனக்கு வழக்குப்புற மாகெனப்
பயம்படு நன்னகர் பதினொன் றீத்து
வைக லாயிரங் கைவயிற் கொடுத்துப்
பிரியா துறைகென வருடலை நிறீஇ

(இசைச்சன் முதலாயினோர் பெற்றவை)

இசைச்சன் முதலா வேனோர் பிறர்க்கும்
பயத்தின் வழாஅப் பதிபல கொடுத்துப்
பெயர்த்தனன் போக்கிப் பிரச்சோ தனனுட்
டருஞ்சிறைக் கோட்டத் திருந்த காலைப்
பாசறை யுழந்த படைத்தொழி லாளரை
ஓசை முரசி னொல்லெனத் தரூஉ
..........................................................
னெச்சத் தோர்கட் கியன்றவை யீத்து
நிச்ச மாயிர முற்றவை நல்கிப்
பக்கற் கொண்டு பாற்படுத் தோம்பி
இலாவா ணகவழிச் சாதக னென்னும்
குலாலற் கேற்பப் பெருங்குய மருளி
இருந்தினி துறைகென விரண்டூ ரீத்து
மகதத் துழந்த மாந்தர்க் கெல்லாம்

---

32. புட்பகம் - ஒருநகரம்.
34. புறம் - இறையிலிநிலம்.
36. வைகல் - நாடோறும். வைகலாயிரம் கொடுத்தல் : 45.
39. பயம் - பலன். பதி - ஊர். 42. பாசறை - படைவீடு.
43. முரசறைந்து வருவித்து.
44. எச்சத்தோர்கட்கு - பரம்பரையோர்க்கு. [4 : 36.
47. இலாவாணகவழி - இலாவாணகநகரத்திலுள்ள. சாதகன்: ச
48. குலாலன் - குயவன். பெருங்குயம் - குயவர்களுக்கு அளிப்பதொரு சிறப்புப்பட்டப்பெயர்.
50. மகதநாட்டுக்குத் தன்னொடு வாணிகர் வடிவாய் வந்துவருந்தியவர்களுக்கெல்லாம்.

தகுநல் விருத்தி தான்பாற் [1] படுத்துத்
தத்த மூர்வயிற் சென்றுவரப் போக்கி
ஆய்ந்த சிறப்பி னாதித்திய கருமற்
கோங்கிய சிறப்பி னோரூர் நல்கி
அத்தறு வாயி லாருயிர் வழங்கிய
சத்திய காயன் மக்களைக் கூஉய்த்
தந்நிலைக் கெல்லாந் தலைமை யியற்றித்
தொன்றிற் கொண்டு தொடர்ச்சியிற் பழையோர்
ஒன்றிற் குதவா ரென்றுபுறத் திடாது
நன்றி தூக்கி நாடிய பின்றை
யூகி தன்னோ டொழிய வேலைப்
பாகியல் படைநர் பலரையும் விடுத்து
மாசின் மாணகக் கோயில் குறுகிக்
குடிப்பெருங் கிழத்திக்குத் தானஞ் செய்கென
நடுக்கமில் சேம நன்னா டருளி

(உதயணன் தன் தேவிமார்க்கு விருத்தியளித்தல்)

வாசவ தத்தைக்கும் பதுமா பதிக்கும்
தேவி விருத்தி யாவன வருளி
ஆடலும் பாடலு மணியினு மிக்கோர்
சேடி மாரையு மிருகூ றாக்கிக்
கொள்கென வருளிக் குறைபா டின்றி
நாணா டோறு மாறா வுவகையொடு
காட்சி பெருமுத லாகக் கவினிய
மாட்சி நீரின் மாண்சினை பல்கிய

51. விருத்தி - சீவித்தற்குரிய நிலமுதலியன.
55. தறுவாய் - சமயம்.
61. தன்னோடொழிய - தன்னிடத்தே இருப்ப.
62. படைநர் - படைத்தலைவர்.
64. குடிப்பெருங்கிழத்திக்கு - தன் தாய்க்கு.
64 - 5. குடிப்பெருங்கிழத்திக்கு அருளி.
71. ஆறா உவகை - அமையாத மகிழ்ச்சி.
72. பெருமுதல் - அடிமரம்.
73. சினை - கிளை. பல்கிய - பலவான.

பி - ம். 1 கொடுத்து.

வேட்கை யென்னும் விழுத்தகு பெருமரம்
புணர்ச்சிப் பல்பூ விணர்த்தொகை யீன்று
நோயி னின்பக் காய்பல தூங்கி
யாழ வற்புக்கனி யூழூழிற் றேர்ந்த
ஓவாது நுகர்ந்து தாவாச் செல்வமொ
டொழிவின் மாநக ரறக்கடந் தாங்கி
ஒழுகுப மாதோ வொருங்குநன் கியைந்தென்.

௯—விருத்திவகுத்தது முற்றிற்று.

---

75. இணர்த்தொகை - கொத்தின் தொகுதி.
76. தூங்கி - தொங்கி.
77. யாழ : அசைநிலை. அற்புக்கனி - அன்பாகிய பழம்.
78. விடாமல் அனுபவித்துக் கெடாத செல்வத்தோடு.
79. அறக்கடம் தாங்கி - தருமமாகிய உரிமையை மேற்கொண்டு.

---

## ௧௦—பிரச்சோதனன் தூதுவிட்டது.

(வாயில் காவலன் தூதர் வந்தமையைத் தெரிவித்தல்)

ஒருங்குநன் கியைந்தவ ருறைவுழி யொருநாள்
திருந்துநிலைப் புதவிற் பெருங்கத வணிந்த
வாயில் காவலன் வந்தடி வணங்கி
ஆய்கழற் காலோ யருளிக் கேண்மதி
உயர்மதி லணிந்த வுஞ்சையம் பெருநகர்ப்
பெயர்வில் வென்றிப் பிரச்சோ தனனெனும்
கொற்ற வேந்தன் றூதுவர் வந்துநம்
முற்றம் புகுந்து முன்கடை யாரென
அந்தளிர்க் கோதையைப் பெற்றது மற்றவள்

---

௧௦—பிரச்சோதனன் தூதுவிட்டது.

[பிரச்சோதனன், நட்புக்கொள்ள விரும்பி உதயணன்பாற் பல பொருள்களோடு பதுமையென்னும் தூதியை விடுத்ததும், அவள் உதயணனைக் கண்டு பேசியதும் பிறவும் இதனால் அறியலாகும்.]

2. புதவு - வாயில். 4. அருளிக்கேள் - கேட்டருள்.
8. முன்கடையார் - தலைவாயிலினிடத்துள்ளார்.
9. வாசவதத்தையைத் தானடைந்ததும்.

தந்தை தந்த மாற்றமுந் தலைத்தாள்
இன்பம் பெருக வெதிர்வனன் விரும்பி

(பதுமையையென்னுந் தூதி)

வல்லை வருக வென்றலின் மல்கிய
மண்ணியன் மன்னர்க்குக் கண்ணென வருந்த
நீதி நன்னூ லோதிய நாவினள்
கற்றுநன் கடங்கிச் செற்றமு மார்வமும்
முற்ற நீங்கித் தத்துவ வகையினும்
கண்ணினு முள்ளே................
குறிப்பி னெச்ச நெறிப்பட நாடித்
தேன்றோய்த் தன்ன கிளவியிற் றெரிபடத்
தான்றெரிந் துணருந் தன்மை யறிவினள்
உறுப்புப்பல வருப்பினு முயிர்முத றிருக்கினும்
நிறுத்துப்பல வூசி நெருங்க வூன்றினும்
கறுத்துப்பல கடிய காட்டினுங் காட்டாது
சிறப்புப்பல செயினுந் திரிந்துபிறி துரையாள்
பிறைப்பூ ணகலத்துப் பெருமக னவன்மாட்டுக்
குறித்தது கூறுதல் செல்லாக் கொள்கையள்
இன்னது செய்கென வேவ லின்றியும்
மன்னிய கோமான் மனத்ததை யுணர்ந்து
முன்னியது முடிக்கு முயற்சிய ளொன்றார்
சிறந்தன பின்னுஞ் செயினு மறியினும்
புறஞ்சொ லாற்றாது புகழுந் தன்மையள்
புல்லோர் வாய்மொழி யொரீஇ நல்லோர்

---

11. எதிர்வனன் - ஏற்று.

13. "ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டுந், தெற்றென்க மன்னவன் கண்" (குறள், 581); "காதிவேன் மன்னர் தங்கள் கண்ணென வைக்கப்பட்ட, நீதி" சீவக. 233.

18. குறிப்பினாலே ஒழிந்தவற்றை வழிப்பட ஆராய்ந்து.

19. கிளவி - பழைய நூல்களிலுள்ள சொற்கள். [சன்பால்.

25. பிறைப்பூண் - சந்திர ஆரம். பெருமகனவன் மாட்டு - அர

26. கூறுதல் செல்லா - கூறாத. 27. செய்க என.

29. முன்னி - முற்பட்டு. அது - கோமான் மனத்தது.

30. மறியினும் - முகங் கொடாதிருப்பினும்.

துணிந்த நூற்பொருள் செவியுளங் கெழீஇப்
பணிந்த தீஞ்சொற் பதுமை யென்னும்
கட்டுரை மகளொடு கருமம் நுனித்து
விட்டுரை விளங்கிய விழுப்புக ழாளரும்
கற்ற நுண்டொழிற் கணக்கருந் திணைகளும்
காய்ந்த நோக்கிற் காவ லாளரும்
தேன்றார் மார்பன் றிருநகர் முற்றத்துக்
கைபுனை தேருங் கண்டு காணார்

(வாசவதத்தைக்குப் பிரச்சோதனன் அளித்த பொருள்கள்)

ஐயைந் திரட்டி யவன வையமும்
ஒள்ளிழைத் தோழிய ரோரா யிரவரும்
சேயிழை யாடிய சிற்றிற் கலங்களும்
பாசிழை யல்குற் றூய ரெல்லாம்
தம்பொறி யொற்றிய தச்சுவினைக் கூட்டத்துச்
செம்பொ னணிகலஞ் செய்த செப்பும்
தாயுந் தோழியுந் தவ்வையு மூட்டுதல்
மேயல ளாகி மேதகு வள்ளத்துச்
சுரைபொழி தீம்பா லுரைதெளித் தாற்றித்
தன்கை சிவப்பப் பற்றித் தாங்காது
மகப்பா ராட்டுந் தாயரின் மருட்டி

---

35. நுனித்து - கூர்மையாக ஆராய்ந்து.

37. கணக்கருந்திணைகளும் : க. 32 : 61 - 2, ச. 2 : 45.

38. காவலாளர்க்குக்காய்ந்து நோக்குதல் இயல்பு; "வெங்கணோக்கிற் குப்பாய மிலேச்சன்" (சீவக. 431); "காரண மின்றியேயுங் கனலெழ விழிக்குங் கண்ணார்" கம்ப.

41. யவன வையம் - யவனதேயத்துத் தச்சர் செய்த தேர்.

43. சேயிழை - வாசவதத்தை.

45. தம்பொறி ஒற்றிய - தமக்குரிய அடையாளங்களைப்பொறித்த.

47. தவ்வை - ஐவகைத்தாயருள் ஒருத்தியின் மகளாய்த் தனக்கு மூத்தவள்; சீவக. 184.

48. மேயலளாகி - பொருந்தாளாய். வள்ளம் - கிண்ணம்.

49. சுரை - பசுவின் முலைக்காம்பு; மு. க. 33 : 69.

49 - 51. "தேம்பெய்து, மணிசெய் மண்டைத் தீம்பா லேந்தி, ஈனுத் தாயர் மடுப்ப" அகநா. ௧௦௫.

முகைப்புரை மெல்விரல் பானய மெய்த
ஒளியுகிர் கொண்டு வளைவா யுறீஇச்
சிறகர் விரித்து மெல்லென நீவிப்
பறவை கொளீஇப் பல்லூழ் நடாஅய்த்
தன்வாய் மழலை கற்பித் ததன்வாய்ப்
பரத கீதம் பாடுவித் தெடுத்த
மேதகு கிளியு மென்னடை யன்னமும்
அடுதிரை முந்நீர் யவனத் தரசன்
விடுநடைப் புரவியும் விசும்பிவர்ந் தூரும்
கேடில் விமானமு நீரியங்கு புரவியும்
கோடி வயிரமுங் கொடுப்புழிக் கொள்ளான்
சேடிள வனமுலைத் [1] தன்மக ளாடும்
பாவை யணிதிறை தருகெனக் கொண்டுதன்
பட்டத் தேவிப் பெயர்நனி போக்கி
எட்டி னிரட்டி யாயிர மகளிரும்
அணங்கி விழையவு மருளான் மற்றென்
வணங்கிறைப் பணைத்தோள் வாசவ தத்தைக்
கொருமக ளாகெனப் பெருமகன் பணித்த
பாவையு மற்றதன் கோயிலுஞ் சுமக்கும்

---

52. முகை - காந்தளின் அரும்பை.
55. பறவைகொளீஇ - பறத்தல் கொள்ளச்செய்து. ஊழ் - முறை.
48 - 58. நைடதம், அன்னத்தைத் தூதுவிட்ட. 7.
59. யவனதேயம் மேல்கடற்கண்ணது.
62. கோடி - முனை; பேரெண்ணுமாம்.
63. தன்மகள் - யவனத்தரசன் மகள்.
65. பட்டத்தேவி - வாசவதத்தையின் தாய்.
66. பதினாறாயிரமகளிரும்.

64 - 9. பாவையை, விளையாட்டுப் பருவப் பேதையர்க்குக் குழந்தை யென்றல் மரபு.

59 - 70. பிரச்சோதனன், தன்மாற்றானாகிய யவனத்தரசனிட்ட பலவகைத்திறைகளையுங் கொள்ளாமல் அவன் மகளுடைய விளையாட்டுப் பாவையை வலிந்துவாங்கித் தன் மகளுக்கு அளித்தனனென்பது இவ் வடிகளால் அறியப்படுகின்றது.

பி - ம். 1 தன்மகளோடும்.

கூனுங் குறளு மேனுங் கூறிய
நருமதை முதலா நாடக [1] மகளிரும்
ஆன்வீற் றிருந்த வரும்பெற லணிகலம்
தான்வீற் றிருத்தற்குத் தக்கன விவையென
முடியுங் கடகமு முத்தணி யாரமும்
தொடியும் பிறவுந் தொக்கவை நிறைந்த
முடிவாய்ப் பேழையு முரசுங் கட்டிலும்
தவிசுங் கவரியுந் தண்கை வாளும்
குடையுந் தேரு மிடையற வில்லா
இருங்களி யானை யினமும் புரவியும்
வேறுவே றாகக் கூறுகூ றமைத்துக்
காவ லோம்பிக் காட்டினிர் கொடுமினென்
றாணை வைத்த வன்னோர் பிறரும்
நெருங்கிமேற் செற்றி யொருங்குவந் திறுப்பப்
பழியி லொழுக்கிற் பதுமை யென்னும்
கழிமதி மகளொடு கற்றோர் தெரிந்த
கோல்வ லாளர் கொண்டனர் புக்குத்தம்
கால்வ லிவுளிக் காவலற் காட்டக்

(பதுமை ஓலையை உதயணனிடம் அளித்தல்)

தொடித்தோள் வேந்தன்முன் றுட்கென் றிறைஞ்சினள்
வடிக்கே ழுண்கண் வயங்கிழை குறுகி
முகிழ்விரல் கூப்பி யிகழ்வில ளிறைஞ்சி
உட்குறு முவண முச்சியிற் சுடர்ந்த
சக்கர வட்டமொடு சங்குபல பொறித்த
தோட்டுவினை வட்டித்துக் கூட்டாக் குருக்கி
ஏட்டுவினைக் கணக்க னீட்டிற் றொற்றிய

72. நருமதை - நாடகக் கணிகையருள் ஒருத்தி; இவள் வரலாற்றை நருமதை சம்பந்தம் (க. 35) என்னும் இந்நூல் உறுப்பாலுணர்க. 78. ஆன் - அவ்விடத்தே. 76. தொடி - வளை.
84. மிக நெருங்கி வந்து தங்க. 85. ஒழுக்கு - ஒழுக்கம்.
87. கோல்வலாளர் - ஏவற்சேவகர்.
89. தொடி - (இங்கே) வீரவளை. துட்கென்று - துணுக்கென்று.
90. வடி - மாவடுவின் பிளவு.

பி. - ம். [1] மகளிரும்வான்.

முடக்கமை யோலை மடத்தகை நீட்டி
மூப்பினு முறையினும் யாப்பமை குலத்தினும்
அன்பினுங் கேளினு மென்றிவை பிறவினும்
..............................................................
மாசனம் புகழு மணிபுனை ந்தியற்றிய
ஆசனத் திழிந்த வைமதிகொ ளிருக்கையன்

(உதயணன் ஓலையை வாங்குதல்)

சினைக்கெடிற் றன்ன செங்கேழ்ச் செறிவிரல்
தனிக்கவின் கொண்ட தகைய வாக
அருமறை தாங்கிய வந்த ணாளரொடு
பொருணிறை செந்நாப் புலவ ருளப்பட
ஏனோர் பிறர்க்கு நாணு டோறும்
கலனிறை பொழியக் [1] கவியி னல்லதை
இலமென மலரா வெழுத்துடை யங்கையின்
ஏற்றனன் கொண்டு வேற்றுமை யின்றிக்
கோட்டிய முடிய னேட்டுப்பொறி நீக்கி
மெல்லென விரித்து வல்லிதி னோக்கிப்

(ஓலையிலெழுதிய செய்தி)

பிரச்சோ தனனெனும் பெருமக னோலை
உரைச்சேர் கழற்கா லுதயணன் காண்க

---

96. முடக்கு - வளைவு. மடத்தகை - பதுமை. நீட்டி - நீட்ட.

92 - 6. கருடனை உச்சியிற் சுமந்த ஓலை ; பொறித்த ஓலை யென்க. வட்டித்து - சுற்றி. ஈடு - இடுதல்.

97 - 8. மூப்பு முதலியன பிரச்சோதனனுக்குரியவை.

99. மாசனம் - மகாசனங்கள்.

101. கெடிறு - ஒருவகைமீன் ; கெளிறென்றும் வழங்கும் ; "இன் கெடிறு சொரிந்த வகன்பெரு வட்டி" (ஐங்குறு. சஎ) ; "குரூஉக் கெடிற்ற குண்டகழி" புறநா. கஅ.

103 - 6. "இலம்படு புலவ ரேற்றகைந் நிறையக், கலம்பெயக் கவிந்த கழறொடித் தடக்கை" மலைபடு. 576 - 7.

107. இலம் - இன்மையையுடையேம். எழுத்து - இரேகை.

108. ஓலையை ஏற்று. 109. கோட்டிய - வணக்கிய.

112. உரை - புகழ்.

பி - ம். 1 கவினியனல்லதை

இருகுல மல்ல திவணகத் தின்மையிற்
குருகுலக் கிளைமை கோடல் வேண்டிச்
சேனையொடு சென்று செங்களம் படுத்துத்
தானையொடு தருத றானெனக் கருமையிற்
பொச்சாப் போம்பிப் பொய்க்களிறு புதைஇ
இப்படித் தருகென வேவினே னமர்களை
அன்றைக் காலத் தந்நிலை நினையா
தின்றைக் காலத் தெற்பயந் தெடுத்த
கோமா னெனவே கோடல் வேண்டினேன்
ஆமா னோக்கி யாயிழை தன்னொடு
மகப்பெறு தாயோ டியானு முவப்பப்
பெயர்த்தெந் நகரி யியற்பட வெண்ணுக
தன்னல திலளே தையலுந் தானும்
என்னல திலனே யினிப்பிற னாகலென்
பற்றா மன்னனைப் பணிய நூறிக்
கொற்றங் கொண்டதுங் கேட்டனென் றெற்றென
யான்செயப் படுவது தான்செய் தனனினிப்

---

113. இருகுலமென்றது தன்குலத்தையும் உதயணன்குலத்தையும். இவணகத்து - இவ்வுலகத்தில்.

114. குருகுலம் - உதயணன்குலம்; ௧. 15 : 25 - 7. கிளைமை - உறவு முறைமை.

116. தருதல் - உன்னைத்தருதல். தான்: அசை.

117. பொச்சாப்பு - கடைப்பிடியின்றி நெகிழ்ந்திருத்தல்; மறதியுமாம். புதைஇ - வீரர்களை மறைத்து.

120. என்னை உன்தந்தையென்றே கோடல் வேண்டினேன்.

122. மகளிர் கண்ணுக்கு ஆமானோக்கையுவமித்தல் மரபென்பதை "ஆமா னனையமென் னோக்கி" (இறை. சூ. 57, மேற்.) என்பதனாலும் அறிக.

122 - 4. என்பட்டத்தேவியும் யானும் மகிழ வாசவதத்தையுடன் இந்நகருக்கு மீண்டும் வருதலை நீ நினைந்திடுக.

125. தையல் - வாசவதத்தை. தான் என்றது உதயணனை.

127. பற்றா மன்னன் - ஆருணி.

129. யான் செயப்படுவது - யான் செய்யவேண்டிய காரியத்தை

பாம்பு மாசும் பகையுஞ் சிறிதென
ஆம்பொரு ளோதின ரிகழா ரதனுந்
தேம்படு தாரோன் றெளிதலொன் றிலனாய்
ஓங்குகுடை நீழ லுலகுதுயின் மடியக்
குழவிகொள் பவரி னிகழா தோம்பிப்
புகழ்பட வாழ்க புகழ்பிறி தில்லை
ஆகிய விழுச்சீ ரரும்பெற லமைச்சன்
யூகியை யெமரொடு முடனே விடுக்க
கரும முண்டவற் காணலுற் றனெனென
ஒருமையிற் பிறவு முரைத்தவை யெல்லாம்
பெருமையிற் கொள்கெனப் பிரியாது புணர்ந்து
மந்திர விழுப்பொருண் மனத்தே யடக்கி
வெந்திறல் வீரன் விளங்கிய முறுவலன்

(உதயணன் பதுமையை வினவுதல்)

ஆனாக் காத [1] லவந்திகை தன்னகர்
மேனாட் காலை வெவ்வழற் பட்ட
தீயுண் மாற்றம் வாயல வெனினும்
உரையெழுதி வந்தவிவ் வோலையு [2] ளுருக்குறை
பழுதா லென்று பதுமையை நோக்கப்

---

130 - 31. "அளையுறை பாம்பு மாசு நெருப்பு, முழையுறை சீயமு மென்றிவை நான்கு, மிளைய வெளிய பயின்றனவென் றெண்ணி, இகழி னிழுக்கந் தரும்" (ஆசா. 84) என்பதை இவ்வடிகளின் பொருள் தழுவிவந்தது.

134 - 5. "காவல், குழவி கொள்பவரி னோம்புமதி" (புறநா. ௫); "குழவிகொள் வாரிற் குடிபுறந் தந்து" பதிற். 6-ஆம்பதிகம்.

137. விடுக்க - அனுப்புக. 138. கருமம் - காரியம்.

139. ஒருமை - ஒன்றுபட்ட தன்மை.

141. மந்திர விழுப்பொருள் - இரகசியமான சிறந்த செய்திகளை; அரசன் திருமுகத்தை மந்திரவோலை யென்றல் மரபு.

142. வீரன் - உதயணன்.

143. அவந்திகை - வாசவதத்தை. நகர் - வீடு.

145. வாயல - உண்மையல்ல.

146. உருக்குறை - எழுதாத காரியம்.

147. என்று உதயணன் நினைந்து. 148. படிமை - பிரதிமை

பி - ம். 1 லவந்தியை 2 ளுறுகுறை.

(பதுமை விடையளித்தல்)

பவழச் செவ்வாய் படிமையிற் றிறந்து
முகிழ்விரல் கூப்பி முற்றிழை யுரைக்கும்
பரும யானையிற் பற்றா ரோட்டிய
பெருமையின் மிக்கவெம் பெருமகன் றன்னோ
டொருநாட்டுப் பிறந்த வுயிர்புரை காதற்
கண்ணாறு கடவுண் முன்னர் நின்றென்
ஒண்ணுதற் குற்றது மெய்கொலென் றுள்ளிப்
படுசொன் மாற்றத்துச் சுடர்முகம் புல்லெனக்
குடைகெழு வேந்தன் கூறாது நிற்பச்
சினப்போர்ச் செல்வ முன்ன மற்றுநின்
அமைச்சரோ டதனை யாராய்ந் தனன்போல்
நூனெறி மரபிற் றானறிவு தளரான்
தொடுத்த மாலை யெடுத்தது போல
முறைமையின் முன்னே தெரிய வவனெம்
இறைமகற் குரைத்தன னித்துணை யளவவள்
மாய விருக்கைய ளாய்வ தாமென
நீட்ட மின்றவ ணீயளை விடினே
கூட்ட மெய்து நாளு மிதுவென
இன்றை நாளே யெல்லை யாகச்
சென்ற திங்கட் செய்தவ னுரைத்தனன்
ஆண மாகிய வருந்தவன் வாய்மொழி
பேணு மாதலிற் பெருமகன் றெளிந்தனன்

---

149. முகிழ் - அரும்பு. முற்றிழை - பதுமை.
150. பருமம் - யானைமேற்றவிசு.
151. எம்பெருமகன் - பிரச்சோதனன்; எழுவாய்.
153. கண்ணாறு கடவுளென்றது, முனிவனை; வெளிப்படை.
155. படுசொன்மாற்றத்து - இறந்தனனென்ற சொல்லால்.
157. 'செல்வ' என்றது உதயணனை. 159. தளராகி.
161. அவன் - அம்முனிவன்.
163. மாய இருக்கையள் - மறைந்திருத்தலையுடையாள்.
164 - 5. அவள் கூட்டமெய்தும் நாளும் இதுவே.
168. ஆணம் - அன்பு; காவலுமாம்; பரி. ௬: 73.
169. பேணுமாதலின் - பேணுவானாதலால்.

ஒத்த தோவது வத்தவ வந்தென
வாழ்த்துபு வணங்கிய வயங்கிழை கேட்பத்

(உதயணன் கூறுதல்)

தாழ்த்துணைத் தலைப்பொறிக் கூட்டம் போலப்
பொய்ப்பின் றுருத்தது செப்பிய பொருளென
உறுதவற் புகழ்ந்து மறுவில் வாய்மொழி
மனத்தமர் தோழரொடு மன்னவன் போந்து
இருக்கிளர் முற்றம் விருப்பொடு புகுந்து

(உதயணன் பண்ணிகாரங்களைக் காணுதல்)

பல்வகை மரபிற் பண்ணி காரம்
செல்வன வெல்லாஞ் செவ்வியிற் கண்டு

(உதயணன் வந்தோரை உபசரித்தல்)

வந்தோர்க் கொத்த வின்புறு கிளவி
அமிர்துகலந் தளித்த வருளின னாகித்
தமர்திறந் தேவி தானுங் கேட்கென
வேறிடம் பணித்தவர் வேண்டுவை நல்கி
யாறுசெல் வருத்த மூறின் றோம்பி

(உதயணன் யூகிக்குக் கூறுதல்)

அவந்தியர் கோமா [1] னருளிட னானெறி
இகழ்ந்துபிழைப் பில்லா வியூகி சென்றிவண்
நிகழ்ந்ததுங் கூறிநின் னீதியும் விளக்கி
நெடித்தல் செல்லாது வாவென வழிநாள்
விடுத்தன னவரொடு விராங்கிழை நகர்க்கென்.

௧௦—பிரச்சோதனன் தூதுவிட்டது முற்றிற்று.

---

171. வயங்கிழை - பதுமை. 172. தாழ் - தாழக்கோல்.
174. தவன் - அம்முனிவனை.
177. பண்ணிகாரம் - பலவகைப் பொருள்.
179. கிளவி - சொல்லை.
183. " ஆறுசெல் வருத்த மகல நீக்கி " பொருந. 93.
185. யூகி : அண்மைவிளி. 186. விளக்கி - விளங்கச்செய்து.
187. நெடித்தல் செல்லாது - தாமதியாமல். வழிநாள் - பின்னாளில். நகர்க்கு - உச்சயினிக்கு.

பி - ம். 1 அருளிய.

## கக—பிரச்சோதனற்குப் பண்ணிகாரம் விட்டது.

விளங்கிழை பயந்த வேந்துபுறங் காக்கும்
வளங்கெழு திருநகர் வல்லே செல்கென

(உதயணன் பிரச்சோதனனுக்கு ஓலை அனுப்புதல்)

நாடுதலை மணந்து நாமுன் றுண்ட
காடுகெழு குறும்புங் கனமலை வட்டமும்
எல்லை யிறந்து வல்லை நீங்கி
அழிந்த காலை யாணை யோட்டி
நெருங்கிக் கொண்ட நீர்கெழு நிலனும்
இவையினி [1] யெங்கோ லோட்டி னல்லதை
தமர்புகத் தரியா வென்றுதா னெழுதிய
வழிபாட் டோலையொடு வயவரை விடுத்துத்

(யூகிக்குக் கூறியன)

கருமமெல்லா மவனொடு நம்மிடை
ஒருமையி னொழியா துரைக்கென வுணர்த்தி

---

கக—பிரச்சோதனற்குப் பண்ணிகாரம் விட்டது.

[உதயணன், பிரச்சோதனன் முதலியோர்க்கு ஏற்ற பலபொருள்களை யூகி முதலியோருடன் விடுத்ததும், தேவிமாரிருவரோடு மகிழ்ந்திருந்ததும் இதனால் அறியலாகும்.]

1. வேந்து - பிரச்சோதனன்.
2. நகர் - உச்சயினி. வல் - விரைவு. என - என்று சொல்லி.
3. 'நாம்' என்றது, தன் முன்னோரையும் உளப்படுத்தி.
4. முல்லையும் குறிஞ்சியும். 7. மருதமும் நெய்தலும்.
9. தமர் - மந்திரிமுதலியோர்.
10. பிரச்சோதனனுக்கு எழுதிய ஓலையாதலின் 'வழிபாட்டோலை' என்றார்.

3 - 10. வத்தநாட்டின் சிலபகுதி முறைபிறழ்ந்து பிரச்சோதனனுடைய ஆட்சிக்குட்பட்டுவிட்டன வென்றும் அவற்றைத் தன்னுடையனவாகச் செய்கவென்றும் அவனுக்கு உதயணன் வயவர்பால் முன்னதாக வழிபாட்டோலையை விடுத்தனனென்று இவ்வடிகளால் தெரிகின்றது. 11. அவனொடு - பிரச்சோதனனோடு.

12. ஒருமையினின்றும் ஒழியாதபடி அவனுக்குச் சொல்லுக வென்று அறிவித்து.

பி - ம்.—[1] எங்கோலாட்டி.

ஏற்றோர்ச் சாய்த்தவிக் குருகுலத் தகத்தோர்
ஆற்றலி லாளன் றேற்றினு மவந்தியர்
ஏழ்ச்சி யின்றிக் கீழ்ப்பட் டொழுகினும்
இகத்த லில்லை யிருதிறத் தார்க்கெனப்
பயத்தொடு புணர்ந்த பழிப்பில் செய்கையின்
நளிபுன லூட்டொடு நகர மறியத்
தெளிவிடை யிட்ட திண்ணிதிற் செய்கெனப்
பல்பொருட் கருமஞ் சொல்லிய பின்னர்

(பிரச்சோதனனுக்கு அனுப்பிய பொருள்கள்)

அருமலை யடுக்கத் தயிரா பதமெனும்
பெருமலைப் பிறந்து பெறுதற் கரிய
தீதுதீர் சிறப்பிற் சிங்கச் சுவணமென்
றோசை போகிய வொண்பொற் கலங்களும்
கலக்கமில் சிறப்பிற் காம்போ சத்தொடு
நலக்காந் தாரமென் றூட்டுப் பிறந்த
இலக்கணக் குதிரை யிராயிரத் திரட்டியும்
ஆருணி வேந்தை வென்றுகைப் படுத்தின
தாரணி புரவி தகைபெறப் பூண்டன
இருநூற் றைம்பதிற் றிரட்டித் தேரும்
ஒருநூ றாகிய வுயர்நிலை வேழமும்
1 கோல மான கோபத்திற் பிறந்தன

---

13. ஏற்றோர் - பகைவரை.
14. அவந்தியர் - பிரச்சோதனன் குலத்தோர்.
13 - 4. ஓர் ஆற்றலிலாளன் - வலியில்லாத ஒருவன்.
15. ஏழ்ச்சி - எழுச்சி ; மேற்படுதல்.
16. இகத்தல் இல்லை - ஒருவரை யொருவர் விட்டு நீங்குதலில்லை.
17. பயம் - பிரயோசனம். [யாக.
19. இடையிட்ட - நடுவே கலந்தவற்றை. திண்ணிதின் - உறுதி
20. யூகிக்குச் சொல்லிய பின்பு. 21. அடுக்கம் - மலைப்பக்கம்.
23 - 4. சிங்கச்சுவணமென்னும் பொன்னாற்செய்த ஆபரணங்
31. உயர்நிலை - ஏழுமுழவுயரம். [களும்.
32. கோபம் - பசுக்கள் விருத்தியாகும் இடம்.

பி - ம். 1 கோலமாண.

பாலவா வேறொடு பதினா றுயிரம்
காவல் வேந்தற்குக் காட்டுபு கொடுக்கெனப்

(வாசவதத்தையின் தாய்க்கு அனுப்பிய மகளிர்)

பாய்புனற் படப்பைப் பாஞ்சா லரசன்
உரிமைப் பள்ளியுட் டெரிவனன் கொண்ட
ஏற்ற கோலத் திளமையொடு புணர்ந்தோர்
நூற்றொரு பதின்மர் கோற்றொடி மகளிருட்
......................................ட் பணைமுலை மகளிரைப்
பாசிழை யாயத்து வாசவ தத்தையைப்
பயந்தினி தெடுத்த வயங்கிழைப் பணைத்தோட்
கோப்பெருந் தேவிக்குக் கொடுக்கெனப் பணித்தே

(கோபாலகன் தாய்க்கு விடுத்த மகளிர்)

ஓரிரு பதின்மரை யாரமர்க் கடந்து
1 கோல்கொள வென்ற கோபா லகனைச்
சால்புளிப் பயந்த சாயாக் கற்பின்
நீல வேற்க ணிறைதொடிக் கீகெனப்

(கோபாலகற்கும் பாலகுமாரற்கும் அனுப்பிய மகளிர்)

பொற்கோங் கேய்ப்ப நற்கல னணிந்த
முப்பதி னிரட்டி முற்றிழை மகளிரைப்
பால குமரற்குங் கோபா லகற்கும்
பால்வே றிவர்களைக் கொடுக்கெனப் பணித்து

(பாதகற்கு அளித்த பொருள்கள்)

முற்பாற் கூறிய வெற்பினுட் பிறந்த

---

33. பால ஆ - பாலையுடைய பசுக்கள்.
34. வேந்தற்கு - பிரச்சோதனனுக்கு.
35. பாஞ்சால் - பாஞ்சாலம். 36. மு. ச. 12: 4. [ருள் ஒருவன்.
44. கோல் - செங்கோல். கோபாலகன் - பிரச்சோதனன் குமார
43 - 6. இருபது மகளிரைக் கோபாலகன் தாய்க்கு ஈகென்று.
47 - 8. "பூத்த கோங்குபோற் பொன் சுமந்துளார்" சீவக.
49. பாலகுமரன் - பிரச்சோதனன் மகன். [419.
51. வெற்பு - ஐராவதமலை ; 21-ஆம் அடியைப்பார்க்க.

பி. - ம். 1 கோள்கொள.

எட்டுநா றுயிர மெரிபுரை சுவணம்
பட்டாங் கிவற்றைப் பரதகற் கீகென

(மற்றத்தம்பியர்க்கு அளித்தன)

மற்றவன் றம்பியர்க் கத்துணைப் போக்கிப்

(சிவேதனுக்கு அளித்த பொருள்கள்)

பதினா றுயிரஞ் [1] சிவேதற் கீத்துப்
பிறவு மின்னவை பெறுவோர்க் கருளி

(யூகியின் புறப்பாடு)

வனப்பொடு புணர்ந்த வையாக் கிரமெனும்
சிலைப்பொலி நெடுந்தேர் செவ்விதி னல்கி
வீயா வென்றி விண்ணுத் தராயணோ
டூகியுஞ் செல்கென வேம்படுந் துரைந்து

(யூகிமுதலியோரை விடுத்தல்)

வினைமேம் படூஉ [2] மேற்றசை நாளுள்
நிகழ்ந்த நன்னா ளறிந்தனர் கொடுப்ப
அப்பா லவர்களைப் போக்கி யிப்பால்

(வாசவதத்தையின் வருணனை)

யாற்றற லன்ன கூந்தல் யாற்றுச்
சுழியெனக் கிடந்த குழிநவில் கொப்பூழ்
வில்லெனக் கிடந்த புருவம் வில்லின்
அம்பெனக் கிடந்த செங்கடை மழைக்கண்

---

52. சுவணம் - சிங்கச்சுவணமென்னும் பொன் ; 23.
55. பதினாறுயிரம் சுவணம். சிவேதன் - ஒருமந்திரி.
57. வையாக்கிரமென்பது அத்தேரின் பெயர்.
58. சிலைப் பொலி - மலைபோல் விளங்குகின்ற.
60. ஊகி - யூகி.
61. தசை - சோதிடநூலுட் கூறப்படும் தசை.
62. அறிந்தனர் கொடுப்ப - சோதிடர் பார்த்துக் கொடுக்க.
64. அறல் - அறுதிபட்ட கருமணல். [உ. 15: 68.
64 - 5. "புனற்சுழி யலைத்துப் பொருந்திய கொப்பூழ்" பெருங்.

பி - ம். 1 சிவேகற்கு. 2 மேற்றிசை.

பிறையெனச் சுடருஞ் சிறுநுதல் பிறையின்
நிறையெனத் தோன்றுங் கறையில் வாண்முகம்
அரவென நுடங்கு மருங்கு லரவின்
பையெனக் கிடந்த வைதேர் தல்குல்
கிளியென மிழற்றுங் கிளவி கிளியின்
ஒளிபெறு வாயி னன்ன வொள்ளுகிர்
வாழையந் தாளுறழ் குறங்கின் வாழைக்
கூம்புமுகி ழன்ன வீங்கிள வனமுலை
வேயெனத் திரண்ட மென்றோள் வேயின்
விளங்குமுத் தன்ன துளங்கொளி முறுவற்
காந்தண்முகி ழன்ன மெல்விரல் காந்தட்
பூந்துடுப் பன்ன புனைவளை முன்கை
அன்னத் தன்ன மென்னடை யன்னத்துப்
புணர்வி னன்ன தண்டாக் காதல்
அணிக்கவின் கொண்ட [1] வதிநா கரிகத்து
வனப்புவீற் றிருந்த வாசவ தத்தையும்

---

68 - 9. பிறையின் நிறை - பூரண சந்திரன். முகத்திற்கு முழுமதி : உ. 15 : 79.

72. மிழற்றுதல் - கொஞ்சுதல். 72 - 3.=உ. 15: 76.

74. வாழையந்தாள் - வாழையின் அடிப்பாகம்.

74 - 5. வாழைக் கூம்பு முகிழ் - வாழைப்பூ ; "அரம்பை முலையினிருந்தவே" (சீவக. 74); "புதல்வ னீன்ற பூங்கண் மடந்தை, முலை வாயுறுக்குங் கைபோற் காந்தள், குலைவாய் தோயுங் கொழுமடல் வாழை" நற். ௩௫௫ : 1-3.

78 - 9. காந்தட் பூந்துடுப்பு - காந்தட்பூங்குலை ; உ. 15 : 73 - 5, அடிக்; "காந்தளந் துடுப்பிற் குவிகுலை யன்ன, செறிதொடி முன்கை" (பட். 153 - 4) ; கலி. ௫௬ : 3 - 4.

80 - 81. "மென்னடைப் பேடை துணைதரத் தற்சேர்ந்த, அன்ன வான் சேவற் புணர்ச்சிபோல்" (கலி. ௧௩௭); "ஆதாம் பெருகுகின்ற வன்பினு லன்ன மொத்தும்" சீவக. 189.

82 - 3. 'அதிநாகரிகி' (உ. 3: 151) என்றார் முன்னும்.

பி - ம். 1 வதிநாகரகத்து.

(பதுமாபதி)

பழிப்பில் காரிகைப் பதுமா பதியுமென்
றிரண்டுணைக் காத லொருதுணைத் தேவியர்
முட்டில் செல்வமொடு முறைமையின் வழிபட

(உதயணன் வாசவதத்தையோடும் பதுமாபதியோடும் பொழுது போக்கல்)

[1] மதுக மதிர முதலாக் கூறும்
பதனுறு நறுங்கள் பட்டாங்கு மடுப்ப
உண்டுமகிழ் தூங்கித் தண்டா வின்பமொடு
பண்கெழு முழவின் கண்கெழு பாணியிற்
கண்கவ ராடல் பண்புளிக் கண்டும்
எல்லெனக் கோயிலுள் வல்லோன் வகுத்த
சுதைவெண் குன்றச் சிமைபரந் திழிதரும்
அந்தர வருவி வந்துவழி நிறையும்
பொற்சுனை தோறும் புக்குவிளை யாடியும்
அந்தர மருங்கி னிந்திரன் போலப்
புலந்தும் புணர்ந்துங் கலந்துவிளை யாடியும்
நாளு டோறும் நாள்கழிப் புணரா
தானுது நுகர்பவா லன்புமிகச் சிறந்தென்.

கக—பிரச்சோதனனுக்குப் பண்ணிகாரம் விட்டது முற்றிற்று.

---

87. மதுகம் மதிரம் என்பன கள்ளின் விசேடங்கள்; மதுகமதிரம் - இருப்பை மரத்தின் சம்பந்தமான கள்ளெனினுமாம்.
88. பதன் - பக்குவம். 90. பாணி - தாளம்.
93. சுதை வெண் குன்றம் - செய்குன்று. சிமை - உச்சி.
95. பொற்சுனை - அழகிய சுனை.
98. நாள் கழிப்பு - நாள் கழிதலை.
99. நுகர்ப - உதயணனும் தேவிமாரும் அனுபவிப்பர்.

பி - ம். 1 மதூஉமதுகம்.

## கஉ—பந்தடி கண்டது.

(வாசவதத்தையும் பதுமாபதியும் பந்தடி காணுதல்)

அன்புமிகச் சிறந்தாண் டமருங் காலை
மன்பெருஞ் சிறப்பின் மறப்போ ருதயணன்
அருமை சான்ற வாருணி யரசன்
உரிமைப் பள்ளியுட் டெரிவனன் கொண்ட
ஆயிரத் தெண்ம ரரங்கியன் மகளிர்
மாசி றாமரை மலர்மக ளனையோர்
ஆடலும் பாடலு நாடொறு நவின்ற
நன்னுதன் மகளிரை மின்னேர் நுண்ணிடை
வாசவ தத்தைக்கும் பதுமா பதிக்கும்
கூறுநனி செய்து வீறுயர் நெடுந்தகை
கொடுத்த காலை யடுத்த வன்போ
டரச னுலாவெழு மற்ற நோக்கித்
தேவிய ரிருவரு மோவியச் செய்கையின்
நிலாவிரி முற்றத்துக் குலாவொ டேறிப்
பந்தடி காணிய நிற்ப விப்பால்

(வயந்தகன் உதயணனுக்குக் கூறுதல்)

வெங்கோ லகற்றிய வென்றித் தானைச்

---

கஉ—பந்தடி கண்டது.

[தேவியரிருவரும் தோழிமார்களோடு இருகூறாகிப் பிரிந்து நின்று பந்தடிக்க முயல்வதனை வயந்தகனாலறிந்த உதயணன், தான் பெண்ணுருக்கொண்டு அவர்களறியாதபடி, ஒருபிடிமீதேறி ஒருசார் வந்திருந்து, இராசனை முதலியோருடைய பந்தடியையும் அவருளொருத்தியும் கட்டழகியுமாகிய கோசலத்தரசன் மகளுடைய பந்தடியையும் கண்டு வியந்து அவளை விரும்பினனென்பது இதனாலறியலாகும்.]

4. மு. ச. 11 : 36. தெரிவனன் - ஆராய்ந்து.
5. அரங்கு - நாடகசாலை. 7. நவின்ற - பழகிய.
10. கூறு - பங்கு. நெடுந்தகை - உதயணன்.
10 - 11. = ச. 9 : 68 - 70. 12. அற்றம் - சமயம்.
13 - 4. "ஓவச் செய்தியி னொன்றுநினைந் தொற்றி" அகநா. ரு.
14. குலாவொடு - குலாவுதலோடு. 15. காணிய - காண.

செங்கோற் சேதிபன் செவிமுதற் சென்று
வயந்தக னுரைக்கு நயந்தனை யருளின்
மற்றுநின் றோழியர் பொற்றொடிப் பணைத்தோட்
டோழியர் தம்மோ டூழூ ழிகலிப்
பந்துவிளை யாட்டுப் பரிந்தன ரதனாற்
சிறப்பின் றுலாப்போக் கறத்தகை யண்ணனின்
மாண்குழைத் தேவிய ரிருவரு மிகறலிற்
காண்டகை யுடைத்தது கரந்தனை யாகி
வடிவேற் றடக்கை வத்தவ ரிறைவ
பிடிமிசை வந்து பிணாவுரு வாகிச்

(உதயணன் மறைந்துசென்று பந்தடி காணல்)

சென்றனை காண்கென நன்றெனை விரும்பிப்
படையுலாப் போக்கி யிடைதெரிந் திருந்தாங்
கியாவரு மறியா வியல்பிற் கரந்து
காவலன் பிடிமிசைக் காண்டக வேறிப்
பல்வகை மகளிரொடு பையெனச் சென்றுதன்
இல்லணி மகளிரொ டியைந்தன னிருப்ப
இகலும் பந்தி னிருவரும் விகற்பித்
தடிநனி காண்புழி யணங்கோர் சாயும்

(இராசனை)

கொடிபுரை நுண்ணிடைக் கொவ்வைச் செவ்வாய்

17. சேதிபன் - உதயணனுடைய.

16 - 7. ஆருணியின் கொடுங்கோலை அகற்றினமையால், 'வெங்கோலகற்றிய...சேதிபன்' என்றார்; சு. 2 : 3 - 6, பார்க்க.

19. நின் தோழியர் - உன் தேவிமார்.

20. ஊழூழ் - முறை முறையாக.

21. பந்துவிளையாடுதலில் அன்புற்றாராகையால்.

24. அது காணுந்தகுதியையுடையது; ஆதலால் உன்னுருவை [மறைத்து.

26. பிணாவுருவாகி - பெண்வேடம் பூண்டு: "பெண்ணும் பிணாவும் மக்கட் குரிய" தொல். மரபு. சூ. 61.

28. படையுலாப் போக்கி - உடன்வருஞ் சேனையை உலாவ அனுப்பி. இடைதெரிந்து - சமயம் அறிந்து.

30. காண்தக - அழகுபொருந்த.

33. இருவரும் - வாசவதத்தையும் பதுமாபதியும்.

மதுநாறு தெரியன் மகதவன் றங்கை
பதுமா பதிதன் பணியெதிர் விரும்பி
விராய்மலர்க் கோதை யிராசனை யென்போள்
கணங்குழை முகத்தியை வணங்கினள் புகுந்து
மணங்கமழ் கூந்தலும் பிறவுந் திருத்தி
அணங்கெனக் குலாஅ யறிவோர் புனைந்த

(பந்துகள்)

கிடையும் பூளையு மிடைவரி யுலண்டும்
அடையப் பிடித்தவை யமைதியிற் றிரட்டிப்
பீலியு மயிரும் வாலிதின் வலந்து
நூலினுங் கயிற்றினு நுண்ணிதிற் சுற்றிக்
கோல மாகக் கொண்டனர் பிடித்துப்
பாம்பின் றோலும் பீலிக் கண்ணும்
பூம்புன லுரையும் புரையக் குத்திப்
[1] பற்றிய நொய்ம்மையிற் பல்வினைப் பந்துகள்
வேறுவே றியற்கைய கூறுகூ றமைத்த
வெண்மையுஞ் செம்மையுங் கருமையு முடையன
தண்வளி யெறியினுந் தாமெழுந் தாடுவ
கண்கவ ரழகொடு நெஞ்சசுக லாதன
ஒண்பந் தோரேழ் கொண்டன ளாகி

---

36. மகதவன் - மகததேயத் தலைவனாகிய தருசகன்.
37. பணி - கட்டளை.
38. விராய்மலர் - ஒருவகைமலர்; "விராய்மலர்ப்பூங் குழலிபங் கன்" கூர்ம.
39. வீரர் போர்த்தொடக்கத்தில் தம் தலைவரை வாழ்த்துதலு வணங்குதலும் இயல்பு. இதுவும் விளையாட்டுப் போராதலால் இவள் பதுமாபதியை வணங்கினள்.
41. அணங்கு - தெய்வப்பெண்.
42. கிடை - நெட்டி. பூளை - பஞ்சு. உலண்டு - உலண்டு நூல்; அதனாற்செய்யப்பட்ட பட்டாடையுமாம்; ஆகுபெயர்.
44. வலந்து - சுற்றித் தெற்றிக் கட்டி.
48. குத்தல் - தைத்தல் விசேடம்.
49. நொய்ம்மை - கனமின்மை.
52. தண்வளி யெறியினும் - சிறுகாற்றடிப்பினும்.

பி - ம். 1 பாறிய.

ஒன்றொன் றொற்றி யுயரச் சென்றது
பின்பின் பந்தொடு வந்துதலை சிறப்பக்

(இராசனை பந்தடித்தல்)

கண்ணிமை யாம லெண்ணுமி னென்று
வண்ண மேகலை வளையொடு சிலம்பப்
பாடகக் கான்மிசைப் பரிந்தவை விடுத்தும்
சூடக முன்கையிற் சுழன்றுமா றடித்தும்
அடித்த பந்துக ளங்கையி னடக்கியும்
மறித்துத் தட்டியுந் தனித்தனி போக்கியும்
பாயிர மின்றிப் பல்கல னொலிப்ப
ஆயிரங் கைநனி யடித்தவ ளகல

(காஞ்சனமாலையின் பந்தடி)

அன்ன மென்னடை யவந்திகை யுவந்தவள்
கண்மணி யனைய வொண்ணுதற் பாவை
காஞ்சன மாலை வாங்குபு கொண்டு
பிடித்த பூம்பந் தடித்துவிசும் பேற்றியும்
அடித்த பந்தால் விடுத்தவை யோட்டியும்
குழன்மேல் வந்தவை குவிவிரற் கொளுத்தியும்
நிழன்மணி மேகலை நேர்முகத் தடித்தும்
கண்ணியிற் சார்த்தியுங் கைக்குட் போக்கியும்
உண்ணின் றிருத்தியும் விண்ணுறச் செலுத்தியும்
வேயிருந் தடந்தோள் வெள்வளை யார்ப்ப
ஆயிரத் தைந்நூ றடித்தன ளகலச்

(அயிராபதியின் பந்தடி)

செயிர்தீர் பதுமைதன் செவிலித் தாய்மகள்
அயிரா பதியெனு மம்பணைத் தோளி

---

57. 'கண்ணிமையாம லெண்ணுமின்' என்றது, அங்குள்ளாரை நோக்கி இராசனை கூறியது.

59. பாடகம் - ஒருவகைக் காலணி.

60. சூடகம் - ஒருவகை முன் கையணி.

61. அங்கை அகங்கை - உள்ளங்கை.

63. பாயிரமின்றி - பந்தடித்தற்குரிய முன்னுரைகளைப் பேசாமல்.

65. அவந்திகை - வாசவதத்தை. 71. நிழல் - ஒளி.

72. கண்ணி - மாலை. 77. பணை - மூங்கில்.

மானேர் நோக்கிற் கூனி மற்றவள்
தானேர் வாங்கித் தனித்தனி போக்கி
நாற்றிசைப் பக்கமு நான்கு கோணமும்
காற்றினுங் கடிதாக் கலந்தன ளாகி
அடித்தகைத் தட்டியுங் குதித்துமுன் புரியா
அகங்கை யொட்டியும் புறங்கையிற் புகுத்தியும்
தோண்மேற் பாய்ச்சியு மேன்மேற் சுழன்றும்
கூன்மேற் புரட்டியுங் குயநடு வொட்டியும்
வாக்குறப் பாடியு மேற்படக் கிடத்தியும்
நோக்குநர் மகிழப் பூக்குழன் முடித்தும்
பட்ட நெற்றியிற் பொட்டிடை யேற்றும்
மற்றது புறங்கையிற் றட்டின ளெற்றியும்
முன்னிய வகையான் முன்னீ ராயிரங்
கைந்நனி யடித்துக் கையவள் விடலும்

(விச்சுவலேகையின் பந்தடி)

பேசிய முறைமையி னேசா நல்லெழில்
வாசவ தத்தைக்கு வலத்தோ ளனைய
அச்சமில் காரிகை விச்சுவ லேகையென்
றற்ற நாமப் பொற்றொடிக் குறளி
யாணிவ ணிற்பக் கூனியைப் புகழ்தல்
ஏலா தென்றவள் சேலந் திருத்திக்
கருவிக் கோனனி கைப்பற் றினளாய்
முரியுங் காலைத் தெரிய மற்றதிற்
றட்டின ளொன்றொன் றுற்றன ளெழுப்பிப்
பத்தியிற் குதித்துப் பறப்பன வாகியும்
வாங்குபு கொண்டு வானவிற் போல
நீங்கிப் புருவ நெரிவுட னெற்றியும்
முடக்குவிர லெற்றியும் பரப்புவிரற் பாய்ச்சியும்
தனித்துவிரற் றரித்து மறித்தெதி ரடித்தும்

---

80. கோணம் - தென்கிழக்கு முதலிய விதிக்கு ; மூலையெனவழங் [கும்.
85. குயம் - கொங்கை. 86. வாக்கு - திருத்தம்.
89. எற்றியும் - அடித்தும். 95. குறளி - குறிய வடிவமுடையாள்.
97. ஏலாது - பொருந்தாது. சேலம் - ஆடை.
98. கருவிக்கோல் - பந்தடிக்கும் கோல். 101. பத்தி - வரிசை.

குருவிக் கவர்ச்சியி னதிரப் போக்கியும்
அருவிப் பரப்பின் முரியத் தாழ்த்தியும்
ஒருபாற் பந்தி னொருபாற் பந்துற
இருபாற் றிசையு மியைவன வாகிப்
பாம்பொழுக் காக வோங்கின வோட்டியும்
காம்பிலை வீழ்ச்சியி னாங்கிழிந் திட்டும்
முன்னிய வகையான் முன்னீ ராயிரத்
தைந்நூ றடித்துப் பின்னவள் விடலும்

(ஆரியையின் பந்தடி)

சீரியல் பதுமைதன் சிந்தைக் கொப்பெனும்
காரியை மயிலன வாரியை புகுதா
நுணங்குகொடி மருங்கு நோவ வசைஇ
மணங்கமழ் கூந்தல் வகைபெற முடித்தும்
சூடக மேற்றியும் பாடகந் திருத்தியும்
நாடக மகளிரி னன்கன முலாவியும்
இருகையு மடிப்ப விசும்பொடு நிலத்திடை
திரிபுவீழ் புட்போ லொருவழி னில்லா
தெழுந்துவீழ் பந்தோ டெழுந்துசெல் வனள்போற்
கருதரு முரிவொடு புருவமுங் கண்ணும்
வரிவளைக் கையு மனமு மோட
அரியார் மேகலை யார்ப்பொடு துளங்கவும்
வருமுலை துளும்பவுங் கூந்த லவிழவும்
அரிமலர்க் கோதையொ டணிகலந் திருகவும்
இருந்தன ணின்றன ளென்பதை யறியார்
பரந்த பல்லோர் வடிவின ளாகித்
திரிந்தன ளடித்துத் திறந்துனி மறித்தும்
முரியுந் தொழிலொடு மூவாயி ரங்கை
முறையி னேற்றிப் பந்துநிலைத் திடலும்

---

106. கவர்ச்சி - பலவழியான செலவு. 107. முரிய - வளைய.
110. பாம்பொழுக்கு - பாம்பின் செலவுபோல வளைந்த செலவு.
111. காம்பு - மூங்கில். வீழ்ச்சி - வீழ்தல்.
115. கார் - கார்காலம். 116. அசைஇ - நடந்து.
119. உலாவியும் - நடித்தும். 121. திரிபு - திரிந்து.
126. வருதல் - வளர்தல்.

மற்றவை தொலையச் செற்றெளி திகழத்
தனக்கமை வெய்திய தவளையங் கிண்கிணி
வனப்பெடுத் துரைஇ வையகம் புகழினும்
புகழ்ச்சி முற்றாப் பொருவரு வனப்பிற்
றிருக்கண் டன்ன வுருக்கிளர் கண்ணி
கோசலத் தரசன் கோமகட் பூவணி
வாசச் சுரிகுழன் மாணிழை யொருத்தியென்
றுங்கொரு காரணந் தவள்வயி னிருந்தோள்

(கோசலத்தரசன் மகளின் பந்தடி.)

பூங்குழை தோற்றது பொறாஅ நிலைமையள்
எழுந்தன டேவியைப் பணிந்தனள் புகுந்து
மடந்தைய ராடலை யிகழ்ந்தன ளகையா
வந்தரி வையரெதிர் [1]வாசதி வகையாற்
பந்தா டலக்கண நின்றுபல பேசி
இளம்பிறைக் [2]கோடெனக் குறங்கிரு பக்கமும்
விளங்கியோர் பிறழ வேற்கணி யிருந்து
முரண்டெழு வனப்பின் மூவே ழாகிய
திரண்டவொண் பந்து தெரிவன வாகி
ஓங்கிய வாடலி னொன்றிது வாகலிற்
றன்சம நின்று பாங்குறப் பகுத்து
மண்டல மாக்கி வட்டணை முகத்தே
கொண்டனள் போக்கிக் குறிவயிற் பெயர்த்துப்
பூவீழ்த் தெழுப்பிப் புறங்கையின் மறாஅவை
தான்மறித் தடித்துத் தருக்கியி னெழவெழக்
காம தேவியர் காண்பன றுவப்பப்
[3] பூமி தேவியிற் புறம்போ வனள்போற்
பைய வெழுவோள் செய்தொழிற் கிடாக்

147 - 60. நிரணிறை ; மான் முதலியவற்றை நோக்கு முதலிய வற்றால் வென்றாள்.

161. தவளைக்கிண்கிணி: க. 53 : 166, அடிக் ; சீவக. 243, 3126.

168. பூங்குழை - வாசவதத்தை.

171. சதி - தாளவொற்று. 173. குறங்கு - தொடை.

181. பூ - பூமி.

பி - ம். 1 வாசந்திவகை. 2 கொண்டென. 3 பூமதேவி.

கையுங் காலு மெய்யு மியையக்
கூடுமதி முகத்திடைப் புருவமுங் கண்ணும்
..................................................
ஆடன் மகளி ரவிநயம் வியப்பவும்
பேசிய விலயம் பிழையா மரபிற்
பாடன் மகளிர் பாணி யளப்பவும்
மருவிய கதியிற் கருவிக் கூற்றோர்
இருபதம் பெயர்க்கு மியல்கொண் டாடவும்
சிந்தை பெயராத் திறத்திற மவையவை
பந்தாட் டியலோர் தந்தமி லுவப்பவும்
ஓதிய முறைமையின் யாதுங் காணார்
தேவிய ரிருவருந் திகைத்தன ரிருப்பவும்
காந்தண் முகிழ்நனி கவற்றுமெல் விரலின்
ஏந்தின ளெடுத்திட் டெறிவுழி முன்கையிற்
பாய்ந்தவை நிலத்தினும் விசும்பினு மோங்கிச்
சூறை வளியிடைச் சுழலிலை போல
மாறுமா றெழுந்து மறிய மறுகி
ஏறுப விழிபவா காய நிற்பன
வேறுபடு வனப்பின் மும்மைய வானவை
ஏர்ப்பொலி வளைக்கை யிரண்டே யாயினும்
தேர்க்கா லாழியிற் சுழன்றவை தொழில்கொள
ஓடா நடவா வொசியா வொல்காப்
பாடாப் பாணியி னீடுயிர்ப் பினளாய்க்
கண்ணின் செயலினுங் கையின் றொழிலினும்
விண்ணவர் காணினும் வீழ்வர்கொல் வியந்தெனப்
பாடகத் தரவமுஞ் சூடகத் தோசையும்
ஆடுபந் தொலியுங் கேட்பி னல்லதை

---

189. இலயம் - தாளம்.

191. கருவிக் கூற்றோர் - தண்ணுமைமுதலிய வாத்தியவகைகளை யுடையோர்.

200. சூறைவளி - சுழல்காற்று ; சூறுவளி.

204. ஏர்ப்பொலி - அழகாற் பொலிந்த.

205. தேர்க்காலாழி - தேருருளை. 209. வீழ்தல் - விரும்புதல்.

ஐயபந் தெழுவெழ வதனுட னெழுதலிற்
கையுங் காலு மெய்யுங் காணார்
மண்ணினள் விண்ணின ளென்றறி யாமை
ஒண்ணுதன் மாதரை யுள்ளுழி யுணரும்
தன்மையு மரிதெனத் தனித்தனி மயங்கி
மாயங் கொல்லிது மற்றொன் றில்லென
ஆய நவின்றமை யறிந்தன ளாகிச்
சொல்லிய மகளி ரெல்லாங் காணச்
சில்லரிக் கண்ணி மெல்லென முரியாச்
செந்தளிர் பொருவச் சிவந்த கையாற்
கந்துக மேந்திக் கசிந்த கோதைக்கு
மிகைக்கை காணார் நகைப்படு மவளென
உகைத்தெழு பந்தி னுடனெழு வனபோற்
சுழன்றன தாமங் குழன்றது கூந்தல்
அழன்றது மேனி யவிழ்ந்தது மேகலை
எழுந்தது குறுவிய ரிழிந்தது சாந்தம்
ஓடின தடங்கண் கூடின புருவம்
அங்கையி னேற்றும் புறங்கையி னோட்டியும்
தங்குற வளைத்துத் தான்புரிந் தடித்தும்
இடையிடை யிருகா றெரிதர மடித்தும்
அரவணி யல்குற் றுகினெறி திருத்தியும்
நித்திலக் குறுவியர் பத்தியிற் றுடைத்தும்
பற்றிய கந்துகஞ் சுற்றுமுறை யுரைத்தும்
தொடையுங் கண்ணியு முறைமுறை யியற்றியும்
அடிமுதன் முடிவரை யிழைபல திருத்தியும்
படிந்தவண் டெழுப்பியுங் கிடந்தபந் தெண்ணியும்
தேமலர்த் தொடைய றிறத்திறம் பிணைத்தும்
பந்து [1] வர ஞெக்கியும் பாணிவர நொடித்தும்

212. ஐய - மெல்லிய. 215. உள்ளுழி - உள்ள இடம்.

223. மிகைக் கை - மிகுதியாகிய கை.

236. இழை - ஆபரணம். 239. பாணி - தாளம்.

பி - ம். 1 வரநோக்கியும்.

சிம்புளித் தடித்துங் கம்பிதம் பாடியும்
ஆழியென வுருட்டியுந் தோழியொடு பேசியும்
சாரிபல வோட்டியும் வாழியென வாழ்த்தியும்
அந்தளிர்க் கண்ணி யவந்திகை வெல்கெனப்
பைந்தொடி மாதர் பற்பல வகையால்
எண்ணு மிரங்கை யேற்றின ளேற்றலும்

(வாசவதத்தையின் எண்ணம்)

கண்ணார் மாதர் மதிமுகங் காணிற்
காவன் மன்னன் கலங்கலு முண்டெனத்
தேவியு முணர்வா டீதென நினைஇ

(உதயணன் கோசலத்தரசன் மகளை விரும்பல்)

நின்ற வளவிற் சென்றவண் முகத்தே
ஒன்றிய வியல்போ டொன்றுக் கொன்றவை
ஒளித்தவும் போலுங் களித்தவும் போலும்
களித்தவை யன்றி விளித்தவும் போலும்
வேலென விலங்குஞ் சேலென மிளிரும்
மாலென நிமிருங் காலனைக் கடுக்கும்
குழைமே லெறியுங் குமிழ்மேன் மறியும்
மலருங் குவியுங் கடைசெல வளரும்
சுழலு நிற்குஞ் சொல்வன போலும்
கழுநீர் பொருவிச் செழுநீர்க் கயல்போல்
மதர்க்குந் தவிர்க்குஞ் சுருக்கும் பெருக்கும்

---

240. சிம்புளித்து - கண்ணை மூடிக்கொண்டு; கம்ப. மிதிலைக் காட்சி. 132; "சிம்மாந்துஞ் சிம்புளித்தும்" (தே.) கம்பிதம் - நடுக்க [முள்ள பாட்டு.

241. ஆழி - உருளை.

246. மாதர் - இப்பெண்ணினுடைய.

254. மாலென நிமிருமென்பதனோடு, "நீர்செல நிமிர்ந்த மாஅல் போல" (முல்லை. 3) என்பது ஒப்புநோக்கற்பாலது.

255 - 8. "குழைபொருது நீண்டு குமிழ்மேன் மறியா, உழை பொருதென் னுள்ளங் கவரா-மழைபோற், றருநெடுங்கைச் சென்னி தமிழ்நா டனையார், கருநெடுங்கண் போலுங் கயல்" (தண்டி. மேற்.); "முத்தின் கனங்குழையை யுங்குமிழை யுங்கதுவி முட்டுங் கருங்கயல்கள்" ஒட்டக்கூத்தர் பாடல்.

*இவையமுத வினியன வவிநயப் பல்குறி*
*நவையற விருகண் சுவையொடு தோன்ற*
*நீலப் பட்டுடை நிரைமணி மேகலை*
*கோலமொ டிலங்கத் தானுயிர்ப் பாற்றி*
*ஓடரிக் கண்ணி யுலாவர நோக்கிப்*
*பூண்டிகழ் கொங்கைப் புயலேர் கூந்தல்*
*மாண்குழை புதுநலங் காண்டகச் சென்ற*
*உள்ளந் தன்னை யொருப்படுக் கல்லா*
*வெள்ளத் தானை வேந்தன் பெயர்ந்து*
*பிடிமிசைத் தோன்றலும் பேதையர் தந்தம்*
*இடவயிற் பெயர்ந்தன ரெழுந்தனர் விரைந்தென்.*

கஉ—பந்தடி கண்டது முற்றிற்று.

---

263. *உயிர்ப்பாற்றி - உயிர்த்தலைச் செய்து.*
266. *புதுநலத்தினிடத்தே சென்ற.*
267. *ஒருப்படுக்கல்லா - ஒருவழிப்படுத்தி நீட்கமுடியாத.*
268. *வேந்தன் - உதயணன்.*

---

## க௩—முகவெழுத்துக் காதை.

(உதயணன் செயல்)

*விரைந்தனர் பெயர வேந்தன் காம*
*சரம்பட நொந்து தளர்வுட னவனோர்*
*பள்ளி யம்பலத் துள்ளினி திருந்து*

---

க௩—முகவெழுத்துக் காதை.

**[உதயணன், கோசலந்நாசன் மகளை வாசவதத்தைக்கு வண்ண மகளாக இருக்கும்படி அமைத்து, அவள் வாசவதத்தையின் முகத்தில் எழுதிப்புனைந்த அலங்காரத்தைத் தான் திருத்துபவன்போலத் தன் கருத்தை யவனபாஷையிலெழுதி அம்மகளுக்குத் தெரிவித்ததும், அதனை அழித்துத் தன்கருத்தை அவள் அந்தப்பாஷையிலெழுதி அவனுக்குத் தெரிவித்ததும், இறுதியில் அவளுடைய உடன்பாட்டை அவன் பெற்றதும், அதனையறிந்த வாசவதத்தை ஊடியதும் இதனால் அறியலாகும்.]**

3. *பள்ளியம்பலத்தை அவையென்பர்* ; 19.

மேவத் தருமுறைத் தேவியர் வருகென
ஏவற் சிலதியர் தாமவர்க் குரைப்பக்

(தேவியர் இருவரும் உதயணன்பால் வருதல்)

காவல் வேந்தன் கரைந்ததற் கயிர்த்து
மேவுகந் துகத்தியைக் கோயிலுண் மறைத்து
மறுவி றேவிய ரிருவரும் வந்து
திருவமர் மார்பனைத் திறத்துளி வணங்கலிற்

(தோழியரை உதயணன் வருவித்து வினாதல்)

பெருகிய வனப்பிற் பேணுந் தோழியர்
புகுதுக வென்றலும் புக்கவ ரடிதொழச்
சுற்றமும் பெயருஞ் சொல்லுமி னீரென
முற்றிழை மாதரை முறைமுறை வினவலின்
மற்றவ ரெல்லா மறுமொழி கொடுப்பக்

(உதயணன் வாசவதத்தையை வினாதல்)

கொற்றவ னுரைக்கும் பொற்றொடித் திரளினைப்
பாரான் பார்த்தொரு பைந்தொடி நின்னொடு
வாரா தொழிதல் கூறெனக் கூறலும்

(வாசவதத்தை சினந்துரைத்தல்)

[1] ஒழிந்த மாதர்க் குரைப்பதை யுண்டெனிற்
றனித்துநீ கண்டரு ளவைக்கு ளென்னெனப்

---

5. ஏவற் சிலதியர் - ஏவிய தொழிலைச் செய்யும் மகளிர்.

6. அரசன் தம்மை அழைத்ததற்கு ஐயுற்று.

7. மேவுதல் - விரும்புதல். கந்துகத்தியென்றது, ஒருமுறையில் எண்ணாயிரங்கை பந்தடித்த கோசலத்தரசன் மகளை.

11. என்றலும் - என்று உதயணன் கூறலும்.

13. வினவலின் - அவன் கேட்டமையின்.

14. மற்று: அசை. 16. பாரானாகி.

16 - 7. ‘ஒருபைந்தொடி...கூறு’ என்பது உதயணன் வாசவதத்தையை நோக்கிக்கூறிய கூற்று.

18. உரைப்பதை - சொல்லுஞ் செய்தி.

19. அவைக்குள் காணுதல் என்?; அவை - பள்ளியம்பலம்; 3.

பி - ம். 1 ஒழித்த.

(உதயணன் கூறுதல்)

படைமலி நயனங் கடைசிவப் பூரும்
திறனவண் மொழியொடு தெளிந்தன ளாகிப்
பற்றா மன்னன் படைத்தவும் வைத்தவும்
உற்றவ ளறியு முழையரிற் றெளிந்தேன்
மதிவே றில்லென வாசவ தத்தையும்
கருமந் முன்னிக் குருசில்..................
...................................................

(உதயணன் மானனீகையை வினவுதல்)

பூக்கமழ் குழலி புகுந்தடி வணங்கலின்
நோக்கின னாகி வேற்படை வேந்தன்
பைந்துணர்த் தொடையற் பாஞ்சா லரசற்கு
மந்திர வோலையும் வழக்கறை காவலும்
தந்திர நடாத்தலுந் தகையுடைக் கோலம்
அந்தப் புரத்திற் கணிதலு மெல்லாம்
நின்னைச் சொல்லுவர் நன்னுதல் பெயரும்
துன்னருஞ் சுற்றமு முன்னுரை யென்றலும்

20 - 21. நயனம் கடைசிவப்பூருந் திறன் - கோவக் குறிப்பு; “வடமீன் கற்பின் மனையுறை மகளிர், மாதர்வாண் முகத்து மணித் தோட்டுக் குவளைப், போதுபுறங் கொடுத்துப் போகிய செங்கடை” (சிலப். ௫: 229-31); “காதலன்மே லூடல் கரையிறத்தல் காட்டுமால், மாதர் நுதல்வெயர்ப்ப வாய்துடிப்ப—மீது, மருங்குவளை விண்மூரிய வாளிகொ நீண்ட, கருங்குவளை சேந்த கருத்து” தண்டி. மேற்.

22. பற்றாமன்னன் - ஆருணி.

23. அவள் அறிவாள்; இதனை உழையராலறிந்தேன்.

26. கோசலத்தரசன் மகள் வந்து வணங்கலின்.

28. பாஞ்சாலரசன் - ஆருணி; ௪. 11 : 35.

29. மந்திரவோலை - செய்திகளை எழுதும் ஓலை. வழக்கு அறை - வழக்குக்களைச் சொல்லுதற்குரிய.

30. தந்திரம் - சேனை.

31. அந்தப்புரம் - அந்தப்புரமாதர்; ஆகுபெயர். [பெயரும்.

32. நன்னுதல்: முன்னிலைப்பெயராய் நின்றது. உன்னுடைய

33. உரை - சொல்லுவாய்.

(மானனீகை கூறல்)

வாட்டிறல் வேந்தனை வணங்கித் தன்கை
கூட்டின ளாகி மீட்டவண் மொழிவோள்
கோசலத் தரசன் மாபெருந் தேவி
மாசில் கற்பின் [1] வசுந்தரி யென்னும்
தேனிமிர் கோதை சேடி யேன்யான்
மான னீகை யென்பதென் னுமம்
எம்மிறை படையை யெறிந்தன னோட்டிச்
செம்மையிற் சிலதியர் தம்மொடுஞ் சேரப்
பாஞ்சா லரசன் பற்றிக் கொண்டு
தேன்றோர் கூந்தற் றேவியர் பலருளும்
தன்னமர் தேவிக் கீத்த பின்றை
வண்ண மகளா யிருந்தனெ னன்றி
அருளிய தியாது மறியே னியானெனக்
கடல்புரண் டெனப்பயந் தழுதன ணிற்ப

(உதயணன் செயல்)

வாகை வேந்தன் மகிழ்ந்தன னாகிக்
கேளுடை முறையாற் கிளரொளி வனப்பின்
வாசவ தத்தைக்கும் வண்ண மகளாய்
நாளும் புனைகென நன்னுதல் பெயர்ந்தவள்

(மானனீகை செயல்)

அடிமுதற் றொட்டு முடியள வாகப்
புடவியி னறியாப் புணர்ப்பொடு பொருந்தி

---

35. கூட்டினள் - கூப்பினள்.
38. சேடியேன் - வேலைக்காரியாயுள்ளேன்.
39. என்பெயர் மானனீகை. 42. எம்மைப் பிடித்துக்கொண்டு.
43. தேன் - வண்டு; ௬. 14 : 77.
44. அமர்தல் - விரும்புதல். தேவி - பட்டத்தேவி.
45. வண்ணமகள் - அலங்காரஞ் செய்பவள்.
48. வாகைவேந்தன் - வெற்றியையுடைய உதயணன்.
49. கேளுடைமுறையால் - கோசலத்தரசனுக்கு வாசவதத்தை உறவுமுறையளாதலால்.
51. நாளும் - தினந்தோறும். அவள் - வாசவதத்தையின்.

பி - ம். 1 வசுந்தரை.

ஓவிய ருட்கு முருவக் கோலம்
தேவியைப் புனைந்தபின் மேவிய வனப்பொடு

(உதயணன் செயல்)

காவலற் காட்டக் கண்டன னாகி
அழித்தலங் கார மறியா ளிவளெனப்
பழித்தியான் புனைநெறி பாரெனப் புனைவோன்
பற்றிய யவன பாடையி லெழுத்தவள்
கற்றன ளென்றெடுத் தூற்றவ னுரைப்பக்
கேட்டன னாதலிற் கோற்றொடி நுதன்மிசைப்
பூந்தா தோடு சாந்துறக் கூட்டி
ஒடியா விழுச்சீ ருதயண னோலை
கொடியோர் மருங்குற் குயின்மொழிச் செவ்வாய்
மான னீகை காண்க சேணுயர்
மாட மீமிசை மயிலிறை கொண்டென
ஆடன் மகளிரொ டமர்ந்தொருங் கிண்டி
முந்துபந் தெறிந்தோர் முறைமையிற் பிழையாப்
பந்துவிளை யாட்டினுட் பாவைதன் முகத்துச்
சிந்தரி நெடுங்கணென் னெஞ்சகங் கிழிப்பக்
கொந்தழற் புண்ணொடு நொந்துயிர் வாழ்தல்
ஆற்றே னவ்வழ லவிக்குமா மருந்து
கோற்றேன் கிளவிநின் குவிமுலை யாகும்

54. சித்திரகாரரும் அஞ்சுதற்குக் காரணமான அழகினையுடைய அலங்காரத்தை. 56. காவலன் - உதயணன்.

57 - 8. அவ்வலங்காரத்தைச் சிதைத்து. இம்மானனீகை அலங்கரித்தற்கு அறியாதவளென்று அவளைப் பழித்து.

59. யவன பாஷை: 105-6.

61. கோற்றொடி - வாசவதத்தையின்.

66. இறைகொண்டென - தங்கியதென.

69. பாவைதன்முகத்து - நின்முகத்து.

73. கோற்றேன் கிளவிதன் - நின்னுடைய; கோற்றேன் - கொம்புத்தேன்; கிளவி - சொல்.

70 - 73. "நிறைமதி வாண்முகத்து நேர்கயற்கண் செய்த, உறைமலி யுய்யாநோ யூர்சுணங்கு மென்முலையே தீர்க்கும் போலும்" (சிலப். கானல். 8); "தங்குகண் வேல்செய்த புண்களைத் தடமுலை வேது

பந்தடி தானுறப் பறையடி யுற்றவென்
சிந்தையு நிலையுஞ் செப்புதற் கரிதெனச்
சேம மில்லாச் சிறுநுண் மருங்குற்
காதார மாகி யதனொடு தளரா
அருந்தனந் தாங்கி யழியுமென் னெஞ்சிற்
பெருந்துயர் தீர்க்கு மருந்து தானே
துன்றிய வேற்கட் டொழிலுமெய் யழகும்
பைங்கொள் கொம்பாப் படர்தரு மிந்நோய்
ஆழ்புனற் பட்டோர்க் கரும்புணை போலச்
சூழ்வளைத் தோளி காமநற் கடலிற்
றாழ வுறுமற் கொள்க தளர்ந்துயிர்
சென்றுற் செயன்முறை யொன்றுமி லன்றியும்
அடுக்கிய [1]விளமை தலைச்செலி னுந்தாக்
கிடைப்பதி விரப்போர்க் களிப்பது நன்றெனா
நினைத்த வாசக நிரப்பின் றெழுத
இடத்தள வின்மையிற் கருத்தறி வோர்க்குப்

---

கொண் டொற்றியே ”(குலிங்க. 33); ‘கண்கள்செய்த வியசன விஷத்தையும் கொங்கையென்னுமமுதம் தீர்ப்பதெனவுமுணர்க’ தக்க. 28, உரை.

74. தான் பந்தடி உற - நீ பந்தடித்தலை உறுதலால்.

75. சிந்தையும் செப்புதற்கு அரிது; நிலையும் செப்புதற்கு அரிது.

74 - 5. பறையடியுற்ற - மனம் நடுங்குதலுற்ற; “நெஞ்சம்...... பறையடிக் கின்ற வந்தப் பயம்” கம்ப. வாலிவதை. 143.

76. சேமம் - பாதுகாப்பு. 77. தளரா - தளர்ந்து.

79. தானே - நீயேயாவாய்.

81. கொள்கொம்பு - கொடிபடர்தற்கு ஊன்றும் கொம்பு; கொழுகொம்பெனவும் வழங்கும். 82. புணை - தெப்பம்.

84. தாழவுறுமல் - அழுந்தாதபடி.

86. தலைச்செலின் - போனால்.

86 - 7. “நாளது சின்மையு மிளமைய தருமையும்” (தொல். அகத். சூ. 41); “இளமையுந் தருவதோ விறந்த பின்னே”, “அரிதரோ சென்ற விளமை தரற்கு” (கலி. கரு, கஅ); “நாளைவரு மோவிளமை நங்கைமீர் நுமக்கே” சீகாளத்தி. கன்னியர். 42.

88. நிரப்பு இன்று எழுத - வறுமையின்றி எழுதுதற்கு.

பி - ம். 1 வின்மை.

பரந்துரைத் தென்னை பாவை யிக்குறை
இரந்தனெ னருளென விறைமக னெழுதி
மெல்லியற் கொத்த விவையெனப் புகழ்ந்து
புல்லினன் றேவியைச் செல்கென விடலும்

(வாசவதத்தையின் முகவெழுத்தை மானனீகை காணல்)

கோயில் குறுக வாய்வளை யணுகலும்
காவலன் புனைந்தது காணெனக் கண்ட
காசறு சிறப்பிற் கோசலன் மடமகள்
வாசக முணராக் கூசின ளாகிப்
1 பெருமக னெழுதிய பேரலங் காரத்
திருமுக மழகுடைத் தெனமருட் டினளாய்
உட்கு நாணு மொருங்குவந் தடைய
நற்பல கூறி யப்பகல் கழிந்தபின்

(மானனீகை எழுதிவிடுத்தல்)

வழிநாட் காலைக் கழிபெருந் தேவியைப்
பழுதற வழகொடு புனைநலம் புனையாக்
குங்கும மெழுதிக் கோலம் புனைஇ
அங்கவ னுதன்மிசை முன்பவ னெழுதிய
பாடை கொண்டுதன் பெயர்நிலைக் கிடா

---

69 - 91. தக்க. 28-ஆம் தாழிசை யுரையில் இவ்வடிகள் மேற்கோள்.

92. மெல்லியற்கு - நினக்கு (வாசவதத்தைக்கு.) இவை ஒத்த - இவ்வலங்காரங்கள் பொருந்தியவை; "தழலுந் தட்டையு முறியுந் தந் திவை, ஒத்தன நினக்கெனப் பொய்த்தன கூறி" குறுந். உ௨௩.

94. ஆய்வளை - கோசலத்தரசன் மகள்.

95. காணென - காண்பாயென்று வாசவதத்தை சொல்ல.

97. உணரா - அறிந்து. கூசினளாகி - வெட்கி.

98. பெருமகன் - உதயணன்.

99. திருமுகம் - அழகிய முகம்; ஓலைப்பாசுரமென்றும் ஒரு பொருள் தோன்றிற்று.

100. உட்கு நாணும் - அச்சமும் நாணமும்; ௩. 6 : 87; "நாணு முட்கு நண்ணுவழி யடைதர" குறிஞ்சிப். 184.

102. மறுநாட் காலையில். 106. தன்பெயர், மானனீகை யென்பது.

105 - 6. அவனெழுதிய பாடை - யவனபாஷை; ௪. 13 : 59.

பி - ம். 1 பெருமகள்.

நீல நெடுங்க ணிரைவளைத் தோளி
மறுமொழி கொடுக்கு நினைவின ளாகி
நெறிமயிர்க் கருகே யறிவரி தாக
முழுதிய லருள்கொண் டடியனேன் பொருளா
எழுதிய திருமுகம் பழுதுபட லின்றிக்
கண்டேன் காவல னருள்வகை யென்மாட்
டுண்டே யாயினு மொழிகவெம் பெருமகன்
மடந்தையர்க் கெவ்வா றியைந்ததை யியையும்
பொருந்திய பல்லுரை யுயர்ந்தோர்க் காகும்
சிறியோர்க் கருளிய வுயர்மொழி வாசகம்
இயைவ தன்று லிவ்வயி னொருவரும்
காணு ரொன்று காவலு ளிருந்து
பேணு செய்தல் பெண்பிறந் தோருக்
கியல்பு மன்றே யயலோ ருரைக்கும்
புறஞ்சொலு மன்றி யறந்தலை நீங்கும்
திறம்பல வாயினுங் குறைந்தவென் றிறத்து
வைத்ததை யிகழ்ந்து மறப்பது பொருளென
உற்றவண் மறுமொழி மற்றெழு தினளாய்
அடியேற் கியைவ திதுவென விடலும்

(மானனீகை எழுதியதைக் கண்டு உதயணன் மீட்டும் எழுதிவிடல்)

வடிவே லுண்கண் வாசவ தத்தை
நெடுந்தட லாசனைச் சென்றனள் வணங்கலும்
கண்டன னாகிக் கணங்குழை யெழுதிய
இயனேக் கினனு யியையா வாசகம்
தழலுமிழ் புண்மேற் கருவி பாய்ந்தெனக்

111. தான்பொருளுணர்ந்தமையின் ‘ பழுதுபடலின்றி ’ என்றாள்.
113. ஒழிக - அவ்வருள் நீங்குக.
114. இயைந்ததை - நீ கருதியது.
118. காவலுளிருந்து - பாதுகாப்புள்ள இடத்திலிருந்து.
119. பேணு செய்தல் - விரும்பாதவற்றைச் செய்தல்.
120 - 21. செய்யிற் பழியும் பாவமுமாம்.
122. குறைந்த - இழிந்த. 123. வைத்ததை - வைத்த அன்பை.
125. என - என்று வாசவதத்தைக்குக் கூறி.
129. இயையா வாசகம் - உடன்படாத சொல்லானது. [வருத்த.
130. நெருப்புச்சுட்ட புண்ணிடத்து ஆயுதம் தைத்தாற்போல

கலங்கின னாகி யிலங்கிழைக் கிதோர்
நலங்கவின் காட்ட நணுகென வணுகிக்
கண்ட முறைமையிற் [1] பண்டிய லாக்கவல்
கொண்டன னாகி யொண்டொடி யாகம்
இன்றை யெல்லை யெளியையா தாயிற்
சென்றதென் னுயிரெனத் தேவிமுகத் தெழுதி
வாட்டிறல் வேந்தன் மீட்டனன் விடுத்தலிற்

(உதயணன் எழுதியதை மானனீகை உணர்தல்)

பெருமகள் செல்லத் திருமகள் வாசகக்
கரும மெல்லா மொருமையி னுணர்ந்து
வயாத்தீர் வதற்கோ ருயாத்துணை யின்றி
மறுசுழிப் பட்ட நறுமலர் போலக்
கொட்புறு நெஞ்சினைத் திட்பங் கொளீஇ
விளைக பொலிக வேந்த னுறுகுறை
களைகுவ லின்றெனுங் கருத்தொடு புலம்பி

(மானனீகை மறுமொழி யெழுதி விடுத்தல்)

அற்றை வைகல் கழிந்தபி னவ்வொளி
மற்றுய ரணிநலம் வழிநாட் புனைஇக்
கூத்தப் பள்ளிக் குச்சரக் குடிகையுட்
பாற்படு வேதிகை சேர்ந்தன ளாகி

133. கவல் - கவலை.
136. சென்றது - செல்லும்; காலமயக்கம். [மகள்.
138. பெருமகள் - வாசவதத்தை. திருமகள் - கோசலத்தரசன்
140. வயா - வேட்கை மிகுதி; தொல். உரி. சூ. 73. உயாத்துணை - வினவுதற்குரியதொரு துணை; உயா - உசா.
142. சுழலுமனத்தை நிலைபெறச்செய்து.
143. "வித்தி யலையில் விளைக பொலிகென்பார்" (பரி. ௧௦ : 86); "விளைக பொலிக வஃதே யுரைத்திலம்" (சீவக. 260.) குறை - மனக்குறையை.
146. வழிநாள் - பின்னாள். புனைஇ - அலங்கரித்து.
147. நாடகமாடுதற்குரிய இடத்திலுள்ள கூர்ச்சரதேயத்துச் சிற்பம் அமைந்த குடிகை; "கூத்தப் பள்ளி" (௪. 14 : 4); குச்சரக்குடிகை: மணி. ௧௮: 145, 152. 148. வேதிகை - திண்ணை.

பி - ம். 1 பண்டியாக்கவின்.

அரவுக் குறியி னயலவ ரறியா
இரவுக் குறியி னியல்பட வெழுதி
மாபெருந் தேவியை விடுத்தபின் மற்றவள்

(மானனீகை யெழுதியதைக் கண்டு உதயணன் உவத்தல்)

தீவிய மொழியொடு சேதிபற் குறுகி
நோன்றாள் வணங்கித் தோன்ற நிற்றலும்
திருநுதன் மீமிசைத் திறத்துளிக் கிடந்த
அருளோர் வாசகந் தெருளுற வறிந்து
மற்றவள் பயந்தனள் பொற்புற வெழுதிய
இற்றைப் புதுநல மினிதெனவியம்பி
மாதர் நோக்கின் மான னீகைகட்
காமம் பெருகிக் காதல் கடிகொள
மாமனந் தடக்கித் தேவியொ டினியன
கூறியப் பகல்போ யேறிய பின்றை

(மானனீகை மறைந்திருத்தல்)

மான னீகை வாசவ தத்தையைத்
தான்மறைந் துறைகுறி மேவின ளிருப்ப

(உதயணன் செயல்)

வென்வேற் றலைவனும் வேட்கை யின்றித்
தேவிய ரிருவர்க்கு மாறு துயில் [1] கூறக்

---

149. அரவுக்குறி - பாம்பு குறிக்கொண்டுறையும் இடம்; இதனைப் பாம்பறியுமேயன்றிப் பிறரறியார்; "பாம்பறியும் பாம்பின கால்" (பழமொழி, 5); "பாம்பறியும் பாம்பின்கா லெனமொழியும் பழமொழியும் பார்க்கி லீரோ" கம்ப. சூர்ப்பநகை. 139.

151. அவள் - வாசவதத்தை. [உதயணனை.

152. தீவியமொழி - இனியசொல்; க. 41: 87, அடிக். சேதிபன்-

155. அருளோர் வாசகம் - அன்பு பொருந்திய வாசகப் பொருளை.

156. பயந்தனள் - அஞ்சியவளாய்; பயன்பட்டவளாயென்றும் ஒருபொருள் தோன்றிற்று. 159. கடிகொள - மிக.

162. வாசவதத்தைக்கு. [லால்.

165. இருதேவியர்க்கும் தான் துயிலும் இடத்தை மாறாகக் கூறுத

பி - ம். 1 கூரக்.

(வாசவதத்தை உதயணன் செயலை அறியும்படி
காஞ்சன மாலையை விடுத்தல்)

கயிற்பூண் கோதை யயிர்த்தன ளிருப்பப்
பெயர்த்தன னொதுங்கிப் பெயர்தரக் கண்டே
காஞ்சன மாலையைக் கைவயிற் பயிர்ந்து
பூந்தார் மார்பன் புகுமிட னறிகென
ஆய்ந்த வேந்த னாடற் பேரறை
சார்ந்தபி னொருசிறை சேர்ந்தன ளிருப்பத்

(உதயணன் மானனீகையுடன் அளவளாவல்)

திருத்தகு மார்பன் கருத்தொடு புகுந்து
விருப்பொடு தழுவி நடுக்கந் தீரக்
கூடிய வேட்கையி னொருவர்க் கொருவர்
ஊடியுங் கூடியு நீடுவிளை யாடியும்
இருந்த பின்றை யிருவரு முறைமுறை
திருந்திய முகத்துப் பொருந்திய காதலொ
டெழுதிய வாசக மெல்லா முரைத்து
வழுவுத லின்றி வைகலு மீங்கே
குறியெனக் கூறிச் சிறுவிரன் மோதிரம்
கொடுத்தன னருளிக் கோயிலு ணீங்க

(காஞ்சனமாலை தான் அறிந்ததை வாசவதத்தைக்கு உணர்த்தல்)

விடுத்தவ ளேகி யடுத்தது முரைத்ததும்
தன்னுட் பொருமலொடு தனித்தனி தெரிய
இன்னதென் றெடுத்து நன்னுதற் குரைப்ப

166. கயிற்பூண் கோதை - மூட்டுவாய் அமைந்த ஆபரணத்தை யணிந்த வாசவதத்தை.

168. கைவயிற் பயிர்ந்து - கைச்சைகையால் அழைத்து ; " அறி பயிர் காட்ட " ௪. 14 : 10.

170. ஆடற் பேரறை - கூத்தப் பள்ளி ; 147.

172. கருத்தொடு - மானனீகையின் நினைவுடன்.

179. வைகலும் - நாடோறும். ஈங்கே - இவ்விடமே.

181. கோயிலுள் நீங்க - அவன் அரண்மனைக்கு நீங்கிப்போக.

182. விடுத்தவள் - வாசவதத்தையால் விடுக்கப்பட்ட காஞ்சன மாலை. 184. நன்னுதற்கு - வாசவதத்தைக்கு.

(வாசவதத்தை உதயணனைக் கண்டு கூறல்)

முறுவல் கொண்டு செறுவகத் தடக்கிப்
பொறையாற் றலளா யிறையுயிர்த் தாற்றிப்
புலர்ந்த காலை புரவலற் குறுகி
நலங்கிளர் மலர்கொண் டிறைஞ்சின ளிருந்தியான்
இரவு கண்டே னொருகன வதனின்
புதுமை கேட்கிற் புரைதீர்ந் ததுவெனச்

(உதயணனன் வினாதல்)

செவ்வாய் வெண்ணகைத் திருந்திழை கண்ட
தெவ்வா றோவென வியம்பினன் கேட்பநின்

(வாசவதத்தை கூறல்)

மனத்துறைப் பெயரா வெனைக்கரந் தெழுந்தனை
தனித்துப் போயோர் தடந்தோண் மடந்தையொ
டாடரங் கேறி யணைந்திருந் தவளோ
டூடியு முணர்ந்துங் கூடிவிளை யாடியும்
தேறினி ராகித் தெளியுட னிருவிரும்
மாறுமா றெழுதிய வாசகங் கூறி
மாதரு நீயு மயலுறைத் தெழுந்து
போதரும் போதையின் மோதிர மருளிப்
பெயர்ந்தனை நயனமு மலர்ந்தன வாங்கே
புலர்ந்தது கங்குலும் புரவல வாழ்கென

(உதயணன் கூற்று)

வண்டலர் கோதாய் மனத்தினு மில்லது

---

185. செறு - கோபத்தை.
186. பொறுத்தல் செய்யாளாய்ச் சிறிதுநேரம் பெருமூச்சுவிட்டு.
187. புலர்ந்த காலை - பொழுதுவிடிந்தபொழுது.
190. புரை - குற்றம்; உயர்வென்பதும் ஒருபொருள்.
191. நீ கண்டது.
195. ஆடரங்கு - கூத்தப்பள்ளி.
200. போதரும் போதையில் - நீ திரும்பி வரும்பொழுதில்.
201. திரும்பி வந்தாய்; இப்படிக் கனவு கண்டுகொண்டிருக்கையில் என்னுடைய கண்களும் விழித்தன.

கண்டனை யாதலிற் கலங்கினை மற்றுநின்
உள்ளத் துள்ளே யுறைகுவெ னாகவும்
கள்வ னென்று கருதினை யன்றியும்
நெறியுடை மகளிர் நினைப்பவுங் காண்பவும்
இவையிவை போலுங் கனாவவர் தந் திறத்தெனக்

(வாசவதத்தை கூற்று)

கனவிற் கண்டது பிறரொடு பேசக்
குறைபோ மென்றலிற் கூறினை னன்றியும்
யாவை காணினுங் காவலற் கன்றிப்
பேசுவ தெவரொடு பெரியோ யென்று

(வாசவதத்தை உதயணனை நீங்கல்)

மாணூர் நோக்கி மனத்தொடு நகையா
ஆறு நினைவுட [1]னகறா வேந்தன்

(உதயணன் செயல்)

தேவியை யையந் தெளித்தன னொருவகை
யாரு மில்லென வினிதிருந் துவப்பப்
பானுவுந் தேரொடு படுவரை யிடைபுக

(வாசவதத்தையின் செயல்)

மான னீகையைக் காவல்வைத் தனளாய்

---

205. அன்பு மிக்க கிழத்தி கிழவர் தம்முள் ஒருவர் மனத்தே ஒருவர் உறைவதாகக் கூறல் மரபு; "மனத்துறைவப் பெயரா வென்னை" (193); "இருவரு மாறிப்புக் கிதய மெய்தினார்", "செருவார் தோளநின் சிந்தையு ளேனெனின், மருவார் வெஞ்சர மென்னையும் வவ்வுமால், ஒருவே னுள்ளுளை யாயி னுய்தியால்" கம்ப. மிதிலைக்காட்சி. 37; கிட்கிந்தை. அரசியற். 10.

208. என - என்று உதயணன் சொல்ல.

210. குறைபோமென்றலின் - குற்றம் நீங்குமென்று நூல்கள் கூறலால்.

211. யாவை காணினும் - இழிந்த கனவைக் கண்டாலும்.

212. என்று - என்று சொல்லிவிட்டு.

213. "வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள், அஞ்சு மகத்தேநகும்" (குறள், 271) என்றாற்போல்வது இது.

217. படுவரை - அத்தமயகிரி.

பி - ம். 1 னகதேர்.

மாந்தளிர் மேனியுங் காஞ்சன மாலையொடு
நேர்ந்தவக் குறியிற் றுன்சென் றிருப்ப

(உதயணன் செயல்)

நிகழ்ந்ததை யறியா னெழுந்து மெல்லென
நடந்தவன் சென்றவ ளிடந்தலைப் படலும்
வேந்தன் செய்வது காண்குவ மென்று
காம்பேர் தோளி கையி னீக்கலும்
மான னீகைதா னூடின ளாகி
மேவல ளாயினள் போலுமென் றெண்ணி
முரசுமுழங்கு தானை யரசொடு வேண்டினும்
தருகுவ னின்னே பருவர லொழிமினி
மானே தேனே மானனீ காவெனக்
கானேர் பற்றந் தானது கொடாஅ
துரைப்பது கேட்ப மறுத்தவ ளொதுங்கி
நிலைப்படு காமந் தலைப்படத் தரியான்
புதுமை கூறியிவண் முகம்பெறு கேனென
மதித்தன னாகி யொருமொழி கேளினி
முகைக்கொடி முல்லை நகைத்திரு முகத்துத்
தகைக்கொடி யனையோள் வாசவ தத்தை
இயைந்த நெஞ்சுடை யாமிரு வர்க்கும்
கழிந்த கங்குலி னிகழ்ந்ததை யெல்லாம்
கனவுறு முந்திய வினைய தாதலின்

---

219. மாந்தளிர் மேனி - வாசவதத்தை.
220. அக்குறி - கூத்தப்பள்ளிக் குச்சரக்குடியில்.
224. காம்பேர் தோளி - மூங்கிலையொத்த தோளையுடையாள்; [வாசவதத்தை.
226. போலும்: ஒப்பில் போலி.
227. "முரசுமுழங்கு தானை மூவரும்" (பொருந. 54; பெரும்பாண். 33; புறநா. ௩௫ : 4); "முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்" (புறநா. ௭௩ : 3.) அரசொடு - அரசாட்சியுடன்.
229. என - என்று கூறி. 230. காலை நேரே பற்ற.
231. ஒதுங்கி - ஒதுங்க. 232. தலைப்பட - மிக.
233. முகம் பெறுகேன் - இவளுடைய முகத்தைப் பெறுவேன்.
239. "இல்லை, கனமுந் துறுத வினை" (பழமொழி, 2) என்பது ஈண்டறியத்தக்கது.

அதனிற் கண்டெனக் [1]கொளியா துரைப்ப
அதற்கொரு வழியான் மனத்தினு மில்லெனத்
தெளித்த நிலைமையுந் தெளிந்திலை யேயெனப்
பெயரப் பெயர முறைமுறை வணங்கி
இயனிலை மான னீகா யருளென்
றடுத்தடுத் துரைப்பவு மாற்றா ளாகவும்
இதச்சொற் சொல்லவும் வணக்கஞ் செய்யவும்

(வாசவதத்தையின் செயல்)

பெட்ப வருதலிற் பிடித்தல் செல்லான்
நக்கன னாகி மிக்கோய் கூறிய
மானுந் தேனு மான னீகையும்
யானன் றென்பெயர் வாசவ தத்தை

(உதயணன் செயல்)

காணெனக் கைவிட் டோடின ளொழிய
அடுத்த காட்சியிற் றனித்தொரு மண்டபத்
தொளித்தன ளாகித் திகைத்தன ளிருப்பச்

(வாசவதத்தையின் செயல்)

சினங்கொ ணெஞ்சொடு பெயர்ந்தவன் வழியப்
புலர்ந்தது கங்குலும் பொருக்கெனப் பொலிந்தென.

கரு—முகவெழுத்துக் காதை முற்றிற்று.

---

240. அதனில் - அக்கனவில்.
243. பெயரப் பெயர - அவள் ஒதுங்குந்தோறும்.
244. மானனீகாய்! நின் இயல்பான நிலையை அருளென்று.
246. இதச்சொல் - இன்பத்தைச் செய்யும் நற்சொல்.
248. நக்கனளாகி - சிரித்து. 249. அடி, 229 பார்க்க.
251. என - என்று அவள் சொல்ல.
254. சினம் - தீராக் கோபம்.

பி - ம். 1 கொழியா.

## கச—மணம்படு காதை.

(வாசவதத்தை மானனீகையின் மயிரைக் குறைக்கப் புகுதல்)

புலர்ந்த காலைப் புதுமண மாதரை
மாபெருந் தேவி கூவினள் சிறி
ஓவிய வெழினித் தூணொடு சேர்த்துக்
கொற்றவன் றன்னொடு கூத்தப் பள்ளியுட்
சொற்றது சொல்லெனக் கச்சினின் யாத்தனள்
அருகொரு மாதரை யிவண்மயி ரரிதற்
கொருகத் தரிகை தருகென வுரைப்ப

(வயந்தகன் உதயணனைத் தேடுதல்)

மறையக் கண்ட வயந்தக னவ்வயின்
விரைவிற் சென்று வேந்தைத் தேட

(உதயணன் நிகழ்ந்ததை வயந்தகனுக்குக் கூறல்)

அறிந்து வேந்த னறிபயிர் காட்டப்
பரிந்தன னாகிப் பட்டதை யுரைப்ப
மற்றவ ளொருமயிர் கருவி தீண்டின்
இற்ற தென்னுயி ரிதுநீ விலக்கென
நிகழ்ந்த தென்னென நீகடைக் கூட்ட

---

கச—மணம்படு காதை.

[மேற்கூறிய கோசலத்தரசன் மகளை உதயணன் மணந்தது இதனால் அறியலாகும்.]

1. மாதரை - கோசலத்தரசன் மகளை.

3. ஓவிய எழினித்தூணொடு - சித்திரப்பணியெழுதிய திரை கட்டு தற்குரிய தூணுடனே; "ஓவிய வெழினி சூழவுடன் போக்கி" சிலப். ௩ : 169.

4. கொற்றவன் - உதயணன். கூத்தப்பள்ளி : ௪. 13 : 147.

5. யாத்தனள் - கட்டினளாகி. 7. வாசவதத்தை உரைப்ப.

10. அறிந்து - வயந்தகன் தேடுதலை யறிந்து. பயிர் - அழைக்கும் ஒலிக்குறிப்பை. அறிபயிர்காட்ட : ௪. 13 : 168.

11. பட்டதை - நிகழ்ந்ததனை.

12. அவள் - மானனீகையினுடைய. கருவி - கத்தரிக்கோல்.

14. என்னென - என்னவென்று வயந்தகன் கேட்ப.

முடிந்த தென்ன மடந்தையர் விளையாட்

(வயந்தகன் கூறல்)

டன்றியுங் கரவொடு சென்றவள் புகுநலம்
கொண்டொளித் தருளக் கூறலு முண்டோ
கொற்றத் தேவி செற்றந் தீர்க்கும்
பெற்றிய ரெவரே யாயினும் பெயர்வுற்
றேழ் நாழிகை விலக்குவ லத்துணை
வேறொரு வரைநீ விடுத்தரு ளென்று

(வயந்தகன் வாசவதத்தையைக் காணல்)

வென்றி வேந்தன் விடுப்ப விரைவொடு
சென்றறி வான்போற் றேவியை வணங்கிக்
கொற்றவற் றேடக் கோபமென் றுருத்தி
கைத்தலத் தமைப்பக் கானடுங் கினன்போற்
குறையிவட் கென்னெனக் கோமக ளறியா

(வாசவதத்தை கூற்று)

வார்ப்பொலி கழற்கான் மன்னவ ருருவிற்
றூர்த்தக் கள்வன் பாற்போய்க் கேளென

..............................................................................

(வயந்தகன் கூறல்)

குறையிவட் குண்டேற் கேசங் குறைத்தற்
கறிவேன் யானெனக் குறையெனக் கூறலும்
[1] மற்றதற் கேற்ற வகைபல வுண்டவை

---

15. என்ன - என்று உதயணன் சொல்ல.
16. கரவொடு - கள்ளத்தன்மையுடன். அவள் - கோசலத்தரசன் மகளுடைய.
17. நீ ஒளித்தருளுதலால். 19. தேவியின் செற்றத்தைத் தீர்ப்பவர்யாவர்?
20. விலக்குவல் - விலக்குவேன். அத்துணை - அவ்வளவில்.
24. கொற்றவனை வயந்தகன் தேட. கோபமென்று - கோபமுள்ள சமயமென்று.
26. இவட்குக் குறை என்னென்று வயந்தகன் கேட்ப அதனைத் தேவி அறிந்து.
27. அரசர் உருவினையுடைய.
28. தூர்த்தக்கள்வனென்றது, உதயணனை.
29. கேசம் - கூந்தல்.
30. என - என்று வயந்தகன் கூற. குறை என - குறைப்பாயென்று.

பி - ம். 1 மற்றவற்.

(கத்தரிகைகளின் வகை)

பத்திக ளாகியும் விற்பூட் டாகியும்
அணில்வரி யாகியு மான்புற மாகியும்
மணியற லாகியும் வயப்புலி வரிபோல்
ஒழுக்கத் தாகியு முபார்ந்துங் குழிந்தும்
கழுக்கொழுக் காகியுங் காக்கையடி யாகியும்
துடியுரு வாகியுஞ் சுழலா றாகியும்
பணிவடி வாகியும் பாத்திவடி வாகியும்
இருப்பவை பிறவுமா மெடுத்ததை யருளுநின்
திருக்கர மலர்மயிர் தீண்ட றகாதால்
ஒருகத் தரிகை தருகென வாங்கி

(வயந்தகன் செயல்)

ஒருபுல் லெடுத்தன னதனள வறியா
நான்மையின் மடித்தொரு பாதி கொண்டதன்
காதள வறிந்தணி யாணியும் பிறவும்
மதிப்பொடு பல்காற் புரட்டினன் னோக்கி
எடுத்திரு கையுஞ் செவித்தலம் புதையாக்
கண் [1] சிம் புளியாத் தன்றலை பணித்திட்

(வயந்தகன் கூறுதல்)

டிங்கித னிலக்கண மெளிதோ கேளினி
நீர்மையுங் கூர்மையு நெடுமையுங் குறுமையும்
சீர்மையுஞ் சிறப்புஞ் செறிந்துவனப் பெய்திப்
பூத்தொழின் மருவியது புகர்வயி னணைந்தோர்க்
காக்கஞ் செய்யு மணங்கொடு மருவிய
இலக்கண முடைத்தி திவண்மயிர் தீண்டின்
நலத்தகு மாதர்க்கு நன்று மதனால்
மற்றொன் றுளதேற் பொற்றொடி யருணீ
இத்தகைத் தீதென வெடுத்தன னெறிய

---

40. நின் கைம்மலர் இவள்மயிரைத் தீண்டல் தகாது.
41. வயந்தகன் வாங்கி. 47. சிம்புளியா - மூடி.
51. புகர்வயின் அணைந்தோர்க்கு - குற்றமுடையவர்க்கு.
52. அணங்கொடு - தெய்வத்தன்மையுடன்.
55. மற்றொன்று - வேறொன்று.
பி - ம். 1 சும்புளியாத்.

(உதயணன் யூகியை வருவித்துக் கூறல்)

ஆகிய துணரும் வாகை வேந்தன்
யூகியை வருகெனக் கூவினன் கொண்டு
புகுந்ததை யெல்லாங் கணந்தனிற் புகல

(யூகி விடையளித்தல்)

வயந்தகன் மொழிபொழு திழிந்த தென்செயல்
யானு மவ்வள வானவை கொண்டு
தேனிமிர் கோதை கேசந் தாங்குவென்
மற்றறி யேனென வணங்கினன் போந்து

(யூகி பித்தர் வேடந் தரித்தல்)

கற்றறி வித்தகன் பொற்பணி வெண்பூக்
கோவைத் தந்த மேவரச் சேர்த்திக்
கூறை கீறிச் சூழ்வர வுடீஇ
நீறுமெய் பூசி நெடிய மயிர்களை
வேறுவே றுருகும் விரகுளி முடித்துக்
கண்டோர் வெருவக் கண்மல ரடக்கங்
கொண்டோ னாகிக் குறியறி யாமற்
கைத்தல மொத்தாக் காபிட [1] படை கொட்டிப்
பித்த ருருவிற் றுட்கெனத் தோன்றலும்

(தோழியர் யூகியின் வேடத்தைக்கண்டு ஓடல்)

ஏழை மாதரைச் சூழ்வர நின்ற
பாவையர் பலரும் பயந்திரிந் தோடி
விழுநரு மெழுநரு மேல்வர நடுங்கி
அழுநருந் தேவிபி னணைநரு மாகத்

---

57. ஆகியது - நிகழ்ந்ததை. வேந்தன் - உதயணன்.
59. கணம் - க்ஷணம்.
61. ஆனவை - எனக்குத் தோற்றியவற்றை.
62. கோதை - கோசலத்தரசன் மகளுடைய.
64 - 5. வெண்பூக் கோவைத் தந்தம் - யானைத்தந்தத்தாற் செய்த வெண்பூக் கோவைகளை.
69 - 70. கண்மலர் அடக்கங் கொண்டோனாகி - கண்களை மூடி.
71. ஒத்தா - தட்டி.
73. மாதரை - வாசவதத்தையை. 74. பயந்து இரிந்து.
76. பின்பு அணைநரும்.

பி - ம். 1 பஷை.

தேன்றேர் கூந்த ருனது நோக்கி
மேன்மே னகைவர விரும்பின னிற்ப

(வயந்தகன் சிலதியை உதயணன்பால் அனுப்புதல்)

நின்ற வயந்தக னிகழ்ந்ததை யுணர்த்தென
அங்கொரு சிலதியை யரசற் குய்ப்பப்

(உதயணன் பதுமாபதியை வருவித்தல்)

புதுமான் விழியிற் புரிகுழற் செவ்வாய்ப்
பதுமா பதியை வருகெனக் கூஉய்
வில்லேர் நுதல்வர வேந்தன் சென்றெதிர்
புல்லினன் கொண்டு மெல்லென விருந்தோன்
றுரைப்ப வெண்ணி மறுத்துரை யானுய்த்

(பதுமாபதி உதயணனை வினவுதல்)

திகைப்ப வாயிழை கருத்தறிந் தனளாய்
[1] அடிக ணெஞ்சிற் கடிகொண் டருளுமக்
கரும மெம்மொ டுரையா தென்னென

(உதயணன் பதுமாபதியை வாசவதத்தையின் பால் விடுத்தல்)

யானுரை செய்யக் கூசுவென் றவ்வை
தானே கூறு நீயது தாங்கியென்
செயிர்கா ணுதை தெய்வ மாதலின்
உயிர்தந் தருளென வரசேவோன் விடுப்ப

(பதுமாபதி வாசவதத்தையை வேண்டிக்கோள்ளல்)

முறுவல்கொண் டெழுந்து முன்சேரந் தாயிழை
கரும்பதந் தாழத் தானவட் கறியப்

---

77. தேன்றேர் கூந்தல்: ச. 13 : 43; கூந்தல் - வாசவதத்தை.
82. கூஉய் - அரசன் அழைத்து.
83. பதுமாபதி வர அரசன் எதிர்சென்று.
85. மறுத்து - மீட்டும்.
88. உரையாதது என்னவென்று பதுமாபதி கேட்ப.
89. தவ்வை - நினக்கு மூத்தோளாகிய வாசவதத்தை.
90. அது தாங்கி - அந்தப்பாரத்தைச் சுமந்து.
94. அவட்கு - பதுமாபதிக்கு.

பி - ம். 1 அடிகொனெஞ்சிற்.

புகுந்ததை யுணர்த்த வருந்திவள் பொருளாச்
சிறி யருளுதல் சிறுமை யுடைத்திது
வீறுயர் மடந்தாய் வேண்டா செய்தனை
அன்புடைக் கணவ ரழிதகச் செயினும்
பெண்பிறந் தோர்க்குப் பொறையே பெருமை
அறியார் போலச் சிறியோர் தேஎத்துக்
குறைகண் டருளுதல் கூடா தன்றியும்
பெற்றேன் யானிப் பிழைமறந் தருளென
மற்றவள் பின்னரும் வணங்கின ளிறப்பக்

(கோசலத்தரசனுடைய தூதுவர்வருகையைக் காவலர் உதயணனுக்குரைத்தல்)

கோமகற் கவ்வயிற் கோசலத் தவர்புகழ்க்
காவலன் றூதுவர் கடைத்தலை யாரெனக்
கடைகாப் பாளன் கைதொழு துரைப்ப

(தூதுவரை உதயணன் அழைத்துவரச் செய்தல்)

விடைகொடுத் தவரைக் கொணர்மி னென்னப்
பொன்றிகழ் கோயில் புகுந்தனர் தொழுதொரு

(தூதுவர் ஓலையை அளித்தல்)

மந்திர வோலை மாபெருந் தேவிக்குத்
தந்தனன் றனியே வென்றி வேந்தன்
கோவே யருளிக் கொடுக்கென நீட்டலும்
ஏயமற் றிதுவு மினிதென வாங்கி

(ஓலையைச் சிலதி மூலமாக வாசவதத்தைக்கு உதயணன் அனுப்பல்)

ஏவற் சிலதியை யாவயிற் கூஉய்த்
தேவிகட் [1] போக்கத் திருத்தகு மகன் கொண்டு

---

95. வருந்து இவள் பொருளா - வருந்துகின்ற இம்மாதைப் பொருளாகக் கொண்டு.

98 - 9. "தகவுடை மங்கையர் சான்றாண்மை சான்றார், இகழி னுங் கேள்வரை யேத்தி யிறைஞ்சுவார்" (பரி. கூ0 : 88 - 9); "மாய மகிழ்நன் பரத்தமை, நோவேன் றோழி கடனமக் கெனவே" கலி. எகு: 82 - 3.

104. கோமகற்கு - உதயணனுக்கு.

109. மாபெருந்தேவிக்கு - வாசவதத்தைக்கு.

112. ஏய - ஏவிய. 114. அரசன் போக்க.

பி - ம். [1] போகத்.

(வாசவதத்தை ஓலையைப் பதுமாபதியைக் கொண்டு
படிக்கச் செய்தல்)

பதுமா பதியைப் பகருகென் றளிப்ப
எதிரெழுந் தனளா யதுதான் வாங்கிக்

(ஓலையில் எழுதப்பட்ட செய்தி)

கோசலத் தரச னோலை மங்கை
வாசவ தத்தை காண்கதன் றங்கை
மாசின் மதிமுகத்து வாசவ தத்தை
பாசவற் படப்பைப் பாஞ்சா லரசன்
சோர்விடம் பார்த்தென் னூரெறிந் தவளுடன்
1 ஆயமுங் கொண்டு போயபின் பவனை
நேர்நின் றனனாய் நெறிபடப் பொருதுகொல்
வந்தவர் பெருமான் மங்கையர் பலருடன்
பற்றினன் கொண்டு நற்பதிப் பெயர்ந்து
தனக்குந் தங்கை யியற்பது மாபதி
அவட்குங் கூறிட் டளிப்பத் தன்பால்
இருந்ததுங் கேட்டேன் வசுந்தரி மகளெனப்
பயந்த நாளொடு பட்டதை யுணர்த்தாள்
தன்பெயர் கரந்து மான னீகையென்
றங்கொரு பெயர்கொண் டிருந்ததுங் கேட்டேன்
அன்புடை மடந்தை தங்கையை நாடி
எய்திய துயர்தீர்த் தியான்வரு காறும்
மைய லொழிக்க தைய லுன்மற்
றிதுவென் குறையென வெழுதிய வாசகம்

(பதுமாபதி ஓலையை வாசவதத்தையிடம் கொடுத்தல்)

பழுதின் றாக முழுவது முணர்ந்து
வாசக முணரேன் வாசிமி னடிகளென்

---

115. படியென்று அவ்வோலையைப் பதுமாபதியிடம் தேவி கொடு[ப்ப.
119. மானனீகையின் இயற்பெயர் வாசவதத்தை யென்பது.
120. அவல் - பள்ளம். படப்பை - தோட்டக் கூறு.
121. அவளுடன் - தன்தங்கையாகிய வாசவதத்தையுடன்.
124. பெருமான்: எழுவாய். 126. உனக்குத் தங்கையாகிய.
129. பட்டதை - உண்டான பெயரை.

பி - ம். 1 நாமமுங்.

றுசி றவ்வை தன்கையிற் கொடுப்ப

(வாசவதத்தை ஓலையைப் படித்துத் தான் செய்ததற்கு வருந்துதல்)

வாங்கிப் புகழ்ந்து வாசகந் தெரிவாள்
ஏங்கிய நினைவுட னினைந்தழு தருந்த
கண்ணீர் கொண்டு மண்ணினை நோக்கிப்
பெண்ணீர் மைக்கியல் பிழையே போன்மெனத்
தோயு மையலிற் றுண்ணெ னெஞ்சமோ
டாயிழை பட்டதற் காற்று ளாயவள்

(வாசவதத்தை மானனீகையின் கட்டை அவிழ்த்து இரங்கல்)

கையிற் கட்டிய கச்சவிழ்த் திட்டு
மைவளர் கண்ணியை வாங்குபு தழீஇக்
குழூஉக்களி யானைக் கோசலன் மகளே
அழேறக்கவெம் பாவா யரும்பெறற் றவ்வை
செய்தது பொறுவெனத் தெருளாள் கலங்கி
எழுதரு மழைக்க ணிரங்கினீ ருகுப்ப
அழுகை யாகுலங் கழுமின ளழிய
விம்மி விம்மி வெய்துயிர்த் தென்றுறை
எம்முறை செய்தே னென்செய் தேனென
மாதர்க் கண்ணீர் மஞ்சன மாட்டி
ஆதரத் துடைந்தனள் பேதைகண் டுடைத்தாக்
கெழீஇய வவரைக் கிளந்துடன் போக்கித்

(மானனீகையை வாசவதத்தை அலங்கரித்தல்)

தழீஇக் கொண்டு தானனி திருந்து
தண்ணென் கூந்த றன்கையி னாற்றிப்
பண்ணிய நறுநெயு மெண்ணெயும் பெய்து
நறுநீ ராட்டிச் செறிதுகி லுடீஇப்
பதுமையுந் தானு மணியன கூறிப்

---

139. தெரிவாள் - தெரிபவளாகிய வாசவதத்தை.

142. "பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே" என்றார் பிறரும். பிழையேபோலுமென்று.

144. கோசலத்தரசன்மகள் அடைந்த வருத்தத்திற்குப் பொறாளாய்.

151. கழுமினள் - மிக்கவளாய்.

156. கெழீஇய அவரை - தன்னைச் சூழ்ந்து நின்ற அவர்களை.

பொருவில் பக்கத்துப் பொற்கல மேற்றி
வருகென மூவரு மொருகலத் தயில

(வயந்தகன் உதயணனுக்குத் தெரிவித்தல்)

வரிநெடுந் தொடையல் வயந்தக னவ்வயின்
விரைவிற் சென்று வேந்தற் குரைப்ப

(உதயணன் மகிழ்தல்)

முகிறோய் மாமதி புகர்நீங் கியதெனத்
திருமுக மலர முறுவல்கொண் டெழுந்து
வருகெனத் தழீஇ முகமன் கூறி
ஒருபுட் பெற்றே னொருந லினிதென

(உதயணன் மானனீகையை மணஞ்செய்து கொள்ளல்)

அதுநிகழ் வேலையிற் புதுமண மாதரை
வதுவைக் கோலம் பதுமை புனைகென்
றங்கொரு சிலதியைச் செங்கோல் வேந்தன்
தன்பான் மணநிலை சாற்றென் றுரைப்பப்
பிணைமலர்த் தொடையற் பெருமக னவ்வயிற்
பணைநிலைப் பிடிமிசைப் பலர்வரச் சாற்றி
விரைபரித் தேரொடு படைமிடைந் தார்ப்ப
முரசுமுழங்கு முற்றத் தரசுவந் திறைகொளக்
கோலத் தேவியர் மேவினர் கொடுப்ப
ஓவிய ருட்கு முருவியை யுதயணன்
நான்மறை யாளர் நன்மணங் காட்டத்
தீவலஞ் செய்து கூடிய பின்றை
முற்றிழை மகளிர் மூவரும் வழிபடக்
கொற்ற வேந்தர் நற்றிறை யளப்ப
நல்வளந் தரூஉம் பல்குடி தழைப்பச்
செல்வ வேந்தன் செங்கோ லோச்சித்
தாணு தரவு மேன்மேன் முற்றவும்

---

163. ஒருகலத்து அயிலல்: ௪. 8: 87-9. 169. புள் - நற்சொல்.
173. வாசவதத்தை உரைப்ப. 175. பணை - பருமை.
178. தேவியர் - வாசவதத்தையும் பதுமாபதியும்.
179. உருவியை - உருவமுடையாளை; கோசலத்தரசன்மகளை.

ஆறு தொழுகுமா லல்லவை கடிந்தென்.

கச—மணம்படு காதை முற்றிற்று.

---

187. அல்லவை - பாவச்செயல்.

---

## கரு—விரிசிகை வரவு குறித்தது.

(விரிசிகையின் இயல்பு)

ஆறு தொழுகுங் காலை யொருநாள்
இலைசேர் புறவி னிலைவா ழாக்கையர்
கலைசேர் கானத்துக் கலந்துட னாடிய
காலத் தொருநாட் சீலத் திறந்து
சீரை யுடுக்கை மார்வளர் புன்சடை
ஏதமில் காட்சித் தாபதன் மடமகள்
பூவிரிந் தன்ன போதமர் தடங்கண்
வீழ்ந்தொளி திகழும் விழுத்தொடி முன்கைத்
திருவிற் புருவத்துத் தேம்பொதி செவ்வாய்
விரிசிகை யென்னும் விளங்கிழைக் குறுமகள்
அறிவ தறியாப் பருவ நீங்கிச்
செறிவொடு புணர்ந்த செவ்விய ளாதலிற்

---

கரு—விரிசிகை வரவு குறித்தது.

[இளமைப்பருவத்தில் உதயணனால் மாலைசூட்டப்பெற்ற விரிசிகை யென்பவள் வேறொருவனையும் மணம்செய்யாதிருந்ததனை அவளுடைய தந்தையாகிய முனிவராலறிந்து அரசன், மணஞ்செய்தற்கு இசைந்து தன் அரண்மனைக்கு அவளை வரச்செய்யும்படி கட்டளையிட்டது இதனால் அறியலாகும்.]

3. கலை - கலைமான். 4. இறந்து - நீக்க.

3 - 4. உடன்ஆடியகாலத்து-உதயணன் வாசவதத்தையுடன் உண்டாடிய காலத்தில்; இதனை, இலாவாணகாண்டத்துள்ள, உண்டாட்டு விரிசிகை மாலைசூட்டு என்னும் பகுதிகளால் உணர்க.

5. சீரை - மரவுரி. 6. காட்சி - அறிவு.

5 - 6. உ. 15 : 40 - 41. 11. அறிவது - அறியவேண்டுவதை.

12. செறிவு - முதுக்குறைவு.

பெருமகன் சூட்டிய பிணைய லல்லது
திருமுகஞ் சுடரப் பூப்பிறி தணியாள்
உரிமை கொண்டன ளொழுகுவ தெல்லாம்

(விரிசிகையின் தந்தை உதயணனை அடைதல்)

தரும நெஞ்சத்துத் தவம்புரி தந்தை
தெரிவன னுணர்ந்து விரைவனன் போந்து
துதைதார் மார்பி னுதையணற் குறுகிச்
செவ்விக் கோட்டியுட் சென்றுசேர்ந் திசைப்பித்
தவ்வழிக் கண்ணுற் றறிவி னாடிப்

(முனிவன் கூற்று)

பயத்தொடு புணர்ந்த பாடி மாற்றம்
இசைப்பதொன் றுடையே னிகழ்தல்செல் லாது
சீர்த்தகை வேந்தே [1]யோர்த்தனை கேண்மதி
நீயே நிலமிசை நெடுமொழி நிறீஇ
வீயாச் சிறப்பின் வியாதன் முதலாக்
கோடா துயர்ந்த குருகுலக் குருசில்
வாடா நறுந்தார் வத்தவர் பெருமகன்
தேனார் மார்ப தெரியின் யானே
அந்தமில் சிறப்பின் மந்தர வரசன்
யாப்புடை யமைச்சொடு [2]காப்புக்கடன் கழித்தபின்

---

13. உதயணன் முன்பு சூட்டிய மாலையையன்றி; விரிசிகைமாலை சூட்டுப் பார்க்க.

15 - 8. தன்மகளுடைய நிலைமைத் தந்தையாகிய முனிவ னுணர்ந்து உதயணனை அடைந்து.

24. நெடுமொழி - புகழ்ச்சொல்.

26. குருகுலக்குருசில்: உ. 11 : 127 ; ௩. 18 : 11.

24 - 6. குலமுதல்வரைக் குறித்துச் சிறப்பித்தல் ஒருமரபு; "நீயே, வடபான் முனிவன் றடவினுட் டோன்றி......உவரா வீகைத் துவரை யாண்டு, நாற்பத் தொன்பது வழிமுறை வந்த, வேளிருள் வேளே" (புறநா. ௨௦௧ : 8 - 12.) நீ (24) குருகுலக்குருசில் (26.)

29. மந்தர அரசன் - வித்தியாதர உலகத்துள்ள அரசன்; மந்தரம் மந்திரமெனவும் வழங்கும். யான் (28) மந்தர அரசன் (29.)

30. காப்புக்கடன் - காத்தலாகிய கடமை.

பி - ம். 1 பேர்த்தனை. 2 காப்புடன்.

ஆறு தொழுகுமா லல்லவை கடிந்தென்.

கச—மணம்படு காதை முற்றிற்று.

---

187. அல்லவை - பாவச்செயல்.

---

## க௫—விரிசிகை வரவு குறித்தது.

(விரிசிகையின் இயல்பு)

ஆறு தொழுகுங் காலை மேனாள்
இலைசேர் புறவி னிலாவா ணத்துப்
கலைசேர் கானத்துக் கலந்துட னாடிய
காலத் தொருநாட் சீலத் திறந்த
சீரை யுடுக்கை வார்வளர் புன்சடை
ஏதமில் காட்சித் தாபதன் மடமகள்
பூவிரிந் தன்ன போதமர் தடங்கண்
வீழ்ந்தொளி திகழும் விழுக்கொடி மூக்கிற்
றிருவிற் புருவத்துத் தேன்மொழி செவ்வாய்
விரிசிகை யென்னும் விளங்கிழைக் குறுமகள்
அறிவ தறியாப் பருவ நீங்கிச்
செறிவொடு புணர்ந்த செவ்விய ளாதலிற்

---

க௫—விரிசிகை வரவு குறித்தது.

[இளமைப்பருவத்தில் உதயணனால் மாலைசூட்டப்பெற்ற விரிசிகை யென்பவள் வேறொருவரையும் மணவாமலிருந்ததனை அவளுடைய தந்தையாகிய முனிவரா லறிந்த அவன், மணஞ்செய்தற்கு இசைந்து தன் அரண்மனைக்கு அவளை வரச்செய்யும்படி கட்டளையிட்டது இதனால் அறியலாகும்.]

3. கலை - கலைமான். 4. இறந்த - மிக்க.

3 - 4. உடன்ஆடியகாலத்து-உதயணன் வாசவதத்தையுடன் உண்டாடிய காலத்தில்; இதனை, இலாவாணகாண்டத்துள்ள, உண்டாட்டு விரிசிகை மாலைசூட்டு என்னும் பகுதிகளால் உணர்க.

5. சீரை - மரவுரி. 6. காட்சி - அறிவு.

5 - 6. உ. 15 : 40 - 41. 11. அறிவது - அறியவேண்டுவதை.

12. செறிவு - முதுக்குறைவு.

பெருமகன் சூட்டிய பிணைய லல்லது
திருமுகஞ் சுடரப் பூப்பிறி தணியாள்
உரிமை கொண்டன ளொழுகுவ தெல்லாம்

(விரிசிகையின் தந்தை உதயணனை அடைதல்)

தரும நெஞ்சத்துத் தவம்புரி தந்தை
தெரிவன னுணர்ந்து விரைவனன் போந்து
துதைதார் மார்பி னுதையணற் குறுகிச்
செவ்விக் கோட்டியுட் சென்றுசேர்ந் திசைப்பித்
தவ்வழிக் கண்ணுற் றறிவி னாடிப்

(முனிவன் கூற்று)

பயத்தொடு புணர்ந்த பாடி மாற்றம்
இசைப்பதொன் றுடையே னிகழ்தல்செல் லாது
சீர்த்தகை வேந்தே [1]யோர்த்தனை கேண்மதி
நீயே நிலமிசை நெடுமொழி நிறீஇ
வீயாச் சிறப்பின் வியாதன் முதலாக்
கோடா துயர்ந்த குருகுலக் குருசில்
வாடா நறுந்தார் வத்தவர் பெருமகன்
தேனார் மார்ப தெரியின் யானே
அந்தமில் சிறப்பின் மந்தர வரசன்
யாப்புடை யமைச்சொடு [2]காப்புக்கடன் கழித்தபின்

13. உதயணன் முன்பு சூட்டிய மாலையையன்றி; விரிசிகைமாலை சூட்டுப் பார்க்க.

15 - 8. தன்மகளுடைய நிலைமைத் தந்தையாகிய முனிவ னுணர்ந்து உதயணனை அடைந்து.

24. நெடுமொழி - புகழ்ச்சொல்.

26. குருகுலக்குருசில்: உ. 11 : 127 ; ௩. 18 : 11.

24 - 6. குலமுதல்வரைக் குறித்துச் சிறப்பித்தல் ஒருமரபு; "நீயே, வடபான் முனிவன் றடவினுட் டோன்றி......உவரா வீகைத் துவரை யாண்டு, நாற்பத் தொன்பது வழிமுறை வந்த, வேளிருள் வேளே" (புறநா. உ0க : 8 - 12.) நீ (24) குருகுலக்குருசில் (26.)

29. மந்தர அரசன் - வித்தியாதர உலகத்துள்ள அரசன்; மந்தரம் மந்திரமெனவும் வழங்கும். யான் (28) மந்தர அரசன் (29.)

30. காப்புக்கடன் - காத்தலாகிய கடமை.

பி - ம். 1 பேர்த்தனை. 2 காப்புடன்.

உயர்ந்த வொழுக்கோ டுத்தர நாடிப்
பயந்த புதல்வரைப் படுநுகம் பூட்டி
வளைவித் தாரும் வாயி லுடி
விளைவித் தோம்புதும் வேண்டிய தாமென
ஒடுக்கி வைக்கு முழவன் போல
அடுத்த வூழிதோ றமைவர வில்லா
யாக்கை நல்லுயிர்க் கரண மிதுவென
மோக்க முன்னிய முயற்சிய னாகி
ஊக்கஞ் சான்ற வுலகிய றிரிபேன்
உம்மைப் பிறப்பிற் செம்மையிற் செய்த
தானப் பெரும்பயன் றப்புண் டிறத்தல்
ஞானத் தாளர் நல்லொழுக் கன்றெனா
உறுதவம் புரிந்த வொழுக்கினென் [1] மற்றினி
மறுவி லேனமர் மாபத் தினியும்
காசி யரசன் மாசின் மடமகள்
நீல கேசி யென்னும் பெரும்பெயர்க்
கோலத் தேவி குலத்திற் பயந்த
வீயாக் கற்பின் விரிசிகை யென்னும்
பாசிழை யல்குற் பாவையைத் தழீஇ
மாதவம் புரிந்தே மான்கண மலிந்தோர்
வீதவை கானத்து விரதமோ டொழுகுங்
காலத் தொருநாட் காலைத் தாடிப்
பள்ளி புகுந்து பாவங் கழூஉம்
அறநீ ரத்தந் தகன்றியான் போதர

31. உத்தரம் நாடி - பின்செய்யவேண்டுவதை ஆராய்ந்து.
32. படுநுகம் - பெரிய இராச்சியபாரம்; சீவக. 208.
33. வளைவித்து - சூழ அரண்செய்து. வாயில் - வழி.
34. விளைவித்து - பின்விளையும் விதைகளை; ஆம் - ஆகும்.
39. திரியேனாகி.

40 - 52. விதியை நினைந்து நீலகேசியென்னும் மனைவியோடும் விரிசிகையென்னும் புதல்வியோடும் காடொன்றில் தவம்செய்து கொண்டிருந்த காலத்தில் ஒருநாள். 54. அத்தம் - அரிய வழி.

53 - 4. யான் புண்ணிய தீர்த்தத்தில் ஆடுதற்குச் செல்ல.

பி - ம். 1 மற்றெனு.

(உதயணன் விரிசிகைக்கு மாலை சூட்டியது)

மறுநீங்கு சிறப்பிற் புண்ணியத் திங்கட்
கணைபுரை கண்ணியைக் கவான்முத லிரீஇப்
பிணையல் சூட்டினை பெருந்தகை மற்றிது
புணைதனக் காகப் புணர்திற னுரைஇ

(விரிசிகையின் முதுக்குறைவு)

உற்றது முதலா வுணர்வுவந் தடைதரப்
பெற்றவற் கல்லது பெரியோர் திரிப்பினும்
கோட்டமில் செய்கைக் கொள்கையின் வழாஅள்
வேட்கையிற் பெருகினின் மெய்ப்பொருட் டமைந்த
மாட்சி நெஞ்ச மற்றுநினக் கல்லது
மறத்தகை மார்ப திறப்பரி ததனால்

(விரிசிகையின் தந்தை தன் மகளை மணஞ்செய்துகொள்ளும்படி உதயணனுக்குக் கூறல்)

ஞாலம் விளக்கு ஞாயிறு நோக்கிக்
கோலத் தாமரை கூம்பவிழ்ந் தாங்குத்
தன்பாற் பட்ட வன்பி னவிழ்ந்த
நன்னுதன் மகளி ரென்ன ராயினும்
எவ்வந் தீர வெய்தின ரளித்தல்
வையத் துயர்ந்தோர் வழக்கால் வத்தவ
யாமகட் டருதுங் கொள்கெனக் கூறுதல்
ஏம வையத் தியல்பன் றாயினும்
வண்டார் தெரியல் வாண்முகஞ் சுடரப்
பண்டே யணிந்தநின் பத்தினி யாதலிற்
பயந்தனர் கொடுப்ப வியைந்தன ராகுதல்

---

56. கவான்முதல் - துடையில்.

57. பெருந்தகை: அண்மைவிளி.

58. புணர் திறன் உரைஇ - உன்னை மணஞ்செய்து கொள்ளுந் திறத்தைச் சொல்லிக்கொண்டு.

59. உற்றது - உன்னைப் பரிசித்தது; "உற்றோர்க் குரியர் பொற்றொடி மகளிர்" சிற். 225, பேர். மேற்.

60. பெற்றவற்கு - உனக்கு. 63 - 4. நெஞ்சம் திறப்பரிது.

69 - 70. அளித்தல் உயர்ந்தோர் வழக்கு.

முறையே யென்ப விறைவ வதனால்
யானே முன்னின் றடுப்ப நீயென்
தேனேர் கிளவியைத் திருநா ளமைத்துச்
செந்தீக் கடவுண் முந்தை யிரீஇ
எய்துத னன்றெனச் செய்தவ னுரைப்ப

(விரிசிகையின் வதுவையை வாசவதத்தைக்கு உணர்த்தல்)

மாதவ னுரைத்த வதுவை மாற்றம்
காவற் றேவிக்குக் காவல னுணர்த்த

(வாசவதத்தை உடன்படல்)

மணிப்பூண் வனமுலை வாசவ தத்தை
பணித்தற் கூடாள் பண்டே யறிதலின்
உவந்த நெஞ்சமொடு நயந்திது நன்றென
அரிதிற் பெற்ற வவந்திகை யுள்ளம்

(உதயணன் விரிசிகையை மணஞ்செய்து கொள்ளல்)

உரிதி னுணர்ந்த வுதயண குமரன்
ஓங்குபுகழ் மாதவ னுரைத்தநற் குடிப்பட்டு
வாங்குசிலை பொருதோள் வாழ்த்துந ராக
அரும்பொருள் வீசிய வங்கை மலரிப்
பெரும்பொரு ளாதலிற் பேணுவனன் விரும்பி
நீரிற் கொண்டு நேரிழை மாதரைச்
சீரிற் கூட்டுஞ் சிறப்பு முந்துறீஇ
நாடு நகரமு மறிய நாட்கொண்டு
பாடிமிழ் முரசம் பல்லூ ழறைய
மாக விசும்பின் வானோர் தொக்க
போக பூமியிற் பொன்னகர் பொலிய

(நகரமாந்தர் விரிசிகை வரவு காண விரைதல்)

நாற்பான் மருங்கினு நகரத் தாளர்
அடையாக் கடையர் வரையா வண்மையர்

---

82. தேவி - வாசவதத்தை. 84. பண்டேயறிதலின் கூடாள்.
89. தோளை வாழ்த்துபவர்கள்.
90. அங்கை மலரி - உள்ளங்கையை விரித்து.
92. நீரின் - தாரைவார்க்கும் நீரால். 95. பாடு - ஒலி.

உடையோ ரில்லோர்க் குறுபொருள் வீசி
உருவத் தண்டழைத் தாபதன் மடமகள்
வருவழிக் காண்டு நாமென விரும்பித்
தெருவிற் கொண்ட பெருவெண் மாடத்துப்
பொற்பிரம்பு நிரைத்த நற்புற நிலைச்சுவர்
மணிகிளர் பலகை வாய்ப்புடை நிரைத்த
அணிநிலா முற்ற மயலிடை விடாது
மாத்தோய் மகளிர் மாசில் வரைப்பிற்
பூத்தோய் மாடமும் புலிமுக மாடமும்
கூத்தா டிடமுங் கொழுஞ்சுதைக் குன்றமும்
நாயின் மாடமு நகரநன் புரிசையும்
வாயின் மாடமு மணிமண் டபமும்
ஏனைய பிறவு மெழினகர் விழவணி
காணுந் தன்மையர் காண்வர வேறிப்
பிடியுஞ் சிவிகையும் பிறவும் புகாஅள்
இடுமணல் வீதியு ளியங்குநள் வருகெனப்
பெருமக னருளினன் பெறற்கரி தென்று
கழிபெருங் காரிகை..............................
...................................................
........................மொழிந்தழி வோரும்
சேரி யிறந்து சென்று காணும்
நேரிழை மகளி ரெல்லா நிலையெனப்
பேரிள மகளிரைப் பெருங்குறை யாகக்
கரப்பி னுள்ளமொடு காத னல்கி
இரப்புள் ளுறுத்தல் விருப்புறு வோரும்
வண்ட லாடிய மறுகினுட் காண்பவை

---

100. உடையோர் - செல்வர்.

101. தழை - ஒருவகை உடை.

108. புலிமுகமாடம் - மூன்மாடம் ; உ. 9 : 68.

110. நாயில் மாடம் - மதிலுறுப்பின்மேற் புனைந்த மாடம்.

115 - 6. விரிசிகை பூமியில் நடந்தே வருகவென்று அரசன் அருளினன்.

122. கரப்பினுள்ளமொடு - மறைந்து காணும் உள்ளத்தோடு.

கண்டினிது வருஉங் கால மன்றெனக்
காவல் கொண்டன ரன்னையர் நம்மென
நோவன ராகி நோய்கொள் வோரும்
எனையோர் பிறரும் புனைவன ரீண்டி
விரைகமழ் கோதை விரிசிகை மாதர்
வருவது வினவிக் காண்பது மால்கொளக்
காண்பதொன் றுண்டெனக் கைத்தொழின் மறக்கும்
மாண்பதி யியற்கை மன்னனு முணர்ந்து
தடந்தோள் வீசித் தகைமாண் வீதியுள்
நடந்தே வருக நங்கை கோயிற்
கணியில் யாக்கை மணியுடை நலத்திற்
றமிய ளென்பது சாற்றுவனள் போலக்
காவ லின்றிக் கவியங் காடியுண்
மாவும் வேழமும் வழக்குநனி நீக்கி
[1] வல்லென மணிநில முறுமை வாயில்
எல்லை யாக வில்லந் தோறும்
மெல்லென நறுமலர் நல்லவை படுக்கென
உறுதொழி லிளையரை யுதயண னேவா
மறுவின் மாத ரொழியநங் கோயில்
நறுநுதன் மகளிரொடு நன்மூ தாளரும்
நண்பிற் றிரியாது பண்பொடு புணர்ந்த
காஞ்சுகி [2]மாந்தருந் தாஞ்சென்று தருகென
நடந்தே வருமா னங்கைநங் நகர்க்கென
நெடுந்தேர் வீதியு மல்லா விடமும்

---

126. நம்மைக் காத்தல் கொண்டனர் ; அகநா. எ : 1 - 5.
130. காண்பதில்.
132. இயற்கையை. 134. கோயிற்கு நடந்தே வருக.
போல (136) நடந்தே வருக. (134)
138. வழக்கு - வழங்குதலை. 139. உறுமை - உறுத்தாதபடி.
141. ‘பூப்புரி வீதி’ என்பர் பின் ; ௪. 17 : 19.
142. ஏவா - ஏவி.
146. காஞ்சுகிமாந்தர் - சட்டையிட்ட மாந்தர் ; ௪. 16 : 45.
பி - ம். 1 யொல்லென. 2 மாதருந்.

கொடைநவில் வேந்தன் கொடிக்கோ சம்பி
நிலையிடம் பெறாது நெருங்கிற்றாற் சனமென்.

கரு—விரிசிகை வரவு குறித்தது முற்றிற்று.

---

## கசு—விரிசிகை போத்தரவு.

(விரிசிகையின் தமர் அவளைக் கொணர்தல்)

நெருங்கிய பல்சனம் விரும்புபு நோக்க
ஒள்ளிழை மாதரைப் பள்ளியு ணின்று
திருவமர் சிவிகையுட் சுமந்தனர் கொணர்ந்து
பெருநகர் நெடுமதிற் புறமருங் கியன்ற
தேவ குலத்தொரு காவினு ளிரீஇ

(விரிசிகையைப் புனைதல்)

வேரியுந் தகரமும் விரையு முரிஞ்சி
ஆர்கலி நறுநீர் மேவர வாட்டித்
துய்யறத் திரண்டு தூறலு மிலவாய்
நெய்தோய்த் தன்ன நிறத்த வாகிக்
கருமையிற் கவினிப் பருமையிற் றீர்ந்த
சில்லென் கூந்தலை மெல்லென வாரிக்
கானக் காழகிற் றேனெய் தோய்த்து
நறுந்தண் கொடிப்புகை யறிந்தளந் தூட்டி
வடித்து வனப்பிரீஇ முடித்ததன் பின்னர்த்
தளிரினும் போதினு மொளிபெறத் தொடுத்த

---

கசு—விரிசிகை போத்தரவு.

[உதயணன் கட்டளைப்படி விரிசிகையின் தமர், அவளைத் தவப் பள்ளியிலிருந்து சிவிகையிற் கொணர்வித்து நகர்ப்புறத்தே நீராட்டல் முதலியவற்றைச் செய்து இயன்றவளவு அலங்கரித்து அவனுடைய தமர்பால் அவளை ஒப்பித்தல் இதனுள் அறியலாதும்.]

2. பள்ளி-முனிவர் இருப்பிடம். 5. தேவகுலம்-தேவர்கோயில்.

6. தகரம் - வாசனைப் பொருள்களுள் ஒன்று. விரை: "சந்தன மகிலொடு கருப்பூரங் கத்தூரி, குங்கும மென்றிவை யைந்தும் விரையே" என்பன. உரிஞ்சி - தேய்த்து.

8. துய் - சிம்பு; சீவக. 559.

12. தேனெய் - தேன். அகிலைத் தேனிற் றோய்த்து.

சேடுறு தாமஞ் சிறந்தோன் சூட்டிய
வாடுறு பிணையலொடு வகைபெற வளாஅய்க்
குளிர்கொள் சாதிச் சந்தனக் கொழுங்குறைப்
பளிதம் பெய்த பருப்பிற் றேய்வையின்
ஆகமு முலையுந் தோளு மணிபெறத்
தாரையுங் கொடியுந் தகைபெற வாங்கி
இருந்தா ளிளம்பனை விரிந்திடை விடாஅ
முளைநுகும் போலை முதலீர்க்கு விரித்துத்
தளையவி ழாம்பற் றாஅள் வாட்டி
நீல நெடுமயி ரெறியுங் கருவிக்
காலென வடிந்த காதணி பெறீஇச்
சில்லெ னரும்பு வல்லிதி னமைத்து
நச்சர வெயிற்றி னல்லோன் புனைந்த
நெற்சிறு தாலி நிரல்கிடந் திலங்கக்
கடைந்துசெறிந் தன்ன கழுத்துமுதற் கொளீஇ
உடைந்துவே யுகுத்த வொண்முத் தொருகாழ்
அடைந்துவில் விமைப்ப வணிபெறப் பூட்டிக்
கல்லுண் கலிங்க நீக்கிக் காவலன்
இல்லின் மகளி ரேந்துவன நீத்த
கோடி நுண்டுகில் கோல மாக

16. சேடு - பெருமை. சிறந்தோன்சூட்டிய - உதயணன் முன்பு சூட்டிய.
17. பிணையல் - பிணைத்த மாலை; உ. 15 : 148. வளாஅய் - சூழ்ந்து.
16 - 7. இவளுக்கு உதயணன் முன்பு மாலை சூட்டியதை, விரிசிகை மாலை சூட்டென்னும் பகுதியால் உணர்க.
18. சந்தனக்கட்டை.
19. பளிதம் - பச்சைக்கருப்பூரம். பருப்பு - பருமை.
21. தாரை - ஒழுங்கு. வாங்கி - வளைய அமைத்து.
23. நுகும்போலை - குருத்தோலை; உ. 2 : 130.
24. ஆம்பற்றாள் - ஆம்பற்றண்டு 25. ஒருவகைக் கத்தரிகை
28. எயிற்றின் - பல்லைப்போல. நல்லோன் - உதயணன்
29. நெற்சிறுதாலி - சிறுநெற்றாலி; ஒருவகைக்கழுத்தணி.
30 - 32. கழுத்தில் முத்துவடமொன்றைப் பூட்டி.
33. கல்லுண் கலிங்கம் - காஷாயவுடை; கல் - செங்காவிக்கல்.
35. கோடி - புதுமை.

அவ்வரி யரவின் பையெனப் பரந்த
செல்வ வல்குற் றீட்டிவைத் ததுபோல்
வல்லிதின் வகைபெற வுடீஇப் பல்லோர்
காணச் சேற லாற்று மகட்கு
நாணுத் தரீகந் தாங்கிக் கையுளோர்
நீணீர் நறுமலர் நெரித்துக் [1]கொடுத்து
மலரினும் புகையினு மாத்தொழில் கழிப்பி

(விரிசிகையை விடுத்தல்)

உரையினு மோத்தினு முவப்பக் கூறிய
சாங்கிய மடமக டலையாச் சென்ற
45 காஞ்சுகி மாந்தர்க் கோம்படை கூறி
அடுத்த காதற் றாயர் தவ்வையர்
வடுத்தீர் தந்தை வத்தவர் கோவென
விடுத்தனர் மாதோ விரிசிகை தமரென்.

கசு.—விரிசிகை போத்தரவு முற்றிற்று.

---

37. தீட்டிவைத்தது - எழுதிவைத்தது.

40. உத்தரீகம் - மேலாடை.

41. கையிற் செங்குவளைமலரொன்றை நெரித்துக்கொடுத்து; மகளிர் குவளைமலரைப் பிடித்தல் இயல்பு; ந. 5 : 87 - 8; ச. 17 : 38; "கையது, தாது மல்கிய தண்கழு நீர்மலர்", "கையிற், புள்ளாவிச் செங்கழுநீர்க் குவளை செய்தாள் புனைபூணாள்" சீவக. 1323, 1887.

45. காஞ்சுகி மாந்தர் : ச. 15: 146. ஓம்படை - பாதுகாப்பு.

46. தாயர் தவ்வையர் - தமக்கையராகிய வாசவதத்தையும் பதுமாபதியும் கோசலத்தரசன் மகளுமே தாயர்.

48. விரிசிகையின் தமர்விடுத்தனர்.

பி - ம். 1 தொடுத்து.

..............பெருமைப் பயத்தாற் பயந்த
மாதவன் மகளே யாருமிம் மாதர்
உரையன்மி னிம்மொழி புரையா தென்மரும்
அறுவி றெண்ணீ ராழ்கய முனிந்து
மறுவில் குவளை நாண்மலர் பிடித்து
நேரிறைப் பணைத்தோள் வீசிப் போந்த
நீரர மகளிவ ணீர்மையு மதுவே
வெஞ்சினந் தீர்ந்த விழுத்தவன் மகளெனல்
வஞ்ச மென்று வலித்துரைப் போரும்
கயத்துறு மகளெனிற் கயலேர் கண்கள்
பெயர்த்தலு மருட்டி யிமைத்தலு முண்டோ
வான்றோய் பெரும்புகழ் வத்தவர் பெருமகன்
தேன்றோய் நறுந்தார் திருவொடு திளைக்கும்
சான்ற கேள்வி யருந்தவன் மகளாய்த்
தோன்றிய தவத்த டுணிபிதென் போரும்
பரவை மாக்கடற் பயங்கெழு ஞாலத்
துருவின் மிக்க வுதயணற் சேர்ந்து
போக நுகர்தற்குப் புரையோர் வருந்த
சாபந் தீர்ந்து தானே வந்த
கயக்கறு முள்ளத்துக் காமங் கன்றிய

---

36. புரையாதென்மரும் - ஒவ்வாது (பொருந்தாது) என்பாரும்.

87. அறவில்தெண்ணீர் - அறத்தெளிந்த நீரையுடைய. முனிந்து - வெறுத்து.

88. குவளை மலரைப் பிடித்தல் : ௪. 16 : 41, அடிக்.

39. இறை - சந்து.

40. நீரரமகள் - நீரில்வாழும் ஒருவகைத் தெய்வமகள்; "நீர ணங்கோ" (தஞ்சை. 2.) நீர்மை - தன்மை.

41. "கடுஞ்சினங் கடிந்த காட்சியர்" முருகு. 185.

48. கயம் - நீர்.

45. "வானத் தோய்புக ழான்மலி வெய்திறேன்" சீவக. 161.

47. அருந்தவன் - மந்தரவாசனென்னும் முனிவன்.

49. பரவை - பரப்பு. 51. புரையோர் - பெரியோர்.

58. கயக்கு - கலக்கம்.

இயக்கி யிவளே யென்மக ளென்று
மாதவ முனிவன் மன்னற்கு விடுத்தால்
ஏத மாங்கொலிஃ தென்றுரைப் போரும்
ஈரிதழ்க் கோதை யியக்கி யிவளெனின்
நேரடி யிமைப்போ நிலமுத றோய்வன
அணியும் பார்வையு மொவ்வா [1] மற்றிவள்
மணியணி யானை மன்னருண் மன்னன்
உதயண குமர னுறவுதா றுறுகென
நின்ற வருந்தவ நீக்கி நிதானமொடு
குன்றச் சாரற் குறையின் மாதவர்
மகளாய் வந்த தகளறு சீர்த்தி
நாறிருங் குழலிற் கூறன்மி னென்மரும்
இமிழ்திரை வையத் தியாவர் பெருமகன்
தமிழியல் வழக்கினன் றணப்புமிகப் பெருக்கி
நிலைமை நிகர்ப்போ ரில்லா மாதரைத்
தலைவர விருந்தது தகாதெனப் போரும்
சொல்லியல் பெருமான் மெல்லிய றன்னைக்

54. இயக்கி - யக்ஷி; இயக்கியைக் கூறுதல் சைனமரபு. விடுத்தாலாகிய (55) இஃது (56.)

57. ஈரிதழ்க்கோதை - குளிர்ச்சி பொருந்திய இதழ்களையுடைய பூவாலாகிய மாலையையுடைய.

60. "மணியிலாக் குஞ்சரம் வேந்தூர்த லின்னா" இன்னா. 14.

61. உறுகு - உறுவேன்.

64 - 5. இவள் சீர்த்தியாகிய மகளே. சீர்த்தியைப் பெண்பாலாக் கியது வடமொழி முறைபற்றி; "காணென்னு நல்லாள்" (குறள், 924) என்றாற் போல.

67. தமிழியல்வழக்கென்றது, களவொழுக்கத்தை; பா. க: 25 - 6, பார்க்க. தணப்பு மிகப்பெருக்கி - பிரிந்து.

68. மாதரை - விரிசிகையை. இரண்டனுருபு, தணப்புமிகப் பெருக்கி யென்பதனோடு முடிந்தது.

69. தலைவர - அவள் தன்னிடத்தே வர. [சிகை.

70. சொல் - புகழ். பெருமான் - உதயணன். மெல்லியல் - விரி

பி - ம். 1 மாறிவள்.

கண்டோர் விழையுங் கானத் தகவயின்
உண்டாட் டமர்ந்தாங் குறையுங் காலைத்
தனிமை தீர்த்த திருமக ளாதலின்
இனிய ளுதயனன் றென்றுரைப் போரும்
பவழமு முத்தும் பசும்பொன் மாசையும்
திகழொளி தோன்றச் சித்திரித் தியற்றிய
அணிகல மணிவோ ரணியி லோரே
மறுப்பருங் காட்சி யிவள்போன் மாண்டதம்
உறுப்பே யணிகல மாக வுடையோர்
பொறுத்தன் மற்றுச்சில பொருந்தா தென்மரும்
யாமே போலு மழகுடை யோமெனத்
தாமே தம்மைத் தகைபா ராட்டி
நாணிகந் தொரீஇய நாவுடைப் புடையோர்
காணிக மற்றிவள் கழிவனப் பென்மரும்
ஏதமி லொழுக்கின் மாதவ ரிற்பிறந்
தெளிமை வகையி னொளிபெற நயப்பப்
பிறநெறிப் படுதல் செல்லாள் பெருமையின்
அறநெறி தானே யமர்ந்துகை கொடுப்ப
அம்மை யணிந்த வணிநீர் மன்றல்
தம்முட் டாமே கூடி யாங்கு
வனப்பிற் கொத்த வினத்தின ளாகலின்
உவமயி லுருவி னுதயணன் றனக்கே
தவமலி மாதர் தக்கன ளென்மரும்

---

தன்னைத் (70) தனிமை தீர்த்த திருமகள் (73.)

75. பொன்மாசை: ஒருபொருட் பன்மொழி; க. 35 : 76, 38 : 283; இ. 6 : 44 ; "பொன்னுந் துகிரு முத்தும்" புறநா. உகஅ : 1.

77. அணிகலத்தை அணிதற்குரியோர் அழகில்லாதவர்களே.

78. காட்சி - அழகு.

80. மற்றுச் சில பொறுத்தல் - வேறுசில அணிகலங்களைச் சுமத் [தல்.

75 - 80. "உமிழ்சுடர்க் கலன்க ணங்கை யுருவினை மறைப்ப தோரார்" கம்ப. கோலங்காண் 3.

83. புடையோர் - பக்கத்திலுள்ளோர்.

84. காணிக - காண்க.

87. பிறநெறிப்படுதல் - வேறொருவரை மணஞ்செய்துகொள்ளல்.

89. அம்மையென்பது இங்கே பழம்பிறப்பை உணர்த்திற்று.

இன்னவை பிறவும் பன்முறை பகர

(விரிசிகை அரண்மனையை அடைதல்)

ஆய்பெருஞ் சிறப்பி னருந்தவர் பள்ளிப்
பாயற் கிடந்த பன்மலர் மிதிப்பினும்
அரத்தங் கூருந் திருக்கிளர் சேவடி
சின்மலர் மிதித்துச் சிவந்தடிகச் சலிப்ப
மென்மெல வியலி வீதி போந்து
கொடிபட நுடங்குங் கடிநகர் வாயில்
முரசொடு சிறந்த பல்லியங் கறங்க
அரச மங்கல மமைவர வேந்திப்
பல்பூம் படாகை பரந்த நீழல்
நல்லோர் தூஉ நறுநீர் நனைப்பச்
சேணுயர் நகரமுஞ் சென்றுட னெதிர்கொள
ஆணைச் சிறப்போ டகன்மனை புகுதலிற்

(உதயணன் விரிசிகையை மணந்து இன்புறல்)

நூனை வேந்தன் நூனெறி திரியான்
பூவிரி கூந்தற் பொங்கிள வனமுலைத்
தேவியர் மூவருந் தீமுன் னின்றவட்
குரிய வாற்றி மரபறிந் தோம்பி
அருவிலை நன்கல மமைவர வேற்றிக்
குரவர் போலக் கூட்டுபு கொடுப்பக்
கூட்டமை தீமுதற் குறையா நெறிமையின்
வேட்டவட் புணர்ந்து வியனுல கேத்த
அன்புநெகிழ்ந் தணைஇ யின்சுவை யமிழ்தம்
பணியிருங் கங்குலும் பகலு மெல்லாம்

---

96. பாயற் கிடந்த - பாயல்போலப் பரந்து கிடந்த.
97. அரத்தங் கூரும் - சிவப்பு மிகுகின்ற.  [139 - 42.
98. சின்மலர், அரசனாணையாற் பரப்பப்பட்டிருந்தவை; சு. 15:
99. இயலி - நடந்து; "மயிலின் மென்மெல வியலி" மதுரை.
100. கடிநகர் - அரண்மனை.  104. நறுநீர் - பனிநீர். [608.
109. மூவர் - வாசவதத்தை முதலியவர்.  110. உரியவற்றை.
112. குரவர் - தந்தைதாய்முதலியவர்.
113. நெறிமை - ஒழுங்கு.  114. வேட்டு - மணஞ்செய்து.

முனிவில னுகர்ந்து முறைமுறை பிழையாது
துனியும் புலவியு மூடலுந் தோற்றிக்
கனிபடு காமங் கலந்த களிப்பொடு
நற்றுணை மகளிர் நால்வரும் வழிபட
இழுமென் செல்வமொ டின்னுயி ரோம்பி
ஒழுகுவனன் மாதோ வுதயண னினிதென்.

கள—விரிசிகை வதுவை முற்றிற்று.

## நான்காவது
## வத்தவ காண்டம் முற்றிற்று.

ஆக காண்டம் நான்கிற்குக் கூடிய காதை, கஉஉ *

---

117. முனிவிலன் - வெறுப்பிலனாகி.
118. துனி - முதிர்ந்த பிணக்கு. புலவி - சிறுபிணக்கு.

*இதன்பின், 'நெல்வேலிநாத ஸ்வாமி முன்னிற்க; வடிவம்மை முன்னிற்க; அழகியமன்னர் முன்னிற்க' என்பவை ஏட்டுப்பிரதியில் எழுதப் பெற்றிருந்தன.

# ஐந்தாவது

# நரவாண காண்டம்.



## க—வயாக் கேட்டது.

உதையண குமர னுவந்துண் டாடிச்
சிதைவில் போகமொடு செங்கோ லோச்சி
ஒழுகுங் காலை யோரிடத் தொருநாட்
கழிபெருங் கேள்விக் கண்போன் மக்களொடு
பேரத் தாணியுட் பொருந்தச் சென்றபின்

**(உதயணன் வணிகருடைய வழக்கைக் கேட்டலும் தீர்த்தலும்)**

வாரமி லொழுக்கின் வாணிக ரீண்டி

---

## ரு—நரவாண காண்டம்.

*உதயணன் குமாரனாகிய நரவாணனுடைய பிறப்பு முதலியவற்றைக் கூறுதலால், இக்காண்டம் இப்பெயர் பெற்றது.*

### க—வயாக் கேட்டது.

[உதயணன் தான் கண்ட கனவை நூலையறிந்த ஒருவனிடம் வினவிப் பயனறிந்ததும், வாசவதத்தை கண்ட கனவிற்கு உதயணன் பயன்கூறியதும், அவள் வயாநோயால் வித்தியாதரரைப்போல் ஆகாயத்திற் பறந்துசெல்லவேண்டுமென்று எண்ணி வருந்தியதும், அவ்வருத்தத்தைக் கேட்ட உதயணன் மந்திரிகளோடு ஆராய்ந்ததும் இதனால் அறியலாதும்.]

4. *கண்போன் மக்கள் - மந்திரி முதலியோர்;* "*சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன், சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்*" (குறள், 445); "*தென்னவன் கண்போல் வாரும்*" (திருவிளை. பாண்டியன் சுரந் தீர்த்த. 25.)     5. *அத்தாணி - அரசிருக்கை மண்டபம்.*

6. *வாரம் - பக்ஷபாதம். வாரமில் ஒழுக்கு:* "*நெடுநுகத்துப் பகல் போல, நடுவுநின்ற நன்னெஞ்சினோர், வடுவஞ்சி வாய்மொழிந்து, தமவும் பிறவு மொப்ப நாடிக், கொள்வதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉங் குறைகொடாது, பல்பண்டம் பகர்ந்துவீசும், தொல்கொண்டித் துவன்றிருக்கைப், பல்லாயம்*" பட். 206 - 13.

முறையொடு சென்று முறைமையிற் பிழைபாக்
கறைதீர் செங்கோற் காவலற் கிசைத்து
முறையிது கேட்கெனக் கேட்பது விரும்பி
உருமண் ணுவாவினைப் பெருமகன் பணியா
வினவவன் றற்கு வினவெதிர் வழாமை
மூவ ராவா ரொருமகற் கொருத்திகண்
மேவரத் தோன்றிய மக்களம் மூவரும்
ஆன்ற கேள்வியொ டறநெறி திரியார்
மூன்றுதிறம் பட்ட விருப்பின ரவருள்
எறிதிரை முந்நீ ரூடுசென் றவ்வழி
உறுவிலைப் பண்டத்தி னொருவன் வாழும்
கடையகத் திருந்துதன் னுடையது பெருக்கிப்
பிரிவிலன் வாழு மொருவ னொருவன்
அரிய பண்ட மெளிதி னடக்கியவை
உரிய காலத் துற்றது பகரும்
இன்னவை மற்றவ ரியற்கை முன்னோன்
பொலம்படு தீவிற்குக் கலந்தலைப் பெயர்ந்துழிச்
சூழ்வளி சுழற்ற வாழ்கயத் தழுந்தினன்
அழுந்தின னென்பது கேட்டே யறிவயர்ந்
தொழிந்த விருவரு முறுகடன் கழிப்பித்
தவ்வையைச் சேர்ந்து கவ்வியின் மொழியச்
சென்றது நின்றதுஞ் சிதைவின் றெண்ணி
நன்றுசேய் வாழ்க்கை யென்றெடுத் திற்றென

---

7. முறை - வழக்கு.
9. கேட்கென - கேட்கவென்று வாணிகர் சொல்ல.
10. பணியா - கட்டளையிட்டு.
17. உறுவிலைப்பண்டம் - மிக்க விலையையுடைய பொருள்கள்.
23. பொன் அகப்படுந் தீவிற்கு மரக்கலத்திற் சென்ற பொழுது.
24. கயம் - பள்ளம். 25. அறிவுஅயர்ந்து - மனமயங்கி; "அறி வயர்ந் தெம்மில்லு ளென்செய்ய வந்தாய்" ஐந். ஐம். 22.
26. கடன் - நீர்க்கடன். கழிப்பி - கழித்து.
27. தவ்வை - தாய். கவ்வியின் - முழக்கத்தோடு; க. 57 : 80, உ. 6 : 61; குறள், 1144.
29. சேய் - பிள்ளை; தூரதேயமுமாம்.

ஒன்று முரையா [1] ளொருமைக் கோடலின்
வென்றித் தானை வீர வேந்தநின்
அடிநிழ லடைந்தன மதுவெங் குறையென
முடிவுநனி கேட்டலு முன்னோற் கமைந்த
கழிபெருங் காதலி மறுமொழி யெதுவெனச்
சுற்ற மாந்தர் [2] சொல்லுவார் மாறல
உற்றவ ருரைத்தவை யொக்கு மவனொடு
சென்றோ ரொருவருஞ் சிதைகலத் துய்ந்து
வந்தோ ரில்லை [3] மாந்தளிர் மேனிக்குக்
கருவு முண்டே திருவமர் மார்ப
தெய்வம்........................................
........................படுத்த மாற்றமுந் தெளியாள்
ஐயத் துள்ளமொ டதுவும் படாளென
இருவர் மாற்றமுந் தெரிகவென் றேவலின்
உருமண் ணுவாவதற் குறுவழக் குரைத்தனன்
வருக வப்பொருள் வந்தபி னவ்வழி
இருவரு மிலச்சித் தீரறு திங்கட்
கொருவன் கையகத் திருக்க விருந்தபின்
மிக்கோண் மாற்ற மெய்யெனின் மேலை
இயல்பே யாகு மதுதா னன்றி
மறுவில் கொள்கையோர் சிறுவனைப் பெறினே
உறுபொருண் மற்றிவ ருரைக்கவும் பெறாஅர்
வெண்குடை நிழற்றிய வேந்தே பெண்பெறிற்
புறநடை யொழித்திவர் திறவதி னெய்துப
நூனெறி யிதுவென நுழைந்தவ னுரைத்தலும்
ஆன வவரவ ரகத்திறந் தடைதர

33 - 4. இறந்தவனுடைய மனைவி யாது கூறினளென.
38. மாந்தளிர்மேனிக்கு - அவன் மனைவிக்கு.
46. இலச்சித்து - முத்திரை வைத்து.
51. பிறந்த மகனுக்கே அப்பொருள் உரியதென்றபடி.
53. திறவதின் - பாகமுறைப்படி..
54. நுழைந்து - நுணுகியாராய்ந்து. அவன் - உருமண்ணுவா.
55. ஆன - அமைந்து.

பி - ம். 1 ளொறுமைக். 2 சொல்லியமாற்றம். 3 யந்தளிர்.

(உதயணன் மகப்பேறு விரும்பல்)

அவையம் போக்கி நவையறு நெஞ்சினன்
மக்க ளின்றெனின் மிக்குயர் சிறப்பின்
என்குல மிடையறு மெனநினைந் தாற்றான்
கொற்றத் தேவியைக் குறுகலு மவளும்

(வாசவதத்தையின் செயல்)

பொற்றொடித் தோழியர் புரிந்துபுறங் காப்பத்
திருவொடு பூத்த நாள்வரை யிறந்தபின்
பெருவிற னோன்பிகட்குப் பெலிக்கொடை யாற்றி
ஆசிடைக் கிளவி யவரி னெய்தி
மாசில் கற்பின் மங்கலக் கோலமொ
டுருவமை மாடத் தோரிடத் திருந்தோள்
விரிகொடிப் பவழத்தின் விரிந்த சேவடிக்
காழகிற் புகைநிறங் கடுக்குந் தூவிப்
பல்சிறைப் புறவம் பரிந்துட னாடி
அவ்வாய்க் கொண்ட வாரிரை யமிழ்தம்
செவ்வாய்ப் பார்ப்பிற்குச் சேர்ந்தவண் சொரிதலின்
உறுபசி வருத்தமு மன்பினது பெருமையும்
திறவதி னோக்கித் தெரியா நின்றுழி

(உதயணன் செயல்)

வேந்தனும் வினவியவள் வேட்கை விரும்பித்
தாம்படு மாந்தர்க்குத் தண்ணீர் போலும்
காம்படு தோளியொடு கலந்துமகிழ் வெய்திய

---

59. தேவி - வாசவதத்தை. 62. நோன்பிகள் - துறவிகள்
63. ஆசிடைக்கிளவி - ஆசிச்சொல். 66. சீவக. 70 :

67 - 8. சீவக. 70 ; "அந்நெருப்பினிற் புகைதிரண்டதொப் பல்ல தொப்புறு வதனிடைப்புறு" கலிங்கத். 69.

68 - 70. பெருங். ௩. 7: 29 - 31; "ஞாயிறு பட்ட வகல்வாய் வானத், தளிய தாமே கொடுஞ்சிறைப் பறவை, இறையுற வோங்கிய நெறியயன் மராஅத்த, பிள்ளை யுள்வாய்ச் செரீஇய, இரைகொண் டமையின் விரையுமாற் செலவே" நற். ௯௨.

74. தாம் - தாகம்; "உடங்குநீர் வேட்ட வுடம்புயங்கி யானை, கடுந்தாம் பதிபாங்குக் கைதெறப் பட்டு" (கலி. ௧௨ : 4 - 5) ; "தாஅம் படுநர்க்குத் தண்ணீ ருள்கொல்லோ" யா.. வி. மேற்.

(உதயணன் கனவுகாண்டல்)

துயிலிடை யாமத்துத் துளங்குபு தோன்றி
அயில்வே னெடுங்கணோ ராயிழை யணுகி
அருளு மெம்மிறை யெழுபுவி யளித்தற்குப்
பொருளு மதுவே போதுக [1] வென்றலின்
யாரவன் கூறென வவ்வழி யிறைஞ்சிப்
பேரவ ளுரைத்தலிற் பெருமக னோக்கித்
துன்பமு மின்பமுந் துறக்க லாற்றா
மன்பெருந் தேவியொடு செலவுள மமர்தலின்
மற்றதை யுணர்த்தி முற்றிழை யெழுகெனப்
பற்றுந ளுடனே பறந்துவிசும் பிவரா
மேலுங் கீழு மேவர நோக்கி
மாசறு மகளிர் மம்ம ரெய்தி
ஆனாக் கனவிடை மாநிதிக் கிழவன்
விளங்கவை நாப்பட் டுளங்கினர் புகுதலின்
அரிமா சுமந்த வமளி காட்டத்
திருமா னுகத்துத் தேவியொ டேறி
இருந்த பொழுதிற் பொருந்திய வல்லியுள்
வெள்ளேறு கிடந்த வெண்டா மரைப்பூக்
கொள்வழி யெழுதிய கொடுஞ்சி யுடைத்தேர்ப்
பொன்னிய றொடரிற் புதல்வ னிருத்தலிற்

---

76. துளங்குபு - விளங்கி.
77. ஓராயிழை - ஒரு தெய்வமகள்.
78. எம் தலைவன், உமக்கு எழுபுவி அளித்தற்கு அருளுவான்.
79. போதுக - நீர் வருக.
80. என - என்று உதயணன் கேட்ப.
81. நோக்கி - ஆராய்ந்து.
84. அதை - மனைவியுடன் தான் செல்லுதலை.
85. பற்றுநள் - அத்தெய்வமகள் இருவரையும் பற்றியவளாய்.
87. மகளிர் - வாசவதத்தை. எய்தி - எய்த.
90. "அரிமா சுமந்த வமளிமே லானை" பொருந. இறுதி [வெண்பா.
92. அல்லியுள் - அகவிதழில்.
94. எழுதிய - பண்ணிய; "கடவு ளெழுதவோர் கற்று ரானெனின்" (சிலப். உரு : 130.) 95. பொற்சங்கிலியில்.

பி - ம். 1 வென்றபின்.

பின்னரப் பூவின் பிக்க நோக்கிப்
பிறழ்ந்த வாழியிற் பெருநடு வாக
உறழ்ந்துகனி யழுத்திய வுறுபொன் னல்லியின்
ஒருமுடி பிறழ்தவி னருமையொடு விரும்பிக்
கொண்டது வாவெனக் கோமகள் கொண்டு
வண்டவிழ் நறுந்தார் வத்தவற் கருளி
நெடித்தனெ னெழுகென விடுத்தனள் போகக்
கொடிக்கோ சம்பி குறுகித் தமரிடை
முடிக்கல மெல்லா முறைமையி னோக்கிக்
கைவினைக் கம்மத்துக் கதிர்ப்புநனி புகழ்ந்து
வேண்டுக விதுவென விளங்கிழைக் கோமகட்
கீயக் கொண்டுதன் னிடைமுலைச் சேர்த்தலும்
காய்கதிர்க் கனலியிற் கதுமெனப் போழ்ந்து
புக்கது வீழ்தலும் பொருக்கென வெரீஇ
எழுந்த மாதரொ டிறைவனு மேற்றுக்

(உதயணன் கனாப்பயனறிதல்)

கழிந்த கங்குற் கனவினை வியந்து
நூனெறி மரபின் வல்லோற் பேணிக்
கோலத் தேவியொடு கோமகன் வினவக்
கனவது விழுப்ப மனவயி னாய்ந்து
விளங்கொளி விஞ்சையர் வெள்ளியம் பெருமலைத்
துளங்கா வாழி தோன்ற வேந்தும்

---

97. ஆழி - சக்கரம். 99. முடி - கிரீடம்.
100. அது - அம்முடியை. கோமகள் - முற்கூறிய தெய்வமகள்.
102. நெடித்தனென் - தாமதித்தேன்.
103 - 4. தமரிடை முடிக்கலமெல்லாம் - தமரிடத்துள்ள முடிகளை யெல்லாம்.
105. கம்மம் - சிற்பத்தொழில்.
107. ஈய - அம்முடியைக் கொடுக்க.
108. கனலி - சூரியன். போழ்ந்து - பிளந்து.
99 - 109. "நன்முடி நின்மகனும்" (சீவக. 225) என்பது காண்க.
110. ஏற்று - துயிலுணர்ந்து.
112 வல்லோனை. 115. விஞ்சையருடைய வெள்ளிமலையில்.
116. ஆழி - ஆஞ்ஞாசக்கரம்.

வெய்யோற் பெறுதலும் விறலவ னெய்தலும்
ஐய மில்லையென் றுய்ந்தவ னுரைப்பப்
புதல்வனஃ தெதிர்மை பொருளென விரும்பித்
திதலை யல்குற் றேவியொடு மகிழ்ந்து
செல்லா நின்ற சின்னா ளெல்லையுட்

(வாசவதத்தையின் கருப்பம்)

பல்கதிர் மதியமொடு பரந்துவிசும் போடும்
வியந்த நற்கோ ளுயர்ந்துழி நோக்கிப்
பெயர்ந்துவரு நாளிற் பெருமையின் வழாத
நன்னா ளமயத்து மின்னென நுடங்கி
விஞ்சைய ராழி யுருட்டும் வேட்கையொ
டஞ்செந் தாமரை யகவயி னிறைந்த
வெண்பாற் [1] புள்ளின் விழையுந் தன்மையொ
டவந்தியன் மடமக ளணிவயிற் றங்கண்
வியந்துதலை பணிக்கும் வென்றி வேட்கையொடு
சேட்படு விசும்பிற் சென்றவ னவ்வழிப்
போய்ப்படு குருசில் பொலிவொடு பட்டென
முயக்கமை வில்லா நயப்புறு புணர்ச்சியுள்
அணிநிற வனிச்சம் பிணியவிழ்ந் தலர்ந்த
அந்த ணறுமல ரயர்ப்பிற் றுங்கும்
செந்தளிர்.......................வருந்த வசாஅய்
நிலாவுறழ் பூந்துகின் ஞெகிழ்ந்திடைத் தோன்றக்
கலாவப் பல்காழ் கச்சுவிரிந் திலங்கத்

117. வெய்யோன் - விரும்பத்தக்க புதல்வனை. அவன் விறலெய்[தலும்.
119. எதிர்மை - தோன்றுதல்.
130. பிறர் வியந்து தலைநடுங்கும்.
131 - 2. சென்றவனாகிய குருசில்.
132. பட்டென - தங்கினாக. 136. அசாஅய் - வருந்தி.
137. "திங்கள் சொரிநிலவு..............அங்கயலே, காந்தர் முயக்கொழிந்தார் கைவறிதே நீட்டுவரால், ஏந்திழையார் பூந்துகிலா மென்று" (தண்டி. சூ. 54, மேற்); "வெண்டிங்களின், கலையை மெல்லக் கலையெனச் சேர்த்துவார்" நைடதம், நகரப். 28.
138. கலாவப் பல்காழ் - கலாவமாகிய பலகோவை; கலாவம் ஒருவகை மேகலை.

[1] பி - ம். புள்ளியின்.

திருநுதற் றிலகமுஞ் சுமத்த லாற்றாள்

(வாசவதத்தை ஒரு கனவுகண்டு அரசனுக்கு உரைத்தல்)

பெருமதர் மழைக்க ணின்றுயில் பேணிய
இன்ப யாம மியைந்த வைகறை
நன்பெருங் கனவி னடுங்குவன ளேற்று
வெள்ளத் தானை வியலக வேந்தன்
பள்ளி யேற்றபின் பதனறிந்து வணங்கி
என்னைகொ லடிக ளின்றியான் கண்டது
விண்ணக மருங்கில் வெண்முகில் புரைவதோர்
அண்ணல் யானையென் கண்ணுற வந்துதன்
ஆய்வலித் தடக்கை சுருட்டுபு முறுக்கியென்
வாய்புக் கடங்கிய பொழுதிற் சேய்நின்
றந்தர மருங்கிற் றுந்துபி கறங்கப்
புகழ்ந்துபல ரேத்தப் பொருக்கெனப் பெயர்த்தே
உமிழ்ந்தன னுமிழப் பரந்திறகு தோற்றிப்
பல்லோர் மருளப் பறந்துசென் றுயர்ந்ததோர்
வெண்மலை மீமிசை யேறி வேட்கையின்
விண்மிசை ஞாயிறு விழுங்கக் கண்டனென்
என்னைகொ லிதனது பயமென வினவிய
நன்னுதல் கேட்ப மன்னவ னுரைக்கும்

(கனவின்பயனை உதயணன் கூறல்)

மறுவின்று விளங்கு மறப்போ ராற்றலோர்
சிறுவனைப் பெறுதி சேயிழை மற்றவன்
உறுதிரைப் பக்கமும் வானமும் போகி
அச்சமி லாற்றலோர் விச்சா தரரிடை
ஆழி யுருட்டுமென் றறிந்தோ ருரைத்த

139. "பொட்டணி யானுதல் போயிறும் பொய்போ லிடையென" திருச்சிற். 303.

144. பள்ளி ஏற்றபின் - துயிலெழுந்த பின்பு. பதனறிந்து - காலமறிந்து.

146 - 7. வெள்ளானை யொன்றுவந்து.

152. அந்த யானையை உமிழ்ந்தேன். இறகு தோற்றி - இறகு முளைக்கப்பெற்று. 157. உரைக்கும் - உரைப்பான்.

162. அறிந்தோருரைத்ததை ச - ஆம் காண்டத்துள்ள கனவிறுத்ததென்னும் பகுதியாலும், இந்தப்பகுதியிலுள்ள 111-ஆம் அடி முதலியவற்றாலும் உணர்க.

வீழா விழுப்பொருண் மெய்பெறக் கண்டனை
தீதின் றாகித் திருவொடு புணர்கென
மாதாங்கு குருசிலு மதுவே யிறுப்பப்
போதேர் கண்ணியும் புகன்றன ளொழுக

(வாசவதத்தையின் கருப்பம் முதிர்தல்)

மங்குல் விசும்பின் வளர்பிறை போலவும்
பொங்குநீர்ப் பொய்கையிற் பூவே போலவும்
நாளினு நாளினு நந்திவனப் பெய்தித்
தோளுந் தாளு முடம்புந் தலையும்
உகிரு மயிரு மொருங்குகுறை வின்றி
ஓதிய வனப்போ டுயர்நெறி முற்றி
அருவினை விச்சை யவனூ டுறைதலிற்
பெருமலை யுலகம் பேணு மவாவொடு
பறத்த லூற்றம் பிறப்பப் பைம்பூட்
சிறப்பொடு புணர்ந்த சேயிழை மாதர்
குடர்வயிற் கிடந்த குழவிய துள்ளத்
திடர்வகை யறியா ளெவ்வ மெய்தி
உணர்ந்தோ ருரைப்ப வுரையிற் கேட்கும்

(வாசவதத்தைக்கு உண்டான விருப்பம்)

இருவகை யிமயமும் பெருகுபுனல் யாறும்
நீலப் பருப்பமுந் தீபமு மப்பாற்
கோல வருவியஞ் சிகரியு ஞாலத்
தொருநடு வாகிய வுயர்பெருங் குன்றமும்
பெருமலை பிறவு மருமையொடு புணர்ந்த
இறுவரை யேறி யிமையோ ராடும்
நறுமலர்ப் பொய்கையு நந்தா வனமும்
உத்தர குருவினோ டொத்தவை பிறவும்

---

165. இறுத்தல் - விடையளித்தல்.
173. ஊடு - உள்ளே. அவன் உறைதலின்.
174. மலையுலகம் - விஞ்சையருலகு.
175. ஊற்றம் - முயற்சி. 178. எவ்வம் - துன்பம்.
181. பருப்பம் - பருப்பதம்; மலை. தீபம் - தீவு.
183. குன்றம் - மந்தரம்.
185. இறுவரை-பெரியமலை. 186. நந்தாவனம்-நந்தனவனம்

ஆண்டுபோந் தெழுந்து காண்டலுற விழையா
ஐவகைச் சோதிட ரணிபெறு கற்பம்
கைவைத் தொழியக் கடந்துசென் றுப்பால்
அமரா பதியு மந்தரத் தெல்லையும்
நுகர்பூங் காவு நோக்குபு வருதற்
குற்றதென் மனனெனு முணர்வின னாகி
மற்றுப்பிறர்க் குரையாண் மனத்தே யடக்கி
ஈர்க்கொடு [1]பிறந்த விளந்தளிர் போல
மாக்கே ழாகமு மருங்குலும் வருந்த
முலைக்கண் கறுப்பத் தலைக்கவி னெய்தி
வளம்பாற் றன்மையின் வந்துபுடை யடுத்த
இளம்பாற் கெதிர்ந்த விடத்த வாகிய
முலைபொறை யாற்று முனிவின் றலையும்
மலைபொறுத் தன்ன மகனையுந் தாங்கி
நொந்துபுற மெலிந்த தன்றியு மந்தரத்
தியங்கல் வேட்கைய னிருக்குந ளாதலின்
அயங்கவ னழற்ற வசைவு முந்துறீஇ
முக்கூட் டரத்த வொண்பளை விலங்கி
நெய்க்கூட் டிலங்கு நித்தில நிகர்த்துக்
கூரிய வாகிய நேரியன் முறுவற்
செவ்வாய் திறந்து சில்லென மிழற்ற
ஐதேந் தல்குலு மாகமு மசைஇ

189. ஐவகைச்சோதிடர் - சோதிட்கர் ஐவர்; சந்திரன், சூரியன், மற்றக்கோள்கள், 27 நக்ஷத்திரங்கள், தாரகைகள்; சூளா. துறவு. 206. கற்பம் - கற்பலோகம். 190. உப்பால் - அப்பால்.

191. அந்தரம் - ஒருவகை மேலுலகம்.

198. பாற்று அன்மையின் - பாறுதலில்லாமையின்.

200. முனிவின்தலையும் - வெறுப்பின்மேலும்.

202. அந்தரம் - ஆகாயம்.

204. அயங்கு அவன் - அசங்குகின்ற அவன்.

205. முக்கூட்டரத்தம் - வெற்றிலைபாக்குச் சுண்ணாம்பு என்னும் மூன்றும் கூடுதலாலுளதாகும் செம்மைநிறம்; உ. 4 : 91.

206. நெய்க் கூட்டில். 208. மிழற்ற - சொல்ல.

209. அசைஇ - வருந்தி.

பி - ம். [1] பிளந்த.

மைதோய் கண்ணி மதியின் மெலியப்

**(உதயணன் வாசவதத்தையின் விருப்பத்தை வினவல்)**

பசைவுறு காதற் பட்டத் தேவி
அசைவுறு வெந்நோ யறிந்த வரசன்
அசாஅ வரும்பொருள் யாதென வுசாஅய்க்
கேட்பவஃ துரையாள் வேட்பது விளம்பின்
நயந்தோர்க் காயினு நாணுத் தக்கன்றென
உயர்ந்தோர் கொள்கையி னொண்டொடி யொதுங்க
மன்னவன் மறுத்து மடவோய் மற்று
.............................................
நின்னுயிர் மதியா யாயி னென்னுயிர்
யானும் வேண்டே னாயிழை கேண்மோ
கூடிய கொழுநன் கொழுங்குடர் மிசைகுற
ஓடிய வுள்ளத் துயர்துணைத் தேவியைக்
குறையிற் கேட்டுக் கொடுத்துநோய் தணித்த
மறையில் பெரும்புகழ் மன்னவன் போல
என்ன தாயினு மீகுவன் மற்றுநின்
இன்னா வெந்நோ யெத்திறத் தாயினும்
ஒடுங்கா வுள்ளமொ டகற்றுவல் யானெனக்
கடுஞ்சூ ளறைஇக் காவலன் கேட்ப

**(வாசவதத்தை தன் விருப்பத்தைக் கூறல்)**

ஒழுக்கினுங் கற்பினு மிழுக்க மின்றெனப்

---

210. மதியின் - பூர்ணசந்திரன்போல.

212. அரசன் - உதயணன். 213. அசாஅ - விரும்புகிற.

213 - 4. உசாஅய்க் கேட்ப - ஆலோசித்துக் கேட்ப.

மகளிர் கருவுற்ற காலத்தில் அவர் விரும்பிய பொருள்களைத் தருதல் மரபு: "ஒடுங்கா வெழில்வேழம் வீழ்பிடிக் குற்ற, கடுஞ்சூல் வயாவிற் கமர்ந்து நெடுஞ்சினைத், தீங்கட் கரும்பின் கழைவாங்கும்" (கலி. ௪0: 26 - 8) என்பதும், 'நம் வயாவிற்குத் தன்மனம் பொருந்தி நாம் விரும்புமவற்றைத் தந்து மனக்குறை தீர்ப்பான் என உள்ளுறையுவமங் கொள்க' என்னும் அதன் விசேடவுரையும் இதனை விளக்கும்.

220 - 23. ஒரு பழங்கதை.

227. கடுஞ்சூள் அறைஇ - கடிய சூளுறவு மொழிந்து.

பசைஇய கேள்வனைப் பைந்தொடி வணங்கி
அசையா வூக்கத் தடிகளென் னுள்ளம்
விசைகொ ணோன்றாள்[1] விச்சா தரர்போல்
மிசையே சென்றுற மேன்மே னெருங்கும்
இசையா வரும்பொரு ளிற்றென வுரைத்தல்
வசைதீர் வையத்து நகைய தாதலிற்
சொல்லிய திலனென மெல்லியன் மிழற்ற

(உதயணன் அமைச்சரோடு ஆராய்தல்)

எளிதெனக் கென்ன வமைச்சரோ டாராய்ந்
தொளிமலர்க் கோதா யுற்றபி னறிவெனத்
துன்ப நீக்குந் தோழரோ டியைந்தே
இன்பக் கோட்டியு ளினிதி னிருந்து
போராக் கழற்காற் பெருந்தகை வேந்தன்
ஆர்வவேய்த் தோளி யசாநோய் தீரிய
ஆராய்ந் தனனு லமைச்சரோ டொருங்கென்.

க—வயாக் கேட்டது முற்றிற்று.

---

229. பசைஇய - பற்றிய.
230. அசையா - மெலியாத. அடிகள் : விளி.
233 - 4. "இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும், வசையன்று வையத் தியற்கை" (நாலடி. 111); "ஒல்லுவ தொல்லு மென்றலும் யாவர்க்கும், ஒல்லா தில்லென மறுத்தலும் இரண்டும், ஆள்வினை மருங்கிற் கேண்மைப் பாலே" புறநா. க௯௬ : 1 - 3.
233 - 5. கிட்டாப்பொருளை விரும்பல் பிறர் நகைத்தற்கிடமாத லின், யான் மொழிந்திலேனென்று அவள் சொல்ல. [கும் பொருட்டு.
239. கோட்டி - கூட்டம். 241. அசாநோய் : 213. தீரிய-தீர்க்

பி - ம். 1 விச்சாதிரர்.

# உ—இயக்கன் வந்தது.

(உருமண்ணுவா வருதல்)

ஆராய் தோழரொ டரச னதன்றிறம்
ஓரா விருந்துழி யுருமண் ணுவாவும்
ஆரர ணமைத்து வாணடு நீண்மதில்
ஏரணி யுடைய விலாவா ணகமெனும்
ஊர்வயி னின்றும்வந் துதயணற் குறுகி

(உதயணன் உருமண்ணுவாவுக்கு உரைத்தல்)

வணங்கின னிருந்துழி மணங்கமழ் கோதை
கருத்தினை யெல்லாம் விரித்தவற் குரைப்பப்

(உருமண்ணுவா ஓர் இயக்கனைப்பற்றிக் கூறுதல்)

பொறியுடை மார்பவது புணர்க்கும் வாயில்
அறிவல் யானஃ தருளிக் கேண்மதி
வெற்றத் தானையும் வேழமு நீக்கி
உற்றோர் சிலரோ டொருநா ளிடைவிட்டு
வேட்டம் போகி வேட்டுநீர் பெறாஅ
வெம்பர லழுவத் தெம்பரு மின்மையின்

---

உ—இயக்கன் வந்தது.

[வாசவதத்தையின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்கு உதயணன் எந்திரப்பொறி ஒன்று செய்ய நினைந்து உருமண்ணுவாவின் சொற்படி தனக்கு நட்பாளனாகிய நஞ்சுகனென்னும் இயக்கனை நினைந்ததும் அவன் வந்ததும் இதனால் அறியலாகும்.]

1. அதன் திறம் - வயாத்தீர்க்கும் வகையை.

2. ஓரா இருந்துழி - கருதிக்கொண்டிருந்த இடத்து.

3. வாள் நடு - வாட்படைகள் நடப்பட்டிருக்கும்.

6. கோதை - வாசவதத்தையினுடைய.

7. அவற்கு உரைப்ப - அவ்வுருமண்ணுவாவிற்கு உதயணன் சொல்ல.

8. பொறி - உத்தம இலக்கணமாகிய மூன்று வரிகள்; "மார்பிற், செம்பொறி வாங்கிய மொய்ம்பின்" (முருகு. 104 - 5); "பொறிகுலாய்க் கிடந்த மார்பிற் புண்ணியன்" (சீவக. 1706); திருமகளெனினுமாம்.

10. வெற்றத்தானை - வெற்றியையுடைய சேனை.

12. வேட்டையாடப் போய் நீர்வேட்டு அதனைப் பெறாமல்.

13. அழுவம் - பரப்பு. எவ்விடத்தும் நீரில்லாமையால்,

மதிமயக் கெய்திப் புதுமலர்க் காட்டுட்
டெய்வதை யுண்டேனிற் கையற [1]லோம்புகெனப்
பாற்படு பலாசி னோக்கமை கொழுநிழற்
குரவம் பாவைக் குறுமலர் நசைஇ
அரவ வண்டினம் யாழென வார்ப்பத்
தெறுகதிர்ச் செல்வன் முறுகிய நண்பகல்
அசைந்தியாங் கிடந்தன மாக வவ்வழி
இசைந்த வெண்டுகி லேற்ற தானையன்
கைந்நுண் மீக்கோள் கச்சினோ டணவர
அந்நுண் சாந்த மெழுதிய வாகத்தன்
காசுகண் ணரிந்து கதிரொளி சுடரும்
மாசில் வனப்பினன் மறுமதித் தேய்வென
ஏக வார மிலங்கு கழுத்தினன்
நிழல்படு வனப்பி னீலத் தன்ன
குழல்படு குஞ்சியுட் கோல மாக
ஒண்செங் கழுநீர்த் தெரிய லடைச்சித்
தண்செங் கழுநீர்த் தகைமலர்த் தாரினன்

---

15. தெய்வம் இருப்பின் அது நமது கையறவைப் பரிகரித்திடுகவென்று; தெய்வதை : சிறுபஞ்ச. 48.

16. பலாசு - புரசமரம். நோக்கு - அழகு.

17. குராமலரைப் பாவையென்றல் மரபு.

18. "அரவ வண்டின மார்த்துடன் யாழ்செயும்" (சிலப். கஉ: 'மரவம்'); "அரவ வண்டொடு தேனினம் யாழ்செயும்" (சீவக. 1196); "யாழிசை யினவண் டார்ப்ப" முல்லை. 8, அடிக்.

19. முறுகிய - வெம்மை மிக்க. நண்பகல் - நடுப்பகல்.

20. அசைந்து - வருந்தி.

22. மீக்கோள் - மேற்போர்வை. அணவர - பொருந்த.

24. காசு கண்ணரிந்து - குற்றத்தை நீக்கி.

26. ஏகவாரம் - ஏகாவலியென்னு முத்துவடம்.

27 - 8. நிழல் - ஒளி. நீலத்தன்ன - இந்திரநீலமணியையொத்த; "இந்திர நீலமொத் திருண்ட குஞ்சி" கம்ப. மிதிலை. 56.

29. அடைச்சி - செருகி.

பி - ம். 1 லோம்பென.

ஆயிர நிறைந்த வணிமலர்த் தாமரைச்
சேயொளி புரையுந் திகழொளிக் கண்ணினன்
களைக ணாகியோ ரிளையவன் றோன்றி
யாவிர் மற்றுநீ ரசைவுபெரி துடையீர்
ஏக லாற்றீ ரென்னுற் றீரென
........................................................
..........................போத றேற்றும்
தெய்வ மகனெனு மையுற வகல
அறிய வேண்டி நெறிமையி னுடி
முன்னுப கரரத்தின் முழுப்பய னிகர்ப்பதோர்
பின்னுப காரம் பெயர்த்தல் விரும்பி
என்னருங் கருதா னிறந்த பின்னர்
........................................................
நன்னர் நெஞ்சத்து நயம்பா ராட்டி
எம்மி னுகா விடர்கண் கூடின்
உம்மை யாமு நினைத்தன மொழுகுதும்
அன்ன மாண்பே [1]மறிகபின் யாரென
உண்மை யுணரிய வொருங்குநாங் குறைகொள
வச்சிர வண்ணனை வழிபட் டொழுகுவேன்
நச்சு [2] நண்பி னஞ்சுக னென்னும்
இயக்க னென்னை மயக்கற வுணர்ந்து
மறப்பின் றொழுகு நயப்பொடு புணர்ந்த

---

31. ஆயிரம் இதழ்களையுடைய தாமரை கமலமென்று கூறப்படும்.

33. களைகண் - ஆதாரம். 34. அசைவு - வருத்தம்.

40. பெயர்த்தல் - மீட்டுஞ் செய்தலை. அவன் விரும்பி.

41. என்னரும் - எதனையும்.

45. அறிகபின் - பின்பு அறிவாயாக. யாரென - நீ யாரென்று.

42 - 5. ௫. 3 : 26 - 9. 46. குறைகொள - குறையிரப்ப.

47. வச்சிரவண்ணன் - குபேரன் ; ௫. 3 : 88 ; "வச்சிர, வண்ண னுய் வாழ்வார் மகிழ்ந்து" (ஏலாதி, 50); "வச்சிர வண்ணன் காப்ப" (சீவக. 2494) ; 'வைச்ரவணன்' என்னும் வடமொழிச்சிதைவு.

50. மறப்பின் றொழுகும் - மறவாதிருமின்.

பி - ம். 1 மறிந்தபின். 2 நண்பினஞ்சுதன்.

நன்னட் பாளனேன் யானினி நுமக்கென
என்னட் பறிமி னென்று மென்வயின்
எள்ள வில்லா துள்ளிய காலை
ஓதியி னேக்கி யுணர்ந்தியான் வருவேன்
ஈதியன் மந்திர மென்று கூறி
என்பெயர் நினைந்தா லெவ்விடத் தாயினும்
துன்ப நீக்குவெ னென்றவன் றந்த
மந்திர மறந்திலேன் மறங்கனல் வேலோய்
வல்லை யாகி யொல்லை யவனைப்
பொழுதொடு நினையென வெழுதினன் கொடுப்ப

(உதயணன் இயக்கனை நினைந்தது)

வடிவேன் மன்னனும் படிவமொ டிருந்து
வாய்மையின் வழாஅத் தூய்மைய னாகி
நினைப்பிற் றிரியா நெறிமையி னேதி

(இயக்கன் வந்தது)

இமைப்போன் கண்மிசை யிலங்கிய வொளியொ
டன்றவன் கண்ட யாக்கையுங் கோலமும்
இன்றிவ னுணரு மியல்பின னாகி
நயப்புறு நெஞ்சமொடு நண்புமீக் கூரி
இயக்க னவ்வழி யிழிந்தன னினிதென்.

உ—இயக்கன் வந்தது முற்றிற்று.

---

54. ஓதி - ஒருவகை ஞானம்.
என (51) என்று அவ்வியக்கன் கூறி (55.)
59. வல்லை ஆகி - வல்லமையை உடையாயாகி. ஒல்லை - விரைவில். அவனை - அந்த நஞ்சுகனென்னும் இயக்கனை.
60. எழுதினன் கொடுப்ப - உருமண்ணுவா அம்மந்திரத்தை எழுதிக்கொடுக்க. 61. படிவம் - விரதம்.
63. அம்மந்திரத்தை ஓதி.
64. இமைப்போன் கண்மிசை - உதயணன் கண்ணில்.
65. அவன் முன்பு வேட்டையாடச்சென்ற காட்டினிடத்து.

## ௩—இயக்கன் போனது.

இயக்க னவ்வழி யிழிந்தனன் றோன்றி
மயக்கந் தீர்த்த மாசறு நண்பின்
அலகை யாகிய வரச குமரனை
உலகுப சாரத் துறைமுறை கழித்துக்

(இயக்கன் கூற்று)

கிளையின் மன்னர் கேளிர் சூழத்
தளையகப் பட்ட காலையுந் தளையவிழ்
வண்ணக் கோதை வாசவ தத்தையொடு
பண்ணமை பிடிமிசைப் படைநரு மொழியத்
தனியே போந்தோர் கனிகவர் கானத்துக்
கூட்டிடைப் பட்ட கோட்புலி போல
வேட்டிடைப் பட்ட வெவ்வப் பொழுதினும்
அருந்திற லமைச்ச னறிவி னுடைத்
திருந்திழை யல்குற் றேவியைப் பிரிப்ப
வருந்திய நெஞ்சமொடு மகத நன்னாட்
டாசிகந் தடர்த்த வாறு வெகுளித்
தருசகன் றங்கையைத் தலைப்பட் டெய்திய

---

### ௩—இயக்கன் போனது.

[வந்த இயக்கன், பத்திராபதி யென்னும் பெண்யானையாக வந்தவள் ஒரு தெய்வமகளென்றும் அவளை நினைந்தால் உடனே வந்து பொறியை எளிதில் இயற்றித்தருவாளென்றும், அவளை நினையென்றும் உதயணனுக்குக் கூறி அவளை நினைத்தற்கு ஒருமந்திரத்தையும் உபதேசித்துவிட்டுத் தன்னிடம் சென்றது இதனால் அறியலாகும்.]

2 - 3. நண்பின் அலகை - நட்பிற்குப் பேரெல்லையாகிய.
4. உலகத்தவர் செய்யும் உபசார வகைகளை முறையே செய்து.
5. கிளை இல் மன்னர் - பகையரசர்.
6. தளை - சிறை; கட்டு.
8. படைநர் - படைவீரர். 10. கோள் - கொலைத்தொழில்.
11. வேட்டிடத்து அகப்பட்ட துன்பத்தையடைய காலத்தும்.
12. அமைச்சன் - யூகி. 13. வாசவதத்தையைப் பிரிக்க.

துயரக் காலத்துத் தொன்னக ரெய்திய
பகைகொண் மன்னனைப் பணித்த பொழுதினும்
துயரந் தீர்க்குந் தோழனென் றென்னைப்
பெயராக் கழலோய் பேணா யாகி
ஒன்றிய செல்வமோ டுறுக ணில்லா
இன்று நினைத்த தென்னெனப் படுமென
வெஞ்சின வீரனை நெஞ்சுறக் கழறப்

(உதயணன் கூற்று)

பட்டவை யெல்லா......................மெங்களின்
மாறடு வேலோய் மற்றவை தீர்தலின்
எம்மிற் றீரா விடர்வரி னல்லதை
நின்னை நினைத்த னீர்மைத் தன்றென
உள்ளிய தில்லென வுள்ளங் குளிர்ப்பத்
தகுவன நாடி முகமன் கூறி
அஞ்சொன் மழலை யவந்திகை யென்னுநின்
நெஞ்சமர் தோழி நிலைமை கேண்மதி
மிசைச்செல வசாஅ விழும வெந்நோய்
1 தலைச்செலத் தானுந் தன்மனத் தடக்கி
எருக் கரும மிதுவென வெண்ணிக்
கூறுண் மறைப்ப வூறவ ணாடி

---

17. தொன்னகரெய்திய - கோசம்பியைக் கைப்பற்றிய.
18. ஆருணியை வென்ற காலத்தும்.
20. பெயராக்கழலோய் - பிறக்கடியிடாத கால்களையுடையவனே. பேணாயாகி - விரும்பாயாகி.
21. உறுகண் - துன்பம்.
23. உதயணனைநோக்கி மனத்திற் படும்படி சொல்ல.
26 - 9. இ. 2 : 43 - 5.
30 - 31. நின்றோழி யென்பது, "அன்னனின் றோழி" (சீவக. 1599) என்பது போல நின்றது.
32. மேலே செல்லுதற்கு விரும்புகின்ற துன்பத்தையுடைய வயா [நோய்.
33. தலைச்செல - மிக.
34. எருக்கருமம் - முற்றுப்பெறாத காரியம்.
35. ஊறு - உற்ற துன்பத்தை. அவண்நாடி - அவளிடத்து ஆராய்ந்து; அவண் நாடியெனப் பிரித்தலும் பொருந்தும்.

பி - ம். 1 தலைச்செலறானுந்.

உற்றியான் வினவ விற்றென விசைத்தனள்
மற்றியாந் தீர்க்கு மதுகை யறியேம்
நயந்த நண்பி னன்னர் நோக்கி
உடையழி காலை யுதவிய கைபோல்
நடலை தீர்த்த னண்பன தியல்பென
உரத்தகை யாள வுள்ளினே னென்னத்
திருத்தகு மார்வன் றிறவதிற் கிளப்பத்

(நஞ்சுகன் கூற்று)

தாரணி மார்ப காரணங் கேண்மதி
மெச்சார்க் கடந்த மீளி மொய்ம்பின்
விச்சா தாருறை யுலகம் விழையும்
திருமக ளாநின் பெருமனைக் கிழத்தி
வயிற்றகத் துறைந்த நயப்புறு புதல்வன்
அன்ன னாகுத றிண்ணிதி னாடி
மெய்ப்பொரு டெரியு மிடைதார் மன்னவ
பொய்ப்பொரு ணீங்கிய விப்பொருள் கேண்மதி
உள்ளிய வசாஅவஃ தொளியின்று கிளப்பின்

---

36. பலமுறை யான் கேட்க இன்னது என்று சொன்னாள்.

37. மதுகை - வலி. 39. உதவிய - உதவச்செல்கின்ற.

40. நடலை - வருத்தம்.

39 - 40. "உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே, இடுக்கண் களைவதா நட்பு" குறள், 788.

41. 'உரத்தகையாள' என்றது நஞ்சுகனை; விளி.

42. திருத்தகுமார்வன் - உதயணன். திறவதின் - நன்றாக.

44. மெய்ச்சார் - பகைவர்; துதியாதவரென்றபடி. மீளி மொய்ம்பு - திண்ணியதோள்.

46. நால்வருள் வாசவதத்தை முதல் மனைவியாதலின் 'பெருமனைக் கிழத்தி' என்றான். [அரசனாவான்.

45 - 7. புதல்வன் வித்தியாதரருலகத்தாரால் விரும்பப்படுகின்ற

48. அத்தன்மையை யுடையனாதலை உறுதியாக ஆராய்ந்து.

51. அசா அஃது - அவ்விருப்பத்தை. ஒளியின்று - ஒளியாமல்.

(பிடியின் பண்டைவரலாறு)

மஞ்சுசூழ் நெடுவரை விஞ்சத் தடவித்
திருமலர் கெழீஇய தெண்ணீர்ப் படுவின்
நருமதைப் பெயர்யாற் றொருகரை மருங்கின்
எண்ணரும் பருப்பத மென்னு மலைமிசை
ஒண்ணிதிக் கிழவ னுரிமையொ டிருந்துழிக்
கண்ணணங் குறாஉங் காரிகை நீர்மைப்
பத்திரை மேனகை திலோத்தமை யொருத்தி
பத்திரா பதியோ டுருப்பசி [1] யரம்பைமுதற்
பாடகஞ் சுமந்த சேடுபடு சேவடி
நாடக மகளிர் நாலிரு பதின்மருட்
பல்வளைப் பணைத்தோட் பத்திரா பதியெனும்
மெல்லிய றன்னை வேந்தன் விடுக்கவப்
பணியொடு சென்று பனிமலர் பொதுளிய
ஆலங் கானத் தாற்றயன் மருங்கின்
இணருந் தளிரு மிருஞ்சினைப் போதும்
பிணர்படு தடக்கையிற் பிறவு மேந்தி
ஒண்ணுத லிரும்பிடி யொன்றே போலக்
கண்ணயற் கடாஅத்துக் களிவண் டோப்ப
மாறுதனக் கின்றி மறமீக் கூரி
ஆறுதனக் காணு வணிநல [2] நுகர்ந்து

---

52. விஞ்சத்தடவி - விந்தமலைப் பக்கத்துள்ள காடு; க. 51 : 5, அடிக்; க. 58: 32, அடிக். 53. படு - மடு.

56. குபேரன் மனைவியோடிருந்த காலத்து.

58 - 9. ஒருத்தி பத்திராபதி - பத்திராபதியாகிய ஒருத்தி.

60. சேடு - பெருமை. 61. நாலிருபதின்மர் - எண்பதின்மர்.

63. வேந்தன் - குபேரன்.

66. இணர் - பூங்கொத்து.

67. பிணர்படுதடக்கை - சருச்சரை பொருந்திய வளைந்த கை.

69. கண்ணின் அயலிற் பிறக்கும் மதத்தில் மொய்க்கும் வண்டுகளை ஓட்ட; "கண்ணயற் பிறந்த கவுளழி கடாஅத்த, அண்ணல் யானை" (தொல். களவு. சூ. 11, ந. மேற்.) 68 - 9. பிடிகள் ஒப்ப.

71. ஆறு அரணு - ஆறே பாதுகாவலாக.

பி - ம். [1] யரம்பையெனப். [2] கரந்து.

மருப்பிடைத் தாழ்ந்த பருப்புடைத் தடக்கை
செருக்குடை மடப்பிடி சிறுபுறத் தசைஇ
நறுமலர் நாகத் தூழ்முதிர் வல்லிப்
பொறிமலர் கும்பம் புதைய வுதிர
அஞ்சாப் பைங்கணோர் வெஞ்சின வேழம்
எழுவகை மகளி ரின்ப மெய்தி
அகமகிழ்ந் தாடு மண்ணல் போல
நின்ற வின்ப நேயங் காணூ

(பத்திராபதி யானைப்பிறப்பை விரும்பல்)

விழுநிதிக் கிழவன் விழையுங் காதலின்
நாடக மகளிர் நலத்தொடு புணர்ந்த
பாடகச் சீறடிப் பத்தி ராபதி
தான மகளிரொடு தண்புனல் யாற்றயற்
கானத் தாடிக் கடவா நின்றோள்
ஊழலர்ச் சோலையூ டுவந்துவிளை யாடும்
வேழப் பிறவும் விழைதக் கதுவென
உள்ளம் பிறழ்ந்ததை யுள்ளகத் தடக்கி

(பத்திராபதி குபேரன் முன்செல்லுதல்)

வள்ளிதழ் நறுந்தார் வச்சிர வண்ணன்
அடிநிழல் குறுகிய காலை மற்றென்
மனத்ததை யியைகென நினைத்தனள் செல்லா
..........................................................

72. பருப்பு - பருமை. [பிடரியில் வைத்து.
73. தடக்கை சிறுபுறத்து அசைஇ - வளைந்த துதிக்கையைப்
74. நாகம் - சுரபுன்னை; வேறுவகை மரமுமாம்.
75. கும்பம் - மத்தகம்.
76 - 7. ஏழுபருவமகளிர்: நீராட்டரவமென்னும் பகுதியைப் பார்க்க. 78. அண்ணல் - தலைவன்.
79. காணூ - (பத்திராபதி) கண்டு. 83. தானம் - வித்தியாதர
85. ஊழ் அலர் - உதிரும் மலர்களையுடைய. [ருலகம்.
86. வேழப்பிறவும் - யானைப் பிறவியும்; “அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற், பிறவாழி நீந்த லரிது” (குறள், 8); “பிற வாழிக் கரைகண் டாரே” வில்லி - பாரதம், கிருட்டினன்றூது. 1.
87. பிறழ்ந்ததை; ஐ: சாரியை. [துச்சென்று.
89 - 90. என்கருத்து முற்றுப்பெறவேண்டுமென்று அவள் நினைத்

(குபேரன் அவ்வளைச் சபித்தல்)

பிடியெழி னய்ந்து பெயர்ந்தன ளிவளென
ஒன்றிய வுறுநோ யோதியி னோக்கிச்
செயிர்த்த வுள்ளமொடு தெய்வ வின்பம்
பொறுத்தல் செல்லாது வெறுத்தனை போன்மென
வேழ நினைஇ வேட்கை மீதூர்ந்
தாழ்வினை வகையி னுடம்பிட் டேகி
நன்றியில் விலங்கின் பிறவி நயந்துநீ
கானஞ் செய்து காரண மாக
மலைக்கணத் தன்ன மாசில் யானையுள்
இலக்கண மமைந்ததோ ரிளம்பிடியாகிப்
பிறந்த பின்றைச் சிறந்துநீ நயந்த
வேக யானையொடு விழைந்துவிளை யாடிப்
போக நுகர்கெனப் போற்று ணுகிச்
சாவ மற்றவ னிடுதலுஞ் சார்ந்து

(பத்திராபதி வினுதல்)

தேவ வாய்மொழி திரியா தாகலின்
நீடுபெற லரிதா நெடுங்கை விலங்கின்
வீடுபெறல் யாதென விளங்கிழை வினவ

(சாபவிடை)

அண்ண னற்று ளவந்தியர் கோமான்
பண்ணமை வாரியுட் பண்ணுப் பிடியாப்

---

92. ஓதியின் - ஞானத்தால். நோக்கி - அறிந்து.
94. வெறுத்தனை போன்மென - வெறுத்தனையென்று,
97. நன்றி இல் - நன்மையில்லாத.
98. கானம் - இசைப்பாட்டு.
99. மலைக்கணத்து - மலைக்கூட்டங்களை. 101. நயந்த - விரும்பிய.
103. நுகர்க என - அனுபவிப்பாயென்று.
104. சாவம் - சாபம். அவன் - குபேரன்.
106 - 7. விலங்கின் வீடுபெறல் - யானைப் பிறவியினின்றும் விடுதி பெறுதற்குரிய வழி. விளங்கிழை - பத்திராபதி.
108. தாள் - முயற்சி. அவந்தியர் கோமான் - பிரச்சோதனன்.
109. வாரி - யானைக்கூடம்.

பற்றப் படுதி பட்ட பின்னாள்
அலகை யாகிய வைம்பெருங் குலத்துக்
கொலைகெழு செவ்வேற் குருகுலக் குருசில்
உலகம் புகழு முதயண குமரனைப்
பிறைமருப் பியானைப் பிரச்சோ தனன்றமர்
சிறைகொளப் பட்டுச் செல்லா நின்றுழி
மண்ணமை நெடுந்தோண் மறமாச் சேனற்குப்
பண்ணமை பிடியாய் நீயு மவற்றுள்
யானை வித்தகர் தானத்தின் வடிப்ப
நடையொடு நவின்ற காலை யவ்வழிப்
படையுடை வேந்தன் பனிநீர் விழவினுட்
குடைகெழு வேந்தன் குருகுலக் குருசில்
ஒண்ணறுந் தெரிய லுதயண னேறப்
பண்ணிச் செல்க பத்திரா பதியென
வீர வேந்தன் விளங்கிழைக் குறுமகள்
வார்வளைப் பணைத்தோள் வாசவ தத்தையை
ஆர்வ வுள்ளத் தவனுட னேற்றி
ஊரப் படுநீ யோரிரு ளெல்லையுள்
உலப்பரு நீளதர் தலைச்செல் வோடிக்
கால கூட மென்னும் வெந்நோய்
சாலவும் பெருக மேன்மே னெருங்கி
விலக்குவரை நில்லாது வெம்பசி நலிய

---

110. பற்றப்படுதி - அகப்படுத்தப்படுவாய்.

111. அலகை - எல்லை. ஐம்பெருங்குலம்: இக்ஷ்வாகுகுலம், ஹரிகுலம், குருகுலம், நாதகுலம், உக்கிரகுலமென்பன; இது சைன நூலிற் கண்டது.

112 - 3. குருகுலக் குருசிலாகிய உதயணகுமரனை.

118. வடிப்ப - தொழிலில் திருத்த.

121. வேந்தன் - பிரச்சோதனன்.

121 - 2. குருகுலக் குருசிலாகிய உதயணன் ஏறும்படி.

126. ஏற்றி - ஏற்ற.

127. 'நீ' என்றது பத்திராபதியை நோக்கி.

129. காலகூடமென்பது யானையை வருத்தி மரிக்கச் செய்வதொரு நோய்; 'கடும்பிணி களைந்த' (௧. 52: 116) என்றார் முன்னும்.

வீழ்ந்த காலை மேயவ னத்தலை
ஆய்ந்த வுள்ளமொடு சேர்ந்தன ளாகி
அஞ்சா தைம்பத நிலைமதி நீயென
எஞ்சா தவணீ யியல்பினிற் றிரியாது
சிந்தையொடு முடிந்தது காரண மாக
ஊனமை விலங்கி னுடம்பவ ணொழிய

(பத்திராபதி பழைய உருப்பெற்றுக் குபேரனை அடைந்து வணங்கல்)

ஈனமில் யாக்கையோ டிவ்வழி வந்துநின்
முன்னைப் பேரொடு பெண்ணுரு வெய்தி
இத்துணை வாழ்தியென் றுரைக்கப் பட்ட
அன்ன தன்மையோ டிறந்த வாயிழை

(பத்திராபதி குபேரனை வரம் வேண்டிக் கோள்ளல்)

மன்னருண் மன்ன நின்னரு ளிகர்க்கும்
மாற்றுப கார மனத்தி னெண்ணி
நிச்ச நிரப்பி னிலமிசை யுறைநர்க்
கெச்சம் பெறுத லின்ப மாதலின்
மற்றது முடிக்கு முயற்சியோ டுற்றதன்
வளநிதிக் கிழவனை வாழ்த்துவனள் வணங்கி
அளவி லின்பத் தாடலிற் பணிந்து
பெருவரம் பாகிய பொருவில் செல்வவோர்
சிறுவரம் வேண்டுவென் றிரியா தீமென
நிவந்த வன்பி னுவந்தது கூறெனக்
கவிழ்ந்த சென்னியள் கைவிரல் கூப்பி
வன்க ணுள்ளத்து மன்னர்க் கொவ்வா

---

132. மேயவன் - உதயணன்.
134. ஐம்பதம் - பஞ்சநமஸ்கார மந்திரம். என - என்று உப[தேசிக்க.
138. ஈனமில்யாக்கை - தெய்வவுடம்பு.
143. மாற்றுபகாரம் - பிரதியுபகாரம்.
144. நிச்சநிரப்பு - நித்தியதரித்திரம்; குறள், 532.
145. எச்சம் - சந்ததி. 147. நிதிக்கிழவனை - குபேரனை
148. ஆடலின் - ஆடலுடன்.
150. என - என்று பத்திராபதி கேட்ப.
151. அதுகூறென்று குபேரன் சொல்ல.

அங்கவ னுள்ளமோ டருண்முந் துறீஇ
என்குறை முடித்தே யினியென் னாது
துன்புறு கிளவியிற் றுன்னல மழுங்கத்
திருமலர் நெடுங்கண் டெண்பனி யுறைத்தந்
தருமணி யாகத் தகல நனைப்ப
எவ்வ வுள்ளமோ டிரத்த லாற்றான்
தைவந் தளித்துத் தக்கது செய்தோய்
படர்கூ ரியாக்கையுட் பற்று விட்டகன்
றிடர்தீர்ந் தினியை யாகவென் குறையெனக்

(உதயணனுக்காக மகப்பேறு வேண்டல்)

கடவது கழித்த காவலன் றனக்கோர்
மறுவில் சிறப்பினோர் மகனை வேண்டுவேன்
பெறுதற் கொத்த பிழைப்பில னாயினும்
அறாஅ வருநிதிக் கிழவ னதனை
மறாஅ தருளென மடமொழி யுரைப்பப்
பெரிதவ னுணர்ந்து பெற்றனை நீயெனச்

(குபேரன் சௌதர்மேந்திரனை ஏத்தல்)

சொரிதரு விசும்பிற் சோதமற் குறுகிப்
பாத்தில் பெருமைப் பரதன் முதலாச்
சேய்த்தின் வந்தநின் குலமுஞ் செப்பமும்
வைத்த காட்சியும் வல்லிதிற் கூறிச்
சிதைவில் செந்நெறி சேர்ந்துபின் றிரியா
உதையண குமரற் குவகையிற் றோன்றுமோர்
சிறுவன் வேண்டுமது சிறந்ததென் றேத்தப்

---

154. அவன் - உதயணன்.
157. உறைத்தந்து - துளித்து.
162. இனியையாக - இனிமையையுடையாயாகுக.
163. காவலன்றனக்கு - உதயணனுக்கு.
166. நிதிக்கிழவன்: அண்மைவிளி.
169. சோதமன் - சௌதர்மேந்திரன்.
170. பரதன் - பரதசக்கரவர்த்தி.
171. சேய்த்தின் - நெடுநாளாக. செப்பம் - செம்மை.
172. காட்சி - நல்லறிவு.
175. சிறுவன் - பிள்ளை. ஏத்த - குபேரன் துதிப்ப.

(சௌதர்மேந்திரன் சோதவனுக்குக் கட்டளையிடுதல்)

பின்னை மற்றவன் மன்னிய வேட்கையொடு
விச்சை யெய்தி வெள்ளியம் பெருமலை
அச்சமி லாழிகொண் டரசுவீற் றிருந்தற்கு
நச்சி நோற்றவோர் கச்சமில் கடுந்தவச்
சோதவ னென்னு மிருடி யுலகத்துத்
தேவ யாக்கையொடு போக மெய்திய
நிதான வகையி னினைத்தினி திருந்தனன்
நாவலந் தண்பொழி லலத்தொடு தோன்றிப்
பாவ நீக்கிய பரதன் பிறந்த
ஆய்பெருந் தொல்குடித் தோன்றி யிப்பால்
மாசில் விஞ்சையர் மலையகந் தழீஇ
ஆழி யுருட்டி யென்வயின் வரூஉம்
ஊழி யிதுவென வுணரக் கூறி
ஆய வெள்ளத் தவனை யழைத்தே
குறையா விருந்தவக் கிழவனை நோக்கி
மன்னிய வத்தவன் றேவி வயிற்றுள்
துன்னினை படுநா ளின்ன தாதலின்
.....................................................
..........................னாலவ னுரைப்ப

(சௌதர்மேந்திரன் சோதவனை விடுத்தல்)

மேலையம் பாற்கடல் வெள்ளேறு கிடந்த
[1] வாலிதழ் நறுமலர் வைகறை யாமத்துக்
கனவின் மற்றவன் கையிற் கொடுத்து

177. வெள்ளியம்பெருமலையில். 178. ஆழி - ஆஞ்ஞாசக்கரம்.
179. கச்சம் - ஒருவகைப்பேரளவு.
181. எய்திய - அடைதற்கு.
183. நாவலந் தண்பொழில் - சம்புத்தீவம்.
187. வரூஉம் - வருவான். 188. ஊழி - முறைமை.
189. ஆயவெள்ளத்து - முனிவர்களின் கூட்டத்திடையே உள்ள.
190. தவக்கிழவனை - அவனை (சோதவனென்பவனை); சுட்டுப் [பெயர் மாத்திரையாய் நின்றது.
191. வாசவதத்தை வயிற்றில்.
196. அவன் - உதயணனுடைய.

பி - ம். 1 வாலிதினறுமலர்.

வினையி னெதிர்பொருள் விளங்கக் காட்டென
இந்திரன் விடுத்த காலை வந்தவன்

**(சோதவன் பத்திரையை உதயணன்பால் அனுப்பல்)**

பைந்தளிர்க் கோதைப் பத்திரைக் களிப்ப
ஒள்ளரி மழைக்கட் டேவியை யுள்ளிநீ
பள்ளி கொண்டுழிப் பரிவுகை யகல
வெள்ளிய நறும்பூத் தந்தனள் விளங்கிழை
ஆர்வ வுள்ள முடையோர் கேண்மை
தீர்வதன் றட்ட தேர்ந்துணர் வோர்க்கே
ஆயினு மக்குறை முடித்த லாற்றுவென்

**(பத்திராபதியின் நன்றியறிவு)**

தானவட் டந்தன டௌிரிய லாதலின்
இதுவு நன்னயஞ் சிறிதென வதனைத்
தான்வெளிப் படாஅ ளின்னு நுனக்கோர்
வான்வெளிப் படூஉம் வாரி விழுப்பொருள்
தருதல் வேட்கை யொருதலை யுடையள்

**(இயக்கன் பத்திராபதியைத் தியானிக்கும்படி கூறல்)**

ஆனுக் கடுந்திற லண்ண லதனால்
மேனாட் கிழமை விண்ணவர் மகளை
மனத்தி னுள்ளி மந்திரங் கூறி
நினைத்த பொழுதின் நின்முனர்த் தோன்றும்
தோன்றிய பின்னர்த் தோன்றலைத் தந்த
மகனது வரவு முறைமையி னுணர்த்துநீ
அகனமர்ந் துரைத்த வயாஅ வரும்பொருள்
இற்றென வுரைத்தலு முற்றிழை தீர்க்கும்
மற்றிது முடியா [1] தாயின் மறித்தும்

---

198. இந்திரன் - சௌதர்மேந்திரன். அவன் - குபேரன்.
199. பத்திரை - பத்திராபதி. 203 - 4. = ௫. 5: 33 - 4.
212. விண்ணவர் மகளை - பத்திராபதியை. 213. ௫. 4: 7.
214. தோன்றும்-தோன்றுவாள். 216. உணர்த்தும்-உணர்த்து
218. இற்று என - இதுவென்று. தீர்க்கும் - தீர்ப்பாள். [வாள்.

பி - ம். 1 தாயினும்.

(இயக்கன் ஒரு மந்திரத்தை உபதேசித்தல்)

வருவல் யானென [1] வொருபதங் கொடுத்துக்
குறிகொண் மாற்றங் கொள்ளக் கூறிச்
சென்றியான் வருவல் செம்மல் போற்றெனக்
குன்றா நன்மொழி யொன்றல பயிற்றிக்
கடிகமழ் மார்ப கவல லென்று

(இயக்கன் செல்லுதல்)

தொடியுடைத் தடக்கையிற் றோழனைப் புல்லிப்
பசும்பொற் பல்கலம் பல்லூ ழிமைப்ப
விசும்பின் மின்னென மறைந்தனன் விரைந்தென்.

௩—இயக்கன் போனது முற்றிற்று.

---

220. வருவல் - வருவேன். ஒருபதம் - ஒரு மந்திரத்தை.
225. தொடி - வீரவளை. தோழனை - உதயணனை.
227. மறைந்தனன் - இயக்கன் மறைந்தான்.

பி - ம். 1 வரும்பதங்.

---

## ௪—வயாத் தீர்ந்தது.

(உதயணன் செயல்)

விசும்பின் மின்னென விரைந்தனன் மறைந்தபின்
பசும்பொற் பைந்தார்ப் பனிமதி வெண்குடை
ஒன்றிய வொழுக்கி னுதயண மன்னன்
குன்றகச் சாரற் குளிறுபு வீழ்ந்த

---

௪—வயாத் தீர்ந்தது.

[வாசவதத்தையின் ஆசையைத் தீர்த்தற்கு முயலும் உதயணனுடைய கவலையை அறிந்த பத்திராபதியென்னும் தெய்வமகள் ஒரு தச்சனாகவந்து ஆகாயத்திற்செல்லும் எந்திரமொன்றைச் செய்வித்து அதில் அவர்களையும் மற்றும் சிலரையும் ஏற்ற உதயணன் ஆகாய வழியே சென்று பலதேயங்களையும் காட்டி மீட்டும் நகரிடத்தே சேர்ந்தமையின் வயாநோய் தீர்ந்தமை இதனாலறியலாகும்.]

4. குளிறுபு - முழங்கி.

இரும்பிடித் தோற்றமு மிறுதியுங் கேட்டு
விரும்பிய வுள்ளமொடு விரைந்தன னிருந்தபின்
அருமறை விச்சைப் பெருமறை தொடங்கி
வடிக்கண் மாதர் வருத்த நோக்கி
நெடிக்கு மவாவென நெஞ்சி னினை இ
உள்ளத் தன்னுட் குள்ளழிந் தயிரா
வள்ளிதழ் நறுந்தார் வத்தவ னுரைப்பத்

(அமைச்சர் செயல்)

தீரும் வாயி றோர்தும் யாமெனப்
பேரிய லாளர் பிறிதுதிறங் காணார்
முயற்சியின் முடியாக் கரும மில்லென
நயத்தகு நண்பி னுடுதொறு நாடித்
தச்ச மாக்களை யெச்சார் மருங்கினும்
ஆணையிற் றரீஇ யரும்பெறற் றேவி
பேணிய வசாநோய் தீர [1] வேண்டிச்
சேயுயர் விசும்பிற் செல்லு மெந்திரம்
வாய்மையிற் புணரும் வல்விரைந் தென்றலின்

(தச்சர் மறுத்தல்)

நீர்சார் பாக வூர்பவு மரத்தொடு
நிலஞ்சார் பாகச் செல்பவு மலங்குசினை
இலைசார் பாக வியல்பவு மென்றிந்
நால்வகை மரபி னல்லதை நூல்வழி
ஆருயிர் கொளினு மதுவெமக் கரிதெனச்

---

5. பெண்யானையின் பிறப்புவரலாற்றையும் இறப்புவரலாற்றையும் கேட்டு. 6. காண்பதற்கு விரைந்தனனாகி.

7. பெருமறை தொடங்கி - பெரிய மந்திரத்தை ஜபிக்கத் தொடங்கி. 9. நெடிக்கும் - தாமதிக்கும். 12. வாயில் - வழி.

14. "அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும், பெருமை முயற்சி தரும்" குறள், 611.

17. ஆணை - ஆஞ்ஞை. தரீஇ - வருவித்து.

19. சேயுயர் - மிகவுயர்ந்த.

20. புணரும்: முன்னிலைப்பன்மை யேவல். வல்விரைந்து - மிக விரைந்து. 21. மரத்தொடு; ஒடு: எண்ணொடு.

பி - ம். 1 வேண்டிற்.

சார்புபிறி தின்மையிற் சாற்றுவன ரிறைஞ்ச

(பத்திராபதி தச்சவுருவங்கொண்டு வருதல்)

அந்தர விசும்பி னறிவன ணோக்கி
இவருரு வாகி யிவ்வினை முடிப்பலென்
றமருரு வொழித்துச் சென்றனள் குறுகிக்
களைக ணீகுவென் கையற லொழிகெனத்
தளையவிழ் தாமமொடு தச்சுவினைப் பொலிந்தவோர்
இளையனிற் றோன்றி யிவர்களை யலைத்தல்
வேண்டா விடுக விரைந்தென வுரைத்தலிற்

(உதயணனுக்கு உருமண்ணுவா அறிவித்தல்)

பூண்டாங் ககலத்துப் புரவலற் குறுகி
உருமண் ணுவாவும் பெருவிதுப் பெய்திக்
கண்ணியன் கழலினன் கச்சினன் றாரினன்
வண்ண வாடையன் வந்திவட் டோன்றித்
தச்சுவினைப் பொலிந்த விச்சையின் விளங்கி
என்னே மற்றிவ [1] ரறியா ரொழிகெனத்
துன்னிய துயரந் துடைப்பான் போன்றனன்
மன்னருண் மன்னன் மறுமொழி யாதென

(உதயணன் உடம்படல்)

விருப்புறு நெஞ்சின் வியந்துவிர னொடித்தவன்

---

26 இறைஞ்ச - தச்சமாக்கள் வணங்க.

27. அறிவனள் - பத்திராபதி அறிபவளாய்.

28. இவர் உருவாகி - இந்தத் தச்சர் வடிவங்கொண்டு. வினை - எந்திரஞ்செய்யுந்தொழிலை.

29. அமர் உரு - தெய்வ வடிவத்தை ; ௫. 5: 41.

30. களைகண் ஈகுவென் - உங்களுக்கு ஆதாரமாகிய ஆகாய எந்திரத்தைச் செய்துதருவேன். கையறல் - செயலறுதலை.

32. இவர்களை - இத்தச்சர்களை.

33. விரைந்துவிடுக. 35. பெருவிதுப்பெய்தி - மிக விரைந்து.

36 - 7. "செய்யன் சிவந்த வாடையன்......கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்" முருகு. 206 - 8.

41. மன்னன் : ஆண்மைவிளி.

பி - ம். 1 ரறியாதொழி.

உரைப்பவை யெல்லா மொழியா தாற்றி
நெடித்தல் செல்லா தரியவை யாயினும்
கொடுத்தல் குணமெனக் கோமக னருளி

(உருமண்ணுவாவின் செயல்)

விடுத்தலிற் போந்து வேணவா முடித்தற்
குரிய முறைமையி னுரிய கொடுப்ப

(பத்திராபதி எந்திரம் அமைத்துத் தருதல்)

நிறையுடன் கொண்டோர் மறைவிடங் குறுகிச்
சின்னாள் கழிந்த பின்னா ளெல்லையுள்
அமைவுநனி காண்கென் றுங்கவ னுரைப்ப

(உதயணன் முதலியோர் எந்திரத்திலேறிச் செலலல்)

உமையொடு புணர்ந்த விமையா நாட்டத்துக்
கண்ணணங் கவிரொளிக் கடவுளைப் போலத்
தடவரை மார்பன்.........................
தானுந் தேவியுந் தகைபெற வேறி
வானோர் கிழவனின் வரம்பின்று பொலியத்
தேனார் கோதையொடு திறவதி னிருப்ப
உருமண் ணுவாவுட னேறு மதற்குத்
தெருமா லெய்திச் செய்திற மறியான்
என்றுணைக் குற்ற நோயு மிதுவென
வென்றடு தானை வேந்தன் விரும்பித்
தச்சனை நோக்கி மெச்சுவன னாக
ஏறுக விருவரு மென்றவ னுரைத்தலின்
வீறுபெறு விமானத்து விரைந்தவ ரேறலும்

---

43. ஆற்றி - செய்து.
44. நெடித்தல் - தாமதித்தல். அரியவை - கிடைத்தற்கரியவை.
50. அமைவு - எந்திரத்தின் அமைதியை.
52. கடவுள் - சிவபெருமான்.
51 - 2. ஒ.=க. 53: 15 - 6, அடிக். 54. தேவி - வாசவதத்தை.
57. உடன் - கூடவே. 59. என்துணைக்கு - என்மனைவிக்கு.
62. அவன் - தச்சன்.
63. அவர் - உருமண்ணுவாவும் அவன் மனைவியும்.

மற்றை மூவருங் கொற்றவற் குறுகி
விசும்பா டூசலின் வேட்கை தீர்க்கெனப்
பசும்பொற் கிண்கிணிப் பாவைய ரெல்லாம்
ஒல்லா நிலைமைகண் டுரைத்தனம் யாமென
வெல்போர் வேந்தனும் விரும்பின னாகித்
தச்ச னுயவன் றன்னை நோக்கி
அச்சி னமைதி யறியக் கூறென
உலக மெல்லா மேறினு மேறுக
பலர்புகழ் வேந்தே யென்றவன் பணிதலும்
உவந்த வுள்ளமொடு நயந்துட னிவர
வடுத்தீர் குருசிற் கறிய மற்றவன்
கடுப்புந் தவிர்ப்புநி னுளத்துள் ளனவென
தோடலர் தாரோன் றோன்றக் கூறி
ஏறு மிடமு மிழியும் வகையும்
ஆறுந் தீபமு மடையா விடனும்
கூறுவன னோக்கிக் குறிக்கொளற் கமைந்த
இலக்கண வகையு மிதுவென விளக்கி
நலத்தக மறையாது நன்கனம் விரித்தபின்
விளங்கொளி விமானம் வெங்கதிர்ச் செல்வன்
துளங்கொளி தவிர்க்குந் தோற்றம் போல
நாளு நாளு நன்கன மேற்றி
ஊழி னூழி னுயர வோட்டிக்
கோளுங் குறியுங் கொண்டன னாகி
முகிலுளங் கிழிய வகலப் போகி

---

64. மற்றை மூவர்-யூகி, வயந்தகன், இடபகன்.
66. பாவையர் - எங்கள் மனைவியர்.
67. என - என்று அம்மூவருஞ் சொல்ல.
70. அச்சு - எந்திரத்தினுறுப்பு. 72. அவன் - தச்சன்.
73. இவர - ஏற.
75. கடுப்பும் - விரைந்து செலுத்தலும். தவிர்ப்பும் - தவிர்த்த [லும்.
78. ஆறும் தீபமும் - இளைப்பாறுதற்குரிய தீவுகளும்; ஆறு - நதியுமாம். அடையா இடம் - செல்லக் கூடாத இடங்கள்; அவை மணிமேகலையிற் கூறப்படும் விந்தமலை முதலிய இடங்கள் போல்வன.
82 - 5. எந்திரத்தில் ஏற்றி முறையே பழக்கியபடியைக் கூறியது.
85 - 7. = 105 - 7.

வடக்கு மேற்கும் வானுற நிமிர்ந்து
தொடக்கொடு தொடர்ந்த தாமந் துயல்வர
ஏற்றரு மலையுஞ் செலற்கருந் தீவும்
[1] நோற்றவ ருறையு மாற்றயற் பள்ளியும்
பதினா றாயிரம் பரந்த செல்வத்து
விதிமாண் [2] டந்தை வியனா டெய்தலும்
ஐயமோ டிவனு [3] மமரரு ராமெனக்
கைவயிற் கொண்டு காழகி னறும்புகை
பலிவீ டெய்திப் பரவுவன னொத்துக்
கலிகொள் மன்னன் [4] கழலடிக் கணவாக்
கணையிற் றேறிக் கலந்துகண் ணுறாது
பணைவேய் மென்றோட் பதுமா தேவி
நன்னகர் குறுகலி னயந்துமுக நோக்கிப்
பொன்னிழை யிந்நகர் புகுது மோவென
வேண்டா வென்றபின் மீண்டுமேக் கோங்கி
நாளு நாளு நன்கன மோட
யாழின் கிழவ னிங்ஙன நினைஇ
ஊழி னூழி னுள்ள மூக்கிக்
கோளுங் குறியுங் கொண்டன னாகி
முகிலுளங் கிழிய வகல்விசும் பேறி
எழுச்சி யெல்லை முனிந்த பின்னர்
விழுச்சீர் விசும்பி னியங்குதற் கறிதலின்
மூரிப் பசும்பொன் மால்வரை கண்ணுற்
றோசனை யிழிந்து முகடுவலஞ் செய்து
துகடீர் பெருமைச் [5] சேதியந் தொழுது

89. தொடக்கு - பிணிப்பு; சல்லியுமாம்.
92. எல்லாவகையும் பதினாறாயிரம் பதினாறாயிரமாகப் பரந்த செல்வத்தை யுடைய.
94. என - என்று நினைக்கும்வண்ணம்.
98. கண்ணுறாது - அதனைக்காணாமல்.
102. என்றபின் - என்று கூறியபின். மேக்கு - மேலே.
104. யாழின்கிழவன் - உதயணன். 108. எழுச்சி-மேலே எழுதல்.
111. ஓசனை - யோசனை. 112. சேதியம் - சினாலயம்.

பி - ம். 1 நோற்றா. 2 டத்தை. 3 மாரூரா மென்னக். 4 கழலடிகவர்க. 5 சேதியன்றொழுது.

விதியிற் போதன் மேவின னாகி
எறிவளி யெடுப்ப வெழுந்துநிலங் கொள்ளும்
வெதிரிலை வீழ்ச்சியின் வேண்டிடத் தசைஇ
வினைகொள் விஞ்சை வீரிய ருலகிற்
புனைவமை நகரமும் பூந்தண் காவும்
நிறைப்பருங் காட்சி யியற்கைய வாகிச்
சென்றுசே ணோங்கிய சேதி யெங்கணும்
ஒன்றே போல்வன வொருநூ றாயிரம்
வந்தனை செய்குநர் பூசனைக் களரியும்
கிளர்சே ணிமயமுங் கெங்கையுஞ் சிந்துவும்
வளமலர்க் கயமு மணிநிலப் பூமியும்
மேதகு மேருவு மதன்மிசைக் காவும்
சிந்துவுஞ் சீதையுஞ் சீதோ தகையும்
அந்தமில் விதையமு மணிதிக ழந்தியும்
தேவ குருவு முத்தர குருவும்
[1] ஈரைந் திரதமு மிறுதி யாக
மனத்தினும் வளியினு மிசைப்பி னோட்டி
எச்சார் மருங்கினு மினிதி னுறையும்
[2] விச்சா தரரின் விதியினைக் காட்டி
விராய்மலர்க் கோதைய ருராஅ வூக்கமொ
டொருங்குபல கண்டு விரும்புவன ராகி
அசும்புசோர் முகிலுடை விசும்புபோழ்ந் தியங்கிய
அப்பா லெல்லை முடிந்தபி னிப்பால்
அவந்திகை நாடு மணியுஞ் சேனையும்
மலைமருங் குறையு மழகளிற் றீட்டமும்
கலைமா னேறுங் கவரியுங் களித்த
[3] அருவித் தலையு மணிமலை யிடமும்
குளிர்பொழிற் சோலையுங் குயிற்றொகைப் பரப்பும்

---

115. வெதிரிலை வீழ்ச்சியின் - மூங்கிலிலையின் வீழ்ச்சியைப்போல.
119. சேதி - சினாலயம். 121. களரி - கொட்டில்.
122. சிந்து - ஒருநதி. 123. கயம் - ஆழ்ந்த நீர்நிலை.
132. உராஅ - பெயராத.
134. அசும்பு சோர் - துளிகள் வீழ்கின்ற. 136. பு. ௫. 8: 7.

பி - ம். 1 ஈரந்திரதமு. 2 விச்சாதிரரின். 3 வருவிக்கலையு.

மயில்விளை யாட்டு மான்கண மருட்சியும்
புயல்வளம் படுக்கும் பொருவில் வளமை
அவந்தி நாடு மிகந்துமீ தியங்கித்
தண்டா ரணியமுந் தாபதப் பள்ளியும்
வண்டார் சோலையும் வளங்கெழு மலையும்
மயிலாடு சிமையப் பொதியிலு மதன்மிசைக்
குளிர்கொள் சந்தனத் தொளிர்மலர்க் காவும்
காவி னடுவண வாவியுங் கதிர்மணித்
தேவ குலனுந் தென்பா லிலங்கையும்
................காண்டகப் பொலிந்த
அராஅந் தாணமு மணிமணற் றெண்டிரைக்
குமரித் துறையு மமர்வனர் நோக்கி
விண்ணவு மலையவு மேவன பிறவும்
ஒண்ணுதன் மாத ருவப்பக் காட்டி
நற்றுணைத் தோழர் [1] நால்வருந் தானும்
பொற்றொடி மாதரும் போதுபல போக்கித்
தன்னகர்க் காகிய வருங்கலந் தழீஇ
நன்னகர்ச் செல்வமு மெலிவு நோக்கி
உரிமைத் தேவி யுறுநோய் நீக்கிப்
பொன்னகர் புக்கனன் புகழ்வெய் யோனென்.

ச—வயாத் தீர்ந்தது முற்றிற்று.

---

144. தண்டாரணியம் - தண்டகாரணியம்.
144 - 5. = சீவக. 337.
151. அராஅந்தாணம் - அருகத்தானம்; மணி. ரு: 87.
158. மெலிவு - தான் இல்லாமையாலுண்டாகிய தளர்ச்சி.
160. புகழ்வெய்யோன் - புகழை விரும்பிய உதயணன்.
பி - ம். 1 மூவருந்.

## ரு—பத்திராபதி உருவுகாட்டியது.

(உதயணன் தச்சவுருவங்கொண்ட பத்திராபதியை அழைத்துக் கூறல்)

பொன்னகர் புக்கபின் புகழ்மீக் கூறி
மின்னிலங் கவிரொளி வெய்யோன் மேவும்
வைய மியற்றிய கைவினை யாளன்
வருக வென்றுதா னருளொடு பணிப்ப
நயந்துவந் திறைஞ்சிய வையத் தலைவனை
வியந்த விருப்பொடு நயந்துமுக நோக்கித்
தொல்லைச் செய்த நன்னரு மறியேம்
எல்லையில் பெருந்துய ரெய்தின மகற்றினை
அரசி னாகா தாணையி னாகாது
விரைசெல விவுளியொடு வெங்கண் வேழம்
பசும்பொ னோடைப் பண்ணொடு கொடுப்பினும்
விசும்பிடைத் திரிதரும் வேட்கை வெந்நோய்
பொன்னிறை யுலகம் பொருளொடு கொடுப்பினும்
துன்னுபு மற்றது துடைக்குந ரின்மையின்
உறுகண் டீர்த்தோய்க் குதவியொன் றாற்றிப்
பெறுகுவம் யாமெனப் பெயர்ப்பதை யறியேம்
நல்வினை யுடைமையிற் றொல்வினை தொடர்ந்த
எந்திரந் தந்து கடவுளை யொத்தியென்

---

ரு—பத்திராபதி உருவுகாட்டியது.

[வாசவதத்தையின் வயாநோயைத் தீர்த்த பத்திராபதியென்னுந் தெய்வமகள் தன்னையுபசரிக்கத் தொடங்கிய உதயணனை நோக்கித் தன் பண்டைவரலாற்றைக் கூறித் தன்னுடைய பழைய வடிவத்தை அவனுக்குக் காட்டித் தன்னகர்க்குச் சென்றமை இதனால் அறியலாகும்.]

1. பொன்னகர் - கோசம்பிநகரில்.
2. வெய்யோன் - உதயணன்; எழுவாய். மேவுதல் - விரும்புதல்.
3. வையம் - விமானம். கைவினையாளன் - தச்சன்.
5 - 6. பணிந்த தச்சனை நோக்கி.
7. முன்பு நாம் உனக்குச் செய்த நன்மையை அறியேம்.
15. உறுகண் - துன்பத்தை. 16. பிரதியுபகாரத்தையறியேம்.

(தச்சனுக்குச் சிறப்புச் செய்தல்)

றன்புகலந் தொழுகு மறிவிற் பின்னி
அருளுரை யளைஇப் பொருளுரை போற்றித்
தானணி பெருங்கலந் தலைவயிற் களைந்து
தேனணி தாரோன் பெருஞ்சிறப் பருள

(பத்திராபதி தன்வரலாறு கூறுதல்)

அருளெதிர் வணங்கி யதுவுங் கொள்ளான்
பொருளெனக் கென்செயும் புரவல போற்றென
என்முதல் கேளெனத் தொன்முத றொடங்கிச்
சுருங்கா [1]வாகத் தரம்பை தன்மையும்
கருங்கோட்டுக் குறவர் கணமலை யடுக்கத்
திரும்பிடி யாயங் கிற்ற வண்ணமும்

(உதயணன் எண்ணுதல்)

[2] ஒன்று மொழியாது நன்றியின் விரும்பி
மயக்குறு நெஞ்சின் மன்னவன் முன்னா
இயக்கன் கூறிய திவளுங் கூறினள்
உள்ள முருக்கு மொள்ளமர்க் கிளவி
ஆரா வுள்ள முடையோர் கேண்மை
தீரா தம்ம தெளியுங் காலென

(பத்திராபதி தன் உருவத்தைக் காட்டி மீளல்)

மேனீ செய்த வுதவிக் கியானோர்
ஐயவி யனைத்து மாற்றிய தில்லென
முன்றனக் குரைத்தன முறைமுறை கிளந்து
நீயும் யானும் வாழு மூழிதொறும்
வேறல மென்று விளங்கக் கூறி
அன்றுதான் கொண்ட வுருவு நீக்கித்

---

21. கலத்தைத் தலையினின்று களைந்து; “தலைப்பே ரணிகலம்” (இ. 7 : 9) என்பர்பின். 24. என - என்றுகூறி.
25. என்முதல் - என்வரலாற்றை.
30 - 31. முன்னாள் இயக்கன் கூறியதை இவளுங் கூறினளாகி.
36. ஐயவி - சிறுகடுகு; புறநா. ௩௫௮ : 3. என - என்றெண்ண.
40. உருவு - தச்சவடிவத்தை.

பி - ம். 1 வாகததரமமை. 2 ஒன்றுமொழிமாது.

தன்னம ருருவ மன்னவன் காணக்
காட்டின ளாகி வேட்கையின் விரும்பி
விஞ்சை மகளவ் விழைபிடி யாகி
எழிலி மீதாங் கினிதி னடப்ப
வளம்படு வாயிலு மவள்பெயர் கொளீஇ
வாயி லாளரொடு வத்தவன் வழிபடப்
போயினண் மாதோ புனையிழை நகர்க்கென்.

ரு—பத்திராபதி உருவுகாட்டியது முற்றிற்று.

---

43. விஞ்சை மகள் - பத்திராபதி.
44. எழிலிமீது - மேகத்தின்மேலே.

---

## சு—நரவாணதத்தன் பிறந்தது.

(நரவாணதத்தன் பிறத்தல்)

புனையிழை தன்னகர் புக்கபி னிப்பால்
துனைசேர் நெடுந்தேர் துவன்றிய தானை
வத்தவர் பெருமகன் வானோர் விழையும்
அத்தகு சிறப்பி னவந்தியன் மடமகள்
உசாவி னன்ன நுண்ணிடை யுசாவினைப்
பேதைக் குரைப்போன் பிழைப்பிற் றாகிய
பொற்பமை சுணங்கிற் பொம்மல் வெம்முலைப்
பட்டத் தேவியைப் பதுமையி னீக்கி

---

சு—நரவாணதத்தன் பிறந்தது.

[உதயணனுக்கு வாசவதத்தையிடம் நரவாணதத்தனும், உருமண்ணுவா முதலிய நால்வர்க்கும் தம் தம் மனைவியரிடம் பூதிமுதலிய நால்வரும் பிறந்தமை இதனாலறியலாகும்; இப்பெயர் தலைமைபற்றிவந்தது.]

அவந்தியன் மடமகளாகிய (4) பட்டத்தேவியை (8.)

5 - 7. "அவாப்போ லகன்றத னல்குன்மேற் சான்றோர், உசாப் போல வுண்டே மருங்குல் - உசாவினைப், பேதைக் குரைப்பான் பிழைப் பிற் பெருகினவே, கோதைக்கொம் பன்னாள் குயம்" யா-கா. ஒழிபு. 8, மேற்.

முட்டில் செல்வமொடு முறைமையிற் பிழையா
தொழுகா நின்ற வழிநாட் காலைப்
பிறைபுரை திருநுத லஃகப் பிறையின்
குறைவிடந் தீர்ந்த கொள்கை போலத்
திருவயிற்று வளர்ந்த திங்க டலைவர
ஒருமையிற் றீயவை நீங்கப் பெருமையின்
முழுநோக் காக வைம்பெருங் கோளும்
வழுவா வாழ்நாண் மதியொடு பெருக்கிப்
பெருஞ்சிறப் பயர்வர நல்கி யொழிந்துழி
நோக்கி மற்றவை யாக்கம் பெருகப்
பகைமுதல் சாயப் பசிபிணி நீங்க
மாரியும் விளையுளும் வாரியுஞ் சிறப்ப
வழுக்கா வாய்மொழி வல்லோர் வாழும்
விழுத்தகு வெள்ளி வியன்மலை விளங்கத்
திருத்தகு தேவி வருத்த மின்றிப்
பொய்கைத் தாமரைப் பூவி னுறையும்
தெய்வத் திருமகள் சேர்ந்துமெய் காப்பப்
பொய்யில் பொருளொடு புணர்ந்த நாளாற்
றெய்வ விளக்கந் திசைதொறும் விளங்க
ஐவகைப் பூவும் பல்வகை பரப்ப
மதியுறழ் சங்க நிதியஞ் சொரிய
அந்தர விசும்பி னாழிக் கிழவன்
வந்துடன் பிறந்தனன் பிறந்த பின்றைச்

(பிறந்தநாட் சிறப்புக்கள்)

சிறந்தோர் நாப்பட் சேதியர் பெருமகற்

---

10. வழிநாட்காலை - பின்னாளில்.
11. அஃக - குறைய. 13. தலைவர - நிரம்ப.
14. தீயவை - தீய கோட்கள்.
19. பசியும் பிணியும் நீங்க; ௫. 7: 46; சிலப். ௫ : 72 ; மணி.௧: 70.
20. விளையுள் - விளைவு. வாரி - மற்றை வருவாய். [2863.
24. பொய்கை - பதுமையென்னும் பொய்கை ; சீவக. 183, 1001,
26. பொருள் - தருமம்.
28. ஐவகைப்பூ - கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ, புதற்பூ.
30. ஆழிக்கிழவன் - சக்கரவர்த்தி.

கறஞ்சேர் நாவி னவந்திகை திருவயிற்
றரியவை 1 வேண்டிய வசாவொடு தோன்றிப்
பெரியவ ரேத்தப் பிறந்த நம்பிக்
குதையணை குமரன் றுதைதார்த் தோழரும்
அகனம ரவையு மைம்பெருங் குழுவும்
நகரமு நாடுந் தொகைகொண் டீண்டி
ஆயுட் டானம் யாவையென் றுது
மேயவை யெல்லாங் காவலன் வீசி
முத்துமணற் பரந்த நற்பெருங் கோயில்
முற்றந் தோறு முழுங்குமுர சியம்பப்
பொலிகெனு மாந்தர்க்குப் புறங்கடை தோறும்
மலிபொன் மாசையு மணியு முத்தும்
ஒலியமை தாரமு மொளிகால் கலங்களும்
கோடணை யியற்றிக் கொடையொடு புரிகென
ஆய்புகழ் வேந்த னேயின னாகிக்
கொலைச்சிறை விடுக தளைச்சிறை போக்குக
கொற்றத் தானையொடு கோப்பிழைத் தொழுகிய
குற்ற மாந்தருங் கொடிநகர் புகுதுக
அருங்கடி நகரமு நாடும் பூண்ட
பெருங்கடன் விடுக விருங்கடல் வரைப்பின்

---

34. அரியவை - கிடைத்தற்கு அரியவற்றை.
39. ஆயுட்டானம் - ஆயுளைத் தரும் கொடை.
40. மேயவை - கேட்போர் விரும்பியவைகள்.
41. முத்துமணல்: உ. 7: 142, அடிக்.
44. மலிபொன்மாசை: ச. 17: 75, அடிக்.
45. தாரம் - பலபண்டம்.
46. கோடணை இயற்றி - முரசு அறைவித்து.
48. தளை - விலங்கு. வெள்ளணிநாளன்று சிறைவிடுதல் மரபு; "செய்கை யரிய களவழிப்பா முன்செய்த, பொய்கை யொருவனாற் போந்தரமோ - சைய, மலைச்சிறைதீர் வாட்கண்டன் வெள்ளணிநாள் வாழ்த்திக், கொலைச்சிறைதீர் வேந்தக் குழாம்" தொல். புறத். சூ. 36, ந. மேற்.
52. கடன் - இறை.

பி - ம். 1 வேண்டியசாவொடு.

நல்குர வடைந்த [1] நசைசா லாடவர்
செல்ல றீரவந் துள்ளியது கொள்க
பொருந்தா மன்னரும் பொலிகெனுங் கிளவி
பெருந்திறை யாக விரைந்தனர் வருக
நிலைஇய சிறப்பி னூட்டினுங் காட்டினும்
கொலைவினை கடிக கோநக ரெல்லாம்
விழவொடு புணர்ந்த வீதிய வாகெனப்
பெருங்கை யானைப் பிணரெருத் தேற்றி
இருங்க ணதிரப் பொற்கடிப் போச்சிப்
பெருங்கண் வீதிதொறும் பிறபுல மறிய
இன்னிசை முரச மியமர மெருக்க
மன்னிய சும்மையொடு மகாஅர் துவன்றி
வல்லோர் வகுத்த மாடந் தோறும்
நல்லோ ரெடுத்த பல்பூம் படாகை
ஈர்முகி லுரிஞ்சி யெறிவளிக் கெழாஅச்
சீர்மைய வாகிச் சிறந்துகி லெழுந்த
நேர்துக ளவித்து நிரந்துடன் பொலிய
மையார் யானை மன்னரொடு மயங்கி
நெய்யாட் டரவமு நீராட் டரவமும்
மறப்போ ருதயணன் மகிழ்ந்த பின்னர்ப்

(சாதகர்மம்)

பிறந்த நாளும் பெற்ற மூர்த்தமும்
சிறந்த நற்கோ ளுயர்ந்துழி நின்று
வீக்கஞ் சான்றதும் விழுப்ப மருத

58. 'நசையில்வழி நல்குரவுமில்லை யாதலின் நல்குரவையே நசையாக்கி' குறள், 1043, பரிமேல்.

55 - 6. கிளவியே பெருந்திறையாக.

48 - 59. சீவக. 306, 307, 308-ஆம் செய்யுட்களைப் பார்க்க.

63. இயமரம் - ஒருவகை வாச்சியம்; ௫. 7 : 14 - 5; "இயமரநின் னூர்ப்ப" (நள. 88.) 69. நிரந்து - ஒழுங்குபட்டு.

70. மை - அஞ்சனம். மையார் யானை : க. 48: 184, அடிக்.

71. நெய்யாட்டு - நெய்யாடுதலாலுண்டாகிய.

73. மூர்த்தம் - முகூர்த்தம். 75. வீக்கம் - பெருமை.

பி - ம். 1 நசைசால்.

ஆக்கஞ் சான்ற வாருயி ரோகையும்
நோக்கி யவரு நுகருஞ் செல்வத்
தியாண்டுந் திங்களுங் காண்டகு சிறப்பிற்
பக்கமுங் கோளு முட்கோ ளளீஇ
இழிவு மிவையென விசைய நாடி
வழியோ ரறிய வழுவுத லின்றிச்
சாதகப் பட்டிகை சாலவை நாப்பண்
அரும்பொறி நெறியி னுற்ற வமைத்த
பெருங்கணிக் குழுவுக்குப் பெறுதற் கொத்த
ஈரெண் கிரிசை யியல்புளி நடாஅய்

(யாவருக்கும் பரிசளித்தல்)

ஆரிய லமைநெறி யரசன் றன்னுரை
ஏத்திய லாளருங் கூத்தியர் குழுவும்
கோயின் மகளிருங் கோப்பெரு முதியரும்
வாயின் மறவருஞ் சாயாச் செய்தொழிற்
கணக்கருந் திணைகளுங் காவிதிக் கணமும்
அணித்தகு மூது ராவண மாக்களும்
சிறப்பொடு புணரு மறப்பெருங் குழுவும்
ஏனோர் பிறர்க்கு மிவையென வகுத்த
அணியு மாடையு மணியு நல்கித்

(உதயணன் தன் தம்பி முதலியோர்க்குச் செய்தி கூறி விடுத்தல்)

தணியா வின்பந் தலைத்தலை பெருகத்
தம்பியர் தமக்குந் தருசகன் றனக்கும்
நங்கையைப் பயந்த நலத்தகு சிறப்பின்
உரத்தகு தானைப் பிரச்சோ தனற்கும்
உவகை போக்கி யூகியும் வருகெனத்
தவிர்வில் செல்வந் தலைவந் தீண்ட

---

82. சாதகமெழுதிய பத்திரிகை.
84. அரசனுக்குரிய கணியைப் பெருங்கணி என்பர்.
85. கிரிசை - கிரியை ; ௨. 22 : 23. இயல்புளி - விதிப்படி.
90. காவிதி - அரசனாற் கொடுக்கப்படுவதொரு பட்டம்.
96. தம்பியர் - பிங்கலனும் கடகனும்.

ஆசான் முதலா வந்த ணாளரும்
மாசில் வேள்வி மகிழ்ந்தனர் தொடங்கி
ஏனை வகையின் மேனிலை திரியாது
பன்னிரு நாளும் பயத்தொடு கழிப்பிப்

(பெயரிடல்)

பெயர்நிலை பெறீஇய பெற்றி நாடி
உயர்நிலை யுலகி னுலோக பாலன்
நயமிகு சிறப்பொடு நகர்மிசைப் பொலிந்த
பலர்புகழ் செல்வன் றந்தன னாதலின்
உருவாண மாகிய வோங்குபுகழ்ச் செல்வன்
நரவாண தத்த னென்றுபெயர் போக்கி

(உருமண்ணுவா முதலியவரின் புதல்வர்களுக்குப் பெயரிடல்)

உறுவிறற் றானை யுருமண் ணுவாவும்
அறிநரை வழிபட் [1] டன்றே பெயர்தலின்
.............................................
பொருவின் மாக்கள் பூதியென் றுரைஇ
ஒழிந்த மூவ ருருவார் குமரருட்
கழிந்தோ ரிமத்துக் கட்டழல் சேர்ந்த
[2] கரியக லேந்திக் காவயிற் பெற்றோன்
அரிசிக னாகப் பெயர்முதல் கொளீஇப்
பயந்தலை நிற்கும் பல்கதிர்ச் செல்வன்

---

104. பயம் - பிரயோசனம்.

105. பெயர் வைத்தலை நாடி. 108. செல்வன் - குபேரன்.

106 - 8. உலோகபாலனாகிய செல்வன்.

109. ஆணம் உருவாகிய - அன்பே உருவமாகிய.

110. நரவாணன் - குபேரன் (நரவாஹனன்); தத்தன் - கொடுக்கப்பட்டவன்; இவன் குபேரனால் கொடுக்கப்பட்டவனாதலின் இப்பெயரிடப்பட்டான். 109 - 10. = சீ. 8: 30 - 31.

112 - 3. உருமண்ணுவாவின் புதல்வனுக்குப் பூதியென்று பெயர் வைத்து.

பி-ம். 1 டன்றுபெற்றோற்குப் 2 கரிகாலேந்தி.

நயந்துதரப் பட்டோன் 1 றவந்தக ஞமெனத்
தாயர் போலத் தக்கது நாடிய
ஆவழிப் படுதலி ஞகிய விவனே
கோமுக னென்று குணங்கூறி யாக
மற்றவர் மகிழ்ந்து.......................

(நகரமாந்தர் மகிழ்ந்து கூறல்)

.....................தொன்னக ராளரும்
பெற்றனம் பண்டே பெருந்தவ மென்மரும்
இன்னோ ரன்ன வெடுத்துரை சொல்லித்
தன்னோ ரன்ன தன்மைய ஞகி
மதலை மாண்குடி தொலைவழி யூன்றும்
புதல்வற் பெற்றா னெனப்புகழ் வோரும்
உதவி நண்ணரு முதயண குமரன்
போகமும் பேரும் புகழ்மேம் பட்டதும்
ஆகிய வறிவி னரும்பெறற் சூழ்ச்சி
யூகியி னன்றே வெனவுரைப் போரும்
குறிகோட் கூறிய நெறிபுகழ் வோரும்
வெண்முகி லொழுகிய வெள்ளியம் பெருமலை
உண்முத லுலகிற் கொருமீக் கூறிய
தெய்வ வாழி கைவலத் துருட்டலும்
பொய்யா தாத லுறுபொரு ளென்மரும்
இவையும் பிறவு மியைவன கூறி
நகரத் தாளரொடு நாடுபுகழ்ந் தேத்த
நிகரில் செல்வத்து நிதியந் தழீஇ
யாப்புடை மகன்வயிற் காப்புடன் புரிகென

---

114 - 22. மற்ற மூவருடைய பிள்ளைகளுக்கும் அரிசிகன், தவந்தகன், கோமுகனென்று பெயரிட்டு.

113 - 22. பூதி முதலிய நால்வர்: ௫ : 8: 35 - 7.

127. தன்னைப்போன்ற தன்மையனாகி.

128 - 9. "சிதலை தினப்பட்ட வால மரத்தை, மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக், குதலைமை தந்தைகட் டோன்றிற்றான் பெற்ற, புதல்வன் மறைப்பக் கெடும்" நாலடி. 197.

134. குறிகோள் - நிமித்தம்.

பி - ம். 1 நலப்பந்தகன்.

*விதியறி மகளிரொடு மதிபல நவின்ற*
*மருந்துவகுப் பாளரைப் புறந்துறப் பணித்துத்*
*தளர்வி லூக்கந் தலைத்தலை சிறப்ப*
*வளரு மாதோ வைகலொறும் பொலிந்தென்.*

சு—நரவாணதத்தன் பிறந்தது முற்றிற்று.

---

## எ—யூகி பிரச்சோதனனைக் கண்டு வந்தது.

**(பிரச்சோதனன் நரவாணதத்தன் பிறந்ததை அறிதல்)**

*பொலிந்த செல்வமொடு புகழ்மீக் கூரி*
*மலிந்த திருவின் வத்தவர் பெருங்குடி*
*உண்மகி ழுவகை யூக்க மிமிழப்*
*பண்மகிழ் பேரியாழ் பயிற்றிய கேள்வி*
*உலைவில் வென்றி யுதயண குமரற்கு*
*நலமிகு புதல்வ னன்னுட் பிறந்த*
*உகவை மாற்ற முஞ்சையம் பெருநகர்ப்*
*பகையடு வேந்தற்குப் பணிந்தன னுரைப்பத்*
*தன்மைக் கேற்ற தலைப்பே ரணிகலம்*
*புன்மை தீர முன்னிலை நல்கிப்*
*பழன மணிந்த பதினா றாயிரம்*
*கழனி நன்னகர் கலக்க மில்லன*

---

எ—யூகி பிரச்சோதனனைக் கண்டு வந்தது.

[யூகியின் துணைவிசேடங்கள் பலவற்றையறிந்த பிரச்சோதனன் அவனோடு அளவளாவ விரும்பி உதயணனுக்கு அறிவிக்க, அவன் கட்டளைப்படி யூகி உச்சயினிநகரத் சென்று அரசனோடு அளவளாவி அவனை மகிழ்வித்துச் சாலங்காயனோடு வாதஞ் செய்து அவனை வென்று, அவன் தங்கைமுதலிய இருவரை மணஞ்செய்துகொண்டு பலவகைப் பொருள்களைப்பெற்று உதயணனை அடைந்தமை இதனால் அறியலாகும்.]

3. *இமிழ - மிக.* 6. *பிறந்த - பிறந்ததனாலுண்டாகிய.*
7. *உகவை - உகத்தல்; அன்பு மிகுதல்.*
8. *வேந்தன் - பிரச்சோதனன்.*
9. *தலைப்பேரணிகலம் - ஒருவகை யணி; ௫. 5 : 21.*
11 - 2. *கலக்கமில்லனவாகிய பதினாறாயிரம் நகரங்களை.*

மன்ன னருளி மன்னரு மறவரும்
இன்னே வருகென் றியமா மறைகென
முரைசெறி முதியற்குப் பெறுவன நல்கி
விரைசெல விவுளி வேந்த னேவ

(முரசறைதல்)

ஓடை யணிந்த வொண்பொ னெற்றிக்
கோடுடை வேழம் பாடுபெறப் பண்ணி
எருத்தின் மீமிசைத் திருத்தக விரீஇத்
துகின்மடி யணைமிசைத் துளக்க மின்றிப்
பாற்படு வென்றி நாற்புடை மருங்கினும்
கண்டோர் விழையுந் தண்டாக் கோலமொடு
நீத்தியாற் றன்ன நெடுங்கண் வீதியுட்
போத்தர வமைந்து புகுவழி யெல்லாம்
கனைபொற் கடிப்பிற் காண்டக வோச்சிப்
புனைபொற் பூந்தார்ப் புரவலன் காக்கும்
கன்னி மூதெயி னன்னகர் கேட்ப
மதிமரு ணெடுங்குடை மறமாச் சேனற்குப்
பதினா றாயிரம் பட்ட மகளிருள்
முதற்பெருந் தேவி திருநா வீன்ற
மதுக்கமழ் கோதை வாசவ தத்தை
வடதிசை மீனிற் கற்புமீக் கூரி
வடுவில் செய்தொழில் வத்தவர் பெருமகன்
குறிப்பறிந் தொழுகிக் கோடாக் குணத்தொடு
பொறிப்பூண் மார்பிற் புதல்வற் பயந்தனள்
கோமகற் பெற்று..............................
சேய்முதல் வந்த சிறப்பின ளாகி

15. முரைசெறி முதியன் - வள்ளுவன்.
21. பாற்படு - பல பகுதிப்பட்ட.
23. வீதிக்கு நீத்தத்தையுடைய ஆறு உவமை; உ. 7: 7, அடிக்.
24. போத்தர - செல்ல.
25. முழங்குதற்குக் காரணமாகிய பொன்னாலமைந்த குறுந்தடியால்.
28. மருள்: உவமவுருபு. 32. வடதிசைமீன் - அருந்ததி.
36. கோமகன் - இராசகுமாரன்.
37. சேய்முதல் - நெடுங்காலமாக.

.....................யக்கடம் பூண்டபின்
வருபரி சார மணிநீர்ப் பேரியாற்
றிருகரை மருங்கினு மிந்நில மேத்தச்
சீர்மையொடு பொருந்திச் சிறப்பு முந்துறீஇ
அறிவி னமர்வார் நெறிமையிற் றிரியா
இருபான் மாக்களு மொருபாற் றிருந்த
ஊர்திரை நெடுங்கட லுலப்பி னுளொடு
வாழ்கநங் கோமான் வையக மெல்லாம்
பகையும் பிணியும் பசியு நீங்கித்
தகையுஞ் செல்வமுந் தாம்படு கென்ன
மிகைபல புகழ்ந்து தொகைஇ யாற்றிய
இன்ப மொழியவன் பன்முறை யறைந்தபிற்

(நகரை அலங்கரித்தல்)

.....................யொண்புக ழுவந்தன ரேத்தி
வரைநிரைத் தன்ன மாடந் தோறும்
திரைநிரைத் தன்ன படாகையுங் கொடியும்
காட்சிக் காகா மாட்சிய வாகி
அணிபெற வுயரிப் பணிவிலர் மறல
இந்திர வுலக மிழுக்குபு வீழ்ந்து
வந்திருந் தன்றெனக் கண்டவ ரேத்த
வேனல வேந்தன் விழுப்பெருங் கோயிலுட்
பன்னீ ராயிரம் பண்முறை சார்ப்ப

(பிரச்சோதனன் விழாக்கொண்டாடல்)

நன்னீர் விரவிய செந்நிறச் சுண்ணம்

---

39. பரிசாரம் - அவந்தி நாட்டிற்கும் வத்தவ நாட்டிற்கும் இடையே ஓடும் ஓராறு.

42 - 3. அமர்வாராகிய இரண்டு பக்கத்துமுள்ள மாக்களும்.

47. படுக - உண்டாகுக. 46 - 7. = ௫. 6: 18 - 20, அடிக்.

48. தொகைஇ - தொகுத்து. 49. அவன் - வள்ளுவ முதியன்.

53. காட்சிக்கு - காண்பதற்கு. 54. உயரி - உயர்த்தி.

55. இந்திரவுலகம் - தேவருலகம்.

56. வந்திருந்தன்று - வந்திருந்தது. 57. வேல் நலவேந்தன்.

58. பன்னீராயிரம் - பதினாறாயிரம்; க. 43: 199.

59. நன்னீர் - பனிநீர்.

குலநல மகளிரொடு கோமக னுடி
ஐந்நூற் றிரட்டி யருங்கடை தோறும்
பசும்பொன் மாசையும்....................
பிடிப்புவிலை யறியாப் பெருங்கல முட்படக்
கொடித்தேர் முற்றத்துக் குறையுடை யோர்கட்
கீகென வருளி யெண்டிசை மருங்கினும்
ஆய்படை வேந்தற் கரும்பெறற் றிருமகள்
வாசவ தத்தை தீதில் சிறப்பொடு
புத்திரற் பெற்றனள் பொலிவு மூன்றுறீஇ
மொய்த்த மாநகர் முறைமுறை வருகென
அதர்கடி தோடுறு மமைாதி யாளரைப்
பொறியொற் றோலையொ டறியப் போக்கி
ஆராக் காதலொ டணிபா ராட்டி
நீராட் டயர்ந்து பல்கல னணிந்து
சீரார் செல்வமொடு செவ்வி கொடீஇத்
தெரிமா ணாளர் திறவதிற் சூழ
அரிமா சுமந்த வாசனத் திருந்து

(யூகியைப் பிரச்சோதனன் வருவித்தல்)

பொன்றுப் புகழோன் போக்கல் வேண்டி
ஒன்று ரட்ட யூகியைத் தரீஇ
இன்றியா னெய்தினெ னெனின்............
பிரச்சோ தனனவ னுரைத்ததன் பின்னர்ப்

(யூகியும் சாலங்காயனும் தர்க்கஞ்செய்தல்)

பாற்பட் டெய்திய பதினு றுயிரம்
தூப்பா லமைச்சர் மேற்பா லறிவிற்
றலைக்கை யாகிய நலத்தகு நாட்டத்து

---

63. பிடிப்புவிலை - கொள்ளும் விலை. பெருங்கலம் - பேரணி; பேரியாழுமாம். 66. வேந்தற்கு - உதயணனுக்கு.

71. முத்திரை ஒற்றிய ஓலையை ; க. 37 : 208 - 9, 45 : 30, 58 :

72. ஆராமை - தெவிட்டாமை ; எல்லையற்ற விருப்பம். [81 - 2.

74. செவ்வி கொடீஇ - சமயம் அளித்து.

78. ஒன்றார் - பகைவரை.

81 - 6. பிரச்சோதனனுடைய மந்திரிகள் பதினாறுயிரவரில் முதல் வணிகிய சாலங்காயன் யூகியோடு வாதஞ்செய்ய எண்ணி.

ஞாலம் புகழுஞ் சாலங் காயன்
ஏற்ற சிறப்பி னியூகி தன்னொடு
மாற்றங் கொடுத்தல் வலித்தன னாகி
முதல்வன் செவ்வி [1] முகமுத னோக்கிச்
சிதைபொரு ளின்றிச் செந்நெறி தழீஇ
உதையத் திவரு மொண்சுடர் போல
எல்லா மாந்தர்க்கு மிருளற விளங்கும்
செல்லா றிதுவெனச் சொல்லுதல் வேண்டிச்
சாலவை நாப்பட் சலத்திற் றீர்ந்த
கேள்வி யாளரை வேறுதெரிந் தமைத்து
வாதம் வேண்டிய சாலங் காயன்
மாற்றம் பகுத்தற் காற்றி னாடி
மேற்கொண் டுரைக்கு மெய்த்துறை மருங்கின்
நூற்பாற் றழீஇய குற்ற மிவையெனக்
கேட்டோர் மனமுணக் கிளந்தவன் கடாவ
மெய்த்தகு நுண்பொருண் மெத்தப் பன்னி
உத்தர வாக்கியம் யூகியு நிறீஇக்
கழிபே ருவகையொடு காவல் வேந்தன்
ஒழிக நாமிவற் காற்றே முரையெனச்
சாலங் காயனைத் தோல்வினை யேற்றி
உரைத்த கிளவிக் கொன்றே போல
விரித்துப்பல குற்றம் விளங்கக் காட்ட

(பிரச்சோதனன் யூகியின் விசேடகுணங்களை வியத்தல்)

ஏற்ற முகத்தி னிறைவனும் விரும்பி
நண்பின் மாட்சியுங் கல்விய தகலமும்
பண்பின் றொழிலும் படைத்தொழின் மாண்பும்

---

88. சிதைதல் - அழிதல். 89. சுடர் - சூரியன்.
92. சலம் - குற்றம்.
93. தெரிந்து வேறமைத்து-அறிந்து நடுநிலைத்தானத்திலமைத்து.
95. ஆற்றின் - வழியால்.
98. மனம் உணக் கடாவ - மனம் பொருந்தும்படி வினவ.
99. பன்னி - ஆராய்ந்து. 100. உத்தரம் - விடை.
102. ஒழிக - வாதித்தலொழிக. 105. காட்ட - யூகி காட்ட.

பி - ம். 1 முகமுகநோக்கி.

காயு மார்ந்த ராயினும் யாதும்
தீயவை கூறப் படாத திண்மையும்
இவற்கல தில்லை யிவனாற் பெற்ற
அவற்கல தில்லை யரசின் மாட்சியென

(பிரச்சோதனன் யூகிக்குச் சிறப்புச் செய்தல்)

மன்னிசை நிறீஇய நன்ன ராளனொடு
நுண்ணெறி நுழையு நூற்பொரு ளொப்புமைத்
தன்வயின் மக்களை யவன்வயிற் காட்டி
வேண்டற் பால வெறுக்கை நாடி
வேண்டா ரட்டோன் வேண்டா னாயினும்
அற்பிற் பிணித்த வருண்மறுப் பரிதா
நற்பல கொடுத்து நம்பி பிறந்த
திருநாட் டானம் பெருநாட் காலை
ஏற்போர்க் கீக வின்றே போன்மெனக்
கோப்பெருங் கணக்கரைக் குழுவிடை விளங்கக்
கடைப்பிடி நுகும்பினு ளிடைப்பட வெழுதுகென்
றியூகியு முணர வேயினா னாகிப்

(யூகிக்கு இருவரை மணம்புரிவித்தல்)

பரதகன் றங்கை பறந்தரி சிந்திய
மதரரி மழைக்கண் மடம்படு காரிகைத்
திலகமா சேனையென் றுலகறி பவளையும்
சாலங் காயற் கிளையோ ளாகிய
நீல வுண்க ணிலவுவிடு கதிர்நுதற்
பாக்கிய மமைந்த பார்ப்பியாப் பியையும்
ஆகிய வறிவி னரும்பொருட் கேள்வி
யூகிக் கீத்துப் பாகுபட வின்றி

---

111. இவற்கு - யூகிக்கு. 112. அவற்கு - உதயணனுக்கு.
115. தன்பிள்ளைகளை அவனுக்குக் காட்டி.
116. வெறுக்கை - பொருள்.
118. அன்பினாலே மறுத்தற்கு அரிதாக.
119. நம்பி - நரவாணதத்தன்.
119 - 20. பிறந்ததினத்திற் செய்யும் தானம். [வித்து.
125 - 32. திலகசேனையையும் யாப்பியையும் யூகிக்கு மணஞ்செய்

யாதே யாயினு மாகவினி யெனக்கென
மாதாங்கு திண்டோண் மகிழ்ந்தன னோக்கி

(பிரச்சோதனன் யூகியைப் பாராட்டல்)

அங்கண் ஞாலத் தரசிய லமைதி
எங்கட் கெல்லா மின்றி யுதயணன்
தன்கட் டங்கிய தகைமை நாடின்
நின்கண் மாண்பி னெடுமொழி யாள
ஆயிற் றென்றுபல வருளொடும் புணர்ந்த
யூகிக் குரையா வொருங்குட னிழற்றிப்
..........................................................
கனவினு நனவினு மின்ப மல்லது
நுனைவேற் றடக்கைநம் புனைமுடி வேந்தன்
காணலன் கண்டனர் மாணல மினைந்த
நல்வினை யுடையன் பெரிதெனப் பல்லோர்
இகழ்தல் செல்லார் புகழ்வனர் புகன்று
வாசவ தத்தையும் வத்தவ மன்னனும்
ஏசினன..................................
நவிற்றொறு மினிய ஞானம் போலப்
பயிற்றொறு மினியநின் பண்புடைக் கிழமை
உள்ளுதொ றுள்ளுதொ றுள்ள மின்புறப்

(யூகியை விடுத்தல்)

பிரிவுறு துன்ப மெம்மாட் டெய்த
எரியுறு நெடுவே லேய விறைவன்
வருக வென்றனன் சென்மதி நீயெனப்
பருகுவனன் போலப் படைப்பெரு வேந்தன்
அவனை யிருப்ப னிவனை னெனவே

---

134. தோணோக்குதல், பெருமகிழ்ச்சிக் குறிப்பு; "குளிர்ந்து தோ ணோக்கினர்" (சீவக. 1843); "நரனிருந்து தோள்பார்க்க நான் கிடந்து புலம்புவதோ" கம்ப. சூர்ப்பநகை. 109.

135 - 40. அரசாட்சி முறைமை உதயணனுக்கே அமைந்ததற்குக் காரணம் நீயேயென்று யூகிக்கு முகமன் மொழிகளை அரசன் கூறி.

148 - 9. "நவிற்றொறு நூனயம் போலும் பயிற்றொறும், பண்புடை யாளர் தொடர்பு." குறள், 783.

கருதல் வேண்டுமெனக் கைவிரல் பற்றி
விடுக்கும் பொழுதி னெடுத்தவ னின்னோர்
உண்டோ வொழுக்கி னென்றுபின் விடுப்ப
அருங்கலம் பிறவு மொருங்கு முந்துறீஇ
வேந்துறை முதுநகர் வியன்மலை யாகப்
போந்துகடன் மண்டும் புண்ணிய நீர்த்துறைப்
பேரியா றென்ன வார்பெருஞ் செல்வமொடு
நன்ப னாட்டகம் பின்பட நீந்தி
வளங்கவி னெய்திய வத்தவ னிருந்த
நலம்பெறு நகரம் புக்கன னினிதென்.

எ—யூகி பிரச்சோதனனைக் கண்டு வந்தது முற்றிற்று.

---

157. நின்னோர் - நின்னையொப்போர்.
160. வேந்து - பிரச்சோதனன்.
163. நன்பல் நாட்டகம் - நல்ல பலவாகிய நாட்டிடங்கள்.
161 - 4. "நாடர வந்த விழுக்கல மனைத்தும், கங்கையம் பேரி யாறு கடற்படர்ந் தாஅங், களந்தகடை யறியா வளங்கெழு தாரமொடு" (மதுரை. 695 - 7.) 165. நகரம் - கோசம்பி.

## அ—மதனமஞ்சிகை வதுவை.

(யூகி உதயணனுக்குக் கூறல்)

நலம்பெறு நகரம் புக்கன னாகி
நிலம்பெறு திருவி னெடுமுடி யண்ணலைக்

---

அ—மதனமஞ்சிகை வதுவை.

[நரவாணதத்தன், ஒருநாள் தேரேறி வீதியிற் செல்லுகையில், மதனமஞ்சிகையென்பவளாடிய பந்து அவன் முன்றானையில் வீழ அப் பந்திலழுந்திய அவளது கைவிரற் சுவட்டால் அவளுடைய வடிவிலக் கணங்களைக் கோமுகன் கூறக் கேட்டுப் பின்பு அவளை அவன் மணஞ் செய்துகொண்டமை இதனால் அறியலாகும்.]

2. "நெடுமுடிக் குரிசில்" (சீவக. 264) என்றார்.

கண்டுகண் கூடிக் கழலுறப் பணிந்து
மண்டமர்க் கடந்த மறமாச் சேனன்
உள்ளத் தன்ன வுவகைசெய் தனவும்
வள்ளற் றனமும் வகுத்தனன் கூறி
அவந்தி நாடு மணியுஞ் சேனையும்
இயைந்து முந்துறீஇ யிருபாற் குலனும்
தெம்மு னிழியாத் தெளிவிடை யாகச்
செம்மையிற் செய்த செறிவுந் திண்மையும்
நம்பிக் கீத்த நன்புகழ் நாடும்
இன்னவை யென்று பன்முறை பயிற்றி

(உதயணன் செயல்)

நாட்டு வாயுளுங் [1] காட்டு வாயுளும்
கரத்த லின்றிப் பரத்த னன்றெனத்
தாமுடை நாடு நகரமுந் தரீஇ
வாய்முறை வந்த வழக்கியல் வழாமை
எட்டுமிசை யேற்றி யியல்பினின் யாப்புறுத்
தாற்றல் சான்ற வரும்பெறற் சுற்றமொடு
கூற்றமும் விழையக் கோலினி தோச்சிக்
கோட்ட மின்றிக் குடிபுறங் காத்து

4. மறமாச்சேனன் - பிரச்சோதனன்; சண்டமஹாஸேனன்.

6. வள்ளற்றனம் - வள்ளற்றன்மை; "வள்ளற் றனமென் னுயிரை மாய்க்கு மாய்க்கு மென்றான்" கம்ப. நகர்நீங்கு. 62.

9. தெம்முன் - பகைமையில்; பகைவர்க்கு முன்புமாம்.

8 - 9. = ௬. 11 : 13 - 9. 11. நம்பிக்கு-நரவாணதத்தனுக்கு.

12. பயிற்றி - பயிற்ற.

13. நாட்டிடங்களிலும் காட்டிடங்களிலும்.

15. நாட்டிலுள்ளாரையும் நகரத்திலுள்ளாரையும் வருவித்து.

16 - 7. வாயினாற் கூறிய வழக்குத் தவறாமலிருக்க எட்டில் எழுதி முத்திரையிட்டு.

19 - 20. நடுநிலையிற் கூற்றம் சிறந்தவனாதலின் உதயணன் செங்கோலைச் சிறப்பிக்கையில் 'கூற்றமும் விழைய' என்றார்; "உறைவரை நிறுத்தகோ லுயிர்திறம் பெயர்ப்பான்போல், முறைசெய்தி" (கலி. ௧00 : 15 - 6); "தெரிகோ னமன் போல வொருதிறம் பற்ற லிலி யரோ" புறநா. ௬ : 9 - 10.

பி - ம். 1 கோட்டுவாயுள்.

வாட்டொழிற் றானை வத்தவர் பெருமகன்
அன்புடைத் தோழரோ டின்புற் றொழுகச்
சிறந்த திருவொடு செல்வம் பெருகப்
பிறந்த நம்பி திறங்கிளந் துரைப்பேன்

(நரவாணதத்தனுடைய இளமைப் பருவம்)

குலக்குவிளக் காகத் தோன்றிக் கோலமொடு
நலத்தகு சிறப்பி னல்லோர் நாப்பண்
இலக்கணம் பொறித்த வனப்புடை யாக்கையன்
விசும்பிற் கவாவும் வேட்கைய னாகிப்
பசும்பொற் பல்படை யிலங்குங் கழுத்தினன்
திருவா ணாய தேங்கமழ் மார்பன்
நரவாண தத்த னொடொழு நந்தி
உலம்பொரு மார்பி னுதயண குமரன்
நலம்பெறு தோழர் நால்வரும் பெற்ற
வலம்பெறு சிறப்பின் வனப்பொடு புணர்ந்த
நலம்பெறு கோமுக னாம வரிசிகன்
தகைமிகு பூதி தவந்தக னென்னும்
நன்ன ரமைந்த நால்வருஞ் சூழத்
தளர்நடைக் காலத் திளமை யிகந்து
நல்லா சாரமொடு நல்லோர் காட்ட
நற்பொருண் ஞான நவின்று துறை போகி
விற்பொரு ணன்னூல் விதியி னுணித்துப்

---

24. நரவாணதத்தனுடைய வரலாற்றை விளங்கச்சொல்லுவேன்.

25. குலக்கு விளக்காகத்தோன்றி-குலத்திற்கு விளக்காக உதித்து; "மனைக்கு விளக்க மடவாண் மடவாள், தனக்குத் தகைசால் புதல்வர்" (நான்மணி. 103); "குலதீபன்" தக்க. 2. [கின்ற.

28. விசும்பிற்கு அவாவும் - விண்ணுலகஞ் செல்லுதற்கு விரும்பு

29. பசும்பொற் பல்படை - பொன்னாலாகிய ஐம்படை.

30. திருவாணாய - திருமகளுக்குப் புகலிடமாகிய; ஆணமென்பது ஆணென்றாயிற்று; ரு. 9: 87. 31. நந்தி - வளர்ச்சியுற்று.

30 - 31. — ரு. 6 : 109 - 10. 32. உதயணகுமரனுடைய.

33 - 7. — ரு. 6 : 111 - 22.

40. பொருள் ஞானம் - பொருள்நூல் ஞானநூல்களை.

41. விற்பொருள் நன்னூல் - தனுர்வேதம்.

படைக்கலக் கரணம் பல்வகை பயிற்றிக்
கொடைக்கடம் பூண்ட கொள்கைய னாகிக்

(நரவாணதத்தனது கௌமாரப் பருவம்)

குறைவில் செல்வமொடு குமார காலம்
நிறையுற வுய்த்து நீர்மையின் வழாஅ
ஏமஞ் சான்ற விந்நில வரைப்பிற்
காம னிவனெனக் கண்டோர் காமுறத்
தாளுந் தோளுந் தருக்கி நாளும்
நடவா நின்ற காலை மடனார்ந்

(கணிகையர் இயல்பு)

தீற்று மந்தி யிற்றெழு பூங்கொடி
புற்புல முதிரக நற்றுற விக்கே
போல்வ ரென்னுஞ் சால்புடை யொழுக்கிற்
கலைதுறை போகிய கணிகா சாரத்துப்
பலதுறை பயின்று பல்லுரைக் கேள்வியொடு

---

42\. படைக்கலக்கரணம் - மற்றை ஆயுதப்பயிற்சிகளை.

43\. கொடைக்கடம் - கொடையாகிய கடமைகளை ; சீவக. 365.

44\. குமாரகாலம்-மகளிருடைய மனத்தைக்கவரும் கட்டழகு மிக்க காலம் ; சூளா. குமாரகால. 15.

44 - 9. அவன் குமாரகாலம் நிரம்பித் தருக்கி நடவாநின்றகாலை.

50 - 54. மந்திமுதலியவற்றைப் போல்வரென்னுங் கணிகா சாரத்தை யுடையவளாய். மந்தி - பெண்குரங்கு. இற்று எழு பூங்கொடி-முனைமுறிந்து தளிர்த்தெழுந்த பூங்கொடி. புற்புலம் - புல்லையுடைய நிலம். முதிர் அகம் நல் துறவி - பக்குவமுதிர்ந்த மனத்தையுடைய நல்ல துறவி ; துறவிக்கு - துறவியை ; உருபு மயக்கம். கலை - குலமகளிர்க்கும் பரத்தையர்க்கும் விதிக்கப்பெற்றுள்ள கலைகள். "நொய்ம்பொரு ளானை நுகர்ந்திட்டு வான்பொரு, ளன்குடை யானை நயந்தனர் கோடலின், வம்பிடை மென்முலை வாணெடுங் கண்ணவர், கொம்பிடை வாழுங் குரங்கும் புரைப" (வளையாபதி) என்பதனால், வரைவின்மகளிர் குரங்குபோல் பவரென்பது விளங்கும்; கொடி முதலியவற்றிற்குரிய மேற்கோள்கள் வந்துழிக்காண்க. ஒரு கொழுகொம்பைவிட்டு மற்றொன்றைப் பற்றுதல் கொடியின் இயல்பு ; உள்ள புல்லைவிட்டுப் பயிரைக்கொள்ளல் புலத்தின் இயல்பு ; பிறபொருள்கள் எல்லாவற்றிலும் பற்றொழிந்து பரம்பொருளொன்றையே நினைந்திருத்தல் துறவியின் இயல்பு; க. 35 : 138 - 41 ;

படிவங் குறிக்கும் பாவனை மேற்கொண்

(கலிங்கசேனை)

டடிமையிற் பொலிந்த வகன்பரி யாளத்துத்
தலைக்கோற் சிறப்பி னலத்தகு மகளிர்
ஆயிரத் திரட்டி யைந்நூற் றுவர்களுட்
காசில் சிறப்பிற் கலிங்க சேனையென்
றோசை போகிய வொளியின ளாகிய

(மதனமஞ்சிகை பந்தாடுகையில் பந்து கீழே விழுதல்)

மாசில் கற்பின் மடமொழி மடமகள்
வானோ ருலகி னல்லது மற்றவட்
கீனோ ருலகி னிணைதா னில்லெனக்
கண்டோ ராயினுங் கேட்டோ ராயினும்
தண்டாது புகழுந் தன்மைய ளாகித்
துதைபூங் கோதை சுமத்த லாற்றா
மதர்மா னோக்கின் மாதரஞ் சாயற்
பதரில் பணிமொழிப் பணைத்தோட் சின்னுதல்
மதர்வை நோக்கின் மதனமஞ் சிகைதன்

---

"தாவரு மிருவினை செற்றுத் தள்ளரு, மூவகைப் பகையரண் கடந்து முத்தியிற், போவது புரிபவர் மனமும் பொன்விலைப், பாவையர் மனமும் போற் பசையு மற்றதே" (கம்ப. தாடகைவதை. 15); ஏற்றவாறு பொருட்குணம் விரித்துக்கொள்க.

55. பாவனை - பாவித்தல்.

56. அடிமை - அடித்தொழில். பரியாளம் - சூழ்ந்திருப்பது; "பரியாள மடைந்ததே" சீவக. 949. [யுடைய.

57. தலைக்கோற்சிறப்பின் - தலைக்கோற்பட்டம்பெற்ற சிறப்பினை

58. இரண்டாயிரத்தைந்நூற்றுவர்.

60. ஓசை - புகழ். ஒளி - நன்மதிப்பு.

61. கற்பு - கல்வி. மடமொழியை யுடையாளுடைய மகள்.

63. ஈனோர்-இவ்வுலகத்தோர்; "ஈனோர் வடிவில்" சிலப். பதி. 58.

64. ஆயினும்: எண்ணிடைச்சொல்; "பொதியி லாயினு மிமய மாயினும்" (சிலப். க : 14.) 65. தண்டாது - அமையாமல்.

66. கோதை - மாலை.

67. மாதரஞ் சாயல் - காதலையுண்டாக்கும் மென்மை.

68. பதரில் மொழி - மெய்ம்மொழி; "பதரறு திருமொழி" (சீவக. 2850.) 69. மதர்வை - மயக்கம். மதன மஞ்சிகை: எழுவாய்.

மலைபுரை மாடத் துயர்நிலை மருங்கின்
அணிச்சா லேகத் தணித்தகு துளையூ
டெறிபந் திழுக்குபு விழுதலி னோக்கிச்

(நரவாணதத்தன் உலாவரல்)

செறிவளைத் தோளி செம்முக மாக
வேகத் தானை வேந்த னொருமகன்
போகுகொடி வீதியிற் புகழ்ந்துபல ரேத்த
அருவரை மருங்கி னருவி போல
இருகவுண் மருங்கினுஞ் சொரிதரு கடாத்ததோர்
இடுமணி யானை யெருத்த மேறிப்
படுமுகின் மீமிசைப் பனிமதி போல
உலாவெனப் போந்தோ னிலாவுறழ் பூந்துகிற்

(நரவாணதத்தன் மதனமஞ்சிகையைக் கண்டு விரும்பல்)

றானைப் படுதலிற் றானே கொண்டிஃ
திட்டோ ளார்கொலென் றெட்டி நோக்கினன்
நிறைமதி வாண்முகத் துறழ்வன போல
நீளரி யொழுகி நிகர்தமக் கில்லா
வாள்புரை தடங்கண் வளைத்தவள் வாங்கி
நெஞ்சகம் படுப்ப வெஞ்சின வீரன்
அறியா மையின் மறுகுறு சிந்தையன்

---

70. மலைபுரைமாடம் : “மழையாடு மலையி னிவந்த மாடமொடு”, “மலைபுரை மாடத்துக் கொழுநிழ லிருத்தர” மதுரைக். 355, 406.

71. சாலேகம் - பலகணி. ஊடு - உள்ளே.

72. இழுக்குபு - தப்பி. 73. செம்முகமாக - எதிர்முகமாக.

74. மகன் - நரவாணதத்தன்.

75. போகு கொடி - உயர்ந்த துவசங்கள்.

79. முகில் யானைக்கும், மதி அரசகுமாரனுக்கும் உவமைகள்.

80. நிலாவை யொக்கும் துகில்; உ. 5 : 85, இ. 1 : 187, அடிக். ; “நிலவு வெண்கதிர் நீர்மைய பூந்துகில்” சீவக. 1982.

82. எட்டி - அண்ணாந்து.

85. கண்வளைத்து - கண்வலையாற் சுற்றி.

87. இன்னாளென்று அறியாமையால்.

பந்துவலி யாகப் பையெனப் போகியோர்
அந்தண் காவினு ளசைந்தன னிருந்து

(நரவாணதத்தன் கோமுகனை வினாதல்)

கொய்மலர்ப் படலைக் கோமுகற் கூஉய்க்
கைபுனை வனப்பிற் கணிகையர் சேரியிற்
செய்பந் தீதுடைச் சேயிழை மாதரை
ஐய மின்றி யறிதி யாயின்
மெய்பெற வுரையென மேயினன் வினவக்

(கோமுகன் மதனமஞ்சிகையின் உருவத்தை எழுதுதல்)

கையிற் கொண்டோன் கண்டன னதன்மிசை
ஒற்றியு வொற்றைத் தெற்றெனத் தெரிந்து
நறுவெண் சாந்தம் பூசிய கையாற்
செறிவுறப் பிடித்தலிற் செறிவிர னிரைவடுக்
கிடந்தமை நோக்கி யுடங்குணர் வெய்தி
விரலும் விரலிற் கேற்ற வங்கையும்
அங்கைக் கேற்ற பைந்தொடி முன்கையும்
முன்கைக் கேற்ற நன்கமை தோளும்
தோளிற் கேற்ற வாளொளி முகமும்

---

88. விமலையினுடைய பந்து தெருவில் வீழ அதனைச் சீவகன் எடுத்த செய்தி இங்கே நினைவுக்கு வருகின்றது; "நன்மணிச் சிலம்பி னோடு கிண்கிணிந் நகந்நகும், மின்மலர்ந்த முல்லைமாலை நக்கிமிக் கிறந் தெழுந்து, பொன்மலர்ந்த கோதைபந்து பொங்கியொன்று போந்து பாய்ந்து, மின்மலர்ந்த வேலினான்முன் வீதிபுக்கு வீழ்ந்ததே" சீவக. 1957.

88. பந்து வலியாக - பந்தே தனக்குப் பெருந்துணையாக எண்ணி அதனைக் கைக்கொண்டு.

90. கோமுகன்: ௫. 6: 118 - 22, 8: 35 - 7.

91 - 4. கணிகையர் சேரியிலுள்ளாரில் இப்பந்தையுடையாளை அறிந்திருப்பாயாயின், சொல்லுகவென்று கோமுகனை வினவ.

96. ஒற்றை - அழுந்திய சுவட்டை.

98. விரல் நிரை வடு - விரல் வரிசைகளின் வடுக்கள்.

99. கிடந்தமை - அப்பந்திற் றங்கியிருத்தலை. உணர்வு உடங்கு எய்தி - ஏனை அவயவ இலக்கணங்களின் உணர்ச்சியைச் சேர அடைந்து.

[1] மாப்படு வடுவுறழ் மலர்நெடுங் கண்ணும்
துப்பன வாயு முத்தொளி முறுவலும்
ஒழுகுகொடி மூக்கு [2] மெழுதுநுண் புருவமும்
சேடமை செவியுஞ் சில்லிருங் கூந்தலும்
ஒல்குமயி ரொழுக்கு மல்குற் பரப்பும்
மருங்கி னீளமு நிறங்கிளர் சேவடித்
தன்மையு மெல்லா முன்முறை நூலின்
அளந்தனன் போல் வளம்பட வெழுதிப்
பாவை யிலக்கணம் பற்றி மற்றதன்
நிறமு நீளமும் பிறவுந் தெரியாச்
செறிதா ளண்ணலைச் செவ்வியின் வணங்கி
இதன்வடி வொப்போ ளிந்நகர் வரைப்பின்
மதன மஞ்சிகை யாகுமென வலித்துப்

(கோமுகன் மதனமஞ்சிகை வீடு சென்று பரிசங்காட்டல்)

பந்துகைக் கொண்டு மைந்தன் போகிக்
காழார் வனமுலைக் கணிகையர் சேரித்
தோழ னுள்ளந் தாழ்நனி கலக்கிய
மாதர் மனையிற் றாதுவ னாகிப்
பல்காற் சென்று மெல்லெனச் சேர்ந்து
குறிப்புடை வெங்கோய் நெறிப்பட நாடிய
பாசிழை நன்கலம் பரிய மாக
மாசில்பந் தறிவு படமேல் வைத்தாண்
டீன்ற தாய்முதற் றோன்றக் காட்டிப்

---

104. மா படு - மாமரத்திலுண்டாகிய.
105. துப்பு - பவழம்.
106. ஒழுகு கொடிமூக்கு - வளருகின்ற நீண்டமூக்கு; உ. 3: 97, 15 : 83; சு. 15 : 8; "ஒழுகு பொற்கொடி மூக்கும்" (சீவக. 165.) எழுதுநுண்புருவம் : க. 35 : 179.
112. பாவை - சித்திரம்.
116. வலித்து - துணிந்து. 118. காழ் - முத்துவடம்.
119. தாழ் - தாழக்கோல்.
123. பரியம் - பரிசம்; 140.
125. ஈன்றதாய் முதல் - பெற்ற தாய்க்கு.

பி - ம். 1 மாம்படு. 2 மெழுது நன்புருவம்.

(பாத்தையர் செயல்)

பட்டது கூறலி னொட்டிய வுவகையள்
வழிபடு தெய்வம் வரந்தரு கின்றென
மொழிவன ளாக முகத்தின் விரும்பித்
தாயுந் தவ்வையுந் தம்மொடு பயின்ற
ஆய்வளை மகளிரு நிகழ்ந்ததை யறிந்து
சீரின மதித்துச் சிற்றின மொரீஇப்
பேரினத் தவரொடு பெருங்கிளை பிரியாத்
தலைக்கோன் மகளிர் தன்மை கூறிக்
கற்கெழு கானவன் கைக்கோ லுமிழ்ந்த
எற்படு சிறுதீ யெழுச்சியிற் காமம்
மிகுமனத் துவகையி னெல்லை விருப்பம்
முறையின் முறையின் முறுக மூட்டிக்
கொடித்தேர்க் கோமான் குறிப்பி னல்லதை
அடித்தியை யருளுதல் யாப்பின் றெமக்கென
படிற்றுரை மகளிர் பரிய மறுப்ப

(கோமுகன் கூறல்)

இருங்கண் வையகத் தேந்தலு முரியன்
மருந்தேர் கிளவி மதனமஞ் சிகைதன்
காமரு நோக்கங் காணக் கூடும்
ஏம வைக லியல்வதா மெனினென

---

126. பட்டது - நிகழ்ந்ததை.

127. வரம்தருகின்றென - வரந்தருகின்றதென்று.

133. தலைக்கோற்பட்டம் பெற்ற மகளிருடைய.

134. கோல் - தீக்கடைகோல்.

135. எழுச்சியின் - எழுதல்போல். 136. விருப்பத்தை.

138. அரசனுடைய குறிப்புத் தெரிந்தாலன்றி. அரசனென்றது உதயணனை.

139. அடித்தி - அடியாள். யாப்பின்று - பொருத்தமின்று.

140. பாத்தையர் பரிசத்தை மறுப்ப.

144. ஏமவைகல் - இன்பத்தைத்தரும் நாள். என-என்று கோமுகன் சொல்ல.

(உதயணன் மதனமஞ்சிகைக்குப் பொன் விடுத்தல்)

அன்றுகை நில்லாது சென்ற வுள்ளமொடு
பகன்மதி போலப் பசந்த குமரன்
இகன்மிசை யுள்ளத் தெவ்வங் கேட்டுத்
தலைப்பெருந் தேவியுந் தந்தையுங் கூடிக்
குலப்பெருந் தேவியாக் கோடி விழுநிதி
சிறப்பின்விட் டிருந்து நலத்தகு கிழமைக்
கியாவரு முரியோ ரிவளி னில்லெனக்
காவல் வேந்தன் காணங் காண்டலின்

(நரவாணதத்தன் மணம்)

உறுஅர் போல வுற்ற காதலொடு
மறுஅ மாதர் வதுவை வலித்தபின்
மதிபுரை முகத்தியை மன்னவ னொருமகன்
வதுவைச் செல்வமொடு வான்றோய் வியனகர்
விதியி னெய்தி விழவு முந்துறீஇப்
பதனறிந்து நுகருமாற் பண்புமிகச் செறிந்தென்.

அ—மதனமஞ்சிகை வதுவை முற்றிற்று.

---

146 - 7. குமரனுடைய உள்ளத்துன்பத்தைக் கேட்டு.
148. தலைப்பெருந்தேவி - வாசவதத்தை.
149. தேவியா - தேவியாகும் வண்ணம். [பொன்,
152. உதயணன் அனுப்பிய பொன்னைக் கண்டதனால்; காணம் -
153. "செறுஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கும். உறுஅர்போன் றுற்றார் குறிப்பு" குறள், 1097.
158. பதன் - காலம்; க. 35 : 211 - 4; 'முகைப்பதம் பார்க்கும் வண்டுபோலத் தலைவியரை நகைப்பதம் பார்க்கும் அறிவுடைமை' தொல். மெய்ப்பாடு. சூ. 11, பேர்.

# கூ—மதனமஞ்சிகை பிரிவு.

(திருவிழா)

மதனறிந்து நுகரும் பருவத் தொருநாட்
கோல நீண்மதிற் கொடிக்கோ சம்பி
ஞால மெல்லா நயந்துடன் காண
முழவொடு பல்லிய முன்றிற் றதும்ப
விழவொடு பொலிந்த வழகிற் றாகித்
திசைதிசை தோறுந் திருக்கண் கூடிய
வசையறு திருநகர் வந்துடன் றுவன்றிப்
பொன்றா வேட்கைப் புலங்களை நெருக்கி
வென்றா ராயினும் விழையும் விழவணி
காணும் வேட்கையொடு சேணுய ருலகிற்
றேவ கணமும் மேவர விழிதர
விறல்கெழு சிறப்பின் விச்சா தரரும்
இறைகொண் டிழிதர விப்பாற் சேடியின்

(மானசவேகன் வருதல்)

நுணங்குவினை விச்சையொடு நூற்பொரு ளுணர்ந்த

---

கூ—மதனமஞ்சிகை பிரிவு.

[கோசம்பி நகரத்தில் நிகழ்ந்த விழாவைக்காண வந்த வித்தியாதர அரசனாகிய மானசவேகன் மதனமஞ்சிகையைக் கண்டு மயங்கி அவளைத் தன்னகர்க்கு எடுத்துச் சென்றதும் பிறவும் இதனால் அறியலாகும்.]

4. ததும்ப - முழங்க.

7. நகர்களிலுள்ளார் வந்து.

8. புலங்களை - சத்தம் முதலிய ஐந்தினையும்.

9. வென்றாராயினும் - சித்தபரமேட்டிகளும்.

9 - 11. சிலப். கூ : 1 - 34; "தீவகச் சாந்தி செய்தரு நன்னாள், ஆயிரங் கண்ணோன் றன்னோ டாங்குள, நால்வேறு தேவரு நலத்தகு சிறப்பிற், பால்வேறு தேவரு மிப்பதிப் படர்ந்து" மணி. க : 35 - 8.

13. சேடி - வெள்ளிமலையின் மேலுள்ள வித்தியாதரருலகு.

14. நுணங்கு - நுண்மை.

13 - 8. வித்தியாதர அரசர் நூற்றுப்பதின்மருள் மேம்பட்டு விளங்கும் மானசவேகனென்பவன். விழாக்காண இங்கே இறங்கி.

மணங்கமழ் நறுந்தார் மானச வேகனென்
றூற்றல் சான்ற நூற்றொரு பதின்மர்
அரைச ருள்ளு முறைசெல விளங்கிய
மின்னார் மணிமுடி மன்னனு மிழிந்து

(மானசவேகன் கண்டகாட்சி)

பத்திப் படாகையும் பல்பூங் கொடியும்
சித்திரித் தெழுதிய வித்தக விமானமும்
இருநிலத் தியங்கு மியந்திரப் பாவையும்
அருவினை நுட்பத் தியவனப் புணர்ப்பும்
பொத்தகை யானையும் பொங்குமயிர்ப் புரவியும்
சித்திர மாலையு மக்கடந் தொட்டிலும்
வெண்டா ரொழுக்கும் விளக்குறு பூதமும்
தெரிவுற லரிய பலகலக் குப்பையும்
கைந்நிமிர் விளக்கு......................ம்
எண்ணரும் பல்பொறி யெந்திரப் பொருப்பும்
வண்ண.......................................களும்
கண்ணு ளாளர் கைபுனை கிடுகும்
நாடு நகரமு மாடுநர் பாடுநர்
ஆடலும் பாடலு மன்னவை பிறவும்
கூடிக் காணு மாடத் தோங்கிய
தண்கோ சம்பிப் பெண்சன நோக்கி
விண்மிசை யவரும் விழையுங் காரிகை
மண்ணியன் மகளிரு ளுளள்கொன் மற்றெனச்
சேணெடுந் தெருவுஞ் சிற்றங் காடியும்
நாணொடு புணர்ந்த நலம்புணர் மகளிர்
நெரியுந் தெருவு நிரம்பிய மறுகும்

---

19. படாகை - பெருங்கொடி. 20. வித்தகம் - சிற்பவேலை.

22. யவனப்புணர்ப்பு - யவன தேயத்தினரால் அமைக்கப்பட்ட பொருள்கள்.

23. பொத்தகை - துவாரமுள்ள கை.

30. கண்ணுளாளர் : உ. 10 : 97 ; "கண்ணுள் வினைஞர் கைவினை முற்றிய, நுண்வினைக் கொல்லர்" (சிலப். கசு : 105 - 6.) கிடுகு - தட்டி.

33. காணு - மானசவேகன் கண்டு.

34. பெண்சனங்களைப் பார்த்து. 39. நெரியும் - நெருங்கும்.

மன்றமுங் கோணமுஞ் சென்றுசென் றுலாஅய்
யாறுகிடந் தன்ன வீறுசால் வீதிதொறும்
ஆறது திரிதரு மானச வேகன்

(மானசவேகன் மதனமஞ்சிகையைக் காணல்)

கோலக் கோயிலு நால்வகை நிலனும்
புடைசூழ் நடுவட் பொன்மலர்க் காவின்
இடைசூ ழருவி யேந்துவரைச் சென்னி
ஆய்மயி லகவு மணிச்சுதைக் குன்றின்
மீமிசை மருங்கின் மின்னென நுடங்கிப்
பழவிறன் மூதூர் விழவணி நோக்கி
மும்மணிக் காசும் பன்மணித் தாலியும்
பொன்மணிக் கொடியும் பூணுஞ் சுடர
மதன மஞ்சிகை நின்றோட் கண்டு
சென்றன னணுகி நின்றினிது நோக்கி
வெள்ளி விமானம் விதிர்விதிர்த் தேறி
வள்ளி மருங்கி னொள்ளிழை யேழையைக்
கச்சார் வனமுலை விச்சா தரியே
ஆவளென் றையமோ டயலதோர்
தேவ மாடஞ் சேர்ந்தன னிருந்து

(மதனமஞ்சிகை பூதவடிவமொன்றைக் கண்டு அஞ்சுதல்)

வருவோர்ப் பற்றி வாங்குபு விழுங்குப்
இனைய நுட்பத் தியவன ரியற்றிய

---

40. கோணம் - குறுந்தெரு.

41. வீதிக்கு ஆறு : ௫. 7 . 23.

43. நால்வகைநிலன் - குறிஞ்சி முதலியன ; இவையும் பின் வருவனவும் அரசன் விளையாடுதற்குச் சமைத்தன.

46. சுதைக்குன்று - செய்குன்று ; 'இவற்றைச் சித்திரமெனிற் கோயிற்கு அங்கமாகிய செய்குன்று கூறிற்றிலர்' சீவக. 148, ந.

45 - 6. க. 33 : 4 - 5.

49. மும்மணிக்காசு : "முத்தின ருத்தியர் மும்மணிக் காசினர்" க. 34 : 121.

50. பொற்கொடியும்.

51. நின்ற மதனமஞ்சிகையை மானசவேகன் கண்டு.

54. வள்ளி - கொடி. 55 - 6. விச்சாதரியே ஆவள்.

59. யவனர் - யவனதேயத்துத் தச்சர்.

பெருவலிப் பூதத் துருவுகண் டுணரார்
இன்னுயி ருண்ணுங் கூற்ற மிதுவெனப்
பொன்னிழை சுடரப் பொம்மென வுராஅய்
மைகொள் கண்ணியர் வெய்துயிர்த் திரிய
மாவீ ழோதி மதனமஞ் சிகையும்
ஏயென வஞ்சுஞ் சாய னோக்கி

(மானசவேகன் எண்ணுதல்)

விச்சை மன்ன னச்சுவ னாகி
விறல்கெழு விஞ்சையர் வெள்ளியம் பெருமலை
இறைகொண் டிருந்த வெழிலுடை மகளிருள்
யாவரு மில்லைமற் றிவளோ ரனையார்
யாவ ளாயினு மெய்துவென் யானென
ஒருதலை வேட்கை யுண்ணின் று நலியப்
பெருவினை விச்சையிற் றெரிய நோக்கி

(நரவாணதத்தனும் மதனமஞ்சிகையும் இன்புறுதல்)

உயர்நிலை யுலகத் தவரும் பிறரும்
மேனிலை யுயர்ச்சியின் மெய்யா மதிக்க
வளமை நன்னிலத் திளமுளை போந்து
கல்வி நீரிற் கண்விட்டுக் கவினிச்
செல்வப் பல்கதிர் செறிந்துவனப் பேறி
இன்பம் விளைந்த நன்பெரு நெல்லின்
ஆுண மடையிற் காண்வரப் பற்றித்
துப்புர வடிவி........தோயினும்

---

60 - 63. பூதத்தினுருவத்தைக் கண்டு அஃது இன்னதென்று அறியாராய்த் தோழிமார் நிலைகுலைந்து ஓட. உராஅய் - பெயர்ந்து.

64. மா - வண்டு; "மாவீ ழோதி" சு. 5 : 39.

64 - 5. அங்ஙனமே மதனமஞ்சிகையும் அதனைக்கண்டு அஞ்சும் மென்மையை அறிந்து.

66. விச்சை மன்னன் - மானசவேகன். நச்சுவனாகி - விரும்பி.

68. இறைகொண்டு - தங்குதல் கொண்டு.

70. யாவளாயினும் - இவள் யாராயினும்.

71. ஒருதலைவேட்கை - கைக்கிளையாகிய விருப்பம்.

75. வளமை - அழகு. இளமுளை - இளமையாகிய முளை.

79. ஆுணமடை - அன்பாகிய உணவு.

வேட்கை நாவின் விருப்பொடு சுவைக்கும்
மாற்ற மில்லா மனத்தின ராகி
வலியும் வளமையு....க்கு........யும்
பொலிவும் புகழும் பொருந்திய சிறப்பிற்
குவம மாகு முதயண னொருமகன்
அவமில் சூழ்ச்சி யாய்தா ரண்ணலும்
ஆணு முட்கு மச்சமும் பயிர்ப்பும்
பேணுங் கோலமும் பெருந்தகைக் கற்பும்
வாணுதன் மகளிர் மற்றுப்பிறர்க் கின்றித்
தானே வவ்விய தவளையங் கிண்கிணி
மானேர் நோக்கின் மதனமஞ் சிகையும்
ஆணுக் காதலோ டமர்ந்துவிளை யாடிக்
காமர் பள்ளியுட் கட்டளை பிழையாத்
தாமரை நெடுங்கண் டங்தொழி லொருடங்கப்
பள்ளி கொண்ட பொழுதிற் பையென

(மானசவேகன் மதனமஞ்சிகையை எடுத்துச் செல்லல்)

ஒள்வினை மாட முள்குவன ளாகி
விச்சை மறைவி னச்சமொன் றின்றி
இகன்மிகு குமரனைத் துயின்மிசைப் பெருக்கிக்
கயன்மிகு கண்ணியைக் கவவுப்பிணி நீக்கிப்
புகலு முள்ளமோ டகலத் தடக்கி
இகல்கொள் வீரிய னிகழ்தல் செல்லா
மண்மிசை வந்தனென் மயக்கற வின்று
விண்மிசை யுலகிற்கு விழுப்பொருள் பெற்றேன்
என்னு முவகையின் மின்னேர் நுடங்கிட
மினிருங் கச்சையோ டொளிவிசும் பெழுந்து
பொ..........................................

---

81 - 2. சுவைக்குமனம், மாற்றலில்லாமனம்.
85 - 6. உதயணனுடைய மகனாகிய அண்ணலும்.
87. ஆண் = ஆணம் - அன்பு.
90. தவளைக் கிண்கிணி : க. 40 : 18, அடிகீ.
95. இருவரும் பள்ளிகொண்ட பொழுதில்.
97. விச்சை - உருவம் புலப்படாமல் இருப்பதற்குரிய மந்திரம்.
99. கண்ணி - மதனமஞ்சிகை. கவவுப்பிணி - அகத்திட்டுத் தழுவியிருக்கும் நிலை. 100. அகலத்து - மார்பில்.

* * * *

